லியோ டால்ஸ்டாய்

# போரும் அமைதியும்

# WAR AND PEACE

(இரண்டாம் பாகம்)

பதிப்பாசிரியர் :

**எஸ். கௌமாரீஸ்வரி,**

எம்.ஏ., எம்.எல்.ஐ.எஸ்.

**சீதை பதிப்பகம்**

6, தோப்பு வெங்கடாசலம் தெரு, (பாரதி சாலை ஸ்டேட் வங்கி அருகில்),

திருவல்லிக்கேணி, சென்னை-600 005.

✆ : 28443791

சி. மகேந்திரன்
ஆசிரியர், தாமரை

# அணிந்துரை

பன்முகத்தோடு தன்னை உணர்ந்து வளர்த்தெடுக்கும் தேவை இன்றைய தமிழக வாசகர் உலகத்திற்கு அவசியமாகி விட்டது. சின்னத்திரை, பெரியத் திரை என்று மக்களின் கவனமெல்லாம் எங்கேயோ கடத்திச் செல்லப்படும் காலத்தில் மனிதனை மனிதனாக காப்பாற்றி வைத்திருப்பதே நெருக்கடி மிகுந்த ஒன்றாக மாறிவிட்டது.

மனிதனின் இந்த மனிதத் தன்மையைக் காப்பாற்றும் மருந்து நூல்களில்தான் இருக்கின்றது. தமிழ்ப் படைப்புலகு எல்லையில்லா நூல்களை வெளியிட்டுக் கொண்டிருந்தாலும், இன்றைய தமிழகத்தின் தேவைக்கு இது போதுமானதாக இல்லை. எனவே அயல் மொழிகளிலிருந்து தமிழாக்கம் செய்யப்படுவதும், இன்றைய காலத்தின் அவசியமாக இருக்கிறது.

தமிழாக்கி பின் அச்சாக்கும் முயற்சிகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று சமகாலப் படைப்புகளை மொழிபெயர்த்து வெளியிடுவது. மற்றொன்று, ஆரம்ப கால நூல்களை (முன்னரே மொழியாக்கம் செய்யப்பட்டவை) மீண்டும் இன்றைய நவீன புரிதலுக்கேற்ப தமிழாக்கம் செய்து வெளியிடுதல். அண்மைக் காலங்களில் மொழியாக்கங்களில் மீண்டும் மீளாக்கம் செய்தல் கூடுதலாகவுள்ளது. சிறிய மூலதனத்தில் கணிணியின் துணையுடன் நூல்களை வெளியிட முடியும் என்பது இந்த நூல்களின் வருகைக்கு முக்கியமான காரணமாகிறது.

கடந்த காலத்தின் அரிய மொழியாக்கங்கள் பல, இப்பொழுது மீண்டும் வந்து நம்மை திகைக்க வைக்கின்றன. சில புத்தகங்கள் மீண்டும் வாசிக்க இயலுமா, என்ற ஏக்கத்தை இந்த நூல்களின் வருகை மாற்றியமைத்துள்ளது. இது வரவேற்கத்தக்கது. ஆனாலும், சில நூல்களில், இந்த நூல் பற்றிய மொழியாக்க வரலாறுத் தொடர்ச்சி குறிப்பிடப்படுவதில்லை. ஆரம்ப கால மொழியாக்க வாழ்க்கை மிகவும் கடினம் நிறைந்தது. அத்தகைய முன்னோடிகளின் முயற்சிகள் பதிவு செய்யப்பட வேண்டியவை. சில நூல்களில், இந்த குறிப்புவிடுபட்டு விடுகின்றது. இது வரவேற்கக் கூடியதல்ல.

லியோ டால்ஸ்டாய், உலக ஞானிகளில் ஒருவர். இந்தியத் தந்தை மகாத்மாவிற்கே வழிகாட்டிய பெருமையைப் பெற்றவர். இவரது

புகழ்மிக்க 'போரும் அமைதியும்' என்ற மொழியாக்க நூலை இப்பொழுது வெளியிட்டுள்ளார்கள்.

திரு. ராஜசேகரன் துடிப்பு மிக்கவர். இவர் வெளியிட்டுள்ள பல நூல்கள் மிகக் குறைந்த விலையில் மக்களை சென்றடைந்திருக் கிறது. இவரது 'சீதை பதிப்பகம்' லியோ டால்ஸ்டாயின் 'போரும் அமைதியும்' என்ற மொழியாக்க நூலை வெளியிட்டுள்ளது. இம் மொழிபெயர்ப்பை, பதிப்பகக் குழு செம்மைப்படுத்தியுள்ளது.

லியோ டால்ஸ்டாயின் ஆங்கிலத்தில் வெளியிட்ட War & Peace என்னும் நூல், அறிஞர் டி. எஸ். சொக்கலிங்கம் அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இந்த நூல் சக்தி பிரசுராலயத்தின் நிறுவனர் திரு. வை.கோவிந்தன் அவர்களால், பதிப்பிக்கப்பட்டது. விற்பனை உரிமை என். சி. பி. எச்.யிடம் அளிக்கப்பட்டுள்ளது. இந்த மொழிபெயர்ப்பைப் பற்றி பதிப்பாளர் வை.கோவிந்தன் குறிப்பிடும் போது, ''பேராசிரியர் டி.எஸ்.சொக்கலிங்கம் அவர்களைத் தமிழாக்கித் தருமாறு கேட்டோம். பேராசிரியர் என்றால் 'புரபொசர்' என்ற ஆங்கிலச் சொல்லின் மொழிபெயர்ப்பு அன்று. உள்ளபடியே அவர் பேராசிரியர். தமிழ்நாட்டில் தமிழ் வளம்பெறச் செய்தவர்களில் இவர் முக்கியமானவர். மொழி பெயர்ப்பில் ஐம்பது சதவீதம் மார்க் கிடைத்து விட்டால் அது நல்ல மொழிபெயர்ப்பு என்பது என் கருத்து. ஸ்ரீ சொக்கலிங்கம் அவர்கள் தம் மொழிபெயர்ப்பில், பெரிதும் வெற்றி கண்டிருக்கிறார் என்பது என் கருத்து'' என்று கூறியுள்ளார்.

'லியோ டால்ஸ்டாய் நூலை, தாய் மொழியான ரஷ்ய மொழியில் தான் எழுதினார். லூய்சா, அயில்மிர் மாட் ஆகியோர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்கள். இந்த இருவரின் மொழிபெயர்ப்புதான் சிறப்பிற்குரியது' என்று, உலக அறிஞர்களில் ஒருவரான பெர்னாட்ஷா குறிப்பிட்டுள்ளார். இந்த ஆங்கில மொழியாக்கத்தைத் தான் திரு. டி. எஸ். சொக்கலிங்கம் அவர்கள் தமிழ்ப்படுத்தியிருக்கிறார்கள்.

பதிப்பின் நிறைகுறைகளைப் பற்றி வாசகர்கள் தீர்மானிப்பது தான் நியாயமானதாக இருக்க முடியும். நூல் சம்பந்தப்பட்ட இறுதி தீர்ப்புக் கூறும் நீதிபதிகள் வாசகர்கள்தான். ஆனாலும் உலகப் புகழ்பெற்ற, இந்த நூலை தமிழ் வாசகர்கள் கட்டாயம் படிக்க வேண்டும் என்று கேட்டு கொள்ளும் உரிமை எனக்கிருக்கிறது. இந்த நூலை, அனைவரும் வாசித்து, பயன் பெறுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

22.7.2003

சென்னை

**சி. மகேந்திரன்**

# நன்றி !

இந்நூல் வெளிவர பெரிதும் உதவியாய் அமைந்த அமரர் டி.எஸ். சொக்கலிங்கம் அவர்களுக்கும், 'சக்தி காரியாலயம்' பதிப்பாளர் அமரர் வை. கோவிந்தன் அவர்களுக்கும், **N.C.B.H.** நிறுவனத்தாருக்கும் மொழிபெயர்ப்பை காலத்திற்கு ஏற்ப செம்மைபடுத்திய மொழிபெயர்ப்பு குழுவினர்க்கும், இந்நூல் அட்டைப் படங்கள் தந்து உதவிய சிங்காரவேலர் நூலகம், சென்னை-17 நூலகர் தோழர் கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும், அணிந்துரை வழங்கி ஊக்கப்படுத்திய 'தாமரை' இதழ் ஆசிரியர் சி. மகேந்திரன் அவர்களுக்கும்

**நன்றி ! நன்றி ! ! நன்றி ! ! !**

# போரும் அமைதியும்

6

1

**கி**ராமத்திலேயே தொடர்ச்சியாக இரண்டு வருஷங்களாக இளவரசர் ஆண்ட்ரூ இருந்தார்.

தமது எஸ்டேட்டுகளில் செய்ய வேண்டுமென்று பீயர் முயற்சி செய்த எல்லாத் திட்டங்களையும் ஆடம்பரம் இல்லாமல், விசேஷ கஷ்டமில்லாமல், தமது எஸ்டேட்டுகளில் இளவரசர் ஆண்ட்ரூ நிறைவேற்றி வைத்தார். அடிக்கடி ஒன்றிலிருந்து இன்னொன்றுக்கு பீயர் மாறிக்கொண்டே இருந்தபடியால், அவருடைய எஸ்டேட்டுகளில் எதையும் செய்து முடிக்கவில்லை.

காரியார்த்தமான உறுதி மிகச் சிறந்ததாக இளவரசர் ஆண்ட்ரூவிடமிருந்தது. அதனால் சிரமமோ, தடபுடலோ இல்லாமல் இந்தக் காரியங்கள் நடந்து வந்தன. இந்தக் குணங்கள் பீயரிடம் இல்லை.

ஆண்ட்ரூவின் எஸ்டேட்டுகளில் ஒன்றில், 300 அடிமைகள் விடுதலை செய்யப்பட்டார்கள். அவர்கள் சுயேச்சையான விவசாயத் தொழிலாளர்களாக மாறினர். ருஷ்யாவில் இம்மாதிரியான காரியங்களுக்கு இது முதல் உதாரணமாக இருந்தது. மற்ற எஸ்டேட்டுகளில் அடிமைகள் கட்டாயமாக வேலை செய்ய வேண்டுமென்பதை மாற்றி, அதற்குப் பதிலாக நில வரியை ஏற்படுத்தினார். பாகுசாரவா என்ற தமது எஸ்டேட்டில் இருப்பதற்காக தமது செலவில் ஒரு பயிற்சி பெற்ற மருத்துவச்சியை வேலைக்கு அமர்த்தினார். விவசாயிகளின் குழந்தைகளுக்கும், தமது வீட்டிலுள்ள அடிமைகளுக்கும், எழுதவும் வாசிக்கவும் சொல்லிக் கொடுக்கும்படி, ஒரு பாதிரியை சம்பளத்தில் நியமித்தார்.

பால்டு ஹில்ஸ் மாளிகையில், தமது தந்தையுடனும் புத்திரனுடனும், இளவரசர் ஆண்ட்ரூ பாதி நேரம் இருப்பார். அந்தக் குழந்தை இன்னமும் தாதிகளின் பாதுகாப்பிலேயே இருந்து வந்தது. மீதிப் பாதி நேரத்தில் அவர் தம்முடைய பாகுசாரவா என்ற இடத்தில் இருந்து வருவார். அவருடைய தந்தை அந்த இடத்தை சன்னியாசி மடம் என்று சொல்லுவதுண்டு. உலக விஷயங்களைப் பற்றித் தமக்கு சிரத்தையில்லாதது போல, பீயரிடம் அவர் பேசிய

போதிலும், உலகத்தில் நடந்து வந்த விஷயங்களை அவர் மிகுந்த கவனமாக நோக்கி வந்ததோடு, பல புஸ்தகங்களையும் வாங்கிப் படித்து வந்தார். தலைமை ஸ்தானமாகிய பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து தம்மையோ தமது தந்தையையோ, பார்க்க வருகிறவர்கள் (அவர்கள் இந்நாட்டைவிட்டு வெளியே போனதே கிடையாது), உள்நாட்டு வெளிநாட்டு விஷயங்களைப்பற்றியும், அங்கு நடக்கும் காரியங் களைப் பற்றியும், தமக்குத் தெரிந்த அளவுகூடத் தெரியாமல் இருப்பதைப் பார்த்து ஆச்சரியம் கொண்டார்.

தமது எஸ்டேட்டுகளில் உள்ள வேலைகளைக் கவனிப்பதும், பல வகையான புத்தங்களை வாசிப்பதுமாய் இருந்த இளவரசர் ஆண்ட்ரூ இச்சமயம் ஒரு வேலையில் சுறு சுறுப்பாய் ஈடுபட்டிருந்தார். சமீபத்தில் நடந்த துரதிருஷ்டமான இரண்டு படையெடுப்புகளைப் பற்றிய குணதோஷங்களை ஆராய்ந்து, ஒரு புத்தகம் எழுதுவதில் ஈடுபட்டிருந்தார். அத்தோடு ராணுவத்திலுள்ள சட்ட திட்டங்களை எப்படி மாற்றி அமைக்க வேண்டுமென்ற ஒரு திட்டத்தையும் தயாரித்து வந்தார்.

ரயாஜான் என்ற எஸ்டேட்டுகளுக்கு தமது புத்திரனுடன் 1809-வது வருஷம் இளவேனிற் காலத்தில் போனார். அந்த எஸ்டேட்டுகள் அவருடைய புத்திரனைச் சேர்ந்தவை. அவருடைய புத்திரனுக்கு அவர் கார்டியனாக இருந்தார்.

அந்த இளவேனிற் கால சூரிய ஒளியைத் தமது வண்டியிலிருந்த படியே அனுபவித்தார். புதிய புல்களையும், பூவரசு மரங்களில் அரும்பிய தளிர்களையும், இளவேனிற் கால வெள்ளை மேகங்களின் கூட்டங்கள் நீல வானில் ஓடிக்கொண்டிருப்பதையும் பார்த்து அனுபவித்தார். அவர் எதைப் பற்றியும் நினைத்துக் கொண்டிருக்கவில்லை. ஏதோ பராக்குப் புத்தியாகப் பார்த்துக் கொண்டு, மகிழ்ச்சியோடு ஒரு பக்கத்திலிருந்து இன்னொரு பக்கத்தைப் பார்ப்பவராகக் காணப்பட்டார்.

முந்தைய வருஷத்தில் பீயரோடு பேசிக்கொண்டு வந்த அதே தோணித் துறையை, இப்போது அவர்கள் கடந்தார்கள். அந்தச் சேறு நிறைந்த கிராமத்தின் வழியாக, அந்தக் களங்களின் வழியாக, அந்த ரைதானிய கார்கால பச்சை வயல்களின் வழியாக, அந்தக் குன்றிலிருந்து கீழே இறங்கிப் போனார்கள். அங்கே பாலத்திற்குப் பக்கத்தில் இன்னமும் உறைபனி இருப்பதையும், குன்றுக்கு மேலாக அங்கிருந்த களிமண் மழையினால் கரைந்து நிற்பதையும் பார்த்தார்கள். அரி தாள்கள் நிறைந்த வயல்களையும், இங்கும் அங்கும் காணப்பட்ட பச்சையான புதர்களையும் கடந்து

போனார்கள். பாதையின் இரு பக்கங்களிலும் பூவரசு மரங்கள் ஏராளமாய் இருந்த ஒரு காட்டுக்குள் வந்தார்கள். அந்தக் காடு அநேகமாக உஷ்ணமாய் இருந்தது. அங்கே காற்று என்பது அசைவு இல்லாமலிருந்தது. அந்தப் பூவரசு மரங்கள் பச்சை இலைகளோடு இருந்தாலும் அசையாமலிருந்தன. சிகப்பு, ஊதா நிறமுள்ள புஷ்பங்களும், பச்சை நிறமுள்ள புல்களும் புதிதாய்க் கிளம்பி வந்தன. இங்கொன்றும் அங்கொன்றுமாய் இருந்த சிறிய தேவதாரு மரங்கள் பச்சைப் பசேல் என்று காணப்பட்டன. பூவரசு மரங்களினிடையே அந்தக் குளிர் காலத்தின் இரம்மியமில்லாத தோற்றம் நினைப்பூட்டியது. காட்டிற்குள் நுழைந்தவுடன் குதிரைகள் சத்தமிட்டு மூச்சு விட ஆரம்பித்தன. அவைகள் வியர்த்திருந்தன.

வண்டியில் வந்துகொண்டிருந்த சேவகன், வண்டிக்காரனிடம் ஏதோ சொன்னான். வண்டிக்காரன் சம்மதித்தானென்றாலும், வண்டிக்காரனின் அனுதாபம் தனக்குப் போதாது என்று தோன்றிய படியால் பீட்டர் என்ற அந்த வேலைக்காரன், தனது எஜமானரை திரும்பிப் பார்த்தான்.

'மேன்மை தங்கியவரே, இது எவ்வளவு இனிமையாய் இருக்கிறது!' என்று அவன் மரியாதையான புன்சிரிப்போடு சொன்னான்.

'எது?'

'அது இனிமையாயிருக்கிறது, மேன்மை தங்கியவரே.'

'அவன் எதைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறான்?' என்று இளவரசர் நினைத்தார். 'ஓ, இளவேனிற் காலத்தைப்பற்றி என்று நினைக்கிறேன்' என்று அவர் திரும்பிப் பார்த்ததும் நினைத்தார். ''ஆமாம், எல்லாம் பச்சையாகத் தோன்ற ஆரம்பித்து விட்டன... எவ்வளவு சீக்கிரமாக வந்துவிட்டன! இந்த பூவரசு மரங்களும், செர்ரி மரங்களும், இந்த மிளார் மரங்களும்கூட இலைகள் விட்டு விட்டன. ஆனால் அந்த ஓக்கு மரங்கள் மட்டும் எங்கும் காணப்பட வில்லை. ஆ, அதோ ஒரு ஓக்கு மரம்!' (ஓக்கு என்பது தேக்கு மாதிரியான ஒருவகை மரம்).

அந்த ரஸ்தாவின் ஓரத்தில் ஒரு ஓக்கு மரம் நின்றது. ஒருவேளை அந்தக் காட்டில் நிறைந்து நின்ற பூவரசு மரங்களைவிட பத்து மடங்கு வயதைக் கொண்டதாய் அது இருக்கலாம். அவற்றைவிட பத்து மடங்கு அதிகமாய் கனமும், இரு மடங்கு உயரமும் கொண்டதாயிருந்தது. அது ஒரு மிகப் பிரம்மாண்டமான மரமாய் இருந்தது. அதன் அடிப்பாகத்தின் கனம் ஒரு மனிதன் ஆலிங்கனம்

செய்யக்கூடிய அளவுபோல இரண்டு மடங்கு பெரிதாய் இருந்தது. வெகு காலத்திற்கு முன்னால், அதன் கொப்புகள் முறிந்து, அதன் பட்டைகள் தழும்படைந்தன போலத் தோன்றியது. ஒரு ஒழுங்கு எதுவுமில்லாமல், அதன் பிரம்மாண்டமான கொப்புகள் பரந்து நிற்க அது ஒரு வயதான, கடுமையாக பயமுறுத்தலான தோற்றத்தோடு கூடிய ஒரு பிசாசு மாதிரி, புன்முறுவல் காட்டும் அந்த பூவரசு மரங்களுக்கிடையே காணப்பட்டது. செத்த பார்வையோடு கூடிய பச்சைப் பசேல் என்ற தேவதாரு மரங்கள் இங்கும் அங்கும் காணப்பட்டன. ஆனால் இந்த ஒக்கு மரம் அந்த இளவேனிற் காலத்தின் இனிமைக்கு இணங்காததுபோலத் தோன்றியது. இளவேனிற் காலத்தையோ, அல்லது அந்த சூரிய வெளிச்சத்தையோ அது இலட்சியம் செய்ததாகத் தெரியவில்லை.

'இளவேனிற் காலம், காதல், சந்தோஷம்!' என்று அந்த ஒக்கு மரம் சொல்லுவதைப் போலத் தோன்றியது. ''அந்த அறிவீனமான, அர்த்தமில்லாத, திரும்பத் திரும்பச் செய்யப்படும் அந்த மோசடியான காரியங்களைக் கண்டு, உனக்கு எரிச்சல் ஏற்பட வில்லையா? எப்பொழுதும் அதேமாதிரிதான். எப்பொழுதும் அதே மோசடிதான். இளவேனிற் காலம் 'என்பது அங்கே இல்லை. சூரியனும் இல்லை. சந்தோஷமும் இல்லை. அந்த செத்துப்போன, ஒடுங்கிப்போன தேவதாரு மரங்களைப் பார். எப்பொழுதும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கின்றன. என்னைப் பார். எனது முறிக்கப்பட்ட, தோல் உறிக்கப்பட்ட விரல்களை, அவை எந்த இடத்தில் வளர்ந்தனவோ அங்கேயே, நீட்டிக்கொண்டு நிற்கிறேன். அவை எனக்கு பின் பக்கமானாலும் சரி, அப்படியேதான் நிற்கின்றன. நானும் அப்படியே தான் நிற்கிறேன். உன்னுடைய நம்பிக்கைகளையோ, பொய்களையோ என்னால் நம்ப முடியாது.''

அந்தக் காடு வழியாக இளவரசர் ஆண்ட்ரூ போய்க் கொண்டிருந்தபோது, அந்த ஒக்கு மரத்தைப் பார்த்தற்காக பல தடவைகள் திரும்பினார். அதிலிருந்து எதையோ ஒன்றை அவர் எதிர் பார்த்ததைப்போலப் பார்த்துக்கொண்டு போனார். அந்த' ஒக்கு மரத்தின் கீழேகூட புஷ்பங்களும், புல்களும் காணப்பட்டன. ஆனால் அவற்றின் மத்தியில் அது நின்று, எப்பொழுதும்போல உறுமிக் கொண்டு விறைப்பாகவும் முகம் சுளித்தும் இருப்பது போலத் தோன்றியது.

'ஆமாம், அந்த ஒக்கு சொல்லுவது சரியானதுான். ஆயிரம் தடவை சரியானதுதான்' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். ''மற்றவர்கள் - அந்த வாலிபர்கள்-அந்த மோசடிக்கு உட்படு

கின்றார்கள். ஆனால் வாழ்க்கையைப்பற்றி நமக்குத் தெரியும், நமது வாழ்க்கை முடிந்துவிட்டது.''

ஒரு தொடர்ச்சியான புதிய சிந்தனைகள், உபயோகமில்லாதவை. ஆனால், வேதனையோடு இனிமையானவை. அவருடைய உள்ளத்தில் அந்த மரத்தைப் பார்த்ததும் தோற்றமளித்தன. அந்தப் பிரயாணத்தின்போது அவர் தம்முடைய வாழ்க்கையை மீண்டும் ஆராய்ச்சி செய்தார். தம்முடைய பழைய முடிவிற்கு அவர் மீண்டும் வந்தார். ஆனால் அவற்றால் பிரயோசனம் இல்லை என்பதையும் கண்டார். ஆனால் புதிதாக எதையும் ஆரம்பிப்பதற்கு அவரால் முடியாது என்றும், தமது வாழ்க்கையை வாழ்ந்து முடிக்க வேண்டியது தான் என்றும், ஒருவருக்கும் கெடுதி செய்யக் கூடாது என்றும், தம்மை வீணாக அலட்டிக்கொள்ளக்கூடாது என்றும், தாம் எதையும் விரும்பக் கூடாது என்றும் தீர்மானம் செய்துகொண்டார்.

## 6 2

அந்த மாவட்டத்தில் மிராசுதார்களின் மார்ஷலை இளவரசர் ஆண்ட்ரூ பார்க்க வேண்டியதாயிருந்தது. ரயாஜான் என்ற எஸ்டேட்டுக்கு அவர்தான் தர்ம கர்த்தா. அந்த எஸ்டேட்டைப்பற்றிய விஷயமாக அந்த மார்ஷலான கோமகன் இலியா ராஸ்டோவை மே மாத மத்தியில் பார்ப்பதற்காகப் போனார்.

அச்சமயம் மிகுந்த உஷ்ணமான இளவேனிற் காலமாயிருந்தது. காடு முழுவதும் ஏற்கெனவே பச்சையால் மூடப்பட்டிருந்தது. மிகுந்த தூசி படர்ந்தும் உஷ்ணமாகவும் இருந்தபடியால், தண்ணீர் பக்கத்தில் போகும்போது குளிக்க வேண்டுமென்ற உணர்ச்சி ஒருவருக்கு ஏற்படும்.

மனச் சோர்வுடனே தாம் மார்ஷலிடம் பேசப்போகும் விஷயத்தைப் பற்றி சிந்தனை செய்துகொண்ட, ஆட்ராட்னோ என்ற இடத்திலுள்ள ராஸ்டோவின் மாளிகை காம்பவுண்டிற்குள் இருந்த சாலையில் இளவரசர் ஆண்ட்ரூ தமது வண்டியில் போய்க் கொண்டிருந்தார். வலது பக்கத்தில் சில மரங்களுக்குப் பின்னால், பெண்களின் மகிழ்ச்சிக் குரல்களை அவர்கேட்டார். தமது வண்டி போய்க்கொண்டிருந்த பாதையைக் கடப்பதற்கு, சில பெண்கள் ஓடி வந்து கொண்டிருப்பதைக் கண்டார். மற்றவர்களுக்கு முன்பாகவும், தமக்குச் சமீபமாகவும் ஒரு பெண் கறுப்புத் தலை முடியுடனும், குறிப்பிடத்தகுந்த ஒல்லியான தேகத்துடனும், மஞ்சள் வர்ண சீட்டி

உடையைத் தரித்தும், தலையில் ஒரு வெள்ளைக்கைக் குட்டையை கட்டிக் கொண்டும், ஓடி வந்து கொண்டிருந்தாள். அந்தக் கைக்குட்டைக்கு தப்பிய தலை முடி சுருளை சுருளையாக தொங்கிக் கொண்டிருந்தன. அந்தப் பெண் எதையோ கூச்சலிட்டாள். ஆனால் அவர் ஒரு அந்நியர் என்பதைக் கண்டவுடன், அவரைப் பார்க்காமல் சிரித்துக் கொண்டு, பின்னால் ஓடிவிட்டாள்.

அவருக்குத் திடீரென்று ஒரு வேதனை தோன்றியது. அதன் காரணம் என்னவென்பது அவருக்குத் தெரியாது. அந்த நாள் மிகுந்த அழகாய் இருந்தது. சூரியன் மிகப் பிரகாசமாய் இருந்தான். சுற்றிலும் எதைப் பார்த்தாலும் மகிழ்ச்சி பொங்கி நின்றது. ஆனால் அந்த ஒல்லியான அழகான பெண்ணுக்கு, இவர் ஒருவர், இந்த உலகத்தில் இருப்பது தெரியாது. தெரியவும் அவள் விரும்பவில்லை. தன்னுடைய சொந்த தனியான சுற்று 'வட்டாரத்தில் - ஒரு வேளைமுட்டாள்தனமாயிருக்கலாம் - மிகுந்த பிரகாசமான, சந்தோஷமான வாழ்க்கையில் மகிழ்ச்சியுடனும் திருப்தியுடனும் இருந்து கொண்டிருந்தாள்.

'அவள் எதைப்பற்றி அவ்வளவு சந்தோஷமாய் இருக்கிறாள்? எதைப்பற்றி அவள் சிந்தித்துக்கொண்டிருக்கிறாள்? ராணுவ சட்ட திட்டங்களைப் பற்றி இருக்காது; அல்லது ரயாஜான் எஸ்டேட் அடிமைகளின் நில வரியைப் பற்றியும் இருக்காது என்று சொல்லி, அவருக்கு உள்ளூர ஏற்பட்ட ஆசையினால் தூண்டப்பட்டு, தம்மையே இளவரசர் ஆண்ட்ரூ கேட்டுக்கொண்டார்.

ஆட்ராட்னோ என்ற இடத்தில் 1809 -ஆம் வருஷத்தில் கோமகன் இலியா ரா்ஸ்டோவ் வசித்து வந்தார். அதாவது, அதற்கு முந்தைய ஆண்டுகளில் அவர் செய்ததைப் போலவே, அந்த இடத்தில் தமது நண்பர்களை உபசரித்து வந்தார். அதாவது, பொழுது போக்குக் காட்சிகள், நாடகக் காட்சிகள், டின்னர்கள், சங்கீதங்கள், காடுகளில் வேட்டையாடுதல் போன்றவைகளை ஏற்பாடு செய்து, தமது நண்பர்களை மகிழ்விப்பது அவர் வழக்கம். இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்ததும், அவர் மிகுந்த சந்தோஷமடைந்தார். புதிதாக யாரைப் பார்த்தாலும், அவர் அப்படியே சந்தோஷ மடைவார். அன்று இரவு அவர் அங்கேயே தங்கவேண்டுமென்று வற்புறுத்தினார்.

அன்றைய தினம் பகல் நேரம் மந்தமாய் இருந்தது. அங்கிருந்த வயோதிக வீட்டுக்காரர்களும், அங்கு வந்திருந்த முக்கியமான விருந்தாளிகளும் அவரை உபசரித்தார்கள். (சமீபத்தில் ஒருவர் தினம் அங்கே வரப் போகிறபடியால், வயோதிக கோமகன் வீட்டில்

விருந்தாளிகள் ஏராளமாய்க் கூடியிருந்தார்கள்.) இளவரசர் ஆண்ட்ரூ திரும்பத் திரும்ப நட்டாஷாவை நோட்டமிட்டார். அங்கிருந்த இளையவர்களில் நட்டாஷாதான் மிகுந்த குஷியாகவும் சிரித்துக் கொண்டும் இருந்தாள். அவர் பார்க்கும் ஒவ்வொரு தடவையும், ''அவள் எதைப்பற்றி சிந்தித்துக் கொண்டிருக்கிறாள்? அவள் ஏன் அவ்வளவு சந்தோஷமாயிருக்கிறாள்?'' என்று அவர் தம்மையே கேட்டுக் கொள்வதுண்டு.

அன்று இரவு அந்தப் புதிய சூழ்நிலையில் தனிமையாக அவர் இருந்தபடியால், அவரால் தூங்க முடியவில்லை. முதலில் கொஞ்சம் படித்துவிட்டு, பின்னால் மெழுகுவத்தியை அணைத்தார். மீண்டும் மெழுகுவத்தியைப் பொருத்தினார். அந்த அறையில் உள் பக்கக் கதவுகள் சாத்தப்பட்டிருந்தன. அதனால், அந்த அறை மிகவும் உஷ்ணமாயிருந்தது. சில தஸ்தாவேஜுகள் நகரத்திலிருந்து இன்னும் வரவில்லையென்று சொல்லி, அவரை அங்கே தங்கும்படி செய்த அந்த வயோதிக முட்டாள்மீது (ஆண்ட்ரூ அப்படித்தான் ராஸ்டோவை அழைத்தார்.) மிகுந்த கோபமேற் பட்டது. அங்கே தங்கியதற்காக அவர் தம்மையே நொந்துகொண்டார்.

அவர் எழுந்து ஜன்னலைத் திறப்பதற்காகப் போனார். அவர் ஜன்னல் கதவுகளைத் திறந்ததும், திடீரென்று நிலவு வெளிச்சம் அங்கே தோன்றியது. ஜன்னலைத் திறப்பதற்காகக் காத்துக் கொண்டிருந்ததைப் போல, அந்த நிலவு வெளிச்சம் அறைக்குள் பாய்ந்தது. இரவு உற்சாகமாகவும், பிரகாசமாகவும் இருந்தது. ஆனால் காற்று அசையவில்லை. அந்த ஜன்னலுக்கு முன்னால் கத்தரித்துவிடப்பட்ட மரங்கள் வரிசையாகக் காணப்பட்டன. அவை ஒரு பக்கம் கறுப்பாகத் தோன்றின. மற்றொரு பக்கத்தில் வெள்ளை வெளிச்சம் காணப்பட்டது. மரங்களுக்குக் கீழே ஈரமான, செழிப்பான, பலவிதமான புல், பூண்டுகள் இங்குமங்கும் முளைத்திருந்தன. அதன் இலைகளில் வெள்ளை படர்ந்திருந்தது. அந்த கறுத்த மரங்களுக்குப் பின்னால், உயரமாகத் தெரிந்த ஒரு வீட்டின் கூரையில் படர்ந்திருந்த பனி மின்னிக் கொண்டிருந்தது. வலது பக்கத்தில் வெள்ளையான அடிப்பாகத்தையும், கிளை களையும் கொண்ட ஒரு மரம் பளிச்செனத் தெரிந்தது. அதற்கு மேலாக வெளிறிய நிறம்கொண்ட நட்சத்திரங்கள் இல்லாத, இளவேனில் வானத்தில் சந்திரன் பூரணமாக பிரகாசித்துக் கொண்டிருந்தது. அந்த ஜன்னலில் தமது முழங்கைகளை ஊன்றி வானத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

அவருடைய அறை முதல் மாடியில் இருந்தது. அவருக்கு மேலாக உள்ள அறைகளில் உள்ளவர்களும் விழித்துக் கொண்டிருந்

தார்கள். தமது தலைக்கு மேலாகப் பெண் குரல்களை அவர் கேட்டார்.

'இன்னும் ஒரே ஒரு தடவை' என்று தம்முடைய தலைக்கு மேலாகக் கேட்ட ஒரு பெண் குரலை, இளவரசர் ஆண்ட்ரூ உடனே அடையாளம் கண்டுகொண்டார்.

'ஆனால், நீ எப்போது படுக்க வரப்போகிறாய்?' என்று மற்றொரு குரல் கேட்டது.

'நான் வரமாட்டேன். என்னால் தூங்க முடியாது. என்ன பிரயோஜனம்? கடைசித் தடவையாக வா இப்போது.'

இரண்டு பெண் குரல்கள் ஒரு பாட்டின் கடைசி அடிகளைப் பாடின

'ஓ, எவ்வளவு இனிமையாய் இருக்கிறது! இப்போது தூங்குவதற்கு போ. அவ்வளவு போதும்.'

'நீ தூங்கப் போ. என்னால் போகமுடியாது' என்று அந்த முதல் குரல் சொல்லிவிட்டு, ஜன்னலுக்குச் சமீபத்தில் வந்தது. அவள் ஜன்னல் வழியாக முகத்தை நீட்டிக்கொண்டிருக்கிறாள் என்பது தெரிந்தது. ஏனெனில், அவளுடைய ஆடைகளின் சலசலப்புச் சப்தங்களையும், அவள் மூச்சு விடுவதையும்கூட கேட்க முடிந்தது. அந்தச் சந்திரனும், அதன் வெளிச்சமும், நிழல்களும் அப்படியே அசைவற்று நின்றதைப்போல, எல்லாமே கல் மாதிரி அசைவற்று நின்றன. இளவசரர் ஆண்ட்ரூகூட அசைவதற்குச் துணியவில்லை. தாம் அங்கு தற்செயலாக நின்றுகொண்டிருப்பதைக் கண்டுவிடக் கூடாதே என்று அவர் பயந்தார்.

'சோனியா, சோனியா' என்று முதலில் பேசிய குரல் கூப்பிடுவதை மீண்டும் அவர் கேட்டார். 'ஓ, நீ எப்படித் தூங்க முடியும்?' இங்கே பார்; எவ்வளவு பிரமாதமாய் இருக்கிறது. ஆ, என்ன பிரமாதம்! எழுந்திரு, சோனியா' என்று அவளுடைய குரல் கண்ணீரோடு தொனித்தது. 'இம்மாதிரியான, இனிமையான, மிக இனிமையான இரவு, இதற்கு முன்னால் இருந்ததில்லை.

தயக்கத்தோடு சோனியா ஏதோ பதில் சொன்னாள்.

'உடனே நீ வா. இந்த சந்திரனைப் பார். எவ்வளவு அழகாய் இருக்கிறது!... ஓ, எவ்வளவு அழகாய் இருக்கிறது. இங்கேவா... என் கண்ணே, என் அன்பான இருதயமே, இங்கே வா. அங்கே நீ பார். நான் கீழே உட்கார்ந்து இந்த மாதிரி முட்டுகளைக் கட்டிக்கொண்டு நன்றாக உடம்பை இறுக்கி வெளியே பறந்துபோக வேண்டுமென்று எண்ணுகிறேன். இந்த மாதிரி...

'ஜாக்கிரதை, நீ கீழே விழுந்து விடுவாய்.'

ஒருவருக்கொருவர் தள்ளிக்கொண்டிருக்கும் சப்தத்தை அவர் கேட்டார். சோனியாவின் ஆட்சேபக் குரல், 'இப்பொழுது ஒரு மணிக்கு மேலாகி விட்டது' என்று கூறியதையும் அவர் கேட்டார்.

'நீ எப்போதும் என் காரியங்களைக் கெடுத்துவிடுகிறாய். ரொம்ப சரி; போ; போ.'

மீண்டும் எல்லாமே அமைதியாய்க் காணப்பட்டன. ஆனால் அவள் அங்கேதான் இருந்துகொண்டிருக்கிறாள் என்பதை இளவரசர் ஆண்ட்ரூ அறிவார். இடையிடையே ஒரு மெதுவான ஆடையின் சலசலப்பையும், சில சமயங்களில் பெரு மூச்சுகளையும் அவர் கேட்டு வந்தார்.

'அட கடவுளே, அட கடவுளே, இதற்கு என்ன அர்த்தம்?' என்று அவள் திடீரென்று கூச்சலிட்டாள். 'படுக்கைக்குப் போய்த்தான் ஆகவேண்டும் என்றால், போக வேண்டியதுதான்' என்று சொல்லி விட்டு ஜன்னல் கதவைத் திடீரென்று அடைத்தாள்.

'நான் இங்கே இருக்கிறேன் என்பது அவளுக்குத் தெரியாது' என்று, அவளுடைய குரலைக் கேட்டுக்கொண்டிருந்தபோது, இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். தம்மைப்பற்றி அவள் ஏதாவது சொல்லக் கூடுமென்று, காரணம் தெரியாமல் அவர் எதிர்பார்த்துக் கொண்டும், பயந்து கொண்டும் இருந்தார். 'அவள் இன்னும் அங்கேதான் இருக்கிறாள். ஏதோ ஒரு காரியத்திற்காக இருப்பது போலத் தோன்றுகிறது' என்று அவர் நினைத்தார்.

அவருடைய உள்ளத்தில் திடீரென்று எதிர் பாராத விதமாக இளமை நினைப்புகளுடையவும் நம்பிக்கையும் உடையவும் வேதனைகள் தோன்றின. அவருடைய வாழ்க்கையின் போக்கிற்கு அது விரோதமாய் இருந்தது. அதற்குக் காரணம் சொல்வதற்கும் அவரால் முடியவில்லை. அவர் தமது படுக்கையில் படுத்து உடனே தூங்கிவிட்டார்.

## 6

### 3

மறுநாள் காலையில் கோமனிடம் மட்டும் விடை பெற்றுக் கொண்டு, சீமாட்டி களின் வருகைக்காக காத்திருக்காமல், இளவரசர் ஆண்ட்ரூ தமது வீட்டிற்குப் புறப்பட்டார். அப்போது ஜூன் மாதம் ஏற்கெனவே ஆரம்பமாகி விட்டது. அவர் திரும்பி வரும்போது, அதே பூவரசு மரக்

காட்டிற்குள் வந்தார். அவர் மனத்தில் ஒரு விசித்திரமான, மறக்க முடியாத விதத்தில் உணர்ச்சியை ஏற்படுத்திய, கணுக்கள் கொண்ட, பழைமையான ஓக்கு மரம் அந்தக் காட்டில்தான் நின்றது. குதிரைகளின் மணிகள் ஆறு வாரங்களுக்கு முன்னால் அந்தக் காட்டில் எவ்வளவு சப்தத்தோடு ஒலித்தனவோ, அம்மாதிரி இப்போது இல்லை. மிகவும் மந்தமாக ஒலித்தன. ஏனெனில், அந்தக் காட்டில் எல்லாம் அடர்ந்து நெருங்கி இருண்டு காணப்பட்டன. இங்கு மங்கும் தோன்றிய அந்த இளம் தேவதாரு மரங்கள், அந்தப் பொதுவான அழகிற்கு ரசபேதமாக நிற்கவில்லை. ஆனால், அவை தங்களைச் சுற்றிலும் காணப்பட்ட மெல்லிய, புதிய வளர்ச்சிகளின் சூழ்நிலைக்கு இணங்கியே தோன்றின.

அன்று பகல் முழுதும் உஷ்ணமாயிருந்தது. எங்கோ ஓர் இடத்தில் ஒரு புயல் உருவாகிக்கொண்டிருந்தது. ஆனால், ஒரு சிறிய மேகம் மழைத் துளிகளை இலேசாகச் சிதறியது. தெருக்களிலும், இலைகளிலும் அந்த மழைத் துளிகள் தெளிக்கப்பட்டிருந்தன. அந்தக் காட்டின் இட பக்கம், நிழலினால் இருண்டிருந்தது. வலது பக்கம், சூரிய வெளிச்சத்தால் மின்னிக்கொண்டு நனைந்தும், பிரகாசமடைந்தும் காணப்பட்டது. காற்றினால் ஒன்றும் ஆடவே இல்லை. ஒவ்வொன்றும் பூத்துக் குலுங்குகிற பருவத்தில் இருந்தன. வானம்பாடிகள் பாடிக்கொண்டிருந்தன. சில குரல்கள் சமீபத்திலும் சில குரல்கள் தூரத்திலும் கேட்டுக் கொண்டிருந்தன.

'ஆமாம், இதே காட்டில்தான் அது சொல்லியதை நான் ஒப்புக் கொண்ட அந்த ஓக்கு மரம் நின்றது' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். 'ஆனால் அது இப்போது எங்கே இருக்கிறது?' என்று அவர் ஆச்சரியத்தோடு இடப் பக்கத்தில் பார்த்தார். அதே மரத்தை முதலில் அடையாளம் தெரிந்துகெள்ளாமல், வியப்போடு மீண்டும் பார்த்தார். அந்தப் பழைய ஓக்கு மரம் மிகவும் மாறிப் போயிருந்தது. இருண்ட, பச்சையான இலைகளால் பந்தல் போடுவதுபோல, சுற்றிலும் தளிர் விட்டு, நீண்டு படர்ந்து, தன்னை மறந்து மாலைச் சூரியனின் ஒளியில் லேசாக அசைந்து ஆடிக்கொண்டு நின்றது, அதனுடைய கணுக்கள் கொண்ட விரல்களோ, பழைய தழும்புகளோ, அல்லது பழைய சந்தேகங்களோ, அல்லது பழைய துக்கங்களோ அங்கே எதுவும் காணப்படவில்லை. நூற்றாண்டு களாக இறுகிப்போன அதன் பட்டையிலிருந்து, எந்தவிதமான புதிய கிளைகள் அங்கு காணப்படாமல் இருந்தும், புதிய இலைகள் தளிர் விட்டிருந்தன. இந்த வயோதிக வீரன் இம்மாதிரியான காரியத்தைச் செய்ய முடியும் என்று ஒருவராலும் சுலபமாக நம்ப முடியாது.

'ஆமாம்; அதே பழைய ஓக்கு மரம்தான்' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். உடனே காரணம் சொல்ல முடியாத அந்த இளவேனிற் காலத்தின் மகிழ்ச்சியும் புத்துணர்ச்சியும் அவரைப் பற்றிக் கொண்டன. அவருடைய வாழ்க்கையிலுள்ள மிகச் சிறந்த சம்பவங்கள் எல்லாம் அவர் நினைவின் முன்பாக திடீரென்று தோன்றின. ஆஸ்டர்லிட்ஜில் அந்த உயரமான வானமும், கண்டிப்பது போன்றிருந்த அவருடைய மனைவியின் இறந்துபோன முகமும், அந்தத் தெப்பத்தில் பீயருடன் அவர் செய்த உரையாடலையும், அந்த இரவில் காணப்பட்ட அழகில் அந்தப் பெண் பரவசமடைந்து நின்றதும், அதே இரவும், அதே சந்திரனும்... இவையெல்லாம் அவர் மனத்தில் திடீரென்று பாய்ந்தன.

'இல்லை, 31 வயதில் வாழ்க்கை முடிந்து விடவில்லை' என்று இளவரசர் ஆண்ட்ரூ திடீரென்று நிச்சயமாகவும், உறுதியாகவும் தீர்மானித்தார். 'என்னிடம் என்ன இருக்கிறது என்பதை நான் மட்டும் அறிந்தால் போதாது. ஒவ்வொருவரும் அதை அறியவேண்டும். பீயரும், அந்த வானத்திற்கு பறந்து செல்லவேண்டுமென்று விரும்பிய அந்த இளம்பெண்ணும், ஒவ்வொருவரும் அதை அறிந்து கொள்ள வேண்டும். அதனால் என்னுடைய வாழ்க்கை எனக்காக மட்டுமில்லாமல், மற்றவர்கள் அதை விட்டுப் பிரிந்து நிற்கும்படி இல்லாமல், அவர்கள் எல்லோரிடமும் அது எதிரொலிக்கும்படி செய்து, அவர்களும் நானும் சுமுகமாக வாழும்படி செய்ய வேண்டும்.'

வீட்டிற்குத் திரும்பியதும் பீட்டர்ஸ்பர்க்கிற்கு இலையுதிர் காலத்தில் போகவேண்டுமென்று இளவரசர் ஆண்ட்ரூ தீர்மானித்தார். இந்தத் தீர்மானத்திற்கு எத்தனையோ விதமான காரணங்களை அவர் கண்டுபிடித்தார். புத்திசாலித்தனமான, தர்க்கத்திற்கு பொருத்தமான காரணங்கள், அவர் பீட்டர்ஸ்பர்க்கிற்கு போக வேண்டியது அவசியம் என்பதற்கும், அவர் மீண்டும் ராணுவ சேவையில் சேரவேண்டுமென்பதற்கும், அவருடைய மனத்தில் தோன்றிக்கொண்டே இருந்தன. வாழ்க்கையில் ஒரு முக்கியமான பங்கெடுத்துக்கொள்ளவேண்டிய அவசியத்தை சந்தேகிப்பதற்கு முன்னால் அவரால் எப்படி முடிந்தது என்பதை இப்பொழுது அவரால் அறிந்துகொள்ள முடியவில்லை. அந்த அமைதியான கிராமாந்திரத்தை விட்டுப் போகவேண்டும் என்ற எண்ணம், அவருடைய மூளையால் ஒரு மாதத்திற்கு முன்பாக புரிந்திருக்கவே முடியாது. வாழ்க்கையில் தமக்கு ஏற்பட்டுள்ள எல்லா அனுபவங்களும் வீணாய் விடுமென்றும், அவற்றை வீணாக்காமல்

தடுக்கவேண்டுமானால், ஏதாவது வேலையில் அவர் இறங்கி, அதில் அனுபவங்களை உபயோகிக்க வேண்டுமென்றும், அதற்காக தீவிரமான வேலையில் ஈடுபடவேண்டுமென்றும் அவருக்குத் தெளிவாகத் தோன்றியது. வாழ்க்கையில் அவருக்கு ஏற்பட்ட படிப்பினைகளுக்குப் பின்னால், தாம் உபயோகமாக இருப்பது சாத்தியம் என்றும், சந்தோஷத்தையும் காதலையும் பெறுவது சாத்தியமென்றும் நினைப்பது தம்மையே அவமதித்துக் கொள்ளுவதாகும் என்று அவருக்கு முன்னால் தோன்றியது. அம்மாதிரியான முடிவுக்கு அவர் வருவதற்கு, இம்மாதிரியான கேடுகெட்ட தர்க்க விவாதங்களே காரணமாய் இருந்தன. அம்மாதிரி முடிவுக்கு வருவதற்கு அவரால் எப்படி முடிந்தது என்பதுகூட அவருக்கு இப்பொழுது ஞாபகமில்லை. அதற்கு நேர்விரோதமான முடிவை இப்பொழுது காரணங்கள் காட்டுகின்றன. ரயாஜான் பிரயாணத்திற்குப் பின்னால், கிராமாந்திர வாழ்க்கை அவருக்கு மந்தமாய் காணப்பட்டது. முன்னால் செய்து வந்த வேலைகளில் அவருக்கு ஈடுபாடில்லை. தமது படிப்பறையில் தனிமையாய் இருக்கும்போது, அடிக்கடி அவர் எழுந்து, நிலைக் கண்ணாடி முன்னால் போய் நின்று தமது முகத்தையே வெகு நேரம் பார்த்துக்கொண்டிருப்பார். பின்னால் அவர், இறந்துபோன லிசாவின் படத்தைப் பார்ப்பார். அவளுடைய சுருண்ட தலை முடிகளோடு கனிவோடும், குஷியோடும் அவரை அந்த கில்ட் சட்டத்திலிருந்து அவள் பார்ப்பதுபோலத் தோன்றும். முன்னால், அவள் சொல்லிய அந்த பயங்கர வார்த்தைகளை, இப்பொழுது அவள் சொல்லுவதில்லை. மகிழ்ச்சியோடும், கேள்விக் குறியோடும் அவள் அவரைப் பார்ப்பதுபோலத் தோன்றும். இளவரசர் ஆண்ட்ரூ தமது கைகளை பின்னால் கட்டிக்கொண்டு, ஒரு சமயம் புன்முறுவல் செய்வதும், ஒரு சமயம் முகம் சுளிப்பதுமாக அந்த அறையில் வெகு நேரம் உலாவிக்கொண்டிருப்பார். அச்சமயம் அவர் உள்ளத்தில் பகுத்தறிவிற்குப் பொருத்தமில்லாத, வெளியில் சொல்ல முடியாத, குற்றத்தைப் போன்ற இரகசியமான சிந்தனைகள் ஓடிக்கொண்டிருக்கும். அவைதான் அவருடைய முழு வாழ்க்கையையும் மாற்றியவை. அந்த நினைப்புகள்தான். பீயரைப் பற்றியும், பெரும் புகழைப் பற்றியும், ஜன்னலில் இருந்த அந்தப் பெண்ணைப் பற்றியும், அந்த ஓக்கு மரத்தைப் பற்றியும், பெண்ணின் அழகையும் காதலையும் பற்றியும் சம்பந்தப்பட்ட சிந்தனைகளாகும். அம்மாதிரி சந்தர்ப்பங்களில் யாராவது ஒருவர் அவருடைய அறைக்குள் வந்தால், அவர் குறிப்பாக இனிமை யில்லாமலும், கடுமையாகவும், இனிமையற்ற தர்க்க ரீதியுடனும் காணப்படுவார்.

அம்மாதிரியான ஒரு சந்தர்ப்பத்தில் இளவரசி மேரி அங்கே வந்து, 'எனது அன்பே, மிகவும் குளிராய் இருக்கிறது. ஆகவே, இன்று குஞ்சு நிக்கலஸ் வெளியே போக முடியாது' என்று சொல்லுவதாக வைத்துக்கொள்ளுவோம்.

அம்மாதிரி சந்தர்ப்பங்களில் இளவரசர் ஆண்ட்ரூ கொஞ்சங்கூட கனிவில்லாமல் தமது சகோதரியைப் பார்த்து பின்வருமாறு சொல்லுவார்:- 'உஷ்ணமாய் இருந்தால், 'ஒரு சிறிய சட்டையை போட்டுக்கொண்டு அவன் வெளியே போக முடியும். ஆனால், இப்பொழுது குளிராய் இருப்பதால், அதற்காக தயாரிக்கப்பட்ட உஷ்ணமான உடைகளையே அணிய வேண்டும். குளிராய் இருந்தால் அப்படித்தான் செய்யவேண்டுமே யொழிய, அதற்காக சுத்தமான காற்று வேண்டியுள்ள குழந்தையை வீட்டிற்குள் வைத்திருக்கக் கூடாது. 'இம்மாதிரியாக தீர்க்கமான தர்க்க ரீதியாகப் பேசுவார். தர்க்கத்திற்கு ஒவ்வாத இரகசியமான உணர்ச்சிகள் அவருக்குள் எழுந்து, அவரை ஆட்டிக்கொண்டிருப்பதற்காக, வேறு யாரையோ தண்டிக்க வேண்டும் என்பதுபோல அவர் பேச்சு இருக்கும்.

அம்மாதிரிச் சந்தர்ப்பங்களில், மூளையைக் கொண்டு செய்யும் வேலையானது மனிதர்களை எப்படி கனிவற்றவர்களாகச் செய்து விடுகிறது என்று இளவரசி மேரி நினைப்பதுண்டு.



1809 -ஆம் வருஷம் ஆகஸ்ட் மாதத்தில் இளவரசர் ஆண்ட்ரூ பீட்டர்ஸ் பர்க்கிற்கு வந்து சேர்ந்தார். அப்போதுதான் அந்த வாலிப ஸ்பெரான்ஸ்கியின் புகழ் உச்ச நிலையில் இருந்தது. அவருடைய சீர்திருத் தங்கள் எல்லாம் மிகுந்த உற்சாகத்தோடு முன்னேறிக் கொண்டிருந்தன. அதே ஆகஸ்டு மாதத்தில்தான் சக்கரவர்த்தி தமது வண்டியிலிருந்து கீழே விழுந்து, காலில் காயம் ஏற்பட்டது. பீட்டர்ஹாப் என்ற இடத்தில் மூன்று வாரங்கள் அவர் தங்கியிருந்தார். அக்காலத்தில் ஸ்பெரான்ஸ்கியைத் தவிர, வேறு யாரையும் அவர் பார்த்துப் பேசுவதில்லை. உயர் வட்டாரங்களை மிகுந்த பரபரப்புக்குள்ளாக்கிய பிரசித்தமான இரண்டு உத்தரவுகள், அச்சமயம்தான் தயார் செய்யப்பட்டன. அதாவது ராஜ்ய சபை வரிசைகளை ரத்து செய்து, ராஜ்ய சபைக்கு அங்கத்தினர்களாய் வரவேண்டியவர்களுக்கும், அசெஸர் பதவிகளுக்கு வரவேண்டி

யவர்களுக்கும் பரீட்சைகள் வைக்கப்பட்டன. இவை மட்டுமல்ல, அச்சமயம் ருஷ்யாவிலிருந்த சர்க்காரின் அமைப்பையே மாற்றி அமைக்கக்கூடிய விதத்தில், ஒரு முழு அரசியல் சட்டம் தயார் செய்யப்பட்டது. நீதி, நிர்வாகம், பொக்கிஷம் ஆகியவைகளைப் பற்றியும், ராஜ்ய கவுன்சில் முதல் மாவட்டக் கவுன்சில் வரையுள்ள எல்லா ஸ்தாபனங்களின் மாறுதல்களைப் பற்றியும் அந்தச் சட்டத்தில் சொல்லப்பட்டிருந்தது. சக்கரவர்த்தி அலெக்ஸாண்டர் சிம்மாசனத்தில் ஏறியபோது, சில தெளிவற்ற, தாராளக் கொள்கையுள்ள கனவுகளைக் கொண்டிருந்தார். அவற்றைக் காரியத்தில் நடத்தி வைப்பதற்கு ஜார்டோரிஸ்கி நோவாஸைல்ட்சேவ், காச்சுபே,ஸ்ட்ரோகானால் ஆகியவர்களின் உதவியால் அவர் முயற்சி செய்துகொண்டிருந்தார். அந்தக் காரியங்களெல்லாம் உருவாகிக் கொண்டும் பலிதம் அடையக்கூடிய விதத்திலும் காணப்பட்டன.

இப்போது இந்த ஆலோசகர்களுக்குப் பதிலாக சிவில் நிர்வாகத்திற்கு ஸ்பெரான்ஸ்கியையும், இராணுவ நிர்வாகத்திற்கு அராக்சீவ் என்பவரையும் நியமித்தார். தாம் வந்து சேர்ந்ததும், இளவரசர் ஆண்ட்ரூ ராஜ்ய சபையில் கனவான் என்ற முறையில் தர்பாருக்கும், ஆஸ்தான மண்டபத்திற்கும் சென்று ஆஜரானார். சக்கரவர்த்தி அவரை இரு முறைகள் முன்னால் சந்தித்திருந்த போதிலும், இச்சமயம் அவரிடம் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. சக்கரவர்த்தியின் போக்கிற்கு தமது போக்கு நேர் விரோதமானது என்று எப்பொழுதுமே இளவரசர் ஆண்ட்ரூவுக்கு முன்னால் தோன்றி வந்தது. சக்கரவர்த்திக்கு தம்முடைய முகமோ உருவமோ இப்பொழுது காட்டிய அன்பில்லாத, வெறுப்பான பார்வைகள் அவருடைய இந்த யூகத்தை மேலும் உறுதி செய்தன.

ராஜ்ய சபையிலுள்ளவர்கள் சக்கரவர்த்தி அவரை புறக்கணித்ததற்கு என்ன காரணம் என்பதை விளக்கினார்கள். அதாவது 1809 -ஆம் வருஷத்திலிருந்து அவர் சேவையில் இல்லாமல் இருந்ததே, அவருடைய அதிருப்திக்குக் காரணம் என்று சொன்னார்கள்.

'ஒருவரிடம் அனுதாபம் காட்டுவதையோ, அல்லது விரோதம் காட்டுவதையோ ஒருவரால் தடுத்து விட முடியாது. ஆகவே, ராணுவ கட்ட விதிகளை திருத்த வேண்டுமென்று நான் தயார் செய்து வைத்திருக்கும் திட்டத்தை சக்கரவர்த்தியிடம் நேரில் கொடுப்பது நல்லதல்ல. அந்தத் திட்டமே தன்னைப்பற்றி சொல்லிக்கொள்ளும்' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார்.

தாம் எழுதி வைத்திருந்தவைகளைப் பற்றி தமது தந்தையின் நண்பரான ஒரு வயோதிக பீல்ட் மார்ஷலிடம் அவர் தெரிவித்தார். அந்தப் பீல்ட் மார்ஷல் அவரைச் சந்திப்பதற்கு ஒரு நேரத்தைக் குறிப்பிட்டார். அவர் மிகுந்த கருணையுடன் வரவேற்று அவருடைய திட்டத்தைச் சக்கரவர்த்திக்குச் சொல்வதாக வாக்குறுதி கொடுத்தார். சில தினங்களுக்குப் பின்னால் யுத்த மந்திரி, கோமகன் அராக்சீவைப் பார்க்கும்படி இளவரசர் ஆண்ட்ரூவுக்குக் கடிதம் வந்தது.

கோமகன் அராக்சீவின் வெளி அறையில் குறிப்பிடப்பட்ட தினத்தில் காலை 9 மணிக்கு இளவரசர் ஆண்ட்ரூ போய்ச் சேர்ந்தார். அராக்சீவை அவருக்கு நேராகப் பழக்கமில்லை. அவர் எப்போதும் பார்த்ததுமில்லை. அவரைப்பற்றி அவர் கேள்விப்பட்டவைகளெல்லாம் அவரிடம் அவருக்கு மதிப்பு ஏற்படும்படி செய்யவில்லை.

'அவர் யுத்த மந்திரி; சக்கரவர்த்தியின் நம்பிக்கையைப் பெற்றவர். ஆகவே அவர் சொந்த குணங்களைப்பற்றி நான் ஒன்றும் பொருட்படுத்த வேண்டியதில்லை. என் திட்டத்தைப் பற்றி யோசிக்கும்படி அவருக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது. ஆகவே அதை அங்கீகரிக்க வேண்டுமானால், அவர் ஒருவர்தான் செய்ய முடியம்' என்று இளவரசர் ஆண்ட்ரூ, அங்கே வெளி அறையில் காத்திருக்கும்போது, நினைத்தார். அந்த அறையில் முக்கியமானவர்களும் முக்கியமில்லாதவர்களுமான வேறு பலர் இருந்தார்கள்.

ஒரு உதவியாளராக இளவரசர் ஆண்ட்ரூ சேவை செய்து வந்த காலத்தில், பல பிரபலஸ்தர்களின் வெளி அறைகளைப் பார்த்திருக்கிறார். எத்தனையோ விதமான அறைகள் அவருக்குத் தெரியும். ஆனால் கோமகன் அராக்சீவின் வெளி அறை ஒரு தனி குணமுள்ள தாய்க் காணப்பட்டது. பேட்டிக்காக அங்கு காத்திருந்த முக்கியமில்லாத நபர்களின் முகங்களில் பணிவும் பரபரப்பும் காணப்பட்டன. உயர் பதவியிலுள்ள கனவான்களின் முகங்கள் தர்ம சங்கடமான தோற்றத்தைக் காட்டிக்கொண்டிருந்தன. ஆனால் அந்தத் தோற்றத்தை அவர்கள் மறைத்துக்கொண்டு தங்களுடைய நிலைமையையும் தங்களையும், யாரை பார்ப்பதற்காக காத்துக்கொண்டிருக்கிறார்களோ அவரையும், பரிகாசம் செய்வது போலவும், கவலையில்லாதது போலவும் விளங்கினார்கள். சிலர் சிந்தித்துக்கொண்டு மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தார்கள். வேறு சிலர் மெல்லிய குரலில் பேசிக்கொண்டும், சிரித்துக்

கொண்டும் இருந்தார்கள். 'சிலாஆண்ட்ரீவிச்' என்ற கேலிப் பெயரை இளவரசர் ஆண்ட்ரூ காதில் கேட்டார். 'மாமா நமக்கு சூடாகக் கொடுப்பார்' என்ற வார்த்தைகளும் அவர் காதில் விழுந்தன. இதையெல்லாம் கோமகன் அராக்சீவைப் பற்றியே சொல்லப்பட்டன. ஒரு ஜெனரல், ஒரு முக்கியமான பதவியில் உள்ளவர், அவ்வளவு நேரமாக தாம் காக்கும்படி வைத்ததை அவமதிப்பாக நினைத்தார். அதனால் தமது கால் மேல் கால் போடுவதை அடிக்கடி மாற்றிக் கொண்டும், தனக்குள் ஒரு இழிவாக புன்னகை காட்டிக்கொண்டுமிருந்தார்.

கதவு திறக்கும்போது எல்லோர் முகங்களிலும் ஒரே ஒரு தோற்றமே காணப்பட்டது. அதுதான் பயம். அங்கு அலுவலில் இருந்த உதவியாளரிடம், தமது பேர் சீட்டை எடுத்துப் போடும்படி, இளவரசர் ஆண்ட்ரூ இரண்டாவது தடவையாகக் கேட்டார். ஆனால் அந்த உதவியாளர் கேலியாக அவரைப் பார்த்து உரிய காலத்தில் அவருடைய முறை வருமென்று சொன்னார். வேறு சிலர் அறைக்குள் போய் வந்த பின்பு, ஒரு பயந்து நடுங்கிய அதிகாரியை அந்த பயங்கரமான அறையின் வாசலுக்குள் அழைத்துப் போனார்கள். அந்தக் காட்சி இளவரசர் ஆண்ட்ரூவின் மனத்தில் பதிந்தது. அந்த அதிகாரியின் பேட்டி வெகு நேரமாக நடந்தது. திடீரென்று ஒரு கடினமான கோபக் குரலின் சப்தம் கதவுக்குப் பின்னாலிருந்து கேட்டது. அந்த அதிகாரி வெள்ளிறிய முகத்தோடும், பதறிய உதடுகளோடும் தமது தலையைப் பற்றிக்கொண்டு அறை வழியாக வெளியே போனார்.

இதற்குப் பின்னர்ல், இளவரசர் ஆண்ரூவை அங்கிருந்த உதவியாளர் அழைத்துச் சென்று 'வலது பக்கமுள்ள ஜன்னல் பக்கமாகப் போங்கள்' என்று மெல்லிய குரலில் சொன்னார்.

ஒரு சுத்தமான அறைக்குள் இளவரசர் ஆண்ட்ரூ நுழைந்தார். மேஜையின் முன்பாக, 40 வயதுள்ள ஒருவர் நீளமான உடலுடனும், ஒட்ட வெட்டிய கிராப் தலையுடனும், ஆழ்ந்த மடிப்புகளுடனும், மந்தமான கண்களுக்கு மேலாக நெறிந்த புருவங்களுடனும், நீளமான சிகப்பு மூக்குடனும் காணப்பட்டார். இவரைப் பார்க்காமலேயே இவர் பக்கமாக அராக்சீவ் தமது தலையைத் திருப்பினார்.

'உமது மனு எதைப் பற்றியது?' என்று அராக்சீவ் கேட்டார்.

'நான் மனுச் செய்துகொள்ளவில்லை, மேன்மை தங்கியவரே' என்று மெதுவாக இளவரசர் ஆண்ட்ரூ பதில் அளித்தார். அராக்சீவின் கண்கள் அவரை நோக்கின.

'உட்காரும்; நீர் இளவரசர் பால்கோன்ஸ்கி தானே?' என்றார்.

'நான் எதற்காகவும் மனு கொடுக்கவில்லை. நான் அனுப்பிய ஒரு திட்டத்தை, மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தி, மேன்மை தங்கிய உமக்கு அனுப்பியிருக்கிறார்...'

'எனது அன்புள்ள ஐயா, உமது திட்டத்தை படித்துப் பார்த்தேன்' என்று அராக்சீவ் இடைமறித்தார். முதல் வார்த்தைகளை மட்டும் சுமுகமாகச் சொல்லிவிட்டு, பின்னாலுள்ள வார்த்தைகளை, இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்க்காமலேயே, ஒரு துச்சமான தொனியோடு கூறினார். 'புதிதாக ராணுவ சட்டங்களை நீர் தயாரித்திருக்கிறீர்; அவ்வளவுதானே? சட்டங்கள் எத்தனையோ இருக்கின்றன. ஆனால், அந்தப் பழைய சட்டங்களை நிறைவேற்றி வைப்பதற்குத்தான் ஒருவரைக்கூட காணவில்லை. இந்தக் காலத்தில் ஒவ்வொருவரும் சட்டம் செய்கிறார்கள். வேறு எதையும் செய்வதைவிட, எழுதுவது ரொம்ப சுலபமாயிருக்கிறது.

'நான் அனுப்பிய யாதாஸ்தை எந்த விதமாக நீர் கையாளப் போகிறீர் என்பதை மேன்மை தங்கிய உம்மிடமிருந்து அறிந்து கொள்ளும்படி மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியின் விருப்பப்படியே நான் இங்கே வந்திருக்கிறேன்.'

'உம்முடைய யாதாஸ்தின் மீது நான் ஒரு உத்தரவு போட்டு, கமிட்டிக்கு அனுப்பியிருக்கிறேன். நான் அதை ஒப்புக்கொள்ள வில்லை' என்று அராக்சீவ் சொல்லி விட்டு எழுந்து தமது எழுதும் மேஜையிலிருந்த ஒரு காகிதத்தை எடுத்தார். அதை இளவரசர் ஆண்ட்ரூவிடம் கொடுத்து 'இதோ பாரும்' என்றார்.

அந்தக் காகிதத்தில் குறுக்காகப் பென்ஸிலினால் புள்ளியோ, காமாவோ இல்லாமல், எழுத்துப் பிழைகளோடு எழுதப் பட்டிருந்தன. அதாவது, 'அடிப்படை பலமில்லை. பிரஞ்சு ராணுவ விதியை காப்பியடிப்பது போலக் காணப்படுகிறது. யுத்த விதிகள் என்பதிலிருந்தும் காப்பியடிப்பதாகக் காணப்படுகிறது. அநாவசியமாக நீண்டு கொண்டு போகிறது.'

'எந்தக் கமிட்டிக்கு இந்த யாதாஸ்து அனுப்பப்பட்டிருக்கிறது?' என்று இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார்.

'ராணுவ சட்ட விதிகளின் கமிட்டிக்கு அனுப்பியிருக்கிறேன். மேன்மை தங்கிய உம்மை, சம்பளமில்லாமல் ஒரு அங்கத்தினராக அதில் சேர்த்துக் கொள்ளவும் நான் சிபாரிசு செய்திருக்கிறேன்.'

இளவரசர் ஆண்ட்ரூ புன்னகை காட்டினார்.

'எனக்கு அது தேவையில்லை.'

'சம்பளமில்லாமல் ஒரு அங்கத்தினர்' என்று அராக்சீவ் மீண்டும் சொன்னார். 'நான்... ஏ, அடுத்தவரைக் கூப்பிடு. இன்னும் யார் இருக்கிறார்கள்?' என்று அவர் கூச்சலிட்டு, இளவரசர் ஆண்ட்ரூவுக்கு தலை குனிந்தார்.



கமிட்டிக்கு தம்முடைய பெயரை நியமனம் செய்திருப்பதாக அறிக்கையில் வருவதை இளவரசர் ஆண்டரூ எதிர்ப் பார்த்துக் கொண்டிருந்தார். அப்படியிருந்த காலத்தில், தமக்கு முந்தி இருப்பவர்கள் என்று அவர் நினைத்தவர்களையும், அவர் களுடைய உதவி தமக்கு வேண்டியிருக் கலாம் என்று அவர் நினைத்தவர் களையும் சந்தித்து பேசி வந்தார். யுத்தத்திற்கு முன்பாக, அவர் எம்மாதிரியான உணர்ச்சியை அனுபவித்தாரோ, அதே உணர்ச்சியை தற்சமயம் பீட்டர்ஸ்பர்க்கில் அவர் இருக்கும்போதும் அனுபவித்தார். மிகுந்த ஆவலினால் அவர் மனவேதனை அடைந்தபடியால், கோடிக் கணக்கான மக்களின் விதியை நிர்ணயித்துக் கொண்டிருக்கிற சர்க்காரின் உயர் வட்டாரத்தின் மீது அவருடைய கவர்ச்சி திரும்பியது. வயதானவர்கள் கோபம் கொண்டு விளங்குவதி லிருந்தும், விஷயம் தெரியாதவர்கள் தெரிந்துகொள்ள வேண்டு மென்று ஆச்சரியம் காட்டுவதிலிருந்தும், விஷயம் அறிந்தவர்கள் வாய் மூடி மௌனமாய் இருப்பதிலிருந்தும், ஒவ்வொருவரும் மிகுந்த பரபரப்போடும் எதையோ சிந்தித்துக்கொண்டும் நடமாடிக் கொண்டிருப்பதிலிருந்தும், கணக்கற்ற கமிட்டிகளும், கமிஷன் களும் நாள்தோறும் நியமிக்கப்படுவதிலிருந்தும், மகத்தான பெரிய மக்கள் போராட்டம் ஒன்று, இந்த 1880 -ஆம் வருஷத்தில் தயாராகிக்கொண்டிருப்பதாக அவருக்குத் தோன்றியது. அதற்கு சேனாதிபதியாக விளங்குகிற ஒருவர் ஓர் அதிசயமான புருஷர். அவரை மிகுந்த மேதையென்றும் சொல்லுகிறார்கள். அவர் பெயர் ஸ்பெரான்ஸ்கி. அவரை இளவரசர் ஆண்ட்ரூவுக்கு பரிச்சயம் இல்லை. இந்த புனருத்தாரண இயக்கத்தைப் பற்றி இளவரசர் ஆண்ட்ரூவுக்கு தெளிவாக எதுவும் தெரியவில்லை. என்றாலும், இதற்கு தலைவராக ஸ்பெரான்ஸ்கி இருப்பதால், இதில் அவர் கூர்மையாக சிரத்தை கொள்ள ஆரம்பித்தார். ஆகவே ராணுவ சட்டதிட்டங்களைப் பற்றிய யோசனைகள், அவருடைய மனத்தில் இரண்டாந்தரமான இடத்திற்குப் பின்வாங்கின.

பீட்டர்ஸ்பர்க்கிலுள்ள பலவகையான மிக உயர்ந்த வட்டாரங்களில், இளவசரர் ஆண்ட்ரூவுக்கு எப்பொழுதுமே ஒரு நல்ல மதிப்புண்டு. அம்மாதிரி சாதகமான நிலைமையில் அவர் இருந்து வந்தார். சீர்திருத்தக் கட்சி அவரை ஆதரவோடு வரவேற்று, தங்களுடன் சேர்ந்துகொள்ளும்படி கேட்டு உறவாடி வந்தது. ஏனெனில், அவர் மிகுந்த புத்திசாலி என்றும், நிரம்பப் படித்தவர் என்றும் பெயர் பெற்றிருந்தார். இரண்டாவதாக அவருடைய அடிமைகளை அவர் விடுதலை செய்துவிட்டபடியால், அவர் ஒரு தாராளமானவர் என்ற கீர்த்தியை அடைந்திருந்தார். புதிய சீர்திருத்த முறைகளை வயதானவர்களும், அதிருப்தி அடைந்தோர்களும் எதிர்த்து வந்தார்கள். அந்த எதிர்ப்புக் கட்சியார் இந்த புதிய சீர்திருத்தங்களை தாங்கள் எதிர்ப்பதால், தங்களுக்கு ஆதரவு காட்டும்படி இளவரசர் ஆண்டரூவை எதிர்பார்த்தார்கள். காரணம் வேறு ஒன்றுமில்லை. அவருடைய தகப்பனாருக்கு அவர் குமாரராய் இருக்கிறார் என்பதுதான் ஒரே காரணம். அவர் பணக்காரராகவும், சிறந்த அந்தஸ்தில் இருப்பவராகவும், திருமணத்திற்கு சரியான மாப்பிள்ளையாகவும் இருப்பதாலும், அவர் இறந்து போனதாக சொல்லப்பட்டு மீண்டும் உயிர்பெற்று வந்த பெருமையை கொண்டிருப்பவராக இருந்தபடியாலும், பெண்களின் வட்டாரம் சந்தோஷமாக அவரை வரவேற்றது. இதைத் தவிர, அவருடைய மனைவி இறந்து போனதாலும், அவரிடம் மிகுந்த அனுதாபம் காட்டினார்கள். அவரை முன்பு அறிந்திருந்தவர்கள் எல்லாரும், அவரை சென்ற ஐந்து வருஷங்களில் மிகப் பிரமாதமாக அபிவிருத்தி அடைந்திருக்கிறார் என்றும், உள்ளம் கனிந்து ஆண்மை மிகுந்திருக்கிறார் என்றும், முன்னால் அவருக்கிருந்த தற்பெருமை, துச்சமாக பார்க்கும் சுபாவம், அலட்சியம் ஆகியவை அவரிடமிருந்து மறைந்து விட்டன என்றும், வருஷம் ஆகஆக மிகுந்த அமைதி ஏற்பட்டிருக்கிற தென்றும் நினைத்தார்கள். அவரைப் பற்றி மக்கள் பேசி வந்தார்கள்; அவர் மீது சிரத்தை கொண்டார்கள்; அவரைச் சந்திக்கவும் விரும்பினார்கள்.

கோமகன் அராக்சீவுடன் பேட்டி கண்ட மறு நாள் மாலை, இளவரசர் ஆண்ட்ரூ கோமகன் காச்சுபேவுடன் தங்கினார். (அராக்சீவ் என்பவரை 'நிலா ஆண்ட்ரீவிச்' என்ற கேலிப் பெயரால்தான் காச்சுபே சொல்லுவது வழக்கம். யுத்த மந்திரி அறைக்கு முன்பாக உள்ள அறையில், முதல் நாள் அன்று இளவரசர் ஆண்ட்ரூ கவனித்த அதே கேலித்தனம், காச்சுபேயின் பேச்சிலுமிருந்தது.) சிலா

ஆண்ட்ரீவிச்சுடன் பேட்டி கண்டதைப் பற்றிய விவரங்களை அவர் கோமகனுக்குச் சொன்னார்.

'எனது அன்புள்ளவரே, இந்த விஷயத்தில் கூட மைக்கேல் மைக்கேலாவிச் ஸ்பெரான்ஸ்கியின் ஆதரவில்லாமல், உம்மால் ஒன்றும் செய்ய முடியாது. ஒவ்வொரு விஷயத்தையும் அவர் செய்து முடிக்க முடியும். நான் அவரிடம் பேசுகிறேன். இன்று மாலை அவர் இங்கே வருவதாக சொல்லியிருக்கிறார்.'

'ராணுவ சட்டதிட்டங்களைப் பற்றி ஸ்பெரான்ஸ்கி என்ன செய்வதற்கு இருக்கிறது' என்று இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார்.

புன்னகையோடு காச்சுபே தமது தலையை ஆட்டினார். பால் கோன்ஸ்கிரியின் வெள்ளை மனத்தைக் கண்டு அவர் ஆச்சரியப்படுகிறவரைப்போல அந்தப் புன்சிரிப்பு காட்டியது.

'சில தினங்களுக்கு முன்னால், உம்முடைய விடுதலை செய்யப்பட்ட விவசாயிகளைப் பற்றி நாம் அவரிடம் பேசினோம்' என்று காச்சுபே தொடர்ந்து சொன்னார்.

'ஓ, உமது அடிமைகளை விடுவித்தவர் நீர்தானா, இளவரசே?' என்று காத்தரைன் காலத்து வயோதிகர் ஒருவர் இகழ்ச்சியோடு பால்கோன்ஸ்கியிடம் திரும்பிக் கேட்டார்.

'அது ஒரு சிறிய எஸ்டேட். அதிலிருந்து எவ்விதமான இலாபமும் கிடையாது' என்று இளவரசர் ஆண்ட்ரூ, அந்த வயோதிகரை கோபப்பட வேண்டாம் என்ற நினைப்போடு, தமது காரியத்திற்கு சமாதானம் கூறுகிறவரைப்போல பதில் சொன்னார்.

'எனக்கு நேரமாகி விட்டது...' என்று காச்சுபேயைப் பார்த்து அந்த வயோதிகர் சொன்னார்.

'எனக்கு புரியாத விஷயம் ஒன்று இருக்கிறது' என்று அவர் தொடர்ந்து சொன்னார். 'நீர் அவர்களை சுதந்திரமாக்கி விட்டால், நிலத்தை யார் உழுவார்கள்? சட்டங்களை எழுதுவது சுலபம். ஆனால் ஆட்சி புரிவது கஷ்டம்... கோமகனே, நான் உம்மை ஒன்று கேட்கிறேன். இப்பொழுது இதைப்போலவேதான், எல்லாருமே பரீட்சைகளில் தேறவேண்டு மென்றால், இலாகாக்களுக்கு தலைவர்களாக யார் இருப்பது?'

காச்சுபே தமது கால்களை ஒன்றின் மேல் ஒன்று போட்டு, சுற்றிலும் நோட்டமிட்டுவிட்டு, 'பரீட்சையில் தேறுபவர்களே தலைவர்களாக இருப்பார்கள் என்று நான் நினைக்கிறேன்' என்றார்.

'நல்லது, பிரியாநிச்னிகாவ் என்பவர் என்னிடம் வேலையில் இருக்கிறார். அவர் ஒரு சிலாக்கியமான மனிதர்; விலை மதிக்க

முடியாத மனிதர். அவருக்கு அறுபது வயதாகி விட்டது. பரீட்சைக்கு அவர் போக வேண்டுமா?'

'ஆம், அது ஒரு கஷ்டந்தான். படிப்பு என்பது ஒரே மாதிரியாக இருக்கவில்லை. ஆனால்...'

கோமகன் காச்சுபே தாம் பேசியதை முடிக்கவில்லை. அவர் எழுந்து ஆண்ட்ரூவை கையில் பற்றி, உள்ளே நுழைந்து கொண்டிருந்த ஒருவரை சந்திப்பதற்காக போனார். புதிதாய் வருகிற அவருக்கு சுமார் நாற்பது வயது இருக்கலாம். அழகாகவும், உயரமாகவும், பரந்த நெற்றியுடனும், ஒரு நீண்ட விசேஷமான வெள்ளை நிற முகத்துடனும், வழுக்கைத் தலையுடனும் காணப்பட்டார். புதிதாய் வந்த அவர் நீல நிற கோட் அணிந்திந்தார். அவர் கழுத்தில் ஒரு சிலுவையும் இடது மார்பில் ஒரு நட்சத்திரப் பதக்கமும் காணப்பட்டன. அவர் தான் ஸ்பெரான்ஸ்கி. இளவரசர் ஆண்ட்ரூ அவரை உடனே அறிந்துகொண்டார். தமக்குள் ஒரு துடிதுடிப்பு ஏற்படுவதை அவர் உணர்ந்தார். வாழ்க்கையில் நெருக்கடியான சந்தர்ப்பங்களில் அம்மாதிரி ஏற்படுவது உண்டு. மரியாதையினால் அது ஏற்படுகிறதா, அல்லது ஆவலினாலோ, எதையோ எதிர்ப்பார்ப்பதினாலோ அது ஏற்படுகிறதா என்பது அவருக்குத் தெரியாது. ஸ்பெரான்ஸ்கியின் முழு உருவமும் ஒரு தனிப்பட்ட இரகமாய் இருந்தபடியால், சுலபமாக அவரை அறிந்துகொள்ளக் கூடிய விதமாய் இருந்தது. அவரைப் போன்ற கவர்ச்சியில்லாத, விகாரமான அசைவுகளைக் கொண்ட ஒருவர், இவ்வளவு அமைதியோடு தன்னம்பிக்கை யோடும் இருப்பதை இளவரசர் ஆண்ட்ரூ இதுவரை தாம் பழகி வந்த வட்டாரத்தில் பார்த்ததேயில்லை. அம்மாதிரியான உறுதியையும், ஆனால் பாதி மூடியிருந்த ஈரமான கண்களில் தோன்றிய அந்த அமைதியான உணர்ச்சியையும், அல்லது எதையும் கண்டுபிடிக்க முடியாத அந்த உறுதியான இளநகையையும், அவர் பார்த்ததேயில்லை. அல்லது, அப்பேர்ப்பட்ட பண்பான, மிருதுவான, சரளமான குரலை அவர் கேட்டதில்லை, எல்லாவற்றையும் விட, அம்மா திரி நாசூக்கான வெள்ளை நிறத்தை, அகலமான கைகளிலும் முகத்திலும் அவர் பார்த்ததேயில்லை. அவருடைய கைகள் கனமாகவும் மெதுவாகவும் இருந்தன. அம்மாதிரியான வெண்மையையும், மென்மையையும் ஆஸ்பத்திரியில் வெகு காலமாக இருந்த சிப்பாய்களின் முகங்களிலேயே இளவரசர் ஆண்ட்ரூ பார்த்திருக் கிறார். இவர்தான் ஸ்பெரான்ஸ்கி. உள்நாட்டு மந்திரி. சக்கரவர்த்தியிடம் நேராக விஷயங்களை தெரிவிப்பவர். எர்பர்ட் என்ற இடத்தில், சக்கரவர்த்தி

பல தடவைகள் நெப்போலியனை சந்தித்து பேசியபொழுது, சக்கரவர்த்திக்குத் துணையாக இருந்து வந்தவர்.

ஒரு பெரிய கூட்டத்திற்குள் நுழைந்ததும், தங்களை அறியாமலேயே அங்கிருப்பவர்களின் முகங்களை மாறி மாறிப் பார்ப்பது, புதிதாய் அங்கே நுழைகிறவர்களுக்கு வழக்கம். அம்மாதிரி அவசரப் படவும் இல்லை. தாம் பேசுவதை கவனமாய்க் கேட்பார்கள் என்ற நம்பிக்கையோடு அவர் மெதுவாகப் பேசினார். தாம் யாரிடம் பேசுகிறாரோ, அவரை மட்டுமே அவர் பார்ப்பார்.

ஒரு குறிப்பிட்ட கவனத்தோடு, ஸ்பெரான்ஸ்கியின் ஒவ்வொரு வார்த்தையையும் ஒவ்வொரு அசைவையும், இளவரசர் ஆண்ட்ரூ கவனித்து வந்தார். தங்களுக்கு அருகில் இருப்பவர்களை மிகக் கடுமையாக சோதிக்கும் பழக்கமுள்ளவர்கள், புதிதாய் தாங்கள் சந்திப்பவர்களிடம், மனித குலத்தின் பூரணத்துவத்தை எதிர்பார்ப்பது வழக்கம். அதே மாதிரி, இளவரசர் ஆண்ட்ரூவும் ஸ்பெரான்ஸ்கியின் பிரபலத்தை கேள்விப் பட்டதிலிருந்து, அதே பூரணத்துவத்தை அவரிடம் எதிர்பார்த்தார்.

தாம் சீக்கிரமாக அங்கே வர முடியாததற்கு வருந்துவதாகவும், அரண்மனையில் தாம் அதுவரை தங்கியிருக்க வேண்டிய அவசியம் நேரிட்டதென்றும், காச்சுபேயிடம் ஸ்பெரான்ஸ்கி சொன்னார். தம்மை சக்கரவர்த்தி நிறுத்தி வைத்திருந்தார் என்று அவர் சொல்லவில்லை. இந்த வெளிப்பகட்டான் அடக்கத்தை இளவரசர் ஆண்ட்ரூ கவனித்தார். காச்சுபே இளவரசர் ஆண்ட்ரூவை அறிமுகம் செய்து வைத்ததும், ஸ்பெரான்ஸ்கி தமது வழக்கமான புன்னகையுடன், பால்கோன்ஸ்கி மீது தமது கண்களை மெதுவாகத் திருப்பினார். மௌனமாக அவரை பார்த்துக்கொண்டிருந்தார்.

'உம்முடன் பழக்கம் கொள்ளுவதற்கு, நான் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். மற்றவர்களைப்போலவே, நானும் உம்மைப் பற்றி கேள்விப்பட்டிருக்கிறேன்' என்று சிறிது நேரத்திற்குப் பின்னால் அவர் சொன்னார்.

அராக்சீவ் என்பவர் பால்கோன்ஸ்கியிடம் நடந்துகொண்ட விதத்தைப் பற்றி, காச்சுபே சில வார்த்தைகள் சொன்னார். அதைக் கேட்டதும் மிகுந்த உன்னிப்போடு ஸ்பெரான்ஸ்கி புன்னகை கொண்டார்.

'திருவாளர் மாக்னிட்ஸ்கி என்பவர்தான் ராணுவ சட்டதிட்டங் களைப் பற்றிய கமிட்டிக்குத் தலைவர். அவர் எனக்கு நல்ல நண்பர்' என்று ஒவ்வொரு வார்த்தைகளையும் ஒவ்வொரு உச்சரிப்பையும் நிறுத்தி தெளிவாகச் சொன்னார். 'உமக்கு பிரியமிருந்தால், நான்

உம்மை அவருடன் தொடர்பு கொள்ளும்படி செய்கிறேன்'என்று சொல்லி நிறுத்தினார். 'நியாயமான எல்லா விஷயங்களையும் அபிவிருத்தி செய்வதற்காக அவர் உம்மோடு அனுதாபம் கொண்டு ஒத்துழைக்கத் தயாராய் இருப்பார் என்று நான் நம்புகிறேன்.'

சீக்கிரமாக 'ஸ்பெரான்ஸ்கியைச் சுற்றி ஒரு கோஷ்டி கூறியது. தம்முடைய சிப்பந்தியான பிரியா நிச்னிகாவ் என்பவரைப் பற்றி பேசிக்கொண்டிருந்த அந்த வயோதிகர் அவரைப் பார்த்து ஒரு கேள்வி கேட்டார்.

உரையாடலில் கலந்து கொள்ளாமல், ஸ்பெரான்ஸ்கியின் ஒவ்வொரு அசைவையும் இளவரசர் ஆண்ட்ரூ கவனித்து வந்தார். இந்த மனிதர், சமீப காலம் வரையில் பெயர் தெரியாத ஒரு பாதிரியாய் இருந்தவர். இப்பொழுது, தமது பருத்த வெள்ளை கைகளில் ருஷ்யாவின் விதியை வைத்துக்கொண்டிருக்கிறார் என்று பால்கோன்ஸ்கி நினைத்தார். அந்த வயோதிகருக்கு அசாதாரணமான வெறுப்புடன் கூடிய அடக்கத்தோடு ஸ்பெரான்ஸ்கி பதில் கூறியது இளவரசர் ஆண்ட்ரூவின் உள்ளத்தில் பதிந்தது. அவர் ஏதோ ஒரு உயரமான இடத்திலிருந்து அந்த வயோதிகரின் நிலைமைக்கு இறங்கி வந்து அவருடன் பேசுவதைப்போலக் காணப்பட்டார். அந்த வயோதிகர் உரத்த குரலில் பேச ஆரம்பித்தபோது, ஸ்பெரான்ஸ்கி இளநகை காட்டினார். சக்கரவர்த்திக்கு பிரியமான காரியங்களினால் நன்மை ஏற்படுமா அல்லது தீமை ஏற்படுமா என்பதைப் பற்றி தீர்ப்புக் கூற தம்மால் முடியாது என்று சொன்னார்.

அந்தப் பொதுவான கோஷ்டியில் சிறிது நேரம் பேசியிருந்த பிறகு, இளவரசர் ஆண்ட்ருவிடம் ஸ்பெரான்ஸ்கி வந்து, அவரை அந்த அறையின் கடைசி இடத்திற்கு அழைத்துச் சென்றார். பால் கோன்ஸ்கியிடம் தாம் சிரத்தை கொள்ளவேண்டியது அவசியம் என்று அவர் நினைப்பதாக தெளிவாய்த் தெரிந்தது.

'இளவரசே, உம்மிடம் இதுவரை பேசுவதற்கு சந்தர்ப்பமில்லை. அந்த மதிப்பிற்குரிய கனவான் மிகுந்த பரபரப்போடு என்னிடம் பேசினார்' என்று அவர் ஒரு இகழ்ச்சியான புன்னகையோடு சொன்னார். தாம் அதுவரை பேசிக்கொண்டிருந்த நபர்கள் முக்கியத்துவம் இல்லாதவர்கள் என்பதை, தாமும் இளவரசர் ஆண்ட்ரூவும் அறிந்திருப்பதுபோல, அந்த புன்னகை காட்டியது. இந்த பேச்சு இளவரசர் ஆண்ட்ரூவுக்கு பெருமையாய் இருந்தது. 'நான் உம்மை வெகு காலமாய் அறிவேன். உமது அடிமைகளிடம் நீர் எடுத்து கொண்ட நடவடிக்கைகளிலிருந்து உம்மை முதலாவது நான் அறிவேன். அம் மாதிரி செய்கை முதலாவதாக நடந்த ஒரு

எடுத்துக்காட்டு. அதை பின்பற்றி இன்னும் பலர் செய்யவேண்டியது ரொம்பவும் விரும்பத்தக்கது. இரண்டாவதாக, நீர் ராஜ்ய சபையில் அங்கத்தினராக இருந்தும்கூட, ராஜ்ய சபையிலுள்ளவர்களுக்கு உண்டான அந்தஸ்தைப் பற்றி, புதிதாய் பிறப்பிக்கப்பட்ட உத்தரவைக் கண்டு நீர் அதிருப்தியைக் காட்டவில்லை. ஆனால், அந்த உத்தரவு மிகுந்த பரபரப்பையும் வம்புப் பேச்சுகளையும் கிளப்பி விட்டிருக்கிறது.'

'இல்லை' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ. 'எனக்குள்ள உரிமைகளினால் ஏற்படும் அனுகூலத்தை நான் அடைவதற்கு என் தந்தை விரும்பவில்லை. ஆகவே நான் எனது சேவையை கீழ்ப்படியிலிருந்து ஆரம்பித்தேன்.'

'உமது தகப்பனார் கடந்த நூற்றாண்டை சேர்ந்தவர். ஆகவே இப்பொழுதுள்ள நமது சகபாடிகளைவிட உயர்வானவராய் இருக்கிறார். இந்த சகபாடிகள்தான் அந்த உத்தரவை கண்டிக் கிறார்கள். இயற்கையான நியாயத்தை மீண்டும் ஸ்தாபிப்பது ஒன்றையே அந்த உத்தரவு செய்கிறது.'

'என்றாலும், இந்த கண்டனங்களுக்கெல்லாம் சில ஆதாரம் இருப்பதாக நான் நினைக்கிறேன்' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ. ஸ்பெரான்ஸ்கியின் செல்வாக்கு தம்மிடம் ஏற்பட்டு வருவதாக உணர்ந்த அவர், அதை எதிர்க்க விரும்பி இம்மாதிரி பேசினார். அவர் சொல்வது ஒவ்வொன்றையும் ஒப்புக்கொள்வதற்கு அவருக்கு பிரியமில்லை. அவர் கூறுவதை மறுக்கவேண்டுமென்ற ஆசை அவருக்கு ஏற்பட்டது. நன்றாகவும் சரளமாகவும் அவர் பேசுவது வழக்கமென்றாலும், இப்பொழுது ஸ்பெரான்ஸ்கியிடம் பேசும்போது தமது கருத்தை சரியாக வெளிப்படுத்துவது அவருக்கு கஷ்டமாயிருந்தது. அந்த பிரபலமான மனிதரின் குணாதிசயங்களைக் கவனிப்பதிலேயே அவர் ஆழ்ந்து மூழ்கியிருந்தார்.

'அந்த ஆதாரத்திற்கு சொந்த ஆசை காரணமாய் இருக்கலாம்' என்று அமைதியாக ஸ்பெரான்ஸ்கி சொன்னார்.

'அந்த ஆதாரத்திற்கு நாட்டின் நன்மையும் கொஞ்சம் காரணமாய் இருக்கிறது' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார்.

'நீர் சொல்லுவதன் அர்த்தம் என்ன?' என்று தமது கண்களை தாழ்த்தி; அமைதியாக ஸ்பெரான்ஸ்கி கேட்டார்.

'நான் மான்டெஸ்கியூ என்பவரின் கருத்துகளை போற்றுபவர் களில் ஒருவன்' என்று இளவரசர் ஆண்ட்ரூ பதிலளித்தார். 'கௌரவம் என்ற அடிப்படையின் மீதுதான் முடியரசு என்பது

அமைந்திருக்கிறது. இதை யாரும் மறுக்கமுடியாது என்று எனக்குத் தோன்றுகிறது. அந்த உணர்ச்சியைக் காப்பாற்றி வருவதற்கு பணக்காரர்களுக்கு சில உரிமைகளைக் கொடுக்கவேண்டியது அவசியம் என்று தோன்றுகிறது.'

ஸ்பெரான்ஸ்கியின் வெள்ளை முகத்திலிருந்து அந்த புன்சிரிப்பு மறைந்தது. அந்த முகம் இப்பொழுது மிக நன்றாய் இருந்தது. இளவரசர் ஆண்டரூவின் கருத்துகளில் அவருக்கு ஒருவேளை சிரத்தை ஏற்பட்டிருக்கலாம்.

'இந்த பிரச்னையை, நீர் அம்மாதிரி கருத்தோடு பார்ப்பதாய் இருந்தால்' என்று அவர் ஆரம்பித்தார். அவர் மிகுந்த கஷ்டத்தோடு பிரஞ்சு மொழியில் பேசினார். ருஷ்ய மொழியில் பேசுவதை விட இன்னும் மெதுவாக பேசினார். ஆனால் அமைதியாக பேசினார்.

சேவையில் இருப்பவர்களுக்கு கெடுதல் செய்யக்கூடிய விதத்தில் கௌரவம் என்பதை காப்பாற்றுவதற்காக உரிமை கொடுக்க முடியாது என்று அவர் சொன்னார். கௌரவம் என்பது, ஒன்று கெடுதலான காரியத்தை செய்யாமல் இருப்பதாய் இருக்கலாம்; அல்லது பதவிகளையும் பரிசுகளையும் பெறுவதற்கு அது ஒரு தூண்டு கோலாய் இருக்கலாம் என்று அவர் சொன்னார். அவருடைய வாதங்கள் சுருக்கமாகவும் சாதாரணமாகவும் தெளிவாகவும் இருந்தன.

'ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு சேவை செய்து கௌரவத்தை நிலைநாட்டுவது ஒரு ஸ்தாபனமாயிருக்கலாம். நெப்போலியச் சக்கரவர்த்தியின் 'லீஜியன் ஆப் ஹானர்' என்பது அப்பேர்ப்பட்ட ஒரு ஸ்தாபனம். அது சேவை செய்கிறவர்களுக்கு உதவியாக இருக்கிறதேயொழிய, கெடுதலாய் இருக்கவில்லை. ஆனால் அது ஒரு ஜாதி வித்தியாசத்தையோ, ராஜ சபையின் உரிமைகளையோ அடிப்படையாகக் கொண்டதல்ல.'

'அதை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் ராஜ சபையின் உரிமைகளும் அதே பலனைத்தான் கொடுக்கின்றன எனப்தை மறுக்க முடியாது' என்று இளவரசர் ஆண்ட்ரூ பதில் சொன்னார். 'ராஜ சபை அங்கத்தினர் ஒவ்வொருவரும், தம்முடைய பதவிக்கு கௌரவமாக நடந்துகொள்ள கடமைப்பட்டிருக்கிறார்கள்.'

'அப்படி இருந்தும், நீர் உமது உரிமையை உபயோகித்துக் கொள்ள கவலைப்படவில்லை' என்றார் ஸ்பெரான்ஸ்கி. அந்த விவாதத்தை சுமுகமாக முடித்துக்கொள்ள விரும்புவது போலவும், தமது நண்பருக்கு அது தர்ம சங்கடமான நிலைமையை உண்டுபண்ணுவது போலவும், அவர் புன்னகை மூலம் காட்டினார்.

'புதன் கிழமை அன்று நீர் என்னை பார்க்க வருவதற்கு தயவு காட்டினால், மாக்னிட்ஸ்கியுடன் நான் பேசிய பின்பு, உமக்கு சிரத்தையுள்ள விஷயத்தைப் பற்றிய விவரங்களை நான் சொல்லுகிறேன். அச்சமயம் உம்முடன் நீண்ட நேரம் பேசக்கூடிய மகிழ்ச்சியும் எனக்குக் கிடைக்கும்.'

தமது கண்களை மூடி, பிரஞ்சு மோஸ்தரில் தலை தாழ்த்தி, வாயினால் எதுவும் பேசாமல், தம்மை யாரும் அதிகமாய் கவனிக்க முடியாத விதத்தில், அந்த அறையைவிட்டு வெளியே போனார்.



இளவரசர் ஆண்ட்ரூ தனித்திருந்து வாழ்ந்த காலத்தில் அவர் மனத்தில் சில சிந்தனைகள் உருவாகி இருந்தன. அந்தக் கருத்துகள் எல்லாம் அவர் பீட்டர்ஸ்பர்க்கில் வந்திருந்த சில வாரங்களில், அவருக்கு ஏற்பட்ட சின்னஞ் சிறு கவலைகளால் மறைத்து விடப்பட்டன என்று அவர் உணர்ந்தார்.

மாலையில் அவர் வீடு திரும்பியதும், அவர் தமது குறிப்புப் புத்தகத்தில் தாம் அவசியமாய் சந்திக்கவேண்டிய நான்கு, ஐந்து பேர்களைப் பற்றியும், அந்த சந்திப்புகளுக்கான நேரங்களைப் பற்றியும் குறிப்பிடுவது வழக்கம். குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட நபர்களை அவர் போய் பார்க்க வேண்டியதற்காக செய்ய வேண்டிய ஏற்பாடுகளில், அவருடைய கவனம் பெரும்பாலும் ஈடுபட்டிருந்தது. ஆகவே, அவரால் எதையும் செய்ய முடியவில்லை; எதையும் சிந்திக்க முடியவில்லை; சிந்திப்பதற்கு நேரம் கிடைப்பதுமில்லை. ஆனால் அவர் பேசுவது ஒன்றையே செய்துவந்தார். அந்தப் பேசும் வேலையை, அதாவது அவர் தமது கிராமத்திலிருந்தபோது நினைத்து வைத்திருந்த அந்தச் சிந்தனைகளைப்பற்றி வெற்றிகரமாகப் பேசி வந்தார்.

ஒரே நாளில் வெவ்வேறு வட்டாரங்களில் ஒரே மாதிரியான பேச்சுக்களை தாம் பேசியதை பின்னால் அவர் நினைத்தபோது அதிருப்தி கொண்டார். அவர் நாள் முழுவதும் சுறு சுறுப்பாயிருந்த படியால், எதைப் பற்றியுமே தாம் சிந்திப்பதில்லை என்பதைக்கூட கவனிக்க அவருக்கு நேரமில்லை.

காச்சுபே வீட்டில் முதல் முதலாக ஸ்பெரான்ஸ்கி எம்மாதிரியான அபிப்பிராயத்தை இளவரசர் ஆண்ட்ரூவுக்கு ஏற்படுத்தினாரோ, அதே மாதிரி புதன் கிழமையன்று அவர் சந்தித்தபோதும், ஒரு

பலமான கவர்ச்சியை அவர் உள்ளத்தில் உண்டு பண்ணினார். இளவரசரோடு தமது வீட்டில் அந்தரங்கமான பல பேச்சுகளை வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தார்.

அநேகம்பேர் இழிவானவர்களென்றும் முதன்மை இல்லாத ஜந்துக்களென்றும் பால்கோன்ஸ்கிக்குத் தோன்றியது. தாம் எந்த பூரணத்துவத்தை அடைவதற்கு முயற்சி செய்துகொண்டிருந்தாரோ, அந்த பூரணத்துவத்தைக் கொண்ட ஒரு லட்சிய புருஷரை கண்டு பிடிப்பதற்கு வெகு காலமாக ஏங்கிக்கொண்டிருந்தார். பகுத்தறிவும் நற்குணங்களும் பூரணமாய்க்கொண்ட அந்த லட்சிய புருஷர் ஸ்பெரான்ஸ்கிதான் என்பதை அவர் நம்பினார். ஸ்பெரான்ஸ்கி தம்முடைய அதே வட்டாரத்தைச் சேர்ந்தவராக இருந்தால், தமக்குள்ள அதே மாதிரியான பரம்பரையும் வளர்ப்பும் பெற்றவராக இருந்தால், வெகு சீக்கிரமாக அவரிடமுள்ள பலவீனத்தையும் கோழைத்தனத்தையும் பால்கோன்ஸ்கி கண்டுபிடித்திருப்பார். ஆனால் ஸ்பெரான்ஸ்கியின் விசித்திரமான, தர்க்க பூர்வமான கருத்துக்கள், அவரை மரியாதைகொள்ளும்படி செய்து உற்சாகப் படுத்தியது. அதற்கு காரணம் என்னவென்றால், அவரை அவரால் நன்றாய் அறிய முடியவில்லை. மற்றவருடைய திறமையை அறிந்ததாலோ அல்லது அவரைத் தமது கட்சியில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று நினைத்ததாலோ, தம்முடைய விருப்பு வெறுப்பற்ற அமைதியான நியாயங்களை ஸ்பெரான்ஸ்கி அவருக்கு விளக்குவதுண்டு. அதோடு, இளவரசர் ஆண்ட்ரூவை நாசூக்காகப் புகழ்வதுண்டு. அவருடைய தன்னம்பிக்கையை அந்த புகழ்ச்சி வற்புறுத்தியது. தம்முடைய கருத்துக்களின் நியாயங்களையும், ஆழ்ந்த தன்மையையும் தங்கள் இருவரால்தான் மனித வர்க்கத்தின் அசட்டுத்தனங்களை அறிய முடியும் என்பதையும் அவர் வெளிப்படையாகச் சொல்லாமல் அந்த நாசூக்கான புகழ்ச்சியில் காட்டிவந்தார்.

புதன் கிழமையன்று மாலையில் அவர்களுடைய நீண்ட உரையாடலின்போது பல தடவைகள் ஸ்பெரான்ஸ்கி குறிப்பிட்டதாவது:-

'வேரூன்றிப் போன பழைய வழக்கங்களின் சாதாரண தரத்திற்கு மேலாக உள்ள ஒவ்வொன்றையும், நாம்...' இந்த இடத்தில் ஒரு புன்னகையோடு, 'ஆனால் நாம் ஓநாய்களுக்கு தீனி போடவும் விரும்புகிறோம். அதே சமயத்தில் ஆடுகளை பந்தோபஸ்தாகக் காப்பாற்றவும் விரும்புகிறோம்...' என்றோ, அல்லது 'இதை அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை...' இம்மாதிரியாக

'நாம், நீரும் நானும், அவர்கள் எப்பேர்ப்பட்டவர்கள் என்பதையும், நாம் யார் என்பதையும் நன்றாக அறிவோம்' என்று கூறுவதுண்டு.

ஸ்பெரான்ஸ்கியுடன் நடத்திய இந்த நீளமான உரையாடல், இளவரசர் ஆண்ட்ரூவுக்கு அவர் முதலாவதாக ஸ்பெரான்ஸ்கியைச் சந்தித்தபோது, அவரைப்பற்றி என்ன நினைத்திருந்தாரோ, அதை உறுதி செய்வதாயிருந்தது. தெளிவாகச் சிந்திக்கும் ஒரு பரந்த அறிவுள்ள புத்திசாலி என்றும் பிரமாதமானவர் என்றும் அவர் தம்முடைய ஊக்கத்தினாலும் விடாமுயற்சியினாலும் அதிகாரத்தை அடைந்திருக்கிறாரென்றும், அந்த அதிகாரத்தை ருஷ்யாவின் நன்மைக்காக மட்டுமே உபயோகிக்கிறாரென்றும் இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். தாம் எம்மாதிரி மனிதராக இருக்க வேண்டுமென்று விரும்புவாரோ, அதே மாதிரி ஸ்பெரான்ஸ்கி இருப்பதாக இளவரசர் ஆண்ட்ரூவின் கண்களுக்குத் தோன்றின. அதாவது வாழ்க்கையிலுள்ள எல்லா முக்கியமான உண்மைகளையும் நியாயமாக ஆராய்ந்து, எது பகுத்தறிவுக்கு பொருத்தமாய் இருக்கிறதோ, அதை மட்டும் முக்கியமானதாக எடுத்துக்கொண்டு, ஒவ்வொரு காரியத்திற்கும் காரணங்களைக் கண்டுபிடித்து, செய்யக்கூடிய மாதிரி இருக்கவேண்டுமென்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். ஸ்பெரான்ஸ்கி விளக்கிக் கூறும்போது ஒவ்வொரு காரியமும் ரொம்ப எளிதாகவும், தெளிவாகவும் இருப்பதுபோல இளவரசர் ஆண்ட்ரூவுக்குத் தோன்றியபடியால், தம்மை அறியாமலேயே அவர் சொல்லும் ஒவ்வொன்றையும் ஒத்துக்கொண்டார். இளவரசர் ஆண்ட்ரூ ஏதாவது பதில் சொல்லி விவாதம் செய்தாரென்றிருந்தால், அது தம்முடைய சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்கும், ஸ்பெரான்ஸ்கியின் கருத்துக்களுக்கு பூர்ணமாக அவர் அடிபணிந்து விடவில்லை யென்பதைக் காட்டுவதற்காகவுமேயாகும். ஒவ்வொன்றும் சரியாக இருப்பதாகவும், எம்மாதிரி இருக்க வேண்டுமோ, அம்மாதிரியே ஒவ்வொன்றும் இருப்பதாகவும், ஆனால் ஒன்றுமட்டும் மனக் குழப்பத்தைக் கொடுப்பதாகவும் இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். இந்த மன சலனத்தைக் கொடுக்கக்கூடிய விஷயம் என்னவென்றால், ஸ்பெரான்ஸ்கியின் தாட்சண்யமற்ற முகக் கண்ணாடி போன்ற பார்வையாகும். அந்தப் பார்வையானது அவருடைய உள்ளத்தை ஊடுருவிப் பார்ப்பதற்கு ஒருவரையும் விடுவது இல்லை. மற்றொன்று அவருடைய மென்மையான வெள்ளைக் கைகளாகும். அதிகாரத்தைக் கைப்பற்றியுள்ள ஒருவர் அந்தக் கைகளை எப்படி கவனிப்பாரோ, அதே மாதிரி அந்த இரு வெள்ளைக் கைகளையும் தம்மையறியாமலேயே இளவரசர் ஆண்ட்ரூ கவனித்து வந்தார்.

இம்மாதிரி முகம் பார்க்கும் கண்ணாடியைப் போன்ற பார்வையும், அவருடைய வெள்ளைக் கைகளும், இளவரசர் ஆண்ட்ரூவுக்கு எரிச்சல் கொடுத்து வந்தது ஏன் என்பது அவருக்குத் தெரியவில்லை. ஸ்பெரான்ஸ்கி மிகவும் அதிகமாக மற்றவர்களைப்பற்றி துச்சமாய் நினைப்பதுகூட இளவரசர் ஆண்ட்ரூவுக்கு வருத்தமாய் இருந்தது. தம்முடைய அபிப்பிராயங்களை ஆதரிப்பதற்கு, அவர் வெவ்வேறு விதமான வாதங்களை உபயோகித்ததும், அவருடைய உள்ளத்தில் திருப்தியைக் கொடுக்கவில்லை. மனத்தினால் கற்பனை செய்யக்கூடிய ஒவ்வொரு விதமான வாதங்களையும் அவர் உபயோகித்தார். ஆனால் உவமை காட்டுவதில் மட்டும் அவர் இறங்கவில்லை. ஒன்றிலிருந்து இன்னொன்றுக்கு அவர் தைரியமாக மாற்றிக்கொண்டிருப்பதையும் இளவரசர் ஆண்ட்ரூ கவனித்தார். இப்போது ஒரு காரியார்த்தமான மனிதரை அவர் ஆதரித்து, கனவு காண்பவர்களைக் கண்டிப்பார். மறுபடியும் ஒரு தமாஷ்காரரை ஆதரித்து, அவரை எதிர்ப்பவர்களைப் பார்த்துக் கேலியாகச் சிரிப்பார். திடீரென்று மிகுந்த தர்க்க வாதங்களில் இறங்குவார். உடனே அவற்றை விட்டுவிட்டு, தத்துவ உலகத்திற்கு உயர்ந்து விடுவார். இந்தக் கடைசி தந்திரத்தை அவர் வெகு தாராளமாய் உபயோகித்து வந்தார். ஒரு பிரச்னையை தத்துவ விசாரணை உயரத்திற்குக் கொண்டு போவார். அங்கிருந்து இடம், நேரம், சிந்தனை ஆகியவைகளைப்பற்றி விளக்கிக்கூற ஆரம்பிப்பார். அவற்றிலிருந்து தாம் விரும்பக்கூடிய மறுப்பான கருத்துக்களை சுட்டிக் காட்டிவிட்டு, உடனே பழைய விவாத நிலைமைக்கு கீழே இறங்குவார்.

ஸ்பெரான்ஸ்கியின் மனப் போக்கைப்பற்றி இளவரசர் ஆண்ட்ரூவின் உள்ளத்தில் பதிந்தது ஒன்று உண்டு. அதாவது, காரணம் என்பதன் சக்தியையும் அதிகாரத்தையும்பற்றி அவருக்குள்ள அசைக்க முடியாத முழு நம்பிக்கையேயாகும். இளவரசர் ஆண்ட்ரூவுக்கு மிகுந்த இயற்கையாகத் தோன்றிய ஒரு விஷயம் அவருக்கு எப்பொழுதுமே தோன்றவில்லை என்பது தெளிவாயிருந்தது. அதாவது, ஒருவர் நினைக்கிற எல்லாவற்றை யுமே, ஒருவர் வெளியிடுவது என்பது முடியாத காரியம். இந்த சந்தேகம் அதாவது, 'நான் சிந்திப்பதும் நம்புவதும் எல்லாம் அசட்டுத்தனங்கள் அல்லவா?' என்ற சந்தேகம், அவருக்கு எப்பொழுதுமே ஏற்பட்டதில்லை. ஸ்பெரான்ஸ்கியின் இந்த விசித்திரமான மனோபாவம்தான் இளவரசர் ஆண்ட்ரூவை முக்கியமாகக் கவர்ந்தது.

அவர்களுக்குள் உறவு ஏற்பட்ட ஆரம்ப கால்த்தில், போன பார்ட்மீது இளவரசர் ஆண்ட்ரூவுக்கு ஒரு காலத்தில் எம்மாதிரியான பிரேமை ஏற்பட்டிருந்ததோ, அதே பிரேமை இப்போது ஸ்பெரான்ஸ்கி மீது பால்கோன்ஸ்கிக்கு ஏற்பட்டிருந்தது. ஸ்பெரான்ஸ்கி ஒரு கிராமத்திலுள்ள பாதிரியின் குமாரர் என்பதனால், அவருடைய பிறப்பு மிகுந்த தாழ்வானது என்ற காரணங்கொண்டு மூட மக்கள் அவரை அற்பத்தனமாக வெறுப்பதுண்டு. உண்மையில் பலர் அம்மாதிரி வெறுத்தார்கள். இந்த ஒரே காரணம் தான் அவர்மீது அதிகமான அன்பு கொள்ளும் படியும் தம்மை அறியாமலேயே அதை பலப்படுத்தும்படியும் இளவரசர் ஆண்ட்ரூவைச் செய்தது.

முதல் நாள் மாலை ஸ்பெரான்ஸ்கியை சந்தித்தபோது, ராணுவ சட்ட விதிகளை திருத்தும் கமிட்டியைப்பற்றி குறிப்பிட்டார். அதைப்பற்றி பேசியபோது அந்தக் கமிட்டி 150 வருஷங்களாக உயிரோடு இருப்பதாகவும், கோடிக் கணக்காக அதனால் செலவு ஏற்பட்டிருப்பதாகவும், அந்தக் கமிட்டி எதையும் செய்தது இல்லையென்றும், மற்ற நாடுகள் செய்த விதிகளை இங்குள்ளவைகளுக்குப் பக்கத்தில் ஒட்டி வைத்திருப்பதைத் தவிர, வேறு எதையும் செய்யமுடியவில்லையென்றும் சொன்னார்.

'அது ஒன்றுதான் கோடிக்கணக்காக அது செலவிட்டதற்குக் கொடுத்த பலனாகும். செனேட் சபைக்கு புதிய நீதி அதிகாரங்களைக் கொடுப்பதற்கு நாம் விரும்புகிறோம். நமக்கு சட்டங்கள் இல்லை. அதனால்தான், இளவரசே, உம்மைப் போன்றவர்கள் இந்தக் காலத்தில் சேவை செய்யாமல் இருப்பது ஒரு பாவமாகும்' என்றார் ஸ்பெரான்ஸ்கி.

ஆனால் அம்மாதிரியான வேலைகளுக்கு சட்டப்படிப்பு அவசியமென்றும் தம்மிடம் அது இல்லையென்றும் இளவசரர் ஆண்ட்ரூ சொன்னார்.

'ஆனால் நீர் சொல்லுகிறபடி அந்தப் படிப்பு ஒருவரிடமும் இல்லை. அப்படியானால் நீர் என்ன செய்வீர்? அந்த விஷமச் சக்கரத்தை எப்படியாவது உடைத்தாக வேண்டும்' என்றார்.

ராணுவ சட்ட விதிகளின் கமிட்டியில், ஒரு வாரத்திற்குப் பின்னால், இளவரசர் ஆண்ட்ரூ ஒரு அங்கத்தினராக சேர்க்கப்பட்டார். அவர் எதிர் பார்க்காத மற்றொரு விஷயம் என்னவென்றால், சட்டங்களைத் திருத்தவேண்டிய உப கமிட்டிக்கு அவர் சேர்மனாகவும் நியமிக்கப்பட்டார். ஸ்பெரான்ஸ்கியின் வேண்டுகோளின்படி முதலில் சிவில் சட்டத்தின் முதல் பாகத்தை

ஆலோசனைக்கு அவர் எடுத்துக்கொண்டார். நெப்போலியன் சட்டம், ஜஸ்டினியன் சட்டம், ஆகியவைகளை உதவியாக வைத்துக்கொண்டு, தனிப்பட்டவர்களின் உரிமைகள் என்ற பகுதியை அவர் எழுத ஆரம்பித்தார்.



1808 -ஆம் வருஷத்தில், அநேகமாய் இரண்டு வருஷங்களுக்குமுன்பாக, தமது எஸ்டேட்டுகளைப் பார்த்துவிட்டு பீட்டர்ஸ்பர்க்கிற்கு பீயர் திரும்பியபோது, பீட்டர்ஸ்பர்க்கில் உள்ள பிரீமேஸன்களில் தாம் முதன்மையான பதவியிலிருப்பதைக் கண்டார். விருந்துகளுக்கும் கூட்டங்களுக்கும் அவர் ஏற்பாடு செய்து, புதிய அங்கத்தினர்களைச் சேர்த்து, பற்பல இடங்களிலுள்ள சங்கங்களைப் போய் பார்த்து, அவற்றை ஒன்று சேர்த்து, அவைகளுக்கான கட்டிடங்களுக்கும் ஏற்பாடு செய்தார். கோயில்களைக் கட்டுவதற்கு அவர் பணம் கொடுத்தார். தரும நிதிகளுக்கு வசூல் செய்வதில், தம்மால் கூடியவரையில் உதவி செய்தார். இந்த விஷயத்தில் பெரும்பாலான அங்கத்தினர்கள் கஞ்சத்தனமாகவும், ஒழுங்காகச் செலுத்தாமலும் இருந்தார்கள். ஏழைகளுக்கு ஒரு விடுதியை பீட்டர்ஸ்பர்க்கில் தமது செலவிலேயே அவர் ஏற்படுத்தினார்.

ஆனால், அவருடைய வாழ்க்கை மட்டும் முன்போலவே முட்டாள் தனமாகவும் ஊதாரித்தனமாகவும் நடந்து வந்தது. நன்றாய்ச் சாப்பிடவும் குடிக்கவும் அவர் ஆசைகொண்டார். அம்மாதிரி செய்வது இழிவானது என்றும், ஒழுங்கீனமானது என்றும் அவர் கருதிய போதிலும், அவர் பழகி வந்த பிரம்மச்சாரி வட்டாரங்களில் ஏற்பட்ட ஆசைகளை அவரால் தடுக்க முடியவில்லை. வேலைகளிலும் பற்பலவிதமான காரியங்களிலும் அவர் ஊன்றுகொண்டிருந்த போதிலும் ஒரு வருஷத்திற்குப் பின்னால், அவர் ஒன்று உணர ஆரம்பித்தார். அதாவது பிரீமேஸன் கொள்கைமீது தாம் எவ்வளவு பலமாக சார்புகொள்ள வேண்டுமென்று அவர் முயற்சி செய்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு அவரால் அந்தக் கொள்கைமீது நிற்க முடியவில்லையென்பதை அவர் உணர்ந்தார். அதே சமயத்தில் எவ்வளவுக் கெவ்வளவு அவரால் நிற்க முடியவில்லை என்று நினைத்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு அவர் அந்த சங்கத்துடன் தம்மை அறியாமலேயே நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதாக உணர்ந்தார். பிரீமேஸன் சங்கத்தில் அவர்

சேர்ந்தபோது, ஒரு சதுப்பு நிலத்தின் மிருதுவான தரைமீது மிகுந்த நம்பிக்கையோடு கால் வைப்பதாக அவர் உணர்ந்தார். ஆனால், அவர் காலை வைத்தவுடன் அது கீழே போயிற்று. அந்த பூமியின் உறுதியை அறிவதற்காக அவர் தம்முடைய மற்றொரு காலையும் வைத்தார். இப்போது இன்னும் அதிக ஆழமாக அவர் அமிழ்ந்தார். அந்த இடத்திலேயே அவர் அகப்பட்டு முழங்கால் அளவு அந்த சகதியில் தம்மை அறியாமல் உழன்று கொண்டிருந்தார்.

ஜோஸப் அலெக்ஜீவிச் பீட்டர்ஸ்பர்க்கில் இல்லை. பீட்டர்ஸ்பர்க் சங்கங்களின் காரியங்களில் அவர் அதிகமாக சமீபகாலத்தில் தலையிடாமல், அநேகமாய் மாஸ்கோவிலேயே தங்கி வந்தார். அந்த சங்கங்களைச் சேர்ந்த அங்கத்தினர்கள் எல்லாருமே சாதாரண வாழ்க்கையில் பீயர் அறிந்தவர்கள் ஆவர். அவர்களை சங்கத்தைச் சேர்ந்த சகோதரர்கள் என்று மட்டும் நினைத்து, அவர்களுடைய சொந்த மதிப்புகளை மறந்து விடுவதற்கு பீயரால் முடியவில்லை. அதாவது அவர்களுடைய சொந்தப் பெயர்களான இளவரசர் பா என்பதையோ, ஐவான் வாசைலிவிச் டி என்பதையோ அவரால் மறக்க முடியவில்லை. அவர் அறிந்த அந்தப் பேர்வழிகள் உயர் வட்டாரங்களில் மிகுந்த பலவீனம் உள்ளவர்களாகவும் முக்கியத்துவம் இல்லாதவர்களாகவும் இருந்தார்கள் என்பதையும் அவர் அறிவார். அந்த பிரீ மேஸன் ஆடைகளுக்கும், அடையாளங்களுக்கும் அடியில், வாழ்க்கையில் அவர்கள் விரும்பக் கூடிய யூனிபாரங்களையும் விருதுகளையும் அவர் மனக் கண்முன் கண்டார். தரும நிதிக்காக அவர் வசூல் செய்த பின்பு எண்ணிப் பார்க்கும்போது 25-லிருந்து 30 ரூபிள்கள் வரை சேர்ந்திருக்கும். அநேகமாக அந்த வசூலில் தங்களுடைய கொடைகளை வாக்குறுதிகளாகவே கொடுப்பார்கள். அம்மாதிரி வாக்குறுதி கொடுப்பவர்கள் ஒரு டஜன் பேருக்கு மேல் இருப்பார்கள். அவர்களில் பாதிப் பேர் தம்மைப் போலவே பணம் கொடுக்கக்கூடிய நிலைமையிலிருப்பதை பீயர் கவனித்தார். தமக்குள்ளவைகளையெல்லாம் அண்டை அயலாருக்கு கொடுக்க வேண்டுமென்று ஒவ்வொரு பிரீ மேஸன் சகோதரரும் வாக்குறுதி கொடுத்திருப்பதை அவர் நினைவு கூர்ந்தார். ஆகவே அவருடைய உள்ளத்தில் சந்தேகம் கிளம்பியது. ஆனால், இந்த சந்தேகத்தின் மீது அவர் மேற்கொண்டு வியாக்யானம் செய்யாமல் இருக்க அவர் முயற்சித்தார்.

தமது சங்கத்தின் சகோதரர்களை நாலு பிரிவுகளாக அவர் பிரித்தார். முதலாவது பிரிவினர் சங்கத்தின் காரியங்களிலோ, அல்லது மனித [illegible] காரியங்களிலோ தீவிரமாகக் கலந்து கொள்ளாமல், அந்த

வேதாந்த விஞ்ஞானத்தில் மட்டும் பூரணமாக கவனம் செலுத்திக் கொண்டிருப்பவர்கள். அந்த விஞ்ஞானத்தில் கடவுளுக்கு மூன்று குணங்கள் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அதாவது, கந்தகம், பாதரஸம், உப்பு ஆகிய மூன்று மூலப் பொருள்களைப் பற்றியும் அல்லது சாலமன் கோயிலிலுள்ள பற்பல விதமான உருவங்களைப் பற்றியும், அல்லது சதுரங்களைப் பற்றிய அர்த்தங்களைப் பற்றியும் ஆராய்ந்து கொண்டிருப்பார்கள். இந்தக் கூட்டத்தில் முக்கியமாக வயோதிகர்களே சேர்ந்திருப்பார்கள். ஜோஸப் அலெக்ஜீவிச்சும் இதைச் சேர்ந்தவர் என்று பீயர் நினைத்தார். இந்த சகோதரர் கூட்டத்திடம் அவர் மரியாதை காட்டினார். ஆனால் அவர்களுடைய இந்த ஆராய்ச்சியில் அவருக்கு சிரத்தையில்லை. பிரீ மேஸன் சங்கத்தின் வேதாந்தப் பிரிவில் அவர் மனம் நாடவில்லை.

இரண்டாவது பிரிவில் தாமும் தம்மைப் போன்றவர்களும் இருப்பதாக அவர் நினைத்தார். பிரீ மேஸன் சங்கத்தின் நேரான, எல்லாவற்றையும் உட்கொண்டதான ஒரு வழியைக் கண்டு பிடிக்கவும், கண்டு பிடிக்க முடியாமல் திண்டாடுவதும், கண்டுபிடிக்கலாம் என்ற நம்பிக்கை கொண்டும் இருக்கக்கூடிய இந்தக் கூட்டம்தான் இரண்டாவது கூட்டம்.

மூன்றாவது கூட்டத்தில் அந்த சங்கத்தைச் சேர்ந்த பெரும்பாலோரைச் சேர்த்தார். அந்தப் பெரும்பாலோருக்கு பிரீ மேஸன் கொள்கையைப் பற்றி எதுவும் அக்கறை கிடையாது. அவர்களுக்கு பிரீ மேஸன் சடங்குகள், வெளித் தோற்றங்கள் போன்றவைகளில் சிரத்தையுண்டு. அந்த சடங்குகள், வெளித் தோற்றங்கள் ஆகியவைகளின் நோக்கத்தையோ முக்கியத்துவத்தையோ பற்றி கவலை கொள்ளாமல், அவற்றை கண்டிப்பாக பின்பற்ற வேண்டும் என்று அவர்கள் நினைப்பார்கள். அம்மாதிரி கூட்டத்தில் தான் வில்லார்ஸ்கியும், கிராண்ட் மாஸ்டரும் கூட இருப்பதாக அவர் நினைத்தார்.

கடைசியாக நாலாவது கூட்டத்தில் பலர் இருந்தார்கள். அவர்கள் முக்கியமாக சமீபத்தில் சேர்ந்தவர்கள். அவர்களுக்கு எந்த விஷயத்திலும் நம்பிக்கை கிடையாதென்றும், எதிலும் ஆசை கிடையாதென்றும் பணக்கார இளைஞர்களோடு கலந்திருப்பதற் காகவே அவர்கள் பிரீ மேஸன்களில் சேர்ந்தார்கள் என்றும், அந்த உறவைக் கொண்டு தம்முடைய பதவிகளையும் தொடர்புகளையும் பலப்படுத்திக்கொள்ளலாமென்றும், அவர்கள் நினைத்ததாக அவருக்குத் தோன்றியது.

தாம் என்ன செய்துகொண்டிருக்கிறார் என்பதை நினைத்ததும், பீயருக்கு அதிருப்தி ஏற்பட்டது. இங்கே அவர் பார்த்து வந்த பிரீ

மேஸன் என்பது, வெளிக் காரியங்களை அடிப்படையாகக் கொண்டவை என்று சில தடவைகள் பீயருக்குத் தோன்றியது. பிரீ மேஸன் கொள்கையைப்பற்றி அவருக்கு சந்தேகமில்லை. ஆனால் அந்த ருஷ்ய பிரீமேஸன் சங்கம் ஆதி கொள்கைகளிலிருந்து பிரிந்து, ஒரு தவறான வழியில் போய்க்கொண்டிருப்பதாக அவர் சந்தேகப்பட்டார். ஆகவே, அந்த பிரீ மேஸன் சங்கத்தின் உயர் வட்டாரங்களில் இரகசியங்களை அறிந்துகொள்வதற்காக, அந்த வருஷக் கடைசியில் அவர் வெளிநாடு சென்றார்.

*1809*-ஆம் வருஷம் வசந்த காலத்தில் பீட்டர்ஸ்பர்க்கிற்கு பீயர் திரும்பினார். வெளி நாடுகளில், பெஜுகாவிற்கு மிகுந்த உயர் பதவியில் உள்ளவர்களின் நம்பிக்கை கிடைத்திருக்கிறதென்றும், பல இரகசியங்களில் அவர் பங்கெடுத்துக்கொள்ளும்படி செய்யப்பட்டிருக்கிறார் என்றும், பிரீமேஸன் சங்கத்தில் அவர் உயர் பதவிக்கு உயர்த்தப்பட்டிருக்கிறாரென்றும், ருஷ்யாவிலுள்ள பிரீ மேஸன் கொள்கையை பலப்படுத்துவதற்கு சாதகமாக அவர் சில யோசனைகளை கொண்டு வருகிறார் என்றும், இங்குள்ள பிரீ மேஸன்கள் கடிதங்கள் மூலமாக அறிந்துகொண்டார்கள். பீட்டர்ஸ்பர்க்கிலுள்ள பிரீ மேஸன்கள் எல்லோரும் அவரைப் பார்க்க வந்தார்கள். அவரோடு தங்களுக்கு நெருங்கிய நட்பு ஏற்படுவதற்கு முயற்சித்தார்கள். ஒவ்வொருவரும் அவர் எதையோ ஒன்றை தங்களுக்காக தயாரித்து வருவதாகவும், ஆனால் அதை மறைத்துக்கொண்டிருப்பதாகவும் நினைத்தார்கள்.

இரண்டாவது வட்டாரத்தைச் சேர்ந்த பிரீ மேஸன் சங்கம் ஒன்று கூட்டப்பட்டது. அந்தக் கூட்டத்தில் பிரீ மேஸனின் உயர் தலைவர்கள் கொடுத்தனுப்பிய செய்திகளைத் தாம் சொல்வதாக பீயர் வாக்குறுதி கொடுத்தார். ஆகவே, அந்தக் கூட்டத்தில் அங்கத்தினர்கள் நிறைந்திருந்தார்கள். வழக்கமான சடங்குகளுக்குப் பின்னால் பீயர் எழுந்து பேச ஆரம்பித்தார்.

'அன்பு மிக்க சகோதரர்களே' என்று அவர் நாணத்தோடும் தடுமாற்றத்தோடும், எழுதித் தயாராக வைத்திருந்த பிரசங்கத்தை தமது கையில் வைத்துக்கொண்டு பேச ஆரம்பித்தார். 'நமது சங்கத்திற்குத் தனியாக இருந்துகொண்டு, நமது இரகசியங்களைப் பின்பற்றி வருவது மட்டும் போதாது. நாம் நடத்தையில் காட்டவேண்டும். நாம் நடத்தையில் காட்டவேண்டும். நாம் தூங்கிக்கொண்டிருக்கிறோம். ஆனால், நாம் நடத்தையில் காட்டவேண்டும்.' பீயர் தமது பிரசங்கத்தை வாசிக்க ஆரம்பித்தார்.

'தனி உண்மையை பரப்ப வேண்டுமானால், தர்மத்தின் வெற்றியைக் காண வேண்டுமானால், மக்களிடமிருந்து தவறான

எண்ணங்களை அகற்ற வேண்டும். காலத்தின் போக்கிற்கு ஒத்ததாக நமது கொள்கைகளை பரப்ப வேண்டும். சிறியோருக்கு கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். சிறந்த விவேகிகளுடன் நீங்காத பந்தங்களை நாம் ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். ஜாக்கிரதை யாகவும் தைரியமாகவும், மூடப் பழக்க வழக்கங்களையும், நாஸ்திகத்தையும், அறிவீனத்தையும் நாம் மக்களிடமிருந்து நீக்க வேண்டும். நம்மிடம் நம்பிக்கை கொண்டுள்ள இவர்கள் எல்லாரையும் ஒன்று திரட்ட வேண்டும். கொள்கையின் அடிப்படையில் அவர்களை நம்மோடு சேர்த்து, அவர்களின் சக்தியையும் அதிகாரத்தையும் பெருக்க வேண்டும்.

இந்த நோக்கத்தை நாம் அடைய வேண்டுமானால் அதர்மத்தை அடக்கி தர்மம் தலைதூக்க வேண்டும். இந்த உலகத்தில்கூட தர்மவானான ஒருவன் நிரந்தரப் பரிசு பெறும்படி அந்த யோக்கியமான மனிதனுக்கு உதவி செய்ய நாம் முயற்சிக்க வேண்டும். ஆனால், நம்முடைய இந்த பெரிய முயற்சிகளில், இன்றைய அரசியல் ஸ்தாபனங்களால் மிகுந்த பலமான இடையூறுகள் ஏற்படுகின்றன. இம்மாதிரியான நிலைமையில் என்ன செய்ய வேண்டும்? புரட்சியை ஆதரிப்பதா? எல்லாவற்றையும் கவிழ்ப்பதா? அல்லது பலாத்காரத்தை பலாத்காரத்தால் எதிர்ப்பதா?... இல்லை! அவைகளுக்கும் நமக்கும் வெகுதூரம். பலாத்காரமாக செய்யப்படும் சீர்திருத்தம் எதுவும் கண்டிக்கப்படக்கூடியதே. ஏனெனில், தீமையை அகற்ற அதனால் முடிவதுமில்லை. மக்களும் பழையபடியே இருக்கிறார்கள். பலாத்காரத்தை எதிர்ப்பதற்கு இது ஒரு காரணம். மற்றொரு காரணம் என்னவென்றால், ஞானம் என்பதற்கு பலாத்காரம் அவசியமே இல்லை.

உறுதியும் தர்மமும் கொண்ட மக்களை தயாரிப்பதுதான் நமது சங்கத்தின் முழுத் திட்டத்தின் அடிப்படையாய் இருக்க வேண்டும். நம்பிக்கையின் ஒற்றுமையினால் அவர்கள் இணைக்கப்பட வேண்டும். அறிவீனத்தையும் அதர்மத்தையும் தண்டித்து, தர்மத்தையும் புத்திசாலித்தனத்தையும் ஆதரிப்பதாக அவர்களின் கொள்கை இருக்க வேண்டும். சாதாரண நிலையிலிருந்து தகுதியானவர்களாக மக்களை உயர்த்தி அவர்களை நமது சங்கத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால்தான், அமைதியை குலைக்கிறவர்களின் கைகளை படாடோபமில்லாமல் நாம் கட்டி, அவர்கள் அறியாமல் அவர்கள் மீது ஆதிக்கம் செலுத்துவதற்கு, நமது சங்கத்திற்கு சக்தி ஏற்படும். ஒரு வார்த்தையில் சொல்லுவதாய் இருந்தால், சர்வ நாடுகளையும் ஆட்டி வைக்கக்கூடிய ஒரு தினுசான

சர்க்காரை நாம் ஏற்படுத்த வேண்டும். தற்சமயம் உள்ள பிரஜைகளின் பந்தங்களைத் தகர்த்து விடாமல், நாம் நமது செய்தியைப் பரப்ப வேண்டும். இப்பொழுதுள்ள சர்க்கார்கள், நம்முடைய மகத்தான நோக்கத்தில் தலையிடாமல், வழக்கமாக அவர்கள் செய்யும் காரியங்களைச் செய்து கொண்டு போகலாம். நமது அந்த மகத்தான நோக்கம் என்னவென்றால், தீங்குகளைத் தோற்கடித்து வெல்லக் கூடிய தர்மமேயாகும். கிறிஸ்தவக் கொள்கையின் நோக்கமே இதுதான். உயர்ந்த விவேகிகளைப் பின்பற்றி, அவர்கள் சொல்லுகிற யோசனைப்படி நடக்க வேண்டியது தங்களுடைய நன்மைக்கே அவசியம் என்றும், அப்படிச் செய்யும்படி விவேகிகளாகவும் நல்லவர்களாகவும் இருக்க வேண்டும் என்றும் அது மக்களுக்குப் போதிக்கிறது.

எல்லாமே இருளில் மூழ்கிக் கிடந்த அந்தக் காலத்தில் உபதேசம் செய்வது ஒன்று மட்டுமே போதுமானதாய் இருந்தது. உண்மையின் மகத்துவம் அதற்கு விசேஷ பலத்தைக் கொடுத்தது. ஆனால், இப்பொழுது நமக்கு மிகவும் அதிகமான சக்தி வாய்ந்த முறைகள் வேண்டும். புலன்களினால் ஆளப்படும் மனிதன் தர்மத்தை கடைப்பிடிப்பதால் ஒரு இனிமையை அந்தப் புலன்கள் அனுபவிக்கக் கூடியதாய் இருக்கிறதென்று அறியும்படி செய்யவேண்டியது இப்பொழுது அவசியம். ஆசைகளை ஒழித்து விடுவது சாத்தியமில்லை. ஆனால் ஒரு கண்ணியமான நோக்கத்தை அடையும் அவற்றைத் திருப்பி விடுவதற்கு நாம் முயற்சிக்க வேண்டும். ஆகவே, ஒவ்வொருவரும் தர்மத்தின் எல்லைகளுக்கு உட்பட்டு, தங்களுடைய ஆசைகளைப் பூர்த்தி செய்யுமாறு செய்யவேண்டியது இப்பொழுது அவசியம். அதை அடைவதற்கு வேண்டிய உதவிகளை நமது சங்கம் கொடுக்க வேண்டும்.

ஒவ்வொரு ராஜ்யத்திலும் தகுதியான மக்கள் குறிப்பிட்ட அளவு சேர்ந்ததும், அவர்கள் ஒவ்வொருவரும் ஆளுக்கு இரண்டு பேர் வீதம் பயிற்சி கொடுத்து தயாராக்க வேண்டும். அவர்கள் எல்லோருமே நெருங்கிச் சேர்ந்து ஒற்றுமையாகி விட்டால், எந்தக் காரியத்தை செய்வதற்கும் நமது சங்கத்தால் சாத்தியமாய் இருக்கும். மனித சமூகத்தின் நன்மைக்காக நமது சங்கம் ஏற்கெனவே இரகசியமாக எவ்வளவோ செய்திருக்கிறது.'

இந்தப் பிரசங்கம் மனத்தில் பலமான உணர்ச்சி ஏற்படுத்திய தோடு, அந்தச் சங்கத்தில் பரபரப்பையும் உண்டுபண்ணியது. சகோதர அங்கத்தினர்களில் பெரும்பாலோர் இந்தப் பிரசங்கத்தில் தங்களுக்கு விசேஷமாக ஞானோதயம் ஏற்பட்டுவிட்டதாக சொல்லக்கூடிய ஞானோதயக் கட்சியின் ஆபத்தான சூழ்ச்சிகள்

இருப்பதாக நினைத்தார்கள். ஆகவே, அதைப்பற்றி உற்சாக மில்லாமல் பேசினார்கள். பீயருக்கு இது ஆச்சரியமாய் இருந்தது. கிராண்ட் மாஸ்டர் அவருக்கு பதில் சொல்ல ஆரம்பித்தார். பீயர் தமது கருத்துக்களை மேலும் மேலும் ஆர்வத்தோடு வியாக்யானம் செய்ய ஆரம்பித்தார். இம்மாதிரியான ஒரு பரபரப்பான பிரசங்கக் கூட்டம், சமீப காலத்தில் நடந்ததே இல்லை. பல கட்சிகளாக அங்கிருந்தவர்கள் பிரிந்தார்கள். ஞானோதயக்கட்சியை ஏற்படுத்த முயல்வதாக பீயர் மீது சிலர் குறை கூறினார்கள். மற்றவர்கள் பீயரை ஆதரித்தார்கள். மனிதர்களின் உள்ளங்கள் எல்லையற்ற விதங்களாகப் பிரிந்து நிற்பதையும், இரண்டு பேர்கள்கூட சேர்ந்தாற்போல ஒரேவிதமாக உண்மையைப் பார்க்க முடியாமல் அவை தடுத்து நிற்பதையும், இப்பொழுதுதான் முதல் தடவையாக அந்தக் கூட்டத்தில் பீயர் அறிந்தார். அதைக்கண்டு அவர் ஆச்சரியம் கொண்டார். தம்மை ஆதரிக்கிற அங்கத்தினர்கள்கூட தாம் சொல்லியதைப்பற்றி தங்களுடைய சொந்த வழிகளிலேயே எடுத்துக்கொண்டார்கள். அதாவது, இவர் ஒப்புக்கொள்ள முடியாத மாறதல்களுடனும், அவர்களுடைய அறிவுத் திறமைக்கு ஏற்பதாகவும் அவர்கள் எப்படி அறிந்து கொண்டாரோ, அம்மாதிரியே தமது கருத்தை அவர்களுக்கு அறிவிக்கவேண்டும் என்பதுதான் அவர் எப்பொழுதும் விரும்பி வந்ததாகும்.

பெஜுகாவின் தீவிரமான பேச்சுக்காக அவரை கேலியுடனும் சந்தேகத்துடனும், அந்தக் கூட்டத்தின் முடிவில் கிராண்ட் மாஸ்டர் அவரைக் கண்டித்தார். தர்மத்தின் மீதுள்ள ஆசையினால் மட்டும் அவர் அப்படிப் பேசவில்லை என்றும், விரோதத்தின் மீது அவருக்கு பீயர் பதில் சொல்லவில்லை. தம்முடைய பிரேரணையை ஒப்புக்கொள்ளப் போகிறீர்களா என்று மட்டும் சுருக்கமாய் அவர் கேட்டார். ஒப்புக்கொள்ள முடியாது என்று அவருக்கு பதில் சொல்லப்பட்டது. இதைக் கேட்டதும் வழக்கமான சடங்குகளுக்காக அவர் காத்திருக்காமல், அந்த சங்கத்தைவிட்டுப் புறப்பட்டு வீட்டிற்குப் போனார்.

## 6 8

**தா**ம் மிகவும் பயந்துவந்த அந்த மனச் சோர்வு பீயரை மீண்டும் பற்றிக்கொண்டது. சங்கத்தில் அவர் பிரசங்கம் செய்ததற்குப் பின்னால் மூன்று தினங்கள் தமது வீட்டில் ஒரு சோபா மீது படுத்திருந்தார். யாரையும் வரவேற்றுப் பேசவில்லை. எங்கேயும் வெளியே போகவில்லை.

அச்சமயத்தில்தான் அவருடைய மனைவியிடமிருந்து அவருக்கு ஒரு கடிதம் வந்தது. தன்னைப் பார்க்கும்படி அதில் அவள் கெஞ்சி இருந்தாள். அவரைப்பற்றி எவ்வளவு தூரம் அவள் வருத்தங் கொண்டிருந்தாள் என்பதையும், தனது வாழ்க்கை முழுவதையுமே அவருக்காக தத்தம் செய்ய எவ்வளவு தூரம் அவள் ஆசை கொண்டிருந்தாள் என்பதையும் அதில் அவள் சொல்லியிருந்தாள்.

இன்னும் சில தினங்களில் பீட்டர்ஸ்பர்க்கிற்கு தான் திரும்பி வரப்போவதாக அந்தக் கடிதத்தின் கடைசியில் குறிப்பிட்டிருந்தாள். இந்தக் கடிதத்திற்குப் பின்னால், அவர் மதிப்பு வைக்காத ஒரு பிரீ மேஸன் சகோதரர் அவர் வீட்டிற்கு வந்து, அவரைப் பார்த்தாக வேண்டும் என்று வற்புறுத்தினார். அவர் பீயரிடம் பேசிக் கொண்டிருந்தபோது, அவருடைய இல்லற வாழ்க்கையைப்பற்றிய விஷயங்களில் உரையாடலை திருப்பினார். அன்பினால் தூண்டப்பட்டவர் போல புத்திமதி கூற ஆரம்பித்து அவருடைய மனைவியின் மீது அவர் காட்டும் கடுமை தவறானது என்று சொன்னார். பிரீ மேஸன் முதன்மையான விதிகளில் ஒன்று, குற்றத்தை உணர்ந்து வருந்துகிறவர்களை மன்னித்துவிடவேண்டும் என்பதாகும். இந்த விதியை அவர் அலட்சியம் செய்வதாக எடுத்துக் காட்டினார்.

அதே சமயத்தில் இளவரசர் வாஸைலியின் மனைவியான இவருடைய மாமியார், தன்னை வந்து பார்க்கும்படியும், ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி அவருடன் சில நிமிஷங்களாவது வாதிக்க வேண்டுமென்றும் அவரைப் பரிந்து கேட்டுக்கொண்டாள். இதில் ஏதோ தமக்கு விரோதமாக சதியாலோசனை இருப்பதாக பீயர் நினைத்தார். அதாவது, தம்முடைய மனைவியை தம்முடன் மீண்டும் சேர்த்துவைக்க அவர்கள் விரும்புவதாகத் தோன்றியது. அச்சமயம் அவருக்கிருந்த மனோபாவத்தில், அவருக்கு இந்த விஷயம் அதிருப்தியாகக்கூட தோன்றவில்லை. ஏனெனில், எதைப்பற்றியும் அவருக்கு இலட்சியமில்லை. வாழ்க்கையில் எந்த விஷயமும் அவருக்கு பிரமாதமாகத் தோன்றவில்லை. அவருக்கு ஏற்பட்டிருந்த மனச் சோர்வில் தம்முடைய சுதந்திரத்தைப் பற்றியோ, அல்லது தாம் தீர்மானித்தபடி தமது மனைவியை தண்டிப்பதைப்பற்றியோ, அவர் பிரமாதமாய் நினைக்கவில்லை.

'ஒருவர் சொல்லுவதும் சரியல்ல. ஒருவரையும் குறைகூற முடியாது. ஆகவே, அவளையும்கூட குறைகூற முடியாது' என்று அவர் நினைத்தார்.

தம்முடைய மனைவியோடு சேர்ந்திருப்பதற்கு அவர் உடனே தமது சம்மதத்தைத் தெரிவிக்கவில்லையென்றால், அதற்கு ஒரே ஒரு காரணம்தான் உண்டு. அதாவது, அச்சமயம் அவருக்கிருந்த மனச் சோர்வில் அவரால் எந்தக் காரியத்தையும் செய்ய முடியவில்லை. அவருடைய மனைவி தானாக அங்கு வந்திருப்பாளானால், அவளை திரும்பிப் போகும்படி தாமாக அவர் கூறியிருக்கமாட்டார். அவர் மனதில் தோன்றியுள்ள சிந்தனைகளைப் பார்க்கும்போது, அவர் தம்முடைய மனைவியுடன் வாழ்கிறாரா, இல்லையா என்ற விஷயம், அவருக்கு அலட்சியமாகத்தானே தோன்றும்?

தமது மனைவிக்கோ, மாமியாருக்கோ பதில் அனுப்பாமல் ஒரு நாள் இரவு வெகுநேரம் கழித்து ஜோஸப் அலெக்ஜீவிச்சைப் பார்ப்பதற்காக பீயர் மாஸ்கோவுக்குப் பிரயாணமானார். அதைப்பற்றி அவர் தமது தினக் குறிப்புப் புத்தகத்தில் பின்வருமாறு எழுதினார்;-

மாஸ்கோ,

நவம்பர், 17-ஆம் தேதி.

'எனது நன்மையாளரிடமிருந்து இப்பொழுதுதான் நான் திரும்பினேன். எனக்கு ஏற்பட்ட அனுபவங்களைப்பற்றி இதோ நான் எழுதுகிறேன். ஜோஸப் அலெக்ஜீவிச் ஏழ்மையில் வாழ்ந்து கொண்டிருக்கிறார். கடந்த மூன்று வருஷங்களாக மிகுந்த வேதனை கொடுக்கக்கூடிய மூத்திரப்பை வியாதியால் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருக்கிறார். ஆனால், அவர் அதைப்பற்றி ஒரு வார்த்தைகூட குறை கூறியதில்லை. ஒரு தடவைகூட அவர் முனங்கி ஒருவர் கேட்டதில்லை. தமது சாதாரணமான உணவை உண்கிற நேரத்தைத் தவிர மற்றபடி காலையிலிருந்து இரவு வெகு நேரம் வரையில் அவர் விஞ்ஞானத்தைப்பற்றி வேலை செய்து கொண்டிருக்கிறார். என்னை கருணையோடு அவர் வரவேற்றார். தாம் படுத்திருந்த படுக்கையிலேயே என்னை உட்காரும்படி அவர் செய்தார். சங்கத்தின் குறிகளான கிழக்கத்திய வீரர்களின் குறிகளையும், ஜெருசலேத்தின் குறிகளையும் நான் காட்டினேன். அவரும் அதே மாதிரி எனக்குக் காட்டினார். பிரஷ்யாவிலும் ஸ்காட்லந்திலும் பிரீமேஸன் சங்கங்களில் நான் கற்றுக்கொண்ட விஷயங்களைப்பற்றி மெல்லிய புன்னகையோடு அவர் விசாரித்தார். என்னால் எவ்வளவு நன்றாய் சொல்ல முடியுமோ, அவ்வளவு தூரம் ஒவ்வொன்றைப்பற்றியும் நான் சொன்னேன். பீட்டர்ஸ்பர்க் சங்கத்தில் நான் சொன்ன விஷயங்களைப் பற்றியும், அங்கு எனக்கு நேரிட்ட எதிர்ப்புகளைப் பற்றியும், அங்குள்ள சகோதரர்களுடன்

தமக்குள்ள அபிப்பிராய பேதத்தைப் பற்றியும் நான் சொன்னேன். ஜோஸப் அலெக்ஜீவிச் வெகு நேரம் வரையில் மௌனமாகவும் சிந்தனையோடும் இருந்தார். கடைசியில் அதைப் பற்றிய தமது கருத்தை என்னிடம் சொன்னார். அதைக் கேட்டதும் என்னுடைய கடந்த கால வாழ்க்கையும், எதிர்காலத்தில் நான் போக வேண்டிய பாதையும் உடனே ஒளிர் விட்டுப் பிரகாசித்தது. சங்கத்தின் மூன்று நோக்கங்களை நான் ஞாபகத்தில் வைத்திருக்கிறேனா என்று திடீரென்று என்னிடம் கேட்டார். அவையாவன;-

(1) இரகசியங்களை அறிந்து காப்பாற்றி வருவது; (2) அதற்குத் தயாராய் இருப்பதற்காக தம்மையே பரிசுத்தம் செய்து திருத்தி அமைத்துக்கொள்வது; (3) அம்மாதிரி பரிசுத்தத்தை அடைய முயற்சி செய்வதால், மனித சமூகம் அபிவிருத்தி அடைவது, இந்த மூன்று நோக்கங்களில் முக்கியமானது எது? தம்மையே திருத்தம் செய்து சுயமாக பரிசுத்தம் செய்வதுதான் முக்கியமான நோக்கம் என்பது நிச்சயம். சூழ்நிலைகள் எப்படி இருந்தாலும், நாம் இந்த நோக்கத்தை அடைவதற்கே எப்பொழுதும் முயற்சி செய்ய வேண்டும். ஆனால், அதே சமயத்தில் இந்த நோக்கத்தை அடைவதற்கு நாம் மிகுந்த பிரயாசைகள் எடுத்துக்கொள்ள வேண்டியது அவசியமாய் இருக்கின்றது. ஆகவே, தற்பெருமையினாலோ, இந்த நோக்கத்தை மறந்ததினாலோ நாம் வழி தவறிப் போவோமானால், பரிசுத்தமில்லாத நாம், தகுதியில்லாத நாம், அந்த இரகசியத்தை வைத்துக் கொண்டிருப்பதாக நேரிடும். அல்லது மனித சமூகத்தை சீர்திருத்த முயற்சிக்கும் நாம், இழிகுணங்களுக்கும் தீய ஒழுக்கங்களுக்கும் உதாரணங்களாய் விளங்கிக்கொண்டிருப்போம். ஞானோதயக் கொள்கை என்பது ஒரு சுத்தமான கோட்பாடல்ல. ஏனெனில், சமூக வேலைகளில் இறங்கி பெருமையாய் பூரிக்க அது தூண்டுகிறது. இந்தக் காரணத்தினால், என்னுடைய முழு நடவடிக்கைகளையும், என்னுடைய பிரசங்கத்தையும் ஜோஸப் அலெக்ஜீவிச் கண்டித்தார். இந்த விஷயத்தில் என்னுடைய உள்ளத்தில் அவர் கூறுவதை நான் ஒப்புக்கொண்டேன். என்னுடைய குடும்ப விஷயத்தைப்பற்றி அவர் பேசியபோது சொல்லியதாவது:- 'ஒரு உண்மையான பிரீ மேஸனின் முதன்மையான கடமை என்னவென்றால், அவன் தன்னையே பூரணத்துவமாக்கிக் கொள்ளுவதாகும். நம்முடைய வாழ்க்கையிலுள்ள கஷ்டங்களையெல்லாம் நீக்கிவிட்டால், நாம் வெகு சீக்கிரமாக நமது நோக்கத்தை அடைந்துவிடலாம் என்று நாம் அடிக்கடி நினைக்கிறோம். ஆனால், எனது அன்புள்ள ஐயா, உலகத்தின் சுக துக்கங்களின் மத்தியில்தான் நமது முக்கியமான

மூன்று நோக்கங்களையும் அடைய முடியும். அவையாவன:- (1) சுயஞானம் - அதாவது ஒப்பிட்டுப் பார்ப்பதன் மூலமாய்த்தான் மனிதன் அறிந்துகொள்ள முடியும்; (2) சுய பூரணத்துவம்-இதை வாழ்க்கையின் கஷ்டங்களை எதிர்த்துப் போராடித்தான் அடைய முடியும்; (3) முக்கியமான தர்மத்தை அடைவது- அதாவது, மரணத்தில் ஆசை. வாழ்க்கையில் ஏற்படும் சுக துக்கங்களினால்தான் வாழ்க்கையின் வீண் பெருமைகளை நாம் அறிய முடியும். அப்பொழுதுதான் மரணத்தின் மீதுள்ள ஆசையை நாம் வளர்க்கவோ அல்லது மறுபிறப்பில் உள்ள ஆசையை வார்க்கவோ முடியும்! இந்த வார்த்தைகள் மிகவும் முக்கியமானவை. ஏனெனில் ஜோஸப் அலெக்ஜீவிச் மிகுந்த உடல் வேதனைகளினால் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருந்த போதிலும், மரணத்தில் அவர் ஆசை கொண்டிருந்தபோதிலும், தமது வாழ்க்கையில் எப்பொழுதும் அவர் சோர்வுகொண்டதில்லை. பரிசுத்தமும் உயரிய கொள்கைகளும் கொண்டுள்ள அவர், மரணத்தின்மீது ஆசை கொண்டுள்ளவராய் இருந்தாலும், இன்னும் அதற்குப் போதுமானபடி அவர் தயாராகவில்லை என்று நினைக்கிறார். எனது நன்மையாளர் படைப்பின் பெரிய சதுரத்தைப் பற்றிய கருத்தை முற்றிலும் எனக்கு விளக்கினார். மூன்று, ஏழு' என்ற இலக்கங்கள்தான் ஒவ்வொன்றுக்கும் அடிப்படையானவை என்று சுட்டிக் காட்டினார். பீட்டர்ஸ்பர்க் பிரீ மேஸன் சகோதரர்களுடன் உறவாடலை நிறுத்த வேண்டாமென்று எனக்குப் புத்திமதி கூறினார். சங்கத்தில் இரண்டாந்தரப் பதவிகளையே நான் வகிக்க வேண்டுமென்று சொன்னார். வீண் பெருமையிலிருந்து சகோதரர்களைத் திருப்பி, சுயஞானம், சுய பூரணத்துவம் ஆகியவைகளை அடையக்கூடிய உண்மையான பாதையில் அவர்களைத் திருப்ப முயற்சிக்க வேண்டும் என்று என்னிடம் கூறினார். இதைத் தவிர, என்னுடைய சொந்த விஷயமாக ஒரு புத்திமதியும் கூறினார். அதாவது, என்னைப்பற்றி நானே ஜாக்கிரதையாக கவனித்துக்கொள்ள வேண்டும் என்று கூறி, என்னிடம் ஒரு குறிப்புப் புத்தகத்தைக் கொடுத்தார். அந்தப் புத்தகத்தில்தான் இதை நான் எழுதுகிறேன். இனி எதிர்காலத்திலும் என்னுடைய நடவடிக்கைகளையெல்லாம் இதில் நான் எழுதிவருவேன்.

பீட்டர்ஸ்பர்க்

நவம்பர், 23-ஆம் தேதி

'நான் மீண்டும் எனது மனைவியோடு வாழ்ந்து வருகிறேன். எனது மாமியார் கண்ணீரோடு என்னிடம் வந்து, ஹெலன் இங்கே

தான் இருக்கிறாள் என்றும், அவள் சொல்லுவதை கேட்கும்படி கெஞ்சுகிறாள் என்றும் கூறினாள். ஹெலன் குற்றமற்றவள் என்றும், அவளை நான் விலக்கி வைத்திருப்பதால் அவள் மிகுந்த துக்கமடைந்து இருக்கிறாள் என்றும் அவள் சொன்னாள். அவளை நான் நேரில் பார்த்துவிட்டால், அவள் கேட்பதை மறுப்பதற்கு எனக்கு தைரியம் இருக்காது என்பதை நான் அறிவேன். இந்தக் குழப்பத்தில் யாருடைய உதவியையோ, அல்லது புத்திமதியையோ கேட்பது என்பது எனக்குத் தெரியவில்லை. எனது நன்மையாளர் இங்கே இருப்பாரானால், நான் என்ன செய்ய வேண்டும் என்பதை அவர் சொல்லியிருப்பார். என்னுடைய அறைக்குப் போய் ஜோஸப் அலெக்ஜீவிச்சின் கடிதங்களைத் திரும்பப் படித்தேன். அவருடன் நான் செய்த உரையாடல்களை நினைத்துப் பார்த்தேன். இவற்றிலிருந்து நான் ஒரு முடிவுக்கு வந்தேன். அதாவது தாழ்மையுடன் கெஞ்சிக் கேட்கும் ஒருவருக்கு இல்லை என்ற சொல்லக் கூடாது என்றும், ஒவ்வொருவருக்கும் உதவி செய்ய வேண்டும் என்றும், முக்கியமாக என்னோடு நெருங்கி பந்தப்பட்ட ஒருவருக்கு கண்டிப்பாய் உதவி செய்யவேண்டும் என்றும், என்னுடைய பொறுப்பை நானே சுமக்கவேண்டும் என்றும் தீர்மானித்தேன். நல்லது செய்யவேண்டும் என்பதற்காக நான் அவளை மன்னிப்பதாய் இருந்தால், திரும்பவும் நாங்கள் சேர்ந்திருப்பது ஆத்மார்த்தீக நோக்கத்தை மட்டும் கொண்டதாகவே இருக்கும். இம்மாதிரி நான் தீர்மானித்தேன். இதே மாதிரி, ஜோஸப் அலெக்ஜீவிச்சுக்கும் நான் எழுதினேன். சென்றதை மறந்து விடும்படியும், அவளுக்கு நான் என்ன தவறு செய்திருந்தாலும் அதற்காக என்னை மன்னிக்கும்படியும், நான் அவளை மன்னிப்பதற்கு எதுவும் இல்லையென்றும் என்னுடைய மனைவியிடம் நான் சொன்னேன். இம்மாதிரி சொல்லுவதற்கு எனக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. அவளை மீண்டும் பார்ப்பது எனக்கு எவ்வளவு கஷ்டமாய் இருந்தது என்பதை அவள் தெரிய வேண்டியது அவசியமில்லை. இந்தப் பெரிய மாளிகையின் மெத்தையில் நான் வாழ்ந்துவர ஆரம்பித்தேன். ஒரு புது வாழ்வு பெற்றதான சந்தோஷ உணர்ச்சியை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்.'



தர்பார் வட்டாரங்களிலும் பெரிய நடனக் கச்சேரிகளிலும் கூடுகிற உயர் வட்டாரக் கூட்டங்கள் எப்போதும் போலவே பல பிரிவுகளாகப் பிரிந்திருந்து பேசுவது வழக்கம். அதே மாதிரி இப்போதும் நடந்துகொண்டிருந்தது. அந்த தனியாகப் பிரிந்து பேசும் கோஷ்டிகளில் பெரிதாக இருந்தது நெப்போலியன் கூட்டுறவால் ஏற்பட்ட பிரஞ்சு கோஷ்டியாகும். கோமகன் ரும்யாண்ட்சேவும் காலெயின்கோர்ட்டும் அந்தக் கோஷ்டியின் பிரதான புருஷர்களாய் விளங்கினார்கள். பீட்டர்ஸ்பர்க்கில் தனது புருஷனுடன் மீண்டும் சேர்ந்த பின்பு, இந்த கோஷ்டியில் ஹெலன் மிகவும் முக்கியமான பங்கு கொண்டிருந்தாள். பிரஞ்சு ஸ்தானாதிபதி காரியாலயத்தைச் சேர்ந்தவர்களும், அம்மாதிரி வட்டாரங்களைச் சேர்ந்த வேறு பலரும், புத்திசாலித்தனத்திற்கும் நாசூக்கான நடைமுறைகளுக்கும் பெயர் போனவர்களும், அடிக்கடி அவளை வந்து சந்திப்பதுண்டு.

எர்பர்ட் என்ற இடத்தில் சக்கரவர்த்திகளின் அந்த பிரபலமான சந்திப்பின்போது ஹெலனும் அங்கே இருந்தாள். அங்கிருந்தபோது நெப்போலியனைச் சேர்ந்த பிரபலஸ்தர்களுடன் அவளுக்கு தொடர்பு ஏற்பட்டது. எர்பர்ட்டில் அவள் மிகப் பிரதானமாக விளங்கினாள். அங்கிருந்த நாடகக் கொட்டகைகளில் நெப்போலியன் அவளைப் பார்த்தபோது, ‘எப்பேர்ப்பட்ட பிரமாதமான உருவம்!’ என்று சொன்னார். அழகிலும் எடுப்பிலும் அவள் வெற்றி பெற்றது பீயருக்கு ஆச்சரியமாய் இல்லை. ஏனெனில் முன்பைவிட இப்பொழுது இன்னும் அவள் அதிக அழகாய் விளங்கினாள். ஆனால், அவருக்கு மற்றொரு விஷயம் ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. கடந்த இரண்டு வருஷ காலத்தில், ‘அவள் எவ்வளவு அழகாய் இருக்கிறாளோ, அவ்வளவு புத்திசாலியாயும் இருக்கிறாள்’ என்ற பெயர் அவளுக்குக் கிடைத்ததுதான் ஆச்சரியமாய் இருந்தது. மதிப்பு வாய்ந்த இளவரசர் டிலின் என்பவர் அவளுக்கு எட்டுப் பக்கங்கள் கொண்ட கடிதங்களை எழுதுவதுண்டு. பிலைபின் என்பவர் தம்முடைய அடுக்கு மொழிகளை கோமகள் பெஜுகாவாவின் முன்னால் சமர்ப்பிப்பதற்காக சேர்த்து வைத்துக்கொண்டு வந்தார். கோமகள் பெஜுகாவாவின் வரவேற்புகளில் கலந்துகொள்வது என்பது, அப்படிக் கலந்து கொள்கிறவர் ஒரு பெரிய புத்திசாலி என்று மதிக்கக்கூடிய விதத்தில் இருந்தது. ஹெலனுடைய வரவேற்பு

மண்டபத்திற்கு போவதற்கு முன்பாக, அங்கே அவளிடம் ஏதாவது சொல்லவேண்டுமே என்பதற்காக, வாலிபர்கள் புத்தகங்களைப் படித்துத் தெரிந்துகொள்வதுண்டு. ஸ்தானாதிபதி காரியாலயத்திலுள்ள காரியதரிசிகளும், ஸ்தானாதிபதிகளும் ஹெலனிடம் பல ரகசியங்களைக் கூறுவதுண்டு. அதனால் ஹெலன் ஒரு பெரிய சக்தி வாய்ந்தவளாய் விளங்கினாள். அவள் ஒரு முட்டாள் என்பதை பீயர் அறிவார். இருந்தாலும் ஒரு மனக்குழப்பத்துடனும் பீதியுடனும், அவளுடைய மாலை வரவேற்பு கூட்டங்களிலும் டின்னர் கச்சேரிகளிலும் சில சமயம் அவர் கலந்து கொள்வதுண்டு. அம்மாதிரி கச்சேரிகளில் அரசியல், கவிதை, தத்துவம் ஆகியவைகள் விவாதிக்கப்படுவது உண்டு. ஒரு கண்கட்டு வித்தைக்காரன் எப்படித் தன்னுடைய தந்திரங்கள் வெளியாகிவிடுமோ என்று எப்போதும் பீதி கொண்டிருப்பானோ, அதைப் போலவே இவரும் இந்தக் கச்சேரிகளில் பீதி கொண்டிருப்பார். இம்மாதிரி வரவேற்புகளை நடத்துவதற்கு முட்டாள்தனம் மட்டும்தான் அவசியமா? அல்லது ஏமாற்றப்படுகிறவர்கள் அந்த ஏமாற்றுகளில் சந்தோஷத்தைக்கண்டு அதை அனுபவிக்கிறார்களா?

எப்படியிருந்தாலும் அந்த குட்டு இன்னும் வெளியாகவில்லை. ஹெலன் பெஜுகாவாவின் புகழ், 'அவள் இனிமையும், புத்திசாலித்தனமும் நிறைந்த ஒரு பெண்' என்ற புகழ், மிகப் பலமாக ஸ்தாபிக்கப்பட்டுவிட்டது. ஆகவே, அவள் அர்த்தமில்லாத, முட்டாள்தனமாக வார்த்தைகளைப் பேசினாலும், அவளுடைய ஒவ்வொரு வார்த்தையையும் மிகந்த பரவசத்தோடு ஒவ்வொருவரும் கேட்பதுண்டு. அந்த வார்த்தைகளில் ஏதோ பிரமாதமான அர்த்தங்கள் பொதிந்திருப்பதைப்போல நினைத்து, அவற்றைக் கண்டுபிடிக்க அவர்கள் முயற்சிப்பார்கள். ஆனால் அம்மாதிரி அர்த்தங்கள் எதையும் அவள் நினைத்ததேயில்லை.

ஒரு பிரமாதமான உயர் வட்டாரப் பெண்ணுக்கு எப்பேர்ப்பட்ட கணவன் இருக்கவேண்டுமோ, அதே மாதிரி பீயர் இருக்கிறார். பராக்குப் புத்தியுள்ள ஒரு அரைப் பைத்தியமாக, பணக்கார பிரபுவாக அவளுக்கு கணவராய் விளங்கினார். யாருடைய வழியிலும் அவர் குறுக்காக நிற்பதில்லை. அந்த வரவேற்பு மண்டபத்தைப்பற்றி ஏற்பட்டுள்ள பிரதாபத்தைக் கெடுக்கும் விதத்தில் அவர் எதுவும் செய்வதில்லை. அதற்குப் பதிலாக [illegible] எடுப்பான, சாமர்த்தியமுள்ள மனைவிக்கு உபயோகப்படக்கூடிய விதத்தில் பின்பலமாக அவர் விளங்கினார். கடந்த இரண்டு வருஷங்களாக தத்துவ விசாரணைகளில்

தொடர்ச்சியாக பீயர் ஈடுபட்டிருந்தார். மற்றவைகள் மீது அவருக்கு மிகுந்த உண்மையான இகழ்ச்சி ஏற்பட்டிருந்தது. ஆகவே, ஒரு அலட்சியமான, சிரத்தையில்லாத தோற்றத்துடனும், எல்லாரிடமும் தர்ம சிந்தனையான போக்குடனும் காணப்பட்டார். இந்தப் போக்கை செயற்கையாக பெற முடியாதாகையால்; எல்லோரும் தங்களை அறியாமலேயே அவருக்கு மரியாதை காட்டினார்கள். ஒரு நாடகக் கொட்டகைக்குள் ஒருவர் நுழையும்போது எப்படிக் காணப்படுவாரோ, அதே மாதிரி அவர் தமது மனைவியின் வரவேற்பு மண்டபத்தில் பிரவேசிக்கும்போது காணப்படுவார். நாடகக் கொட்டகைக்குள் போகும்போது ஒருவர் எப்படி எல்லோரையும் அறிந்தவராய் இருந்தாலும், எல்லோரையும் பார்ப்பதற்கு சந்தோஷப்படுவதாயிருந்தாலும், எல்லோரிடமும் எப்படி பாராமுகமாய் இருப்பாரோ, அதே மாதிரி அவர் இருப்பார். அவருக்குப் பிரியமான உரையாடல் நடக்கும்போது சில வேளைகளில் கலந்துகொள்வார். அங்கே ஸ்தானாதிபதி காரியாலயத்தைச் சேர்ந்த கனவான்கள் யாராவது இருக்கிறார்களா என்று, கொஞ்சம்கூட லட்சியமில்லாமல், தமது அபிப்ராயத்தை மழலைக் குரலில் சொல்லிக்கொண்டிருப்பார். சில சமயங்களில் அங்கிருந்த சுற்றுணர்ச்சிகளுக்கு நேர் விரோதமாகவும் அவருடைய பேச்சு இருக்கும். என்றாலும், பீட்டர்ஸ்பர்க்கிலுள்ள மிகச் சிறந்த பெண்ணின் வேடிக்கையான கணவரைப்பற்றி, பொதுவாக எல்லோருமே ஒரு அபிப்பிராயம் கொண்டுவிட்டபடியால், அவருடைய விசித்திரப் பேச்சுகளை பிரமாதமாக யாரும் எடுத்துக் கொள்ளுவதில்லை.

அவள் வீட்டிற்கு அடிக்கடி வந்து போய்க்கொண்டிருந்த வாலிபர்களில் போரிஸ் ட்ரூபெட்ஸ்கோய் என்பவரும் ஒருவர். அவர் ஏற்கெனவே தம்முடைய ராணுவ சேவையில் மிகுந்த வெற்றி பெற்றவர். எர்பர்ட் என்ற இடத்திலிருந்து ஹெலன் திரும்பியது முதல் அவளுடைய குடும்பத்திற்கு மிகுந்த அன்னியோன்னிய நண்பராய் விளங்கினார். அவரை 'என்னுடைய சேவகர்' என்று செல்லமாக அவள் அழைத்து, அவரை ஒரு குழந்தையைப் போல்வே நடத்தி வந்தாள். அவருக்கு அவள் காட்டும் புன்னகை, மற்றவர்களுக்கு காட்டக்கூடிய புன்னகையைப் போலவே இருந்தது. ஆனால், சில சமயங்களில் அந்தப் புன்னகை பீயருக்கு மனச்சங்கடத்தை உண்டு பண்ணியது. அவரிடம் ஒரு முக்கியமான மரியாதையோடும் கண்ணியத்தோடும் போரிஸ் நடந்துகொள்வார். இந்த மாதிரி மரியாதையும் பீயரை மனம் குழம்பும்படி செய்து வந்தது. மூன்று வருஷங்களுக்கு முன்னால், தமது மனைவி தமக்கு

ஏற்படுத்திய அவமானத்தினால் அவர் மிகுந்த வேதனையோடு கஷ்டப்பட்டார். அதே மாதிரி காரியம் மீண்டும் நடந்துவிடக்கூடாதே என்று தம்மை ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொண்டார். அதாவது, தமது மனைவிக்கு தாம் கணவராய் இருப்பதை முதலாவது விட்டுவிட்டார். இரண்டாவதாக, அவளைப்பற்றி தாம் சந்தேகப்படுவதில்லை என்று முடிவு செய்துகொண்டார்.

''இல்லை, அவள் இப்பொழுது இலக்கியம், கவிதை, ஆகியவைகளில் ஆராய்ச்சி செய்கிறவளாகத் திரும்பிவிட்டாள். அதனால் அவளுடைய முந்தைய ஆசைகளைத் துறந்துவிட்டாள்'' என்று தமக்குள்ளாகவே சொல்லிக்கொண்டார். ''இலக்கிய ஆராய்ச்சியில் இறங்கியிருப்பவர் யாரும் காதலினால் தலை இறங்கிவிட்டதாக இதுவரை ஒரு உதாரணம் கூட கிடையாது.'' இந்த அபிப்பிராயத்தை அவருக்கு யாரோ சொன்னார்கள். அதை அவர் முற்றிலும் நம்பிவிட்டார். என்றாலும், அவருடைய மனைவியின் வரவேற்பு அறையில் அநேகமாக போரிஸ் இருந்துவந்தது, அவருடைய உடம்பை பாதிப்பதைப்போல அவருக்குத் தோன்றியதுதான் ஆச்சரியமாய் இருந்தது. அவருடைய கால்களையும் கைகளையும் இறுக்குவதுபோல உணர்ந்தார். தாராளமாக நடமாடவும் அவரால் முடியவில்லை.

''அவர் மீது எனக்கு என்ன விசித்திரமான விரோதம்! என்றாலும், அவர் மீது எனக்கு மிகுந்த பிரியமும் இருக்கிறது'' என்று பீயர் நினைத்தார்.

உலகத்தாரின் கண்களில், பீயர் ஒரு பெரிய கனவானாகவும், ஒரு பிரபல மனைவியின் அசட்டுத்தனமான கணவராகவும், ஒரு வேலையும் செய்யாத ஒரு கெட்டிக்கார அரைப் பைத்தியமாகவும் யாருக்கும் கெடுதல் செய்யாதவராகவும், ஒரு முதல்தரமான நல்ல குணம் கொண்டுள்ள மனிதராகவும் அவர் காணப்பட்டார். ஆனால், பீயரின் உள்ளத்தின் வளர்ச்சிக்கான மிகுந்த கஷ்டமான, சிக்கலான ஒரு மாறுதல் அவருடைய உள்ளத்தில் இக்காலங்களில் உருவாகிக்கொண்டிருந்தது. அந்த மாறுதல் வளர்ச்சியினால் அவருக்கு பல விஷயங்கள் தெளிவாகிக்கொண்டு வந்தன. அவற்றோடு பல வேதாந்த மகிழ்ச்சிகளும், சந்தேகங்களும் தோன்றி வந்தன.

# 6 10

பீயர் தமது குறிப்புப் புத்தகத்தில் எழுதி வந்துகொண்டிருந்தார். அக்காலத்தில் அவர் பின்வருமாறு தமது நாள் குறிப்பில் எழுதியிருந்தார்:-

நவம்பர், 24 -ந் தேதி.

''8 மணிக்கு எழுந்திருந்தேன். வேதப் புத்தகங்களைப் படித்தேன். பின்னால் என் வேலைகளை கவனிக்கச் சென்றேன். (ஜோஸப் அலெக்ஜீவிச்சின் புத்திமதியின் பேரில் சர்க்கார் உத்யோகத்தில் பீயர் சேர்ந்தார். அச்சமயம் ஒரு கமிட்டியில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார்) டின்னருக்காக வீடு திரும்பி, தனியாக உணவருந்தினேன். கோமகளோடு அநேக விருந்தாளிகள் இருந்தார்கள். அவர்களை எனக்குப் பிடிக்கவில்லை. நான் மிதமாக உண்டு குடித்தேன். உணவிற்குப் பின்னால், சங்கத்தின் சகோதரர்களுக்காக சில விஷயங்களை நகல் எழுதிக்கொண்டிருந்தேன். மாலையில் கோமகளிடம் போய், 'பி' என்பவரைப் பற்றிய ஒரு தமாஷ் கதையைச் சொன்னேன். அதைக்கேட்டு எல்லாரும் உரக்கச் சிரித்தபடியால், அதை நான் சொல்லியிருக்கக்கூடாது என்று நினைத்தேன். அது ஒன்றுதான் ஞாபகத்தில் இருக்கிறது.

''ஒரு அமைதியான, சந்தோஷமான மனதோடு, தூங்கப் போகிறேன். மகா பெரிய கடவுளே, உமது வழிகளில் நடப்பதற்கு எனக்கு உதவிபுரியும், அவையாவன:- ★ ஆழ்ந்த யோசனையினாலும், அமைதியினாலும் கோபத்தை நான் வெல்ல வேண்டும்; ★ வெறுப்பினாலும் ஆசைகளை நான் வெல்லவேண்டும்; ★ உலக விவகாரங்களில் இருந்து நான் விடுதலை பெறவேண்டும்: ஆனால் (அ) அரசாங்கத்திற்கு செய்யவேண்டிய சேவை, (ஆ) குடும்பத்திற்கு செய்யவேண்டிய கடமைகள் (இ) எனது நண்பர்களுடன் கொண்டுள்ள பற்றுகள், (ஈ) என்னுடைய காரியங்களை மேற்பார்வை செய்தல், ஆகியவைகளை நான் செய்து வரவேண்டும்.

நவம்பர், 27-ந் தேதி

''நேரம் கழித்து எழுந்திருந்தேன். சோம்பேறித்தனத்தில் ஈடுபட்டு, வெகு நேரம் விழித்துக்கொண்டே படுத்திருந்தேன். ஓ, கடவுளே, உமது வழிகளில் நான் நடப்பதற்கு எனக்கு, உதவியையும் தைரியத்தையும் கொடுப்பீராக. வேதப் புத்தகங்களைப் படித்தேன். ஆனால், சரியான உணர்ச்சியில் படிக்கவில்லை. சகோதரர் உருசாவ் வந்தார். உலகத்தின் தற்பெருமைகளைப் பற்றி நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம். சக்கரவர்த்தியின் புதிய திட்டங்களைப்

பற்றி அவர் எனக்குச் சொன்னார். அவற்றைப்பற்றி குணதோஷம் கூற ஆரம்பித்தேன். ஆனால், உடனே எனது விதிகளும், என்னுடைய நன்மையாளரின் வார்த்தைகளும், எனக்கு ஞாபகத்திற்கு வந்தன. அதாவது, அரசாங்கத்தின் உதவிக்கு வரவேண்டும் என்று அழைக்கும்போது, ஒரு பிரீ மேஸன் ஊக்கத்தோடு வேலை செய்ய வேண்டும். ஒரு உண்மையான பிரீ மேஸனின் கடமை அதுதான் என்று எனது நன்மையாளர் சொல்லி யிருந்தார். எனது நாக்குதான் எனக்கு விரோதியாயிருக்கிறது. சகோதரர்கள் ஜி.வி.யும், ஓவும் என்னைப் பார்க்க வந்தார்கள். புதிய சகோதரர் ஒருவரை சங்கத்தில் சேர்ப்பதற்கான ஆரம்ப வேலைகளைப்பற்றி நாங்கள் பேசினோம். இந்த சடங்கில் ரெட்டராக இருக்கும் கடமையை என்மீது அவர்கள் சுமத்தினார்கள். நான் அதற்குத் தகுதியற்றவன் என்றும், பலவீனமானவன் என்றும் எனக்குத் தோன்றுகிறது. எங்களுடைய பேச்சு, ஏழு தூண்கள், கோயிலின் ஏழு படிகள், ஏழு விஞ்ஞானங்கள், ஏழு தர்மங்கள், ஏழு அதர்மங்கள், கடவுள் நமக்குக் கொடுத்த ஏழு பரிசுகள், ஆகியவைகளைப் பற்றிய வியாக்யானங்களில் திரும்பியது. சகோதரர் ஓ மிகுந்த சாமர்த்தியமாகப் பேசினார். புதிய சகோதரரை சங்கத்தில் சேர்க்கும் வேலை மாலையில் நடந்தது. கட்டிடங்களுக்குச் செய்யப்பட்ட புதிய அலங்காரங்கள், அந்தக் காட்சியின் கம்பீரத்தை அதிகரித்தன. போரிஸ் ட்ரூபெட்ஸ்கோய் என்பவர்தான் புதிதாய் சேர்க்கப் பட்டவர். நான்தான் அவரை பிரேரித்தேன். நான்தான் ரெட்டராய் இருந்தேன். அந்த இருட்டறையில், அவருடன் நான் தனியாய் இருந்தபோது, ஒரு விசித்திரமான உணர்ச்சி என்னை ஆட்டியது. அவர்மீது நான் துவேஷம் கொண்டிருப்பதைக் கண்டுபிடித்தேன். அதை அகற்ற நான் செய்த முயற்சி வீணாயிற்று. அவரை தீமையிலிருந்து காப்பாற்றி, உண்மைப் பாதையில் நடக்கும்படி செய்வதற்காக; அதனால்தான் நான் உண்மையில் விரும்பினேன். ஆனால், அவரைப்பற்றிய எனது கெட்ட நினைப்புகள் என்னைவிட்டு நீங்கவில்லை. சங்கத்தினுடைய அகங்கத்தினர் களுடன் அன்னியோன்னியமாய் இருந்து, அவர்கள் தயவை சம்பாதிக்கவேண்டும் என்ற நோக்கத்தோடுதான் அவர் சங்கத்தில் வந்து சேர்ந்தார் என்று எனக்குத் தோன்றியது. 'என்' என்பவரும், 'எஸ்' என்பவரும் சங்கத்தின் அங்கத்தினர்களா என்று அவர் என்னை பல தடவைகள் கேட்டார். இந்தக் கேள்விக்கு நான் பதில் சொல்லக்கூடாது. இதைத் தவிர, நமது பரிசுத்த சங்கத்தின்மீது அவரால் மரியாதைகொள்ள முடியாது என்று, நான் கவனித்தவரையில் தோன்றியது. அவர் எப்பொழுதும்

எதைப்பற்றியோ சிந்தித்துக்கொண்டிருப்பார். மனிதனின் இகலோக வாழ்க்கையில் அவர் திருப்தியடைகிறவரே ஒழிய, ஆத்மீக அபிவிருத்தியில் அவர் ஆசைகொண்டவர் அல்ல. அவரை சந்தேகிப்பதற்கு எனக்குக் காரணம் எதுவுமில்லை. என்றாலும், அவர் உண்மை சிரத்தை இல்லாதவர் என்று எனக்குத் தோன்றினார். அந்த இருட்டுக் கோயிலில் அவருடன் நான் தனியாக நின்ற காலத்தில், என்னுடைய வார்த்தைகளைக் கேட்டு, ஒரு இகழ்ச்சியான புன்னகை காட்டுவதாக எனக்குத் தோன்றி வந்தது. அவருடைய மார்பின் மீது நான் வைத்துக்கொண்டிருந்த அந்த உடைவாளைக்கொண்டு, அவரைக் குத்திவிட உண்மையில் நான் விரும்பினேன். நான் வாய்ச்சாலமாய்ப் பேச முடியவில்லை. என்னுடைய சந்தேகங்களை வெளிப்படையாக சகோதரர் களிடமோ, அல்லது கிராண்ட் மாஸ்டரிடமோ சொல்லவும் முடியவில்லை. அண்ட பகிரண்ட, பிரம்மாண்ட நாயகனே, திக்குத் திசை தெரியாத பொய் வழிகளில் இருந்து விடுபட்டு, உண்மையான பாதையைக் கண்டு பிடிப்பதற்கு எனக்கு உதவி செய்வீராக.''

இதற்குப் பின்னால், அந்த நாள் குறிப்பில் மூன்று பக்கங்கள் எழுதாமல் விடப்பட்டிருந்தன. அதன் பின்னால் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:-

''சகோதரர் 'வி' என்பவருடன் தனியாக ஒரு நீண்ட, உபயோகப்படக்கூடிய உரையாடல் எனக்குக் கிடைத்தது. சகோதரர் 'டி' என்பவரை நான் விடாப்பிடியாகப் பிடித்துக்கொள்ள வேண்டுமென்று அவர் எனக்கு அறிவுறுத்தினார். நான் தகுதியற்றவனாய் இருந்தாலும், பல ரகசியங்கள் எனக்குக் கூறப்பட்டன. அடோனாய் என்பதுதான் உலகைப் படைத்தவரின் பெயர். எலோஹிம் என்பது தான் எல்லாவற்றையும் ஆளுபவரின் பெயர். மூன்றாவது பெயரை வாயினால் உச்சரிக்கக்கூடாது. 'எல்லாம்' என்பதுதான் அந்தப் பெயரின் அர்த்தம். சகோதரர் 'வி' என்பவருடன் நான் அளவளாவினதால், தர்மத்தின் பாதையைக் கண்டுபிடிப்பதற்கு, எனக்கு ஆதரவும் பலமும் புதிய உற்சாகமும் தோன்றின. அவர் முன்னிலையில் சந்தேகம் என்பதற்கு இடமே இல்லை யாது. இகலோகத்து விஞ்ஞானம் நமக்குக் கற்பிக்கும் எளிய போதனைகளுக்கும், எல்லாவற்றையும் உள்ளடக்கிய நமது பரிசுத்த போதனைகளுக்கும் உள்ள வித்தியாசம் எனக்குத் தெளிவாயிற்று. ஒவ்வொன்றையும் பூரணமாக அறிவதற்காக இகலோக விஞ்ஞானங்கள் ஒவ்வொன்றையும் கூறு செய்து பார்க்கின்றன. அந்தப் பரிசோதனைக்காக ஒவ்வொன்றையும் கொல்லுகின்றன. நமது சங்கத்தின் பரிசுத்த விஞ்ஞானத்தில் எல்லாம் ஒன்றாய்

நிற்கிறது. ஒவ்வொன்றையும் பூரணமாகவே பார்க்கிறோம். முச்சக்தி என்று சொல்லப்படும் ஸ்தூலங்களின் மூன்று மூலப்பொருள்களாக கந்தகம், பாதரஸம், உப்பு ஆகியவை விளங்குகின்றன. கந்தகம் என்பது எண்ணெய் பதார்த்தமாகவும், நெருப்பு சுபாவம் கொண்டதாகவும் இருக்கிறது. உப்போடு அது சேரும் போது, அதனுடைய நெருப்பு சுபாவத்தினால் அந்த உப்பிற்கு ஒரு ஆசையை உண்டுபண்ணுகிறது. அந்த ஆசையினால் அது பாதரஸத்தை இழுத்து கைப்பற்றி வைத்துக்கொள்ளுகிறது. இவைகளின் சேர்க்கைகளினால் ஸ்தூலப் பொருள்கள் உண்டாகின்றன. பாதரஸம் ஒரு திரவபதார்த்தம்; ஆவியாக மாறக்கூடியது. அது தான் ஆத்மார்த்தீகத்தின் சாரமாகும். கிறிஸ்து, பரிசுத்தப் பிதா, அவர்...''



டிசம்பர், 3-ந் தேதி

''நேரங் கழித்து விழித்தேன். வேத புத்தகங்களைப் படித்தேன். ஆனால், உணர்ச்சியற்றவனாய் இருக்கிறேன். அதன் பின்னால், பெரிய ஹாலில் மேலும் கீழும் நடந்தேன். தியானம் செய்ய விரும்பினேன். அதற்குப் பதிலாக என்னுடைய மனோராஜ்யம், நான்கு வருஷங்களுக்கு முன்னால் நடந்த ஒரு சம்பவத்தை மனதில் தோற்றுவித்தது. டூயல் சண்டைக்குப் பின்னால், மாஸ்கோவில் டோலாகாவ் என்னை சந்தித்தபோது, ஒன்று சொன்னார். என்னுடைய மனைவியுடன் நான் இல்லாமல் இருந்தபோதிலும், என்னுடைய மனம் பூரண அமைதியைக் கொண்டிருக்கிறதென்று தாம் நம்புவதாகச் சொன்னார். அச்சமயம் அவருக்கு நான் பதில் ஒன்றும் சொல்லவில்லை. அந்த சந்திப்பின் ஒவ்வொரு விவரமும் என் மனதில் இப்பொழுது தோன்றியபோது, என் மனதிலேயே அவருக்கு மிகுந்த தீய எண்ணமுள்ள, கசப்பான பதில்களைச் சொல்லிக்கொண்டேன். நான் கோபத்தினால் பொங்கிக் கொண்டிருப்பதை அறிந்தவுடன் நான் உணர்வு பெற்று அந்த எண்ணத்தை விரட்டியடித்தேன். ஆனால், நான் போதுமானபடி பச்சாதாபப்படவில்லை. அதற்குப் பின்னால் போரிஸ் ட்ரூபெட்ஸ்கோய் வந்தார். தம்முடைய வெவ்வேறு வகையான பிரதாபங்களை வருணிக்க ஆரம்பித்தார். ஆரம்பத்திலிருந்தே அவரிடம் எனக்கு எரிச்சல் ஏற்பட்டது. அவருக்கு மனதிற்குப் பிடிக்காத சில விஷயங்களைச் சொன்னேன். அவர் பதில் சொன்னார். நான் கோபம்கொண்டு, இனிமையற்ற பல விஷயங்களை அவருக்குச் சொல்லியதோடு, முரட்டுத்தனமாகவும் நடந்துகொண்டேன். அவர் மௌனமானார். காரியம் மிகவும் மிஞ்சிப்போன பின்பே, நான் உணர்வு பெற்றேன். அட கடவுளே,

அவருடன் நான் எப்பொழுதும் சேர்ந்திருக்க முடியாது. இதற்குக் காரணம், என்னுடைய 'அகங்காரம்'தான். அவருக்கு மேலானவராக என்னை நான் வைத்துக்கொண்டேன். ஆகவே, அவரைவிட மோசமானேன். ஏனென்றால், என்னுடைய முரட்டுத்தனத்திற்கு அவர் பணிந்து போனார். ஆனால், அவர் மீது நான் இகழ்ச்சியை வளர்த்து வந்தேன். ஓ கடவுளே, அவருக்கு முன்பாக என்னுடைய சொந்த இழிகுணங்களை நான் அறியும்படி செய்து, அவரிடம் நல்லவிதமாக நடந்து, அவரும் அனுகூலம் அடையும்படி செய்வேனாக. டின்னருக்குப் பின்னால் நான் தூங்கினேன். நான் தூக்க மயக்கத்தில் இருந்தபோது, ஒரு தெளிவான குரல் எனது இடது காதில், 'உன்னுடைய நாள்' என்று சொல்லுவதைக் கேட்டேன்.



''ஒரு இருட்டில் நான் நடந்துகொண்டிருக்கும்போது, திடீரென்று நாய்கள் வந்து என்னைச் சூழ்ந்துகொண்டதாக, நான் கனவு கண்டேன். ஆனால், நான் பயப்படாமல் நடந்து கொண்டிருந்தேன். ஒரு சிறிய நாய் திடீரென்று எனது இடது தொடையில் அதன் பற்களால் கடித்து, என்னைப் போகவிடாமல் தடுத்தது. என்னுடைய கைகளால் அதன் கழுத்தை நெரிக்க ஆரம்பித்தேன். அதை நான் பற்றி தூர எறியும்போது, ஒரு பெரிய நாய் என்னைக் கடிக்க ஆரம்பித்தது. அதை நான் மேலே தூக்கினேன். அதை மேலே தூக்கத் தூக்க அது இன்னும் பெரிதாகவும், கனமாகவும் வளர்ந்தது. திடீரென்று சகோதரர் 'ஏ' அங்கே வந்து எனது கையைப் பற்றி, ஒரு கட்டிடத்திற்கு அழைத்துக்கொண்டு போனார். அந்தக் கட்டித்திற்குள் நுழைவதற்கு முன்பாக, ஒரு ஒடுங்கிய பலகை மீது போக வேண்டும். அதன் மீது நான் காலெடுத்து வைத்தேன். அது வளைந்து முறிந்து, நான் கீழே விழுந்தேன். ஒரு வேலியைப் பற்றி ஏற முயற்சித்தேன். அதை பற்றுவதற்குக் கஷ்டமாய் இருந்தது. மிகுந்த முயற்சியின் பேரில் நான் மேலே எழுந்தேன். என்னுடைய கால்கள் ஒரு பக்கமாகவும், என்னுடைய உடம்பு மற்றொரு பக்கமாகவும் இருந்தன. நான் திரும்பிப் பார்த்தபோது சகோதரர் 'ஏ' வேலியின் மீது நின்றுகொண்டிருந்தார். ஒரு அகன்ற சோலையையும், ஒரு தோட்டத்தையும், அந்தத் தோட்டத்தின் மத்தியில் உள்ள ஒரு பெரிய அழகான கட்டிடத்தையும் எனக்குச் சுட்டிக்காட்டினார். ஓ, கடவுளே, அகிலாண்ட பிரம்மாண்ட நாயகனே, என்னிடமிருந்து ஆசைகள் என்ற அந்த நாய்களை விரட்டி அடிப்பதற்கு, எனக்கு உதவி செய்வீராக. முக்கியமாக, மற்ற எல்லா நாய்களையும் பலத்தையும் சேர்ந்து கொண்டுள்ள அந்தக் கடைசி நாயிடமிருந்து

என்னைக் காப்பீராக. எனக்குக் கனவில் தோன்றிய அந்த தர்மத்தின் கோயிலுக்குள் நான் நுழைவதற்கு எனக்கு உதவி செய்வீராக.''

டிசம்பர் 7-ந் தேதி.

''என்னுடைய வீட்டில் ஜோஸப் அலெக்ஜீவிச் வந்திருப்பது போல நான் கனவு கண்டேன். அதனால் நான் மிகுந்த சந்தோஷம் அடைந்து, அவரை உபசரிக்க விரும்பினேன். அங்கிருந்த மற்றவர்களுடன் நான் இடைவிடாமல் பேசிக்கொண்டிருந்தேன். இம்மாதிரி செய்வது அவருக்குப் பிடித்தமாய் இருக்காது என்று திடீரென்று நினைவு கூர்ந்தேன். அவரிடம் நெருங்கிச் சென்று அவரை ஆலிங்கனம் செய்ய விரும்பினேன். ஆனால், அவரிடம் நான் நெருங்கியதும், அவர் முகம் இளமையாக மாறியது. நமது சங்கத்தின் உபதேசங்களைப்பற்றி அமைதியாக எனக்கு எதையோ சொல்லிக்கொண்டிருந்தார். மிகவும் மெதுவாகச் சொல்லியபடியால், என்னால் கேட்க முடியவில்லை. அதன் பின்னால், நாங்கள் எல்லோரும் அறையைவிட்டு வெளியே போனதும் விசித்திரமான ஏதோ ஒன்று நடந்ததுபோலத் தோன்றியது. தரையில் நாங்கள் உட்கார்ந்து கொண்டோ, படுத்துக்கொண்டோ இருந்தோம். அவர் எனக்கு எதையோ சொல்லிக்கொண்டிருந்தார். என்னுடைய உணர்ச்சியை அவருக்குக் காட்டுவதற்கு நான் விரும்பி, அவர் சொல்லிக்கொண்டிருந்ததை நான் கவனிக்காமல் இருந்தேன். என்னுடைய உள் ஒளியையும், கடவுளின் கிருபையினால் எனக்குக் கிடைத்த பரிசுத்தத்தையும் என் மனதினுள் நான் சித்தரித்துப் பார்க்க ஆரம்பித்தேன். என் கண்களில் கண்ணீர் நிறைந்தது. இதை அவர் கவனித்ததற்காக நான் மகிழ்ச்சி அடைந்தேன். ஆனால், அவர் என்னை எரிச்சலோடு பார்த்து, தாம் பேசுவதை நிறுத்தி, குதித்து எழுந்தார். நான் வெட்கம் அடைந்தேன். அவர் பேசி வந்தவைகள் எனக்காக இல்லை அல்லவா என்று நான் கேட்டேன். அவர் பதில் சொல்லவில்லை. அன்போடு என்னை நோக்கினார். திடீரென்று நாங்கள் இருவரும் எனது படுக்கை அறையிலுள்ள கட்டிலில் இருக்கக் கண்டோம். அவர் கட்டிலின் ஓரத்தில் படுத்திருந்தார். அவருக்கு உபசாரம் செய்வதற்காக நானும் படுத்தேன். அவர் என்னைப் பார்த்து, 'உம்முடைய பிரதான ஆசை எது என்பதை மறைக்காமல் என்னிடம் சொல்லும். உமக்கு அது தெரியுமா? முன்பே உமக்கு அது தெரியும் என்று நான் நினைக்கிறேன்' என்று கேட்டார். இந்தக் கேள்வியைக் கேட்டு நான் வெட்கம் அடைந்தேன். சோம்பேறித்தனம் என்பதுதான் என்னுடைய பிரதான ஆசை என்று பதில் சொன்னேன். அவர் நம்பிக்கை இல்லாமல் தலையை ஆட்டினார். நான் இன்னும்

அதிகமாக வெட்கம் அடைந்தேன். அவர் கூறிய புத்திமதிப்படி, என்னுடைய மனைவியோடு நான் வசித்து வந்தாலும், நான் கணவரைப்போல அவளுடன் வசித்து வரவில்லை என்று சொன்னேன். மனைவியின் இல்லற சுகத்தை நான் பறித்து நிற்கக் கூடாது என்றும், இல்லற சுகத்தைக் கொடுப்பது எனது கடமை என்பதை நான் அறிய வேண்டும் என்றும் அவர் பதில் சொன்னார். அப்படிச் செய்வது எனக்கு வெட்கக்கேடாய் இருக்கும் என்று நான் பதில் சொன்னேன். திடீரென்று எல்லாம் மறைந்தது. நான் விழித்த போது சுவிசேஷத்தின் வாசகம் ஒன்று என் மனதில் இருப்பதைக் கண்டேன். அதாவது: 'வாழ்க்கை என்பது ஆண்களின் ஒளியாகும். அந்த ஒளி இருட்டில் பிரகாசிக்கிறது. அந்த இருட்டு அதை விழுங்க முடியாது.' ஜோஸப் அலெக்ஜீவிச்சின் முகம் இளமையாகவும் ஒளி பொருந்தியதாயும் காணப்பட்டது. அதே தினத்தில் இல்லற கடமைகளைப்பற்றி எனது நன்மையாளர் எழுதிய கடிதம் எனக்குக் கிடைத்தது.'

டிசம்பர், 9-ந் தேதி.

'நான் ஒரு கனவு கண்டேன். அதிலிருந்து நான் விழித்தபோது, என்னுடைய இருதயம் படபடத்துக்கொண்டு இருந்தது. மாஸ்கோவில் என்னுடைய வீட்டில், பெரிய உட்காரும் அறையில் நான் இருந்தபோது, வரவேற்பு அறையிலிருந்து ஜோஸப் அலெக்ஜீவிச் என்னுடைய அறைக்கு வந்ததாக நான் கண்டேன். புனருத் தாரணத்திற்கான மாறுதல்கள் அவரிடம் தோன்ற ஆரம்பித்துவிட்டன என்று எனக்குத் தோன்றியது. அவரைச் சந்திக்க வேகமாய் முன்னே போனேன். அவரை ஆலிங்கனம் செய்து, அவர் கைகளை முத்தமிட்டேன். 'என்னுடைய முகம் மாறி இருப்பதை நீர் கவனித்தீரா?' என்று அவர் கேட்டார். நான் அவரை இன்னமும் பிடித்துக் கொண்டே பார்த்தபோது, அவருடைய முகம் இளமையாய் இருப்பதைக் கண்டேன். ஆனால் அவருடைய தலையில் ஒரு ரோமம்கூட இல்லை. அவருடைய சாயல்களெல்லாம் முற்றிலும் மாறி இருந்தன. நான் அவரைப் பார்த்து, 'நான் உம்மை எங்கே பார்த்தாலும் அறிந்துகொள்வேன்' என்று சொன்னேன். ஆனால், என் மனதிற்குள் 'நான் உண்மையைச் சொல்லுகிறேனா?' என்று நினைத்தேன். திடீரென்று இறந்தவர்போல அவர் கீழே படுத்தார். கொஞ்சம் கொஞ்சமாக மீண்டும் அவர் உணர்வு பெற்று, என்னுடைய படிப்பு அறைக்கு என்னுடன் வந்தார். அவருடைய கையில் ஒரு பெரிய டிராயிங் புத்தகம் வைத்திருந்தார். அந்தப் படத்தை நான் எழுதினேன் என்று அவரிடம் நான் சொன்னபோது அவர் தலைகுனிந்து மரியாதை

செய்தார். அந்தப் புத்தகத்தை நான் திறந்தேன். அதன் எல்லா பக்கங்களிலும் சிலாக்கியமான சித்திரங்கள் இருந்தன. ஆத்மாவின் காதல் லீலைகளையும் அதன் காதல் ஜோடியையுமே இந்த சித்திரங்கள் காட்டுகின்றன என்று அந்தக் கனவில் நான் அறிவேன். ஒரு அழகான கன்னி, உடம்பெல்லாம் தெரியும்படி ஆடைகள் அணிந்து, பளிங்குபோன்ற உடலைக்கொண்டு, மேகங்களுக்குப் பறந்து போவதைப்போல ஒரு சித்திரம் காணப்பட்டது. கீதங்களுக்கெல்லாம் கீதமாய் விளங்கும் அந்தக் கீதத்தின் உருவகமாகவே இந்தக் கன்னி விளங்குகிறாளே ஒழிய, வேறொன்றும் இல்லை என்று நான் அந்தக் கனவில் அறிந்ததுபோலத் தோன்றியது. அந்தப் படங்களை எல்லாம் பார்த்தபோது, நான் தவறு செய்வதாக உணர்ந்தேன். ஆனால், அந்தப் படங்களைப் பார்க்காமல் என்னால் இருக்க முடியவில்லை. கடவுளே, என்னை ரட்சிப்பீராக. எனது கடவுளே, என்னைக் கைவிட வேண்டும் என்பதுதான் உமது விருப்பமாய் இருந்தால், உமது விருப்பம் நடப்பதாக. ஆனால், இதற்கெல்லாம் நானேதான் காரணம் என்றால், நான் என்ன செய்ய வேண்டும் என்பதை எனக்கு போதிப்பீராக. என்னை நீர் கைவிட்டீரானால், நான் இழிவான காரியங்களில் இறங்கி, என்னையே நான் நாசமாக்கிவிடுவேன்.'



கிராமத்தில் வசித்துவந்த கடந்த இரண்டு வருஷ காலங்களில் ராஸ்டோவின் பொருளாதார நிலை அபிவிருத்தி அடையவில்லை.

நிக்கலஸ் ராஸ்டோவ் தமது தீர்மானப்படி பணம் அனுப்பி வந்தார். ஒரு பெயர் தெரியாத பட்டாளத்தில் அடக்கத்தோடு சேவைசெய்து, மிகுந்த சிக்கனமாக செலவு செய்து வந்தார். ஆனால், ஆட்ராட்னோ என்ற இடத்தில் பழையபடியே இருந்தபடியால், ஒவ்வொரு வருஷமும் கடன்கள் தவிர்க்க முடியாதபடி கூடிக்கொண்டே வந்தன. வருமானம் வரக்கூடிய ஒரே வழி என்னவென்றால், ஏதாவது ஒரு சர்க்கார் உத்யோகத்தில் அமர வேண்டியது தான் என்று, அந்த வயோதிக கோமகன் நினைத்தார். ஆகவே, அம்மாதிரி ஒரு உத்யோகத்தைத் தேடுவதற்காகவும், அத்தோடு தமது வீட்டிலுள்ள பெண்கள் கடைசி தடவையாக குஷியாக இருப்பதற்காகவும் அவர் பீட்டர்ஸ்பர்க்கிற்கு வந்தார்.

அந்தக் குடும்பம் பீட்டர்ஸ்பர்க்கிற்கு வந்து சேர்ந்த பின்பு, வெரா தம்மை திருமணம் செய்து கொள்ளும்படி பெர்க் கேட்டார். அதை வெரா ஒப்புக்கொண்டாள்.

மாஸ்கோவில் ராஸ்டோவ்களின் குடும்பத்தார் மிகச் சிறந்த உயர் வட்டாரத்தைச் சேர்ந்தவர்களாய் இருந்தார்கள். ஆனால், பீட்டர்ஸ்பர்க்கில் அவர்களுக்கு அறிமுகமானவர்கள், பலதரப் பட்டவர்களாகவும், நிச்சயமில்லாத ஒன்றாகவுமிருந்தார்கள். பீட்டர்ஸ்பர்க்கில் அவர்களை வெளியூர்க்காரர்கள் என்று மதித்தார்கள். மாஸ்கோவில் எந்த வட்டாரத்தைச் சேர்ந்தவர்கள் என்றுகூட விசாரிக்காமல் யாருக்கு அவர்கள் விருந்து அளித்து உபசரித்தார்களோ, அதே பேர்வழிகள் இங்கே, பீட்டர்ஸ்பர்க்கில், இவர்களை ஏதோ ஒரு மாதிரி நோக்கினார்கள்.

மாஸ்கோவிலிருந்து மாதிரியே பீட்டர்ஸ்பர்க்கிலும் அதே விதமான உபசார வழியில் ராஸ்டோவ் குடும்பத்தார் வசித்துவந்தார்கள். அவர்களுடைய இராச் சாப்பாடு கூட்டங்களில் பற்பல வகையான பேர் வழிகளும் கலந்து கொள்வதுண்டு. ஆட்ராட்னோ என்ற இடத்தைச் சுற்றியுள்ள கிராமாந்தரவாசிகளும், தரித்திரமாய் விட்ட பழைய மிராசுதார்களும், அவர்களுடைய குமாரிகளும், சக்கரவர்த்தினியின் கௌரவ தோழியான பெரோன்ஸ்கயா என்பவளும், பீட்டர்ஸ்பர்க்கில் வேலை பார்த்துவரும் அந்த ஜில்லாவின் போஸ்ட்மாஸ்டரின் குமாரரும், அங்கு அவருடைய விருந்து கச்சேரிகளுக்கு வருவதுண்டு. ராஸ்டோவ்களின் வீட்டிற்கு பீட்டர்ஸ்பர்க்கில் அடிக்கடி வரக்கூடியவர்களில் போரிஸும் ஒருவர். பீயரும் அவர்களில் ஒருவர். பீயரை ஒரு நாள் அவர் தெருவில் சந்தித்து தமது வீட்டிற்கு இழுத்துவந்தார். நாட்கள் கணக்காக ராஸ்டோவ்களின் வீட்டில் பெர்க் இருந்து வந்தார். மூத்த குமாரியான கோமகள் வெராவிடம் அவர் மிகுந்த பிரியம் காட்டி, திருமணம் செய்யக் கேட்டுக்கொள்ளும்போது, ஒரு வாலிபன் எம்மாதிரி நடந்து கொள்வாரோ, அதே மாதிரி நடந்து வந்தார்.

ஆஸ்டர்லிட்ஜில் தமது வலது கையில் ஏற்பட்ட காயத்தை ஒவ்வொருவரிடமும் அவர் சொல்லி வந்தது வீண் போகவில்லை. ஒரு பிரயோசனமும் இல்லாமல் தமது உடைவாளை இடது கையில் வைத்திருப்பார். விடாப்பிடியாகவும், மிகுந்த முக்கியத்து வத்துடனும், அவர் அந்த சம்பவத்தை சொல்லிக்கொண்டே யிருந்தபடியால், அவருடைய அந்தச் செய்கை மிகுந்த உபயோகமானதென்றும், மதிப்பிடக்கூடியதென்றும், ஒவ்வொரு

வரும் நம்ப ஆரம்பித்தார்கள். அதற்காக அவருக்கு இரண்டு பதக்கங்கள் ஆஸ்டர்லிட்ஜில் கிடைத்தன.

பின்லாந்து யுத்தத்திலும் தமக்குப் பதக்கங்கள் கிடைக்கும்படி அவர் செய்து கொண்டார். சேனாதிபதியின் பக்கத்தில் நின்ற மெய்க்காப்பாளர் மீது ஒரு குண்டு வந்து விழுந்து, அந்த மெய்காப்பாளரைக் கொன்றுவிட்டது. அந்தக் குண்டில் சிதறிக் கிடந்த சில பாகங்களை அவர் எடுத்து வைத்துக்கொண்டு, தம்முடைய தளபதியிடம் சென்று காட்டினார். ஆஸ்டர்லிட்ஜில் அவர் செய்தபடியே இந்தக் காரியத்தை வெகு நீளமாகவும், விடாப்பிடியாகவும் அவர் சொல்லியபடியால், அவர் செய்த காரியம் அவசியந்தான் என்று ஒவ்வொருவரும் நம்பினார்கள். ஆகவே, இந்த பின்னிஷ் யுத்தத்திலும் அவருக்கு இரண்டு பதக்கங்கள் கிடைத்தன. 1809-ம் வருஷத்தில் காப்பாளர் படையின் கேப்டனானார். இப்பொழுது தமக்கு கிடைத்த பதக்கங்களை அணிந்து கொண்டு, ஒரு நல்ல வருமானமுள்ள பதவியில் பீட்டர்ஸ்பர்க்கில் இருந்தார்.

பெர்க்கின் திறமைகளைக் கேட்டபோது, சில சந்தேகப் பிரகிருதிகள் கேலியாகப் புன்சிரிப்பு கொண்டாலும், பெர்க் ஒரு தைரியமான, கஷ்டப்பட்டு வேலை செய்யும் அதிகாரி; தமக்கு மேலுள்ள அதிகாரிகளிடம் அவர் எப்போதும் நல்லவிதமான முறைகளில் நடந்து கொள்ளுவார். அவர் ஒரு ஒழுக்கமிக்க வாலிபர்; இன்னும் அவர் பதவியில் உயருவதற்கு வழியிருப்பதோடு, உயர் வட்டாரத்தில் அவருக்கு ஒரு நிச்சயமான இடமும் உண்டு. இந்த விஷயங்களை யாரும் மறுக்க முடியாது.

நான்கு வருஷங்களுக்கு முன்னால் ஒரு மாஸ்கோ தியேட்டரில் ஒரு ஜெர்மன் தோழரை பெர்க் சந்தித்தார். அங்கே வெரா ராஸ்டோவாவை அவருக்குக்காட்டி, ஜெர்மன் மொழியில், அந்தப் பெண்தான் தம் மனைவியாக வரப்போகிறாள் என்று கூறினார். அந்த வினாடியிலிருந்து அவளை திருமணம் செய்து கொள்ளுவது என்று அவர் தீர்மானித்துக் கொண்டார். இப்பொழுது பீட்டர்ஸ்பர்க்கில் ராஸ்டோவ்களின் நிலைமையையும், த்ம்முடைய நிலைமை யையும் அவர் ஆராய்ந்த பின்பு, திருமணம் செய்து கொள்ளுவதற்கு முன்மொழிய வேண்டிய காலம் வந்துவிட்டது என்று தீர்மானித்தார்.

திருமணம் செய்வதற்கு பெர்க் விரும்பியபோது, முதலில் அந்தப் பிரேரணையை ஒரு தயக்கத்தோடுதான் கேட்டார்கள். அம் மாதிரி செய்தது பெர்க்கிற்கு பெமையானதாய் இல்லை. ஏதோ ஒரு பெயர் தெரியாத, லிவோனியன் கனவானின் குமாரர் ஒரு கோமகள்

ராஸ்டோவாவை திருமணம் செய்ய விரும்பியபோது அது ஒரு விசித்திரமாக முதலில் தோன்றியது. பெர்க்கின் முக்கியமான குண விசேஷம், சிறு பிள்ளைத்தனமான நல்ல சுபாவம் கொண்ட தற்பெருமையேயாகும். இது ஒரு நல்ல காரியம் என்றும், மிகுந்த சிலாக்கியமானது என்றும், அவர் உறுதியாக நம்பினார். ஆகவே, ராஸ்டோவ்களும் தங்களை அறியாமலேயே அது ஒரு நல்ல காரியமாய்த்தான் இருக்கவேண்டும் என்று நினைத்தார்கள்.

தவிர, ராஸ்டோவ் குடும்பத்தாரின் நிலைமையும் அச்சமயம் மிகுந்த குழப்பமாய் இருந்தது. அந்த நிலைமையை திருமணம் செய்ய விரும்பியவர் அறியாமல் இருக்க முடியாது. எல்லாவற்றுக்கும் மேலாக வெராவிற்கு இருபத்து நான்கு வயதாயிற்று. அவளை எல்லா இடங்களுக்கும் அழைத்துப்போன போதிலும், அவள் நிச்சயமாக நல்ல அழகும், புத்திசாலித்தனமும் கொண்டவளாய் இருந்த போதிலும், அவளை ஒருவர்கூட திருமணம் செய்து கொள்வதற்கு விரும்பவில்லை. ஆகவே, பெர்க்கின் விருப்பத்திற்கு ராஸ்டோவ் குடும்பத்தார்கள் சம்மதித்தார்கள்.

பெர்க் ஒரு நாள் தமது தோழரை, ‘நண்பரே’ என்ற அழைத்துப் பேசினார். ஏனெனில், ஒவ்வொருவருக்கும் நண்பர்கள் உண்டு என்பது அவருக்கு தெரியும். அவர் சொன்னார்; ‘எல்லா விஷயத்தையும் நான் யோசித்திருக்கிறேன். அப்படி நான் யோசிக்காமல் இருந்திருந்தால், நான் கல்யாணத்திற்கு விரும்பியிருக்கவே மாட்டேன். இப்போது என்னுடைய அப்பாவுக்கு அம்மாவுக்கும் வாழ்க்கைக்கு வேண்டிய பணத்திற்கு, பால்டிக் மாகாணங்களிலிருந்து கிடைக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டேன். நான் என்னுடைய சம்பளத்தினாலும், அவளுடைய சொத்துக்களினாலும், என்னுடைய சிறந்த நிர்வாகத்தினாலும் மிகுந்த சிறப்பாக பீட்டர்ஸ் பர்க்கில் நாங்கள் வாழ முடியும். நான் பணத்திற்காக அவளை திருமணம் செய்யவில்லை. அம்மாதிரி செய்வது அகௌரவம் என்று நான் நினைப்பவன். ஆனால், ஒரு மனைவி தன்னுடைய பங்கை கொண்டுவர வேண்டும். ஒரு கணவனும் தன்னுடைய பங்கை கொண்டுவர வேண்டும். ராணுவ சேவையில் எனக்கு ஒரு முக்கியமான, மதிப்பான இடமுண்டு. அவளுக்கு நல்ல தொடர்புகளும் சொத்துக்களும் உண்டு. இந்தக் காலத்தில் இவை இரண்டும் முக்கியமானவைகள்தான் அல்லவா? எல்லாவற்றுக்கும் மேலாக, அவள் ஒரு அழகான பெண்; மதிக்கக்கூடிய பெண். அவள் என்னைக் காதலிக்கிறாள்...’

பெர்க் முகம் சிவந்து புன்னகை கொண்டார்.

'நான் அவளை காதலிக்கிறேன். ஏனெனில், அவளுடைய குணம் புத்திசாலித்தனமாகவும் நல்லதாகவும் இருக்கிறது. இப்போது அவளுடைய சகோதரி இருக்கிறாளே, அவர்கள் இருவரும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தபோதிலும், அவள் முற்றிலும் மாறானவள். கொஞ்சம்கூட பிடித்தமல்லாத குணங்களைக் கொண்டவள். இவள் மாதிரி புத்திசாலித்தனமில்லாதவள். அவள்... உமக்குத் தெரியுமல்லவா?... விரும்பத்தகாதவள்... ஆனால், என்னுடைய காதலி இருக்கிறாளே... நல்லது... நீர் எங்களோடு தேநீர் அருந்த வருவீர் அல்லவா?' என்று கேட்டார். டின்னருக்கு அழைப்பதென்று முதலில் பேச இருந்தார். உடனே அதை மாற்றி தேநீருக்கு அழைத்தார். திடீரென்று தமது வாயிலிருந்து சிகரெட் புகையை ஊதி, அந்த புகையின் மூலம் தமது சந்தோஷத்தின் கனவைக் காட்டினார்.

பெர்க் விருப்பதைக் கண்டு முதலில் அந்த குடும்பத்தாருக்கு ஏற்பட்ட தயக்கம் மாறிய பின்பு, இம்மாதிரி ஆசைகள் ஏற்படும்போது வீட்டிலுள்ளவர்களுக்குத் தோன்றக்கூடிய விடுமுறை மகிழ்ச்சி அங்கே காணப்பட்டது. ஆனால், அந்த மகிழ்ச்சியெல்லாம் சிரத்தையில்லாதவையாகவும் வெளிப்பகட்டா கவும் காணப்பட்டன. இந்த திருமணத்தைப்பற்றி அந்தக் குடும்பத்தில் ஏற்பட்ட உணர்ச்சியில் சரளமின்மையும் தர்மசங்கடமும் காணப்பட்டன. வெரா மீது தங்களுக்கு அதிகமாகப் பிரியமில்லாமல் இருந்ததற்காகவும், அவளை தங்கள் கையைவிட்டு தள்ளிவிடத் தயாராய் இருந்ததற்காகவும், அவர்கள் வெட்கம் அடைந்ததுபோல காணப்பட்டார்கள். வயோதிகக் கோமகன் இதைப்பற்றி அதிகமாக வருத்தம் அடைந்தார். அவருடைய தர்மசங்கடமான நிலைமைக்கு என்ன காரணமென்பதை அவரால் சொல்ல முடியாவிட்டாலும், அவருடைய சொந்த காரியங்களின் நிலைமையானது அம்மாதிரி பலனை ஏற்படுத்தியது. அவருக்கு தம்மிடம் எவ்வளவு பணம் இருக்கிறது. தம்முடைய கடன்கள் எவ்வளவு இருக்கின்றன என்பது தெரியாது. அல்லது வெராவிற்கு தாம் கொடுக்கக்கூடிய வரதட்சிணை எவ்வளவு என்பதும் அவருக்குத் தெரியாது. அவருக்குப் பெண்கள் பிறந்தவுடன், ஒவ்வொரு பெண்ணுக்கும் திருமணத்திற்காக ஒரு எஸ்டேட்டையும், 300 அடிமைகளையும் ஒதுக்கி வைத்தார். ஆனால், அந்த ஒதுக்கின எஸ்டேட்டுகளில் ஒன்று ஏற்கெனவே விற்பனை செய்யப் பட்டுவிட்டது. மற்றொன்று அடமானமாக வைக்கப்பட்டுள்ளது. இதற்குக் கொடுக்கவேண்டிய

வட்டி ஏராளமாய்ச் சேர்ந்துவிட்ட படியால், அந்த எஸ்டேட்டை விற்பதைத் தவிர, வேறு வழியில்லை. ஆகவே, அந்த எஸ்டேட்டை வெராவிற்குக் கொடுக்கலாமென்பது நடக்காத விஷயம். தவிர, அவரிடம் பணமும் எதுவுமில்லை.

விருப்பத்தை பெர்க் சொல்லி ஒரு மாத காலமாய் விட்டது. திருமணத்துக்கு இன்னும் ஒரு வாரம்தான் இருக்கிறது. ஆனால், வரதட்சிணைப் பிரச்னையைப்பற்றி கோமகன் இன்னும் தமக்குள் ஒரு தீர்மானத்திற்கும் வரவில்லை. அவருடைய மனைவியிடம் அதைப் பற்றி பேசவும் இல்லை. ஒரு சமயம் அந்த ரயாஜான் எஸ்டேட்டை அவளுக்குக் கொடுத்துவிடலாமென்றோ, அல்லது ஒரு காட்டை விற்றுவிடலாமென்றோ, ஒரு பிராமிசரி நோட் எழுதிக்கொடுத்துப் பணம் வாங்கலாமென்றோ கோமகன் நினைத்ததுண்டு. திருமணத்திற்கு சில தினங்களுக்கு முன்னால், ஒரு நாள் காலை, கோமகன் படிப்பு அறைக்குள் பெர்க் நுழைந்தார். ஒரு மரியாதையான, இனிமையான புன்னகையோடு தமது எதிர்கால மாமனாரைப் பார்த்து, வெராவிற்கு எவ்வளவு வரதட்சிணை கொடுக்கப்போகிறீர் என்று கேட்டார். கோமகன் வெகுகாலமாய் எதிர்பார்த்துக்கொண்டிருந்த இந்தக் குழப்பத்தைக் கேட்டதும் கலங்கிப்போனார். கொஞ்சம்கூட யோசனை செய்யாமல் தம்முடைய மனதில் அப்போது தோன்றிய பதிலை உடனே அவர் சொன்னார். அதாவது: 'நீர் இம்மாதிரி அதைப்பற்றி காரியார்த்தமாக இருப்பதற்கு நான் சந்தோஷமடைகிறேன்... அதை நான் விரும்புகிறேன். உமக்கு திருப்தியாகிற விதத்தில் நான் நடந்துகொள்ளுவேன்...'

பெர்க்கின் தோள்களில் தட்டிக்கொடுத்துவிட்டு அவர் எழுந்தார். அதாவது உரையாடலை அதோடு முடித்துவிட விரும்பினார். ஆனால், இன்னமும் இனிமையான புன்னகை கொண்டு, வெராவிற்கு கொடுக்கப்போகும் வரதட்சிணையைப்பற்றி அவர் சொல்லாவிட்டால், அந்த வரதட்சிணையின் ஒரு பகுதியை உடனே முன்பணமாகக் கொடுக்காவிட்டால், கல்யாண ஏற்பாடுகளை தாம் நிறுத்திவிட வேண்டியதாயிருக்கும் என்று பெர்க் சொன்னார்.

'ஏனென்றால், கோமகனே, இதை யோசித்துப் பாரும். எனது மனைவியைக் காப்பாற்றுவதற்கு வேண்டிய நிச்சயமான வருமானம் எனக்கு இல்லாமல் நான் திருமணம் செய்துகொண்டால், நான் தவறாக நடந்துகொண்டதாகவே இருக்கும்...'

அந்த உரையாடலை கோமகன் முடித்தார். இன்னும் மேற்கொண்டு ஏற்படும் தொந்தரவான பேச்சுகளை தவிர்ப்பதற்காகவும், தாம் தாராளமாய் இருப்பதைக் காட்டிக்கொள்வதற்காகவும், 80,000 ரூபிள்களுக்கு தாம் ஒரு பிராமிசரி நோட்டு எழுதிக்கொடுப்பதாகச் சொன்னார். பெர்க் அடக்கமான புன்னகையோடு கோமகன் தோளில் முத்தமிட்டார். அதைக் கேட்கத் தாம் மிகுந்த நன்றி உள்ளவராய் இருப்பதாகவும், ஆனால், 30,000 ரூபிள்கள் இல்லாமல் தமது புது வாழ்க்கையை ஆரம்பிக்க முடியாதென்றும் சொன்னார். 'அல்லது குறைந்தது 20,000-மாவது வேண்டும், கோமகனே, மீதமுள்ள 60,000-க்கு நீர் பிராமிசரி நோட்டு கொடுக்கலாம்' என்றார்.

'ஆமாம், ரொம்ப சரி' என்று அந்த கோமகன் வேகமாய் கூறினார். ஆனால், என்னை மன்னித்துக்கொள்ளும், எனது அன்புள்ள வாலிபரே. நான் உமக்கு 20,000 ரூபிள்களும் கொடுக்கிறேன். அதோடு 80,000-த்திற்கு பிராமிசரி நோட்டும் கொடுக்கிறேன். ஆமாம், ஆமாம், என்னை முத்தமிடும்.'




நட்டாஷாவுக்கு பதினாறு வயதாயிற்று. நான்கு வருஷங்களுக்கு முன்னால், போரிஸும் அவளும் முத்தமிட்டுக் கொண்ட பின்பு, இதே வயது வருவதற்கு இன்னும் எத்தனை ஆண்டுகள் இருக்கின்றன என்பதை விரல் விட்டு எண்ணினாள். அதே வருஷம், 1809-ம் ஆண்டு, இப்பொழுது வந்துவிட்டது. அதற்குப் பின்பு ஒரு தடவை கூட, அவர் அவளைப் பார்க்கவில்லை. சோனியாவும் அவள் தாயாரும் பேசிக்கொண்டிருக்கும்போது, போரிஸைப்பற்றி பேச்சு வந்தால், நட்டாஷா தாராளமாய் பேசுவாள். அதாவது, அந்த முத்தமிட்ட செய்கை சிறுபிள்ளைத் தனமான காரியமென்றும், அதை மறந்து வெகுகாலம் ஆய்விட்டது என்றும், அதைப்பற்றி பேசுவதற்கு அது கொஞ்சம்கூட தகுதி இல்லாதது என்றும் அவள் சொல்லுவாள். ஆனால், அவளுடைய உள்ளத்தின் ஆழத்தில் ஒரு விஷயம் அவளை வாதனை செய்து கொண்டு வந்தது. அதாவது போரிஸை திருமணம் செய்து கொள்ளுவதாகச் சொல்லியது வெறும் கேலிதானா, அல்லது அவளைக் கட்டுப்படுத்தக்கூடியதா என்ற சந்தேகம் இருந்துவந்தது.

1805-ம் வருஷத்தில், ராணுவத்தில் சேருவதற்காக மாஸ்கோவை விட்டு போரிஸ் போன பின்பு, ராஸ்டோவ்களை அவர்

பார்க்கவில்லை. பல தடவைகள் அவர் மாஸ்கோவிற்கு வந்தும்கூட, ஆட்ராட்னோ வழியாக பல தடவை அவர் சென்றும்கூட, அவர்களைப் பார்க்கப்போகவில்லை.

தன்னைப் பார்ப்பதற்கு அவருக்கு விருப்பம் இல்லையோ என்று சில தடவைகள் நட்டாஷாவுக்குத் தோன்றியதுண்டு. அவளுடைய வீட்டிலுள்ள முதியோர்கள் அவரைப்பற்றி வருத்தமான தொனியில் பேசுவதைக் கேட்ட பின்பு, இந்த சந்தேகம் அவளுக்கு உறுதியாயிற்று.

'இக்காலங்களில் பழைய நண்பர்களை நினைத்துப் பார்ப்பதில்லை' என்று போரிஸைப்பற்றி பேச்சு வரும்போது கோமகள் சொல்லுவதுண்டு.

அன்னா மிக்காய்லாவ்னாவும் அவர்களை வந்து பார்ப்பது வரவர குறைந்துவிட்டது. அவள் இப்பொழுது ஒரு குறிப்பிட்ட கௌரவம் கொண்டிருப்பவள்போல காணப்பட்டாள். தனது குமாரனுடைய உயர்வுகளைப்பற்றி மிகுந்த பரவசத்தோடு எப்பொழுதும் பேசிக்கொண்டிருப்பாள். இப்பொழுது புதிதாக அவருக்குக் கிடைத்திருக்கும் பதவியைப் பற்றியும் சிலாக்கியமாகப் பேசி வந்தாள். பீட்டர்ஸ்பர்க்கிற்கு ராஸ்டோவ்கள் வந்ததும், போரிஸ் அவர்களை வந்து பார்த்தார்.

அவர்களுடைய வீட்டிற்கு வரும்போது, மனக் குழப்பத்தோடு வந்தார். நட்டாஷாவைப் பற்றிய நினைப்பு அவருக்கு கவிதா உலக நினைப்பாய் இருந்தது. ஆனால், நட்டாஷாவுக்கும் தமக்கும் ஏற்பட்ட சிறுபிள்ளைத்தனமாக உறவுகள் அவளையோ, தம்மையோ பந்தப்படுத்துவது ஆகாது என்பதை அவளுக்கும், அவளுடைய பெற்றோருக்கும் சொல்லிவிட வேண்டும் என்ற உறுதியான எண்ணத்தோடு அவர் வந்தார். கோமகள் பெஜுகாவா வின் தயவினால், அவருக்கு உயர் வட்டாரத்தில் ஒரு நல்ல அந்தஸ்து கிடைத்திருக்கிறது. ஒரு முக்கியமான பிரபலஸ்தர் இவரிடம் பூரண நம்பிக்கை வைத்திருக்கிறபடியால், ராணுவ சேவையிலும் அவருக்கு நல்ல அந்தஸ்து கிடைத்திருக்கிறது. பீட்டர்ஸ்பர்க்கில் ஒரு பெரிய பணக்காரர் பெண்ணை தாம் திருமணம் செய்துகொள்ள திட்டம் போட்டுக்கொண்டிருந்தார். அதுவும் சுலபமாக நிறைவேறிவிடும்... ராஸ்டோவ்களின் வரவேற்பு அறையில் 'அவர் நுழைந்தபோது, நட்டாஷா தன்னுடைய அறையில் இருந்தாள். இவர் வந்திருப்பதை அவள் கேள்விப்பட்டதும், அவள் முகம் சிவந்து புன்னகை பூத்து வரவேற்பு அறைக்குள் ஓடிவந்தாள்.

நான்கு வருஷங்களுக்கு முன்னால் நட்டாஷாவை போரிஸ் பார்த்தபோது, அவள் குறுகிய ஆடைகளோடும், குழந்தைத்தனமான சிரிப்போடும், சுருண்டு சுருண்டு தொங்கும் தலைமுடியோடும், ஜொலிஜொலிக்கும் கறுப்புக் கண்களோடும், பரபரப்போடும் காணப்பட்டாள். அதே நினைப்பில் அவர் இப்போது இருந்தபடியால் நட்டாஷாவின் புதிய தோற்றத்தைக் கண்டதும் அவர் திகைத்துப்போனார். அவருடைய முகத்தில் பரவசமான ஆச்சரியம் தோன்றியது. இந்தத் தோற்றம் நட்டாஷாவை மகிழ்ச்சி கொள்ளச் செய்தது.

'நல்லது, உம்முடைய பைத்தியகாரத் தோழியை உம்மால் அடையாளம் கண்டுகொள்ள முடிகிறதா?' என்று கோமகள் கேட்டாள்.

நட்டாஷாவின் கையை போரிஸ் முத்தமிட்டு அவளிடம் ஏற்பட்டிருந்த மாறுதலைக் கண்டு ஆச்சரியப்படுவதாகச் சொன்னார்.

'எவ்வளவு அழகாக நீ வளர்ந்துவிட்டாய்!'

'நானும் அப்படித்தான் நினைக்கிறேன்' என்று நட்டாஷாவின் சிரித்த கண்கள் பதில் சொல்லின.

'அப்பாவுக்கு அதிக வயதாய்விட்டதா?' என்று கேட்டாள்.

நட்டாஷா அங்கே உட்கார்ந்தாள். ஆனால், போரிஸும் கோமகளும் பேசிவந்தவைகளில் அவள் கலந்து கொள்ளவில்லை. தன்னுடைய சிறுபிள்ளைத் தோழரை மௌனமாகவும் நுணுக்கமாகவும் கவனித்து வந்தாள். அவளுடைய உறுதியான ஆர்வம் கொண்ட பார்வை அவரை அமுக்குவதாக உணர்ந்தபடியால், இடையிடையே அவர் அவளை நோக்கினார்.

போரிஸின் சீருடை, தார்ச்சக்கரம், கழுத்துப் பட்டி, அவருடைய தலைமுடியை வாரிவிட்டிருக்கிற விதம் எல்லாம் புதிய மோஸ்தர்களாய் இருந்தன. இதை நட்டாஷா கண்டுகொண்டாள். கோமகளுக்குப் பக்கத்தில் பக்கவாட்டாக சாய்வு நாற்காலியில் அவர் உட்கார்ந்து இருந்தார். தம்முடைய இடது கையில் தோலைப் போன்று ஒட்டிய பதிந்திருந்த கையுறைகளை தமது வலது கையால் சரி செய்து கொண்டிருந்தார். பீட்டர்ஸ்பர்க்கின் உயர் வட்டார தமாஷாக்களைப் பற்றியும், மாஸ்கோவில் முன்னால் நடந்த காரியங்களையும், மாஸ்கோவில் முன்னால் ஏற்பட்ட அறிமுகங்களையும் லேசான கேலியோடு பிரஸ்தாபித்துக் கொண்டிருந்தார். அவர் பேசியபோது அவருடைய உதடுகளை நாசூக்காக அழுத்திப் பேசி வந்தார். உயர் வட்டாரப்

பணக்காரர்களைப் பற்றியும், ஒரு ஸ்தானாதிபதியின் நடனத்திற்கு தாம் போய் இருந்ததைப் பற்றியும், என்என் என்பவரிடம் இருந்தோ, எஸ்எஸ் என்பவரிடம் இருந்தோ, தமக்குக் கிடைத்த அழைப்புகளைப் பற்றியோ அவர் பேசியபோது, அவையெல்லாம் தற்செயலாக பேசியவை என்று நட்டாஷா நினைக்கவில்லை. வேண்டுமென்றே குறிப்பிட்டதாக நினைத்தாள்.

தன்னுடைய பார்வையை அவர் மீது செலுத்தி நட்டாஷா மௌனமாய் இருந்தாய். இந்தப் பார்வை போரிஸுக்கு மேலும் மேலும் பரபரப்பையும் குழப்பத்தையும் கொடுத்தது. அவர் அடிக்கடி அவளைத் திரும்பிப் பார்த்து, தாம் பேசி வந்ததைக்கூட இடையில் நிறுத்தினார். பத்து நிமிஷங்களுக்கு மேலாக அவர் அங்கே தங்கவில்லை. அதன் பின்னால் அவர் எழுந்து விடைபெற்றுக் கொண்டு போனார். ஆனால், அதை கேள்விக் குறிப்புகொண்ட சண்டைக்கு அழைக்கும் கேலியான பார்வையோடு அவள் அவரை நோக்கிக்கொண்டிருந்தாள். அவருடைய முதல் விஜயத்திற்குப் பின்னால், எப்பொழுதும் போலவே நட்டாஷா தம்முடைய மனதை கவர்ந்திருப்பதாக போரிஸ் தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார். ஆனால், அந்த உணர்ச்சிக்கு இடம் கொடுத்துவிடக்கூடாது என்றும், சொத்து இல்லாத அவளை மணப்பது என்பது தம்முடைய எதிர்கால முன்னேற்றத்திற்கே இடையூறாய் இருக்கும் என்றும் அவர் நினைத்தார். ஆனால், அவளை கல்யாணம் செய்யும் நோக்கம் இல்லாமல், மீண்டும், பழைய உறவுகளை புதுப்பித்துக் கொள்ளுவது யோக்கியமற்ற செய்கை என்றும் அவர் நினைத்தார். ஆகவே, நட்டாஷாவை சந்திக்கக்கூடாது என்று அவர் தீர்மானித்தார். ஆனால், அவர் கொண்ட அந்த உறுதிக்கு நேர் விரோதமாக, அவரே சில தினங்கள் கழித்து மறுபடியும் சந்தித்தார். ராஸ்டோவ்களை அடிக்கடி சந்திப்பதும், நாள் பூராவாக அங்கே இருப்பதும், அதன் பின்னால் சகஜமாய்விட்டது. பழைய காலங்களை மறந்துவிட வேண்டும் என்றும், அவள் தம்முடைய மனைவியாக வர முடியாது என்றம், தமக்கு சொத்துக்கள் இல்லாததால் அவளை தாம் கல்யாணம் செய்துகொள்ள அவர்கள் சம்மதிக்கமாட்டார்கள் என்றும் நட்டாஷாவுக்கு தெளிவாக்கிவிட வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. ஆனால், அப்படிச் செய்ய அவர் தவறிவிட்டார். அதைப்பற்றி விளக்கம் சொல்ல நினைக்கும் போதெல்லாம் தர்மசங்கடமாக அவருக்கு அது தோன்றியது. நாள் ஆக ஆக அந்த சிக்கலில் அவர் மேலும் மேலும் உழன்று வந்தார். போரிஸ் மீது முன்போலவே நட்டாஷா காதல் கொண்டிருப்பதாக

அவளுடைய தாயாருக்கும் சோனியாவுக்கும் தோன்றியது. போரீஸுக்கு பிரியமான பாட்டுகளை நட்டாஷா பாடினாள். தன்னுடைய குறிப்புப் புத்தகத்தை அவரிடம் காட்டி, அதில் எழுதும்படி செய்தாள். கடந்த காலத்தைப் பற்றி பிரஸ்தாபிப்பதற்கு அவள் விடாமல், நிகழ்காலம் எவ்வளவு மனோகரமாய் இருக்கிறதென்று அறிந்துகொள்ளும்படி செய்தாள். ஒவ்வொரு நாளும் அவர் சொல்ல விரும்பியதை சொல்லாமல், தாம் என்ன செய்துகொண்டிருக்கிறோம் என்பதை அறியாமல், எதற்காக அங்கே வருகிறோம் என்பதையும் அறியாமல், இவையெல்லாம் எப்படி முடியப் போகிறது என்பதையும் உணராமல் மூடுபனியால் மூடப்பட்டவரைப்போல போரிஸ் போய்க்கொண்டிருந்தார். ஹெலனை சந்திப்பதை அவர் விட்டுவிட்டார். அதனால் அவளிடமிருந்து நாள்தோறும் கண்டனக் கடிதங்கள் வந்துகொண்டிருந்தன. இருந்தாலும் நாள் பூராவாக ராஸ்டோவ்கள் வீட்டிலேயே அவர் காலங் கழித்து வந்தார்.



ஒரு நாளிரவு கோமகள் ராஸ்டோவ், ஒரு கம்பத்தில் முழங்கால் படியிட்டு தரை வரை குனிந்து, பிரார்த்தனை செய்துகொண்டிருந்தாள். அவள் தலையில் படுக்கை தொப்பியும், உடம்பில் ஒரு ஜாக்கெட்டும் தரித்திருந்தாள். செயற்கையான சுருளை முடி கொண்ட டோப்பாவை அவள் கழற்றி வைத்திருந்த படியால், அவளுடைய இயற்கையான சிறிய தலைமுடி ரோமங்கள், அவளுடைய வெள்ளை தொப்பிக்குள் அடங்கி யிருந்தன. அவள் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தபோது, கதவு திறக்கும் சப்தம் கேட்டது. நட்டாஷா தனது கால்களில் செருப்புகளைப் போட்டுக்கொண்டு, தலைமுடியை சுருளையாக்கிக் கட்டிக்கொண்ட, படுக்கை ஜாக்கெட் அணிந்து அறைக்குள் ஓடி வந்தாள். தனது பிரார்த்தனை கவனம் கலைய கோமகள் சுற்றிப் பார்த்து முகம் சுளித்தாள். ‘இந்த சோபாதான் எனது கல்லறையாக இருக்கப் போகிறதா?’ என்று அவள் தன்னுடைய கடைசி பிரார்த்தனை அடிகளை சொல்லி முடித்தாள். ஆவலோடும் முகம் சிவந்தும் காணப்பட்ட நட்டாஷா, தனது தாயார் பிரார்த்தனை செய்து கொண்டிருப்பதை பார்த்ததும், தான் ஓடிவந்ததை திடீரென்று நிறுத்தி, பாதி உட்கார்ந்தாள். தன்னையே கண்டித்துக்கொள்ளுகிற மாதிரி, தன்னை யறியாமலேயே தன் நாக்கை வெளியே நீட்டினாள். இன்னமும் தன்

தாயார் பிரார்த்தனை செய்துகொண்டிருப்பதை பார்த்ததும், மெதுவான அடி எடுத்து வைத்து படுக்கைக்கு ஓடி, ஒரு காலால் மற்றோர் காலில் உள்ள செருப்பை தள்ளி, இரு செருப்புகளையும் கழற்றிவிட்டு படுக்கையில் குதித்தாள். அந்த படுக்கைதான் தனது கல்லறையாகி விடுமோ என்று கோமகள் பயந்தாள். அந்த சோபா உயரமாக இருந்தது. அதில் ஒரு இறகு மெத்தை போடப் பட்டிருந்தது. கீழ் இருக்கும் தலையணைக்கு சிறியதாக, ஒன்றின்மேல் ஒன்றாக, ஐந்து தலையணைகள் அதிலிருந்தன. படுக்கையில் குதித்த நட்டாஷா, இறகு மெத்தையில் அமிழ்ந்து அதில் புரண்டு சுவரோரமாகப் போனாள். அதிலிருந்த படுக்கைத் துணியால் தன்னை மூடி, தனது கால் முட்டுகளை நாடிக்குக் கொண்டுவந்து, திடீரென்று உதைத்து, வெளியில் கேட்காமல் சிரித்து, அதன் பின்னால் தலையிலிருந்து பூராவாக மூடிக்கொண்டு, தனது தாயாரை பார்த்தாள். கோமகள் தனது பிரார்த்தனையை முடித்து விட்டு, கடினமான முகத்தோடு படுக்கைக்கு வந்தாள். நட்டாஷாவின் தலை மூடப்பட்டிருப்பதை பார்த்ததும், பலவீனமான இனிய முறையில் அவள் புன்னகை கொண்டாள்.

'இப்பொழுது என்ன? இப்பொழுது என்ன?' என்றாள் அவள்.

'அம்மா, நாம் கொஞ்சம் பேசுவோமா? ஆமாவா?' என்றாள் நட்டாஷா. 'இப்பொழுது உன்னுடைய தொண்டையில் ஒன்று மற்றொன்று... அது போதும்' என்று சொல்லி, அவள் தனது தாயாரின் கழுத்தை வளைத்துக்கொண்டு, அவளை தொண்டையில் முத்தினாள். தனது தாயாரிடம் நட்டாஷா நடந்துகொண்ட முறை முரட்டுத்தனமாய் இருந்தது. என்றாலும், அவள் மிகுந்த உணர்ச்சியும் ஜாக்கிரதையும் கொண்டவள் ஆனபடியால், அவள் தனது தாயாரை கைகளில் பற்றியிருந்த போதிலும், அவளுக்கு வருத்தம் கொடுக்காத விதத்திலும், அல்லது அவளுக்கு அசௌகரியமோ அதிருப்தியோ கொடுக்காத விதத்திலும் எப்பொழுதும் நடந்துகொள்ளுவாள்.

'நல்லது, இன்று இரவு என்ன விஷயம்?' என்று தனது தலையணைகளை ஒழுங்காக அடுக்கிவிட்டு தாயார் கேட்டாள். நட்டாஷா உருண்டு வந்து, தன்னுடைய தாயாருக்குப் பக்கத்தில் வந்து படுத்தாள். கைகளைப் பரப்பி, ஒரு கவலையான தோற்றத்தை முகத்தில் காட்டி, நட்டாஷாவின் பதிலுக்காக தாயார் காத்திருந்தாள்.

தமது கிளப்பிலிருந்து கோமகன் திரும்பி வரும் முன்பாக இரவுகளில் இந்த நேரத்தில் நட்டாஷா வந்து தாயாரை சந்திப்பது தான், தாயாருக்கும் மகளுக்கும் உள்ள மிகப் பிரமாதமான மகிழ்ச்சிகளில் ஒன்றாகும்.

'இன்றிரவு என்ன விஷயம்? ஆனால், நான் உனக்கு சொல்ல வேண்டும்...'

நட்டாஷா தனது கையை தாயாரின் வாயில் வைத்து மூடினாள்.

'போரிஸைப்பற்றி... எனக்குத் தெரியும்' என்று அவள் மிகுந்த சிரத்தையோடு சொன்னாள். 'அதைப் பற்றித்தான் நான் இப்பொழுது வந்திருக்கிறேன். நீ அதை சொல்ல வேண்டாம் - எனக்குத் தெரியும். இல்லை, எனக்குச் சொல்லு' என்று கூறி, அவள் தனது கையை எடுத்துக் கொண்டாள். 'அம்மா, எனக்குச் சொல்லு, அவர் இனிமையாக இருக்கிறார், அல்லவா?'

'நட்டாஷா, உனக்கு பதினாறு வயது ஆகிவிட்டது. உன்னுடைய வயதில் எனக்குக் கல்யாணம் ஆகிவிட்டது. போரிஸ் இனிமையானவர் என்று நீ சொல்லுகிறாய். அவர் மிகவும் இனிமையானவர். ஒரு மகனைப் போல, நான் அவர் மீது பிரியம் கொண்டிருக்கிறேன். ஆனால், அப்புறம் என்ன... ? நீ எதைப்பற்றி நினைத்துக்கொண்டிருக்கிறாய்? நீ அவருடைய தலையை முற்றிலும் திருப்பி விட்டாய். எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது...'

இதை கோமகள் சொல்லியபோது, சுற்றித் திரும்பி தனது மகளைப் பார்த்தாள். நட்டாஷா படுத்துக்கொண்டு, நேராக அசையாமல் அந்த கட்டிலில் மூலையில் செதுக்கப்பட்டிருந்த ஒரு கருங்காலி ஸ்பிங்ஸ்ஸை (எகிப்திய மனித சிங்க உருவம்) பார்த்துக்கொண்டிருந்தாள். ஆகவே, அவளுடைய முகத்தின் பக்கவாட்டைத்தான் தாயாரால் பார்க்க முடிந்தது. அந்த முகத்தில் காணப்பட்ட தனிப்பட்ட சிரத்தையும், ஒரு மனப்பட்ட தோற்றமும் அவள் மனதில் பதிந்தன.

நட்டாஷா கவனித்துக்கொண்டு சிந்தித்துக்கொண்டிருந்தாள்.

'நல்லது, அப்புறம் என்ன?' என்று அவள் சொன்னாள்.

'நீ அவருடைய தலையை முற்றிலும் திருப்பிவிட்டாய். ஏன்? அவரிடமிருந்து உனக்கு என்ன வேண்டும்? அவரை நீ கல்யாணம் செய்துகொள்ள முடியாதென்பது உனக்குத் தெரியும்.'

'ஏன் முடியாது?' என்று தன்னுடைய நிலைமையை மாற்றிக் கொள்ளாமல் நட்டாஷா பேசினாள்.

'ஏனென்றால், அவர் இளைஞராக இருக்கிறார். ஏனென்றால், அவர் ஏழை. ஏனென்றால், அவர் ஒரு பந்து... இன்னமும், ஏனென்றால், நீ அவரை காதலிக்கவில்லை.'

'உனக்கு எப்படித் தெரியும்?'

'எனக்குத் தெரியும், என் கண்ணே. அது சரியல்ல.'

'ஆனால், எனக்கு வேண்டுமென்றால்...' என்றாள் நட்டாஷா.

'அந்த அசட்டுப் பேச்சு பேசுவதை விட்டுவிடு' என்றாள் கோமகள்.

'ஆனால், எனக்கு வேண்டுமென்றால்...'

'நட்டாஷா, நான் சிரத்தையோடு...'

அவள் பேசுவதை முடிக்கும்படி நட்டாஷா விடவில்லை. கோமகளின் பெரிய கையை தன்னிடம் இழுத்து புறங்கையில் முத்தமிட்டாள். பின்னால், உள்ளங்கையில் முத்தமிட்டாள். அதன் பின்னால், மறுபடியும் திரும்பி விரல்களில், முடிச்சுக்களில், விரல்களுக்கு மத்தியில் உள்ள இடங்களில், இம்மாதிரியாக முத்தமிட்டுக் கொண்டு, 'ஜனவரி, பிப்ரவரி, மார்ச்சு, ஏப்ரல், மே. பேசு அம்மா. நீ ஏன் ஒன்றும் சொல்லாமல் இருக்கிறாய்? பேசு' என்று அவள் தனது தாயாரை திரும்பி பார்த்து சொன்னாள். அவள் தனது குமாரியை கனிவோடு நோக்கிக்கொண்டிருந்தாள். அந்த கவனத்தில் தான் சொல்ல விரும்பியவைகளையெல்லாம் சொல்லுவதற்கு மறந்து போனாள்.

'அது பிரயோஜனமில்லை, என் அன்பே. நீ சிறு குழந்தையாக இருக்கிற காலத்திலிருந்தே ஏற்பட்ட இந்த நட்பை எல்லாரும் புரிந்துகொள்ள முடியாது. அவர் உன்னுடன் மிகுந்த அன்னியோன்னியமாக இருப்பதை, நமது வீட்டிற்கு வருகிற மற்ற வாலிபர்கள் பார்ப்பார்களானால், உன்னைப்பற்றி அவர்கள் தவறாக நினைப்பார்கள். இவை எல்லாவற்றிற்கும் மேலாக ஒரு பிரயோஜனமுமில்லாமல் நீ அவரை வேதனைக்குள்ளாக்குகிறாய். ஏற்கெனவே அவர் தமக்கு பொருத்தமான பணக்கார ஜோடியை கண்டுபிடித்திருப்பார் . இப்பொழுது நீ அவரை அரை பைத்தியமாக்குகிறாய்.'

'பைத்தியம்? என்று நட்டாஷா திருப்பிக் கேட்டாள்.'

'என்னைப் பற்றி உனக்கு சில காரியங்களை சொல்லுகிறேன். எனக்கு ஒரு மைத்துனர் இருந்தார்...'

'எனக்குத் தெரியும். சிரில் மாட்வைச்... ஆனால், அவர் வயதானவர்.'

'அவர் எப்பொழுதுமே வயதானவர் அல்ல. ஆனால், நட்டாஷா, நான் செய்யப்போவது இதுதான். நான் போரிஸோடு பேசுகிறேன். அவர் இங்கே அடிக்கடி வரவேண்டியதில்லை...'

'அவருக்குப் பிரியமிருந்தால், ஏன் கூடாது?'

'ஏனென்றால், அதனால் என்ன பிரயோஜனமும் ஏற்படாது என்பது எனக்குத் தெரியும்.'

'உனக்கு எப்படி தெரியமுடியும்? இல்லை, அம்மா. அவரிடம் பேச வேண்டாம். என்ன அசட்டுத்தனம்!' என்று, தமது சொத்துக்களை பறிகொடுத்தவர் பேசுவதைப் போன்ற தொனியில், நட்டாஷா பேசினாள். 'நல்லது, நான் திருமணம் செய்யமாட்டேன். அவருக்கு இங்கே வருவது மகிழ்ச்சியாய் இருந்தால், அவர் வந்து போகட்டும். நானும் மகிழ்ச்சியாக இருப்பேன்'. நட்டாஷா புன்சிரிப்பு கொண்டு தனது தாயாரைப் பார்த்தாள். 'திருமணம் செய்வதற்காக அல்ல. சும்மா அப்படி இருப்பதற்காக' என்று அவள் மேலும் பேசினாள்.

'அப்படி என்றால், எப்படி, என் செல்வமே?'

'அப்படியேதான். அவரை திருமணம் செய்யவேண்டுமென்று எனக்கு அவசியமில்லை. ஆனால்... அப்படி இருப்பேன்.'

'அப்படித்தான், அப்படித்தான்' என்று கோமகள் திருப்பித் திருப்பி சொன்னாள். அவளுடைய உடல் பூராவாக குலுங்க, ஒரு எதிர்பாராத, நல்ல குணமுள்ள, வயோதிக சிரிப்பு தொனித்தது.

'சிரிக்க வேண்டாம்; நிறுத்து' என்று நட்டாஷா கூச்சலிட்டாள். 'நீ இந்த படுக்கை முழுவதையும் குலுக்குகிறாய். நீ அப்படியே, என் மாதிரியே இருக்கிறாய். நீ மற்றொரு சிரிப்புக்காரி... பொறு...' என்று அவள் சொல்லி, கோமகளின் கைகளைப் பற்றி, அவளுடைய சுண்டு விரலில் முடிச்சை முத்தமிட்டாள். அவள் அப்படி முத்தமிட்டபோது, 'ஜூன், ஜூலை, ஆகஸ்டு' என்று சொல்லி, மற்றோர் கையில் முத்தமிட்டாள். 'ஆனால், அம்மா, அவர் அவ்வளவு அதிகமாக காதல் கொண்டிருக்கிறாரா? நீ என்ன நினைக்கிறாய்? யாராவது உன்னிடம் அவ்வளவு அதிகமாக காதல் கொண்டது உண்டா? அவர் மிகவும் இனிமையானவர். மிகமிக இனிமையானவர். ஒரு விஷயம் என்னவென்றால், என்னுடைய போக்கிற்கு அவர் பொருத்தமானவர் அல்ல. அவர் மிகவும் குறுகிய நோக்கமுள்ளவர். நமது சாப்பாட்டு அறை கெடிகாரத்தைப்போல குறுகியவர்... உனக்கு அறிந்துகொள்ள முடியவில்லையா? குறுகியவர், உனக்குத் தெரியும்-சாம்பல் வர்ணம், மெல்லிய சாம்பல் வர்ணம்...'

'என்ன குப்பைகளையெல்லாம் நீ பேசிக்கொண்டிருக்கிறாய்?' என்று கோமகள் சொன்னாள்.

நட்டாஷா மேலும் தொடர்ந்து பேசினாள்.

'உனக்கு உண்மையாகவே தெரியவில்லையா? நிக்கலஸுக்கு அதை அறிந்துகொள்ள முடியும்... பெஜுகாவ் இப்பொழுது, நீல நிறத்தில் கருப்பு நீல நிறமும் சிவப்பு நிறமும் கொண்டு, அவர் சதுரமாய் இருக்கிறார்.'

'அப்படியானால், அவருடனும் நீ சல்லாபம் செய்து வருகிறாயா?' என்று சிரித்துக்கொண்டு கோமகள் பேசினாள்.

'இல்லை, அவர் ஒரு பிரீ மேஸன் என்பதை நான் கண்டு பிடித்தேன். அவர் உயர்ந்தவர். கரு நீலமும் சிகப்பும்... அதைப்பற்றி உனக்கு நான் எப்படி விளக்கிக் கூறுவேன்?'

'குஞ்சு கோமகளே' என்று கதவுக்குப் பின்னாலிருந்து கோமகன் அழைக்கும் குரல் கேட்டது. 'நீ இன்னும் தூங்கவில்லையா?' நட்டாஷா குதித்தெழுந்து தன்னுடைய செருப்புகளைக் கைப்பற்றி வெறுங்காலோடு தன்னுடைய அறைக்கு ஓடினாள்.

அன்று அவள் தூங்குவதற்கு வெகு நேரம் ஆயிற்று. அவள் அறிந்த எல்லாவற்றையும், அவளிடம் உள்ளே இருக்கிற எல்லாவற்றையும், ஒருவராலும் அறிய முடியாது என்று அவள் சிந்தித்துக் கொண்டே இருந்தாள்.

'சோனியா?' என்று, அங்கே நீளமான கேசத்தைக்கொண்டுள்ள, அந்த சிறிய பூனைக் குட்டி சுருண்டு படுத்து தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து அவள் நினைத்தாள். 'இல்லை, அவளால் எப்படி முடியும்? அவள் தர்ம நோக்கம் கொண்டவள். அவள் நிக்கலஸுடன் காதல் கொண்டாள். அதைவிட அதிகமாக அறிந்துகொள்ள அவள் விரும்பவில்லை. அம்மாவுக்குக்கூட அறிந்துகொள்ள முடியவில்லை. நான் எவ்வளவு புத்திசாலியாக இருக்கிறேன் என்பது ஆச்சரியமாக இருக்கிறது... அவள் எவ்வளவு கவர்ச்சியாய் இருக்கிறாள்!' அவள் தன்னைப்பற்றி மூன்றாவது நபர் பேசுவதைப்போல, ஒரு புத்திசாலியானவர் பேசுவதைப் போல, மனிதர்களில் எல்லாம் சிறந்த புத்திசாலி அவளைப்பற்றி பேசுவதைப்போல, அவள் மனோ ராஜ்யம் செய்தாள். அதாவது: 'அவள் எவ்வளவு கவர்ச்சியாய் இருக்கிறாள்! அவளிடம் ஒவ்வொன்றும், ஒவ்வொன்றும் இருக்கிறது. அவள் அசாதார்ணமாக புத்திசாலியாகவும், கவர்ச்சியுள்ளவளாகவும்இருக்கிறாள்... மேலும், அவள் அழகாயும் அசாதாரணமாக அழகாயும், சுறுசுறுப்பாயும் இருக்கிறாள். அவள் நீந்துகிறாள். சிலாக்கியமாக குதிரை சவாரி செய்கிறாள்... அவளுடைய குரலோ? அது ஒரு ஆச்சரியமான குரல் என்பதை உண்மையாகவே ஒருவரால் சொல்ல முடியும்.'

செருபினி என்பவர் கட்டிய ஒரு பாட்டை அவள் வாய்க்குள் முணுமுணுத்துக்கொண்டு படுக்கையில் படுத்தாள். சீக்கிரம் தூங்கிவிடலாம் என்ற இனிமையான நினைப்பைக் கண்டு அவள் சிரித்தாள். துனியாஷா என்ற தன்னுடைய வேலைக்காரியை அழைத்து, மெழுகு வத்தியை அணைக்கும்படி சொன்னாள். துனியாஷா அந்த அறையை விட்டு போவதற்கு முன்பாகவே, அவள் மற்றொரு உலகமான, சந்தோஷமுள்ள கனவுகள் நிறைந்த உலகத்திற்கு போய்விட்டாள். அங்கே யதார்த்தமாய் காண்பதைப் போலவே, ஒவ்வொன்றும் சுமுகமாகவும் அழகாகவும் காணப் பட்டன. அது வித்தியாசமான உலகமாய் இருந்தபடியால் இன்னும் அதிகமான அழகாகவும் காணப்பட்டன.

மறு நாள் போரிஸை கோமகள் தனியாக அழைத்து அவருடன் பேசினாள். அதன் பின்னால், ராஸ்டோவ்களின் வீட்டிற்கு அவர் வருவதை நிறுத்திக்கொண்டார்.



1810-வது புது வருஷத்தின் முதல் நாளாகிய டிசம்பர் மாதம் 31-ந் தேதியன்று காத்தரைன் காலத்தில் பிரபலமாய் விளங்கிய பிரபலஸ்தர் ஒரு நடனக் கச்சேரியையும் நள்ளிரவு சாப்பாட்டையும் ஏற்பாடு செய்திருந்தார். ராஜ தந்திர சேவையில் உள்ளவர்களும் சக்கரவர்த்தியும் கூட அங்கு பிரசன்னமாய் இருப்பதாய் இருந்தது. எல்லோரும் அறிந்த அந்த பிரபலஸ்தரின் மாளிகை இங்கிலீஷ் துறைமுகத்திற்குப் பக்கத்தில் எண்ணற்ற விளக்கு களோடு ஜொலித்துக்கொண்டிருந்தது. பிரகாசமான அந்த மாளிகையின் வாசலில் போலீஸார் நிறுத்தி வைக்கப்பட்டிருந் தார்கள். போலீஸ்காரர் மட்டுமல்ல. டஜன் கணக்காக போலீஸ் அதிகாரிகளும், போலீஸ் தலைவரும் அந்த முற்ற மண்டபத்தில் நின்று கொண்டிருந்தார்கள். வண்டிகள் வந்துகொண்டும், போய்க்கொண்டும் இருந்தன. புதிதாய் வருகிறவர்களை, 'சிகப்பு டவாலி 'அணிந்த சேவகர்களும், தோகை தொப்பி அணிந்த சேவகர்களும் வரவேற்றார்கள். வண்டிகளிலிருந்து சீருடை அணிந்தவர்களும், நட்சத்திரப் பதக்கம் அணிந்தவர்களும், ரிப்பன்களை அணிந்தவர்களும் இறங்கினார்கள். சீமாட்டிகள் சாட்டின், எர்மைன் என்ற ஆடைகளில் 'படக்' என்ற சப்தத்தோடு கீழே விடப்பட்ட வண்டிகளின் படிகளில் ஜாக்கிரதையாக கால் வைத்து இறங்கினார்கள். சிகப்புக் கம்பளத்தில் அவர்கள் கால்

வைத்ததும், அங்கிருந்து சப்தமில்லாமல் வேகமாக உள்ளே போனார்கள்.

ஒவ்வொரு தடவையும் ஒரு புதிய வண்டி வரும்போதெல்லாம், அங்கிருந்த கூட்டத்திற்குள் ஒரு குசு குசுப்பான பேச்சு பரவி, அங்கிருந்தவர்கள் தாங்களே தங்களுடைய தொப்பிகளை எடுத்து காத்துக் கொண்டிருந்தார்கள்.

'சக்கரவர்த்தியா?... இல்லை, ஒரு மந்திரி... இளவரசர்... ஸ்தானாதிபதி. அந்த தோகைகளை நீ பார்க்கவில்லையா?...' என்று கூட்டத்திற்குள் குசு குசுப்பான ஒலி பரவி வந்தது. அங்கு நின்றவர்களைவிட நன்றாக உடை அணிந்த ஒருவர், அங்கு வருகிற ஒவ்வொருவரையும் அறிந்தவர்போல, பிரபலஸ்தர்கள் வந்ததும் அவர்களில் பெயர்களைச் சொல்லிக்கொண்டிருந்தார்.

விருந்தாளிகளில் மூன்றாவது நபர்கூட வந்துவிட்டார். ஆனால், அங்கு பிரசன்னமாய் இருக்கவேண்டிய ராஸ்டோவ்கள் இன்னமும் அணிவதிலேயே அவசரமாய் இருந்தார்கள்.

இந்த நடனக் கச்சேரிக்காக ராஸ்டோவ்களின் குடும்பத்தில் எத்தனையோ தயாரிப்புகளும் விவாதங்களும் நடந்தன. தங்களுக்கு அழைப்பு வராமல் போய் விடுமோ என்று பயந்தார்கள். குறிப்பிட்ட நேரத்திற்குள் ஆடைகள் தயாராகி விடாமலிருந்து விடுமோ என்று சந்தேகப்பட்டவர்கள், அல்லது வேறு ஏதோ சில காரியங்கள் எப்படியிருக்க வேண்டுமென்று விரும்பினார்களோ, அம்மாதிரி குறிப்பிட்ட நேரத்திற்குள் தயாராகிவிடாமல் போய்விடுமோ என்றுநினைத்தார்கள்.

மரியா இக்னாடேவ்னா பெரோன்ஸ்கயா என்பவள் ஒல்லியாகவும் மஞ்சள் நிறமாகவும் காணப்பட்டாள். அவள் சக்கரவர்த்தியின் தாயாருடைய கௌரவத் தோழி. ராஸ்டோவ் சீமாட்டியின் பந்துவாகவும், நண்பராகவும் இருந்தாள். ராஸ்டோவ் குடும்பத்தாரை பீட்டர்ஸ்பர்க்கின் உயர் வட்டாரங்களில் அவள் தான் அறிமுகப்படுத்தி வைத்தாள். அவள் ராஸ்டோவ் குடும்பத்தாருடன் நடனத்திற்கு வருகிறதாக ஏற்பாடு செய்திருந்தாள்!

டாரிடா கார்டன்ஸ் என்ற இடத்திலுள்ள அவளுடைய வீட்டிற்கு வந்து பத்து மணிக்கு அவளை அழைத்துக்கொண்டு போவதாக ஏற்பாடு. ஆனால், இப்போதோ பத்து மணிக்கு இன்னும் ஐந்து நிமிஷங்கள்தானிருந்தன. ஆனால், இன்னமும் பெண்கள் உடையணிந்து முடியவில்லை.

ஒரு பிரமாதமான நடனக் கச்சேரிக்கு நட்டாஷா போவது இதுதான் முதல் தடவை. அன்று காலையில் அவள் எட்டு மணிக்கே எழுந்து, அன்று பூராவாக் பரபரப்புடனும் சுறு சுறுப்புடனும் காணப் பட்டாள். அன்று காலையிலிருந்து அவளுடைய கவனத்தை எல்லாம், தானும் தன்னுடைய அம்மாவும் சோனியாவும் எவ்வளவு சிறந்ததாக உடையணிய முடியுமோ, அம்மாதிரி அணிய வேண்டுமென்பதிலேயே பூராவாக ஒரே சிந்தனையாக செலுத்திக்கொண்டிருந்தாள். சோனியாவும் நட்டாஷாவின் தாயாரும் நட்டாஷா எம்மாதிரி சொல்கிறாளோ அம்மாதிரியே செய்து வந்தார்கள். ஒரு தேன் வர்ண வெல்வெட் உடையை கோமகள் அணிவது என்றும், மற்ற இரண்டு பெண்களும் ஒரு சிகப்பு பட்டுப் பாவாடைக்கு மேலாக வெள்ளை மஸ்லின் பட்டுப் பாவாடையை அணிவது என்றும், அவர்களுடைய சட்டைகளில் ரோஜாப்பூ வைத்துக்கொள்வது என்றும், தலை முடிகளை அழகாக பின்னால் முடிபோட்டு அலங்கரித்துக்கொள்வது என்றும் முடிவு சொய்தார்கள்.

அவசியமான ஒவ்வொன்றையும் ஏற்கெனவே செய்தாகி விட்டது. பாதங்கள். கைகள், கழுத்துகள், காதுகள் இவைகளை யெல்லாம் கழுவிச் சுத்தம் செய்தார்கள். அத்தோடு வாசனைப் போட்டு, பவுடரும் போட்டார்கள். ஒரு நடனக் கச்சேரிக்கு எம்மாதிரி செய்ய வேண்டுமோ, அம்மாதிரி செய்தார்கள். பட்டு கால் உடைகளையும் வெள்ளை வெல்வெட் ஜோடுகளையும் அணிந்தார்கள். தலை முடியலங்காரம் அநேகமாய் முடிந்து விட்டது. சோனியா உடை அலங்காரத்தை முடித்து கொண்டிருந்தாள். ஆனால், நட்டாஷா மற்றவர்களுக்கு உதவி செய்துகொண்டு பரபரப்பாயிருந்தபடியால், அவளுடைய அலங்காரங்கள் இன்னும் முடியவில்லை. அவள் இன்னும் நிலைக் கண்ணாடிக்கு முன்னால் உட்கார்ந்து கொண்டிருந்தாள். அவளது மெல்லிய தோள்கள்மீது ஆடை அணியும் சட்டை காணப்பட்டது. அறையின் மத்தியில் அலங்காரங்களை முடித்துவிட்டு சோனியா நின்று கொண்டிருந்தாள். ஒரு ஊசியை அமுக்கி, தன்னுடைய விரல் வலிக்கிற வரையில் குத்திக்கொண்டிருந்தாள். அவளுடைய பட்டு நாடாவில் அந்த ஊசியை அழுத்தியபோது, அந்த நாடா கிரீச்சிட்டது.

'அதைச் செய்வது அப்படியல்ல; அதைச் செய்வது அப்படியல்ல, சோனியா' என்று நட்டாஷா சொல்லி, இரண்டு கைகளாலும் தன்னுடைய தலை முடியைப்பற்றி, அதில் வேலை

செய்துகொண்டிருந்த தாதியிடமிருந்து திமிறினாள். 'அந்த வளைவு சரியாயில்லை; இங்கே வா'.

சோனியா கீழே உட்கார்ந்தாள். அந்த ரிப்பனை நட்டாஷா வேறு விதமாக மாட்டினாள்.

'குமாரியே, நான் வேலையை முடிக்கட்டும். அம்மாதிரி என்னால் செய்ய முடியாது' என்று நட்டாஷாவின் தலை முடியைப் பற்றியிருந்த தாதி கூறினாள்.

'ஓ, என் அன்பே, நல்லது. கொஞ்சம் பொறு. ஆமாம், அதுதான் சரி, சோனியா.'

'இன்னும் நீங்கள் தயாராகவில்லையா? பத்து மணி ஆகப்போகிறது' என்று கோமகளின் குரல் வந்தது.

'இதோ, இதோ; அம்மா, நீ தயாராய் விட்டாயா?'

'நான் தலையில் தொப்பி வைக்கவேண்டியது ஒன்றுதான் பாக்கி.'

'நான் இல்லாமல், நீ அதை வைக்காதே. நீ சரியாக வைக்க முடியாது' என்று நட்டாஷா சொன்னாள்.

'ஆனால், இப்போதே பத்து மணி ஆகிவிட்டதே?'

அந்த நடனக் கச்சேரியில் அவர்கள் பத்தரை மணிக்கு இருக்க வேண்டுமென்று தீர்மானித்தார்கள். ஆனால், இன்னமும் நட்டாஷா அலங்காரம் செய்து முடியவில்லை. தவிர, போகிற வழியில் டாரிடா தோட்டத்துக்கும் போகவேண்டும்.

தலையலங்காரம் முடிந்ததும் குறுகிய பாவாடையோடு, தன்னுடைய நடன ஜோடுகள் தெரியும்படியாக, தனது தாயாரின் ஜாக்கட்டோடு நட்டாஷா சோனியாவுடன் ஓடினாள். அவள் அலங்காரம் சரியாக இருக்கிறதா என்று பார்த்துவிட்டு தன்னுடைய தாயாரிடம் ஓடினாள். தாயாருடைய தலையை இப்பக்கமும், அப்பக்கமாகவும் திருப்பிப் பார்த்துவிட்டு, அவளுடைய நரை மயிரில் வேகமாக முத்தமிட்டுவிட்டு, தன்னுடைய தாதிகளிருக்கு மிடத்திற்கு திரும்ப ஓடி வந்தாள். அவர்கள் அவளுடைய பாவாடையிலுள்ள விளிம்பை மடித்து உயரத்தை குறைத்துக்கொண்டிருந்தார்கள்.

நட்டாஷாவின் பாவாடை நீளமாக இருந்தபடியால், அதை மடக்கி விடுவதில் இப்போது தாமதப்பட்டுக்கொண்டிருந்தது. இரண்டு தாதிகள் அந்தப் பாவாடையின் ஓரத்தை மடக்கி தைத்துக் கொண்டிருந்தார்கள். ஒரு தாதி கோமகளிடமும் சோனியாவிடமும் இங்குமங்கும் ஓடிக்கொண்டிருந்தாள். மற்றொரு தாதி

அவர்களுடைய உடைகளைக் கையில் தூக்கிப் பிடித்துக்கொண்டு நின்றாள்.

'மாவ்ரா, சீக்கிரம், என் கண்ணே.'

'என்னுடைய அங்குஸ்தானைக் கொடு, குமாரி அங்கிருந்து...'

'நீங்கள் எப்போதுதான் தயாராகப் போகிறீர்கள்?' என்று அங்கே வாசலுக்கு வந்த கோமகன் கேட்டார். 'இதோ செண்ட் இருக்கிறது. பெரோன்ஸ்கயா காத்துக் காத்து அலுத்துப்போயிருப்பாள்'

'தயாராய்விட்டது குமாரி' என்று தாதி சொல்லி, அவளுடைய உயரமான பாவாடையைக் குலுக்கி, அதை இரண்டு விரல்களால் பிடித்துக்கொண்ட, அதிலிருந்து எதையோ ஒன்றை விலக்குவதற்காக அதை உதறி ஊதிக்கொண்டு, அதன்மூலம் அந்த ஆடை ரொம்ப சுத்தமாயிருப்பதாகக் காட்டிக்கொண்டிருந்தாள்.

நட்டாஷா தன்னுடைய ஆடையை அணிந்துகொள்ள ஆரம்பித்தாள்.

'ஒரு நிமிஷம், ஒரு நிமிஷம், உள்ளே வரவேண்டாம், அப்பா' என்று அவள், அவர் கதவைத் திறந்தபோது கூச்சலிட்டாள். அச்சமயம் அவள் மெல்லியதான அவளுடைய மஸ்லின் பட்டுப் பாவாடையை தலைவழியாகப் போட்டுக் கொண்டிருந்தாள். அவளுடைய முகத்தையெல்லாம் அது மறைத்திருந்தது. கதவை சோனியா மீண்டும் சாத்தினாள். ஒரு நிமிஷத்திற்குப் பின்பாக கோமகனை அவர்கள் உள்ளே வரவிட்டார்கள். அவர் ஒரு நீல நிற கோட் அணிந்து, கால் உறையும் ஜோடுகளும் அணிந்து, தலைக்கு பொமேடு தடவி வாசனை போட்டிருந்தார்.

'ஓ, அப்பா, நீர் எவ்வளவு இனிமையாக விளங்குகிறீர்! ரொம்ப கவர்ச்சிகரம்!' என்று நட்டாஷா கூச்சலிட்டாள். அவள் அறையின் மத்தியில் நின்று, தன்னுடைய பாாவடையிலுள்ள மடிப்புகளை எடுத்த விட்டுக்கொண்டிருந்தாள்.

'குமாரியே, தயவுசெய்து எனக்கு அனுமதி கொடுக்கவேண்டும்' என்று தாதி சொல்லி, முழங்கால் மண்டியிட்டு நட்டாஷாவின் பாவாடையை நேராக இழுந்து சரி செய்து கொண்டிருந்தாள்.

'நீ என்ன வேண்டுமானாலும் சொல்லு' என்று சோனியா ஒரு அதைரியமான குரலோடு நட்டாஷாவைப் பார்த்துச் சொன்னாள். 'நீ என்ன வேண்டுமானாலும் சொல். என்றாலும், இன்னும் அது நீளமாகத்தான் இருக்கிறது'

நட்டாஷா அங்கிருந்த கண்ணாடிக்கு முன்பாக போய் தன்னைப் பார்த்தாள். அந்தப் பாவாடை நீளமாகத்தான் இருந்தது.

'அம்மா, உண்மையில் அது நீளமாகவே இல்லை' என்று மாவ்ரா சொல்லி, முழங்கால்களிலேயே அந்த இளம் சீமாட்டிக்குப் பின்னால் தவழ்ந்து போய்க்கொண்டிருந்தாள்.

'நல்லது, அது நீளமாயிருந்தால், அதை மேலே இழுத்துக் கட்டுவோம்... ஒரு நிமிஷத்தில் மேலே இழுத்து மடித்துவிடலாம்' என்று துனியாஷா என்பவள் உறுதியோடு சொல்லி முழங்காலில் அமர்ந்து வேலை செய்ய ஆரம்பித்தாள்.

அதே வினாடியில் மெதுவாக அடியெடுத்து வைத்து, நாணத்தோடு தலையில் தொப்பியணிந்து, வெல்வெட் கவுன் அணிந்து கோமகள் உள்ளே வந்தாள்.

'ஓ... ஓ... ஓ... என் அழகே' என்று கோமகன் கூச்சலிட்டார். 'உங்கள் எல்லோரையும்விட அவள் அழகாய்க் காணப்படுகிறாள்.'

அவர் அவளை ஆலிங்கனம் செய்திருப்பார். ஆனால், முகம் நாணிச் சிவந்து, தன்னுடைய ஆடை கசங்கி விடுமோ என்று பயந்து கோமகள் அப்புறமாக ஒதுங்கினாள்.

'அம்மா, உன்னுடைய தொப்பியை இந்தப் பக்கமாக கொஞ்சம் சாய்த்துவை. நான் அதை சரியாக வைக்கிறேன்' என்று சொல்லி விட்டு நட்டாஷா அவளிடம் ஓடினாள். அவளுடைய பாவாடையை தைத்துக்கொண்டிருந்த அந்த தாதிகளால், அவள் போகிற வேகத்தில் பின்னால் தவழ்ந்து வர முடியாததால், அந்தப் பாவாடை' ஒரு இடத்தில் கிழிந்துவிட்டது.

'அட கடவுளே, என்ன நேர்ந்துவிட்டது? உண்மையில் அது என் தவறு அல்ல.'

'பாதகமில்லை. அதை நான் சரி செய்துவிடுகிறேன். அது வெளியே தெரியாது' என்றாள் துனியாஷா.

'எப்பேர்ப்பட்ட அழகு! ஒரு அசல் ராணி மாதிரியே இருக்கிறாள்' என்று ஒரு தாதி வாசலுக்கு வந்தபோது சொன்னாள். 'சோனியாவைப் பாருங்கள். எல்லோருமே ரொம்ப அழகாய் இருக்கிறார்கள்.'

10-15 மணிக்கு கடைசியாக அவர்கள் தங்கள் வண்டிகளில் ஏறியமர்ந்து புறப்பட்டார்கள். இன்னமும் டாரிடா தோட்டங் களுக்கு போகவேண்டி யிருந்தது.

பெரோன்ஸ்கயா தயாராயிருந்தாள். அவள் வயதானவளாய் இருந்தாலும் அழகாய் இல்லாதவளாய் இருந்தாலும், ராஸ்டோவ்களைப் போலவே எல்லா அலங்காரங்களையும் செய்து முடித்திருந்தாள். ஆனால், அவ்வளவு அவசரப்படாமல்

நிதானமாய்ச் செய்திருந்தாள். ஏனெனில், அவளைப் பொருத்த வரையில் இதெல்லாம் அவளுக்கு சகஜமான வேலைகள். அவளுடைய விகாரமான வயோதிக உடம்பை நன்றாய் சுத்தம் செய்து, வாசனையும் பவுடரும் போட்டு, ராஸ்டோவ்கள் மாதிரியே அவள் அலங்காரம் செய்திருந்தாள். காதுகளுக்குப் பின்னால் ஜாக்கிரதையோடு அவள் சுத்தம் செய்து, அவளுடைய வரவேற்பு அறைக்குள் மஞ்சள் உடையில் அவளுடைய 'கௌரவத் தோழி' என்ற பதக்கத்தை அணிந்து நுழைந்தாள். அச்சமயம் அந்தக் கிழவியின் தாதியும், ராஸ்டோவ்களின் தாதிகள் எப்படி மெய்மறந்து புகழ்ந்தார்களோ அதே மாதிரி புகழ்ந்தாள்.

ராஸ்டோவ்களின் அலங்காரங்களை பெரோன்ஸ்கயா புகழ்ந்தாள். அவர்கள் அவளுடைய அலங்காரத்தையும் புகழ்ந்தார்கள். பதினோரு மணிக்கு எல்லோரும் தங்களுடைய தலை அலங்காரங்கள் கலைந்து விடாதபடி ஜாக்கிரதையாக வண்டிகளில் அமர்ந்து புறப்பட்டார்கள்.



காலையிலிருந்து நட்டாஷாவுக்கு ஒரு வினாடிகூட ஓய்வு இல்லாமல் இருந்தது. அவள் என்ன செய்யவேண்டுமென்பதைப் பற்றி யோசிப்பதற்குக்கூட அவளுக்கு நேரம் இல்லை.

அந்த குளிர்ச்சியான காற்றில், நெருங்கியிருந்து அசைந்து போகும் அந்த வண்டியில் முதல் முதலாக யோசிக்க ஆரம்பித்தாள். அந்த பிரகாசமான வெளிச்சம் போடப்பட்டுள்ள அந்த நடன மண்டபத்தில், சங்கீதம், புஷ்பங்கள், நடனங்கள் இவைகளோடு, சக்கரவர்த்தியும், பீட்டர்ஸ்பர்க்கிலுள்ள புத்திசாலிகளான வாலிபர்களும் நிறைந்த அந்த மண்டபத்தில், தனக்கு எம்மாதிரி நடக்கப்போகிறது என்பதை முதல் முதலாக மனோராஜ்யம் செய்ய ஆரம்பித்தாள். நடக்கப்போவதைப்பற்றி அவளுக்கு ரொம்ப பிரமாதமாய் தோன்றியபடியால், உண்மையில் அம்மாதிரி நடக்குமென்று அவளால் நம்பவே முடியவில்லை. ஏனெனில், வெளியிலிருந்த குளிர்ந்த இருட்டும், வண்டிக் குள்ளிருந்த நெருக்கடியும் அவளுடைய நினைப்பிற்குப் பொருத்தமில்லாமல் இருந்தன. அவள் அந்த மாளிகையின் வாசலில் இறங்கிய பின்புதான், அவள் அனுபவிக்கப் போகிறவைகளை அறிந்துகொள்ள முடிந்தது. வாசலில்

விரிக்கப்பட்டிருந்த சிவப்பு. கம்பளத்தின் வழியாக நடன மண்டபத்திற்குள் நுழைந்தாள். தன்னுடைய உரோம மேல் சட்டையைக் கழற்றிவிட்டு, சோனியாவோடு தாயாருக்கு முன்பாக பிரகாசமான ஒளியோடும் இரு வரிசைகளிலும் புஷ்பங்களோடும் தோன்றிய அந்த மெத்தை படிக்கட்டுகளில் ஏறிப்போனாள். 'அப்பொழுது தான் ஒரு நடனக் கச்சேரியில் தான் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்ற ஞாபகம் அவளுக்குத் தோன்றியது. அம்மாதிரி சந்தர்ப்பங்களில் ஒரு பெண்ணுக்கு அத்தியாவசியம் என்று அவள் கருதிய கம்பீரமான தோற்றத்தை அவள் மேற்கொண்டாள். ஆனால், அதிருஷ்டவசமாக அவளுடைய கண்களில் நீர் நிறைந்தபடியால், அவளால் தெளிவாக எதையும் பார்க்க முடியவில்லை. அவளுடைய நாடி நிமிஷத்திற்கு நூறு தடவை அடித்தது. அவளுடைய இருதயத்தில் ரத்தம் படபடத்தது. அதனால் அந்தத் தோற்றத்தை அவளால் மேற்கொள்ள முடியவில்லை. அப்படிச் செய்திருந்தால் அவளுக்கு பரிகசிக்கத்தகுந்தாய் இருந்திருக்கும். பரபரப்பினால் உணர்ச்சியை இழந்து, அதை மறைப்பதற்கு தன் முழு பலத்தால் முயற்சி செய்து மேலே நடந்துகொண்டிருந்தாள். இந்தத் தோற்றம்தான் அவளுக்கு மிகச் சிறந்ததாய் இருந்தது. அவர்களுக்கு முன்பாகவும் பின்பாகவும் நடன உடைகள் அணிந்து தாழ்ந்த குரலில் பேசிக்கொண்டு பல விருந்தாளிகள் அங்கு வந்துகொண்டிருந்தார்கள். படிக்கட்டுகளில் திரும்பும் இடங்களில் நிலைக்கண்ணாடிகள் வைக்கப்பட்டிருந்தன. அவைகளில் சீமாட்டிகளின் வெள்ளை, வெளிறு நீலம், சிவப்பு உடைகளும், அவர்களுடைய திறந்த கழுத்துகளிலும் கைகளிலும் அணிந்திருந்த வைரங்களும் முகத்துக்களும் பிரதிபலித்தன.

நட்டாஷா அங்கிருந்த கண்ணாடிகளில் தன்னைப் பார்த்தாள். மற்றவர்களுக்கும் தனக்கும் உள்ள வித்தியாசத்தை அவளால் கண்டுபிடிக்க முடியவில்லை. எல்லாம் ஒன்றுசேர்ந்து ஒருபிரமாதமான ஊர்வலமாய் விளங்கியது. நடனமண்டபத்திற்குள் நுழைந்ததும், அங்கு ஒரேமாதிரியான ரீங்கார ஒலிகள், காலடி ஓசைகள், வாழ்த்துரைகள் இவையெல்லாம் சேர்ந்து நட்டாஷாவின் காதுகளைச் செவிடுபடுத்தின. அங்கிருந்த வெளிச்சங்களும் மின்னுதல்களும் இன்னும் அவளை அதிகமாக கிறங்க வைத்தன. வீட்டுக்காரரும், அவருடைய மனைவியும் வாசலில் 'அரை மணி நேரமாக நின்று கொண்டு, வருகிறவர்களையெல்லாம் 'உங்களைப் பார்ப்பதற்கு மிகுந்த மகிழ்ச்சியடைந்தோம்' என்ற அதே வார்த்தைகளைத் திரும்பத் திரும்ப சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

அவர்கள் ராஸ்டோவ்களையும் பெரோன்ஸ்கயாவையும் அதே மாதிரி வரவேற்றார்கள்.

வெள்ளை உடையில் தங்களுடைய கருங்கூந்தலில் ஒவ்வொருவரும் ஒரு ரோஜா புஷ்பத்துடன் தோன்றிய அந்த இரண்டு பெண்கள் ஒரே மாதிரி வணங்கி மரியாதை செய்தார்கள். ஆனால், அந்த வீட்டுக்காரியின் கண்கள் தன்னை அறியாமலேயே அந்த ஒல்லியான நட்டாஷாவின் உருவத்தில் அதிக நேரம் நிலைத்து நின்றது. அவள் நட்டாஷாவைப் பார்த்து அவளுக்கு மட்டும் விசேஷமான புன்முறுவல் காட்டினாள். அவளைப் பார்த்தவுடன், அவளுக்கு தன்னுடைய தங்கத்திற்கு ஒப்பான, இனி திரும்ப முடியாத, தன்னுடைய இளம் பெண் பருவகால நினைப்புகளும், அவள் முதன் முதலில் நடனமாடிய ஞாபகமும் அவளுடைய உள்ளத்தில் ஒருவேளை தோன்றியிருக்கலாம். அந்த வீட்டுக்காரர் நட்டாஷாவைக் கூர்ந்து கவனித்து, அந்த கோமகளைப் பார்த்து, 'உமது குமாரியா!' என்று கேட்டார்.

'ரொம்ப கவர்ச்சிகரமானவள்' என்று அவர் சொல்லிவிட்டு, தம்முடைய விரல் நுனிகளை முத்துமிட்டுக்கொண்டார்.

நடன மண்டபத்தில் விருந்தாளிகள் எல்லோரும் வாசல் பக்கத்தில் கூடி நின்று சக்கரவர்த்தியை எதிர்பார்த்துக்கொண்டிருந் தார்கள். அந்தக் கூட்டத்தின் முதல் அணியில் கோமகள் இடம் பிடித்து நின்றுகொண்டிருந்தாள். தன்னைப்பற்றிப் பலர் கேட்டுக்கொண்டிருப்பதை நட்டாஷா தன் காதுகளால் கேட்டும் உணர்ந்தும் வந்தாள்.

'நம்மைப் போன்றவர்கள் இன்னும் சிலர் இருக்கிறார்கள். இன்னும் சிலர் நம்மைவிட மட்டாய் இருக்கிறார்கள்' என்று அவள் நினைத்தாள். அந்தக் கூட்டத்திலிருந்த முக்கியமானவர்களை கோமகளுக்குச் சுட்டிக்காட்டி, பெரோன்ஸ்கயா சொல்லிக் கொண்டிருந்தாள்.

'அவர்தான் டச்சு தேசத்து ஸ்தானாதிபதி. உனக்கு தெரிகிறதா? அந்த நரை முடி கொண்ட மனிதர்' என்று அவள் சொல்லி, சுருளையான வெள்ளையான தலைமுடியை அடர்த்தியாகக் கொண்ட ஒரு வயோதிகரைச் சுட்டிக்காட்டினாள். அச்சமயம் அவர் சொல்லிய ஏதோ ஒன்றைக் கேட்டு அவரைச் சுற்றி நின்ற சீமாட்டிகள் சிரித்துக்கொண்டிருந்தார்கள்.

'ஆ, இதோ வந்துவிட்டாள். பீட்டர்ஸ்பர்க்கின் ராணி கோமகள் பெஜுகாவா' என்று பெரோன்ஸ்கயா சுட்டிக்காட்டிச் சொன்னாள். அப்பொழுதுதான் அவள் நுழைந்துகொண்டிருந்தாள். 'எவ்வளவு

இனிமையானவள்! மரியா அண்டோனாவ்னாவுக்கு* (மரியா அண்டோனாவ்னா நாரிஷ்கினா என்பவள் மிகப் பிரமாதமாகப் புகழ் பெற்ற ராஜசபை அழகி. முதலாவது அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியின் வைப்பாட்டி. பிறவியில் அவள் இளவரசி செட்வெர்டைன்ஸ்கயா.) முற்றிலும் சமமாக இருக்கிறாள். அங்கே பாருங்கள். ஆண்கள், வாலிபர்களும், வயோதிகர்களும் அவளுக்கு எப்படி மரியாதை செய்கிறார்கள் என்று பாருங்கள். மிகுந்த அழகானவள், மிகுந்த புத்திசாலி... அந்த இளவரசர்... இருக்கிறாரே, அவர் அவளிடம் மிகுந்த பைத்தியம்கொண்டு இருக்கிறார். அதோ பாருங்கள், அந்த இரண்டு பேர், அவர்கள் அழகாய் இல்லாவிட்டாலும்கூட, அவள் பின்னால் ஓடுவதைப் பாருங்கள்.

அந்த மண்டபத்தில் குறுக்காய் வந்துகொண்டிருந்த ஒரு சீமாட்டியையும், அவளுக்குப் பின்னால் வந்துகொண்டிருந்த அவளுடைய அழகற்ற குமாரியையும் அவள் சுட்டிக்காட்டினாள்.

'அவள் ஒரு நல்ல சிலாக்கியமான ஜோடி. ஒரு பெரிய பணக்காரி. இங்கே பாருங்கள். அவளை திருமணம் செய்துகொள்ளக்கூடிய ஜோடிகள் பின்னால் வருகிறார்கள்' என்று பெரோன்ஸ்கயா கூறினாள்.

'அவர்தான் பெஜுகாவாவின் சகோதரர்; அனடோல் குராகின்' என்று அவள் சொல்லி, ஒரு அழகான குதிரைப் படை அதிகாரியை சுட்டிக்காட்டினாள். அவர் அச்சமயம் நிமிர்ந்த தலையோடு அவர்கள் பக்கமாக போய்க்கொண்டிருந்தார். அந்தச் சீமாட்டிகளின் தலைகளுக்கு மேலாக, எதையோ ஒன்றைப் பார்த்துக்கொண்டே போனார்.

'அவர் அழகாய் இருக்கிறார் இல்லையா? அந்தப் பணக்காரப் பெண்ணை அவருக்கு திருமணம் செய்யப்போகிறார்கள் என்று நான் கேள்விப்படுகிறேன். ஆனால், உன்னுடைய மைத்துனர் ட்ரூபெட்ஸ் கோய் அவளிடம் மிகுந்த பிரியம் காட்டி வருகிறார். அவளிடம் கோடிக்கணக்கான பணமிருப்பதாகச் சொல்லுகிறார்கள். ஓ, ஆமாம், அவர்தான் பிரஞ்சு ஸ்தானாதிபதி' என்று அவள் காலெயின்கோர்ட்டைப் பற்றி கோமகள் கேட்ட கேள்விக்குப் பதிலாகச் சொன்னாள். 'தாம் ஏதோ ஒரு ராஜா மாதிரி தோன்றுகிறார். எப்படியிருந்தாலும் பிரஞ்சுக்காரர்கள் எல்லோருமே அழகானவர்கள். ரொம்ப அழகானவர்கள். உயர் வட்டாரங்களில், அவர்களைவிட அழகானவர்கள் வேறு யாருமே இல்லை. ஆ, இதோ வந்துவிட்டாள். ஆமாம், அவள் தான். எல்லோரையும்விட அழகானவளாய் இருக்கிறாள். நம்முடைய மரியா

அன்டோனாவ்னா; அவளுடைய அலங்காரத்தைப் பாருங்கள், எவ்வளவு ஆடம்பரமில்லாமல் இருக்கிறது. எவ்வளவு இனிமையாய் இருக்கிறது. அந்தக் கண்ணாடிகள் அணிந்த வருகிறதடித்த உருவம்தான் சர்வதேச பிரீ மேஸன்' என்று அவள் சொல்லி, பீயரைச் சுட்டிக்காட்டினாள். 'அவருடைய மனைவிக்குப் பக்கத்தில் அவரை வைத்துப் பாருங்கள். அவர் அசல் கோமாளி மாதிரியே தோன்றுகிறார்.'

தமது தடித்த உடல் இங்கும் அங்கும் சாய, அந்தக் கூட்டத்தின் வழியே முன்னேறி, வலப்பக்கமும் இடப்பக்கமும் தமக்கு அறிமுகமானவர்களிடம் நல்ல குணத்தோடு வணக்கம் சொல்லி, பீயர் வந்துகொண்டிருந்தார். ஏதோ ஒரு நெருக்கமான சந்தையில் நடந்து போவதைப்போல அவர் காணப்பட்டார். அவர் யாரையோ ஒருவரைத் தேடிக்கொண்டு போகிறவரைப்போல, முன்னேறிப் போனார். பழக்கமான அந்த பீயரின் முகத்தை மகிழ்ச்சியோடு நட்டாஷா நோக்கினாள். பெரோன்ஸ்கயா என்பவளால் கோமாளி என்று அழைக்கப்பட்ட அவர், தங்களை - முக்கியமாகத் தன்னையே-தேடிக்கொண்டிருக்கிறார் என்பதை அவள் அறிவாள். அவர் அந்த நடனக் கச்சேரிக்கு வந்து அவளுடன் நடனமாடுவதற்கு ஜோடிகளை அறிமுகப்படுத்துவதாக அவளுக்கு வாக்குறுதி கொடுத்தார். அவர் அவளிடம் வந்து சேருவதற்கு முன்பாக ஜன்னலுக்குப் பக்கத்தில் நின்றார். அங்கே ஒரு மிகுந்த அழகான, நடுத்தர உயரமுள்ள ஒருவர், வெள்ளை சீருடை அணிந்து, மற்றொரு உயரமான பேர்வழியோடு பேசிக்கொண்டிருந்தார். அவரைப் பார்த்து அங்க நின்றார். அந்த உயரமானவர் பதக்கங்களையும், ரிப்பன்களையும் அணிந்திருந்தார். அந்த வெள்ளை யூனிபாரத்தில் இருந்த குட்டையான வாலிபர் யார் என்பதை நட்டாஷா உடனே அறிந்துகொண்டாள். அவர்தான் பால்கோன்ஸ்கி. அவர் இன்னும் அதிகமாய் இளமையானவும் சந்தோஷமாகவும் அழகாகவும் இருப்பதாக அவளுக்குத் தோன்றியது. 'நமக்குத் தெரிந்த இன்னும் ஒருவர், அதோ நிற்கிறார். அவர்தான் பால்கோன்ஸ்கி. உனக்குத் தெரிகிறதா, அம்மா?' என்று நட்டாஷா சொல்லி இளவரசர் ஆண்ட்ரூவை சுட்டிக்காட்டினாள். 'ஆட்ராட்னோ என்ற இடத்தில், ஒரு நாள் இரவு நமது வீட்டில் தங்கியது உனக்கு ஞாபகமில்லையா?'

'ஓ, உனக்கு அவரைத் தெரியுமா?' என்று கேட்டாள் பெரோன்ஸ்கயா.

'என்னால் அவரை சகிக்க முடியாது. வெயில் அடிப்பதோ, மழை பெய்வதோ அவருடைய தயவில்தான் இருக்கிறது' என்று

பழமொழி சொல்வார்களே, அம்மாதிரி அவர் இருக்கிறார். அவர் மிகுந்த கர்வம் கொண்டவர்; தமது தகப்பனாரைப் போன்றவர். அந்த ஸ்பெரான்ஸ்கி என்பவரோடு சேர்ந்துகொண்டு, ஏதோ சில திட்டங்களையோ, வேறு எதையோ தயார் செய்து கொண்டிருக்கிறார். இங்கே பாருங்கள். அந்தச் சீமாட்டிகளை எப்படி நடந்துகிறாரென்று பாருங்கள். ஒரு சீமாட்டி அவரோடு பேசிக்கொண்டிருக்கும்போதே அவர் திரும்பிவிட்டார்' என்று அவரைச் சுட்டிக் காட்டிசொன்னாள். 'என்னை மட்டும் அந்தச் சீமாட்டியை நடத்துவதுபோல நடத்தினால், நான் அவருக்குச் சரியாகக் கொடுப்பேன்.'



திடீரென்று ஒவ்வொருவரும் பரபரப் படைந்தார்கள். அங்கிருந்த கூட்டம் பேசிக் கொண்டே முதலில் முன்னால் போயிற்று. அப்புறம் பின்னால் வந்தது. இரண்டு கூட்டத்திற்கும் மத்தியில் உள்ள வெளி வழியாக சக்கரவர்த்தி வந்துகொண்டிருந் தார். அவரைப் பார்த்ததும் சங்கீதம் முழங்கியது. அவருக்குப் பின்னால், வீட்டுக்காரரும், வீட்டுக்காரியும் வந்துகொண்டிருந்தார்கள். வந்தனங்கள் கூறுவதை சீக்கிரம் முடித்துவிட வேண்டும் என்று ஆவலுள்ளவராக வலது பக்கமும் இடது பக்கமும் திரும்பி, தமது தலையை தாழ்த்தி வந்தனம் கூறிவிட்டு, வேகமாய் நடந்து வந்தார். 'அலெக்ஜாண்டரே, எலிஜபெத்தே, எங்கள் உள்ளங்களை நீங்கள் கொள்ளை கொண்டுவிட்டீர்கள்' என்று ஆரம்பிக்கும் பாட்டின் முதல் அடியை, 'பாலானெய்ஸ்' என்ற கீதத்தில் பாண்டு வாத்தியம் முழங்கிக் கொண்டிருந்தது. வரவேற்பு அறைக்கு சக்கரவர்த்தி போனார். அந்த அறையின் வாசல்களை நோக்கி கூட்டம் முன்னேறியது. பலர் பரபரப்போடு வாசல்வரை போவதும், திரும்பி வருவதுமாய் இருந்தார்கள். திடீரென்று அந்த அறையின் வாசலிலிருந்து கூட்டம் பின்வாங்கியது. மீண்டும் சக்கரவர்த்தி அந்த அறையின் வாசலில் தோன்றி, வீட்டுக்காரியோடு பேசிக் கொண்டிருந்தார். பரபரப்படைந்த ஒரு வாலிபர் முன்னால் நெருக்கித் தள்ள வேண்டாம் என்று சீமாட்டிகளை எச்சரித்தார். மட்டு மரியாதை எல்லாவற்றையும் மறந்துவிட்ட சில சீமாட்டிகள் தங்கள் அலங்காரங்கள் கலைவதையும் கவனிக்காமல் முன்னே தள்ளினார்கள். 'பாலானெய்ஸ்' சங்கீதத்திற்குத் தக்கபடி நடனமாடு

வதற்கு ஆண்கள் தங்களுக்கு ஜோடிகள் சேர்த்துக் கொண்டிருந் தார்கள்.

ஒவ்வொருவரும் பின்வாங்கினார்கள். வரவேற்பு அறை யிலிருந்து வீட்டுக்காரியை அழைத்துக்கெண்டு புன்னகையோடு சக்கரவர்த்தி வெளியே வந்தார். மரியா அண்டோனாவ்னா நாரிஷ்கினாவை அழைத்துக்கொண்டு வீட்டுக்காரர் பின்னார் வந்தார். அவர்களுக்குப் பின்னால், ஸ்தானாதிபதிகளும், மந்திரிகளும், பற்பல ஜெனரல்களும் வந்தார்கள். அவர்களை யெல்லாம் பெரோன்ஸ்கயா கவனத்தோடு பெயர் சொல்லி அடையாளம் காட்டினாள். சீமாட்டிகளில் பாதிப் பேர்களுக்கு மேலாக ஜோடிகள் சேர்த்துவிட்டார்கள். அவர்கள் பாலானெய்ஸ் நடனத்தை ஆரம்பிக்க தயாராகிக்கொண்டிருந்தார்கள். சுவருக்குப் பக்கத்தில் சில பெண்கள் கூடி' நின்றார்கள். அவர்களோடு நட்டாஷாவும், அவளுடைய தாயாரும், சோனியாவும் நின்று கொண்டிருந்தார்கள். தன்னை யாரும் நடனத்திற்கு அழைக்காத படியால், தான் அங்கேயே நின்றுவிட நேர்ந்துவிடுமோ என்று நட்டாஷா நினைத்தாள். அவள் நின்றுகொண்டிருந்தபோது, அவளுடைய மெல்லிய கைகள் கீழே தொங்கிக்கொண்டிருந்தன. இன்னமும் உருவாகாத அவளுடைய மார்பகம் ஒரே கதியில் எழுந்தும் அமுங்கியும் வந்தது. அடங்கிய மூச்சுடனும், பீதியுற்று நேராக முன்னால் பார்க்கும் ஜொலிக்கும் கண்களுடனும் அவள் நின்றுகொண்டிருந்தாள். மகிழ்ச்சியின் சிகரத்தை அடைவதற்கோ, அல்லது ஏமாற்றத்தால் ஏற்படும் துன்பத்தை அடைவதற்கோ தயாராய் இருப்பதுபோல் தோன்றினாள். பெரோன்ஸ்கயா குறிப்பிட்ட சுட்டிக்காட்டி சொல்லிக் கொண்டிருந்த பெரிய மனிதர்களைப் பற்றியோ, அல்லது சக்கரவர்த்தியைப் பற்றியோ அவள் அக்கறை காட்டவில்லை. அவளுக்கு ஒரே ஒரு நினைப்புதான் இருந்தது: 'என்னை நடனமாட யாரும் அழைக்காமல் இருந்து, நடனமாடும் முதல் கோஷ்டியில் நான் சேராமல் இருந்து விடுவேனோ? இங்குள்ள ஆண்களில் ஒருவர்கூட என்னை கவனிக்காமல் இருந்துவிடுவார்களோ? அவர்கள் என்னை பார்ப்பதாகக்கூட தெரியவில்லையே. அப்படியே பார்த்தாலும் அவர்கள், ''ஆ, எனக்கு வேண்டிய ரகம் இவளல்ல; ஆகவே, இவளைப் பார்ப்பதால் பலன் இல்லை'' என்று நினைப்பதைப் போல் அல்லவா இருக்கிறது? இல்லை, அது சாத்தியமில்லை. நான் நடனமாட எப்படி தவிக்கிறேன் என்பதையும், எவ்வளவு சிலாக்கியமாக நான் நடனமாடுவேன் என்பதையும் என்னுடன்

நடனமாடுவதனால் அவர்கள் எவ்வளவு இன்பம் அடைவார்கள் என்பதையும் அவர்கள் அறிய வேண்டும்' என்று நினைத்தாள்.

பாலானெய்ஸ் சங்கீத தொனிகள் வெகு நேரமாக கேட்டுக் கொண்டிருந்தன. அந்த தொனிகள் இப்பொழுது நட்டாஷாவின் காதுகளுக்கு துக்கத்தை உண்டுபண்ண ஆரம்பித்தன. அவள் அழவிரும்பினாள். பெரோன்ஸ்கயா அவர்களை விட்டுப் போனாள். அறையின் மற்றொரு கோடியில் கோமகன் இருந்தார். நடுக்காட்டில் விடப்பட்டது போலவும், அந்நியர்களின் மத்தியில் விடப்பட்டதுபோலவுமம், இவர்களிடம் ஒருவரும் சிரத்தை காட்டாதது போலவும், ஒருவரும் இவர்களை விரும்பாதது போலவும், நட்டாஷாவும் கோமகளும் சோனியாவும் அங்கே நின்றுகொண்டிருந்தார்கள். ஒரு சீமாட்டியுடன் இளவரசர் ஆண்ட்ரூ இவர்கள் பக்கமாக போய்க்கொண்டிந்தார். இவர்களை அவர் அடையாளம் கண்டுகொள்ளவில்லை. தமது கைமேல் கை வைத்துக்கொண்டிருந்த தமது ஜோடியோடு அந்த அழகிய அனடோல் புன்சிரிப்போடு பேசிக்கொண்டிருந்தார். நட்டாஷாவை அவர் பார்த்தபோது, ஒரு சுவரை பார்ப்பதுபோல நோக்கினார். அவர்கள் பக்கமாக இரண்டு தடவைகள் போரிஸ் போனபோது, தமது முகத்தை இரண்டு தடவைகளிலும் திருப்பிக்கொண்டார். நடனம் ஆடாத பெர்க்கும் அவரது மனைவியும் இவர்களிடம் வந்தார்கள்.

தங்கள் குடும்பம் அங்கு கூடி நிற்பதைக் கண்டு, அதாவது அந்தக் குடும்பத்திற்கு, பேசுவதற்கு வேறு இடம் அகப்படாதது போலவும், அந்த நடன மண்டபத்தில்தான் பேசக் கூடி இருப்பது போலவும் காணப்பட்டது நட்டாஷாவுக்கு அவமானமாய் இருந்தது. ஆகவே, வெரா சொல்லுவதை அவள் கேட்கவோ, அல்லது அவளை பார்க்கவோ அவள் செய்யவில்லை. தன்னுடைய பச்சை ஆடைகளைப் பற்றி வெரா ஏதோ சொல்லிக்கொண்டிருந்தாள்.

சக்கரவர்த்தி மூன்று பேர்களுடன் நடனமாடினார். கடைசி ஜோடியோடு அவர் நடனமாடி நிறுத்தியதும், சங்கீதமும் நின்றது. ஒரு பரபரப்படைந்த மெய்க்காப்பாளர் ஓடிவந்து, இன்னும் பின்னால் தள்ளி நிற்கும்படி ராஸ்டோவ்களை கேட்டுக்கொண்டார். ஆனால், அவர்களோ சுவரை நெருங்கித்தான் ஏற்கெனவே நின்று கொண்டிருந்தார்கள். காலரியில் இருந்து தெளிவான, சுத்தமான, கவர்ச்சியான, தாளத்துக்கு ஒத்ததான நடன சங்கீத ஒலிகள் வந்துகொண்டிருந்தன. புன்சிரிப்போடு நடன மண்டபத்தில் இருந்தவர்களை சக்கரவர்த்தி நோக்கினார். ஒரு நிமிஷம் கழிந்தது. என்றாலும் இன்னும் ஒருவரும் நடனத்தை ஆரம்பிக்கவில்லை. ஒரு

மெய்க்காப்பாளர் கோமகள் பெஜுகாவாவிடம் சென்று, தம்முடன் நடனம் ஆடும்படி அழைத்தார். அவள் புன்சிரிப்போடு தனது கையை உயர்த்தி, அவரை பார்க்காமலே, அவரது தோளில் வைத்தாள். அந்த மெய்க்காப்பாளர் நடனத்தில் தேர்ச்சி பெற்றவர் ஆகையால், தமது ஜோடியின் இடுப்பில் கைகொடுத்து பலமாய் பற்றி, மெதுவாக அங்கிருந்து நகர்ந்து, அந்த நடன வட்டத்தின் ஓரமாக ஒரு தரம் சுற்றி, அந்த அறையின் மூலையில் ஹெலனின் இடது கையைப் பற்றி அவ்ளைத் திருப்பினார். வர வர துரிதமாய்க் கொண்டு போகும் சங்கீதத்தைத் தவிர, அங்கு கேட்ட ஒலி ஒன்றே ஒன்றுதான். அதாவது தாளத்திற்குத் தக்கபடி தமது சுறுசுறுப்பான, வேகமான கால்களால் தார்ச் சக்கரங்களை ஒலித்து நடனமாடி வந்தார். ஒவ்வொரு மூன்றாவது தாளத்தின்போதும் அவள் சுற்றியபோது, அவளது வெல்வெட் உடை பறந்து ஜொலித்தது. நட்டாஷா அவர்களைப் பார்த்தாள். அவளுக்கு அழுகை வந்தது. ஏனென்றால், அந்த முதல் நடனத்தில் தன்னால் சேர்ந்துகொள்ள முடியவில்லையே என்ற வருத்தமே அதற்குக் காரணம்.

முதல் வரிசையில் ராஸ்டோவ்கள் நின்றிருந்த இடத்திற்கு சிறிது தூரத்திலேயே இளவரசர் ஆண்ட்ரூ நின்று கொண்டிருந்தார். குதிரைப் படை கர்னலுக்கு உரிய வெள்ளை சீருடை அணிந்து, கால்களில் கால் உறைகள் தரித்து நடன ஜோடுகள் போட்டுக்கொண்டிருந்தார். பரபரப்பாகவும் பிரகாசமாகவும் பார்த்துக்கொண்டிருந்தார். பேரன் பிர்ஹாப் அடுத்தநாள் நடக்கப் போகும் ராஜ்ய சபையின் முதல் கூட்டத்தைப் பற்றி அவருடன் பேசிக்கொண்டிருந்தார். 'ஸ்பெரான்ஸ்கியோடு மிகவும் நெருங்கி இளவரசர் ஆண்ட்ரூ தொடர்பு வைத்துக்கொண்டிருந்தபடியால், சட்டங்கள் செய்யவேண்டிய கமிட்டியின் வேலைகளில் அவர் கலந்திருந்தபடியால், மறுநாள் சட்டத்தைப்பற்றிய நம்பிக்கையான தகவல்களை அவர் கொடுக்க முடியும். அந்தக் கூட்டத்தைப் பற்றி பற்பல விதமான வதந்திகள் பரவி வந்தன. பிர்ஹாப் சொல்லிக் கொண்டிருந்ததை அவர் கவனிக்காமல் சக்கரவர்த்தியை பார்ப்பதும், நடனக் கூட்டத்தில் கலந்து கொள்ள இன்னும் தைரியம் ஏற்படாமல் அங்கு நின்றுகொண்டிருந்த ஆண்களை பார்ப்பதுமாய் இருந்தார்.

சக்கரவர்த்தியின் பிரசன்னத்தால் நாணியிருந்த ஆண்களையும், தங்களை நடனமாட அழைக்க மாட்டாரா என்று மூச்சு விடாமல் ஏங்கியிருந்த பெண்களையும் அவர் உன்னிப்பாய் கவனித்து வந்தார்.

அவரிடம் பீயர் வந்து அவர் கையைப் பற்றினார்.

'நீர் எப்பொழுதும் நடனமாடுவீர். எனக்கு அபிமானம் உள்ள குஞ்சு ராஸ்டோவா இங்கே இருக்கிறாள். அவளை நடனமாடு வதற்கு நீர் அழையும்' என்று அவர் சொன்னார்.

'அவள் எங்கே இருக்கிறாள்?' என்று பால்கோன்ஸ்கி கேட்டார். அங்கிருந்த பேரனை திரும்பிப் பார்த்து, 'என்னை மன்னிக்க வேண்டும். இந்த உரையாடலை வேறு எங்காவது நாம் பேசி முடித்துக் கொள்வோம். நடனக் கச்சேரிக்கு வந்தால், ஒருவர் நடனமாடவேண்டும்' என்று அவர் சொன்னார். பீயர் காட்டிய திசையில் திரும்பி முன்னேறினார். அதைரியமும் சோர்வும் கொண்ட நட்டாஷாவின் முகம் அவருடைய கண்களுக்குப் பட்டது. அவளை அடையாளம் தெரிந்துகொண்டார். அவளுடைய உணர்ச்சிகளை யூகித்துக்கொண்டார். இதுதான் அவளுடைய நடன அரங்கேற்றம் என்பதையும் அறிந்தார். ஜன்னலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து அவள் பேசிய உரையாடலையும் நினைவு கூர்ந்தார். மகிழ்ச்சி கொண்ட முகத்தோடு கோமகள் ராஸ்டோவாவிடம் அவர் போனார்.

'என்னுடைய குமாரியை உமக்கு அறிமுகப்படுத்துவதற்கு என்னை அனுமதிக்க வேண்டும்' என்று முகத்தில் சிவப்பு நிறம் பொங்க கோமகள் பேசினாள்.

'முன்பே அவளுடன் அறிமுகமாகும் மகிழ்ச்சியை நான் பெற்றிருக்கிறேன். என்னை கோமகளுக்கு ஞாபகம் இருந்தால் அது தெரியும்' என்று ஒரு தணிந்த, மரியாதையான தலைவணக்கத்தோடு இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார். அவர் முரட்டுத்தனமாய் இருப்பார் என்று பெரோன்ஸ்கயா கூறிய வார்த்தைகளை பொய்ப்பித்து நட்டாஷாவிடம் நெருங்கினார். நடனத்திற்கு அவர் கேட்டுக் கொண்ட அழைப்பை கூறி முடிப்பதற்கு முன்பாகவே, அவளது இடையை பற்றுவதற்காக கையை நீட்டினார். நடனத்திற்குப் போகலாம் என்று அழைத்தார். நட்டாஷாவின் முகத்தில் ஏமாற்றத்திற்கோ, பரவசத்திற்கோ தயாராய் இருந்த நடுநடுங்கிய தோற்றம் தோன்றிக்கொண்டிருந்து. அந்தத் தோற்றம் திடீரென்று மகிழ்ச்சியுள்ள நன்றியுள்ள குழந்தைத்தனமான புன்சிரிப்பாக பிரகாசம் அடைந்தது.

'உமக்காக நான் வெகு நேரமாக காத்துக்கொண்டிருக்கிறேன்' என்று அந்த நடுங்கிய மகிழ்ச்சியுள்ள சிறிய பெண் சொல்லுவதைப் போல் அவளுடைய புன்னகை இருந்தது. கண்ணீரைப் போக்கிய அந்தப் புன்னகையோடு தனது கையை உயர்த்தி இளவரசர் ஆண்ட்ரூவின் தோளில் வைத்தாள். அந்த நடனக் கூட்டத்தில்

கலந்துகொண்ட இரண்டாவது ஜோடி அவர்கள்தான். அவர் காலத்தில் மிகச் சிறந்த நடனக்காரர்களில் இளவரசர் ஆண்ட்ரூவுக்கு ஒருவர். நட்டாஷாவுக்கு மிக நேர்த்தியாக நடனமாடினாள். வெள்ளை வெல்வெட் நடன ஜோடுகளுக்குள் இருந்த அவளுடைய சிறிய பாதங்களால் வேகமாகவும், சுலபமாகவும் அவளுடைய முயற்சி இல்லாமலேயே ஆடிக்கொண்டிருந்தன. அவளுடைய முகம் இன்ப வெள்ளத்தினால் ஒளி வீசிக்கொண்டிருந்தது. அவளுடைய திறந்த கைகளும் கழுத்தும் அழகானவையாய் இல்லை. ஹெலனின் தோள்களோடு ஒப்பிடும்போது அவை மெலிவானதாய் காணப்பட்டன. அவளுடைய மார்பு இன்னும் திரண்டு உருப்பெறவில்லை. ஆயிரக்கணக்கானவர்கள் ஹெலனின் உருவத்தைப் பார்த்து, அந்தப் பார்வையினால் வார்னிஷ் அடித்ததைப்போல கடினமாய் காணப்பட்டாள். ஆனால் நட்டாஷா ஒரு சிறிய பெண்போல தோன்றினாள். அவள் உருவத்தைக் காட்டுவது இதுவே முதல் தடவை. இம்மாதிரி செய்ய வேண்டியது மிகவும் அவசியமானது என்று அவளுக்கு சொல்லப்பட்டிருக்கா விட்டால், அவள் மிகவும் நாணம் அடைந்திருப்பாள்.

இளவசரர் ஆண்ட்ரூ நடனமாடுவதற்கு மிகவும் பிரியம் கொண்டார். அரசியல் விஷயங்கைளப் பற்றியோ, வேறு புத்திசாலித்தனமான பேச்சுகளைப் பற்றியோ, அவரிடம் பேசுவ்தற்கு ஒவ்வொருவரும் வந்துகொண்டிருந்தபடியால், அதிலிருந்து தப்புவதற்காக அவர் நடனமாட விரும்பினார், தவிர சக்கரவர்த்தியின் பிரசன்னத்தால் அங்கு ஏற்பட்டிருந்த ஒரு நாணத்தை அவர் விரும்பவில்லை; அதைத் தகர்க்க எண்ணினார். அதற்காகவும் நடனமாட விரும்பினார். நட்டாஷாவை பீயர் சுட்டிக் காட்டியதால், அவளைத் தமது ஜோடியாக அவர் தேர்ந்தெடுத்தார். அவர் கண்ணில் முதலாவது பட்ட அழகான பெண்ணாகவும் அவள் இருந்தபடியால், அவர் தேர்ந்தெடுத்ததற்கு அதுவும் ஒரு காரணம். நடனமாடுவதற்கு அந்த ஒல்லிய, தொய்வான உருவத்தை அவர் அணைப்பதற்கு முன்பாகவே தம்மிடம் அவள் நெருங்கி இருப்பது போலவும், மிக நெருக்கமாக அவள் இருந்து புன்னகை காட்டுவது போலவும் அவர் உணர்ந்தார். அவளுடைய மனோகரமான கவர்ச்சி ஒயினைப்போல அவருடைய மண்டையில் ஏறியது. நடனம் முடிந்து அவளை விட்ட பின்பு, அவர் புத்துணர்ச்சியும் புது வேகமும் கொண்டதுபோல உணர்ந்தார். ஆழ்ந்து மூச்சு விட்டுக்கொண்டு நடனமாடும் மற்றவர்களை கவனித்து வந்தார்.

# 6

## 17

இளவரசர் ஆண்ட்ரூ நடனமாடிய பின்பு, தம்முடன் ஒரு தடவை நடனமாடும்படி நட்டாஷாவை போரிஸ் கேட்டார். அதன் பின்னால், அந்த நடனக் கச்சேரியில் முதன் முதலாக ஆடிய மெய்க்காப்பாளரும் வேறு பல வாலிபர்களும் வந்து தங்களுடன் நடனமாடும்படி நட்டாஷாவைக் கேட்டார்கள். இதனால் முகம் சிவந்து மகிழ்ச்சி கொண்ட நட்டாஷா தனக்குப் போக அதிகப்படியாய் வந்தவர்களை சோனியாவுடன் நடனமாடும்படி அனுப்பினாள். அன்று மாலை பூராவாக நட்டாஷா விடாமல் நடனமாடிக் கொண்டே இருந்தாள். அங்கு இருந்த ஒவ்வொருவருடைய மனதையும் கவர்ந்த விஷயங்களைப்பற்றி நட்டாஷாவுக்கு ஒன்றும் தெரியாது. அவள் கவனிக்கவே இல்லை. பிரஞ்சு ஸ்தானாதிபதியுடன் நீண்ட நேரமாக சக்கரவர்த்தி பேசிக்கொண்டிருந்தார். ஒரு குறிப்பிட்ட சீமாட்டியிடம் மிகுந்த கருணை காட்டி நடந்து கொண்டார். இவைகள்ளயெல்லாம் நட்டாஷா கவனிக்கவில்லை. அல்லது இளவரசர் இன்னின்னார், இன்னின்னாரோடு என்ன பேசினார் அல்லது செய்தார் என்பதையும் அவள் கவனிக்கவில்லை. அன்று நடனமாடிய ஹெலன் மிகப் பிரமாதமாக நடமாடினாள் என்பதையும், இன்னின்னார் அவளோடு கருணைகாட்டி கௌரவப்படுத்தினார்கள் என்பதையும் அவள் கவனிக்கவில்லை. சக்கரவர்த்தியைக்கூட அவள் பார்க்கவில்லை. அவர் புறப்பட்டு போன பின்பு, நடனக் கச்சேரி அதிக உற்சாகத்தோடு நடந்து வந்ததைக்கொண்டுதான், அவர் புறப்பட்டு போய்விட்டதை கவனித்தாள். இராச் சாப்பாட்டிற்கு முன்பாக இளவரசர் ஆண்ட்ரூ அவளுடன் மற்றொரு முறை நடனமாடினார். ஆட்ராட்னோ சாலையில் முதல் முதலாக அவளைப் பார்த்ததை அவர் நினைவுபடுத்தினார். நிலா பொழிந்து கொண்டிருந்த அன்றிரவு அவள் எப்படி தூங்காமல் விழித்துக்கொண்டிருந்தாள் என்பதையும், அவள் பேசிக்கொண்டிருந்தவைகளை தம்மை அறியாமலேயே தாம் கேட்டுக்கொண்டிருந்ததையும் அவர் நினைவுபடுத்தினார். இவற்றை யெல்லாம் கேட்டு நட்டாஷா நாணி முகம் சிவந்தாள். இளவரசர் ஆண்ட்ரூ கேட்டுக்கொண்டிருந்தவைகளில், தான் வெட்கப்படக்கூடியது ஏதோ இருந்ததுபோல, அதற்கு சமாதானம் கூற அவள் முயற்சித்தாள்.

உயர் வட்டாரத்தில் வளர்ந்த எல்லா ஆண்களும் விரும்புவதைப் போலவே, இளவரசர் ஆண்ட்ரூவும் ஒன்றை விரும்பினார்.

அதாவது, ஒரே மாதிரியான கூட்டத்தில் பழகி சலித்துப்போன அவர், அந்த வட்டாரத்தைவிட்டு வெளியே இருந்த நபர்களை சந்திக்க விரும்பினார். அம்மாதிரி நபர்களில் ஒருத்திதான் நட்டாஷா. அவளுடைய ஆச்சரியமும், அவளுடைய மகிழ்ச்சியும், அவளுடைய நாணமும், தப்பும் தவறுமாக அவள் பிரஞ்சு மொழியில் பேசுவதும் கூட அவருக்கு கவர்ச்சிகரமாய் இருந்தன. விசேஷ கவனத்துடனும் கனிவுடனுடம் அவளுடன் அவர் நடந்துகொண்டார். அவளுக்குப் பக்கத்தில் அமர்ந்து ரொம்ப சாதாரண விஷயங்களையும், ரொம்ப முக்கியமில்லாத விஷயங்களையும் அவளுடன் அவர் பேசிக்கொண்டிருப்பார். மகிழ்ச்சியினால் ஒளிர்விட்டுக் கொண்டிருந்த அவளுடைய கண்களையும் புன்சிரிப்பையும் அவர் பாராட்டுவார். அந்த ஒளியும் புன்சிரிப்பும் பேசப்படும் விஷயத்திற்கு சம்பந்தப்பட்டவை அல்ல. அவளுடைய சொந்த சந்தோஷத்தையே அவை காட்டின. அவளை நடனம் ஆட வரும்படி ஒருவர் வந்து அழைத்தபோது அவள் மந்தகாசத்தோடு எழுந்து தமது ஜோடியோடு அறையைச் சுற்றி ஆடிவந்தாள். அச்சமயம் எல்லாம் அவளுடைய நாணம் கொண்ட ஒயிலைக்கண்டு இளவரசர் ஆண்ட்ரூ வியந்து கொண்டிருப்பார். ஒரு பாட்டுக்கு உண்டான நடனம் முடிந்த பின்பு, மூச்சு விட்டுக்கொண்டு அவள் தன்னுடைய ஆசனத்திற்கு திரும்பியபோது, அவளை மீண்டும் நடனமாட வரும்படி ஒருவர் வந்து அழைத்தார். அவள் களைப்புடனும் மூச்சு விட்டுக் கொண்டும் இருந்தபடியால், அந்த அழைப்பை மறுப்பதற்கு நினைத்தாள். ஆனால் உடனே அவள் சந்தோஷத்தோடு அந்த மனிதரின் தோளில் தனது கையை வைத்து, இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்து புன்னகை காட்டி நடனமாடுவதற்கு எழுந்தாள்.

'உமது பக்கத்தில் அமர்ந்து ஓய்வு எடுத்துக்கொள்ளுவதற்கு நான் மிகவும் மகிழ்ச்சி கொள்ளுவேன். நான் களைப்படைந்து இருக்கிறேன். ஆனால் இதோ பாரும், என்னைவிடாமல் நடனமாட அவர்கள் அழைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதைக்கண்டு நான் சந்தோஷம் அடைகிறேன். நான் மகிழ்ச்சி கொண்டிருக்கிறேன். எல்லார் மீதும் நான் அன்பு கொண்டிருக்கிறேன். இவற்றை யெல்லாம் நீரும் நானும் அறிவோம்' என்று சொல்வதுபோல அவளுடைய புன்சிரிப்பு இருந்தது. நடனமாடி முடிந்த பின்பு, அவளுடைய ஜோடி அவளை விட்டுப் பிரிந்து போனார். அதன் பின்னால், தன்னுடன் நடனமாடுவதற்கு இரண்டு சீமாட்டிகளை சேர்த்துக் கொள்ள அவள் அறையின் குறுக்காக ஓடிவந்தாள்.

'முதலில் அவள் அவளுடைய மைத்துனியிடம் போய் கேட்டு விட்டு, அதன் பின்னால் மற்றொரு சீமாட்டியை அவள் கேட்பாளானால் நட்டாஷா என்னுடைய மனைவியாக வருவது நிச்சயம்' என்று இளவரசர் ஆண்ட்ரூ தமக்குத்தாமே சொல்லிக்கொண்டார். அவர் அவளைக் கவனித்தபோது அவருக்கு ஏற்பட்ட இந்த நினைப்பைக்கண்டு அவருக்கே ஆச்சரியமாய் இருந்தது. அவள் முதலில் தன்னுடைய மைத்துனி இடம் போனாள்.

''என்ன குப்பைகளெல்லாம் சில சமயங்களில் ஒருவருடைய மண்டையில் நுழைகின்றன'' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். ''ஆனால், அந்தப் பெண்ணைப்பற்றிய நிச்சயமான விஷயம் என்னவென்றால், அவள் மிகுந்த மனோகரமாய் இருக்கிறாள்; நவீனமாய் இருக்கிறாள். இங்கே நடனமாடிக் கொண்டு இருக்கும் அவளுக்கு இன்னும் ஒரு மாதத்திற்குள்ளாக திருமணம் ஆகிவிடும்... அவளைப் போன்றவர்கள் இங்கே அபூர்வமாகும்'' என்று அவர் நினைத்தார். அச்சமயம் தன்னுடைய சட்டையில் இருந்து நழுவிய ரோஜாப்பூவை மீண்டும் சரியாய் வைத்துக்கொண்டு, நட்டாஷா அவர் பக்கத்தில் அமர்ந்தாள்.

நடனம் முடிந்த பின்பு, நீல நிறக் கோட்டு அணிந்து கொண்டிருந்த வயோதிகக் கோமகன் அவர்கள் பக்கத்திற்கு வந்தார். தங்கள் வீட்டிற்கு வரும்படி இளவரசர் ஆண்ட்ரூவை அவர் அழைத்தார். தமது மகளைப் பார்த்து, 'உனக்கு சந்தோஷம் தானா?' என்று கேட்டார். நட்டாஷா உடனே பதில் அளிக்கவில்லை. ஒரு புன்னகையோடு அவரை ஏறிட்டுப் பார்த்தாள். 'இம்மாதிரி கேள்வியை எப்படி நீர் கேட்கலாம்?' என்று கோபமாய் கேட்பது போல அந்தப் புன்னகை இருந்தது.

'இம்மாதிரி இதற்கு முன்னால் நான் அனுபவித்ததே இல்லை' என்று அவள் சொன்னாள். அவளுடைய தந்தையை தழுவிக்கொள்ள அவளுடைய மெல்லிய கரங்கள் உயர்ந்ததையும், திடீரென்று மீண்டும் அவை கீழே தொங்கியதையும் இளவரசர் ஆண்ட்ரூ கவனித்தார். அவளுடைய வாழ்க்கையில் அவள் இதற்கு முன்னால் எப்பொழுதும் இல்லாதபடி அவ்வளவு சந்தோஷமாக நட்டாஷா இருந்தாள். அவள் தன்னுடைய ஆனந்தத்தின் உச்சியில் இருந்தாள். அந்த நிலையில் இருக்கும்போது ஒவ்வொருவரும் அன்பாகவும் நல்லவர்களாகவும் பூரணமாய் இருப்பார்கள். தீங்கு, மகிழ்ச்சிக்குறைவு, துன்பம் ஆகியவை உலகத்திலேயே கிடையாது என்று அவர்கள் நம்புவார்கள்.

அரச சபை வட்டாரங்களில் தம்முடைய மனைவியின் அந்தஸ்தை அந்த நடனக் கச்சேரியில் பீயர் பார்த்த பின்பு, தாம் இழிவுபடுத்தப்பட்டதாக முதல் தடவையாக உணர்ந்தார். அவர் மனச்சோர்வுடனும் பராக்கு புத்தியுடனும் காணப்பட்டார். அவருடைய நெற்றியில் ஒரு ஆழ்ந்த மடிப்போடு, ஜன்னலுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டு, தமது கண்ணாடிகளுக்கு மேலாக குறிப்பிட்டு ஒருவரையும் பார்க்காமல் வெறித்து நோக்கிக்கொண்டிருந்தார்.

இராச்சாப்பாட்டிற்கு நட்டாஷா போகும்போது அவர் நின்ற இடம் வழியாகப் போனாள்.

பீயரின் சோர்வான, மகிழ்ச்சிக் குறைவான தோற்றம் அவள் மனதில் பதிந்தது, அவருக்கு முன்பாக நின்றாள். அவருக்கு உதவி செய்யவும், தன்னிடமுள்ள அபரிமிதமான மகிழ்ச்சியை அவருக்குக் கொடுக்கவும் விரும்பினாள்.

'என்ன மனோகரமாய் இருக்கிறது, கோமகனே! அப்படித்தானே?' என்று அவள் பேசினாள்.

எதையோ நினைத்துக்கொண்டு பீயர் புன்முறுவல் காட்டினார். அவள் சொன்னதை அறிந்து கொண்டதாகத் தெரியவில்லை.

'ஆம், நான் மிக்க மகிழ்ச்சியாய் இருக்கிறேன்' என்று அவர் சொன்னார்.

'எதைக் கண்டுதான் மக்கள் அதிருப்தி கொண்டிருக்க முடியும்? முக்கியமாக பெஜுகாவ் மாதிரி ஒரு சிறந்த மனிதர் ஏன் அதிருப்தி கொள்ளவேண்டும்?' என்று நட்டாஷா நினைத்தாள். நட்டாஷாவின் கண்களில், அந்த நடனக் கச்சேரியில் இருந்த எல்லாருமே நல்லவர்களாகவும், அன்பானவர்களாகவும், சிலாக்கியமானவர் களாகவும், ஒருவர் மீது ஒருவர் அன்பு கொண்டிருப்பவர்களாகவும், அவர்களில் ஒருவர்கூட மற்றொருவருக்கு கெடுதல் செய்ய நினைக்காதவர்களாகவும், ஆகவே அவர்கள் எல்லாருமே மகிழ்ச்சியாய் இருக்கவேண்டியதானே என்றும் தோன்றியது.

## 6

### 18

நடனக் கச்சேரியைப் பற்றி மறுநாள் இளவரசர் ஆண்ட்ரூ நினைத்துப் பார்த்தார். ஆனால், அதைப்பற்றி வெகுநேரம் அவர் மனம் நினைக்கவில்லை. 'ஆமாம், அது ரொம்ப பிரமாதமான நடனக் கச்சேரிதான்... ஆமாம், அந்த குஞ்சு ராஸ்டோவா மிகுந்த

கவர்ச்சிகரமாக இருக்கிறாள். உணர்ச்சியும் புதுமையும் கொண்டவளாய் இருக்கிறாள். பீட்டர்ஸ்பர்க் ரகம் மாதிரி அல்ல; அவள் தனித்து விளங்குகிறாள்'. நேற்றைய நடனக் கச்சேரியைப் பற்றி அவர் நினைத்தவை அவ்வளவுதான். காலை தேநீர் பருகிய பின்பு, அவர் தமது வேலையைக் கவனிக்க ஆரம்பித்தார்.

ஆனால், களைப்பினாலோ, அல்லது தூக்கக் குறைவினாலோ வேலை செய்வதற்கு அவர் மனம் சரியாய் இல்லை. அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை. அவர் அடிக்கடி செய்வதைப் போல, தமது வேலையைப் பற்றி குற்றம் குறை சொல்லிக் கொண்டிருந்தார். இச்சமயத்தில் யாரோ ஒருவர் வருவதைக் கேட்டு அவர் சந்தோஷமடைந்தார்.

அப்போது அங்கே வந்தவர் பைட்ஸ்கி என்பவராகும். பற்பல கமிட்டிகளில் அவர் அங்கத்தினராக இருக்கிறார். பீட்டர்ஸ்பர்க்கில் உள்ள எல்லா உயர் வட்டாரங்களுக்கும் அடிக்கடி அவர் போவதுண்டு. ஸ்பெரான்ஸ்கியிடமும், அவருடைய புதிய கொள்கைகளிடமும் ஒரு ஆர்வமுள்ள பக்தனாய் விளங்கினார். அதைத் தவிர, பீட்டர்ஸ்பர்க்கில் ஒரு சுறுசுறுப்பான வதந்திக்காரர். அப்போதைக்கப்போது ஏற்படுகிற மோஸ்தருக்குத் தக்கபடி, எப்படி தங்கள் உடைகளை மாற்றிக் கொள்கிறார்களோ, அதே மாதிரி இவரும் தம்முடைய அபிப்ராயங்களை மாற்றிக்கொள்ளுவார். ஆகவே, அதே காரணத்தினால் தீவிரமான கட்சிக்காரராய் விளங்குவார். அவர் தமது தொப்பியை வெளி அறையில் கழற்றி வைத்துவிட்டு, இளவரசர் ஆண்ட்ரூ அறைக்குள் ஓடினார். எதையோ நினைத்துக்கொண்டு பராக்கு புத்தியோடு போனவர், அங்கே உடனே பேச ஆரம்பித்தார். அன்று காலையில் நடந்த ராஜ்ய சபையைப் பற்றிய விவரங்களை அவர் அப்போதுதான் கேட்டிருந்தார். அந்த சபையை சக்கரவர்த்தி ஆரம்பித்து வைத்தார். அதைப்பற்றி மிகுந்த உற்சாகத்தோடு பேசினார். சக்கரவர்த்தி பிரசங்கம் அசாதாரணமாக இருந்தது. அதாவது சட்ட பூர்வமான மன்னர்கள் செய்யும் பிரசங்கத்தைப்போல் இருந்தது. 'கவுன்ஸிலும் செனெட்டும் அரசாங்கத்தின் உறுப்புகள் என்று சக்கரவர்த்தி தெளிவாய்ச் சொன்னார். அதிகாரத்தை மட்டும் சர்க்கார் நம்பிக்கொண்டு இருக்கக் கூடாது என்றும், சரியான அஸ்திவாரத்தின் பேரில் அது இருக்க வேண்டுமென்றும் சக்கரவர்த்தி சொன்னார். வரி விதிப்பு முறைகளை திருத்தியமைக்க வேண்டுமென்றும், பட்ஜெட் கணக்குகளை பிரசுரம் செய்ய வேண்டுமென்றும் சக்கரவர்த்தி சொன்னதாக பைட்ஸ்கி கூறினார்.

சில வார்த்தைகளை அவர் வற்புறுத்திச் சொல்லி, விசேஷ அர்த்தத்தோடு தமது கண்களை விழித்துக் காட்டினார்.

'ஆமாம், இன்று நடந்த நடவடிக்கைகள் ஒரு புதிய சகாப்தமாகும். நமது சரித்திரத்திலேயே அது பெரிய சகாப்தமாக இருக்கும்' என்று அவர் பேசி முடித்தார்.

ராஜ்ய சபையின் ஆரம்ப விழாவைப் பற்றி சொல்லியவைகளை இளவரசர் ஆண்ட்ரூ கவனித்துக் கேட்டார். அந்த ஆரம்பத்தை அவர் மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். அதற்கு அவர் அவ்வளவு முக்கியத்துவம் கொடுத்திருந்தார். இருந்தாலும், இப்பொழுது அவை நடந்து முடிந்த பின்பு அவற்றில் அவருக்கு எந்த விதமான சிரத்தையும் தோன்றவில்லை. அந்த விவாதங்கள், ஏதோ அற்ப விஷயம் மாதிரி அவருக்குத் தோன்றியது. இவற்றைக் கண்டு அவரே ஆச்சரியப்பட்டார். பைட்ஸ்கி உற்சாகமாகச் சொல்லிக் கொண்டிருந்த விவரங்களை அமைதியான கேலியோடு அவர் கேட்டுக் கொண்டிருந்தார். ஒரே ஒரு விஷயம்தான் அவருடைய மனதில் தோன்றிக்கொண்டே இருந்தது. அதாவது: 'அந்தக் கவுன்ஸிலில் சக்கரவர்த்தி பேசியதைப்பற்றி எனக்கோ, இந்த பைட்ஸ்கிக்கோ என்ன கவலை? இவையெல்லாம் என்னை சந்தோஷப் படுத்தவோ உற்சாகப்படுத்தவோ முடியுமா?

இந்த சாதாரண சிந்தனையானது திடீரென்று இளவரசர் ஆண்ட்ரூவுக்கு வரப்போகும் சீர்திருத்தங்களில் அவருடைய எல்லா சிரத்தைகளையும் அழித்துவிட்டது. அன்று மாலை அவர் ஸ்பெரான்ஸ்கியோடு டின்னர் சாப்பிடுவதாய் இருந்தது. அதற்கு வெகு சில நண்பர்களை மட்டுமே அழைத்திருப்பதாக ஸ்பெரான்ஸ்கி இவரை அழைக்கும்போது சொன்னார். அவர் மிகுந்த மதிப்பு வைத்திருந்த ஸ்பெரான்ஸ்கியை அவருடைய வீட்டிலேயே கண்டு நெருங்கிப் பழகுவதற்கு இந்த டின்னர் ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுக்குமாகையால், இளவரசர் ஆண்ட்ரூவுக்கு அதில் மிகுந்த சிரத்தை ஏற்பட்டிருந்தது. ஏனெனில், இதே ஸ்பெரான்ஸ்கியை அவருடைய இல்லத்தின் சூழ்நிலைகளில் அவர் பார்த்ததில்லை. ஆனால், இப்போது அந்த டின்னருக்குப் போவதற்கு அவருக்கு அவ்வளவு பிரியமில்லை.

என்றாலும், குறிப்பிட்ட நேரத்தில் டாரிடா தோட்டங்களிலுள்ள ஸ்பெரான்ஸ்கியின் ஆடம்பரமில்லாத வீட்டிற்குள் அவர் நுழைந்தார். சாப்பாட்டு அறையின் தரையில் மரப்பலகைகளால் தளம் போடப் பட்டிருந்தது. அந்த வீடு ரொம்ப ரொம்ப சுத்தமாய் இருந்தது. அதைப் பார்த்தபோது, ஏதோ கன்னிமாடத்தைப் போலத்

தோன்றியது. இளவரசர் ஆண்ட்ரூ சிறிது தாமதமாய் அங்கே போய்ச் சேர்ந்தார். 'ஸ்பெரான்ஸ்கியின் நெருங்கிய தோழர்கள் எல்லோரும் 5 மணிக்கே அங்கு வந்து கூடி இருந்தார்கள். தந்தையைப் போலவே நீண்ட முகமுள்ள ஸ்பெரான்ஸ்கியின் சிறிய மகளும், அவளுடைய தாதியும் தவிர, வேறு பெண்கள் அங்கு இல்லை. கெர்வெய்ஸ், மாக்னைட்ஸ்கி, ஸ்டோலிபின் ஆகிய மற்ற விருந்தாளிகள் அங்கே கூடியிருந்தார்கள். இளவரசர் ஆண்ட்ரூ முன் அறையில் நுழைந்தபோதே, கணீரென்ற சிரிப்புக் குரல்கள் பலமாக அவருக்குக் கேட்டன. நாடகங்களில் கேட்பதைப் போல், திடீரென்ற சிரிப்பைப்போல் அது விளங்கியது. அந்தச் சிரிப்பு ஸ்பெரான்ஸ்கியின் சிரிப்பைப்போல தெரிந்தது. அவர் ஹா, ஹா, ஹா என்று தெளிவாய் சப்தமிட்டுச் சிரித்துக்கொண்டிருந்தார். இதற்கு முன்பாக ஸ்பெரான்ஸ்கியின் பிரசித்திபெற்ற இந்த கணீரென்ற, உயர்தொனிச் சிரிப்பை இளவரசர் ஆண்ட்ரூ கேட்டதில்லை. ஒரு ராஜ தந்திரியிடமிருந்து இம்மாதிரியான சிரிப்பை அவர் கேட்டதும், அவர் மனதில் ஒரு விசித்திரமான அபிப்பிராயம் தோன்றியது.

அவர் சாப்பாட்டு அறையில் நுழைந்தார். அங்கிருந்தவர்கள் எல்லோருமே இரண்டு ஜன்னல்களுக்கு மத்தியில் நின்றுகொண்டிருந்தார்கள். அங்கே ஒரு சிறிய மேஜை மீது பசியைத் தூண்டுவதற்கான தின்பண்டங்கள் வைக்கப்பட்டிருந்தன. ஒரு நீளமான சாம்பல் வர்ணக் கோட்டை ஸ்பெரான்ஸ்கி அணிந்துகொண்டிருந்தார். அவருடைய மார்பில் ஒரு நட்சத்திரப் பதக்கம் காணப்பட்டது. அன்று ராஜ்ய சபையில் அவர் அணிந்துகொண்டிருந்த அதே உள் சப்டையையும், நீளமான கால் உறைகளையும் அணிந்துகொண்டிருப்பதாக அவருக்குத் தோன்றியது. ஒரு மகிழ்ச்சி பொங்கிய முகத்தோடு அவர் நின்று கொண்டிருந்தபோது, அவருடைய விருந்தாளிகள் அவரைச் சுற்றி நின்றார்கள். ஸ்பெரான்ஸ்கியைப் பார்த்து, ஏதோ ஒரு தமாஷ் விஷயத்தை மாக்னைட்ஸ்கி சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால், மாக்னைட்ஸ்கி சொல்லி ஆரம்பிப்பதற்கு முன்பே, அவர் சொல்லப்போகும் விஷயத்திற்காக ஸ்பெரான்ஸ்கி முன்னதாகவே சிரித்துக் கொண்டிருந்தார். இளவரசர் ஆண்ட்ரூ அந்த அறைக்குள் நுழைந்தபோது, மாக்னைட்ஸ்கியின் பேச்சுகள் அங்கிருந்த சிரிப்பொலிகளில் அமிழ்ந்துவிட்டன. ஸ்டோலிபின் தம் வாயில் ரொட்டியையும், பால் கட்டியையும் போட்டுச் சுவைத்து, தாழ்ந்த, கனத்த குரலில் சிரித்துக் கொண்டிந்தார். கெர்வெய்ஸ் என்பவர்

மெதுவாகச் சிரித்துக்கொண்டிருந்தார். ஸ்பெரான்ஸ்கி உயர்ந்த தொனியில் நாடகப் பாணியில் சிரித்துக் கொண்டிருந்தார்.

இன்னமும் சிரித்துக்கொண்டே தம்முடைய மெதுவான வெள்ளைக் கரத்தை இளவரசர் ஆண்ட்ரூவுக்கு ஸ்பெரான்ஸ்கி நீட்டினார்.

'இளவரசே, உம்மைப் பார்ப்பதற்கு மிகுந்த சந்தோஷமடைகிறேன். ஒரு வினாடி பொறுங்கள்...' என்று ஸ்பெரான்ஸ்கி சொல்லிவிட்டு, மாக்னைட்ஸ்கி அவரிடம் சொல்லிக் கொண்டிருந்த கதையை இடை மறித்துப் பேசினார். 'நமக்கு சிரம பரிகாரத்திற்காகத் தான் இந்த டின்னர் என்பதை நாம் எல்லோரும் ஒப்புக்கொள்கிறோம். ஆகவே, வேறு காரியங்களைப் பற்றி ஒரு வாத்தைகூட பேச வேண்டாம்' என்று சொல்லிவிட்டு, மீண்டும் அவர் அங்கு பேசிக்கொண்டிருந்தவரைப் பார்த்து புதிதாக சிரிக்க ஆரம்பித்தார்.

சிரித்துக்கொண்டிருக்கும் ஸ்பெரான்ஸ்கியை ஆச்சரியத்துடனும் வருத்தத்துடனும் மகிழ்ச்சிக் குறைவுடனும் இளவரசர் ஆண்ட்ரூ பார்த்தார். அவருக்கு இவரை ஸ்பெரான்ஸ்கி போலத் தோன்றவில்லை. வேறு யாரோ ஒருவர் என்று தோன்றியது. ஸ்பெரான்ஸ்கியிடம் முன்பு அவருக்கு தோன்றியிருந்த ஆச்சரியம், கவர்ச்சி இவையெல்லாம் திடீரென்று மறைந்து, அவர் சாதாரணமான, கவர்ச்சியில்லாத பேர்வழியாக ஆண்ட்ரூவுக்குத் தோன்றினார்.

டின்னர் நடந்துகொண்டிருக்கும்போது ஒரு வினாடி கூட உரையாடல் ஓயவில்லை. தமாஷ் பேச்சுகள் அடங்கிய புத்தகத்திலுள்ள எல்லா தமாஷ்களையும் அங்கே பேசிக் கொண்டிருந்தார்கள். மாக்னைட்ஸ்கி என்பவர் தமது கதையை முடிக்கும் முன்பாகவே, மற்றொருவர் அதைவிட வேடிக்கையான ஒன்றைச் சொல்வதற்குத் துடித்துக்கொண்டிருந்தார். அந்த தமாஷ்களெல்லாம் ராஜாங்க சேவையைப் பற்றியில்லா விட்டாலும், அந்த சேவையிலிருக்கிற பேர்வழிகளைப் பற்றியதாகவே இருந்தன. அந்தப் பேர்வழிகள் முக்கியத்துவம் இல்லாதவர்கள் என்ற விஷயத்தில், இவர்கள் எல்லாருமே ஒரே அபிப்பிராயம் கொண்டிருந்தவர்களாகக் காணப் படுகிறார்கள். ஆகவே, அவர்களிடம் இவர்கள் காட்டக்கூடிய மனோபாவம் ஒன்றே ஒன்றுதான். அதாவது அவர்களை கேலி செய்வதாகும். அன்று காலையில் ராஜ்ய சபையில் நடந்த ஒரு தமாஷை ஸ்பெரான்ஸ்கி சொல்ல ஆரம்பித்தார். அங்கே ஒரு செவிட்டு

அங்கத்தினர் வந்திருந்தாராம். அவருடைய அபிப்பிராயம் என்ன வென்று ஒரு பிரச்னையில் கேட்டபோது, அவர் தம்மைக் கேட்டவர் சொல்வதை அப்படியே ஒப்புக்கொள்வதாகக் கூறினாராம். கெர்வெய்ஸ் என்பவர் சேவகத்தில் இருக்கிறவர்களின் முட்டாள்தனத்தைக் காட்டுவதற்காக, ஒரு நீண்ட கதையைச் சொல்ல ஆரம்பித்தார். ஸ்டோலிபின் என்பவர் திக்கு வாயோடு அந்தச் உரையாடலில் நுழைந்து, ரொம்ப பரபரப்போடு அப்போதிருந்த பல ஊழல்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். அவர் பேசியதைப் பார்த்தால், அந்த தமாஷ் பேச்சுகள் திடீரென்று மாறி, காரியார்த்தமான பேச்சுக்கு இடம் கொடுத்து விடுமோ என்று தோன்றியது. இந்த பரபரப்பைக் குறைப்பதற்கு, மாக்னைட்ஸ்கி என்பவர் ஸ்டோலிபின் என்பவரை அடிக்கடி பரிகாசம் செய்து கொண்டிருந்தார். கெர்வெய்ஸ் என்பவர் அச்சமயத்தில் மற்றொரு தமாஷ் பேச்சை உரையாடலில் நுழைத்தார். உடனே உரையாடல்கள் மீண்டும் கேலிப் பேச்சுகளில் திரும்பியது.

தமது வேலைகள் முடிந்த பின்பு ஸ்பெரான்ஸ்கி ஓய்வு எடுத்துக்கொள்ள விரும்புவார். அச்சமயம் இம்மாதிரியான நண்பர்கள் கூட்டத்தில் அவருக்கு குஷி ஏற்படுகிறதென்று தெரிகிறது. ஆகவே, அவருடைய விருப்பத்தை அவருடைய விருந்தாளிகள் அறிந்து, அவருக்கு உற்சாகம் ஊட்டவும், தாங்கள் அதனால் சந்தோஷம் கொள்ளவும் முயற்சி செய்தார்கள். ஆனால், அவர்கள் செய்து வந்த கேளிக்கைகள் எல்லாம் கொஞ்சம்கூட மகிழ்ச்சியானதாக இளவரசர் ஆண்ட்ரூவுக்குத் தெரியவில்லை. அவையெல்லாம் மனச்சோர்வை உண்டு பண்ணுவதாகத் தோன்றியது. ஸ்பெரான்ஸ்கியின் கீச்சுக் குரல் அவருக்கு மிகுந்த வெறுப்பாக இருந்தது. விடாமல் அவர் சிரித்துக்கொண்டிருந்தது, ஏதோ வெளி வேஷமாகத் தோன்றியது. இளவரசர் ஆண்ட்ரூ சிரிக்கவில்லை. ஆனால், அங்கு கூடியிருந்தவர்களின் உற்சாகத்தை தாம் எங்கு கெடுத்துவிடுவாரோ என்று பயப்பட ஆரம்பித்தார். ஆனால், அங்கிருந்த சுற்றுணர்ச்சிகளுக்கு நேர் விரோதமான மனோபாவத்தில் இவர் இருப்பதை ஒருவரும் கவனிக்கவில்லை. அவர்கள் எல்லோருமே மகிழ்ச்சியோடு இருந்தார்கள்.

அந்த உரையாடலில் தாமும் கலந்துகொள்வதற்காக பல தடவைகளில் அவர் முயற்சி செய்தார். ஆனால், அவருடைய வார்த்தைகளை ஒவ்வொரு தடவையும் மற்றவர்கள் தள்ளிவிட்டார்கள். அதனால் அவர்களோடு தமாஷ் செய்து கொண்டிருக்க அவரால் முடியவில்லை. அவர்கள் பேசியதில் தவறாகவோ, ஆபாசமாகவோ எதுவுமில்லை. அவையெல்லாம்

தமாஷாக இருக்கலாம்; வேடிக்கையாக இருக்கலாம். ஆனால், அந்தக் களிப்பில் உயிர் இல்லை. அம்மாதிரி உயிர் ஒன்று உண்டு என்பதை அவர்கள் தெரிந்ததாகவும் தோன்றவில்லை.

டின்னர் முடிந்த பின்பு, ஸ்பெரான்ஸ்கியின் குமாரியும், அவளுடைய தாதியும், அங்கிருந்து போவதற்காக எழுந்தார்கள். தம்முடைய வெள்ளைக் கையால் அந்தச் சிறிய பெண்ணை தட்டிக் கொடுத்து முத்தமிட்டார். அந்தச் செய்கைகூட இளவரசர் ஆண்ட்ரூவுக்கு செயற்கையாகக் காணப்பட்டது.

ஆண்கள் மட்டும் இன்னும் அங்கேயே இருந்தார்கள். அவர்கள் இங்கிலீஷ் முறையில் ஒயின் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். நெப்போலியனின் ஸ்பானிஷ் திருமணங்களைப்பற்றி உரையாடல் நடந்தது. அவர்கள் எல்லாரும் அதைப் பற்றி ஒரு முகமாக அபிப்பிராயம் கொண்டிருந்தார்கள். ஆனால், இளவரசர் ஆண்ட்ரூ அதற்கு நேர் விரோதமான அபிப்பிராயத்தை உரையாடலின் மத்தியில் வெளியிட்டார். இதைக் கண்டு ஸ்பெரான்ஸ்கி புன்முறுவல் கொண்டார். அதாவது, இந்த தர்க்கம் விபரீதமாகப் போய்விடக்கூடாதென்று நினைத்து, இந்த உரையாடல்களுக்கு சம்பந்தமில்லாத மற்றொரு கதையை அவர் சொல்ல ஆரம்பித்தார். சில வினாடிகள் எல்லோரும் மௌனமாயிருந்தார்கள்.

மேஜை முன்பு சிறிது நேரம் இருந்த பின்பு, அந்த ஒயின் பாட்டிலை மீண்டும் கார்க்கினால் மூடி, 'இந்தக் காலத்தில் நல்ல் ஒயின்களே கிடைப்பதில்லை' என்று சொல்லி, அதை எடுத்து தமது சேவகனிடம் கொடுத்துவிட்டு எழுந்தார். எல்லோரும் எழுந்து உரக்கப் பேசிக்கொண்டே வரவேற்பு அறைக்குள் போனார்கள். அச்சமயம் ஒரு தூதுவன் வந்து இரண்டு கடிதங்களை ஸ்பெரான்ஸ்கியிடம் கொடுத்தான். அவர் அவைகளை எடுத்துக்கொண்டு தமது படிப்பு அறைக்குள் போனார். அந்த அறையைவிட்டு அவர் போனதும், அங்கு நடந்து வந்த கேலிப் பேச்சுகள் திடீரென்று நின்றன. அந்த விருந்தாளிகள் எல்லோரும் புத்திசாலித் தனமாகவும், அமைதியாகவும் ஒருவருக்கொருவர் பேச ஆரம்பித்தார்கள்.

ஸ்பெரான்ஸ்கி தமது படிப்பு அறையிலிருந்து திரும்பினார். மனப்பாடமாகப் படித்து திரும்ப ஒப்புவிப்பது என்பது இருக்கிறதே, அது ஒரு ஆச்சரியமான சாமர்த்தியம்' என்று இளவரசர் ஆண்ட்ரூவிடம் அவர் சொன்னார். உடனே மாக்னைட்ஸ்கி திடீரென்று ஒரு மாதிரி தோற்றத்தில் அமர்ந்து சில தமாஷ் கவிகளை பிரஞ்சுப் மொழியில் ஒப்புவிக்க ஆரம்பித்தார். பீட்டர்ஸ்

பர்க்கிலுள்ள பல பிரபலஸ்தர்களைப் பற்றி அந்தக் கவிகளை அவர் கட்டியிருந்தார். அவர் அவற்றைச் சொல்லிக் கொண்டிருக்கும்போது பல தடவைகள் கை தட்டல்கள் ஏற்பட்டன. இந்தக் கவிகளை யெல்லாம் சொல்லி முடித்த பின்பு, இளவரசர் ஆண்ட்ரூ ஸ்பெரான்ஸ்கியிடம் சென்று விடை பெற்றுக்கொண்டார்.

'என்ன, இவ்வளவு சீக்கிரமாக நீர் போகிறீர்?' என்று ஸ்பெரான்ஸ்கி கேட்டார்.

'ஒரு வரவேற்பிற்கு வருவதாக நான் வாக்குறுதி கொடுத்திருக்கிறேன்.'

அதற்கு மேல் அவர்கள் எதுவும் பேசவில்லை. கண்ணாடியைப் போன்ற, ஊடுருவிப் பார்க்க முடியாத ஸ்பெரான்ஸ்கியின் கண்களை இளவரசர் ஆண்ட்ரூ கவனித்துப் பார்த்தார். அதன் பின்பு, இந்த ஸ்பெரான்ஸ்கியிடமிருந்து எதையும் எதிர் பார்ப்பது வெறும் கேலிக் கூத்தாக இருக்குமென்று அவர் உணர்ந்தார். அல்லது தாம் அவரிடம் சேர்ந்து வேலை செய்வதினாலோ, அல்லது ஸ்பெரான்ஸ்கி செய்து கொண்டிருப்பவைகளின் முக்கியத்து வத்தைப் பற்றி சொல்லிக்கொண்டிருப்பதனாலோ, எம்மாதிரி நன்மையும் ஏற்படப் போவதில்லை என்பதை அவர் உணர்ந்தார். அந்தக் குறிப்பிட்ட களிப்பில்லா சிரிப்பு, அந்த வீட்டைவிட்டு இளவரசர் ஆண்ட்ரூ வெளியே வந்து வெகுதூரம் போகிற வரையில் அவர் காதுகளில் ஒலித்துக்கொண்டிருந்தது.

இளவரசர் ஆண்ட்ரூ தமது வீடு திரும்பியதும், பீட்டர்ஸ்பர்க்கில் சென்ற நான்கு மாதங்களாக வாழ்ந்து வந்த தமது வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்தார். என்னவோ புதிதாக அவைகளை அவர் நினைப்பவரைப்போல சிந்தித்தார். அவருடைய உழைப்பு களையும், அவர் போய் மற்றவர்களைப் பார்த்தவைகளையும், ராணுவ சட்டத்தை சீர்திருத்துவதற்கு அவர் எடுத்துக்கொண்ட சிரமங்களையும், கடைசியாக அவருடைய யோசனைகளை கமிட்டி ஒப்புக் கொண்டதையும் அவர் சிந்தித்துப் பார்த்தார். அவருடைய யோசனைகளை மௌனமாக ஒதுக்கித் தள்ள முயற்சி நடப்பதையும் அவர் சிந்தித்துப் பார்த்தார். ஏனென்றால் மற்றொரு இரண்டாந் தரமான திட்டங்களை வேறு யாரோ ஒருவர் சக்கரவர்த்திக்கு சமர்ப்பித்தாராம். பெர்க் அங்கத்தினராயுள்ள ஒரு கமிட்டியின் கூட்டங்களைப் பற்றி அவர் நினைத்துப் பார்த்தார். எவ்வளவு ஜாக்கிரதையுடனும், எவ்வளவு நீளமாகவும் அவர்கள் இந்தக் கமிட்டிக் கூட்டங்களில் நடைமுறைகளைப் பற்றியும் நடவடிக்கைகளைப் பற்றியும் விவாதம் செய்து

கொண்டிருந்துவிட்டு, காரியார்த்தமான விஷயங்களை எவ்வளவு கட்டுப்பாடாகவும் தீவிரமாகவும் அவர்கள் ஒதுக்கித் தள்ளி விடுகிறார்களென்பதையும், அவர் நினைத்துப் பார்த்தார். சட்டக் கமிட்டியில் அவர் செய்த வேலையையும், அவர் எடுத்துக்கொண்ட சிரமங்களையும், ரோமன், பிரஞ்சு சட்டத்தை ருஷ்ய மொழியில் அவர் அப்போது மொழி பெயர்த்ததையும், நினைத்துப் பார்த்து, தம்மைப் பற்றித் தாமே வெட்கப்பட்டுக் கொண்டார். திடீரென்று அவர் மனதில் பாகுசாரவா என்ற இடமும், கிராமாந்தரத்தில் அவர் செய்துவந்த வேலைகளும், ரயாஜானுக்கு அவர் போன பிரயாணமும் காட்சியளித்தன. அங்கு கண்ட விவசாயிகளும், கிராமத்தின் தலைவரான டிரான் என்பவரும் அவர் நினைவில் தோன்றினார்கள். அவர்களுக்கெல்லாம், தனிப்பட்டவர்களின் உரிமைகளைக் கொடுப்பதற்காக தாம் அவைகளைப்பற்றி சிரமப்பட்டு எழுதியவை அவருடைய மனதில் தோன்றின. திடீரென்று இம்மாதிரி உபயோகமில்லாத வேலைகளில் இவ்வளவு நேரத்தை செலவிட்டதைப் பற்றி அவர் நினைத்து ஆச்சரியப்பட்டார்.





அடுத்த நாள் இளவரசர் ஆண்ட்ரூ சில நண்பர்களைப் பார்ப்பதற்கு புறப்பட்டார். நடனக் கச்சேரியில் தம்முடைய அறிமுகத்தை புதுப்பித்துக்கொண்ட ராஸ்டோவ்களின் வீட்டிற்கும் அவர் போனார். மரியாதையை முன்னிட்டு அவர் அங்கே போக வேண்டியதாய் இருந்தபோதிலும், தம்முடைய மனதில் மகிழ்ச்சியான எண்ணத்தை ஸ்தாபித்த அந்த நவீன ஆவல் நிறைந்த பெண்ணை அவளுடைய வீட்டிலேயே போய் பார்க்க வேண்டும் என்றும் நினைத்தார்.

முதலில் நட்டாஷாதான் அவரை சந்தித்தாள். ஒரு கரு நீல நிற சட்டையை அணிந்து கொண்டிருந்தாள். அவளின் நடன உடையை விட இந்த உடையில்தான் அவள் அதிக அழகாகத் தோன்றுவதாக இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். ஒரு பழைய நண்பரை வரவேற்பதைப் போல, ஆடம்பரம் இல்லாமலும் மனக் களிப்புடனும், ராஸ்டோவ் குடும்பத்தைச் சேர்ந்த எல்லாரும் அவரை வரவேற்றார்கள். முன்னால் மிகுந்த கண்டனத்தோடு அந்தக் குடும்பத்தைப் பற்றி அவர் அபிப்பிராயம் கொண்டிருந்தார். இப்பொழுது அந்த முழுக் குடும்பமும் ரொம்ப சிலாக்கியமானவர் களாகவும் ஆரம்பரமில்லாதவர்களாகவும் அனபுள்ளவர்களாகவும்

அவருக்குத் தோன்றின. வயோதிகக் கோமகனின் உபசாரங்களும் நல்ல குணமும், பீட்டர்ஸ்பர்க்கில் ஒருவருக்கு மிகுந்த ஆச்சரியமாய் இருந்தபடியால், டின்னர் வ்ரை இருப்பதற்கு இளவரசர் ஆண்ட்ரூவால் மறுக்க முடியவில்லை. 'ஆம், அவர்கள் மிக உயர்ந்த மக்கள். நட்டாஷா எப்பேர்ப்பட்ட பொக்கிஷமாக தங்களிடம் இருக்கிறாள் என்பதை அவர்கள் கொஞ்சங்கூட உணரவில்லை. ஆனால், அவர்கள் அன்பான மக்கள். வாழ்க்கை பொங்கித் ததும்பும் இந்த மனோகரமான கவித்துவம் வாய்ந்த பெண்ணுக்கு ஏற்றவிதமான சுற்றுணர்ச்சிகளை சாத்தியமான வரையில் அவர்கள் செய்து கொண்டிருக்கிறார்கள்' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார்.

தமக்கு முற்றிலும் புறம்பான, விசித்திரமான ஒரு உலகம், தாம் இதுவரை அறியாத மகிழ்ச்சி பொங்கும் ஒரு உலகம், ஆட்ராட்னோ சாலையில் அவர் பார்த்ததற்கு மாறான ஒரு உலகம், நிலவு பொங்கும் இரவில் ஜன்னலுக்குப் பக்கத்தில் கண்ட உலகத்திற்கு மாறான மற்றொரு உலகம், நட்டாஷாவிடம் தாம் காண்பதாக இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். நிலவு பொங்கும் இரவில் ஜன்னலுக்குப் பக்கத்தில் நடந்த சம்பவம் அவருடைய மன அமைதியை முன்னால் குலைத்துக்கொண்டிருந்தது. இப்பொழுது இந்த புதிய உலகம் அம்மாதிரி மன அமைதியைக் குலைக்கவில்லை. அது அவருக்கு இப்பொழுது புறம்பானதாகவும் தெரியவில்லை. ஏனெனில், அவரே அந்த உலகத்தில் புகுந்துவிட்ட படியால், அங்குள்ள ஒரு புதிய மகிழ்ச்சியை அவர் கண்டுகொண்டார்.

டின்னருக்குப் பின்பு இளவரசர் ஆண்ட்ரூவின் வேண்டுகோளுக்கு இணங்கி கிளாவி கார்டு வாத்தியப் பெட்டிக்குப் பக்கத்தில் நட்டாஷா சென்று பாட ஆரம்பித்தாள். ஜன்னலுக்குப் பக்கத்தில் இளவரசர் ஆண்ட்ரூ சீமாட்டிகளுடன் பேசிக்கொண்டும், நட்டாஷாவின் பாட்டை கேட்டுக்கொண்டும் நின்று கொண்டிருந்தார். தாம் பேசிக்கொண்டிருந்த வாக்கியத்தைப் பாதியில் நிறுத்தினார். அவருடைய தொண்டையை கண்ணீர் நெருக்குவதுபோல அவர் உணர்ந்தார். இம்மாதிரி ஒரு சம்பவம் தமக்கு நேருவது சாத்தியமில்லை என்று அவர் நினைத்ததுண்டு. பாடிக்கொண்டிருந்த நட்டாஷாவை அவர் நோக்கினார். புதிதான, மகிழ்ச்சியான ஏதோ ஒன்று அவருடைய உள்ளத்தைக் கலக்கியது. அவருக்கு சந்தோஷமான உணர்ச்சியும் அதே சமயத்தில் சோகமான உணர்ச்சியும் தோன்றின. அழுவதற்கு எந்தவிதமான காரணமும் அவருக்கு கிடையாது. என்றாலும் அவர் அழுவதற்கு தயாராய் இருந்தார். எதற்காக? அவருடைய பழைய காதலுக்காகவா?...

எதிர்கால நம்பிக்கைகளுக்காகவா?... ஆம், இல்லை. முக்கியமான காரணம் ஒன்று தான். அதாவது, அவர் உள்ளத்தில் அண்ட பகிரண்ட பிரம்மாண்டமாய் நிற்கும் ஒன்றிற்கும், குறிப்பிட்ட அளவில் ஸ்தூலமாய் காணப்படும் அவள் உள்பட அவருக்குமுள்ள பிரம்மாண்டமான வித்தியாசத்தை அவர் திடீரென்று உணர முடிந்ததே அதற்கு முக்கியமான காரணம். இந்த வித்தியாசம் அவருடைய மனதை அழுத்தியது. அதே சமயத்தில் அவள் பாடும்பொழுது அவரை உற்சாகமூட்டவும் செய்தது.

தனது பாட்டை முடித்ததும் அவரிடம் சென்று தனது குரல் எப்படி இருக்கிறது என்று கேட்டாள். முதலில் இதைக் கேட்டுவிட்டு, அப்புறம் இந்தக் கேள்வியை அவள் கேட்டிருக்கக் கூடாது என்று உணர்ந்து மனக் குழப்பம் அடைந்தாள். அவர் அவளைப் பார்த்து புன்னகை காட்டினார். அவள் செய்யும் ஒவ்வொன்றும் அவருக்கு எப்படி நன்றாய் இருக்கிறதோ, அதே மாதிரி அவருக்கு நன்றாய் இருப்பதாகக் கூறினார்.

மாலை வெகுநேரம் கழித்து ராஸ்டோவ்களின் வீட்டைவிட்டு இளவரசர் ஆண்ட்ரூ புறப்பட்டுப் போனார். பழக்க தோஷத்தினால் அவர் படுக்கப் போனார். ஆனால், அவரால் தூங்கமுடியாது என்பதை கண்டுகொண்டார். மெழுகு வத்தியை பொருத்தி படுக்கையில் எழுந்து உட்கார்ந்தார். பின்னால் எழுந்து நின்று மீண்டும் படுத்தார். தூக்கம் வராததைப் பற்றி அவர் ஒன்றும் கவலைகொள்ளவில்லை. காற்று இல்லாத ஒரு நெருக்கடியான அறையிலிருந்து கடவுளின் பரிசுத்தமான, காற்று நிறைந்த வெளியிடத்திற்கு வந்தால் ஒருவர் எம்மாதிரி உணர்வாரோ, அதேமாதிரி அவருடைய உள்ளம் உணர்ச்சியோடும் மகிழ்ச்சியோடும் இருந்தது. நட்டாஷா மீது அவர் காதல் கொண்டிருக்கிறார் என்பது அவருடைய மண்டையில் நுழையவில்லை. அவளைப்பற்றி அவர் சிந்தித்துக்கொண்டும் இருக்கவில்லை. ஆனால், அவளுடைய உருவம் அவருக்குத் தோன்றிக்கொண்டிருந்தபடியால், வாழ்க்கை முழுவதுமே புதிய ஒளியில் அவருக்கு காணப்பட்டது. 'நான் ஏன் கஷ்டப்பட வேண்டும்? இந்த வாழ்க்கை, எல்லா மகிழ்ச்சிகளையும் கொண்ட இந்த வாழ்க்கை எனக்கு திறந்து நிற்கும்போது, நான் எதற்காக இந்த குறுகிய வழியில் துன்பப்பட்டுக்கொண்டு இருக்கவேண்டும்?' என்று அவர் தமக்குள்ளேயே சொல்லிக்கொண்டார். வெகு காலத்திற்குப் பின்பாக இப்பொழுதுதான் முதல் தடவையாக தமது எதிர்கால வாழ்க்கைக்கு வேண்டிய மகிழ்ச்சியான திட்டங்களை தயாரிக்க ஆரம்பித்தார். தமது குமாரனின் படிப்பிற்காக ஒரு

வாத்தியாரை கண்டுபிடித்து, அவரிடம் அவனை ஒப்புவித்துவிடவேண்டும் என்று தீர்மானித்தார். ராணுவ சேவையிலிருந்து விலகி வெளிநாடுகளுக்குப் போய், இங்கிலாந்து, ஸ்விட்சர்லாந்து, இத்தாலி ஆகிய நாடுகளை பார்க்க வேண்டும் என்று முடிவு செய்தார். 'என்னிடம் இவ்வளவு தெம்பும் இளமையும் இருக்கும்போதே என்னுடைய சுதந்திரத்தை நான் உபயோகிக்கவேண்டும். சந்தோஷமாய் இருப்பதற்காக, சந்தோஷமாய் இருப்பது சாத்தியமென்று ஒருவர் நம்பித்தான் ஆகவேண்டும் என்று பீயர் சொல்லியது ரொம்ப சரி. அதை இப்பொழுது நான் நம்புகிறேன். இறந்தவர்களோடு இறந்தவைகள் புதைக்கப்படட்டும். ஆனால், ஒருவர் உயிரோடு இருக்கும்பொழுது அவர் சந்தோஷமாக வாழ்ந்துதான் ஆகவேண்டும்' என்று அவர் நினைத்தார்.




ஒரு நாள் காலையில் கர்னல் அடால்ப் பெர்க் என்பவர் பீயரைப் பார்ப்பதற்காக வந்தார். மாஸ்கோவிலும், பீட்டர்ஸ் பர்க்கிலும் உள்ள ஒவ்வொருவரையும் பீயர் அறிவார். கொஞ்சம்கூட அப்பழுக்கு இல்லாத புதிய சீருடையை பெர்க் அணிந் திருந்தார். அவருடைய தலை முடியில் பொமேடு தடவி, சக்கரவர்த்தி அலெக்ஜாண்டர் தமது தலை முடியை வாரிவிடுவதைப்போல காதிற்கு மேலாக உள்ள தலை முடியை முன் பக்கமாக சீவி விட்டுக்கொண்டிருந்தார்.

'நான் இப்போதுதான் உமது மனைவியான கோமகளைப் பார்க்கப் போயிருந்தேன். துரதிருஷ்டவசமாக எனது வேண்டு கோளை அவள் ஒப்புக்கொள்ளவில்லை. ஆனால் உம்மிடம் எனக்கு மிகுந்த அதிர்ஷ்டம் இருக்கும் என்று நான் நம்புகிறேன்' என்று அவர் ஒரு புன்சிரிப்போடு சொன்னார்.

'நீர் வேண்டுவது என்ன, கர்னலே? நான் நீர் கேட்பதை செய்ய தயாராய் இருக்கிறேன்.'

'நான் இப்போதுதான் என்னுடைய புதிய வீட்டில் குடியேறினேன், கோமகனே, (இந்த விஷயத்தைச் சொன்னால் அவர் மிகுந்த சந்தோஷப்படுவார் என்ற உறுதியான நம்பிக்கையோடு பெர்க் கூறினார்.) ஆகவே என்னுடையவும் என் மனைவியுடையவும் நண்பர்களை அழைத்து, ஒரு சிறிய கச்சேரி

வைக்க நான் விரும்புகிறேன். (அவர் இன்னமும் அதிகமாக, இனிமையாக புன்னகை காட்டினார்.) அந்தக் கச்சேரிக்கு கோமகளையும் உம்மையும் அழைத்து எனது வீட்டில் தேநீரும் இராச்சாப்பாடும் சாப்பிட்டு என்னை கௌரவிக்கும்படி கேட்க விரும்புகிறேன்.'

தன்னுடைய அந்தஸ்துக்கு இந்த பெர்க்குகள் குறைந்தவர்கள் என்பது கோமகள் ஹெலனின் அபிப்பிராயம். அவரால்தான் அம்மாதிரி அழைப்புகளை மறுத்து குரூரமாய் இருக்கமுடியும். தன்னுடைய வீட்டில் அம்மாதிரி கச்சேரியை வைக்கவேண்டிய அவசியத்தைப்பற்றி பெர்க் தெளிவாக விளக்கிச் சொன்னார். ஏனெனில் அவருக்கு இது மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கு மென்றும், சீட்டு விளையாட்டு போன்றவைகளில் அவர் செலவிட மாட்டாரென்றும், ஒரு நல்ல நண்பர்களின் அளவளாவுதல் கூட்டத்திற்காக அவர் செலவிடத் தயார் என்றும் கூறினார். ஆகவே இப்போது பீயரால் மறுக்கமுடியவில்லை. அந்தக் கச்சேரிக்கு வருவதாக வாக்குறுதி கொடுத்தார்.

'ஆனால், நீர் தாமதமாய் வரக்கூடாது, கோமகனே! எட்டு மணி 10 நிமிஷத்துக்கு முன்பாக, தயவு செய்து, வந்துவிடவேண்டும். நாம் அங்கே கொஞ்சம் சீட்டு ஆடுவோம். எங்கள் ஜெனரல் வருகிறார். அவர் என்னிடம் மிகுந்த பிரியமாய் இருப்பார். நாம் அதன் பின்பு இராச்சாப்பாடு சாப்பிடுவோம், கோமனனே. ஆகவே, தயவு செய்து எனக்காக நீர் கருணை காட்டுவீராக.'

பீயர்எப்போதுமே தாமதமாய் போவது வழக்கம். என்றாலும், அன்றைய தினம் 8 மணிக்கு 10 நிமிஷங்களுக்கு முன்பாக அல்ல, 15 நிமிஷத்திற்கு முன்பாகவே பெர்க்குகளின் வீட்டிற்கு போய்ச் சேர்ந்தார்.

கச்சேரிக்கு வேண்டிய எல்லா விஷயங்களையும் முடித்த பின்பு, தங்கள் விருந்தாளிகளின் வருகைக்காக பெர்க்குகள் காத்துக் கொண்டிருந்தார்கள்.

புதிய, சுத்தமான, பிரகாசமான படிப்பு அறையில், படங்களும், சிறிய உருவச்சிலைகளும் வைக்கப்பட்டு, புதிய நாற்காலிகளும் போடப் பட்டிருந்தன. அந்த அறையில் பெர்க் அவருடைய மனைவியுடன் அமர்ந்திருந்தார். தமது சீருடையில் பொத்தான்களையெல்லாம் மாட்டி, தமது மனைவிக்குப் பக்கத்தில் பெர்க் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தார். ஒவ்வொருவரும் தங்களுக்கு மேற்பட்டவர்களுடனேயே அறிமுகம் செய்ய

முயற்சிக்கவேண்டும். அப்படியானால்தான் அந்த அறிமுகங்களினால் திருப்திகரமான பலன்கள் ஏற்படும்.

'அம்மாதிரி செய்தால்தான் ஏதாவது விஷயங்களை அறிந்து கொள்ள முடியும். அவர்களிடம் எதையாவது கேட்க முடியும். என்னுடைய முதல் ப்ரமோஷனுக்குப் பின்னால் நான் எம்மாதிரி காரியங்களை சமாளித்தேன் என்பதை நீயே பார்த்துக்கொள். (நமது வயதை வருஷங்களினால் பெர்க் கணக்கிடுவதில்லை. ப்ரமோஷன்களைக் கொண்டு தான் கணக்கிடுவார்) என்னுடைய தோழர்கள் இன்னமும் வெறும் ஆட்களாகவே இருக்கிறார்கள். ஆனால் நானோ ஒரு பட்டாளத்தின் கமாண்டர் பதவிக்கு நியமிக்கப்படுவதற்காக அந்த ஸ்தானத்தில் காலி ஏற்படுவதை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். அதோடு உன்னுடைய கணவராய் இருக்கக்கூடிய மகிழ்ச்சியையும் பெற்றிருக்கிறேன்.' (இச்சமயம் அவர் எழுந்து வெராவின் கையில் முத்தமிட்டார். அப்படி அவர் எழுந்து போகும்போது, கம்பளத்தின் மூலை மடிந்திருந்ததைப் பார்த்து, அதை நேராக்கிவிட்டுப் போனார்) 'இவற்றையெல்லாம் நான் எப்படிப் பெற முடிந்தது? யாரிடம் அறிமுகம் கொள்ளவேண்டும் என்பதை நான் அறிந்திருந்ததுதான் முக்கியமாக இதற்குக் காரணம். அதோடு ஒவ்வொருவரும் ஒழுங்காகவும், மனச்சாட்சியோடும் வேலை செய்யவேண்டும் என்பதை சொல்லவேண்டியதே இல்லை.'

ஒரு பலவீனமான பெண்ணுக்கு மேலாக தம்முடைய உயர்வை காட்டுவதைப் போன்ற உணர்ச்சியோடு பெர்க் இளநகை கொண்டார். சிறிது பேச்சை நிறுத்தினார். எப்படியிருந்தாலும் தம்முடைய இந்த அருமை மனைவி ஒரு பலவீனமான பெண்; அவளால் ஒரு ஆண் பிள்ளையின் கௌரவத்திற்கு என்னென்ன வேண்டுமென்பதையும், ஒரு ஆணாக இருப்பதற்கு எது அவசியம் என்பதையும் அறிந்துகொள்ள முடியாது என்று நினைத்தார். ஆனால் அதே சமயத்தில் தன்னுடைய இனிமையான மனச்சாட்சி உள்ள கணவருக்கு மேலாக தான் உயர்ந்து இருப்பதாக நினைத்து வெரா புன்னகை கொண்டாள். எப்படியிருந்தாலும் அவளுடைய கணவர் மற்ற ஆண்களைப் போலவே, வாழ்க்கையை தவறாகப் புரிந்து கொண்டவர் என்று நினைத்தாள். தமது மனைவியைக் கொண்டு எல்லாப் பெண்களுமே பலவீனமானவர்களாகவும், அறிவீனமானவர்களாகவும் இருப்பார்களென்று பெர்க் தீர்மானித்தார். தனது கணவரைக்கொண்டு எல்லா ஆண்களையும் பற்றி பொதுவாக ஒரு அபிப்பிராயம் கொண்டாள். அதாவது, அவர்கள் ஒன்றுமே தெரியாதவர்கள் என்றும் அகம்பாவம்

பிடித்தவர்கள் என்றும், சுயநலக்காரர்களென்றும், பகுத்தறிவு என்பது தங்களுக்கு மட்டுமே உண்டு என்று நினைப்பவர் களென்றும் வெரா தீர்மானித்தாள்.

பெர்க் எழுந்து தமது மனைவியை ஜாக்கிரதையோடு, அதாவது அவளுடைய கழுத்தில் அணிந்திருந்த துப்பட்டி கசங்கி விடாதபடி உதடுகளில் முத்தமிட்டார். அந்த துப்பட்டியை அதிக விலை கொடுத்து அவர் வாங்கிக் கொடுத்திருந்தார்.

'ஒரே விஷயம் என்னவென்றால், வெகு சீக்கிரமாக நாம் குழந்தைகள் பெறக்கூடாது' என்று அவர் தம்மை அறியாமலேயே தமது நினைப்புகளின் கோர்வையாக இதைச் சொன்னார்.

'ஆமாம், எனக்கு குழந்தைகளே வேண்டாம். நாம் சமூகத்திற்காகவே உயிர் வாழவேண்டும்' என்று வெரா பதில் அளித்தாள்.

'இளவரசி யுசுபாவா இதே மாதிரி சவுக்கத்தை தான் அணிந்திருந்தாள்' என்று பெர்க் சொல்லி, ஒரு மகிழ்ச்சியும் அன்பும் கொண்ட புன்னகையோடு அவள் கழுத்தில் அணிந்துகொண்டிருந்த சவுக்கத்தைச் சுட்டிக்காட்டினார்.

அச்சமயம் கோமகன் பெஜுகாவ் வந்திருக்கிறார் என்று சொல்லப்பட்டது. கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் நோக்கி இருவரும் சுய திருப்தியோடு புன்முறுவல் கொண்டு இந்த விஜயத்தின் பெருமைக்கு தான்தான் காரணம் என்று மனதிற்குள் நினைத்துக்கொண்டிருந்தார்கள்.

'எம்மாதிரியான அறிமுகத்தை செய்துகொள்ள வேண்டும் என்பதை அறிந்திருந்ததினுடைய பலன் இதுதான். ஒருவர் எம்மாதிரி நடந்துகொள்ளவேண்டும் என்று அறிந்திருந்ததின் பலனும் இதுதான்' என்று பேர்க் நினைத்தார்.

'ஆனால், விருந்தாளிகளுடன் நான் பேசிக்கொண்டிருக்கும் போது, நீர் இடைமறித்து பேசக்கூடாது. ஏனென்றால், அவர்கள் ஒவ்வொருவருக்கும் எதில் சிரத்தையிருக்கிறது என்பது எனக்குத் தெரியும். வெவ்வேறு ஆட்களிடம் என்ன பேசவேண்டும் என்பதும் எனக்குத் தெரியும்' என்று வெரா சொன்னாள்.

பெர்க் மீண்டும் இளநகை காட்டினார்.

'அது தவிர்க்க முடியாதது. சில வேளைகளில் ஆண்களுக்கான உரையாடல்களை ஆண்கள் பேசியாகவேண்டும்' என்றார் பெர்க்.

தம்முடைய சிறிய, புதிய வரவேற்பு அறையில் பீயரை வரவேற்றார்கள். அந்த இடத்தில் இருந்த இசைவு

பொருத்தத்தையும் அழகையும் ஒழுங்கையும் மாற்றாத விதத்தில் அங்கு அமருவது கஷ்டமாய் இருந்தது. ஆகவே, அங்குகிடந்த சாய்வு நாற்காலியில் அல்லது சோபாவில் அமரும்படி, தம்முடைய அருமையான விருந்தாளியைக் கேட்டுக்கொண்டார். எங்கே அவரை அமரச் செய்வது என்பது அவருக்கே தெரியாதபடியால், விருந்தாளியே தீர்மானித்துக்கொள்ள விட்டுவிட்டார். ஒரு நாற்காலியை தாமே இழுத்துப் போட்டுக்கொண்டு பீயர் அமர்ந்தார். பெர்க்கும் வெராவும் உடனே தங்களுடைய மாலைக் கச்சேரியை ஆரம்பித்தார்கள். வந்திருந்த விருந்தாளியை கௌரவப்படுத்தும் விதத்தில் ஒருவரையொருவர் இடைமறித்துப் பேசிக் கொண்டிருந் தார்கள்.

பிரஞ்சு ஸ்தானாதிபதி காரியாலயத்தைப்பற்றி பேசி பீயரை குஷிப்படுத்த வேண்டுமென்று தன்னுடைய மனதில் தீர்மானித்து, அதே மாதிரி உரையாடலை வெரா ஆரம்பித்தாள். ஆண்களுக்கு உரிய உரையாடலை அவசியமென்று பெர்க் தீர்மானித்து தம்முடைய மனைவியின் பேச்சில் இடைமறித்து ஆஸ்திரியா வுடன் உள்ள யுத்தப் பிரச்னையைப்பற்றி பேச ஆரம்பித்தார். பொதுவான பிரச்னையை பற்றிப் பேசிக் கொண்டிருப்பதில் இருந்து, திடீரென்று தம்முடைய சொந்தப் பிரச்னையில் தம்மை அறியாமலேயே அவர் வந்து சேர்ந்தார். தம்மை அந்த ஆஸ்திரியப் படையெடுப்பில் கலந்துகொள்ளும்படி கேட்டுக் கொண்ட தாகவும், அதற்கு தாம் மறுத்துவிட்டதாகவும், அதற்குக் காரணம் என்னவென்றும் சொல்லிக்கொண்டிருந்தார். உரையாடல்கள் தொடர்ச்சியாக இல்லை. தன்னுடைய பேச்சில் குறுக்கிட்டு ஆண்களுக்குரிய விஷயத்தைப்பற்றி பேச ஆரம்பித்தது வெராவுக்கு கோபத்தை மூட்டியது. என்றாலும் ஒரே ஒரு விருந்தாளிதான் அங்கே வந்திருந்தபோதிலும், தங்களுடைய மாலைக் கச்சேரி மிகுந்த சிறப்பாக ஆரம்பமாகிவிட்டது கண்டு, கணவனும் மனைவியும் திருப்தியடைந்தார்கள். இரண்டு மொச்சைக்கொட்டை எப்படி ஒரேமாதிரி இருக்குமோ அதே மாதிரி மற்ற மாலைக் கச்சேரிகளைப் போலவே இந்தக் கச்சேரியும் பேச்சுகளுடனும் தேநீருடனும் பொருத்திவைக்கப்பட்ட மெழுகுவத்திகளுடனும் ஒரே மாதிரியாகக் காணப்பட்டது.

சிறிது நேரத்திற்கெல்லாம் பெர்க்கின் பழைய தோழரான போரிஸ் வந்து சேர்ந்தார். ஏதோ தயவும் ஆதரவும் காட்டுகிறது போன்ற பாவனையில் பெர்க்கையும் வெராவையும் அவர் நடத்தினார். போரிஸுக்குப் பின்னால் கர்னலோடு ஒரு சீமாட்டி வந்தாள். அவள் பின்னால் ஜெனரல் வந்தார். அதன் பின்னால்

ராஸ்டோவ்களும் வந்தார்கள். ஆகவே அந்த மாலைக் கச்சேரி மற்ற மாலைக் கச்சேரிகளைப் போலவே சந்தேகமில்லாமல் இருந்தது. தங்களுடைய வரவேற்பு அறையில் இம்மாதிரியான ஒரு காட்சியை காண்பதில் தங்களுக்கு ஏற்பட்ட சந்தோஷப் புன்னகையை பெர்க்காலும், வெராவாலும் மறைக்க முடியவில்லை. அந்தக் கூட்டத்தில் சம்பந்தமில்லாத பேச்சுகளும், ஆடைகளின் சலசலப்பு ஓசைகளும், நாற்காலிகளை இழுத்துப்போடும் சப்தங்களும் கேட்டுக் கொண்டிருந்தன. ஒவ்வொன்றும் மற்ற இடங்களில் காணப்பட்டது போலவே ஒவ்வொருவருக்கும் தோன்றியது. அங்கு வந்த ஜெனரல் அந்த வீட்டைப் பற்றிப் புகழ்ந்தார். பெர்க்கை தோளில் தட்டிக் கொடுத்து, ஒரு தந்தையைப்போன்ற பாவத்தோடு, பாஸ்டன் சீட்டு விளையாட்டிற்கு மேஜைகளை எப்படிப் போடுவது என்று சொல்லிக்கொண்டிருந்தார். கோமகன் இலியா ராஸ்டோவின் பக்கத்தில் ஜெனரல் அமர்ந்தார். ராஸ்டோவ்தான் அவருக்கு அடுத்தபடியான முக்கியமான விருந்தாளியாய் காணப்பட்டார். வயோதிகர்கள் எல்லாரும் வயோதிகர்களோடு சேர்ந்தும், இளையவர்கள் எல்லாரும் இளையவர்களோடு சேர்ந்தும் அமர்ந்தார்கள். தேநீர் மேஜையின் முன்பாக வீட்டுக்காரி அமர்ந்திருந்தாள். பானின் என்பவரின் கச்சேரியில் எம்மாதிரி இருந்ததோ, அதே மாதிரி கேக்குகள் ஒரு வெள்ளித் தட்டில் வைக்கப்பட்டிருந்தன. மற்ற மாலைக் கச்சேரிகளில் எப்படியிருக்குமோ அதே மாதிரி ஒவ்வொன்றும் அங்கேயும் இருந்தது.

6

21

**வ**ந்திருந்த முக்கியமான விருந்தாளிகளில் பீயரும் ஒருவராகையால் கோமகன் ராஸ்டோவ், ராணுவ ஜெனரல், ராணுவ கர்னல் ஆகியவர்களோடு பாஸ்டன் என்ற சீட்டு விளையாட்டிற்கு அமர வேண்டியதாயிற்று. நட்டாஷா எங்கிருந் தாளோ, அவளை நேராக பார்க்கும் விதத்தில் அவர் சீட்டு மேஜையில் தற்செயலாக அமர்ந்தார். நடனக் கச்சேரிக்குப் பின்னால் அவளிடம் ஒரு விசித்திரமான மாறுதல் ஏற்பட்டிருந்தது. அவருடைய உள்ளத்தில் பதிந்தது. அவள் மௌனமாய் இருந்தாள். நடனக் கச்சேரியில் பார்த்ததைவிட அவள் அழகு குறைந்திருந்தாள். ஆனால், தன்னைச் சுற்றியுள்ள ஒவ்வொன்றிலும் அவள் காட்டிய அமைதியான பராமுகம் அந்தக் குறைக்கு ஈடு செய்வதாய் இருந்தது.

அவளை நோட்டமிட்ட பீயர், 'அவள் ஏன் இப்படி இருக்கிறாள்?' என்று நினைத்தார். தன்னுடைய சகோதரியின் பக்கத்தில் தேநீர் மேஜை முன்பாக அவள் அமர்ந்திருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்த போரிஸ் அவளிடம் கேட்ட கேள்விகளுக்கு அவரைப் பார்க்காமலேயே தயக்கத்துடன் ஏதோ பதில் சொல்லிக்கொண்டிருந்தாள். தமது ஜோடிகள் மகிழ்ச்சி அடையும்படி ஐந்து ஆட்டங்கள் ஆடிய பின்பு, மறுபடியும் சீட்டுக்கட்டை கையில் எடுத்தபோது அந்த அறைக்குள் யாரோ நுழையும் சப்தமும் வாழ்த்துரைகளும் கேட்டன. அதைப் பார்ப்பதற்காக பீயர் நிமிர்ந்தபோது, மறுபடியும் நட்டாஷாவை நோட்டமிட்டார்.

இன்னும் அதிகமான ஆச்சரியத்தோடு, 'அவளுக்கு என்ன நேர்ந்துவிட்டது?' என்று பீயர் தம்மைத்தாமே கேட்டுக்கொண்டார்.

அவளுக்கு எதிராக இளவரசர் ஆண்ட்ரூ நின்றுகொண்டிருந்தார். கனிந்த அக்கரையோடு அவளை நோக்கி எதையோ சொல்லிக் கொண்டிருந்தார். அவள் தனது தலையை உயர்த்தி, அவரை ஏறிட்டுப் பார்த்து முகம் சிவந்தாள். அவளுக்கு வேகமாய் வந்து கொண்டிருந்த மூச்சை அடக்குவதற்கு அவள் முயற்சிப்பதாகத் தோன்றியது. அவளுடைய உள்ளத்தில் அழுத்திவைக்கப் பட்டிருந்த பிரகாசமான உள்ளத்தின் ஜ்வாலை மீண்டும் அவளுக்கு உள்ளாக பிரகாசிக்க ஆரம்பித்தது. அவள் பூராவாக மாறினாள். ஒரு சாதாரண, அழகில்லாத பெண்ணாய் காணப்பட்ட அவள், அன்று நடனக் கச்சேரியில் எம்மாதிரி காண்பட்டாளோ, அதே மாதிரி மீண்டும் மாறினாள்.

இளவரசர் ஆண்ட்ரூ பீயரிடம் போனார். தமது நண்பரின் முகத்தில் புதிய வாலிபத் தோற்றம் காணப்படுவதை பீயர் கவனித்தார்.

அந்த சீட்டாட்டத்தின்போது பீயர் பலமுறை இடம் மாறி உட்கார்ந்தார். நட்டாஷாவை நேராக பார்த்திருப்பதும், அவளுக்கு முதுகு காட்டியிருப்பதுமாக பலவிதமாய் உட்கார்ந்தார். ஆனால், அன்றைய ஆட்டத்தில் ஆறு சுற்றுகள் விளையாடி முடிகிற வரையில் அவளையும் தம்முடைய நண்பரையும் அவர் கவனித்து வந்தார்.

'முக்கியமானது ஏதோ ஒன்று அவர்கள் இருவருக்குள்ளும் நடந்துகொண்டிருக்கிறது' என்று பீயர் நினைத்தார். மகிழ்ச்சியும் வேதனையும் கொண்ட ஒரு உணர்ச்சி அவரை வாட்டி சீட்டாட்டத்தை சரியாக கவனிக்க முடியாமல் செய்தது.

ஆறு சுற்றுகள் முடிந்ததும் இம்மாதிரி விளையாடுவதால் பிரயோஜனம் இல்லை என்று ராணுவ ஜெனரல் சொல்லிவிட்டு விளையாட்டிலிருந்து எழுந்தார். அந்த விளையாட்டில் இருந்து பீயர் விடுவிக்கப்பட்டார். ஒரு பக்கத்தில் சோனியாவோடும் போரிஸோடும் நட்டாஷா பேசிக்கொண்டு இருந்தாள். மற்றொரு பக்கத்தில் இளவரசர் ஆண்ட்ரூவிடம் விஷமப் புன்னகையோடு எதையோ வெரா சொல்லிக்கொண்டிருந்தாள். ஏதாவது ரகசியங்கள் பேசிக்கொண்டிருக்கிறீர்களா என்று கேட்டுக்கொண்டே பீயர் தமது நண்பர் பக்கத்தில் போய் அமர்ந்தார். நட்டாஷாவிடம் இளவரசர் ஆண்ட்ரூ கண்ணோட்டமிடுவதை வெரா கவனித்தாள். ஆகவே ஒரு உண்மையான மாலைக் கச்சேரியில் கனிவான காதலைப்பற்றி பேசவேண்டியது முற்றிலும் அவசியம் என்று அவள் நினைத்தாள். இளவரசர் ஆண்ட்ரூ தனியாய் இருந்த சமயம் பார்த்து, பொதுவாக காதல் உணர்ச்சிகளைப் பற்றியும், தனது சகோதரியைப் பற்றியும் பேச ஆரம்பித்தாள். இளவரசர் ஆண்ட்ரூ ஒரு சிறந்த புத்திசாலியான விருந்தாளி என்று அவள் கருதியபடியால், அவரிடம் தன்னுடைய முழு சாதுர்யத்தையும் பிரயோகிக்கவேண்டி இருக்குமென்று அவள் உணர்ந்தாள்.

தான் மிகுந்த திருப்தி கொண்டவிதத்தில் வெரா பேசிக் கொண்டிருந்தாள். ஆனால், இளவரசர் ஆண்ட்ரூ தர்மசங்கடமான நிலைமையில் இருப்பதாகக் காணப்பட்டார். இம்மாதிரி அவருக்கு நேரிடுவது அபூர்வம். இச்சமயத்தில்தான் பீயர் அவர்களிடம் போய்ச்சேர்ந்தார்.

'நீர் என்ன நினைக்கிறீர்?' என்று ஒரு விஷமப் புன்னகையுடன் வெரா கேட்டாள். 'நீர் மிகவும் தெளிவாய் அறியக்கூடியவர். ஒரு பார்வையிலேயே மக்களின் குணங்களை அறிந்து கொள்ளக் கூடியவர். நட்டாலியைப்பற்றி நீர் என்ன நினைக்கிறீர்? அவளுடைய பற்றுதல்களில் அவள் உறுதியாய் நிற்க அவளால் முடியுமா? மற்றப் பெண்களைப்போல் (தன்னையே குறிப்பிட்டுக் கொள்கிறாள்) ஒரே மனிதரை காதல் செய்து, எப்பொழுதும் உண்மையாய் அவருடன் இருக்க அவளால் முடியுமா? அப்படி இருப்பதைத்தான் உண்மையான காதல் என்று நான் கருதுகிறேன். நீர் என்ன நினைக்கிறீர், இளவரசே?'

'உனது சகோதரியை நான் கொஞ்சம்தான் அறிவேன்' என்று இளவசரர் ஆண்ட்ரூ ஒரு கேலிப் புன்னகையோடு கூறினார். அந்தப் புன்னகையில் தம்முடைய தர்மசங்கடத்தை மறைக்க முயன்றார். 'அதனால் இம்மாதிரி நாசூக்கான கேள்விக்கு என்னால் பதில்

சொல்ல முடியாது. தவிர, ஒரு பெண் எவ்வளவுக்கு எவ்வளவு கவர்ச்சிக் குறைவாக இருக்கிறாளோ அவ்வளவுக்கு அவ்வளவு அவள் உறுதியுடன் இருப்பாள் என்பதை நான் கவனித்திருக்கிறேன்' என்று சொல்லிவிட்டு, அவர்களிடம் நெருங்கிக்கொண்டிருந்த பீயரை ஏறிட்டுப் பார்த்தார்.

'ஆம், அது உண்மைதான், இளவரசே எங்கள் காலத்தில்' என்று வெரா மேலும் தொடர்ந்துட பேசினாள். (குறிப்பிட்ட அளவு மட்டும் அறிவுள்ள மக்கள் 'எங்கள் காலம்' என்று பேசுவதில் மிகுந்த பிரியம் கொண்டிருப்பார்கள். 'எங்கள் கால'த்தின் விசேஷ குணங்களை அவர்கள் அறிந்து கணக்கிட்டு வைத்திருப்பது போலவும், காலம் மாறுவதற்கு தக்கபடி மக்களின் குணாதிசயங்களும் மாறுவதைப் போலவும் அவர்கள் மனோராஜ்யம் செய்வார்கள்.) 'எங்கள் காலத்தில் பெண்ணுக்கு மிகுந்த சுதந்திரம் இருந்தபடியால், அவளிடம் காதல் பேசுவதனால் ஏற்படும் மகிழ்ச்சி, அவளுக்கு உள்ளே இருக்கிற உண்மையான உணர்ச்சியை அமுக்கிவிடுகிறது. நட்டாலி ரொம்ப சபலசித்தம் உள்ளவள் என்பதை ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும்' என்று கூறிமுடித்தாள். மீண்டும் பேச்சு நட்டாலியைப்பற்றி திரும்பியதால் இளவரசர் ஆண்ட்ரூ அதிருப்தி அடைந்து தமது புருவத்தை நெரித்தார். அவர் எழுந்திருக்க முயற்சி செய்தார். ஆனால், இன்னும் அதிகமான கவர்ச்சி புன்னகைகாட்டி வெரா மேலும் தொடர்ந்து பேசினாள்.

'அவளிடம் காதல் பேசியதைப்போல அத்தனை பேர்கள் வேறுயாரிடமும் பேசியிருக்கமாட்டார்கள் என்று நான் நினைக்கிறேன். சமீப காலம் வரையில்கூட அவள் யாரைப் பற்றியும் சிரத்தை கொள்ளவில்லை. இப்பொழுது உமக்குத் தெரியும், கோமகனே, நம் இருவருக்குள்ளாக ஒரு விஷயத்தை உமக்குச் சொல்லுகிறேன். என்னுடைய அருமை மைத்துனர் போரிஸுடன் அவள் வெகுதூரம் சல்லாபம் செய்துகொண்டிருந்தாள்...'

இளவரசர் ஆண்ட்ரூ முகம் சுளித்து மௌனமாய் இருந்தார்.

'நீர் போரிஸுடன் நட்பாய்த்தான் இருக்கிறீர் அல்லவா?' என்று வெரா கேட்டாள்.

'ஆம், அவரை நான் அறிவேன்...'

'நட்டாஷாவிடம் அவருக்கு ஏற்பட்டிருந்த சிறுபிள்ளைத் தனமான காதலைப்பற்றி அவர் உம்மிடம் சொல்லி இருப்பார் என்று நினைக்கிறேன்.'

'ஓ, ஒரு சிறுபிள்ளைத்தனமான காதல் இருந்ததா?' என்று இளவரசர் ஆண்ட்ரூ திடீரென்று கேட்டு எதிர்பாராதவிதமாக நாணி முகம் சிவந்தார்.

'ஆம், மைத்துனர் மைத்துனிகளுக்குள் ஏற்படும் அன்னியோன்னியம் அநேகமாய் காதலில் கொண்டுவிடும் என்ற பழமொழி உமக்குத் தெரியும். நீர் அப்படி நினைக்கவில்லையா?'

'ஓ, சந்தேகம் இல்லாமல்' என்று இளவரசர் ஆண்ட்ரூ பதில் சொன்னார். திடீரென்று அவருக்கு ஒரு உற்சாகம் ஏற்பட்டது. பீயரைப் பார்த்து மாஸ்கோவில் உள்ள அவருடைய ஐம்பது வயதான மைத்துனிகளிடம் ஜாக்கிரதையாய் இருக்கும்படி கேலி செய்தார். இம்மாதிரி கேலிப் பேச்சுகளுக்கு இடையில் அவர் எழுந்து பீயரின் கையைப்பற்றி ஒரு பக்கமாக அழைத்துக் கொண்டு போனார்.

தமது நண்பருக்கு ஏற்பட்டிருந்த விசித்திரமான பரபரப்பைக்கண்டு ஆச்சரியம் கொண்டு தமது நண்பர் எழுந்தபோது நட்டாஷாவை நோக்கியதையும், கவனித்து, 'நல்லது, இப்பொழுது என்ன?' என்று பீயர் கேட்டார்.

'நான் உம்மிடம் பேசி ஆகவேண்டும்' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார். 'பெண்களின் அந்தக் கையுறைகளைப்பற்றி உமக்குத் தெரியும். (பிரீ மேஸன் சங்கத்தில் புதிதாய் சேருகிற சகோதரருக்கு ஒரு ஜோடி கையுறைகள் கொடுப்பார்கள். அவற்றை அவர் காதலிக்கிற பெண்ணுக்கு கொடுக்கவேண்டும். இதைப் பற்றித்தான் இளவரசர் ஆண்ட்ரூ குறிப்பிட்டார்) நான்... ஆனால், இல்லை. உம்மிடம் நான் பின்னால் பேசுகிறேன்' என்று அவருடைய கண்களில் விசித்திரமான ஒரு ஒளியுடனும், அவருடைய நடவடிக்கைகளில் பரபரப்புடனும், நட்டாஷாவிடம் இளவரசர் ஆண்ட்ரூ சென்று அவள் பக்கத்தில் அமர்ந்தார். அவளிடம் இளவரசர் ஆண்ட்ரூ எதையோ கேட்பதையும், அதற்கு அவள் பதில் சொல்லியபோது முகம் சிவந்ததையும் பீயர் கண்டார்.

அச்சமயத்தில் பீயரிடம் பெர்க் வந்தார். ராணுவ ஜெனரலுக்கும் கர்னலுக்கும் ஸ்பெயின் விவகாரங்களைப்பற்றி நடக்கிற ஒரு விவாதத்தில் அவர் கலந்து கொள்ளவேண்டும் என்று வற்புறுத்தினார்.

பெர்க் திருப்தியாகவும் சந்தோஷமாகவும் இருந்தார். மகிழ்ச்சியின் புன்னகை அவருடைய முகத்தைவிட்டு நீங்கவே இல்லை. அந்த மாலைக் கச்சேரி அவர் பார்த்த மற்ற கச்சேரிகளைப்போலவே இருந்ததோடு, மிகவும் வெற்றிகரமாகவும்

முடிந்தது. எல்லாம் ஒரே மாதிரியாய் இருந்தன. சீமாட்டிகளின் தந்திரப் பேச்சுகள், சீட்டாட்டங்கள், சீட்டாட்டத்தின்போது ராணுவ ஜெனரல் உரக்கப் பேசியது, சாமோவார் என்ற தேநீர் பாத்திரம், தேநீர் சாப்பிடுவதற்கான கேக்குகள் முதலியவைகள் ஒரே மாதிரியாகவே இருந்தன. ஆனால், அவர் பார்த்த மாலைக் கச்சேரிகளில் அவர் கண்ட ஒரு விஷயம் அங்கு இல்லாததைப்போல அவருக்குத் தோன்றியது. ஆகவே, அதை அவர் காப்பி அடிக்க விரும்பினார். முக்கியமான ஏதாவது ஒரு விஷயத்தைப்பற்றி ஆண்களுக்குள் ஒரு தகராறு ஏற்பட்டு, அதற்காக பலத்த குரலில் உரையாடுவது அங்கே இன்னும் காணப்படவில்லை. அம்மாதிரி ஒரு விவாதத்தை இப்பொழுது ராணுவ ஜெனரல் ஆரம்பித்தார். அதற்காகத்தான் பீயரை அங்கே பெர்க் அழைத்துக்கொண்டு போனார்.



இளவரசர் ஆண்ட்ரூவை மறுநாள் தமது வீட்டிற்கு உணவு அருந்த வரும்படி கோமகன் அழைத்தார். அதன்படி ராஸ்டோவ்களின் வீட்டிற்கு அவர் சென்று விருந்துண்டு, அன்று பூராவாக அங்கேயே இருந்தார்.

அந்த வீட்டிலுள்ள ஒவ்வொருவருக்கும், யாருக்காக இளவரசர் ஆண்ட்ரூ அங்கே வந்திருக்கிறார் என்பது தெரியும். அதை மறைக்காமல் அன்று பூராவாக நட்டாஷாவுடன் இருப்பதற்கு அவர் முயற்சி செய்தார். அந்த நடுக்கமும், சந்தோஷமும், பரவசமும் கொண்ட நட்டாஷாவின் உள்ளத்தில் மட்டுமல்ல; அந்த வீடு பூராவாகவே ஏதோ ஒரு முக்கியமான காரியம் நடக்கப் போகிறது என்ற வியப்பான உணர்ச்சியோடு காணப்பட்டது. நட்டாஷாவோடு இளவரசர் ஆண்ட்ரூ பேசிக்கொண்டிருந்தபோது ஒரு சோகமான, கடுமையான தோற்றத்தோடு கோமகள் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளை நோக்கி அவருடைய பார்வை திரும்பும்போது, உபயோகமில்லாத விஷயங்களைப் பற்றி ஒரு உரையாடலை பயத்தோடு ஆரம்பிப்பாள். நட்டாஷாவை விட்டுப் பிரிவதற்கு சோனியா பயந்தாள். என்றாலும், அவர்களுடைய வழியில் தான் ட இடையூறாக இருக்கக்கூடாதே என்றும் பயந்தாள். நட்டாஷா அவரோடு தனியாய் இருந்த வினாடியில் ஏதோ ஒன்றை எதிர்பார்க்கும் பீதியில் வெளிறி காணப்பட்டாள். இளவரசர் ஆண்ட்ரூவின் அச்சத்தைக் கண்டு அவள் வியப்படைந்தாள்.

தன்னிடம் அவர் ஏதோ சொல்ல வேண்டும் என்று விரும்புபவரைப் போல அவள் உணர்ந்தாள். ஆனால் அவரால் அம்மாதிரி சொல்ல முடியவில்லை.

மாலையில் இளவரசர் ஆண்ட்ரூ அங்கிருந்த போன பின்பு, நட்டாஷாவிடம் கோமகள் வந்து மெதுவான குரலில், 'நல்லது, அப்புறம் என்ன?' என்று கேட்டாள்.

'அம்மா, கடவுளுக்காக இப்பொழுது என்னிடம் எதையும் கேட்காதே. அதைப்பற்றி ஒருவர் பேசிக்கொண்டிருக்க முடியாது' என்றாள் நட்டாஷா.

எப்படி இருந்தபோதிலும் அன்றிரவு பரபரப்பும் பயமும் மாறி மாறிக் கொண்டிருந்த நட்டாஷா தன்னுடைய தாயாரின் படுக்கையில் படுத்து வெகு நேரம் வரை தனக்கு எதிராக வெரித்துப் பார்த்துக்கொண்டிருந்தாள். தன்னை அவர் எப்படி பாராட்டினார் என்றும், அவர் வெளிநாடுகளுக்கு போவதைப் பற்றி என்ன சொன்னார் என்றும், அடுத்த வசந்த காலத்தில் அவர்கள் எங்கே இருக்கப் போகிறார்கள் என்பதைக் கேட்டார் என்றும், போரிஸைப் பற்றி அவர் என்ன விதமாக கேட்டார் என்றும் அவள் தனது தாயிடம் கூறினாள்.

'ஆனால், அம்மாதிரி... அம்மாதிரி... உணர்ச்சிப்பெருக்கு எனக்கு எப்பொழுதுமே ஏற்பட்டதில்லை. ஆனால் அவருடைய பிரசன்னத்தில் எனக்கு அச்சம் ஏற்படுகிறது. அவருடன் இருக்கும்பொழுது எப்பொழுதுமே எனக்கு அச்சமாய் இருக்கிறது. அதற்கு என்ன அர்த்தம்? அது உண்மையான விஷயம் என்பதை அது காட்டுகிறதா? ஆமாவா? அம்மா, நீ தூங்கி விட்டாயா?' என்று நட்டாஷா கேட்டாள்.

'இல்லை, என் அன்பே, நானே அச்சம் கொண்டிருக்கிறேன். இப்பொழுது நீ போகலாம்' என்று தாயார் பதில் சொன்னாள்.

'எப்படி இருந்தாலும் நான் தூங்கப் போவதில்லை. தூங்குவது, என்ன அறிவீனம்! அம்மா, அம்மா, அம்மாதிரி உணர்ச்சி எனக்கு எப்பொழுதுமே இதற்கு முன்னால் ஏற்பட்டதில்லை' என்று அவள் சொன்னாள். அவளுக்கு ஏற்பட்டிருந்த உணர்ச்சியைக் கண்டு ஆச்சரியமும் பீதியும் கொண்டாள். 'இம்மாதிரி ஏற்படும் என்று எப்பொழுதாவது நாம் நினைத்ததுதான் உண்டா?...'

ஆட்ராட்னோ என்ற இடத்தில், முதல் தடவையாக இளவரசர் ஆண்ட்ரூவை தான் பார்த்தபோதே, அவர் மீது தனக்கு காதல் பிறந்து விட்டதாக நட்டாஷாவுக்குத் தோன்றியது. அந்த மனிதரை தான் காதலிப்பது நிச்சயமானது என்று அவள் உறுதியாக நம்பினாள்.

அம்மாதிரி காதல் கொண்ட அவரை மீண்டும் சந்தித்து இந்த விசித்திரமான, எதிர்பாராத மகிழ்ச்சியை தான் அடையப் போவதாக அவள் எதிர்பார்த்திருந்தாள் என்று தோன்றியது.

'நாங்கள் பீட்டர்ஸ்பர்க்கில் இருக்கும்போதே அவர் இங்கே வரவேண்டும் என்றுஅவருக்கு நேர்ந்தது. அதே மாதிரி அந்த நடனக் கச்சேரியில் நாங்கள் சந்திக்க வேண்டும் என்றும் நேர்ந்தது. அதுதான் விதி. இந்த நிலைமைக்கு எல்லா காரியங்களையும் கொண்டுவந்து சேர்த்தது, நிச்சயமாக விதியின் வேலைதான். அதற்குள்ளாகவே அப்பொழுது, அவரை நான் நேராக பார்த்தபோது, ஏதோ ஒரு விசித்திரமான உணர்ச்சி எனக்கு உள்ளாகத் தோன்றியது.'

'இன்னும் உன்னிடம் வேறு என்ன அவர் சொன்னார்? அவை என்ன கவிதைகள்? வாசித்துக் காட்டு பார்க்கலாம்...' என்று அவளுடைய தாயார் நட்டாஷாவின் குறிப்புப் புத்தகத்தில் இளவரசர் ஆண்ட்ரூ எழுதி வைத்திருந்த கவிதைகளைப் பற்றி சிந்தனையோடு கேட்டாள்.

'அம்மா, அவர் மனைவியை இழந்தவராயிற்றே. அதனால் வெட்கப்பட வேண்டியது எதுவும் இல்லை அல்லவா?'

'பேசாதே, நட்டாஷா. கடவுளை பிரார்த்தனை செய். திருமணங்களெல்லாம் தேவலோகத்தில் முடிவு பெறுகின்றன' என்று தாயார் சொன்னாள்.

'என் கண் போன்ற அம்மா, உன் மீது எனக்கு எவ்வளவு பிரியம் தெரியுமா? நான் எவ்வளவு சந்தோஷமாய் இருக்கிறேன் தெரியுமா?' என்று நட்டாஷா கூச்சலிட்டு, மகிழ்ச்சியாலும், பரபரப்பாலும் கண்ணீர் சொரிந்து, தனது தாயாரை தழுவிக்கொண்டாள்.

அதே சமயத்தில் பீயருடன் இளவரசர் ஆண்ட்ரூ அமர்ந்து, நட்டாஷா மீது தமக்குள்ள காதலைப்பற்றியும் அவளைத் தமது மனைவியாக ஆக்கிக்கொள்ள தம்முடைய உறுதியான தீர்மானத்தைப்பற்றியும் சொல்லிக் கொண்டிருந்தார்.

அதே நாளில் தன்னுடைய வீட்டில் கோமகள் ஹெலன் ஒரு வரவேற்பு நடத்தினாள். பிரஞ்சு ஸ்தானாதிபதி அங்கு வந்திருந்தார். சமீப காலத்தில் அவளை அடிக்கடி வந்து சந்திக்கும் ஒரு வெளிநாட்டு இளவரசரும் வேறு பல பிரசித்தி பெற்ற சீமாட்டிகளும் கனவான்களும் வந்திருந்தார்கள். மெத்தையிலிருந்து கீழே இறங்கிய பீயர், அந்த அறைகளின் வழியாக நடந்து போனார். அவர் எதையோ நினைத்துக்கொண்டு சோர்வான தோற்றத்தோடு போனது, ஒவ்வொருவர் உள்ளத்திலும் பதிந்தது. அந்த நடனக்கச்சேரிக்குப் பின்னார், ஒரு பெரிய மனச்சோர்வு தம்மைப்

பீடிக்கப் போவதாக அவர் உணர்ந்தார். அதைத் தடுப்பதற்கு அவர் பலமாக முயற்சி செய்தார். அந்த இளவரசரோடு தமது மனைவி அன்னியோன்னியமாக பழக ஆரம்பித்த பின்னால், ராஜ சபையில் ஒரு அங்கத்தினராக அவர் எதிர்பாராதபடி நியமிக்கப்பட்டார். அதிலிருந்து ராஜ சபை வட்டாரங்களில் கலந்து கொள்ளுவதற்கு அவர் மிகுந்த சோர்வுடனும், அவமானப்பட்டவராகவும் காணப்பட்டார். மனித குணத்தின் தற்பெருமையினால் ஏற்படக்கூடிய கெடுதலான செய்கைகள் அவருடைய மனதில் அடிக்கடி முன்னைவிட அதிகமாக தோன்றிக்கொண்டிருந்தன. அதே சமயத்தில் தம்முடைய அபிமான நட்டாஷாவுக்கும், இளவரசர் ஆண்ட்ரூவுக்கும் ஏற்பட்டுள்ள காதலோடு, தம்முடைய சொந்த நிலைமையை ஒப்பிட்டபோது, அவருடைய மனச்சோர்வு இன்னும் அதிகமாக பெருகியது. தம்முடைய மனைவியைப் பற்றியும், நட்டாஷாவையும் இளவரசர் ஆண்ட்ரூவையும் பற்றியும் சிந்திக்காமல் இருக்க அவர் முயற்சி செய்தார். அந்த நித்தியமாய் உள்ள பொருளோடு இவற்றையெல்லாம் ஒப்பிடும்போது, இவையெல்லாம் அற்பமாக அவருக்கு மீண்டும் தோன்றின. எதற்காக இந்தக் கேள்விகள் எல்லாம் மீண்டும் தோன்றிக் கொண்டிருக்கின்றன என்று அவர் நினைத்தார். ஆகவே, அவரை பயமுறுத்திக்கொண்டிருந்த அந்த தீங்கான நினைப்புகளை விரட்டி அடித்து விடலாம் என்ற நம்பிக்கை கொண்டு, இரவும் பகலுமாக பிரீமெஸன் வேலைகளை செய்து வர ஆரம்பித்தார். கோமகளின் அறைகளில் இருந்து நடுநிசியில் அவர் வெளிப்பட்டு வந்த பின்பு, தம்முடைய அறையில் ஒரு கசங்கிய கவுனை அணிந்து கொண்டு, ஸ்காட்லந்து பிரீ மேஸன் சங்கத்தின் விதிகளை எழுதிக் கொண்டிருந்தார். அவருடைய அறையில் புகையிலையின் புகை மண்டியிருந்தது. அச்சமயம் ஒருவர் உள்ளே வந்தார். அவர்தான் இளவரசர் ஆண்ட்ரூ.

'ஆ, நீர்தானா!' என்று பராக்கு புத்தியோடு திருப்தியடைந்த குரலில் அவர் கேட்டார். 'நான் இந்த வேலையைச் செய்துகொண்டிருக்கிறேன். நீரே பாரும்' என்று தம்முடைய புத்தகத்தைக்காட்டி சொன்னார். வாழ்க்கையிலுள்ள தீங்குகளில் இருந்து தப்பித்துக்கொள்ள, மகிழ்ச்சியற்ற மக்கள் தங்கள் வேலைகளை எப்படி கவனிப்பார்களோ, அம்மாதிரி அவருடைய பேச்சு இருந்தது.

புத்துணர்ச்சி பெற்ற வாழ்க்கையில் மகிழ்ச்சியும் இன்ப வெள்ளமும் கலந்த தோற்றத்தோடு பியர் முன்பாக இளவரசர் ஆண்ட்ரூ நின்றார். அவருடைய சோகமான தோற்றத்தை

கவனிக்காமல், தம்முடைய மகிழ்ச்சியின் பெருமை கொண்ட புன்சிரிப்பை அவரிடம் வீசினார்.

'நல்லது, என் அன்பார்ந்த உள்ளமே, நான் நேற்றே உம்மிடம் சொல்ல விரும்பினேன். அதை சொல்லுவதற்காக இன்று வந்திருக்கிறேன். இம்மாதிரி உணர்ச்சியை நான் இதற்கு முன்னால் அனுபவித்ததே இல்லை. நான் காதல்கொண்டு இருக்கிறேன், என் நண்பரே' என்று கூறினார்.

திடீரென்று பீயர் ஒரு ஆழ்ந்த பெருச்சு விட்டு, தம்முடைய பருத்த சரீரத்தோடு இளவரசர் ஆண்ட்ரூவின் பக்கத்தில் சோபாவில் அமர்ந்தார்.

'நட்டாஷா ராஸ்டோவாவுடன் தானே, காதல் கொண்டிருக்கிறீர்? அப்படித்தானே?' என்று பீயர் கேட்டார்.

'ஆமாம், ஆமாம். வேறு யாராய் இருக்க முடியும்? நான் அதை நம்பியிருக்க மாட்டேன். ஆனால், என்னைவிட இந்த உணர்ச்சி பலமானதாய் இருக்கிறது. நேற்று என்னையே நான் வேதனை செய்து கொண்டு கஷ்டப்பட்டுக்கொண்டு இருந்தேன். இந்த உலகத்தில் வேறு எதற்காகவும் அந்த வேதனையை நான் மாற்றிக்கொள்ள மாட்டேன். இதுவரை வாழ்க்கையை நான் வாழ்ந்ததில்லை. கடைசியாக இப்பொழுது நான் வாழ்கிறேன். ஆனால், அவள் இல்லாமல் நான் வாழ முடியாது. ஆனால், என்னை அவள் காதலிப்பாளா?... அவளுக்கு நான் ரொம்ப வயதில் மூத்தவன்... நீர் ஏன் பேசாமல் இருக்கிறீர்...'

'நான்? நானா? நான் உம்மிடம் என்ன சொன்னேன்?' என்று பீயர் திடீரென்று சொல்லி, அங்கிருந்து எழுந்து அந்த அறையில் மேலும் கீழும் உலாவ ஆரம்பித்தார். 'நான் எப்பொழுதுமே அதைப்பற்றி நினைத்ததுண்டு... அந்தப் பெண் அப்பேர்ப்பட்ட பொக்கிஷம்!... அவள் ஒரு அபூர்வமான பெண்... எனது அன்புள்ள நண்பரே, நான் உம்மை கெஞ்சி கேட்டுக்கொள்ளுகிறேன். நீர் வேதாந்தம் பேச வேண்டாம். சந்தேகம் கொள்ள வேண்டாம். அவளை நீர் திருமணம், திருமணம், செய்து கொள்ளும்... அதன் பின்னால், உம்மைவிட மகிழ்ச்சியான ஒருவர் இருக்க மாட்டார் என்று எனக்கு நிச்சயம்.'

'அவளைப் பற்றி என்ன?'

'அவள் உம்மை காதலிக்கிறாள்.'

'இந்த அசட்டுப் பேச்சுகளை பேச வேண்டாம்...' என்று இளவரசர் ஆண்ட்ரூ கூறி புன்னகை கொண்டு பீயரின் கண்களைப் பார்த்தார்.

'அவள் உம்மை காதலிக்கிறாள். எனக்குத் தெரியும்' என்று வேகமாக பீயர் கூச்சலிட்டார்.

'ஆனால், நான் சொல்லுவதை கவனியும்' என்று அவரின் கையைப் பற்றிக்கொண்டு இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார். நான் இப்பொழுது எந்த நிலைமையில் இருக்கிறேன் என்பது உமக்குத் தெரியுமா? நான் அதைப் பற்றி யாரிடமாவது பேசியாக வேண்டும்.'

'நல்லது, பேசும்; பேசும் நான் மிக்க மகிழ்ச்சி கொள்ளுகிறேன்' என்று பீயர் சொன்னார். அவருடைய முகம் உண்மையில் மாறியது. அவருடைய நெற்றி மிருதுவாயிற்று. அவர் மகிழ்ச்சியோடு இளவரசர் ஆண்ட்ரூ சொல்லியதை கவனித்துக் கேட்டார். இளவரசர் ஆண்ட்ரூ உண்மையிலேயே முற்றிலும் மாறாக், முற்றிலும் புதியவராகக் காணப்பட்டார். வாழ்க்கையில் அவர் கொண்டிருந்த வெறுப்பும், அவருடைய மனச்சோர்வும், அவருடைய மகிழ்ச்சிக் குறைவும் எங்கே போயின? பீயர் ஒருவரிடம்தான் பகிரங்கமாய் பேசுவது என்று அவர் மனதில் முடிவு செய்துகொண்டார். தமது உள்ளத்தில் இருந்த எல்லாவற்றையும் அவரிடம் சொன்னார். தமது எதிர்காலத்தைப் பற்றி அவர் சந்தோஷத்தோடும், தைரியத்தோடும் செய்த திட்டங்களைப் பற்றி சொன்னார். தமது தந்தையின் சலன புத்திக்காக தம்முடைய சொந்த மகிழ்ச்சியை தத்தம் செய்ய முடியாது என்று சொன்னார். தம்முடைய இந்த திருமணத்திற்கு தமது தந்தை சம்மதித்து அவள் மீது ·பிரியம் கொள்ளும்படி செய்வேன் என்றார். அப்படி செய்ய முடியாவிட்டால், அவருடைய சம்மதம் இன்றியே தாம் கல்யாணம் செய்யப் போவதாக அவர் கூறினார். தம்மை ஆட்கொண்ட இந்த உணர்ச்சியைக் கண்டு அவர் ஆச்சரியம் கொண்டார். இந்த உணர்ச்சி விசித்திரமானதாகவும், தம்மை விட்டு புறம்பானதாகவும், தம்மை விட்டு சுதந்திரமுள்ளதாகவும் அவருக்குத் தோன்றியது.

'இம்மாதிரி நான் காதல் கொள்ள முடியும் என்று யாராவது முன்பு என்னிடம் சொல்லியிருந்தால் நான் நம்பியிருக்க மாட்டேன்' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார். 'நான் முன்னால் அறிந்திருந்த அந்த உணர்ச்சியைப் போன்றதல்ல இந்த உணர்ச்சி. இந்த முழு உலகமும் எனக்காக இப்பொழுது இரண்டாகப் பிரிந்து நிற்கிறது. ஒரு பாதி, அவள். அங்கே எல்லாம் மகிழ்ச்சியும் நம்பிக்கையும் ஒளியுமாய் இருக்கின்றன. மற்றொரு பாதி, அவள் இல்லாத இடம். அங்கே எல்லாம் இருள் அடைந்தும் சோகம் நிறைந்தும் காணப்படுகின்றன...'

'இருளும் சோகமும்' என்று பீயர் அழுத்திக் கூறினார். 'ஆமாம், ஆமாம். அதை நான் புரிந்துகொள்ள முடிகிறது.'

'ஒளி மீது ஆசை கொள்ளாமல் என்னால் இருக்க முடியாது. அது என்னுடைய குற்றமல்ல. நான் மிகுந்த மகிழ்ச்சியோடு இருக்கிறேன். நான் சொல்லுவதை நீர் அறிந்து கொள்ளுகிறீர் அல்லவா? எனக்காக நீர் மகிழ்ச்சியோடு இருக்கிறீர் என்பதை நான் அறிவேன்.'

'ஆமாம், ஆமாம்' என்று பீயர் சம்மதித்து, தம்முடைய நண்பரை அன்பும் சோகமும் கொண்ட கண்களோடு பார்த்தார். இளவரசர் ஆண்ட்ரூவின் வாழ்க்கை எவ்வளவுக்கு எவ்வளவு பிரகாசமாக தோன்றுகிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு சோர்வானதாக தமது சொந்த வாழ்க்கை இருப்பதாக அவருக்குத் தோன்றியது.



இளவரசர் ஆண்ட்ரூ தமது திருமணத்திற்கு தந்தையின் சம்மதத்தைப் பெற வேண்டியது அவசியமாய் இருந்தது. இதைப் பெறுவதற்காக அவர் மறுநாள் கிராமத்திற்குப் புறப்பட்டுப் போனார்.

தமது குமாரர் கூறியதை வெளிப் பார்வையில் அமைதியோடும், ஆனால் மனதிலே கோபத்தோடும் அவருடைய தந்தை கவனித்துக் கேட்டார். அவருடைய வாழ்க்கை அநேகமாக முடிந்து கொண்டிருக்கும்போது அந்த வாழ்க்கையில் புதிதாக எதையோ ஒன்றைக்கொண்டுவந்து சேர்க்கவோ, அல்லது அதை மாற்றவோ ஒருவர் எப்படி விரும்ப முடியும் என்பதை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. 'நான் சாகிற வரையில் என் இஷ்டப்படி இருக்க அவர்கள் என்னை விட்டுவிட்டால், அதற்குப் பின்னால் என்ன இஷ்டமோ அதை அவர்கள் செய்துகொண்டு போகட்டும்' என்று அந்த வயோதிகர் நினைத்தார். என்றாலும் அவர் குமாரருடன் பேசியபோது அமைதியான தொனியுடன் முழு விஷயத்தையும் நன்றாக விவாதித்தார். முக்கியமான சந்தர்ப்பங்களில் மட்டும் அவர் காட்டி வந்த அந்த நாசூக்கான திறமையை, அப்போது அவரது குமாரரிடம் காட்டினார்.

'முதலாவதாக, அந்த திருமணம் பிறப்பை பொறுத்த வரையிலோ, பணத்தைப் பொறுத்த வரையிலோ, அந்தஸ்தைப் பொறுத்த வரையிலோ, ஒரு சிறந்த திருமணம் என்று சொல்ல முடியாது. இரண்டாவதாக, இளவரசர் ஆண்ட்ரூ இன்னமும் முன்ன இருந்தபடி வாலிபராய் இல்லை. அவருடைய ஆரோக்கியமும் மோசமாய் இருக்கிறது. (இந்த விஷயத்தை வயோதிகர்

அழுத்தமாய்ச் சொன்னார்.) மணப் பெண்ணைப் பொறுத்த வரையில் அவள் மிக மிகச் சிறியவள். மூன்றவதாக, இளவரசர் ஆண்ட்ரூவுக்கு ஒரு குமாரன் இருக்கிறான். அவனை இந்தச் சின்னஞ் சிறிய பெண்ணிடம் விட்டுவைப்பது பரிதாபமாய் இருக்கும். நான்காவதாக, ஒரு வருஷத்திற்கு நீ இந்த திருமணத்தை ஒத்திப் போடும்படி உன்னை வேண்டிக்கொள்கிறேன். நீ வெளிநாடு களுக்குப்போய் வைத்தியம் செய்துகொண்டு, உன்னுடைய குமாரன் இளவரசர் நிக்கலஸுக்கு நீ விரும்பியபடி ஒரு ஜெர்மன் வாத்தியாரை கண்டுபிடிக்க ஏற்பாடு செய். அப்புறம் உன்னுடைய காதலோ, அல்லது ஆசையோ, பிடிவாதமோ-நீ எப்படி அழைத்தாலும் சரி-இன்னமும் அது பெரிதாக நீடித்திருக்குமானால், நீ திருமணம் செய்துகொள். நான் சொல்லும் கடைசி வார்த்தை இதுதான். ஜாக்கிரதை. இதுதான் நான் சொல்லும் கடைசி வார்த்தை...' என்று வயோதிக இளவரசர் கேலியாகத் தமது குமாரரைப் பார்த்து பேசி முடித்தார். அவருடைய தீர்மானத்திலிருந்து அவரை மாற்றுவதற்கு எதனாலும் முடியாது என்று தெரிந்தது.

தம்முடைய உணர்ச்சியும், தாம் திருமணம் செய்யப்போகும் பெண்ணின் உணர்ச்சியும், ஒரு வருஷ காலம் தாங்காது என்றும் அல்லது அந்த வயோதிகர் அதற்குள்ளாக இறந்துபோக நேரிடலாம் என்றும், அந்த வயோதிகர் நினைப்பதாக் இளவரசர் ஆண்ட்ரூ தெளிவாய் கண்டுகொண்டார். ஆகவே அவருடைய தந்தையின் விருப்பப்படியே நடக்க அவர் தீர்மானித்தார். அதாவது திருமணம் செய்துகொள்வது என்று இப்போது பேசி முடித்து விட்டு, கல்யாணத்தை ஒரு வருஷத்திற்கு ஒத்திப்போடுவது என்று தீர்மானித்தார்.

ராஸ்டோவ்களோடு அவர் கடைசியாக இருந்த மாலைக்குப் பின்னால், மூன்று வாரங்களுக்கு அப்புறம் இளவரசர் ஆண்ட்ரூ பீட்டர்ஸ்பர்க்கிற்குத் திரும்பினார்.

அடுத்த நாள் தன்னுடைய தாயாரோடு பேசிய பின்பு, அன்று நாள் பூராவாக பால்கோன்ஸ்கி வருவாரென்று நட்டாஷா எதிர் பார்த்துக்கொண்டிருந்தாள். ஆனால் அவர் வரவில்லை. இரண்டாவது, மூன்றாவது நாளும் அதே மாதிரிதான். பீயரும் வரவில்லை. இளவரசர் ஆண்ட்ரூ தமது தந்தையைப் பார்க்க போய் இருக்கிறார் என்பது நட்டாஷாவுக்குத் தெரியாது. ஆகவே அவர் ஏன் வராமலிருக்கிறார் என்பதை அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை.

இதே மாதிரி மூன்று வாரங்கள் கடந்தன. வெளியே எங்கும் போவதற்கு நட்டாஷாவுக்கு விருப்பமே இல்லை. ஒரு அறையிலிருந்து மற்றொரு அறைக்கு நிழலைப்போல நடந்து கொண்டு, சோம்பேறித்தனமாகவும், உற்சாகக் குறைவாகவும், இருந்தாள். இரவில் ரகசியமாய் அழுது கொண்டிருப்பாள். மாலை வேளைகளில் அவளுடைய தாயாரிடம் கூட அவள் போவது இல்லை. அவள் தொடர்ச்சியாக நாணி முகம் சிவந்து, எப்போதும் கோபமாய் இருந்தாள். அவளுடைய ஏமாற்றத்தை ஒவ்வொருவரும் அறிந்து கொண்டிருக்கிறார்களென்று அவளுக்குத் தோன்றியது. ஒவ்வொருவரும் அவளைப் பார்த்துச் சிரித்து அவளுக்கு அனுதாபம் காட்டுவதாகத் தோன்றியது. அவளுடைய உள் வருத்தம் எவ்வளவு பலமாய் இருந்தபோதிலும், பெருமைக்கு ஏற்பட்ட இந்த பங்கத்தினால் அவளுடைய மனத்துன்பம் இன்னும் அதிகரித்துவிட்டது.

ஒரு தடவை அவள் தன்னுடைய தாயாரிடம் வந்தாள். எதையோ பேச முயற்சித்தாள். உடனே திடீரென்று அழ ஆரம்பித்தாள். ஒரு குழந்தை தன்னை எதற்காகத் தண்டிக்கிறாள் என்று தெரியாமல் வருத்தமடைந்து அழுவதைப்போல அவள் அழுவது இருந்தது.

நட்டாஷாவை சமாதானப்படுத்த கோமகள் ஆரம்பித்தாள். முதலில் தன்னுடைய தாயாரின் வார்த்தைகளைக் கேட்டுவிட்டு, திடீரென்று அவள் இடைமறித்தாள்,

‘அதை விட்டுவிடு, அம்மா. நான் அதைப்பற்றி நினைக்கவில்லை. அதைப்பற்றி நினைக்கவும், விரும்பவில்லை. அவர் வந்தார்; போனார். அவ்வளவுதான்...’

அவளுடைய குரல் - நடுங்கியது. அநேகமாய் கூச்சலிட ஆரம்பித்தாள். ஆனால், உடனே தன்னைச் சமாளித்துக்கொண்டு மெதுவாகப் பேசினாள்:

‘நான் திருமணம் செய்து கொள்ளவே விரும்பவில்லை. அவரைப் பற்றி எனக்கு அச்சமாய் இருக்கிறது. இப்போது அமைதியாகவும் சாந்தமாகவும் ஆகிவிட்டேன்.’

இந்த உரையாடல்களுக்கு மறுநாள் நட்டாஷா ஒரு பழைய ஆடையை அணிந்து கொண்டிருந்தாள். காலை வேளைகளில் அதை அணிந்தால்தான் மனோகரமாய் இருக்குமென்பது அவளுடைய நினைப்பு. அந்த நாள் முதல் அவள் மீண்டும் தன்னுடைய பழைய வழியில் வாழ்க்கையைத் தொடங்கினாள். கடந்த நடனக் கச்சேரிக்குப் பின்னால் அந்தப் பழைய வாழ்க்கையை அவள் விட்டு வைத்திருந்தாள். அன்று காலையில் தேநீர் பருகிய பின்பு, அவள்

நடன மண்டபத்துக்கு போனாள். அங்கே இருந்த பலமான எதிரொலி அமைப்பை அவள் மிகவும் விரும்பினாள். அவள் பாட்டுப்பாட ஆரம்பித்தாள். முதல் பாட்டை அவள் முடித்ததும், அறையின் மத்தியில் அசையாமல் நின்று, தனக்குப் பிடித்தமான பாட்டுகளை மீண்டும் பாட ஆரம்பித்தாள். அவள் மகிழ்ச்சியோடு தனது குரலை 'கேட்டுக்கொண்டிருந்தாள். அம்மாதிரி மகிழ்ச்சி ஏற்படுமென்பதை அவள் எதிர்பார்க்காததுபோல காணப்பட்டாள். அவளுடைய குரல் அங்கே எதிரொலித்து, அந்தக் காலியாய் இருந்த மண்டபம் முழுவதும் நிரம்பி, மெதுவாகத் தணிந்து மறைந்து போயிற்று. உடனே அவள் மகிழ்ச்சி கொண்டாள். 'அதைப் பற்றி அவ்வளவு பிரமாதமாக நினைப்பதனால், என்ன நன்மை ஏற்படப்போகிறது? இப்பொழுதுள்ள வாழ்க்கையும் இனிமையாய்த் தான், இருக்கிறது' என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டு, அந்த அறையில் மேலும் கீழும் நடக்க ஆரம்பித்தாள். மரத் தளவரிசையுள்ள அந்த தளத்தில் சாதாரணமாக அவள் நடக்கவில்லை. ஒவ்வொரு அடியையும் குதிங்காலில் இருந்து பாதத்தின் நுனிவரை வைத்து, நன்றாக அழுத்தி நடந்தாள். அவளுடைய புதிய பிரியமான ஜோடுகளை அணிந்திருந்தாள். தன்னுடைய சங்கீதத்தில் அவள் மகிழ்ச்சி கொண்ட மாதிரியே அந்த குதிங்கால்கள் கீழே படும்போது ஏற்பட்ட சப்தத்தையும், அந்த பாத நுனிகள் ஏற்படுத்திய க்ரீச் சப்தத்தையும் அவள் கவனித்து, மகிழ்ச்சி கொண்டாள். ஒரு நிலைக்கண்ணாடியின் பக்கமாக போனபோது, அந்தக் கண்ணாடிக்குள் நோட்டமிட்டாள். 'அதோ, அதுதான் நான்' என்று அவள் தனது உருவத்தைப் பார்த்ததும் சொல்வது போல அவள் முகம் தோன்றியது. 'நல்லது, ரொம்ப அழகாய்த்தான் இருக்கிறேன். எனக்கு வேறு ஒருவரும் தேவையில்லை.'

ஒரு வேலைக்காரன் அந்த நடன மண்டபத்தை சுத்தம் செய்வதற்காக உள்ளே வர விரும்பினான். ஆனால் அவனை அவள் உள்ளே வர விடவில்லை. அவனை வர விடாமல் கதவை சாத்திவிட்டு மீண்டும் நடக்க ஆரம்பித்தாள். தன்னிடம் மகிழ்ச்சியும் பிரியமும் கொண்ட, அவளது மனதிற்கு உகந்த அந்த மனோபாவத்தில் அன்று காலையிலிருந்து அவள் திளைத்துவந்தாள். யாரோ ஒரு மூன்றாவது பேர்வழியான ஒரு ஆண் அவளைப்பற்றி சொல்வதைப் போல அவள் பேச ஆரம்பித்தாள். 'இந்த நட்டாஷா எவ்வளவு மனோகரமாய் இருக்கிறாள்! அழகாகவும் இருக்கிறாள்! இனிமையான குரலும் இருக்கிறது. இளமையும் இருக்கிறது. அவளை அமைதியாய் இருக்கும்படி விட்டுவிட்டால், யாருடைய வேலைக்கும் அவள் வந்து தலையிடுவதில்லை.' ஆனால்,

எவ்வளவுதான் அவளை அமைதியாய் இருக்க விட்டுவிட்ட போதிலும், அவளால் இப்போது அமைதியாக இருக்க முடியவில்லை. இதை அவள் உடனே உணர்ந்தாள்.

ஹாலில் முற்ற மண்டபக் கதவு திறக்கப்பட்டது. யாரோ ஒருவர். 'வீட்டில் இருக்கிறார்களா?' என்று கேட்ட சப்தமும், காலடிச் சப்தமும் அவளுக்குக் கேட்டன. நட்டாஷா அச்சமயம் நிலைக்கண்ணாடியில் பார்த்துக்கொண்டிருந்தபோதிலும், தன்னைப் பார்க்கவில்லை. அவள் ஹாலில் கேட்ட சப்தங்களை கவனித்துக் கொண்டிருந்தாள். மீண்டும் தன்னை அவள் பார்த்தபோது, அவளுடைய முகம் வெளிறிப்போய் இருந்தது. ஆமாம், அவர்தான். அவருடைய குரலை அடைபட்ட கதவுகளின் வழியாக இன்னும் தெளிவாக அவள் கேட்காவிட்டாலும் அது அவர்தான் என்பது அவளுக்கு நிச்சயமாய் தெரியும்.

முகம் வெளிறி பரபரப்படைந்து நட்டாஷா வரவேற்பு அறைக்குள் ஓடினாள்.

'அம்மா, பால்கோன்ஸ்கி வந்துவிட்டார். அம்மா, எவ்வளவு பயங்கரமாய் இருக்கிறது. என்னால் தாங்க முடியவில்லை. எனக்குத் தேவையில்லை... இம்மாதிரி வேதனைப்படுவது எனக்குத் தேவையில்லை. நான் என்ன செய்வது?...' என்று அவள் சொன்னாள்.

கோமகள் பதில் சொல்வதற்கு முன்பாக, இளவரசர் ஆண்ட்ரூ ஒரு பரபரப்பான, கவலை நிறைந்த முகத்தோடு அந்த அறைக்குள் வந்தார். அவர் நட்டாஷாவைப் பார்த்ததும், அவருடைய முகம் பிரகாசம் அடைந்தது. கோமகளின் கையையும், நட்டாஷாவின் கையையும் முத்தமிட்டுவிட்டு அவர் சோபாவில் அமர்ந்தார்.

'நாம் சந்தித்து நீண்ட காலமாய்விட்டது.' என்று கோமகள் ஆரம்பித்தாள். ஆனால், அவள் என்ன கேட்கப் போகிறாள் என்பதை அறிந்து, இளவரசர் ஆண்ட்ரூ இடைமறித்து தாம் சொல்ல விரும்பியதை வேகமாகச் சொன்னார்.

'நான் இவ்வளவு காலமாக உங்களைப் பார்க்க வராமல் இருந்ததற்கு காரணம், நான் என் தந்தையைப் பார்க்கப் போயிருந்ததுதான். ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி நான் அவரிடம் பேச வேண்டியிருந்தது. நேற்று இரவுதான் நான் திரும்பி வந்தேன்' என்று அவர் சொல்லி, நட்டாஷாவை நோட்டமிட்டு, 'நான் உன்னுடன் கொஞ்சம் பேசவேண்டும். கோமகளே' என்று ஒரு நிமிஷ தயக்கத்திற்குப் பின்னால் அவர் கூறினார். கோமகள் தனது பார்வையைக் கீழ் நோக்கி ஆழ்ந்து பெருச்சு விட்டாள்.

‘நீர் சொல்லுவதை கேட்பதற்கு நான் தயாராய் இருக்கிறேன்’ என்று அவள் முணுமுணுத்தாள்.

தான் அந்த இடத்தைவிட்டுப் போய்விட வேண்டுமென்பதை நட்டாஷா அறிவாள். ஆனால், அவளால் அப்படிச் செய்ய முடியவில்லை. ஏதோ ஒன்று அவளுடைய தொண்டையை அடைத்தது. மரியாதைகளைக்கூட மறந்து அவள் இளவரசர் ஆண்ட்ரூவை விழித்த கண்களுடன் நேராக வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

‘உடனேயா? இதே வினாடியிலா?... இல்லை, அப்படியிருக்க முடியாது’ என்றுஅவள் நினைத்தாள்.

மீண்டும் அவர் அவளை நோக்கினார். அந்த நோக்கு அவள் நினைத்ததில் தவறில்லை என்பதை உறுதி செய்தது. ஆமாம், இப்போதேதான், இதே வினாடியிலேதான், அவளுடைய விதி தீர்மானிக்கப்பட்டுவிடும்.

‘நீ போ, நட்டாஷா, நான் உன்னை அப்புறம் அழைக்கிறேன்’ என்று கோமகள் மெதுவான குரலில் கூறினாள்.

நட்டாஷா அச்சமயம் பீதியும் இரக்கமும் கொண்ட கண்களோடு இளவரசர் ஆண்ட்ரூவை நோக்கிவிட்டு, அதன் பின்னால் தனது தாயாரையும் நோக்கிவிட்டு வெளியே போனாள்.

‘கோமகளே, நான் இப்போது உனது குமாரியை எனக்கு திருமணம் செய்து கொடுக்கும்படி கேட்டுக்கொள்வதற்காக வந்திருக்கிறேன்’ என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார்.

கோமகளின் முகம் சிவந்தது. ஆனால் அவள் ஒன்றும் சொல்ல வில்லை.

‘நீர் கேட்பது...’ என்று மெதுவாக அவள் கடைசியில் ஆரம்பித்தாள். அவர் மௌனமாகவே அவளுடைய கண்களைப் பார்த்துக்கொண்டேயிருந்தார். ‘நீர் கேட்பது... (அவள் மனக்குழப்ப மடைந்தாள்.) நீர் கேட்பது எங்களுக்கு மிகவும் பிடித்தமானதா யிருக்கிறது... நீர் கேட்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். நான் மகிழ்ச்சி அடைகிறேன். எனது கணவரும் அப்படியே என்று நம்புகிறேன். ஆனால், இவையெல்லாம் அவளைப் பொறுத்துத் தான் இருக்கிறது...’

‘உன்னுடைய சம்மதம் கிடைத்த பின்பு நான் அவளிடம் பேசுகிறேன்... உன்னுடைய சம்மதத்தை எனக்குக் கொடுப்பாயா?’ என்று இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார்.

'ஆமாம்' என்று கோமகள் பதிலளித்தாள். அவள் தன் கையை அவரிடம் நீட்டினாள். அச்சமயம் கவலையும் கனிவும் கலந்த ஏதோ ஒருவிதமான உணர்ச்சியோடு தன்னுடைய உதடுகளை அவருடைய நெற்றியில் அழுத்தி முத்தமிட்டாள். அதே சமயம் அவர் குனிந்து அவளுடைய கைகளை முத்தமிட்டார். அவரைத் தனது குமாரனைப்போல நேசிக்க வேண்டுமென்று அவள் விரும்பினாள். ஆனால், அவர் அந்நியரைப் போலவும், ரொம்ப பயங்கரமானவரைப் போலவும் அவளுக்குத் தோன்றினார். 'என்னுடைய கணவர் சம்மதிப்பார் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஆனால், உம்முடைய தந்தை?...' என்று கோமகள் கேட்டாள்.

'என்னுடைய தந்தையிடம் என்னுடைய நோக்கத்தைச் சொல்லியபோது, ஒரு நிபந்தனையின் பேரில் எனக்கு சம்மதம் கொடுத்தார். ஒரு வருஷத்திற்கிடையில் கல்யாணம் நடக்கக் கூடாது என்று நிபந்தனை விதிக்கிறார். இதை உன்னிடம் தெரிவிக்க விரும்பினேன்' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார்.

'நட்டாஷா இன்னமும் சிறியவளாய் இருக்கிறாள் என்பது உண்மை. ஆனால், - அவ்வளவு காலம் ஆகவேண்டுமா?...'

'அதைத் தவிர்க்க முடியாது' என்று பெருச்சோடு இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார்.

'நான் அவளை உம்மிடம் அனுப்புகிறேன்' என்று கோமகள் சொல்லிவிட்டு, அந்த அறையை விட்டுப் போனாள்.

'கடவுளே, எங்கள் மீது கருணை காட்டும்' என்று அவள் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டே தனது குமாரியைத் தேடிக்கொண்டு போனாள்.

நட்டாஷா அவளுடைய படுக்கை அறையில் இருப்பதாக சோனியா சொன்னாள். படுக்கை மீது நட்டாஷா அமர்ந்து, வெளிறிய முகத்தோடு உலர்ந்த கண்களோடும் அங்கிருந்த தெய்வச் சிலைகளை உற்று நோக்கி எதையோ சொல்லிக்கொண்டு, வேகமாக தனக்குத்தானே சிலுவைக் குறி காட்டிக்கொண்டிருந்தாள். தன்னுடைய தாயாரைப் பார்த்ததும் அவளிடம் பறந்து வந்தாள்.

'நல்லது, அம்மா? நல்லது?...'

'நீ இப்போது அவரிடம் போ. அவர் உன்னை திருமணம் செய்ய வேண்டுமென்று கேட்கிறார்' என்று கோமகள் உற்சாகமில்லாமல் சொல்லியதாக நட்டாஷாவுக்குத் தோன்றியது. 'போ... நீ போ' என்று தாயார் சோகத்தோடும், கண்டனத்தோடும் ஒரு ஆழ்ந்த

பெருமூச்சோடும் சொல்லிக்கொண்டிருந்தபோது, அவளுடைய குமாரி அங்கிருந்து ஓடிப்போனாள்.

தான் எம்மாதிரி அந்த வரவேற்பு அறைக்குள் நுழைந்தாள் என்பதை நட்டாஷாவால் ஞாபகப்படுத்திக்கொள்ள முடியவில்லை. அவள் உள்ளே வந்து அவரைப் பார்த்ததும் தயங்கி நின்றாள். ‘இந்த அந்நியர் இப்போது எனக்கு எல்லாமாக ஆய் விடுவது சாத்யமா?’ என்று தன்னையே கேட்டுக்கொண்டு, தானே அதற்கு பதிலும் சொன்னாள். அதாவது ‘ஆமாம், எல்லாம் அவர்தான். இந்த உலகத்தில் வேறு எதையும் விட அவர் ஒருவர்தான் எனக்கு அன்பிலும் அன்பானவர்’. இளவரசர் ஆண்ட்ரூ கீழே பார்த்துக் கொண்டே அவளிடம் வந்தார்.

‘நான் உன்னைப் பார்த்த முதலாவது வினாடியிலேயே, உன்மீது காதல் கொண்டேன். எனக்கு நம்பிக்கை கொடுப்பாயா?’

அவர் அவளைப் பார்த்தார். அவளுடைய முகத்தில் காணப்பட்ட முக்கியமான உணர்ச்சி ததும்பும் தோற்றம் அவர் மனதைக் கவர்ந்தது. அவளுடைய முகம் சொல்லியது: ‘ஏன் கேட்கிறீர்? உமக்கு தெரிந்த விஷயத்தைப் பற்றி ஏன் சந்தேகப்படுகிறீர்? ஒருவரின் உணர்ச்சிகளை வார்த்தைகளால் வெளியிட முடியாமல் இருக்கும்போது, எதற்காகப் பேசுகிறீர்?’

அவள் அவரிடம் நெருங்கி வந்து நின்றாள். அவர் அவளுடைய கையைப்பற்றி முத்தமிட்டார்.

‘நீ என்மீது காதல் கொண்டிருக்கிறாயா?’

‘ஆமாம்; ஆமாம்’ என்று நட்டாஷா எரிச்சலோடு இருப்பவளைப் போல முனங்கினாள். அதன் பின்னால் அவள் சப்தமிட்டு பெருமூச்சு விட்டாள். பின்னால் வேகமாக மூச்சுவிட ஆரம்பித்து, தேம்பித்தேம்பி அழ ஆரம்பித்தாள்.

‘இது என்ன? என்ன சமாசாரம்?’

‘ஓ, நான் எவ்வளவு சந்தோஷமாய் இருக்கிறேன்’ என்று தன்னுடைய அழுகைக்கிடையில் புன்சிரிப்பு கொண்டு அவரிடம் கூறி, அவர் முன்பாக குனிந்து நெருங்கி நின்றாள். ஒரு வினாடி அவள் தயங்கி, தான் அதைச் செய்யலாமா என்று தன்னையே கேட்டுவிட்டு அதன் பின்னால் அவரை முத்தமிட்டாள்.

இளவரசர் ஆண்ட்ரூ அவளுடைய கைகளைப்பற்றி அவளுடைய கண்களைப் பார்த்தார். அவள் மீது தமக்கிருந்த முன்னைய காதலை, இப்போது அவருடைய உள்ளத்தில் அவரால் காண முடியவில்லை. அவருள் ஏதோ ஒன்று திடீரென்று மாறியது.

முன்னைய கவித்துவமும் ரகசிய மனோகரமும் கொண்ட அந்த ஆசையை, இப்போது காணமுடியவில்லை. ஆனால் அவளுடைய பெண்தன்மையையும், குழந்தைத்தனமான சுபாவத்தையும் கண்டு அவருக்கு பரிதாபம் தோன்றியது. தம்மீது அவளுக்குள்ள பக்தியையும் நம்பிக்கையையும் கண்டு, அவர் பீதி அடைந்தார். அவளுக்குத் தாம் இனி எப்பொழுதும் செய்யவேண்டிய கடமையில் கட்டுப்பட்டிருப்பதை அவர் நினைத்து, மனப்பாரமும், ஆனால் மகிழ்ச்சியும் கொண்டார். இப்போதுள்ள உணர்ச்சி, முன்பு இருந்ததைப்போல பிரகாசமாய் இல்லாவிட்டாலும், கவித்துவமாய் இல்லாவிட்டாலும், மிகுந்த பலமானதாகவும் முக்கியமானதாகவும் இருந்தது.

'ஒரு வருஷத்திற்கு அதைச் செய்துகொள்ள முடியாது என்பதை உன்னுடைய தாயார் உனக்குச் சொன்னாளா?' என்று இளவரசர் ஆண்ட்ரூ அவளுடைய கண்களைப் பார்த்துக்கொண்டு கேட்டார்.

'ஒரு சின்னஞ் சிறிய குழந்தை என்று எல்லோரும் என்னை அழைக்கிறார்கள். அப்பேர்ப்பட்ட நான் இந்த விசித்திரமான, மனம் கவர்ந்த, புத்திசாலியான மனிதருக்கு மனைவியாகவும் சமர்த்துவமாகவும் இருக்கப்போவது சாத்தியம்தானா? என்னுடைய தந்தைகூட அவரிடம் ஆலோசனை கேட்கக்கூடிய விதத்தில் அவர் இருக்கிறார். இது உண்மையானதாய் இருக்க முடியுமா? இப்போது நான் வயது அடைந்துவிட்டேன் என்பதும், இனிமேல் வாழ்க்கையோடு விளையாடுவது என்பது கிடையாது என்பதும், என்னுடைய ஒவ்வொரு வார்த்தைக்கும், ஒவ்வொரு செய்கைக்கும் உண்டான பொறுப்பு என்மீது சுமந்திருக்கிறது என்பதும் உண்மையானதாய் இருக்க முடியுமா? ஆமாம், ஆனால் அவர் என்னிடம் என்ன கேட்டார்?' என்று நட்டாஷா தனக்குள் நினைத்துக்கொண்டிருந்தாள்.

'இல்லை' என்று அவள் பதிலளித்தாள். ஆனால், அவருடைய கேள்வி என்ன என்பதை அவள் அறிந்துகொள்ளவில்லை.

'என்னை மன்னிப்பாயாக. நீ மிகவும் சிறியவளாய் இருக்கிறாய். நான் வாழ்க்கையில் எவ்வளவோ அனுபவமடைந்துவிட்டேன். உனக்காக நான் அச்சம் கொள்ளுகிறேன். ஏனெனில், உன்னைப்பற்றி உனக்கே இன்னும் தெரியாது' என்று அவர் சொன்னார்.

ஒரு மன நிலையோடு நட்டாஷா அதை கவனித்துக் கேட்டாள். அவள் அவருடைய வார்த்தையின் அர்த்தங்களை அறிந்துகொள்ள முயற்சித்தாள். ஆனால் அவளால் முடியவில்லை.

'இந்த வருஷம், என்னுடைய மகிழ்ச்சியை தாமதம் செய்யக் கூடிய கடினமான வருஷமாய் இருக்கிறது. ஆனால், உன்னைப்பற்றி நீ நிச்சயமாய் தெரிந்து கொள்வதற்கு, அது உனக்கு போதுமான அவகாசம் கொடுக்கும். இன்னும் ஒரு வருஷத்தில் என்னை மகிழ்ச்சியாயிருக்கும்படி, நீ என்னை செய்ய வேண்டுமென்று உன்னைக் கேட்டுக்கொள்கிறேன். ஆனால், உனக்குப் பூரண சுதந்திரம் உண்டு. நம் நிச்சயதார்த்தம் ரகசியமாய் இருக்கட்டும். என்னை நீ காதலிக்கவில்லை என்று எப்போதாவது கண்டு கொள்வாயானால், அல்லது வேறு யாரையாவது நீ காதலிப்பதாய் உனக்குத் தோன்றினால், உனக்குச் சுதந்திரம் கொடுப்பதற்காக நம் நிச்சயதார்த்தம் ரகசியமாய் இருக்கட்டும்' என்று இளவரசர் ஆண்ட்ரூ செயற்கைப் புன்னகையோடு பேசினார்.

'நீர் ஏன் அப்படிப் பேசுகிறீர்?' என்று நட்டாஷா இடை மறித்தாள். 'ஆட்ராட்னோ என்ற இடத்திற்கு நீர் வந்த முதல் நாள் அன்றே, நான் உம்மீது காதல் கொண்டுவிட்டேன் என்பதை நீர் அறிவீர்' என்றுதான் உண்மையையே பேசுவதாக பூரண நம்பிக்கைகொண்டு, அவள் இறைந்து கூறினாள்.

'இன்னும் ஒரு வருஷத்தில் நீ உன்னைப்பற்றி அறிந்து கொள்வாய்...'

'ஒரு முழு வருஷமா?' என்று நட்டாஷா திடீரென்று அதை மீண்டும் கூறினாள். இப்போதுதான் தன்னுடைய திருமணம் ஒரு வருஷத்திற்கு ஒத்திப் போடப்பட்டிருக்கிறது என்ற விஷயத்தை அவள் அறியலானாள். 'ஆனால் ஏன் ஒரு வருஷம்? எதற்காக ஒரு வருஷம்?...'

இந்த தாமதத்திற்கான காரணங்களை இளவரசர் ஆண்ட்ரூ விளக்கிக் கூற ஆரம்பித்தார். நட்டாஷா அவர் பேசுவதைக் கவனிக்கவில்லை.

'அதைத் தவிர்க்க முடியாதா?' என்று அவள் கேட்டாள். இளவரசர் ஆண்ட்ரூ பதில் சொல்லவில்லை. ஆனால், அவருடைய முகம் அந்தத் தீர்மானத்தை மாற்ற முடியாது என்ற தோற்றத்தைக் காட்டியது.

'அது ரொம்ப பயங்கரம்! அது ரொம்ப ரொம்ப பயங்கரம்!' என்று நட்டாஷா திடீரென்று கூச்சலிட்டு, தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள். 'ஒரு வருஷம் காத்துக்கொண்டிருப்பது என்றால், நான் செத்துப் போகவேண்டியதுதான். அது முடியாத காரியம். அது பயங்கரமான விஷயம்' என்று அவள் சொல்லி தனது காதலரின்

முகத்தைப் பார்த்தாள். அந்த முகத்தில் ஒரு இரக்கமும் கலக்கமும் காணப்படுவதைக் கண்டாள்.

‘இல்லை, இல்லை. நான் என்ன வேண்டுமானாலும் செய்கிறேன். நான் மிகுந்த சந்தோஷமாய் இருக்கிறேன்’ என்று கூறி தன்னுடைய கண்ணீரைத் திடீரென்று நிறுத்தினாள்.

தந்தையும், தாயும் அந்த அறைக்குள் வந்து, அந்த நிச்சயதார்த்தமான ஜோடிகளை ஆசீர்வதித்தார்கள்.

அந்த நாளிலிருந்து ராஸ்டோவ்களின் வீட்டிற்கு, நட்டாஷாவுக்கு நிச்சயதார்த்தமான காதலர் என்ற முறையில் இளவரசர் ஆண்ட்ரூ அடிக்கடி வர ஆரம்பித்தார்.

## 6

## 24

நிச்சயதார்த்த சடங்கு எதுவும் செய்யப்படவில்லை. பால்கோன்ஸ்கிக்கும் நட்டாஷாவுக்கும் ஏற்பட்ட அந்த நிச்சயதார்த்தத்தை வெளியே அறிவிக்கவும் இல்லை. அம்மாதிரி அறிவிக்காமல் இருக்க வேண்டுமென்று இளவரசர் ஆண்ட்ரூ வற்புறுத்தினார். அந்த தாமதத்திற்கு தாமே காரணமாய் இருப்பதால், அந்த முழு பொறுப்பையும் தாமே மேற்கொள்ள வேண்டுமென்றும், தாம் வார்த்தை கொடுத்து விட்டபடியால், அதற்கு எப்போதும் கட்டுப்பட்டிருப்பதாகவும் அவர் சொன்னார். ஆனால் நட்டாஷாவை பந்தப்படுத்தி வைக்கத் தாம் விரும்பவில்லை என்றும், அவளுக்கு பூரண சுதந்திரம் கொடுக்க விரும்புவதாகவும் சொன்னார். அவரை அவள் காதலிக்கவில்லை என்று ஆறு மாதங்களுக்கு அப்புறம் அவள் உணர்ந்தால், அவரை நிராகரிப்பதற்கு அவளுக்கு பூரண உரிமையுண்டு. நட்டாஷாவோ அவளுடைய பெற்றோர்களோ இதைக் கேட்பதற்கு பிரியப்படவில்லை. இருந்தாலும் இளவரசர் ஆண்ட்ரூ அதில் உறுதியாய் இருந்தார். ஒவ்வொரு நாளும் அவர் ராஸ்டோவ்களின் வீட்டிற்கு வந்தார். ஆனால், நிச்சயதார்த்தமான ஒரு காதலர் நடப்பதைப் போல அவர் நட்டாஷாவுடன் நடந்து கொள்ளவில்லை. அதாவது ‘நீ’ என்று அவளை அவர் அழைக்கவில்லை. ‘நீர்’ என்றே அவளை அழைத்துப் பேசினார். கையில் மட்டுமே முத்தம் இட்டு வந்தார். அந்த நிச்சயதார்த்தமானதற்கு பின்னால் முற்றிலும் மாறான, அன்யோன்னியமான, இயற்கையான உறவுகள் அவர்களுக்குள் வளர்ந்து வந்தன. இதுவரை அவர்கள் ஒருவொருக்கொருவர்

அறிந்துகொள்ளாமல் இருந்ததைப் போல அப்போது அவர்களுக்கு தோன்றியது. அவர்களுக்குள் ஒன்றும் இல்லாமல் இருந்தபோது, தாங்கள் ஒருவரையொருவர் எம்மாதிரி நினைத்தார்கள் என்று ஒருவொருக்கொருவர் பழைய சம்பவங்களை சொல்லிக் கொள்ளுவதில் பிரியம் கொண்டார்கள். இப்போது அவர்கள் முற்றிலும் மாறுபட்டவர்களாக உணர்ந்தார்கள். முன்னால் அவர்கள் செயற்கை தோற்றத்தில் இருந்தார்கள். இப்போது இயற்கையாகவும், உண்மையாகவும் இருக்கிறார்கள். முதலில் இளவரசர் ஆண்ட்ரூவுடன் சம்பந்தம் கொள்ளுவதில் அந்தக் குடும்பம் கொஞ்சம் தயக்கம் காட்டியது. அவர் மற்றொரு உலகத்திலிருந்து வந்தவர்போலக் காணப்பட்டார். ஆனால், அவரிடம் எப்படி பழக வேண்டும் என்பதைப் பற்றி நட்டாஷா அந்தக் குடும்பத்தை பழக்கி வைத்தாள். அவர் வெளிப்பார்வையில் தான் வேறு மாதிரியாக இருக்கிறாரே ஒழிய, தங்கள் எல்லாரையும் போலத்தான் உண்மையில் அவரும் இருக்கிறார் என்று பெருமையோடு அவர்களுக்கு அவள் உறுதி கூறினாள். அதனால் அவரைப்பற்றி தான் பயப்படவில்லை என்றும், ஆகவே வேறு ஒருவரும் அம்மாதிரி பயப்பட வேண்டிய அவசியமில்லை யென்றும் அவள் சொன்னாள். சில தினங்களில் அவருடன் அவர்கள் பழகிப் போனார்கள். எந்தவிதமான தயக்கமும் அவர் முன்பு கொள்ளாமல், தங்களுடைய வழக்கமான வழியில் வாழ்க்கையை நடத்த ஆரம்பித்தார்கள். அந்த வேலைகளில் அவரும் கலந்துகொள்வார். கோமகனோடு கிராமாந்திரப் பொருளா தாரத்தைப்பற்றி பேசுவார். கோமகளோடும் நட்டாஷாவோடும் புது மோஸ்தர்களைப் பற்றி பேசுவார். சோனியாவோடு பாடப் புத்தகங்களைப் பற்றியும் அலங்கார வேலைகளைப் பற்றியும் பேசுவார். சில வேளைகளில் அந்தக் குடும்பத்தார் தங்களுக்குள்ளாகவும், அவருடைய முன்னிலை யிலும், இந்த விஷயம் எம்மாதிரி நடந்து முடிந்தது என்று தங்களுக்கு ஏற்பட்டுள்ள ஆச்சரியத்தைக் காட்டுவார்கள். அதோடு இந்த விஷயத்தைப்பற்றி முன் கூட்டி காட்டக்கூடிய பல நல்ல சகுனங்களைப் பற்றியும் அவர்கள் பேசிக்கொள்ளுவார்கள். அதாவது, இளவரசர் ஆண்ட்ரூ ஆட்ராட்னோ என்ற இடத்திற்கு வந்ததையும், தாங்கள் பீட்டர்ஸ்பர்க்கிற்கு வந்ததையும் இளவரசர் ஆண்ட்ரூ முதல் தடவையாக வந்த போது அவருக்கும் நட்டாஷாவுக்கும் உள்ள ஜாடைகள் ஒரே மாதிரி இருப்பதாக நட்டாஷாவின் தாதி சொல்லியதையும், 1805 -ம் வருஷத்தில் நிக்கலஸோடு ஆண்ட்ரூவுக்கு ஏற்பட்ட தகராறைப் பற்றியும்

இன்னும் பல சம்பவங்களைப் பற்றியும் அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

நிச்சயதார்த்தமான ஜோடிகள் இருக்கிற இடத்தில் எம்மாதிரி இருக்குமோ அதே மாதிரியான கவித்துவமுள்ள மந்தமும் அமைதியும் அந்த வீட்டில் நிலவி வந்தன. எல்லாரும் ஒன்றாய் உட்கார்ந்து இருக்கும்போது அநேகமாய் ஒவ்வொருவரும் மௌனமாகவே இருப்பார்கள். சில சமயங்களில் அந்த ஜோடியை தனியாக விட்டுவிட்டு மற்றவர்கள் எழுந்து போய் விடுவார்கள். அப்போதும் அந்த ஜோடி மௌனமாகவே இருப்பார்கள். தங்களுடைய எதிர் கால வாழ்க்கையைப் பற்றி அவர்கள் பேசுவது ரொம்ப அபூர்வம். அதைப் பற்றி பேசுவதற்கு இளவரசர் ஆண்ட்ரூ அச்சமும் நாணமும் கொண்டார். நட்டாஷாவும் இந்த உணர்ச்சியில் பங்கு கொண்டாள். அதாவது, அவருக்கு ஏற்படுகிற எல்லா உணர்ச்சிகளிலுமே அவ்ள் பங்கு கொண்டாள். அவற்றை எல்லாம் அவள் தன்னுடைய உள் உணர்ச்சியால் அறிந்துகொண்டே வந்தாள். ஒரு சமயம் அவருடைய குமாரரைப் பற்றி அவள் கேட்டாள். இளவரசர் ஆண்ட்ரூ நாணி முகம் சிவந்தார். அம்மாதிரி அவருக்கு இப்போது அடிக்கடி ஏற்படுவதுண்டு. அம்மாதிரி நாணுவதை நட்டாஷா மிகவும் விரும்பினாள். தம்முடைய குமாரன் தங்களோடு வசிக்கப் போவதில்லை என்று அவர் சொன்னார்.

'ஏன் இல்லை?' என்று நட்டாஷா பீதியுற்ற குரலில் கேட்டாள்.

அவனுடைய தாதாவிடமிருந்து அவனை நாம் பிரித்துக் கொண்டுவர முடியாது. அதைத் தவிர...'

'நான் அவன்மீது எவ்வளவு பிரியம் கொள்வேன் தெரியுமா?' என்று நட்டாஷா அவருடைய சிந்தனையை உடனே யூகித்துக் கூறினாள். 'ஆனால், நம் மீது எம்மாதிரியான குற்றத்தையும் சுமத்தாமல் இருப்பதற்காக நீர் விரும்புகிறீர் என்பதை நான் அறிவேன்.'

சில சமயம் வயோதிகக் கோமகன் வந்து இளவரசர் ஆண்ட்ரூவை முத்தமிட்டு அவரிடம் பெட்டியாவின் கல்வியைப் பற்றியோ, நிக்கலஸின் ராணுவ சேவையைப் பற்றியோ ஆலோசனை கேட்பார். அவர்களைப் பார்க்கும் வேளைகளில் எல்லாம் வயோதிகக் கோமகள் பெருமூச்சு விடுவாள். தான் அவர்களுக்கு இடையூறாய் இருக்கிறாளோ என்று சோனியா எப்போதுமே பீதி கொள்ளுவாள். ஆகவே, அவர்களைத் தனியாக விட்டு விட்டுப் போவதற்கு அவள் காரணங்களைக் கண்டு பிடிப்பாள். அவள் போகக் கூடாது என்று அவர்கள் விரும்பினாலும் அவள் கேட்பதில்லை. இளவரசர்

ஆண்ட்ரூ நன்றாக கதை சொல்லக்கூடியவர். அவர் நட்டாஷாவிடம் கதை சொல்லிக் கொண்டிருக்கும்போதெல்லாம் அவள் மிகுந்த பெருமையோடு கேட்டுக்கொண்டிருப்பாள். அவள் பேசும் போதெல்லாம் அவர் அவளை மிகவும் உன்னிப்பாகக் கவனிப்பதைக் கண்டு அவள் மகிழ்ச்சியும் பயமும் கொள்ளுவாள். தன்னைத்தானே கலவரத்தோடு அவள் கேட்டுக் கொள்ளுவாள். அதாவது: 'என்னிடத்தில் அவர் எதைப் பார்க்கிறார்? என்னைப் பார்ப்பதிலிருந்து எதையோ என்னிடமிருந்து கண்டுகொள்ள அவர் முயற்சிக்கிறார். அவர் தேடுவது என்னிடம் இல்லாவிட்டால் அதனால் என்ன?' சில சமயங்களில் அவளுக்குள்ள விசேஷ குணமான வெறியும் மகிழ்ச்சியும் கொண்ட சுபாவத்தில் அவள் திரும்புவாள். இளவரசர் ஆண்ட்ரூ பேசுவதைக் கேட்பதற்கும், அவர் எப்படி சிரிக்கிறார் என்பதைப் பார்ப்பதற்கும் அவள் மிகவும் பிரியப்படுவாள். அவர் சிரிப்பது ரொம்ப அபூர்வம். ஆனால் சிரிக்க ஆரம்பித்துவிட்டால் தம்மையே மறந்து சிரிப்பார். அம்மாதிரி ஒரு தடவை சிரித்த பின்பு அவள் அவரிடம் ரொம்ப நெருங்கியிருப்பதாக ஒரு உணர்ச்சி கொள்ளுவாள். அவர் வெளிநாட்டிற்கு போவதால் ஏற்படும் பிரிவைப்பற்றி நினைக்கும் போதெல்லாம் மிகுந்த பீதி கொள்வாள். அந்த நினைப்பு மட்டும் அவளுக்கு இல்லாமலிருந்தால் நட்டாஷா முற்றிலுமே சந்தோஷத்தில் மூழ்கி இருப்பாள். அதேமாதிரி அந்த நினைப்பை அவர் நினைத்தபோதெல்லாம் அவருக்கு முகம் வெளிறி உற்சாகம் குறைந்துவிடும்.

பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து புறப்படுவதற்கு முதல் நாளன்று பீயரையும் தம்முடன் இளவரசர் ஆண்ட்ரூ ராஸ்டோவ்களின் வீட்டிற்கு அழைத்து வந்தார். நடனக் கச்சேரிக்குப் பின்னால் பீயர் அங்கே வரவே இல்லை. பீயர் முற்றிலும் அமைதி குலைந்தவராகவும் மனம் குழம்பியவராகவும் காணப்பட்டார். அவர் கோமகளுடன் பேசிக்கொண்டிருந்தார். சோனியாவோடு நட்டாஷா ஒரு சிறிய மேஜை மீது சதுரங்கம் ஆடிக் கொண்டிருந்தாள். தங்களுடன் சேரும்படி இளவரசர் ஆண்ட்ரூவை அவர்கள் அழைத்தார்கள். அவரும் அப்படியே செய்தார்.

'உனக்கு பெஜுகாவை வெகு நாளாகத் தெரியுமா? உனக்கு அவரைப் பிடிக்கிறதா?' என்று அவர் கேட்டார்.

'ஆம், அவர் ஒரு அன்பான கண்ணாயிற்றே! ஆனால், மிகுந்த அசட்டுத்தனமாயிருப்பார்'

பீயரைப்பற்றி பேசும்போதெல்லாம் அவருடைய ஞாபக மறதியைப் பற்றிய கதைகளை அவள் சொல்லுவதுண்டு... அவைகளில் சில கற்பனை செய்யபட்டவையாகவும் இருக்கும். அதே மாதிரி நட்டாஷா இப்போது பேச ஆரம்பித்தாள்.

'நம்முடைய ரகசியத்தை நான் அவரிடம் சொல்லியிருக்கிறேன் என்பது உனக்குத் தெரியுமா? நான் அவரை குழந்தை முதல் அறிவேன். அவருடைய இருதயம் தங்கமானது' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொல்லிவிட்டு, திடீரென்று மிகுந்த சிரத்தையோடு, 'நட்டாலி, நான் வெளிநாடு போகிறேன். என்ன நேரிடும் என்பது கடவுளுக்குத்தான் தெரியும். நீ ஒரு வேளை... ரொம்ப சரி. நான் அதைச் சொல்லக் கூடாது. ஆனால், ஒன்று சொல்லுகிறேன். அதாவது, நான் இங்கு இல்லாத சமயத்தில் உனக்கு என்ன நேர்ந்தாலும் சரி...'

'என்ன நேரக்கூடும்?'

'எம்மாதிரி கஷ்டம் ஏற்பட்டாலும் சரி' என்று இளவரசர் ஆண்ட்ரூ தொடர்ந்தார். 'உன்னையும் குமாரி சோபியாவையும் நான் கேட்டுக்கொள்வது என்னவென்றால்; என்ன நேர்ந்தாலும் சரி, ஏதாவது உதவியோ அல்லது ஆலோசனையோ தேவையிருந்தால், நீங்கள் அவரிடம் போங்கள். அவருக்கு மிகுந்த பராக்குப் புத்தியுண்டு. அவர் ஒரு அசட்டுத்தனமான பேர்வழி என்றாலும் அவருடைய இருதயம் தங்கமானது.'

அவளுடைய தந்தையாலோ; தாயாராலோ, சோனியாவாலோ, அல்லது இளவரசர் ஆண்ட்ரூவாலோ நட்டாஷாவுக்கு அவளுடைய காதலரிடமிருந்து பிரிவதினால் அவளுக்கு என்ன நேரிடக்கூடும் என்பதை கண்டுபிடிக்க முடியவில்லை. முகம் சிவந்து, உள்ளம் கொதித்து, கண் உலர்ந்து அவள் நாள் பூராவாக வீட்டுக்குள்ளேயே சுற்றிக்கொண்டே இருந்தாள். உபயோகம் இல்லாத சில்லறை விஷயங்களில் எப்போதுமே ஈடுபட்டு, தனக்கு என்ன காத்துக்கொண்டிருக்கிறது என்பதை அறிய முடியாதவள் போல நடந்துகொண்டிருந்தாள். அவர் விடைபெற்றுக்கொண்டு போனபோது, கடைசி தடவையாக அவளுடைய கையை அவர் முத்தமிட்டபோது அவள் அழக்கூட இல்லை. 'நீர் போக வேண்டாம்' என்று அவள் சொல்லிய அந்தக் குரல் அவருடைய சிந்தனையைத் தூண்டியது. உண்மையில் போகாமல் அங்கேயே தங்கி விடலாமா என்று கூட அவருக்குத் தோன்றியது. அந்தக் குரலை பின்னால் வெகுகாலம் அவர் அங்கு நினைத்துக்கொண்டே இருந்தார். அவர் போனதற்குப் பின்னால் அவள் அழவில்லை.

ஆனால், பல நாட்கள் தன்னுடைய அறையிலேயே உலர்ந்த கண்களோடு, எதிலும் சிரத்தைகொள்ளாமல், அடிக்கடி 'ஓ, அவர் எதற்காகப் போனார்?' என்று கேட்டுக்கொண்டே இருப்பாள்.

அவர் புறப்பட்டுப்போய் இரண்டு வாரங்களுக்குப் பின்னால், அவளைச் சுற்றியிருந்தவர்கள் ஆச்சரியப்படும் விதத்தில், தன்னுடைய மன நோயிலிருந்து விடுபட்டு, திடீரென்று மீண்டும் பழைய நட்டாஷாவாக மாறினாள். ஆனால் அவளுடைய தார்மீக தோற்றத்தில் ஒரு மாறுதல் காணப்பட்டது. நீண்டநாள் அசௌக்கியமாய் இருந்து எழுந்த குழந்தையின் முகத்தில் எம்மாதிரி மாறுதல் கணப்படுமோ, அம்மாதிரி அவள் முகத்தில் காணப்பட்டது.

## 6

## 25

அந்த வருஷத்தில் அவருடைய குமாரர் புறப்பட்டுப் போன பின்பு, இளவரசர் நிக்கலஸ் பால்கோன்ஸ்கியின் ஆரோக்கியமும் கோபமும் மிகவும் மோசமாயின. அவர் இன்னமும் அதிகமான எரிச்சல் கொடுப்பவராக தோன்றினார். காரணம் இல்லாமல் அடிக்கடி அவருக்குத் தோன்றும் கோப வெறியை அநேகமாக இளவரசி மேரியே தாங்கிக் கொள்ளும்படி நேரிட்டது. அவள் மனதிற்கு மிகவும் பிடித்தமான விஷயங்களாக பார்த்துப் பொறுக்கி, அவற்றைத் தாக்கிப் பேசி, எவ்வளவு அதிகமாக அவள் மன வருத்தம் கொள்ள முடியுமோ, அவ்வளவு அதிகமாக செய்து வந்தார். இளவரசி மேரிக்கு இரண்டு ஆசைகளும், அவற்றினால் ஏற்படும் இரண்டு மகிழ்ச்சிகளும்தான் உண்டு. ஒன்று, அவளுடைய மருமகனான குஞ்சு நிக்கலஸ், மற்றொன்று, மதம். இந்த இரண்டு விஷயங்களையும் தான் இளவரசர் தாக்கியும் கேலி செய்தும் வருவார். அவர் எதைப் பற்றி பேசிக்கொண்டிருந்தாலும், கடைசியாக இரண்டு விஷயங்களுக்குத் திரும்பி வருவார். ஒன்று, வயதான கன்னிகளின் மூட நம்பிக்கைகள். மற்றொன்று, குழந்தைகளை தட்டிக்கொடுத்து, செல்லம் கொடுத்து, அதனால் அவர்களைக் கெடுப்பது. 'குஞ்சு நிக்கலஸ் உன்னைப் போன்ற ஒரு வயதான கன்னியாக ஆக்க வேண்டும் என்று விரும்புகிறாயா? பரிதாபம்! இளவரசர் ஆண்ட்ரூ, தமக்கு ஒரு மகன் வேண்டும் என்று விரும்புகிறாரேயொழிய, ஒரு வயதான கன்னி வேண்டும் என்று விரும்பவில்லை' என்று அவர் சொல்லுவார். அல்லது குமாரி பௌரியனைப் பார்த்து, இளவரசி மேரியின்

முன்னிலையில் கிராமத்து பூசாரிகளையும் தெய்வச் சிலைகளையும் பற்றி அவள் என்ன நினைக்கிறாள் என்று கேட்டு, அவைகளைப் பற்றி கேலி செய்வார்.

இளவரசி மேரியின் உணர்ச்சிகளை அவர் தொடர்ச்சியாக புண்படுத்தி, அவளை வேதனைக்கு உள்ளாக்கி வந்தார். ஆனால், அவற்றிற்காக அவரை மன்னிப்பது அவளுக்கு ஒரு பெரிய பிரயாசையாக இல்லை. அவர் அவளைப் பற்றி பேசுவதற்காக அவர் மீது குற்றம் சொல்ல முடியுமா? அவள்மீது அன்புகொண்ட அவளுடைய தந்தை நியாயத்திற்கு விரோதமாக நடக்கத்தான் முடியுமா? நியாயம் என்றால் என்ன? நியாயம் என்ற அந்தப் பெருமையான வார்த்தையைப் பற்றி அவள் எப்பொழுதும் சிந்தித்ததே இல்லை. ஆண்களின் சிக்கலான சட்டங்கள் எல்லாம் அவளுக்கு ஒரே ஒரு தெளிவான, எளிதான சட்டமாகவே காணப்பட்டது. அதாவது, அன்பும் தன்னலத் தியாகமுமே ஆகும். அவற்றை கடவுள் நமக்கு போதித்தார். அவரே கடவுளாய் இருந்தும் மனித சமூகத்திற்காக அன்போடு துன்பங்களை மேற்கொண்டார். ஆகவே, மற்றவர்களின் நியாயத்தைப் பற்றியோ, அநியாயத்தைப் பற்றியோ அவள் செய்யக் கூடியது என்ன இருக்கிறது? அவற்றையெல்லாம் அவள் சகித்து, அன்பு காட்ட வேண்டியதுதான் அவளுடைய வேலை. அதை அவள் செய்து வந்தாள்.

குளிர் காலத்தில் இளவரசர் ஆண்ட்ரூ பால்டு ஹில்ஸுக்கு வந்தார். அவர் மிகுந்த மகிழ்ச்சியோடும், அமைதியோடும், மிக்க பரிவோடும் காணப்பட்டார். அம்மாதிரி நிலைமையில் அவரை இளவரசி மேரி பார்த்து வெகுகாலம் ஆயிற்று. ஆகவே, அவருக்கு ஏதோ ஒரு காரியம் நடந்திருக்க வேண்டும் என்று அவள் உணர்ந்தாள். ஆனால், அவளிடம் தம்முடைய காதலைப்பற்றி அவர் எதுவும் சொல்லவில்லை. அவர் அதை விட்டு புறப்பட்டுப் போகும் முன்பு, தமது தந்தையோடு எதைப் பற்றியோ நீண்ட நேரம், பேசிக்கொண்டிருந்தார். அவர் புறப்பட்டுப் போகும் முன்பு, அவரும் தந்தையும் ஒருவர் மீது மற்றொருவர் அதிருப்தி கொண்டு இருக்கிறார்கள் என்பதை இளவரசி மேரி கவனித்தாள்.

இளவரசர் ஆண்ட்ரூ புறப்பட்டுப் போன பின்பு, பீட்டர்ஸ்பர்க்கில் உள்ள தனது தோழி ஜூலி காராகினாவுக்கு இளவரசி மேரி கடிதம் எழுதினாள். எல்லா பெண்களும் கனவு காண்பதைப் போலவே, அவளுடைய தோழி தன்னுடைய சகோதரரை திருமணம் செய்து கொள்ளுவாள் என்று அவள் கனவு கண்டாள். அந்தத் தோழி அச்சமயம் அவளுடைய சகோதரர் துருக்கியில் கொல்லப் பட்டதற்காக துக்கம் அனுஷ்டித்து வந்தாள்.

'என்னுடைய அன்பான, கனிவான தோழி ஜூலியே, துக்கம் என்பது நம் எல்லாருக்கும் பொதுவானது என்று தோன்றுகிறது.'

'உன்னுடைய நஷ்டம் மிகுந்த பயங்கரமானது. அந்தக் கடவுள் உன் மீது அன்பு கொண்டிருக்கிறபடியால், உன்னையும், உனது மிகுந்த சிலாக்கியமான அன்னையையும் சோதிப்பதற்காகவே இந்த விசேஷ கருணையைக் காட்டி இருக்கிறார் என்று நான் எனக்குள்ளேயே சமாதானம் கூறிக்கொள்ளுகிறேன். ஓ, எனது தோழியே, மதம் இருக்கிறதே, அந்த மதம் ஒன்றுதான் (அது நமக்கு ஆறுதல் கூறும் என்று நான் சொல்லமாட்டேன்) நம்முடைய அதைரியத்திலிருந்து நம்மைக் காப்பாற்றவல்லது. மதம் ஒன்று தான், அதனுடைய உதவி இல்லாமல் மனிதன் காரணத்தை அறிந்து கொள்ள முடியாது என்பதை, நமக்கு விளக்கிக் காட்டவல்லது. அதாவது: ஏன், என்ன காரணத்திற்காக, அன்பும் கண்ணியமும் உள்ள மனிதர்களை, இந்த வாழ்க்கையில் மகிழ்ச்சியை காணக்கூடிய வல்லவர்களை (மற்றொருவருக்கு துன்பம் செய்யாமல் இருப்பது மட்டுமல்ல, மற்றவர்களின் சந்தோஷத்திற்கு அவர்கள் இருப்பது அவசியமானது) எதற்காக அவர்களை கடவுள் தம்மிடம் அழைத்துக் கொள்ளுகிறார்? குரூரமானவர்களையும், உபயோகமற்றவர் களையும், தீங்கு செய்பவர்களையும் மற்றவர்களுக்கும் தங்களுக்கும் பாரமாய் இருக்கும்படி இருப்பவர்களையும் எதற்காக வாழும்படி விட்டு வைத்திருக்கிறார்? நான் பார்த்த முதல் சாவு, நான் எப்பொழுதும் மறக்க முடியாத அந்த சாவு (அதுதான் என்னுடைய அருமை மைத்துனி) என்னுடைய மனதில் நான் மேலே சொல்லிய கருத்துக்களை ஏற்படுத்தியது. உன்னுடைய சிலாக்கியமான சகோதரர் ஏதற்காக சாக நேரிட்டது என்று நீ விதியை கேட்கிறாய். அந்த தேவதையான லிசா, அவள் யாருக்கும் எப்பொழுதும் தீங்கு செய்யாதது மட்டுமல்ல, அவள் உள்ளத்தில் எந்தக் கெடுதலான சிந்தையும் எப்பொழுதும் நுழைந்ததில்லை. அப்பேர்ப்பட்டவள் எதற்காக சாகும்படி நேரிட்டது என்று நானும் விதியைக் கேட்டேன். நீ என்ன நினைக்கிறாய், எனது அன்புள்ள தோழியே? இப்பொழுது ஐந்து வருஷங்களாய் விட்டன. என்னுடைய குறைந்த அறிவில் அதைப் பற்றி தெளிவாக நான் கண்டுகொள்ள ஆரம்பித்திருக்கிறேன். அதாவது: அவள் ஏன் இறக்கவேண்டி வந்தது? நம்மைப் படைத்த கடவுளின் செய்கைகளை நம்மால் பொதுவாக அறிந்து கொள்ள முடியாவிட்டாலும், அவருடைய படைப்புகளின் மீது அவருக்குள்ள எல்லையற்ற அன்பையே அவருடைய ஒவ்வொரு செய்கையும் காட்டுகிறது. அவருடைய எல்லையற்ற கருணையை அவளுடைய மரணம் எந்த விதத்தில்

காட்டுகிறது? நான் அடிக்கடி நினைப்பதுண்டு. அவள் தேவதையைப் போன்ற களங்கமில்லாதவளாய் விளங்கியபடியால், ஒரு தாயின் கடமைகளை நிறைவேற்றக் கூடிய தைரியம் இல்லாதவளாய் இருந்தாள். ஒரு வாலிப மனைவி என்ற முறையில் அவள் யாரும் குற்றம் சொல்ல முடியாதபடி விளங்கினாள். அம்மாதிரி ஒரு தாயாராக விளங்குவதற்கு அவளால் ஒருவேளை முடியாமல் இருந்திருக்கலாம். இப்பொழுது இருக்கிறபடி வருத்தங்களையும் துக்கமான நினைப்புகளையும் நாமும், குறிப்பாக இளவரசர் ஆண்ட்ரூவும் அனுபவிக்கும்படி எங்களை விட்டுவிட்டு அவள் போய் விட்டாள். ஆனால், அவள் அங்கே பெற்றிருக்கக்கூடிய ஒரு பதவி எனக்குக் கிடைக்கும் என்று நான் நம்பவில்லை. எங்களுக்கு எவ்வளவோ துக்கம் இருந்தபோதிலும், அவளுடைய பால்ய பயங்கரமான மரணம், என்னிடமும், என்னுடைய சகோதரரிடமும் ஒரு சுமுகமான பண்பை ஏற்படுத்திவிட்டுப் போயிருக்கிறது. அந்த சமயத்தில் இந்த சிந்தனைகள் எனக்குத் தோன்றவில்லை. தோன்றியிருந்தாலும், அவற்றை வெறுப்போடும் நான் உதறியிருப்பேன். ஆனால், இப்பொழுது அவையெல்லாம் தெளிவாகவும், உறுதியாகவும், தோன்றுகின்றன. எனது அன்புள்ள தோழியே, என்னுடைய வாழ்க்கையில் ஒரு முக்கியமான கொள்கையாக அமைந்துவிட்ட அந்த சுவிசேஷ உண்மையை உனக்குச் சொல்லி, உன்னை நம்பும்படி செய்வதற்காகவே, நான் இவற்றையெல்லாம் உனக்கு எழுதுகிறேன். அவருடைய திருவுளம் இன்றி நமது தலைகளில் உள்ள ஒரு ஒற்றை ரோமம் கூட கீழே விழ முடியாது. நம்மீதுள்ள எல்லையற்ற அன்பே, அவருடைய திருவுள்ளத்தை ஆட்சி செய்து வருகிறது. ஆகவே, நமக்கு எது நேர்ந்தாலும் அது நமது நன்மைக்கானதாகவே இருக்கும்.

'அடுத்த குளிர் காலத்தில் நாங்கள் மாஸ்கோவில் வசிப்போமா என்று நீ' கேட்கிறாய். உன்னைப் பார்க்க வேண்டும் என்று நான் விரும்பிய போதிலும், மாஸ்கோவில் வசிப்போம் என்று நான் நினைக்கவில்லை. அம்மாதிரி செய்வதற்கு எனக்கு விருப்பமும் இல்லை. அதற்குக் காரணம், போனபார்ட்தான் என்பதைக் கேட்டு நீ ஆச்சரியப்படலாம். விஷயம் இதுதான். என்னுடைய தந்தையின் சௌக்கியம் வரவர வெளிக்குத் தெரிகிறமாதிரி மோசமாகிக் கொண்டு வருகிறது. மாறுதல் எதையும் அவரால் தாங்க முடியாது. வரவர அவருக்குக் கோபம் அதிகமாய் வருகிறது. இந்தக் கோபம் எல்லாம் அரசியல் பிரச்னைகளின் மீது திரும்புகின்றன என்பது உனக்குத் தெரியும். ஐரோப்பாவிலுள்ள சக்கரவர்த்திகளுடன்,

முக்கியமாக நமது சக்கரவர்த்தியுடன், மகா பெரிய காத்தரைன் சக்கரவர்த்தியின் பேரனுடன், சம அந்தஸ்தோடு போனபார்ட் பேச்சு வார்த்தைகள் நடத்தி வருவதை அவரால் சகிக்க முடியவில்லை. அரசியல் விஷயங்களில் எனக்கு சிரத்தை கிடையாது என்பது உனக்குத் தெரியும். ஆனால், மைக்கேல் ஐவானாவிச்சுடன் எனது தந்தை பேசும் பேச்சுகளில் இருந்தும், சொல்லும் அபிப்பிராயங்களில் இருந்தும், இந்த உலகத்தில் நடக்கும் எல்லா விஷயங்களும் எனக்குத் தெரியும். முக்கியமாக, போனபார்ட்டுக்கு பட்டங்களும் மரியாதைகளும் வழங்கியதும் எனக்குத் தெரியும். இந்த உலகம் முழுவதிலும் பால்டு ஹில்ஸ் என்ற ஒரு இடத்தில்தான் போனபார்ட்டை பெரிய மனிதராக ஒப்புக் கொள்ளப்படவில்லை. அவர் பிரான்ஸின் சக்கரவர்த்தி என்பதையும் இந்த பால்டு ஹில்ஸில் ஒப்புக்கொள்ளுவதாய் இல்லை. எனது தந்தைக்கு இவற்றையெல்லாம் சகிக்க முடியவில்லை. அவருடைய அரசியல் கருத்துக்கள்தான், அவர் மாஸ்கோவிற்கு போவதைப் பற்றி பேசுவதற்குக்கூட அவருக்கு உள்ள தயக்கத்திற்கு முக்கியமான காரணம் என்று எனக்குத் தோன்றுகிறது. யாராய் இருந்தாலும் சரி என்று அவர் தமது அபிப்பிராயத்தைச் சொல்லும்போது, அதற்கு மாஸ்கோவில் எதிர்ப்பு ஏற்படும் என்று அவர் நினைக்கிறார். அவருடைய வைத்தியத்தினால் அவருக்குக் கிடைக்கக்கூடிய பலனெல்லாம், போனப்பார்ட்டைப் பற்றிய விவாதத் தகராறுகளினால் அவர் இழந்து விடுவார். எப்படி இருந்தாலும் போவதா இல்லையா என்பதைப் பற்றி சீக்கிரமாக ஒரு முடிவு செய்யப்படும்.

'என்னுடைய சகோதரர் ஆண்ட்ரூ இங்கே இல்லை என்பதைத் தவிர, மற்றப்படி எங்களுடைய குடும்ப வாழ்க்கை பழைய வழியிலேயே போய்க்கொண்டிருக்கிறது. நான் உனக்கு முன்னால் எழுதியபடி, சமீப காலமாக அவர் மிகவும் மாறிவிட்டார். அவருக்கு முன்னால் நேர்ந்த துக்கத்திற்கு பின்னால், இந்த வருஷம்தான் அவர் முழுவதும் தம்முடைய உற்சாகத்தைப் பெற்றிருக்கிறார். அவர் சிறு குழந்தையாக இருந்தபோது இருந்தபடி மீண்டும் அவர் திரும்பி இருக்கிறார். அன்பும் ஆதரவும் கொண்ட அந்தத் தங்கமான இருதயம் அவருக்கு உண்டு. அதற்கு சமமாக வேறு இருப்பதாக எனக்குத் தெரியாது. தம்மைப் பொருத்த வரையில் தம்முடைய வாழ்க்கை இன்னும் முடிந்து போகவில்லை என்பதை அவர் உணர்ந்திருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. ஆனால், அவருடைய மனப்போக்கு மாறி இருப்பதோடு, அவருடைய சரீர பலம் மிகவும் பலவீனமாய் இருக்கிறது. அவர் மிகவும் மெலிந்து

பரபரப்புள்ளவராய் காணப்படுகிறார். அவரைப் பற்றி எனக்கு மிகுந்த கவலையுண்டு. வெகு காலத்திற்கு முன்பாகவே, டாக்டர்கள் சொல்லிய யோசனைப்படி அவர் வெளிநாடுகளுக்கு பிரயாணம் போவது எனக்கு மகிழ்ச்சியாய் இருக்கிறது. அந்தப் பிரயாணம் அவருக்கு பூரண சிகிச்சையைக் கொடுக்கும் என்று நம்புகிறேன். பீட்டர்ஸ்பர்க்கில் அவர் மிகுந்த உற்சாகமும், பண்பும், சாமர்த்தியமும் கொண்ட வாலிபர்களில் ஒருவராய் விளங்குகிறார் என்று நீ எழுதுகிறாய். எனக்கு எப்பொழுதும் அதைப் பற்றி சந்தேகம் இல்லை. ஆனால், என்னுடைய கனவு நனவு ஆய்விட்டதற்காக நான் கொள்ளும் பெருமைக்காக என்னை மன்னிப்பாயாக. இங்கே விவசாயிகளில் இருந்து கனவான்கள் வரையில் ஒவ்வொருவருக்கும் அவர் செய்துள்ள நன்மை அளவிட முடியாதது. ஆகவே, பீட்டர்ஸ் பர்க்கிற்கு அவர் வந்ததும் அவர் தம்முடைய உரிமையைத்தான் பெற்றார். வதந்திகள் இருக்கின்றனவே, முக்கியமாக, நீ எழுதி இருக்கிறாயே, அம்மாதிரி பொய் வதந்திகள் - அதாவது என்னுடைய சகோதரருக்கும் குஞ்சு ராஸ்டோவுக்கும் நிச்சயதார்த்தம் ஆகிவிட்டதென்று எழுதி இருக்கிறாயே, அம்மாதிரி வதந்திகள் - பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து மாஸ்கோவிற்கு பறந்து வரும் விதத்தைக் கண்டு நான் எப்பொழுதும் ஆச்சரியப்படுவதுண்டு. எனது சகோதரர் இனி எப்பொழுதாவது கல்யாணம் செய்துகொள்ளுவார் என்று நான் நினைக்கவில்லை. முக்கியமாக அவர் அவளை திருமணம் செய்யமாட்டார். காரணம் இதுதான்; முதலாவதாக அவர் தாம் இழந்துபோன மனைவியைப் பற்றி பேசுவது அபூர்வமாய் இருந்தாலும், அந்த நஷ்டத்தினால் ஏற்பட்ட துக்கம் அவருடைய உள்ளத்தில் ஆழமாக பதிந்திருக்கிறபடியால், அவர் அடுத்தாற்போல ஒரு மனைவியைப் பற்றியோ, எங்களுடைய குஞ்சு தேவதைக்கு ஒரு செவிலித் தாயைப் பற்றியோ அவர் ஒரு பொழுதும் நிச்சயம் செய்ய மாட்டார். இரண்டாவதாக, எனக்குத் தெரிந்த வரையில், அந்தப் பெண், இளவரசர் ஆண்ட்ரூவுக்கு பிடிக்கக்கூடிய வகையைச் சேர்ந்தவளல்ல. அவளை ஒரு மனைவியாக்க அவர் விரும்புவார் என்று நான் நினைக்கவில்லை. நானும் உண்மையில் அதை விரும்பவில்லை. நான் நீளமாக எழுதிக்கொண்டே போகிறேன். இரண்டாவது தாளும் முடிந்து விட்டது. வணக்கம், எனது அன்புள்ள தோழியே. கடவுள் உன்னை தம்முடைய பரிசுத்தமான பராக்கிரமமான கருணை காட்டி காப்பாராக. எனது அன்புள்ள தோழியே, குமாரி பௌரியன் தனது முத்தங்களை உனக்கு அனுப்புகிறாள். மேரி.'

# 6

## 26

வசந்த காலத்தின் மத்தியில் ஸ்விட்சர்லாந்தில் இருந்த இளவரசர் ஆண்ட்ரூவிடம் இருந்து இளவரசி மேரிக்கு ஒரு எதிர்பாராத கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தில் ஒரு விசித்திரமான, ஆச்சரியப் படக்கூடிய செய்தியை அவர் அவளுக்கு எழுதி இருந்தார். நட்டாஷா ராஸ்டோவா வுடன் அவர் செய்துகொண்ட நிச்சயதார்த் தத்தை அவர் தெரிவித்திருந்தார். அதுதான் அவர் எழுதிய செய்தி. அந்தக் கடிதம் முழுவதும் அவருக்கு நிச்சயதார்த்தம் ஆகியிருந்த அந்தப் பெண்ணைப் பற்றிய பரவசமான அன்பு பொங்கி நின்றது. கனிவையும், நம்பிக்கையான பரிவையும் அவருடைய சகோதரிக்கு அதில் காட்டி இருந்தார். தாம் இதற்கு முன்பு எப்பொழுதும், இப்பொழுது கொண்டுள்ள காதல் மாதிரி, காதலித்தது இல்லை என்று எழுதி இருந்தார். இப்பொழுதுதான் வாழ்க்கை என்பது என்ன என்பதை அவர் புரிந்திருப்பதாகவும், அறிந்திருப்பதாகவும் அவர் சொல்லி இருந்தார். சென்ற தடவை அவர் பால்டு ஹில்ஸுக்கு வந்திருந்தபொழுது, இதைப் பற்றி அவருடைய தந்தையிடம் பேசிய போதிலும் அவளிடம் அவருடைய முடிவை சொல்லாமல் இருந்ததற்காக தம்மை மன்னிக்கும்படி தம்முடைய சகோதரியை கேட்டுக்கொண்டு இருந்தார். அவளிடம் சொல்லி இருந்தால், தமது சம்மதத்தைக் கொடுக்கும்படி அவள் தந்தையை கேட்பாள் என்றும், அதனால் அவர் கோபம் அடைவார் என்றும், அதனால் அவளுடைய விருப்பம் நிறைவேறாததோடு, அந்தக் கோபத்தினால் ஏற்படக்கூடிய கஷ்டத்தை அவள் பொறுக்கவேண்டி இருக்கும் என்றும், அதனால்தான் அவளிடம் அவர் சொல்லவில்லை என்றும் அவர் கூறி இருந்தார். மேலும் அவர் சொல்லி இருந்ததாவது; ‘தவிர, இப்பொழுது நிச்சயமாக தீர்மானமாய் விட்டது போல அச்சமயம் தீர்மானம் ஆகவில்லை. ஒரு வருஷம் தாமதிக்க வேண்டும் என்று தந்தை வற்புறுத்தினார். இப்பொழுது ஏற்கெனவே ஆறு மாதங்கள் ஆகிவிட்டன. அவர் சொல்லிய காலத்தில் பாதி கடந்து விட்டது. என்னுடைய தீர்மானம் எப்பொழுதையும் விட இப்பொழுது இன்னும் அதிக உறுதியாய் இருக்கிறது. இஸ்பா என்ற இந்த ஆரோக்கிய நீர் ஊற்றுகள் உள்ள இடத்தில் நான் இருக்க வேண்டும் என்று டாக்டர்கள் வற்புறுத்தி இருக்காவிட்டால், நான் இப்பொழுது ருஷ்யாவுக்கு வந்திருப்பேன். ஆனால், இப்பொழுதுள்ள நிலைமைப்படி நான் அங்கு வருவதை இன்னும் மூன்று மாதங்களுக்கு தள்ளிப் போட வேண்டியிருக்கிறது. என்னை

உனக்குத் தெரியும். தந்தையுடன் எனக்குள்ள உறவுகளைப் பற்றியும் தெரியும். அவரிடம் இருந்து எனக்கு எதுவும் தேவை இல்லை. இதுவரை நான் சுதந்திரமாய் இருந்திருக்கிறேன். இனியும் அப்படியே இருப்பேன். ஆனால் அவருடைய பிரியத்திற்கு விரோதமாய் நடப்பதோ, அல்லது அவருக்கு கோபத்தை மூட்டுவதோ, என்னுடைய மகிழ்ச்சியில் பாதியை அழிப்பதாய் இருக்கும். நம்முடன் அவர் இனி இருக்கப்போவது வெகு சொற்ப காலமாகவே இருக்கும். இன்று அவருக்கு நான் கடிதம் எழுதி இருக்கிறேன். அவர் நல்ல சுபாவத்தில் இருக்கும் தருணம் பார்த்து, நீ அந்தக் கடிதத்தை அவரிடம் கொடு. நான் எழுதியுள்ள இந்த விஷயத்தைப் பற்றி பொதுவாக அவர் என்ன நினைக்கிறார் என்பதை எனக்கு எழுது. தவிர, அந்த ஒரு வருஷ வாய்தாவில் நாலு மாதங்களை குறைப்பதற்கு அவர் சம்மதிப்பார் என்ற நம்பிக்கைக்கு இடம் இருக்கிறதா என்பதையும் நீ எழுது.'

பல நீண்ட தயக்கங்களுக்குப் பின்னால், சந்தேகங்களுக்கும் பிரார்த்தனைகளுக்கும் பின்னால், அந்தக் கடிதத்தை இளவரசி மேரி தன்னுடைய தந்தையிடம் கொடுத்தாள். மறுநாள் அந்த வயோதிக இளவரசர் அவளிடம் அமைதியாக பேசினார்:

'நான் சாகிற வரையில் காத்திருக்கும்படி உன்னுடைய சகோதரனுக்கு கடிதம் எழுதி தெரிவிப்பாயாக. நான் சாவதற்கு வெகு காலம் ஆகாது. சீக்கிரமாக அவனுக்கு விடுதலை கொடுத்து விடுவேன்.'

இளவரசி பதில் சொல்ல ஆரம்பித்தாள். ஆனால், அவளுடைய தந்தை அவளைப் பேசவிடாமல் தமது குரலை மேலும் மேலும் உயர்த்தி கூச்சலிட்டார்.

'கல்யாணம் செய்துகொள், கல்யாணம் செய்துகொள். எனது மகனே... பொறு. நல்ல குடும்பம்... புத்திசாலியான ஜனங்கள், அப்படித்தானே? பணக்காரர்கள், அப்படித்தானே? ஆம், குஞ்சு நிக்கலஸுக்கு ஒரு சிறந்த சிற்றன்னை. அவன் பிரியப்பட்டால், நாளைக்கே அவன் திருமணம் செய்துகொள்ளலாம் என்று அவனுக்கு எழுது. அவள் குஞ்சு நிக்கலஸுக்கு சிற்றன்னையாய் விளங்கட்டும். நான் குமாரி பௌரியனை மணந்து கொள்ளுவேன்... ஆஹா... ஹா... ஹா. ஏனெனில், அவனுக்கு ஒரு சிற்றன்னை இல்லாமல் இருக்கக்கூடாது. ஒரே ஒரு விஷயம். இந்த வீட்டில் புதிதாகப் பெண் யாரும் தேவையில்லை. அவன் கல்யாணம் செய்து கொண்டு தனியாக வாழட்டும். ஒருவேளை நீயும் அவனுடன் சென்று, அங்கே வாழ்வாய் அல்லவா?' என்று இளவரசி மேரியை

திரும்பிப் பார்த்துக் கேட்டார். 'கடவுளின் பேரால் வெளியே போ. வெளியே உறைபனிக்குப் போ... உறைபனி... உறைபனி'

இந்த சீறுதலுக்குப் பின்னால், இந்த விஷயத்தைப் பற்றி அவர் அப்புறம் எதுவும் பேசவில்லை. ஆனால், அவருடைய மகனின் சலன புத்தியுள்ள நடத்தையினால் அவருக்கு ஏற்பட்டிருந்த அடக்கி வைத்திருந்த எரிச்சலை அவருடைய குமாரியிடம் காட்டி வந்தார். முன்னால் அவர் பேசி வந்த கேலிகளோடு, இந்த புதிய விஷயமாகிய 'சிற்றன்னை'க் கேலியையும் அவர் குமாரி பௌரியனுடன் தாம் சௌஜன்யமாக நடந்து கொள்வதையும் சேர்த்துக்கொண்டார்.

'நான் அவளை ஏன் திருமணம் செய்யக்கூடாது?' என்று தமது மகளைக் கேட்டார். 'அவள் ஒரு சிறந்த இளவரசியாய் விளங்குவாள்.'

அந்த பிரஞ்சுப் பெண்ணுடன் வரவர அதிகமாக தமது தந்தை உண்மையில் உறவாடி வந்தது இளவரசி மேரிக்கு ஆச்சரியமாகவும் குழப்பமாகவும் இருந்தன. அவருடைய கடிதத்திற்கு எம்மாதிரி வரவேற்பு கிடைத்தது என்பதை இளவரசர் ஆண்ட்ரூவுக்கு அவள் எழுதினாள். ஆனால், அந்தக் கருத்தை தந்தை ஒப்புக்கொள்ளும்படி செய்துவிடலாம் என்ற நம்பிக்கையை தெரிவித்து அவரை சமாதானப்படுத்தினாள்.

குஞ்சு நிக்கலஸ், அவனுடைய கல்வி, அவளுடைய சகோதரர் ஆண்ட்ரூ, மதம் ஆகியவைகள்தான் இளவரசி மேரிக்கு மகிழ்ச்சியையும் மனத் திருப்தியையும் கொடுத்துவந்தன. அவற்றைத் தவிர, ஒவ்வொருவரும் சொந்த நம்பிக்கைகளைக் கொண்டிருக்க வேண்டியது அவசியமாகையால், இளவரசி மேரிக்கு அவளுடைய உள்ளத்தின் ஆழத்தில் ஒரு மறைந்திருந்த கனவும், நம்பிக்கையும் இருந்தன. அவைதான் அவளுடைய வாழ்க்கைக்கு முக்கியமான மனத்திருப்தியைக் கொடுத்துவந்தன. இந்த மனத் திருப்தியைக் கொடுக்கும் கனவையும் நம்பிக்கையையும் அவளுக்கு அவளுடைய 'கடவுளின் மக்கள்' கொடுத்தார்கள். அதாவது, இளவரசருக்குத் தெரியாமல் அவளை வந்து சந்திக்கிற அந்த அரைபுத்தி கொண்டவர்களும், யாத்ரீகர்களுமாகும். அதிகமாய் அவள் வாழ வாழ, வாழ்க்கையைப்பற்றி அவளுக்கு அதிகமான அனுபவமும் படிப்பினைகளும் கிடைத்தன. அவை கிடைக்கக் கிடைக்க இந்த உலகத்தில் அனுபவங்களுக்காகவும் மகிழ்ச்சிக்காகவும் தேடித் திரிகிற மக்களின் குறுகிய திருஷ்டியைக் கண்டு, அவளுக்கு இன்னும் அதிகமான வியப்பு ஏற்பட்டது.

அதாவது, விடாமல் உழைத்து, கஷ்டப் பட்டு, சண்டை போட்டு, ஒருவருக்கு மற்றொருவர் கெடுதி செய்து, அந்த சாத்தியமில்லாத, கனவு போன்ற, பாவமான மகிழ்ச்சிக்காக அவர்கள் தேடித் தவிக்கிறார்கள். இளவரசர் ஆண்ட்ரூ தமது மனைவியை காதலித்தார். அவள் இறந்து போனாள். ஆனால், அது மட்டும் போதாது. அவர் தம்முடைய சந்தோஷத்தை மற்றொரு பெண்ணோடு பிணைத்து வைக்க விரும்புகிறார். அவருடைய தந்தை இதை ஆட்சேபிக்கிறார். ஏன்? அவர் இன்னும் அதிகமான அந்தஸ்தும் பணமும்கொண்ட ஜோடி ஆண்ட்ரூவுக்கு வேண்டும் என்று விரும்புகிறார். அவர்கள் எல்லாரும் தவிக்கிறார்கள். கஷ்டப்படுகிறார்கள். ஒருவரை ஒருவர் துன்புறுத்தி தங்கள் ஆத்மாக்களை, தங்களுடைய நிரந்தரமான ஆத்மாக்களை கெடுத்துக்கொள்ளுகிறார்கள். எதற்காக? ஒரே ஒரு வினாடி இருக்கக்கூடிய பலனை அடைவதற்காக இவ்வளவும் செய்கிறார்கள். நாம் மட்டும் இதை அறிந்திருக்கிறோம் என்பதில்லை. கிறிஸ்து, கடவுளின் குமாரன் பூமிக்கு வந்து, இந்த வாழ்க்கை என்பது ஒரே ஒரு வினாடிதான் இருக்கக்கூடியது என்றும், நாம் பயிற்சி பெறுவதற்காக ஏற்பட்டது என்றும் நமக்குச் சொன்னார். என்றாலும் அதைப் பற்றிப் பிடித்துக்கொண்டு, அதில் மகிழ்ச்சியைக் காணலாம் என்று நினைக்கிறோம். 'இதை ஒருவரும் அறிந்து கொள்ளாதது ஏன்?' என்று இளவரசி மேரி நினைத்தாள். 'இழிவாய் நினைக்கப்படுகிற இந்தக் 'கடவுளின் மக்கள்' முதுகில் மூட்டையை சுமந்து கொண்டு, இளவரசர் பார்த்துவிடக் கூடாது என்று பயந்து, பின்வாசல் வழியாக ' என்னிடம் வருவார்கள். இளவரசரின் முரட்டுத்தனத்திற்காக அவர்கள் பயப்படவில்லை. அவரை பாவம் செய்யும்படி செய்துவிடக்கூடாதே என்பதற்காகவே அவர்கள் பயப்படுவார்கள். இவர்கள்தான் அந்த உண்மையை உணர்ந்து இருக்கிறார்கள். குடும்பத்தை விட்டு, வீட்டை விட்டு, உலகத்திலுள்ள நன்மைகளையெல்லாம் விட்டு, எதிலும் பற்றுதல் ஏற்படக் கூடாதே என்பதற்காக கிழிந்த சாக்குகளை கட்டிக்கொண்டு, ஊர் ஊராய் மாறு பெயருடன் சுற்றி, ஒருவருக்கும் கெடுதி செய்யாமல், தங்களை விரட்டுகிறவர்களுக்கும் ஆதரிக்கிறவர்களுக்கும் ஒரே மாதிரி பிரார்த்தனை செய்து வருகிறார்களே இந்த 'கடவுளின் மக்கள்', அவர்களுடைய வாழ்க்கைக்கும் உண்மைக்கும் மேலாக வேறொரு வாழ்க்கையோ உண்மையோ கிடையாது.'

தியோடோசியா என்ற யாத்ரீக ஸ்திரீக்கு ஐம்பது வயதிருக்கும். முகத்தில் அம்மை வடுவுள்ள ஒரு அமைதியான ஸ்திரீ. அவள் கடந்த முப்பது வருஷங்களாக கனத்த சங்கிலிகளை

மாட்டிக்கொண்டு, வெறும் கால்களோடு பல ஊர்களை சுற்றி வந்துகொண்டிருந்தாள். அவளிடம் இளவரசி மேரிக்கு தனியாக ஒரு பிரியம் உண்டு. ஒரு தடவை ஒரு அறையில் ஒரு தெய்வச் சிலை முன்பாக, மங்கலான வெளிச்சத்தில் அமர்ந்து, தன்னுடைய வாழ்க்கையைப் பற்றி தியோடோசியா சொல்லிக்கொண்டிருந் தாள். அச்சமயம் வாழ்க்கையில் உண்மையான பாதையை தியோடோசியா மட்டும் தான் அறிந்து கொண்டு இருக்கிறாள் என்ற நினைப்பு திடீரென்று இளவரசி மேரிக்குத் தோன்றியது. அந்த நினைப்பு அவ்வளவு பலமாய் இருந்தபடியால், அவள் தானும் ஒரு யாத்ரீகராக வேண்டும் என்று முடிவு செய்தாள். தியோடோசியா தூங்கப் போன பின்பு, இதைப்பற்றி இளவரசி மேரி வெகு நேரம் சிந்தித்துக்கொண்டு இருந்தாள். கடைசியாக அவள் க்ஷேத்திர யாத்திரை செய்ய வேண்டும் என்று ஆச்சரியமாகத் தோன்றக்கூடிய அந்த முடிவைச் செய்தாள். அவள் இந்த நினைப்பை ஒருவரிடமும் சொல்லவில்லை. ஆனால்தான் பாவ ஒப்புவிப்புச் செய்யும் சந்நியாசியான பாதிரி அக்கையின்பி என்பவரிடம் சொன்னார். அவர் அவளுடைய யோசனையை ஆதரித்தார். யாத்ரீகர்களுக்கு இனாமாகக் கொடுக்க வேண்டும் என்ற பெயரில் இளவரசி மேரி தனக்காக ஒரு பூரணமான யாத்ரீக உடையை தயாரித்தாள். ஒரு முரட்டுச் சட்டை, சணலினால் ஆன செருப்புகள், ஒரு முரட்டுக் கோட்டு, ஒரு கருப்புச் சவுக்கம், ஆகிய இவைகளை தயாரித்தாள். இந்த ரகசிய பொக்கிஷத்தை அவள் வைத்திருந்த பீரோவிற்குப் பக்கத்தில் போகிற சமயங்களில், பல தடவை இளவரசி மேரி அங்கே நின்று, தன்னுடைய திட்டத்தை நிறைவேற்றக்கூடிய காலம் வந்து விட்டதா என்பதைப் பற்றி யோசிப்பாள்.

யாத்ரீகர்களின் கதைகளை அடிக்கடி அவள் கேட்பதால், அவர்களுடைய அந்த சாதாரணப் பேச்சு அவளுக்கு மிகுந்த ஊக்கத்தைக் கொடுத்து வந்தது. அந்தப் பேச்சுக்கள் அவர்களுக்கு சகஜமானது. ஆனால் அவளுக்கு அவற்றில் ஆழ்ந்த கருத்துக்கள் இருப்பதாகத் தோன்றும். ஆகவே எல்லாவற்றையும் துறந்துவிட்டு, வீட்டை விட்டு ஓடிப்போக அவள் பலதடவைகள் நினைத்துக் கொண்டு தியோடோசியாவின் பக்கத்தில் தனது முரட்டுத் துணிகளை அணிந்து கொண்டு, கையில் ஒரு தடியுடனும், முதுகில் ஒரு மூட்டையுடனும், தூசி நிறைந்த ரஸ்தாக்கள் வழியாக நடந்து, ஒரு க்ஷேத்திரத்தில் இருந்து மற்றொரு க்ஷேத்திரத்திற்கு போவது போலவும், பொறாமை, உலக பாசங்கள், ஆசைகள் இவற்றையெல்லாம் விட்டு, துன்பமும் பெருமூச்சும் இல்லாத நித்ய மகிழ்ச்சியும் ஆனந்தமும் பொங்கியுள்ள அந்தக் கடைசி

இடத்தை அடைந்து விடுவதாக அவள் மனோராஜ்யம் செய்வதுண்டு.

'நான் ஒரு இடத்திற்கு போய் அங்கே பிரார்த்தனை செய்வேன். அந்த இடத்தில் பழக்கம் ஏற்பட்டு அதன் மீது எனக்கு பிரியம் ஏற்படுவதற்கு முன்பாக நான் அதை விட்டு வேறிடம் போவேன். என்னுடைய கால்கள் நடக்கிற வரையில் நான் போய்க்கொண்டே இருப்பேன். அதன் பின்னால், நான் கீழே படுத்து எங்கேயாவது மரணம் அடைவேன். அதன் பின்னால் கடைசியாக அந்த நிரந்தரமான அமைதியான புகலிடத்தில் போய்ச் சேருவேன். அங்கே துக்கமும் கிடையாது, பெருமூச்சும் கிடையாது' என்று இளவரசி மேரி நினைத்தாள்.

ஆனால், அதன் பின்னால் தனது தந்தையையோ, முக்கியமாக குஞ்சு கோக்கோ (நிக்கலஸ்) வையோ அவள் பார்த்தவுடன் அவளுடைய உறுதி தளர்ந்து போகும். அவள் கடவுளுக்கு மேலாக தன்னுடைய தந்தையையும் குஞ்சு மருமகனையும் நேசிப்பதாகவும், அதனால் அவள் பாபம் செய்துவிட்டதாகவும் நினைத்து அமைதியாக அழுவாள்.



# விளக்க உரைகள்

**6**
**2**

'இம்மாதிரி பறந்து போதல்.' நட்டாஷாவின் கற்பனை டால்ஸ்டாய்க்கு ஏழு அல்லது எட்டு வயது இருக்கும்போது தோன்றிய கற்பனையைப்போல இருக்கிறது. அந்த மனோ ராஜ்ய வேகத்தினால், அவர் ஜன்னலுக்கு வெளியாகக் குதித்தார். தரையிலிருந்து அவர் குதித்த உயரம் சுமார் 18 அடிகள் இருந்தன. நினைவு தவறிய நிலையில் அவரைத் தூக்கினார்கள். இதனால் அவருடைய மூளைக்குக்கூட சிறிது அதிர்ச்சி ஏற்பட்டது. ஆனால், ஒரேயடியாக 18 மணி நேரம் அவர் தூங்கிய பின்பு, அவருக்கு சரியாய் விட்டது. பின்னால் இதனால் எந்தவிதமான தொந்தரவும் அவருக்கு ஏற்படவில்லை.

**6**
**4**

'இரண்டு பிரபலமான உத்தரவுகள்... உயர் வட்டாரத்தில் பரபரப்பைக் கொடுத்தன.' இந்தப் பிரபலமான இரண்டு உத்தரவுகளினால், எந்தப் பலனும் ஏற்படவில்லை. ஏதோ பெயரளவுக்கு ராஜ சபையில் சில மாறுதல்கள் ஏற்பட்டன. பட்டங்கள் பெறுவதற்கு லஞ்சம் கொடுப்பது முன் மாதிரியே இருந்தது.

'அராக்சீவ்'. கோமகன் அலெக்ஸி அராக்சீவ் (1769-1834) என்பவர், 1803 -ஆம் வருஷத்திலிருந்து பீரங்கிப் படையின் இன்ஸ்பெக்டர் - ஜெனரலாக இருந்து வந்தார். அந்த பீரங்கிப் படையை அவர் திருத்தி அமைத்ததுதான், 1812-ஆம் வருஷத்தில் நடந்த யுத்தத்தில் ருஷ்யா வெற்றி பெறுவதற்கு பெரிதும் காரணமாய் இருந்தது. 1808-ஆம் வருஷத்தில் அவர் யுத்த மந்திரியாக வந்தார். 1812-ஆம் வருஷத்திய யுத்தத்தில் அவர் போர் முனைக்குச் செல்லவில்லை. அச்சமயத்திலும், அதற்குப் பின்னாலும், சக்கரவர்த்தியின் தொடர்ச்சியான தோழராகவும், அந்தரங்கமான ஆலோசகராகவும் இருந்து வந்தார்.

அவருடைய வெறுக்கத்தக்க கொடூரத்திற்காக அவரை எல்லோரும் வெறுத்து வந்தார்கள். அவருடைய செல்வாக்கு பூராவும் பிற்போக்கானதாக இருக்கும். ராணுவங்களுக்குச் சுயபூர்த்தித் திட்டம் ஏற்படுத்த வேண்டுமென்று ராணுவக்

காலனிகளை அவர் ஏற்பாடு செய்தார். அதனால் அந்தக் காலனியில் குடியேறியவர்களுக்கும், அவர்களுடைய குடும்பங்களுக்கும் மிகுந்த கஷ்டங்கள் ஏற்பட்டன. ருஷ்ய சர்க்காரில் சோவியத் ஆதிக்கம் வந்த பின்பு, எம்மாதிரி அரசாங்கமே விவசாயப் பண்ணைகள் வைத்து நடத்துகிறார்களோ, அதற்கு முன்னோடியாக அந்த ராணுவக் காலனிகள் இருந்தன. அச்சமயத்தில் அராக்சீவுக்கு யந்திரக் கலப்பைகள் என்பது எதுவும் கிடையாது. மக்களிடம் மிகுந்த மனக்கசப்பு ஏற்பட்டது. கடைசியாக, அந்தக் காலனிகள் எல்லாம், பூரண தோல்வியில் வந்து முடிந்தன.

ஆஸ்டர்லிட்ஜில் அவரைப் பற்றி டால்ஸ்டாய் குறிப்பிடுகிறார். அந்த இடத்திலும், இந்த அத்தியாயத்திலும், டால்ஸ்டாய் தமக்கு அராக்சீவ் மீதுள்ள அதிருப்தியைத் தெளிவாகக் காட்டியிருக்கிறார்.

**6** (5 - 6)

ஒரு சுறுசுறுப்பும் புத்திசாலித்தனமுமான மனிதர் ஒருவர், அவரை விட அதிக பலமாகவும், அதிக சுறுசுறுப்பாகவும் இருக்கக் கூடிய ஒரு புத்திசாலியான ராஜ தந்திரியை எப்படிப் போற்றுவாரோ, அதே மாதிரிதான் ஸ்பெரான்ஸ்கியைப் பற்றி இளவரசர் ஆண்ட்ரூவின் அபிப்பிராயமும் இருந்தது. ஆனால், இரண்டு பாதகமான பாதி மூடப்பட்ட அபிப்பிராயங்களும் காட்டப்பட்டிருக்கின்றன. ஒன்று, அவர் ஒரு கிராமத்துப் பாதிரியின் மகன் என்பதனால், ஒரு பிரபுவுக்கு ஏற்படக்கூடிய சொற்பமான வெறுப்பு; மற்றொன்று மற்றவர்களை அவர் துச்சமாக மதித்து, தம்முடைய வாதங்களினாலும் தத்துவங்களினாலும் எல்லா பிரச்னைகளையும் தீர்த்து விடலாம் என்று அவர் கொண்டிருந்த அமைதியான உறுதியாகும்.

**6** (7)

'மூன்று மூலப்பொருள்கள் – கந்தகம், பாதரஸம், உப்பு'. சில பிரீ மேஸன்கள் இயற்கையின் சட்டங்களை அறிந்துகொள்ள விரும்பினார்கள். ஆனால், அவைகளை அவர்கள் தத்துவ விசாரணை மூலமாக அடைய விரும்பினார்கள். மூலப்பொருள் களை மாற்றி அமைப்பதற்கு அவர்கள் ரசாயனத் தத்துவங்களை நம்பியிருந்தார்கள்.



'சங்கத்தில் அவர் பிரசங்கம் செய்து மூன்று நாட்களுக்குப் பின்னால்.' இந்தச் சம்பவம் டால்ஸ்டாயின் சொந்த அனுபவத்தை ஞாபக மூட்டுகிறது. ஒரு பிரசங்கம் செய்வதற்கு முன்பாக, இம்மாதிரிதான் தயார் செய்வார். பிரசங்கம் செய்வது என்றால், அவருக்கு மிகுந்த கஷ்டமாய் இருக்கும். அந்தக் காரியத்தில் அவர் வெற்றி பெற்றதே இல்லை.



'கோமகன் ரூம்யாண்ட்சேவ், காலெயின்கோர்ட் என்பவர்களின் கோஷ்டி.' ஏ. ஏ. லூயி, கோமகன் காலெயின்கோர்ட் என்ற ஒரு பிரெஞ்சு ஜெனரலும், ராஜதந்திரியுமானவரை (1772-1827) பீட்டர்ஸ்பர்க்கிற்கு *1801*-ஆம் வருஷத்தில் ருஷ்யாவுக்கும் பிரான்ஸுக்கும் ஒரு ஒப்பந்தம் ஏற்படுவதற்காக பேச்சு வார்த்தைகள் நடத்தும்படி அனுப்பினார்கள். *1807*-ஆம் வருஷத்தில் அவர் பீட்டர்ஸ்பர்க்கில் ஸ்தானாதிபதியாக இருந்தார். *1808*-ஆம் வருஷத்தில் கோமகன் வைஸன்ஜாவாக அவர் உயர்த்தப்பட்டார். *1812*-ஆம் வருஷத்தில் நெப்போலியனின் படையெடுப்பைத் தடுப்பதற்கு முயற்சி செய்து தோல்வியடைந்தார். என்றாலும், நெப்போலியனோடு அவரும் ருஷ்யாவுக்குள் வந்தார். பிரான்ஸில் மீண்டும் பழைய கட்சி ஏற்பட்ட பின்பு, காலெயின் கோர்ட்டின் பெயர், குற்றவாளிகளின் ஜாபிதாவில் சேர்க்கப்பட்டது. ஆனால், அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியின் தலையீட்டினால், அந்தப் பெயர் அந்த ஜாபிதாவிலிருந்து நீக்கப்பட்டது.

'எர்பெர்ட் என்ற இடத்தில் ஹெலன் இருந்தாள்.' பிரஷ்யாவில் எர்பெர்ட் என்ற இடத்தில் *1808*-ஆம் வருஷத்திய இலையுதிர் காலத்தில், டில்சிட்டில் ஏற்பாடு செய்திருந்த கூட்டம் நடந்தது. அந்தக் கூட்டத்தில் அலெக்ஜாண்டரும், நெப்போலியனும், பிரஷ்ய மன்னரும் இருந்தார்கள். ஆஸ்திரிய சக்கரவர்த்தி ராணுவ தயாரிப்புகள் நடத்தி வந்ததால், அதற்குத் தண்டனையாக, இந்தக் கூட்டத்தில் அவரைச் சேர்த்துக்கொள்ளவில்லை. டில்சிட்டில் செய்த ஒப்பந்தங்கள் உறுதி செய்யப்பட்டன. பிரஷ்யாவின் கஷ்டங்களும் குறைக்கப்பட்டன. தாங்கள் ஐரோப்பாவில் தலையிடுவது இல்லையென்ற ருஷ்ய வாக்குறுதிக்குப் பதிலாக, பின்லாந்தை ஆக்கிரமிக்க நெப்போலியனின் அனுமதியை ருஷ்யா பெற்றது. துருக்கியிலுள்ள டான்யூப் பிரதேசங்களை ருஷ்யா

எடுத்துக்கொள்ள முடியுமானாலும், எடுத்துக்கொள்ளட்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. எர்பெர்ட்டில் ஏராளமான பேர்கள் கூடியிருந்தார்கள். விருந்துகளும், வேடிக்கைகளும், உபசாரங்களும் ஏராளமாக நடைபெற்றன.

'இளவரசர் டி லின்' சார்லஸ் ஜோஸப்; இளவரசர் டி லின் (1735-1814) என்பவர், ஒரு ராணுவ வீரராகவும், எழுத்தாளராகவும், ராஜதந்திரியாகவும் இருந்தார். அவர் எழுதிய நூல்கள் 34 புத்தகங்களாக வெளிவந்தன. பிரஸ்ஸல்ஸ் என்ற இடத்தில் பிறந்தவர். 7 வருஷ யுத்தத்தில் அவர் பங்கு கொண்டு, லெப்டினட் பீல்டு மார்ஷலாக வந்தார். சக்கரவர்த்தி இரண்டாவது ஜோஸப்புக்கு அவர் ஒரு நண்பர். ருஷ்யாவில் சில வருஷங்கள் அவர் இருந்தார். மகா பெரிய காத்தரைன் சக்கரவர்த்தினி கிரியாவுக்கு விஷயம் செய்தபோது, அவர் அவளுடன் போனார். அச்சமயத்தில் அவரை ஒரு ருஷ்ய பீல்டு மார்ஷலாக உயர்த்தினார்கள். பின்னால், அவர் பல தடவைகள் ருஷ்யாவுக்கு விஜயம் செய்திருக்கிறார். ஆனால், உத்தியோக முறையில் அல்ல; சிறந்த சமூக வட்டாரத்தைச் சேர்ந்த ஒரு பண்பும் அந்தஸ்தும் உள்ளவர் என்ற முறையில் அவர் வந்துகொண்டிருந்தார்.

**6**
**11**

'பின்னிஷ் போரில்கூட பெர்க் இரண்டு பதக்கங்களைப் பெற்றார்.' 1808-ஆம் வருஷத்தில் ஸ்வீடனுடன் நடந்த போரில் ருஷ்யா பின்லாந்தை ஆக்ரமித்தது. பிரடெரிக்ஷேவன் என்ற இடத்தில் நடந்த ஒப்பந்தத்தினால், அந்தப் போர் முடிந்தது. அந்த ஒப்பந்தத்தை எர்பெர்ட்டில் நடந்த கூட்டத்தில் நெப்போலியன் உறுதி செய்தார்.

'பால்டிக் மாகாணங்களில் எனக்குக் கிடைக்கும் நில வருமானத்தை அவர்களுக்குக் கிடைக்கும்படி செய்திருக்கிறேன்.' 19-வது நூற்றாண்டில், ராணுவ சேவைக்குப் பரிசாக, அல்லது தயவு காட்டுவதற்காக ருஷ்ய சர்க்கார் நிலங்களை இனாமாகக் கொடுப்பது வழக்கமாய் இருந்தது.

**6**
**15 - 16**

மரியா அன்டோனாவ்னா நாரிஷ்கினா என்பவள், எல்லாராலும் புகழப்பட்ட ஒரு உயர் வட்டார அழகி. முதலாவது அலெக்ஜாண்டருக்கு அவள் காதலியாக இருந்தாள். பிறப்பில் அவளுக்கு இளவரசி செட்வெர்டைன்காயா என்ற பெயர் உண்டு.



'வரப்போகும் சீர்திருத்தங்களைப் பற்றி இளவரசர் ஆண்ட்ரூவுக்கு சிரத்தை ஏற்பட்டது.' முதலாவது அலெக்ஜாண்டரின் முன்னுக்குப் பின் முரணான நடத்தையினால், ருஷ்ய சர்க்காரைத் திருத்தி, அமைக்க வேண்டுமென்ற ஸ்பெரான்ஸ்கியின் பாராட்டத்தக்க முயற்சியானது தகர்ந்து போயிற்று.

இளவரசர் ஆண்ட்ரூவுக்கு, டால்ஸ்டாய் தம்மிடத்தில் உள்ள குணங்களைக் கொடுத்திருக்கிறார் என்பதைக் கண்டு பிடிப்பது கஷ்டமல்ல. அம்மாதிரி குணங்களைக் கொண்டுதான் ஸ்பெரான்ஸ்கியை இளவரசர் ஆண்ட்ரூ நோக்குகிறார். இந்த அத்தியாயத்தின் கடைசியில், விவசாயிகள் அடிமைகளாக இருந்த போதிலும், சீர்திருத்தங்களை அவர்கள் பலமாக எதிர்த்து வந்தார்கள் என்று சொல்லுகிறார்.

'மாக்னிட்ஸ்கி'; எம். எல். மாக்னிட்ஸ்கி என்பவர் ஸ்பெரான்ஸ்கியுடன் சேர்ந்து வேலை செய்தவர். ஸ்பெரான்ஸ்கியின் சீர்திருத்தங்களை மிகுந்த ஆர்வத்தோடு ஆதரித்தவர்களில் அவர் ஒருவர். ஸ்பெரான்ஸ்கி பதவியிலிருந்து வீழ்ச்சியடைந்த பிற்பாடு, கோமகன் அராக்சீவுடன் சேர்ந்து கொண்டார். அச்சமயத்தில் அவர் மிகுந்த தீவிரமாக முன்னேற்ற சீர்திருத்தங்கள் எல்லாவற்றையும் எதிர்த்து வந்தார். பின்னால், ஏராளமான பணத்தை அவர் சுரண்டி விட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டு, சேவையிலிருந்து டிஸ்மிஸ் செய்யப்பட்டார்.

'நெப்போலியனுடைய ஸ்பெயின் விவகாரங்கள்.' 1810-ஆம் வருஷமாகிய அச்சமயத்தில், நெப்போலியன் ஏற்கெனவே ஸ்பெயின் விவகாரங்களில் பலமாக அகப்பட்டுக் கொண்டிருந்தார். 1808-ஆம் வருஷத்தில் தமது சகோதரர் ஜோஸப்பை ஸ்பெயின் மன்னராக அவர் ஏற்படுத்தினார். ஆனால், ஸ்பானியர்கள் இதை எதிர்த்தார்கள். நெப்போலியன் முதல் தடவையாக கொரில்லா எதிர்ப்பை அனுபவித்தார். அதைச் சுலபமாக அடக்க முடியவில்லை. மீண்டும் அவர் ருஷ்யா மீது படையெடுத்தபோது, அதே மாதிரி கொரில்லா எதிர்ப்பினால் நாசகரமான பலன்களைப் பெற்றார். இங்கிலாந்து ஸ்பெயினுக்கு உதவி செய்து வந்தது. பெனின்ஸுலார் யுத்தம் 1813-ஆம் வருஷம் வரையில் நடந்தது. அந்த வருஷத்தில் ஸ்பெயின் நாட்டை விட்டு பிரஞ்சுக்காரர்களை, வெல்லிங்டன் துரத்தியடித்தார்.

**6**

22

'எல்லையற்ற பரம்பொருளோடு ஒப்பிட்டுப் பார்த்தபோது, ஒவ்வொரு காரியமும் மிக அற்பமாகவே அவருக்குத் தோன்றியது. அப்படி யானால் எதற்காகச் செய்ய வேண்டும் என்ற கேள்வி, மீண்டும் அவருக்குத் தோன்றியது.' இங்கே பீயருடைய உணர்ச்சியை வெளியிட்டிருப்பதற்கும், 12 வருஷங்களுக்குப் பின்னால் தமது உணர்ச்சியை தம்முடைய 'ஒப்புக்கொள்ளுதல்' என்ற புத்தகத்தில் வெளியிட்டிருப்பதற்கும் உள்ள ஒற்றுமையைக் காணலாம்.





ஆதி மனிதன் தன்னுடைய நிலையில் இருந்து கீழே விழுவதற்கு முன்பாக, அவனுக்கு இருந்த மகிழ்ச்சிக்கு காரணம் ஒன்று என்று பைபிள் கதை சொல்லுகிறது. அதாவது, அவன் வேலை எதுவும் செய்யாமல் சோம்பேறியாக இருந்து அதன் மகிழ்ச்சியை அனுபவித்துக் கொண்டிருந் தானாம். அந்த சோம்பேறித்தனத்தின் மீதுள்ள ஆசையை மனிதன் இன்னும் விடவில்லை. ஆனால், அவனுக்குக் கிடைத்த சாபம் அந்த மனித இனத்தை அமுக்கிக் கொண்டிருக்கிறது. ஆகவே, நெற்றியில் வியர்வை காணும்படி உழைத்து, நமக்கு உணவைத் தேடவேண்டி இருக்கிறது. அதுமட்டுமல்ல, நாம் ஏக காலத்தில் சோம்பேறியாகவும் சௌக்கியமாகவும் இருக்க முடியாதபடி, நமது தார்மீக இயல்பு அமைந்திருக்கிறது. நாம் சோம்பேறித்தனமாய் இருந்தால், நாம் செய்வது தவறு என்று நமது மனச்சாட்சி நமக்கு சொல்லுகிறது. ஒருவன் சோம்பேறியாய் இருந்து கொண்டு, அதே சமயத்தில் தனது கடமையையும் நிறைவேற்றுபவனாக இருக்கக்கூடிய ஒரு நிலைமையை மனிதன் கண்டு பிடிக்கக்கூடுமானால், ஆதி மனிதனின் மகிழ்ச்சிக்குக் காரணமான 'ஒன்றை அவன் கண்டு பிடித்ததாக ஏற்படும். அம்மாதிரி கண்டிப்பாக சோம்பேறியாக இருக்கவும், அந்தச் சோம்பேறித்தனத்தை யாரும் குற்றம் சொல்ல முடியாதபடி இருக்கவுமான ஒரு கூட்டம் இருக்கிறதென்றால், அதுதான் ராணுவம். ராணுவ சேவையில் ஒரு முக்கியமான கவர்ச்சி இருக்கிறதென்றால், இனியும் இருந்து வருகிறதென்றால், அது இதுதான். அதாவது, கட்டாயமாகவும் கண்டிக்கக் கூடாததாகவும் உள்ள சோம்பேறித் தனமேயாகும்.

*1807*-வது வருஷத்தில் பாவ்லாகிராட் பட்டாளத்தில் தொடர்ச்சியாக நிக்கலஸ் ராஸ்டோவ் சேவை செய்து வந்தபோது, இந்தப் பேரானந்த நிலைமையை பூரணமாக அனுபவித்தார். அந்தப் பட்டாளத்தின் சிறு படைப் பிரிவிற்கு டெனைசாவிற்கு பின்பு, இவரே கமாண்டராய் இருந்து வருகிறார்.

நல்ல குணமுள்ளவராகவும், ஆனால், முரட்டுத்தன முள்ளவரா கவும் ராஸ்டோவ் தோன்றினார். மாஸ்கோவில் அவருக்கு அறிமுகமானவர்கள் இந்த முரட்டுத்தனத்தை விரும்பாதவர்களாய் இருக்கலாம். ஆனால், அவருடைய தோழர்களும் அவருக்குக் கீழுள்ள சிப்பந்திகளும் அவருக்கு மேலுள்ள மேல் அதிகாரிகளும் அவர் மீது பிரியம் கொண்டு மரியாதை காட்டி வந்தார்கள். அவரும்

தமது வாழ்க்கையில் திருப்தியோடு இருந்தார். சமீப காலமாக 1809-வது வருஷத்தில் அவருடைய தாயாரிடம் இருந்து வருகிற கடிதங்களில் அடிக்கடி குறை கூறுதல் காணப்பட்டு வந்தன. அவர்களுடைய குடும்ப விஷங்கள் வரவர அதிகமாக தொல்லை களுக்குள் அகப்பட்டுக்கொண்டு இருப்பதாகவும், ஆகவே அவர் உடனே திரும்பி வந்து, அவருடைய வயோதிகப் பெற்றோர்களை மகிழ்ச்சியிலும் சௌக்கியத்திலும் வைக்கும்படியாகவும் அவருடைய தாயார் எழுதிவந்தார்.

இந்தக் கடிதங்களை வாசித்ததும் நிக்கலஸ் பீதி கொண்டார். ஏனெனில், வாழ்க்கையின் சிக்கல்கள் எதுவுமில்லாத சூழ் நிலையில் அவர் மிகுந்த அமைதியாகவும் நிம்மதியாகவும் வாழ்ந்து வந்தார். இதிலிருந்து பிரிந்து போவதற்கு அவருக்கு பயமாய் இருந்தது. வாழ்க்கையின் சுழற்சிகள், அவற்றால் ஏற்படும் கவலைகளையும் சிக்கல்களையும் தீர்த்து வைக்கவேண்டிய விஷயங்கள், மேனேஜர்களோடு கணக்குத் தீர்க்கப்படவேண்டிய காரியங்கள், சண்டைகள், சூழ்ச்சிகள், பந்தங்கள், உயர்வட்டார சகவாசங்கள், சோனியாவின் காதல், அவளுக்கு அவர் கொடுத்த வாக்குறுதி, இம்மாதிரியான வாழ்க்கையில் அவர் சீக்கிரமாகவோ தாமதமாகவோ நுழைந்துதான் ஆகவேண்டும் என்று உணர்ந்தார். ஆனால், அவையெல்லாம் பயங்கரமான கஷ்டங்களாகவும், சிக்கல்கள் கொண்டவைகளாகவும் அவருக்குத் தோன்றின. அவர் தமது தாயாருக்கு உணர்ச்சி இல்லாமல், சகஜமாக பிரஞ்சு மொழியில் பதில் எழுதினார். 'எனது அன்புள்ள அம்மா' என்று ஆரம்பித்து, 'உனது கீழ்ப்படிதலுள்ள குமாரன்' என்று அந்தக் கடிதத்தை முடித்தார். ஆனால், அவர் எப்பொழுது திரும்புவார் என்பதைப்பற்றி எதுவும் சொல்லவில்லை. 1810-வது வருஷத்தில் அவருடைய பெற்றோர்களிடமிருந்து அவருக்குக் கடிதங்கள் வந்தன. அவற்றில் நட்டாஷா-பால்கோன்ஸ்கி நிச்சயதார்த்தத்தைப் பற்றியும், வயோதிக இளவரசர் பிடிவாதமாய் இருப்பதால் ஒரு வருஷ காலத்தில் கல்யாணம் நடக்கும் என்றும் அவர்கள் எழுதியிருந்தார்கள். இந்தக் கடிதம் நிக்கலஸுக்கு வருத்தத்தையும் அவமானத்தையும் கொடுத்தது. தமது குடும்பத்தில் வேறு யாரையும்விட தாம் அதிகமாய் அக்கறை கொண்டிருந்த நட்டாஷா தமது குடும்பத்தை விட்டுப் பிரிவதற்காக முதலாவதாக அவர் வருத்தம் அடைந்தார். இரண்டாவதாக, தம்முடைய குதிரைப்படை வீரரின் அபிப்பிராயத்தில் இருந்து, அந்த பால்கோன்ஸ்கி பேர்வழிக்கு எடுத்துக்காட்டுவதற்கு தாம் அங்கு இல்லாமல் போய்விட்டாரே என்று வருத்தம் அடைந்தார். அதவாது, அந்த

பால்கோன்ஸ்கியின் சம்பந்தத்தால் பிரமாதமான கௌரவம் எதுவும் கிடைத்துவிடப் போவதில்லை என்பதையும், அவர் நட்டாஷா மீது காதல் கொண்டு இருப்பாரானால் அவருடைய அந்த முட்டாள் தந்தையிடமிருந்து அனுமதி பெறுவதை கைவிட்டிருக்கவேண்டும் என்பதையும் அவர்காட்ட விரும்பினார். நட்டாஷாவின் கல்யாணத்திற்கு முன்பாக அவளைப் பார்ப்பதற்காக ரஜா பெற்றுக்கொண்டால் என்ன என்று ஒருநிமிஷம் நினைத்தார். ஆனால், உடனே ராணுவத்தின் ஒத்திகைகள் ஏற்படப்போவதும் சோனியாவைப் பற்றிய சிந்தனைகளும், தமது குடும்ப வரவு செலவிலுள்ள குழப்பங்களும் அவர் மனதில் தோன்றின. உடனே ரஜா எடுக்கும் யோசனையை விட்டு விட்டார். ஆனால், அந்த வருஷத்தில் இளவேனில் காலத்தில் அவருடைய தாயாரிடமிருந்து அவருடைய தந்தைக்குத் தெரியாமல் எழுதிய கடிதம் ஒன்று அவருக்கு வந்தது. அதைப் பார்த்ததும் அவர் தமது வீடு திரும்ப நினைவு கொண்டார். அவர் உடனே வந்து குடும்ப விவகாரங்களை மேற்கொள்ளாவிட்டால, அவர்களுடைய சொத்துக்கள் எல்லாம் ஏலாத்தில் விற்கப்பட்டுவிடும் என்றும், அதன் பின்னால் எல்லாரும் பிச்சை எடுக்கவேண்டியதுதான் என்றும் அவள் எழுதி இருந்தாள். கோமகன் மிகுந்த கோழை நெஞ்சம் உள்ளவர். மைடெங்காவை அதிகமாக நம்பிவிட்டார். மிகுந்த நல்ல குணமுள்ளவராய் இருந்தபடியால் ஒவ்வொருவரும் அவரை ஏமாற்ற ஆரம்பித்தார்கள். ஆகவே, விஷயங்கள் மோசமான நிலைமையிலிருந்து மகாமோசமான நிலைமைக்குப் போய்க் கொண்டிருந்தன. 'என்னையும் குடும்பம் முழுவதையும் கேடுகெட்ட நிலைமைக்கு வராமல் நீ தடுக்க விரும்பினால், கடவுளுக்காக நீ உடனே வந்து சேரவேண்டும் என்று உன்னை கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன்' என்று கோமகள் எழுதியிருந்தாள்.

இந்தக் கடிதம் நிக்கலஸின் உள்ளத்தைத் தொட்டது. காரியார்த்தமானவர்களின் பகுத்தறிவு அவரிடம் இருந்தது. அவர் என்ன செய்ய வேண்டும் என்பதை அது அவருக்குக் காட்டியது.

ராணுவத்திலிருந்து விலகவேண்டும் என்பது இல்லாவிட்டாலும், ரஜா பெற்றுக்கொண்டாவது வீடு திரும்ப வேண்டும் என்பது தான் இப்பொழுது செய்யவேண்டிய சரியான வேலை. அவர் ஏன் போகவேண்டும் என்பதைப்பற்றி அவருக்குத் தெரியாது. சாப்பாட்டிற்குப் பின்னால் தூங்கி எழுந்த பின்பு, தமது மார்ஸ் என்ற குதிரைக்கு சேணம் கட்டும்படி அவர் உத்தரவிட்டார். அந்த சாம்பல் வர்ணமுள்ள குதிரை மீது அவர் வெகு காலமாக சவாரி

செய்யவில்லை. இப்பொழுது அதன் மீது ஏறிப்போய் திரும்பி வந்தார். அந்தக் குதிரை வியர்த்திருந்தது. டெனைசாவின் வேலைக்காரனான லாவ்ருஷ்கா என்பவன் அவருடனேயே தங்கியிருந்தான். சவாரியிலிருந்து திரும்பி வந்த பின்பு, அவனிடமும், மாலையில் திரும்பிய தமது சகபாடிகளிடமும், தாம் ரஜாவில் வீடு திரும்புவதாகவும், ரஜாவிற்கு எழுதிப் போட்டாய்விட்டதென்றும் அவர் கூறினார். கடைசியாக நடந்த ராணுவ ஒத்திகைகளுக்குப் பின்னால் அவருக்கு பதவி உயர்ந்து கேப்டனாய் இருக்கிறாரா, அல்லது 'செயின்ட் அனி' என்ற பதக்கம் கொடுக்கப்பட்டு இருக்கிறதா என்பது அவருக்கு இன்னும் தெரியவில்லை. இதில் அவர் மிகுந்த சிரத்தை கொண்டிருந்தார். எனவே, இதைப்பற்றி தலைமை காரியாலயத்திலிருந்து எதுவும் தெரிவதற்கு முன்பாக தாம் புறப்படவேண்டியது இருக்கிறதே என்பதை அவர் நினைத்தபோது, அவருக்கு கஷ்டமாகவும் விசித்திரமாகவும் இருந்தது. அவருடைய மூன்று பழுப்பு நிறக் குதிரைகளை விலைக்கு வாங்கிக்கொள்ளுவதற்காக போலிஷ் கோமகன் காலுகாவ்ஸ்கி பேரம் பேசிக்கொண்டிருந்தார். அவற்றை இரண்டாயிரம் ரூபிள்களுக்கு தாம் விற்றுவிடுவதாக ராஸ்டோவ் பந்தயம் கட்டினார். அந்தக் காரியத்தை செய்து முடிக்காமல் போகவேண்டி இருப்பதை அவர் நினைத்தபோது, அவருக்கு விசித்திரமாய் இருந்தது. உலான்கள் தங்களுடைய போலிஷ் குமாரி பார்ஜாஜாவ்ஸ்கா என்பவளை கௌரவிப்பதற்காக ஒரு நடனக் கச்சேரியை ஏற்பாடு செய்தனர். அதற்குப் போட்டியாக போலிஷ் குமாரி பிரஜாஜ்ட்ஜிகா என்பவளை கௌரவிப்பதற்காக குதிரைப் படை வீரர்கள் ஒரு நடனக் கச்சேரியை ஏற்பாடு செய்திருந்தார்கள். இந்தக் கச்சேரிக்குக் கூட அவர் இருக்காமல் போகவேண்டியதாய் இருக்கிறது. இந்த இனிமையான பிரகாசமான உலகத்தைவிட்டு, அவர், ஒவ்வொன்றும் முட்டாள்தனமாகவும், குழப்பமாகவும் காணப்படும் ஏதோ ஒரு இடத்திற்கு போய்த்தான் ஆகவேண்டும் என்பதை அறிவார். இவற்றை எல்லாம் அவரால் நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. ஒரு வாரத்திற்குப் பின்னால் அவருக்கு ரஜா கிடைத்தது. அவருடைய குதிரைப்படைத் தோழர்கள் - அவருடைய படைப் பிரிவு மட்டுமல்ல, பூரா பட்டாளத்திலும் இருந்த குதிரைப் படை வீரர்கள் எல்லாரும் சேர்ந்து - ராஸ்டோவுக்கு ஒரு டின்னர் வைத்தார்கள். அதற்கு தலைக்கு பதினைந்து ரூபிள்கள் வீதம் வசூலித்தார்கள். அதற்கு இரண்டு கோஷ்டி பாண்டு வாத்தியக்காரர்களையும், இரண்டு கோஷ்டி பாடகர்களையும் ஏற்பாடு செய்தார்கள். ட்ரீபாக் என்ற நடனத்தை மேஜர் பாசாவ்

என்பவருடன் ராஸ்டோவ் ஆடினார். குடிவெறியில் மூழ்கியிருந்த அதிகாரிகள் ராஸ்டோவை கேலி செய்தும் ஆலிங்கனம் செய்தும் தங்கள் மகிழ்ச்சியை தெரிவித்தார்கள். மூன்றாவது படைப் பிரிவைச் சேர்ந்த சிப்பாய்களும் இதே மாதிரி செய்து அவருக்கு ஜே கோஷம் இட்டார்கள். பின்னால், அவர்கள் அவரைத் தூக்கி, அவருடைய உறைபனி வண்டியில் அமர்த்தி முதலாவது தபால் ஸ்டேஷன் வரையில் அவருடன் சென்று அவரை வழியனுப்பினார்கள்.

கிரெமென்சுக் என்ற இடத்தில் இருந்து கீவ் என்ற இடம் வரையில் அவருடைய பிரயாணத்தின் முதல் பாதியாக அமைத்திருந்தது. இம்மாதிரி பிரயாணத்தில் பழக்கமாக ஏற்படுவது போல, அவருடைய முதல் பாதி பிரயாணத்தின்போது அவருடைய நினைப்புகள் எல்லாம் அவருடைய படையைப்பற்றியதாகவே இருந்தது. பாதி தூரத்திற்கு மேலாகப் போனதும் அவருடைய மூன்று பழுப்பு நிற குதிரைகளைப்பற்றியும், அவருடைய இட வசதி அதிகாரி டாஜாயிபெக்கோவைப் பற்றியும் அவர் மறக்க ஆரம்பித்தார். ஆட்ராட்னோ என்கிற இடத்தில் காரியங்கள் எப்படி இருக்கும் என்பதைப்பற்றியும் தாம் அங்கே என்ன காணப்போகிறார் என்பதைப்பற்றியும் அறிந்து கொள்ள அவர் மனம் துடித்தது. வீட்டை நெருங்க நெருங்க வீட்டைப்பற்றிய சிந்தனைகள் வரவர பலமாயின. வீட்டை நெருங்க நெருங்க அதைப்பற்றிய உணர்ச்சிகள் அவரை வேகமாகப்பற்றி இழுப்பது போலத் தோன்றியது. ஆட்ராட்னோவிற்கு முன்னால் உள்ள தபால் ஸ்டேஷனுக்கு அவர் வந்து சேர்ந்ததும் அந்த வண்டிக்காரனுக்கு மூன்று ரூபிள்கள் இனாம் அளித்தார். அவர் வீடு வந்து சேர்ந்ததும், ஒரு சிறு பையனைப்போல மூச்சு வாங்கிக்கொண்டு வேகமாய் ஓடி, வீட்டுப் படிக்கட்டுகளில் ஏறினார்.

ஒவ்வொன்றும் பழையபடியே இருக்கும்போதும், தாம் எதற்காக அவசரப்பட்டு வந்திருக்கவேண்டும் என்ற நினைப்பு அவருக்குத் தோன்றியது. தமது வீட்டில் உள்ளவர்களை சந்திப்பதால் ஏற்பட்ட மகிழ்ச்சி அடங்கிய பின்பு, அவர் தம்முடைய பழைய குடும்ப வாழ்க்கையில் ஈடுபட ஆரம்பித்தார். அவருடைய தாயும் தந்தையும் முன் மாதிரியே இருந்தார்கள். ஆனால், கொஞ்சம் வயதானவர்களாய் இருந்தார்கள். கொஞ்சம் கவலையும் இடையிடையே ஒருவருக்கொருவர் அபிப்பிராய பேதங்களும் அவர்களிடம் காணப்பட்டன. இந்த குணங்கள் அவர்களிடம் முன்பு கிடையாது. இப்பொழுது அவர்களுடைய பண விவகாரங்கள் மோசமான நிலைமையில் இருந்தபடியால்தான் இந்த குணங்கள் தோன்றியிருக்கின்றன என்பதை நிக்கலஸ் சீக்கிரமாக அறிந்து

கொண்டார். சோனியாவுக்கு இருபத்திரண்டு நெருங்கிக் கொண்டிருந்தது. அவளுடைய அழகின் வளர்ச்சி நின்றுவிட்டது. அதற்கு மேல் அவள் அழகில் வளர முடியாது. ஆனால், அப்பொழுதுள்ள அழகே போதுமானதாய் இருந்தது. நிக்கலஸ் திரும்பியதிலிருந்து அவள் மகிழ்ச்சியிலும், காதலிலும் திளைத்துக்கொண்டிருந்தாள். இந்தப் பெண்ணின் உண்மையான மாறாத காதல் நிக்கலஸுக்கு மகிழ்ச்சியான உணர்ச்சியைக் கொடுத்து வந்தது. பெட்டியாவும் நட்டாஷாவும் வளர்ந்திருப்பதைக் கண்டு நிக்கலஸ் மிகுந்த ஆச்சரியம் அடைந்தார். குறும்புத்தனமான, தமாஷான, மகிழ்ச்சி நிறைந்த பெட்டியா பதிமூன்று வயது நிறைந்த அழகான பெரிய பையனாகக் காணப்பட்டான். அவனுடைய குரல் ஏற்கெனவே மாற ஆரம்பித்துவிட்டது. நட்டாஷாவை பார்க்கும் வேளையில் எல்லாம் நிக்கலஸ் ஆச்சரியம் கொண்டு சிரித்துக்கொண்டிருப்பார்.

'நீ பழைய மாதிரி இல்லவே இல்லை' என்று அவர் சொன்னார்.

'எப்படி? நான் அழகில் குறைந்துவிட்டேனா?'

'அதுதான் இல்லை. எப்பேர்ப்பட்ட கம்பீரம்! ஒரு இளவரசி மாதிரியே இருக்கிறாய்' என்று மெல்லிய குரலில் அவர் கூறினார்.

'ஆம், ஆம், ஆம்' என்று மகிழ்ச்சியோடு நட்டாஷா கூச்சலிட்டாள்.

இளவரசர் ஆண்ட்ரூ தான் கொண்டுள்ள காதலைப்பற்றியும், ஆட்ராட்னோவுக்கு அவர் வந்திருந்ததைப்பற்றியும் அவள் சொல்லி, கடைசியாக அவரிடமிருந்து வந்திருந்த கடிதத்தைக் காட்டினாள்.

'நல்லது, உமக்கு சந்தோஷம்தானே?' என்று நட்டாஷா கேட்டாள்.

'நான் இப்பொழுது மிகுந்த அமைதியுடனும், மகிழ்ச்சியுடனும் இருக்கிறேன்.'

'ரொம்ப சந்தோஷம்' என்று நிக்கலஸ் பதிலளித்தார். 'அவர் மிகுந்த சிலாக்கியமான மனிதர்... நீ அவரிடம் ரொம்ப காதல் கொண்டிருக்கிறாயா?'

'நான் அதை எப்படித்தான் சொல்லுவது?' என்று நட்டாஷா பதில் அளித்தாள். 'நான் முதலில் போரிஸோடு காதல் கொண்டிருந்தேன். பின்னால் என்னுடைய வாத்தியாரோடும், டெனைசாவோடும் காதல் கொண்டிருந்தேன். ஆனால், இது முற்றிலும் மாறானது. இப்பொழுது நான் அமைதியோடும், கவலையில்லாமலும் இருக்கிறேன். அவரைவிட சிலாக்கியமான மற்றொரு மனிதர்

இல்லை என்பது எனக்குத் தெரியும். இப்பொழுது நான் அமைதியாகவும், திருப்தியாகவும் இருக்கிறேன். இம்மாதிரி முன்னால் நான் இருந்ததே இல்லை.'

கல்யாணத்தை ஒரு வருஷம் தள்ளிப் போட்டிருப்பதை தாம் விரும்பவில்லை என்று நிக்கலஸ் சொன்னார். இதைக் கேட்டதும் மிகுந்த எரிச்சலோடு தன்னுடைய சகோதரரிடம் நட்டாஷா பேசினாள். அதாவது, தந்தையின் விருப்பத்திற்கு விரோதமாக ஒரு குடும்பத்தில் போய் சேர்வது கெட்ட காரியமாய் இருக்கும் என்றும், அதைத் தான் விரும்பவில்லை என்றும், ஆகவே கல்யாணத்தை அம்மாதிரி ஒத்தி வைப்பதைத் தவிர வேறு வழி இல்லை என்றும் அவள் சொன்னாள்.

'உம்மால் புரிந்து கொள்ளவே முடியவில்லை' என்று அவள் சொன்னாள்.

நிக்கலஸ் அவள் சொல்லியதை ஒப்புக்கொண்டு மௌனமாய் இருந்தார்.

அவளை அவர் பார்த்த போதெல்லாம் அவர் ஆச்சரியப்படுவார். காதல் கொண்டுள்ள ஒரு குமரியைப் போலவோ, நிச்சயதார்த்தம் செய்த கணவரைவிட்டு பிரிந்திருப்பவள் போலவோ அவள் காணப்படவில்லை. அவள் சுமுகமான குணமும், அமைதியும் கொண்டிருந்தாள். ஆனால், முன்போலவே முற்றிலும் மகிழ்ச்சியோடு இருந்தாள். நிக்கலஸுக்கு இது ஆச்சரியத்தைக் கொடுத்தது. இதனால், பால்கோன்ஸ்கியுடன் அவளுக்குள்ள தொடர்பைப் பற்றி நம்பிக்கைக் குறைவும் கொள்ள ஆரம்பித்தார். இளவரசர் ஆண்ட்ரூவோடு அவளையும் சேர்த்துவைத்து அவர் பார்க்காததினால், அந்த திருமணப் பேச்சு ஒரு முடிவான விஷயம் என்பதை அவரால் நம்ப முடியவில்லை. அந்த திருமணத்தைப்பற்றி ஏதோ ஒன்று சரியாக இல்லாததைப்போல அவருக்கு எப்பொழுதும் தோன்றியது.

'எதற்காக இந்தத் தாமதம்? ஏன் இன்னும் நிச்சயதார்த்த சடங்கைச் செய்யவில்லை?' என்று அவர் நினைத்தார். இதைப்பற்றி ஒரு தடவை அவருடைய தாயாருடன் பேசிக்கொண்டிருந்தார். அவருடைய தாயாருக்கும் அவளுடைய உள்ளத்தன் ஆழத்தின், இந்த திருமணத்தைப்பற்றி ஏதோ சந்தேகங்கள் இருப்பது போல அவருக்குத் தெரிந்ததும் அவர் ஆச்சரியம் அடைந்தார்.

'அவர் எழுதுவதை இதோ பார்' என்று அவள் இளவரசர் ஆண்ட்ரூவிடமிருந்து வந்த கடிதத்தை தனது குமாரருக்குக் காட்டினாள். தனது குமாரியின் இல்லற வாழ்க்கையைப்பற்றி ஒரு

தாய்க்கு எப்பொழுதுமே இருக்கக்கூடிய மனக்குறையோடு அவள் பேசினாள். 'டிசம்பருக்கு முன்பாக அவர் வர முடியாது என்று எழுதுகிறார். அவர் அங்கே அதுவரை தங்க வேண்டியதற்கு காரணம் எதுவாய் இருக்கலாம்? உடம்பு அசௌக்கியம்தான் காரணமாய் இருக்கலாம்! அவருடைய ஆரோக்கியம் மிகுந்த துர்பலமாய் இருக்கிறது. இதை நீ நட்டாஷாவிடம் சொல்லாதே. அவள் மிகுந்த மகிழ்ச்சியோடு இப்பதைப்பற்றி நீ பிரமாதமாகவும் எதுவும் நினைக்க வேண்டாம். அவள் குமரிப் பருவத்தைக் கடந்து கொண்டிருப்பதால்தான் அம்மாதிரி மகிழ்ச்சியோடு இருக்கிறாள். அவரிடம் இருந்து கடிதம் வரும் ஒவ்வொரு தடவையும் அவள் எப்படி இருக்கிறாள் என்பது எனக்குத் தெரியும். எப்படி இருந்தாலும் ஒவ்வொன்றும் நல்லதாகவே முடியும்படி கடவுள் அருள் புரிவாராக. (அவள் எப்பொழுதும் இம்மாதிரி சொல்லித்தான் தனது உரையாடலை முடிப்பாள்.) அவர் ஒரு சிலாக்கியமான மனிதர்.'



**வீ**டு திரும்பிய பின்பு, முதலில் கவலையாகவும், மந்தமாகவும் நிக்கலஸ் இருந்தார். அவருடைய தாயார் அவர் வீடு திரும்ப வேண்டுமென்று எதற்காக அழைத்தாளோ, அந்த முட்டாள்தனமான குடும்ப விவகாரங்களில் ஈடுபட வேண்டிய அவசியத்திற்காக அவர் கவலை கொண்டு இருந்தார். இந்த பளுவை கூடிய சீக்கிரம் குறைப்பதற்காக, அவர் அங்கு வந்து சேர்ந்த மூன்றாவது நாளன்று அவர் கோபமாக வெளியே போனார். எங்கே போகிறார் என்று கேட்டதற்கு பதில் சொல்லாமல் கோபப் பார்வையோடு மைடெங்காவின் விடுதிக்கு போனார். அங்கே சென்று கணக்குகள் எல்லாவற்றையும் காட்டும்படி அவர் கேட்டார். மைடெங்கா பயந்து மனம் குழம்பினார். கணக்குகள் எல்லாவற்றையும் கேட்ட நிக்கலஸுக்கு அவற்றைப்பற்றி மைடெங்காவுக்கு தெரிந்த அளவுகூடத் தெரியாது. மைடெங்காவோடு அவர் கணக்குகளை பரிசோதித்து வேலை வெகு சீக்கிரமாக முடிந்துவிட்டது. கிராமத்தில் மூத்தவரான ஒரு விவசாயியும், கிராமத்தின் குமாஸ்தாவும் ஆளோடியில் அமர்ந்து காத்துக் கொண்டிருந்தார்கள். வாலிப கோமகனின் இரைச்சல் சப்தமும், நறநறவென்ற சப்தமும் வரவர அதிகமாகிக்கொண்டு போயின. அதன் பின்பு பயங்கரமான

வார்த்தைகளைக் கொண்ட வசவு ஒன்றன் பின் ஒன்றாக தொடர்ந்து வெளியிடப்பட்டன.

'திருடன்... நன்றி கெட்ட பாதகன்... அந்த நாயை நான் துண்டு துண்டாக வெட்டுவேன்! நான் என்னுடைய தகப்பனார் மாதிரி அல்ல... நம்மிடம் திருடிவிட்டான்...' என்று இம்மாதிரியாக திட்டினார். இவற்றைக் கேட்டு அந்த ஆளோடியில் இருந்தவர்கள் முதலில் பீதியும் மகிழ்ச்சியும் கொண்டார்கள்.

அதன் பின்னால், அந்த வாலிபக் கோமகன் முகம் சிவந்து, கண்களும் சிவந்து மைடெங்காவை பிடரியைப்பற்றி இழுத்துக் கொண்டு வந்தார். இவற்றையும் மகிழ்ச்சியோடும், பீதியோடும் அவர்கள் பார்த்து வந்தார்கள். மைடெங்காவை வெளியே இழுந்து வரும்போது, தமது பாதத்தை அவர் முதுகில் வைத்து உதைத்துக் கொண்டே வந்தார். அவர் தள்ளிக்கொண்டு வந்தபோது, 'ஓடிப் போய்விடு. ஏ அயோக்கியனே, உன் முகத்தில் நான் இனி விழிக்கக் கூடாது' என்று கூச்சலிட்டார்.

அவரிடமிருந்து தப்பிய மைடெங்கா கீழே இருந்த ஆறு படிகளையும் தலை தெறிக்கத் தாண்டி, பக்கத்தில் இருந்த புதர்களில் ஓடி மறைந்துகொண்டார். (ஆட்ராட்னோவில் உள்ள குற்றவாளி களுக்கெல்லாம் அந்தப் புதர்கள் தாம், எல்லாரும் அறிந்த ஒரு புகலிடமாய் விளங்கி வந்தது. நகரத்திலிருந்து குடிவெறியோடு மைடெங்கா திரும்புகிற காலங்களிலும் அந்த புதர்களில்தான் ஒளிந்து கொள்ளுவது வழக்கம். மைடெங்காவிடமிருந்து தப்ப விரும்பும் ஆட்ராட்னோ வாசிகளுக்கும் அந்தப் புதர்களே புகலிடமாய் இருந்தன.)

மைடெங்காவின் மனைவியும், மைத்துனிகளும் சாமோவார் என்ற தேநீர் பாத்திரம் கொதித்துக்கொண்டிருந்த அறையில் இருந்தார்கள். அங்கிருந்து பீதியுற்ற முகங்களோடு வாசல் வழியாக தலையை நீட்டினார்கள். அந்த அறையில்தான் அந்த மேனேஜரின் (மைடெங்கா) உயர்ந்த கட்டில் இருந்தது. அதன் மீது ஒரு ஒட்டுப் போட்ட மெத்தை விரிக்கப்பட்டிருந்தது.

அவர்களைப்பற்றி வாலிபக் கோமகன் கொஞ்சமும் சிரத்தை கொள்ளவில்லை. மேல் மூச்சு வாங்கிக்கொண்டு உறுதியான நடை நடந்து தமது வீட்டிற்குள் அவர் போனார்.

அந்த விடுதியில் என்ன நடந்தது என்பதை தனது வேலைக் காரர்கள் மூலம் கோமகள் அறிந்தாள். தங்களுடைய குடும்ப விவகாரங்கள் இதன் மூலம் நிச்சயமாக அபிவிருத்தி அடையும் [illegible] அவள் சாந்தம் அடைந்தாள். ஆனால்,

இந்த பரபரப்பினால் தனது மகனுக்கு என்ன நேருமோ என்று அவள் கவலை கொண்டாள். மெதுவாக அடியெடுத்து வைத்து, தனது குமாரர் இருந்த அறையின் கதவின் பக்கம் அவள் சென்று கவனித்து ஒட்டுக்கேட்டாள். உள்ளே, அவர் ஒன்றன் பின் ஒன்றாக சுங்கானைப் பற்றவைத்து குடித்துக்கொண்டிருந்தார்.

மறுநாள் வயோதிகக் கோமகன் தமது குமாரரை தனியாக அழைத்து ஒரு மனக்குழப்பமான புன்முறுவலோடு அவரிடம் சொன்னார்.

'எனது அன்புள்ள குமாரனே, நீ கோபம் அடைந்ததைக் கண்டு நான் வருந்துகிறேன் என்பது உனக்குத் தெரியும். அந்த விஷயத்தைப்பற்றி எல்லாவற்றையும் மைடெங்கா என்னிடம் சொன்னார்.'

'இந்த பைத்தியக்கார உலகத்தில் ஒரு விஷயத்தையும்கூட என்னால் அறிந்து கொள்ள முடியாது என்பது எனக்குத் தெரியும்' என்று நிக்கலஸ் நினைத்தார்.

'அந்த எழுநூறு ரூபிள்களை கணக்கில் பதியவில்லை என்பதற்காக நீ கோபம் கொண்டாய். ஆனால், அந்தத் தொகை பின் தொடர்ச்சியாக பதியப்பட்டிருக்கிறது. நீ அந்தப் பக்கத்தைப் பார்க்கவில்லை.'

'அப்பா, அவன் ஒரு அயோக்கியன்; ஒரு திருடன். அவன் அப்பேர்ப்பட்டவன் என்பது எனக்குத் தெரியும். நான் செய்தது செய்தாய் விட்டது. உமக்கு விருப்பமானால் நான் இனி அவனிடம் பேசமாட்டேன்.'

கோமகனும் மனக்குழப்பம் அடைந்தார். தமது மனைவியின் சொத்துக்கள் எவ்வளவு மோசமாக நிர்வாகம் செய்யப்பட்டன என்பது அவருக்குத் தெரியும். அந்தத் தவறுகளினால் அவருடைய குழந்தைகளுக்கு எவ்வளவு கஷ்டங்கள் ஏற்பட்டு விட்டன என்பதும் அவ்ருக்குத் தெரியும். ஆனால், அவற்றிற்கு எப்படி பரிகாரம் தேடுவது என்பது அவருக்குத் தெரியவில்லை. அவர் தமது குமாரரைப் பார்த்து, 'இல்லை, எனது அன்புள்ள குமாரனே, குடும்ப விவகாரங்களைப் பார்த்துக் கொள்ளும்படி நான் உன்னை கேட்டுக் கொள்ளுகிறேன். எனக்கு வயதாகி விட்டது. நான்...' என்றார்.

'இல்லை, அப்பா. உமக்கு மன வருத்தம் ஏற்படும்படி நான் நடந்து கொண்டிருந்தால், என்னை மன்னித்துவிடும். அந்த விஷயங்களெல்லாம் உமக்குத் தெரிந்ததைவிட எனக்குக் குறைவாகவே விளங்குகிறது.'

‘அந்த விவ்சாயிகளையும், பண விவகாரங்களையும், ஒரு பக்கத்திலிருந்து இன்னொரு பக்கத்திற்கு தொடர்ச்சியாக கணக்குகள் எழுதுவதையும் பிசாசு பிடிப்பதாக. சீட்டாட்டங்களில் பந்தயம் வைப்பது எப்படி என்பதும், ஒரு சீட்டின் மூலை என்பது என்ன என்பதுமே எனக்குத் தெரியும். ஆனால், ஒரு பக்கத்திலிருந்து இன்னொரு பக்கத்திற்கு கணக்கை தொடர்ச்சியாக கொண்டு போவது எப்படி என்பதை என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை’ என்று வாலிபக் கோமகன் நினைத்தார். அதன் பின்னால் குடும்ப விவகாரங்களில் அவர் தலையிடுவதே யில்லை. ஆனால், ஒரு நாள் தனது குமாரரை கோமகள் அழைத்து இரண்டாயிரம் ரூபிள்களுக்கு அன்னா மிக்காய்லாவ்னா எழுதிக் கொடுத்த பிராமிஸரி நோட் தன்னிடம் இருப்பதாகக் கூறினாள். அதை என்ன செய்ய வேண்டும் என்று அவரிடம் கேட்டாள்.

‘இது என்னுடைய அபிப்பிராயத்தை பொறுத்திருக்கிறது என்று நீ சொல்லுகிறாய். நல்லது. அன்னா மிக்காய்லாவ்னாவை எனக்குப் பிடிக்கவில்லை. போரிஸையும் எனக்குப் பிடிக்க வில்லை. ஆனால், அவர்கள் முன்னால் நமது நண்பர்களாகவும், ஏழைகளாகவும் இருந்தார்கள். நல்லது. அப்படியானால், இப்படித்தான் செய்ய வேண்டும்’ என்று சொல்லி, அந்த பிராமிஸரி நோட்டை கிழித்துப் போட்டார். அதைக் கண்டு வயோதிகக் கோமகள் மகிழ்ச்சிக் கண்ணீர் பெருக்கினாள். அதன் பின்பு குடும்ப விவகாரங்களில் ராஸ்டோவ் தலையிட்டுக் கொள்ளவில்லை. அவருக்குப் புதிதான ஒரு வேலையாகிய வேட்டையாடும் தொழிலில் ஆர்வம் கொண்ட உற்சாகத்தோடு இறங்கினார். அந்த வேட்டையாடும் நேரப் போக்கிற்கு அவருடைய தந்தை ஏராளமான சிப்பந்திகளை வைத்திருந்தார்.




காலநிலை ஏற்கெனவே குளிர் காலமாக மாறிக்கொண்டிருந்தது. இலையுதிர் காலத்து மழையினால் நனைந்து போயிருந்த பூமி மீது காலை உறைபனி பரவி நின்றது. புல் பூண்டுகள் அடர்த்தியாகவும், நல்ல பச்சை நிறத்தோடும் காணப்பட்டன. கால்நடைகளால் மிதித்து துவைக்கப்பட்ட புல் பூண்டு வரிசைகளின் இடைவெளி வழியாக பின்னால் நின்ற குளிர் கால ரை தானியப் பயிர்கள் தோன்றின. இளவேனில் காலத்து அரிதாள்களும் கால்நடைகளுக்கு

உபயோகிக்கப்படும் பக்வீட் தானியக் கதிர்களும் காட்சி அளித்தன. மரங்கள் நிறைந்த பள்ளத்தாக்குகளும், புதர்களும் ஆகஸ்டு மாத கடைசி வரையில் கருப்பு வயல்களுக்கும் அரிதாள்களுக்கும் மத்தியில் பச்சை நிறத் தீவுகள் மாதிரி தோன்றி வந்தன. அவையெல்லாம் இப்பொழுது குளிர்கால பச்சை நிற ரை தானிய பயிர்களுக்கிடையே, தங்கம் போலவும் பிரகாசமுள்ள சிவப்பு வர்ணமாகவும் தோன்ற ஆரம்பித்து விட்டன. முயல்களின் வசந்த கால உடல் நிறம் இப்பொழுது பாதிக்கு மேலாக மாறிவிட்டன. நரிக்குட்டிகள் வளைகளைவிட்டு பல இடங்களுக்கு சிதறிப் போக ஆரம்பித்துவிட்டன. ஓநாய்களின் குட்டிகள் நாய்களுக்கு மேலாக கனத்துப் பருத்து இருந்தன வேட்டையாடுவதற்கு இதுதான் சிறந்த காலம். ஆர்வமுள்ள அந்த வாலிப வேட்டைக்காரரான ராஸ்டோவின் வேட்டை நாய்கள் குளிர் கால நிலைமைக்கு பொருத்தமாக தயார் ஆகிவிட்டன. என்றாலும், அதிகமான வேட்டைகளில் கலந்து கொண்டபடியால் அவையெல்லாம் அலுத்துக் களைத்துப் போயிருந்தன. ஆகவே, அவைகளுக்கு மூன்று நாள் ஓய்வு கொடுக்க வேண்டுமென்று வேட்டைக்காரர்களின் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது. அதன் பின்னால் செப்டம்பர் 16-ந்தேதி யன்று ஓக்கு மரத்தோப்பிலிருந்து ஒரு நீண்ட தூர வேட்டையை ஆரம்பிக்க வேண்டுமென்று அவர்கள் தீர்மானித்தார்கள். அங்கேதான் இன்னும் வேட்டையாடப் படாத ஓநாய் குட்டிகள் இருந்தன.

அன்று பூராவாக வேட்டை நாய்கள் வீட்டுக்குள்ளேயே தங்கின. அன்று உறைபனி பெய்து வந்தது. கால நிலை ரொம்ப குளிராய் இருந்தது. ஆனால், மாலையில் கால நிலை மாறி பனி உருக ஆரம்பித்தது. 15-ந் தேதியன்று உடுப்பு - கவுன் தரித்திருந்த வாலிப ராஸ்டோவ் ஜன்னல் வழியாக வெளியே பார்த்தார். வேட்டை யாடுவதற்கு அம்மாதிரியான ஒரு சிறந்த காலை நேரம் அவருக்குக் கிடைக்கப்போவதில்லை என்று தோன்றியது. கண்ணுக்குத் தெரியாத பனித் துளிகள் வானத்திலிருந்து விழுந்து வந்ததைத் தவிர வேறு எந்த விதமான அசைவுகளும் காற்றில் இல்லை. தோட்டத்திலுள்ள மரங்களின் விழுதுகளில் அப்பனித் துளிகள் விழுந்து, அதன் பின்னால் அவை கீழே கிடந்த இலைகள் மீது நழுவி விழுந்தன. காய்கறித் தோட்டத்தின் மண் ஈரமாகவும், கருப்பாகவும், கசகசா மாதிரி மின்னிக்கொண்டும் இருந்தது. என்றாலும் சிறிது தூரத்திற்கு அப்பால் உறைபனியில் மறைந்து காணப்பட்டது. ஈரமாகவும், சேறாகவும் இருந்த மண்டப முற்றத்திற்கு ராஸ்டோவ் வந்தார். அழுகிப்போன இலைகளின் வாசனையும், நாய்

கிடைகளில் இருந்து வந்த வாசனையும் அங்கே வீசிக் கொண்டிருந்தன. கருப்புப் புள்ளிகளும், பெரிய கருப்புக் கண்களும், பருத்த இடுப்பும் கொண்ட மில்கா என்ற நாய் எஜமானரைப் பார்த்ததும் எழுந்து பின்னங் கால்களை நீட்டி ஒரு முயலைப் போல கீழே படுத்து, திடீரென்று குதித்தெழுந்து அவருடைய கையும், மீசையையும் நக்கியது. தோட்டத்தின் பாதையிலிருந்து எஜமானரைப் பார்த்த மற்றொரு நாய், முதுகை வளைத்து வாலை உயர்த்தி தலை தெறிக்க மண்டப முற்றத்தை நோக்கி ஓடி வந்தது. அங்கே வந்ததும் அவருடைய கால்களில் அது உராய்ந்து கொண்டிருந்தது.

'ஒஹாய்' என்று வேட்டைக்காரனின் ஒப்பற்ற குரல் அந்த வினாடியில் கேட்டது. அந்தக் குரல் ஆழ்ந்து கூர்மையானதாய் இருந்தது. வேட்டைக்காரர்களுக்குத் தலைவனாகவும், நாய் கிடைக்காரர்களுக்குத் தலைவனாகவும் இருந்த டேனியல் என்பவன் வீட்டிற்கு பக்கத்திலிருந்து வந்து கொண்டிருந்தான். சாம்பல் வர்ணமுள்ள சுருக்கங்கள் விழுந்த வயோதிகனாக அவன் காணப்பட்டான். அவனுடைய தலைமுடி குட்டையாக உக்ரேனியன் மோஸ்தரில் வெட்டி விடப்பட்டிருந்தது. அவன் கையில் ஒரு நீண்ட வளைந்த சவுக்கு இருந்தது. வேட்டைக் காரர்களிடம் மட்டுமே காணப்படும் சுதந்திரமான, எதைப்பற்றியும் இகழ்ச்சியான தோற்றங்கள் அவன் முகத்தில் காணப்பட்டன. எஜமானரைப் பார்த்ததும் தன்னுடைய சர்க்கேசியன் தொப்பியை மரியாதைக்காக அகற்றினான். ஆனால், அவன் முகத்தில் தோன்றியிருந்த அதே இகழ்ச்சியோடு எஜமானரைப் பார்த்தான். ஆனால், இந்த இகழ்ச்சியைக் கண்டு எஜமானர் வருத்தம் கொள்ள வில்லை. இந்த டேனியல், ஒவ்வொருவர் மீதும் வெறுப்பு கொண்டிருந்த போதிலும், எல்லாருக்கும் மேலாக தன்னைப்பற்றி நினைத்துக் கொண்டிருந்த போதிலும், எப்படியானாலும் அவன் தம்முடைய அடிமையாகவும், வேட்டைக்காரனாகவும் இருப்பதை நிக்கலஸ் அறிவார்.

'டேனியல்' என்று பீதியோடு நிக்கலஸ் அழைத்தார். ஒரு காதலன் தன்னுடைய காதலியின் முன்பு எல்லாவற்றையும் மறந்து விடுவான். அதே மாதிரி ஒரு வேட்டைக்காரன் அந்தக் கால நிலையையும் வேட்டை நாய்களையும், வேட்டைக்காரர்களையும் பார்த்தவுடன், தன்னுடைய பழைய தீர்மானங்களையெல்லாம் மறந்துவிடுவான். அம்மாதிரியே தாமும் எல்லாவற்றையும் மறந்து அந்த வேட்டையின் மீதுள்ள தடுக்க முடியாத ஆசையால், தாம் இழுத்துச் செல்லப்படுவதாக அவர் உணர்ந்தார்.

'மேன்மை தங்கியவரே, என்ன உத்தரவு கொடுக்கிறீர்கள்?' என்று தாழ்ந்த, ஆழ்ந்த குரலில், அந்த வேட்டைக்காரத் தலைவன் கேட்டான். அவன் குரலில் பாதிரியின் குரலைப் போன்ற ஆழ்ந்த தொனியும், வேட்டையில் சப்தம் போட்டுப் பழகிய கறகறப்பான தொனியும் கலந்திருந்தன. ஒளி வீசிய இரண்டு கருப்புக் கண்கள் அவனுடைய எஜமானரைப் பார்த்துக்கொண்டிருந்தன. அவர் மௌனமாய் இருந்தார். 'இந்த ஆசையை தவிர்க்க முடியுமா?' என்று அந்தக் கண்கள் கேட்பதைப் போலத் தோன்றின.

'இன்று ஒரு நல்ல தினம் அல்லவா? வேட்டைக்கும் குதிரை சவாரிக்கும் ஏற்ற தினமல்லவா?' என்று மில்காவின் காதுகளுக்குப் பின்னால் சொறிந்துகொண்டே நிக்கலஸ் கேட்டார்.

டேனியல் பதில் சொல்லவில்லை. ஆனால், கண்களைச் சிமிட்டினான்.

'இன்று அதிகாலையில் கவனித்து வரும்படி உவார்க்காவை நான் அனுப்பினேன்' என்று அவனுடைய தாழ்ந்த குரல் ஒரு நிமிஷத்திற்குப் பின்னால் வெளியே வந்தது. 'ஆட்ராட்னோ விலுள்ள ஒரு தோட்டத்திற்கு அது கொண்டு போய்விட்டது என்று அவன் சொன்னான். அங்கே அவைகள் ஊளையிட்டுக்கொண்டிருக் கின்றன.' ('அது' என்று குறிப்பிடப்படுவது பெண் ஓநாய் என்பதை அவர்கள் இருவரும் அறிவார்கள். அந்தப் பெண் ஓநாய் தனது குட்டிகளை 2 வெர்ஸ்ட்டுகள் தூரத்திலுள்ள தோட்டத்தில் கொண்டு போய் வைத்திருக்கிறது.)

'நாம் போகவேண்டும். நீயும் அப்படித்தானே நினைக்கிறாய்?' உவாக்காவை அழைத்து வா' என்று நிக்கலஸ் சொன்னார்.

'உங்கள் இஷ்டம் போல.'

'அப்படியானால் தீனி போடுவதை நிறுத்திவிடு'

'நல்லது, ஐயா'

ஐந்து நிமிஷங்கள் கழித்து டேனியலும் உவாக்காவும் நிக்கலஸூம் பெரிய படிப்பு அறையில் நின்று கொண்டிருந்தார்கள். டேனியல் பருமனாய் இல்லாவிட்டாலும் ஒரு அறையில் அவனைப் பார்க்கும்போது, மேஜை நாற்காலிகளுக்கு மத்தியில் ஒரு குதிரையோ அல்லது ஒரு கரடியோ நின்று கொண்டிருப்பது போல அவன் தோன்றுவான். டேனியலுக்கும் இது தெரியும். வழக்கம் போல கதவுக்குப் பக்கத்தில் அவன் நின்று மெதுவாகப் பேசுவதற்கு முயற்சி செய்தான். தன்னுடைய எஜமானரின் அறையில் எதையாவது உடைத்து விடுவானோ என்ற பயத்தினால்

அசையாமல் நின்றான். மேல் தளம் உள்ள அறையைவிட்டு வெளியே வானத்திற்கு அடியில் உள்ள வெட்ட வெளிக்கு மீண்டும் ஓடி வருவதற்காக, அவசியமாக எதைச் சொல்ல வேண்டுமோ அதையெல்லாம் வேகமாய் சொல்லி முடித்தான்.

தாம் கேட்க வேண்டியவைகளைக் கேட்டு முடித்தார். வேட்டை நாய்களெல்லாம் வேட்டைக்குத் தகுதியானவையாக இருக்கின்றனவா என்பதையும் டேனியலிடம் இருந்து கேட்டு அறிந்து கொண்டார். (தனக்கும் வேட்டைக்குப் போக வேண்டியதுதான் என்பது டேனியலின் ஆசை) இவற்றை விசாரித்து அறிந்து கொண்ட பின்பு, குதிரைகளுக்கு சேணம் போடும்படி நிக்கலஸ் உத்தரவிட்டார். ஆனால், டேனியல் அதைவிட்டு வெளியேறப் போகும் சமயத்தில் நட்டாஷா வேகமாக உள்ளே வந்தாள். தலை அலங்காரத்தையோ, உடை அலங்காரத்தையோ முடிக்காமல், தன்னுடைய வயோதிகத் தாதியின் பெரிய சால்வையை தன்னைச் சுற்றி போர்த்திக் கொண்டு வந்தாள். அதே சமயத்தில் பெட்டியாவும் உள்ளே ஓடி வந்தான்.

'நீர் போகிறீரா? நீர் போவீர் என்பது எனக்குத் தெரியும். நீர் போகமாட்டீர் என்று சோனியா சொன்னாள். ஆனால், இன்றைய கால நிலை மாதிரியுள்ள ஒரு நாளில் நீர் போகாமல் இருக்க மாட்டீர் என்பது எனக்குத் தெரியும்' என்றாள் நட்டாஷா.

'ஆமாம், நாங்கள் போகிறோம்' என்று நிக்கலஸ் தயக்கத்தோடு கூறினார். அன்று பலமாக வேட்டையாட வேண்டுமென்று அவர் விரும்பியபடியால் நட்டாஷாவையும், பெட்டியாவையும் அழைத்துக்கொண்டு போக அவர் விரும்பவில்லை. 'நாங்கள் போகிறோம். ஆனால், ஓநாய் வேட்டைக்காக மட்டும் போகிறோம். அதில் உங்களுக்கு உற்சாகம் இருக்காது.'

'அதுதான் எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை கொடுப்பது. இது நியாயமல்ல. குதிரைகளுக்கு சேணமிட்டு, நீர் மட்டும் போகிறீர். எங்களிடம் இதுபற்றி எதையும் சொல்லவில்லை.'

'ஒரு ருஷ்யனின் பாதையில் தடை எதுவும் இருக்க முடியாது. நாம் போவாம்' என்று பெட்டியா கூச்சலிட்டான்.

'ஆனால், உங்களால் வர முடியாது. நீங்கள் வரக்கூடாது என்று அம்மா சொன்னாள்' என்று நட்டாஷாவிடம் நிக்கலஸ் கூறினார்.

'ஆம், நான் போகத்தான் போகிறேன். நான் கட்டாயம் போவேன்' என்று நட்டாஷா உறுதியாகப் பேசினாள். 'எங்கள் குதிரைகளுக்கு சேணம் போடும்படி, டேனியலே, நீர் சொல்லிவிடும். என்னுடைய

நாய்களோடு மைக்கேலும் வரவேண்டும்' என்று அந்த வேட்டைக் காரனைப் பார்த்து அவள் சொன்னாள்.

ஒரு அறைக்குள் இருப்பதே எரிச்சலாகவும், நியாயமற்றதாகவும் டேனியலுக்குத் தோன்றியது. அதோடு ஒரு வாலிப சீமாட்டியோடு பேச்சு வைத்துக்கொள்ளுவது என்பது அவனால் முடியாத காரியமாய் இருந்தது. தனது பார்வையை கீழே நோக்கிக் கொண்டு, அவள் பேசுவதில் தனக்கு எதுவும் சம்பந்தம் இல்லாதது போல வேகமாகவும், அந்த வாலிப சீமாட்டியை ஏதாவது புண்படுத்தி விடக்கூடாதே என்று ஜாக்கிரதையாகவும் அவன் அறையைவிட்டு வெளியேறினான்.



**வ**யோதிகக் கோமகன் வேட்டையாடுவதற்காக ஏராளமான சிப்பந்திகளை வைத்திருந்தார். அவர்களையெல்லாம் மேற்பார்க்கும் பொறுப்பை தமது குமாரரிடம் ஒப்புவித்துவிட்டார். செப்டம்பர் 15-ந்தேதியன்று மற்றவர்களோடு சேர்ந்து வேட்டையாடப்போவதற்கு மிகுந்த ஆர்வத்தோடு அவர் தயாராய் இருந்தார்.

ஒரு மணி நேரத்தில் வேட்டையாடும் கோஷ்டி பூராவாக மண்டப முற்றத்தில் வந்து கூடினார்கள். நிக்கலஸ் கடுமையான தோற்றத் தோடு காணப்பட்டார். சிறிய விஷயங்களை கவனிப்பதற்கு இப்பொழுது நேரம் இல்லாதது போல அவருடைய தோற்றம் காணப்பட்டது. நட்டாஷாவையும், பெட்டியாவையும் கடந்து அவர் சென்றார். அவர்கள் இவரிடம் ஏதோ சொல்ல முயற்சித்துக் கொண்டிருந்தார்கள். வேட்டைக்கு வேண்டியவை எல்லாம் தயாராய் இருக்கின்றனவா என்பதை அவர் பார்த்துவிட்டு, வேட்டை மிருகங்கள் எங்கே இருக்கின்றன என்பதைக் கண்டு பிடிப்பதற்காக, சில வேட்டை நாய்களையும், சில வேட்டைக் காரர்களையும் முன்னதாக அனுப்பி வைத்தார். தம்முடைய பழுப்பு நிறக் குதிரையான டோனெட்ஸ் மீது அமர்ந்து, தமது நாய்களை சீட்டி அடித்து அழைத்துக்கொண்டு களத்து நிலம் வழியாக ஆட்ராட்னோ காட்டிற்குப் பக்கத்திலுள்ள ஒரு வயலை நோக்கிப் போனார். வயோதிகக் கோமகனின் செம்பழுப்பு நிறம் கொண்ட காயடித்த குதிரையான விப்ளியாங்காவை குதிரைக்காரன் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு அழைத்துக்கொண்டு போவதென்றும், அந்த இடத்திற்கு வயோதிகக் கோமகன் ஒரு வண்டியில் போவதென்றும் ஏற்பாடாய் இருந்தது.

அவர்கள் தங்களோடு ஐம்பத்து நான்கு வேட்டை நாய்களையும், ஆறு வேட்டைக்காரர்களையும் அழைத்துச் சென்றார்கள். கோமகனின் குடும்பத்தைச் சேர்ந்தவர்களைத் தவிர, பார்ஜாய் என்ற சாம்பல் வர்ண வேட்டை நாய்களை மேல்பார்க்கின்ற எட்டு பேர்களும், நாற்பதுக்கு அதிகமான பார்ஜாய் வேட்டை நாய்களும் அந்த வேட்டைக்குப் போனார்கள். கோமகனின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஒவ்வொருவருக்கும் சொந்தமான சங்கிலியில் பிணைக்கப்பட்ட பார்ஜாய்களையும் அழைத்துச் சென்றார்கள். எல்லாவற்றையும் சேர்த்தால் மொத்தம் நூற்று முப்பது நாய்களும், குதிரைகள் மீது சவாரி செய்பவர்கள் இருபது பேரும் இருந்தார்கள்.

ஒவ்வொரு நாய்க்கும் தனது எஜமானைத் தெரியும். யாருக்கு கீழ்ப்படிவது என்பதும் தெரியும். வேட்டையில் கலந்திருந்த ஒவ்வொருவருக்கும் தாம் எந்த இடத்தில் நிற்கவேண்டும், தாம் என்ன செய்யவேண்டும், தமது வேலை என்ன என்பது தெரியும். வேலியை அவர்கள் கடந்த பின்பு, சப்தம் போடாமல் ஒரு பேச்சும் பேசாமல் சமமாய் பரந்து போனார்கள். ஆட்ராட்னோ காட்டை நோக்கி ரஸ்தா வழியாகச் சென்று வயலில் இறங்கினார்கள்.

கனத்த கம்பளத்தின் மீது நடப்பது போல அந்த புல் தரை மீது குதிரைகள் நடந்து சென்றன. ஒரு ரஸ்தாவைக் கடந்தபோது, அங்கிருந்த சகதியில் குதிரைகளின் குளம்புகள் பட்டவுடன் சேறும் தண்ணீருமாகத் தெறித்து விழுந்தன. மூடுபனி இன்னமும் பூமியை நோக்கி ஒழுங்காக தெளிவு இல்லாமல் விழுந்துகொண்டிருப்பதாகத் தோன்றியது. காற்று அசையவில்லை; உஷ்ணமாகவும், மௌனமாகவும் இருந்தது. இடையிடையே வேட்டைக்காரனின் சீட்டியும், குதிரையின் கனைப்பும், சாட்டையின் நொடிப்பும், நாயின் ஊளையும் கேட்டுக்கொண்டிருந்தன.

ஒரு வெர்ஸ்ட் தூரம் அளவு போன பின்பு, இன்னும் ஐந்து குதிரை சவாரிக்காரர்கள், நாய்களோடு மூடுபனியில் இருந்து வெளிப்பட்டு, ராஸ்டோவ்களை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய முன்னணியில் ஒரு உற்சாகம் மிகுந்த, பெரிய சாம்பல் நிற மீசை கொண்ட, பார்வைக்கு அழகான ஒரு வயோதிகர் சவாரி செய்து வந்தார்.

'வணக்கம், மாமா' என்று அந்த வயோதிகர் நெருங்கியதும் நிக்கலஸ் கூறினார்.

'ரொம்ப சரி, வாருங்கள் போகலாம்... அதைப்பற்றி எனக்கு சந்தேகமில்லை' என்று அந்த மாமா சொன்னார். (அவர் ராஸ்டோவ்களின் தூரபந்து; சொற்பமான வருவாய் உள்ளவர்.

அவர்கள் வீட்டிற்குப் பக்கத்தில் வசிப்பவர்.) 'உன்னால் வராமல் இருக்க முடியாது என்பது எனக்குத் தெரியும். 'நீ புறப்பட்டுப் போவது ரொம்ப நல்லது. ரொம்ப சரி, வாருங்கள் போகலாம். (இம் மாதிரி மாமா பேசுவது அவருடைய சபாவம்) சீக்கிரமாக காட்டை சூழ்ந்து கொள்ளுங்கள். இலாகின்ஸ் கூட்டத்தார் கார்னீக்கை என்ற இடத்தில் தங்களுடைய வேட்டை நாய்களோடு இருப்பதாக என்னுடைய கைர்சிக் என்பவன் சொல்லுகிறான். ரொம்ப சரி, வாருங்கள் போகலாம்... நமக்கு முன்பாக ஓநாய்க்குட்டிகளை அவர்கள் எடுத்துக்கொண்டு போய்விடக்கூடாது.'

'அங்கேதான் நானும் போகிறேன். நமது வேட்டை நாய்களை ஒன்றுசேர்த்துக் கொள்ளுவோமா?' என்று நிக்கலஸ் கேட்டார்.

எல்லா வேட்டை நாய்களும் ஒரே கூட்டமாகச் சேர்க்கப் பட்டன. மாமாவும் நிக்கலஸூம் ஒருவர் பக்கத்தில் 'ஒருவராக சவாரி போய்க்கொண்டிருந்தார்கள். நட்டாஷா சால்வைகளால் போர்த்திக்கொண்டிருந்த போதிலும், அவளுடைய ஆவலான முகத்தையும், ஜொலிக்கும் கண்களையும் மறைக்க முடியவில்லை. அவள் வேகமாக அவர்களை நோக்கி சவாரி வந்து கொண்டிருந்தாள். அவளுக்குப் பின்னால், அவளுடன் எப்பொழுதும் தொடர்ந்து வரும் பெட்டியா வந்து கொண்டிருந்தான். மைக்கேல் என்ற வேட்டைக்காரனும், அவளைக் கவனித்துக்கொள்ளுவதற்காக ஒரு குதிரைக்காரனும் வந்து கொண்டிருந்தார்கள். பெட்டியா சிரித்துக்கொண்டு, குதிரையை சவுக்கினால் அடித்து, லகானை இழுத்துக்கொண்டிருந்தான். அராப்சிக் என்ற தன்னுடைய கருப்புக் குதிரை மீது நம்பிக்கையோடும், சிரமமில்லாமலும் நட்டாஷா அமர்ந்து, கஷ்டமில்லாமல் உறுதி கொண்ட கையோடு லகானைப் பற்றி வந்தாள்.

பெட்டியாவையும், நட்டாஷாவையும் அதிருப்தியோடு மாமா திரும்பிப் பார்த்தார். வேட்டையாடுவது என்ற முக்கியமான வேலையோடு தமாஷ் வேலைகளைக் கலந்து கொள்ளுவது அவருக்குப் பிடிக்காது.

'வணக்கம், மாமா. நாங்களும் வருகிறோம்' என்று பெட்டியா சொன்னான்.

'வணக்கம், வணக்கம். ஆனால், வேட்டை நாய்களுக்கு முன்பாக உன்னுடைய குதிரையை விட வேண்டாம்' என்று கடுமையாக மாமா சொன்னார்.

'நிக்கலஸ், இந்த ட்ரூநிலா எவ்வளவு சிறந்த நாய் தெரியுமா? அதற்கு என்னை அடையாளம் கண்டு கொள்ளத் தெரியும்' என்று

நட்டாஷா தனக்குச் செல்லமான வேட்டை நாயைப்பற்றிக் கூறினாள்.

'முதலாவதாக ட்ரூநிலா என்பது ஒரு வெறும் நாய் அல்ல. அது ஒரு முயல் வேட்டை நாயாகும்'. என்று நிக்கலஸ் நினைத்து தமது சகோதரியை கடுமையாகப் பார்த்தார். தம்மைவிட்டு அவள் வெகு தூரம் விலகி நிற்கவேண்டும் என்று சொல்லுவதைப் போல அந்தப் பார்வை இருந்தது. நட்டாஷா அதைப் புரிந்து கொண்டாள்.

'யாருக்கும் இடையூறாக நாங்கள் நிற்போம் என்ற நீர் நினைக்கக்கூடாது, மாமா. நாங்கள் எங்களுக்காக ஒதுக்கப்பட்ட இடத்திற்குப் போய் அங்கேயே அசையாமல் இருப்போம்' என்று நட்டாஷா சொன்னாள்.

'அது ரொம்ப நல்ல விஷயம், குஞ்சுக் கோமகளே. ஒரே ஒரு விஷயம். நீ குதிரையில் இருந்து மட்டும் விழுந்துவிடாதே. ஏனெனில் உனக்கு உதவி செய்ய இங்கே யாரும் இருக்கமாட்டார்கள்-ரொம்ப சரி, வாருங்கள் போகலாம்' என்றார் மாமா.

சுமார் இருநூறு கெஜ தூரத்தில் 'ஆட்ராட்னோவின் அடர்ந்த காடு காணப்பட்டது. வேட்டைக்காரர்கள் ஏற்கெனவே அதை நெருங்கிவிட்டார்கள். நட்டாஷா எங்கே நிற்கவேண்டும் என்று ஒரு இடத்தை ராஸ்டோவ் சுட்டிக்காட்டினால். அது ஒரு ஆபத்தில்லாத இடமாய் இருந்தது. வேட்டை நாய்களை எப்பக்கத்திலிருந்து வேட்டையாட விட வேண்டும் என்பதைப்பற்றி ராஸ்டோவும் மாமாவும் தீர்மானம் செய்த பின்பு, அங்கிருந்த ஒரு பள்ளத்தாக்கை சுற்றி அதற்கு மேலாக ராஸ்டோவ் போனார்.

'நல்லது, மருமகனே. பெரிய ஓநாயை வேட்டையாடுவதற்காக நீர் போகிறீர். ஆகவே, அது நழுவிப் போய்விடாமல் ஜாக்கிரதையாய் இரும்' என்று மாமா சொன்னார்.

'என்ன நடக்கிறதோ பார்க்கலாம்' என்று ராஸ்டோவ் கூறிவிட்டு, மாமாவுக்கு பதில் சொல்லுகிற முறையில் தமது பார்ஜாய் நாயை, 'காரே, இங்கே வா' என்று கூச்சலிட்டார். காரே என்பது அடர்த்தியாக ரோமம் வளர்ந்த, கன்னங்கள் தொங்கிய ஒரு வயோதிக நாய். வேறு உதவி இல்லாமல் பெரிய ஓநாயை வேட்டையாடுவதில் பிரசித்திபெற்றது. அவர்கள் எல்லாரும் தங்கள் தங்கள் இடங்களில் நின்று கொண்டார்கள்.

தமது குமாரருக்கு வேட்டையில் உள்ள ஆர்வத்தை வயோதிகக் கோமகன் அறிவார். ஆகவே, தாம் தாமதமாய் விடக் கூடாதே என்று வேகமாய் வந்தார். வேட்டைக்காரர்கள் தங்கள் இடங்களில் வந்து

சேருவதற்கு முன்பாகவே, கோமகன் இலியா ராஸ்டோவ் மகிழ்ச்சியுடனும், முகம் சிவந்தும், துடிக்கும் கன்னங்களுடனும், குளிர்கால ரை தானிய வயல்களின் பக்கமாக, தமக்காக ஒதுக்கப்பட்டிருந்த இடத்திற்கு கருப்புக் குதிரை வண்டியில் வந்து சேர்ந்தார். அவர் நின்றிருந்த இடம் ஓநாய் வெளியே வருவதற்கான இடங்களில் ஒன்றாகும். தமது கோட்டை இழுத்து விட்டுக்கொண்டு, தமது அழகான, நன்றாய் போஷிக்கப்பட்ட குதிரையான விப்ளியாங்கா மீது ஏறி அமர்ந்தார். அவரைப் போலவே அந்தக் குதிரையும் சாம்பல் வர்ண நிறத்திற்கு மாறிக்கொண்டிருந்தது. தமது வண்டியையும், குதிரைகளையும் வீட்டிற்கு அனுப்பி வைத்தார். வேட்டையாடுவதில் கோமகன் இலியா ராஸ்டோவுக்கு தீவிரமான சிரத்தை இல்லாவிட்டாலும், வேட்டையின் விதிகளை எல்லாம் நன்றாய் அறிவார். அந்தக் காட்டின் அடர்ந்த ஓரமாகிய அவர் நிற்கவேண்டிய இடத்திற்கு சவாரி போனார். சேணத்தில் சௌக்கியமாய் அமர்ந்து கடிவாள வார்களை ஒழுங்காய் அமைத்து, தாம் தயாரானவுடன் புன்னகையோடு சுற்றிலும் பார்த்தார்.

அவருக்குப் பக்கத்தில் அவருடைய சொந்த சேவகனான சைமன் செக்மார் என்பவன் குதிரை மீது அமர்ந்திருந்தான். அவன் ஒரு பழைய சவாரிக்காரனாய் இருந்தாலும், இப்பொழுது சேணத்தில் நிமிர்ந்தாற்போல் இருந்தான். யாரும் எதிர்க்க முடியாத மூன்று ஓநாய் - வேட்டை நாய்களை சங்கிலிகளில் மாட்டி செக்மார் கையில் பிடித்துக்கொண்டிருந்தான். அவை தங்கள் எஜமானரைப் போலவும், அவருடைய குதிரைபோலவும் பெருத்து வளர்ந் திருந்தன. அறிவுள்ள இரண்டு வயோதிக நாய்கள், சங்கிலிகள் இல்லாமல் கீழே படுத்துக்கொண்டிருந்தன. அந்தக் காட்டின் ஓரமாக சில நூறு அடிகளுக்கு அப்பால், கோமகனின் மற்றொரு குதிரைக் காரனான மைட்கா நின்று கொண்டிருந்தான். அவன் கடுமையா கவும், துணிச்சலாகவும் வேட்டையாடக் கூடியவன். பழைய சம்பிரதாயப்படி வேட்டையை ஆரம்பிப்பதற்கு முன்னால் காரமான பிராந்தியை ஒரு வெள்ளிக் கோப்பை நிறைய கோமகன் குடித்தார். அதன் பின்னால் கொஞ்சம் சிற்றுண்டி சாப்பிட்டு, அவருக்குப் பிரியமான பார்டோ ஒயினில் பாதி புட்டியை விழுங்கினார்.

ஒயின் குடித்ததாலும், வண்டியில் வந்ததாலும் அவர் முகம் சிவந்து காணப்பட்டது. வழக்கத்திற்கு அதிகமாக அவருடைய கண்கள் ஈரமாகவும், மின்னிக்கொண்டும் இருந்தன. ரோமக் கோட்டினால் தம்மை மூடிக்கொண்டு அவர் சேணத்தில் அமர்ந்திருந்தது வெளியே அழைத்துக்கொண்டு போகப்படும் ஒரு

குழந்தையை எப்படி மூடியிருப்பார்களோ, அம்மாதிரி காணப்பட்டார்.

ஒல்லியாகவும், குழி விழுந்த கன்னங்களுடனும் காணப்பட்ட செக்மார் தனது வேலைகளை எல்லாம் முடித்து தயாரான பின்பு, அடிக்கடி தமது எஜமானரைப் பார்த்துக்கொண்டே இருந்தான். சிறந்த சுமுகமான நிலைமையில் அவன் அவரிடம் முப்பது வருஷங்களாக வேலை பார்த்து வருகிறான். அவருடைய தற்சமய மனப்போக்கு எப்படி இருக்கிறது என்பதை அறிந்து கொண்ட அவன், அவரிடம் இருந்து ஒரு இனிமையான உரையாடலை எதிர் பார்த்தான். ஒரு மூன்றாவது மனிதன் காட்டு வழியாக ஜாக்கிரதையோடு சவாரி செய்து இவர்களிடம் வந்தான். அவன் முன்னால் ஒரு தடவை நல்ல பாடம் கற்றுக்கொண்டிருக்கிறான் என்பது போலத் தோன்றினான். அவனும் கோமகன் பக்கத்தில் வந்து நின்றான். சாம்பல் வர்ண தாடியைக் கொண்ட இந்த வயோதிக மனிதன், பெண்கள் தரிக்கும் ஒரு வெளிச்சட்டையையும் ஒரு உயரமான தொப்பியையும் அணிந்து கொண்டிருந்தான். அவன்தான் கோமாளி. அவனுக்கு பெண்களுக்குரிய பெயராகிய நாஸ்டாசியா ஐவானாவ்னா என்ற பெயரை வைத்துக்கொண்டிருந்தான்.

'நல்லது, நாஸ்டாசியா ஐவானாவ்னா' என்று அவனைப் பார்த்து கண் சிமிட்டிக்கொண்டே மெதுவான குரலில் கோமகன் பேசினார். 'அந்த ஓநாயை நீ பயமுறுத்தி விரட்டினால் டேனியல் உனக்கு சரியானபடி கொடுப்பான்.'

'எனக்கே ஒன்றிரண்டு விஷயங்கள் தெரியும்' என்று நாஸ்டாசியா ஐவானாவ்னா பதில் சொன்னான்.

'உஸ்' என்று கோமகன் மெதுவாய் சொல்லிவிட்டு, சைமன் பக்கம் திரும்பினார். 'இளைய கோமகளை நீ பார்த்தாயா? அவள் எங்கே இருக்கிறாள்?'

'இளைய கோமகன் பீட்டரோடு ஜாராவ் புதருக்குப் பக்கத்தில் நிற்கிறாள்' என்று புன்சிரிப்போடு சைமன் கூறினான். அவள் ஒரு சீமாட்டியாய் இருந்தாலும் வேட்டையாடுவதில் அவளுக்கு மிகுந்த ஆர்வமுண்டு.

'அவள் குதிரை சவாரி செய்யும் விதத்தைப் பார்த்து, உனக்கு ஆச்சரியமாய் இல்லையா, சைமன்? அவள் ஆண்கள் மாதிரியே இருக்கிறாள்!'

'ஆமாம், ஆமாம். அது ரொம்ப ஆச்சரியமானது. எவ்வளவு தைரியமாகவும், எவ்வளவு இயற்கையாகவும் இருக்கிறாள்!'

'நிக்கலஸ் எங்கே? அவன் எங்கே நிற்கிறான்? லியாடாவ் மேட்டுப் பூமியில் நிற்கிறான் அல்லவா? அப்படித்தானே?'

'ஆம், ஐயா. எங்கே நிற்கவேண்டும் என்பது அவருக்குத் தெரியும். இந்த விஷயங்களைப்பற்றி அவர் மிக நன்றாய் அறிந்திருப்பதைக் கண்டு டேனியலும் நானும் கூட பல தடவைகளில் அதிசயம் அடைந்திருக்கிறோம்' என்று சைமன் சொன்னான். தன்னுடைய எஜமானருக்கு எதைச் சொன்னால் பிரியமாய் இருக்கும் என்று அவனுக்கு நன்றாய் தெரியும்.

'நன்றாய் சவாரி செய்கிறானா? அப்படித்தானா? அவன் குதிரைமேல் அமர்ந்திருக்கும்போது எவ்வளவு அழகாய் இருக்கிறான் பார்த்தாயா?'

'ஒரு பூரணமான அழகு! அன்றொரு நாள் ஜாவார்ஜின்ஸ்க் என்ற காட்டிற்கு பக்கத்தில் புதர்களிலிருந்து ஒரு நரியை வேட்டையாடி விரட்டியது எவ்வளவு அழகாய் இருந்தது தெரியுமா? ஒரு பயங்கரமான இடத்தை ஒரு தாவுத்தாவினார். அந்தக் காட்டிற்குள் இருந்து அவர்கள் வெளியே விரட்டிக்கொண்டு வந்தது, எப்பேர்ப்பட்ட காட்சியாய் இருந்தது!... அந்தக் குதிரை ஆயிரம் ரூபிள்கள் பெறும். அதன் மீது சவாரி செய்பவரோ விலை மதிக்க முடியாதவர். ஆமாம், அம்மாதிரி சிறந்த மனிதரைக் கண்டு பிடிப்பது அபூர்வம்.'

'க்ண்டு பிடிப்பது அபூர்வம்...' என்று கோமகன் திருப்பிச் சொன்னார். இன்னும் அதிகமாக சைமன் சொல்லவில்லையே என்று வருத்தம் அடைந்தவராய் காணப்பட்டார். 'கண்டு பிடிப்பது அபூர்வம்' என்று அவர் சொல்லிக்கொண்டு, தமது பொடிடப்பியை எடுப்பதற்காக, தமது கோட்டின் நுனியை விலக்கினார்.

'மாதா கோவிலில் இருந்து முழு சீருடை தரித்து அன்று அவர் திரும்பி வந்தபோது, மைக்கேல் சிடோரிச்...' சைமன் முடிக்கவில்லை. ஏனெனில் அந்த அசைவற்ற காற்றில் வேட்டையின் முழக்கமும், இரண்டு மூன்று வேட்டை நாய்களின் குரலும் தெளிவாய் கேட்டன. அவன் தலையைத் தாழ்த்தி, கவனமாய்க் கேட்டு, தனது எஜமானரைப் பார்த்து, விரலை அசைத்து எச்சரிக்கை செய்தான். 'அந்த ஓநாய்க் குட்டிகள் இருக்கிற இடத்தை அவர்கள் கண்டுபிடித்து விட்டார்கள் என்று தோன்றுகிறது. லியாடாவ் பீட பூமியில் அவர்கள் இருக்கிறார்கள்' என்று மெதுவாய் கூறினான்.

தம்முடைய புன்சிரிப்பை மறந்தவராய், தமக்கு எதிராக தொலை தூரத்தில் தோன்றிய ஒடுங்கிய வெட்டவெளியில் கோமகன் தமது

பார்வையை செலுத்திக்கொண்டிருந்தார். பொடிடப்பியை இன்னமும் கையிலேயே வைத்துக்கொண்டிருந்தார். பொடியை இன்னமும் எடுக்கவில்லை. வேட்டை நாய்களின் குரைப்பு களுக்குப் பின்னால், ஓநாயை பார்த்துவிட்டதாக அறிவித்த டேனியலின் ஆழ்ந்த கொம்பு ஊதல் சப்தம் கேட்டது. முதல் மூன்று வேட்டை நாய்களோடு மற்ற நாய்களும் சேர்ந்து பெரிதாகக் குரைத்துக்கொண்டிருந்தன. அதாவது, ஒரு ஓநாயைக் கண்டவுடன் எப்படி அவை சப்தம் போடுமோ, அதே மாதிரி இருந்தது. நாய்களுக்கு வழி காட்ட வேண்டிய அவசியம் தீர்ந்து போயிற்று. ஓநாயைப் பற்றிப் பிடிப்பதற்காக நாய்களைத் தூண்டும் 'உல்யுல்யு' என்ற குரலை எழுப்பிக்கொண்டிருந்தார்கள். அந்தக் குரல்களில் எல்லாவற்றிற்கும் மேலாக டேனியலின் குரல், ஒரு சமயம் ஆழ்ந்த சப்தத்தோடும், ஒரு சமயம் க்ரீச் சப்தத்தோடும் முழங்கிக்கொண்டிருந்தது. அவனுடைய சப்தம் அந்தக் காடு முழுவதையும் நிரப்பி அதற்கு அப்புறம் உள்ள வெட்ட வெளியையும் நிரப்புவது போல் இருந்தது.

மௌனமாய் சில வினாடிகள் கவனித்துக் கேட்ட பின்பு, அந்த வேட்டை நாய்கள் இரண்டு பிரிவாகப் பிரிந்து நிற்கின்றன என்று கோமகனும், அவருடைய வேலைக்காரனும் மனதில் முடிவு செய்தார்கள். அந்த இரண்டு கூட்டத்தில் பெரிதாய் உள்ள கூட்டத்தைச் சேர்ந்த நாய்களின் குரைப்புகள் வேகமாகவும், ஆனால், வெகு தொலை தூரத்திலும் கேட்டு வந்தன. மற்றொரு நாய்க் கூட்டம், கோமகன் நின்ற இடத்திற்கு பக்கத்தில் உள்ள காட்டில் குரைத்துக்கொண்டு வேகமாய் ஓடிக்கொண்டிருந்தன. இந்தக் கூட்டத்தின் இரைச்சலில்தான் டேனியலின் 'உல்யுல்யு' என்ற சப்தமும் கேட்டுக்கொண்டிருந்தது. இரண்டு நாய்க் கூட்டங்களின் இரைச்சல் சப்தங்கள் முதலில் கலந்து ஒலித்து, பின்னால் ஒன்றையொன்று விலகிக்கேட்டன. ஆனால், இரண்டு சப்தங்களும் வரவர தூரமாய் போய்க்கொண்டிருந்தன.

தான் கையில் பற்றியிருந்த பார்ஜாய் நாயின் சங்கிலியில் ஏற்பட்ட சிக்கலை எடுத்து விடுவதற்காக சைமன் பெருமூச்சுவிட்டு கீழே குனிந்தான். கோமகனும் பெருமூச்சுவிட்டார். அப்பொழுது தான் தமது கையில் வைத்திருந்த பொடி டப்பியை அவர் கவனித்தார். அதைத் திறந்து அதிலிருந்து ஒரு சிமிட்டா எடுத்தார். 'திரும்பிப் போ' என்று, காட்டைவிட்டு வெளியே ஓடி வந்து கொண்டிருந்த ஒரு பார்ஜாய் நாயைப் பார்த்து, சைமன் கூச்சலிட்டான். கோமகன் பதறிப்போய் கையில் இருந்த பொடி டப்பியை கீழே விட்டுவிட்டார். நாஸ்டாசியா ஐவானாவ்னா அதை

எடுப்பதற்காகக் குதிரையிலிருந்து கீழே இறங்கினான். கோமகனும், சைமனும் அவனைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

திடீரென்று எதிர்பாராத விதமாக அந்த வேட்டை சப்தங்கள் நெருங்கி வந்தன. வேட்டை நாய்களின் குரைப்பு உச்சத்தில் இருந்தது. டேனியலின் 'உல்யுல்யு' சப்தம் அவர்களுக்கு முன்பாகக் கேட்டுக்கொண்டிருந்தது.

கோமகன் திரும்பினார். அவருக்கு வலது பக்கத்தில் இருந்த மைட்கா கண்கள் பிதுங்குமாறு அவ்ரை வெறித்துப் பார்த்து, தனது தொப்பியை உயர்த்தி மற்றொரு பக்கத்தை சுட்டிக் காட்டினான்.

'அங்கே பாருங்கள்' என்று அவன் கத்தினான். அந்த வார்த்தையை உச்சரிப்பதற்கு வெகு நேரம் அவன் முயற்சி செய்து கொண்டிருப்பதைப் போலத் தோன்றியது. கையில் பிடித்திருந்த பார்ஜாய் நாய்களை விட்டுவிட்டு, கோமகனை நோக்கி சவாரியில் ஓடி' வந்தான்.

கோமகனும், சைமனும் காட்டைவிட்டு வெளியே ஓடி வந்தார்கள். அவர்களுக்கு இடது பக்கத்தில் அவர்கள் எங்கே நின்று கொண்டிருந்தார்களோ அந்த இடத்திற்கு ஒரு ஓநாய் மெதுவாக இப்பக்கமும் அப்பக்கமும் ஆடி அசைந்து வந்து கொண்டிருப் பதைக் கண்டார்கள். கோபமுற்ற பார்ஜாய்கள் ஊளையிட்டு குதிரைகளைத் தாண்டி அந்த ஓநாயைப் பார்த்து ஓடின.

அந்த ஓநாய் தயங்கி நின்றது. தனது பருத்த தலையை அந்த நாய்களின் பக்கமாக விகாரமாய் திருப்பியது. தொண்டை நோயினால் அவஸ்தைப்படுகிற மனிதனைப் போல அது காணப்பட்டது. இப்பக்கமும் அப்பக்கமும் ஆடி அசைந்து, திடீரென்று இரண்டு தாவுகள் தாவி, வாலை ஒரு தரம் சுழற்றி அந்தக் காட்டிற்குள் மறைந்துவிட்டது. அதே சமயத்தில் ஊளையிடுவதைப் போன்ற ஒரு சப்தம், முதலில் ஒரு நாயிடமிருந்தும், பின்னால் மற்றொரு நாயிடமிருந்தும் அதன் பின்னால் இன்னொரு நாயிடமிருந்தும் கிளம்பி அந்த நாய்க் கூட்டம் முழுவதும் அந்தக் காட்டிலிருந்து வெளிப்பட்டு, இடையிலுள்ள வயலைத் தாண்டி ஓநாய் மறைந்த எதிர் காட்டிற்குள் ஓடின. அவை ஓடிய போது பழுப்பு நிறமான புதர்கள் பிரிந்து நின்றன. டேனியலின் பழுப்பு நிறக்குதிரை வியர்வையினால் கருப்பாய் காணப்பட்டது. அதனுடைய நீண்ட முதுகில் முன்னால் குனிந்து, தொப்பி இல்லாத அவனுடைய சாம்பல் வர்ண தலைமுடி அவனுடைய சிவந்த வியர்வை நிறைந்த முகத்தில் தொங்க, அந்த டேனியல் அமர்ந்திருந்தான்.

'உல்யுல்யு... உல்யுல்யு...' என்று அவன் கூச்சலிட்டான். கோமகனைக் கண்டதும் அவன் கண்கள் நெருப்பைக் கக்கின.

'நாசமாய்ப் போக' என்று அவன் கத்திவிட்டு, கோமகனை பயமுறுத்துவதைப்போல தனது சவுக்கை உயர்த்தினான்.

'அந்த ஓநாய் ஓடிப் போகும்படி நீர் விட்டுவிட்டீர்... எப்பேர்ப்பட்ட வேட்டைக்காரரர்!' என்று அவன் சொன்னான். பீதியடைந்து அவமானம் அடைந்து நின்ற அந்தக் கோமகனை, இன்னும் அதிகமாகக் கண்டிக்க விரும்புவதைப்போல வியர்த்து பெரிதாய் மூச்சுவிட்டுக்கொண்டிருந்த தன்னுடைய குதிரையை அடித்தான். கோமகனால் அவனுக்கு ஏற்பட்டிருந்த அந்த முழு கோபத்தையும் அந்த அடியில் காட்டினான். அதன் பின்னால், வேட்டை நாய்களுக்குப் பின்னால் அவனும் பறந்து போனான். தண்டனை வாங்கிய பள்ளிச் சிறுவனைப்போல புன்முறுவல் கொண்டு கோமகன் சுற்றிப் பார்த்தார். தம்முடைய நிலைமைக்கு சைமனின் அனுதாபம் கிடைக்கும் என்று அவர் எதிர்பார்த்தார். ஆனால், அங்கே சைமனைக் காணவில்லை. அங்கிருந்த புதர்களை அவன் சுற்றி வேகமாய் சவாரி போனான். எல்லாரும் அந்த ஓநாயைக் கண்டு பிடிப்பதில் ஈடுபட்டார்கள். ஆனால், அவர்கள் கண்டு பிடிக்கும் முன்பாக அது காட்டிற்குள் மறைந்துவிட்டது.



இதற்கிடையில் தாம் நின்ற இடத்திலேயே நிக்கலஸ் ராஸ்டோவ் நின்ற ஓநாயை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். வேட்டையானது நெருங்கி வந்து கொண்டும், விலகிப் போய்க்கொண்டும் இருப்பதை நாய்களின் குரைப்பிலிருந்து அவர் அறிந்துகொண்டார். அந்தக் கூச்சல் களின் ரகங்களைப் பற்றி அவருக்கு நல்ல பரிச்சயம் உண்டு. வேட்டைக்காரர்களின் குரல்கள் கிட்டை நெருங்கிக்கொண்டும், தூர விலகிக்கொண்டும், மேலே உயர்ந்துகொண்டும் போவதிலிருந்து அந்தக் காட்டில் என்ன நடந்து வருகிறது என்பதையும் அவர் அறிந்து கொண்டார். அங்கே ஓநாய் குட்டிகளும், பெரிய ஓநாய்களும் இருப்பதை அவர் அறிவார். வேட்டை நாய்களை இரண்டு பிரிவாகப் பிரித்துவிட்டு இருப்பதையும், எங்கேயோ ஓரிடத்தில் ஒரு ஓநாயை விரட்டிக் கொண்டிருப்பதையும், ஏதோ ஒரு விஷயத்தில் தவறு ஏற்பட்டு விட்டது என்பதையும் அவர் அறிந்துகொண்டார். ஆகவே, அந்த

ஓநாய் தமக்கு முன்பாக எந்த வினாடியிலும் வரலாம் என்று அவர் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். இங்கிருந்து எந்தப் பக்கமாக அந்த மிருகம் வரும் என்பதைப்பற்றியும் அதை எப்படித் தாக்கவேண்டும் என்பதைப் பற்றியும், ஆயிரக்கணக்கான விதங்களில் அவர் யோசித்துக் கொண்டிருந்தார். நம்பிக்கையும் அதைரியமும் மாறி மாறி அவருக்கு ஏற்பட்டுக்கொண்டிருந்தது. அந்த ஓநாய் நமக்கு முன்னால் வரவேண்டும் என்று அவர் பல தடவைகளில் கடவுளை பிரார்த்தனை செய்தார். அற்பக் காரணங்களிலிருந்து ஏற்படும் பிரமாதமான பரபரப்பான நேரங்களில் எம்மாதிரி ஆர்வத்தோடும், வெட்கமான உணர்ச்சியோடும் மனிதர்கள் கடவுளை பிரார்த்திப்பார்களோ, அதே மாதிரி அவரும் பிரார்த்தித்தார். 'இதை நீர் எனக்குச் செய்வதால் உமக்கு என்ன ஏற்பட்டுவிடும்? நீர் மகா பெரியவர் என்பது எனக்குத் தெரியும். இதை நான் உம்மிடம் கேட்பது ஒரு பாவம். என்றாலும் அந்த ஓநாய் எனக்கு முன்பாக வரும்படியும், அங்கிருந்து எங்களைப் பார்த்துக்கொண்டிருக்கும் அந்த மாமாவுக்கு முன்னிலையில் என்னுடைய காராய் அதன்மீது பாய்ந்து அதன் தொண்டையைக் கவ்வும்படியும் எனக்கு அருள் புரிவீராக' என்று கடவுளை நோக்கி அவர் பிரார்த்தனை செய்தார். அந்த அரை மணி நேரத்தில் அந்தக் காட்டின் ஓரங்களை ஆவலோடும் பரபரப்போடும் சுமார் ஆயிரம் தடவைகள் ராஸ்டோவ் பார்த்திருப்பார். அங்கே இருந்த அரச மரங்களுக்கு மேலாக கரடு முரடான இரண்டு ஓக்கு மரங்கள் நின்று கொண்டிருந்தன. அங்கிருந்த பள்ளத்தாக்கில் தண்ணீர் நிறைந்திருந்தது. அந்தப் புதர்களுக்கு மேலாக வலது பக்கத்தில் மாமாவின் தொப்பி தெரிந்துகொண்டிருந்தது.

'இல்லை, எனக்கு அம்மாதிரி அதிருஷ்டம் ஏற்படாது' என்று ராஸ்டோவ் நினைத்தார். 'என்றாலும் அந்த அதிருஷ்டத்திற்கு என்னதான் கொடுக்கக்கூடாது? ஆனால், அப்படி ஏற்படாது. சீட்டு விளையாட்டிலும் சரி, யுத்த களத்திலும் சரி, ஒவ்வொரு இடத்திலும் நான் அதிருஷ்டம் கெட்டவனாய் இருக்கிறேன்.' ஆஸ்டர்லிட்ஜ் நினைப்புகளும், டோலாகாவ் நினைப்புகளும் திடீரென்று அவர் மனதில் மின்னி தெளிவாய் தோன்றின. 'என்னுடைய வாழ்க்கையில் ஒரே ஒரு தடவை ஒரு பெரிய ஓநாயை வேட்டையாட விரும்புகிறேன். அது ஒன்றுதான் எனக்கு வேண்டும்' என்று அவர் நினைத்து, காதுகளையும், கண்களையும் கூர்மையாக்கி, இடது பக்கமும் வலது பக்கமும் பார்த்தார். நாய்களின் கூக்குரல்களில் ஏற்பட்ட சிறிய வித்தியாசத்தைக் கூட அவர் கவனித்துக் கேட்டார்.

திரும்பவும் வலது பக்கம் பார்த்தார். அந்தப் பாழடைந்த வயலுக்குக் குறுக்காக ஏதோ ஒன்று தம்மை நோக்கி ஓடி வருவதை அவர் கண்டார். 'இல்லை, அதுவாய் இருக்க முடியாது' என்று ஆழ்ந்த மூச்சு வாங்கிக்கொண்டு ராஸ்டோவ் நினைத்தார். வெகு காலமாய் எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஒன்று இப்பொழுது வருவதைக் கண்டதும் ஒருவன் எப்படி நினைப்பானோ, அம்மாதிரி அவர் நினைப்பு இருந்தது. மகிழ்ச்சியின் உச்ச ஸ்தானத்தை அவர் அடைந்துவிட்டார் - அவ்வளவு எளிதாக, ஒரு எச்சரிக்கையும் இல்லாமல், சப்தமோ, ஆடம்பரமோ இல்லாமல் அவர் அடைந்து விட்டார். ஆகவே, தமது கண்களையே ராஸ்டோவால் நம்ப முடியவில்லை. ஒரு வினாடிக்கு மேலாக சந்தேகத்திலேயே இருந்தார். அந்த ஓநாய் முன்னால் ஓடிவந்து தனக்கு எதிராக இருந்த ஒரு பள்ளத்தைத் தாவியது. அது ஒரு வயதான மிருகம். அதன் முதுகு சாம்பல் வர்ணமாகவும், அதன் வயிறு சிவப்பாகவும் இருந்தன. அவசரப்படாமல் அது ஓடிக்கொண்டிருந்தது. தன்னை ஒருவரும் பார்க்கவில்லை என்று அது நினைத்ததுபோல் இருந்தது. ராஸ்டோவ் தமது மூச்சை அடக்கிக்கொண்டு பார்ஜாய்களைப் பார்த்தார். அவை ஓநாயைப் பார்க்காததினால், அந்த நிலைமையை அறியாததினால் நின்றுகொண்டும், படுத்துக்கொண்டும் இருந்தன. கிழட்டுக் காராய் கோபமாக ஈக்களை விரட்டுவதற்காகத் தலையைத் திருப்பி, தன்னுடைய மஞ்சள் பற்களைக் காட்டி, பின்னங் கால்களைக் கடித்தது.

'உல்யுல்யுல்யு' என்று ராஸ்டோவ் தமது உதடுகளைக் குவித்து முனங்கினார். பார்ஜாய்கள் உடனே குதித்தெழுந்து, தங்களைக் கட்டியிருந்த சங்கிலிகளை உலுப்பிக்கொண்டு, காதுகளைத் தீட்டிக்கொண்டு கேட்டன. தனது பின்னங் கால்களை பற்களினால் சொறிந்து முடிந்த பின்பு, காராய் தனது காதுகளை உயர்த்தியது. தனது ரோமம் நிறைந்த வால் ஆடிக்கொண்டிருக்க அது எழுந்து நின்றது.

'இவைகளை நான் அவிழ்த்து விட்டுவிடலாமா? அல்லது வேண்டாமா?' என்று நிக்கலஸ் தமக்குள்ளேயே யோசித்துக் கொண்டிருந்தார். அச்சமயம் அந்தக் காட்டிலிருந்து வந்த ஓநாய் அவரை நெருங்கிக்கொண்டிருந்தது. திடீரென்று அந்த ஓநாயின் முழுத் தோற்றமும் மாறியது. இதற்கு முன்பு எப்பொழுதும் அது பார்த்திராத மனிதரின் கண்கள் அதன் மீது பதிந்திருப்பதைப் பார்த்ததும், அதன் உடம்பு சிலிர்த்தது. ராஸ்டோவைப் பார்த்து தனது தலையை சிறிது திருப்பி தயங்கி நின்றது.

'பின்னால் திரும்புவதா? முன்னால் போவதா? ஹே... ஒன்றும் பிரமாதமில்லை. முன்னால் போவோம்...' என்று அந்த ஓநாய் தனக்குத் தானே சொல்லிக் கொள்ளுவது போலத் தோன்றியது. பின்னால் திரும்பிப் பாராமல், அமைதியான, நீளமான, சுலபமான உறுதியான அடிகள் எடுத்து வைத்து, அது முன்னால் பாய்ந்தது.

'உல்யுல்யு' என்று நிக்கலஸ் கூச்சலிட்டார். அது அவர் குரல் மாதிரியே இல்லை. அவருடைய குதிரை தானாகவே முன்னால் கிளம்பியது. தலை தெறிக்க மேட்டிலிருந்து கீழே இறங்கி, இடையிலுள்ள பள்ளங்களைத் தாவி, அந்த ஓநாயை நோக்கி ஓடியது. பார்ஜாய்கள் அதைவிட வேகமாக ஓடின. தம்முடைய சப்தத்தையே நிக்கலஸால் கேட்க முடியவில்லை. அல்லது அவர் பாய்ச்சலில் போய்க்கொண்டிருந்ததை அறியவில்லை. பார்ஜாய் களை அவர் பார்க்கவும் இல்லை. அல்லது தாம் போய்க் கொண்டிருந்த பூமியை அவர் கவனிக்கவும் இல்லை. ஓநாய் ஒன்றைத்தான் அவர் பார்த்தார். பள்ளத்தாக்கை நோக்கி தனது வேகத்தை அதிகரித்து அந்த ஓநாய் ஓடிக்கொண்டிருந்தது. மைல்கா என்ற பருத்த வேட்டை நாய்தான் முதல் முதலில் ஓநாயை நெருங்கிக்கொண்டிருந்தது. நெருங்கி நெருங்கி ஓநாய்க்கு முன்பாக அது போய்விட்டது. ஆனால், ஓநாய் அதைத் திரும்பிப் பார்த்தது. அச்சமயத்தில் வழக்கமாக வேகமாய் ஓடக் கூடிய மைல்கா திடீரென்று தனது வாலை உயர்த்தி முன்னங்கால்களை விறைத்து நின்றது.

'உல்யுல்யுல்யுல்யு' என்று நிக்கலஸ் கூச்சலிட்டார்.

லியூமிம் என்ற சிவந்த வேட்டை நாய் மைல்காவுக்குப் பின்னாலிருந்து முன்னால் ஓடி, கம்பீரமாக அந்த ஓநாய் மீது பாய்ந்து அதன் பின்னங் கால்களைப் பற்றியது. ஆனால், திடீரென்று பீதி கொண்டு அதைவிட்டு விலகியது. ஓநாய் கீழே படுத்து பற்களைக் கடித்து, மீண்டும் எழுந்து முன்னால் ஓடியது. அதன் பின்னால் சில அடிகள் தூரத்தில் பார்ஜாய்கள் ஓடிக்கொண்டிருந்தன. ஆனால் அதற்குப் பக்கத்தில் இன்னும் அவை நெருங்கவில்லை.

'அது ஓடிப்போய்விடும். இல்லை, அது சாத்தியமில்லை' என்று நிக்கலஸ் நினைத்து, தமது கரகரப்பான குரலில் இன்னமும் கூச்சலிட்டுக்கொண்டே இருந்தார்.

'காராய், உல்யுல்யு...' என்று அவர் கூச்சலிட்டு தம்முடைய வயதான பார்ஜாயை சுற்றிப் பார்த்தார். அது ஒன்றுதான் இப்பொழுது அவருக்குள்ள நம்பிக்கை. அது வயதாகி இருந்தபோதிலும், தன்னுடைய முழு பலத்தையும் கொண்டு அந்த ஓடிக்கொண்டிருந்த

ஓநாயை இடைமறிப்பதற்காக பாய்ந்து சென்றது. ஆனால் ஓநாய் வேகத்துடன் தன்னுடைய வேகத்தை ஒப்பிட முடியாது என்பது அந்த காராய்க்குத் தெரியாது. எதிரேயுள்ள காடு நெருங்கிக் கொண்டிருந்தது. அதுவரை ஓநாயால் ஓடக் கூடுமானால் அந்தக் காட்டிற்குள் அது நுழைந்து மறைந்துவிடும் என்பது நிச்சயம். ஆனால் தமக்கு எதிராக அந்த ஓநாயை நோக்கி ஒரு வேட்டைக்காரனும் வேட்டை நாய்களும் பாய்ந்து வருவதை அவர் கண்டார். ஆகவே இன்னமும் நம்பிக்கை இருக்கிறது. ஒரு நீளமான, மஞ்சள் நிறமான வாலிப பார்ஜாய் கம்பீரமாக ஓநாய் மீது பாய்ந்து அதைக் கீழே தள்ளியது. ஆனால் ஓநாய் மீண்டும் ஒருவரும் எதிர் பாராத விதத்தில் வேகமாய் குதித்தெழுந்து, தனது பற்களைக் கடித்து அந்த மஞ்சள் நிற பார்ஜாய்மீது பாய்ந்தது. அந்த பார்ஜாய் பரிதாபமான ஊளையோடு தலையைத் தரையில் போட்டுச் சாய்ந்தது. அதன் பக்கவாட்டில் ஏற்பட்ட ஒரு காயத்திலிருந்து ரத்தம் பெருகியது.

‘காராய், என் நண்பனே...’ என்று நிக்கலஸ் ஓலமிட்டார்.

ஓநாயுடன் சண்டையிட்டு இம்மாதிரி தாமதம் எற்படுத்திய படியால் அந்த கிழட்டு நாய் ஓநாய்க்கு ஐந்தடி தூரத்திற்குள் வந்துவிட்டது. தனக்கு ஏற்பட்ட ஆபத்தை அறிந்ததுபோல அந்த ஓநாய் காராயைத் திரும்பிப் பார்த்து தனது வாலை பின்னங் கால்களுக்கு இடையில் நுழைத்துக்கொண்டு இன்னும் வேகமாய் ஓட ஆரம்பித்தது. இந்த இடத்தில் காராய்க்கு ஏதோ ஏற்பட்டது போல நிக்கலஸ் கண்டார். அந்த பார்ஜாய் ஓநாய் மீது திடீரென்று பாய்த்து. அவை இரண்டும் அவற்றிற்கு எதிராக இருந்த பள்ளத்தில் விழுந்து ஒன்றுபோல புரண்டன. வேட்டை நாய்களோடு அந்த ஓநாய் அந்த பள்ளத்தில் போராடிக்கொண்டிருந்தது. நாய்களுக்கு அடியிலிருந்து ஓநாயின் சாம்பல் வர்ண ரோமத்தையும், நீண்டிருந்த அதன் பின்னங் கால்களையும், காதுகளைப் பின்னால் மடக்கி தொண்டையை நெரித்து, பீதியோடு அது போட்ட கூச்சலையும் நிக்கலஸ் பார்த்தார். அச்சமயம் ஓநாயின் தொண்டையைக் கவ்வி காராய் அதை பூமியில் அழுத்திக்கொண்டிருந்தது. அந்தக் காட்சியை பார்ப்பதுதான் தம்முடைய வாழ்க்கையிலேயே மிகுந்த மகிழ்ச்சியான காலம் என்று நிக்கலஸ் நினைத்தார். சேணத்தில் கை வைத்து, குதிரையிலிருந்து கீழே குதித்து அந்த ஓநாயை குத்திக்கொல்வதற்கு அவர் தயாராய் இருந்தார். ஆனால் திடீரென்று அந்த நாய்க் கூட்டங்களிலிருந்த அந்த ஓநாய் தனது தலையை நிமிர்த்தி முன்னங்‘ கால்களை பூமியில் அழுத்தி எழுந்தது. அதன் தொண்டையை இப்பொழுது காராய் பற்றிக்கொண்டிருக்க

வில்லை. அந்த ஓநாய் தனது பற்களைக் கடித்து பின்னங் கால்களால் உந்தி, அந்தப் பள்ளத்தை விட்டு ஒரு தாவில் வெளியேறியது. நாய்களிடமிருந்து தப்பித்துக்கொண்டபடியால், மீண்டும் வாலை மடக்கிக்கொண்டு முன்னேறியது. காயத்தினாலோ, அல்லது உராய்தலினாலோ, மிகுந்த சிரமத்தோடு அந்தப் பள்ளத்தைவிட்டு காராய் வெளியேறியது.

'அட கடவுளே, ஏன் இப்படி?' என்று அதைரியத்தினால் நிக்கலஸ் கூச்சலிட்டார்.

மாமாவின் வேட்டைக்காரன் மற்றொரு பக்கத்திலிருந்து ஓநாய் போய்க்கொண்டிருந்த பாதைக்குக் குறுக்காக பாய்ச்சலில் வந்தான். அவனுடைய பார்ஜாய்கள் அந்த ஓநாய் முன்னேறுவதை மீண்டும் தடுத்து நிறுத்தின. மறுபடியும் அந்த ஓநாய் நாலா பக்கங்களிலும் சூழ்ந்துகொள்ளப்பட்டது.

நிக்கலஸும், அவருடைய வேலைக்காரனும், மாமாவும், அவருடைய வேட்டைக்காரனும்; எல்லாருமாக 'உல்யுல்யு' என்று கூச்சலிட்டுக்கொண்டு, அந்த ஓநாயைச் சுற்றி சவாரி வந்தார்கள். அந்த ஓநாய் கீழே படுக்கிற சமயங்களில் எல்லாம், குதிரைகளிலிருந்து இறங்குவதற்கு அவர்கள் தயாராய் இருந்தார்கள். அது தன்னைக் குலுக்கிக்கொண்டு எதிரிலுள்ள காட்டில் போய் பந்தோபஸ்தாய் இருப்பதற்காக முன்னேறும்போதெல்லாம் அவர்களும் முன்னேறிக் கொண்டிருந்தார்கள்.

இந்தப் போராட்டத்தின் ஆரம்பத்தில் 'உல்யுல்யு' என்ற கூச்சலைக் கேட்டு காட்டிலிருந்து ஏற்கெனவே டேனியல் வெளியே வந்து விட்டான். அந்த ஓநாயை காராய் கவ்விக்கொண்டிருப்பதை அவன் பார்த்ததும், அந்த வேலை முடியட்டும் என்பதற்காக தன்னுடைய குதிரையை இழுத்துப் பிடித்தான். ஆனால், குதிரைக்காரர்கள் கீழே இறங்காததையும், அந்த ஓநாய் தன்னை உலுப்பிக்கொண்டு தப்புவதற்காக ஓடுவதையும் பார்த்தவுடன் டேனியல் தனது பழுப்பு நிறக் குதிரையை பாய்ச்சலில் போகும்படி தட்டிவிட்டான். அவன் ஓநாயைப் பார்த்து போகவில்லை. காட்டிற்குள் போகவிடாமல் அதைத் தடுப்பதற்காக காராய் ஓடிய சமயத்தில் அந்தக் காட்டை நோக்கி டேனியல் தனது குதிரையை விட்டான். அவன் ஓநாய்க்கு சமீபமாகப் போனவுடன் மாமாவின் பார்ஜாய்கள் அந்த ஓநாயை இரண்டாம் தடவையாக மறித்து நிறுத்தின.

இடது கையில் ஒரு கட்டாரியை வைத்துக்கொண்டு, சவுக்கினால் தன்னுடைய பழுப்பு நிறக் குதிரையை அடித்துக்கொண்டு, மௌனமாக டேனியல் சவாரி போனான்.

அந்த பழுப்பு நிறக் குதிரை பலமாய் மூச்சு விட்டுக்கொண்டு தம்மைக் கடந்து போகிறவரையில் டேனியலை நிக்கலஸ் பார்க்கவோ அல்லது கேட்கவோ இல்லை. திடீரென்று ஒரு சரீரம் கீழே விழுந்து சப்தம் கேட்டது. நாய்களுக்கு மத்தியில் டேனியல் அந்த ஓநாயின் முதுகில் விழுந்து அதன் காதுகளைப் பற்றிக்கொள்ள முயற்சித்தான். நாய்களுக்கும் சரி, வேட்டைக்காரர்களுக்கும் சரி, அந்த ஓநாய்க்கும் சரி, இப்பொழுது விஷயம் எல்லாம் முடிந்து விட்டது என்பது தெளிவாய்த் தெரிந்தது. அந்த பீதியுள்ள ஓநாய் காதுகளை பின்னால் மடக்கி எழுந்திருக்க முயற்சி செய்தது. ஆனால், அந்த பார்ஜாய்கள் அதை விடவில்லை. டேனியல் சிறிது எழுந்து ஒரு அடி எடுத்து வைத்து, கீழே களைப்பாறுவதற்காக படுப்பதைப் போல அந்த ஓநாய்மீது விழுந்து, அதன் காதுகளைப்பற்றிக்கொண்டான். அச்சமயம் அதைக் குத்துவதற்காக நிக்கலஸ் வந்தார். ஆனால், 'அதைக் கொல்லவேண்டாம். அதன் வாயைக் கட்டிவிடுவோம்' என்று டேனியல் முனங்கி தனது இருப்பை மாற்றி ஓநாயின் கழுத்தில் காலை வைத்து அழுத்தினான். அதன் பற்களுக்கு இடையில் ஒரு குச்சியை வைத்து ஒரு வாரினால் கடிவாளம் போடுவதைப்போல அதை கட்டினார்கள். அதன் கால்களையும் கட்டினார்கள். பின்னால் ஒன்றிரண்டு தடவைகள் ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கமாக டேனியல் அதை உருட்டினான்.

சோர்வும் மகிழ்ச்சியும் கொண்ட முகங்களோடு காணப்பட்ட அவர்கள் அந்த கிழட்டு ஓநாயை உயிரோடு, கனைத்துக்கொண்டும், நாணிக்கொண்டும் இருந்த ஒரு குதிரைமீது வைத்தார்கள். அதைப் பார்த்து நாய்கள் குரைத்துக்கொண்டு வர அவர்கள் எல்லாரும் ஏற்கெனவே குறிப்பிட்டிருந்த ஒரு இடத்திற்குப் போனார்கள். அந்த வேட்டை நாய்கள் இரண்டு ஓநாய்க் குட்டிகளையும், அந்த பார்ஜாய்கள் மூன்று குட்டிகளையும் கொன்றன. வேட்டைக்காரர்கள் எல்லாரும் தங்கள் வேட்டைகளோடும் அவைகளைப் பற்றிய கதைகளோடும் அங்கு வந்து கூடி, அந்த ஓநாயை வந்து பார்த்தார்கள். அகலமான நெற்றியைக் கொண்ட அந்த ஓநாயின் தலை, அதனுடைய பற்களுக்கிடையில் வைக்கப்பட்டிருந்த குச்சியோடு கீழே தொங்கிக்கொண்டிருந்தது. தன்னைச் சுற்றி நின்ற மனிதர்களையும் அந்த நாய்க் கூட்டத்தையும் அதனுடைய கண்ணாடி போன்ற பெரிய கண்கள் பார்த்துக்கொண்டிருந்தன. அதைத் தொடும்போதெல்லாம் அதன் கட்டப்பட்டிருந்த கால்களை உதறி, காட்டுத்தனமான பார்வையோடு ஒவ்வொருவரையும் அது நோக்கிக்கொண்டிருந்தது.

கோமகன் ராஸ்டோவும் அதன் பக்கத்தில் சென்று அதைத் தொட்டார்.

'ஓ, எப்பேர்ப்பட்ட பயங்கரமானதாய் இருக்கிறது! பயங்கரமானது அல்லவா?' என்று தமக்குப் பக்கத்தில் நின்ற டேனியலைப் பார்த்துக்கேட்டார்.

'ஆமாம், மேன்மை தங்கியவரே' என்று வேகமாக தனது தொப்பியைத் தூக்கி டேனியல் பதிலளித்தான்.

தப்பிப் போகும்படி ஒரு ஓநாயை தாம்விட்டுவிட்டதைப் பற்றியும், அதற்காக டேனியலுடன் சண்டை ஏற்பட்டதைப் பற்றியும் அவர் நினைவு கூர்ந்தார்.

'ஓ, நீ ஒரு வெடுவெடுப்பான ஆசாமி, நண்பனே' என்று கோமகன் சொன்னார்.

அதற்கு பதிலாக ஒரு நாணம் கொண்ட குழந்தைத்தனமான, பணிவான, சுமுகமான புன்சிரிப்பை டேனியல் காட்டினான்.



வயோதிகக் கோமகன் வீடு திரும்பினார். நட்டாஷாவும் பெட்டியாவும் சீக்கிரமாக வீடு திரும்புவதாகச் சொன்னார்கள். ஆனால் இன்னமும் காலை நேரமாய் இருந்தபடியால் வேட்டை தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. மரங்கள் அடர்ந்த ஒரு காட்டில் வேட்டை நாய்களை நடுப்பகலில் விட்டு வைத்திருந்தார். ஒரு தரிசு நிலத்தில் நிக்கலஸ் நின்று கொண்டிருந்தார். அவருடைய காடு கலைப்பவர்களை எல்லாம் அங்கிருந்து அவர் பார்க்க முடியும்.

அவருக்கு எதிராகக் குளிர்கால ரை தானிய வயல் இருந்தது. அங்கே ஒரு பழுப்பு நிற புதருக்குப் பக்கத்திலுள்ள ஒரு பள்ளத்தாக்கில் அவருடைய சொந்த வேட்டைக்காரன் தனியாக நின்று கொண்டிருந்தான். வேட்டை நாய்களை அவிழ்த்து விட்டவுடன் அவர் அறிந்த வால்தோர்ன் என்ற நாய் இடையிடையே குரைத்துக்கொண்டிருந்தது. அந்த குரைப்பில் மற்ற நாய்களும் பின்னால் சேர்ந்து கொண்டன. கொஞ்ச நேரம் குரைப்பதும் கொஞ்ச நேரம் சும்மாயிருப்பதுமாக அவை இருந்து வந்தன. சிறிது நேரம் கழித்து, ஒரு நரியை கண்டுபிடித்துவிட்டதாக மரங்கள் அடர்ந்த பள்ளத்தாக்கிலிருந்து வந்த ஒரு கூச்சலை அவர் கேட்டார். உடனே எல்லா நாய்களும் ஒன்று சேர்ந்து அந்தப் பள்ளத்தாக்கின் ஓரமாக ரை தானிய வயலைப் பார்த்து ஓடின.

சிவப்புத் தொப்பிகள் அணிந்த காடு கலைப்பவர்கள் அந்தப் பள்ளத்தாக்கின் ஓரமாக சவாரி போய்க்கொண்டு இருந்ததையும், வேட்டை நாய்களையும் அவர் கண்டார். எதிராக இருந்த அந்த ரை தானிய வயலில் ஒரு நரி எந்த நிமிஷமும் வந்து தோன்றலாம் என்று அவர் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்.

பள்ளத்தாக்கில் நின்று கொண்டிருந்த வேட்டைக்காரர்கள் தங்களுடைய பார்ஜாய்களை அவிழ்த்து விட்டார்கள். ஒரு விசித்திரமான, குட்டைக் கால்களையுடைய, அழகான வாலைக்கொண்ட சிவப்பு நரி யொன்று அந்த வயலுக்குக் குறுக்காக போய்க் கொண்டிருந்ததை நிக்கலஸ் கண்டார். பார்ஜாய்கள் அதை வளைந்து கொண்டன. கொஞ்சம் கொஞ்சமாக அந்த நரியை அவை நெருங்கின. அவற்றிடமிருந்து தப்புவதற்காக அந்த நரி வளைந்து வளைந்து போய்க் கொண்டிருந்தது. அச்சமயம் திடீரென்று ஒரு வெள்ளை பார்ஜாயும், அதன் பின்னால் ஒரு கருப்பு பார்ஜாயும் அதன் மீது பாய்ந்தன. எல்லாம் ஒரே குழப்பமாய் இருந்தது. அந்த பார்ஜாய்கள் கூடி நின்ற அமைப்பு ஒரு நட்சத்திரம் போலக் காணப்பட்டது. தங்கள் உடல்களைக் கொஞ்சம் கூட அசைக்காமல் அவை நின்று கொண்டிருந்தன. சிவப்புத் தொப்பியை அணிந்த ஒரு வேட்டைக் காரனும், பச்சைக்கோட்டு அணிந்த ஒரு அந்நிய வேட்டைக்காரனும், அந்த நாய்களுக்குப் பக்கத்தில் குதிரை மீது வந்தார்கள்

'இது என்ன? அந்த வேட்டைக்காரன் எங்கிருந்து வருகிறான்? அவன் மாமாவின் வேட்டைக்காரனல்ல' என்று நிக்கலஸ் நினைத்தார்.

அந்த வேட்டைக்காரர்கள் அந்த நரியைக் கைப்பற்றினார்கள். அவர்கள் வெகுநேரம் வரை அங்கு நின்று கொண்டிருந்த போதிலும், அந்த நரியை சேணத்தோடு சேர்த்துக் கட்டவில்லை. அவர்களுடைய குதிரைகள் கடிவாளமிடப்பட்டு, சேணமிடப்பட்டு அவர்களுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தன. அங்கேயும் நாய்கள் கீழே படுத்திருந்தன. அந்த வேட்டைக்காரர்கள் தங்கள் கைகளை ஆட்டி, அந்த நரியை ஏதோ செய்துகொண்டிருந்தார்கள். எந்த இடத்திலிருந்து கொம்பு ஊதும் சப்தம் கேட்டது. ஏதாவது சண்டை ஏற்பட்டால், அம்மாதிரி ஊதுவது வழக்கம்.

'நம்முடைய ஐவானோடு அந்த இலாகினுடைய வேட்டைக்காரன் சண்டை போட்டுக்கொண்ட இருக்கிறான்' என்று நிக்கலஸின் குதிரைக்காரன் கூறினான்.

நட்டாஷாவையும் பெட்டியாவையும் தம்மிடம் அழைத்து வரும்படி அந்த மனிதனை நிக்கலஸ் அனுப்பிவிட்டு, காடு கலைப்பவர்கள் வேட்டை நாய்களைக் கூட்டி வைத்திருந்த அந்த இடத்திற்கு மெதுவாக சவாரி போனார். சண்டை நடந்து கொண்டிருந்த அந்த இடத்திற்கு வெவ்வேறு இடங்களில் நின்றுகொண்டிந்தவர்கள் சவாரியில் வந்து சேர்ந்தார்கள்.

நிக்கலஸ் குதிரையிலிருந்து இறங்கினார். அங்கு வந்து சேர்ந்த நட்டாஷாவும் பெட்டியாவும் வேட்டை நாய்க்ளுக்குப் பக்கத்தில் நின்று, அங்குள்ள விஷயம் எப்படி முடிகிறது என்பதைப் பார்ப்பதற்காகக் காத்துக்கொண்டு நின்றார்கள். சண்டை போட்டுக் கொண்டிருந்த வேட்டைக்காரன் புதரிலிருந்து வெளியே வந்து, தன்னுடைய சிறிய எஜமானரை நோக்கி குதிரை மீது வந்தான். அவனுடைய சேணத்தின் வாரில் அந்த நரியை கட்டித் தொங்கவிட்டிருந்தான். சிறிது தூரத்தில் வரும்போதே அவன் தனது தொப்பியைக் கழற்றி மரியாதையோடு பேச முயற்சித்தான். ஆனால் அவன் முகம் வெளிறி மூச்சு வாங்கிக்கொண்டிருந்தான். அவனுடைய முகம் கோபமாய் இருந்தது. அவனுடைய ஒரு கண்ணைச் சுற்றியுள்ள பாகம் சுருப்பாய் இருந்தது.

'என்ன நடந்தது?' என்று நிக்கலஸ் கேட்டார்.

'நமது நாய்கள் வேட்டையாடிய ஒரு நரியை அவன் கொன்று விட்டான். என்னுடைய சாம்பல் வர்ண பெட்டை நாய்தான் அந்த நரியைப் பிடித்தது. அப்படியிருந்தும் அவன் சட்டம் பேசுகிறான்... அவன் நரியைப் பிடுங்கினான். அவனுக்கு ஒன்று கொடுத்தேன். இதோ, எனது சேணத்தில் நரியைக் கட்டியிருக்கிறேன். இதை நீர் ருசி பார்க்கவேண்டுமா?...' என்று அந்த வேட்டைக்காரன் சொல்லிவிட்டு, இன்னமும் அந்த விரோதியிடம் பேசிக்கொண்டு இருப்பது போலவே மனோராஜ்யம் செய்து தனது கட்டாரியை சுட்டிக் காட்டினான்.

அவனிடம் பேசுவதற்காக நிக்கலஸ் அங்கே நிற்கவில்லை. தன்னுடைய சகோதரியையும் பெட்டியாவையும் அங்கே நிற்கும்படி சொல்லிவிட்டு, அந்த விரோதியின், இலாகினுடைய, வேட்டைக் காரர்கள் நின்றிருந்த இடத்திற்கு சவாரி போனார்.

அந்த வெற்றிபெற்ற வேட்டைக்காரன் தனது கூட்டத்தோடு போய் சேர்ந்துகொண்டான். அங்குள்ளவர்கள் ஆவலோடு அவனை விசாரிக்க, அவன் தனது வேட்டையைப் பற்றிய விவரங்களை சொல்லிக் கொண்டிருந்தான்.

இலாகின் குடும்பத்தாரோடு ராஸ்டோவ் குடும்பத்தாருக்கு மனஸ்தாபம் உண்டு. மனஸ்தாபம் கோர்ட் வரை போயிருந்தது. பழக்கத்தினால் ராஸ்டோவ்களின் குடும்பதைச் சேர்ந்த இடங்களில் அந்த இலாகின் இப்பொழுது வேட்டையாடினார். ராஸ்டோவ்கள் அச்சமயம் வேட்டையாடிக் கொண்டிருந்த காடுகளுக்கு வேண்டு மென்றே அனுப்பியதைப்போல தமது வேட்டைக்காரர்களை அனுப்பினார். ராஸ்டோவ்களின் நாய்கள் விரட்டிக்கொண்டிருந்த அந்த நரியைப் பிடித்து வரும்படி தமது ஆட்களை இலாகின் ஏவினார்.

இலாகினை இதுவரை நிக்கலஸ் பார்த்ததே இல்லை. தமக்கு வழக்கமாய் உள்ள படபடப்பான சுபாவத்தினால் இலாகினை அவர் வெறுத்தார். அவர் 'எதேச்சாதிகாரம்' உள்ளவர் என்றும், பலாத்கார நடவடிக்கைகள் கொண்டவர் என்றும் அவர் கேள்விப்பட்டிருந்தார். ஆகவே அவரை பரம எதிரியாகக் கருதினார். கோபத்தோடு, பரபரப்போடு அவரை நோக்கி சவாரி போனார். தமது சவுக்கை அழுத்தமாகப் பிடித்துக்கொண்டு தமது எதிரியை தண்டிப்பதற்காக உறுதியும் துணிவும் கொண்டு போனார்.

அவர் அந்தக் காட்டின் ஒரு முனையை திரும்பியவுடன், ஒரு தடித்த கனவான் நாடியை மறைக்கும் தொப்பியை அணிந்து, அவரை நோக்கி சவாரி வந்துகொண்டிருந்தார். அவருடைய அழகிய குதிரை அண்டங் கருப்பாய் இருந்தது. அவருடன் இரண்டு வேட்டைச் சேவகர்களும் வந்து கொண்டிருந்தார்கள்.

இலாகினைப் பார்த்ததும் அவர் தமது எதிரி என்று நிக்கலஸுக்குத் தோன்றவில்லை. ஒரு கம்பீரமான, மிகுந்த மரியாதையான கனவானாகத் தோன்றினார். இந்த வாலிபக் கோமகனோடு அறிமுகம் ஏற்படுத்திக்கொள்ள வேண்டும் என்ற ஆவலோடு இருப்பவராகவும் தொப்பியை உயர்த்தி நடந்து போன விஷயத்திற்காக தாம் மிகவும் வருந்துவதாகக் கூறினார். அதற்குக் காரணமானவனை, அதாவது மற்றொருவருடைய பார்ஜாய்கள் வேட்டையாடிய நரியை தான் போய் கைப்பற்றியவனை, தண்டிப்பதாகவும் கூறினார். கோமகனோடு அதிகமாக அறிமுகம் ஏற்படும் என்று தாம் நம்புவதாகவும் கூறினார். தம்முடைய காட்டிற்கு வேட்டையாட வரும்படியும் அவர் அழைத்தார்.

தனது சகோதரர் பயங்கரமாக எதையாவது செய்துவிடக் கூடாதே என்று பீதியுற்றவளாய் பரபரப்போடு நட்டாஷா அவருக்குப் பின்னால் வந்து கொண்டிருந்தாள். எதிரிகள் இருவரும் நட்புரிமையில் வாழ்த்துக்கள் வழங்கிக்கொண்டிருப்பதைப்

பார்த்ததும் அவர்களிடம் நெருங்கி வந்தாள். நட்டாஷாவைப் பார்த்ததும் அவளுக்காக தமது தொப்பியை இலாகின் இன்னும் அதிகமாக உயர்த்தினார். வேட்டையாடுவதில் உள்ள ஆர்வத்திலோ, அல்லது அழகிலோ, தாம் வெகுவாய் கேள்விப்பட்டிருந்த டயானாவைப்போல அந்த வாலிபக் கோமகள் இருப்பதாக மகிழ்ச்சிப் புன்னகையோடு அவர் கூறினார்.

தம்முடைய வேட்டைக்காரன் செய்த குற்றத்திற்கு பிராயச் சித்தமாக தம்முடைய பீட பூமிக்கு ராஸ்டோவ்கள் வரவேண்டும் என்று இலாகின் வற்புறுத்தினார். அந்த இடம் சுமார் ஒரு வெர்ஸ்ட் தூரத்தில் இருந்தது. அதை தமது வேட்டைக்காகவே ஒதுக்கி வைத்திருப்பதாகவும், அங்கு முயல் கூட்டங்கள் ஏராளமாக இருப்பதாகவும் அவர் சொன்னார். நிக்கலஸ் சம்மதித்தார். இரு மடங்கு பெருகிய அந்த வேட்டைக் கூட்டம் மேலும் வேட்டைக்காக அங்கிருந்து நகர்ந்து சென்றன.

இலாகினுடைய பீட பூமிக்கு வயல்களின் வழியாகத்தான் போகவேண்டும். வேட்டைக்காரர்கள் ஒருவர் பின் ஒருவராக வரிசையாகப் போனார்கள். எஜமானர்கள் சேர்ந்தாற்போல் சவாரி போனார்கள். மாமாவும் ராஸ்டோவும் இலாகினும் ஒருவர் நாய்களை மற்றொருவர் திருட்டுத்தனமாக கவனித்துக்கொண்டே போனார்கள். தங்களுடைய பார்ஜாய்களைவிட சிறந்ததாக மற்றவரிடம் இருக்கிறதா என்பதை அறிந்துகொள்ள ஆவல் உள்ளவர்களாய், மற்றவர்கள் கவனிக்காத விதத்தில் அறிந்துகொள்ள முயற்சித்தார்கள்.

ஒரு சிறிய சிவப்பு புள்ளி கொண்ட பெட்டை நாயொன்று ஒல்லியாகவும், இரும்பைப் போன்ற தசைகள் உடையதாகவும், மென்மையான மூக்கும் பிரதானமான கருப்புக் கண்களும் கொண்டதாகவும் இலாகினுடைய வேட்டை நாய்கள் கூட்டத்தில் காணப்பட்டது. அந்த நாயின் அழகின் மீது ராஸ்டோவுக்கு குறிப்பாக ஒரு கவர்ச்சி ஏற்பட்டது. இலாகினுடைய பார்ஜாய்களின் வேகங்களைப்பற்றி அவர் கேள்விப்பட்டிருக்கிறார். மேலே குறிப்பிட்ட அந்த அழகான பெட்டை நாயைப் பார்த்ததும், தம்முடைய சொந்த மைல்காவுக்கு அது சரியான போட்டி என்று அவர் நினைத்தார்.

பின்னால் அவர்கள் பற்பல விஷயங்களைப்பற்றி பேசிக் கொண்டு போனார்கள். அந்த வருஷத்து தானிய விளைச்சலைப் பற்றி இலாகின் பேச ஆரம்பித்தார். அச்சமயம் சிவப்புப் புள்ளி கொண்ட அந்த பெட்டை நாயை நிக்கலஸ் சுட்டிக் காட்டினார்.

'அது ஒரு அருமையான பெட்டை நாய்' என்று பேச்சுவாக்கில் அவர் சொன்னார். 'அது நல்ல வேகமாய் ஓடுகிறதா?'

'அதைக் குறிப்பிடுகிறீரா? ஆம், அது ஒரு நல்ல நாய். அது எதை துரத்திக்கொண்டு போகிறதோ, அதைப் பிடித்துவிடும்' என்று அந்த சிவப்பு புள்ளி கொண்ட எர்ஜா என்ற பெட்டை நாயைப்பற்றி அலட்சியமாக இலாகின் பதில் அளித்தார். அந்த நாயை ஒரு வருஷத்திற்கு முன்பாக ஒரு பக்கத்து வீட்டுக்காரருக்கு மூன்று அடிமைக் குடும்பங்களை விலையாகக் கொடுத்து அவர் வாங்கி இருந்தார். 'அப்படியானால், உங்கள் பக்கத்தில் கூட விளைச்சல் ஒன்றும் பிரமாதமாய் இல்லை போலிருக்கிறது, கோமகனே?' என்று அவர்கள் முதலில் ஆரம்பித்த உரையாடலுக்கு மீண்டும் திரும்பினார்கள். வாலிபக் கோமகன் தமது பார்ஜாய்களைப் பாராட்டியதற்கு பதில் சொல்லுவதுதான் மரியாதையாய் இருக்கும் என்று இலாகின் நினைத்து அவருடைய பார்ஜாய்களை நோக்கினார். அவற்றில் அகலத்தில் அதிகமாய் இருந்த மைல்கா என்ற பார்ஜாய் அவருடைய கவனத்தைக் கவர்ந்தது. 'அந்த கருப்புப் புள்ளி கொண்ட உம்முடைய நாய் அருமையானது. நல்ல உடல் அமைப்பு கொண்டது' என்று கூறினார். ஆம், அது வேகமாய் ஓடக்கூடியது' என்று நிக்கலஸ் பதில் கூறி தமது மனதிற்குள் நினைத்துக் கொண்டார்; 'இப்பொழுது மட்டும் ஒரு நல்ல முயல் இந்த வயலில் நமக்கு எதிரே வருமானால் அது எப்பேர்ப்பட்ட பார்ஜாய் என்பதை உமக்குக் காட்டுவேன்.' தமது குதிரைக்காரனைப் பார்த்து திரும்பி, யாராவது ஒரு முயலை கண்டு பிடிப்பதாய் இருந்தால் அதற்காக ஒரு ரூபிள் கொடுப்பேன் என்று சொன்னார்.

'வேட்டைகளைப் பற்றியும் நாய்களைப் பற்றியும் எதற்காக சில வேட்டைக்காரர்கள் மிகுந்த பொறாமை கொள்ளுகிறார்கள் என்பதை என்னால் அறிய முடியவில்லை. இப்பொழுது நாம் போய்க்கொண்டு இருக்கிறோமே, இம்மாதிரி சவாரி போவதில்தான், என்னைப் பொருத்தவரையில், நான் சந்தோஷமாய் இருக்கிறேன் என்பதை உமக்குச் சொல்ல முடியும், கோமகனே... இதைவிட சிறந்ததாய் வேறு எது இருக்க முடியும்? (இச்சமயம் நட்டாஷாவுக்காக தமது தொப்பியை தூக்கினார்) மற்றபடி வேட்டைகளில் கிடைத்தவைகளின் தோல்களை எண்ணுவதிலோ, யாருக்கு என்ன கிடைக்கிறது என்பதிலோ எனக்குக் கொஞ்சம் கூட கவலை இல்லை.'

'கண்டிபாய் கூடாது.'

'அல்லது என்னுடைய நாய்கள் எதையும் பிடிக்காமல் இருக்கும்போது மற்றொருவருடைய பார்ஜாய் எதையோ

பிடித்துவிட்டது என்பதற்காக நான் நிலைகுலையவும் மாட்டேன். நான் அனுபவிக்க விரும்புவதெல்லாம் வேட்டையாடுவது ஒன்றுதான். அப்படியல்லவா, கோமகனே? ஏனெனில்...'

'ஆ-ட்டு' என்று காடு கலைப்பவன் ஒரு நீண்ட குரலில் கூவி அங்கே நின்றான். அங்கிருந்த அரிதாளுக்கு மத்தியில் உள்ள ஒரு உயரமான மேட்டில் அவன் நின்று கையில் உள்ள சவுக்கை உயர்த்திக் காட்டிக்கொண்டு மீண்டும் நீளமான குரலில் 'ஆ-ட்டு' என்று கத்தினான். (சவுக்கை உயர்த்தி பிடித்து இம்மாதிரி கத்தினால் அங்கே ஒரு முயல் உட்கார்ந்து இருப்பதை அவன் பார்த்தான் என்பது அர்த்தம்.)

'ஆ, அவன் ஒன்றை கண்டு பிடித்துவிட்டான் என்று நினைக்கிறேன்' என்று இலாகின் அலட்சியமாய் கூறினார். 'நல்லது, நாம் அதை விரட்டிப் பிடிப்போம், கோமகனே.'

'ஆம், நாம் சவாரி போவோம்... நாம் இருவருமே விரட்டுவோமா?' என்று நிக்கலஸ் கேட்டார். தம்முடைய பார்ஜாய்களுக்குப் போட்டியாக மாமாவின் ரூகாய் என்ற நாயையும் எர்ஜா என்ற இலாகினின் நாயையும் போட்டி போட விடுவதற்கு இதுவரை அவருக்கு சந்தர்ப்பம் கிடைத்ததில்லை. 'ஒருவேளை என்னுடைய மைல்காவை தோல்வி அடையும்படி அவை செய்துவிட்டால் என்ன செய்வது?' என்று அவர் நினைத்தார். மாமாவுடனும் இலாகினோடும் முயலைப் பார்த்து அவர் சவாரி விட்டார்.

'ஒரு பெரிய முயலா?' என்று அந்த முயலைப் பார்த்த காடு கலைப்பவனிடம் அவர் நெருங்கியதும் கேட்டார். பரபரப்போடு சுற்றிப் பார்த்து தமது எர்ஜாவுக்காக சீட்டியடித்தார்.

'மைக்கேல் நிக்கானோராவிச், நீர் என்ன செய்யப் போகிறீர்?' என்று மாமாவைப் பார்த்து அவர் கேட்டார்.

ஒரு சோர்வான தோற்றத்தோடு மாமா சவாரி வந்து கொண்டிருந்தார்.

'நான் எப்படி இதில் சேர்ந்து கொள்ள முடியும்? உம்முடைய பார்ஜாய் ஒவ்வொன்றுக்கும் ஒரு கிராமத்தையே விலை கொடுத்து நீர் வாங்கி இருக்கிறீர்! ரொம்ப சரி, வாருங்கள் போகலாம். உம்முடைய நாய்களெல்லாம் ஆயிரக்கணக்கில் பெறுமானவை. நீங்கள் இருவரும் உங்களுக்குள் போட்டி போட்டுக்கொள்ளுங்கள். நான் பார்த்துக்கொண்டு இருக்கிறேன்.'

'ரூக்காய், ஹே, ஹே' என்று அவர் கூச்சலிட்டார். 'ரூகாயுஷ்கா' என்று மீண்டும் அவர் சொன்னார். தம்முடைய சிவந்த பார்ஜாய் மீது அவர் கொண்டுள்ள அன்பையும் நம்பிக்கையையும் இம்மாதிரியாக அவர் வெளியிட்டார். அந்த இரண்டு வயோதிகர்களிடம் ஏற்பட்ட பரபரப்பையும் தனது சகோதரர் அந்த பரபரப்பை மறைக்க முயற்சிப்பதையும் நட்டாஷா பார்த்தாள். அவளும் பரபரப்பு கொண்டிருந்தாள்.

அந்த மேட்டில் பாதி வழியில் தனது சவுக்கை உயர்த்திப் பிடித்துக்கொண்டு அந்த வேட்டைக்காரன் நின்று கொண்டிருந்தான். இவர்கள் அவனைப் பார்த்து மெதுவாக போய்க்கொண்டு இருந்தார்கள். தூரத்தில் ஓடிக்கொண்டிருந்த வேட்டை நாய்கள் அந்த முயலைவிட்டுத் திரும்பின. காடு கலைப்பவர்களும் திரும்பினார்கள். ஆனால் இந்தக் கனவான்கள் மெதுவாகவும் நிதானமாகவும் போய்க் கொண்டிருந்தார்கள்.

'அது எப்பக்கமாக திரும்பிக்கொண்டிருக்கிறது?' என்று அந்த முயலைப் பார்த்த காடு கலைப்பவனிடம் சுமார் நூறு அடிகள் போனதும் நிக்கலஸ் கேட்டார்.

ஆனால் அந்த காடு கலைப்பவன் பதில் சொல்லுவதற்கு முன்பாக, மறுநாள் காலையில் உறைபனி வரப்போகிறது என்பதை வாசனையினால் அறிந்து தூங்குவதற்கு முடியாமல் இருந்த அந்த முயல், ஒரு தாவு தாவியது. அந்த முயலுக்குப் பின்னால் குன்றிலிருந்து கீழ் நோக்கி வேட்டை நாய்கள் குரைத்துக்கொண்டு பாய்ந்து ஓடின. பார்ஜாய்கள் எல்லா பக்கங்களிலிருந்தும் அந்த வேட்டை நாய்களுக்கும் முயலுக்கும் பின்னால் பாய்ந்தன. வேட்டை நாய்களை நிற்கும்படி கூச்சலிட்டார்கள். 'ஆ--ட்டு' என்ற கூச்சலோடு அந்த முயலைப் பிடிப்பதற்காக பார்ஜாய்களை விரட்டிக்கொண்டிருந்தார்கள் அந்த அமைதியான இலாகினும் நிக்கலஸூம் நட்டாஷாவும் மாமாவும் எங்கே போகிறோம். எப்படிப் போகிறோம் என்பதை கொஞ்சமும் அறியாமல், அந்த பார்ஜாய்களையும் முயலையும் மட்டும் பார்த்துக் கொண்டு, அவை தங்களுடைய பார்வையிலிருந்து தப்பிவிடுமோ என்ற பீதி கொண்டு கண்டித்தனமாக பறந்து சென்றார்கள். அவர்கள் வேட்டையாடிக் கொண்டிருந்த முயல் பலமானதாகவும் வேகமாய் ஓடக்கூடிய தாகவும் இருந்தது. அந்த முயல் குதித்து எழுந்தவுடன் உடனே ஓடவில்லை. தனது காதுகளைத் தீட்டிக்கொண்டு நாலா பக்கங்களிலிருந்தும் வந்த குளம்படி ஓசைகளையும் கூச்சல்களையும் கவனித்துக்கேட்டது. ஒரு டஜன் தடவைகள் அது

பாய்ந்து பாய்ந்து போயிருக்கும். ஆனால் வேகமாய் போகவில்லை. அதனால் பார்ஜாய்கள் அதை நெருங்கிக் கொண்டிருந்தன. கடைசியாக தனக்கு ஏற்பட்டிருக்கும் ஆபத்தை உணர்ந்து, தான் போகவேண்டிய திசையைத் தீர்மானித்து, காதுகளைப் பின்னால் மடக்கிக் கொண்டு தலைதெறிக்க ஓடியது. அரிதாளில் அது படுத்துக் கிடந்தது. அதன் முன்புள்ள இடத்தில் மழை காலத்து விதைப்பு நடந்திருந்தபடியால், பூமி மெதுவாய் இருந்தது. அதைப் பார்த்த இரண்டு பார்ஜாய்கள் அதற்கு சமீபத்தில் இருந்தபடியால் அதைக் கண்டு தொடர்ந்து கொண்டிருந்தன. ஆனால் அவை வெகு தூரம் போவதற்கு முன்பாக இலாகினுடைய சிவப்பு புள்ளி கொண்ட எர்ஜா அவைகளைக் கடந்து சென்றது. ஒரு குறிப்பிட்ட தூரத்திற்குள் அது போனதும் பயங்கரமான வேகத்தோடு அந்த முயலின் வாலைக் குறிகொண்டு அதன் மீது பாய்ந்து அதைப் பற்றியதாக நினைத்துக்கொண்டு பந்துபோல தரையில் உருண்டது. ஆனால் அந்த முயல் முதுகை வளைந்து கொடுத்து இன்னும் வேகமாக ஓடியது. எர்ஜாவுக்குப் பின்னால் ஓடிவந்த கருப்பு புள்ளிகொண்ட மைல்கா வேகமாக முயலை நெருங்கிக்கொண்டிருந்தது.

'மிலாஷ்கா, எனது அன்பே' என்று நிக்கலஸ் வெற்றிக் கூச்சல் போட்டார். அந்த முயல் மீது மைல்கா உடனே பாய்ந்து கவ்விவிடும் என்று தோன்றியது. ஆனால் அது முயலைக் கடந்து அப்பால் ஓடியது. இச்சமயம் முயல் உட்கார்ந்துகொண்டது. மீண்டு அந்த அழகிய எர்ஜா முயலுக்குப் பக்கத்தில் வந்தது. அதனுடைய வாலுக்கு சமீபத்தில் வந்ததும் இச்சமயம் மீண்டும் தவறு செய்துவிடக் கூடாது என்பது போலவும், அதன் பின்னங் காலை பற்ற வேண்டும் என்பது போலவும் நினைத்து மத்தியில் உள்ள தூரத்தை அளந்து பார்ப்பது போல அது தயங்கி நின்றது.

'எர்ஜா, கண்ணே' என்று இலாகின் ஊளையிட்டார். அது அவர் குரல் மாதிரி கேட்கவில்லை. அவருடைய வேண்டுகோளை எர்ஜா ஒப்புக்கொள்ளவில்லை. அது முயலை பற்றியிருக்க வேண்டிய அதே வினாடியில் அந்த முயல் மீண்டும் அசைந்து முன்னால் பாய்ந்து குளிர் கால ரை தானிய பயிருக்கும் அரிதாளுக்கும் மத்தியிலுள்ள எல்லை வழியாக ஓடியது. மீண்டும் எர்ஜாவும் மைல்காவும் வண்டியில் பூட்டப்பட்ட இரட்டைக் குதிரைகள் போல ஒரே வரிசையில் ஓடின. முயலுக்குப் பக்கத்தில் அவை நெருங்கியபோதிலும் அந்த எல்லை ஓரமாக ஓடுவது முயலுச்கு சுலபமாய் இருந்தது. ஆகவே அந்த பார்ஜாய்களினால் சீக்கிரமாக அந்த முயலைத் தாண்ட முடியவில்லை.

'ரூகாய், ரூகாயுஷ்கா! ரொம்ப சரி, போகலாம் வாருங்கள்' என்று அச்சமயம் ஒரு மூன்றாவது குரல் கேட்டது. முதுகை வளைத்துக் கொண்டு பூரண வேகத்தோடு ஓடி வந்த மாமாவின் சிவப்பு பார்ஜாய் முன்னால் ஓடிக்கொண்டிருந்த இரண்டு நாய்களையும் கடந்து அப்பால் ஓடியது. முயலுக்கு சமீபமாக ஓடவேண்டிய வேகத்தினால் ஏற்படக்கூடிய கஷ்டங்களை கொஞ்சமும் கவனிக்காமல் அந்த முயலை அந்த எல்லையை விட்டு வயலுக்குள் தள்ளியது. மீண்டும் வேகங்கொண்டு அந்த வயலில் உள்ள சகதியில் முழங்கால் வரை ஆழ்ந்தது. முதுகெல்லாம் சகதியாகும்படி அந்த முயலோடு புரண்டது. அச்சமயம் அவற்றை சுற்றி பார்ஜாய்கள் வளையம் போட்டன. ஒரு வினாடியில் நாய்களைச் சுற்றி எல்லாரும் வந்து சேர்ந்தார்கள். மகிழ்ச்சி அடைந்த மாமா மட்டும் குதிரையிலிருந்து இறங்கி, முயலின் கால் ஒன்றை வெட்டி அதன் ரத்தம் பூராவாக வெளியே போகும்படி அந்த முயலை உலுப்பினார். பரபரப்பான கண்களோடு தம்மைச் சுற்றி ஆவலோடு பார்த்தார். அவருடைய கால்களும் கைகளும் வளைந்து பின்னின. தாம் எதைப் பற்றி யாரிடம் பேசுகிறார் என்பதை அறியாமலேயே அவர் பேசினார். 'ரொம்ப சரி, வாருங்கள் போகலாம். அதுதான் ஒரு உண்மையான நாய்... ஒரு ரூபிள் பார்ஜாய்களையும் ஆயிரம் ரூபிள் பார்ஜாய்களையும், எல்லாவற்றையும் அது தோற்கடித்து விட்டது. ரொம்ப சரி, வாருங்கள் போகலாம்' என்று அவர் சொன்னார். யாரையோ அவர் திட்டிக் கொண்டிருப்பதைப் போலவும், அங்கே நிற்பவர்கள் எல்லாரும் அவருடைய விரோதிகளைப் போலவும், அவரை அவர்கள் அவமதித்து விட்டதைப் போலவும், இப்பொழுதுதான் தமது கட்சியை ஸ்தாபிப்பதில் அவர் வெற்றியடைந்து விட்டதைப் போலவும், அவர் வேகமாய் மூச்சு விட்டுக்கொண்டு கோபமாய் சுற்றிலும் பார்த்தார். 'உங்களுடைய ஆயிரம் ரூபிள்கள் சரக்குகள் எல்லாம் இதோ இருக்கின்றன... ரொம்ப சரி, வாருங்கள் போகலாம்...'

'ரூகாய், இதோ உனக்கு ஒரு முயலின் பாதத்தைத் தருகிறேன்' என்று அவர் சொல்லி அந்த முயலின் சகதியான பாதத்தை கீழே வீசினார். 'உனக்கு அதைப் பெறுவதற்குத் தகுதி உண்டு. ரொம்ப சரி, வாருங்கள் போகலாம்.'

'மூன்று தடவைகள் அந்த முயலை ஓடி மடக்கியதால் அது மிகவும் களைத்துப் போய்விட்டது' என்று நிக்கலஸ் கூறினார். அவர் யார் பேசுவதையும் கவனிக்கவில்லை. தாம் பேசுவதை யாராவது கவனிக்கிறார்களா என்பதைப் பற்றியும் அவர் கவலை கொள்ளவில்லை.

‘ஆனால், அதற்குக் குறுக்காக அப்படி ஓடுவதில் என்ன இருக்கிறது?’ என்று இலாகினுடைய குதிரைக்காரன் கேட்டான்.

‘ஒரு தடவை அதைத் தவறவிட்டு களைத்துப் போகும்படி செய்த பின்பு, ஒரு கேடுகெட்ட நாய்கூட அதைப் பிடித்துவிடலாம்’ என்று இலாகின் அதே சமயத்தில் சொன்னார். வேகமாய் சவாரி வந்ததாலும் பரபரப்பாலும் அவர் இரைத்துக்கொண்டிருந்தார். அதே சமயத்தில் மூச்சு வாங்காமல் இன்ப வெள்ளத்தில் மூழ்கி நட்டாஷா மகிழ்ச்சிக் கூச்சல் போட்டாள். ஒவ்வொருவர் காதையும் செவிடுபடும்படி செய்யக்கூடிய மாதிரியில் அவளுடைய கூச்சல் அவ்வளவு பலமாய் இருந்தது. மற்றவர்கள் எல்லாரும் ஏக காலத்தில் பேசி என்ன சொல்லிக் கொண்டிருந்தார்களோ, அதையேதான் அவள் அந்தக் கூச்சலினால் வெளிப்படுத்தினாள். ஆனால், வேறு சந்தர்ப்பத்தில் அம்மாதிரி அவள் காட்டுக் கூச்சல் போட்டிருந்தால், அவளே அதைக் கண்டு வெட்கம் அடைந்திருப்பாள். அதைக் கேட்ட ஒவ்வொருவரும் ஆச்சரியம் அடைந்திருப்பார்கள். அந்த முயலை முறுக்கிக் கட்டி தமது குதிரை சேணத்தின் வாரில் கட்டினார். அங்கிருந்த ஒவ்வொருவரையும் கண்டிப்பதுபோன்ற தோற்றத்தோடும், ஒருவரிடமும் பேச விரும்பாதது போன்ற தோற்றத்துடனும் அவர் தமது குதிரை மீது ஏறி சவாரி விட்டார். மற்றவர்கள் உற்சாகம் குறைந்து, வெட்கம் அடைந்து அவர் பின்னால் புறப்பட்டார்கள். சிறிது நேரத்திற்குப் பின்னால்தான் அவர்கள் தங்களுடைய அலட்சிய பாவத்தை மீண்டும் பெற முடிந்தது. வெகு நேரம் வரையில் அதனுடைய வளைந்த முதுகில் சகதி படிந்திருந்த அந்த சிவப்பு ரூகாயை எல்லாரும் தொடர்ந்து தொடர்ந்து நோக்கிக்கொண்டே இருந்தார்கள். அதன் வாரில் உள்ள வளையங்கள் கிலுகிலுக்க மாமாவின் குதிரைக்குப் பக்கத்தில் வெற்றிபெற்றவன் போன்ற அமைதியான தோற்றத்தோடு அது போய்க்கொண்டு இருந்தது.

‘நல்லது, வேலையில் இல்லாமல் இருக்கிற வரையில் நானும் மற்ற நாயைப் போலவேதான் இருக்கிறேன். ஆனால், வேலையில் ஈடுபட்டு விட்டால், அப்புறம் நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்’ என்று அதனுடைய பார்வை சொல்லுவதைப் போல நிக்கலஸுக்குத் தோன்றியது.

வெகு நேரத்திற்குப் பின்னால் நிக்கலஸிடம் மாமா சென்று பேச ஆரம்பித்தார். எல்லாம் நடந்து முடிந்த பின்பு, மாமா தம்மிடம் பேசுவதற்காக அருள்கொண்டதைக் கண்டு நிக்கலஸ் பெருமை கொண்டார்.



மாமா லையில் நிக்கலஸிடம் இலாகின் விடைபெற்றுக் கொண்டார். தங்கள் வீட்டை விட்டு வெகுதூரம் வந்து விட்டோம் என்பதை நிக்கலஸ் கண்டார். ஆகவே, தம்முடைய சிறிய கிராமமான மிக்காய்கலாவ்னாவில் அன்றிரவு வேட்டைக் கூட்டத்தைச் சேர்ந்த எல்லாரும் தங்கவேண்டும் என்று மாமா கேட்டதை ஒப்புக் கொண்டார்.

'நீர் என்னுடைய வீட்டில் தங்குவீரானால் அது இன்னமும் நன்றாய் இருக்கும். ரொம்ப சரி, வாருங்கள் போகலாம். கால நிலை ரொம்ப குளிரானதாய் இருக்கிறது. நீர் இளைப்பாறலாம். குஞ்சுக் கோமகளை ஒரு வண்டியில் வைத்து வீட்டிற்கு அனுப்பிவிடலாம்' என்று மாமா சொன்னார்.

மாமாவின் கோரிக்கை அங்கீகரிக்கப்பட்டது. ஒரு வண்டியை கொண்டு வருவதற்காக ஆட்ராட்னோவிற்கு ஒரு வேட்டைக்காரன் போனான். இதற்கு மத்தியில் நட்டாஷாவோடும் பெட்டியா வோடும் மாமாவின் வீட்டிற்கு நிக்கலஸ் சவாரி போனார்.

பெரிதாகவும் சிறிதாகவும் இருந்த ஐந்து ஆண் அடிமைகள் தங்கள் எஜமானரை வரவேற்பதற்காக மண்டப முற்றத்திற்கு ஓடி வந்தார்கள். பல வாலிப, வயோதிக பெண் அடிமைகளும் குழந்தைகளும் அங்கு வந்து இறங்கிய வேட்டைக்காரர்களைப் பார்ப்பதற்காக பின் வாசலில் இருந்து முகத்தை நீட்டிக் கொண்டிருந்தார்கள். குதிரை சவாரி வந்த ஒரு பெண்ணாகிய, சீமாட்டியாகிய நட்டாஷாவின் விஜயம் அவர்களுடைய ஆவலை அதிகரித்தது. அதனால் பலர் அவளிடம் வந்து அவள் முகத்தை வெறித்துப் பார்த்தார்கள். அவள் முன்னால் தாங்கள் நிற்பதையும் மறந்து, அவளைப் பற்றி தாங்கள் சொல்லுவதை அவள் கேட்கவோ அறியவோ கூடிய மனித இனத்தைச் சேர்ந்தவள் அல்ல என்று நினைத்தார்கள். கண்காட்சியில் வைக்கப்பட்டிருக்கும் ஒரு அதிசயமான உருவம்போல அவளை நினைத்தார்கள்.

'ஆரைன்கா, இங்கே பார்! அவள் பக்கவாட்டாக உட்காருவாள். அவள் உட்கார்ந்ததும் அவளுடைய பாவாடை தொங்கிக் கொண்டிருக்கும்... இங்கே பார்! அவளிடம் ஒரு சிறிய வேட்டைக் கொம்பு இருக்கிறது.'

'அட கடவுளே, அவளிடம் இருக்கிற கத்தியைப் பார்த்தாயா!'

'அவள் டார்டார் ஜாதியை சேர்ந்தவளா?'

'எப்படி நீ தலை குப்புற விழாமல் குதிரை மீது இருக்கிறாய்?' என்று அவர்களில் தைரியமானவள் ஒருத்தி நட்டாஷாவை நேரடியாகக் கேட்டாள்.

மாமாவின் சிறிய மரத்தினால் ஆகிய வீடு அங்கிருந்த தோட்டத்தின் மத்தியில் அமைந்திருந்தது. அந்த வீட்டின் மண்டப முற்றத்தில் குதிரையிலிருந்து மாமா இறங்கினார். அங்கு நின்று கொண்டிருந்த வேலைக்காரர்களிடம் விருந்தாளிகளை வரவேற்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளை செய்யும்படியும், அந்த வேலைகளுக்கு அவசியமானவர்களைத் தவிர மற்றவர்கள் போய்விடலாம் என்றும் அதிகாரத்தோடு கூறினார்.

அடிமைகள் எல்லாரும் அங்கிருந்து கலைந்து போனார்கள். நட்டாஷா தனது குதிரையிலிருந்து கீழே இறங்குவதற்கு மாமா உதவி செய்து அவளுடைய கையைப்பற்றிக்கொண்டு அந்த மண்டப முற்றத்தின் ஆடி அசைந்த மரப் படிகளின் மீது அழைத்துச் சென்றார். அந்த வீட்டின் மரச் சுவர்கள் மீது சாந்து எதுவும் பூசப்பட வில்லை. அவ்வளவு சுத்தமாகவும் இல்லை. அங்கு வசித்து வருகிறவர்கள் அதை நன்றாய் சுத்தமாய் வைத்திருக்கவேண்டும் என்று நினைப்பவர்களாய்த் தெரியவில்லை. ஆனால், பூரணமாக அலட்சியம் செய்யப் பட்டதாகவும் தோன்றவில்லை. அதற்குள் நுழைந்தவுடன் புதிய ஆப்பிள்களின் வாசனையும், அங்கு தொங்கவிடப்பட்டிருந்த ஓநாய், நரி ஆகியவைகளின் தோல்களின் வாசனையும் மூக்கில் அடிபட்டது.

முன்னால் உள்ள அறை வழியாக ஒரு சிறிய ஹாலுக்கு விருந்தாளிகளை மாமா அழைத்துச் சென்றார். அங்கே ஒரு மடக்கு மேஜையும், சிவப்பு நாற்காலிகளும் கிடந்தன. அதன் பின்னால் அவர்களை வரவேற்பு அறைக்கு அழைத்துச் சென்றார். அங்கே ஒரு வட்டமான பூவரச மர மேஜையும், ஒரு சோபாவும் கிடந்தன. அதன் பின்னால் தமது சொந்த அறைக்கு அழைத்துச் சென்றார். அங்கே ஒரு நிலை குலைந்த சோபாவும், ஒரு கிழிந்த கம்பளமும், சுவோராவ், அந்த வீட்டுக்காரரின் தாய் - தந்தையர் ஆகியவர்களின் படங்களும், ராணுவ உடையிலுள்ள அந்த வீட்டுக்காரரின் படமும் காணப்பட்டன. அந்த அறையில் புகையிலையின் பலமான நெடியும் நாய்களின் நெடியும் மூக்கைத் துளைத்தன. கீழே அமர்ந்து சௌகர்யமாக உட்கார்ந்து கொள்ளும்படி விருந்தாளிகளிடம் மாமா சொல்லிவிட்டு அந்த அறையை விட்டு வெளியே போனார். தனது முதுகில் காணப்பட்ட சகதியோடு ரூகாய் அந்த அறைக்குள் வந்து

சோபாவில் படுத்துக்கொண்டது. தன்னுடைய நாக்கினாலும் பற்களாலும் தன்னை சுத்தம் செய்து கொண்டிருந்தது. அந்த அறையிலிருந்து ஒரு ஆளோடி போயிற்று. அதன் மத்தியில் கிழிந்த திரைத் துணிகளால் ஒரு தடுப்பு செய்யப்பட்டிருந்தது தோன்றியது. அதற்குப் பின்னாலிருந்து பெண்களும் சிரிப்புகளும் முணுமுணுப்பு களும் கேட்டன. நட்டாஷாவும் நிக்கலஸும் பெட்டியாவும் தங்கள் மீது மூடியிருந்த போர்வைகளை எடுத்துவிட்டு சோபாவில் அமர்ந்தார்கள். முழங்கையில் சாய்ந்துகொண்டு பெட்டியா உடனே தூங்கிவிட்டான். நட்டாஷாவும் நிக்கலஸும் பெட்டியாவும் மௌனமாய் இருந்தார்கள். அவர்களின் முகங்கள் பிரகாசமாய் இருந்தன. அவர்கள் மிகுந்த மகிழ்ச்சியோடு மிகுந்த பசியோடும் இருந்தார்கள். அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்தார்கள். (வேட்டை முடிந்து விட்டபடியால், திரும்பி வந்து வீட்டில் தங்கியிருக்கிற படியால், தம்முடைய சகோதரி மீது தம்முடைய ஆண்மையின் உயர் நிலையை இன்னமும் காட்டுவதற்கு அவசியம் இல்லை என்று நிக்கலஸ் நினைத்தார்.) நட்டாஷா நிக்கலஸைப் பார்த்து கண்ஜாடை காட்டினாள். உடனே அவர்கள் தங்களை அடக்க முடியாமல் கணீர் என்ற தொனியில் பலமாய் சிரிக்க ஆரம்பித்தார்கள். எதற்காக அவர்கள் சிரிக்கிறார்கள் என்ற ஒரு போலி காரணத்தை அவர்கள் தயாராக்கிக் கொள்ளுவதற்கு முன்பாகவே அவர்களின் சிரிப்பு ஆரம்பமாய்விட்டது.

சிறிது நேரத்தில் ஒரு கோசாக் கோட்டு அணிந்து, நீல நிற கால் சட்டைகள் அணிந்து, உயரமான ஜோடுகள் அணிந்து அறைக்குள் மாமா வந்தார். அந்த உடையை ஆட்ராட்னோவில் மிகுந்த வேடிக்கையுடனும் ஆச்சரியத்துடனும் நட்டாஷா மதிப்பிட்டாள். அதே உடையை இப்பொழுது ரொம்ப பொருத்தமானது என்றும், நீளமான பின் தொங்கல் உள்ள கோட்டைவிட இது மோசமானது அல்ல என்றும் நினைத்தாள். மாமாவும் மிகுந்த உற்சாகத்தோடு இருந்தார். சகோதரரும் சகோதரியும் சிரித்ததை அவமதிப்பாக எடுத்துக் கொள்ளவில்லை. (அவருடைய வீட்டு வாழ்க்கையைப் பற்றி அவர்கள் ஒரு வேளை சிரித்துக்கொண்டிருக்கலாம் என்ற நினைப்பு அவர் மண்டையில் ஏறவில்லை) அவரும் அந்த இயற்கையான களிப்பில் கலந்துகொண்டார்.

'அதுதான் சரி, வாலிபக் கோமகளே; ரொம்ப சரி, வாருங்கள் போகலாம். அவளைப் போல ஒருவளை நான் பார்த்ததே இல்லை' என்று சொல்லிவிட்டு, நிக்கலஸுக்கு ஒரு சுங்கானைக் கொடுத்தார். அந்த சுங்கான் நீளமாய் இருந்தது. சிறிதாய் வெட்டப்பட்ட மற்றொரு சுங்கானை தமது மூன்று விரல்களால் லாவகமாய்

எடுத்தார். 'ஒரு ஆண் பிள்ளையைப் போல நாள் பூராவாக அவள் சவாரி செய்தாள். என்றாலும் எப்பொழுதும் போலவே உற்சாகமாய் இருக்கிறாள்.'

அறைக்குள் மாமா திரும்பி வந்த பின்பு, வெறும் காலோடுள்ள ஒரு பெண்ணால் கதவு திறக்கப்பட்டது. பருத்த, சிவந்த, நல்ல தோற்றமுள்ள சுமார் நாற்பது வயதுள்ள இரட்டை நாடியும் சிவந்த உதடுகளும் கொண்ட ஒரு பெண் ஒரு பெரிய தாம்பாளம் நிறைய ஆகாரங்களைக் கொண்டுவந்தாள். உபசரிப்புப் பெருந்தன்மையோடு பார்வையிலும் ஒவ்வொரு செய்கையிலும் கனிவு காட்டி, அந்த விருந்தாளிகளை அவள் நோக்கி ஒரு இனிமையான புன்னகையோடும் மரியாதையுடனும் தலை வணங்கினாள். அவள் உடம்பு மிகவும் பருத்திருந்த போதிலும் அவளுடைய வயிறும் மார்பும் முன்னால் நீண்டு பின்னால் தலைசாய்ந்து இருந்தபோதிலும் மாமாவின் வீட்டுக்காரியான இந்தப் பெண் வெகு சரளமாக நடமாடி வந்தாள். அவள் மேஜையின் பக்கத்தில் போய் அந்த தாம்பாளத்தை வைத்தாள். தனது பருத்த வெள்ளைக் கைகளால் அந்த தட்டிலிருந்து புட்டிகளையும் வெவ்வேறு வகையான ஆகாரத் தட்டுகளையும் எடுத்து மேஜை மீது ஒழுங்காய் வைத்தாள். அவள் அதைச் செய்து முடித்ததும் அதைவிட்டு அகன்று தனது முகத்தில் ஒரு புன்னகையோடு கதவு பக்கத்தில் நின்றாள். 'இதோ நான் நிற்கிறேன். நான்தான் அவள். மாமா எப்பேர்ப்பட்டவர் என்பதை இப்பொழுது உங்களால் புரிந்துகொள்ள முடிகிறதா?' என்று அவளுடைய தோற்றம் ராஸ்டோவுக்கு கூறியது ஒருவர் எப்படி புரிந்துகொள்ளாமல் இருக்க முடியும்? நிக்கலஸ் மட்டும் அல்ல, நட்டாஷாகூட புரிந்துகொண்டாள். அந்த அனீசியா பெடாராவ்னா நுழைந்தபோது மாமாவின் நெறித்த புருவத்தையும், மகிழ்ச்சியான சமாதான புன்னகையையும், அதனால் அவருடைய உதடுகள் சிறிது கோணி நிற்பதையும் அவர்கள் புரிந்து கொண்டார்கள். அந்த தாம்பாளத்தில் மூலிகை - ஒயின் ஒரு புட்டியும், பற்பல விதமான வாட்கா மதுவும், ஊறுகாய் போட்ட காளான்களும், வெண்ணெயில் தயாரிக்கப்பட்ட கேக்குகளும், அடையில் உள்ள தேனும், புளிக்க வைக்கப்பட்ட தேனும், ஆப்பிள்களும், வறுக்கப்பட்டதும் வறுக்கப்படாததுமான விதைகளும், விதைகளும் தேனும் கலந்து தயாரிக்கப்பட்ட இனிப்பு பதார்த்தங்களும் காணப்பட்டன. அதன் பின்னால் அப்பொழுதுதான் வறுக்கப்பட்ட கோழிக்குஞ்சையும், பன்றியின் தொடைக் கறியையும், தேனில் ஊறப்போட்ட பதார்த்தங்களையும்,

சர்க்கரையில் ஊறப்போட்ட பதார்த்தங்களையும் அவள் கொண்டு வந்தாள்.

இவையெல்லாம் அனீசியா பெடாராவ்னா வீட்டுக் காரியங்களை மேற்பார்ப்பதால் ஏற்பட்ட பலன்கள். இவைகளையெல்லாம் அவளே சேகரித்து அவளே தயாரித்தாள். அவற்றில் உள்ள வாசனையிலும் ருசியிலும் அனீசியா பெடாராவ்னாவின் கைத்திறன் காணப்பட்டது. அவளுடைய இனிமையும் சுத்தமும் வெள்ளை நிறமும் மனோகரமான புன்னகைகளும் அவற்றில் கலந்து காணப்பட்டன.

'இதைக் கொஞ்சம் சாப்பிடுங்கள், சிறிய சீமாட்டிக் கோமகளே' என்று அவள் ஒரு தட்டிற்குப் பின்னால் மற்றொரு தட்டாக நட்டாஷாவிற்கு முன்பாக வைக்கும்போதெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

ஒவ்வொன்றையும் நட்டாஷா அருந்தினாள். அம்மாதிரியான வெண்ணெய் கேக்குகளையும், அம்மாதிரியான மணம் மிகுந்த ஜாம்மையும், அம்மாதிரியான தேனும் வித்தும் கலந்த இனிப்புப் பதார்த்தங்களையும், அம்மாதிரியான கோழிக் குஞ்சையும் அவள் எங்கும் எப்போதும் பார்க்கவோ என்றும் அருந்தவோ இல்லை என்றும் அவள் நினைத்தாள்.

சாப்பாட்டிற்குப் பின்னால் பிராந்தி அருந்திக்கொண்டிருந்த போது, கடந்தகால வேட்டைகளைப் பற்றியும், எதிர்கால வேட்டைகளைப் பற்றியும், ரூகாயைப் பற்றியும், இலாகினுடைய நாய்களைப் பற்றியும் ராஸ்டோவும் மாமாவும் பேசிக் கொண்டிருந்தார்கள். நட்டாஷா சோபாவில் நிமிர்ந்து அமர்ந்து ஜொலிக்கும் கண்களுடன் அந்தப் பேச்சுகளைக் கேட்டுக் கொண்டிருந்தாள். ஏதாவது சாப்பிடட்டும் என்பதற்காக பெட்டியாவை பல தடவைகளில் அவள் எழுப்ப முயன்றாள். ஆனால் அவன் கண் விழிக்காமல் சம்பந்தமில்லாத வார்த்தைகளை பிதற்றிக் கொண்டிருந்தான். இந்தப் புதிய சூழ்நிலையில் சந்தோஷமும் உள்ளக் கிளர்ச்சியும் நட்டாஷா கொண்டிருந்த படியால், தன்னை வீட்டிற்கு அழைத்துப் போக வண்டி சீக்கிரமாக வந்து விடுமே என்பதைப் பற்றித்தான் அவள் பயந்து கொண்டிருந்தாள். முதல் தடவையாக ஒருவரின் வீட்டிற்கு நண்பர்கள் விஜயம் செய்யும்போது ஏற்படக் கூடியதைப் போல, சிறிது தயக்கத்திற்குப் பின்னால் விருந்தாளிகளின் மனதிலுள்ள ஒரு நினைப்பிற்கு பதில் சொல்லுவதைப் போல மாமா பேசினார்:

'இதோ, நீங்களே பாருங்கள். இம்மாதிரியாகத்தான் என்னுடைய வாழ்வின் கடைசி நாட்களைக் கழித்துக் கொண்டிருக்கிறேன்... மரணம் வரப்போகிறது. ரொம்ப சரி, வாருங்கள் போகலாம். எதுவும் நிலைத்து நிற்கப் போவதில்லை. அப்படியானால் எதற்காக ஒருவருக்குக் கெடுதல் செய்யவேண்டும்?'

இதை அவர் சொல்லியபோது மாமாவின் முகம் மிகுந்த முக்கியவத்துவம் கொண்டதாயும் அழகாயும்கூட காணப்பட்டது. அவரைப் பற்றிய நல்ல விஷயங்களை, தம்முடைய தந்தையிட மிருந்தும் அக்கம் பக்கத்தாரிடமிருந்தும் ராஸ்டோவ் இதற்கு முன்னால் கேள்விப் பட்டவைகளை தம்மை அறியாமலேயே நினைவு கூர்ந்தார். அந்த மாகாணம் முழுவதிலுமே மிகுந்த கண்ணியமானவர் என்றும் சுயநலமில்லாத பித்தன் என்றும் மாமா பெயர் பெற்றிருந்தார். குடும்ப விவகாரங்களைத் தீர்த்து வைப்பதற்கு அவரை அழைப்பார்கள். தர்ம கர்த்தாவாக அவரை நியமிப்பார்கள். தங்களுடைய ரகசியங்களை அவரிடம் சொல்லுவார்கள். நீதிபதி பதவிக்கும் மற்ற பதவிகளுக்கும் அவரைத் தேர்ந்தெடுப்பார்கள். ஆனால் சர்க்கார் உத்தியோகங்களை அவர் எப்பொழுதுமே பிடிவாதமாக மறுத்து வந்திருக்கிறார். மழை காலத்திலும் இளவேனில் காலத்திலும் தம்முடைய குதிரை மீது சவாரி செய்து கொண்டு இருப்பார். குளிர் காலத்தில் தமது வீட்டிலேயே தங்கியிருப்பார். வசந்த காலத்தில் தமது தோட்டத்தில் படுத்திருப்பார். இம்மாதிரியாக அவர் தமது வாழ்க்கையை கடத்தி வந்தார்.

'நீர் ஏன் சர்க்கார் சேவகத்தில் சேரக்கூடாது, மாமா?'

'நான் ஒரு தடவை சேர்ந்தேன். பின்னால் விட்டுவிட்டேன். நான் அதற்கு பொருத்தமானவன் அல்ல. ரொம்ப சரி, வாருங்கள் போகலாம். அந்த சேவகத்தில் எனக்கு தலையோ வாலோ புரியவில்லை. அதெல்லாம் உமக்குத்தான் சரி. அதற்கு வேண்டிய மூளை எனக்கில்லை. வேட்டையாடுவது என்பது வேறு விஷயம் - ரொம்ப சரி, வாருங்கள் போகலாம். அங்கே, அந்தக் கதவைத் திறவுங்கள். ஏன் அதை அடைத்தீர்கள்?' என்று அவர் கூச்சலிட்டார்.

அந்த ஆளோடியின் கடைசியில் உள்ள வாசலுக்கு அப்புறம், வேட்டையாடும் சேவகர்களின் அறை இருந்தது.

ஒரு பெண்ணின் வேகமான காலடி ஓசை கேட்டது. அந்த அறையின் கதவு திறக்கப்பட்டது. அங்கிருந்து பாலாலாய்கா (மூன்று கம்பிகள் கொண்ட ஒரு ருஷ்ய வாத்தியம்) என்ற வாத்தியத்தின் ஒலி தெளிவாய் கேட்டது. அந்தக் கலையில் மிகவும்

தேர்ச்சியுள்ள ஒருவர் அதை வாசிப்பதாகத் தோன்றியது. இந்த வாத்திய ஒலியை சிறிது நேரம் நட்டாஷா கேட்டிருந்துவிட்டு அதை நன்றாய் கேட்பதற்காக ஆளோடிக்கு எழுந்து போனாள்.

'அதுதான் மைட்கா, எனது வண்டிக்காரன்... நான் அவனுக்கு ஒரு நல்ல பாலாலாய்கா வாங்கிக் கொடுத்திருக்கிறேன். எனக்கு அதன் மீது மிகுந்த பிரியம் உண்டு' என்று மாமா சொன்னார்.

வேட்டையிலிருந்து மாமா திரும்பி வந்த பின்பு, அந்த வேட்டைச் சேவகர்களின் அறையில் அமர்ந்து, பாலாலாய்காவை மைட்கா வாசிப்பது வழக்கம். அம்மாதிரி சங்கீதத்தில் மாமாவுக்கும் மிகுந்த பிரியம் உண்டு.

'எவ்வளவு நன்றாய் இருக்கிறது! உண்மையிலேயே ரொம்ப நன்றாய் இருக்கிறது!' என்று தம்மை அறியாத அலட்சியத்தோடு நிக்கலஸ் கூறினார். அந்த சங்கீதம் அவருக்கு மிகவும் இன்பமாய் இருக்கிறது என்பதைக் கூறுவதற்கு வெட்கப் படுகிறவரைப்போல அவருடைய பேச்சு காணப்பட்டது.

'ரொம்ப நன்றாய் இருக்கிறதா?' என்று நட்டாஷா தனது சகோதரரின் தொனியைக் கேட்டு கண்டிப்பதுபோலப் பேசினாள். 'ரொம்ப நன்றாய் இருக்கிறது என்று சொல்லுவது சரியல்ல. அது அசல் ஆனந்தமாகவே இருக்கிறது.'

மாமாவின் காளான்களும் தேனும் பிராந்தியும் எப்படி உலகத்திலேயே மிகச் சிறந்தனவாக அவளுக்குத் தோன்றினவோ, அதே மாதிரியாக அந்த வினாடியில் அந்தப் பாட்டு சங்கீத ஆனந்தத்தின் சிகரமாக அவளுக்குத் தோன்றியது.

அந்த பாலாலாய்கா வாசித்து முடிந்ததும், அந்த வாசல் வழியாக 'இன்னும் கொஞ்சம், தயவு செய்து இன்னும் கொஞ்சம்' என்று நட்டாஷா கூச்சலிட்டாள். அந்த வாத்தியத்தை மைட்கா மீண்டும் சுருதி கூட்டி, 'எனது சீமாட்டியே' என்ற பாட்டின் ராகத்தை வாசிக்க ஆரம்பித்தான். தமது தலையை ஒரு பக்கமாக சாய்த்து, சிறிது புன்னகைகொண்டு மாமா அதை கவனித்துக் கேட்டு வந்தார். அந்தப் பல்லவியை நூறு தடவைகள் திரும்பத் திரும்ப அவன் வாசித்தான். பாலாலாய்காவை பல தடவைகள் சுருதி கூட்டி அதே ராகத்தை திரும்பத் திரும்ப வாசித்து வந்தான். ஆனால் அதைக் கேட்டவர்களுக்கு அதனால் களைப்பு ஏற்படவில்லை. மேலும் மேலும் கேட்கவே விரும்பினார்கள். அனீசியா பெடாராவ்னா உள்ளே வந்து, தனது கனத்த சரீரத்தை கதவில் சாய்த்து நின்று கொண்டிருந்தாள்.

'உனக்கு அதைக் கேட்க பிரியமாய் இருக்கிறதா?' என்று மாமா மாதிரியே அதே புன்சிரிப்போடு நட்டாஷாவைப் பார்த்து அவள் சொன்னாள். 'அவன் ரொம்ப நன்றாக வாசிப்பான்.'

'அவன் அந்த பாகத்தை சரியாய் வாசிக்கவில்லை' என்ற திடீரென்று ஒரு வேகமான அசைப்போடு மாமா கூறினார். 'இந்த இடத்தில் அவன் வெடித்திருக்கவேண்டும் - ரொம்ப சரி, வாருங்கள் போகலாம் - அவன் வேகமாய் வெடித்திருக்க வேண்டும்.'

'அப்படியானால் நீரும் வாசிப்பீரா?' என்று நட்டாஷா கேட்டாள்.

மாமா பதில் சொல்லவில்லை. ஆனால் புன்முறுவல் கொண்டார்.

'அனீசியா, என்னுடைய வாத்தியத்தில் உள்ள கம்பிகள் எல்லாம் சரியாய் இருக்கின்றனவா என்று போய் பார்த்துவா. அதை வெகு காலமாக நான் தொடவே இல்லை. ரொம்ப சரி, வாருங்கள் போகலாம். அதை வாசிப்பதை நான் விட்டு விட்டேன்.'

அனீசியா பெடாராவ்னா மென்மையாக அடிகளை எடுத்து வைத்து தனக்குக் கொடுக்கப்பட்ட வேலையை கவனிக்க இஷ்டமுடன் சென்றாள். அந்த வாத்தியத்தை அவள் எடுத்து வந்தாள்.

யாரையும் பார்க்காமல் அதன் மீதுள்ள தூசியை மாமா ஊதினார். தமது மெலிந்த விரல்களால் அதைத் தட்டிப் பார்த்து, அதற்கு சுருதி கூட்டி தமது சாய்வு நாற்காலியில் அமர்ந்தார். அந்த வாத்தியத்தை கையில் எடுத்து தமது இடது முழங்கையை நாடக பாணியில் வளைத்து அனீசியா பெடராவ்னாவைப் பார்த்து கண் சிமிட்டி ஒரு கம்பியை மீட்டினார். கணீர் என்ற சப்தத்துடன் அது ஒலித்தது. அதன் பின்னால் அமைதியாக, மெதுவாக, நம்பிக்கையாக அந்த வாத்தியத்தை வாசிக்க ஆரம்பித்தார். 'எனது சீமாட்டியே' என்ற பாட்டின் ராகத்தை அவர் வாசிக்கவில்லை. ஆனால், எல்லாரும் அறிந்த 'தெருவில் வந்தாளே, ஒரு கன்னி' என்ற பாட்டின் ராகத்தை வாசித்ததார். தாளம் தவறாமல் மிகுந்த நுணுக்கமாக அவர் வாசித்த படியால் அவருடைய சங்கீதம் நிக்கலஸுடையவும் நட்டாஷா வுடையவும் உள்ளங்களில் மயிர்க் கூச்சலைக் கிளப்பியது. அனீகியா பெடாராவ்னா எம்மாதிரியான களிப்பை அங்கே பரப்பிக் கொண்டிருந்தாளோ, அதே களிப்பு அவர்களின் உள்ளங்களிலும் கிளர்ச்சி கொள்ளுமாறு அந்த சங்கீதம் செய்தது. அனீசியா பெடாராவ்னாவின் முகம் சிவந்தது. கைக்குட்டையினால் தனது

முகத்தை மறைத்து சிரித்துக்கொண்டே அறையைவிட்டு வெளியே போனாள். ஜாக்கிரதையாகவும் உற்சாகமுள்ள உறுதியுடனும், அனீசியா பெடாராவ்னா எந்த இடத்தில் நின்றாளோ, அந்த இடத்தைப் பார்த்து ஒரு மாறுதல் கொண்ட, ஊக்கம் கொண்ட தோற்றத்துடனும் மாமா வாசித்து வந்தார். சங்கீதத்தின் காலம் துரிதமாய் போகப் போக மாமாவின் முகத்தில் அவருடைய நரைத்த மீசைக்கு அடியில் ஒரு பக்கத்தில் சிறிது சிரிப்பு காணப்படுவதாகத் தோன்றியது. அதோடு அவருடைய விரல்கள் வேகமாய் வாசித்துக் கொண்டிருந்தபோது சில சமயங்களில் கம்பிகள் க்ரீச்சிட்டன.

‘என்ன இனிமை! என்ன இனிமை! மேலும் வாசியுங்கள், மாமா. மேலும் வாசியுங்கள்’ என்று வாசித்து முடித்ததும் நட்டாஷா கூச்சலிட்டாள். அவள் குதித்தெழுந்து, அவரைக் கட்டி அணைத்து முத்தமிட்டாள். ‘நிக்கலஸ், நிக்க்லஸ்’ என்று தனது சகோதரரைப் பார்த்துக் கூப்பிட்டாள். ‘என்னை இம்மாதிரி ஆட்டி வைப்பது எது?’ என்று அவரை அவள் கேட்பது போல அவள் கூப்பிட்டது காணப்பட்டது.

மாமாவின் வாசிப்பினால் நிக்கலஸூம் மிகுந்த மகிழ்ச்சி கொண்டார். அந்த ராகத்தை மாமா மீண்டும் வாசித்தார். அந்த வாசல் வழியில் அனீசியா பெடாராவ்னாவின் புன்னகை பூத்த முகம் மீண்டும் தோன்றியது. அவளுக்குப் பின்னால் மற்றவர்களின் முகங்களும் தோன்றின...

‘தெளிந்த இனிய நீர் கொண்டு,
நில்லாய், அன்பான கன்னியே,
நின்னை வேண்டுகின்றேன்’

என்று மாமா மீண்டும் வாசிக்க ஆரம்பித்து, தமது விரல்களை கம்பிகள் மீது சாமர்த்தியமாக இழைத்தார். பின்னால் திடீரென்று வாசிப்பதை நிறுத்தி தமது தோள்களைக் குலுக்கினார்.

‘இன்னும் வாசியுங்கள், மாமா கண்ணே’ என்று நட்டாஷா, தன்னுடைய உயிரே அதில் தொங்கிக் கொண்டிருப்பது போல, ஒரு மன்றாடும் குரலில் புலம்பினாள்.

மாமா எழுந்தார். அவருக்கு உள்ளே இரண்டு மனிதர்கள் இருப்பதைப் போல தோன்றினார். இருவரில் ஒருவர் அந்தக் குதூகலப் பேர்வழியைப் பார்த்து சிரத்தையோடு புன்னகை காட்டினார். அந்தக் குதூகலப் பேர்வழி நாட்டு-நடனத்தை ஆடுவதற்கான தெளிவான முகபாவத்தைக் காட்டினார்.

‘அப்படியானால், எனது மருமகளே’ என்று அவர் கூவி நட்டாஷாவைப் பார்த்து கையை ஆட்டி அந்தக் கையினால் ஒரு கம்பியை மீட்டினார்.

நட்டாஷா தனது தோள்களில் போர்த்திக் கொண்டிருந்த சால்வையை எடுத்து எறிந்துவிட்டு, மாமாவை நோக்கி ஓடினாள். அந்த அறையின் மத்தியில் நின்று, கைகளை இடுப்பில் வைத்து, தனது தோள்களை அசைத்து நடன பாவத்தை மேற்கொண்டாள்.

ருஷ்யாவில் குடியேறிய ஒரு பிரஞ்சு வாத்திச்சியால் கல்வி கற்பிக்கப்பட்ட இந்த வாலிபக் கோமகள், இந்த ருஷ்ய சால்வை நடனத்திற்கு உரிய ஆர்வத்தையும் தன்மையையும் எங்கே, எப்படி, எப்பொழுது கற்றுக் கொண்டாள்? வெகு காலத்திற்கு முன்பாகவே இந்த நினைப்புகளும் சின்னங்களும் அவளிடமிருந்து மறைந்து போய் இருக்க வேண்டும் என்றல்லவா ஒவ்வொருவரும் நினைத்திருப்பார்கள்? ஆனால், அந்த ஈடு இணையற்ற, கற்றுக்கொடுக்க முடியாத, அந்த ருஷ்ய பாவங்களை அவளுடைய ஆர்வமும் அசைப்புகளும் அப்படியே காட்டின. அவளிடமிருந்து மாமாவும் அவற்றையே எதிர்பார்த்தார். தனது நடன பாவத்தில் அவள் நின்று வெற்றியோடு புன்னகை காட்டி, பெருமையோடு மறைவான களிப்போடும் தோன்றினாள். அவளால் சரியாக ஆட முடியுமா என்று நிக்கலஸுக்கும் மற்றவர்களுக்கும் ஏற்பட்டிருந்த சந்தேகம் அவளுடைய பாவத்தைப் பார்த்ததும் மறைந்து போயிற்று. அவர்கள் எல்லாரும் அவளை மெச்ச ஆரம்பித்தார்கள்.

அவள் கணக்காக, மிகுந்த கணக்காக ஆட ஆரம்பித்தாள். அந்த நடனத்திற்கு வேண்டிய சவுக்கத்தை அனீசியா பெடாராவ்னா அவளிடம் கொடுத்தாள். அச்சமயம் இந்த ஒல்லிய, ஒயிலான கோமகளின் ஆட்டத்தைக் கண்டு அவள் சிரித்துக்கொண்டிருந்தாலும், அவள் கண்களில் நீர் நிறைந்திருந்தது. பட்டாடைகளையும் வெல்வெட்டுகளையும் அணிந்து வளர்ந்து வந்த இந்த ஒயிலான கோமகள் தன்னைவிட எவ்வளவோ மாறுபட்டவள்; என்றாலும் அனீசியாவின் உள்ளத்திலும், அனீசியாவின் தாய்-தந்தையர்-அத்தை இன்னமும் ஒவ்வொரு ருஷ்ய ஆண்-பெண்ணுடைய உள்ளத்திலுமுள்ள ஆசாபாசங்களை இந்த ஒயிலான கோமகள் அறிந்து கொண்டிருந்தாள்.

'நல்லது, குஞ்சுக் கோமகளே; ரொம்ப சரி, வாருங்கள் போகலாம்' என்று மாமா, அந்த நடனம் முடிந்ததும் மகிழ்ச்சியான சிரிப்போடு கூவினார். 'வெகு நன்றாய் ஆடினாய், மருமகளே, இப்பொழுது உனக்குக் கணவனாக வரும்படி ஒரு அருமையான வாலிபனைக் கண்டு பிடிக்க வேண்டும். ரொம்ப சரி, வாருங்கள் போகலாம்.'

'கணவனை ஏற்கெனவே தேர்ந்தெடுத்தாய் விட்டது' என்று நிக்கலஸ் புன்னகையோடு கூறினார்.

'ஓ?' என்று மாமா ஆச்சரியத்தோடு கூறி, கேள்விக் குறியோடு நட்டாஷாவை நோக்கினார். அவள் மகிழ்ச்சிப் புன்னகையோடு தனது தலையை ஆட்டினாள்.

'அவர் எப்பேர்ப்பட்டவர், தெரியுமா?' என்றாள் அவள். அதை அவள் சொல்லி முடித்ததும் அவள் உள்ளத்தில் ஒரு புது வகையான சிந்தனை வரிசைகளும் உணர்ச்சிகளும் தோன்றின. 'கணவனை ஏற்கெனவே தேர்ந்தெடுத்தாய்விட்டது என்று சொல்லி நிக்கலஸ் காட்டிய புன்னகைக்கு என்ன அர்த்தம்? அதைப் பற்றி அவர் சந்தோஷப் படுகிறாரா, இல்லையா? இம்மாதிரியான மகிழ்ச்சிகளை என்னுடைய பால்கோன்ஸ்கி புரிந்துகொள்ள மாட்டார் என்றும், அங்கீகரிக்க மாட்டார் என்றும் நிக்கலஸ் நினைப்பதைப் போல் இருக்கிறது. ஆனால், என்னுடைய பால்கோன்ஸ்கி இவற்றையெல்லாம் புரிந்து கொள்ளுவார்' என்று அவள் நினைத்தாள். அவளுடைய முகம் திடீரென்று கடுமையாகியது. ஆனால் ஒரு வினாடிதான் அம்மாதிரி இருந்தது. 'அதையெல்லாம் பற்றி இப்பொழுது எதற்காக நினைக்க வேண்டும்?' என்று அவள் தனக்குத்தானே சொல்லிக் கொண்டு, புன்னகையோடு மாமாவின் பக்கத்தில் அமர்ந்து, இன்னும் கொஞ்சம் பாடும்படி அவரைக் கெஞ்சினாள்.

மற்றொரு பாட்டையும் ஒரு நடன கீதத்தையும் மாமா வாசித்தார். சிறிது நேரத்திற்குப் பின்னால் தமது தொண்டையை சரி செய்துகொண்டு, தமக்குப் பிரியமான வேட்டைப் பாட்டைப் பாட ஆரம்பித்தார். அதாவது:

'நேற்றிரவு நேரத்திலே
இருண்டு வரும் வேளையிலே
விழுந்தது பார் பனி அதுவே
மிக எளிதாக, மிக இலேசாக...'

விவசாயிகள் பாடுவதைப் போலவே மாமாவும் பாடினார். அதாவது, பாட்டின் முழு அர்த்தமும் வார்த்தைகளில்தான் இருக்கிறது என்றும், ராகம் என்பது தானாக வந்து சேர்ந்து கொள்ளும் என்றும், வார்த்தைகளை நீக்கிவிட்டால் அங்கு ராகம் என்பது கிடையாது என்றும் வார்த்தைகளின் அளவுகளைக் காட்டுவதற் காகவே ராகம் இருக்கிறது என்றும், எப்படி விவசாயிகள் பூரணமான இயற்கையான நம்பிக்கை கொண்டு பாடுவார்களோ, அதே மாதிரி மாமாவும் பாடினார். இதன் பலனாக புறக்கணிக்கப்பட்ட அந்த ராகம் பட்சியின் சங்கீதத்தைப் போல மிகச் சிறப்பாக இருந்தது. மாமாவின் பாட்டைக் கேட்டு நட்டாஷா இன்ப வெள்ளத்தில்

மூழ்கினாள். ஹார்ப் என்ற வாத்தியத்தை வாசிப்பதை நான் விட்டுவிடுவதென்றும், பாலாலாய்கா என்ற அந்த கிட்டார் வாத்தியத்தையே வாசிப்பதென்றும் அவள் தீர்மானித்தாள். மாமாவின் கிட்டார் வாத்தியத்தை வாங்கி அதில் சில பாட்டுகளை வாசித்தாள்.

ஒன்பது மணிக்குப் பின்னால் இரண்டு வண்டிகளும் குதிரை மீது ஏறியவர்களும் நட்டாஷாவையும் பெட்டியாவையும் அழைத்துக் கொண்டு போவதற்காக அவர்களைத் தேடிக்கொண்டு வந்தார்கள். அவர்கள் எங்கே இருப்பார்கள் என்பதை அறியாமல் கோமகனும் கோமகளும் மிகுந்த கவலை கொண்டிருப்பதாக வந்தவர்களில் ஒருவன் சொன்னான்.

ஒரு கட்டையைத் தூக்கிக்கொண்டு போவதைப் போல பெட்டியாவைத் தூக்கி அந்த இரண்டு வண்டிகளில் பெரிதாய் இருந்த வண்டியில் அவனைப் படுக்க வைத்தார்கள். நட்டாஷாவும் நிக்கலஸூம் மற்றொரு வண்டியில் ஏறிக்கொண்டார்கள். நன்றாக வெதுவெதுப்பாய் இருக்கும்படி நட்டாஷாவை மாமா மூடி ஒரு புதிய கனிவோடு அவளிடம் விடைபெற்றுக்கொண்டார். பாலம் வரையில் அவர்களுடன் சென்றார். அந்தப் பாலத்தின் மீது வண்டி செல்ல முடியாது. ஆகவே சிறிது தூரம் ஆற்றின் கரையோரமாகச் சென்று, ஆற்றில் இறங்கிக் கடக்கவேண்டும். அதற்கு வழி காட்டுவதற்காக விளக்குகளுடன் முன்னால் போகும்படி சில வேட்டைக் காரர்களை குதிரைகள் மீது மாமா அனுப்பியிருந்தார்.

'போய் வா, என் அன்புள்ள மருமகளே' என்று அவருடைய குரல் அந்த இருளில் கேட்டது. நட்டாஷா முன்பு அறிந்திருந்த குரலாக அந்தக் குரல் இல்லை. 'நேற்றிரவு நேரத்திலே, இருண்டு வரும் வேளியிலே' என்று அவர் எந்தக் குரலில் பாடினாரோ, அந்தக் குரலாக அது இருந்தது.

கிராமத்தின் வழியாக அவர்கள் கடந்து போனபோது, அங்கே சிவப்பு விளக்குகளையும் மகிழ்ச்சியாகப் புகை குடிப்பதையும் அவர்கள் கண்டார்கள்.

'இந்த மாமா இருக்கிறாரே, அவர் எப்பேர்ப்பட்ட கண்ணு, தெரியுமா?' என்று அவர்கள் பிரதான ரஸ்தாவுக்கு வந்ததும் நட்டாஷா கேட்டாள்.

'ஆம், உனக்கு குளிராக இல்லையே' என்று நிக்கலஸ் பதில் சொன்னார்.

'இல்லை, நான் ரொம்ப ரொம்ப சரியாய் இருக்கிறேன். நான் மிகவும் சௌக்கியமாய் இருக்கிறேன்' என்று நட்டாஷா பதில்

சொன்னாள். அவளுடைய உணர்ச்சிகளால் அவள் மனம் குழம்பி நின்றாள். வெகு நேரம் வரையில் அவர்கள் பேசாமல் இருந்தார்கள். அன்றிரவு இருட்டாகவும், குளிராகவும் இருந்தது. அவர்களால் குதிரைகளைப் பார்க்க முடியவில்லை. கண்ணுக்குத் தெரியாத சகதிகளில் குதிரைகள் சப்தமிட்டு நடந்து போவதைக் கேட்கவே முடிந்தது.

வாழ்க்கையின் நேர் மாறான பற்பல வகைகளையும் ஆவலோடு அறிந்து ஜீரணித்துக் கொள்ளும் அந்தக் குழந்தையைப் போன்ற கிரகிக்கக்கூடிய உள்ளத்தில், என்ன நினைப்புகள் ஓடிக் கொண்டிருக்கின்றன? அவையெல்லாம் எப்படி அவளிடம் போய்ச் சேர்ந்து கொண்டன? ஆனால், அவள் மிகுந்த மகிழ்ச்சியோடு இருந்தாள். தங்களுடைய வீட்டை அவர்கள் நெருங்கியதும் அவள் திடீரென்று, 'நேற்றிரவு நேரத்திலே, இருண்டு வரம் வேளையிலே' என்ற ராகத்தை ஆரம்பித்தாள். அந்த ராகத்தைக் கண்டு பிடிப்பதற்கு வழி பூராவாக அவள் முயற்சி செய்து வந்தாள். கடைசியாகக் கண்டு பிடித்துவிட்டாள்.

'கண்டு பிடித்து விட்டாயா?' என்று நிக்கலஸ் கேட்டார்.

'இச்சமயத்தில் நீர் எதைப்பற்றி நினைத்துகொண்டு இருக்கிறீர், நிக்கலஸ்?' என்று நட்டாஷா கேட்டாள்.

அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் அந்தக் கேள்வியைக் கேட்பதில் மிகுந்த பிரியம் கொண்டவர்கள்.

'நானா?' என்று நிக்கலஸ் சொல்லி, ஞாபகத்திற்குக் கொண்டு வர முயற்சி செய்தார். 'நல்லது, இதோ பார். முதலில் நான் அந்த சிவப்பு வேட்டை நாயான மாமாவைப் போன்ற அந்த ரூகாய் பற்றி நினைத்தேன். அது மட்டும் ஒரு மனிதனாக இருக்குமானால், மாமாவை எப்பொழுதும் விட்டுப் பிரியாமல் அவர் பக்கத்திலேயே இருக்கும். அவருடைய தன்மை அப்படிப்பட்டது. அந்த மாமா எப்பேர்ப்பட்ட நல்ல மனிதர்! நீ அப்படி நினைக்கவில்லையா? நல்லது, நீ என்ன நினைத்துக்கொண்டிருந்தாய்?'

'நானா? ஒரு வினாடி பொறும், பொறும். ஆம், நாம் வீட்டிற்குப் போகிறோம் என்று புறப்பட்டு வந்தபோது முதலில் நான் நினைத்தேன். ஆனால், அந்த இருளில் உண்மையில் எங்கே போய்க்கொண்டிருந்தோம், எங்கே போய்ச் சேருவோம் என்பதை கடவுளே அறிவார். திடீரென்று ஆட்ராட்னோவிற்கு நாம் போய் சேரவில்லை என்றும், ஒரு தேவதைகளின் நாட்டிற்கு போய்ச் சேர்ந்தோம் என்றும் நான் கண்டேன். அதன் பின்னால் நான் நினைத்தேன்... இல்லை, வேறு ஒன்றும் இல்லை.'

'எனக்குத் தெரியும். நீ அவரைப்பற்றி நினைத்திருப்பாய்!' என்று புன்சிரிப்போடு நிக்கலஸ் சொன்னார். அந்தப் புன்சிரிப்பை அவருடைய தொனியில் இருந்து நாட்டாஷா அறிந்து கொண்டாள்.

'இல்லை' என்று நட்டாஷா கூறினாள். என்றாலும் உண்மையில் அவள் அச்சமயத்தில் இளவரசர் ஆண்ட்ரூவைப்பற்றி நினைத்துக்கொண்டிருந்தாள். மற்ற விஷயங்களோடு, மாமா மீது அவர் எவ்வளவு பிரியம் கொள்ளுவார் என்பதைப்பற்றியும் அவள் நினைத்தாள். 'அதன் பின்னால் வழி பூராவாக அந்த அனீசியா எவ்வளவு சிலாக்கியமாக நடந்துகொண்டாள் என்பதைப்பற்றியும் நினைத்துக்கொண்டு வந்தேன்' என்று கூறினாள். அவளுடைய இயற்கையான, மகிழ்ச்சியான கணீர் என்ற சிரிப்பை நிக்கலஸ் கேட்டார். திடீரென்று அவள், 'உமக்குத் தெரியுமா? இப்பொழுது நான் எவ்வளவு சந்தோஷமாகவும், மன அமைதியோடும் இருக்கிறேனோ, இதைப்போல இனி நான் இருக்கப் போவதே இல்லை' என்றாள்.

'வெறும் குப்பை. அசட்டுத்தனம், போலித்தனம்' என்று நிக்கலஸ் கூறினார். மேலும் அவர் நினைத்தார். 'என்னுடைய இந்த நட்டாஷாதான் எவ்வளவு ரம்மியமாய் இருக்கிறாள்! அவளைப் போன்ற ஒரு நண்பர் எனக்குக் கிடையாது. இனி கிடைக்கப் போவதும் இல்லை. எதற்காக அவள் திருமணம் செய்யவேண்டும்? நாங்கள் இருவரும் சேர்ந்து எப்பொழுதும் சவாரி செய்து கொண்டே இருக்கலாமா?'

'என்னுடைய இந்த நிக்கலஸ்தான் எப்பேர்ப்பட்ட கண்ணு தெரியுமா?' என்று நட்டாஷா நினைத்தாள்.

'ஆ, வரவேற்பு அறையில் இன்னமும் விளக்குகள் இருக்கின்றன' என்று அவள் சொல்லி, வீட்டின் ஜன்னல்களை சுட்டிக்காட்டினாள். அந்த ஈரமான வெல்வெட் போன்ற இருட்டில் அந்த ஜன்னல்கள் கவர்ச்சிகரமாய்த் தோன்றின.




மிராசுதார்களின் மார்ஷல் என்ற பதவியை கோமகன் இலியா ராஸ்டோவ் ராஜிநாமா செய்துவிட்டார். ஏனெனில், அதனால் அவருக்கு அதிகச் செலவு ஏற்பட்டுவந்தது. என்றாலும், அவருடைய சொத்து விவகாரங்கள் இன்னும் அபிவிருத்தியடைய வில்லை. தங்களுடைய தாயும் தந்தையும் அடிக்கடிக் கூடி

கவலையோடு ரகசியமாகப் பேசி வருவதையும், மாஸ்கோ பக்கத்திலுள்ள தங்களுடைய அழகிய புராதன வீட்டை விற்பனை செய்வதற்கான பேச்சுவார்த்தைகள் நடந்துவருவதையும் நட்டாஷாவும், நிக்கலஸும் கவனித்தார்கள். அவர் மார்ஷலாக இருந்தபோது, அடிக்கடி விருந்துபசாரம் செய்துவந்ததுபோல இப்போது செய்யவேண்டிய அவசியம் இல்லை. ஆட்ராட்னோவில் வாழ்க்கையானது முந்திய வருஷங்களைவிட அமைதியாக இருந்தது. என்றாலும், அந்த பிரும்மாண்டமான வீட்டிலும் அதனுடைய விடுதிகளிலும் இன்னும் ஆட்கள் நிறைந்து இருந்து வந்தார்கள். ஒவ்வொரு நாளும் இருபது பேருக்கு அதிகமாகவே சாப்பாட்டிற்கு அமருவார்கள். இவர்கள் எல்லோரும் அவர்களுடைய சொந்த ஆட்கள். அவர்களுடைய குடும்பத்தார்களைப் போலவே, அங்கேயே தங்கிவிட்டார்கள். அல்லது, அங்கே தங்கும்படி அவசியம் ஏற்பட்டு விட்டவர்கள். சங்கீத வித்வானான டிம்லெரும் அவருடைய மனைவியும், நாட்டிய வாத்தியாரான வாகலும், அவருடைய குடும்பத்தாரும், பெலோவா என்ற திருமணமாகாத வயோதிக சீமாட்டியும், இவர்களைத் தவிர பெட்டியாவின் வாத்தியார்கள், பெண் குழந்தைகளின் முந்தைய தாதிகள் ஆகியவர்கள் அங்கே தங்கி வந்தார்கள். இவர்களைத் தவிர தங்கள் வீடுகளில் இருப்பதைவிட கோமகன் வீட்டில் இருப்பதால் அதிக சௌகரியங்கள் உண்டு என்று நினைத்து அங்கே தங்கியவர்களும் உண்டு. இருந்தாலும் முன் மாதிரி அவ்வளவு அதிகமாக விருந்தாளிகள் இப்போது கிடையாது. ஆனால், அவர்களுடைய பழைய பழக்க வழக்கங்களை விட்டுவிட்டு வாழமுடியும் என்பதை அவர்களால் நினைக்கவே முடியாமலிருந்தது. இன்னமும் அவர்கள் வேட்டையாடுவதற்கு வேண்டிய சிப்பந்திகளை வைத்துக்கொண்டிருந்தார்கள். நிக்கலஸ் வந்த பின்பு, அந்த சிப்பந்திகளை இன்னும் அதிகரித்தார். குதிரை லாயத்தில் பழைய மாதிரியே இன்னும் ஐம்பது குதிரைகளும், பதினைந்து குதிரை லாயக்காரர்களும் இருந்து வந்தார்கள். முன் மாதிரியே விலை உயர்ந்த வெகுமதிகளைக் கொடுப்பதும், பெயர் - தினங்களில் மாவட்டத்தில் உள்ளவர்களுக்கெல்லாம் விருந்து செய்வதும் தொடர்ந்து நடந்து வந்தன. பாஸ்டன் சீட்டு விளையாட்டை கோமகன் இன்னமும் விடவில்லை. அவர் சீட்டு விளையாடும்போது அவர் கையிலுள்ள சீட்டுகளை பரப்பி வைத்திருப்பதால், அங்கு இருக்கிறவர்கள் எல்லாருமே அந்த சீட்டுகளைப் பார்க்க முடியும். அந்த விதத்தில் விளையாடி வந்தபடியால், ஒவ்வொரு நாளும் நூற்றுக்கணக்கான ரூபிள்களை

அவரிடமிருந்து அக்கம்பக்கத்தார்கள் கொள்ளையடிக்கும்படி அவர் விட்டுவந்தார். கோமகன் ராஸ்டோவோடு சீட்டு விளையாடு வதைப் போல மிகுந்த லாபகரமான தொழில் வேறு கிடையாது என்று அக்கம்பக்கத்திலுள்ளவர்கள் நினைத்தார்கள்.

ஒரு பெரிய வலைக்குள் அகப்பட்டதைப்போல, கோமகன் தமது சொத்து விவகாரங்களில் அழுந்தியிருந்தார். அவர் தமக்கு சிக்கல்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதை நம்பாமல் இருக்க முயற்சி செய்தார். ஆனால், வரவர அந்த சிக்கல்கள் அதிகமாய்க் கொண்டே வந்தன. தம்மைச் சுற்றிலுமுள்ள அந்த வலையை அறுத்து எறிய அவருக்கு வேண்டிய பலமும் கிடையாது. அல்லது பொறுமையோடும், அக்கறையோடும் வேலை செய்து அந்த சிக்கலிலிருந்து விடுபடுவதற்கும் அவரால் முடியவில்லை. அன்பான இதயம் கொண்ட கோமகளுக்கு தன்னுடைய குழந்தைகளின் சொத்துக்கள் தேய்ந்துவருவது தெரிந்த போதிலும், அதற்கு கோமகன் மீது குற்றஞ் சொல்லமுடியாது என்று நினைத்தாள். ஏனெனில் அவர் தற்சமயம் எப்படி இருக்கிறாரோ, அதற்கு அவர் காரணம் அல்ல என்றும் கோமகள் நினைத்தாள். கோமகன் மறைப்பதற்கு முயற்சி செய்தபோதிலும் அந்தக் குழந்தைகளுடையவும் தம்முடையவும் சொத்து நாசங்களுக்கு தாமே காரணம் என்பதை அவர் உணர்ந்து வருந்திவருவதை அவள் அறிவாள். ஆகவே, இந்த நிலைமைக்கு பரிகாரம்தேடுவதற்காக கோமகள் பல வழிகளைக் கண்டுபிடிக்க முயற்சி செய்தாள். அவளுடைய பெண்மையின் திருஷ்டியோடு பார்த்தபொழுது அவளுக்கு ஒரே ஒரு பரிகாரம் தான் தோன்றியது. அதாவது, ஒரு பணக்காரப் பெண்ணை நிக்கலஸுக்குக் கல்யாணம் செய்வதாகும். இது ஒன்றுதான் அவர்களுடைய கடைசி நம்பிக்கையென்று அவள் உணர்ந்தாள். அவள் பார்த்து வைத்திருந்த பெண்ணை நிக்கலஸ் மறுத்துவிட்டால், சொத்து விவகாரங்களை சரி செய்ய முடியுமென்ற நம்பிக்கையை கைவிட வேண்டியதுதான் என்று அவள் நினைத்தாள். அவள் பார்த்து வைத்திருந்த பெண்ணின் பெயர் ஜூலி காராகினா. மிகுந்த சிலாக்கியமான, பெருமையான பெற்றோர்களின் குமாரியாக அவள் விளங்கினாள். அந்தப் பெண்ணை சிறு குழந்தையிலிருந்தே ராஸ்டோவ் குடும்பத்தார்கள் அறிவார்கள். இப்போது அவளுடைய சகோதரர்கள் இறந்துவிட்ட படியால், அவள் மிகவும் பெரிய பணக்காரியாக விளங்கினாள்.

தங்களுடைய குழந்தைகளுக்குள் திருமணம் செய்துவைக்க வேண்டுமென்று மாஸ்கோவிலிருந்த ஜூலியின் தாயாருக்கு கோமகள் கடிதம் எழுதினாள். அதற்குச் சாதகமாக அவளிடமிருந்து

பதிலும் கிடைத்தது. தன்னைப் பொறுத்த வரையில் தனக்கு சம்மதமென்றும், ஆனால், தன்னுடைய குமாரியின் அபிப்பிரா யத்தைப் பொறுத்துத்தான் மற்றவை இருக்கின்றன என்றும் அவள் எழுதியிருந்தாள். மாஸ்கோவுக்கு வரும்படி நிக்கலஸை அவள் அழைத்திருந்தாள்.

தன்னுடைய இரண்டு குமாரிகளுக்கும் திருமண விஷயம் முடிவாய்விட்டபடியால், தன்னுடைய குமாரருக்கு திருமணம் செய்து வைத்துப்பார்க்கவேண்டுமென்பதுதான் தன்னுடைய ஒரே விருப்பம் என்று பல தடவைகள் நீர் நிறைந்த கண்களுடன் கோமகள் தன்னுடைய குமாரரைக் கேட்டுவந்தாள். அந்த அபிலாஷை கைகூடிவிட்டால் தான் அமைதியாக தன்னுடைய கல்லறையில் படுத்துக்கொள்ள முடியுமென்று அவள் சொன்னாள். அவளுக்குத் தெரிந்த ஒருசிலாக்கியமான பெண் இருப்பதாக அவள் தனது குமாரருக்குச் சொல்லி, திருமணத்தைப் பற்றி அவருடைய அபிப்பிராயத்தை அறிந்துகொள்ள முயற்சித்தாள்.

பல தடவைகளில் ஜூலியைப்பற்றி அவரிடம் புகழ்ந்து பேசுவதுண்டு. விடுமுறை நாட்களில் மாஸ்கோவுக்குச் சென்று தமாஷாகக் காலம் கழிக்கும்படி அவள் அவருக்கு உபதேசம் செய்வாள். தம்முடைய தாயார் பேசுவதெல்லாம் எதற்காக என்பதை நிக்கலஸ் யூகம் செய்துகொண்டார். ஒரு தடவை அவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது, வெளிப்படையாகப் பேசும்படி அவளை அவர் கேட்டார். அப்போது அவருடைய தாயார் தங்களுடைய சொத்து விவகாரங்கள் சரியாக வரவேண்டுமானால், ஜூலி காராகினாவை திருமணம் செய்வது ஒன்றினால்தான் முடியுமென்று அவள் சொன்னாள்.

'ஆனால், அம்மா, சொத்து ஒன்றும் இல்லாத ஒரு பெண் மீது நான் காதல் கொண்டிருந்தால், என்னுடைய உணர்ச்சிகளையும், கௌரவத்தையும் பணத்திற்காகப் பலி கொடுத்துவிட வேண்டு மென்று நீ எதிர்பார்க்கிறாயா?' என்று தமது தாயாரை அவர் கேட்டார். ஆனால், இந்தக் கேள்வியில் உள்ள கொடூரத்தை அவர் உணரவில்லை. தம்முடைய பெருந்தன்மையான நோக்கத்தைக் காட்ட வேண்டுமென்ற விருப்பம் கொண்டே அவர் இப்படிப் பேசினார்.

'இல்லை, என்னை நீ சரியாக அறிந்துகொள்ளவில்லை' என்று அவருடைய தாயார் சொன்னாள். தான் சொல்லியவைகளுக்கு எப்படி சமாதானம் கூறுவது என்பது அவளுக்குத் தெரியவில்லை. 'என்னைச் சரியாக நீ அறிந்துகொள்ளவில்லை, நிக்கோலெங்கா.

உன்னுடைய சந்தோஷத்தைத்தான் நான் விரும்புகிறேன்.' என்று அவள் சொன்னாள். ஒரு பொய்யைச் சொல்வதாக அவள் உணர்ந்தாள். ஆகவே அவள் அழ ஆரம்பித்தாள்.

'அம்மா, அழவேண்டாம். உனக்கு அது பிரியமென்பதை மட்டும் எனக்குச் சொல்லு. அதற்காக, என்னுடைய உயிரையும் எதை வேண்டுமானாலும் நான் கொடுத்து, உன்னை சமாதானம் அடையும்படி செய்வேன் என்பதை நீ அறிவாய். உனக்காக எதை வேண்டுமானாலும், என்னுடைய உணர்ச்சிகளை வேண்டுமானாலும் நான் தியாகம் செய்வேன்.'

ஆனால் அந்த விஷயத்தை அம்மாதிரியான முறையில் பேசுவதற்கு கோமகள் விரும்பவில்லை. தன்னுடைய குமாரரிடமிருந்து ஒரு தியாகத்தை அவள் விரும்பவில்லை. தன்னுடைய குமாரருக்காக தான் ஒரு தியாகம் செய்ய அவள் விரும்பினாள்.

'இல்லை, நீ என்னை அறிந்து கொள்ளவில்லை. இதைப்பற்றி இப்போது ஒன்றும் பேசவேண்டாம்' என்று அவள் சொல்லிவிட்டு, தன்னுடைய கண்ணீரைத் துடைத்தாள்.

'ஒரு எளிய பெண்ணை நான் காதலிப்பதாயிருக்கலாம். என்னுடைய உணர்ச்சிகளையும் என்னுடைய கௌரவத்தையும் பணத்திற்காகத் தியாகம் செய்வதா? அம்மாதிரி என்னிடம் அம்மா அப்படித்தான் பேசுகிறாள் என்பதைக் கண்டு நான் ஆச்சரியப்படுகிறேன். ஏனென்றால், சோனியா ஏழையாய் இருப்பதால் நான் அவளை காதல் கொள்ளக் கூடாதா? அவளுடைய நன்றியுள்ள, ஆர்வமுள்ள காதலுக்கு நான் இணங்கக்கூடாதா? என்றாலும், ஏதோ பொம்மையைப் போன்ற ஒரு ஜூலி என்பவளோடு இருப்பதைவிட, சோனியாவோடு நான் இருப்பேனானால், நிச்சயமாக மகிழ்ச்சியோடு இருப்பேன். ஆனால், என்னுடைய குடும்பத்தின் நன்மைக்காக என்னுடைய உணர்ச்சிகளை எப்போதுமே நான் தியாகம் செய்ய முடியும். ஆனால் என்னுடைய உணர்ச்சிகளை நான் பலவந்தப்படுத்த முடியாது. நான் சோனியாவை காதலிக்கிறேன் என்றால், வேறு எல்லா உணர்ச்சிகளைவிட அது பலமாகவும் உயர்வாகவும் இருக்கிறது' என்று நிக்கலஸ் தமக்குள்ளேயே சொல்லிக் கொண்டார்.

நிக்கலஸ் மாஸ்கோவுக்குப் போகவில்லை. அவருடைய திருமணத்தைப்பற்றி கோமகள் திரும்பவும் அவரிடம் உரையாடல் செய்யவில்லை. சொத்துகள் எதுவுமில்லாத சோனியாவுக்கும் தமது

குமாரருக்கும் இடையில் காதல் வளர்ந்து வருவதற்கான அறிகுறிகளை அவள் மிகுந்த துக்கத்தோடும், சில சமயங்களில் எரிச்சலோடும் கவனித்து வந்தாள். அதற்குத் தானே காரணமென்று தன்னைக் கடிந்துகொண்ட போதிலும், சோனியாவைப் பார்த்து முணுமுணுப்பதையோ, அல்லது அவளை தொந்தரவு செய்வதையோ, அல்லது காரணமில்லாமல் அவளிடம் சண்டை போடுவதையோ அவள் விட்டுவிடவில்லை. 'நீ' என்று அவளை அழைப்பதற்குப் பதிலாக, 'நீர்' என்று அழைத்து தன்னுடைய கோபத்தைக் காட்டிக் கொண்டாள். சோனியா ஏழையாயிருந்த போதிலும், கருப்புக் கண்களைக் கொண்ட அவள் ரொம்பவும் பணிவாகவும் ரொம்பவும் இனிமையாகவும், தன்னை வளர்த்துக் காப்பாற்றி வருகிறவர்களுக்கு ரொம்பவும் நன்றி உள்ளவளாகவும், நிக்கலஸ் மீது கொண்டிருந்த சுயநலமற்ற காதலை கொஞ்சமும் மாற்றாமலும் இருந்து வந்ததால், அவளிடம் குற்றம் கண்டுபிடிக்க எந்தவிதமான ஆதாரமும் கிடைக்கவில்லை. ஆகவே, அந்த அன்புள்ளம் கொண்ட கோமகளுக்கு இன்னும் அதிகமான எரிச்சல் ஏற்பட்டது.

தம்முடைய விடுமுறை நாட்களின் கடைசி பாகத்தில் நிக்கலஸ் வீட்டிலேயே தங்கி வந்தார். ரோமாபுரியில் உள்ள இளவரசர் ஆண்ட்ரூவிடமிருந்து நான்காவது கடிதம் வந்தது. வெகு காலத்திற்கு முன்பாகவே, அவர் ருஷ்யாவிற்கு திரும்பியிருக்க வேண்டும் என்றும், ஆனால் எதிர்பாராத விதத்தில் ஒரு உஷ்ணமான கால நிலையில் தம்முடைய பழைய காயம் மீண்டும் புண்ணாகி தொந்தரவு கொடுத்தது என்றும், ஆகவே தாம் திரும்பி வருவதை புது வருஷம் வரை ஒத்திப் போட வேண்டியிருக்கிறது என்றும் அவர் எழுதியிருந்தார். நட்டாஷா அவரிடம் முன்போலவே மிகுந்த காதல் கொண்டிருந்தாள். அந்தக் காதலில் அவள் முன்போலவே மிகுந்த சுகத்தையும் அனுபவித்து வந்தாள். முன்போலவே வாழ்க்கை யிலுள்ள எல்லா இன்பங்களையும் அனுபவிப்பதற்கு அவள் தயாராய் இருந்தாள். ஆனால் அவர்கள் பிரிந்த பின்பு, நான்காவது மாதக் கடைசியில் அவளுக்கு மீண்டும் சோர்வு உணர்ச்சி பலமாக வளர்ந்தது. அதை அவளால் சமாளிக்க முடியவில்லை. தன்னைப் பற்றி அவள் நொந்துகொண்டாள். தான் காதலிக்கவும், காதலிக்கப் படவும் செய்யக்கூடியவளாய் இருந்தும், ஒருவருக்கும் ஒரு உபயோகமும் இல்லாமல் தனது காலம் வீணாக்கப்படுவதற்காக அவள் வருந்தினாள்.

ராஸ்டோவ்களின் குடும்பத்தில் விவகாரங்கள் மகிழ்ச்சிகரமாய் இல்லை.



கிறிஸ்துமஸ் வந்தது. ஆடம்பரமான மாதாகோயில் பிரார்த்தனையையும், அக்கம் பக்கத்தில் உள்ளவர்களிடமிருந்தும், சேவகர்களிடமிருந்தும் வந்த பவித்திரமான, சடைவு கொடுக்கக்கூடிய கிறிஸ்துமஸ் வாழ்த்துக்களையும், ஒவ்வெருவரும் புதிய ஆடைகள் அணிந்திருப்பதையும் தவிர வேறு விசேஷமான கொண்டாட்டங்கள் எதுவும் இல்லை. இருபது டிக்ரி குளிர்ந்த உறைபனியோடு, பிரகாசமான சூரிய வெளிச்சமுள்ள பகலும், அந்த குளிர்கால இரவுகளில் நட்சத்திரங்களைக் காணக்கூடிய இரவு அன்று காணப்பட்டபடியால், அவற்றிக்காக விசேஷ கொண்டாட்டங்கள் அவசியம் என்பதுபோல் தோன்றின.

கிறிஸ்துமஸ் வாரத்தில் மூன்றாவது நாளன்று மத்தியான டின்னர் முடிந்ததும், வீட்டிலுள்ளவர்கள் வெவ்வேறு அறைகளுக்குப் பிரிந்து போனார்கள். பகலில் அதுதான் மந்தமான நேரம். அன்று காலையில் அப்பகுதியில் சில பேரைப் பார்ப்பதற்காக நிக்கலஸ் போய்வந்து பின்பு, உட்காரும் அறையில் சோபாவில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தார். படிப்பு அறையில் வயோதிகக் கோமகன் இளைப்பாறிக்கொண்டிருந்தார். வரவேற்பு அறையில் கிடந்த வட்ட மேஜைக்கு அருகே சோனியா அமர்ந்து, பின்னல் வேலைக்காக ஒரு சித்திரத்தை நகல் செய்து கொண்டிருந்தாள். கோமகள் தன்னந்தனியாக சீட்டு விளையாடிக்கொண்டிருந்தாள். நாஸ்டாசியா ஐவானாவ்னா என்ற கோமாளி ஒரு சோகமான முகத்துடன் இரண்டு வயோதிக சீமாட்டிகளோடு ஜன்னலில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அந்த அறைக்கு நட்டாஷா வந்தாள். சோனியாவிடம் சென்று, அவள் என்ன செய்து கொண்டிருக்கிறாள் என்பதை நோக்கினாள். அதன் பின்னால் தன்னுடைய தாயாரிடம் சென்று, ஒன்றும் பேசாமல் நின்றுகொண்டிருந்தாள்.

'நீ ஏன் இப்படி ஜாதி பிரஷ்டம் செய்யப்பட்டவளைப்போல சுற்றிக்கொண்டு இருக்கிறாய்? உனக்கு என்ன வேண்டும்?' என்று அவளுடைய தாயார் கேட்டாள்.

'அவர்... எனக்கு அவர் வேண்டும்... இந்த நிமிஷத்திலேயே வேண்டும். எனக்கு அவர் வேண்டும்' என்று ஜொலிக்கும் கண்களோடு புன்னகைத் தோற்றமின்றி நட்டாஷா சொன்னாள்.

தனது தலையை நிமிர்த்தி தனது குமாரியை உன்னிப்போடு கோமகள் நோக்கினாள்.

‘என்னைப் பார்க்க வேண்டாம், அம்மா. பார்க்க வேண்டாம். நான் அழுது விடுவேன்.’

‘சிறிது நேரம் என்னுடன் உட்கார்ந்திரு’ என்று கோமகள் சொன்னாள்.

‘அம்மா, எனக்கு அவர் வேண்டும். என் வாழ்க்கையை எதற்காக இம்மாதிரி வீணாக்க வேண்டும், அம்மா?’

அவளுடைய குரல் தடைப்பட்டது. கண்களிலிருந்து கண்ணீர் பெருகியது. அதை மறைப்பதற்காக, திடீரென்று அவள் திரும்பி அந்த அறையை விட்டு வெளியே வந்தாள்.

உட்காரும் அறைக்குள் அவள் வந்தாள். அங்கே நின்று சிறிது நேரம் சிந்தித்து விட்டு, வேலைக்காரிகளின் அறைக்கு வந்தாள். அங்கே ஒரு சிறிய பெண் அப்போதுதான் அடிமைகளின் விடுதிகளிலிருந்து அந்தக் குளிரில் வேகமாய் ஓடி வந்ததால் மூச்சு வாங்கிக்கொண்டிருந்தாள். அந்தப் பெண்ணை ஒரு வயோதிக வேலைக்காரி ஏதோ கண்டித்துக்கொண்டிருந்தாள்.

‘விளையாடுவதை நிறுத்து. ஒவ்வொன்றுக்கும் அதற்குரிய காலமுண்டு’ என்று அந்த வயோதிக ஸ்திரீ சொன்னாள்.

‘காண்டிராடேவ்னா, அவளை விட்டு விடு. மாவ்ரூஷா, நீ போ, போ’ என்று நட்டாஷா சொன்னாள்.

மாவ்ரூஷாவை அங்கிருந்து விடுவித்த பின்னால், நட்டாஷா நடன மண்டபத்தைக் கடந்து முன் அறைக்கு சென்றாள். அங்கே இரண்டு வயோதிக சேவகர்களும், இரண்டு வாலிப சேவகர்களும் சீட்டு விளையாடிக்கொண்டிருந்தார்கள். இவள் அங்கே நுழைந்ததும் அவர்கள் விளையாட்டை விட்டு எழுந்தார்கள்.

‘இவர்களைக் கொண்டு நான் என்ன செய்ய முடியும்?’ என்று நட்டாஷா நினைத்தாள்.

‘ஓ, நிக்கைட்டா, தயவு செய்து போ... அவனை நான் எங்கே அனுப்பலாம்?... ஆமாம், நீ பின்னால் உள்ள தோட்டத்துக்குப் போய், ஒரு கோழியைப் பிடித்து வா; ஒரு சேவலைக் கொண்டு வா. ஏ, மைஷா, எனக்கு சில *ஓட்ஸ் தான்யம் கொண்டு வா.’ (*கோழிகளுக்குத் தரையில் தீனியைப் பரப்பி அதைச் சாப்பிடச் செய்வதன் மூலம் ஜோஸ்யங்களை அறிந்து கொள்வது கிறிஸ்துமஸ் கால வழக்கம்.)

‘கொஞ்சம் ஓட்ஸ்கள் இருந்தால் போதும் அல்லவா?’ என்று அந்த மைஷா மகிழ்ச்சியாகவும் விருப்பமாகவும் பேசினாள்.

'போ, போ, சீக்கிரம்' என்று அந்த வயோதிகன் அவனை துரிதப்படுத்தினான்.

'ஓ, தியோடர், எனக்கு ஒரு சாக்குக் கட்டியை எடுத்துக் கொண்டு வா.'

பட்லரின் உக்கிராண அறையைக் கடந்து அவள் போனபோது, ஒரு சாமோவாரில் தேநீர் தயாரிக்கும்படி சொன்னாள். என்றாலும், அச்சமயம் தேநீர் சாப்பிடும் நேரமல்ல.

போக்கா என்ற பட்லர் வீட்டிலேயே மிகுந்த கோப குணம் கொண்டவன். அவன் மீது தனக்குள்ள அதிகாரத்தை சோதித்துப் பார்க்க நட்டாஷா விரும்பினாள். அவன் நட்டாஷா கேட்டுக்கொண்டதை நம்பவில்லை. உண்மையிலேயே தேநீர் வேண்டுமா என்று அவன் கேட்டான்.

'அட கடவுளே, எப்பேர்ப்பட்ட இளம் சீமாட்டி!' என்று அந்த நட்டாஷாவை கோபிப்பதுபோல பாசாங்கு செய்துகொண்டு போக்கா பதில் சொன்னான்.

ஆட்களை இங்கு மங்கும் அனுப்புவது, அல்லது அதிகமான தொந்தரவு கொடுப்பது போன்றவைகளை, அந்த வீட்டில் நட்டாஷாவைப்போல வேறு யாரும் செய்வதில்லை. ஆட்கள் சும்மா இருப்பது அவளுக்கு பிடிப்பதில்லை. ஆகவே, ஏதாவது ஒரு வேலையைக் கொடுத்து அவள் அனுப்புவாள். அம்மாதிரி சொல்லும்போது, அவர்கள் கோபம் கொள்கிறார்களா, எரிச்சல் கொள்கிறார்களா என்பதை அவள் சோதிப்பதுபோலக் காணப்படுவாள். ஆனால் நட்டாஷாவின் உத்தரவுகளை உடனே அந்த அடிமைகள் நிறைவேற்றி வைப்பதைப்போல, வேறு யாருடைய உத்தரவுகளையும் நிறைவேற்றுவதில்லை. 'நான் இப்போது என்ன செய்வது? நான் எங்கே போவது?' என்ற அவள் அந்த ஆளோடி வழியாக மெதுவாக போய்க்கொண்டிருந்தபோது, தனக்குள்ளேயே நினைத்துக்கொண்டாள்.

'ஓ, நாஸ்டாசியா ஐவானாவ்னா, எம்மாதிரியான குழந்தைகள் எனக்குப் பிறக்கும்?' என்று அந்தக் கோமாளியைப் பார்த்து அவள் கேட்டாள். அந்தக் கோமாளி பெண்களின் ஜாக்கட் அணிந்து கொண்டு அவளுக்கு எதிராக வந்துகொண்டிருந்தான்.

'ஏன்? உனக்கு ஈக்களும், வெட்டுக் கிளிகளும், சின் வண்டுகளும் பிறக்கும்' என்று கோமாளி பதில் சொன்னான்.

'அட கடவுளே, அட கடவுளே, எப்போதும் ஒரே மாதிரியான பதில்தானா? நான் எங்கே போவது? நான் இப்போது என்ன

செய்வது?' என்று அவள் தன்னுடைய குதிங் கால்களால் தட்டிக் கொண்டு, வாகலையும் அவருடைய மனைவியையும் பார்ப்பதற்காக, மெத்தைப் படிக்கட்டுகளில் ஏறி வேகமாய் ஓடினாள். அவர்கள் மெத்தையில் வசித்துக் கொண்டிருந்தார்கள்.

அந்த வாகலோடு இரண்டு தாதிகள் ஒரு மேஜையின் முன்பு அமர்ந்திருந்தார்கள். அவர்கள் முன்பாக தட்டுகளில் திராட்சை, வால்நெட், வாதுமை ஆகியவை வைக்கப்பட்டிருந்தன. மாஸ்கோவில் வசிப்பது செலவு குறைவா, அல்லது ஒடேஸாவில் வசிப்பது செலவு குறைவா என்பதைப்பற்றி அந்த தாதிகள் விவாதித்துக்கொண்டிருந்தார்கள். மிகுந்த கவனமும் அக்கறையும் கொண்ட தோற்றத்தோடு நட்டாஷா அங்கே அமர்ந்து, அந்தப் பேச்சுகளைக் கவனித்துக்கொண்டிருந்தாள். பின்னால் அங்கிருந்து மீண்டும் எழுந்தாள்.

'மடகாஸ்கர் தீவு: மட... காஸ்... க... ர்' என்று மீண்டும் தெளிவாக நிறுத்திச் சொன்னாள். திருமதி ஷாஸ் என்பவள், அவள் என்ன சொல்லிக்கொண்டிருக்கிறாள் என்பதைக் கேட்டபோது அவளுக்குப் பதில் சொல்லாமல் நட்டாஷா அறையை விட்டு வெளியேறினாள்.

அவளுடைய சகோதரன் பெட்டியாவும் மெத்தையில்தான் இருந்தான். ஒரு வேலைக்காரனும் அவனும் சேர்ந்து அன்று இரவு விடவேண்டிய வாணங்களைத் தயார் செய்து கொண்டிருந்தார்கள். பெட்டியா, பெட்டியா, என்னைக் கீழே தூக்கிக்கொண்டு போ' என்று அவள் அவனைப் பார்த்து சொன்னாள்.

பெட்டியா அவளிடம் ஓடி கீழே குனிந்து தன்னுடைய முதுகைக் காட்டினான். அவள் உடனே தாவி உட்கார்ந்துகொண்டு தனது கைகளால் அவனுடைய கழுத்தை கட்டிக் கொண்டாள். அவன் அவளைச் சுமந்து துள்ளி ஓடிக்கொண்டிருந்தான்.

'இல்லை; அப்படிச் செய்ய வேண்டாம்... மடகாஸ்கர் தீவு' என்று அவள் சொல்லிவிட்டு, அவன் முதுகிலிருந்து கீழே குதித்து மெத்தையிலிருந்து கீழே போனாள்.

இம்மாதிரியாக தன்னுடைய ராஜ்யத்தைச் சுற்றிப் பார்வையிட்டு, தன்னுடைய அதிகாரத்தை சோதனை செய்து பார்த்து, ஒவ்வொருவரும் தனக்கு அடங்கியவர்களாக இருக்கிறார்கள் என்பதை நிச்சயம் செய்துகொண்டாள். என்றாலும் நட்டாஷாவுக்கு வாழ்க்கை முன்போலவே மந்தமாக இருந்தது. ஆகவே அவள் நடன அறைக்குப் போய், தன்னுடைய கிட்டார் வாத்தியத்தை எடுத்து, ஒரு இருண்ட மூலையில் புத்தக

அலமாரிக்குப் பக்கத்தில் அமர்ந்து, அந்த வாத்தியத்தில் தாழ்ந்த சுரத்தில் உள்ள கம்பிகளில் தனது விரல்களை ஓட்டி, பீட்டர்ஸ்பர்க்கில் இளவரசர் ஆண்ட்ரூவோடு ஒரு நாடகத்தில் கேட்ட பாட்டை வாசிக்க முயற்சி செய்தாள். அவள் கிட்டார் வாத்தியத்தில் வாசித்த அந்த சங்கீதம் அதைக் கேட்கும் மற்றவர்களுக்கு ஒரு அர்த்தம் இல்லாததைப்போலத் தோன்றலாம். ஆனால் அவளுடைய மனோராஜ்யத்தில் அந்த சப்தங்களிலிருந்து பழைய சம்பவங்கள் தொடர்ச்சியாகத் தோன்ற ஆரம்பித்தன. அப்போது புத்தக அலமாரிக்குப் பின்னால் அவள் அமர்ந்து, உக்கிராண அறைக் கதவின் கீறல் வழியாக வெளியே தெரிந்துகொண்டிருந்த வெளிச்சத்தை வெறித்துப் பார்த்து, தான் வாசிப்பதைத் தானே கேட்டு சிந்தனை செய்துகொண்டிருந்தாள். கடந்த காலத்தைப் பற்றிய நினைவில் அவள் திளைக்கக்கூடிய மனோபாவத்தில் இருந்தாள்.

கையில் ஒரு கோப்பையுடன் உக்கிராண அறைக்கு சோனியா போனாள். நட்டாஷா அவளை நோக்கினாள். அந்த உக்கிராண அறையின் கதவிலுள்ள கீறலையும் நோக்கினாள். அந்தக் கீறலில் இருந்து தெரிந்துகொண்டிருந்த அதே வெளிச்சத்தையும், அச்சமயம் கையில் கோப்பையுடன் சோனியா போய்க்கொண்டிருந்த அதே காட்சியையும், முன்னால் ஒரு தடவை பார்த்ததாக அவள் நினைவு கூர்ந்தாள். 'ஆம், அசல் அதே மாதிரிதான்' என்று நட்டாஷா நினைத்தாள்.

'சோனியா, இது என்ன?' என்று அவள் அந்த கிட்டார் வாத்தியத்திலிருந்த, பருத்த கம்பியை மீட்டி விட்டாள்.

'ஓ, நீ அங்கேயா இருக்கிறாய்?' என்று திடுக்கிட்டு சோனியா கேட்டு, அவள் பக்கத்தில் வந்து அதைக் கவனித்தாள். 'எனக்குத் தெரியாது. இது என்ன? புயலைப் பற்றிய சங்கீதமா?' என்று தான் சொல்வது தப்பாய் இருக்கக் கூடாதே என்று அச்சத்தோடு அவள் கூறினாள்.

'அதுவேதான். முன்னால் இவையெல்லாம் நடந்தபோது இதே மாதிரிதான் அவள் பதறிப்போய் என்னிடம் நெருங்கி வந்து அச்சத்தோடு புன்முறுவல் காட்டினாள்' என்று நட்டாஷா நினைத்தாள். 'அப்போதும் அதே மாதிரிதான் அவளிடம் ஏதோ குறையிருப்பதாக நான் நினைத்தேன்.'

'இல்லை, இது ''தண்ணீர் சுமப்பவன்'' என்ற பாட்டில் உள்ள ஒரு பாகம். கவனித்துக் கேள்' என்று நட்டாஷா சொல்லி, அந்தப் பகுதியை சோனியா அறிந்துகொள்ளும்படி பாடிக் காட்டினாள். 'நீ எங்கே போய்க்கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டாள்.

'இந்தக் கோப்பையிலுள்ள தண்ணீரை மாற்றுவதற்காகப் போகிறேன். நான் போட்டு வந்த பின்னல் வேலை அநேகமாய் முடிந்து விட்டது.'

'வேலை செய்வதற்கு உனக்கு ஏதாவது கிடைத்துக்கொண்டிருக் கிறது. ஆனால் எனக்குக் கிடைக்கவில்லை. நிக்கலஸ் எங்கே இருக்கிறார்?' என்று நட்டாஷா கேட்டாள்.

'தூங்கிக்கொண்டிருக்கிறார் என்று நினைக்கிறேன்.'

'சோனியா, நீ போய் அவரை எழுப்பு. என்னிடம் வந்து அவர் பாடவேண்டுமென்று நான் விரும்புவதாகச் சொல்லு.'

சிறிது நேரம் அவள் அப்படியே அமர்ந்திருந்தாள். இதற்கு முன்னால் நடந்தவைகளுக்கெல்லாம் அர்த்தம் எதுவாய் இருக்க முடியும் என்று அவள் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தாள். அந்தப் பிரச்னையை அவள் தீர்க்கவில்லை. தீர்க்காததற்காக அவள் வருந்தவும் இல்லை. மீண்டும் அவள் தன்னுடைய மனோராஜ் யத்தில் இறங்கினாள். அவருடன் அவள் இருந்த காலங்களைப் பற்றியும் ஒரு காதலரது கண்களோடு அவர் அவளை நோக்கியவை களைப் பற்றியும் அவள் மனோராஜ்யம் செய்தாள்.

'ஓ, அவர் மட்டும் சீக்கிரமாக வர முடியுமானால்! அம்மாதிரி நடக்காது என்று நான் மிகவும் பயப்படுகிறேன். எல்லாவற்றையும் விட மிக மோசமானது என்னவென்றால், எனக்கு வயதாகிக் கொண்டே போகிறது. அதுதான் விஷயம். இப்போது என்னிடம் என்ன இருக்கிறதோ, அது பின்னால் இருக்காது. ஒரு வேளை அவர் இன்று வந்தாலும் வரலாம்; உடனே வந்தாலும் வரலாம். ஒரு வேளை அவர் வந்து வரவேற்பு அறையில் உட்கார்ந்திருக்கலாம். ஒரு வேளை அவர் நேற்றே வந்திருக்கலாம். நான் மறந்து போயிருக்கலாம்; இம்மாதிரி பேசி விட்டு அவள் எழுந்து அந்த கிட்டார் வாத்தியத்தைக் கீழே வைத்து, வரவேற்பு அறைக்கு வந்தாள்.

வீட்டிலுள்ளவர்கள் எல்லாரும் வாத்தியார்களும், தாதிகளும், விருந்தாளிகளும் தேநீர் மேஜைக்கு முன்பாக அமர்ந்திருந்தார்கள். அந்த மேஜையைச் சுற்றி வேலைக்காரர்கள் நின்றுகொண்டிருந் தார்கள். ஆனால் அங்கே இளவரசர் ஆண்ட்ரூவைக் காணவில்லை. வாழ்க்கையோ முன்போலவேதான் நடந்துகொண்டிருந்தது.

'இதோ, அவள் வந்து விட்டாள்' என்று நட்டாஷா நுழைவதைப் பார்த்த வயோதிகக் கோமகன் சொன்னார். 'நல்லது, என் பக்கத்தில் நீ அமர்வாயாக' என்று சொன்னார். ஆனால் நட்டாஷா தன்னுடைய

தாயார் பக்கத்தில் அமர்ந்து எதையோ ஒன்றைத் தேடுவதைப்போல சுற்றிப் பார்த்தாள்.

'அம்மா, அவரை எனக்குக் கொடு, கொடுத்து விடு, அம்மா சீக்கிரம், சீக்கிரம்' என்று அவள் முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். தன்னுடைய விம்மல்களை அவளால் அடக்க முடியவில்லை.

வயோதிகர்களுக்கும், நிக்கலஸுக்கு மிடையில் நடந்து கொண்டிருந்த உரையாடல்களை அவள் கவனித்துக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

'அட கடவுளே, அட கடவுளே, அதே முகங்கள், அதே பேச்சுகள், அதே மாதிரி அப்பா; தனது கோப்பையைப் பிடித்துக் கொண்டு, அதே மாதிரி ஊதிக்கொண்டிருக்கிறார்' என்று நட்டாஷா நினைத்தாள். அந்த வீட்டுக்காரர்கள் எல்லாரும் ஒரே மாதிரி யிருப்பதைப் பற்றி, அவளுக்கு ஏற்பட்ட வெறுப்பு அவளுக்குள் வளர்ந்து பெருகுவதை பீதியோடு உணர்ந்தாள்.

தேநீருக்குப் பின்பு நிக்கலஸும், சோனியாவும், நட்டாஷாவும் உட்காரும் அறைக்குப் போய், தங்களுக்குப் பிரியமான மூலையில் உட்கார்ந்து கொண்டு, தங்களுடைய அன்னியோன்னிய உரையாடல்களை ஆரம்பித்தார்கள்.




உட்காரும் அறையில் அவர்கள் அமர்ந்த பின்பு, 'உமக்கு எப்பொழுதாவது இனிமேல் வரப்போவது எதுவுமில்லை; நல்ல காரியங்கள் எல்லாம் நடந்து முடிந்துவிட்டன என்று தோன்றிய துண்டா? இப்பொழுதுள்ள நிலைமை உண்மை யிலேயே மந்தமல்ல; மிகவும் துக்ககரமான நிலைமை என்ற எண்ணம் உமக்கு ஏற்பட்ட துண்டா?' என்று நட்டாஷா தன்னுடைய சகோதரரைக் கேட்டாள்.

'நானும் அப்படித்தான் நினைக்க வேண்டும். எல்லா காரியங்களும் நன்றாக இருக்கும்போதும் ஒவ்வொருவரும் மகிழ்ச்சியோடு இருக்கும்போதும் அம்மாதிரி நான் நினைத்த துண்டு. எல்லா காரியங்கள் மீதும் எனக்கு ஏற்கெனவே வெறுப்பு தோன்றி, இனிமேல் எல்லாரும் சாகவேண்டியதுதான் என்ற நினைப்பு என் மனதில் தோன்றியதுண்டு. ஒரு சமயம் என்னுடைய பட்டாளத்தில் எல்லாரும் மகிழ்ச்சியாய் இருந்தபோது, சங்கீதம் நடந்துகொண்டிருந்தபோது... திடீரென்று எனது உள்ளம் மிகவும் சோர்வு அடைந்தது...'

'ஆமாம், எனக்குத் தெரியும், எனக்குத் தெரியும், எனக்குத் தெரியும்' என்று நட்டாஷா அவரை இடைமறித்தாள். 'நான் மிகச் சிறியவளாக இருந்தபோது, எனக்கும் அம்மாதிரியே ஏற்படுவது வழக்கம். சில கேக்குகளுக்காக ஒரு தடவை என்னை தண்டித்தது உமக்கு நினைவில் இருக்கிறதா? நீங்கள் எல்லாரும் நாட்டியமாடிக் கொண்டிருந்தபோது, நான் பள்ளிக்கூட அறையில் உட்கார்ந்து, விம்மி விம்மி அழுதுகொண்டிருந்தது உமக்கு ஞாபத்தில் இருக்கிறதா? நான் அதை ஒருபொழுதும் மறக்கமாட்டேன். அச்சமயம் ஒவ்வொருவருக்காகவும் எனக்காகவும் நான் துக்கமும் வருத்தமும் அடைந்தேன். இவ்வளவுக்கும் என் மீது குற்றம் கிடையாது - அதுதான் அதில் உள்ள முக்கியமான விஷயம். உமக்கு ஞாபகம் இருக்கிறதா?' என்று நட்டாஷா கேட்டாள்.

'எனக்கு ஞாபம் இருக்கிறது. நான் பின்னால் உன்னிடம் வந்து உன்னைச் சமாதானப்படுத்த விரும்பினேன். ஆனால், நான் மிகுந்த வெட்கம் அடைந்திருந்தேன். உனக்குத் தெரியுமா? நாம் மிகுந்த மோசமான அசடுகளாய் இருந்தோம். என்னிடம் ஒரு வேடிக்கையான பொம்மை அச்சமயம் இருந்தது. அதை உன்னிடம் கொடுக்க விரும்பினேன். உனக்கு ஞாபகம் இருக்கிறதா?

'உமக்கு ஞாபகம் இருக்கிறதா?' என்று நட்டாஷா ஆழ்ந்த யோசனையைக் காட்டும் புன்னகையோடு கேட்டாள். 'வெகு காலத்திற்கு முன்பு, நாம் மிகமிகச் சிறியவர்களாய் இருந்தபோது, நமது சித்தப்பா தமது படிப்பு அறைக்கு நம்மை அழைத்துச் சென்ற போது - அந்தப் பழைய வீட்டில்-மிகவும் இருண்டதாய் இருந்தது. நாம் உள்ளே நுழைந்ததும் அங்கே திடீரென்று ஒன்று நின்றது...'

'ஒரு நீக்ரோ நின்றான்' என்று ஒரு மகிழ்ச்சிப் புன்னகையோடு நிக்கலஸ் இடைமறித்துச் சொன்னார்: 'ஆம், எனக்கு ஞாபகம் இருக்கிறது. இப்பொழுதும்கூட அங்கே உண்மையில் ஒரு நீக்ரோ நின்றானா, அல்லது அதைப்பற்றி நாம் கனவு கண்டோமா, அல்லது நல்ல நீக்ரோவைப் பற்றி நமக்குச் சொல்லிக்கொண்டிருந்தார்களா என்பது எனக்குத் தெரியவில்லை.'

'அவன் சாம்பல் வர்ணமாய் இருந்தான். உமக்குத் தெரியும். அவனுக்கு வெள்ளைப் பற்கள் இருந்தன. அவன் அங்கே நின்று நம்மை நோக்கிப் பார்த்தான்...'

'சோனியா, உனக்கு ஞாபகம் இருக்கிறதா?' என்று நிக்கலஸ் கேட்டார்.

'ஆமாம், ஆமாம். சில விஷயங்களைப் பற்றி எனக்கு ஞாபகம் வருகிறது' என்று சோனியா பீதியோடு பதில் அளித்தாள்.

'அந்த நீக்ரோவைப் பற்றி அப்பாவிடமும் அம்மாவிடமும் நான் கேட்டது உமக்குத் தெரியும். நீக்ரோவே கிடையாது என்று அவர்கள் சொன்னார்கள். ஆனால், இங்கே பாரும், உமக்கு ஞாபகம் இருக்கிறது, அல்லவா?' என்று நட்டாஷா சொன்னாள்.

'நிச்சயமாக எனக்கு ஞாபகம் இருக்கிறது. நான் இப்பொழுது தான் பார்த்ததைப்போல அவனுடைய பற்களைப் பற்றி எனக்கு நன்றாய் ஞாபகம் இருக்கிறது.'

'எவ்வளவு விசித்திரமாய் இருக்கிறது! அவை எல்லாம் கனவைப்போலல்லவா இருக்கின்றன. அதை நான் விரும்புகிறேன்.'

'நடன மண்டபத்தில் அவித்த முட்டைகளை நாம் எப்படி உருட்டினோம் என்பதும், உடனே இரண்டு கிழவிகள் திடீரென்று கம்பளத்தில் சருக்கி விழுந்ததும் உனக்கு நினைவு இருக்கிறதா? அவை எல்லாம் உண்மையா, அல்லவா? அவையெல்லாம் எவ்வளவு வேடிக்கையாய் இருந்தன என்பது உனக்கு நினைவிருக்கிறதா?'

'ஆம், நீல நிற மேல் சட்டையை அப்பா போட்டுக்கொண்டு மண்டப முற்றத்தில் துப்பாக்கியைச் சுட்டாரே, அது உமக்கு ஞாபகம் இருக்கிறதா?'

இம்மாதிரியாக இன்பத்தோடு புன்சிரிப்பு கொண்டு தங்களுடைய பழைய ஞாபகங்களில் திளைத்துக்கொண்டிருந் தார்கள். வயோதிகத்தின் சோகமான நினைப்புகளைப் பற்றியல்ல, வாலிபத்தின் கவித்துவமான நினைப்புகளைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தார்கள். வெகு காலத்திற்கு முன்பாக, தங்கள் உள்ளங்களில் பதிந்த நினைப்புகளைப் பற்றிப் பேசி அந்த நினைப்புகளில், கனவும் நனவும் ஒன்று கலந்து விளங்க, அவர்கள் பூரணமான மகிழ்ச்சியுடன் சிரித்துக்கொண்டிருந்தார்கள்.

எப்பொழுதும்போலவே, அவர்கள் பேசிய வேகத்தில் சோனியாவால் பேச முடியவில்லை. என்றாலும் இந்த பழைய நினைப்புகளில் திளைப்பதில் அவளும் கலந்துகொண்டாள்.

அவர்கள் சொல்லிய பழங்கால நினைப்புகளில் பல அவள் மனதில் இருந்து மறைந்து போயின. அவளுடைய மனதில் ஞாபகத்தில் இருப்பவைகளைப்பற்றி அவள் நினைத்தபோதும்கூட அவர்களுக்கு ஏற்படுகிற மாதிரி அதே கவித்துவ உணர்ச்சிகள் அவளுக்கு ஏற்படுவது இல்லை. அவர்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிகளைக் கண்டு அவள் சந்தோஷம் கொண்டாள். அவற்றில் கலந்து ஒன்றிப் போவதற்கும் அவள் முயற்சி செய்தாள்.

அவர்களுடைய பேச்சில் அவள் பூரணமாய் கலந்து கொண்டது ஒன்று உண்டு. அதாவது, அவள் (சோனியா) அந்த வீட்டிற்கு முதல் தடவையாக வந்த விஜயத்தைப் பற்றியதாகும். நிக்கலஸ் பின்னல் வேலைகள் செய்த ஒரு ஜாக்கட்டை அச்சமயம் போட்டுக் கொண்டிருந்தபடியால் அவரைப் பார்த்து அவள் எம்மாதிரி பயந்தாள் என்பதை அச்சமயம் அவள் சொன்னாள். அவளுக்கும் அதே மாதிரி பின்னல்கள் போட்ட சட்டையைக் கொடுப்பதாக அவளுடைய தாதி அச்சமயம் சொல்லியதையும் அவள் கூறினாள்.

'ஒரு முட்டைகோஸ் செடிக்குப் பக்கத்தில் நீ பிறந்ததாக அச்சமயம் பலர் சொல்லிக்கொண்டிருந்தது எனக்கு ஞாபகம் இருக்கிறது. அது உண்மையல்ல என்பது எனக்குத் தெரிந்து இருந்தாலும், அதை நம்ப முடியாது என்று சொல்ல எனக்குத் துணிவு இல்லை. அதனால், நான் மிகுந்த மனக் கஷ்டப்பட்டது இப்பொழுதும் எனக்கு நினைவு இருக்கிறது' என்று நட்டாஷா சொன்னாள்.

அவர்கள் அம்மாதிரி பேசிக்கொண்டிருந்தபோது, அந்த உட்காரும் அறையின் மற்றொரு வாசல் வழியாக ஒரு வேலைக்காரி தன் தலையை நீட்டினாள்.

'அவர்கள் சேவலைக் கொண்டு வந்துவிட்டார்கள். குமாரியே' என்று அவள் மெதுவாகச் சொன்னாள்.

'அது தேவையில்லை, போலியா. அதை எடுத்துக்கொண்டு போகும்படி அவர்களிடம் சொல்லு' என்று நட்டாஷா பதில் அளித்தாள்.

அந்த உட்காரும் அறையில் அவர்கள் பேசிக்கொண்டிருந்த போது டிம்லெர் உள்ளே வந்து, அங்கே ஒரு மூலையில் வைக்கப்பட்டிருந்த ஹார்ப் என்ற வாத்தியத்திற்குப் பக்கத்தில் போனார். அதன்மீது மூடியிருந்த உறையை நீக்கினார். அதனால் அந்த ஹார்ப்பிலிருந்து ஒரு கடகடப்பு சப்தம் தொனித்தது.

'திருவாளர் டிம்லெரே, எனக்குப் பிடித்தமான அந்த பீல்ட் கட்டிய கற்பனாலோகப் பாட்டை தயவுசெய்து பாடுவீராக' என்று வரவேற்பு அறையிலிருந்து வயோதிகக் கோமகளின் குரல் வந்தது.

டிம்லெர் அந்த வாத்தியத்தில் கம்பியை மீட்டினார். நட்டாஷாவையும் நிக்கலஸையும் சோனியாவையும் பார்த்து, 'இளசுகளான நீங்கள் எவ்வளவு அமைதியாய் இருக்கிறீர்கள்!' என்று சொன்னார்.

'ஆம், நாங்கள் தத்துவ விசாரணையில் இருக்கிறோம்' என்று நட்டாஷா கூறி சுற்றிலும் பார்வையை ஓட்டினாள். அதன்பின்

அவர்கள் தங்கள் உரையாடல்களைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்தார்கள். இப்பொழுது அவர்கள் கனவுகளைப் பற்றி விவாதித்துக்கொண்டிருந்தார்கள்.

டிம்லெர் வாசிக்க ஆரம்பித்தார். நட்டாஷா எழுந்து மெதுவாக மேஜையின் பக்கத்தில் போனாள். அங்கு எரிந்துகொண்டிருந்த மெழுகுவத்தியை எடுத்து வெளியே கொண்டு வைத்துவிட்டு, திரும்பி வந்து தான் முன்னால் உட்கார்ந்த இடத்தில் அமைதியாக அமர்ந்தாள். அந்த அறை இப்பொழுது இருட்டாய் இருந்தது. பெரிய ஜன்னல்கள் வழியாக பூரண சந்திரனின் வெள்ளி போன்ற நிலா, வெளிச்சம் தரையில் விழுந்து கொண்டிருந்த போதிலும், அவர்கள் சோபாவில் அமர்ந்துகொண்டிருந்த இடம் இருட்டாகவே இருந்தது. டிம்லெர் ஒரு பாட்டை வாசித்து முடித்தார். அதோடு நிறுத்தி விடுவதா, அல்லது வேறு எதையாவது வாசிப்பதா என்பதில் நிச்சயமில்லாமல், அந்தக் கம்பிகளின் மீது மெதுவாக தமது விரல்களை ஒட்டி உட்கார்ந்துகொண்டிருந்தார்.

நிக்கலஸுக்கும் சோனியாவுக்கும் இன்னும் அதிகமாக அருகே நெருங்கி நட்டாஷா அமர்ந்து மெதுவான குரலில் பேசினாள்: 'பழைய நினைவுகளை ஞாபகப் படுத்திக்கொண்டே போனால், கடைசியில், இந்த உலகத்திற்கு வருவதற்கு முன்பாக உள்ள விஷயங்களும் ஒருவருக்குத் தோன்ற ஆரம்பித்து விடுகின்றன என்பது உனக்குத் தெரியுமா?...'

'அதுதான் வெவ்வேறு பிராணிகளாக மறு பிறப்பில் ஜெனிப்பது' என்று சோனியா சொன்னாள். அவள் எப்பொழுதுமே நன்றாகப் படித்து ஒவ்வொன்றையும் ஞாபகத்தில் வைத்திருப்பாள். 'நம்முடைய ஆத்மாக்கள் முன்னால் மிருகங்களில் வசித்து வந்தன என்றும், இந்த ஜென்மத்துக்கு பின்பு மீண்டும் அவை அடுத்த ஜென்மத்தில் மிருகங்களில் போய் வசிக்கும் என்றும் எகிப்தியர்கள் நம்பி வந்தார்கள்.'

'இல்லை, நமது ஆத்மாக்கள் எப்பொழுதாவது மிருகங்களில் வசித்து வந்தன என்பதை நான் நம்ப முடியாது' என்று நட்டாஷா சொன்னாள். சங்கீதம் நின்றுவிட்டபோதிலும் அவள் குரல் மெதுவானதாகவே இருந்தது. 'நாம் இதற்கு முன்பாக அங்கே எங்கேயோ தேவதைகளாய் இருந்தோம் என்பது எனக்கு நிச்சயம். இப்பொழுது இங்கே இருக்கிறோம். அதனால்தான் நமக்கு ஞாபகத்திற்கு வருகின்றன...'

'நானும் உங்களுடன் சேர்ந்துகொள்ளலாம்?' என்று அங்கு மெதுவாய் வந்த டிம்லெர் கேட்டுவிட்டு அவர்கள் பக்கத்தில் அமர்ந்தார்.

'நாம் இதை முன்பு தேவதைகளாய் இருந்தோம் என்றால், இப்பொழுது ஏன் கீழே விழுந்துவிட்டோம்? இல்லை, அப்படி இருக்க முடியாது' என்றார் நிக்கலஸ்.

'நாம் கீழே விழவில்லை. நாம் கீழே விழுந்துவிட்டோம் என்று யார் சொன்னது?... நான் முன்னால் எப்படி இருந்தேன் என்பதை எப்படி என்னால் அறிய முடியும்?' என்று உறுதியோடு நட்டாஷா பதில் அளித்தாள். 'ஆத்மா என்பது அழிவற்றது-நல்லது, அப்படியானால் நான் எப்பொழுதுமே வாழ்ந்துகொண்டு இருக்கிறேன் என்பது உண்டானால், நான் இதற்கு முன்னாலும் வாழ்ந்திருக்க வேண்டும். ஆதியும் அந்தமும் இல்லாமல் வாழ்ந்திருக்க வேண்டும்.'

'ஆம், ஆதியும் அந்தமும் இல்லாத அந்த நித்திய வாழ்வை, நம்மால் யூகம் செய்வதற்கே கடினமாய் இருக்கும்' என்று டிம்லெர் கூறினார். அவர் அந்த இளசுகளிடம் வந்து சேர்ந்தபோது ஏதோ ஒரு தயவு காட்டுவதைப் போன்ற புன்னகையோடு காணப்பட்டார். ஆனால், இப்பொழுது அவர்களைப்போலவே அமைதியோடும் சிரத்தையோடும் பேசினார்.

'அந்த நித்தியத்தை யூகம் செய்வதற்கு ஏன் கடினமாய் இருக்க வேண்டும்?' என்று நட்டாஷா கேட்டாள். 'அது இன்று இருக்கிறது. அது நாளையும் இருக்கும். அது எப்பொழுதும் இருக்கும். அது நேற்று இருந்தது. அதற்கு முன்பும் இருந்தது...'

'நட்டாஷா! இப்பொழுது உன்னுடைய முறை. எனக்கு ஏதாவது பாடு என்று கோமகள் சொல்லுவதை அவர்கள் கேட்டார்கள். 'சதியாலோசனைக் காரர்கள் மாதிரி ஏன் அங்கே உட்கார்ந்திருக்கிறீர்கள்?'

'அம்மா, எனக்குப் பாடவே விருப்பம் இல்லை' என்று நட்டாஷா பதில் அளித்தாள். என்றாலும் அவள் எழுந்தாள்.

அவர் பேசிக்கொண்டிருந்த உரையாடல்களை முறித்துவிட்டு அந்த உட்காரும் அறையிலுள்ள மூலையிலிருந்து கிளம்பிப் போக யாருக்குமே பிரியம் இல்லை. அந்த மத்திய வயதினரான டிம்லெருக்குக்கூட பிரியம் இல்லை. ஆனால் நட்டாஷா எழுந்தாள். கிளாவிகார்ட் வாத்தியத்திற்கு முன்னால் நிக்கலஸ் அமர்ந்தார். வழக்கம் போல கணீர் என்று கேட்கக்கூடிய இடத்தில், அந்த அறையின் மத்தியில் நின்றுகொண்டு அவளுடைய தாயாருக்குப் பிடித்தமான பாட்டை நட்டாஷா பாட ஆரம்பித்தாள்.

அவள் பாட விரும்பவில்லை என்று முதலில் சொன்னாள். அவள் பாடி வெகு காலம் ஆயிற்று. அன்று மாலையில்தான் அவள்

மீண்டும் பாடினாள். இப்பொழுது மறுபடியும் அவள் பாடினாள். மைடெங்காவுடன் தமது படிப்பு அறையில் கோமகன் பேசிக்கொண்டிருந்தார். நட்டாஷா பாடுவதை அவர் கேட்டதும், விளையாடுவதற்காக வெளியே ஓட அவசரப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு பள்ளி மாணவனைப்போல, தமது மேனேஜருடன் பேசிக்கொண்டிருந்த பேச்சில் முதலில் குளறினார். பின்னால் பேச்சையே நிறுத்திவிட்டார். அவர் முன்னால் மைடெங்கா நின்றுகொண்டிருந்தார். அவர் அந்தப் பாட்டைக் கவனித்துக் கேட்டு புன்முறுவல் கொண்டார். நிக்கலஸ் தமது சகோதரி மீது வைத்த கண்களை எடுக்கவில்லை. அவளோடு தளாத்திற்குத் தக்கபடி மூச்சு விட்டுக்கொண்டிருந்தார். சோனியாவும் கவனித்துக் கேட்டுக்கொண்டிருந்தாள். தனக்கும் தனது சிநேகிதிக்கும் இடையில் உள்ள பிரம்மாண்டமான வித்தியாசத்தை நினைத்துப் பார்த்தார். தனது மைத்துனியைப் போல மனோகரமான கவர்ச்சி கொள்ளும்படியாக தான் ஆவது என்பது எவ்வளவு அசாத்தியமான காரியம் என்பதையும் நினைத்துப் பார்த்தார். வயோதிகக் கோமகள் கண்ணில் நீர் நிறைந்து பேரானந்தமும் சோகமும் கொண்ட புன்சிரிப்போடு அமர்ந்திருந்து, இடையிடையே தலையை ஆட்டி வந்தாள். தன்னுடைய வாலிபத்தையும் நட்டாஷாவையும் ஒப்பிட்டு சிந்தித்தாள். நட்டாஷாவுக்கும் இளவரசர் ஆண்ட்ரூவுக்கும் நடக்கப் போகும் திருமணத்தில் ஏதோ ஒரு இயற்கைக்கு எதிரான, பயங்கரமான காரியம் இருப்பதாகவும் அவள் நினைத்தாள்.

கோமகளுக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்த டிம்லெர் கண்களை மூடிக்கொண்டு கவனமாய் கேட்டுக்கொண்டிருந்தார்.

‘ஆ, கோமகளே, அதுதான் ஐரோப்பிய அருள் பிரசாதம். அவளுக்குக் கற்றுக்கொள்ள வேண்டியது எதுவுமே இல்லை - என்ன இனிமை! என்ன கனிவு! என்ன அழுத்தம்...’

‘ஆ, அவளுக்காக நான் எம்மாதிரி பயப்படுகிறேன், எம்மாதிரி பயப்படுகிறேன்!’ என்று தான் யாரிடம் பேசுகிறாள் என்பதை அறிந்து கொள்ளாமல் கோமகள் பேசினாள். நட்டாஷாவிடம் ஏதோ ஒன்று மிக அதிகமாக இருப்பதாகவும், அந்தக் காரணத்தினால் அவள் சந்தோஷமாய் இருக்க முடியாது என்றும், அவளுடைய தாய்மையின் உள்ளுணர்ச்சி கூறியது. நட்டாஷா பாடி முடிப்பதற்கு முன்பாக பதினான்கு வயதான பெட்டியா சில பகல் வேஷக்காரர்கள் வந்திருக்கிறார்கள் என்பதைக் கூறுவதற்காக மகிழ்ச்சியோடு உள்ளே ஓடி வந்தான்.

நட்டாஷா அவனைத் திடீரென்று நிறுத்தினாள்.

'முட்டாள்' என்று தனது சகோதரனைப் பார்த்து அவள் கூச்சலிட்டு, ஒரு நாற்காலியைப் பார்த்து ஓடி அதில் சாய்ந்து பலமாக விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள். வெகு நேரம் வரையில் அவளால் அழுகையை நிறுத்த முடியவில்லை.

'அது ஒன்றுமில்லை, அம்மா. உண்மையில் அது ஒன்றுமில்லை. பெட்டியா என்னை திடுக்கிட வைத்து விட்டான்' என்று அவள் சொல்லி புன்முறுவல் காட்ட முயற்சித்தாள். ஆனால் அவளுடைய கண்ணீர் இன்னும் பெருகிக்கொண்டு இருந்தது. அவளுடைய விம்மல்கள் அவளுடைய தொண்டையை இன்னமும் அடைத்துக்கொண்டிருந்தன.

வீட்டு வேலை செய்யும் அடிமைகள் பகல் வேஷம் போட்டுக் கொண்டு வந்தார்கள். கரடிகள் போலவும், துருக்கியர் போலவும், ஹோட்டல்காரர்கள் போலவும், சீமாட்டிகள் போலவும், பயங்கரமாக, வேடிக்கையாக அவர்கள் வேஷம் போட்டிருந்தார்கள். அவர்கள் வெளியே இருந்து உள்ளே வந்தபோது, களியாட்ட உணர்ச்சியோடு வெளியில் இருந்த குளிரையும் உள்ளே கொண்டு வந்தார்கள். முதலில் பீதியோடு முன் அறையில் நுழைந்தார்கள். பின்னால் ஒருவர் பின்னால் ஒருவர் மறைந்து நின்று, ஒருவரை ஒருவர் தள்ளி நடன மண்டபத்திற்குள் வந்தார்கள். முதலில் வெட்கம் அடைந்திருந்த போதிலும், வ்ர வரக் களிப்புடனும் மனப்பூர்வமாகவும் பாடவும் ஆடவும் கிறிஸ்துமஸ் விளையாட்டுகளைக் காட்டவும் ஆரம்பித்தார்கள். அவர்களை அடையாளம் கண்டுகொண்டதும், அவர்களுடைய ஆடைகளைப் பார்த்து கோமகள் சிரித்து விட்டு, வரவேற்பு அறைக்குள் போனாள். கோமகன் நடன மண்டபத்தில் அமர்ந்திருந்தார். புன்சிரிப்பு முகத்தில் பிரகாசிக்க அந்த வேஷக்காரர்களை கை தட்டி உற்சாகப் படுத்தினார். அங்கிருந்த இளையவர்கள் எல்லாரும் மறைந்து விட்டார்கள்.

அரை மணி நேரத்திற்குப் பின்னால், அந்த நடன மண்டபத்திற்கு வேறு சில வேஷக்காரர்கள் வந்தார்கள். உள் வளைய மிட்ட பாவாடை கட்டிய வயதான சீமாட்டி வேஷத்தில் நிக்கலஸ் இருந்தார். ஒரு துருக்கிய பெண் மாதிரி பெட்டியா காணப்பட்டான். டிம்லெர் ஒரு கோமாளியாகத் தோன்றினார். ஒரு குதிரைப் படை வீரராக நட்டாஷா விளங்கினாள். ஒரு சர்க்கேயனைப் போல வேஷம் போட்டு, பொசுக்கிய கார்க்குகளால் மீசையும் உருவங்களும் கொண்டு சோனியா தோன்றினாள்.

வேஷம் போடாமல் இருந்தவர்கள் இவர்களை அடையாளம் கண்டு கொள்ள முடியாமல் ஆச்சரியப்பட்டு புகழ்ந்தார்கள். ஆகவே தங்களுடைய வேஷங்கள் மிக நன்றாக இருப்பதாகத் தோன்றியபடியால், வீட்டுக்கு வெளியேயும் அவற்றைக் காட்டவேண்டும் என்று அந்த இளையவர்கள் தீர்மானித்தார்கள்.

ரஸ்தாக்கள் மிக சிலாக்கியமான நிலைமையில் இருந்தபடியால் தங்களுடன் ஒரு டஜன் அடிமை வேஷக்காரர்களையும் அழைத்துக் கொண்டு தம்முடைய வண்டியில் மாமாவின் வீட்டிற்குப் போய் வரலாம் என்று நிக்கலஸ் சொன்னார்.

'வேண்டாம், அந்த கிழட்டு மனிதரைப் போய், ஏன் சொந்தரவு செய்கிறீர்கள்?' என்று கோமகள் கேட்டாள். 'தவிர, அவருடைய வீட்டில் ஆடிப்பாடி விளையாடுவதற்கு உங்கள் எல்லாருக்கும் இடம் இருக்காது. வெளியே போய்த்தான் ஆகவேண்டும் என்று உங்களுக்குத் தோன்றினால், மெலயூகோவின் வீட்டிற்குப் போங்கள்.'

மெல்யூகோவா என்பவள் ஒரு விதவை. அவள் தன்னுடைய குடும்பத்தோடும் வாத்தியார்களோடும் தாதிகளோடும் ராஸ்டோவ்களின் வீட்டிலிருந்து மூன்று மைல் தூரத்தில் வசித்து வந்தாள்.

'அதுதான் சரி, எனது அன்பே' என்று வயோதிகக் கோமகன் இணைந்து கூறினார். அவர் பூரணமாக உற்சாகத்தில் அமிழ்ந்தார். 'நானும் ஆடைகளை அணிந்துகொண்டு அவர்களுடன் போவேன். பாஷெட்டியின் கண்களைத் திறக்கும்படி நான் செய்வேன்.'

ஆனால், அவர் போவதற்கு கோமகள் சம்மதிக்கவில்லை. சமீப காலமாக அவருக்குக் காலில் வலி இருந்து வந்தது. அதனால் அவர் போகக்கூடாது என்று தீர்மானிக்கப்பட்டது. ஆனால் லூயிசா ஐவானாவ்னா (திருமதி ஷாஸ்) அவர்களுடன் போவதாய் இருந்தால், மெல்யூகோவ்களின் வீட்டிற்கு இளஞ் சீமாட்டிகள் போகலாம் என்று சொல்லப்பட்டது. பொதுவாக பீதியும் வெட்கமும் கொண்டுள்ள சோனியா, இதைக் கேட்டதும் லூயிசா, ஐவானாவ்னாவிடம் சென்று, தங்களுடன் வருவதை மறுக்க வேண்டாம் என்று மற்ற யாரையும் விட அதிக அவசரமாய் கெஞ்சிக் கேட்டாள்.

சோனியாவின் வேஷம்தான் மற்றவர்களின் வேஷங்களை விட சிலாக்கியமாய் இருந்தது. அவளுடைய மீசையும் புருவங்களும் மிகப் பிரமாதமாய் இருந்தன. ஒவ்வொருவரும் அவள் மிக அழகாய் காணப்படுவதாக அவளிடம் சொன்னார்கள். அவளுடைய

வழக்கத்திற்கு விரோதமாக அவள் மிகுந்த உற்சாகமும் ஆவலும் கொண்ட மனோபாவத்தில் காணப்பட்டாள். அவளுடைய தலைவிதி அன்று தீர்மானிக்கப்பட்டு விடும் என்று ஏதோ ஒரு உள்ளொலி அவளுக்குச் சொல்லிற்று. அந்த ஆண் வேஷத்தில் அவள் முற்றிலும் மாறுபாடாய் காணப்பட்டாள். அவர்களுடன் போவதற்கு லூயிசா ஐவானாவ்னா சம்மதித்தாள். அரை மணி நேரத்திற்கெல்லாம் பெரிய மணிகளையும் சிறிய மணிகளையும் கட்டிக்கொண்டு, நாலு பனி வண்டிகள், அவைகளின் வழுக்கு கட்டைகள் அந்த உறைபனி மீது சப்தம் போட்டுக் கொண்டும் கிரீச்சிட்டுக் கொண்டும் இருக்க மண்டப முற்றத்திற்கு முன்னால் வந்து நின்றன.

விடுமுறை களியாட்ட தொனியை நிக்கலஸ் முதலில் ஆரம்பித்தார். ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு அது பரவி, மென்மேலும் பலமடைந்து உச்சஸ்தானத்திற்கு அது வந்தபோது, எல்லாரும் வெளியே உறைபனிக்கு வந்து வண்டிகளில் ஏறினார்கள். ஒருவரை ஒருவர் அழைத்துக் கொண்டும், சிரித்துக்கொண்டும், கூச்சலிட்டுக் கொண்டும் இருந்தார்கள்.

அந்த வண்டிகளில் இரண்டு, வீட்டு வேலைகளுக்காக உபயோகிக்கப்பட்டு வந்தவை. மூன்றாவது வண்டி கோமகன் உபயோகத்தில் உள்ள வண்டி. அந்த குதிரை வண்டியில் நடு மத்தியில் பூட்டப்பட்டிருந்த குதிரை ஆர்லோவ் ஜாதியைச் சேர்ந்தது. நிக்கலஸின் சொந்த வண்டியான நாலாவது வண்டியில் ரோமம் அடர்ந்திருந்த குட்டையான கருப்புக் குதிரை நடுமத்திக் குதிரையாகப் பூட்டப் பட்டு இருந்தது. வயோதிக சீமாட்டி வேஷத்தில் இருந்த நிக்கலஸ், அந்த வேஷத்திற்கு மேலாக தம்முடைய குதிரைப் படையின் மேல் சட்டையை அணிந்துகொண்டு, கையில் கடிவாள வார்களைப் பற்றி அந்த பனி வண்டியின் மத்தியில் நின்றுகொண்டிருந்தார்.

அப்போது வெளிச்சமாய் இருந்தபடியால், சந்திரனின் ஒளி கடிவாளத்தில் உள்ள இரும்புத் தகடுகளிலும் குதிரைகளின் கண்களிலும் பிரதிபலிப்பதை அவர் காண முடிந்தது. அந்த மண்டப முற்றத்தின் நிழலில் இருந்த கூட்டத்தின் கூச்சலைக் கேட்டு பீதியுற்று அந்தக் குதிரைகள் சுற்றிப் பார்த்தன.

நட்டாஷாவும் சோனியாவும் திருமதி ஷாஸூம் இரண்டு வேலைக்காரிகளும் நிக்கலஸின் பனி வண்டியில் ஏறிக்கொண்டார்கள். டிம்லெரும் அவரது மனைவியும் பெட்டியாகவும் வயோதிகக் கோமகனின் வண்டியில்

ஏறிக்கொண்டார்கள். மீதம் இருந்த வேஷக்காரர்கள் மற்ற இரண்டு வண்டிகளிலும் அமர்ந்து கொண்டார்கள்.

'ஜக்கார், நீ முதலில் போ' என்று தமது தந்தையின் வண்டிக் காரனைப் பார்த்து நிக்கலஸ் கூறினார். சிறிது தூரத்திற்குப் பின்னால் அவனைத் தோற்கடித்து அவன் வண்டிக்கு முன்பாக தமது வண்டியை விடுவதற்கு ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்த அவர் விரும்பினார்.

டிம்லெரையும் அவருடைய கோஷ்டியையும் ஏற்றிக் கொண்டிருந்த வயோதிகக் கோமகனின் பனி வண்டி முன்னால் போக ஆரம்பித்தது. அந்த வண்டியிலுள்ள வழுக்குக் கட்டைகள் பனியினால் இறுகிவிட்டதைப்போல கிரீச் சப்தமிட்டன. அந்த வண்டியிலுள்ள ஆழ்ந்த தொனியுள்ள மணிகள் அடிக்க ஆரம்பித்தன. மத்திக் குதிரையின் இரு பக்கங்களிலும் உள்ள சட்டங்களை பக்கவாட்டுக் குதிரைகள் நெருங்கிக் கொண்டு, ஆழ்ந்திருந்த அந்தப் பனியிலிருந்து முண்டியடித்து, சர்க்கரையைப்போல சாய்ந்து மின்னிக் கொண்டிருந்த அந்த உறை பனியை சிதற அடித்தன.

முதல் வண்டிக்குப் பின்னால் நிக்கலஸ் தமது வண்டியை ஓட்டினார். அதன் பின்னால் மற்ற வண்டிகள் இரைச்சலோடும், அவற்றின் வழுக்குக் கட்டைகள் கிரீச்சிட்டுக் கொண்டும் புறப்பட்டன. முதலில் அவர்கள் ஒரே மாதிரியான பெரு நடையில் அந்த ஒடுங்கிய ரஸ்தாவில் ஓட்டிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் தோட்டத்தைக் கடந்து போனபோது, பக்கங்களில் நின்ற மரங்களின் நிழல்கள், ரஸ்தாவிற்கு குறுக்காக பல இடங்களில் விழுந்திருந்தன. அதனால் சந்திரனின் வெளிச்சத்தை அவை மறைத்தன. ஆனால், வேலியைக் கடந்து அவர்கள் சென்றதும், அங்கிருந்த பனி பரவிய சம நிலமானது, சந்திர வெளிச்சத்தில் மூழ்கி, வைரங்களைப் போல மின்னி, இடையிடையே நீல நிற நிழல் காட்டி பரந்து விரிந்து நின்றது. படார் படார் என்று ரஸ்தாவில் இருந்த ஒரு நொடியில் முதல் வண்டி விழுந்து ஏறியபோது சப்தம் போட்டது. அதே மாதிரி மற்ற வண்டிகளும் அந்த நொடியில் குலுங்கின. அந்த ரஸ்தாவில் அதன் பின்னால், அந்த வண்டிகள் ஒன்றன் பின் ஒன்றாக. அந்த உறை பனியின் அமைதியை பலமாய் குலைத்து வேகமாய் ஓட ஆரம்பித்தன.

'ஒரு முயலின் அடிச்சுவடு தெரிகிறது. எத்தனையோ சுவடுகள் தெரிகின்றன' என்று அந்தப் பனிக் காற்றில் நட்டாஷாவின் குரல் கணீர் என்று ஒலித்தது.

'எவ்வளவு வெளிச்சமாய் இருக்கிறது, நிக்கலஸ்!' என்று சோனியாவின் குரல் கேட்டது.

நிக்கலஸ் திரும்பி சோனியாவை நோக்கினார். அவளுடைய முகத்தை நன்றாய் பார்ப்பதற்காக கீழே குனிந்தார். முற்றிலும் ஒரு புதிதான, இனிமையான முகம், கருப்புப் புருவங்களோடும் மீசைகளோடும், ரோமத்தினாலாகிய தலை முடிக்குள்ளிருந்து அவரைப் பார்ப்பதற்காக வெளியே நீட்டியது. அந்த சந்திர வெளிச்சத்தில் அந்த முகம் வெகு சமீபமாகவும், என்றாலும் வெகு தூரமாகவும் காணப்பட்டது.

'அவள்தான் சோனியாவாய் இருந்தாள்' என்று அவர் நினைத்து இன்னும் நெருங்கி, அவளை நோக்கி புன்முறுவல் காட்டினார்.

'என்ன விஷயம், நிக்கலஸ்?'

'ஒன்றும் இல்லை' என்று அவர் சொல்லி, மீண்டும் தமது குதிரைகளைப் பார்த்துத் திரும்பினார்.

பிரதான ரஸ்தாவிற்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். பனி வண்டிகளின் வழுக்குக் கட்டைகளால் அந்த ரஸ்தா வழ வழாவென்று இருந்தது. குதிரைகளின் குளம்புகள் அந்த ரஸ்தாவில் பல இடங்களில் பதிந்திருந்தன. அந்த அடையாளங்கள் சந்திர வெளிச்சத்தில் நன்றாய்த் தெரிந்தன. குதிரைகள் கடிவாளங்களை தாங்களாகவே இழுத்துக்கொண்டு வேகத்தை அதிகரித்தன. பக்கவாட்டுக் குதிரை தலையைத் திருப்பி கடிவாளத்தை இழுத்து வேகமாய் போக ஆரம்பித்தது. மத்தியிலுள்ள குதிரை இப்பக்கமும் அப்பக்கமும் ஆடி, 'வேகமாய் ஓடுவதற்கு சமயம் வந்துவிட்டதல்லவா?' என்று கேட்பது போல காதுகளை ஆட்டிக்கொண்டிருந்தது. எதிரே வெகு தூரத்திற்கு அப்பால் ஐக்கார் ஓட்டிச் சென்ற கருப்புக் குதிரைகள் பூட்டிய பனி வண்டியின் மணிகளின் ஒலி வரவர தூரமாகக் கேட்டுக்கொண்டிருந்தது. ஆனால் அந்த வெள்ளைப் பனியில் அந்த வண்டியை இன்னமும் தெளிவாய் காண முடிந்தது. அந்த வண்டியில் இருந்து கிளம்பிய வேஷக்காரர்களின் கூச்சல்களும் சிரிப்புகளும் குரல்களும் இன்னமும் கேட்டுக்கொண்டிருந்தன.

'எனது கண்களே, பாய்ச்சலில் கிளம்புங்கள்' என்று நிக்கலஸ் கூச்சலிட்டு, கடிவாள வாரைப் பிடித்திழுத்து சவுக்கைச் சுழற்றினார்.

அவர்கள் மீது மோதிய அந்தக் காற்றின் வேகத்தினாலும், வரவர அதிகமான வேகத்தில் ஓடுவதற்காக, பக்கவாட்டுக் குதிரைகள் வேகமாய் இழுத்துக்கொண்டு இருந்ததினால் ஏற்பட்ட

அசைவுகளினாலுமே, அந்த வண்டி எவ்வளவு வேகமாய் பறந்து கொண்டிருந்தது என்பதை ஒருவர் அறிய முடிந்தது. நிக்கலஸ் திரும்பிப் பார்த்தார். கூச்சல்களோடும், கிரீச் குரல்களோடும் சவுக்குகளை சுழற்றுவதினால், மத்தியிலுள்ள குதிரைகள் கூட, பாய்ச்சலில் கிளம்பி மற்ற பனி வண்டிகள் பின்னால் வந்துகொண்டிருப்பதை அவர் கவனித்தார். அந்த மத்திக் குதிரை தன் தலைக்கு மேல் உள்ள வளைவின் கீழ் ஒரே வேகமாய் ஆடிக்கொண்டு, வேகத்தைக் குறைப்பது என்ற நினைப்பே இல்லாமல், அவசியமானபோது வேகத்தைக் கூட்டுவதற்கு தயாராக ஓடிக்கொண்டு இருந்தது.

முதலில் போய்க்கொண்டிருந்த பனி வண்டியை நிக்கலஸ் கடந்து விட்டார். இப்பொழுது அந்தக் குன்றிலிருந்து கீழாக ஓட்டி வந்து, ஆற்றிற்குப் பக்கத்தில் உள்ள ஒரு புல் வெளியில் குறுக்காய் இருந்த அகலமான கால்நடைப் பாதைக்கு வந்து சேர்ந்தார்கள்.

'இப்பொழுது நாம் எங்கே இருக்கிறோம்?' என்று அவர் நினைத்தார். 'இதுதான் காசோய் புல்வேளி என்று நான் நினைக்கிறேன். ஆனால், இல்லை - இதற்கு முன் நான் எப்பொழுதும் பார்த்திராத ஒரு புது இடமாய் இது இருக்கிறது. இது காசோய் புல்வெளியல்ல. அல்லது டியோம்கின் குன்றும் அல்ல. இது என்னது என்பது கடவுளுக்கே தெரியும். இது ஏதோ புதிதாகவும் மனோகரமாகவும் இருக்கிறது. நல்லது, அது எதுவாய் இருந்தாலும் சரி...' தமது குதிரைகளைப் பார்த்து கூச்சலிட்டு, முதல் பனி வண்டியைக் கடக்க அவர் ஆரம்பித்தார்.

ஜக்கார் தனது குதிரைகளை இழுத்து நிறுத்தி முகத்தைத் திருப்பினான். அந்த முகம் ஏற்கெனவே பனியினால் மூடப்பட்டிருந்தது.

நிக்கலஸ் குதிரைகளின் கடிவாளத்தைப் பிடித்து இழுத்தார். ஜக்கார் தனது கைகளை நீட்டி நாக்கினால் சுடக்குப் போட்டு தனது குதிரைகளை விரட்டினான்.

'இப்பொழுது, இதோ பாரும், எஜமானே' என்று அவன் கத்தினான்.

அந்த இரண்டு பனி வண்டிகளும் ஒன்றன் பக்கத்தில் ஒன்றாக வேகமாய் பறந்தன. பக்கவாட்டுக் குதிரைகளின் குளம்புகளும் வேகமாய் ஓடின. நிக்கலஸ் முன்னால் போக ஆரம்பித்தார். ஜக்கார் இன்னமும் தனது கைகளை நீட்டிக்கொண்டே, ஒரு கையில் கடிவாள வாரைப் பிடித்து உயர்த்தினான்.

‘வேண்டாம், நீர் போக வேண்டாம், எஜமானே’ என்று அவன் கத்தினான்.

நிக்கலஸ் தமது எல்லாக் குதிரைகளையும் பாய்ச்சலில் ஓட்டினார். ஜக்காரைக் கடந்து முன்னால் போய்விட்டார். வண்டியில் அமர்ந்து இருந்தவர்களின் முகங்களில் எல்லாம், அந்தக் காய்ந்த பனிப்பொடியை குதிரைகள் சிதறி அடித்துக்கொண்டே போயின. அவைகளுக்குப் பின்னால் வேகமாய் மணிகள் அடித்துக் கொண்டே இருந்தன. வேகமாய் ஓடிக்கொண்டிருந்த கால்களின் அசைவுகளும் பனி வண்டிகளின் நிழல்களும் ஒரே குழப்பத்தை உண்டுபண்ணின. வழுக்குக் கட்டைகளின் ‘சீட்டி சப்தங்களும், பெண்களின் கிரீச் கூச்சல்களும், நாலா பக்கங்களிலிருந்தும் கேட்டுகொண்டிருந்தன.

மீண்டும் தமது குதிரைகளை நிறுத்தி நிக்கலஸ் தம்மைச் சுற்றிப் பார்த்தார். இன்னமும் அவர்களைச் சுற்றி சந்திர வெளிச்சத்தில் மூழ்கிய அந்த அதிசய நிலப் பரப்பே காணப்பட்டது.

‘நான் இடது பக்கம் திரும்ப வேண்டும் என்று ஜக்கார் கூச்சல் போடுகிறான். ஆனால் எதற்காக இடது பக்கம் திரும்ப வேண்டும்? நாம் மெல்யூகோவ்களின் வீட்டிற்கு போய்க்கொண்டிருக்கிறோமா? இதுதானா மெல்யூகோவ்கா? நாம் எங்கே போகிறோம் என்பதை கடவுளே அறிவார். நமக்கு என்ன நேர்ந்துகொண்டிருக்கிறது என்பதையும் கடவுளே அறிவார் - ஆனால் இது எதுவாய் இருந்தாலும், இது மிகுந்த அதிசயமாகவும் இனிமையாகவும் இருக்கிறது’ என்று நிக்கலஸ் நினைத்தார். தனது வண்டியின் முன் சுற்றி நோட்டமிட்டார்.

‘இதோ பாருங்கள். அவருடைய மீசையும் இமை ரோமங்களும் எல்லாம் வெள்ளையாய் இருக்கின்றன’ என்று அழகான புருவங்களையும் மீசைகளையும் கொண்ட அந்த அழகான, அதிசயமான, பழக்கமில்லாத ஆட்களில் ஒருவர் சொன்னார்.

‘இது நட்டாஷாவாக இருந்தவள்தான் என்று நான் நினைக்கிறேன். அது திருமதி ஷாஸ் ஆக இருக்கலாம். ஒரு வேளை இல்லாமலும் இருக்கலாம். இந்த மீசையுள்ள சர்க்கேஸியனை எனக்குத் தெரியாது. ஆனால் அவளை நான் காதலிக்கிறேன்’ என்று நிக்கலஸ் நினைத்தார்.

‘உங்களுக்கு குளிராக இல்லையா?’ என்று அவர் கேட்டார்.

அவர்கள் பதில் சொல்லவில்லை. ஆனால் சிரிக்க ஆரம்பித்தார்கள். பின்னால் உள்ள பனி வண்டியிலிருந்து டிம்லெர்

ஏதோ கூச்சலிட்டார். ஒரு வேளை ஏதோ வேடிக்கை விஷயமாய் இருக்கலாம். ஆனால் அவர் என்ன சொன்னார் என்பதை அவர்களால் அறிந்துகொள்ள முடியவில்லை.

'ஆமாம், ஆமாம்' என சில குரல்கள் பதில் சொல்லி சிரித்தன.

'இது ஒரு தேவதைகளின் காடு மாதிரி இருக்கிறது. அசைத்தாடும் கருப்பு நிழல்களும், வைரங்களின் ஜொலி ஜொலிப்பும், சலவைக்கல் படிக்கட்டுகளும், தேவதைகளின் கட்டிடங்கள் மீது வெள்ளிக் கூரைகளும் சில மிருகங்களின் கிரீச் சப்தங்களும் இங்கே இருக்கின்றன. இதுதான் உண்மையில் மெல்யூகோவ்கா என்றால், அது இன்னமும் அதிசயமாய் இருக்கிறது. ஏனென்றால், நாம் எங்கே ஓட்டிக்கொண்டு போனோம் என்பது கடவுளுக்கே தெரியும். அப்படி இருந்தும், நாம் மெல்யூகோவ்கா என்ற இடத்திற்கே வந்து விட்டோமானால், அது ஒரு அதிசயமல்லவா?' என்று நிக்கலஸ் நினைத்தார்.

அது உண்மையில் மெல்யூகோவ்கா என்ற இல்லமேதான். வேலைக்காரிகளும் வேலைக்காரர்களும் கையில் மெழுகு வத்திகளை எடுத்துக்கொண்டு, சந்தோஷமான முகங்களோடு மண்டப முற்றத்திற்கு ஓடி வந்தார்கள்.

'யார் அது?' என்று அந்த முற்றத்தில் இருந்த ஒருவர் கேட்டார்.

'கோமகன் வீட்டிலிருந்து வருகிற பகல் வேஷக்காரர்கள். அந்தக் குதிரையைக் கொண்டே நான் அறிந்து கொண்டேன்' என்று சில குரல்களின் பதில் கூறின.



பெலாகேயா டானைலாவ்னா மெல்யூகோவா என்ற பருத்த, சுறுசுறுப்பு மிகுந்த, கண்ணாடிகள் அணிந்த பெண், ஒரு தொள தொளப்பான உடையணிந்து, தனது குமாரிகள் சுற்றியிருக்க வரவேற்பு அறையில் அமர்ந்திருந்தாள். தனது குமாரிகளின் மனம் உற்சாகம் அடையும்படி அவள் ஏதோ முயற்சி செய்து கொண்டிருந்தாள். அவர்கள் மெழுகை உருக்கி பனியில் போட்டு, சுவரில் காணப்படும் நிழல்களைப் பார்த்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அச்சமயம் முன் அறைக்கு யாரோ புதிதாக வந்தவர்களின் காலடி ஓசையும், பேச்சுத் தொனிகளும் அவர்களுக்குக் கேட்டன.

குதிரை வீரர்கள், சீமாட்டிகள், சூனியக்காரர்கள், கோமாளிகள், கரடிகள் ஆகிய எல்லா வேஷக்காரர்களும் தங்கள் தொண்டையை கனைத்துக் கொண்டு, முகத்தில் படிந்திருந்த உறைபனியை வழித்து எறிந்து முன் அறையில் இருந்து நடன மண்டபத்திற்குள் வந்தார்கள். அங்கே வேகமாக விளக்குகள் பொருத்தப்பட்டன. கோமாளி வேஷம் போட்டிருந்த டிம்லெரும், சீமாட்டி வேஷம் போட்டிருந்த நிக்கலஸும் நடனத்தை ஆரம்பித்தார்கள். கிரீச்சிட்டுக் கொண்டிருந்த குழந்தைகள் புடைசூழ அந்தப் பகல் வேஷக்காரர்கள் தங்கள் முகங்களை மறைத்து, தொனியையும் மாற்றி அந்த வீட்டுக்காரிக்கு குனிந்து வந்தனம் செய்துவிட்டு அந்த அறையில் அமர்ந்தார்கள்.

'அட கடவுளே! அவர்களை அடையாளமே தெரியவில்லையே! நட்டாஷா! அவள் யாரைப்போல் இருக்கிறாள் என்று பாருங்கள். எனக்கு ஒருவரை அவள் உண்மையில் ஞாபகம் ஊட்டுகிறாள். திருவாளர் டிம்லெர்-அவர் எவ்வளவு நன்றாய் இருக்கிறார்! எனக்கு அவரை முதலில் தெரியவில்லை. எவ்வளவு அழகாக அவர் நடனமாடுகிறார்! அட கடவுளே! ஒரு சர்க்கேஸியன் கூட இருக்கிறாரே! அந்த அருமை சோனியாவுக்கு உண்மையில் அது எவ்வளவு பொருத்தமாய் இருக்கிறது! அதோ ஒருவர், அவர் யார்? நல்லது, எங்களையெல்லாம் நீங்கள் மிகுந்த மகிழ்ச்சியடையும்படி செய்தீர்கள். நிக்கீட்டா, வானியா - அந்த மேஜைகளையெல்லாம் சுத்தம் செய்யுங்கள். நாங்கள் இங்கே ரொம்ப அமைதியாக உட்கார்ந்து இருந்தோம். ஆஹா... ஹா... அந்தக் குதிரை வீரன், அந்தக் குதிரை வீரன் - ஒரு வாலிபன் மாதிரியே தோன்றுகிறது. கால்களைப் பாருங்கள்... என்னால் அவனைப் பார்க்க முடியவில்லை...' என்று பற்பல குரல்கள் கிளம்பிக் கொண்டிருந்தன.

மெல்யூகோவ் வீட்டில் உள்ள சிறுசுகளின் சிநேகிதையான நட்டாஷா அவர்களோடு பின்னால் உள்ள அறைக்குப் போனாள். அங்கே ஒரு கார்க், பலவிதமான கவுன்கள், ஆண்களுக்கான உடைகள் ஆகியவைகளைக் கொண்டு வரும்படி வேலைக்காரர்களுக்குச் சொன்னார்கள். வேலைக்காரர்கள் அவற்றைக் கொண்டு வந்தபோது, கதவிற்குப் பின்னால் நின்று, சட்டை அணியாத வெறும் கைகளை நீட்டி அவற்றை அந்தப் பெண்கள் வாங்கிக் கொண்டார்கள். பத்து நிமிஷங்களுக்குப் பின்னால், அந்த சிறிய மெல்யூகோவ்கள் எல்லாரும் பகல் வேஷக்காரர்களோடு வந்து கலந்து கொண்டார்கள்.

பெலாகேயா டானைலாவ்னா அங்கு வந்த விருந்தாளிகளுக்காக அறைகளை சுத்தம் செய்யும்படி உத்தரவிட்டு விட்டு, அந்த மிராசுதார்களுக்கும் அடிமைகளுக்கும் சிற்றுண்டிகள் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்தாள். பின்னால் அவள் தன் கண்ணாடியைக் கழற்றாமலே வேஷக்காரர்களிடம் சென்று, அடக்கிய புன்முறுவலோடு அவர்களின் முகங்களை உற்றுப் பார்த்தாள். அவளால் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. டிம்லெரையும் ராஸ்டோவ்களையும் மட்டும் அவளால் அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை என்பதல்ல, அவளுடைய சொந்தக் குமாரிகளையும், அவர்கள் அணிந்திருந்த அவளுடைய காலஞ் சென்ற கணவரின் உடைகளையும்கூட அவளால் அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை.

காஜான்-டார்டார் மாதிரி வேஷம் போட்டுக்கொண்டிருந்த தன்னுடைய சொந்த குமாரியின் முகத்தை உற்றுப் பார்த்து, தனது தாதியை நோக்கி, ‘இது யார்?’ என்று கேட்டாள். ‘இது ராஸ்டோவ்களில் ஒருவராய் இருக்கும் என்று நான் நினைக்கிறேன். நல்லது, திருவாளர் குதிரை வீரரே, நீர் எந்தப் பட்டாளத்தில் சேர்ந்து சேவை செய்கிறவர்?’ என்று நட்டாஷாவைப் பார்த்துக் கேட்டாள். ‘இதோ பார், இந்தத் துருக்கியருக்குக் கொஞ்சம் பழ ஜல்லி கொடு’ என்று அங்கே சிற்றுண்டிகள் வழங்கிக் கொண்டிருந்த பட்லரைப் பார்த்து கூறினாள். ‘அவர்களுடைய சட்டத்தில் அது விளக்கப்படவில்லை.’

பகல் வேஷக்காரர்கள் நன்றாக வேஷம் போட்டிருந்தபடியால் தங்களை ஒருவரும் அறிந்துகொள்ள முடியாது என்று நினைத்தார்கள். ஆகவே, அவர்களிடம் வெட்கம் என்பதே இல்லை. அவர்கள் ஆடிய ஆட்டங்களில், சில சமயங்களில் அவர்கள் காட்டிய வேடிக்கையான, விசித்திரமான பாய்ச்சல்களைக் கண்டு, பெலாகேயா டானைலாவ்னா தனது முகத்தை கைக் குட்டையால் மூடிக் கொண்டாள். அவளுடைய அடக்க முடியாத, இனிய வயோதிகச் சிரிப்பானது அவளுடைய பருத்த முழு உடம்பையும் குலுக்கிக் கொண்டிருந்தது.

‘எனது குஞ்சு சாஷா! அந்த சாஷாவைப் பாருங்கள்!’ என்று அவள் சொன்னாள். ருஷ்ய கிராமாந்திர நடனங்களுக்குப் பின்னால் கோஷ்டி கான நடனங்கள் நடந்தன. அதன் பின்னால், அந்த மிராசுதார்களையும் அடிமைகளையும் ஒரு பெரிய வட்டமாக அமரும்படி பெலாகேயா டானைலாவ்னா செய்தாள். ஒரு கயிறு,

ஒரு மோதிரம், ஒரு வெள்ளி ரூபிள் இவைகளைக் கொண்டு வரச் செய்து, அவர்கள் எல்லாருமே விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு மணி நேரத்தில் அவர்களுடைய ஆடைகளெல்லாம் கசங்கிப் போயின. கார்க்குகளினால் செய்யப்பட்டிருந்த புருவங்களும் மீசைகளும் அவர்களுடைய வியர்த்த, சிவந்த, களிகொண்ட முகங்களில் அநேகமாய் அழிந்து விட்டன. அந்த வேஷக்காரர்களை அப்பொழுதுதான் பெலாகேயா டானைலாவ்னா அடையாளம் கண்டு கொள்ள ஆரம்பித்தாள். அவர்களுடைய சாமர்த்தியமான ஆடைகளை அவள் வியந்தாள். முக்கியமாக் இளஞ் சீமாட்டிகளுக்கு அவை எவ்வளவு பொருத்தமாய் இருந்தன என்று வியந்து கூறி, தன்னை மிக நன்றாகக் களிப்படையும்படி செய்ததற்காக எல்லாருக்கும் வந்தனம் கூறினாள். வரவேற்பு அறையில் இராச்சாப்பாட்டிற்கு வரும்படி விருந்தாளிகளை அழைத்தாள். நடன மண்டபத்தில் அடிமைகளுக்கு சாப்பாடு போடப்பட்டது.

'காலியான குளிக்கும் வீட்டில் ஜோசியம் சொல்லுவது என்பது பயங்கரமானது' என்று மெல்யூகோவ்களுடன் தங்கியிருந்த ஒரு வயோதிகக் கன்னிகை சாப்பாட்டின்போது சொல்லிக் கொண்டிருந்தாள்.

'ஏன்?' என்று மெல்யூகோவ் பெண்களின் மூத்தவள் கேட்டாள்.

'உன்னால் போக முடியாது. அதற்கு மிகுந்த தைரியம் வேண்டும்...'

'நான் போவேன்' என்று சோனியா சொன்னாள்.

'அந்த இளஞ் சீமாட்டிக்கு என்ன நடந்தது என்பதை சொல்லு' என்று மெல்யூகோவ்களின் இரண்டாவது பெண் கேட்டாள்.

'நல்லது' என்று வயோதிகக் கன்னிகை ஆரம்பித்தாள். 'ஒரு இளஞ்சீமாட்டி ஒரு தடவை ஒரு சேவலையும், இரண்டு தட்டுகளையும், கத்திகளையும், கரண்டிகளையும் எடுத்துக் கொண்டு அங்கே போய் உட்கார்ந்திருந்தாள். சிறிது நேரம் அவள் உட்கார்ந்திருந்த பின்பு, யாரோ வருவது அவளுக்குத் திடீரென்று கேட்டது... கடிவாள மணிகளுடன் ஒரு பனி வண்டி வந்து நின்றதையும், அதிலிருந்து இறங்கி அவர் வருவதையும் அவள் கேட்டாள். அவர் உள்ளே வந்தார். ஒரு மனிதர் ரூபத்திலேயே, ஒரு அதிகாரி மாதிரியே அவர் இருந்தார் - அவர் உள்ளே வந்து அவளுடன் அந்த மேஜை முன்பு அமர்ந்தார்.

'ஆ, ஆ!' என்று நட்டாஷா கூச்சலிட்டு பீதியினால் தன்னுடைய கண்களை சுழற்றினாள்.

'அப்படியா? எப்படி... அவர் பேசினார்?'

'ஆம், ஒரு மனிதரைப் போலவே பேசினார். ஒவ்வொன்றும் முற்றிலும் சரியாகவே இருந்தது. அவர் அவளை தாஜா செய்ய ஆரம்பித்தார். சேவல் கூவுகிற வரையில் அவர் பேசும்படி அவள் செய்து கொண்டு இருந்திருப்பாள். ஆனால் அவளுக்கு பீதி ஏற்பட்டது. பீதியேற்பட்டு தன்னுடைய முகத்தை கைகளால் மறைத்துக் கொண்டாள். அவர் அவளைப் பற்றிப் பிடித்தார். நல்ல வேளையாக அச்சமயத்தில் வேலைக்காரிகள் உள்ளே ஓடி வந்தார்கள்...'

'ஆமாம் அவர்களை ஏன் பயமுறுத்துகிறாய்?' என்று பெலாகேயா டானைலாவ்னா கேட்டாள்.

'அம்மா, உனக்கு ஜோசியத்தை நீயே பார்த்துக் கொள்ளுவது வழக்கம் ஆயிற்றே?...' என்று அவளுடைய குமாரி கேட்டாள்.

'தானியக் களஞ்சியத்தில் ஒருவர் ஜோசியம் பார்ப்பது என்றால், அதை எப்படிச் செய்வது?' என்று சோனியா கேட்டாள்.

'நல்லது, நீ அங்கே போகிறதாய் வைத்துக்கொள்ளுவோம். அங்கே போனதும் கவனித்துக் கேட்க வேண்டும். நீ என்ன கேட்கிறாயோ, அதைப் பொறுத்துத்தான் இருக்கிறது அதிருஷ்டம். இடிப்பது போலவும், தட்டுவது போலவும் சப்தம் கேட்டால், அது மிகவும் கெடுதல். தானியத்தை எடுப்பது போல சப்தம் கேட்டால், அது நல்லது. அம்மாதிரி சப்தங்களைக் கூட சில சமயங்களில் ஒருவர் கேட்பது உண்டு.'

'அம்மா, தானியக் களஞ்சியத்தில் உனக்கு என்ன ஏற்பட்டது என்பதை எங்களுக்குச் சொல்லு.'

'ஓ, நான் மறந்து விட்டேன்... ஆனால், உங்களில் ஒருவரும் போக விரும்பவில்லை என்றுநினைக்கிறேன்.'

'ஆம், நான் போவேன், பெலாகேயா டானைலாவ்னா. என்னைப் போக விடு. நான் போவேன்' என்று சோனியா சொன்னாள்.

'நல்லது, உனக்கு பயமாய் இல்லையென்றால், ஏன் நீ போகக் கூடாது?'

'லூயிசா ஐவானாவ்னா, நான் போகலாமா?' என்று சோனியா கேட்டாள்.

கயிறும் மோதிரமும் கொண்ட விளையாட்டை அவர்கள் விளையாடிக்கொண்டிருந்த போதிலும் சரி, அல்லது ரூபிள் விளையாட்டு விளையாடிய சமயத்திலும் சரி, அல்லது இப்பொழுது பேசிக்கொண்டு இருப்பதைப்போல உள்ள

சமயத்திலும் சரி, சோனியாவை விட்டு நிக்கலஸ் அகலவே இல்லை. அவளை முற்றிலும் புதிய கண்களோடு அவர் நோக்கிக் கொண்டே இருந்தார். கார்க் மீசை வைத்துக் கொண்டிருந்த அவளை இன்றுதான் பூரணமாக அறிந்து கொண்டதாக அவருக்குத் தோன்றியது. அன்று இரவில் உண்மையிலேயே சோனியா மிகுந்த பிரகாசமாகவும், மிகுந்த உணர்ச்சி கொண்டும், மிகுந்த அழகாகவும் நிக்கலஸுக்கு இதற்கு முன் பார்க்காத விதத்தில் காணப்பட்டாள்.

'அப்படியானால், அவள் உண்மையில் இம்மாதிரியே இருக்கிறாள். நான் எப்பேர்ப்பட்ட முட்டாளாய் இருந்து வந்திருக்கிறேன்' என்று அவளுடைய ஜொலி ஜொலிக்கும் கண்களைப் பார்த்து அவர் நினைத்தார். அவளுடைய மீசைக்கு அடியில் தோன்றிய ஒரு மகிழ்ச்சியான, பரவசமான சிரிப்பு, அவளுடைய கன்னங்களில் குழிகள் விழும்படி செய்தன. அம்மாதிரி புன்சிரிபை இதற்கு முன் அவர் எப்பொழுதும் பார்த்தது இல்லை.

'நான் எதைப் பற்றியும் பயம் கொள்ளவில்லை. நான் உடனே போகலாமா?' என்று சோனியா கேட்டாள். அவள் எழுந்து நின்றாள்.

தானியக் களஞ்சியம் எங்கே இருக்கிறது என்பதையும், அவள் மௌனமாய் நின்று கவனித்துக் கேட்க வேண்டும் என்பதையும் அவர்கள் அவளுக்குச் சொன்னார்கள். ஒரு ரோம மேல் சட்டையை அவர்கள் அவளுக்குக் கொடுத்தார்கள். அதை அவள் தனது தலைமீதும் தோள்கள் மீதும் போட்டுக் கொண்டு நிக்கலஸை நோக்கினாள்.

'அந்தப் பெண் எப்பேர்ப்பட்ட கண்ணாய் இருக்கிறாய்! இதுவரை நான் எதைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தேன்?' என்று நிக்கலஸ் நினைத்தார்.

தானியக் களஞ்சியத்திற்குப் போவதற்காக ஆளோடிக்குள் சோனியா போனாள். முன்னால் இருந்த முற்ற மண்டபத்திற்கு நிக்கலஸ் அவசரமாகப் போனார். ரொம்ப உஷ்ணமாக இருக்கிறது என்று அவர் போகும்போது சொன்னார். அந்த வீட்டில் கூட்டம் நிறைந்திருந்தால் உண்மையிலேயே அங்கு உஷ்ணமாய்த்தான் இருந்தது.

வெளியே பழைய மாதிரியே அசையாத குளிரும், பழைய மாதிரியே சந்திரனும், ஆனால் முன்னைவிட அதிகமாய் பிரகாசித்துக்கொண்டும் இருந்தன. வெளிச்சம் மிகவும் அதிகமாய் இருந்தபடியால் அந்த பனி பரப்பில் பல நட்சத்திரங்கள் மின்னுவதைப் போல காணப்பட்டது. அதனால் வானத்தைப்

பார்க்க யாருக்கும் விருப்பம் இல்லை. வானத்திலிருந்த உண்மையனா நட்சத்திரங்களை யாரும் லட்சியம் செய்யவில்லை. வானம் கருப்பாகவும் பயங்கரமாகவும் இருந்தது. ஆனால் பூமி மகிழ்ச்சி பொங்கி காணப்பட்டது.

'நான் ஒரு முட்டாள், ஒரு முட்டாள். எதற்காக நான் காத்துக் கொண்டிருக்க வேண்டும்?' என்று நிக்கலஸ் நினைத்து, அந்த மண்டப முற்றத்தை விட்டு ஓடி, அந்த வீட்டைச் சுற்றி வந்து, பின் வாசலுக்குப் போகிற பாதை வழியாகப் போனார். அந்த வழியாகத் தான் சோனியா போவாள் என்பதை அவர் அறிவார், பாதி தூரத்திற்கு அப்புறம் பனி மூடிய விறகுக் குவியல் கிடந்தது. அதற்கு குறுக்காவும், அதற்கு அடுத்தாற் போலவும், பழைய எலுமிச்சை மரங்களின் நிழல்கள், அந்த பனி மீது விழுந்திருந்தன. இந்தப் பாதை வழியாகத்தான் களஞ்சியத்திற்கு போக வேண்டும். களஞ்சியத்தின் மரச்சுவர்களும், பனி மூடிய கூரையும், நவரத்தினங்களால் செய்யப்பட்டது போன்ற அந்த சந்திர வெளிச்சத்தில் மின்னிக் கொண்டிருந்தன. திடீரென்று அந்தத் தோட்டத்தில் உள்ள ஒரு மரம் உறை பனியினால் கீரியது. அதன் பின்னால் மீண்டும் பூரண அமைதி நிலவியது: அவர் காற்றை சுவாசிப்பதாகத் தோன்றவில்லை. நித்திய இளமையின் பலத்தையும் மகிழ்ச்சியையும் சுவாசிப்பதாகக் காணப்பட்டார்.

பின் வாசல் மண்டபத்தில் இருந்து படிக்கட்டுகளில் இறங்கிவரும் காலடி ஓசை கேட்டது. கடைசிப் படியில் உறைபனி விழுந்திருந்தபடியால், அதில் கால் வைத்தபோது, கிரீச் சப்தம் கிளம்பியது. ஒரு வயோதிக வேலைக்காரி 'நேராக, பாதையில் நேராகப் போக வேண்டும். குமாரியே. திரும்பி மட்டும் பார்க்க வேண்டாம்' என்று சொல்லும் குரலை 'அவர் கேட்டார்.

'நான் பயப்படவில்லை' என்று சோனியாவின் குரல் பதில் கூறியது. நிக்கலஸை நோக்கி அந்தப் பாதையில் சோனியா தன்னுடைய மெல்லிய ஜோடுகளில் நடந்து வரும் கிரீச் குரல் வந்து கொண்டிருந்தது.

வெளிச்சட்டையினால் தன்னை மூடிக்கொண்டு சோனியா வந்து கொண்டிருந்தாள். இரண்டு அடிகள் தூரத்திற்கு நெருங்கிய பின்பு தான் அவரை அவள் பார்த்தாள். அவளுக்குக்கூட, முன்னால் தான் லேசாக பயத்தோடு அறிந்து கொண்டிருந்த அதே நிக்கலஸ் அல்ல இவர், என்று தோன்றியது. அவர் பெண் உடையில் இருந்தார். தலை முடி தாறுமாறாகக் கிடந்தது. அவருடைய முகத்தில் ஒரு மகிழ்ச்சிப்

புன்னகை விளங்கியது. அந்தப் புன்னகை சோனியாவுக்கு புதிதாய் காணப்பட்டது. அவள் வேகமாய் அவரிடம் ஓடினாள்.

'முற்றிலும் மாறுதல், என்றாலும் அவளேதான்' என்று நிக்கலஸ் நினைத்து, சந்திர வெளிச்சத்தினால் ஒளிர்ந்து கொண்டிருந்த அவளுடைய முகத்தை நோக்கினார். அவர் அவளுடைய தலை மீது போட்டிருந்த வெளிச் சட்டைக்கு உள்ளாக தமது கைகளை நீட்டி, அவளைக் கட்டித் தழுவி, தன்னோடு நெருங்கி, மீசை வைத்திருந்த, கார்க் வாசனை கொண்டிருந்த அவளுடைய இதழ்களில் முத்தமிட்டார். சோனியாவும் அவருடைய இதழ்களில் பூரணமாய் முத்தமிட்டு, தனது சிறிய கைகளை வெளியே எடுத்து, அவருடைய இரண்டு கன்னங்களையும் அழுத்தினாள்.

'சோனியா!...'

'நிக்கலஸ்!...'

அவர்கள் சொன்னதெல்லாம் இவைதான். அவர்கள் களஞ்சியத்திற்கு ஓடி, மீண்டும் திரும்பி வீட்டிற்குள் வந்தார்கள். அவர் முன் வாசல் வழியாகவும், அவள் பின் வாசல் வழியாகவும் நுழைந்தார்கள்.




பெலாகேயா டானைலாவ்னாவின் வீட்டிலிருந்து அவர்கள் திரும்பினார்கள். எப்பொழுதுமே ஒவ்வொன்றையும் கண்டு கவனிக்கக்கூடிய நட்டாஷா, தானும் திருமதி ஷாஸும் டிம்லெருடைய பனி வண்டியில் திரும்பிப் போவது என்றும், நிக்கலஸும் வேலைக்காரிகளும் போகும் வண்டியில் சோனியா போவது என்றும் ஏற்பாடு செய்தாள்.

திரும்பும் பிரயாணத்தில் வண்டியை போட்டியோடு நிக்கலஸ் ஓட்டவில்லை. நிதானமான நடையிலேயே ஓட்டி வந்தார். அந்த அதிசயமான, எல்லாவற்றையும் மாற்றக்கூடிய வெளிச்சம், சோனியாவின் முகத்தில் பிரகாசிப்பதை கூர்ந்து கவனித்துக் கொண்டே வந்தார். அந்தப் புருவங்களுக்கும் மீசைக்கும் அடியிலே, தம்முடைய பழைய சோனியாவையும், தம்முடைய தற்கால சோனியாவையும் தேடிக்கொண்டிருந்தார். தற்கால சோனியாவிட மிருந்து இனி எப்பொழுதும் பிரிவதில்லை என்று உறுதி கொண்டார். அவளிடம் பழைய, புதிய சோனியாக்கள் இருவருமே அடங்கி இருப்பதை அவர் பார்த்து அறிந்து கொண்டார். மீசையின் கார்க் வாசனையையும், அவளை முத்தமிட்டதால் ஏற்பட்ட

ஆனந்தத்தையும் அவர் நினைவு கூர்ந்து, அந்தப் பனிக்காற்றைப் பூரணமாக உள்ளே இழுத்து, தமக்குக் கீழாகக் காணப்படும் பூமி பறந்து கொண்டிருப்பதையும், மேலாகக் காணப்படும் வானம் மின்னிக் கொண்டிருப்பதையும் அவர் பார்த்து, தாம் மீண்டும் தேவதைகளின் உலகத்தில் இருப்பதாக உணர்ச்சி கொண்டார்.

'சோனியா, உனக்கு எல்லாம் சௌகர்மாய் இருக்கிறதா?' என்று அவர் அடிக்கடி கேட்டு வந்தார்.

'ஆம்! ஆனால் உனக்கு?' என்று அவள் பதில் கூறி வந்தாள்.

வீட்டை நோக்கி பாதி தூரம் வந்ததும், கடிவாள வார்களை வண்டிக்காரனிடம் நிக்கலஸ் கொடுத்து விட்டு, நட்டாஷாவின் பனி வண்டிக்கு ஓடி ஏறி, அதன் பக்கவாட்டில் நின்றார்.

'நட்டாஷா, சோனியாவைப் பற்றி நான் என் மனதில் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன் என்பது உனக்குத் தெரியுமா?' என்று பிரஞ்சு மொழியில் மெதுவாகக் கூறினார்.

'அவளிடம் நீர் சொல்லி விட்டீரா?' என்று நட்டாஷா கேட்டு, திடீரென்று மகிழ்ச்சியினால் ஒளிர்ந்தாள்.

'ஓ, அந்த மீசையையும் புருவங்களையும் நீ அணிந்திருப்பது எவ்வளவு விசித்திரமாய் இருக்கிறது!... நட்டாஷா-உனக்கு சந்தோஷம்தானா?'

'எனக்கு மிகுந்த சந்தோஷம், மிகுந்த சந்தோஷம். நான் உம்மீது எரிச்சல் கொள்ளுவதற்கு ஆரம்பித்தேன். ஆனால் உம்மிடம் சொல்லவில்லை. நீர் அவளை மோசமாக நடத்தி வந்தீர். அவள் இருதயம் எப்பேர்ப்பட்டது தெரியுமா, நிக்கலஸ்! நான் சில வேளைகளில் அருவருப்பாய் இருக்கலாம். ஆனால் சோனியா சந்தோஷமாய் இல்லாதபோது, நான் சந்தோஷமாய் இருப்பதற்கு வெட்கம் அடைந்தது உண்டு. இப்பொழுது எனக்கு மிகுந்த சந்தோஷம். நல்லது, மீண்டும் அவளிடம் ஓடும்' என்று நட்டாஷா சொன்னாள்.

'இல்லை, ஒரு நிமிஷம்... ஓ, நீ எவ்வளவு விசித்திரமாய் தோன்றுகிறாய்!' என்று நிக்கலஸ் கூவி, அவளுடைய முகத்தை உற்று நோக்கினார். தம்முடைய சகோதரியின் முகத்திலும் கூட ஏதோ ஒரு புதிய, வழக்கமில்லாத, கவர்ச்சிகரமான கனிவு இருப்பதை அவர் கண்டார். இதற்கு முன்பு அவள் முகத்தில் அவற்றை அவர் பார்த்தது இல்லை. 'நட்டாஷா, அது மந்திரம் போலல்லவா இருக்கிறது? அப்படி' அல்லவா?'

'ஆம், மிகுந்த சிலாக்கியமாக நீர் செய்து விட்டீர்' என்று அவள் பதில் சொன்னாள்.

'இப்பொழுது அவள் இருப்பதைப் போல, முன்னால் அவளை நான் பார்த்து இருக்கிறேனா? வெகு காலத்திற்கு முன்பாகவே, என்ன செய்ய வேண்டும் என்பதை நான் அவளிடம் கேட்டு, அவள் எனக்கு என்ன சொல்லி இருப்பாளோ, அதைச் செய்து இருக்க வேண்டும். அப்படிச் செய்து இருந்தால், இப்பொழுது எல்லமே சரியாய் போய் இருக்கும்' என்று நிக்கலஸ் நினைத்தார்.

'அப்படியானால், நீ சந்தோஷமாய் இருக்கிறாய்; நான் செய்தது சரிதான், அப்படித்தானே?'

'ஓ, முற்றிலும் சரி. அதைப்பற்றி சிறிது காலத்திற்கு முன்னால் அம்மாவுடன் ஒரு சண்டை போட்டேன். அவள் உமக்காக ஏங்கிக் கொண்டிருப்பதாக அம்மா சொன்னாள். அம்மாதிரி ஒரு பேச்சை அம்மா எப்படிச் சொல்லலாம்? நான் அம்மாவிடம் பெரிய சண்டை போட்டு விட்டேன். சோனியாவைப் பற்றி யாரும் கெடுதலாக சொல்லுவதற்கு, நான் ஒருபொழுதும் விட மாட்டேன். ஏனெனில், அவளிடம் நல்லவைகளைத் தவிர, வேறு எதுவுமே கிடையாது'.

'அப்படியானால், அது முற்றிலும் சரிதானே?' என்று நிக்கலஸ் கேட்டு, மீண்டும் தமது சகோதரியின் முகத்தில் காணப்பட்ட தோற்றத்தை அவர் கூர்ந்து கவனித்தார். அவள் சிரத்தையோடு பேசுகிறாளா என்பதை அவர் அறிய விரும்பினார். அதன் பின்னால் அந்த வண்டியிலிருந்து கீழே குதித்து, அவருடைய ஜோடுகள் உறை பனியை நுறுக்க, தமது வண்டிக்கு திரும்பி ஓடினார். கருப்புத் தொப்பியின் கீழே காணப்பட்ட பிரகாசமான கண்களையும் மீசையையும் சந்தோஷமான புன்முறுவலையும் கொண்ட அதே சர்க்கேஸியன் இன்னமும் அங்கே உட்கார்ந்து கொண்டிருந்தான். அந்த சர்க்கேஸியன்தான் சோனியா. அந்த சோனியாதான் நிச்சயமாக அவருடைய எதிர்கால, சந்தோஷமான காதல் கொண்ட மனைவி.

அவர்கள் வீடு திரும்பிய பின்பு, மெல்யூகோவ்களின் வீட்டில் நடந்த விஷயங்களைப் பற்றி அவர்களுடைய தாயாரிடம் கூறினார்கள். அதன் பின்பு பெண்கள் தங்களுடைய படுக்கை அறைகளுக்குப் போனார்கள். அங்கே சென்று உடைகளை மாற்றிய பின்பு, கார்க் மீசைகளைக்கூட அழித்து சுத்தம் செய்யாமல் அவர்கள் அமர்ந்து வெகு நேரம் வரையில் தங்களுடைய மகிழ்ச்சிகளைப் பற்றி பேசிக்கொண்டிருந்தார்கள். திருமணம் ஆன பின்பு எம்மாதிரி வாழவேண்டும் என்பதைப் பற்றியும், தங்களுடைய கணவன்மார்கள் ஒருவருக்கொருவர் எம்மாதிரி நண்பர்களாய் இருப்பார்கள் என்பதைப் பற்றியும், அவர்கள் எவ்வளவு மகிழ்ச்சியாய் இருப்பார்கள் என்பதைப் பற்றியும், அவர்கள்

பேசிக்கொண்டிருந்தார்கள். நட்டாஷாவின் மேஜை மீது இரண்டு முகம் பார்க்கும் கண்ணாடிகள் இருந்தன. அவற்றை முன்னதாக துனியாஷா தயாராய் வைத்திருந்தாள்.

'அவையெல்லாம் எப்பொழுது நடக்கப் போகின்றன என்பதே கேள்வி. ஒரு பொழுதுமே நடக்காதோ என்று பயமாய் இருக்கிறது... ஏனெனில் அவையெல்லாம் அவ்வளவு நல்லவை களாய் இருக்கின்றன' என்று நட்டாஷா சொல்லி எழுந்து, முகம் பார்க்கும் கண்ணாடிகளுக்குப் பக்கத்தில் போனாள்.

'கீழே உட்கார், நட்டாஷா. ஒரு வேளை நீ அவரைப் பார்க்கலாம்' என்று சோனியா சொன்னாள்.

அந்த கண்ணாடிகளுக்கு ஒரு பக்கங்களிலும் உள்ள மெழுகு வத்திகளைப் பொருத்தி விட்டு கீழே உட்கார்ந்தாள்.

'யாரோ ஒருவர் மீசையோடு இருப்பது தெரிகிறது' என்று தனது முகத்தையே கண்ணாடியில் பார்த்து நட்டாஷா சொன்னாள்.

'நீ சிரிக்கக்கூடாது, குமாரியே' என்று துனியாஷா கூறினாள்.

சோனியாவும் வேலைக்காரியும் உதவி செய்ய, தன் கையில் வைத்திருந்த கண்ணாடியை, மற்றொரு கண்ணாடிக்கு எதிராக சரியான நிலைமையில் நட்டாஷா வைத்தாள். அவளுடைய முகம் ஒரு ஆழ்ந்த சிந்தனைத் தோற்றத்தை மேற்கொண்டது. மௌனமாய் அவள் உட்கார்ந்திருந்தாள். வெகு நேரம் வரையில் அந்தக் கண்ணாடியில் பிரதிபலித்த மெழுகு வத்தி வெளிச்சத்தை பார்த்துக் கொண்டே இருந்தாள். அவள் கதைகளில் கேட்ட மாதிரி, அந்தக் கண்ணாடியில் திடீரென்று ஒரு சவப் பெட்டியையோ, அல்லது அவரையோ (இளவரசர் ஆண்ட்ரூ) அந்த மங்கிய வெளிச்சத்தில் காணலாம் என்று எதிர்பார்த்தாள். ஒரு சிறு புள்ளியைக்கூட ஒரு மனிதராகவோ, அல்லது ஒரு சவப் பெட்டியாகவோ நினைத்துக் கொள்ள அவள் தயாராய் இருந்த போதிலும், அவள் எதையுமே பார்க்கவில்லை. அவள் வேகமாக வெறித்துப் பார்க்க ஆரம்பித்து, அந்தக் கண்ணாடிகளைப் பார்ப்பதிலிருந்து விலகிக் கொண்டாள்.

'இது என்ன? மற்றவர்கள் எல்லாரும் பார்க்கிறதாக சொல்லுகிறவைகளை, என்னால் ஏன் பார்க்க முடியவில்லை? இப்பொழுது நீ கீழே உட்கார், சோனியா. இன்றிரவு நீ கண்டிப்பாக செய்தாக வேண்டும். எனக்காகச் செய்... இன்று நான் பீதியுற்றிருப்பதாக உணருகிறேன்' என்று அவள் சொன்னாள்.

கண்ணாடிகளின் முன்பாக சோனியா அமர்ந்தாள். கோணங்களை சரியாக வைத்துக்கொண்டு, அவள் பார்க்க ஆரம்பித்தாள்.

'குமாரி சோனியா இப்பொழுது எதையாவது பார்ப்பது நிச்சயம். சிரிப்பதைத் தவிர நீ வேறு எதுவும் செய்வதில்லை' என்று துனியாஷா மெதுவாய் சொன்னாள்.

சோனியா இதையும், நட்டாஷா மெதுவாய் சொல்லி 'அவள் பார்ப்பாள் என்பது எனக்குத் தெரியும். சென்ற வருஷம்கூட அவள் எதையோ பார்த்தாள்' என்பதையும் கேட்டாள்.

சுமார் மூன்று நிமிஷங்கள் எல்லாரும் மௌனமாய் இருந்தார்கள்.

'நிச்சயமாக அவள் பார்ப்பாள்' என்று நட்டாஷா மெதுவாய் பேச ஆரம்பித்தாள். அவள் பேசி முடிக்கவில்லை... திடீரென்று அவள் கையில் பிடித்திருந்த அந்தக் கண்ணாடியை சோனியா தள்ளிவிட்டு, தனது கண்களைக் கையால் மூடினாள்.

'ஓ, நட்டாஷா' என்று அவள் கூச்சலிட்டாள்.

'நீ பார்த்தாயா? நீ பார்த்தாயா? எதை நீ பார்த்தாய்?' என்று நட்டாஷா கூவி அந்தக் கண்ணாடியைப் பிடித்துக் கொண்டாள்.

சோனியா எதையுமே பார்க்கவில்லை. அவள் கண்ணை விரித்துப் பார்த்து எழுந்திருக்க விரும்பினாள். அச்சமயம்தான் நட்டாஷா, 'நிச்சயமாக அவள் பார்ப்பாள்' என்று சொல்லியதைக் கேட்டாள். நட்டாஷாவையோ, துனியாஷாவையோ ஏமாற்றம் அடையும்படி செய்வதற்கு அவள் விரும்பவில்லை. ஆனால் அசையாமல் உட்கார்ந்திருப்பது கடினமாய் இருந்தது. அவள் தன்னுடைய கண்களை மூடியபோது, 'ஓ, நட்டாஷா' என்று எதற்காகக் கூவினாள் என்பது அவளுக்கே தெரியாது.

'நீ அவரைப் பார்த்தாயா?' என்று நட்டாஷா அவசரப்படுத்தி அவளுடைய கையைப் பற்றினாள்.

'ஆம், கொஞ்சம் பொறு... நான்... அவரைப் பார்த்தேன்' என்று சோனியாவால் சொல்லாமல் இருக்க முடியவில்லை. ஆனால், நட்டாஷா குறிப்பிட்ட 'அவர்' என்பது நிக்கலஸா, அல்லது இளவரசர் ஆண்ட்ரூவா என்பது அவளுக்குத் தெரியாது.

'ஆனால், எதையோ பார்த்தேன் என்று ஏன் சொல்லக்கூடாது? மற்றவர்கள் கண்ணாடியில் எதையோ பார்க்கிறார்களே. தவிரவும், நான் எதையாவது பார்த்தேனா, பார்க்கவில்லையா என்பதை வேறு யாரால் சொல்ல முடியும்?' என்று எண்ணம் சோனியாவின் மனதில் பளிச்சிட்டது.

'ஆம், நான் அவரைப் பார்த்தேன்' என்றாள் அவள்.

'எப்படி? நின்று கொண்டிருந்தாரா, படுத்திருந்தாரா?'

‘இல்லை, நான் பார்த்தேன்... முதலில் ஒன்றுமே தெரிய வில்லை. பின்னால் அவர் படுத்திருந்ததை நான் பார்த்தேன்.’

‘ஆண்ட்ரூ படுத்திருந்தாரா? அவருக்கு உடம்பு சௌக்கியம் இல்லையா?’ என்று நட்டாஷா கேட்டாள். அவளுடைய பீதியுள்ள கண்கள் அவளுடைய சிநேகிதி மீது பதிந்திருந்தன.

‘இல்லை, அப்படியல்ல, அப்படியல்ல. அவர் முகம் களிப்புடன் தோன்றியது. அவர் என்னைப் பார்த்துத் திரும்பினார்’ இம்மாதிரி அவள் சொல்லியபோது, அவள் விவரித்தபடி உண்மையில் அவள் பார்த்தாளோ என்று பிரமை கொள்ள ஆரம்பித்தாள்.

‘நல்லது, அப்புறம் என்ன, சோனியா?...’

‘அதன் பின்னால் அங்கே என்ன இருந்தது என்பதை என்னால் கிரகிக்க முடியவில்லை. ஏதோ நீலமும் சிவப்புமாக ஒன்று இருந்தது...’

‘சோனியா, அவர் எப்பொழுது திரும்பி வருவார்? அவரை நான் எப்பொழுது பார்ப்பேன்? ஓ, கடவுளே, அவருக்காகவும் எனக்காவும் மற்ற ஒவ்வொரு விஷயத்திற்காகவும் நான‘ எவ்வாறு பீதி கொண்டிருக்கிறேன்...’ என்று நட்டாஷா ஆரம்பித்தாள். சோனியாவின் ஆறுதல் வார்த்தைகளுக்குப் பதில் சொல்லாமலே அவள் படுக்கையில் படுத்தாள். அவளுடைய மெழுகு வத்தியை அணைத்த பின்பும், வெகு நேரம் வரையில் கண்ணை விழித்து, அசையாமல் பனி படர்ந்த ஜன்னல்கள் வழியாக வந்த சந்திர வெளிச்சத்தை நோக்கிக் கொண்டே படுத்திருந்தாள்.




கிறிஸ்துமஸ் விடுமுறை நாட்களுக்குப் பின்னால், சோனியா மீது தாம் கொண்டுள்ள காதலைப் பற்றியும், அவளை திருமணம் செய்ய தாம் உறுதி கொண்டிருப்பதைப் பற்றியும், நிக்கலஸ் தமது தாயாரிடம் சொன்னார். சோனியாவுக்கும் நிக்கலஸுக்கும் இடையில் நடந்துவரும் விஷயங்களை, வெகுகாலமாகவே கோமகள் கவனித்து வந்தாள். ஆகவே, இம்மாதிரி நிக்கலஸ் சொல்லுவார் என்பதை எதிர்பார்த்திருந்தாள். எனவே அவர் சொல்லுவதை மௌனமாகக் கவனித்துக்கேட்டாள். அதன் பின்னால் அவருக்கு இஷ்ட மானவளை அவர் திருமணம் செய்து கொள்ளலாம் என்றும், ஆனால் அம்மாதிரி திருமணத்தை தானோ, அவருடைய தந்தையோ

ஆசீர்வதிக்கப் போவதில்லை என்றும் தனது குமாரரிடம் கூறினாள். தம்மீது தமது தாயாருக்கு அதிருப்தி ஏற்பட்டிருக்கிறது என்பதை நிக்கலஸ் முதல் தடவையாக உணர்ந்தார். தம் மீது அவளுக்கு அவ்வளவு அன்பு இருந்தபோதிலும், தம்முடைய கருத்துக்கு அவள் இணங்கப் போவதில்லை என்றும் அறிந்தார். தனது குமாரரைப் பார்க்காமலே, தனது கணவரை அங்கு வரும்படி கோபமாகச் சொல்லியனுப்பினாள். அவர் வந்ததும் சுருக்கமாக, விசனமாக தனது குமாரருக்கு முன்பாகவே விஷயங்களை எடுத்துச் சொன்னாள். ஆனால் அதற்கு மேல் அவளால் தாங்க முடியாமல் எரிச்சலினால் கண்ணீர் வடித்து அந்த அறையை விட்டு வெளியே போனாள். உறுதியில்லாமல் வயோதிகக் கோமகன் நிக்கலஸைக் கண்டிக்க ஆரம்பித்து, அவருடைய யோசனையை கைவிடும்படி கெஞ்சினார். தமது வார்த்தையிலிருந்து தாம் பிறழ முடியாது என்று நிக்கலஸ் பதில் அளித்தார். அவருடைய தந்தை மன அமைதி குலைந்து, பெருச்சு விட்டு, வெகு சீக்கிரம் மௌனமானார். பின்னால் அவர் கோமகளிடம் போனார். தமது குமாரரை அவர் கண்டிக்கும் போதெல்லாம், குடும்ப சொத்துக்களை தாம் நாசமாக்கிய குற்றத்தை, அவர் மனம் நினைவு கூர்ந்துகொண்டேயிருக்கும். ஆகவே, ஒரு பணக்காரப் பெண்ணை திருமணம் செய்ய மறுத்து, ஒரு பணமில்லாத சோனியாவை திருமணம் செய்ய விரும்புவதைக் கண்டு அவரால் கோபம் கொள்ள முடியவில்லை. இந்தத் தடவை அவருடைய உள்ளம் ஒரு உண்மையை மிகத் தெளிவாக காட்டிக்கொண்டிருந்தது. அதாவது, அவர்களுடைய குடும்ப சொத்து விவகாரங்கள், இவ்வளவு மோசமாக இல்லாமல் இருந்திருக்குமானால், சோனியாவைவிட வேறு சிறந்த மனைவி, நிக்கலஸுக்கு அமையும் என்று ஒருவரும் விரும்பி இருக்கமாட்டார்கள். ஆகவே குடும்பத்தின் பண நெருக்கடிக்கான காரணத்திற்கு அவரையும், அவருடைய மைடெங்காவையும், அவருடைய தட்டிக்கழிக்க முடியாத பழக்க வழக்கங்களையுமே குறை கூறவேண்டும்.

தந்தையும் தாயும் அந்த விஷயத்தைப் பற்றி தங்களுடைய குமாரரிடம் மீண்டும் பேசவில்லை. ஆனால் சில தினங்களுக்குப் பின்னால், சோனியாவை கோமகள் வரவழைத்தாள். அவளோ சோனியாவோ எதிர்பார்க்காத விதத்தில், மிகுந்த குரூரத்தோடு தமது மருமகளைக் கண்டித்தாள். அதாவது, நிக்கலஸை தன் வலையில் பிடிக்க சோனியா முயல்வதாயும், சோனியாவுக்கு நன்றி இல்லை என்றும் அவள் சொன்னாள். கீழ் நோக்கிய கண்களுடன் கோமகளின் குரூரமாக வார்த்தைகளை மௌனமாக சோனியா கேட்டுக்

கொண்டிருந்தாள். தன்னிடமிருந்து அவர்கள் என்ன எதிர் பார்க்கிறார்கள் என்பதை அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை. தன்னை அதுவரை பேணி வளர்த்த நன்மையாளர்களுக்கு, தன்னிடம் உள்ள ஒவ்வொன்றையும் தியாகம் செய்வதற்கு அவள் தயாராய் இருந்தாள். சுயநலத் தியாகம் என்பது அவள் மனதிற்கு மிகவும் பிரியமான கொள்கை. ஆனால் இந்த விஷயத்தில் அவள் எதைத் தியாகம் செய்ய வேண்டும், யாருக்காகத் தியாகம் செய்ய வேண்டும் என்பதை அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை. கோமகள் மீதும் அந்த ராஸ்டோவ்களின் குடும்பம் முழுவதின் மீதும் அவளால் அன்பு கொள்ளாமல் இருக்க முடியவில்லை. நிக்கலஸின் மகிழ்ச்சி, தன் மீது அவர் கொண்டுள்ள காதலையே சார்ந்தது நிற்கிறது என்பதை அவள் அறிவாள். அந்த நிக்கலஸ் மீது காதல் கொள்ளாமலும் அவளால் இருக்க முடியவில்லை. அவள் மௌனமாகவும், துக்கமாகவும் இருந்தாள். அவள் பதில் சொல்லவில்லை. இம்மாதிரி நிலைமை சகிக்க முடியாதது என்று நிக்கலஸ் உணர்ந்தார். ஆகவே, இதற்குச் சமாதானம் கூறும்படி அவருடைய தாயாரிடம் கேட்பதற்காகப் போனார். முதலில் சோனியாவுடன் தாம் திருமணம் செய்து கொள்வதற்கு சம்மதம் கொடுக்கும்படியும், தங்கள் இருவரை மன்னிக்கும்படியும் அவர் கெஞ்சிக் கேட்டார். கடைசியில், சோனிவைத் துன்புறுத்துவதாய் இருந்தால், அவளைத் தாம் ரகசியமாகக் கல்யாணம் செய்துகொள்ளப் போவதாகப் பயமுறத்தினார்.

அவருக்குப் போதுமான வயது வந்துவிட்டதென்றும், இளவரசர் ஆண்ட்ரூ தமது தந்தையின் சம்மதமில்லாமல் திருமணம் செய்து கொள்ளப் போகிறார் என்றும், அதே மாதிரி நிக்கலஸூம் செய்து கொள்ளலாம் என்றும், ஆனால் அந்த சூழ்ச்சிக்காரியை தனது குமாரியாக ஒருபொழுதும் தான் பாவிக்கப் போவதில்லை என்றும், கோமகள் பதில் அளித்தாள். அவள் பதிலில் காட்டிய அலட்சியத்தை நிக்கலஸ் இதற்கு முன்னால் அவளிடம் பார்த்ததே இல்லை.

'சூழ்ச்சிக்காரி' என்ற வார்த்தையைக் கேட்டதும் நிக்கலஸ் வெகுண்டார். தமது குரலை உயர்த்திப் பேசினார். தம்முடைய உணர்ச்சிகளை விலைக்கு விற்கும்படி, தமது தாயார் தம்மைக் கட்டாயப்படுத்த முயற்சிப்பாள் என்று, தாம் எப்பொழுதுமே எதிர்பார்க்கவில்லை என உரக்கப் பேசினார். இன்னமும் தமது தாயார் அம்மாதிரியே சொல்லுவாளானால், அவளுக்கு கடைசி தடவையாக தாம் சொல்லுவது என்னவென்றால்... அவர் அந்த

முடிவான வார்த்தையை கூறுவதற்கு நேரம் இல்லை. அச்சமயம் அவர் முகத்தில் காணப்பட்ட தோற்றத்தை பீதியோடு அவருடைய தாயார் நோக்கிக்கொண்டிருந்தாள். அவர் முடிவான வார்த்தையை சொல்லியிருந்தால், ஒருவேளை அந்த வார்த்தை ஒரு கொடூரமான நினைப்பாக அவர்கள் இருவருடைய உள்ளங்களில் எப்பொழுதுமே நிலைத்து நின்று போவதாய் இருக்கலாம். அதைச் சொல்லுவதற்கு அவருக்கு நேரமில்லை. ஏனெனில், கதவின் பக்கத்தில் நின்று வெளிறிய முகத்தோடு கேட்டுக்கொண்டிருந்த நட்டாஷா அறைக்குள்ளே வந்தாள்.

'நிக்கலஸ், நீர் அசட்டுத்தனமாய் பேசுகிறீர்! அமைதியாய் இரும், அமைதியாய் இரும், அமைதியாய் இரும். தான் உமக்குச் சொல்லுகிறேன்' என்று அவருடைய குரலை அமுக்குகிற விதத்தில் அவள் கதறினாள்.

'அம்மா, என் கண்ணே, அது அப்படி அல்லவே அல்ல... எனது இனிமையான அன்பே, என்று அவள் அவளுடைய தாயாரைப் பார்த்துச் சொன்னாள். ஒரு பெரிய பிளவு ஏற்படப் போகிற தருணத்தில் இருப்பதாக உணர்ந்துகொண்ட அவளுடைய தாயார், பீதி கொண்டு தமது குமாரரை நோக்கினாள். ஆனால் அவளுக்கு இருந்த பிடிவாதத்தினாலும், வாய்ச் சண்டையினால் ஏற்பட்ட பரபரப்பினாலும் அவள் தனது பிடிவாதத்தை விட முடியவில்லை. அதை விட்டுவிட விரும்பவும் இல்லை.

'நிக்கலஸ், நான் உமக்கு விளக்கிச் சொல்லுகிறேன். நீர் போகலாம். என் கண்ணான அம்மாவே, நான் சொல்லுவதைக் கேள்' என்று நட்டாஷா கூறினாள்.

அவளுடைய வார்த்தைகள் முன்பன்' தொடர்பு இல்லாமல் இருந்தன. என்றாலும் எந்த நோக்கத்தோடு அவள் பேசினாளோ, அந்த நோக்கத்தை அந்த வார்த்தைகள் பூர்த்தி செய்து விட்டன.

கோமகள் விம்மி விம்மி அழுது, தனது முகத்தை தனது குமாரியின் மார்பில் மறைத்துக்கொண்டாள். தமது தலையைப் பற்றிக் கொண்டு நிக்கலஸ் எழுந்து அறையை விட்டுப் போனார்.

ஒரு சமாதானம் ஏற்படுத்தி வைக்க நட்டாஷா வேலை செய்தாள். அதன் பலனாக சோனியாவை இனி தொந்தரவு செய்வது இல்லை என்று நிக்கலஸுக்கு அவருடைய தாயார் வாக்குறுதி கொடுத்தாள். அவரைப் பொறுத்த வரையில் பெற்றோருக்குத் தெரியாமல் தாம் எதையும் செய்வதில்லை என்று அவர் வாக்குறுதி கொடுத்தார்.

மிகுந்த கவலையோடும் ஆழ்ந்த சிந்தனையோடும் பெற்றோர்களுடன் அபிப்பிராய பேதம் கொண்டும் இருந்த

நிக்கலஸ் ஒரு முடிவுக்கு வந்தார். அதாவது, தாம் மிகுந்த ஆர்வத்தோடு சோனியாவை காதலிப்பதால், பட்டாளத்தில் தமது காரியங்களை ஒழுங்கு செய்த பின்பு, ராணுவ சேவையில் இருந்து விலகி, திரும்பி வந்து சோனியாவை திருமணம் செய்வது என்று தீர்மானித்தார்.

நிக்கலஸ் ராணுவத்திற்கு திரும்பிய பின்பு, ராஸ்டோவ்களின் வீட்டு விவகாரங்கள் இன்னும் அதிக சோர்வைக் கொடுத்தன. உள்ளக் கிளர்ச்சிகளினால் கோமகள் அசௌக்கியம் அடைந்தாள்.

நிக்கலஸிடமிருந்து பிரிந்து இருப்பதனால், சோனியா மகிழ்ச்சி இல்லாமல் இருந்தாள். அவளிடம் சோமகள் இன்னும் விரோத பாவ தொனியிலேயே பேசி வந்தாள். அதனால் அவளுடைய மகிழ்ச்சிக் குறைவு இன்னும் அதிகமாயிற்று. குடும்பச் சொத்து விவகாரங்களின் நிலைமையைக் கண்டு, கோமகன் இன்னும் அதிகமாகக் கவலை கொண்டார். முடிவாக எதையாவது செய்தாக வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டது. மாஸ்கோவிற்குப் பக்கத்திலுள்ள எஸ்டேட்டையும், நகரத்தில் இருந்த வீட்டையும் அவர்கள் விற்றாக வேண்டியிருந்தது. இதற்காக அவர்கள் மாஸ்கோவிற்கு போக வேண்டியிருந்தது. ஆனால் கோமகளின் அசௌக்கியத்தினால் இந்தப் பிரயாணத்தை ஒவ்வொரு நாளும் ஒத்திப் போட்டுக் கொண்டு வந்தார்கள்.

தனது நிச்சயதார்த்த கணவரிடமிருந்து ஏற்பட்ட பிரிவின் முதல் பாகத்தை, நட்டாஷா தமாஷாகவும் கவலையில்லாமலும் கழித்தாள். ஆனால் வரவர அவள் மனம் குழம்பி ஒவ்வொரு நாளும் பொறுமை குறைந்து வந்தாள். அவரைக் காதலிப்பதற்காக செலவிட வேண்டிய அவளுடைய சிறந்த நாட்கள், ஒருவருக்கும் ஒரு பயனும் இல்லாமல் வீணாவதைக் கண்டு, அவள் மனம் இடைவிடாமல் வருந்தி வந்தது. அவருடைய கடிதங்கள் அநேகமாக அவளுக்கு எரிச்சலைக் கொடுத்து வந்தன. அவள் அவரைப் பற்றிய நினைப்பில் மட்டும் வாழ்ந்து கொண்டிருக்க, அவரோ அவருக்குப் பிடித்தமான புதிய இடங்களையும் புதிய ஆட்களையும் பார்த்து, உண்மையான வாழ்க்கையை வாழ்ந்து வருவதை அவள் நினைத்தபோது அவளுக்கு வருத்தமாய் இருந்தது. அவருடைய கடிதங்கள் எவ்வளவுக்கு எவ்வளவு ருசிகரமாய் இருக்குமோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவளுக்கு அவை எரிச்சலைக் கொடுத்தன. அவள் அவருக்கு எழுதும் கடிதங்களினால் அவளுக்கு எந்தவிதமான இதத்தையும் கொடுக்கவில்லை. அதற்கு பதிலாக, அம்மாதிரி கடிதங்கள் எழுதுவது, ஒரு தொந்தரவு பிடித்த வேலையாகவும், செய்து ஆக

வேண்டி இருக்கிறதே என்கிற கடமையாகவும் அவளக்குத் தோன்றின. அவளால் எழுத முடியவில்லை. ஏனெனில், தனது உணர்ச்சிகளை குரலினாலோ, புன்னகையினாலோ, ஒரு பார்வையினாலோ காட்டக்கூடியதில் ஆயிரத்தில் ஒரு பங்குகூட, ஒரு கடிதத்தில் உண்மையாகக் காட்டுவது சாத்தியமாய் இருக்கும் என்று அவளால் நினைக்க முடியவில்லை. சாதாரணமாக ஒரே மாதிரியான, உற்சாகம் இல்லாத கடிதங்களை அவள் எழுதி வந்தாள். அவைகளுக்கு எவ்விதமான முக்கியத்துவத்தையும் அவள் கொடுக்கவில்லை. அவள் எழுதும் கடிதங்களின் முதல் பிரதிகளை அவளுடைய தாயார் எழுத்துப் பிழைகள் இல்லாமல் திருத்திக்கொடுப்பாள்.

கோமகளின் தேக சௌக்கியத்தில் எவ்விதமான அபிவிருத்தியும் ஏற்படவில்லை. ஆனால், மாஸ்கோவிற்கு போகிற பிரயாணத்தை இனி ஒத்திவைப்பது என்பது முடியாத காரியம். நட்டாஷாவின் கல்யாண உடைகளைத் தயாரிப்பதற்கு உத்தரவு கொடுக்க வேண்டும். வீட்டையும் விற்க வேண்டும். தவிரவும், இளவரசர் ஆண்ட்ரூ மாஸ்கோவிற்கு வருவார் என்று எதிர்பார்க்கப்பட்டது. அங்கேதான் வயோதிக இளவரசர் பால்கோன்ஸ்கி குளிர் காலத்திற்காக தங்கி வருகிறார். இளவரசர் ஆண்ட்ரூ ஏற்கெனவே வந்துவிட்டதாக நட்டாஷாவுக்கு நிச்சயமான நம்பிக்கை ஏற்பட்டது.

ஆகவே, கோமகள் கிராமத்தில் தங்கினாள். சோனியாவையும் நட்டாஷாவையும் தம்முடன் அழைத்துக் கொண்டு ஜனவரி மாதக்கடைசியில் கோமகன் மாஸ்கோவிற்குப் போனார்.



# விளக்க உரைகள்

**7 (1)**

'வேட்டை'. இங்கே வர்ணித்திருக்கிறபடி உள்ள வேட்டைகளில் உபயோகிக்கப்படும் நாய்கள் கூர்மையான மோப்ப சக்தி உள்ளவை. ஆனால் வேகமாய் ஓடக்கூடிய நாய்கள் அல்ல. வாசனையினால் அவை வேட்டை மிருகங்களைக் கண்டு பிடிக்க வேண்டும். ஆனால், பலமான, வேகமாக ஓடக்கூடிய பார்ஜாய் என்ற வகை நாய்கள்தான், வேட்டையாடப்படுகிறவைகளைப் பிடித்துக் கொல்லும். பார்ஜாய் நாய்களுக்கு மோப்ப சக்தி மிகவும் குறைவு. வேட்டையாடும் ஜந்துவைப் பார்த்த பிறகுதான், அதனால் விரட்ட முடியும். அது எங்கிருக்கிறது என்பதை பார்ஜாய்க்குச் சுட்டிக் காட்ட வேண்டும். அதன் பின்னால் ஓடிக்கொண்டிருக்கும் போது கூட, அந்த மிருகம் ஒளிந்து கொண்டால் பார்ஜாயினால் ஒன்றும் செய்ய முடியாது. வேட்டையாடப்படும் ஜந்து செத்துப் போனதுபோலப் பாசாங்கு செய்தால், அதற்கு மேல் என்ன செய்வது என்று தெரியாமல், அதைக் கவ்விப் பிடிக்காமல், பார்ஜாய் நாய்கள் திகைத்துக்கொண்டு சும்மா நிற்கும்.

**7 (4)**

'கோமாளி... நாஸ்டாசியா ஐவானாவ்னா.' கிராமாந்தர வீடுகளில் ஒரு கோமாளியையும் வைத்துக் கொண்டிருப்பது, ருஷ்யாவில் அடிமை வழக்கத்தை ஒழித்த பின்பும்கூட இருந்து வந்தது.

**7 (8)**

'டிம்லெர் என்ற சங்கீத வித்வான்.' டால்ஸ்டாய் இங்கே குறிப்பிடும் மனிதர், உண்மையிலேயே அச்சமயம் மாஸ்கோவில் வசித்து வந்தார்.

★



இளவரசர் ஆண்ட்ரூவுக்கும் நட்டாஷாவுக்கும் நிச்சயதார்த்தம் ஆன பின்பு, வெளிப்படையான காரணம் எதுவுமின்றி, திடீரென்று பீயருக்கு ஒரு நினைப்பு தோன்றியது. அதாவது, முன்போல வாழ்க்கையை நடத்திக் கொண்டு போவது முடியாத காரியம் என்று அவர் உணர்ந்தார். அவருடைய நன்மையாளர் அவருக்கு அருள் செய்து காட்டிய உண்மைகளில், அவர் உறுதியாய் நம்பிக்கை கொண்டிருந்தார். தம்மிடமுள்ள உள் ஒளியை பூரணத்துவம் ஆக்குவதில் அவர் சந்தோஷம் கொண்டிருந்தார். அதற்காக மிகுந்த ஆர்வத்தோடு தம்மையே அர்ப்பணம் செய்திருந்தார். ஆனால் அத்தகைய வாழ்க்கையில் இருந்த குஷி எல்லாம், ஆண்ட்ரூவுக்கும் நட்டாஷாவுக்கும் நிச்சயதார்த்தம் ஏற்பட்ட பின்பு, மறைந்து போயின. அதே சமயத்தில்தான் ஜோசப் அலெக்ஜீவிச் மரணமானார் என்ற செய்தியும் அவருக்குக் கிடைத்தது. இப்பொழுது அவருக்கு மீதமாய் இருப்பது எல்லாம், வாழ்க்கையின் வெளிப் பார்வை ஒன்றுதான். அவையாவன: அவருடைய வீடு; பிரபலமான மனைவி; அந்த மனைவி இப்பொழுது ஒரு மிக முக்கியமான பிரமுகரின் தயவுகளை அனுபவித்து வந்தாள்; பீட்டர்ஸ்பர்க் பூராவாக அவருக்கு அறிமுகமான பேர்வழிகள்; உற்சாகம் இல்லாத அவருடைய விதத்தில் பீயருக்கு அவருவருப்பாகத் தோன்றியது. தினக் குறிப்புகள் எழுதுவதை அவர் விட்டு விட்டார். சங்கத்தின் சகோதரர்களிடம் உறவாடுவதை அவர் தவிர்த்து வந்தார். மீண்டும் கிளப்பிற்கு போக ஆரம்பித்தார். ஏராளமாக குடித்து வந்தார். பிரம்மச் சாரிகளின் கோஷ்டிகளில் மறுபடியும் கலந்து கொண்டார். கோமகள் ஹெலன் அவரிடம் பேசி கண்டிக்க வேண்டும் என்று நினைக்கிற அளவிற்கு அவருடைய வாழ்க்கை மோசமாகத் திரும்பியது. தமது நடத்தையினால் அவளுடைய அந்தஸ்திற்கு குறைவு வருவதை தடுப்பதற்காக அவர் மாஸ்கோவிற்குப் போய் விட்டார்.

மாஸ்கோவிற்கு அவர் திரும்பி தமது பிரம்மாண்டமான வீட்டிற்குப் போனார். அந்த வீட்டில் ஏற்கெனவே வாடியும், வாடிக்கொண்டும் இருந்த இளவரசிகள், இன்னமும் ஏராளமான சேவகர்களோடு வசித்துக் கொண்டிருந்தார்கள். அவர் நகரத்தைச் சுற்றிப் பார்த்தார். இபெரியன் கோயிலைப் பார்த்தார். அங்கே தங்கச் சட்டங்களில் அமைந்த தெய்வச் சிலைகளின் முன்பாக எண்ணற்ற மெழுகு வத்திகள் எரிந்து கொண்டிருப்பதைக் கண்டார். கிரெம்லின்

சதுக்கத்தையும், வண்டிகளினால் கலைக்கப்படாத அங்கிருந்த பனிப் பரப்பையும் கண்டார். பனி வண்டி ஓட்டிகளையும், சைவ்ட் செவ் விராஜோக் என்ற இடத்தில் உள்ள சேரிகளையும் கண்டார். அந்த பழைய மாஸ்கோ வாசிகள் எதையும் விரும்பவில்லை. எங்கேயும் அவசரப்படவும் இல்லை. தங்கள் நாட்களை ரொம்ப சாவகாசமாக கழித்து வந்தார்கள். அந்தப் பழைய மாஸ்கோவின் சீமாட்டிகளையும், மாஸ்கோ நடனக் கச்சேரிகளையும், இங்கிலீஷ் கிளப்பையும் கண்டார். இப்பொழுதுதான் அவர் நிம்மதியாக நம்முடைய புகலிடத்தில் இருப்பதாக உணர்ந்தார். மாஸ்கோவில் அவர் இருக்கும்போது அமைதியாகவும், நிம்மதியாகவும், உற்சாகமாகவும் இருப்பதாக உணர்ந்தார். வீட்டில் இருக்கும்போது பழைய உடை - கவுனை தரித்தால் எம்மாதிரி மன நிம்மதி ஏற்படுமோ, அதே மாதிரி மன நிம்மதி அவருக்கு ஏற்பட்டது.

வெகு நாட்களாக எதிர்பார்த்துக்கொண்டிருந்த ஒரு விருந்தாளியைப் போலவும், அவருக்கு இடம் ஒளித்து வைத்து காத்திருப்பது போலவும், மாஸ்கோ உயர் வட்டாரத்தில் உள்ளவர்கள் எல்லாரும், வயோதிக ஸ்திரீயில் இருந்து சிறிய குழந்தைகள் வரையில், பீயரை வரவேற்றார்கள். பீயர் மிகுந்த இனிமையானவர் என்றும், அன்பானவர் என்றும், மிகுந்த புத்திசாலி என்றும் எப்பொழுதும் களிப்புள்ளவர் என்றும், மிகுந்த பெரும் மனம் கொண்ட அரைப் பைத்தியம் என்றும், எதற்குக் கவலை கொள்ளாத பழங்காலத்து ருஷ்ய கனவானைப் போன்றவர் என்றும் மாஸ்கோ உயர் வட்டாரம் பீயரைப் பற்றி நினைத்தது. அவருடைய பணப்பை எப்பொழுதும் காலியாகவே இருக்கும். ஏனெனில், யார் வேண்டுமானாலும் அதிலிருந்து எடுத்துக் கொண்டே இருப்பார்கள்.

உதவி நிதி, காலட்சேபங்கள், ஏழைகள் ஏழுதும் படங்கள், அவர்கள் செய்யும் சிலைகள், ஜனோபகார சங்கங்கள், ஜிப்ஸிகளின் பாட்டுகள், பள்ளிக்கூடங்கள், சந்தா டின்னர்கள், வேடிக்கை விளையாட்டுகள், பிரீமேஸன்கள், மாதா கோயில்கள், புத்தகங்கள் ஆகிய எதுவானாலும் சரி, அவரிடம் வந்து உதவி கேட்பவர்களுக்கு அவர் இல்லையென்றே சொல்லுவதில்லை. அவரிடம் இரண்டு பேர் பெருந் தொகைகள் கடனாக வாங்கியிருக்கிறார்கள். அவர்கள் அவரை தங்கள் பாதுகாப்பில் வைத்திருந்தார்கள். அப்படி இல்லையென்றால், அவரிடம் உள்ள எல்லாவற்றையும் அவர் இனாமாக கொடுத்திருப்பார். ஒரு டின்னர் கச்சேரியோ, அல்லது ஒரு வரவேற்பு கச்சேரியோ, அவர் இல்லாமல் கிளப்பில் நடந்ததே

கிடையாது. இரண்டு புட்டிகள் மார்மா மதுவை குடித்த பின்பு, அவர் சோபாவில் தமது இடத்தில் அமர்ந்திருப்பார். உடனே அவரைச் சுற்றி பலர் கூடி, பேச்சுகளையும் விவாதங்களையும் தமாஷ்களையும் ஆரம்பிப்பார்கள். அங்கு எப்பொழுதாவது சண்டைகள் ஏற்பட்டால் அவருடைய அன்பான புன்சிரிப்பும் பொருத்தமான தமாஷ்களும் சண்டை போடுகிறவர்களை சமாதானப்படுத்தி வைத்துவிடும். பிரீ மேஸன் டின்னர்கள் அவர் இல்லாமல் போனால் மந்தமாகவும் சோகமாகவும் இருக்கும்.

ஒரு பிரம்மச்சாரி டின்னருக்குப் பின்னால், அவருடைய சௌஜன்யமான, அன்பான புன்னகையோடு எழுந்தார். எங்காவது போக வேண்டும் 'என்று அவருடன் கும்மாளம் போட்டுக்கொண்டிருந்தார்கள், அவரைக் கேட்டு அவர் சம்மதித்ததும், அங்கிருந்தவர்களில் வாலிப மாணவர்கள் வெற்றிக் கோஷங்களையும், மகிழ்ச்சிக் கோஷங்களையும் போட்டார்கள். நடனக் கச்சேரிகளில் யாராவது ஜோடி வேண்டும் என்று விரும்பினால், தாம் போய் நடனமாடுவார். திருமணமானவர்களும், திருமணம் ஆகாதவர்களுமான வாலிப சீமாட்டிகள் எல்லாருமே அவரை விரும்பினார்கள். ஏனெனில், அவர் யாரிடமும் காதல் பேச்சு பேசாமல், எல்லாரிடமும் ஒரே மாதிரியாக இராச் சாப்பாட்டிற்குப் பின்னால் சௌஜன்யமாக இருப்பார். 'அவர் ரம்மியமானவர். ஏனெனில், அவரிடம் ஆண், பெண் வித்தியாசமே கிடையாது' என்று வாலிப சீமாட்டிகள் சொல்லுவார்கள்.

ராஜ சபையைச் சேர்ந்த நூற்றுக்கணக்கானவர்கள் சந்தோஷமாக மாஸ்கோவில் தங்கள் காலத்தை கழித்து வருகிறார்கள். அவர்களில் பீயரும் ஒருவர். ஏழு வருஷங்களுக்கு முன்னால், வெளிநாடுகளி லிருந்து அவர் திரும்பி வந்தார். அச்சமயம் அவரிடம் அவர் எதைப்பற்றியும் திட்டமிடவோ, அல்லது வழி தேடவோ அவசியம் இல்லை என்று யாராவது சொல்லியிருந்தால், அவருடைய வாழ்க்கை முன்னதாகவே அமைக்கப்பட்டு விட்டது என்றும், நிரந்தரமாகத் தீர்மானிக்கப்பட்டு விட்டது என்றும், அவர் எவ்வளவுதான் துள்ளினாலும், அவர் நிலைமையில் உள்ள மற்றவர்கள் எப்படி இருக்கிறார்களோ, அப்படியேதான் அவரும் இருக்க வேண்டும் என்றும் அவரிடம் சொல்லி யிருந்தால், அவர் பயங்கரம் அடைந்து போயிருப்பார். அவர் அதை நம்பியிருக்கவே மாட்டார். ருஷ்யாவில் ஒரு குடியரசை ஏற்படுத்த வேண்டும் என்று ஒரு காலத்தில் முழு மனதோடு அவர் விரும்பிக்கொண்டு இருக்கவில்லையா?; தாமே நெப்போலியனாக இருக்க வேண்டும் என்று அவர் விரும்பினார்; பின்னால் ஒரு தத்துவ சாஸ்திரியாக வர

வேண்டும் என்று விரும்பினார்; அதன் பின்னால், ஒரு ராணுவ தந்திரியாக விளங்கி நெப்போலியனை வெற்றி கொள்ள வேண்டும் என்று விரும்பவில்லையா? பாவங் கொண்ட மனித சமூகம் புத்துயிர் பெறுவதும், தமது சொந்த வளர்ச்சி பூரணத்துவம் பெறுவதும் சாத்தியமென்று அவர் நம்பி, அவற்றை அடைவதற்கு ஆர்வத்தோடு விரும்பவில்லையா? தமது அடிமைகளை விடுதலை செய்து பள்ளிக்கூடங்களையும், ஆஸ்பத்திரி களையும் அவர் ஏற்படுத்தவில்லையா?

ஆனால், அவற்றிற்கெல்லாம் பதிலாக இதோ அவர் இங்கே இருக்கிறார் - ஒரு துரோகக்கார மனைவிக்கு பணக்கார கணவராகவும், ராஜ சபையைச் சேர்ந்த வேலையிலிருந்து விலகிய கனவானாகவும், குடிப்பதிலும் உண்ணுவதிலும் மிகுந்த ஆவல் கொண்டவராகவும், தமது உள் சட்டை பொத்தான்களைக் கழற்றும்போது சர்க்காரைக் கொஞ்சம் திட்டுபவராகவும், மாஸ்கோ இங்கிலீஷ் கிளப்பின் ஒரு அங்கத்தினராகவும் மாஸ்கோ உயர் வட்டாரத்தில் சகலரும் பிரியம் கொள்ளக்கூடிய ஒரு நபராகவும் அவர் இருக்கிறார். ஏழு வருஷங்களுக்கு முன்னால் அவர் துச்சமாய் கருதி வந்த அதே வேலையை விட்டு விலகிய மாஸ்கோவின் ராஜ சபை கனவான்களில் ஒருவராகத் தாமும் இருக்க நேரிட்டிருப்பதைக் கண்டு வெகு காலம் வரையில் அவர் தமது மனதை சமாதானப்படுத்திக்கொள்ள முடியவில்லை.

சில சமயங்களில் இந்த வாழ்க்கை தற்காலிகமானதுதான் என்ற நினைப்பில் தம்மைத் தேற்றிக் கொள்ளுவார். ஆனால் அவரைப் போன்ற எத்தனை பேர்கள் இந்த கிளப் வாழ்க்கை தற்காலிகமானதுதான் என்று நினைத்தார்கள்; அவர்கள் எல்லாரும் பற்களும் தலை முடியும் இருக்கும்போது இந்த வாழ்க்கையில் நுழைந்து, பின்னால் அவர்கள் இதை விட்டுப் போகும்போது, ஒரு பல்லோ, ஒரு தலை ரோமமோ இல்லாமல்தானே போனார்கள் எனற் இந்த நினைப்புகள் அவருக்குத் தோன்றும்போது அவர் அதிர்ச்சி அடைவார்.

தமது அந்தஸ்தைக் கண்டு அவர் பெருமை கொள்ளும் நேரங்களில் தாம் முற்றிலும் வேறானவர் என்று அவருக்குத் தோன்றும், அதாவது, தாம் முன்னால் வெறுத்து வந்த அந்த மாஜி ராஜ சபை அங்கத்தினர்களை விட தாம் வேறுபட்டவர் என்று அவருக்குத் தோன்றும். அவர்களோ வெறும் முட்டாள்கள், சரக்கு இல்லாதவர்கள், திருப்தி கொண்டவர்கள், தங்கள் பதவிகளில் திருப்தி கொண்டவர்கள்-ஆனால், 'நானோ இன்னமும் திருப்தி

அடையவில்லை. மனித சமூகத்திற்கு ஏதாவது செய்ய வேண்டும் என்று விரும்புகிறேன். ஆனால் ஒரு வேளை இந்த தோழர்களும் என்னைப் போலவே போராடி இருக்கலாம். புதிதாக எதையாவது விரும்பியிருக்கலாம். வாழ்க்கையில் தங்களுக்கு சொந்தமான பாதையை தேடியிருக்கலாம். ஆனால் என்னைப் போலவே, சந்தர்ப்பங்கள், சமூகம், இனம் ஆகியவைகளின் வேகத்தினால் (இயற்கையின் சக்திக்கு எதிராக மனிதனால் எதுவுமே செய்ய முடியாது) நான் இப்பொழுது இருக்கும் நிலைமைக்கு அவர்கள் வந்திருக்கலாம்' என்று அவருக்கு அடக்கமான உணர்ச்சிகள் ஏற்பட்டபோது அவர் தமக்குத் தாமே சொல்லிக்கொள்ளுவது உண்டு. மாஸ்கோவில் அவர் சில காலம் வசித்த பின்பு, அந்த மாஜிகளை அவர் வெறுப்பதில்லை. அதற்குப் பதிலாக, விதியின் வலிமையில் அகப்பட்டிருந்த அவர்கள் மீது, தம்மீது, தாம் இரக்கம் கொள்ளுவதைப்போல இரக்கம் காட்டி, மரியாதையும் பிரியமும் கொள்ள ஆரம்பித்தார்.

அதைரியம், மனோவியாகூலம், வாழ்க்கையில் வெறுப்பு ஆகிய கஷ்டங்களால் பீயர் இப்பொழுது சங்கடப்படவில்லை. ஆனால் மிகுந்த கூர்மையாக அவரைத் தாக்கி வந்த அந்த வியாதி அவருக்கு உள்ளாக அடங்கி விட்டது. ஒரு வினாடிகூட அவரை விட்டு அது பிரியவில்லை. 'எதற்காக? ஏன்? இந்த உலகத்தில் என்ன நடந்து கொண்டிருக்கிறது?' என்று தம்மையே குழப்பத்தோடு ஒரு நாளில் பல தடவைகள் கேட்டுக்கொள்ளுவார். தம்மை அறியாமலேயே வாழ்க்கை விசித்திரங்களின் பொருளைப் பற்றி சிந்திக்க ஆரம்பிப்பார். ஆனால் இந்தக் கேள்விகளுக்கு விடைகள் கிடையாது என்பதை, அவர் அனுபவத்திலிருந்து அறிந்து கொண்டிருக்கிறபடியால், இவைகளைப் பற்றி சிந்திப்பதை உடனே விட்டு விட்டு, ஒரு புஸ்தகத்தை கையில் எடுப்பார். அல்லது கிளப்பிற்கோ, அல்லது அப்பாலோன் நிக்கலாவிச்சின் இடத்திற்கோ ஊர் வம்புகளைப் பற்றி பேசுவதற்காக வேகமாய் போவார்.

'தன்னுடைய சொந்த உடலைத் தவிர, வேறு எதைப் பற்றியும் ஹெலன் கவலைப்பட்டதில்லை. இந்த உலகத்தில் அடி முட்டாள்களான பெண்களில் அவள் ஒருவள். ஆனால் புத்திசாலித்தனத்திற்கும் பண்பாட்டிற்கும் அவள் சிகரமானவள் என்று மக்கள் நினைத்து, அவளுக்கு மரியாதை காட்டுகிறார்கள்' என்று பீயர் நினைத்தார். 'நெப்போலியன் போனபார்ட் மகாபெரியவராய் இருந்த வரையில் அவரை எல்லாரும் இகழ்ந்தார்கள். இப்பொழுது அவர் கேடுகெட்ட கோமாளியாக வந்த

பின்பு அவருக்கு தமது குமாரியை சட்ட விரோதமாக திருமணம் செய்து கொடுப்பதற்கு பிரான்ஸிஸ் சக்கரவர்த்தி விரும்புகிறார். ஜூன் மாதம் 14-ந் தேதியன்று, பிரஞ்சுக்காரர்கள் மீது வெற்றி கொண்டதற்காக தங்கள் கத்தோலிக்க குருக்கள் மூலமாக ஸ்பெயின்காரர்கள் கடவுளுக்கு நன்றி செலுத்தினார்கள். பிரஞ்சுக்காரர்களும் அதே மாதிரி ஜூன் மாதத் 14-ந் தேதி யன்று ஸ்பெயின்காரர்களைத் தோற்கடித்ததற்காக, கத்தோலிக்க குருக்கள் மூலம் கடவுளுக்கு நன்றி செலுத்தினார்கள். தங்களுடைய அக்கம் பக்கத்தார்களுக்காக, தங்களிடம் உள்ள எல்லாவற்றையும் தியாகம் செய்ய தயாராய் இருப்பதாக, என்னுடைய சகோதர பிரீமேஸன்கள் ரத்தத்தின் மீது சத்தியம் செய்தார்கள். ஆனால் ஏழைகளுக்காக உண்டியல் வசூல் செய்யும் போது, ஒவ்வொருவரும் ஒரு ரூபிள்கூட கொடுப்பதில்லை. அவர்கள் சூழ்ச்சி செய்தார்கள். ஆஸ்டிராலாட்ஜ் என்ற சங்கத்திற்கும், மன்னா சீக்கர்ஸ் என்ற சங்கத்திற்கும் போட்டா போட்டி நடக்கிறது. ஸ்காச் கம்பளம் என்ற தத்துவார்த்த சித்திரங்கள்கொண்ட கம்பளம், யாரிடம் இருப்பது உண்மையானது என்பதைப் பற்றி சண்டை போடுகிறார்கள். ஒருவருக்கும் அவசியம் இல்லாத பிரகடனத்தைப் பற்றியும், அந்தப் பிரகடனத்தை யார் எழுதினாரோ அவருக்கே அதன் அர்த்தம் புரியாமல் இருக்கும்போது, அதன் அர்த்தங்களைப் பற்றியும் இவர்கள் சண்டை போட்டுக் கொள்ளுகிறார்கள். நாம் எல்லாரும் கிறிஸ்தவ சட்டமான, 'தீங்கு செய்தவர்களை மன்னிப்பது, அக்கம் பக்கத்தார்களை நேசிப்பது', ஆகியவைகளை கையாளுவதாகச் சொல்லுகிறோம். அதற்காக மாஸ்கோவில் நாற்பது தடவைகளில் நாற்பது மாதா கோயில்களை கட்டியிருக்கிறோம். ஆனால் நேற்று பட்டாளத்தில் இருந்து ஓடியதற்காக, ஒருவனை சவுக்கால் அடித்து சாக வைத்தோம். அதே கிறிஸ்தவ சட்டமான, 'அன்பு கொள்ளுவது, மன்னிப்பு காட்டுவது' என்று சட்டத்தை அமுல் செய்யவேண்டிய ஒரு குருக்கள், அந்த சிப்பாய்க்கு மரண தண்டனையை நிறைவேற்றுவதற்கு முன்பாக, ஒரு சிலுவையை முத்தம் இடுவதற்காக கொடுத்தார்' என்று பீயர் சிந்தனை செய்தார். இந்த பொதுவான ஏமாற்றை ஒவ்வொருவரும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். அவருக்கும் அதில் பழக்கமாய் விட்டது. என்றாலும் ஒவ்வொரு தடவையும் அதைப் பற்றி அவர் நினைக்கும்போது அது புதிதாகவே தோன்றியது. 'இந்த ஏமாற்றையும் குழப்பத்தையும் என்னால் அறிய முடிகிறது. ஆனால் நான் பார்ப்பதை எல்லாம் அவர்களுக்கு எப்படி சொல்வது? அவர்களும் கூட அவர்களின் உள்ளத்தின் ஆழத்தில் அதை அறிந்து கொண்டுதான் இருக்கிறார்கள். ஆனால் அதைப்

பார்க்காமல் இருக்க அவர்கள் முயற்சி செய்கிறார்கள். இதை நான் அறிவேன். ஆகவே அப்படித்தான் காரியங்கள் நடக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஆனால் நான்-என் கதி என்ன ஆவது?' என்று அவர் மேலும் சிந்தித்தார். பலரைப் போல, முக்கியமாக ருஷ்யர்களைப் போல நன்மையையும் உண்மையையும் ஸ்தாபிப்பது சாத்தியம் என்று நம்புகிறவர்களில் அவரும் ஒருவர். ஆனால் வாழ்க்கையில் உள்ள, வெகு தெளிவாகக் காணப்படும். தீமையையும் பித்தலாட்டங்களையும் கண்ட பின்பு, முன் சொன்ன காரியத்தில் தீவிரமாக பங்கு கொள்ள முடியாமல் போனவர்களில் அவரும் ஒருவர். அவருடைய பார்வையில் ஒவ்வொரு காரியமும், தீமையும் பித்தலாட்டமும் கலந்திருப்பதாகவே தோன்றியது. அவர் எதை முயற்சி செய்தாலும், எந்த வேலையில் ஈடுபட்டாலும், அதில் உள்ள தீங்கும் பொய்யும் அவருக்கு அருவருப்பைக் கொடுத்து, அவருடைய வேலைகளுக்கு முட்டுக்கட்டைகளாய் நின்றன. என்றாலும் அவர் வாழ வேண்டும், ஏதாவது ஒரு வேலை செய்தாக வேண்டும், இம்மாதிரியான தீர்க்க முடியாத பிரச்னைகளுக்கு அடியில் அகப்பட்டுக்கொண்டிருப்பது மிகுந்த பயங்கரமாய் இருந்தது. ஆகவே அதை மறப்பதற்காக, வேறு எதையாவது செய்வதில் அவர் மூழ்கினார். ஒவ்வொன்றையும் படித்து வந்தார். வீட்டிற்குத் திரும்பியதும், அவருடைய சேவகர்கள் அவருடைய மேலாடைகளைக் கழற்றிக்கொண்டு இருக்கும் போதே, அவர் ஒரு புத்தகத்தை எடுத்து படிக்க ஆரம்பிப்பார். படிப்பதில் இருந்து பின்னால் தூங்க ஆரம்பிப்பார். தூக்கத்திற்குப் பின்னால், கிளப்பில் உள்ள வரவேற்பு அறைகளில் அரட்டைகளில் இறங்குவார். அரட்டைகளுக்குப் பின்னால், ஏராளமாக குடிப்பார். அதன் பின்னால் பெண்களிடம் திரும்புவார். குடிக்குப் பின்னால், மீண்டும் அரட்டை அடிப்பதும், வாசிப்பதும், மறுபடியும் குடிப்பதுமாய் இருந்தார். வரவர அவருக்கு குடியானது உடம்பிற்கும் தார்மீகத்திற்கும் அவசியமானதாய் விட்டது. அவருடைய பருத்த உடலுக்கு குடிப்பது ஆபத்து என்ற டாக்டர்கள் எச்சரிக்கை செய்திருந்தும், அவர் ஏராளமாகக் குடித்து வந்தார். மதுவில் பல கோப்பைகளை அவருடைய பெரிய வாயில் விட்டு விழுங்கிய பின்புதான், அவருக்கு நிம்மதி ஏற்படும். அவருடைய உடம்பில் ஒரு இன்பமான வெது வெதுப்பை அவர் உணருவார். அதன் பின்பு அவருடைய சகபாடிகளுடன் சௌஜன்யமாய் இருப்பார். அதன் பின்னால், அவரிடம் எந்தக் கொள்கையைப் பற்றிச் சொன்னாலும், அதை ஆழ்ந்து சிந்திக்காமல், மேலெழுந்த வாரியாக அதற்கு ஆதரவு கொடுப்பார். ஆனால் அந்த தீராத பிரச்னை

எப்பொழுதும் அவர் தலையில் ரீங்காரம் செய்து கொண்டே இருக்கும். டின்னருக்குப் பின்பும், இராச்சாப்பாட்டுக்குப் பின்பும், அவர் பேசிக்கொண்டு இருக்கும்போதும், அல்லது மற்றவர்கள் பேசுவதை கவனித்துக்கொண்டு இருக்கும்போதும், அல்லது வாசித்துக் கொண்டு இருக்கும்போதும், அந்த ரீங்காரம் விடாமல் இருந்து கொண்டு இருக்கும். ஆனால் ஏராளமாக குடித்த பின்பு, அவர் தமக்குத்தாமே சொல்லிக் கொள்ளுவதாவது: 'அதைப் பற்றி கவலையில்லை. அந்தப் பிரச்னையை நான் தீர்த்து விடுவேன். அதற்கு ஒரு பரிகாரம் என்னிடம் தயாராய் இருக்கிறது. ஆனால் இப்பொழுது அதற்கு அவகாசம் இல்லை - அதைப் பற்றி எல்லாம் நான் பின்னால் சிந்தித்து முடிவு செய்வேன்' ஆனால் அந்த 'பின்னால்' என்பது மட்டும் எப்பொழுதும் வரவேயில்லை.

காலையில் வயிறு காலியாய் இருந்தபோது, அந்தப் பழைய பிரச்னைகள் எப்பொழுதும் போல தீராதவையாகவும் பயங்கரமாகவும் அவருக்குத் தோன்றுவதுண்டு. உடனே அவசரமாக ஒரு புத்தகத்தை எடுத்து வாசிக்க ஆரம்பிப்பார். அச்சமயம் அவரை யாராவது பார்க்க வந்தால், அவருக்கு சந்தோஷமாய் இருக்கும்.

எதிரிகளின் குண்டு மழைக்குள் அகப்பட்டுக் கொண்ட சிப்பாய்கள், அதிலிருந்து தப்புவதற்கு அவர்களால் செய்யக் கூடியது எதுவும் இல்லை மறக்கவோ எதையாவது ஒரு வேலையைச் செய்ய முயற்சிப்பார்கள் என்பதை, அவர் கேள்விப்பட்டிருக்கிறார். சில சமயங்களில் அது அவருடைய ஞாபகத்திற்கு வரும். எல்லா மனிதர்களுமே இந்த சிப்பாய்களைப் போலவே, வாழ்க்கையிலிருந்து தப்பித்துக் கொள்ள முயற்சி செய்வதாக பீயருக்குத் தோன்றியது. அதற்காக சிலர் உயர் பதவியை அடைய முயற்சிக்கிறார்கள். சிலர் சீட்டு விளையாடுகிறார்கள். சிலர் சட்டங்களை செய்கிறார்கள். சிலர் பெண்களிடம் தஞ்சம் அடைகிறார்கள். சிலர் பொம்மைகளிலும் குதிரைகளிலும் தங்களை மறந்து நிற்கிறார்கள். சிலர் அரசியலிலும் விளையாட்டுகளிலும், பேறு சிலர் குடிப்பதிலும், மற்றும் சிலர் சர்க்கார் காரியாதிகளிலும் ஈடுபட்டு வாழ்க்கையிலிருந்து தப்பித்துக்கொள்ள முயற்சிக் கிறார்கள். 'எதுவும் அற்பம் அல்ல; 'எதுவும் முக்கியமானது அல்ல. எல்லாம் ஒன்றுதான்- அதிலிருந்து தப்பித்துக் கொள்ளவே, தங்களால் கூடுமான வரையில் ஒவ்வொருவரும் முயற்சிக்கிறார்கள். அதை நேரில் பார்ப்பதற்கு, அந்த பயங்கரமானதை பார்ப்பதற்கு, ஒருவரும் விரும்பவில்லை' என்று பீயர் நினைத்தார்.



குளிர் கால ஆரம்பத்தில் இளவரசர் நிக்கலஸ் பால்கோன்ஸ்கியும், அவருடைய குமாரியும் மாஸ்கோவிற்கு வந்து தங்கினார்கள். அச்சமயம் அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியின் ஆட்சி மீதிருந்த உற்சாகம் குறைந்திருந்தது. தேச பக்தியும், பிரஞ்சுக் காரர்களுக்கு எதிரான அபிப்பிராயமும் அங்கே பரவி இருந்தது. இவையும், அவருடைய கடந்த கால சேவைகளும், அவருடைய கூர்மையான அறிவும், அவருடைய தனிச் சிறப்பும் ஒன்றுசேர்ந்து, இளவரசர் நிக்கலஸ் பால்கோன்ஸ்கிக்கு மாஸ்கோவாசிகள் மரியாதை காட்டும்படி செய்தன. சர்க்காருக்கு மாஸ்கோ காட்டிவந்த எதிர்ப்பில் அவர் நடுநாயகமாக விளயங்கினார்.

அந்த வருஷத்தில் மிகவும் வயதானவராக இளவரசர் காணப்பட்டார். அவருடைய வயோதிகத்தனம் பல வழிகளில் வெளிப்பட்டு வந்தது. அடிக்கடி அவர் தூங்குவார். சமீபத்தில் நடந்த விஷயங்களை மறந்து, வெகுகாலத்திற்கு முன்னால் நடந்தவைகளை நினைவுகொண்டிருப்பார். சிறுபிள்ளைத்தனமான தற்பெருமையைக் காட்டி வந்தார். இவையெல்லாம் சேர்ந்து நிற்கும்போது தான், மாஸ்கோவில் உள்ள எதிர்ப்புக் கட்சிக்கு அவர் தலைமை தாங்கினார். இவையெல்லாம் இருந்தும்கூட அவரைப் பார்க்க வருகிறவர்களிடம் அவர் மீது மாரியாதை கொண்ட மதிப்பு ஏற்படும் படி' செய்து வந்தார். முக்கியமாக, மாலை நேரங்களில் தேநீர் அருந்த பழைய மோஸ்தர் சட்டையையும், பவுடர் போட்ட டோப்பாவையும் அணிந்து அவர் வரும்போது, யாராவது ஒருவர் தூண்டிவிட்டல், தமது பழங்கால கதைகளையும், தற்கால நிலைமையைப் பற்றி பலமான கண்டனங்களையும் அவர் சொல்லுவதுண்டு. அந்தப் பழைய மோஸ்தர் வீடும், அதிலுள்ள பிரம்மாண்டமான நிலைக்கண்ணாடிகளும், முந்திய நூற்றாண்டைச் சேர்ந்த மேஜை நாற்காலிகளும், பவுடர்போட்டு டோப்பா அணிந்த சேவகர்களும், கண்டிப்பான கூர்மையான புத்தியுள்ள அந்த வயோதிகரும் (அவரும் கடந்த நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு ஞாபகச் சின்னம்தான்) அவருடைய அமைதியான குமாரியும், அவருக்கு மரியாதையோடு உபசரணை செய்துவந்த அந்த அழகிய பிரஞ்சுக்காரியும், ஒரு கம்பீரமான, மனதிற்கு உகந்த காட்சியாக அவர்கள் எல்லாருக்குமே தோன்றி வந்தன. அவரைப் பார்க்க வருகிறவர்கள் எல்லாரும், அந்த வீட்டுக்காரரோடு தங்கி நிற்கும் அந்த இரண்டு மணி நேர சகவாசங்களைப்பற்றியே சிந்தனை

செய்வார்கள். ஆனால், ஒரு நாளில் உள்ள மற்ற இருபத்திரண்டு மணி நேரத்தில் அந்த வீட்டில் நடக்கிற அந்தரங்க, அன்னியோன்னிய குடும்ப வாழ்க்கையைப் பற்றி அவர்கள் சிந்திப்பதில்லை.

அந்த குடும்ப வாழ்க்கை வரவர இளவரசி மேரிக்கு மிகுந்த சிரமமாய் இருந்தது. அவளுக்கு மிகந்த மகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடிய காரியங்கள் மாஸ்கோவில் இல்லை. அதாவது, பால்டு ஹில்ஸில் அவள் இருந்தபோது, சன்னியாசி யாத்ரீகர்களிடம் உரையாடல் செய்ததினாலும், தனிமையில் இருப்பதனாலும் அவள் உற்சாகம் பெற்று வந்தாள். மாஸ்கோவில் அந்த நகர வாழ்க்கையினால் கிடைக்கக்கூடிய சௌகர்யங்களும் இன்பங்களும் அவளுக்குக் கிடைக்கவில்லை. உயர் வட்டார கூட்டங்களுக்கு அவள் போக முடிவதில்லை. ஏனெனில், அவளுடைய தந்தை வராமல், அவளைத் தனியாகப் போகவிடுவதற்கு அவர் சம்மதிக்கமாட்டார் என்பதை ஒவ்வொரு வரும் அறிவார்கள். அவருக்கோ உடம்பு அசௌக்கியத்தினால் வெளியே போக முடிவதுமில்லை. ஆகவே, டின்னர் கச்சேரி களுக்கோ, மாலைக் கச்சேரிகளுக்கோ அவளை யாரும் அழைப்ப தில்லை. தனக்கு திருமணம் ஆகும் என்ற நம்பிக்கையையும் அவள் முற்றிலும் கைவிட்டுவிட்டாள்.

அவர்கள் வீட்டிற்கு அவளை பெண் பார்ப்பதற்காக வரும் வாலிபர்களை, வயோதிக இளவரசர் எம்மாதிரி பகையும் கடுமையும் கொண்டு வரவேற்று திருப்பி அனுப்பிவிடுகிறார் என்பதை அவள் பார்த்திருக்கிறாள். அவளுக்கு நண்பர்களே கிடையாது. அவளிடம் நெருங்கி இருந்த இரண்டு பேரும் அவள் மாஸ்கோவிற்கு வந்த பின்பு ஏமாற்றத்தையே கொடுத்தார்கள். குமாரி பௌரியனுடன் அவள் எப்பொழுதுமே வெளிப்படையாக இருக்க முடிந்தது இல்லை. இப்பொழுது அவள் அவளுக்கு மனதிற்குப் பிடிக்காமல் போய்விட்டாள். பற்பல காரணங்களுக்காக அவளை இளவரசி மேரி ஒதுக்கி வைத்தே வந்தாள். சென்ற ஐந்து வருஷ காலமாக கடிதப் போக்குவரத்து செய்து வந்த அவளுடைய மற்றொரு சிநேகிதியான ஜூலி என்பவள் மாஸ்கோவில்தான் இருக்கிறாள். என்றாலும் அவர்கள் இருவரும் சந்தித்தபோது, ஒருவருக்கு ஒருவர் பொருத்தம் இல்லாதவர்களாக உணர்ந்தார்கள். ஜூலியின் சகோதரர்கள் இறந்து போனபடியால், அச்சமயம் ஜூலி மாஸ்கோவில் பெரிய பணக்காரப் பெண்களில் ஒருவளாக விளங்கினாள். உயர் வட்டார இன்பங்களில் பூரணமாக மூழ்கியிருந்தாள். அவளைச் சுற்றி வாலிபர்கள் மொய்த்துக்

கொண்டிருந்தார்கள். தன்னுடைய மதிப்பை திடீரென்று இவர்கள் உணர்ந்துகொண்டார்களோ என்று அவள் ஆச்சரியப்பட்டாள். அச்சமயம் ஜூலி, உயர் வட்டாரப் பெண்களுக்கு திருமணம் ஆவதற்கு ஏற்படக்கூடிய கடைசி கட்டத்தில் இருந்தாள். அவளுக்கு அப்பொழுது திருமணம் ஆகவேண்டும். அல்லது 'திருமணமே கிடையாது என்பதைத் தீர்மானிக்க வேண்டிய நிலைமையில் இருந்தாள். தான் இப்பொழுது எழுதுவதற்கு ஒருவருமே கிடையாது என்று ஒரு சோகமான புன்னகையோடு வியாழக்கிழமைகளில் இளவரசி மேரி நினைப்பது உண்டு. ஏனெனில், ஜூலியும் அங்கேதான் இருந்தாள். அவளுடைய பிரசன்னம் அவளுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்காவிட்டாலும், அவர்கள் ஒவ்வொரு வாரமும் சந்தித்து வந்தார்கள். பல வருஷங்களாக மாலை வேளைகளில் சந்தித்து அளவளாவி வந்த சீமாட்டியை, ஒரு வெளிநாட்டான் திருமணம் செய்ய மறுத்தானாம். ஏனெனில், அவள் என் மனைவி ஆகிவிட்டால் மாலை நேரங்களில் நான் யாரிடம் போய் அளவளாவுவது என்று கேட்டானாம். அதேமாதிரி ஜூலி மாஸ்கோவிலேயே பிரசன்னம் ஆகியிருந்து தான் கடிதம் எழுதுவதற்கு ஒருவரும் இல்லாமல் செய்துவிட்டதற்காக இளவரசி மேரி வருத்தம் கொண்டாள். மாஸ்கோவில் பேசுவதற்கோ, அல்லது தன்னுடை ப துக்கத்தை ஒருவரிடம் சொல்லிக் கொள்ளுவதற்கோ இளவரசி மேரிக்கு யாருமே கிடையாது. அச்சமயம்தான் அவளை ஏராளமான துன்பங்கள் வந்து அடைந்தன. இளவரசர் ஆண்ட்ரூ திரும்பி வரவேண்டிய காலமும் அவருடைய திருமண காலமும் நெருங்கிக்கொண்டு வந்தன. தம்முடைய தந்தையை தயார் செய்து வைக்கும்படி அவருடைய சகோதரியை அவர் வேண்டிக்கொண்டு இருந்தார். அதை இளவரசி மேரியால் நிறைவேற்ற முடியவில்லை. உண்மையில் விஷயங்கள் எல்லாம் மிகுந்த மோசமாகிக்கொண்டிருப்பதாகத் தோன்றின. ஏனெனில், வாலிபக் கோமகள் ராஸ்டோவாவைப்பற்றி பேச்சு வந்தபோதெல்லாம், வயோதிக இளவரசர் (அவர் எப்பொழுதுமே கோபமாய்த்தான் இருந்து வருகிறார். அதோடு) தம்மையே மறந்து பேசுவது வழக்கம். இவற்றோடுகூட மற்றொரு விசாரமும் சேர்ந்தது. தன்னுடைய ஆறு வயது மருமகனுக்கு அவள் சொல்லிக்கொடுத்து வந்த படிப்பிலிருந்து இது கிளம்பியது. அதாவது, தன்னுடைய மருமகனுக்கு அவள் பாடம் சொல்லிக்கொடுக்கும்போது தன்னுடைய தந்தையிடம் உள்ள எரிச்சல் சுபாவம் தன்னிடமும் இருப்பதைக் கண்டு அவள் பீதியுற்றாள். என்றாலும் தனது மருமகனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கும்

பொழுது தான் எரிச்சல் கொள்ளக் கூடாது என்று தனக்குத்தானே அடிக்கடி அவள் சொல்லிக்கொள்ளுவதுண்டு. ஆனால், கையில் ஒரு குச்சியை வைத்துக்கொண்டு, பிரஞ்சு எழுத்துக்களை மருமகனுக்குச் சுட்டிக்காட்டி சொல்லிக் கொடுக்கும்போது எல்லாம், தனக்குள்ள அறிவை சீக்கிரமாக, சுலபமாக தன் மருமகனிடம் கொட்டிவிட வேண்டுமென்று அவள் ஏங்குவது உண்டு. ஆனால், அந்த பையன் தனது அத்தை எந்த நிமிஷத்திலும் கோபம் அடைந்துவிடுவாள் என்று பயந்துகொண்டே இருப்பான். அதனால் அவனிடம் ஏதாவது கவனக் குறைவு ஏற்படும்போது அவள் உடல் பதறுவாள். குழப்பம் அடைந்து, உஷ்ணம் அடைந்து உரக்கக் கத்துவாள். சில சமயங்களில் அவள் கையைப் பிடித்து இழுத்து, அவனை ஒரு மூலையில் கொண்டுபோய் வைப்பாள். மூலையில் வைத்த பின்பு, தன்னுடைய கொடுமைக்காகவும் கெட்ட சுபாவத்திற்காகவும் அழ ஆரம்பிப்பாள். குஞ்சு நிக்கலஸ் அவளைப் பார்த்து அவனும் விம்மி விம்மி அழுவான். பின்னால் அவளுடைய அனுமதி இல்லாமலேயே மூலையை விட்டு எழுந்து, அவளிடம் வந்து அவளுடைய கண்ணீரால் நனைந்த கைகளை முகத்திலிருந்து இழுத்து அவளுக்கு இதம் கொடுப்பான். எல்லாவற்றையும் விட அதிகமாக இளவரசியை வருத்தி வந்தது, அவளுடைய தந்தையின் எரிச்சல் குணமேயாகும். அவர் தமது கோபத்தை எப்பொழுதும் அவளிடமே காட்டி வந்தார். இப்பொழுது வரவர அந்தக் கோபம் குரூரமாக மாறியது. இரவு பூராவாக தரையிலேயே படுத்துக்கிடக்க வேண்டும் என்று அவர் வற்புறுத்தி இருந்தாலும், அல்லது அவர் அவளை அடித்திருந்தாலும், அல்லது தண்ணீரோ விறகோ சுமந்து வரும்படி அவர் கட்டாயப்படுத்தி இருந்தாலும், அந்த நிலைமைகள் கடினமானவை என்று அவள் உள்ளத்தில் எப்பொழுதுமே தோன்றி இருக்காது. ஆனால், இந்த அன்பு கொண்ட சர்வாதிகாரி-அவர், அவள் மீது பிரியம் கொண்டவரான படியால் அதிகக் குரூரமாய் இருக்கிறார். அதே காரணத்திற்காக தம்மையும் அவளையும் அவர் வருத்துகிறார்-வேண்டுமென்றே அவளை துன்புறுத்தி இழிவுபடுத்துவது எப்படி என்பதை அறிவார். அது மட்டுமல்ல, ஒவ்வொன்றுக்கும் எப்பொழுதும் அவளேதான் பொறுப்பு என்பதைச் சுட்டிக்காட்டவும் அவருக்கு தெரியும். சமீப காலமாக அவர் காட்டிவரும் ஒரு புதிய குண விசேஷம் மற்ற எல்லாவற்றையும்விட இளவரசி மேரியை அதிகமாய் துன்புறுத்தி வந்தது. அது தான், குமாரி பௌரியனுடன் வரவர அதிகமான அன்னியோன்னியம் அவர் கொண்டிருப்பதாகும். அவருடைய குமாரர் திருமணம் செய்ய விரும்புவதைப்பற்றி முதலில் அவர்

கேள்விப்பட்டதும், இந்த எண்ணம் அவருக்குத் தமாஷாக உற்பத்தியாயிற்று. அதாவது, ஆண்ட்ரூ திருமணம் செய்தால், தாமும் பௌரியனை திருமணம் செய்வது என்ற எண்ணமாகும். முதலில் இந்த நினைப்பு அவருக்குப் பிரியமாய் இருந்தது. பின்னால் இதில் அவர் தீவிரமாய் இறங்கினார். பௌரியனிடம் விசேஷ அன்பு காட்டி, தமது குமாரியிடமுள்ள அதிருப்தியைத் தெரிவிப்பதற்காக, பௌரியனிடம் உள்ள காதலை வெளிப்படையாகக் காட்டி வந்தார். தன்னை வருத்துவதற்காகவே தான் இம்மாதிரி அவர் செய்கிறார் என்று இளவரசி மேரிக்குத் தோன்றியது.

மாஸ்கோவில் ஒரு நாள் இளவரசி மேரியின் முன்னிலையில் (தான் அங்கே இருக்கும்போது செய்யவேண்டும் என்றே தனது தந்தை செய்ததாக அவள் நினைத்தாள்.) வயோதிக இளவரசர் குமாரி பௌரியனின் கையை முத்தமிட்டாள். பின்னால் அவளை தன்னிடம் இழுத்து ஆர்வத்தோடு தழுவிக்கொண்டார். இளவரசி மேரி முகம் சிவந்து, அந்த அறையைவிட்டு வெளியே ஓடினாள். சில நிமிஷங்களுக்குப் பின்னால், இளவரசி மேரியின் அறைக்கு குமாரி பௌரியன் வந்து, தனது இதமான குரலில், புன்னகையோடும் மகிழ்ச்சியோடும் பேச ஆரம்பித்தாள். இளவரசி மேரி அவசரமாக பௌரியனிடம் நெருங்கி, தான் செய்வது என்னது என்பதை அறியாதவளாக அந்த பிரஞ்சுப் பெண்ணைப் பார்த்து கோபமான குரலில் கூச்சலிட ஆரம்பித்தாள். அவளுடைய குரல் கம்மியது: 'ஒருவருடைய பலவீனத்தை தனக்குச் சாதகமாக உபயோகித்துக் கொள்வது பயங்கரமானது, இழிவானது, மனுஷத்தன்மையற்றது...' அவள் அந்தப் பேச்சை முடிக்கவில்லை. 'என்னுடைய அறையை விட்டு வெளியே போ' என்று கூச்சலிட்டு, விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள்.

மறு நாள் தமது குமாரியிடம் இளவரசர் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. ஆனால், டின்னர்சமயத்தில் குமாரி பௌரியனுக்குத் தான் முதலாவதாக பரிமாற வேண்டும் என்று அவர் உத்தரவிட்டதை அவள் கவனித்தார். டின்னருக்குப் பின்னால், சேவகன் காபி பரிமாறினான். பழைய வழக்கத்தினால் முதலில் இளவரசிக்கு காபி கொடுத்தான். இதைப் பார்த்த இளவரசர் திடீரென்று கோபம் பொங்கி, தமது கையில் இருந்த தடியை அந்த பிலிப் மீது வீசி, அவனை உடனே ராணுவத்தில் சேர்க்கும்படி உத்தரவிட்டார்.

'அவன் கீழ்ப்படியவில்லை... நான் இரண்டு தடவைகள் சொன்னேன்... அப்படி இருந்தும் அவன் கீழ்ப்படியவில்லை.

அவள்தான் இந்த வீட்டில் முதன்மையானவள். அவள் எனக்குச் சிறந்த நண்பர்' என்று இளவரசர் கூவினார். இளவரசி மேரியைப் பார்த்து, கோபத்தினால் கூச்சலிட்டு முதல் தடவையாக, 'நீ மீண்டும் அவள் முன்பு நேற்று நடக்கத் துணிந்த மாதிரி, உன்னை மறந்து நடப்பாயானால், இந்த வீட்டில் எஜமானர் யார் என்பதை நான் உனக்குக் காட்டுவேன். போ, கண் முன்னால் நிற்காதே. அவளிடம் போய் மன்னிப்பு கேள்.'

குமாரி பௌரியனிடம் இளவரசி மேரி மன்னிப்பு கேட்டாள். அதோடு தன்னையும்., அந்த சேவகன் பிலிப்பையும் மன்னிக்கும்படி தந்தையிடம் கேட்டாள். தனக்காக அவள் தலையிடும்படி, அந்த சேவகன் அவளைக் கெஞ்சினான்.

அம்மாதிரி சந்தர்ப்பங்களில், தியாகம் செய்யும் பெருமையைப் போன்ற ஒன்று, அவள் உள்ளத்தில் வளர்வதுண்டு. அந்த தந்தையைப் பற்றி அவள் நினைக்க ஆரம்பித்தாள்:- திடீரென்று தமது மூக்குக்கண்ணாடிகள் தமது பக்கத்திலேயே இருந்தும்கூட, அவற்றைப் பார்க்காமல், கையினால் தடவிப் பார்த்து தேடுவது இல்லையா? அல்லது அப்பொழுதுதான் நடந்த விஷயத்தைக்கூட, அவர் மறந்தவிடுவது இல்லையா? அல்லது தமது தள்ளாத கால்களால் நடக்க முடியாமல், தவறிவிடுவது இல்லையா? அம்மாதிரி சந்தர்ப்பங்களில் தமது பலக்குறைவை யாராவது கண்டுகொண்டார்களா என்பதைத் தெரிந்துகொள்ள அவர் திரும்பிப் பார்ப்பது இல்லையா? எல்லாவற்றையும்விட மோசமானது, மற்றொன்று உண்டு. அதாவது, அவர் டின்னர் சாப்பிடும்போது, அவருக்கு உற்சாகமூட்ட விருந்தாளிகள் யாரும் இல்லாவிட்டால், திடீரென்று அவர் தூங்க ஆரம்பித்து, தமது சவுக்கம் கீழே நழுவ, அவருடைய ஆடிக்கொண்டிருக்கும் தலை முன்னாலுள்ள தட்டின் மீது விழுவது இல்லையா? 'அவருக்கு வயோதிகம் வந்துவிட்டது. பலக் குறைவாய் இருக்கிறார். இந்த நிலைமையில், நான் அவரைக் கண்டிக்கத் துணிவதா?' என்று அவள் தன் மீது வெறுப்போடு இம்மாதிரி சந்தர்ப்பங்களில் நினைப்பது உண்டு.

## 8

### 3

1811 -ம் வருஷத்தில் மாஸ்கோவில் மெட்டிவியர் என்ற ஒரு பிரஞ்சு டாக்டர் வசித்து வந்தார். வெகு சீக்கிரமாக அவர் அங்கு பிரபலமானார். மிகவும் உயரமாகவும், அழகாகவும், எல்லா பிரஞ்சுக் காரர்களையும்போல சௌஜன்யமாகவும்

இருந்தார். மாஸ்கோ பூராவாகவுமே சொல்லி வந்தபடி, அவர் மிகுந்த புத்திசாலியான டாக்டராய் இருந்தார். மாஸ்கோவிலுள்ள பிரபலஸ்தர்களுடைய வீடுகளில், அவரை டாக்டராக மட்டும் அல்லாமல், சம அந்தஸ்தில் உள்ளவர் என்ற முறையிலும் வரவேற்றார்கள்.

இளவரசர் நிக்கலஸ் மருந்துகளைப்பற்றி எப்போதும் கேலி செய்து வந்தார். ஆனால், குமாரி பௌரியனுடைய ஆலோசனை யின் பேரில், இந்த டாக்டர் தன்னை வந்து பார்ப்பதற்குச் சம்மதித்தார். பின்னால், அவர்கள் இருவரும் பழகிப்போனார்கள். வாரத்திற்கு இரு முறைகள் மெட்டிவியர், இளவரசரைப் பார்க்க வருவார்.

செயின்ட் நிக்கலஸ் திருநாளும், இளவரசரின் பெயர் - தினமுமான டிசம்பர் 6-ம் தேதியன்று, மாஸ்கோவில் உள்ள நண்பர்கள் எல்லாரும், இளவரசரைப் பார்ப்பதற்காக வீட்டிற்கு வந்தார்கள். ஆனால், ஒருவரையும் அனுமதிக்கக்கூடாது என்று இளவரசர் உத்தரவிட்டார். அன்று டின்னருக்குக்கூட, வெகு சொற்பமான பேர்களையே அழைக்க வேண்டுமென்றும், தம்முடைய ஜாபிதாவில் காணப்பட்ட நண்பர்களையே உள்ளே அனுமதிக்க வேண்டுமென்றும், இளவரசி மேரிக்கு உத்தரவு கொடுத்தார். மெட்டிவியர் அன்று காலையில் தமது வாழ்த்துக் களைத் தெரிவிப்பதற்காக வந்தார். டாக்டர்கள் எந்தக் காவலையும் மீறி உள்ளே நுழைவது தவறு அல்ல என்ற கொள்கையை மேற்கொண்டு, இளவரசி மேரியிடம் சொல்லிவிட்டு, இளவரசரைப் பார்ப்பதற்காக உள்ளே போனார். அவருடைய பெயர் தினமாகிய அன்று காலையில், இளவரசர் மிகுந்த மோசமான சுபாவத்தில் இருந்தார். அன்று காலையில் வீடு பூராவாகச் சுற்றி, ஒவ்வொருவரிடமும் குற்றம் கண்டுபிடித்து, அவர்கள்' என்ன சொல்கிறார்கள் என்பதை தாம் அறியாதவர்போல நடித்து, தம்மை அவர்கள் அறிந்துகொள்ளாதது போலவும் நடித்துக்கொண்டிருந்தார். அவருடைய இம்மாதிரியான அடக்கம் கொண்ட, அமைதியான எரிச்சல் குணத்தை இளவரசி மேரி அறிவாள். இந்த சுபாவம், கடைசியில் ஒரு பெரிய கோபமாக வெடிப்பதில் வந்து முடியும். அன்று காலை பூராவாக, அவள் துப்பாக்கி முனைக்கு எதிராக நிற்பதுபோல நடந்துகொண்டு, தவிர்க்க முடியாத அந்த கோப-குண்டு வெடிப்பதை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். டாக்டர் அன்று காலை வருகிற வரையில், எல்லாம் அமைதியாக நடந்து கொண்டிருந்தன. டாக்டரை உள்ளே அனுமதித்த பின்பு, கையில் ஒரு புத்தகத்தை எடுத்து கதவுக்குப் பக்கத்தில் இளவரசி மேரி

வரவேற்பு அறையில் வந்து அமர்ந்தாள். இளவரசருடைய அறையில் நடப்பவைகளையெல்லாம், அங்கிருந்தவாறே அவள் கேட்க முடியும்.

முதலில் அவள் மெட்டிவியரின் குரலைத்தான் கேட்டாள். பின்னால் அவள் தந்தையின் குரல் கேட்டது. அதன் பின்னால் அவர்கள் இருவரும் ஏககாலத்தில் பேச ஆரம்பித்தது கேட்டது. அந்தக் கதவு வேகமாய் திறக்கப்பட்டது. அதன் வாசலில் அந்த அழகான. பீதியுற்ற மெட்டிவியர் அவருடைய கருமையான தலைமுடி கலைந்து காணப்பட்டார். இளவரசர் தம்முடைய உடை-கவுனிலும், தலையில் பெஸ் தொப்பியுடனும் காணப்பட்டார். அவருடைய முகம் கோபத்தினால் சுளித்திருந்தது. அவருடைய கண்களிலுள்ள விழிகள் கீழ் நோக்கிப் பார்த்துக் கொண்டிருந்தன.

'உமக்குப் புரியவில்லையா? ஆனால், எனக்குப் புரிகிறது' என்று இளவரசர் கூச்சலிட்டார். 'நீர் ஒரு பிரஞ்சு ஒற்றர். போனபார்ட்டின் அடிமை. ஒற்றரே, என்னுடைய வீட்டை விட்டு வெளியேபோம். உடனே போம். நான் உமக்குச் சொல்லுகிறேன்...' என்று சொல்லிவிட்டு கதவைத் தடாரென்று அடைந்தார்.

மெட்டிவியர் தம்முடைய தோள்களைக் குலுக்கிக்கொண்டு, குமாரி பௌரியனிடம் சென்றார். அந்தக் கூச்சல் சப்தங்களைக் கேட்டு, பக்கத்து அறையிலிருந்த குமாரி பௌரியன் ஓடி வந்து கொண்டிருந்தாள்.

'இளவரசருக்கு உடம்பு சரியாய் இல்லை. பித்தத்தினாலும், ரத்தம் தலைக்கு ஏறுவதாலும் கஷ்டப்படுகிறார். நீ அமைதியாய் இரு. நாளை மறுபடியும் நான் வருகிறேன்' என்று மெட்டிவியர் சொல்லிவிட்டு, தமது விரல்களை உதடுகளில் வைத்துக்கொண்டு, அவசரமாக வெளியே போனார்.

அந்தப் படிப்பு அறையின் வாசல்வழியாக இளவரசர் நடந்து கொண்டிருக்கும் சப்தமும், 'ஒற்றர்கள்! துரோகிகள்! எங்கும் துரோகிகள்! என்னுடைய வீட்டிலேயே ஒரு வினாடிகூட அமைதியாய் இருக்க என்னால் முடியவில்லை' என்ற கூச்சல்களும் கேட்டுக் கொண்டிருந்தன. மெட்டிவியர் போனபின்பு, வயோதிக இளவரசர், தம்முடைய குமாரியை உள்ளே அழைத்தார். தம்முடைய கோபம் முழுவதையும் அவள் மீது காட்டினார். ஒரு ஒற்றனை உள்ளே விட்ட குற்றத்திற்கு அவள்தான் பொறுப்பு என்று சொன்னார். ஒரு ஜாப் தாவை தயாரிக்கச் சொல்லி, அதில் உள்ளவர்களைத் தவிர, வேறு யாரையும் உள்ளே விடக்கூடாது

என்று தாம் சொல்லவில்லையா என அவளைக் கேட்டார். அப்படியிருக்கும்போது, எதற்காக எந்த அயோக்கியனை உள்ளே அனுமதிக்க வேண்டும்? இவற்றிற்கெல்லாம் அவள்தான் காரணம் என்று சொன்னார். அவள் அங்கு இருக்கிற வரையில் அவரால் ஒரு வினாடிகூட அமைதியாய் இருக்க முடியாதென்றும், அமைதியாக சாக முடியாதென்றும் கூறினார்.

'இல்லை, திருமதியே, நாம் பிரிந்துதான் ஆகவேண்டும். பிரிந்து தான் ஆகவேண்டும். புரிகிறதா? நீ புரிந்துகொள். இனிமேல் என்னால் தாங்க முடியாது' என்று சொல்லிவிட்டு, அந்த அறையை விட்டு வெளியே போனார். தன்னுடைய மன சமாதானத்திற்காக அவள் எதையாவது கண்டுபிடித்துவிடுவாளோ என்று பீதியுற்றது போல மீண்டும் அவர் திரும்பினார். அமைதியாக இருப்பதுபோலக் காணப்பட முயற்சித்துப் பேசினார்: 'ஒரு கோபமான வேளையில் நான் இம்மாதிரி சொன்னதாக நீ நினைக்காதே. நான் அமைதியாய்த்தான் இருக்கிறேன். அதைப்பற்றி யோசித்துப் பார்த்தேன். நான் சொன்னபடி நடந்துதான் ஆகவேண்டும். அதாவது கட்டாயம் நாம் பிரிந்து போக வேண்டும். ஆகவே, நீ போய் இருப்பதற்காக ஒரு இடத்தைக் கண்டுபிடி...' அவரால் தம்மை அடக்கிக்கொள்ள முடியவில்லை. அன்பு கொண்டவர்கள் மட்டுமே காட்டக்கூடிய அவ்வளவு வேகத்தில் அவளைப் பார்த்து தமது முஷ்டியை ஆட்டி கதறினார். அன்பினால் கஷ்டப்படுகிற வரைப் போல தோன்றினார்.

'எந்த முட்டாளாவது உன்னை திருமணம் செய்துகொண்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்!' என்று அவர் கூறிவிட்டு, சடாரென்று கதவைச் சாத்தினார். பின்னால் குமாரி பௌரியனை வரவழைத்து, அமைதியாக தமது படிப்பு அறையில் இருந்தார்.

இரண்டு மணிக்கு அவர்கள் அழைத்திருந்த ஆறு விருந்தாளிகள் டின்னருக்காக வந்து சேர்ந்தார்கள்.

அந்த விருந்தாளிகள் பின்வருமாறு: பிரபலமான கோமகன் ராஸ்டாப் சைன், இளவரசர் லாப்பூகைன், அவருடைய மருமகன், ஜெனரல் சாட்ரோவ், இளவரசரின் பழங்கால யுத்தகளத்து தோழர் ஒருவர், வாலிப தலைமுறையைச் சேர்ந்த பீயர், போரிஸ் ட்ரூ பெட்ஸ்கோய். இவர்கள் எல்லோரும் வரவேற்பு அறையில் இளவரசருக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள்.

சில தினங்களுக்கு முன்புதான் ரஜாவில் மாஸ்கோவிற்கு போரிஸ் வந்தார். இளவரசர் நிக்கலஸ் பால்கோன்ஸ்கியைச் சந்திக்க வேண்டுமென்று அவர் மிகுந்த ஆவலோடு இருந்தார். வயோதிக

இளவரசரை நயப்பத்திக்கொள்ள தந்திரமாய் முயற்சி செய்தார். அதன் பலனாக தமது வீட்டிற்குள் பிரம்மச்சாரிகள் வரக்கூடாது என்ற நிபந்தனையை, இவருக்காக வயோதிக இளவரசர் தளர்த்தினார்.

நாகரிக உயர் வட்டாரம் என்று சொல்லக்கூடிய வகையில் இளவரசரின் வீடு சேர்ந்தது அல்ல. அவருடைய சிறிய கோஷ்டி-அதைப்பற்றி பட்டணத்தில் அதிகம் பேர் சிரத்தை கொள்ளுவதில்லை என்றாலும் - ஒரு வகையில் பிரசித்தமானது. அதாவது, அந்த கோஷ்டிக்குள் யாராவது அழைக்கப்படுவதாய் இருந்தால், அதை மிகவும் பெருமையாகக் கருதுவார்கள். முந்தைய வாரத்திலேயே இதை போரிஸ் உணர்ந்து கொண்டார். சேனாதிபதியிடம் இவர் பிரசன்னமாயிருந்த காலத்தில், அந்த சேனாதிபதி ராஸ்டாப் சைனை செயின்ட் நிக்கலஸ் திருநாள் டின்னருக்காக அழைத்தார். தம்மால் வர முடியாது என்று அவர் பதில் அளித்தார். அவர் சொன்னார்:

'அந்த தினத்தில் நான் எப்பொழுதும், அந்த வயோதிக இளவரசர் பால்கோன்ஸ்கியிடம் சென்று, அவருடைய பழங்கால சேவைகளுக்காக மரியாதை செலுத்துவது வழக்கம்.'

'ஓ, ஆமாம், ஆமாம். அவர் எப்படி இருக்கிறார்...' என்று சேனாதிபதி கேட்டார்.

பழங்கால மோஸ்தரில் அமைந்த அந்த கம்பீரமான வரவேற்பு அறையில், அந்த சிறிய கோஷ்டி டின்னருக்கு முன்பாக கூடியிருந்தது. அங்கிருந்த பழங்கால நாற்காலி மேஜைகளைப் பார்த்தபோது, ஒரு நீதிபதியின் கோர்ட்டில் கூடியிருக்கும் பவித்திரமான கோஷ்டியைப்போல அது தோன்றியது. அங்கிருந்தவர்கள் மௌனமாகவோ, அல்லது தணிந்த குரலில் பேசிக்கொண்டோ இருந்தார்கள். இளவரசர் நிக்கலஸ் உள்ளே வந்தார். கலகலப்பு இல்லாதவராகவும், பேசாமடந்தையாகவும் காணப்பட்டார். இளவரசி மேரி வழக்கத்திற்கு அதிகமாக, அமைதியுடனும் கூச்சத்துடனும் காணப்பட்டாள். அவளிடம் பேசுவதற்கு விருந்தாளிகள் தயங்கினார்கள். ஏனெனில், உரையாடலில் கலந்துகொள்ளும் சுபாவத்தில் அவள் இருப்பதாகத் தோன்றவில்லை. கோமகன் ராஸ்டாப் சைன் மட்டும் பேசிக்கொண்டே இருந்தார். பட்டணத்துச் செய்திகளைப் பற்றியும் அரசியல் சரடுகளைப் பற்றியும் அவர் சொல்லிக்கொண்டிருந்தார்.

லாப்பூகைனும் வயோதிக ஜெனரலும் இடையிடையே உரையாடல்களில் கலந்துகொண்டார்கள். தம்மிடம் சொல்லும்

விஷயங்களை கவனித்துக்கொண்டிருக்கும் ஒரு நீதிபதியைப் போல, இளவரசர் பால்கோன்ஸ்கி கவனித்துக் கேட்டுக் கொண்டிருந்தார். தம்மிடம் சொல்லுபவைகளை தாம் கவனித்துக் கேட்டுக்கொண்டிருப்பதாகக் காட்டுவதற்காக, இடையிடையே ஒவ்வொரு வார்த்தை சொல்லிக் கொண்டிருந்தார். அரசியல் உலகத்தில் செய்யப்படுகிறவைகளை, அங்கிருந்தவர்களில் ஒருவரும் ஆதரிக்கவில்லை என்பதைப்போல, அந்த உரையாடலின் போக்கு இருந்தது. எல்லா காரியங்களும், மோசத்திலிருந்து படுமோசத்திற்குப் போவதாக உள்ள கருத்தை ஆதரிப்பதற்காக, பல சம்பவங்கள் எடுத்துக் காட்டப்பட்டன. குற்றம் குறை சொல்லிக்கொண்டிருக்கும்போது, சக்கரவர்த்தியை தொடுவதாயுள்ள விஷயத்திற்கு வந்தால், பேசுகிறவர் உடனே நிறுத்திக்கொள்ளுவார்; அல்லது அவர் நிறுத்தப்படுவார்.

டின்னர் நடந்துகொண்டிருந்தபோது, கடைசியாக நடந்த அரசியல் செய்திகளைப்பற்றி பேச்சுகள் திரும்பின. ஓல்டன்பர்க் ட்யூக்கின் பிரதேசங்களை நெப்போலியன் கைப்பற்றியதைப் பற்றியும், நெப்போலியனுக்கு விரோதமாக ருஷ்யா அனுப்பிய குறிப்பைப் பற்றியும், அந்தக் குறிப்பின் பிரதிகளை ஐரோப்பாவில் உள்ள சகல ராஜாங்கங்களுக்கும் அனுப்பியதையும் பற்றியும் பேச்சுகள் நடந்தன.

'ஒரு கொள்ளைக்காரன் ஒரு கப்பலைப் பிடித்தால் எப்படி நடந்துகொள்ளுவானோ, அதே மாதிரி ஐரோப்பாவை போனபார்ட் நடத்துகிறார்' என்று கோமகன் ராஸ்டாப் சைன், முன்னால் பல தடவைகளில் பல இடங்களில் பேசிய அதே வாக்கியத்தை மீண்டும் சொன்னார். 'முடி சூட்டிய மன்னர்களின் நீண்ட கால கஷ்டங் களையோ அல்லது குருட்டுத்தனத்தையோ கண்டு எல்லோரும் ஆச்சரியப்படுகிறார்கள். இப்போது போப்பின் முறை வந்திருக்கிறது. கத்தோலிக்கப் பிரிவினரின் தலைவரான அந்த போப்பை, பதவியிலிருந்து இறக்குவதற்காக கொஞ்சங்கூட அவர் தயங்கவில்லையென்றாலும், எல்லாரும் மௌனமாய் இருக்கிறார்கள். ஓல்டன்பர்க் ட்யூக்கின் பிரதேசங்களைக் கைப்பற்றிக் கொண்டதை, நமது சக்கரவர்த்தி ஒருவர்தான் கண்டித்திருக்கிறார்...' அந்த இடத்தில் கோமகன் ராஸ்டாப் சைன் கொஞ்சம் நிறுத்தினார். அதாவது, இதற்கு மேலாகக் கண்டனம் செய்வது சாத்தியமில்லை என்பதை உணர்ந்தவராகவும், தமது பேச்சின் எல்லைக்கு வந்துவிட்டதாகவும் உணர்ந்து அவர் பேச்சை நிறுத்தினார்.

‘ஓல்டன்பர்க் ட்யூக்கின் பிரதேசங்களுக்குப் பதிலாக, வேறு பிரதேசங்கள் கொடுப்பதாக சொல்லப்பட்டது’ என்று இளவரசர் பால்கோன்ஸ்கி சொன்னார். ‘நான் என்னுடைய அடிமைகளை எப்படி பால்டு ஹில்ஸ் என்ற இடத்திலிருந்து, பாகுசாரவா என்ற இடத்திற்கோ, அல்லது ரயாஜான் எஸ்டேட்டுகளுக்கோ மாற்றுகிறேனோ, அதேமாதிரி ட்யூக்குகளை நெப்போலியன் மாற்றுகிறார்.’

‘ஓல்டன்பர்க் என்பவர் மிகுந்த ஒழுக்க பலத்துடனும், சகிப்புத் தன்மையுடனும் தமக்கு ஏற்பட்ட துரதிஷ்டங்களை சகித்து வருகிறார்’ என்று மரியாதையோடு அந்த உரையாடலில் கலந்து கொண்டு போரிஸ் கூறினார்.

அவர் பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து புறப்பட்டு வந்துகொண்டிருந்த போது, அந்த ட்யூக்கிடம் அவர் அறிமுகப்படுத்தப்பட்ட கௌரவத்தை அடைந்த படியால் இம்மாதிரி பேசினார். ஏதோ அதற்குப் பதில் சொல்லுவதற்கு நினைப்பவரைப்போல, இளவரசர் பால்கோன்ஸ்கி அந்த வாலிபரைப் பார்த்தார். ஆனால், தமது மனதை மாற்றிக்கொண்டு அவர் மிகவும் வாலிபராய் இருக்கிறார் என்ற எண்ணத்தினால் சும்மா இருந்துவிட்டார்.

‘ஓல்டன்பர்க் விவகாரத்தைப்பற்றி நமது கண்டத்தை நான் வாசித்துப் பார்த்தேன். ‘அந்தக் குறிப்பில் உள்ள வாசகம் அவ்வளவு மோசமாய் அமைக்கப்பட்டிருந்ததைக் கண்டு நான் ஆச்சரியப் பட்டேன்’ என்று கோமகன் ராஸ்டாப் சைன் ஏதோ தற்செயலாய் சொல்பவரைப்போல, இந்த விஷயங்களை முற்றிலும் அறிந்த ஒருவர் பேசுவதைப் போல பேசினார்.

கபடமில்லாத ஆச்சரியத்தோடு, ராஸ்டாப் சைனை பீயர் நோக்கினார். குறிப்பிலுள்ள வாசகம் மோசமாய் இருந்தால், அதற்காக ஏன் கவலைகொள்ள வேண்டுமென்பதை அவர் உணர்ந்து கொள்ள முடியாதவரைப்போலத் தோன்றினார்.

‘அது என்ன, அவ்வளவு முக்கியமா, கோமகனே? அந்தக் குறிப்பு வாசகம் எப்படி இருந்தால் என்ன? அதிலுள்ள கருத்து வேகமானதாய் இருந்தால், அது ஒன்றே போதும்’ என்று அவர் பேசினார்.

‘எனது அன்புள்ள வாலிபரே, நம்மிடம் ஐந்து லட்சம் வீரர்கள் இருக்கும்போது, ஒரு அருமையான வாசகத்தில் குறிப்பு எழுதுவது சுலபமான காரியம்’ என்று கோமகன் ராஸ்டாப் சைன் பதில் சொன்னார்.

அந்தக் குறிப்பின் வாசகத்தைப்பற்றி. கோமகன் அதிருப்தி யடைந்ததை பீயர் புரிந்துகொண்டார்.

'பேனாவை ஓட்டுகிறவர்கள் ஏராளமாய் தோன்றியிருக்கிறார்கள் என்பதை நினைக்க வேண்டியிருக்கிறது' என்று வயோதிகக் கோமகன் கூறினார். 'பீட்டர்ஸ்பர்க்கில் அவர்கள் எப்போதும் எழுதிக்கொண்டே யிருக்கிறார்கள். குறிப்புகள் மட்டுமல்ல, புதிய சட்டங்களைக்கூட எழுதிக்கொண்டிருக்கிறார்கள். என்னுடைய ஆண்ட்ரூ, ருஷ்யாவுக்கு வேண்டிய சட்டங்களைப்பற்றி ஒரு முழு புத்தகத்தை எழுதினார். இந்தக் காலத்தில் அவர்கள் எல்லோரும் எழுதிக்கொண்டே இருக்கிறார்கள்' என்று அவர் சொல்லி, ஒரு சிரிப்பற்ற சிரிப்பைச் சிரித்தார். இந்தச் உரையாடல்களில் சிறிது தயக்கம் ஏற்பட்டது. ஆனால், அந்த வயோதிக ஜெனரல், தமது தொண்டையைக் கனைத்துக்கொண்டு அங்கிருந்தவர்கள் கவனத்தை இழுத்தார்.

'பீட்டர்ஸ்பர்க்கில் நடந்த படை அணிவகுப்பில் ஏற்பட்ட ஒரு சம்பவத்தைப்பற்றி நீர் கேள்விப்பட்டீரா? அந்த புதிய பிரஞ்சு ஸ்தானாதிபதி எப்படி நடந்துகொண்டார் என்பது தெரியுமா?'

'ஹே, ஆமாம், நான் கொஞ்சம் கேள்விப்பட்டேன். மாட்சிமை தங்கியவரின் முன்னிலையில், அவர் ஏதோ சில அசந்தர்ப்பமான வார்த்தைகள் பேசினார் என்று கேள்விப்பட்டேன்.'

'கைக் குண்டுடிவிஷனைச் சுட்டிக்காட்டி துருப்புகள் வணக்கம் செய்யும்போது, மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தி அவரிடம் பேசினார். ஆனால் அந்த ஸ்தானாதிபதி அதைக் கொஞ்சம்கூட லட்சியம் செய்யாமல், 'பிரான்ஸில் நாங்கள் இம்மாதிரி சிறு விஷயங்களைப் பற்றிக் கவனிப்பதே இல்லை' என்று பதில் கூறினார். இதற்கு பதில் சொல்ல சக்கரவர்த்தி விரும்பவில்லை. அடுத்த படை அணிவகுப்பில் அந்த ஸ்தானாதிபதியிடம் சக்கரவர்த்தி பேசுவதற்கு விரும்பவில்லை என்று அந்த ஜெனரல் சொன்னார்.

எல்லாம் மௌனமாய் இருந்தார்கள். சக்கரவர்த்தியைப் பொறுத்ததாக இந்த விஷயம் இருந்தபடியால், இதன் மீது குணதோஷம் கூற யாராலும் முடியாது.

'அகம்பாவம் பிடித்த பேர்வழிகள்' என்று இளவரசர் சொன்னார். 'மெட்டிவியரை உமக்குத் தெரியுமல்லவா? என்னுடைய வீட்டிலிருந்து இன்று காலை அவரை வெளியே துரத்தினேன். அவர் இங்கே வந்திருந்தார். நான் ஒருவரையும் உள்ளே வரவிட வேண்டாமென்று சொல்லியிருந்தும், அவரை உள்ளே விட்டு விட்டார்கள்' என்று கூறி தமது குமாரியை கோபமாகப் பார்த்தார்.

அந்த பிரஞ்சு டாக்டருடன் அவர் செய்த முழு உரையாடல்களையும் விவரித்தார். அந்த மெட்டிவியர் என்பவர், ஒரு ஒற்றர் என்பதற்கான காரணங்களை அவர் எடுத்துச் சொன்னார். இந்தக் காரணங்கள் போதுமானவையாக இல்லை. தெளிவற்றவையாக இருந்தன. இருந்தபோதிலும் அவற்றை ஒருவரும் மறுத்துப் பேசவில்லை.

வறுத்த மாமிசம் சாப்பிட்ட பின்பு ஷாம்பைன் பறிமாறினார்கள். விருந்தாளிகள் எழுந்து வயோதிக இளவரசரைப் பாராட்டினார்கள். இளவரசி மேரியும் அவரிடம் போனாள்.

இளவரசி மேரியை அவர் ஒரு கடுமையான, கோபமான பார்வையோடு பார்த்து நன்றாய் க்ஷவரம் செய்யப்பட்ட சுருக்கம் விழுந்த கன்னத்தை முத்தமிடுவதற்காகக் காட்டினார். அன்று காலையில் நடந்த கம்பாஷணை களை அவர் மறந்து விடவில்லை யென்பதையும் அவருடைய தீர்மானம் இன்னம் அமுலில்தான் இருக்கிறது என்பதையும், மற்ற விருந்தாளிகள் அங்கே இருப்பதாக அவளிடம் அவர் அச்சமயம் அதைப்பற்றி பேசுவதற்கு இல்லையென்பதையும், அவருடைய முகத்தில் காணப்பட்ட தோற்றங்கள் சொல்லின.

அவர்கள் எல்லோரும் வரவேற்பு அறைக்குள் போனார்கள். அங்கே காபி பரிமாறப்பட்டது. வயோதிகர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து அமர்ந்திருந்தனர்.

வரப்போகிற யுத்தத்தைப்பற்றி மிகுந்த ' உணர்ச்சியோடு இளவரசர் நிக்கலஸ் தமது கருத்துக்களைத் தெரிவித்தார்.

'நாம் ஜெர்மனியருடன் கூட்டுறவு சேருவதற்கு முயற்சிக்கிற வரையில், ஐரோப்பிய விவகாரங்களில் நாம் தலையிடுகிற வரையில், நெப்போலியனுடன் நாம் நடத்தும் யுத்தங்கள் நமக்கு பிரமாதமான கெடுதல்களாகவே வந்து முடியும். டில்ஸிட்டில் நடந்த சமாதான ஒப்பந்தப்படி ஐரோப்பிய விவகாரங்களில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறோம். ஆஸ்திரியாவுக்குச் சாதகமாகவோ அல்லது பாதகமாகவோ நாம் யுத்தம் செய்யக்கூடாது. நம்முடைய அரசியல் விவகாரங்கள் எல்லாம் கிழக்கேதான் இருக்கின்றன. போனபார்ட்டைப் பொறுத்த வரையில் எல்லைகளை ராணுவத்தினால் காப்பாற்றி ஒரு உறுதியான கொள்கையை நாம் மேற்கொண்டோமானால் அதாவது 1807-ம் வருஷத்தில் நடந்ததைப் போல, அவர் எப்போதும் ருஷ்ய எல்லையை கடப்பதற்குத் துணியமாட்டார்.'

'அதாவது நாம் எப்படி பிரஞ்சுக்காரர்களுடன் யுத்தம் செய்ய முடியும் இளவரசே?' என்று கோமகன் ராஸ்டாப் சைன் என்பவர் கேட்டார். 'நாம் நம்முடைய வாத்தியார்களுக்கும் குருக்களுக்கும் விரோதமாக யுத்தம் செய்வதா? இதோ நமது இளையவர்களைப் பாருங்கள். நமது சீமாட்டிகளைப் பாருங்கள். நமக்கு பிரஞ்சுக் காரர்கள்தான் கடவுளாக இருக்கிறார்கள். பாரிஸ்தான் நமக்கு மோக்ஷலோகமாக இருக்கிறது.'

அவர் சப்தமிட்டு பேச ஆரம்பித்தார். ஒவ்வொருவருக்கும் கேட்கவேண்டுமென்பது அவர் நினைப்பாய் இருந்தது.

'பிரஞ்சு உடைகள், பிரஞ்சு கருத்துகள், பிரஞ்சு உணர்ச்சிகள்! இப்போது நீர் மெட்டிவியரைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளினீர். ஏனென்றால் அவன் ஒரு பிரஞ்சுக்காரனாகவும், அயோக்யனாகவும் இருந்ததற்காகச் செய்தீர். ஆனால், நமது சீமாட்டிகள் எல்லாரும் தங்களுடைய முழங்கால்களால் அவரிடம் ஊர்ந்து சென்று கொண்டிருக்கிறார்கள். நேற்று இரவு ஒரு கச்சேரிக்குப் போயிருந்தேன். அங்கிருந்த 5 சீமாட்டிகளில் மூன்று பேர் ரோமன் கத்தோலிக்கர்கள். ஞாயிற்றுக்கிழமைகளில் கூட பின்னல் வேலைகளை அவர்கள் செய்து கொண்டிருக்கலாம் என்று போப்பாண்டவர் அவர்களுக்கு அனுமதி கொடுத்திருக்கிறாராம். அவர்கள் அங்கே அநேகமாய் நிர்வாணமாய் இருந்தார்கள். அதாவது பொது ஸ்நான அறைகளுக்கு வெளியே போடப்பட்ட விளம்பரப் பலகையில் காணப்படும் சித்திரங்கள் மாதிரி காணப்பட்டார்கள். அங்கு இளையவர்களைப் பார்க்கும்போது அந்த மியூஸியத்தில் உள்ள மகா பெரிய பீட்டரின் தண்டத்தை எடுத்து அதைக்கொண்டு அவர்களை ருஷ்ய வழியில் உதைக்கலாம் என்று தோன்றுகிறது. அதாவது அவர்கள் உள்ளத்திலிருந்து அசட்டுத்தனங்கள் வெளியே வருகிறவரையில் உதைக்க வேண்டும்.'

எல்லோரும் மௌனமாய் இருந்தார்கள். வயோதிக இளவரசர் ஒரு புன்முறுவலோடு ராஸ்டாப் சைனைப் பார்த்து அவர் சொல்வதை ஆதரிப்பதாகத் தலையை ஆட்டினார்.

'நல்லது போய் வருகிறேன். மேன்மை தங்கியவரே. சௌக்யமாக இருங்கள்' என்று ராஸ்டாப் சைன் சொல்லி சுறு சுறுப்போடு எழுந்து இளவரசரைப் பார்த்து தன்னடைய கையை நீட்டினார்.

'போய் வாரும் எனது அன்புள்ள நண்பரே... அவருடைய வார்த்தைகள் சங்கீதத்தைப்போல இருக்கின்றன. அவர் பேசுவதைக் கேட்பதற்கு நான் எப்போதும் சலிப்புக் கொள்வதில்லை' என்று

அந்தக் கையைப் பற்றிக்கொண்டு முத்தம் இடுவதற்காக தன்னுடைய கன்னத்தைக் காட்டி வயோதிக இளவரசர் சொன்னார்.

'ராஸ்டாப் சைனைப் பின்பற்றி மற்றவர்களும் எழுந்தார்கள்.



இந்த வயதானவர்களின் பேச்சுகளையும் குற்றம் கண்டு பிடிப்பதையும் கவனித்துக் கேட்டுக்கொண்டு, ஆனால் தான் கேட்டவைகளில் எதுவும் புரியாமல், இளவரசி மேரி அமர்ந்திருந்தாள். அவளுடைய தந்தை அவளிடம் விரோத பாவம் கொண்டிருப்பதைப் போல, அங்கிருந்த மற்ற விருந்தாளிகளும் அவளிடம் விரோதம் கொண்டிருக்கிறார்களா என்று அவள் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தாள். போரிஸ் ட்ரூபெட்ஸ்கோய் என்பவர் டின்னருக்கிடையில் அவளிடம் விசேஷ பரிவுகளையும், சௌஜன்யங்களையும் காட்டி வந்ததை அவள் கவனிக்கவில்லை. அவர் அவர்களைச் சந்திப்பது இது மூன்றாவது தடவையாகும்.

பராக்குப் புத்தியான கேள்விக் குறியோடு இளவரசி மேரி பீயரைப் பார்த்தாள். அவர் தமது கையில் தொப்பியை வைத்துக் கொண்டு, முகத்தில் புன்னகை காட்டி, அங்கு வந்திருந்த விருந்தாளிகளில் கடைசியாக அவளிடம் வந்தார். வயோதிக இளவரசர் முன்பே அங்கிருந்து போய்விட்டார். அவர்கள் இருவரும் வரவேற்பு அறையில் தனியாய் இருந்தார்கள்.

'நான் இன்னும் சிறிது நேரம் அதிகமாகத் தங்கலாமா?' என்று தம்முடைய பருத்த உடலோடு ஒரு சாய்வு நாற்காலியில் அவளுக்குப் பக்கத்தில் அமர்ந்து, அவர் கேட்டார்.

'ஓ, ஆமாம்' என்று சொன்னாள். 'உமக்கு எதுவுமே தெரியவில்லையா?' என்று அவளுடைய பார்வை கேட்டது.

டின்னருக்குப் பின்னால், மிகுந்த சௌஜன்யமான போக்கில் பீயர் இருந்தார். தமக்கு முன்பாக நேராகப் பார்த்துக்கொண்டு, அமைதியோடு புன்முறுவல் கொண்டிருந்தார்.

'அந்த வாலிபரை உனக்கு வெகுநாளாகத் தெரியுமா, இளவரசியே?'என்று அவர் கேட்டார்.

'யார்?'

'ட்ரூபெட்ஸ்கோய்'

'இல்லை, வெகு காலமாக எனக்குத் தெரியாது...'

'உனக்கு அவரைப் பிடிக்கிறதா?'

'ஆமாம், அவர் ஒரு இணக்கமான வாலிபர்... நீர் எதற்காக என்னிடம் அதைக் கேட்கிறீர்?' என்று இளவரசி மேரி சொன்னாள். இன்னமும் அன்று காலையில் அவளுடைய தந்தை அவளிடம் பேசியதைப்பற்றியே சிந்தித்துக்கொண்டிருந்தாள்.

'ஏனென்றால், பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து ஒரு வாலிபர் விடுமுறையில் மாஸ்கோவுக்கு வருவதாக இருந்தால், அநேகமாக ஒரு பணக்காரியைக் கல்யாணம் செய்து கொள்ளும் நோக்கத்துடனேயே வருவார் என்பதை நான் கவனித்து இருக்கிறேன்.'

'நீர் அதைக் கவனித்திருக்கிறீரா?' என்றார் இளவரசி மேரி.

'ஆமாம்' என்றார், புன்முறுவலோடு பீயர். எங்கே ஒரு பணக்காரி இருக்கிறாளோ, அங்கே தாமும் இருக்கிற விதத்தில் இந்த வாலிபர் காரியங்களை செய்து கொள்கிறார். ஒரு புத்தகத்தை வாசிப்பதைப்போல, அவருடைய் 'உள்ளத்தை நான் வாசிக்க முடியும். இப்போது அவர் எந்தக் கோட்டையை முற்றுகை போடுவது என்பதைப் பற்றி, அதாவது உன்னையா, அல்லது ஜூலி காராகினாவையா என்பதில், முடிவுக்கு வராமல் தயங்கிக் கொண்டிருக்கிறார். அவளிடம் மிகுந்த பரிவு காட்டிக்கொண்டு இருக்கிறார்.

'அங்கேயும் அவர் போகிறாரா?'

'ஆமாம்; அடிக்கடி போகிறார். காதல் செய்வதற்கு இப்போது ஒரு புது வழி ஏற்பட்டிருக்கிறதே, அது உனக்குத் தெரியுமா?' என்று பீயர், ஒரு வேடிக்கையான புன்முறுவலுடன் கேட்டார். உல்லாசமாய் பரிகாசம் செய்யக்கூடிய, ஒரு மகிழ்ச்சியான சுபாவத்தோடு அவர் காணப்பட்டார். இந்த சுபாவத்தைப் பற்றி, தமது நாள் குறிப்பில், தம்மையே கண்டித்து அவர் எழுதுவது உண்டு.

'இல்லை' என்று இளவரசி மேரி சொன்னாள்.

'மாஸ்கோ பெண்களை, இந்தக் காலத்தில் திருப்தி செய்ய வேண்டுமானால், ஒருவர் மிகுந்த சோகத்தோடு காணப்பட வேண்டும். இந்தப் பேர் வழி, குமாரி காராகினாவுடன் இப்போது மிகுந்த சோகத் தோற்றத்துடன் காணப்படுகிறார்' என்று அவர் சொன்னார்.

''உண்மையாகவா?' என்று இளவரசி மேரி கேட்டு, பீயரின் அன்பான முகத்தை உற்றுப் பார்த்து, தன்னுடைய சொந்த துக்கத்தைப் பற்றி 'இன்னமும் நினைத்துக்கொண்டிருந்தாள். 'என்

உள்ளத்தில் உள்ள உணர்ச்சியை இன்னொருவரிடம் சொல்லத் துணிந்தால், எனக்கு பாரம் குறைந்தது மாதிரி இருக்கும். இந்தப் பீயரிடம் எல்லா விஷயங்களையும் சொல்லிவிடுவதற்கு நான் விரும்புகிறேன். அவர் அன்பாகவும், பெரும் மனம் படைத்தவராகவும் இருக்கிறார். எனக்கு பெரும் நிம்மதியாய் இருக்கும். அவர் எனக்குச் சரியான புத்திமதி கூறலாம்' என்று நினைத்தாள்.

'நீ அவரை கல்யாணம் செய்து கொள்வாயா?'

'ஓ, எனது கடவுளே, நான் ஒருவரையுமே திருமணம் செய்ய வேண்டாம் என்று நினைக்கிற நேரமும் உண்டு, கோமகனே' என்று அவள் திடீரென்று கதறினாள். அவளுடைய குரலில் கண்ணீர் நிறைந்திருந்தது. அம்மாதிரி பேசியது அவளுக்கே ஆச்சரியமாய் இருந்தது. 'பக்கத்தில் இருக்கிற ஒருவர் மீது அன்புகொண்டு, அதன் பின்னால்... (அவளுடைய குரல் அச்சமயத்தில் நடுங்கியது) அவருக்கு எந்த விதமான உதவியையும் செய்ய முடியாமல், அவரைத் துன்புறுத்தத்தான் முடியும் என்றும், அந்த குணத்தை மாற்ற முடியாது என்றும் ஒருவருக்குத் தெரியுமானால், அது எவ்வளவு மனக்கசப்பாய் இருக்கும்! அதன் பின்னால் அதை விட்டு விலகுவதற்கு, ஒரே ஒரு வழிதான் உண்டு. அதாவது, எங்கேயாவது போவது. ஆனால் நான் எங்கே போக முடியும்?'

'இப்போது என்ன தவறு ஏற்பட்டுவிட்டது? என்ன விஷயம், இளவரசியே?'

தான் சொல்லி வந்ததை முடிக்காமல் இளவரசி மேரி அழ ஆரம்பித்தாள்.

'இன்று என்னை, என்ன பிடித்துக் கொண்டிருப்பது என்பது எனக்குத் தெரியாது. இதைப்பற்றி நீர் ஒன்றும் கவலைப்பட வேண்டாம். நான் சொன்னவைகளையெல்லாம் மறந்துவிடும்'.

பீயரின் மகிழ்ச்சி பூராவாக மறைந்தது. அவர் மிகுந்த ஆவலோடு இளவரசியை கேள்விகள் கேட்டார். பூராவாக விஷயத்தைச் சொல்லி அவளுடைய துக்கத்தை தம்மிடம் வெளிப்படுத்தும்படி அவளைக் கேட்டார். ஆனால், தான் சொன்னதை மறந்துவிட வேண்டுமென்று அவள் அவரைத் திரும்பத் திரும்பக் கெஞ்சினாள். அவள் முதலில் என்ன சொன்னாள் என்பதை அவளால் ஞாபகப்படுத்திக் கொள்ள முடியவில்லை என்றும், ஒரே ஒரு விஷயத்தைத் தவிர, வேறு அவளுக்கு கஷ்டமே இல்லை என்றும் சொன்னாள். அதாவது, இளவரசர் ஆண்ட்ரூவின் திருமணத்தினால்,

தந்தைக்கும் குமாரருக்கும் இடையில், ஒரு சச்சரவு ஏற்படும் என்று கவலைப்படுவதாகச் சொன்னாள்.

'ராஸ்டோவ்களைப் பற்றி இதுவரை உமக்கு ஏதாவது செய்திகள் உண்டா?' என்று அந்தப் பேச்சை மாற்றுவதற்காக அவள் கேட்டாள். 'இங்கே சீக்கிரம் அவர்கள் வரப் போவதாகக் கேள்விப்பட்டேன். ஆண்ட்ரூ கூட எந்த நேரத்திலும் இங்கே வரலாம் என்று நான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். அவர்கள் இருவரும் இங்கே சந்திப்பதற்கு நான் விரும்புகிறேன்.'

'இப்போது அவர் இந்த விஷயத்தைப் பற்றி என்ன நினைக்கிறார்? என்று வயோதிக இளவரசரைக் குறிப்பிட்டு, பீயர் கேட்டார்.

இளவரசி மேரி தனது தலையை ஆட்டினாள்.

'இப்போது என்ன செய்வது? இன்னும் சில மாதங்களில் இந்த வருஷம் முடிந்துவிடும். ஆகவே இது நடக்காத காரியம். முதல் சந்திப்பில் என்னுடைய சகோதரருக்கும் ஏற்படக்கூடிய கஷ்டங்கள் ஏற்படாமல் இருக்க வேண்டுமே என்று நான் விரும்புகிறேன். அவர்கள் சீக்கிரமாக வரவேண்டும் என்று நான் விரும்புகிறேன். அவளோடு நான் சிநேகமாய் இருக்கலாமென்று நம்புகிறேன். உமக்கு அ பர்களைப்பற்றி வெகுகாலமாகத் தெரியும். ஆகவே, முழு உண்மையையும், நீர் எனக்கு நாணயமாய் சொல்ல வேண்டும். பெண் எப்பேர்ப்பட்டவள், அவளைப்பற்றி நீர் என்ன நினைக்கிறீர்? அசல் உண்மையை நீர் சொல்லவேண்டும். ஏனெனில், தமது தந்தையின் விருப்பத்திற்கு விரோதமாக, ஆண்ட்ரூ இந்த திருமணத்தைச் செய்வதினால் மிகுந்த கஷ்டங்களுக்கு உள்ளாகலாம்...' என்று இளவரசி மேரி சொன்னாள்.

இன்னனது என்று குறிப்பிட முடியாத ஒரு உள்ளுணர்வு, பீயருக்கு ஒரு விஷயத்தைச் சொல்லியது. அதாவது, இம்மாதிரி கேள்விகளையும், 'முழு உண்மை'யையும் சொல்ல வேண்டுமென்ற வேண்டுகோள்களையும் பார்த்தால், தனது எதிர்கால மைத்தினியிடம் இளவரசி மேரிக்கு நல்ல அபிப்பிராயம் இல்லை என்பது அவருக்குத் தோன்றியது. அதோடு ஆண்ட்ரூவின் விருப்பத்தை பீயர் எதிர்க்க வேண்டுமென்று அவள் நினைப்பதாகவும் தோன்றியது. ஆகவே, அவர் தாம் சிந்தித்துக்கொண்டிருந்ததை சொல்லாமல், தாம் மனத்தில் உணர்ந்ததைச் சொன்னார்.

'உமது கேள்விக்கு எம்மாதிரி பதில் சொல்லுவது என்று எனக்குத் தெரியவில்லை' என்று அவர் மிகுந்த வெட்கத்தோடு கூறினார்.

அதன் காரணத்தை அவர் அறியவில்லை. 'அந்தப் பெண் எப்பேர்ப்பட்டவள் என்பது உண்மையிலேயே எனக்குத் தெரியாது. அவளைப் பரிசீலனை செய்து பார்க்க என்னால் முடியாது. அவள் மிகுந்த மனோகரமானவள். என்ன காரணத்தினால், அவள் மனோகரமாய் இருக்கிறாள் என்பது எனக்குத் தெரியாது. அவளைப்பற்றி ஒருவரால் அவ்வளவுதான் சொல்ல முடியும்'.

இளவரசி மேரி பெருச்சு விட்டாள். அவளுடைய முகத்தில் காணப்பட்ட தோற்றம் 'ஆமாம், நானும் அதைத்தான் எதிர் பார்த்து பயந்து கொண்டிருந்தேன்' என்று சொல்வதைப்போல இருந்தது.

'அவள் கெட்டிக்காரிதானா?' என்று கேட்டாள்.

பீயர் யோசனை செய்தார்.

'நான் அப்படி நினைக்கவில்லை என்றாலும்-ஆமாம், அவள் கெட்டிக் காரியாய் இருக்க வேண்டுமென்பதற்கு முயற்சி செய்வதில்லை... ஓ, இல்லை, அவள் மிகுந்த மனோகரமாய் இருக்கிறாள். அவ்வளவுதான்.'

இளவரசி மீண்டும் தனது அதிருப்தியைக் காட்டுகிற மாதிரி தலையை ஆட்டினாள்.

'ஆ, அவள் மீது பிரியம்கொள்ள நான் ஏங்கிக் கொண்டிருக்கிறேன். நான் அவளைப் பார்ப்பதற்கு முன்னால், நீர் அவளைப் பார்ப்பதாயிருந்தால், இதை அவளிடம் சொல்லும்'.

'அவர்கள் வெகு சீக்கிரம் இங்கே வரப்போவதாக நான் கேள்விப் படுகிறேன்' என்று பீயர் சொன்னார்.

ராஸ்டோவ்கள் மாஸ்கோவுக்கு வந்ததும், தனது எதிர்கால மைத்துனியுடன் அன்னியோன்னியமாகப் பழகுவதற்கு, தான் விரும்பிக் கொண்டிருப்பதையும், வயோதிக இளவரசருடன் அவளுக்கு பழக்கம் ஏற்படுத்திவைக்க தான் விரும்புவதையும் பீயரிடம் இளவரசி மேரி சொன்னாள்.




பீட்டர்ஸ்பர்க்கில் ஒரு பணக்காரப் பெண்ணை திருமணம் செய்து கொள்ளும் முயற்சியில் போரிஸ் வெற்றி பெற வில்லை. ஆகவே, அந்த நோக்கத்தோடு மாஸ்கோவிற்கு வந்தார். அங்கே இரண்டு பணக்காரப் பெண்களான ஜூலியும் இளவரசி மேரியும் இருந்தார்கள். அவர்களில் யாரை திருமணம்

செய்துகொள்வது என்பதில் தயங்கிக் கொண்டிருந்தார். இளவரசி மேரி அழகில்லாமல் இருந்தாலும், ஜூலியைவிட கவர்ச்சிகரமாய் இருந்தாள். ஆனால் இளவரசி மேரியிடம் காதல் பேச்சுகள் பேச அவருக்குத் தைரியம் வரவில்லை. அதற்குக் காரணம் என்ன என்பதை அவரால் அறிய முடியவில்லை. சென்ற தடவை அவர்கள் வயோதிக இளவரசரின் பெயர் தினத்தில் சந்தித்தபோது, அபிமானத்தோடு பேசுவதற்கு, பல தடவைகள் போரிஸ் முயற்சி செய்தார். என்றாலும் அவர் கேட்ட கேள்விகளுக்கு வாயில் வந்தபடி பதிலை சொல்லி வந்தாள். அவர் என்ன சொல்லிக் கொண்டிருந்தார் என்பதை அவள் கவனிக்க வில்லை என்று தோன்றியது.

ஆனால், ஜூலி அப்படியல்ல. அவருடைய ஆர்வப் பேச்சுக்களை உடனே அங்கீகரித்தாள். அவளுக்குரிய தனி முறையில் அவள் அங்கீகரித்தாள்.

அச்சமயம் அவளுக்கு இருபத்தேழு வயது. அவளுடைய சகோதரர்கள் இறந்த பின்பு, அவள் மிகப் பெரிய பணக்காரியானாள். இப்பொழுது அவள் நிச்சயமாக அழகில்லாமல் இருந்தாள். ஆனால் தான் முன்போலவே அழகாய் இருப்பதாவும், அதோடு இன்னும் அதிகமான கவர்ச்சியோடு இருப்பதாகவும், அவள் தனக்குத்தானே நினைத்துக்கொண்டாள். அவளுடைய இந்த மாயையை மற்றொரு விஷயம் உறுதிப் படுத்தியது. அதாவது, அவள் மிகப் பெரிய பணக்காரியாய் விட்டதாலும், அவள் வயது ஆக ஆக ஆண்களுக்கு அவளால் ஏற்படக்கூடிய அபாயம் குறைந்து வந்ததாலும், ஆண்கள் தாராளமாக அவளோடு கலந்து பழகினார்கள். அதோடு அவளுடைய இராச் சாப்பாட்டுக் கச்சேரிகளிலும், மாலை வரவேற்புகளிலும், அவள் வீட்டில் கூடுகிறவர்களின் உரையாடல்களிலும், மாலை வரவேற்புகளிலும், அவள் வீட்டில் கூடுகிறவர்களின் சம்பாஷணைகளிலும், எந்த விதமான பொறுப்புகளும் இல்லாமல் அவர்கள் கலந்து கொள்ள முடிந்தது. பத்து வருஷங்களுக்கு முன்னால், பதினேழு வயதுள்ள ஒரு பெண் இருக்கிற வீட்டிற்கு, ஒரு மனிதன் தினந்தோறும் போவதற்கு பயப்படுவான். ஒருவேளை அவள் இணங்கி விடுவாளோ, அல்லது தனக்குப் பொறுப்பு ஏற்பட்டு விடுமோ என்று அவன் பீதி கொள்ளுவான். ஆனால், இப்பொழுது தைரியமாக தினந்தோறும் ஒருவன் போகமுடியும். அவளைக் கல்யாணம் ஆகக்கூடிய ஒரு பெண்ணாக இப்பொழுது அவன் கருதமாட்டான். ஆண்-பெண் உணர்ச்சியற்ற ஒரு அறிமுகமான பேர்வழி என்றே அவன் நினைப்பான்.

அந்த குளிர் காலத்தில் மாஸ்கோவில் காராகின்களுடைய வீடு தான் மிகுந்த, மனதிற்குகந்த, உபசாரம் மிகுந்த வீடாய் விளங்கியது. வழக்கமாய் உள்ள மாலைக் கச்சேரிகளையும், டின்னர் கச்சேரிகளையும் தவிர, அநேகமாய் ஆண்கள் அடங்கிய ஒரு பெரிய கூட்டம் தினம் அங்கே கூடுவது உண்டு. நடு ராத்திரியில் இராச்சாப்பாடு சாப்பிட்டு விட்டு, காலை மூன்று மணி வரையில், அவர்கள் அங்கே தங்கி இருப்பார்கள். ஒரு நடனக் கச்சேரியையோ, அல்லது ஒரு நாடகத்தையோ, அல்லது ஒரு விருந்துக் கச்சேரியையோ ஜூலி தவற விடுவதில்லை. அவளுடைய ஆடைகள் எல்லாம் புதிய மோஸ்தராய் இருக்கும். இப்படியெல்லாம் இருந்தும்கூட, அவள் எதிலும் நம்பிக்கை அற்றவளாய் காணப்பட்டாள். நட்பிலோ, அல்லது காதலிலோ, அல்லது வாழ்க்கையில் உள்ள எந்த மகிழ்ச்சியிலோ அவளுக்கு நம்பிக்கையில்லை என்ற அவள் ஒவ்வொருவரிடமும் சொல்லி வந்தாள். மரணத்திற்குப் பின்னால் தான், சாந்தி என்பது கிடைக்கும் என்ற அவள் எதிர் பார்ப்பதாகச் சொல்லி வந்தாள். பெரிய ஏமாற்றம் ஒன்றினால் கஷ்டப் பட்டவள் போலவும், தான் காதல் கொண்ட வாலிபனை இழந்தோ, அல்லது அந்த வாலிபனால் கொடூரமாக ஏமாற்றப்பட்டோ உள்ள ஒரு பெண் பேசுவதைப் போலவும், அவளுடைய குரல் இருந்தது. என்றாலும் அம்மாதிரி எதுவும் அவளுக்கு ஏற்படவில்லை. ஆனால் அம்மாதிரி கஷ்டப்பட்டவள் போலவே, மற்றவர்களால் அவள் நினைக்கப்பட்டாள். அவளும் கூட, வாழ்க்கையில் மிகுந்த கஷ்டப்பட்டவள் போல நம்ப ஆரம்பித்தாள். இந்தவிதமான வியாகூலம், அவள் சந்தோஷமாய் இருப்பதை தடுக்கவில்லை. இனிமையாகக் காலத்தைக் கழிப்பதற்காக அவள் வீட்டிற்குவரும் வாலிபர்களுக்கும், இது இடையூறாய் இருக்க வில்லை. அவள் வீட்டிற்கு வரும் ஒவ்வொருவரும், அந்த வீட்டுக்காரியின் சோகமான தோற்றத்திற்கு முதலில் மரியாதை காட்டிவிட்டு, பின்னால் அந்த வீட்டில் நடந்து வந்த ஊர் வம்பு பேச்சுக்களிலும், நடனங்களிலும், புத்திக் கூர்மையான விளையாட்டுகளிலும், கவிகள் அமைக்கும் விளையாட்டுகளிலும் இறங்கி மகிழ்ச்சி கொள்ளுவார்கள். ஜூலியின் சோகமான மனோ நிலைமையைப் பற்றி ஆழமாக விவாதிப்பவர்கள் வெகு சில வாலிபர்களேயாகும். அவர்களில் போரிஸும் ஒருவர். இவர்களுடன் அவள் தனியாக அமர்ந்து, நீண்ட நேரம் உரையாடல்கள் செய்து வருவாள். அதாவது, லோகாயத விஷயங்களின் வீண் பெருமையைப் பற்றி அவள் பேசுவாள். அவர்களிடம் சோகமான சித்திரங்களையும், சோகமான நீதி

மொழிகளையும், சோகமான கவிதைகளையும் கொண்ட தனது குறிப்புப் புத்தகங்களை அவள் காட்டுவாள்.

போரிஸிடம் ஜுலி விசேஷமான கருணை காட்டி வந்தாள். வாலிப வயதிலேயே அவருக்கு வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள வெறுப்பிற்காக அவள் வருந்தினாள். தானும் வாழ்க்கையில் மிகவும் கஷ்டம் அடைந்திருப் பதாகவும், அவருடைய மனதிற்கு சாந்தி ஏற்படுவதற்காக, தன்னுடைய நட்பினால் என்ன செய்ய முடியுமோ, அதை செய்வதற்கு தயார் என்றும் சொன்னாள். தன்னுடைய குறிப்புப் புத்தகங்களை அவரிடம் காட்டினாள். ஒரு புத்தகத்தில் இரண்டு மரங்களின் சித்திரங்களை போரிஸ் வரைந்து, அவற்றின் கீழே அவர் எழுதினார்: 'கரடு முரடான மரங்களே, உங்களுடைய கருத்த கிளைகள் என்மீது சோர்வையும் சோகத்தையும் இறைக்கின்றன.'

மற்றொரு பக்கத்தில் ஒரு கல்லறைச் சித்திரத்தை வரைந்து பின்வரும் பாட்டை எழுதினார்:

'மரணம் கொடுப்பது மாபெரும் உதவி,
மரணம் என்பது மாபெரும் சாந்தி
மரணத்தின் முன்பான மாபெரும் துன்பம்,
மரணத்தைப் பார்த்து மாய்ந்தொழிந்திடுமே'

இந்த பாட்டு மனோகரமாய் இருப்பதாக ஜுலி சொன்னாள்.

'சோகத்தின் புன்னகையில் எதோ ஒன்று மிகுந்த வசீகரமாய் இருக்கிறது' என்று அவள் தன்னுடைய குறிப்புப் புத்தகத்தில் எழுதி வைத்திருந்த ஒரு கவிதையை, வார்த்தைக்கு வார்த்தை திருப்பித் திருப்பி போரிஸுக்குக் கூறினாள். 'அதுதான் இருளில் ஏற்பட்ட ஒரு ஒளிக் கதிர்; சோகத்திற்கும் அதைரியத்திற்கும் இடையிலுள்ள ஒரு காட்சி, ஆறுதல் என்பது சாத்தியமானதே என்பதை அது காட்டுகிறது.'

இதற்குப் பதிலாக அதே புத்தகத்தில் போரிஸ் பின்வருமாறு எழுதினார்:

'உள்ளத்தின் உணர்வையே உவகை படுத்தும்,
உள்ளத்தின் நண்பனே, சோகமே, வருவாய்,
உள்ளத்தில் நீயன்றி உவகை ஓங்காது,
உள்ளத்தின் துன்பத்தை போக்கவே வருவாய்,
உள்ளத்தில் பொங்கும் கண்ணீரிலே கலந்து,
உள்ளத்தின் இனிமையை பெருக்குவாயாக.'

மிகுந்த துக்கமான காட்சிகளை வர்ணிக்கும் கீதங்களை, போரிஸுக்கு தன்னுடைய ஹார்ப் வாத்தியத்தில் ஜூலி வாசித்துக் காட்டுவாள். *ஏழை லிஜா' (*'ஏழை லிஜா' என்று நவீனம் காராம்ஜைன் என்பவரால் எழுதப்பட்டு, அச்சமயம் மிகப் பிரசித்தமானதாயிருந்தது. ஒரு விவசாயப் பெண்ணின் துன்பங்களைப் பற்றியதுதான் அந்த நவீனம். ஒரு பிரவுவோடு ஒரு விவசாயப் பெண் காதல் கொள்கிறாள். அவர் அவளை நிராகரிக்கிறார். பின்பு அவள் ஒரு குளத்தில் விழுந்து தன் உயிரை மாய்த்துக்கொள்கிறாள். இது தான் கதை.) என்ற நவீனத்தை அவளுக்கு போரிஸ் வாசித்துக்காட்டுவார். அப்படி வாசிக்கும் போது, துக்கத்தினால் பல தடவைகளில் அவருக்குத் தொண்டை அடைத்து, வாசிப்பதை நிறுத்துவது உண்டு, பெரிய கூட்டங்களில் ஜூலியும் போரிஸும் சந்திக்கும்போது, அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளும் பார்வையானது, பற்பல விதமான மக்களைக்கொண்ட இந்த உலகத்தில், அவர்கள் இருவரும்தான் ஒருவர் உள்ளத்தை ஒருவர் அறியக் கூடியவர்கள் என்று சொல்லுவதைப்போல் இருந்தது.

காராகின்களின் வீட்டிற்கு அடிக்கடி அன்னா மிக்காய்லாவ்னா வருவது உண்டு. தாயாருடன் சீட்டு விளையாடும்போது, ஜூலியின் பரிசத்தைப்பற்றி அவள் பக்குவமாக விசாரிப்பது உண்டு. (பரிசமாக ஜூலிக்கு பென்ஜா என்ற பிரதேசத்தில் இரண்டு எஸ்டேட்டுகளும் நிஜேகொராட் காடுகளும் கொடுக்கப்படுவதாய் இருந்தன.) பணக்கார ஜூலியையும் தமது குமாரரையும் பிணைத்துவைத்த அந்த நாசூக்கான சோகத்தன்மையை, அன்னா மிக்காய்லாவ்னா மிகுந்த உத்வேகத்தோடு பாராட்டி, எல்லாம் கடவுளின் சித்தம் என்று நினைத்து வந்தாள்.

'நீ எப்போதும் ரம்மியத்தோடும், சோகத்தோடும் காணப்படுகிறாய், என் அன்புள்ள ஜூலி' என்று அவள் மகளிடம் கூறினாள். 'தன்னுடைய உள்ளத்திற்கு உன் வீட்டில்தான் சாந்தி கிடைக்கிறது என்று போரிஸ் சொல்லுகிறான். அவன் எவ்வளவோ ஏமாற்றங்களை அனுபவித்து இருக்கிறான். மிகுந்த ரோஷமான உணர்ச்சி உள்ளவன்' என்று அவளுடைய தாயாரிடம் அவள் சொன்னாள், 'ஆ, எனது அன்பே, சமீப காலமாக ஜூலியிடம் எனது பிரியம் எவ்வளவுதூரம் வளர்ந்து இருக்கிறது என்பதை என்னால் உன்னிடம் கூறமுடியாது' என்று அவள் தனது குமாரரிடம் சொன்னாள். 'ஆனால், யார்தான் அவள் மீது பிரியம் கொள்ளாமல் இருக்கமுடியம்? அவள் ஒரு தேவதையாகவே விளங்குகிறாள். ஆ, போரிஸ், போரிஸ்' - இந்த இடத்தில் அவள் நிறுத்தினாள். மேலும்

தொடர்ந்து அவள் பேசியதாவது: 'அவளுடைய தாயார் மீது எனக்கு எவ்வளவு இரக்கமாய் இருக்கிறது, தெரியுமா? பென்ஜா எஸ்டேட்டுகளில் இருந்து அவளுக்கு வந்த கடிதங்களையும் கணக்குகளையும் இன்று எனக்கு அவள் காட்டினாள். (அவர்களுக்கு அங்கே ஏராளமான எஸ்டேட்டுகள் இருக்கின்றன) பாவம், அவளுக்கு உதவி செய்வதற்கு யாரும்இல்லை. அதனால் அவளை அவர்கள் ஏமாற்றுகிறார்கள்.'

தம்முடைய தாயார் பேசுவதை கவனித்துக்கொண்டே, வெளியே தெரியாத விதத்தில், போரிஸ் புன்னகை காட்டினார். அவளுடைய சிறுபிள்ளைத்தனமான தந்திரப் பேச்சுக்களைக்கண்டு அவர் கேலியாகச் சிரித்த போதிலும், அவள் பேசியதை கவனமாய் கேட்டுவந்தார். இடையிடையே மிக கவனமாக பென்ஜாநிஜேகொராட் எஸ்டேட்டுகளைப் பற்றி கேள்விகள் கேட்டார்.

தன்னுடைய சோகம் நிறைந்த காதலரிடமிருந்து, திருமணப் பிரேரணையை வெகுகாலமாக ஜூலி எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அதை ஒப்புக்கொள்ளுவதற்கும் அவள் தயாராய் இருந்தாள். ஆனால், அவளை வெறுக்கும்படியான ஒரு அந்தரங்க உணர்ச்சி போரிஸை தடுத்துக் கொண்டிருந்தது. அதாவது, திருமணத்தை முடித்துவிடவேண்டும் என்ற அவளுடைய ஆர்வம் கொண்ட ஆசையும், அவளுடைய செயற்கைத் தன்மைகளும், உண்மையான காதல் தமக்கு எப்பொழுதாவது ஏற்படுவதாய் இருந்தால், அதை புறக்கணிப்பதால் ஏற்படக்கூடிய பயங்கரமான உணர்ச்சியும் அவரைத் தடுத்துவந்தன. அவருடைய விடுமுறைக் காலம் முடிவடைவதாய் இருந்தது. ஒவ்வொரு நாளும் நாள் பூராவும் அவர் காராகின்களுடைய வீட்டிலேயே இருந்துவந்தார். ஒவ்வொரு நாளும் திருமணத்தைப்பற்றி அவர் சிந்தித்தபோதெல்லாம், அடுத்த நாளன்று பிரேரிக்கப் போவதாக அவர் தமக்குத்தாமே சொல்லிக் கொள்ளுவார். ஆனால் ஜூலியின் பிரசன்னத்தில், அவளுடைய சிவந்த முகத்தையும் நாடியையும் (அவை மீது அவள் எப்பொழுதும் பவுடர்போட்டே இருப்பாள்) அவளுடைய ஈரமான கண்களையும், மனோவியாகூல நிலைமையிலிருந்து, எப்பொழுது வேண்டுமானாலும் திடீரென்று திருமண வாழ்க்கையின் பேரானந்தத்தை ஆர்வத்தோடு அனுபவிக்கத் தயாராய் இருப்பதைப் போன்ற அவளுடைய தோற்றத்தையும் காணும்போது, அந்த முடிவான வார்த்தைகளை (திருமணப்பிரேரணை) போரிஸினால் சொல்ல முடிவதில்லை. ஆனால் அவருடைய மனோராஜ்யத்தில் அந்த பென்ஜா, நிஜேகொராட் எஸ்டேட்டுகளின் சொந்தக்காரர் தாமே என்று வெகு காலமாக நினைத்துவருகிறார். அதோடு,

அவற்றிலிருந்துவரும் வரும்படியை எம்மாதிரி செலவிடுவது என்பதையும் அவர் தீர்மானித்து வைத்திருந்தார். போரிஸின் தயக்கத்தை ஜூலி கண்டாள். தன்மீது அவருக்கு வெறுப்பு இருக்கிறதோ என்ற எண்ணம் சில சமயங்களில் அவளுக்குத் தோன்றுவதுண்டு. ஆனால், அவளுடைய பெண்மையின் மாயையானது, அவளுக்கு ஒரு மன ஆறுதலை கொடுத்து வந்தது. அதாவது, காதலில் அவர் வெட்கமான சுபாவம் கொண்டவரானபடியால் அதனால்தான் இதுவரை திருமணப் பேச்சை எடுக்கவில்லை என்று அவள் தனக்குத்தானே கூறிக்கொள்ளுவாள். என்றாலும் அவளுடைய சோக உணர்ச்சியானது எரிச்சலாக மாற ஆரம்பித்தது. ஆகவே, போரிஸ் புறப்பட்டுப்போகும் முன்பாகவே, தான் எம்மாதிரி நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதைப் பற்றி ஒரு முடிவு செய்தாள். போரிஸின் விடுமுறை நாட்கள் முடிந்து வருகிற சமயத்தில் மாஸ்கோவில் அனடோல் குராகின் வந்து சேர்ந்தார். அவர் காராகின்களுடைய வரவேற்பு அறைக்கும் விஜயம் செய்தார். திடீரென்று ஜூலி தன்னுடைய சோகத்தோற்றத்தைக் கைவிட்டு, அவருடன் மகிழ்ச்சியுடனும் பிரியத்துடனும் நடந்து கொள்ள ஆரம்பித்தாள்.

'எனது அன்பே' என்று அன்னா மிக்காய்லாவ்னா தனது குமாரரைப் பார்த்து பேச ஆரம்பித்தாள். 'இளவரசர் வாசைலி தனது குமாரரை ஜூலியை திருமணம் செய்து கொள்ளுவதற்காக, மாஸ்கோவிற்கு அனுப்பி இருக்கிறார் என்று ஒரு நம்பிக்கையான செய்தியின் மூலம் எனக்குத் தெரியும். நான் ஜூலி மீது மிகுந்த 'பிரியம் கொண்டிருக்கிறபடியால், அவளுக்காக நான் வருந்துகிறேன். அதைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய், என் அன்பே?'

ஒரு மாதம் பூராவாக கடுமையான சோக நாடக சேவையை ஜூலிக்கு செய்த பின்பு, பென்ஜா எஸ்டேட்டுகளிலிருந்து வரக்கூடிய வருமானங்களை சரியாக உபயோகிப்பதற்கு மனக் கணக்கு போட்ட பின்பு, அந்த வரும்படிகளை மற்றொருவர் கைக்கு போகும்படி, முக்கியமாக அந்த முட்டாள் அனடோலின் கைகளுக்குப் போகும்படியாக விட்டுவிடுவதும், அதன் மூலம் தன்னை முட்டாளாக்கிக் கொள்ளுவதும் போன்ற நிலைமை ஏற்படுவதைக் கண்டு போரிஸுக்கு வருத்தம் ஏற்பட்டது. அவர் காராகின்களுடைய வீட்டிற்கு புறப்பட்டுப் போனார். திருமணப் பிரேரணையை செய்து விடுவது என்ற உறுதியோடு போனார். மகிழ்ச்சியும் அலட்சியமும் கொண்ட தோற்றத்தோடு ஜூலி அவரை சந்தித்தாள். பேச்சுவாக்கில் முதல் நாளைய நடனக்

கச்சேரியை அவள் எவ்வளவு அனுபவித்தாள் என்பதைக் கூறி, அவர் எப்பொழுது புறப்படுகிறார் என்பதையும் கேட்டாள். தம்முடைய காதலைப் பற்றி பேசுவதற்கான எண்ணத்துடனேயே போரிஸ் அப்பொழுது வந்திருந்தபடியால், கனிவோடு பேசுவதற்கே அவர் விரும்பினார், என்றாலும் அவர் எரிச்சலோடு பேச ஆரம்பித்தார். முன்னுக்குப் பின் முரணாக நடக்கும் பெண் தன்மையைப் பற்றியும், எவ்வளவு சுலபமாக சோகத்திலிருந்து மகிழ்ச்சிக்கு பெண்கள் மாறமுடியும் என்பதைப் பற்றியும், அவர்களிடம் யார் சல்லாபம் செய்கிறார்களோ, அதைப் பொறுத்துத்தான் அவர் களுடைய மனோபாவங்கள் மாறுவது இருக்கின்றன என்பதைப் பற்றியும் அவர் பேசினார். ஜூலி கோபம் கொண்டாள். பல வகையான ருசிகள் ஒரு பெண்ணுக்கு அவசியம்தான் என்பது உண்மை என்றும், திரும்பத் திரும்ப ஒன்றையே செய்து கொண்டிருப்பது யாருக்கும் சடைவை உண்டாக்கும் என்றும் அவள் சொன்னாள்.

‘அப்படியானால், நான் ஒன்று சொல்லுவேன்...’ என்று போரிஸ் ஆரம்பித்தார். அவளைக் கண்டித்துச் சொல்ல அவர் விரும்பினார். ஆனால் அவர் மாஸ்கோவை விட்டு தம்முடைய அபிலாஷை களைப் பூர்த்தி செய்யாமலேயே புறப்படவேண்டி இருக்கும் என்றும், தம்முடைய முயற்சிகளெல்லாம் வீணாய் போய்விடும் என்றும் (அம்மாதிரி ஏற்படுவதை அவர் எப்பொழுதும் விட மாட்டார்), ஒரு மனம் குழம்பக்கூடிய நினைப்பு அந்த வினாடியில் தோன்றியது.

உடனே பாதி வாக்கியத்திலேயே தம்மை அடக்கிக்கொண்டு, தமது பார்வையை கீழே நோக்கினார். அவளுடைய கோபமான, இனிமையற்ற, உறுதியற்ற முகத்தை அவர் பார்க்க விரும்ப வில்லை. அவர் சொன்னார்:

‘நான் உன்னுடன் சண்டை போடுவதற்காக இங்கே வர வேயில்லை. விஷயம் என்னவென்றால்...’

தாம் மேலே பேசலாமா என்பதை அறிந்து கொள்ளுவதற்காக அவளை அவர் நோக்கினார். அவளுடைய கோபம் திடீரென்று மறைந்தது. அவளுடைய ஆவலான கெஞ்சும் கண்கள் மிகுந்த ஆவலோடு அவர் மீது பதிந்திருந்தன. ‘அவளை அடிக்கடி நான் பார்க்காமல் இருக்க ஏற்பாடு செய்துகொள்ள முடியும். இந்த விஷயத்தை ஆரம்பித்தாகி விட்டது. இதை முடித்தே தீரவேண்டும்’ என்று போரீஸ் நினைத்தார். அவருடைய முகம் சிவந்தது. அவளுடைய கண்களை தம் கண்களால் உயர்த்திப் பார்த்து அவர் சொன்னார்:

'உன்னைப் பற்றி எனக்கு உள்ள உணர்ச்சிகளை நீ அறிவாய்.'

அதற்குமேல் சொல்லவேண்டிய அவசியமே இல்லை. வெற்றியினாலும் சுய திருப்தியினாலும் ஜூலியின் முகம் பிரகாசித்தது. ஆனால் அம்மாதிரி சந்தர்ப்பங்களில் என்னவெல்லாம் சொல்ல வேண்டுமோ, அவற்றையெல்லாம் போரிஸ் சொல்லும்படி அவள் கட்டாயப்படுத்தினாள் - அதாவது, அவளை அவர் காதலிக்கிறார் என்றும், அவளை அவர் காதலிப்பதைவிட, வேறு எந்தப் பெண்ணையும் அவர் வேறு எப்பொழுதும் காதலித்தது இல்லையென்றும் அவர் சொல்லும்படி செய்தாள். பென்ஜா எஸ்டேட்டுகளுக்காகவும், நிஜேகொராட் காடுகளுக்காவும் இந்த வாக்குறுதியைக் கேட்க முடியும் என்பதை அவள் அறிவாள். அதே மாதிரி அவள் கேட்ட வாக்குறுதியை அவள் பெற்றுக்கொண்டாள்.

மரங்கள் தங்கள் மீது சோகத்தைப் பொழிந்து கொண்டிருப்பதாகப் பேசும் பேச்சுகளை அந்த நிச்சயார்த்தத் தம்பதிகள் இப்பொழுது பேசுவதில்லை. பீட்டர்ஸ்பர்க்கில் ஒரு சிறந்த வீட்டை தங்களுக்காக ஏற்பாடு செய்வதைப் பற்றி அவர்கள் திட்டமிட்டார்கள். நண்பர்களை அவர்கள் போய் பார்த்தார்கள். திருமணத்தை பிரமாதமாக நடத்துவதற்கான ஒவ்வொரு ஏற்பாட்டையும் அவர்கள் செய்து முடித்தார்கள்.



ஜனவரி மாதக் கடைசியில் நட்டாஷாவோடும் சோனியாவோடும் வயோதிகக் கோமகன் ராஸ்டோவ் மாஸ்கோவுக்குப் போனார். கோமகள் இன்னமும் அசௌக்ய மாக இருந்தாள். பிரயாணம் செய்ய முடியாமலும் இருந்தாள். ஆனால், அவளுக்கு உடம்பு சௌகர்யமாகிற வரையில், மாஸ்கோவுக்குப் போகாமல் காத்திருப்பது அசாத்தியமாயிருந்தது. மாஸ்கோவில் இளவரசர் ஆண்ட்ரூ எந்நேரமும் வந்து சேரலாமென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். மணப் பெண்ணுக்கு வேண்டிய கல்யாண உடையைத் தயாரிப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டியிருந்தது. மாஸ்கோவுக்குப் பக்கத்தில் உள்ள அவர்களுடைய எஸ்டேட்டை விற்க வேண்டியிருந்தது. வயோதிக இளவரசர் மாஸ்கோவில் இருக்கும்போதே, அவருடைய எதிர்கால மருமகளை அவருக்கு அறிமுகப்படுத்திவைக்கும் சந்தர்ப்பத்தை கைவிட்டுவிடக் கூடாது என்றும் தோன்றியது.

மாஸ்கோவிலுள்ள ராஸ்டோவ்களின் வீட்டை, அந்த குளிர்காலத்தில் உஷ்ணப்படுத்தி வைக்க வில்லை. அவர்கள் சொற்ப காலமே அங்கே வசிப்பதற்கு வந்தபடியால், கோமகன் அவர்களுடன் வராதபடியால், மரியா டிமிட்ரிவ்னா அக்ராஸிமாவா என்பவளோடு தங்குவது என்று கோமகன் தீர்மானித்தார். அவர் தன்னுடன் தங்க வேண்டுமென்று அவள் வெகுகாலமாக வற்புறுத்தி வந்தாள்.

ஒரு நாள் மாலையில், ராஸ்டோவ்களின் நான்கு பனி வண்டிகள், மரியா டிமிட்ரிவ்னாவின் வீட்டிலுள்ள முற்றத்தில் வந்து நின்றன. அந்த வீடு கான்யூஷெனி என்ற தெருவில் இருந்தது. மரியா டிமிட்ரிவ்னா தனியாக வசித்து வந்தாள். தன்னுடைய குமாரத்திகளையெல்லாம், முன்பே திருமணம் செய்து கொடுத்துவிட்டாள். அவளுடைய புத்திரர்கள் எல்லோரும் ராணுவ சேவையில் இருந்தார்கள்.

அவள் நேராக நிமிர்ந்து நின்று, தனது அபிப்பிராயங்களைத் தெளிவாகவும், கூச்சலிட்டும், மொட்டையாகவும் எப்பொழுதும் போல கூறுவது வழக்கம். யாரிடமாவது, ஏதாவது குறையோ, ஆசையோ, மயக்கமோ இருக்குமானால், அவற்றை அவள் முழு பலத்தோடு எதிர்ப்பதுபோலத் தோன்றுவாள். இந்த குறைகள் எல்லாம், மனித சுபாவத்தில் நேரக்கூடியவை என்பதை அவள் ஒப்புக் கொள்ளுவதில்லை. ஒரு உடை-கவுனை தரித்துக்கொண்டு, காலையிலிருந்து வீட்டு வேலைகளைக் கவனிப்பாள். அதன் பின்னால் வெளியே போவாள். பரிசுத்த நாட்களில், அவள் மாதா கோயிலுக்குச் சென்று பிரார்த்தனை செய்வாள். அதன் பின்னால், சிறைச்சாலைகளுக்குச் சென்று, கைதிகளுக்கு வேண்டிய உதவிகளைக் கவனிப்பாள். ஆனால், இதைப்பற்றி அவள் ஒருவரிடமும் கூறுவதில்லை. சாதாரண நாட்களில், உடை அலங்காரம் ஆன பின்பு, பல வகுப்பினர்களும் கொண்டுவரும் மனுக்களை விசாரிப்பாள். அம்மாதிரி மனுக்கள் கொடுப்பவர்கள், எப்பொழுதும் இருந்துகொண்டே இருப்பார்கள். அதன் பின்னால் பரிபூரணமாக, திருப்தியாக அவள் உணவு அருந்துவாள். எப்பொழுதும் மூன்று நான்கு விருந்தாளிகள் இருந்து கொண்டிருப்பார்கள். டின்னருக்குப் பின்னால், பாஸ்டன் சீட்டு விளையாட்டு ஒரு ஆட்டம் போடுவாள். இரவுகளில் பத்திரிகைகளையோ, அல்லது ஒரு புதிதாய் வந்த புத்தகத்தையோ, அவளுக்கு வாசித்துக் காட்டுவார்கள். அவள் பின்னால் வேலை செய்து கொண்டே, அவற்றைக் கேட்டுக்கொண்டிருப்பாள். இந்த நடைமுறைகளை அவள் கைவிடுவதில்லை. அவள் யாரையாவது

பார்க்கப் போவதாய் இருந்தால், பட்டணத்தில் உள்ள முக்கியமானவர்களை மட்டுமே போய்ப் பார்ப்பாள்.

அவள் இன்னும் படுக்கப் போகவில்லை. அச்சமயத்தில் ராஸ்டோவ்கள் அங்கே வந்து சேர்ந்தார்கள். கீழே உள்ள ஹால் கதவு, ராஸ்டோவ்களையும் அவர்களுடைய சேவகர்களையும் வெளியிலுள்ள குளிரிலிருந்து உள்ளே விடுவதற்கு திறக்கப்பட்டபோது, கிரீச்சிட்டது. தன்னுடைய கண்ணாடி மூக்கில் தொங்கிக்கொண்டிருக்க, தலையைப் பின்னால் சாய்த்து, மரியா டிமிட்ரிவ்னா அந்த ஹால் வாசலில், கண்டிப்பான, உறுதியான முகத்தோடு, புதிதாய் வந்தவர்களைப் பார்த்தாள். அப்போது அவளைப் பார்ப்பவர்கள் அங்கு வந்து சேர்ந்தவர்களைக் கண்டு அவள் கோபம் கொண்டிருக்கிறாள் என்றும் அவர்களை உடனே வெளியே விரட்டிவிடுவாள் என்றும் நினைக்கலாம். ஆனால், அவள் அங்கு வந்த விருந்தாளிகளுக்கு, தங்குவதற்கும் மற்ற விஷயங்களுக்கும் எம்மாதிரி 'ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டுமென்று, தனது வேலைக்காரரிடம் ரொம்ப கவனமாக உத்தரவுகள் கொடுப்பதைப் பார்த்த பின்புதான் அவர்களுக்கு அந்த எண்ணம் ஏற்படாமல் இருக்கமுடியும்.

'இவையென்ன? கோமகன் சாமான்களா? அவற்றை இங்கே கொண்டு வாருங்கள்' என்று சொல்லி, ஒரு பெட்டியை அவள் சுட்டிக்காட்டினாள். வந்த விருந்தாளிகள் யாருக்கும் அவள் எந்த விதமான வணக்கமும் தெரிவிக்கவில்லை.

இளைய சீமாட்டிகளா? அவர்கள் சாமான்களை இடம் பக்கம் கொண்டு போங்கள். இப்போது நீங்கள் ஏன் இப்படி சோம்பேறித்தனமாக நின்று கொண்டிருக்கிறீர்கள்?' என்று வேலைக்காரிகளைப் பார்த்துக் கூச்சலிட்டாள். 'அந்த தேநீர் போடும் சாமுவாரைத் தயார் செய்யுங்கள்... நீ அதிக அழகாகக் கொழு கொழு வென்று இருக்கிறாய்' என்று நட்டாஷாவை அவளுடைய குல்லாவைப்பற்றி தன் பக்கமாக இழுத்துக்கொண்டு அவள் சொன்னாள். நட்டாஷாவின் கன்னங்கள் ஏற்கெனவே பனியினால் சிவந்து போய் இருந்தன. 'பூ! நீ மிகவும் குளிர்ந்து போய் இருக்கிறாய். உன்மேல் ஆடைகளை சீக்கிரமாக எடு,' என்று சொல்லிவிட்டு 'உம்முடைய மேல் ஆடைகளையும் கழற்றிவிடும்' என்று கோமகனைப் பார்த்து கோமகன் அவள் கையை முத்தமிட வந்தபோது சொன்னாள். 'நீங்கள் எல்லாருமே பனியினால் பாதி விறைத்துப்போய் விட்டீர்கள். எனக்கு அது நிச்சயமாய்த் தெரிகிறது. சீக்கிரமாகத் தேநீரோடு சாப்பிடுவதற்கு கொஞ்சம் 'ரம்' கொண்டு வாருங்கள்... என் அன்பான சோனியாவே' என்று

சோனியாவைப் பார்த்துச் சொல்லி, 'வந்தனம்' என்று அவள் பிரஞ்சு மொழியில் வரவேற்பு கூறினாள், அவளுடைய வரவேற்பில் லேசான அலட்சியம் காணப்பட்டாலும், உள்ளம் கனிந்த மனோபாவத்தையே அவளிடம் காட்டினாள்.

தேநீர் அருந்த எல்லாரும் உள்ளே வந்தார்கள். அவர்களுடைய மேல் சட்டைகளை எல்லாம் களைந்துவிட்டு, தங்களுடைய உடைகளையெல்லாம் சரி செய்துகொண்டு வந்து சேர்ந்தார்கள். மரியா டிமிட்ரிவ்னா, அவர்கள் எல்லாரையும் வரிசைக் கிரமமாக முத்தமிட்டாள். நீங்கள் எல்லாரும் இங்கே வந்து, என்னுடன் தங்குவதற்காக, நான் மனப்பூர்வமாக சந்தோஷமடைகிறேன்' என்று அவள் சொன்னாள். நட்டாஷாவை ஒரு அர்த்த புஷ்டியுள்ள பார்வையால் நோக்கிவிட்டு, 'காலம் வந்துவிட்டது. அந்த வயோதிகர் இங்கே தான் இருக்கிறார். அவருடைய குமாரர், எந்த நேரத்திலும் வந்து சேரலாம். அந்த வயோதிகருடன் நீங்கள் பழக்கமாகிக் கொள்ள வேண்டும். அவற்றைப்பற்றி நாம் பின்னால் பேசுவோம்' என்று அவள் கூறி, சோனியாவைப் பார்த்தாள். அவள் பார்த்த பார்வையானது, சோனியாவின் பிரசன்னத்தில் அதைப்பற்றிப் பேச வேண்டாம், என்று நினைப்பதைப்போலத் தோன்றியது. அவள் கோமகனைப் பார்த்து, 'இப்போது கவனியும். நாளைக்கு உமக்கு என்னவேண்டும்? யாரை உமக்குப் பார்க்கவேண்டும்? ஷின்ஷைனைப் பார்க்கவேண்டுமா?' என்று சொல்லிவிட்டு, ஒரு விரலை மடக்கினாள். 'அந்த அழுமூஞ்சி அன்னா மிக்காய்லாவ்னாவைப் பார்க்க வேண்டுமா? சரி, இரண்டாய்விட்டது. அவள் இங்கேதான் அவளுடைய குமாரரோடு இருக்கிறாள். அவளுடைய குமாரருக்கு கல்யாணம் ஆகப்போகிறது. அதன் பின்னால், பெஜுகாவைப் பார்க்க வேண்டுமா? அவர் இங்கேதான் மனைவியோடு இருக்கிறார். அவளை விட்டு அவர் தப்பி ஓடினார். ஆனால், அவள் அவருக்குப் பின்னால் பாய்ச்சலில் ஓடி வந்து பிடித்து கொண்டாள். சென்ற புதன் கிழமையன்று, என்னோடு அவர் டின்னர் சாப்பிட்டார். (அந்தப் பெண்களை அவள் சுட்டிக்காட்டி) அவர்களைப் பொறுத்த வரையில், நாளை நான் அவர்களை இபெரியன் கோயிலுக்கு அழைத்துப்போய், கடவுளின் மாதாவைக் காட்டுகிறேன். பின்னால், அந்த கொள்ளைக் காரியிடம் (ஆடை தயாரிப்பவளிடம்) அழைத்துச் செல்கிறேன். எங்கள் எல்லாருக்கும் புதிய உடைகள் தயாரிக்கவேண்டுமென்று நான் நினைக்கிறேன். என்னைப் பார்த்து நீங்கள் ஒன்றும் தீர்மானம் செய்யவேண்டாம். இந்தக் காலத்தில், சட்டையின் கைகள் எல்லாம் இவ்வளவு பெரிய அளவில்

இருக்கின்றன. இளவரசி இரினா வாசைலோவ்னா என்பவள் அன்று ஒரு நாள் என்னைப் பார்க்க வந்திருந்தாள். அவளைப் பார்ப்பதற்குச் சகிக்கவில்லை. அவளுடைய கையில் இரண்டு பீப்பாய்களை வைத்திருந்த மாதிரி சட்டையின் கைகள் இருந்தன. இப்போதெல்லாம் ஒவ்வொரு நாளும் புதிது புதிதாக மோஸ்தர்கள் வராமல், ஒரு நாள் கூடக்கழிவது இல்லை. சரி, நீர் என்ன செய்யப் போகிறீர்' என்று கோமகனைக் கடுமையோடு கேட்டார்.

'ஒன்றுக்குமேல் ஒன்றாக விஷயங்கள் வந்து கொண்டிருக்கின்றன. அவளுக்குத் துணிகள் தைக்கவேண்டும். இப்போது மாஸ்கோ எஸ்டேட்டையும், மாஸ்கோ வீட்டையும் வாங்குவதற்கு, ஒரு ஆள் வந்திருக்கிறார். நீங்கள் அனுமதி கொடுத்தால், நான் ஒரு நாள் அந்த எஸ்டேட்டுக்குப் போவதற்கு ஒரு நேரத்தைக் குறிப்பிட்டு, அதைப்போய் பார்த்துவிட்டு வந்துவிடுகிறேன். ஒரு நாள் அவகாசம் போதும். என்னுடைய பெண்களை உன்னிடம் விட்டுப் போகிறேன்' என்று கோமகன் சொன்னார்.

'ரொம்ப சரி, ரொம்ப சரி; கஜானாவில் எவ்வளவு பந்தோபஸ்தாக இருக்குமோ, அதே மாதிரி அவர்கள் என்னிடம் பந்தோபஸ்தாக இருப்பார்கள். அவர்கள் எங்கே போக வேண்டுமோ, அங்கே நாளை அவர்களை அழைத்துப் போகிறேன். கொஞ்சம் கண்டித்தும், கொஞ்சம் தட்டிக்கொடுத்தும், நான் பார்த்துக்கொண்டிருப்பேன்' என்று மரியா டிமிட்ரிவ்னா தன்னுடைய ஞானபுத்திரியும், அபிமான புத்திரியுமான நட்டாஷாவை, தனது பெரிய கையால் கன்னத்தில் தட்டிக்கொண்டே பேசினாள்.

மறுநாள் காலையில் அந்த இளைய சீமாட்டிகளை இபெரியன் கோயிலான கடவுளின் மாதா கோயிலுக்கு, மரியா டிமிட்ரிவ்னா அழைத்துக்கொண்டு போனாள். அதன் பின்னால், ஆடைகள் தயாரிப்பவளான திருமதி சூபர்ட்-ரோக்கட் என்பவளிடம் அழைத்துச் சென்றாள். அவளுக்கு மரியா டிமிட்ரிவ்னாவைப் பார்த்தால், எப்போதும் மிகுந்த பயமுண்டு. அதனால் அவளிடம் தப்பித்துக் கொள்வதற்காக, எந்த ஆடையை வேண்டுமானாலும், நஷ்டத்துக்குக்கூட, அவள் விற்றுவிடுவாள். திருமணத்திற்கு வேண்டிய ஆடைகள் சகலவற்றையும் தயாரிப்பதற்கு மரியா டிமிட்ரிவ்னா உத்தரவு கொடுத்தாள். வீட்டிற்கு அவர்கள் திரும்பியதும், நட்டாஷாவைத் தவிர மற்றவர்களைத் தன்னுடைய அறையிலிருந்து வெளியே போகச் சொல்லி, அதன் பின்னால் தனது அபிமானப் பெண்ணை சாய்வு நாற்காலியில் உட்காரும்படி சொன்னாள்.

'நல்லது, இப்போது நாம் பேசலாம். உனக்கு நிச்சயார்த்தம் ஆனதற்காக உன்னை வாழ்த்துகிறேன். நீ ஒரு நல்ல ஆசாமியை வலையில் பிடித்தாய். உனக்காக நான் சந்தோஷமடைகிறேன். அவரை இவ்வளவு உயரத்திலிருந்தே நான் அறிவேன் (பூமியிலிருந்து இரண்டடி உயரத்தில் அவளது கையை வைத்துக் காட்டினாள். இதைப் பார்த்து நட்டாஷா நாணி முகம் சிவந்தாள்) அவர் மீதும், அவரது குடும்பத்தின் மீதும் எனக்குப் பிரிய முண்டு. இப்போது கவனித்துக் கேள். அந்த வயோதிக இளவரசர் நிக்கலஸ், அவருடைய குமாரரின் திருமணத்தை விரும்பவில்லையென்பது உனக்குத் தெரியும். அந்த வயோதிகப் பேர்வழி ஒரு ஸ்திரபுத்தி இல்லாதவர். ஆனால், இளவரசர் ஆண்ட்ரூ குழந்தை அல்ல. அவருடைய தந்தையின் உதவி இல்லாமலே, அவர் நடக்க முடியும். ஆனால் ஒரு தந்தையின் விருப்பத்திற்கு விரோதமாக, ஒரு குடும்பத்திற்குள் நுழைவது நன்றாக இருக்காது. அந்த விஷயத்தை அமைதியாகவும், இனிமையாகவும் செய்யவே, ஒவ்வொருவரும் விரும்புவார்கள். நீ ஒரு கெட்டிக்காரப் பெண். எப்படிச் சமாளிப்பது என்பது உனக்குத் தெரியும். அன்பாக இரு. உன்னுடைய சாமர்த்தியத்தை உபயோகித்துக்கொள். அதன் பின்னால், எல்லாம் சரியாகிவிடும்.'

நட்டாஷா மௌனமாய் இருந்தாள். மரியா டிமிட்ரிவ்னா யூகம் செய்ததைக் கேட்டு வெட்கம் அடைந்ததற்காக அவள் மௌனமாய் இருந்தாள் என்பதில்லை. ஆனால், உண்மையில் இளவரசர் ஆண்ட்ரூவுடன் அவள் கொண்டுள்ள காதல் விவகாரத்தைப்பற்றி, யாரும் தலையிட்டுப் பேசுவது அவளுக்குப் பிடித்தமில்லை. அதாவது, அவர்களுடைய காதல் விஷயத்தை, வேறு யாராலும் புரிந்துகொள்ள முடியாது என்று அவள் நினைத்தாள். அவள் இளவரசர் ஆண்ட்ரூவைக் காதலித்தாள். அவரைப்பற்றி அவளுக்குத் தெரியும். அவரும் அவளை மட்டிலும்தான் காதலித்தார். எப்போதாவது ஒரு நாள் வந்து, அவளை அழைத்துக்கொண்டு போவார். அதற்கு மேலாக அவளுக்கு வேறு எதுவும் தேவையில்லை.

'எனக்கு அவரை வெகுநாளாகத் தெரியும். மேரி மீதுகூட எனக்கு மிகந்த பிரியமுண்டு. அவள்தான் உன்னுடைய எதிர்கால மைத்துனி. 'கணவர்களின் சகோதரிகள் தகராறுகளை உண்டுபண்ணுவார்கள்' என்று ஒரு பழமொழி உண்டு. ஆனால், இந்த மேரி, ஒரு ஈக்குக்கூட கெடுதல் பெய்யமாட்டாள். உங்கள் இருவரையும் சந்திக்கும்படி செய்வதற்கு, என்னிடம் அவள் கேட்டாள். நாளை உன்னுடைய தந்தையோடு நீ அவளைப் பார்க்கப் போவாய். அவளிடம்

இனிமையாகவும், பிரியமாகவும் நடந்துகொள். நீ அவளைவிட வயதில் சிறியவள். பின்னால் 'அவர்' வரும்போது, அவருடைய சகோதரியும் தந்தையும் உனக்கு ஏற்கெனவே பழக்கமானவர்கள் என்பதையும், அவர்கள் எல்லாரும் உன் மீது பிரியம் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் அறிந்துகொள்ளுவார். நான் சொல்வது சரியா, இல்லையா? அப்படிச் செய்வதுதானே நல்லது?'

'ஆமாம், அதுதான் சரி' என்று தயக்கத்தோடு நட்டாஷா பதில் சொன்னாள்.



மறுநாள் மரியா டிரிட்ரிவ்னாவின் யோசனைப்படி, நட்டாஷாவை அழைத்துக் கொண்டு, இளவரசர் நிக்கலஸ் பால்கோன்ஸ்கியைப் பார்ப்பதற்காக, கோமகன் ராஸ்டோவ் புறப்பட்டார். கோமகன் ராஸ்டோவ் இந்த சந்திப்பில் களிப்புக் கொண்டிருக்கவில்லை. அவர் மனதில் பீதியுற்றிருந்தார். கடைசியாக சென்ற தடவை, அவர் வயோதிக இளவரசரை சந்தித்தபோது நடந்த விஷயங்கள், அவருக்கு நன்றாய் ஞாபகத்தில் இருக்கிறது. அப்போது பட்டாளத்திற்கு ஆட்களைச் சேர்த்துக்கொண்டிருந் தார்கள். இளவரசரை டின்னருக்கு கோமகன் அழைத்தபோது, அவரிடம் சேர்க்கும்படி சொல்லப்பட்டிருந்த விகிதப்படி, அவர் ஆட்களைச் சேர்க்க வில்லை என்பதற்காக, கோபத்தோடு அவரைக் கண்டித்தார். அந்தக் கண்டனங்களை அவர் கேட்டுக்கொண்டிருக்க நேரிட்டது. ஆனால், நட்டாஷா தன்னிடமுள்ள சிறந்த கவுனை தரித்துக்கொண்டு, மிகுந்த களிப்போடு புறப்பட்டாள். 'என் மீது பிரியம் கொள்ளாமல் அவர்களால் இருக்க முடியாது. ஒவ்வொருவரும் எப்போதுமே என்மீது பிரியம் கொள்கிறார்கள். அவர்கள் எதை விரும்பினாலும், அதைச் செய்ய நான் தயாராய் இருக்கிறேன். அவர் மீது மிகுந்த பிரியமாய் இருக்கிறேன். ஆனால், அவர் 'அவருடைய' தந்தை என்ற காரணத்திற்காகவே, நான் பிரியமாய் இருக்கிறேன். அவள் 'அவருடைய' சகோதரி என்ற காரணத்திற்காகவே, நான் பிரியமாய் இருக்கிறேன். ஆகவே, என் மீது பிரியம் கொள்ளாமல் அவர்கள் இருப்பதற்கு எவ்வித காரணமும் இல்லை...' என்று நட்டாஷா நினைத்தாள்.

அந்த உற்சாகமற்ற தோற்றம் கொண்ட பழைய வீடு, வாட்வை ஜென்கா என்ற இடத்திலிருந்தது. அங்கே அவர்கள் போய், முன் அறைக்குள் நுழைந்தார்கள்.

'நல்லது; கடவுளே, எங்கள் மீது கருணை காட்டும்' என்று பாதி சிரத்தையோடும், பாதி தமாஷாகவும் கோமகன் சொன்னார். தனது தந்தை முன் அறைக்குள் நுழைந்ததும், சிறிது பதைபதைப்பு கொண்டிருக்கிறார் என்பதை நட்டாஷா கவனித்தாள். 'இளவரசரும், இளவரசியும் இருக்கிறார்களா?' என்று பீதியுற்ற குரலில் மெதுவாகக் கேட்டாள்.

அவர்கள் வந்ததை அறிந்ததும், அங்கிருந்த சேவகர்களுக்குள், ஒரு பரபரப்பு காணப்பட்டது. இவர்கள் வந்திருப்பதைத் தெரிவிப்பதற்காக, ஒரு சேவகன் உள்ளே போனான். பெரிய ஹாலில் இந்த சேவகனை மற்றொரு சேவகன் நிறுத்தி, ஒருவருக்கொருவர் மெதுவான குரலில் பேசிக்கொண்டிருந்தார்கள். பின்னால், ஒரு வேலைக்காரி அந்த ஹாலுக்கு ஓடிவந்து, அவசரமாக எதையோ சொல்லி, இளவரசியைக் குறிப்பிட்டுப் பேசினாள். கடைசியாக, கோபமான முகம் கொண்ட ஒரு வயோதிக சேவகன் வந்து, இளவரசரை இப்போது பார்க்க முடியாது என்றும், ஆனால், இளவரசி அவர்களை உள்ளே வரும்படி அழைத்தாள் என்றும் கூறினான். அவரைச் சந்திப்பதற்கு முதலில் வந்தது குமாரி பௌரியனே ஆகும். விசேஷ மரியாதையோடு தந்தையையும் குமாரியையும் அவள் வரவேற்று, இளவரசியின் அறைக்கு அழைத்து சென்றாள். இளவரசி மிகுந்த பரபரப்போடும் பீதியோடும் காணப்பட்டாள். அவளுடைய முகத்தில், பல இடங்கள் திட்டுத் திட்டாக சிவந்திருந்தன. அவள் விருந்தாளிகளை வரவேற்பதற்காக வேகமாய் ஓடிவந்தாள். பலமான காலடி ஓசையோடு, தான் குழப்பம் இல்லாமல் சமாதானமாய் இருப்பதாகவும், பிரியத்தோடு வரவேற்க விரும்புவதாகவும் காட்டிக்கொள்ள முயற்சித்தாள். முதல் பார்வையிலேயே, நட்டாஷாவை இளவரசி மேரிக்குப் பிடிக்கவில்லை. ரொம்ப பெரிய மோஸ்தரில் அவள் ஆடைகள் அணிந்திருப்பதாகவும், தற்பெருமை உள்ளவளாகவும், அற்ப சந்தோஷம் கொண்டவளா கவும், அவளுக்குக் காணப்பட்டாள். தன்னுடைய எதிர்கால மைத்துனியைப் பார்ப்பதற்கு முன்பாகவே, அவளுடைய அழகையும், அவளுடைய இளமையையும், மகிழ்ச்சியையும், தன்னுடைய சகோதரர் அவள் மீது காதல் கொண்டிருப்பதையும் கேட்டு, அதனால் பொறாமை கொண்டு, முன்பே விரோத மனப்பான்மை கொண்டிருந்ததை தன்னால் உணர்ந்து கொள்ளவே முடியவில்லை. அவளால் கடக்க முடியாத இந்த விரோத மனப்பான்மையைத் தவிர, ராஸ்டோவ்கள் வந்திருக்கிறார்க ளென்று சொல்லியதும், அந்த வயோதிக இளவரசர் கூச்சலிட்டு,

அவர்களைத் தாம் பார்க்க விரும்பவில்லை என்றும், இளவரசிக்கு இஷ்டமானால் அவள் பார்க்கலாமென்றும், தம்மிடம் அழைத்து வரக்கூடாது என்றும் சொன்னபடியால், இளவரசி மேரி மிகுந்த பரபரப்பு கொண்டிருந்தாள். தான் அவர்களை வரவேற்பது என்று அவள் முடிவு செய்தாள். ஆனால், எந்த சமயத்திலும் அந்த வயோதிக இளவரசர் வந்து, ஏதாவது கோமாளித்தனமாகச் செய்யக்கூடாதே என்று பயந்திருந்தாள். ஏனென்றால், ராஸ்டோவ்களின் விஜயம் அவருக்கு மிகுந்த வெறுப்பாக இருந்தது.

'என் அன்புள்ள இளவரசியே, எனது பாடகியை உன்னிடம் அழைத்து வந்திருக்கிறேன்' என்று கோமகன் சொல்லி, குனிந்து மரியாதை செய்தார். அதற்குள் வயோதிக இளவரசர் வந்துவிடுவாரோ என்று பீதியுற்றவராக சுற்றிலும் பார்த்தார். 'நீங்கள் ஒருவருக்கொருவர் பழகி அறிந்துகொள்ள வேண்டும். அதற்காக நான் மிகவும் சந்தோஷமடைகிறேன். வயோதிக இளவரசர் இன்னமும் உடம்பு அசௌக்யமாய் இருப்பதைக் கேட்டு, நான் மிகவும் வருத்தமடைகிறேன்' என்று இம்மாதிரியாக பல சாதாரண விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். 'ஒரு கால் மணி நேரத்திற்கு நட்டாஷாவை உன்னிடம் விட்டுப் போக அனுமதி கொடுத்தால், அதற்குள்ளாக நான் அன்னா செமியோனாவ்னாவைப் போய் பார்த்துவிட்டு வந்துவிடுகிறேன். அந்த இடம் வெகு சமீபத்தில்தான் இருக்கிறது. டாக் ஸ்கொயர் என்ற பிரதேசத்தில் இருக்கிறது. அதன் பின்னால், அவளை அழைத்துப் போக நான் வருகிறேன்.'

இந்த சாதுர்யமான சரடு கோமகனால் உற்பத்தி செய்யப்பட்டது. (இதை பின்னால் அவர் தமது குமாரிக்குச் சொன்னார்.) எதிர் கால மைத்துனிகள் இருவரும், ஒருவருக்கொருவர் தாராளமாக பேசிக்கொள்ள, ஒரு சந்தர்ப்பம் கொடுக்க வேண்டுமென்பதற் காகவும், அவர் இம்மாதிரி செய்தாராம். அதைத் தவிர, அவர் பயந்து கொண்டிருந்த அந்த வயோதிக இளவரசரைப் பார்க்க வேண்டிய ஆபத்து எங்கே வந்துவிடுமோ என்று நினைத்து, அதை தவிர்ப்பதற்காகவும் அவர் இம்மாதிரி செய்தாராம். ஆனால், இந்த பின்னால் சொல்லிய விஷயத்தை, தமது குமாரிக்குச் சொல்லவில்லை. நட்டாஷா தனது தந்தை அமைதியற்றவராகவும், பதைபதைப்புள்ளவராகவும் இருப்பதை உணர்ந்து, அவமானம் அடைந்தாள். அவருக்காக அவள் நாணி முகம் சிவந்தாள். அவளுடைய முகம் சிவந்ததற்காக அவள் இன்னும் அதிகமாகக் கோபம் கொண்டாள். அந்த இளவரசியை, ஒரு தைரியமும், எதிர்த்து நிற்கும் தோற்றமும்கொண்ட பார்வையோடு பார்த்தாள். அந்தப்

பார்வை, யாருக்காகவும் அவள் பயப்படவில்லை என்பதைச் சொல்வதைப் போல இருந்தது. தாங்கள் இருவரும் பேசிக் கொண்டிருப்பதற்கு மிகவும் மகிழ்ச்சிகொள்வதாக இளவரசி கோமகனிடம் சொன்னாள். ஆகவே, அன்னா செமியோனாவ்னாவின் வீட்டில் இன்னும் அதிகமான நேரங்கள் கூடத் தங்கலாமென்றும் அவள் சொன்னாள். அவர் புறப்பட்டுப் போனார்.

இளவரசி மேரி பரபரப்பு கொண்டு, நட்டாஷாவை அடிக்கடி நோட்டமிட்டுக்கொண்டிருந்தாலும் நட்டாஷாவோடு தாராளமாகப் பேசிக்கொண்டிருக்க வேண்டுமென்று விரும்பினாள். ஆனால், குமாரி பௌரியன் அந்த அறையிலேயே தங்கி, விடாப்பிடியாக மாஸ்கோவிலுள்ள விநோதங்களையும், நாடகக் கொட்டகை களையும் பற்றிப் பேசிக் கொண்டிருந்தாள். முதலில் முன் அறையில் ஏற்பட்ட தயக்கத்தைக் கண்டு, நட்டாஷா மனம் புண்பட்டாள். பின்னால், தன்னுடைய தந்தையின் நடுக்கத்தைக் கண்டும், இயற்கைக்கு விரோதமான முறையில் இளவரசி நடந்து கொள்வதைக் கண்டும், அவள் தன்னை வரவேற்பது ஏதோ ஒரு பெரிய தயவு காட்டுகிற மாதிரி இருக்கிறது என்றும் அவள் நினைத்து மனம் புண்பட்டாள். இவையெல்லாம் அவளுடைய மனதிற்கு மிகுந்த வருத்தத்தைக் கொடுத்தன. இளவரசி மேரியை அவள் விரும்பவில்லை. அவள் அழகற்றவள் என்றும், உணர்ச்சியில்லாதவள் என்றும், நடிப்புக்காரி என்றும் அவள் நினைத்தாள். ஆகவே, நட்டாஷா தன்னை அடக்கிக் கொண்டாள். தன்னை அறியாமலேயே, ஏதோ பராக்குப் புத்தியில் இருப்பது போலக் காணப்பட்டாள். இந்த பாவனை இளவரசி மேரியின் விரோதத்தை இன்னும் அதிகரித்தது. மனத்திற்குப் பிடிக்காத அடக்கமான உரையாடல்களில் ஐந்து நிமிஷங்கள் கழிந்தன. அதன் பின்னால், வேகமாக அவர்களை நோக்கி, செருப்பு அணிந்த ஒருவர் வருகிற காலடி ஓசை கேட்டது. அதைக் கேட்டு, இளவரசி மேரி பீதியுற்றதுபோல் காணப்பட்டது. கதவு திறந்தது. வயோதிக இளவரசர் உடுப்பு - கவுன் அணிந்து, தலையில் ஒரு வெள்ளைத் தொப்பி தரித்து உள்ளே வந்தார்.

'ஆ, திருமதியே' என்று அவர் ஆரம்பித்தார். 'திருமதியே, கோமகளே... கோமகள் ராஸ்டோவா என்று நினைக்கிறேன். என்னை மன்னிக்கும்படி, என்னை மன்னிக்கும்படி உன்னைக் கெஞ்சுகிறேன்... எனக்குத் தெரியாது, திருமதியே. கடவுள்தான் எனக்கு சாட்சி. நீ எங்களைக் கௌரவிப்பதற்காக இங்கு விஜயம் செய்திருக்கிறாய் என்று எனக்குத் தெரியாது. நான் இம்மாதிரி

உடையில் என் குமாரத்தியைப் பார்ப்பதற்காகவே வந்தேன். என்னை மன்னிக்கும்படி உன்னைக் கெஞ்சுகிறேன். கடவுள் எனக்கு சாட்சி. எனக்குத் தெரியாது-' என்று திரும்பத் திரும்பச் சொல்லி, கடவுள் என்ற வார்த்தையை இயற்கைக்கு விரோதமாகவும் இனிமைக்கு விரோதமாகவும் வற்புறுத்திப் பேசினார். இளவரசி கீழ் நோக்கிய கண்களுடன், தன் தந்தையையோ, நட்டாஷாவையோ பார்க்க தைரியமில்லாமல் நின்று கொண்டிருந்தாள்.

நட்டாஷா எழுந்து தலை குனிந்து மரியாதை காட்டினாள். என்ன செய்வது என்பது அவளுக்குத் தெரியவில்லை. குமாரி பௌரியன் மட்டும் இணக்கமாக புன்முறுவல் காட்டினாள்.

'என்னை மன்னிக்கும்படி உன்னைக் கெஞ்சுகிறேன். என்னை மன்னிப்பாயாக. கடவுளே எனக்கு சாட்சி. எனக்குத் தெரியாது' என்று வயோதிகர் முணு முணுத்தார். நட்டாஷாவை உச்சி முதல் உள்ளங்கால் வரை பார்த்துவிட்டு, அவர் வெளியே போனார்.

இந்தக் குழப்பத்திலிருந்து முதலில் உணர்வு பெற்றவள் குமாரி பௌரியன். உடனே இளவரசரின் அசௌக்கியத்தைப் பற்றி அவள் பேச ஆரம்பித்தாள். நட்டாஷாவும் இளவரசி மேரியும் மௌனமாக ஒருவரை ஒருவர் பார்த்தார்கள். என்ன பேச வேண்டுமென்று அவர்கள் விரும்பினார்களோ, அதைச் சொல்லாமல் அவர்கள் ஒருவரை ஒருவர் பார்க்கப் பார்க்க, ஒருவர் மீது ஒருவருக்கு உள்ள விரோத மனோபாவம் அதிகரித்து வளர்ந்து வந்தது.

கோமகன் திரும்பி வந்தார். நட்டாஷா அதைக் கண்டு மகிழ்ச்சி கொண்டாள். அதை விட்டு அவள் புறப்பட்டுப் போவதற்கு அவசரம் கொண்டாள். இது மரியாதைக் குறைவாய் இருந்தாலும், அவள் அதைக் கவனிக்கவில்லை. அச்சமயத்தில், அந்த விறைப்பான தன்னைவிட வயதில் மூத்தவளான இளவரசியை அவள் வெறுத்தாள். அவள் அரை மணி நேரம் தன்னிடம் பேசிக்கொண்டிருந்த போதிலும், ஒரு தடவை கூட, இளவரசர் ஆண்ட்ரூவைப் பற்றி குறிப்பிடாமல் இருந்ததால், தன்னை தர்மசங்கடமான நிலைமையில் வைத்துவிட்டதாக அவள் நினைத்தாள். 'அந்த பிரஞ்சு பெண்ணின் முன்பாக நானாகப் பேச ஆரம்பிக்க முடியாது' என்று நட்டாஷா நினைத்தாள். அதே நினைப்பு. இளவரசி மேரியை துன்புறுத்திக் கொண்டிருந்தது. நட்டாஷாவிடம் என்ன பேசியிருக்க வேண்டுமென்பதை அவள் அறிவாள். ஆனால், குமாரி பௌரியன் அங்கே இருந்ததால், அவளால் அதைப் பேச முடியவில்லை. தவிரவும் திருமணத்தைப் பற்றி பேசுவதற்கும் அவளுக்குக் கஷ்டமாய் இருந்தது. அதற்குக்

காரணம் என்னவென்பது அவளுக்குத் தெரியவில்லை. கோமகன் அந்த அறையை விட்டுப் புறப்பட்டுக் கொண்டிருந்தார். இளவரசி மேரி வேகமாக நட்டாஷாவிடம் சென்று, அவளுடைய கையைப்பற்றி, ஒரு ஆழ்ந்த பெருமூச்சு விட்டுச் சொன்னாள்:

'கொஞ்சம் பொறு. நான்...'

கேலியாக நட்டாஷா அவளை நோக்கினாள். அதற்கு என்ன காரணமென்பது அவளுக்கே தெரியாது.

'அன்புள்ள நட்டாலி, என்னுடைய சகோதரர் தன்னுடைய மகிழ்ச்சியைக் கண்டு பிடித்ததற்காக நான் சந்தோஷமடைகிறேன் என்பதை நீ அறிந்துகொள்ள விரும்புகிறேன்...' என்று இளவரசி மேரி சொன்னாள்.

அவள் சிறிது நிறுத்தினாள். தான் உண்மையைச் சொல்ல வில்லையென்ற உணர்ச்சி அவளுக்கு ஏற்பட்டது. இதை நட்டாஷா கவனித்து, அதன் காரணத்தை யூகித்துக் கொண்டாள்.

'இளவரசியே, அதைப்பற்றிப் பேசுவதற்கு, இப்போது சௌகரியமில்லை என்று நான் நினைக்கிறேன்' என்று வெளிப் படையான கண்ணியத்தோடும், கண்டிப்போடும் பேசினாள். ஆனால், அவளுடைய கண்ணீர் அவளுடைய குரலை அமுக்கிக் கொண்டிருந்ததாக அவள் உணர்ந்தாள்.

'நான் என்ன சொன்னேன்? நான் எப்படி நடந்துகொண்டேன்?' என்று நினைத்துக்கொண்டே, அந்த அறையை விட்டு வெளியே போனாள்.

டின்னர் சாப்பிடுவதற்கு, நட் டாஷாவுக்காக அவர்கள் வெகு நேரம் காத்துக் கொண்டிருந்தார்கள். அவள் தன்னுடைய அறையில் அமர்ந்து குழந்தையைப்போல அழுதுகொண்டு, விம்மிக்கொண்டு, மூக்கைச் சிந்திக்கொண்டிருந்தாள். சோனியா அவளுக்குப் பக்கத்தில் நின்று, அவளுடைய தலை முடியை முத்தமிட்டுக் கொண்டிருந்தாள்.

'நட்டாஷா, இதெல்லாம் என்ன? அவர்களைப்பற்றி உனக்கு என்ன கவலை? எல்லாம் கழிந்துபோகும், நட்டாஷா.'

'ஆனால், அது எவ்வளவு மனம் புண்படக்கூடியதாய் இருந்தது என்பதை, நீ மட்டும் அறிந்திருந்தால்... நான்...'

'அதைப்பற்றிப் பேசாதே, நட்டாஷா. அது உன்னுடைய தவறு அல்ல. ஆகவே, நீ அதைப்பற்றி எதற்காகக் கவலைப்பட வேண்டும்? என்னை முத்தமிடு' என்றாள் சோனியா.

நட்டாஷா தனது தலையை உயர்த்தி, தனது சிநேகிதியின் இதழ்களில் முத்தமிட்டாள். தன்னுடைய ஈரமான முகத்தை, அவளுடைய முகத்தில் வைத்து அழுத்தினாள்.

'என்னால், உனக்கு சொல்ல முடியாது. எனக்குத் தெரியாது. ஒருவரையும் குற்றம் சொல்ல முடியாது. அது என்னுடைய தவறு. ஆனால், என்னை அவையெல்லாம் பயங்கரமாய் வருத்துகின்றன. ஓ, அவர் ஏன் இன்னும் வரவில்லை?...'

சிவந்த கண்களோடு அவள் டின்னருக்கு வந்தாள். ராஸ்டோவ்களை எப்படி அந்த வயோதிக இளவரசர் வரவேற்றார் என்பதை, மரியா டிமிட்ரிவ்னா அறிவாள். ஆகவே, நட்டாஷாவின் மனம் எப்படிக் குழம்பியிருக்கிறது என்பதை அறியாதவள்போல நடித்து, உறுதியோடும், கூச்சலிட்டும், அந்த சாப்பாட்டு மேஜையைச் சுற்றியிருந்த கோமகளோடும் மற்ற விருந்தாளி களோடும், தமாஷாகப் பேசிக்கொண்டிருந்தாள்.



அன்று மாலை ராஸ்டோவ்கள் நாடகத்திற்குப் போனார்கள். அந்த நாடகத்தில் அவர்களுக்காக மரியா டிமிட்ரிவ்னா ஒரு பெட்டியை ரிசர்வ் செய்திருந்தாள்.

நட்டாஷா போவதற்குப் பிரியப்பட வில்லை. ஆனால் அவளுக்காகவே அந்த ஏற்பாட்டை மரியா டிமிட்ரிவ்னா செய்திருந்தபடியால், அவளுடைய அன்பை மறுக்க முடியவில்லை. அவள் உடைகள் அணிந்துகொண்டு, நடன மண்டபத்தில் தன் தகப்பனாருக்காகக் காத்துக்கொண்டிருந்தபோது, அங்கிருந்த பெரிய நிலைக் கண்ணாடியில் தன்னைப் பார்த்தாள். தான் அழகாகவும், மிகுந்த அழகாகவும் காணப்படுவதாக அவள் நினைத்தாள். அதைவிட அதிக சோகமான உணர்ச்சி அவள் மனதில் ஏற்பட்டது. ஆனால் அது ஒரு இனிமையான கனிவு கொண்ட சோகமாய் இருந்தது.

'ஓ, கடவுளே, அவர் மட்டும் இங்கு இப்பொழுது இருப்பாரானால், அப்போது நான் நடந்துகொண்டபடி நடந்திருக்கமாட்டேன். வேறுவிதமாக நடந்திருப்பேன். நான் அசட்டுத்தனமாய் இருந்திருக்கமாட்டேன். பீதி கொண்டிருக்க மாட்டேன். அவரை அப்படியே தழுவித் தொத்திக் கொண்டிருப்பேன். அவர் என்னை அடிக்கடி பார்ப்பதைப்போல,

அந்த ஆர்வம் கொண்ட கண்களோடு என்னை நோக்கும்படி செய்திருப்பேன். அவர் வழக்கமாகச் சிரிப்பதைப்போலச் சிரிக்கும்படி செய்திருப்பேன். அவருடைய கண்கள்-அந்தக் கண்களை இதோ பார்க்கிறேன்' என்று நட்டாஷா நினைத்தாள். 'அவளுடைய தந்தையைப் பற்றியோ, சகோதரியைப் பற்றியோ, எனக்கு என்ன? அந்தமுகத்தையும், அந்தக் கண்களையும் அந்தப் புன்னகையையும், ஆண்மையையும் ஆனால் குழந்தை முகத்தையும் கொண்ட அவரையே, அவரை மட்டுமே, காதலிக்கிறேன்... இல்லை, அவரைப்பற்றி நான் நினைக்காமல் இருப்பது நல்லது. அவரைப்பற்றி நினைக்காமல், அவரை மறந்துவிட வேண்டும். தற்காலிகமாக, முற்றிலும் மறந்துவிடவேண்டும். என்னால் இந்த காத்துக்கொண்டிருக்கும் கஷ்டத்தைச் சகிக்க முடியவில்லை. நான் ஒரு நிமிஷத்தில் அழுதுவிடுவேன்' என்று சொல்லி, அந்தக் கண்ணாடியிலிருந்து முகத்தைத் திருப்பி, அழாமல் இருப்பதற்காக முயற்சி செய்தாள். இந்த சோனியா, இந்த நிக்கலஸை எம்மாதிரியாக அப்படி அமைதியுடனும் சாந்தமாகவும் காதலித்து, எம்மாதிரியாக இவ்வளவு நீண்ட காலமாக பொறுமையாக காத்திருக்க முடிகிறது?' என்று அவள் நினைத்து, அங்கு வந்துகொண்டிருந்த சோனியாவைப் பார்த்தாள். அவள் புறப்படுவதற்குத் தயாராகக் கையில் ஒரு விசிறியுடன் வந்தாள். 'இல்லை, அவள் முற்றிலும் மாறானவள். என்னால் அப்படி முடியாது.'

நட்டாஷா அச்சமயத்தில் மிகுந்த கனிவுடனும் மென்மையுடனும் காணப்பட்டாள். அதனால்தான் காதலிப்பதோ, காதலிக்கப்படுவதோ, அவளுக்கு போதுமானதாய் இல்லை. அவள் யாரைக் காதலிக்கிறாளோ, அவரை அப்போதே உடனே தழுவவேண்டுமென்று விரும்பினாள். அவருடன் காதல் பேசவும், அவளுடைய இருதயத்தில் நிரம்பியிருந்த மாதிரியான காதல் பேச்சுகளை அவரிடமிருந்து கேட்கவும் அவள் விரும்பினாள். வண்டியினுள் தன்னுடைய தந்தையோடு உட்கார்ந்திருந்தபோது, மிகுந்த வருத்தம் நிறைந்த சிந்தனையுடன், தெருக்களில் உள்ள விளக்குகள் பனி மூடிய கண்ணாடி வழியாக மினுக்கிடுவதை கவனித்துக்கொண்டு வந்தாள். அவள் மிகுந்த சோர்வோடும், மிகுந்த காதலுடனும் இன்னமும் இருந்தபடியால், எங்கே அவள் போகிறாள், யாருடன் போகிறாள் என்பதைக்கூட மறந்திருந்தாள். ராஸ்டோவ்களின் வண்டி, மற்ற வண்டிகளின் வரிசையில் கலந்து, அதன் சக்கரங்கள் அந்த உறைபனியில் கிரீச்சிட, நாடகக் கொட்டகையைப் போய் அடைந்தது. நட்டாஷாவும் சோனியாவும்,

தங்களுடைய உடைகளைச் சிறிது தூக்கிக்கொண்டு வெளியே குதித்தார்கள். கோமகன் வெளியே இறங்குவதற்கு சேவகர்கள் உதவி செய்தார்கள். கொட்டகைக்குள் நுழைந்துகொண்டிருந்த ஆண்-பெண்களுடன் கலந்து, அங்கு நாடகத்தின் நிகழ்ச்சி முறை புத்தகங்களை விற்றுக்கொண்டிருந்தவர்களைக் கடந்து, அந்த தாழ்வாரத்தின் வழியாக, முதல் வரிசைகளிலுள்ள பெட்டிகளுக்குப் போனார்கள். கதவுகள் எல்லாம் மூடப்பட்டிருந்தாலும், சங்கீதம் கேட்டுக்கொண்டிருந்தது.

'நட்டாஷா, உனது தலை முடி...' என்று சோனியா மெதுவாகக் கூறினாள்.

ஒரு சேவகன் மரியாதையோடு அந்தச் சீமாட்டிகளின் முன்பாக வந்து, அவர்களுடைய பெட்டியின் கதவைத் திறந்தான். இச்சமயம் சங்கீதத்தின் தொனி பலமாகக் கேட்டது. அந்த திறந்த கதவு வழியாக, நன்றாக வெளிச்சமிடப்பட்ட மற்ற பெட்டிகளின் வரிசைகள் காணப்பட்டன. அந்த பெட்டிகளில்சீமாட்டிகள் திறந்த கைகளுடனும், தோள்களுடனும் அமர்ந்திருந்தார்கள். சப்தம் மிகுந்த நாற்காலி வரிசைகளில், யூனி பாரம் அணிந்தவர்கள் பிரகாசமாய் அமர்ந்திருந்தார்கள். இந்தக் காட்சிகள் எல்லாம் அவர்களுடைய பார்வையின் முன்பாக மின்னிக்கொண்டிருந்தன. அடுத்த பெட்டியில் வந்து உட்கார்ந்த ஒரு சீமாட்டி, நட்டாஷாவின் அழகைப் பார்த்து பெண்மைக்குரிய ஆசை கொண்டு, அவளை நோட்டமிட்டாள். இன்னும் நாடகத்தில் படுதாவை உயர்த்த வில்லை. ஆரம்ப சங்கீதம் நடந்துகொண்டிருந்தது. தனது கவுனைத் தட்டிவிட்டுக் கொண்டு, சோனியாவோடு நட்டாஷா சென்று பெட்டியில் அமர்ந்து, எதிரிலுள்ள பெட்டி வரிசைகளைப் பார்த்தாள். இச்சமயத்தில் நூற்றுக்கணக்கான கண்கள், அவளுடைய திறந்த கைகளையும், கழுத்தையும் பார்த்துக்கொண்டிருந்தன. இம்மாதிரி ஒரு உணர்ச்சியை அவள் அனுபவித்து வெகு காலமாயிற்று. ஆகவே, இந்த உணர்ச்சி அவளுக்கு இதமாகவும் இதமில்லாமலும் தோன்றின. இதன் பலனாக, பழைய காலத்து நினைவுகளும், ஆசைகளும், அவற்றை ஒட்டிய மனோராஜ்யங் களும், அவள் கண் முன்பாக வந்து நின்றன.

நட்டாஷா, சோனியா ஆகிய இரண்டு அதி அழகான பெண்கள் கோமகன் ராஸ்டோவோடு உள்ளே வந்தது, அங்கிருந்த பலருடைய கவனத்தையும் கவர்ந்தது. ஏனெனில், வெகு காலமாக அவர்கள் மாஸ்கோவில் காணப்படவில்லை. தவிர, ஒவ்வொருவரும் இளவரசர் ஆண்ட்ரூவோடு நட்டாஷாவுக்கு நிச்சயதார்த்தமாய் இருப்பதாக லேசாக அறிந்து கொண்டிருந்தார்கள். ராஸ்டோவ்கள்

வெகு காலமாகக் கிராமத்தில் வசித்து வந்ததையும் அவர்கள் அறிவார்கள். ஆகவே, மிகுந்த ஆச்சரித்தோடு ருஷ்யாவிலேயே மிகச் சிறந்த ஜோடிகளில் ஒன்றாக விளங்கப் போகிற அந்த நிச்சயதார்த்தமான பெண்ணைப் பார்த்தார்கள்.

நட்டாஷாவின் அழகு, கிராமாந்திர வாழ்க்கையினால் அதிகமாயிற்று. இதை ஒவ்வொருவரும் அவளிடம் சொல்லியிருக் கிறார்கள். அன்று மாலை அவளுக்கு ஏற்பட்டிருந்த உள்ளக் கிளர்ச்சியினால், அந்த அழகு இன்னும் அதிகமாயிற்று. அவளுடைய பூரணமாகிய, உயிர்த் துடிப்பும் அழகும், தன்னைச் சுற்றியுள்ள எதிலும் பாராமுகம் கொண்ட அவளுடைய தோற்றமும், அவளைப் பார்த்த ஒவ்வொருவருக்கும் மனதில் ஆழமாய்ப் பதிந்தன. அவளுடைய கறுப்புக் கண்கள், தனிப்பட்ட யாரையும் பார்க்காமல் பொதுவாகக் கூட்டத்தைப் பார்த்தன. அவளுடைய மிருதுவான கை, முழங்கைக்கு மேலாக சட்டையினால் மூடப்படாமல் அந்தப் பெட்டியின் ஓரத்தில் தைக்கப்பட்டிருந்த வெல்வெட் மீது காணப்பட்டது. தவிர, தன்னையறியாமலேயே சங்கீதத்திற்குத் தக்கபடி, தன்னுடைய கைகளைத் திறந்தும், மூடியும், கையில் இருந்த நிகழ்ச்சி நிரலை கசக்கியும் செய்து கொண்டிருந்தாள்.

'அதோ பார், அலேனினா; அதோ இருக்கிறாள். அவளுடைய தாயாரும் இருக்கிறாள், அல்லவா?' என்று சோனியா கேட்டாள்.

'அட அன்பே, மைக்கேல் கிரைலாவிச் இன்னமும் அதிகமாகப் பருத்துவிட்டார்!' என்று கோமகன் கூறினார்.

'நம்முடைய அன்னா மிக்காய்லாவ்னாவைப் பாருங்கள். அவள் எம்மாதிரியான தலையணியை அணிந்து கொண்டிருக்கிறாள்!'

'காராகின்களும், ஜூலி-போரிஸும் இருக்கிறார்கள். அவர்களைப் பார்த்த உடனேயே அவர்களுக்கு நிச்சயதார்த்தம் ஆகிவிட்டது என்று ஒவ்வொருவருக்கும் தெரிகிறது...'

'ட்ரூபெட்ஸ்கோய் திருமணம் செய்ய பிரேரித்து விட்டாரா?'

'ஆமாம்; நான் இன்று கேள்விப்பட்டேன்' என்று ஷின்ஷைன் கூறிக்கொண்டு, ராஸ்டோவ்களின் பெட்டிக்கு வந்தார்.

தமது தந்தை பார்க்கும் திசையை நட்டாஷா நோக்கினாள். அங்கே ஜூலி தனது தாயாருக்குப் பக்கத்தில், முகத்தில் மகிழ்ச்சியோடு, அவளுடைய பருத்த சிவந்த கழுத்தில் முத்தாரம் அணிந்து காணப்பட்டாள். அந்தக் கழுத்தில் அவள் பவுடர் போட்டிருந்தாள் என்பதை நட்டாஷா அறிவாள். அவர்களுக்குப் பின்னால் ஒரு

புன்னகை கொண்டு ஜூலியின் வாய்க்கு நேராகத் தமது காதை நீட்டி, மிக அழகாக தலை முடியை வாரி விட்டிருந்த போரிஸ் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவர் கீழ் பார்வையாக ராஸ்டோவ்களைப் பார்த்து, எதையோ சொல்லி, தனது நிச்சயதார்த்தமான பெண்ணிடம் புன்முறுவல் காட்டிக் கொண்டிருந்தார்.

'அவர்கள் நம்மைப் பற்றி, என்னையும் அவரையும் பற்றி, பேசுகிறார்கள்' என்று நட்டாஷா நினைத்தாள். 'அவளுடைய பொறாமையை அவர் தணித்துக் கொண்டிருக்கிறார் என்பதில் சந்தேகம் இல்லை. அவர்கள் எதற்காகக் கஷ்டப்படவேண்டும்? அவர்கள் யாரைப் பற்றியும் துளிகூட எனக்கு சிரத்தை கிடையாது என்பதை அவர்கள் மட்டும் தெரிந்து கொண்டிருந்தால்!'

அவர்களுக்குப் பின்னால், ஒரு பச்சைத் தலையணியை அணிந்து கொண்டு, எல்லாவற்றையும் கடவுள் கையில் கொடுத்து விட்டதைப் போல, ஒரு சந்தோஷமான தோற்றத்தோடு, அன்னா மிக்காய்லாவ்னா அமர்ந்திருந்தாள். அவர்களுடைய பெட்டியில் ஒரு நிச்சயதார்த்த ஜோடி இருக்கிற இடத்தில் ஏற்படக்கூடிய மகிழ்ச்சி பொங்கிய சுற்றுணர்ச்சி அந்தப் பெட்டியில் நிலவிக்கொண்டிருந்தது. அந்த உணர்ச்சியை நட்டாஷா அறிவாள். அதை அவள் மிகவும் விரும்பினாள். அவள் தனது பார்வையை அதிலிருந்து திருப்பினாள். திடீரென்று நட்டாஷாவுக்கு அன்று காலை விஜயத்தினால் ஏற்பட்ட அவமானங்கள் ஞாபகத்திற்கு வந்தன.

'என்னை அவருடைய குடும்பத்தில் வரவிடாமல் செய்வதற்கு அவருக்கு என்ன உரிமை இருக்கிறது? ஓ, அதைப் பற்றி நினைக்காமல் இருப்பது நல்லது. அவர் வருகிற வரையில் அதைப் பற்றி நினைக்கக்கூடாது!' என்று அவள் தனக்குத் தானே சொல்லிக்கொண்டு, நாற்காலி வரிசைகளிலிருந்து பழக்கமான, பழக்கமில்லாத, முகங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள். எதிரில் நடு மத்தியில் ஒரு ஆர்க்கெஸ்டிரா பக்கத்திலுள்ள அடைப்புக் கம்பியைப் பற்றிக் காண்டு, பாரஸீக உடையில், அவருடைய சுருளைத் தலை முடியைக் கத்தையாகப் பின்னால் சீவி விட்டுக்கொண்டு, டோலாகாவ் நின்றுகொண்டிருந்தார். அங்கிருந்தவர்கள் எல்லாருக்கும் பூராவாகத் தெரிகிற விதத்தில் அவர் நின்றார். ஒவ்வொருவரும் தன்னைக் கவனிக்கிறார்கள் என்பதை அவர் அறிந்திருந்தும், தமது சொந்த அறையில் இருப்பதைப்போல சங்கோஜமில்லாமல் இருந்தார். அவரைச் சுற்றிலும் மாஸ்கோவிலுள்ள பிரமாதமான வாலிபர்கள்

எல்லோரும் அமர்ந்திருந்தார்கள். அவர்கள் எல்லாருக்கும் அவர் ஒரு தலைவர் மாதிரி தோன்றினார்.

நாணி முகம் சிவந்திருந்த சோனியாவை கையினால் இடித்து, அவள் மீது முன்னால் காதல் கொண்டிருந்தவரை, சிரித்துக் கொண்டு கோமகன் சுட்டிக் காட்டினார்.

'அவரை உனக்கு ஞாபகமிருக்கிறதா?' என்று சொல்லி, 'அவர் இப்போது எங்கிருந்து குதித்திருக்கிறார்?' என்று ஷின்ஷைனைப் பார்த்துக் கேட்டார். 'அவர் எங்கேயோ மறைந்து போய் விடவில்லையா?'

'அவர் மறைந்திருந்தார். காக்கஸஸ் என்ற பிரதேசத்தில் இருந்தார். பின்னால் அங்கிருந்து ஓடி விட்டார். பாரஸீகத்தில் யாரோ ஒரு இளவரசருக்கு அவர் மந்திரியாக வேலை பார்த்து வந்ததாக யாரோ சொன்னார்கள். அங்கே அவர் ஷாவினுடைய சகோதரரைக் கொன்று விட்டாராம். இப்பொழுது மாஸ்கோவிலுள்ள சீமாட்டிகள் எல்லோரும், அவர் மீது பைத்தியமாய் இருக்கிறார்கள். அவர்தான் பாரஸீக டோலாகாவ். டோலாகாவைப் பற்றிக் குறிப்பிடப் படாத பேச்சை, நாம் இப்போது கேட்க முடியவில்லை. அவர்கள் எல்லாரும் அவரைப் பற்றியே பேசுகிறார்கள். அவர்கள் எல்லாரும் அவர் ரொம்ப இனிமையானவர் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். டோலாகாவும், அனடோல் குராகினும், நமது சீமாட்டிகள் எல்லாருடையவும் தலைகளைத் திருப்பி விட்டார்கள்' என்று ஷின்ஷைன் கூறினார்.

ஒரு வளர்ந்த அழகான சீமாட்டி, நிறைந்த ஜடையோடும், அவருடைய தடித்த தோள்களும் கழுத்தும் திறந்திருக்க, அந்தக் கழுத்தில் இரட்டை முத்தாரங்கள் அணிந்து, பக்கத்துப் பெட்டிக்கு பட்டாடை சலசலக்க வந்து சேர்ந்தாள். அவள் தன்னுடைய ஆசனத்தில் அமருவதற்கு வெகு நேரமாயிற்று.

தன்னையறியாமலேயே, நட்டாஷா அந்தக் கழுத்தையும், அந்த புஜங்களையும், முத்தாரங்களையும், தலையலங்காரத்தையும் பார்த்து, அந்த புஜங்கள் மீதும் முத்தாரங்கள் மீதும் வியப்புக் கொண்டாள். இரண்டாவது தடவையாக நட்டாஷா அவளைப் பார்த்துக் கொண்டிருந்தபோது அந்தச் சீமாட்டி திரும்பிப் பார்த்தாள். அவள் கோமகனைப் பார்த்து புன்சிரிப்புக் கொண்டு தலையை ஆட்டினாள். அவள் தான் கோமகள் பெஜுகாவா. பீயரின் மனைவி. கோமகன் உயர் வட்டாரத்தில் ஒவ்வொருவரையும் அறிந்திருந்த படியால், அவளிடம் குனிந்து ஏதோ பேசினார்.

'இங்கே வெகு காலமாக இருக்கிறாயா, கோமகளே?' என்று அவர் கேட்டார். 'நான் ஒரு தடவை உன் கையை முத்தமிடுவதற்காக, உன் வீட்டிற்கு வருவேன். இப்போது சில அலுவல்களுக்காக இங்கு வந்திருக்கிறேன். என்னுடன் என்னுடைய பெண்களையும் அழைத்து வந்திருக்கிறேன். செமியோனாவா என்பவள் மிகச் சிறப்பாக நடிக்கிறாள் என்று சொல்லுகிறார்கள். கோமகன் பீயர், எங்களை மறப்பதேயில்லை. அவர் இங்கே இருக்கிறாரா?'

'ஆமாம்; அவரும் இப்போது இங்கே வரலாம்' என்று ஹெலன் பதிலளித்து, மிகுந்த கூர்மையோடு நட்டாஷாவை நோக்கினாள்.

கோமகன் ராஸ்டோவ் மீண்டும் தமது ஆசனத்தில் அமர்ந்தார்.

'என்ன அழகு! என்ன அழகு! அவள் அழகாயில்லையா?' என்று அவர் நட்டாஷாவிடம் மெதுவாய் சொன்னார்.

'பிரமாதம்! கண்டதும் சுலபமாய் காதல் கொள்ளக்கூடிய பெண்களில், அவள் ஒருத்தி' என்று நட்டாஷா பதிலளித்தாள்.

அச்சமயத்தில் அந்த ஆரம்ப கீதத்தின் கடைசி அடி கேட்டுக் கொண்டிருந்தது. சங்கீத வாத்தியார் தமது கையில் வைத்திருந்த குச்சியினால் கீழே தட்டி அதற்கு முற்றுப் புள்ளி வைத்தார். தாமதமாய் வந்தவர்கள், தங்களுடைய ஆசனங்களில் அமர்ந்து கொண்டிருந்தார்கள். அச்சமயம் நாடகத்தின் படுதா மேலே உயர்ந்தது.

அது மேலே உயர்ந்ததும், பெட்டிகளில் உள்ளவர்களும் நாற்காலிகளில் அமர்ந்திருந்தவர்களும் திடீரென்று மௌன மானார்கள். எல்லா ஆண்களும், வயதானவர்களும், வாலிபர்களும், ராணுவ யூனிபாரத்திலிருந்தவர்களும், மாலை உடையிலிருந்த வர்களும், தங்களுடைய திறந்த உடம்பில் முத்துக்கள் அணிந்திருந்த எல்லா பெண்களும், திடீரென்று மிகுந்த ஆர்வத்தோடு நாடக மேடையை நோக்கினார்கள். நட்டாஷாவும் அதே மாதிரி நோக்கினாள்.




அந்த நாடக மேடையின் தளமானது மிருதுவான பலகைகளால் போடப் பட்டிருந்தது. பக்கவாட்டுகளில் மரங்களின் சித்திரங்களை வைத்திருந்தார்கள். பின்னால் ஒரு துணிப் படுதா காணப்பட்டது. மேடையின் மத்தியில் சிவப்புச் சட்டைகளையும், வெள்ளைப்

பாவாடைகளையும் அணிந்து சில பெண்கள் அமர்ந்திருந்தார்கள். வெண்பட்டுடை அணிந்த ஒரு பருத்த பெண், தனியாக ஒரு தனிவான பெஞ்சில் அமர்ந்திருந்தாள். அதன் பின்னால் ஒரு பச்சை அட்டை ஒட்டப்பட்டு இருந்தது. அவர்கள் எல்லாரும் எதையோ பாடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பாடி முடிந்ததும், வெள்ளை உடையிலிருந்த அந்தப் பெண் நாடக வாத்தியாரின் பெட்டிக்குக் பக்கத்தில் வந்தாள். அங்கே ஒருவன், தனது தடித்த கால்களில் பிடித்தாற்போலப் பட்டுக் கால் சட்டையை அணிந்து கையில் ஒரு தோகையுள்ள தொப்பியையும் குத்துவாளையும் பிடித்து, அவளிடம் நெருங்கி கைகளை ஆட்டிக்கொண்டு பாட ஆரம்பித்தான்.

முதலில், அந்த நெருக்கமான கால் சட்டைகள் அணிந்த ஆண் மாத்திரம் பாட ஆரம்பித்தான். பின்னால், அவளும் பாடினாள். அதன் பின்னால், அவர்கள் பாடுவதை நிறுத்தினார்கள். வாத்தியங்கள் மட்டும் வாசித்துக்கொண்டிருந்தன. அவன் அந்தப் பெண்ணின் கைகளைப்பற்றி, அவளுடன் பாடுவதற்கான கட்டத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அந்தக் கட்டம் வந்ததும் இருவரும் பாடினார்கள். அவர்கள் பாடும்போது, அந்தக் கொட்டகையில் இருந்தவர்கள் கைதட்டியும் கூச்சலிட்டும் ஆரவாரம் செய்தார்கள். மேடையில் காதலர்களாக நடித்த அந்த ஆணும், பெண்ணும் புன்முறுவல் காட்டி கைகளைப் பரப்பி தலை வணங்கினார்கள்.

கிராமாந்திர வாழ்க்கைக்குப் பின்னால், அவளுடைய தற்கால மனோ நிலைமையில், இவையெல்லாம் விபரீதமாகவும் விசித்திரமாகவும் நட்டாஷாவுக்குத் தோன்றின. அவளால் அந்த நாடகத்தை கவனிக்க முடியவில்லை. சங்கீதத்தையும் கவனிக்க முடியவில்லை. வர்ணம் தீட்டிய பலகையையும், விசித்திரமாக உடையணிந்து, மேடையில் பேசியும் பாடியும் நடமாடியும் அந்தப் பிரகாசமான வெளிச்சத்தில் விசித்திரமாய் காணப்பட்ட ஆண்களையும், பெண்களையும் பார்த்துக்கொண்டிருந்தாள். அந்த நாடகம் எதைப் பிரதிபலிப்பதற்காகக் காட்டப்படுகிறது என்பதை அவள் அறிவாள். ஆனால், அது பொய்யான நடிப்பு என்றும், இயற்கைக்கு விரோதமானது என்றும் அவள் நினைத்தபடியால், அந்த நடிகர்களுக்காக முதலில் அவமானம் அடைந்தாள். பின்னால், அவர்களை வேடிக்கையாகப் பார்த்துக்கொண்டிருந்தாள். அந்தக் கூட்டத்தில் இருந்தவர்களின் முகங்களைப் பார்த்தாள். தனக்கு ஏற்பட்டிருப்பதைப் போல கேலியும் மனக் குழப்பமும் அவர்கள் முகத்தில் காணப்படுகின்றனவா என்பதை நோக்கினாள். ஆனால்

அவர்கள் எல்லாரும் மேடையில் நடப்பவைகளைக் கூர்ந்து கவனித்து, மகிழ்ச்சியை தெரிவிப்பதுபோலக் காணப்பட்டார்கள். அவையெல்லாம் பாசாங்கு என்று நட்டாஷாவுக்குத் தோன்றியது. 'அப்படித்தான் இருக்க வேண்டும் போலிருக்கிறது என்று நான் நினைக்கிறேன்' என அவள் நினைத்தாள். ஆசனங்களில் வரிசை வரிசையாக அமர்ந்து இருந்த பொமேடு தடவிய தலைகளை அவள் மாறி மாறிப் பார்த்துக் கொண்டே இருந்தாள். பின்னால், பெட்டிகளில் அமர்ந்து இருந்த பாதி நிர்வாணப் பெண்களைப் பார்த்தாள். முக்கியமாக, நன்றாக உடையணியாத, பக்கத்து பெட்டியிலிருந்த ஹெலனைக் கவனித்தாள். அவள் அமைதியான, மனச் சாந்திகொண்ட புன்னகை காட்டி, மேடையில் வைத்த கண்களை எடுக்காமல் இருந்தாள். அந்த முழு இடத்திலும் பிரகாசமான ஒளி வீசி வந்த விளக்குகளும், அங்கிருந்த கூட்டத்தினால் வரவர அதிகரித்து வந்த உஷ்ணமான காற்றும் நட்டாஷாவுக்கு கொஞ்சம் கொஞ்சமாக கிரக்கத்தைக் கொடுத்து வந்தது. இம்மாதிரியான கிரக்கத்தை அவள் அனுபவித்து வெகு காலமாயிற்று. அவள், தான் யார், தான் எங்கே இருக்கிறாள், தனக்கு முன்னால் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதைக் கூட அறிய முடியாமல் இருந்தாள். அவள் பார்த்துக்கொண்டும் நினைத்துக்கொண்டும் இருந்தபோது, விசித்திரமான தோற்றங்கள், எதிர்பாராத விதமாக, ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல், அவளுடைய மனத்தில் ஓடிக்கொண்டிருந்தன. தன்னுடைய பெட்டியின் ஓரத்தில் போய் நின்று, அந்த நடிகை பாடிக்கொண்டிருக்கிற பாட்டைப் பாடவேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. தனக்கு சமீபத்தில் அமர்ந்திருந்த ஒரு வயோதிகக் கனவானைத் தனது விசிறியால் தொடவேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. ஹெலனிடம் குனிந்து அவளைக் கூச்சம் காட்டவேண்டும் என்றும் தோன்றியது.

மற்றொரு பாட்டு ஆரம்பமாவதற்கு முன்பாக, நிசப்தமாய் இருந்த வேளையில் ராஸ்டோவ்களின் பெட்டிக்குப் பக்கத்தில் உள்ள ஒரு கதவு கிரீச்சிட்டது. அப்பொழுதுதான் வந்த ஒருவர் ஆசன வரிசைக்குப் போகிற காலடி ஓசை கேட்டது. 'அதோ, குராகின்' என்று ஷின்ஷைன் மெதுவாகக் கூறினார். புதிதாய் வந்தவரை கோமகள் பெஜுகாவா புன்னகையோடு திரும்பிப் பார்த்தாள். அந்தத் திசையில் நட்டாஷாவும் பார்த்தாள். மிகமிக அழகான ஒரு உதவியாளர், தன்னம்பிக்கையும் மிகுந்த மரியாதையும் கொண்ட தோற்றத்தோடு வந்துகொண்டிருப்பதைக் கவனித்தாள். இவர்தான், அனடோல் குராகின். வெகு காலத்திற்கு முன்பாக, பீட்டர்ஸ்

பார்க்கில் நடந்த ஒரு நடனக் கச்சேரியில் அவரைப் பார்த்தும் கவனித்தும் இருக்கிறாள். அவர் இப்பொழுது ஒரு உதவியாளரின் சீருடையை அணிந்து, தோள் பட்டையில் வாகு வலையத்தை மாட்டியிருந்தார். அவர் ஒரு அடக்கமான அகம்பாவத்தோடு நடந்து வந்தார். அவர் அவ்வளவு அழகாய் இருந்திருக்காவிட்டால், அவருடைய முகத்தில் அவ்வளவு களிப்பும் திருப்தியும் காணப்பட்டிருக்காவிட்டால், அவருடைய அந்த அகம்பாவமான நடத்தை கேலிக் கூத்தாய் இருந்திருக்கும். நாடகம் நடந்து கொண்டிருந்த போதிலும், அவர் மிகுந்த சாவதானமாக, கம்பளம் விரித்த வழியாக, தமது பட்டாக்கத்தியும் தார்ச் சக்கரங்களும் லேசாகக் கிலுகிலுக்க, வாசனை தடவிய தலையை நிமிர்த்தி நடந்து வந்தார். நட்டாஷாவைப் பார்த்தவுடன் தமது சகோதரி அமர்ந்திருந்த பெட்டிக்குப் போய், அந்தப் பெட்டியின் ஓரத்தில் கையுறையணிந்த தமது கையை வைத்து, தலையை ஆட்டி, கீழே குனிந்து, நட்டாஷா இருந்த திசையை நோக்கி சைகை காட்டி ஒரு கேள்வி கேட்டார்.

'என்ன மனோகரம்!' என்று அவர் நட்டாஷாவைப் பற்றி சொன்னார். நட்டாஷாவுக்கு, அந்த வார்த்தைகள் காதில் கேட்காவிட்டாலும், அவருடைய உதடுகளின் அசைப்பிலிருந்து புரிந்து கொண்டாள். பின்னால் அவர் முதல் வரிசையில் டோலாகாவின் பக்கத்தில் அமர்ந்தார். மற்றவர்கள் கெஞ்சும் அந்த டோலாகாவை, தமது முழங்கையினால் சிநேகபாவ முறையில் இடித்தார். அவரைப் பார்த்து மகிழ்ச்சியுடன் கண் சிமிட்டி, புன்னகை காட்டி, அந்த வாத்தியக்காரர்களுக்குப் பின்னால் உள்ள மறைப்புத் தட்டியின் மீது தமது காலை வைத்தார்.

'அந்த சகோதரரும், சகோதரியும் எப்படி ஒரே மாதிரி இருக்கிறார்கள் என்பதைப் பார்த்தீர்களா? இருவருமே எவ்வளவு அழகாய் இருக்கிறார்கள் என்பதைப் பார்த்தீர்களா?' என்று கோமகன் சொன்னார்.

மாஸ்கோவில் குராகின் செய்து வருகிற சில சூழ்ச்சிகளைப் பற்றி, ஷின்ஷைன் தமது குரலைத் தாழ்த்தி கோமகனிடம் சொல்ல ஆரம்பித்தார். அதை நட்டாஷா, தன்னை மனோகரமானவள் என்று சொன்னதற்காக, ஒட்டுக் கேட்க முயற்சித்தாள்.

நாடகத்தின் முதல் அங்கம் முடிந்தது. நாற்காலி வரிசைகளில் அமர்ந்து இருந்தவர்கள், இங்கும் அங்கும் போவதும், வெளியே போவதும் உள்ளே வருவதுமாய் இருந்தார்கள்.

ராஸ்டோவ்களின் பெட்டிக்கு போரிஸ் வந்து, அவர்களின் வாழ்த்துக்களை அமைதியோடு பெற்றுக் கொண்டார். தமது

பார்வையை உயர்த்தி, பராக்கு புத்திகொண்ட புன்னகை காட்டி, தம்முடைய நிச்சயதார்த்தப் பெண் தனது திருமணத்திற்காக அனுப்பிய அழைப்பை நட்டாஷாவிடமும் சோனியாவிடமும் சமர்ப்பித்தார். ஒரு மகிழ்ச்சியான பிலுக்குப் புன்னகையோடு நட்டாஷா அவரிடம் பேசினாள். தான் முன்பு காதல் கொண்டிருந்த அதே போரிஸுக்கு நடக்கப்போகும் திருமணத்திற்காக அவள் பாராட்டினாள். அவள் கிரக்கத்தோடு இருந்தபடியால், ஒவ்வொன்றிலும் அவள் லேசாகவும் இயற்கையாகவும் இருப்பதுபோல் காணப்பட்டாள்.

அரைகுறையாக ஆடையணிந்து அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஹெலன் ஒவ்வொருவரிடமும் ஒரே மாதிரியான புன்னகையைத்தான் காட்டிவந்தாள். அதே மாதிரியான புன்னகையை போரிஸுக்கு நட்டாஷா காட்டினாள்.

நாற்காலிகளில் அமர்ந்திருந்த மிகுந்த அந்தஸ்து வாய்ந்த அறிஞர்கள் பலர் ஹெலனுடைய பெட்டிக்கு உள்ளும், பெட்டியைச் சுற்றியும் வந்து நின்றார்கள். தங்களுக்கு அவளை பரிச்சயமுண்டு என்று மற்றவர்களுக்குக் காட்டுவதில் ஒருவருக்கொருவர் போட்டி போடுவது மாதிரி இருந்தது.

அந்த இடைவேளை நேரம் பூராவாக, ஆர்க்கெஸ்டிராவுக்கு முன்பாக டோலாகாவோடு குராகின் நின்றுகொண்டு, ராஸ்டோவ்களின் பெட்டியையே பார்த்துக் கொண்டிருந்தார். தன்னைப் பற்றியே அவர் பேசிக்கொண்டிருக்கிறார் என்பதை நட்டாஷா அறிவாள். அந்த நினைப்பு அவளுக்கு இன்பத்தைக் கொடுத்தது. அவளுடைய நினைப்பில் தனது முகத்தின் பக்கவாட்டுப் பார்வை 'மிகுந்த அழகாய் இருக்கும் என்று தோன்றியது. ஆகவே, தன்னுடைய முகத்தின் அந்த பக்கவாட்டுப் பார்வையை அவர் பார்ப்பதற்காக அவள் திரும்பினாள். நாடகத்தின் இரண்டாவது அங்கம் ஆரம்பமாகும் முன்பாக, அந்த ஆசன வரிசைகளில் பீயர் தோன்றினார். ராஸ்டோவ்கள் அங்கே வந்து சேர்ந்தது முதல் பீயரைப் பார்க்கவில்லை. அவருடைய முகம் சடைவு கொண்டதாய் இருந்தது. கடைசியாக நட்டாஷா பார்த்தபோது இருந்ததைவிட, இப்பொழுது அதிகமாக அவர் பருத்திருந்ததாகத் தோன்றியது. அவர் யாரையும் கவனிக்காமல் நேராக முன் வரிசைகளுக்குப் போனார். அனடோல் அவரிடம் சென்று பேச ஆரம்பித்து, ராஸ்டோவ்களின் பெட்டியை நோக்கி அவருக்கு சுட்டிக் காட்டினார். நட்டாஷாவை பீயர் பார்த்ததும் உள்ளக் கிளர்ச்சி பொங்கி, அவசரமாக அவர்கள் பெட்டியை நோக்கி இரு வரிசைகளுக்கும் இடையே போனார். அவர் அங்கே போனதும்

முழங்கைகளை பெட்டியின் மீது ஊன்றி புன் சிரிப்போடு அவளுடன் வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தார். பீயருடன் நட்டாஷா பேசிக்கொண்டிருந்தபோது, கோமகள் பெஜுகாவாவின் பெட்டியில் ஒரு ஆண் குரல் கேட்டது. அது குராகின் என்று எதோ ஒன்று அவளுக்கு சொல்லியது. அவள் திரும்பினாள். அவர்களுடைய கண்கள் சந்தித்தன. புன்சிரிப்பைக் காட்டி அவளுடைய கண்களை அவர் நேராகப் பார்த்தார். அவருடைய பார்வையில் அவ்வளவு பரவசமும் பரிவும் காணப்பட்டபடியால், அவ்வளவு நெருக்கமாக அவர் இருந்தும், அந்த விதமாக அவரைப் பார்த்துக் கொண்டிருந்தும், தன்னை அவர் போற்றுவதாகத் தெரிந்திருந்தும் அவரிடம் இன்னும் பரிச்சயம் கொள்ளாமல் இருப்பது அவளுக்கு ஆச்சரியமாய்த் தோன்றியது.

நாடகத்தின் இரண்டாவது அங்கம் ஆரம்பமாயிற்று. நாடக மேடையில் கல்லறைகளைக் காட்டுகிற ஜோடனைகள் செய்யப்பட்டிருந்தன. படுதாவில் சந்திரனைக் காட்டுவதற்காக வட்டமாக ஒரு துவாரம் செய்திருந்தார்கள். விளக்குகளின் பிரகாசத்தைக் குறைப்பதற்காக, விளக்குகளின் மீது மறைப்புகள் போடப்பட்டிருந்தன. கொம்புகளிலிருந்தும் பாண்டுகளிலிருந்தும் ஆழ்ந்த, மெ மதுவான ஒலிகள் கேட்டுக்கொண்டிருந்தன. மேடையின் இரண்டு பக்கங்களிலிருந்தும், கருப்பு மேல் சட்டைகள் அணிந்த பலர் கையில் குத்துவாள்கள் போன்றவைகளை ஏந்தி வந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் தங்கள் கைகளை ஆட்ட ஆரம்பித்தார்கள். பின்னால் சில மனிதர்கள் ஓடிவந்து அங்கிருந்த கன்னியை இழுக்க ஆரம்பித்தார்கள். அவள் முதலில் வெள்ளை உடையை அணிந்திருந்தாள். அந்த உடை இப்பொழுது இளநீலமாகத் தோன்றியது. அந்தப் பெண்ணை உடனே அவர்கள் இழுக்கவில்லை. அவளுடைய வெகு நேரம் பாடிவிட்டு, பின்னால் கடைசியாக அவளை இழுத்தார்கள். மேடையின் படுதாவுக்குப் பின்னால், ஏதோ ஒரு இரும்பின் மீது மூன்று தடவைகள் அடிப்பது போல ஒலிகள் கேட்டன. உடனே அங்கிருந்த ஒவ்வொருவரும் முழங்கால் படியிட்டு ஒரு பிரார்த்தனையைப் பாடினார்கள். இவற்றையெல்லாம், நாடகத்தைப் பார்க்க வந்த பார்வையாளர்கள், மிகுந்த உற்சாகத்தோடும் மீண்டும் மீண்டும் கை தட்டி வரவேற்றார்கள்.

இந்த நாடகம் நடந்து கொண்டிருந்தபோது, அனடோல் குராகினை நட்டாஷா அடிக்கடி பார்த்து வந்தாள். ஒவ்வொரு தடவையும் அவள் பார்த்தபோதெல்லாம், நாற்காலிக்குப் பின்னால் ஒரு கையைப் போட்டுக்கொண்டு, குராகின் அவளையே வெறித்துப்

பார்த்துக்கொண்டிருந்ததைக் கவனித்தாள். தன்னால் அவர் மயக்கப் பட்டுவிட்டார் என்பதைப் பார்க்க அவள் மகிழ்ச்சியுற்றாள். அதில் எந்த விதமான தவறும் இருப்பதாக அவளுக்குத் தோன்றவில்லை.

இரண்டாவது அங்கம் முடிந்த பின்பு, கோமகள் பெஜுகாவா எழுந்து ராஸ்டோவ்களின் பெட்டியை நோக்கித் திரும்பினாள். அவளுடைய மார்பு முழுவதும் மறைவின்றி காணப்பட்டது. கையுறை அணிந்த தனது விரலால் வயோதிகக் கோமகனை வரும்படி அழைத்தாள். அவளுடைய பெட்டிக்குள் அச்சமயம் நுழைந்தவர்களை அவள் கொஞ்சமும் கவனிக்கவில்லை. வயோதிகக் கோமகனோடு சௌஜன்யமாக புன்னகை காட்டிப் பேச ஆரம்பித்தாள்.

'உம்முடைய மனோகரமான குமாரிகளோடு என்னை பரிச்சயம் செய்து வையும். இந்த பட்டணம் பூராவாக அவர்களைப் பற்றிய புகழையே பாடிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால், எனக்கு அவர்களை இன்னும் தெரியாது' என்று அவள் சொன்னாள்.

நட்டாஷா எழுந்து அந்த பிரமாதமான கோமகளுக்குத் தலைவணங்கி மரியாதை செய்தாள். இவ்வளவு பிரகாசமான அழகுடைய ஒருவளிடம் இருந்து தனக்குப் புகழ் கிடைத்ததைக் கண்டு அவள் மிகுந்த மகிழ்ச்சி கொண்டாள். மகிழ்ச்சியினால் அவள் நாணி முகம் சிவந்தாள்.

'நானும் ஒரு மாஸ்கோ வாசியாக ஆக விரும்புகிறேன்' என்றாள் ஹெலன். 'இப்பேர்ப்பட்ட முத்துக்களை கிராமாந்திரத்தில் மறைத்து வைப்பதற்கு நீர் எப்படி வெட்கப்படாமல் இருக்கிறீர்?'

மனதைக் கொள்ளை கொள்ளக்கூடிய ஒரு பெண் என்று புகழ் படைத்திருந்த கோமகள் பெஜுகாவா அந்த புகழுக்கு முற்றிலும் தகுதியானவள். அவள், தான் மனதில் நினைக்காததை, முக்கியமாக புகழ்ச்சிப் பேச்சுக்களை, ரொம்ப சுலபமாகவும் இயற்கையாகவும் சொல்லக் கூடிய திறமை பெற்றவள்.

'அன்புள்ள கோமகளே, உமது குமாரிகளை நான் கவனித்துப் பார்த்துக்கொள்ளும்படி எனக்கு அனுமதி கொடுக்க வேண்டும். இந்த இடத்தில் வெகு காலம் நான் தங்கப்போவது இல்லை யென்றாலும் - நீங்களும் அப்படியே-நான் அவர்களை குஷிப் படுத்துவதற்கு முயற்சி செய்வேன். நான் உங்களைப் பற்றி பீட்டர்ஸ்பர்க்கில் ஏற்கெனவே ரொம்ப கேள்விப்பட்டிருக்கிறேன். உங்களைப் பற்றி மேலும் அறிந்துகொள்ள விரும்பினேன்' என்று அவள் நட்டாஷாவை நோக்கி, அவளுடைய ஒரே விதமான இனிய புன்னகையை காட்டிச் சொன்னாள். 'என்னுடைய கௌரவ

சேவகரான ட்ரூபெட்ஸ்கோயிடம் உன்னைப் பற்றி கேள்விப்பட்டிருக்கிறேன். அவருக்கு திருமணம் ஆகப் போகிறது என்பதை நீ கேள்விப் பட்டாயா? அதைத் தவிர, என்னுடைய கணவரின் நண்பரான, பால்கோன்ஸ்கி, இளவரசர் ஆண்ட்ரூ பால்கோன்ஸ்கியிடமிருந்தும் நான் கேள்விப்பட்டேன்.' அந்தப் பெயரை அவள் அழுத்திச் சொன்னாள். அதாவது அவருக்கும் நட்டாஷாவுக்கும் உள்ள உறவை அவள் அறிந்திருப்பதுபோல காட்டிக்கொண்டாள். அவர்களோடு இன்னும் நன்றாக அறிமுகம் ஆவதற்காக, அந்த இளஞ் சீமாட்டிகளில் யாராவது ஒருவர், அந்த நாடகம் முடிகிற வரையில், தன்னுடன் அமர்ந்திருக்கவேண்டும் என்று கேட்டாள். நட்டாஷா அவள் பெட்டியில் போய் அமர்ந்தாள்.

நாடகத்தின் மூன்றாவது அங்கம் ஆரம்பமாயிற்று. அதில் காணப்பட்ட காட்சியில் ஒரு அரண்மனை தோன்றியது. அங்கே பல மெழுகுவத்திகள் எரிந்துகொண்டிருந்தன. குட்டையான தாடிகளைக் கொண்ட பல வீரர்களின் படங்கள் சுவர்களில் தொங்கிக் கொண்டிருந்தன. அந்த மேடையின் மத்தியில், ராஜாவும் ராணியும் மாதிரி, இருவர் நின்று கொண்டிருந்தனர். அந்த ராஜா வலது கையை பரபரப்பினால் ஆட்டிக்கொண்டு, எதையோ ரொம்ப மோசமாகப் பாடிவிட்டு, அந்த சிவப்பு நிறமான சிம்மாசனத்தில் அமர்ந்தார். முதலில் வெள்ளை நிற உடையையும், பின்னால் இளநீல நிற உடையையும் அணிந்திருந்த அந்தக் கன்னி இப்பொழுது ஒரு வெளிச் சட்டையை அணிந்திருந்தாள். சிம்மாசனத்திற்குப் பக்கத்தில் தலையை விரித்துப் போட்டு நின்றுகொண்டிருந்தாள். ராணியைப் பார்த்து எதையோ துக்கமாகப் பாடினாள். ஆனால், ராஜா கடுமையாக தமது கையை ஆட்டினார். மேடையின் இரு பக்கங்களிலிருந்தும் கால்களில் எதுவும் அணியாத ஆண்களும், பெண்களும் அங்கு வந்து கூடி நாட்டியமாட ஆரம்பித்தார்கள். பின்னால் களிப்போடும் கூர்மையான தொனியோடும் வயலின்கள் வாசிக்க ஆரம்பித்தன. பெண்களில், கனத்த கால்களையும் மெல்லிய கைகளையும் கொண்ட, ஒருவள் அந்தக் கூட்டத்தை விட்டுப் பிரிந்து, படுதாவிற்குப் பின்னால்போய் தனது மார் சட்டையைச் சரி செய்துகொண்டு, மீண்டும் மேடையின் மத்திக்கு வந்தாள். அவள் அங்கே துள்ளிக் குதித்து ஒரு பாதத்தை மற்றொரு பாதத்தின் மேல் அடித்துக் கொண்டிருந்தாள். நாற்காலிகளில் அமர்ந்துகொண்டிருந்த ஒவ்வொருவரும், கைகளைத் தட்டியும், பலே பேஷ் என்று கூச்சலிட்டுக் கொண்டும் இருந்தார்கள். பின்னால் ஆண்களில் ஒருவன் அந்த மேடையின் மூலைக்குப் போனான். ஆர்க்கெஸ்டிராவில் இருந்த கொம்புகளும்,

பெரிய சிங்கங்களும் பலத்த சப்தமிட ஆரம்பித்தன. உடனே வெறும் கால்களோடும் இருந்த இந்த மனிதன், மிக உயரமாக துள்ளிக் குதித்து, தனது கால்களையும் வேகமாக ஆட்டிக்கொண்டிருந்தான். (அவன் தான் டூபார்ட். இந்த வித்தைக்காக வருஷம் அறுபதாயிரம் ரூபிள்கள் சம்பளமாக வாங்குகிறான்.) நாற்காலிகளிலும் பெட்டிகளிலும் காலரிகளிலும் அமர்ந்திருந்த ஒவ்வொருவரும், தங்கள் முழு பலத்தோடு கைதட்டியும் கூச்சலிட்டும் வந்தார்கள். அந்த மனிதன் தான் துள்ளிக் குதிப்பதை நிறுத்தி, எல்லா திசைகளையும் நோக்கி புன் முறுவலோடு தலைவணங்கி மரியாதை செய்தான். பின்னால், மற்ற ஆண்களும் பெண்களும் வெறும் கால்களோடு நடனமாட ஆரம்பித்தார்கள். அதன் பின்னால், அந்த சங்கீதத்தின் சப்தத்திற்குத் தக்கவாறு அந்த ராஜா கூச்சலிட்டார். உடனே எல்லாரும் பாட ஆரம்பித்தார்கள். திடீரென்று ஒரு புயல் காற்று வந்ததாக ஆர்க்கெஸ்டிரா கோஷ்டி வாத்தியங்களில் வாசிக்க ஆரம்பித்தது. மேடையிலிருந்த ஒவ்வொரு ஆணும் ஒரு பெண்ணை இழுத்துக்கொண்டு மேடையை விட்டு உள்ளே ஓடினான். படுதா கீழே விடப்பட்டது. மீண்டும் ஒரு தடவை, வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த வர்கள், பயங்கரமாகக் கைகளைத் தட்டி கூச்சல் போட்டார்கள். ஒவ்வொருவரும் முகத்தில் பரவசம் தோன்ற, 'டூபார்ட், டூபார்ட்' என்று கத்தினார்கள். நட்டாஷாவுக்கு இது விசித்திரமாகவே தோன்றவில்லை. அவள் மகிழ்ச்சி கொண்டு, சந்தோஷப் புன்னகை காட்டி சுற்றிலும் பார்த்துக்கொண்டிருந்தாள்.

'டூபார்ட் செய்தது மகிழ்ச்சிகரமாக இல்லையா?' என்று ஹெலன் அவளைக் கேட்டாள்.

'ஓ, ஆமாம்' என்று நட்டாஷா பதில் சொன்னாள்.




ஹெலனுடைய பெட்டியில் இடை வேளையில் திடீரென்று குளிர்ந்த காற்று உள்ளே வந்தது. அனடோல் கதவைத் திறந்து, அங்கே ஒருவர் மீதும் இடிபடாமல் குனிந்து வந்து சேர்ந்தார்.

'என்னுடைய சகோதரரை, உனக்கு அறிமுகப்படுத்துகிறேன்' என்று தனது பரபரப்பான பார்வையை, நட்டாஷாவிட மிருந்து அனடோலிடம் திருப்பி, ஹெலன் சொன்னாள்.

நட்டாஷா தனது சிறிய அழகிய தலையை, அந்த அழகான வாலிப ராணுவ அதிகாரி பக்கம் திருப்பி, அவரைப் பார்த்து தனது திறந்த

தோளுக்கு மேலாக புன்னகை காட்டினாள். தூரத்துப் பார்வையில் அனடோல் அழகாய் இருப்பதைப் போலவே, சமீபத்திலும் அழகாய் இருப்பார். அவர் அவள் பக்கத்தில் அமர்ந்து, இந்த மகிழ்ச்சியை வெகுவாக விரும்பி இருந்ததாக அவளிடம் சொன்னார். அதாவது, நாரிஷ்கின் என்ற இடத்தில் நடந்த நடனக் கச்சேரியில், அவளைப் பார்க்கக் கூடிய மகிழ்ச்சி ஏற்பட்டதாகவும் அதிலிருந்து இந்த சந்தர்ப்பத்தை விரும்பிக் கொண்டிருந்ததாகவும் சொன்னார். ஆண்களைவிடப் பெண்களிடத்தில், குராகின் மிகுந்த சுலபமாகவும், புத்திசாலித்தனமாகவும் நடந்து கொள்வார். அவர் தைரியமாகவும் இயற்கையாகவும் பேசினார். இவரைப் பற்றி எத்தனையோ, எவ்வளவோ விதமாகப் பேசியபோதிலும், அவரிடம் எந்த விதமான துர்க்குணமும் இல்லாததைப் போல நட்டாஷாவுக்குத் தோன்றியது. அவருடைய புன்னகை, கபடமற்ற, மகிழ்ச்சி கொண்ட, நல்ல குணமுள்ளதாக இருப்பதாய் அவள் நினைத்தாள்.

அந்த நாடகத்தைப் பற்றி அவளுடைய அபிப்பிராயங்கள் என்னவென்று குராகின் கேட்டார். செமியனோவா என்பவள், முன்னால் ஒரு நாடகத்தில் எப்படி மேடையில் விழுந்தாள் என்பதை குராகின் சொன்னார்.

'உனக்குத் தெரியுமா, கோமகளே?' என்று திடீரென்று ஒரு பழைய, அறிமுகமான நண்பரிடம் பேசுவதைப் போல, பேச ஆரம்பித்தார். 'நாங்கள் ஒரு விசித்திர-ஆடை ஊர்வலம் வைத்திருக்கிறோம். நீயும் அதில் கலந்துகொள்ள வேண்டும். அது மிகுந்த தமாஷாக இருக்கும். நாம் எல்லோரும் காராகினுடைய வீட்டில் கூடுவோம். தயவு செய்து, வரவேண்டும். இல்லை, நிச்சயமாகவே வரவேண்டும்' என்று அவர் சொன்னார்.

அவர் இதைச் சொல்லும்போது அவருடைய புன்முறுவல் காட்டிய கண்களை, அவளுடைய முகத்திலிருந்தோ கழுத்திலிருந்தோ, அல்லது மறைக்கப்படாத கரத்திலிருந்தோ, அவர் எடுக்கவில்லை. தன்னைக் கண்டு அவர் மிகுந்த பரவசம் அடைந்திருப்பதாக, நட்டாஷாவுக்கு நிச்சயமாகத் தோன்றியது. இது அவளுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. என்றாலும் அவருடைய பிரசன்னம் அவளுக்கு கஷ்டத்தையும் சோர்வையும் கொடுத்தது. அவள் அவரைப் பார்க்காமல் இருந்தபோது, அவர் அவளுடைய தோள்களைப் பார்ப்பதாக அவள் உணர்ந்தாள். அம்மாதிரி பார்ப்பதைத் தடுத்து தன் கண்களைப் பார்க்கும்படிச் செய்வதற்காக, தற்செயலாக அவருடைய கண்களைப் பார்த்தாள். அவருடைய

கண்களைப்பார்த்ததும், அவள் பீதி கொண்டாள். அதாவது, மற்ற ஆண்களுக்கும் தனக்கும் இடையேயுள்ள வேலியைப் போன்ற அந்த நாணம் எப்பொழுதும் இருப்பதாக அவள் உணர்ந்து வந்தாள். இப்பொழுது அது அங்கே காணப்படவில்லை. ஐந்து நிமிஷங்களுக்குள் எப்படி இந்த மனிதரிடம் இவ்வளவு நெருக்கமாகச் சேர்ந்து விட்டாள் என்பதை அவள் அறிய முடியவில்லை. அவள் பார்வையை வேறு பக்கம் திருப்பியதும் தாமே அத்திறந்த கைகளைப் பின்னாலிருந்து பற்றி, அவளுடைய கழுத்தில் முத்தமிட்டு விடுவாரோ என்று அவள் பீதியுற்றாள். அவர்கள் ரொம்ப சாதாரண விஷயங்களைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தார்கள். என்றாலும், அவள் எக்காலத்திலும் வேறு எந்த மனிதரிடத்திலும் நெருங்கியிராத அளவு, அவ்வளவு நெருக்கமாக அவர்கள் ஒருவருக்கு ஒருவர் நெருங்கி இருப்பதாக அவள் உணர்ச்சி கொண்டாள். நட்டாஷா அடிக்கடி ஹெலனையும் தன்னுடைய தந்தையையும் நோக்கினாள். இதற்கெல்லாம் என்ன அர்த்தமென்று கேட்பதுபோல அவளுடைய பார்வை இருந்தது. ஆனால், ஹெலன் ஒரு ஜெனரலோடு பேசிக்கொண்டிருந்தாள். அதனால் அவளுடைய பார்வைக்குப் பதில் சொல்லவில்லை. அவளுடைய தந்தையின் கண்களோ, எப்போதுமே சொல்லிக் கொண்டிருந்ததைத் தவிர, வேறு எதையும் சொல்லவில்லை. அதாவது, 'உனக்கு தமாஷாக நேரம் போகிறதா? நல்லது, எனக்கு ரொம்ப சந்தோஷம்'.

இம்மாதிரி தர்மசங்கடமான, ஒரு அமைதியான நேரத்தில், அனடோலின் பிரதானமான கண்கள், அமைதியோடு நட்டாஷாவை வெறித்து நோக்கிக் கொண்டிருந்தன. அந்த மௌனத்தைக் கலைப்பதற்கு, 'மாஸ்கோவை அவர் விரும்புகிறாரா?' என்று அவள் கேட்டாள். அவள் இந்தக் கேள்வியைக் கேட்டதும் நாணி முகம் சிவந்தாள். அவரோடு அவள் பேசும்போதெல்லாம், ஏதோ தகாதகாரியம் ஒன்றை செய்வது போல நினைத்து வந்தாள். அனடோல் அவளை உற்சாகப்படுத்துவதற்காக புன்முறுவல் காட்டினார்.

'முதலில் நான் அதை அதிகமாக விரும்பவில்லை. ஏனெனில், அழகிய பெண்கள் தான் ஒரு நகரத்தை இனிமையானதாக ஆக்குகிறார்கள். அப்படியல்லவா? ஆனால் இப்போது அதை நான் மிகவும் விரும்புகிறேன்' என்று சொல்லி, அர்த்தபுஷ்டியோடு அவளை நோக்கினார். 'கோமகளே, நீ அந்த விசித்திர-ஆடை ஊர்வலத்திற்கு வருவாய் அல்லவா? கட்டாயம் வரவேண்டும்'

என்று சொல்லி, அவளிடம் உள்ள பூச்செண்டை நோக்கி கையை நீட்டி, தமது குரலைத் தாழ்த்தி, அந்த இடத்திற்கு வந்தால், நீதான் அழகிலும் அழகாய் இருப்பாய். அருமைக் கோமகளே, கட்டாயம் வரவேண்டும். அதற்கு உறுதியாக, இந்தப் பூவை என்னிடம் கொடுப்பாயாக.'

அவர் என்ன சொல்கிறார் என்பதை நட்டாஷாவால் அறிய முடியவில்லை. அவருக்கும் அது புரிந்திருக்காது. ஆனால், அந்த அர்த்தமில்லாத வார்த்தைகள், ஏதோ ஒரு தகாத நோக்கத்தைக் காட்டுவதாக அவள் உணர்ந்தாள். அவளுக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. அவர் சொல்லியது காதில் கேட்காதது போல, இன்னொரு பக்கம் திரும்பிக்கொண்டாள். அவள் அம்மாதிரி திரும்பியதும், அவர் இன்னமும் பக்கத்திலேயே, மிகுந்த நெருக்கமாக உட்கார்ந்திருப்பதாக உணர்ந்தாள்.

'அவர் இப்போது எப்படியிருக்கிறார்? குழப்பமடைந்திருக் கிறாரா? கோபம் அடைந்திருக்கிறாரா? அதை நான் சரி செய்ய வேண்டுமா?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டாள். அவரைத் திரும்பிப் பாராமல், அவளால் இருக்க முடியவில்லை. அவள் அவர் கண்களை நேராகப் பார்த்தாள். அவர் சமீபத்தில் இருப்பதும், அவருடைய சுய நம்பிக்கையும், அவருடைய நல்ல குணமான இனிமையான புன்சிரிப்பும், அவளை வெற்றிகொண்டு விட்டன. அவர் புன்முறுவல் கொண்டதைப்போல, அவளும் புன்முறுவல் காட்டி, அவரது கண்களை நேராகப் பார்த்தாள். மறுபடியும் அவருக்கும் அவளுக்கும் மத்தியில், எந்தவிதமான தடுப்பு வேலியும் இல்லாதிருப்பதை அவள் மிகுந்த பயங்கரத்தோடு உணர்ந்தாள்.

படுதா மேலே தூக்கப்பட்டது. மிகுந்த அமைதியுடனும், மகிழ்ச்சியோடும், அனடோல் அந்த பெட்டியை விட்டுப் போனார். மற்றொரு பெட்டியிலிருந்த தனது தந்தையிடம், நட்டாஷா திரும்பிப் போனாள். அவள் எந்தப் புதிய உலகத்தைப் பார்த்தாளோ, அதற்குள் இப்பொழுது அடங்கி ஒடுங்கியதாகத் தோன்றினாள். அவள் முன்னால், இப்போது நடப்பவையெல்லாம் மிகவும் இயற்கையானவை என்று தோன்றின. ஆனால், அவளுடைய நிச்சயதார்த்தமான அன்பரைப்பற்றியும், இளவரசி மேரியைப் பற்றியும், கிராமத்திலுள்ள வாழ்க்கையைப் பற்றியும், அவள் முன்னால் நினைத்த நினைப்புகள் எல்லாம், அவள் மனதிற்கு இப்போது ஒரு தடவைகூட திரும்பி வரவில்லை. அவைகளெல்லாம் எப்போதோ வெகுகாலத்திற்கு முன்பு நடந்தவைகளைப் போலத் தோன்றின.

நாடகத்தின் நாலாவது அங்கத்தில், ஏதோ பிசாசு மாதிரி வேஷமிட்டு, ஒருவர் கையை ஆட்டிப் பாடிக்கொண்டிருந்தான். அவனுக்குக் கீழே போடப்பட்டிருந்த பலகையை அகற்றியதும், அவன் கீழே மறைந்துபோனான். நாலாவது அங்கத்தில் நட்டாஷா பார்த்த காட்சி, அது ஒன்றுதான். நட்டாஷா மிகுந்த பரபரப்பும், மனத் துன்பமும் அடைந்தாள். இந்த துன்பத்திற்கும் பரபரப்புக்கும் குராகின் தான் காரணம். அவரை அவளால் கவனித்துப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. அந்த நாடகக் கொட்டகையைவிட்டு அவர்கள் புறப்பட்டுப் போகும்போது, அனடோல் அவர்களிடம் வந்தார். அவர்களது வண்டிகளை அவர் அழைத்து, அவர்கள் வண்டியில் ஏறுவதற்கு உதவி செய்தார். நட்டாஷா வண்டியுள் ஏறும்போது, அவளுடைய முழங்கைக்கு மேலான கையை அழுத்தினார். பரபரப்படைந்து, முகம் சிவந்து, அவள் திரும்பிப் பார்த்தாள். அவர் ஜொலி ஜொலிப்பான கண்களோடு, அவளைப் பார்த்து கனிவோடு புன்னகை காட்டினார்.

வீட்டிற்கு நட்டாஷா திரும்பிய பின்புதான், அவளுக்கு என்ன நேர்ந்தது என்பதை, அவள் தெளிவாக யோசிக்க முடிந்தது. அவள் திடீரென்று இளவரசர் ஆண்ட்ரூவை நினைத்துக் கொண்டதும் பீதி கொண்டாள். தேநீர் சாப்பிடுகிற நேரத்தில், அந்த வீட்டில் எல்லாரும் அமர்ந்திருந்தனர். அவள் திடீரென்று கூச்சல் போட்டு முகம் சிவந்து, அந்த அறையை விட்டு வெளியே ஓடினாள்.

'ஓ, கடவுளே, நான் தொலைந்தேன்' என்று அவள் தனக்குத்தானே சொல்லிக்கொண்டாள். 'நான் எப்படி அவரை இம்மாதிரி செய்யும்படி விட்டேன்?' என்று அவள் சொல்லி, வெகு நேரம் வரையில் தன்னுடைய சிவந்த முகத்தை கைகளால் மறைத்து, தனக்கு என்ன நேர்ந்தது என்பதை அறிந்துகொள்ள முயற்சித்தாள். ஆனால் அதை அறிந்து கொள்ளவோ, அவள் என்ன உணர்ந்தாள் என்பதை அறிந்து கொள்ளவோ, அவளால் முடியவில்லை. ஒவ்வொன்றும் அவளுக்கு இருளாகவும், பயங்கரமாகவும், ஒன்றும் விளங்காததாகவும் காணப்பட்டன. அந்த பிரம்மாண்டமான, மிகப் பிரகாசமான நாடகக் கொட்டகையில் நடந்தவை எல்லாம், 'வெறும் காலோடும், தகரத்தினால் அலங்காரம் செய்யப்பட்ட ஜாக்கட் அணிந்தும், அந்த அரங்கத்தில் ஈரமான தரையில் டுபார்ட் குதித்து விளையாடியதும் அங்கிருந்த இளம் பெண்களும், வயதான ஆண்களும், அநேகமாய் நிர்வாணமாயும், கர்வமும் அமைதியும் கொண்ட புன்னகையோடும் காணப்பட்ட ஹெலனும், 'பலே பேஷ்' என்று பரவசத்தோடு கோஷமிட்டதும்' ஆகிய

இவையெல்லாம் ஹெலனுடைய பிரசன்னத்தில் தெளிவாகவும் எளிதாகவும் காணப்பட்டன. ஆனால் இப்பொழுது தனிமையாக, அவள் மட்டும் தனிமையாக இருந்தபோது, அவையெல்லாம் புத்திக்கு எட்டாதவைகளாகத் தோன்றின. 'அது என்ன? அவரைப்பற்றி நான் நினைக்கும் அந்த பயங்கரம் என்ன? நான் இப்பொழுது உணர்ந்து கொண்டிருக்கும் என் மனச் சாட்சியை அரித்துவரும்இது என்ன விஷயம்?' என்று அவள் சிந்தித்தாள்.

இரவில் படுக்கையில் படுத்த பின்பு, வயோதிகக் கோமகள் ஒருவளுக்குத்தான் தான் நினைப்பதையெல்லாம் நட்டாஷா சொல்லுவதுண்டு. கடுமையான எளிமையான நோக்கங்களைக் கொண்ட சோனியாவால் இவற்றை உணர்ந்து கொள்ள முடியாது என்றும், இந்த உள்ளக் கிடக்கையை அவள் கேட்டு பயங்கரம் அடைவாள் என்றும் நட்டாஷா நினைத்தாள். ஆகவே, நட்டாஷா தன்னை துன்புறுத்தி வருகிற அந்தப் பிரச்னையை தானே தீர்த்துக் கொள்வது என்று முடிவு செய்தாள்.

'ஆண்ட்ரூவின் காதலுக்குத் தகுதியற்ற விதமாக நான் நடந்து கொண்டேனா, இல்லையா?' என்று அவள் தனக்குள் கேட்டாள். தன்னை சாந்தப் படுத்திக்கொள்ளும் விதத்தில் கேலியாக தானே பதில் சொல்லிக்கொண்டாள்: 'அதைக் கேட்பதற்கு நான் எப்பேர்ப்பட்ட முட்டாளாய் இருக்க வேண்டும்? எனக்கு என்ன நேர்ந்து விட்டது? ஒன்றுமில்லை. நான் ஒன்றையும் செய்ய வில்லை. நான் அவரை இழுக்கவில்லை. ஒருவருக்கும் தெரியாது. நான் இனி அவரைப் பார்க்கமாட்டேன். ஆகவே, எதுவும் நடக்கவில்லையென்பது தெளிவாகிவிட்டது. எதற்காகவும் வருந்த வேண்டியதில்லை என்றால் ஆண்ட்ரூ இன்னமும் என்னை காதலிக்க முடியும். எதற்காக 'இன்னமும்' என்று சொல்ல வேண்டும்? ஓ, கடவுளே, ஓ, கடவுளே. அவர் ஏன் இப்போது இங்கு இல்லை?' ஒரு வினாடி நட்டாஷா அமைதியாய் இருந்தாள். அடுத்த வினாடி இவையெல்லாம் உண்மையாய் இருந்தாலும், ஒன்றுமே ஏற்படவில்லை யென்றாலும், அந்த இளவரசர் ஆண்ட்ரூவுடன் அவளுக்கு ஏற்பட்டிருந்த அந்த முந்தைய பரிசுத்தமான காதல் என்பது, இப்போது அழிந்து போய்விட்டது என்று ஒரு உள்ளுணர்வு அவளுக்குச் சொல்லியது. மறுபடியும் அவள் தன்னுடைய கற்பனையில், தனக்கும் குராகினுக்கும் நடந்த உரையாடல்களை மீண்டும் நினைத்துப் பார்ப்பாள். அவளுடைய கையை அழுத்தியபோது காணப்பட்ட அந்த அழகிய மனிதரின் முகத்தையும், அசைவுகளையும் கனிவான புன்னகையையும் அவள் மீண்டும் கற்பனையில் கண்டாள்.



அனடோல் குராகின் மாஸ்கோவில் தங்கியிருந்தார். ஏனெனில், பீட்டர்ஸ் பர்க்கில் இருந்து அவரது தந்தை அவரை அனுப்பிவிட்டார். பீட்டர்ஸ்பர்க்கில் வருஷத்திற்கு இருபதாயிரம் ரூபிள்கள் வீதம் ரொக்கமாக அவர் செலவிட்டு வந்தார். இதைத் தவிர, அந்தக் கடன்களைத் திரும்பக் கொடுக்க வேண்டும் என்று, கடன் கொடுத்தவர்கள் அவருடைய தந்தையிடம் கேட்டார்கள்.

கடன்களில் பாதியை இப்பொழுது கொடுத்து அடைப்பதாகவும், இதுதான் கடைசி தடவையாக அவர் கொடுப்பதென்றும், ஆனால் அதற்கு ஒரு நிபந்தனை உண்டென்றும், அவருடைய தந்தை சொன்னார். மாஸ்கோவில் சேனாதிபதிக்கு ஒரு உதவியாளராக இருக்கக்கூடிய வேலையை, அவருடைய தந்தை அவருக்காக வாங்கி வைத்திருந்தார். அந்த வேலையை மாஸ்கோவிற்குச் சென்று அவர் மேற்கொள்ள வேண்டுமென்றும், அவருக்கு திருமணம் செய்ய ஒரு நல்ல மணப் பெண்ணை அவர் தேடிக்கொள்ள வேண்டும் என்றும் அவருடைய தந்தை கூறினார். இதுதான் அவர் விதித்த நிபந்தனை. இளவரசி மேரி, ஜூலி காராகின் ஆகிய இரண்டு மணப் பெண்கள் இருப்பதையும் அவர் சுட்டிக் காட்டினார்.

அனடோல் இதற்கு சம்மதித்து மாஸ்கோவிற்குப் போனார். அங்கே பீயரின் வீட்டில் தங்கினார். அவர் அங்கே தங்குவது பீயருக்கு முதலில் விருப்பமில்லை. ஆனால், கொஞ்ச காலத்திற்கொல்லாம் அவருக்குப் பழக்கமாகிவிட்டது. சில வேளைகளில் அவருடன் அவருடைய குடியாட்டக் கூட்டங் களுக்குப் போவார். கடன் என்ற பெயரால் அவருக்குப் பணமும் கொடுப்பதுண்டு.

அனடோல் மாஸ்கோவில் வந்து சேர்ந்ததிலிருந்து, ஷின்ஷைன் சொல்லியபடி, மாஸ்கோ சீமாட்டிகளின் தலைகளையெல்லாம் திரும்பும்படி செய்துவிட்டார். அதற்கு முக்கியமான காரணம், அவர்களை அவர் அவமதித்து, ஜிப்ஸி பெண்களையும் பிரஞ்சு நடிகைகளையும் அவர் விரும்பியதேயாகும். அந்த நடிகைகளின் தலைவியாக விளங்கிய குமாரி ஜார்ஜஸ் என்பவளோடு அவர் அன்னியோன்னிய உறவுகள் வைத்துக்கொண்டிருந்ததாக சொல்லப்பட்டது. டெனைலாவ் வீட்டிலோ, அல்லது வேறு எந்த மாஸ்கோ குடிகாரர்கள் வீட்டிலோ நடக்கும் குடியாட்டங்களுக்கு அவர் போகத் தவறுவதே கிடையாது. மற்றவர்களையெல்லாம்

தோற்கடிக்கிற விதத்தில் அவர் இரவு பூராவாகக் குடித்துக்கொண்டே இருப்பார். உயர் வட்டாரங்களில் உள்ள நடனங்களிலும் வரவேற்புகளிலும் அவர் பிரசன்னமாய் இருப்பார். அந்த கச்சேரிகளில் உள்ள சீமாட்டிகள் சிலரிடம் மிகுந்த உல்லாசமாய் அவர் இருப்பதைப் பற்றி பேச்சுகள் கிளம்பின. சில சீமாட்டிகளிடம் நடனக் கச்சேரிகளில் அவர் சல்லாபங்கள் செய்வதுண்டு. ஆனால், கல்யாணமாகாத பெண்களின் முன்னால் அவர் போவதில்லை. முக்கியமாக, பணக்கார குமரிகளிடம் அவர் நெருங்குவதில்லை. ஏனெனில், அவர்கள் எல்லாருமே அழகு அற்றவர்களாய்த்தான் இருப்பார்கள். மற்றொரு முக்கியமான காரணமும் இதற்குண்டு. அதாவது, இரண்டு வருஷங்களுக்கு முன்பாகவே அவருக்கு திருமணம் ஆகிவிட்டது. இந்த விஷயம் அவருடைய நெருங்கிய நண்பர்களுக்கு மட்டும்தான் தெரியும். அச்சமயம் அவர் தமது பட்டாளத்தோடு போலந்தில் இருந்தார். ஒரு போலந்து விவசாயி வீட்டில் குடியிருந்தார். அந்த எளிய விவசாயி, தமது குமாரியை அவர் 'திருமணம் செய்யும்படி கட்டாயப் படுத்தினார். வெகு சீக்கிரமாக அனடோல் தமது மனைவியைக் கைவிட்டு விட்டார். தாம் கல்யாணமாகாத ஒரு பிரம்மச்சாரி என்று சொல்லிக்கொண்டு, சுற்றுவதற்கு சம்மதிக்கும்படியும், அதற்காகப் பணம் கொடுப்பதாகவும், அவர் அவருடைய மாமனாரிடம் சொன்னார். அவரும் அதற்கு ஒப்புக்கொண்டார்.

தம்முடைய நிலைமையைப் பற்றியும், தம்மைப் பற்றியும், மற்றவர்களைப் பற்றியும், அனடோல் எப்பொழுதுமே திருப்தி கொண்டவராய் இருப்பார். தாம் இப்பொழுது வாழ்ந்துவரும் விதத்தைத் தவிர, வேறு விதமாக வாழ்வது சாத்தியமே இல்லை என்றும், தம்முடைய வாழ்வில் எப்பொழுதுமே இழிவான காரியத்தைச் செய்ததில்லை என்றும், அவர் உள் உணர்ச்சியோடு பூரணமாக நம்பிக்கை கொண்டிருந்தார். தம்முடைய காரியங்களினால் மற்றவர்களுக்கு எம்மாதிரி பலன் ஏற்படும் என்பதையும், அவர் செய்கிற இந்தக் காரியத்தினாலோ, அந்தக் காரியத்தினாலோ ஏற்படக்கூடிய பலன்கள் என்ன என்பதையும், சிந்தித்துப் பார்க்க அவரால் முடியவே முடியாது. ஒரு வாத்தின் உடல் அமைப்புப்படி, அது தண்ணீரில் தான் வாழ்ந்து ஆகவேண்டும். அதே மாதிரி, தம்மைக் கடவுள் அமைத்து இருக்கிற அமைப்பின்படி, தாம் வருஷம் ஒன்றிற்கு முப்பதாயிரம் ரூபிள்கள் செலவழித்து ஆகவேண்டும் என்றும், சமூகத்தில் ஒரு முக்கியமான பதவியை அடைந்தாக வேண்டும் என்றும், அவர் நம்பிக்கை கொண்டிருந்தார். இந்த நம்பிக்கையில் உறுதியாய் இருந்தார்.

அதனால் அவரைப் பார்க்கும் மற்றவர்களும் அதை ஒப்புக்கொண்டார்கள். சமூகத்தில் ஒரு பிரதான அந்தஸ்தையோ, அல்லது பணத்தையோ அவர்கள் கொடுக்க மறுக்கவில்லை. பணத்தைப் பொறுத்தவரையில் அவர் யாரிடமும், எவரிடமும் கடன் வாங்கி வந்தார். ஆனால், அதைத் திரும்பக் கொடுப்பதில்லை.

அவர் ஒரு சூதாட்டக்காரர் அல்ல. அப்படி இருந்தாலும் வெற்றியைப் பற்றி அவர் கவலை கொள்ளுவதே இல்லை. அவர் கர்வம் கொண்டவரல்ல. மற்றவர்கள் அவரைப்பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதில் கவலைப்படுவதில்லை. அவர் பெரிய ஆசைகளைக் கொண்டிருக்கிறார் என்றும் அவர் மீது குற்றம் சொல்ல முடியாது. தம்முடைய வாழ்க்கையைக் கெடுத்துவிட்டார் என்பதற்காக பல தடவைகளில் அவர் மீது எரிச்சல் கொண்டிருக்கிறார். பட்டங்களையும் பதவிகளையும் கண்டு அவர் சிரிப்பதுண்டு. அவர் அற்ப குணம் கொண்டவர் அல்ல. யார் அவரிடம் வந்து கேட்டாலும், அவர் இல்லை என்று மறுத்த தில்லை. அவர் சிரத்தை கொள்ளுவது எல்லாம், மகிழ்ச்சிகளும் பெண்களும் தான். அவருடைய கருத்துப்படி, இந்த விஷயங்களில் கௌரவக் குறைவானது எதுவுமே இல்லை. தம்முடைய ஆசையைத் திருப்தி செய்வதனால், மற்றவர்களுக்கு எம்மாதிரி பாதகம் ஏற்படும் என்பதைப் பற்றி சிந்திக்கிறது என்பதே அவரால் முடியாது. தம்மீது யாரும் குற்றம் சொல்ல முடியாது என்று அவர் உண்மையிலேயே நினைத்தார். உண்மையாகவே அயோக்கியர்களையும் கெட்டவர்களையும் அவர் வெறுத்தார். மிகுந்த அமைதியான மனச் சாட்சியோடு அவர் தலை நிமிர்ந்து நடந்து வந்தார்.

ஆண் வகுப்பைச் சேர்ந்த மக்தலேன்கள், அதாவது விபசாரகர்கள், பெண் மக்தலேன்களைப் போலவே, தாங்கள் ஒரு பாவமும் அரியாதவர்கள் என்ற ஒரு ரகசியமான நம்பிக்கையைக் கொண்டுள்ளார்கள். தாங்கள் மன்னிக்கப்படுவார்கள் என்ற அஸ்திவாரத்தின் மீது, அந்த நம்பிக்கை கட்டப்பட்டுள்ளது. 'அவள் மிக அதிகமாகக் காதல் கொண்டிருந்தபடியால், அவள் எல்லா விதத்திலும் மன்னிக்கப்படுவாள்; அவர் மிக அதிகமாக அனுபவித்தபடியால், எல்லா விதத்திலும் அவர் மன்னிக்கப்படுவார்.'

பாரசீக படையெடுப்புகளில் கலந்து வெளிநாடுகளில் இருந்து திரும்பி வந்த பின்பு, டோலாகாவ் மாஸ்கோவில் திரும்பவும் தோன்றினார். அவர் சுகபோகங்களிலும், சூதாட்டங்களிலும்,

விபசாரங்களிலும், தம்முடைய பழைய பீட்டர்ஸ்பர்க் தோழரான குராகினோடு சேர்ந்து திளைத்து வந்தார். தம்முடைய சுயநலத்திற்காக குராகினை அவர் உபயோகப்படுத்திக் கொண்டார்.

டோலாகாவின் புத்திசாலித்தனத்திற்காகவும் துணிச்சலுக்காகவும் அவர் மீது உண்மையிலேயே அனடோல் பிரியம் கொண்டிருந்தார். தம்முடன் சூதாடுவதற்காக, பணக்கார வாலிபர்களைப் பிடித்து இழுப்பதற்கு ஒரு தூண்டிலைப்போல, அனடோல் குராகினுடைய பெயரும் பதவியும் தொடர்புகளும் அவசியமாய் இருந்தன. அதற்காக அவரை உபயோகப் படுத்தி மற்றவர்களுக்குத் தெரியாமல், அவருடைய செலவில் தாம் மகிழ்ச்சி அடைந்து வந்தார். அனடோலிடமிருந்து அவர் பெற்று வந்த இம்மாதிரியான நன்மைகளைத் தவிர, வேறு ஒன்றும் டோலாகாவிற்குக் கிடைத்தது. அதாவது மற்றவரின் உள்ளத்தின் மீது ஆதிக்கம் கொண்டு ஆட்டி வைப்பது ஒரு மகிழ்ச்சியாகும். அந்த மகிழ்ச்சி, ஒரு சுபாவமாகவும், அவசியம் தேவையானதாகவும் டோலாகாவிற்கு அமைந்திருந்தன.

குராகின் உள்ளத்தில் ஒரு பலமான உணர்ச்சியை நட்டாஷா தோற்றுவித்திருந்தாள். நாடகத்திற்குப் போய் வந்து, இராச் சாப்பாட்டிற்குப் பின்னால், ஒரு கலா ரசிகரைப் போன்ற முகபாவத்தோடு, நட்டாஷாவின் கரங்கள், தோள்கள், பாதங்கள், கேசம் ஆகியவற்றின் கவர்ச்சிகளையும், அவளிடம் தாம் காதல் கொள்ளப் போகும் உத்தேசத்தையும், டோலாகாவிடம் வர்ணித்துக்கொண்டிருந்தார். அம்மாதிரி காதல் கொள்ளுவதால் என்ன ஏற்படும் என்பதைப் பற்றி அனடோலுக்கு எவ்விதமான கருத்தும் கிடையாது. அதைப் பற்றி சிந்திப்பதற்கும் அவரால் முடியாது. அவருடைய எந்தக் காரியத்தின் விளைவுகளைப் பற்றியும், அவருக்கு எப்பொழுதுமே எந்தவிதமான கருத்தும் கிடையாது.

'அவள் முதல் தரமானவள், எனது அன்பான பேர்வழியே. ஆனால், நமக்கு அருகதை இல்லை' என்றார் டோலாகாவ்.

'டின்னருக்கு வர அவளை அழைக்கும்படி என்னுடைய சகோதரியிடம் சொல்லப் போகிறேன்' என்றார் அனடோல்.

'அவள் கல்யாணம் ஆகிறவரையில் நீர் பொறுத்து இருப்பது நல்லது...'

'நான் எப்பொழுதுமே குஞ்சு பெண்களைத்தான் மிக விரும்புகிறேன் என்பது உமக்குத் தெரியும். ஏனெனில், அவர்கள் சீக்கிரமாகத் தலை கவிழ்ந்து விடுகிறார்கள்' என்று அனடோல் தொடர்ந்து சொன்னார்.

'நீர் ஏற்கெனவே ஒரு குஞ்சு பெண்ணிடம் அகப்பட்டிருக்கிறீர். அதனால், ஜாக்கிரதை' என்று குராகினின் பழைய திருமணத்தை அறிந்த டோலாகாவ் கூறினார்.

'நல்லது, அம்மாதிரி இரு தடவைகள் நடக்க முடியாது, அப்படித்தானே?' என்று அனடோல் மகிழ்ச்சி நகையோடு கூறினார்.



நாடகத்திற்கு மறுநாளன்று ராஸ்டோவ்கள் எங்கேயும் போகவில்லை. அவர்களைப் பார்ப்பதற்கு யாரும் வரவும் இல்லை. மரியா டிமிட்ரிவ்னா எதைப்பற்றியோ கோமகனோடு பேசிக்கொண்டிருந்தாள். அதை நட்டாஷாவிடம் அவர்கள் மறைக்க விரும்பினார்கள். அந்த வயோதிக இளவரசரைப் பற்றித்தான், ஏதோ அவர்கள் பேசிக்கொண்டு திட்டம் போட்டுக்கொண்டிருக்கிறார்கள், என்று நட்டாஷா யூகித்தாள். இளவரசர் ஆண்ட்ரூ எந்த வினாடியும் வரலாமென்று அவள் எதிர்ப்பார்த்தாள். அன்றைய தினம் வாஜ்வைஜங்கா என்ற இடத்திற்கு, அவர் வந்துவிட்டாரா என்பதை விசாரித்து வரும்படி, இரண்டு தடவைகள் சேவகனை அனுப்பினாள். அவர் இன்னும் வரவில்லை. மாஸ்கோவுக்கு வந்த பின்பு, ஆரம்ப தினங்களைவிட, அவள் இப்போது அதிகமாகக் கஷ்டப்பட்டாள். அவருக்காக அவள் கொண்டிருந்த வாட்டத்தோடும், அவளுக்கு ஏற்பட்டிருந்த அமைதியின்மையோடும் அவளுக்கு மற்றொரு விசாரமும் கலந்து கொண்டது. அதாவது, இளவரசி மேரியோடும், வயோதிக இளவரசரோடும் அவள் சந்தித்துப் பேசிய மனப்பிடித்தமில்லாத விஷயங்கள் கலந்து கொண்டன. காரணமில்லாத பீதியும் கவலையும் அவளுக்கு ஏற்பட்டன. அவர் வராமலே இருந்துவிடலாம் என்றும், அல்லது வருவதற்கு முன்பாக தனக்கு ஏதாவது ஏற்படலாம் என்றும், அவளுக்கு அடிக்கடி தோன்றி வந்தது. முன்னால் அவள் செய்ததைப் போல அமைதியாகவும் தொடர்ச்சியாகவும் அவரைப்பற்றி அவளால் நினைக்க முடியவில்லை. அவரைப்பற்றி அவள் நினைக்க ஆரம்பித்ததும், அந்த வயோதிக இளவரசர், இளவரசி மேரி, அந்த நாடகக் கொட்டகை, குராகின், ஆகியவர்களின் நினைப்புகள், அவளுடைய நினைப்புகளுடன் கலந்து கொள்கின்றன. மறுபடியும், அவள் குற்றம்

செய்துவிடவில்லையா, இளவரசர் ஆண்ட்ரூவுக்கு அவள் ஏற்கெனவே துரோகம் செய்துவிடவில்லையா என்ற சந்தேகங்கள் அவள் மனதில் தோன்றும். மீண்டும் அவள் நாடகக் கொட்டகையில் அவளுடைய மனதில், மனதிற்கெட்டாத, ஒரு பயங்கரமான குழப்பத்தை உண்டுபண்ணிய அந்தப் பேர்வழியுடைய முகத் தோற்றத்தில் காணப்பட்ட ஒவ்வொன்றையும், ஒவ்வொரு அசைப்பையும், ஒவ்வொரு வார்த்தையையும் அவள் எண்ணிப் பார்க்க ஆரம்பிப்பாள். நட்டாஷா எப்போதையும்விட அதிக உற்சாகமாய் இருப்பதாகக் குடும்பத்திற்குத் தோன்றியது. ஆனால் அவள் முன்பிருந்ததைவிட மகிழ்ச்சியிலோ, அமைதியாலோ வெகுதூரம் குறைவாகவே இருந்தாள்.

ஞாயிறன்று காலையில், மரியா டிமிட்ரிவ்னா தன்னுடைய விருந்தாளிகளை, தன்னுடைய மாதா கோவிலுக்குப் பிரார்த்தனை செய்ய அழைத்தாள். அந்தக் கோயில், அங்கே ஒரு காலத்தில் தோன்றிய 'பிளேக் வியாதியினால் மரணமடைந்தவர்களின் கல்லறைகளுக்கு மேலாகக் கட்டப்பட்டிருந்தது.

'அந்த ஆடம்பரமான மாதாகோயில்கள் எனக்குப் பிடிப்பது இல்லை' என்று அவள் தன்னுடைய சுதந்திரமான நினைப்பைப் பற்றி பெருமை கொள்வது போலச் சொன்னாள். 'எல்லா இடத்திலும் கடவுள் ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறார். இங்கே எங்களுக்கு ஒரு சிலாக்கியமான மத குரு கிடைத்திருக்கிறார். அவர் பிரார்த்தனையை மரியாதையாகவும் கண்ணியமாகவும் நடத்துகிறார். உதவி மத குருவும் அதே மாதிரிதான். அந்த கோஷ்டிக்கான பிரார்த்தனையில் என்ன புனிதத்தன்மை இருக்கிறது? எனக்கு அது பிடிப்பதில்லை. அது வெறும் டம்பமென்று நினைக்கிறேன்.'

ஞாயிற்றுக்கிழமைகளை மரியா டிமிட்ரிவ்னா மிகவும் விரும்புவது உண்டு. அத்தினங்களில் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பதும் அவளுக்குத் தெரியும். சனிக்கிழமைகளில் அவள் வீடு முழுவதும் சுத்தம் செய்யப்படும். அவளோ, அவளுடைய சேவகர்களோ, ஞாயிற்றுக்கிழமைகளில் வேலை செய்வது கிடையாது. எல்லாரும் விடுமுறை ஆடைகளை அணிந்து கோயிலுக்குப் போவார்கள். டின்னரின்போது அவளுக்குத் தனியாக சில பதார்த்தங்கள் தயாரிக்கப்படும். அன்று வேலைக்காரர்களுக்கு வாட்கா மதுவும், வாத்து அல்லது பன்றியின் மாமிசமும் கொடுக்கப்படும். ஆனால், அந்த விடுமுறை

மகிழ்ச்சியானது, மரியா டிமிட்ரிவ்னாவின் அகலமான, கண்டிப்பான முகத்தில் தோன்றுவதைப்போல, அந்த வீட்டில் வேறு எங்கும் தோன்றுவதில்லை. அன்றைய தினம் அவளுடைய முகப்பார்வை, ஒரு பவித்திரமான தோற்றத்தைக் கொண்டதாயிருக்கும்.

பிரார்த்தனைக்குப் பின்னர் அவர்கள் காப்பி சாப்பிட்டார்கள். அவர்கள் சாப்பிட்ட போஜன அறையில், நாற்காலிகள் மீது போடப்பட்டிருந்த உறைகள் எல்லாம் அப்புறப்படுத்தப் பட்டிருந்தன. வண்டி தயாராயிருப்பதாக ஒரு சேவகன் வந்து சொன்னாள். ஒரு கண்டிப்பான தோற்றத்தோடு, மரியா டிமிட்ரிவ்னா எழுந்தாள். அவளுடைய விடுமுறை நாள் - சால்வையைப் போர்த்தி இருந்தாள். அதைப் போர்த்திக்கொண்டுதான், அவள் மற்றவர்களை வெளியே பார்க்கப்போவது வழக்கம். அன்று இளவரசர் நிக்கலஸ் பால்கோன்ஸ்கியை அவள் பார்க்கப் போவதாகவும், நட்டாஷாவைப் பற்றி அவரிடம் கேட்கப்போவதாகவும் சொன்னாள்.

அவள் போன பின்பு, திருமதி சூபர்ட்-ரோகட் என்ற ஆடை தயாரிப்பவளின் கம்பெனியிலிருந்து ராஸ்டோவ்களைப் பார்க்க ஒரு பிரதிநிதி வந்தாள். இந்த வேலையினால் ஏற்படும் பொழுது போக்கைக்கண்டு நட்டாஷா மிகுந்த சந்தோஷம் அடைந்தாள். வரவேற்பு அறைக்குப் பக்கத்திலிருந்த அறையில் அவள் அமர்ந்து, புது ஆடைகளை மேலே அணிந்து பார்க்க ஆரம்பித்தாள். கைச்சட்டையில்லாத மார் சட்டையை முதலில் அவள் தன் உடம்பில் தரித்தாள். பின்னால், கண்ணாடியில் தன் தலையைத் திருப்பி, பின்பக்கமாக அந்தச் சட்டை எப்படி அமைந்திருக்கிறது என்பதைக் கவனித்தாள். இச்சமயத்தில் வரவேற்பு அறையில் அவளுடைய தந்தையினுடையவும் மற்றொரு பெண்ணினுடை யவும் உற்சாகமான பேச்சுக் குரல்கள் கேட்டன. அந்தக் குரலைக் கேட்டு அவள் முகம் சிவந்தது. அதுதான் ஹெலன். அந்த மார் சட்டையைக் கழற்றுவதற்கு நட்டாஷாவுக்கு நேரமில்லை. அதற்குள்ளாகக் கதவு திறக்கப்பட்டு, கோமகள் பெஜுகாவா உள்ளே வந்தாள். அவள் ஒரு சிவந்த வெல்வெட்டு கவுனும், உயரமான கழுத்துப்பட்டையும் அணிந்திருந்தாள். இதமான, நட்பான புன்னகைகள் ஒளிவீச அவள் உள்ளே வந்தாள்.

'ஓ, என்னுடைய பரவசக்காரியே!' என்று, நாணி முகம் சிவந்திருந்த நட்டாஷாவைப் பார்த்து, அவள் சொன்னாள். 'என்ன மனோகரம்! உண்மையில், எனது அன்புள்ள கோமகனே! இந்த

அழகை எங்குமே பார்த்ததில்லை' என்று கோமகன் ராஸ்டோவைப் பார்த்து அவள் சொன்னாள்: 'நீங்கள் எப்படி மாஸ்கோவிலிருந்து கொண்டே ஒரு இடத்திற்கும் போகாமலிருக்க முடியும்? இல்லை, நான் அப்படி உங்களை விட்டுவிடமுடியாது. இன்றிரவு குமாரி ஜார்ஜெஸ் எனது வீட்டில் வந்து, சில செய்யுட்களை வாசிக்கப் போகிறாள். அதற்காக நான் சிலரை அழைத்திருக்கிறேன். நீர் உம்முடைய இந்த அழகிய பெண்களை அழைத்து வராவிடில் - இவர்கள் குமாரி ஜார்ஜெஸ்ஸைவிட அழகானவர்கள்-நான் உம்மை சும்மா விடமாட்டேன். என்னுடைய கணவர் டீவேர் என்ற இடத்திற்குப் போயிருக்கிறார். இல்லையானால் அவரை அனுப்பி உங்களை அழைத்து வரச் செய்வேன். நீங்கள் கட்டாயம் வரவேண்டும்; கண்டிப்பாக வரவேண்டும்; 8 மணிக்கும் 9 மணிக்கும் மத்தியில் வாருங்கள்.'

அவள் அந்த ஆடை செய்பவளுக்குத் தலையை ஆட்டினாள். அவளை முன்பே அவளுக்குத் தெரியும். அந்த ஆடைக்காரி இவளைப் பார்த்து வணக்கம் செய்தாள். பக்கத்திலிருந்த சாய்வு நாற்காலியில் அமர்ந்தாள். அங்கிருந்த கண்ணாடி அவர் அணிந்திருந்த வெல்வெட் ஆடையின் மடிப்புகளை அழகாக எடுத்துக் காட்டியது. அவள் நல்ல குணத்தோடும் மகிழ்ச்சியோடும் பேசிக்கொண்டிருப்பதை விட வில்லை. நட்டாஷாவின் அழகைப் புகழ்ந்துகொண்டே இருந்தாள். நட்டாஷாவின் உடைகளைப் பார்த்து, அவற்றையும் புகழ்ந்தாள். புதிதாகத் தனக்கு வந்திருந்த ஒரு ஆடையைப் பற்றியும் அவள் புகழ்ந்தாள். பாரிஸிலிருந்து அவளுக்கு வந்திருந்த அந்த ஆடையில் உலோகங்கள் கலந்து ஒளி வீசும்படி செய்யப்பட்டிருந்தது. அதேமாதிரி ஒன்று வாங்கும்படி நட்டாஷாவிடம் சொன்னாள்.

'ஆனால், உனக்கு எதுவும்பொருத்தமாக இருக்கும், என்னுடைய அழகியே' என்று அவள் கூறினாள்.

நட்டாஷாவின் முகத்தைவிட்டு அந்த மகிழ்ச்சிப் புன்னகை எப்போதுமே அகலவில்லை. அந்தக் கோமகள் பெஜுகாவா என்பவளை, முன்பெல்லாம், சமீபத்தில்கூட நெருங்க முடியாத அவ்வளவு பெரிய முக்கியமானவள் என்று நினைத்துக் கொண்டிருந்தாள். அவள் இப்போது இவளிடம் அவ்வளவு அன்பாக இருப்பதையும் புகழ்வதையும் கண்டு, அப்போதுதான் மலருவதைப் போல, அவள் சந்தோஷங் கொண்டாள். அவ்வளவு அழகாவும் அவ்வளவு அன்பாவும் இருந்த அவள் மீது நட்டாஷா மிகுந்த பிரியம் கொண்டு மகிழ்ச்சியோடு தோன்றினாள். ஹெலனும் நட்டாஷாவிடம் உண்மையாகவே மகிழ்ச்சி

கொண்டாள். தமாஷாக நேரத்தைப் போக்க அவளும் விரும்பினாள். நட்டாஷாவும் தாமும் சந்திப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்று அனடோல் அவளிடம் கேட்டிருந்தார். அந்த நோக்கத்தோடுதான் அப்போது அவள் ராஸ்டோவ்களைப் பார்க்க வந்திருந்தாள். நட்டாஷாவையும் தன்னுடைய சகோதரரையும் மோதவிடுவதில் அவளுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டிருந்தது.

பீட்டர்ஸ்பர்க்கில் ஒரு சமயத்தில் போரிஸைத் தன்னிடமிருந்து அபகரித்துக் கொண்டிருந்ததற்காக நட்டாஷாமீது அவள் கோபமடைந்ததுண்டு. ஆனால், அதைப்பற்றி அவள் இப்போது நினைக்கவில்லை. தன்னுடைய சொந்த வழியில் நட்டாஷாவின் மகிழ்ச்சியை அவள் மனப்பூர்வமாக விரும்பினாள். அவள் ராஸ்டோவ்களிடமிருந்து விடைபெற்றுப் போகும்போது, தன்னுடைய அபிமான நட்டாஷாவைத் தனியாக அழைத்தாள்.

'நேற்றிரவு என்னுடைய சகோதரர் என்னுடன் டின்னர் சாப்பிட்டார். நாங்கள் சிரித்துச் சிரித்து அநேகமாய் உயிர் போய் விட்டது. அவர் உனக்காக பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தாரே தவிர, சாப்பிடவே இல்லை. எனது மனோகரமே! அவர் உன் மீது பைத்தியம் பிடித்ததைப்போல காதல் கொண்டிருக்கிறார், என் அன்பே!'

நட்டாஷா இதைக் கேட்டதும், முகம் சிவந்து நாணினாள்.

'அவள் எம்மாதிரி முகம் சிவந்து நாணுகிறாள், அவள் எம்மாதிரி நாணுகிறாள்! எனது அழகியே!' என்று ஹெலன் கூறினாள். 'நீ கண்டிப்பாக வரவேண்டும். நீ யார் மீதாவது காதல் கொண்டிருந்தால், என் அழகியே! அதற்காக இங்கு, வீட்டிற்குள் அடைபட்டுக் கொண்டிருப்பது ஒரு காரணமாகாது. உனக்கு நிச்சயதார்த்தம் ஆகியிருந்தாலும் சரி, உன்னுடைய நிச்சயதார்த்தப் புருஷர், நீ உயர் வட்டாரங்களுக்குப் போய் மனக் களிப்பு பெறவேண்டுமென்று நினைப்பாரே தவிர, தனியாக இருந்து சலிப்புத் தட்டி சாக வேண்டுமென்று நினைக்கமாட்டார்.'

'அப்படியானால் எனக்கு நிச்சயதார்த்தம் ஆகியிருக்கிறது என்பதை அவள் அறிந்திருக்கிறாள் என்று தோன்றுகிறது. அவளும், அவளுடைய கணவரான பீயரும் - அந்த நல்ல பீயரும்-இதைப் பற்றிப் பேசியும் சிரித்தும் கொண்டிருப்பார்கள். அது ரொம்ப சரி, மறுபடியும் அந்த ஹெலனுடைய செல்வாக்கினால், அவளுக்கு எது பயங்கரமாய் தோன்றியதோ, அது இப்போது இயற்கையாகவும், எளிதாகவும் தோன்றியது. 'அவள் எவ்வளவு பெருந் தன்மையாய் இருக்கிறாள்! எவ்வளவு அன்பு! என்னிடம் மிகுந்த பிரியம்

கொண்டிருக்கிறாள் என்பது தெளிவாகிறது. அப்படியானால், நான் ஏன் மகிழ்ச்சி பெறக் கூடாது?' என்று நட்டாஷா நினைத்து, அந்த ஹெலனை விரிந்த, ஆச்சரியங்கொண்ட கண்களோடு நோக்கினாள்.

மரியா டிமிட்ரிவ்னா டின்னருக்குத் திரும்பினாள். ஆனால், அவளுடைய பார்வையும் அவள் மௌனமாய் இருந்ததும் அந்த வயோதிக இளவரசரிடம், அவள் தோற்றுத் திரும்பினாள் என்பதைக் காட்டின. அந்த விஷயத்தைப் பற்றி அமைதியுடன் பேசுவதற்கு அவளால் முடியாதபடி, இன்னமும் அவள் பரபரப்பு கொண்டிருந்தாள். கோமகன் கேட்ட கேள்விகளுக்கு, அவள் மறுநாள் பதில் கூறுவதாகவும், ஆனால் விஷயங்கள் எல்லாம் சரியாக இருக்கின்றன என்றும் சொன்னாள். பெஜுகாவாவின் விஜயத்தைப் பற்றியும், அன்று மாலை தனது வீட்டிற்கு அவள் அழைத்திருந்ததைப் பற்றியும் கேள்விப்பட்டதும், மரியா டிமிட்ரிவ்னா சொன்னாள்:

'அந்த பெஜுகாவாவோடு எந்த விதமான சம்பந்தமும் வைத்துக்கொள்ள எனக்குப் பிரியமில்லை. நீர் வைத்துக் கொள்ளவும் சொல்லமாட்டேன். ஆனால், நீங்கள் வருவதாக வாக்குறுதி கொடுத்துவிட்டால், போங்கள். அது உங்களுக்கு நேரப் போக்காய் இருக்கும்' என்று நட்டாஷாவைப் பார்த்து சொன்னாள்.




**கோ**மகன் ராஸ்டோவ் பெண்களை அழைத்துக்கொண்டு, கோமகள் பெஜுகாவாவின் வீட்டிற்குச் சென்றார். அங்கே அநேகம் பேர் கூடியிருந்தார்கள். அவர்கள் எல்லோருமே, அநேகமாக, நட்டாஷாவுக்கு அறிமுகம் இல்லாதவர்கள். அநேகமாக அந்தக் கூட்டத்திலுள்ள ஆண்களும் பெண்களும், மிகுந்த சுதந்திரமான நடத்தையுள்ளவர்கள் என்பதில் பிரசித்தி பெற்றவர்கள். ஆகவே, கோமகன் ராஸ்டோவ் அவர்களைக் கவனித்ததும், அவருக்கு மன வருத்தம் ஏற்பட்டது. வரவேற்பு அறையின் ஒரு மூலையில் குமாரி ஜார்ஜெஸ், வாலிபர்கள் புடைசூழ நின்றுகொண்டிருந்தாள். பல பிரஞ்சுக்காரர்களும் அங்கே பிரசன்னமாய் இருந்தார்கள். அவர்களில் மெட்டிவியரும் ஒருவர். ஹெலன் மாஸ்கோவுக்கு வந்ததிலிருந்தே, ஹெலனுடைய வீட்டில் அவர் அன்னியோன்னியமாய் பழகிக் கொண்டிருந்தார். சீட்டு ஆட உட்காருவதற்கு கோமகனுக்கு இஷ்டமில்லை. ஏனெனில்,

தம்முடைய பெண்களைத் தம்முடைய பார்வையிலிருந்து தப்பவிடுவதற்கு அவருக்கு இஷ்டமில்லை. குமாரி ஜார்ஜெஸின் ஓதுதல் வேலை முடிந்ததும், சீக்கிரம் அதை விட்டுப் போக வேண்டுமென்று நினைத்தார்.

ராஸ்டோவ்களின் வரவை எதிர்பார்த்து வாசலில் அனடோல் நின்று கொண்டிருந்தார். அவர் கோமகனை வரவேற்றவுடன் நட்டாஷாவிடம் நெருங்கி அவள் பின்னால் போனார். அவரைப் பார்த்ததும் நாடகக் கொட்டகையில் ஏற்பட்ட அதே உணர்ச்சி அவளைப் பாதித்தது. அதாவது, அவளைப் புகழ்ந்து பாராட்டுவதற்கு ஒருவர் இருக்கிறார், என்பதைக் கண்டு அவளுக்கு தற்பெருமைத் திருப்தி ஏற்பட்டது. ஆனால், அதே சமயத்தில் அவருக்கும் தனக்கும் மத்தியில் எந்த விதமான தார்மீகத் தடுப்பும் இல்லை என்பதைக் கண்டு பீதியுற்றாள்.

மிகுந்த மகிழ்ச்சியோடு, நட்டாஷாவை ஹெலன் வரவேற்றாள். அவள் அழகையும், ஆடைகளையும் புகழ்ந்து உரக்கப் பாராட்டினாள். அவர்கள் அங்கே வந்த பின்பு, தனது ஆடைகளை மாற்றுவதற்காக குமாரி ஜார்ஜெஸ் அந்த அறையைவிட்டு வெளியே போனாள். வரவேற்பு அறையில் இருந்த மக்கள், நாற்காலிகளை ஒழுங்காகப் போட்டு அதில் அமர ஆரம்பித்தார்கள். நட்டாஷாவுக்காக அனடோல் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டார். அதற்குப் பக்கத்தில் தாமும் உட்காரப் போனபோது, பெண்களை எப்போதுமே கவனித்துக் கொண்டிருந்த கோமகன், அந்த ஆசனத்தில் தாமே அமர்ந்து கொண்டார். ஆகவே, அவளுக்குப் பின்னால் அனடோல் அமர்ந்தார்.

தன்னுடைய திரண்ட, பருத்த, புள்ளி விழுந்த கைகள் தெரியும் படியாக, ஒரு தோளின்மீது ஒரு சிவப்புச் சால்வையைப் போட்டுக் கொண்டு, தனக்கென்று ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த இடத்திற்கு குமாரி ஜார்ஜெஸ் வந்து, ஒரு இயற்கையற்ற தோற்றத்தோடு நின்றாள். உற்சாகமான மெதுவான பேச்சுக்கள் காதில் கேட்க ஆரம்பித்தன.

கண்டிப்பான, சோர்வான தோற்றத்தோடு குமாரி ஜார்ஜெஸ் கூட்டத்தை நோக்கினாள். உடனே பிரஞ்சுக் கவிதைகள் சிலவற்றை ஓத ஆரம்பித்தாள். அந்தக் கவிதையில், தன்னுடைய சக்களத்தி மகன் மீது தான்கொண்ட தகாத காதல் காட்டப்பட்டிருந்தது. அவள் ஓதியபோது, சில இடங்களில் தனது குரலை உயர்த்தினாள். சில இடங்களில், மெதுவாகச் சொன்னாள். அவருடைய தலையை வெற்றிப் பார்வையோடு நிமிர்த்திக்கொண்டு, சில சமயங்களில்

வாசிப்பதை நிறுத்துவாள். சில சமயங்களில் கரகரப்பான சப்தங்களைப் கிளப்பி கண்களை உருட்டுவாள்.

'அபூர்வமானது! தெய்வீகமானது! என்ன இனிமையானது!' என்ற குரல்கள் ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் கேட்டுக் கொண்டிருந்தன.

அந்தப் பருத்த நடிகையை நட்டாஷா பார்த்தாள். ஆனால், தனக்கு முன்னால் நடந்துகொண்டிருந்த எதையும், அவள் பார்க்கவோ, கேட்கவோ, அறியவோ இல்லை. அவள் மீண்டும் இந்த விசித்திரமான, புத்தியில்லாத உலகத்தில், தான் கொண்டுவரப்பட்டு இருப்பதாக உணர ஆரம்பித்தாள். தன்னுடைய பழைய உலகத்திலிருந்து வெகுதூரம் போய்விட்டதாக அவள் உணர்ந்தாள். இந்தபுதிய உலகத்தில், நல்லது எது, கெட்டது எது, நியாயமானது எது, புத்தியில்லாதது எது என்ற வித்தியாசத்தைக் கண்டு பிடிக்கவே முடியாதது போலத் தோன்றியது. அவளுடைய ஆசனத்திற்குப் பின்னால், அனடோல் அமர்ந்திருந்தார். அவர் சமீபத்தில் இருக்கிறார் என்ற உணர்ச்சியினால், ஏதோ நடக்கப்போகிறது என்ற பீதி அவளுக்குத் தோன்றியது.

முதல் ஓதுதல் முடிந்தவுடன், அங்கிருந்தவர்கள் எல்லோரும் எழுந்து, குமாரி ஜார்ஜெஸ்ஸைச் சுற்றி நின்று, தங்களுடைய உற்சாகத்தைக் காட்டினார்கள்.

'எவ்வளவு அழகாய் இருக்கிறாள்!' என்று நட்டாஷா தன்னுடைய தந்தையிடம் சொன்னாள். அவரும் அச்சமயம் எழுந்து, அந்தக் கூட்டத்தில் நுழைந்து, அந்த நடிகையை நோக்கிப் போனார்.

'நான் உன்னைப் பார்க்கும்போது எனக்கு அப்படித் தோன்றுவதில்லை' என்று நட்டாஷாவுக்குப் பதிலாக அனடோல், அவர், அவள் மட்டும் கேட்கக்கூடிய விதத்தில் பேசினார். 'நீ மிகுந்த வசீகரமாய் இருக்கிறாய்... உன்னைப் பார்த்த வினாடியிலிருந்து, நான் உன்னை மறந்ததே இல்லை...'

'இங்கே வா, இங்கே வா, நட்டாஷா' என்று கோமகன், திரும்பிப் பார்த்து நமது குமாரியை அழைத்தார். 'எவ்வளவு அழகாய் அவள் இருக்கிறாள்!' என்று சொன்னார்.

நட்டாஷா எதுவும் சொல்லாமல் தனது தந்தையிடம் சென்று, அவரை ஆச்சரியமான கண்களோடு நோக்கினாள்.

பல கவிதைகளை ஓதிய பின்பு, குமாரி ஜார்ஜெஸ் அதை விட்டுப் போனாள். கோமகள் பெஜுகாவா அங்கு வந்திருந்த விருந்தாளி களை நடன மண்டபத்திற்கு வரும்படி அழைத்தாள்.

கோமகன் வீடு திரும்ப விரும்பினார். ஆனால், அந்த நடனத்தைச் சிறப்பிப்பதற்காக, அவர் கண்டிப்பாக இருக்க வேண்டுமென்று ஹெலன் கெஞ்சியபடியால், ராஸ்டோவ்கள் அங்கே தங்கினார்கள். தன்னுடன் ஒரு நடனத்திற்கு வரும்படி நட்டாஷாவை அனடோல் கேட்டார். அவர்கள் நடனமாடிக் கொண்டிருந்தபோது, அவர் அவளுடைய இடுப்பையும், கையையும் அழுத்தினார். அவள் மனோகரமாய் இருக்கிறாள், என்றும், அவளை அவர் காதலிப்பதாயும் கூறினார். அடுத்த நடனத்திலும், அவள் அவருடன் ஆடினாள். அவர்கள் தனியாக இருந்தபோது, அனடோல் எதுவும் சொல்லவில்லை. ஆனால் அவளை உற்று நோக்கிக்கொண்டே இருந்தார். நட்டாஷா தன்னுடைய பீதியுற்ற கண்களை உயர்த்தி அவரைப் பார்த்தாள். அவருடைய அன்பான பார்வையில், ஒரு நம்பிக்கையான கனிவும், ஒரு புன்னகையும் காணப்பட்டன. அதனால் அவள் அவரிடம் என்ன சொல்லவேண்டும் என்று நினைத்தாளோ, அதைச் சொல்ல முடியவில்லை. தன்னுடைய கண்களைக் கீழே நோக்கினாள்.

'அம்மாதிரி விஷயங்களை என்னிடம் பேச வேண்டாம். நான் நிச்சயதார்த்தனமானவள். நான் வேறு ஒருவரைக் காதலிக்கிறனே்' என்று வேகமாக அவள் சொன்னாள். மீண்டும் அவரை அவள் நோக்கினாள்.

அவள் சொன்னதைக் கேட்டு அனடோல் தடுமாறவோ வருத்தம் கொள்ளவோ இல்லை.

'அம்மாதிரி என்னிடம் நீ பேசவேண்டாம். நான் என்ன செய்வேன்?' என்று அவர் சொன்னார். 'நான் உன் மீது காதல் கொண்டு, பைத்தியமாக இருக்கிறேன். நீ இவ்வளவு மனோகரமாய் இருந்தால், அதற்கு நானா பொறுப்பு?... இப்போது மறுபடியும் நடனமாடப் போவோம்.'

நட்டாஷா பரபரப்பும் உற்சாகமும் கொண்டாள். தன்னைச்சுற்றி, பீதியுற்ற, விரிந்த கண்களோடு நோக்கினாள். வழக்கத்திற்கு அதிகமாக அவள் மகிழ்ச்சியோடு இருப்பதாகக் காணப்பட்டாள். அன்று மாலை நடந்தது எதையுமே, அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவர்கள் இருவரும் இரண்டு நடனமாடினார்கள். அவளுடைய தந்தை, 'வீட்டிற்குப் போவோம்' என்று அழைத்தார். ஆனால், இன்னும் கொஞ்சம் தங்க வேண்டுமென்று அவள் அவரைக் கெஞ்சினாள். அவள் எங்கே போனாலும், என்ன பேசிக் கொண்டிருந்தாலும், அவருடைய கண்கள் அவள் மீது இருப்பதாக உணர்ந்தாள். தான் ஆடையணியும் அறைக்குள் போய், தன்னுடைய

ஆடைகளைச் சரி செய்துகொண்டு வருவதாக, தன்னுடைய தந்தையிடம் கேட்டது அவளுக்குப் பின்னால் ஞாபகத்திற்கு வந்தது. அச்சமயம் அவளுக்குப் பின்னால் ஹெலன் போனாள். அவள் அவளுடைய சகோதரரின் காதலை சிரித்துக்கொண்டே அவளிடம் சொன்னாள். அவள் மீண்டும் அந்தச் சிறிய உட்காரும் அறையில் அனடோலை சந்தித்தாள். அவர்களைத் தனியாக விட்டுவிட்டு, ஹெலன் போய்விட்டாள். அனடோல் அவளுடைய கையைப்பற்றி கனிந்த குரலில் சொன்னார்:

'நான் உன்னைப் பார்க்க வர முடியாது. ஆனால், உன்னை நான் எப்போதுமே இனி பார்க்க முடியாதா? உன் மீது நான் மிகுந்த காதல் கொண்டிருக்கிறேன். என்னால் எப்போதும் பார்க்க முடியாதா?...' என்று அவளுக்கு குறுக்காகப் பாதையை மறித்துக் கொண்டு நின்று, அவளுடைய முகத்திற்குப் பக்கத்தில் தம்முடைய முகத்தைக் கொண்டுவந்தார்.

அவருடைய பெரிய ஜொலி ஜொலிக்கும் அந்த ஆண்மைக் கண்கள், அவளுக்கு வெகு நெருக்கமாக இருந்தபடியால், அவள் அந்தக் கண்களைத் தவிர வேறு எதையும் பார்க்க முடியவில்லை.

'நட்டாலி?' என்று அவர் கேள்விக் குறியோடு மெதுவாக அழைத்தார். அச்சமயம் அவளுடைய கைகளை வலிக்கும்படியாக அழுத்திக் கொண்டிருந்தார். 'நட்டாலி?'

'எனக்கு ஒன்றும் புரியவில்லை. நான் சொல்லுவதற்கு ஒன்றும் இல்லை' என்று அவளுடைய கண்கள் பதிலளித்தன.

நெருப்பாய் சூடுகொண்டிருந்த இதழ்கள் அவளுடைய இதழ்களை அழுத்தின. அதே வினாடியில் அவள் பிடிப்பிலிருந்து விடுபட்டதாக உணர்ந்தாள். ஹெலனின் காலடி ஓசைகளும், அவளுடைய ஆடைகளின் சலசலப்புகளும் அந்தஅறையில் கேட்டன. நட்டாஷா திரும்பி அவளைப் பார்த்தாள். அதன் பின்னர், சிவந்து நடுநடுங்கி, ஒரு பீதியுற்ற கேள்விக்குறி கொண்ட பார்வையோடு, அனடோலைப் பார்த்து விட்டு, வாசலை நோக்கிப் போனாள்.

'ஒரே ஒரு வார்த்தை; ஒரே ஒரு வார்த்தை, கடவுளுக்காக' என்று அனடோல் கூவினார்.

அவள் தயங்கி நின்றாள். ஆகவே அவரிடமிருந்து ஒரு வார்த்தையை அவள் கேட்க விரும்பினாள். அந்த வார்த்தை அப்போது என்ன நடந்தது என்பதைப் பற்றி அவளுக்குத் தெரிவிக்குமென்றும் அதற்கு அவள் பதில் சொல்ல முடியுமென்றும் அவள் நினைத்தாள்.

'நட்டாலி, ஒரே ஒரு வார்த்தை, ஒரே ஒரு வார்த்தை' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார். அதாவது, என்ன சொல்வது என்பதை அறியாமல் இருந்ததைப் போலத் தோன்றியது. அவர்களுக்குப் பக்கத்தில் ஹெலன் வந்து சேருகிற வரையில் அவர் திரும்பத் திரும்ப அதையே சொல்லிக் கொண்டிருந்தார்.

நட்டாஷாவுடன் வரவேற்பு அறைக்கு ஹெலன் வந்தாள். சாப்பாட்டுக்குத் தங்காமல் ராஸ்டோவ்கள் அதை விட்டுப் புறப்பட்டுப் போனார்கள்.

வீட்டிற்குப் போனதும், அன்று இரவு முழுவதும் நட்டாஷா தூங்கவில்லை. தான் அனடோலைக் காதலிக்கிறாளா, அல்லது, இளவரசர் ஆண்ட்ரூவைக் காதலிக்கிறாளா என்ற பதில் சொல்ல முடியாத கேள்வியினால் அவள் வருந்திக் கொண்டிருந்தாள். அவள் இளவரசர் ஆண்ட்ரூவைக் காதலிக்கிறாள். எவ்வளவு ஆழமாக அவள் காதலிக்கிறாள் என்பதை, அப்போது அவள் தெளிவாக நினைவு கூர்ந்தாள். ஆனால் அனடோலைக் காதலிக்கிறாள் என்பதிலும் சந்தேகமில்லை. 'இல்லையென்றால், இதெல்லாம் எப்படி நடக்கமுடியும்?' என்று அவள் நினைத்தாள். 'அதற்குப் பின்னால் அவர் வழியனுப்பிய பின்பு, நான் அவருடைய புன்னகைக்குப் பதில்புன்னகை காட்டுவது என்றால், அவ்வளவு தூரத்திற்கு இந்த விஷயம் வரும்படி நான் விடுவது என்றால், முதலிலிருந்தே நான் அவரைக் காதலிக்கிறேன் என்பதுதான் அர்த்தம். அவர் அன்பாகவும், கண்ணியமாகவும், சிலாக்கியமாகவும் இருக்கிறாரென்றும், அவரை நான் காதலிக்காமல் இருக்க முடியாதென்றுமே அதற்கு அர்த்தம். அவரையும் அந்த மற்றொருவரையும் நான் காதலிக்கும்படி ஏற்பட்டால், அதற்கு நான் என்ன செய்வேன்?' என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்டு, இந்தப் பயங்கரமான கேள்விகளுக்கு பதில் தெரிய முடியாமல் இருந்தாள்.




**கா**லை வந்தது. அதோடு பரபரப்பும், சாதாரணக் கவலைகளும் வந்தன. ஒவ்வொருவரும் எழுந்து அங்கு மிங்கும் போகவும், பேசவும் ஆரம்பித்தார்கள். ஆடை தயாரிப்பவள் மீண்டும் வந்தாள். மரியா டிமிட்ரிவ்னா அங்கே தோன்றினாள். எல்லாரையும் காலை உணவிற்கு வரும்படி அழைத்தாள். நட்டாஷா அமைதியற்று

தனது விரிந்த கண்களால் ஒவ்வொருவரையும் பார்த்துக்கொண்டே இருந்தாள். தன் மீது வரும் பார்வையைத் தடுக்க விரும்புவது போல அவள் தோன்றினாள். எப்பொழுதும்போலத் தோன்றுவதற்கு அவள் முயற்சித்தாள்.

காலை உணவிற்குப் பின்னர்-அதுதான் அவளுக்குச் சிறந்த நேரம்-மரியா டிமிட்ரிவ்னா தனது நாற்காலியில் அமர்ந்து நட்டாஷாவையும், கோமகனையும் அழைத்தாள்.

'நல்லது, நண்பர்களே, நான் எல்லா விஷயத்தையும் சிந்தித்துப் பார்த்தேன். என்னுடைய யோசனை இதுதான்' என்று அவள் ஆரம்பித்தாள். 'நேற்று நான் இளவரசர் பால்கோன்ஸ்கியைப் பார்க்கப் போனேன் என்பது உங்களுக்குத் தெரியும். நல்லது, அவரிடம் நான் பேசினேன்... அவர் கூச்சல் போட ஆரம்பித்தார். ஆனால் கூச்சல் போட்டு என்னை மடக்கி விட முடியாது. ஆகவே நான் எதைச் சொல்ல வேண்டுமோ, அதைச் சொன்னேன்.'

'நல்லது, அவர் என்ன சொன்னார்?' என்று கோமகன் கேட்டார்.

'அவரா? அவருக்கு அரைப் பைத்தியம்... அவர் நான் சொல்வதைக் கேட்கவிரும்பவில்லை. ஆனால் இதைப்பற்றிப் பேசிக்கொண்டிருப்பதால் என்ன பிரயோஜனம்? இப்போது இருக்கிற நிலைமையில், பாவம், அந்தப் பெண்ணை மிகவும் வருத்தி விட்டோம். நான் உங்களுக்குக் கூறும் யோசனை இதுதான். அதாவது உங்களுடைய வேலைகளை முடித்துக் கொண்டு, நீங்கள் ஆட்ராட்னோ என்ற இடத்திலுள்ள உங்கள் வீட்டிற்குத் திரும்புங்கள்... அங்கே நீங்கள் காத்திருங்கள்.'

'ஓ, இல்லை' என்று நட்டாஷா கூவினாள்.

'நீங்கள் திரும்பிப் போங்கள், அங்கே காத்திருங்கள், உங்கள் நிச்சயதார்த்தக் கணவர் இங்கே வந்தால், இந்தச் சண்டையை தவிர்ப்பது என்ற பேச்சுக்கு இடமே கிடையாது. ஆனால் அந்த வயோதிகரிடம் அவர் தனியாக இந்த விஷயத்தைப் பேசி முடித்து விட்டு, அப்புறம் உன்னிடம் வருவார்.'

இந்த யோசனையைக் கோமகன் ராஸ்டோவ் அங்கீகரித்தார். அதனுடைய நியாயத்தையும் ஒப்புக் கொண்டார். அந்த வயோதிகர் மறுபடியும் சரியான வழிக்கு வருவதாயிருந்தால், அவரை மாஸ்கோவிலோ, பால்டு ஹில்ஸ் எஸ்டேட்டிலோ, பின்னர் பார்த்துக் கொள்ளுவதுதான் நலமாயிருக்கும். அப்படியில்லையென்றால், அவருடைய விருப்பத்திற்கு விரோதமாக, ஆட்ராட்னோவில் திருமணத்தை நடத்திக்கொள்ளலாம்.

'அது முற்றிலும் உண்மை. அவரைப் பார்ப்பதற்கு அவளை நான் அழைத்துக் கொண்டு போனதற்காக வருந்துகிறேன்' என்று கோமகன் சொன்னார்.

'இல்லை, ஏன் வருந்த வேண்டும்? நீ இங்கே இருந்ததனால், உம்முடைய மரியாதையைக் காட்டுவதற்காக, நீர் போக வேண்டியதாய் இருந்தது. அவர் ஒப்புக்கொள்ளவில்லை என்றால், அது அவரைச் சேர்ந்த விஷயம்' என்று மரியா டிமிட்ரிவ்னா கூறி, அவளுடைய அழகுப் பையில் எதையோ ஒன்றைத் தேடிக் கொண்டிருந்தாள். 'தவிரவும், இந்த மணப் பெண்ணுக்கான ஆடை தயாராய் விட்டது. ஆகவே, இனிமேல் நீங்கள் இங்கே காத்துக்கொண்டிருக்கவேண்டியதற்கு எதுவுமில்லை. ஏதாவது, தயாராகாவிட்டால் அதை நான் உங்களுக்கு அனுப்புகிறேன். நீங்கள் போவதை நான் விரும்பா விட்டாலும், இப்போது அதைச் செய்வதுதான் நல்ல வழி. ஆகவே கடவுளுடைய ஆசீர்வாதத்தோடு நீங்கள் போங்கள்.'

அந்த அழகுப் பையில் எதைத் தேடிக்கொண்டிருந்தாளோ, அதை எடுத்து நட்டாஷாவிடம் கொடுத்தாள். அது இளவரசி மேரியிடமிருந்து வந்த கடிதம்.

'அவள் உனக்கு எழுதியிருக்கிறாள். அவள் அவளை எப்படி வருத்திக்கொள்ளுகிறாள்! பாவம், அவள் உன்மீது பிரியம் கொள்ளவில்லை என்று நீ நினைத்துக்கொள்வாயோ என்று பயப்படுகிறாள்.'

'ஆனால் அவளுக்கு என்னைப் பிடிக்கவில்லை' என்று நட்டாஷா கூறினாள்.

'அசட்டுத்தனமாக, பேசாதே' என்று மரியா டிமிட்ரிவ்னா கூவினாள்.

'நான் ஒருவரையும் நம்பமுடியாது. அவளுக்கு என் மீது பிரியமில்லை என்று எனக்குத் தெரியும்' என்று நட்டாஷா அந்தக் கடிதத்தை வாங்கும்போது தைரியமாகச் சொன்னாள். அவளுடைய முகம் ஒரு கடினமான, கோபமான உறுதியோடு தோன்றியது. ஆகவே, அதை மரியா டிமிட்ரிவ்னா மிகவும் கூர்மையாகக் கவனித்து முகம் சுளித்தாள்.

'இம்மாதிரி நீ பதில் சொல்லாதே, எனது நல்ல பெண்ணே! நான் என்ன சொல்லுகிறேனோ, அது உண்மை. அதற்கு ஒரு பதில் எழுது' என்று அவள் சொன்னாள்.

நட்டாஷா பதில் சொல்லவில்லை. இளவரசி மேரியின் கடிதத்தை வாசிப்பதற்காக தனது அறைக்குச் சென்றாள்.

அவர்களிடையில் இருந்த தப்பபிப்பிராயங்களுக்காக, அவள் மிகுந்த வருத்தம் கொண்டிருப்பதாக இளவரசி மேரி எழுதியிருந்தாள். அவளுடைய தந்தையின் உணர்ச்சிகள் எப்படியிருந்தாலும், தன்னைப் பொறுத்த வரையில் அவள் மீது பிரியம் கொள்ளாமல் தான் இருக்க முடியாது என்றும், அவள் தன்னுடைய சகோதரரால் எதையும் தியாகம் செய்வதற்குத் தான் தயாராக இருப்பதாகவும் எழுதியிருந்தாள்.

'என்னுடைய தந்தைக்கு உன் மீது நல்லெண்ணம் இல்லை என்பதைப் பற்றி நீ யோசிக்க வேண்டாம். அவர் ஒரு நோயாளி; ஒரு வயதானவர். அவரை நாம் மன்னித்து விட வேண்டும். ஆனால் அவர் நல்லவர். மிகுந்த தாராள குணம் உள்ளவர். தமது குமாரரை யார் சந்தோஷப்படுத்துகிறாளோ, அவள் மீது அவர் அன்பு கொள்வார்' என்று இளவரசி மேரி எழுதியிருந்தாள். மறுபடியும் சந்திப்பதற்கு ஒரு தேதியை நிச்சயிக்கும்படி நட்டாஷாவைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

அந்தக் கடிதத்தை வாசித்த பின்பு; அதற்கு பதில் எழுதுவதற்காக மேஜை மீது அமர்ந்தாள். 'அன்பான இளவரசியே' என்று பிரஞ்சு மொழியில் வேகமாகவும் சரளமாகவும் எழுதி முடித்ததும், சிறிது தயங்கினாள். முதல் நாள் மாலையில் அந்த விஷயங்கள் எல்லாம் நடந்த பின்பு, அவள் அதற்கு மேல் என்ன எழுத முடியம்?

'ஆமாம், ஆமாம். அவையெல்லாம் நடந்து விட்டன. இப்பொழுது எல்லாம் மாறிவிட்டது' என்று அவள் எழுத ஆரம்பித்த கடிதத்தின் முன்பாக உட்கார்ந்திருந்தபோது நினைத்தாள். 'இப்பொழுது என்னுடைய நிச்சயதார்த்தத்தை நான் முடித்து விடவேண்டுமா?

உண்மையில் அப்படிச் செய்ய வேண்டுமா? அது பயங்கரமானது...' என்று அவள் நினைத்தாள். இந்த பயங்கரமான நினைப்புகளிலிருந்து தப்புவதற்காக சோனியாவிடம் சென்று, அங்கிருந்த ஆடை தினுசுகளைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

டின்னருக்குப் பின்னர் நட்டாஷா தன்னுடைய அறைக்குத் திரும்பி, மீண்டும் இளவரசி மேரியின் கடிதத்தை எடுத்தாள். 'எல்லாம் முடிந்து விட்டது என்று இருக்க முடியுமா?' என்று நினைத்தாள். 'இவையெல்லாம் இவ்வளவு சீக்கிரமாக ஏற்பட்டு, முன்னால் நடந்தவைகள் எல்லாம் அழிந்து போகும்படி இருக்க முடியுமா?'

இளவரசர் ஆண்ட்ரூ மீது கொண்டிருந்த காதலையும், அதனுடைய பழைய பலத்தையும் அவள் நினைவு கூர்ந்தாள். அதே

சமயத்தில் அவள் குராகின் மீது காதல் கொண்டிருப்பதாக அவள் உணர்ந்தாள். தான் இளவரசர் ஆண்ட்ரூவின் மனைவி என்பதைத் தெளிவாக நினைவில் நினைத்துப் பார்த்தாள். அவருடன் இருப்பதால் ஏற்படும் சந்தோஷ நிலைமையையும்-அவளுடைய மனதில் அடிக்கடி தோன்றி வந்த அந்தக் கற்பனைகளை-அவள் தெளிவாக மனதில் உருவகப்படுத்திப் பார்த்தாள். அதே சமயத்தில் அனடோலுடன் நேற்று நடந்த உரையாடல்களின் ஒவ்வொரு விவரத்தையும் அவள் உள்ளத்தில் உற்சாகம் பொங்க நினைத்துப் பார்த்தாள்.

'அது ஏன் அப்படி இருக்க முடியாது?' என்று அவள் பூரண குழப்பத்தோடு தன்னை சில வேளைகளில் கேட்டுக்கொள்ளுவாள். 'அப்படியானால்தான், நான் முற்றிலும் சந்தோஷமாக இருக்க முடிகிறது. ஆனால் அவர்களில் யாராவது ஒருவர் இல்லாவிட்டால், நான் சந்தோஷமாக இருக்க முடியாது. ஒன்று இளவரசர் ஆண்ட்ரூவிடம், என்ன நடந்தது என்பதை நான் சொல்லிவிட வேண்டும். அல்லது அவரிடம் அதை மறைக்க வேண்டும். இந்த இரண்டும் சாத்தியமில்லாத காரியங்கள். ஆனால் மற்றொருவரைப் பொறுத்த வரையில் ஒன்றும் கெட்டுப் போகவில்லை. அப்படியானால், இதுவரை நான் வாழ்ந்து வந்த அந்த இளவரசர் ஆண்ட்ரூவின் காதல் மகிழ்ச்சியை நான் உண்மையில் எப்பொழுதுமே கைவிட வேண்டியதுதானா?'

'தயவு செய்ய வேண்டும், குமாரியே' என்று ஒரு ரகசியமான பார்வையோடு ஒரு வேலைக்காரி உள்ளே வந்தாள். 'இதை உன்னிடம் கொடுக்கும்படி, ஒரு மனிதர் என்னிடம் சொன்னார்' என்று சொல்லி, நட்டாஷாவிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தாள்.

'ஓ! அட கடவுளே' என்று அந்தப் பெண் சொல்லிக் கொண்டிருந்தாள். நட்டாஷா எதையும் யோசிக்காமல் அனடோலிடமிருந்து வந்த காதல் கடிதத்தைத் திறந்து வாசித்தாள். அவள் அதிலிருந்த விஷயங்களில் ஒரு வார்த்தையைக்கூட புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் தான் காதலித்த ஒருவரிடமிருந்து வந்த கடிதம் என்பதை மட்டும் அவள் அறிந்து கொண்டாள். ஆமாம், அவரை அவள் காதலிக்கிறாள். அல்லது அப்பொழுது நடந்த விஷயங்களெல்லாம் எப்படி நடந்திருக்க முடியும்? அவளுக்கு அவரிடமிருந்து அந்தக் காதல் கடிதம் அவள் கையில் எப்படி வந்து சேர்ந்திருக்க முடியும்?

நடுங்கிய கைகளில் அந்த ஆசை மிகுந்த காதல் கடிதத்தை, அனடோலுக்காக டோலாகாவ் எழுதிக் கொடுத்த கடிதத்தை, அவள்

பற்றி இழுத்தாள். அவள் அதை வாசித்தபோது அவள் மனதில் என்னென்ன எண்ணங்கள் கற்பனையில் தோன்றினவோ அவையெல்லாம் அதில் பிரதிபலிப்பதாக அவள் கண்டாள்.

'நேற்று மாலையிலிருந்து என்னுடைய விதி முடிவு செய்யப்பட்டுள்ளது. அதாவது உன்னால் காதலிக்கப்பட வேண்டும், அல்லது சாக வேண்டும் என்பதாகும். எனக்கு வேறு வழி இல்லை' என்று அந்தக் கடிதத்தின் ஆரம்பத்தில் சொல்லப் பட்டிருந்தது. அதன் பின்னர், அவளுடைய பெற்றோர்கள் தனக்கு அவளை திருமணம் செய்து வைக்க மாட்டார்கள் என்பதை அவர் அறிவார் என்றும், அதற்கான ரகசிய காரணங்கள் இருக்கின்றன என்றும், அவற்றை ஒரு நாள் அவர் அவளுக்குச் சொல்லுவார் என்றும் கூறியிருந்தார். ஆனால் அவள் அவரைக் காதலிப்பதாயிருந்தால், 'ஆம்' என்று ஒரு வார்த்தை சொன்னால் போதும் என்றும், அதன் பின்னால் எந்த மனித சக்தியும் அவர்களுடைய பேரானந்தத்தை தடை செய்ய முடியாது என்றும் சொல்லியிருந்தார். எல்லாவற்றையுமே காதல் வெற்றி பெற்று விடும் என்றும், அவர் அவளைத் தூக்கிக்கொண்டு உலகத்தின் எந்தப் பக்கத்திற்கு வேண்டுமானாலும் போய் விட முடியும் என்றும் அவர் கூறியிருந்தார்.

'ஆமாம், ஆமாம். நான் அவரைக் காதலிக்கிறேன்' என்று நட்டாஷா நினைத்தாள். அந்தக் கடித்த்தை இருபதாவது தடவையாக அவள் வாசித்து, அதிலுள்ள ஒவ்வொரு வார்த்தைக்கும் ஏதோ ஒரு விசேஷமான ஆழ்ந்த அர்த்தத்தை அவள் கண்டுபிடித்துக் கொண்டிருந்தாள்.

அன்று மாலை அக்காராவ்ஸ் என்ற வீட்டிற்கு அந்தப் பெண்களைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு போக மரியா டிமிட்ரிவ்னா நினைத்திருந்தாள். நட்டாஷா தனக்குத் தலைவலி என்று கூறி வீட்டிலேயே தங்கி விட்டாள்.



மாலையில் நேரம் கழித்துத் திரும்பிய சோனியா, நட்டாஷாவின் அறைக்குப் போனாள். நட்டாஷா இன்னமும் உடைகளைக் களையாமல் சோபாவில் தூங்கிக்கொண்டிருந்ததைப் பார்த்து ஆச்சரியமடைந்தாள். அவளுக்குப் பக்கத்தில் கிடந்த மேஜை மீது, அனடோலின் கடிதம் விரித்துக் கிடந்தது.

அவள் அதை வாசிக்கும்போதே, தூங்கிக்கொண்டிருந்த நட்டாஷாவைப் பார்த்தாள். அந்தக் கடிதத்தில் கண்ட விஷயங்களுக்கு அவள் முகத்தில் ஏதாவது சமாதானமறிய அவள் முயற்சித்தாள். ஆனால், அவளால் கண்டுபிடிக்க முடியவில்லை. அவளுடைய முகம் அமைதியாகவும், மென்மையாகவும், சந்தோஷமாகவும் காணப்பட்டது. தனக்கு மூச்சு திணறிவிடக் கூடாதே என்பதற்காக, தனது நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு, முகம் வெளிறி, பயத்தினாலும், பரபரப்பினாலும் உடல் பதறி, அங்கிருந்த சாய்வு நாற்காலியில் அமர்ந்து கண்ணீர் விட ஆரம்பித்தாள்.

'இதைப்பற்றி எதுவுமே நான் எப்படிக் கவனிக்காமல் இருந்தேன்? இவ்வளவு தூரம் அது 'எப்படிப் போக முடிந்தது? இளவரசர் ஆண்ட்ரூவைக் காதலிப்பதை, அவள் விட்டு விட முடியுமா? இவ்வளவு தூரத்திற்கு குராகின் போகிற வரையில், அவள் எப்படி விட்டாள்? அவன் ஒரு ஏமாற்றுக்காரன்; ஒரு துஷ்டன்; அது தெளிவானது. ஆனால் நிக்கலஸ், அருமையான, அந்த கண்யமான நிக்கலஸ், இதைக் கேள்விப்பட்டதும் என்ன செய்வார்? ஆகவே நேற்றும், நேற்று முன் தினமும், இன்றும், அவள் பரபரப்பும் உறுதியும் இயற்கைக்கு விரோதமாகவும் தோன்றுவதற்குக் காரணம், இதுதானா?' என்று சோனியா நினைத்தாள். 'ஆனால் அவள் அவனைக் காதலிப்பதாயிருக்க முடியாது. யாரிடமிருந்து அந்தக் கடிதம் வந்திருக்கிறது என்பதை அறியாமலேயே அவள் கடிதத்தை ஒரு வேளை திறந்திருக்கலாம். அதனால் ஒரு வேளை மனம் புண்பட்டிருக்கலாம். இம்மாதிரி ஒரு விஷயத்தை அவள் செய்ய மாட்டாள்.'

சோனியா தனது கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, நட்டாஷாவிடம் சென்று, மீண்டும் அவள் முகத்தை உற்று நோக்கினாள்.

'நட்டாஷா' என்று அவள் மெதுவான குரலில் கூப்பிட்டாள்.

நட்டாஷா விழித்து சோனியாவைப் பார்த்தாள்.

'ஆ, நீ திரும்பி வந்து விட்டாயா?'

அம்மாதிரி விழிக்கிற நேரங்களில் ஏற்படுகிற கனிவோடும், உறுதியோடும், தன்னுடைய சிநேகிதியைத் தழுவினாள். ஆனால் சோனியாவின் முகத்தில் தொந்தரவான தோற்றம் காணப்பட்டதைக் கவனித்தாள். உடனே அவளுடைய முகத்திலும் சந்தேகமும் குழப்பமும் காணப்பட்டன.

'சோனியா, நீ அந்தக் கடிதத்தைப் படித்துப் பார்த்தாயா?' என்று கேட்டாள்.

'ஆமாம்' என்று மிருதுவாக சோனியா பதில் அளித்தாள்.

நட்டாஷா பரவசத்தோடு புன்னகை காட்டினாள்.

'இல்லை, சோனியா, நான் இனி இம்மாதிரி இருக்க முடியாது. இனி உன்னிடமிருந்து மறைக்க முடியாது. நாங்கள் இருவரும் காதல் கொண்டிருக்கிறோம் என்பதை நீ அறிவாய். சோனியா, என் கண்ணே, அவர் எழுதி இருக்கிறார்... சோனியா...'

சோனியா தன்னுடைய காதுகளை நம்பாமல் நட்டாஷாவை வெறித்துப் பார்த்தாள்.

'அப்படியானால், பால்கோன்ஸ்கி?' என்று அவள் கேட்டாள்.

'ஆ, சோனியா, நான் எவ்வளவு சந்தோஷமாய் இருக்கிறேன் என்பதை நீ மட்டும் அறிய முடியுமானால்! காதல் என்பது என்னவென்பது உனக்குத் தெரியாது...' என்று நட்டாஷா கூச்சலிட்டாள்.

'ஆனால், நட்டாஷா, பழைய விஷயம் முழுவதும் முடிந்து விடமுடியுமா?'

சோனியாவை விரிந்த கண்களுடன், அவள் கேட்கிற கேள்வி என்னவென்பதைப் புரிந்து கொள்ளாத்துபோல, நட்டாஷா நோக்கினாள்.

'அப்படியானால் இளவரசர் ஆண்ட்ரூவை, நீ தள்ளி விடுகிறாயா?' என்று சோனியா கேட்டாள்.

'ஓ, உன்னால் ஒரு விஷயத்தையும் புரிந்துகொள்ள முடிய வில்லை. அசட்டுத்தனமாய்ப் பேசாதே, நான் சொல்வதைக் கவனமாய்க் கேள்' என்ற எரிச்சலோடு நட்டாஷா சொன்னாள்.

'ஆனால் என்னால் நம்ப முடியாது. என்னால் புரிந்து கொள்ளமுடியவில்லை. ஒரு வருஷம் பூராவாக ஒருவர் மீது காதல் கொண்டு விட்டு, திடீரென்று... அவரை மூன்று தடவைகள் தான் பார்த்திருக்கிறாய். நட்டாஷா, நான் உன்னை நம்ப முடியாது. நீ தமாஷ் செய்கிறாய். மூன்று நாட்களில் பழைய விஷயங்கள் எல்லாவற்றையும் மறந்து விட முடியுமா?...'

மூன்று நாட்கள்தானா?' என்று நட்டாஷா கேட்டாள். 'ஆனால், அவரை நூறு வருஷங்களாக நான் காதலித்துக்கொண்டிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. இதற்கு முன்பு நான் வேறு யாரையும் காதலித்தது இல்லை என்று எனக்குத் தோன்றுகிறது. உன்னால்

அதைப் புரிந்து கொள்ள முடியாது. சோனியா, ஒரு நிமிஷம் பொறு. இங்கே உட்கார்' என்று சொல்லி, அவளைத் தழுவி முத்தமிட்டாள்.

'அது இம்மாதிரி நடக்கிறதென்பதை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். நீயும் கூட கேள்விப்பட்டிருக்கலாம். ஆனால் இப்போது தான், அம்மாதிரிக் காதலை நான் உணருகிறேன். முன்போன்ற மாதிரி அல்ல இது. அவரை நான் பார்த்ததும், அவர்தான் என்னுடைய எஜமான் என்றும், நான் அவருடைய அடிமை என்றும், அவர் மீது காதல் கொள்ளாமல் இருக்க முடியாது என்றும் நான் உணர்ந்தேன். ஆமாம்; நான் அவருடைய அடிமை. அவர் என்ன உத்தரவிடுகிறாரோ, அதை நான் செய்வேன். உன்னால் அதைப் புரிந்து கொள்ள முடியாது. நான் என்ன செய்வேன்? நான் என்ன செய்வேன் சோனியா?' என்று ஒரு சந்தோஷமான, ஆனால் பீதியுற்ற தோற்றத்தோடு நட்டாஷா கூவினாள்.

'ஆனால், நீ என்ன செய்கிறாய் என்பதை யோசித்துப் பார். என்னால் இம்மாதிரி விட்டு விட முடியாது. இந்த ரகசிய கடிதப் போக்குவரத்துகள்... இவ்வளவு தூரம் அவர் போகும்படி, நீ எப்படி' விடலாம்?' என்று சோனியா கூச்சலிட்டாள். அவளுக்கு ஏற்பட்ட பயங்கரத்தையும், அருவருப்பையும், அவளால் மறைக்க முடியவில்லை.

'எனக்கு சுயமாக எந்த விருப்பமும் இல்லை என்பதை நான் உனக்குச் சொல்லியிருக்கிறேன். உன்னால் ஏன் புரிந்துகொள்ள முடியவில்லை? நான் அவரைக் காதலிக்கிறேன்' என்று நட்டாஷா பதில் சொன்னாள்.

'அப்படியானால், அம்மாதிரி நேரிடுவதை நான் விட முடியாது... நான் சொல்லி விடுவேன்' என்று சோனியா கூவி, கண்ணீர் பெருக்கினாள்.

'நீ சொல்லுவதன் பொருள் என்ன? கடவுளுக்காக... நீ சொல்லுவாயானால், நீ என்னுடைய விரோதி. நான் துர்ப்பாக்கியமாய் இருக்க வேண்டும் என்றால், நாங்கள் பிரிந்திருக்க வேண்டுமென்றால்...'

நட்டாஷாவின் நடுக்கத்தை சோனியா பார்த்ததும், தன்னுடைய சிநேகிதிக்காக வெட்கமும், அனுதாபமும் கொண்டு கண்ணீர் வடித்தாள்.

'ஆனால், உங்கள் இருவருக்குள் என்ன நடந்தது? அவர் உன்னிடம் என்ன சொன்னார்? இந்த வீட்டிற்கு அவர் ஏன் வரக்கூடாது?' என்று அவள் கேட்டாள்.

அவளுடைய கேள்விகளுக்கு நட்டாஷா பதில் சொல்லவில்லை.

'கடவுளுக்காக, சோனியா, யாரிடமும் சொல்லாதே. என்னை சித்திரவதை செய்யாதே. இம்மாதிரி விஷயங்களில் ஒருவரும் தலையிடக்கூடாது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள். நான் உன்னிடத்தில் அந்தரங்கத்தைக் கூறினேன்.'

'ஆனால் இந்த ரகசியம் எதற்காக? அவர் ஏன் இந்த வீட்டிற்கு வரக்கூடாது?' என்று சோனியா கேட்டாள். 'அவர் ஏன் வெளிப்படையாக உன்னை திருமணம் செய்வதற்கு வந்து கேட்கக்கூடாது? இளவரசர் ஆண்ட்ரூ உனக்குப் பூரண சுதந்திரம் கொடுத்திருப்பதை நீ அறிவாய்- அது உண்மையாய் இருந்தால்; ஆனால் நான் அதை நம்பவில்லை. நட்டாஷா, இந்த ரகசிய காரணங்கள் எதுவாய் இருக்கலாம் என்று நீ சிந்தித்தாயா?'

ஆச்சரியத்தோடு சோனியாவை நட்டாஷா பார்த்தாள். இப்போதுதான் இந்தக் கேள்வி அவளுடைய மனதில் முதல் தடவையாகத் தோன்றியது. ஆனால் அவளால் அதற்கு எப்படிப் பதில் சொல்வதென்று தெரியவில்லை.

'காரணங்கள் என்ன என்பது எனக்குத் தெரியாது. ஆனால் காரணங்கள் இருந்திருக்க வேண்டும்.'

சோனியா பெருமூச்சு விட்டாள். தனது தலையை நம்பிக்கையில்லாமல் ஆட்டினாள்.

'காரணங்கள் இருக்குமானால்...' என்று அவள் ஆரம்பித்தாள்.

ஆனால் அவளுடைய சந்தேகங்களை நட்டாஷா யூகித்து, பீதியோடு அவளை இடைமறித்தாள்.

'சோனியா, அவரை ஒருவர் சந்தேகிக்க முடியாது. ஒருவரும் முடியாது, ஒருவரும் முடியாது. உன்னால் புரிந்துகொள்ள முடியவில்லையா?' என்று அவள் கூச்சலிட்டாள்.

'அவர் உன்னைக் காதலிக்கிறாரா?'

'அவர் உன்னைக் காதலிக்கிறாரா?' என்று நட்டாஷா, விஷயங்களைப் புரிந்துகொள்ள முடியாத தன்னுடைய சிநேகிதியின் நிலைமையைக் கண்டு இரங்கி, ஒரு இரக்கப் புன்னகையோடு, அந்த கேள்வியைத் திரும்பச் சொன்னாள். 'ஏன், அவருடைய கடிதத்தைப் படித்துப் பார்த்தாய்? அவரையும் நீ பார்த்திருக்கிறாய்.'

'ஆனால், அவர் ஒரு அயோக்கியராய் இருந்தால்?'

'அவரா! அயோக்கியரா? உனக்கு மட்டும் அவரைத் தெரிந்திருக்குமானால்!' என்று நட்டாஷா கூச்சலிட்டாள்.

'அவர் ஒரு யோக்கியமான மனிதராய் இருந்தால், அவருடைய எண்ணங்களை அவர் பகிரங்கமாய்ச் சொல்ல வேண்டும். அல்லது உன்னைப் பார்ப்பதை அவர் விட்டு விட வேண்டும். நீ இதைக் கைவிடா விட்டால நான் சொல்வேன். நான் அவருக்கு எழுதுவேன். நான் அப்பாவிடம் சொல்வேன்' என்று சோனியா உறுதியோடு கூறினாள்.

'ஆனால், அவரில்லாமல் நான் உயிர் வாழ முடியாது' என்று நட்டாஷா கூச்சலிட்டாள்.

'நட்டாஷா, உன்னைப் புரிந்துகொள்ள முடியவில்லை. நீ என்ன சொல்கிறாய்? உன்னுடைய தந்தையைப் பற்றியும், நிக்கலஸைப் பற்றியும் சிறிது யோசித்துப் பார்.'

'எனக்கு ஒருவரும் தேவையில்லை. அவரைத் தவிர, வேறு யார் மீதும் நான் காதல் கொண்டிருக்கவில்லை. அவர் அயோக்கியர் என்று நீ எப்படி துணிந்து கூறினாய்? நான் அவரைக் காதலிக்கிறேன் என்பது உனக்குத் தெரியாதா?' என்று நட்டார்ஷா கதறினாள். 'நீ போ, சோனியா உன்னோடு சண்டை போட நான் விரும்பவில்லை. ஆனால் நீ போய் விடு. கடவுளுக்காகப் போய் விடு. நான் எவ்வளவுதூரம் துன்பப்படுகிறேன் என்று நீ அறிவாய்' என்று நட்டாஷா தன்னுடைய அடக்கிய எரிச்சலையும் அதைரியத்தையும் காட்டக்கூடிய குரலில் கோபத்தோடு கூச்சலிட்டாள். சோனியா விம்மி விம்மி அழுது கொண்டு, அந்த அறையை விட்டு ஓடினாள்.

நட்டாஷா மேஜைக்குச் சென்று, ஒரு வினாடிகூட யோசனை செய்யாமல், இளவரசி மேரிக்கு அந்த பதிலை எழுத ஆரம்பித்தாள். அந்த பதில் கடிதத்தை அன்று காலை பூராவாக அவள் எழுத முயற்சி செய்தும் முடியவில்லை. இந்தக் கடிதத்தில் அவர்களுடைய தப்பபிப்பிராயங்கள் எல்லாம் முடிந்து விட்டன என்று சுருக்கமாகக் கூறியிருந்தாள். இளவரசர் ஆண்ட்ரூவின் பெருந்தன்மையான குணத்தினால் அவர் வெளி நாடு போகும்போது, தனக்குக் கொடுத்த சுதந்திரத்தை நான் உபயோகித்துக்கொள்வதாகவும், எல்லா விஷயங்களையும் இளவரசி மேரி மறந்து, தன் மீது குற்றமிருந்தால் தன்னை மன்னிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டிருந்தாள். ஆனால் தான் இளவரசர் ஆண்ட்ரூவுக்கு மனைவியாக இருக்கமுடியாதென்றும் எழுதியிருந்தாள். அந்த வினாடியில், இவையெல்லாம் ரொம்ப சுலபமாகவும், எளிதாகவும், தெளிவாகவும், நட்டாஷாவுக்குத் தோன்றின.

கிராமத்திற்கு ராஸ்டோவ்கள் வெள்ளிக்கிழமையன்று திரும்புவதாய் இருந்தது. புதன்கிழமையன்று தம்முடைய

எஸ்டேட்டை விலைக்கு வாங்குகிறவருடன் கோமகன் மாஸ்கோவுக்கு பக்கத்திலுள்ள தமது எஸ்டேட்டுக்குப் போனார்.

கோமகன் புறப்பட்டுச் சென்ற தினத்தில், காராகின்களுடைய வீட்டில் நடந்த ஒரு பெரிய டின்னர் கச்சேரிக்கு, சோனியாவையும் நட்டாஷாவையும் அழைத்திருந்தார்கள். மரியா டிமிட்ரிவ்னா அவர்களை அழைத்துக்கொண்டு போனாள். அந்த டின்னர் கச்சேரியில் அனடோலை மீண்டும் நட்டாஷா சந்தித்தாள். அவள் அனடோலோடு பேசுவதை சோனியா கவனித்தாள். அவள் பேசுவதை மற்றவர்கள் கேட்க முடியாத விதத்தில் பேச முயற்சி செய்தாள். அதிக பரபரப்போடு அவள் இருந்தாள். அந்த டின்னர் பூராவாக, எப்போதையும்விட அதிக பரபரப்பாக இருந்தாள். வீடு திரும்பியதும் சோனியா எதிர்பார்த்த அந்த சமாதானத்தை நட்டாஷா கூற ஆரம்பித்தாள்.

'இங்கு பார், சோனியா. அவரைப் பற்றி எல்லாவிதமான அசட்டுப் பேச்சுக்களையும் நீ பேசிக்கொண்டிருந்தாய்' என்று நட்டாஷா ஒரு மென்மையான குரலில் பேசினாள். அதாவது தங்களைப் புகழ வேண்டுமென்று குழந்தைகள் விரும்புகிற சமயத்தில் எப்படிப் பேசுவார்களோ, அப்படிப் பேசினாள். 'இன்று நாங்கள் அதைப் பற்றி விரிவாகப் பேசினோம்.'

'நல்லது, என்ன நடந்தது? அவர் என்ன சொன்னார்? நட்டாஷா, நீ என்னிடம் கோபமில்லாமலிருப்பதைப் பார்த்து நான் எவ்வளவு சந்தோஷமடைகிறேன் தெரியுமா? எனக்கு ஒவ்வொன்றையும் சொல். முழு உண்மையையும் சொல். அவர் என்ன சொன்னார்?'

நட்டாஷா சிந்திக்க ஆரம்பித்தாள்.

'சோனியா, நான் அவரை அறிந்திருப்பதைப்போல, நீ மட்டும் அறிந்திருந்தாயானால்... அவர் சொன்னார்... பால்கோன்ஸ்கிக்கு நான் என்ன வாக்குறுதி கொடுத்திருக்கிறேன் என்று அவர் என்னிடம் கேட்டார். நான் அவரை மறுத்து விடுவதற்கு எனக்குச் சுதந்திரம் உண்டு என்று சொன்னதும், அவர் மகிழ்ச்சியடைந்தார்.'

சோனியா துக்கத்தோடு பெரு மூச்சு விட்டாள்.

'ஆனால், நீ இன்னும் பால்கோன்ஸ்கியை மறுக்கவில்லையே?' என்றாள்.

'ஒரு வேளை, நான் மறுத்திருக்கலாம். ஒரு வேளை, அவருக்கும் எனக்குமுள்ள உறவுகள் எல்லாம் முடிந்து போய் இருக்கலாம். நீ ஏன் என்னை அவ்வளவு மோசமாய் நினைக்கிறாய்?'

'நான் ஒன்றும் நினைக்கவில்லை. இதை என்னால் புரிந்து கொள்ளத்தான் முடியவில்லை.'

'கொஞ்சம் போறு, சோனியா, ஒவ்வொன்றையும் நீ அறிந்து கொள்ளுவாய். அவர் எப்பேர்ப்பட்ட மனிதர் என்பதை, நீ தெரிந்து கொள்வாய். அவரைப் பற்றியோ, என்னைப் பற்றியோ நீ மோசமாய் நினைக்காதே. நான் ஒருவரையும் மட்டமாய் நினைத்ததில்லை. ஒவ்வொருவரிடமும் நான் பிரியமும் அனுதாபமும் காட்டுகிறேன். ஆனால் நான் என்ன செய்வது?'

நட்டாஷா தன்னிடம் பேசிய அந்த கனிந்த தொனியில் சோனியா மயங்கி விடவில்லை. நட்டாஷாவின் முகம் எவ்வளவுக் கெவ்வளவு ஆவேசமும் நயமும் கொண்டதோ, அவ்வளவுக் கவ்வளவு சோனியாவின் முகத்தில் சிரத்தையும் கடுமையும் வளர்ந்தன.

'நட்டாஷா, உன்னிடம் பேச வேண்டாமென்று நீ என்னிடம் கேட்டாய். நான் பேசவில்லை. இப்போது நீயே பேச ஆரம்பித்திருக்கிறாய். நான் அவரை நம்பவில்லை, நட்டாஷா. இந்த ரகசியம் எதற்காக?' என்று அவள் கேட்டாள்.

'திரும்பவும், திரும்பவும்' என்று நட்டாஷா இடை மறித்தாள்.

'நட்டாஷா, உனக்காகப் பயப்படுகிறேன்.'

'எதற்காக நீ பயப்படுகிறாய்?...'

'நீ உனக்கு நாசத்தை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறாயே என்பதற்காக பயப்படுகிறேன்' என்று உறுதியோடு சோனியா பதில் சொன்னாள். ஆனால் தான் சொல்லியதைக் கேட்டு அவளே பயங்கரமடைந்தாள்.

நட்டாஷாவின் முகத்தில் மீண்டும் கோபம் தோன்றியது.

'நான் எனது நாசத்தை நோக்கிப் போவேன். நான் போவேன். சீக்கிரமாகப் போவேன். அது உன்னுடைய வேலை அல்ல. அதற்காகக் கஷ்டப்படப் போவது நானே யொழிய, நீ அல்ல. என்னைத் தனியாக விட்டுவிடு, தனியாக விட்டுவிடு. நான் உன்னை வெறுக்கிறேன்.'

'நட்டாஷா' என்று சோனியா திகிலோடு முனங்கினாள்.

'நான் உன்னை வெறுக்கிறேன்; நான் உன்னை வெறுக்கிறேன். நீ இனி எப்போதும் என்னுடைய விரோதி' என்று சொல்லி விட்டு அந்த அறையை விட்டு நட்டாஷா வெளியே ஓடினாள்.

அவள் மீண்டும் சோனியாவோடு பேசவில்லை. அவளைச் சந்திக்காதபடி தவிர்த்துக் கொண்டே வந்தாள். அதே மாதிரி பரபரப்பான ஆச்சரியத்தோடும், குற்றம் நிறைந்த தோற்றத்தோடும்

அவள் வீட்டைச் சுற்றி வந்தாள். இப்போது ஒன்றைச் செய்வதும், உடனே அதை விட்டு மற்றொன்றைச் செய்வதுமாக அவள் செய்து வந்தாள்.

சோனியாவுக்கு அது மிகவும் கஷ்டமாயிருந்தாலும், தன்னுடைய சிநேகிதி தன் பார்வையை விட்டு, தப்பிப் போகாமல், கவனித்துக் கொண்டே இருந்தாள்.

கோமகன் திரும்புவதற்கு முதல் நாளன்று, வரவேற்பு அறை ஜன்னலில், காலை பூராவாக எதையோ ஒன்றை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதைப் போல, நட்டாஷா அமர்ந்திருந்ததை சோனியா கவனித்தாள். அவ்வழியாகப் போன யாரோ ஒரு ராணுவ அதிகாரியிடம் ஜாடை காட்டியதையும் அவள் கவனித்தாள். அம்மாதிரி போனவர் அனடோலாய் இருக்குமென்று சோனியா நினைத்தாள்.

தன்னுடைய சிநேகிதியை இன்னும் அதிகக் கவனத்தோடு சோனியா கண்காணிக்க ஆரம்பித்தாள். அன்று டின்னரிலும், அதன் பின்பு மாலை பூராவிலும், நட்டாஷா ஒரு அதிசயமான, இயற்கைக்கு விரோதமான நிலைமையில் இருப்பதைக் கவனித்தாள். அவளிடம் கேட்ட கேள்விகளுக்கு, ஏதோ வாயில் வந்ததை பதில் சொல்லிக் கொண்டும், பேசுகிற வாக்கியங்களை முடிக்காமலும், ஒவ்வொன்றையும் பார்த்து சிரித்துக் கொண்டும் இருந்தாள்.

தேநீருக்குப் பின்னால், நட்டாஷாவின் அறைக் கதவுக்குப் பக்கத்தில் ஒரு வேலைக்காரி பயந்து நின்றுகொண்டிருந்ததை சோனியா கவனித்தாள். அவளை உள்ளே போகும்படி சொல்லி விட்டு, கதவுக்கு வெளியிலிருந்து கவனித்துக் கொண்டிருந்தாள். மற்றொரு கடிதத்தை அந்த வேலைக்காரி கொண்டு வந்து கொடுத்ததாக அறிந்து கொண்டாள்.

அன்று மாலையில், ஏதோ பயங்கரமான விஷயங்களைச் செய்வதற்கு நட்டாஷா திட்டம் போட்டிருப்பதாகத் தெளிவாகத் திடீரென்று சோனியாவுக்கு விளங்கியது. அறைக் கதவை சோனியா தட்டினாள். ஆனால் அவளை நட்டாஷா உள்ளே வரவிடவில்லை.

'அவரோடு அவள் ஓடிவிடப் போகிறாள்' என்று சோனியா நினைத்தாள். 'அவள் எதை வேண்டுமானாலும் செய்யக்கூடியவள். அவளுடைய முகத்தில் குறிப்பாக ஒரு பரிதாபமும் உறுதியும் இன்று காணப்படுகின்றன. அவளுடைய தந்தையை அன்று வழியனுப்பியபோது, அவள் அழுதாள். இந்த விஷயம் இப்பொழுது சோனியாவுக்கு ஞாபகத்திற்கு வந்தது. 'ஆமாம்,

அதுதான் விஷயம். அவரோடு அவள் ஓடிப்போக விரும்புகிறாள். ஆனால் நான் என்ன செய்ய முடியும்?' என்று அவள் நினைத்தாள். அன்று பூராவாகத் தோன்றிய எல்லா அறிகுறிகளையும் அவள் நினைத்துப் பார்த்தாள். அவையெல்லாம், நட்டாஷா ஏதோ பயங்கரமான எண்ணம் கொண்டிருக்கிறாள் என்பதைத் தெளிவாய்க் காட்டின. 'கோமகனோ இங்கே இல்லை. நான் என்ன செய்ய முடியும்? குராகினுக்கு எழுதி என்ன சொல்லுகிறாய் என்று கேட்கலாமா? ஆனால் அவர் பதில் எழுத வேண்டுமென்று என்ன கட்டாயம்? ஏதாவது கஷ்டம் வரும்போது, பீயரைக் கேட்கும்படி இளவரசர் ஆண்ட்ரூ என்னிடம் சொல்லிப்போயிருந்தார்... அதை அனுசரித்து பீயருக்கு எழுதினால் என்ன?... ஆனால் அவள் ஏற்கெனவே உண்மையாகவே ஒரு வேளை பால்கோன்ஸ்கியை உதறித் தள்ளியிருக்கலாம்-அவள் இளவரசி மேரிக்கு நேற்றே கடிதம் எழுதி விட்டாள். 'சிந்தப்பாவோ ஊரில் இல்லை'. மரியா டிமிட்ரிவ்னாவிடம் சொல்வதாய் இருந்தால், அவளுக்கு நட்டாஷாவிடம் அவ்வளவு நம்பிக்கை இருக்கிறபடியால், தான் சொல்வதற்கே சோனியா பயந்தாள். 'நல்லது, எப்படியிருந்தாலும் சரி' என்று சோனியா அந்த இருண்ட ஆளோடியில் நின்றுகொண்டிருந்தபோது நினைத்தாள். 'நான், இந்தக் குடும்பம் எனக்குச் செய்திருக்கிற நன்மைகளுக்குப் பதில் நன்றி காட்ட வேண்டுமானால், நான் நிக்கலஸைக் காதலிப்பதற்கு நன்றி காட்ட வேண்டுமானால், இப்போது ஏதாவது செய்தாக வேண்டும். இல்லையென்றால், இனி செய்யவே முடியாது. ஆமாம், மூன்று இரவுகள் தூங்காமல் இருக்க வேண்டிய வந்தாலும் சரி, இந்த ஆளோடியை விட்டு நான் நகரப் போவது இல்லை. அவளுடைய முதுகைப் பலவந்தமாகப் பிடித்து நிறுத்தி வைத்துக் கொள்வேனே தவிர, இந்தக் குடும்பத்திற்குக் கெட்ட பேர் வரும்படி நான் விட மாட்டேன்' என்று அவள் நினைத்தாள்.




சில காலமாக டோலாகாவின் வீட்டில் அனடோல் வசித்து வருகிறார். நட்டாலி ராஸ்டோவாவைக் கடத்திக்கொண்டு போக டோலாகாவ் திட்டம் போட்டு, அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை சில தினங்களுக்கு முன்னால் செய்து முடித்தார். நட்டாஷாவின் அறைக் கதவின் பக்கத்தில் நின்று உற்றுக் கேட்ட பின்பு, நட்டாஷாவைப்

பாதுகாப்பது என்று சோனியா என்றைய தினம் முடிவு செய்தாளோ, அதே தினத்தில் டோலாகாவின் திட்டத்தை நிறைவேற்றிவைப்பது என்று தீர்மானித்திருந்தார்கள். அன்று இரவு பத்து மணிக்கு பின்பக்கத்து வாசலுக்கு குராகினிடம் வருவதாக நட்டாஷா வாக்குறுதி கொடுத்திருந்தாள். அங்கு தயாராக வைக்கப் பட்டிருக்கும் உறை பனி வண்டியில் அவளை ஏற்றிக் கொண்டு, நாற்பது மைல்களுக்கு அப்பாலுள்ள காமெங்கா என்ற கிராமத்திற்கு அவளை குராகின் கொண்டு போவது என்று ஏற்பாடு செய்திருந்தார்கள். அங்கே அவர்களுக்குத் திருமணத்தைச் செய்து வைப்பதற்காக, ஒரு மத குருவையும் தயாராய் வைத்திருந்தார்கள். காமெங்காவிலிருந்து வார்சாவுக்குப் போகும் ரஸ்தாவில் அவர்கள் பிரயாணம் செய்வதற்கு குதிரைகளும் தயாராய் வைக்கப் பட்டிருந்தன. அங்கிருந்து அவர்கள் வெளிநாட்டிற்குப் போவதற் காக, அங்கங்கேயுள்ள தபால்-குதிரைகளை உபயோகித்துக் கொள்வது என்றும் திட்டம் போட்டிருந்தார்கள்.

அனடோலிடம் வெளிநாட்டிற்குப் போவதற்கான ‘பாஸ் போர்ட்’ என்ற அனுமதிச் சீட்டும் இருந்தது. தபால்-குதிரைகளை உபயோகித்துக் கொள்ளுவதற்கு ஒரு சர்க்கார் உத்தரவும் இருந்தது. அவற்றோடு அவருடைய சகோதரியிடமிருந்து வாங்கிய பத்தாயிரம் ரூபிள்களும், டோலாகாவின் உதவியினால் கடன் வாங்கிய பத்தாயிரம் ரூபிள்களும் இருந்தன.

அந்த விசித்திரமான கலியாணத்திற்கு சாட்சிகளாக இருவரைத் தயார் செய்து வைத்திருந்தார்கள். அவர்களில் ஒருவரின் பெயர் க்வோஸ்டிகாவ். அவர் வேலையிலிருந்து விலகிய ஒரு சிறிய சர்க்கார் அதிகாரி. தம்முடைய சூதாட்ட வரவு - செலவுகளுக் கெல்லாம் அவரை டோலாகாவ் உபயோகப்படுத்தி வந்தார். மற்றொருவரின் பெயர் மக்காரின். அவர் குதிரைப் படை சேவையிலிருந்து விலகியர். ஒரு அன்பான திடச்சித்தமில்லாத பேர்வழி. குராகினிடம் அளவு கடந்த பாசம் கொண்டவர். அந்த சாட்கிகள் இருவரும் டோலாகாவ் வீட்டில், முன் அறையில் அமர்ந்து, தேநீர் பருகிக்கொண்டிருந்தார்கள்.

டோலாகாவ் வீட்டில் உள்ள பெரிய படிப்பு அறையில் அவர்கள் பூராவாக பாரசீகக் கம்பளங்களாலும், கரடித் தோல்களாலும், ஆயுதங்களாலும் மூடப்பட்டிருந்தன. அந்த அறையில் உயரமான பூட்ஸ்களையும், பிரயாண-வெளிச் சட்டையையும் அணிந்து கொண்டு டோலாகாவ் அமர்ந்திருந்தார். அங்கிருந்த ஒரு மேஜையின் மீது, கணக்கு போடும் பாசிமணிச் சட்டமும், கரன்ஸி நோட்டுகள் சில கட்டுகளும் கிடந்தன. சாட்சிகள் உட்கார்ந்து இருந்த

அறைக்கும், படிப்பு அறைக்கும், தம்முடைய சாமான்களைக் கட்டிக்கொண்டிருந்த பிரஞ்சு வேலைக்காரர்கள் இருந்த அறைக்கும், முன்னும் பின்னுமாக, யூனிபாரத்திலுள்ள பொத்தான்களை மாட்டாமல், அனடோல் உலாவி வந்தார். டோலாகாவ் பணத்தை எண்ணிக்கொண்டும், எதையோ எழுதிக் குவித்துக் கொண்டும் இருந்தார்.

'நல்லது, க்வோஸ்டிகாவிடம் இரண்டாயிரம் இருக்க வேண்டும்' என்றார்.

'அப்படியானால், அவரிடம் அதைக் கொடுத்துவிடும்' என்றார் அனடோல்.

'மக்கார்க்கா (மக்காரினை அவர்கள் அப்படி அழைத்தார்கள்), உமக்காக ஒரு பிரயோஜனத்தையும் எதிர்பார்க்காமல், நெருப்பிலோ, தண்ணீரிலோ நுழைந்து போவார். இதோ நமது கணக்குகள் எல்லாம் சரி செய்யப்பட்டு விட்டன' என்று டோலாகாவ் கூறி, அவரிடம் கணக்கைக் காட்டினார். 'அது சரியாய் இருக்கிறது, அல்லவா?'

'ஆம், சரியாய் இருக்கிறது' என்று அனடோல் பதில் அளித்தார். ஆனால் டோலாகாவ் சொல்லியதைக் கவனித்ததாகத் தெரியவில்லை. அவர் தமக்கு நேராக ஒரு புன்னகையோடு பார்த்துக் கொண்டு இருந்தார். அந்தப் புன்னகை அவருடைய முகத்தை விட்டு மறையவில்லை.

மேஜையின் மூடியை படார் என்று டோலாகாவ் மூடினார். ஒரு கேலிப் புன்னகையோடு அனடோலைத் திரும்பிப் பார்த்தார்.

'உமக்குத் தெரியுமா? நீர் இந்த யோசனையை உண்மையிலேயே கைவிட்டு விட்டால் நல்லது. இன்னும் அதைக் கைவிடுவதற்கு நேரம் இருக்கிறது.'

'முட்டாள், அசட்டுப் பேச்சுக்களைப் பேச வேண்டாம். உமக்கு மட்டும் தெரிந்திருக்குமானால்... அது என்னது என்பது பிசாசுக்கே தெரியும்.'

'இல்லை, உண்மையிலேயே நீர் அதை விட்டுவிடும். நான் சிரத்தையோடு பேசுகிறேன். நீர் இப்பொழுது செய்யப்போகிறீரே, அந்த சூழ்ச்சித் திட்டம் வெறும் வேடிக்கை அல்ல.'

'என்ன, மறுபடியும் பரிகாசம் செய்ய ஆரம்பித்துவிட்டீரா? பிசாசிடம் போம்! என்ன?' என்று அனடோல் முகத்தைச் சுளித்துக்கொண்டு சொன்னார். 'உம்முடைய முட்டாள்தனமான வேடிக்கைகளுக்கெல்லாம், உண்மையிலேயே இது நேரமல்ல' என்று சொல்லிவிட்டு, அறையைவிட்டுப் போனார்.

அனடோல் அந்த அறையைவிட்டுப் போன பின்பு, டோலாகாவ் இகழ்ச்சியும், தயவும் கலந்த புன்னகை காட்டினார்.

'நீர் கொஞ்சம் பொறும்' என்று போகிறவருக்குப் பின்னால் சொன்னார். 'நான் விளையாட்டுப் பேச்சு பேசவில்லை. நான் அறிவோடுதான் பேசுகிறேன். இங்கே வாரும். இங்கே வாரும்.'

அனடோல் திரும்பி வந்து டோலாகாவைப் பார்த்தார். அவர் சொல்லுவதைக் கவனித்தார். தம்மை அறியாமலே அவருக்கு கீழ்ப்படிவதைப்போலத் தோன்றினார்.

'இப்பொழுது நான் சொல்லுவதைக் கவனமாய் கேளும். கடைசித் தடவையாக இதை நான் உமக்குச் சொல்லுகிறேன். நான் அதைப்பற்றி எதற்காகத் தமாஷ் செய்யவேண்டும்? நான் உமக்கு இடையூறு செய்தேனா? உமக்காக ஒவ்வொன்றையும் தயார் செய்தது யார்? அந்த குருவையும் பாஸ்போர்ட்டையும் உமக்கு வாங்கிக் கொடுத்தது யார்? உமக்கு பணம் திரட்டிக் கொடுத்தது யார்? எல்லாவற்றையும் நானே செய்தேன்.'

'நல்லது, அவற்றிற்கெல்லாம் நான் உமக்கு நன்றி கூறுகிறேன். நான் நன்றி அற்றவனாய் இருக்கிறேன் என்று நீர் நினைக்கிறீரா?' என்று அனடோல் கூறி பெருமூச்சுவிட்டு, டோலாகாவைத் த்ழுவிக்கொண்டார்.

'நான் உமக்கு உதவி செய்தேன். ஆனால், அதே சமயத்தில் நான் உமக்கு உண்மையைச் சொல்லியாகவேண்டும். அது ஒரு ஆபத்தான வேலை. அதைப்பற்றி நீர் சிந்திப்பீரானால்-அது ஒரு முட்டாள்தனமான வேலை. நல்லது, நீர் அவளைக் கடத்திக்கொண்டு போகிறீர்-ரொம்ப சரி. அவர்கள் அதோடு விட்டுவிடுவார்களா? நீர் ஏற்கெனவே திருமணம் ஆனவர் என்ற உண்மை வெளியே வந்துவிடும். அப்புறம், அவர்கள் உம்மைக் கிரிமினல் கோர்ட்டுக்கு இழுத்து வந்து விடுவார்கள்...'

'ஓ, அசட்டுப் பேச்சு, அசட்டுப் பேச்சு' என்று அனடோல் திடீரென்று கூவிவிட்டு முகத்தைச் சுளித்தார். 'நான் உமக்கு விளக்கிக் கூறவில்லையா? என்ன?'

மந்த புத்தி உள்ளவர்கள் தாங்கள் செய்த ஒரு முடிவிற்கு சமாதானம் கூற, தங்களுடைய சொந்தக் காரணங்களையே கூறிக்கொண்டு இருப்பார்கள். அதே மாதிரி அனடோலும் இதற்கு முன்பு, நூறு தடவைகள் டோலாகாவிற்கு சொன்ன சமாதானத்தையே திரும்பவும் கூறிக்கொண்டு இருந்தார். 'இன்ன காரணங்களுக்காக நான் இந்த முடிவிற்கு வந்தேன் என்பதை உமக்கு நான் விளக்கிச் சொல்லவில்லையா? இந்த திருமணம்

செல்லுபடியாகாது என்று ஏற்படுமானால், (இச்சமயத்தில் தமது விரலை மடக்கினார்.) அப்புறம் நான் பதில் சொல்ல வேண்டியதே எதுவும் இல்லை. செல்லுபடியாகும் என்று ஏற்படுமானால், அப்புறம் எதைப்பற்றியும் கவலையில்லை. வெளிநாடு போய் விட்டால் அங்கே அதைப்பற்றி எவருக்கும் எதுவும் தெரியப்போவதில்லை. அது அப்படி அல்லவா? என்னிடம் இனி அதைப்பற்றிப் பேச வேண்டாம், வேண்டாம், வேண்டாம்.'

'உண்மையிலேயே நீர் இதைக் கைவிடுவது நல்லது. இல்லையானால் நீர் ஒரு பெரிய சிக்கலில் அகப்பட்டுக் கொள்ளுவீர்.'

'பிசாசிடம் போம்' என்று அனடோல் கூச்சலிட்டுவிட்டு, தமது தலைமுடியைக் கையில் பிடித்துக்கொண்டு வெளியே போனார். ஆனால், உடனே திரும்பி வந்து, டோலாகாவிற்கு எதிராய் இருந்த சாய்வு நாற்காலியில் அமர்ந்து, தமது கால்களைக் கீழே மடக்கி வைத்துக்கொண்டார். 'அந்த பிசாசேதான்! என்ன? எம்மாதிரி அடித்துக்கொள்ளுகிறது என்பதை நீரே கைவைத்துப் பாரும் என்று சொல்லி, டோலாகாவின் கையைப் பற்றி அதைத் தமது மார்பில் வைத்தார். 'எனது அன்பான நண்பரே, எப்பேர்ப்பட்ட பாதம்! எப்பேர்ப்பட்ட பார்வை! ஒரு தேவதையேதான்!' என்று அவர் பிரஞ்சு மொழியில் பேசினார். 'என்ன?'

டோலாகாவ் ஒரு பரிவற்றப் புன்னகை காட்டி, தம்முடைய கர்வமான கண்கள் ஒளி வீச, அவரை நோக்கினார். அவரிடமிருந்து இன்னும் அதிகத் தமாஷை அனுபவிக்க வேண்டும் என்று விரும்பினவர் போலத் தோன்றினார்.

'நல்லது, பணமெல்லாம் கரைந்த பின்பு, அப்புறம் என்ன?'

'அப்புறம் என்ன? என்ன?' என்று அனடோல் திரும்பிக் கூறி எதிர்காலத்தைப்பற்றி உண்மையிலேயே குழப்பம் அடைந்தார். 'அப்புறம் என்ன?... அப்புறம் எனக்குத் தெரியாது... ஆனால், அசட்டுப் பேச்சுக்களை ஏன் பேச வேண்டும்' தமது கடிகாரத்தைப் பார்த்தார். 'நேரம் வந்து விட்டது.'

பின் அறைக்கு அனடோல் போனார்.

'இப்பொழுது என்ன? எல்லாம் தயாராகி விட்டதா? நீங்கள் சோம்பேறித்தனமாக நிற்கிறீர்கள்' என்று வேலைக்காரர்களைப் பார்த்துக் கூச்சலிட்டார்.

டோலாகாவ் பணத்தை அப்புறமாக எடுத்துவைத்துவிட்டு, ஒரு சேவகனை அழைத்து, பிரயாணத்திற்கு முன்பாக சாப்பிடுவதற்கும் குடிப்பதற்கும் எதையாவது கொண்டுவருமாறு உத்தரவிட்டார்.

பின்னால், மக்காரினும், க்வோஸ்டிகாவும் உட்கார்ந்திருந்த அறைக்குள் போனார்.

ஒரு சோபாவில் படிக்கும் அறையில் தமது முழங்கையை ஊன்றி, அதன் மீது அனடோல் சாய்ந்து கொண்டிருந்தார். அவருடைய அழகிய உதடுகள் எதையோ கனிவாக முனங்கிக்கொண்டிருந்தன.

'இங்கே வந்து கொஞ்சம் சாப்பிடும், கொஞ்சம் பானமும் செய்து கொள்ளும் என்று டோலாகாவ் பக்கத்து அறையிலிருந்து அவரை அழைத்தார்.

'எனக்கு ஒன்றும் வேண்டாம்' என்று பதில் அளித்த அனடோல் தொடர்ந்து புன்னகை காட்டிக்கொண்டிருந்தார்.

'வாரும்; பாலாகா எங்கே இருக்கிறான்?'

அனடோல் எழுந்து சாப்பாட்டு அறைக்குள் போனார். உறைபனி வண்டியை ஓட்டுவதில் பாலாகா பிரசித்தி பெற்றவன். டோலாகாவையும், அனடோலையும் ஆறு வருஷங்களாக அவனுக்குத் தெரியும், அவர்களுக்குப் பல தடவைகளில் நல்ல சேவை செய்திருக்கிறான். அனடோலின் பட்டாளம் டீவர் என்ற இடத்தில் தங்கி இருந்தபோது, பல தடவைகளில் மாலையில் அவரை டீவரிலிருந்து அழைத்துச் சென்று, அதிகாலையில் மாஸ்கோவிற்கு அவரைக் கொண்டு வந்து சேர்த்து, மீண்டும் மறுநாள் இரவு அங்கிருந்து அவரை அழைத்துப் போயிருக்கிறான். பல தடவைகளில் டோலாகாவை ஆபத்துகளிலிருந்து தனது வண்டியில் வைத்து ஓட்டித் தப்புவித்திருக்கிறான். பல தடவைகளில் அவர்களை ஜிப்ஸிகளோடும் மட்டமான பெண்களோடும் தனது வண்டியில் வைத்து மாஸ்கோ தெருக்கள் வழியாகச் சவாரி விட்டிருக்கிறான். பல தடவைகளில் பாதசாரிகள் மீதும், வண்டிகள் மீதும் மாஸ்கோ தெருக்களில் அவர்களுடைய சேவைக்காகத் தனது வண்டியை விட்டிருக்கிறான். ஆனால், அவன் அச்சமயங்களில் எல்லாம், அவன் 'கனவான்கள்' என்று அழைக்கிற அவர்களால் காப்பாற்றப்பட்டிருக்கிறான். அவர்களுடைய சேவைக்காக அவன் பல குதிரைகளையும் இழந்து இருக்கிறான். அவனைப் பல தடவைகளில் அவர்கள் அடித்து இருக்கிறார்கள். அவனுக்கு மிகவும் பிடித்தமான மடீரா என்ற மதுவையும், ஷாம்பைன் என்ற மதுவையும் அவனைக் குடிக்கும்படி அவர்கள் செய்திருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் செய்த செய்கைகளைப்பற்றி அவன் நன்றாய் அறிவான். அந்த செய்கைகள் வெளியில் தெரியுமானால், அதைச் செய்தவர்களை சைபீரியாவுக்கு அனுப்பி இருப்பார்கள். தங்களுடைய குடிவெறி ஆட்டங்களுக்கு

பாலாகாவை அவர்கள் அடிக்கடி அழைத்து, குடிக்கும்படிச் செய்து, ஜிப்ஸிகளோடு நடனமாடும்படியும் செய்வார்கள். அவர்களுடைய பணத்தில் ஆயிரக் கணக்கான ரூபிள்கள் அவன் கைவழியாகச் செலவாகி இருக்கும். அவர்களுடைய சேவையில், ஒரு வருஷத்தில் குறைந்தது இருபது தடவைகளாவது அவனுடைய உடலையும், உயிரையும் ஆபதுக்கு உள்ளாக்கி இருப்பான். அவர்களிடமிருந்து அவன் பெறக்கூடிய பணத்தினால் வாங்கக்கூடிய குதிரைகளைவிட, அதிகமான குதிரைகளை அவர்களுடைய சேவையில் அவன் இழந்திருப்பான். ஆனால், அவர்கள் மீது அவனுக்கு மிகுந்த பிரியம் உண்டு. மணிக்குப் பன்னிரண்டு மைல் வேகத்தில் பைத்தியமாக வண்டியை ஓட்டுவதில் அவனுக்குப் பிரியமுண்டு. ஒரு வண்டி ஓட்டியைக் கீழே தள்ளுவதிலும், ஒரு பாதசாரியின் மீது வண்டியை ஓட்டுவதிலும், மாஸ்கோ தெருக்கள் வழியாக முழுவேகத்தில் வண்டியைப் பறந்து போகும்படி செய்வதிலும், அவனுக்குப் பிரியமுண்டு. இனிமேல் அதற்குமேல் வேகத்தில் போக முடியாது என்ற நிலைமையிலும்கூட, தனக்குப் பின்னால் உட்கார்ந்திருக்கும் குடியர்கள் 'வேகமாய்ப் போ, வேகமாய்ப் போ' என்று காட்டுக் கூச்சல் போடுவதைக் கேட்பதிலும் அவனுக்குப் பிரியமுண்டு. தனது வண்டி வரும் வழியை விட்டு வேகமாய் விலகிக்கொண்டிருக்கும் விவசாயியின் கழுத்தில் தனது சாட்டையால் அடி கொடுப்பதிலும் அவனுக்குப் பிரியமுண்டு. 'இவர்கள்தான் உண்மையான கனவான்கள்' என்று டோலாகாவையும், அனடோலையும் அவன் கருதுவான்.

அனடோலும், டோலாகாவும்கூட பாலாகா மீது மிகுந்த பிரியம் கொண்டிருந்தார்கள். அவன் சாமர்த்தியமாக வண்டி ஓட்டுவதையும், தாங்கள் நினைப்பதைப் போலவே அவனும் நினைப்பதையும் கண்டு அவர்கள் பிரியம் கொண்டிருந்தார்கள். மற்றவர்களிடம் பாலாகா பேரம் பேசுவது உண்டு. இரண்டு மணி நேரசவாரிக்கு இருபத்தைந்து ரூபிள்கள் கேட்பான். அவன் தானே வண்டி ஓட்டுவதும் அபூர்வம். தன்னுடைய வாலிபர்களை விட்டு ஓட்டச் சொல்லுவான். ஆனால், இந்தக் கனவான்கள் விஷயத்தில் அவனே வண்டியை ஓட்டுவான். அவனுடைய சேவைக்காகப் பணம் எதுவும் கேட்பதும் இல்லை. அவர்களிடம் பணம் எப்பொழுது இருக்கிறது என்பதை அவர்களுடைய சேவகர்கள் மூலமாக அவன் அறிந்து கொள்ளுவது உண்டு. அம்மாதிரி காலங்களில், அவர்கள் நிதானமாய் இருக்கிற காலை வேளைகளில், வருஷத்திற்கு இரண்டு தடவைகள் அவர்களிடம் போவதுண்டு. அந்தக் கனவான்கள் அவனை அமரும்படி செய்வார்கள்.

'எனக்கு உதவி செய்யுங்கள், தியோடர் ஐவானிச், ஐயா' என்றோ, அல்லது 'மேன்மை தங்கியவரே' என்றோ அவன் சொல்லுவான். 'என்னிடம் குதிரைகளே இல்லை. நான் சந்தைக்குப்' போகவேண்டும். உங்களால் முடிந்ததைக் கொடுங்கள்.'

அனடோலும், டோலாகாவும் அவர்களிடம் பணம் இருந்தால், அவனுக்கு ஆயிரம் அல்லது இரண்டாயிரம் ரூபிள் கொடுப்பார்கள்.

அழகிய தலைமுடியும், குட்டையான உருவமும், அமுங்கிய நாசியும் கொண்ட இருபத்தேழு வயதான விவசாயிதான் பாலாகா. சிவந்த முகமும், குறிப்பிடத்தகுந்த பருத்த, சிவந்த கழுத்தும், ஜொலிஜொலிக்கும் சிறிய கண்களும், ஒரு சிறிய தாடியும் கொண்டிருந்தான். ஆட்டுத்தோல் சட்டைக்கு மேலாக, உள்ளே பட்டு வைத்துத் தைத்த ஒரு அழகிய கரு நீலத் துணிச் சட்டையை அணிந்திருந்தான்.

அறைக்குள் நுழைந்தவுடன் தனக்கு சிலுவைக் குறி காட்டி, அந்த அறையில் இருந்த மூலையைப் பார்த்துத் திரும்பி, பின்னால் டோலாகாவிடம் சென்று, தனது சிறிய கருப்புக் கையை நீட்டினான்.

'தியோடர் ஐவானிச்' என்று சொல்லி, தலை குனிந்து மரியாதை செய்தான்.

'நீ சௌக்கியமாய் இருக்கிறாயா, நண்பனே? நல்லது, இதோ வந்துவிட்டான்.'

'வணக்கம், மேன்மை தங்கியவரே' என்று அப்பொழுதுதான் உள்ளே வந்த அனடோலை நோக்கித் தனது கையை நீட்டினான்.

'நான் சொல்லுகிறேன். பாலாகா' என்று அனடோல் கூறி, அவன் தோள்களில் தமது கைகளை வைத்தார். 'எனக்காக நீ சிரத்தை கொள்ளுவாயா, மாட்டாயா? என்ன? இப்பொழுது எனக்கு ஒரு சேவை செய்ய வேண்டும்... நீ எந்த குதிரைகளைக் கொண்டு வந்திருக்கிறாய்? என்ன?'

'உங்களுடைய வேலைக்காரன் சொன்னபடியே கொண்டு வந்திருக்கிறேன். உங்களுக்குப் பிரியமான குதிரைகள்' என்று பாலாகா பதில் அளித்தான.

'நல்லது, கவனித்துக் கேள், பாலாகா! உன்னுடைய மூன்று குதிரைகளைச் சாகிற வேகத்தில் நீ ஓட்டி, மூன்று மணி நேரத்தில் என்னை அங்கே கொண்டு போய் சேர்க்க வேண்டும். என்ன?'

'அவையெல்லாம் செத்துப்போனால், நான் எதை ஓட்டுவேன்?' என்று பாலாகா சொல்லி, கண்ணைச் சிமிட்டினான்.

'ஜாக்கிரதை நான் உன் முகத்தை உடைத்து விடுவேன். தமாஷ் பேசாதே' என்று அனடோல் கூச்சலிட்டு, திடீரென்று தமது கண்களை உருட்டினார்.

'இதில் தமாஷ் என்ன இருக்கிறது?' என்று அந்த வண்டிக்காரன் சிரித்துக்கொண்டே கூறினான். 'என்னுடைய கனவான்களுக்கு நான் எதையாவது செய்யத் தயங்கியது உண்டா? இந்த குதிரைகள் எவ்வளவு வேகத்தில் ஓட முடியுமோ, அவ்வளவு வேகத்தில் நாம் நிச்சயமாகப் போவோம்.'

'ஆ, நல்லது கீழே உட்கார்' என்றார் அனடோல்.

'ஆமாம். கீழே உட்கார்' என்றார் டோலாகாவ்.

'நான் நின்று கொண்டே இருக்கிறேன், தியோடர் ஐவானிச்.'

'கீழே உட்கார், என்ன அசட்டுத்தனம். கொஞ்சம் பானம் அருந்து' என்று அனடோல் சொல்லி, ஒரு பெரிய கோப்பை நிறைய மடீரா மதுவை அவனுக்கு விட்டுக் கொடுத்தார்.

அந்த ஒயினைப் பார்த்ததும், அந்த வண்டி ஓட்டியின் கண்கள் ஜொலி ஜொலித்தன. மரியாதைக்காக முதலில் அதை வேண்டாம் என்று சொல்லிவிட்டு, பின்னால் அதைக் குடித்தான். தனது தொப்பியில் இருந்து ஒரு சிகப்புப் பட்டுக் கைக்குட்டையை எடுத்து, தனது வாயைத் துடைத்துக் கொண்டான்.

'நாம் எப்பொழுது புறப்படவேண்டும், மேன்மை தங்கியவரே?'

'நல்லது...' அனடோல் தமது கடிகாரத்தைப் பார்த்தார். 'நாம் உடனே புறப்படவேண்டும். ஜாக்கிரத்தை, பாலாகா. குறிப்பிட்ட நேரத்தில் நீ அங்கே போய் சேர்ந்துவிடுவாய், அல்லவா? என்ன?'

'அது நாம் புறப்படுகிற அதிருஷ்டத்தைப் பொறுத்திருக்கிறது. இல்லையென்றால், குறிப்பிட்ட நேரத்தில் நாம் ஏன் அங்கே போய்ச் சேர முடியாது?' என்று பாலாகா பதில் அளித்தான். 'நான் உம்மை டீவர் என்ற இடத்திற்கு ஏழு மணி நேரத்தில் கொண்டு போய் சேர்க்கவில்லையா? அது உமக்கு ஞாபகம் இருக்கும் என்று நினைக்கிறேன், மேன்மை தங்கியவரே.'

'உனக்குத் தெரியுமா, ஒரு கிறிஸ்துமஸ் சமயத்தில் நான் டீவரிலிருந்து சவாரி வந்தேன்' என்று தமது பழைய ஞாபகங்களைப் புன்னகையோடு நினைவு கூர்ந்து அனடோல் பேசினார். அவர் பேசுவதை ஆர்வத்தோடும், விரிந்த கண்ளோடும் நோக்கிக் கொண்டிருந்த மக்காரினை அவர் திரும்பிப் பார்த்து சொன்னார்: 'அச்சமயம் நான் பறந்து வந்த வேகத்தை ஒருவர் கேட்டால், அவருக்கு மூச்சே நின்றுவிடும். இதை நீ நம்புவாயா, மக்கார்க்கா?

வழியில் பனி வண்டி வரிசைகளைச் சந்தித்தோம். அவற்றில் இரண்டு வண்டிகள் மீது அப்படியே தாண்டிச் சென்றோம்! என்ன?'

'குதிரைகள் என்றால், அவைதான் குதிரைகள்' என்று அந்தக் கதையை பாலாகா தொடர்ந்து கூறினான். 'அச்சமயம் நான் பக்கவாட்டில் இரண்டு வாலிபக் குதிரைகளை மாட்டி இருந்தேன். மத்தியில் ஒரு பழுப்பு நிறக் குதிரையைப் பூட்டியிருந்தேன்' என்று அவன் சொல்லி, டோலாகாவ் பக்கம் திரும்பினான். 'தியோடர் ஐவானிச், அந்தக் குதிரைகள் நாற்பது மைல் வேகத்தில் பறந்தன. என்னால் அவைகளை இழுத்துப் பிடிக்க முடியவில்லை. பனியினால் என்னுடைய கைகள் மரத்துப் போய்விட்டன. கடிவாள வார்களை அப்படியே போட்டு விட்டேன்- நீர் ஜாக்கிரதையாய் இரும், மேன்மை தங்கியவரே' என்று நான் சொல்லிவிட்டு, அந்தப் பனி வண்டியின் அடியிலேயே படுத்துவிட்டேன். அந்தக் குதிரைகளை விரட்ட வேண்டிய அவசியமே இல்லை. நாங்கள் எங்கள் இடத்திற்கு வந்து சேருகிற வரையில், அவைகளைத் தடுத்தப் பிடிக்கவும் இல்லை. அந்தப் பிசாசுகள் எங்களை மூன்று மணி நேரத்தில் அங்கே கொண்டு வந்து சேர்த்தன. ஒரே ஒரு குதிரை மட்டும் பின்னால் இறந்து போயிற்று.'




அனடோல் அறையைவிட்டு வெளியே போனார். சில நிமிஷங்களில் திரும்பி வந்தார். அவர் வந்தபோது, ஒரு ரோமக் கோட்டு அணிந்து, அதன் மீது வெள்ளி பெல்ட் போட்டிருந்தார். ஒரு ரோமத் தொப்பியைத் தலையில் ஒரு பக்கமாகச் சாய்த்து அணிந்திருந்தார். அவருடைய அழகிய முகத்திற்கு அது மிகவும் பொருத்தமாய் இருந்தது. கண்ணாடியில் தம்மைப் பார்த்து விட்டு, டோலாகாவின் முன்பாக அதே மாதிரி போய் நின்று, ஒரு ஒயின் கோப்பையைக் கையில் எடுத்தார்.

'நல்லது, போய் வருகிறேன், தியோடர். நீர் செய்த ஒவ்வொன்றுக்கும் நன்றி. நான் போய் வருகிறேன்' என்று அனடோல் சொன்னார். மற்றவர்களைத் திரும்பிப் பார்த்து, 'நல்லது, தோழல்களே, நண்பர்களே...' என்று கூறி ஒரு வினாடி, சிந்தித்துவிட்டு, '... என்னுடைய நண்பர்களே, போய் வருகிறேன்' என்று அங்கிருந்த மக்காரினையும், மற்றவர்களையும் பார்த்துச் சொன்னார்.

அவர்கள் எல்லோரும் அவரோடுதான் போகப் போகிறார்கள். என்றாலும் அச்சமயத்தில் உள்ளத்தைத் தொடும்படியாகவும், பவித்திரமாகவும் ஏதாவது ஒன்றைத் தமது தோழர்களுக்குச் சொல்ல அனடோல் விரும்பினார். அவர் மெதுவாகவும், உரத்த குரலிலும், தமது மார்பை சிறிது முன்னால் நிமிர்த்தி, ஒரு காலில் லேசாக ஆடிக்கொண்டு பேசினார்.

'எல்லாரும் கோப்பையைக் கையில் எடுங்கள். பாலாகா, நீயும் எடு. நல்லது, தோழர்களே, எனது இளமையின் நண்பர்களே, நாம் நமது இஷ்டப்படி சொகுசாக வாழ்ந்து அனுபவித்து இருக்கிறோம்; அப்படித்தானே? இப்பொழுது ஒரு விஷயம். நாம் மீண்டும் எப்பொழுது சந்திக்கப்போகிறோம்? நான் வெளிநாடு போகிறேன். நாம் நன்றாக அனுபவித்தோம்-இப்பொழுது, வாலிபர்களே, நான் போய் வருகிறேன்! நமது ஆரோக்கியத்திற்காக! ஜே. ஜே:-' என்று அவர் கூவி, கோப்பையில் உள்ளதைக் காலி செய்துவிட்டு, கோப்பையைக் கீழே வீசினார்.

'உம்முடைய ஆரோக்கியத்திற்காக' என்று பாலாகா சொல்லி, தனது கோப்பையில் உள்ளதைக் காலி செய்து, கைக்குட்டையால் வாயைத் துடைத்தான்.

மக்காரின் கண்களில் நீருடன் அனடோலைத் தழுவிக் கொண்டார்.

'ஆ, இளவரசே, உம்மைவிட்டுப் பிரிவதற்கு நான் எவ்வளவு வருத்தம் அடைகிறேன், தெரியுமா?'

'நாம் போகலாம், நாம் போகலாம்' என்று அனடோல் கூவினார்.

பாலாகா அறையைவிட்டு வெளியே புறப்பட்டான்.

'இல்லை, நில். கதவைச் சாத்து. முதலில், நாம் கீழே உட்கார வேண்டும். அதுதான் வழி' என்று அனடோல் சொன்னார்.

(ஒரு பிரயாணத்தைச் செய்வதற்கு முன்பாக இம்மாதிரி ருஷ்யர்கள் செய்வது வழக்கம்.)

அவர்கள் கதவைச் சாத்தினார்கள். எல்லாரும் கீழே உட்கார்ந்தார்கள்.

'இப்பொழுது, வாலிபர்களே, வேகமாய் புறப்படுங்கள்' என்று அனடோல் எழுந்து கொண்டே சொன்னார்.

அவருடைய வேலைக்காரனான ஜோசப் அவரிடம் உடைவாள் பெல்டையும், உடைவாளையும் கொடுத்தான். எல்லாரும் முன் அறைக்குப் போனார்கள்.

'அந்த ரோம மேல் சட்டை எங்கே?' என்று டோலாகாவ் கேட்டார். 'ஏ, இக்னாட்கா, நீ போய் மட்ரியோனா மட்ரேவ்னாவிடம் அந்த ரோம வெளிச்சட்டையை வாங்கி வா. ஆணும், பெண்ணும் கூடி ஓடிப்போவது என்பது எப்படி இருக்கும் என்பதை நான் கேள்விப்பட்டிருக்கிறேன்' என்று கண்ணைச் சிமிட்டிக் கொண்டு டோலாகாவ் கூறினார். 'அவள் வீட்டிற்குள் அணிந்திருக்கும் உடையோடு வெளியே ஓடி வரும்போது அநேகமாய் உயிரற்றவள் போலவே இருப்பாள். நீர் தாமதப்படுத்தினால், அப்பாவும், அம்மாவும் கண்ணீரும் தோன்ற ஆரம்பித்துவிடும். அப்போது அவள் விறைத்துப் போவாள். அதனால், திரும்பிப் போக வேண்டியதாய் இருக்கும். ஆகவே, நீர் முதலில் இந்த ரோம மேல் சட்டையால் அவளை நன்றாக மூடி, உறை பனி வண்டிக்கு அவளைத் தூக்கி வந்துவிடும்.

நரித்தோலை உள்ளே வைத்துத் தைத்த ஒரு வெளிச்சட்டையை சேவகன் கொண்டு வந்து கொடுத்தான்.

'முட்டாள், ரோமச் சட்டையை அல்லவா கொண்டு வரும்படி நான் சொன்னேன்? ஏ, மட்ரியோனா, அந்த ரோமச் சட்டை வேண்டும்' என்று அவர் உரக்கக் கூவி, அந்த அறைகளின் வழியாகத் தமது குரல் கணீர் என்று கேட்கும்படி சொன்னார்.

ஒரு அழகிய ஒல்லியான, வெளிறிய முகம் கொண்ட ஒரு ஜிப்ஸி பெண், தன்னுடைய கருப்புக் கண்கள் மினுமினுக்க, சுருளையான தலைமுடி கொண்டு, ஒரு சிவப்புச் சால்வையைப் போர்த்திக் கொண்டு, கையில் ரோம மேல் சட்டையோடு ஓடி வந்தாள்.

'இதோ, நான் ஒன்றும் ஆட்சேபிக்கவில்லை; எடுத்துக் கொள்ளும்' என்று அவள் சொன்னாள். தனது எஜமானரைக் கண்டு பயப்படுவதைப் போலவும், ஆனால், தன்னுடைய மேல் சட்டைக்காக வருந்துவதைப் போலவும் அவளுடைய பேச்சு இருந்தது.

டோலாகாவ் பதில் சொல்லவில்லை. அந்த மேல் சட்டையை எடுத்து, மட்ரியோனா மேல் அதைப் போட்டு, அதனால் அவளை மூடினார்.

'அப்படித்தான் செய்யவேண்டும். அதன் பின்னால் இம்மாதிரி செய்யவேண்டும்' என்று சொல்லி அவளுடைய கழுத்துப் பட்டிகளை நிமிர்த்தி விட்டார். அவளுடைய முகத்தில் சிறிது அளவுதான் மூடப்படாமல் இருந்தது. 'அதற்குப் பின்னால் இப்படிச் செய்ய வேண்டும். நீர் பார்க்கிறீரா?' என்று சொல்லி, அந்த மறைக்கப்படாமல் இருந்த முகத்தைப் பார்க்கும்படி அனடோலின்

தலையை முன்னால் தள்ளினார். அந்த இடை வழியாக மட்ரியோனாவின் பிரமாதமான புன்சிரிப்பு தெரிந்து கொண்டிருந்தது.

'நல்லது, வணக்கம், மட்ரியோனா' என்று அனடோல் கூவி, அவளை முத்தமிட்டார். 'இங்கே நான் செய்து வந்த களியாட்டங்கள் எல்லாம் முடிந்து விட்டன. இஸ்தியோஷ்காவிடம் நான் கேட்டதாகச் சொல்லு. நல்லது, வணக்கம், போய் வருகிறேன், மட்ரியோனா. எனக்கு அதிருஷ்டம் ஏற்படும்படி வாழ்த்து கூறுவாயாக.'

'நல்லது, இளவரசே. கடவுள் உமக்குப் பெரிய அதிருஷ்டத்தைக் கொடுப்பாயாக' என்று தனது ஜிப்ஸி உச்சரிப்பில் அவள் பேசினாள். மண்டப முற்றத்திற்கு முன்பாக இரண்டு உறை பனி வண்டிகள் நின்று கொண்டிருந்தன. அவற்றின் குதிரைகளை, இரண்டு வாலிப வண்டிக்காரர்கள் பிடித்துக்கொண்டிருந்தார்கள். பாலாகா முன்னால் இருந்த வண்டியில் அமர்ந்தான். அவன் முழங்கைகளை உயர்த்தித் தூக்கி, கடிவாள வார்களை ஒழுங்கு படுத்தினான். அந்த வண்டியில் அனடோலும், டோலாகாவும் ஏறினார்கள். மக்காரின், க்வோஸ்டிகாவ், ஒரு வேலைக்காரன் ஆகியோர் மற்றொரு வண்டியில் அமர்ந்தார்கள்.

'நல்லது, நீ தயாராய் இருக்கிறாயா?' என்று பாலாகா கேட்டான்.

'போகலாம்' என்று அவன் கத்தி, கடிவாள வார்களைத் தனது கைகளில் சுற்றினான். நிக்கைட்ஸ்கி என்ற சாலையை நோக்கி வண்டிகள் ஓடின.

'ப்ரூ உ உ உ, வழியை விட்டு விலகு, ஏ... ப்ரூ உ உ உ...' இம் மாதிரியாகப் பாலாகாவின் கூச்சலும் அவனுடன் இருந்த ஒரு புஷ்டியான வாலிபனுடைய கூச்சலும் மட்டுமே கேட்டன. ஆர்பட் சவுக்கத்தில் அந்த பனி வண்டி ஒரு மூடு வண்டியோடு மோதியது. ஏதோ முறிந்தது. கூச்சல்கள் கேட்டன. என்றாலும் அந்தப் பனி வண்டி ஆர்பட் தெரு வழியாக மேலே ஓடியது.

பாட்னாவைன்ஸ்கி சாலை வழியாக வண்டி ஓடிய பின்பு, கான்யு ஷேனி தெருவின் சந்திப்பில் கடிவாளத்தைப் பிடித்து இழுத்து வண்டியைப் பாலாகா நிறுத்தினான்.

அவனுடன் அமர்ந்திருந்த வாலிபன் கீழே குதித்து, குதிரைகளைப் பிடித்துக் கொண்டான். அனடோலும், டோலாகாவும் நடைபாதை வழியாகச் சென்றார்கள். வெளிவாசல் கதவை அடைந்ததும் டோலாகாவ் சீட்டி அடித்தார். அந்த சீட்டிக்குப் பதில் கேட்டது. ஒரு வேலைக்காரி வெளியே ஓடி வந்தாள்.

‘உள்ளே முற்றத்திற்கு வந்து விடுங்கள். இல்லையென்றால், உங்களை யாராவது பார்ப்பார்கள். அவள் இதோ வந்து விடுவாள்’ என்று அவள் சொன்னாள்.

வாசலுக்குப் பக்கத்தில் டோலாகாவ் தங்கினார். அந்த வேலைக் காரப் பெண்ணைப் பின் தொடர்ந்து முற்றத்திற்கு அனடோல் போய்ச் சேர்ந்து, அங்கே ஒரு முக்கு திரும்பிய பின்பு, மண்டப முற்றத்திற்கு ஓடினார்.

மரியா டிமிட்ரிவ்னாவின் வேலைக்காரனான, பிரம்மாண்டமான காப்ரியல் அனடோலைச் சந்தித்தான்.

‘தயவுசெய்து எனது எஜமானியிடம் வாரும்’ என்று அவனுடைய ஆழ்ந்த பெரிய தொனியில் வேலைக்காரன் கூறினான். திரும்பி ஓடிவிடாதபடி அனடோலை அவன் மறித்துக்கொண்டும் நின்றான்.

‘எந்த எஜமானியிடம்? நீ யார்?’ அனடோல் மூச்சை அடக்கி மெதுவான குரலில் கேட்டார்.

‘தயதுசெய்து உள்ளே வாரும். உம்மை உள்ளே அழைத்து வர வேண்டும் என்பதுதான் எனக்கு இடப்பட்டுள்ள உத்தரவு.’

‘குராகின், திரும்பி வாரும். மோசம் செய்யப்பட்டீர், திரும்பி வாரும்’ என்று டோலாகாவ் கூச்சலிட்டார்.

‘அனடோல் உள்ளே நுழைந்த பின்பு, வெளிவாசல் கதவுப் பக்கத்தில் டோலாகாவ் நின்று கொண்டிருந்தார். முற்றத்து வேலைக்காரன் அந்தக் கதவைப் பூட்ட முயற்சித்தான். அவனைப் பூட்டவிடாமல் சண்டை போட்டு, கடைசியாக மிகுந்த சிரமத்தின் பேரில் அவனை டோலாகாவ் கீழே தள்ளினார். அச்சமயம் திரும்பி ஓடி வந்து கொண்டிருந்த அனடோலின் கையைப் பற்றி அவரையும் வாசல் வழியாக வெளியே இழுத்துச் சென்று, தங்கள் வண்டியை நோக்கி ஓடினார்.




**சோ**னியா தாழ்வாரத்தில் அழுது கொண்டு நின்றதை, மரியா டிமிட்ரிவ்னா கண்டாள். ஒவ்வொரு விஷயத்தையும் அவள் சொல்லும்படி செய்து, நட்டாஷா வுக்கு வந்த கடிதத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, நேராக நட்டாஷாவின் அறைக்குள் போனாள்.

‘வெட்கங்கெட்ட, ஒன்றுக்கும் உதவாதவளே, நீ சொல்லுகிற ஒரு வார்த்தையைக்கூட நான் கேட்கப்போவதில்லை.’

ஆச்சரியத்தோடும், ஆனால், கண்ணீரில்லாத கண்களோடும் அவளைப் பார்த்த நட்டாஷாவை அறைக்குள் தள்ளிப் பூட்டி விட்டாள். அன்று மாலை யார் வந்தாலும் வீட்டிற்குள் விடும்படியும், ஆனால், உள்ளே வந்தவர்களை வெளியே போக விடக்கூடாது என்றும் காவல்காரனுக்கு உத்தரவிட்டாள். அப்படி வருகிறவர்களை, தன்னிடத்தில் கொண்டு வரும்படி வேலைக்காரனுக்கு உத்தரவிட்டு விட்டு, அந்த கடத்திச் செல்லுகிறவர்களை எதிர்பார்த்துக்கொண்டு வரவேற்பு அறையில் அமர்ந்திருந்தார்கள்.

'உள்ளே வந்தவர்கள், மீண்டும் வெளியே ஓடிவிட்டார்கள்' என்று காப்ரியல் வந்து அவளிடம் சொல்லியபோது, அவள் முகம் சுளித்து எழுந்தாள். பின்னால் தனது கைகளைப் பின்பாக வைத்துக் கொண்டு, அந்த அறைகளில் வெகு நேரம் உலாவிக்கொண்டு, தான் என்ன செய்யவேண்டும் என்பதை சிந்தித்துக் கொண்டிருந்தாள். நடு இரவில், தன்னுடைய ஜேபியில் இருந்த சாவியை எடுத்துக் கொண்டு, நட்டாஷாவின் அறைக்குள் போனாள். சோனியா தாழ்வாரத்தில் உட்கார்ந்து விம்மி அழுது கொண்டிருந்தாள். 'மரியா டிமிட்ரிவ்னா, கடவுளுக்காக என்னை அவளிடம் போகவிடு' என்று அவள் கெஞ்சினாள். ஆனால், அவளுக்குப் பதில் சொல்லாமலே, கதவைத் திறந்து உள்ளே போனாள்... 'வெறுக்கத்தக்கது, பயங்கரமானது... என்னுடைய வீட்டிலேயே... அருவருப்பான பெண், கேடு கெட்டவள். அவளுடைய தந்தைக்காகவே நான் வருந்துகிறேன்' என்று அவள் நினைத்து, தன்னுடைய கோபத்தை அடக்கிக் கொள்ள முயற்சித்தாள். 'விஷயம் எவ்வளவு கடினமாய் இருந்தாலும், எல்லாரும் வாயை மூடிக்கொண்டு இருக்கும்படி நான் சொல்லப் போகிறேன். இந்த விஷயத்தைக் கோமகனிடமிருந்து நான் மறைத்து விடுவேன்.' உறுதியான அடிகள் எடுத்துவைத்து அறைக்குள் நுழைந்தாள். தனது கைகளில் முகத்தை மூடிக் கொண்டு நட்டாஷா சோபாவில் படுத்திருந்தாள். அவளை எந்த நிலைமையில் மரியா டிமிட்ரிவ்னா விட்டுப் போனாளோ, அதே நிலைமையில்தான' அவள் இன்னமும் இருந்தாள்.

'ஒரு இனிமையான பெண்! ரொம்ப இனிமை!' என்று மரியா டிமிட்ரிவ்னா சொன்னாள். 'காதலர்களைச் சந்திப்பதற்கு என்னுடைய வீட்டிலேயே ஏற்பாடு செய்வது! பாசாங்கு செய்வதில் பயனில்லை. நான் சொல்லுவதைக் கவனித்துக் கேள்' என்று மரியா டிமிட்ரிவ்னா சொல்லி அவளுடைய கையைத் தொட்டாள். 'நான் பேசும்போது கவனித்துக் கேள். கேடு கெட்டவளிலும் கெட்டவளாக, நீ உனக்கு இழிவு தேடிக்கொண்டாய். உன்னை நான்

வேறு விதமாக நடத்துவேன். ஆனால், உன்னுடைய தந்தைக்காக நான் வருந்துகிறேன். ஆகவே அவரிடம் அதை மறைத்துவிடுவேன்.'

நட்டாஷா தன்னுடைய நிலைமையிலிருந்து மாறவில்லை. ஆனால், அவளுடைய முழு உடம்பும், அவளுடைய சப்தமில்லாத விம்மல்களினால் ஆடிக்கொண்டிருந்தது. அவளுடைய மூச்சு திணறியது. சோனியாவை மரியா டிமிட்ரிவ்னா நோட்டமிட்டு விட்டு, நட்டாஷாவின் பக்கத்தில் சோபாவில் அமர்ந்தாள்.

'என்னிடமிருந்து அவன் தப்பியது, அவனுக்கு ஒரு அதிருஷ்டம்தான். ஆனால், நான் அவனைக் கண்டு பிடித்து விடுவேன் என்று கறகறப்பான குரலில் அவள் கூறினாள். 'நான் சொல்லுவதை நீ கேட்டு வருகிறாயா, அல்லது இல்லையா?'

தனது பெரிய கையை நட்டாஷாவின் முகத்திற்குக் கீழாக வைத்து, அவளுடைய முகத்தைத் தனக்கு நேராகத் திரும்பினாள். நட்டாஷாவின் தோற்றத்தை மரியா டிமிட்ரிவ்னாவும் சோனியாவும் பார்த்து ஆச்சரியம் கொண்டார்கள். அவளுடைய கண்கள் உலர்ந்திருந்தன. மினுமினுத்தன. அவளுடைய உதடுகள் இறுகி மூடியிருந்தன. அவளுடைய கன்னங்கள் குழிவிழுந்திருந்தன.

'என்னை விட்டுவிடுங்கள்... அதைப்பற்றி எனக்கு என்ன... நான் சாகப்போகிறேன்' என்று அவள் முனங்கிக்கொண்டிருந்தாள். மரியா டிமிட்ரிவ்னாவின் கைகளிலிருந்து வேகமாகத் தன்னை விடுவித்துக்கொண்டு பழைய மாதிரியே படுத்துக்கொண்டாள்.

'நட்டாலி, நான் உனது நன்மையையே விரும்புகிறேன். வேண்டுமானால் படுத்துக்கொள். அதே மாதிரி படுத்துக்கொள். நான் உன்னைத் தொடமாட்டேன். ஆனால், நான் சொல்லுவதைக் கேள். நீ எவ்வளவு பெரிய தவறு செய்திருக்கிறாய் என்பதை நான் உனக்கு சொல்லப்போவதில்லை. நீ உனக்குள் அறிவாய். ஆனால், உன்னுடைய தந்தை நாளை திரும்பி வரும்போது, அவரிடம் நான் என்ன சொல்லுவது? என்ன?' என்று மரியா டிமிட்ரிவ்னா பேசினாள்.

மீண்டும் நட்டாஷாவின் உடம்பு விம்மல்களினால் குலுங்கியது.

'ஒருவேளை அவரும், உன்னுடைய சகோதரரும், உனக்கு நிச்சயதார்த்தம் ஆனவரும் கண்டுபிடித்து விட்டார்களானால்?'

'எனக்கு நிச்சயதார்த்தம் ஆனவர் ஒருவரும் இல்லை. நான் அவரை மறுத்துவிட்டேன்' என்று நட்டாஷா கூச்சலிட்டாள்.

'எல்லாம் ஒன்றுதான். அவர்கள் இதைக் கேள்விப்பட்டார் களானால், சும்மா விட்டுவிடுவார்களா? அவர், உன்னுடைய தந்தை,

எனக்கு அவரைத் தெரியும்... அவர் அவனை டூயல் சண்டைக்கு அழைப்பாரானால் அது சரியாய் இருக்குமா? என்ன?' என்று மரியா டிமிட்ரிவ்னா கேட்டாள்.

'ஓ, என்னை விட்டுவிடுங்கள். நீங்கள் எதற்காக இதில் தலையிட்டீர்கள்? ஏன்? ஏன்? அம்மாதிரி செய்யும்படி உங்களை யார் கேட்டார்கள்?' என்று நட்டாஷா கூச்சலிட்டு, சோபாவில் எழுந்து உட்கார்ந்து, குரோதத்தோடு மரியா டிமிட்ரிவ்னாவைப் பார்த்தாள்.

'ஆனால், உனக்கு என்ன வேண்டும்?' என்று மீண்டும் கோபம் பொங்க மரியா டிமிட்ரிவ்னா கூச்சலிட்டாள். 'உன்னை என்ன பூட்டியா வைத்திருந்தோம்? அவன் இங்கே வருவதை யார் தடுத்தார்கள்? ஒரு ஜிப்ஸி பாட்டுக்காரியைப் போல உன்னை எதற்காகத் தூக்கிக்கொண்டு ஓடவேண்டும்?... நல்லது, உன்னை அவன் தூக்கிக்கொண்டு போயிருந்தால்... அவர்களால் அவனைக் கண்டு பிடிக்க முடியாது என்றா நீ நினைக்கிறாய்? உன்னுடைய தந்தையோ, அல்லது சகோதரரோ, அல்லது நிச்சயதார்த்தம் ஆனவரோ, அவனைக் கண்டு பிடிக்க முடியாதா? தவிரவும் அவன் ஒரு அயோக்கியன். அருவருப்பானவன் - அது ஒரு உண்மையான விஷயம்.'

'அவர், உங்களில் யாரையும்விட சிலாக்கியமானவர்' என்று நட்டாஷா கூச்சலிட்டு எழுந்தாள். 'நீங்கள் தலையிடாமல் இருந்திருந்தால்... ஓ, கடவுளே, இவையெல்லாம் என்ன? இது என்ன சோனியா, ஏன்?... போய்விடு.'

பெரிய விபத்துகள் ஏற்படும்போது அவற்றிற்குத் தாங்களே காரணம் என்று நினைத்து மக்கள் அதைரியத்தோடு எப்படி அழுவார்களோ, அதே மாதிரி அவளும் பலமாக விம்மி அழ ஆரம்பித்தாள். மரியா டிமிட்ரிவ்னா மீண்டும் பேச ஆரம்பித்தாள். ஆனால், நட்டாஷா கூச்சலிட்டு,

'போய் விடுங்கள், போய் விடுங்கள். நீங்கள் எல்லாரும் என்னை வெறுக்கிறீர்கள். என்னை இகழ்கிறீர்கள்' என்று சொல்லிவிட்டு, மீண்டும் சோபாவில் படுத்துக்கொண்டாள்.

மரியா டிமிட்ரிவ்னா சிறிது நேரம் அவளைக் கண்டித்துக் கொண்டிருந்தாள். பின்னால் அவளுடைய தந்தைக்கு இந்த விஷயம் தெரியாமல் மறைத்துவிடவேண்டும் என்று கூறினாள். நட்டாஷா மட்டும், இவற்றையெல்லாம் மறந்து, ஒருவரும் அறிய முடியாமல் செய்ய சம்மதிப்பாளானால், யாருமே இதை அறிந்து கொள்ள முடியாது என்று உறுதி கூறினாள். நட்டாஷா பதில்

சொல்லவில்லை. விம்மி விம்மி அழுது கொண்டிருக்கவும் இல்லை. அவள் உள்ளம் கடினமாகி, உடல் பதறிக்கொண்டிருந்தது. அவளுடைய தலைக்குக் கீழாக ஒரு தலையணியை வைத்து இரண்டு மெத்தைகளால் அவளை மூடினாள். தானே சென்று அவள் குடிப்பதற்காக எலுமிச்சம் பூ போட்ட தண்ணீரைக் கொண்டு வந்தாள். ஆனால், நட்டாஷா அவளின் அழைப்பிற்குப் பதில் சொல்லவில்லை.

'நல்லது, அவள் தூங்கட்டும்' என்று மரியா டிமிட்ரிவ்னா சொல்லிவிட்டு, நட்டாஷா தூங்குவதாக நினைத்துக்கொண்டு, அறையைவிட்டு வெளியே போனாள்.

ஆனால், நட்டாஷா தூங்கவில்லை. வெளிறிய முகத்துடனும், விரிந்த கண்களினால் வெறித்த பார்வையுடனும், தனக்கு எதிராகப் பார்த்துக்கொண்டிருந்தாள். அன்று இரவு பூராவாக அவள் தூங்கவும் இல்லை, அழவும் இல்லை. அவளிடம் பல தடவைகள் சென்ற சோனியாவோடு அவள் பேசவும் இல்லை.

மறுநாள் தாம் சொல்லியபடி மாஸ்கோவிற்குப் பக்கத்தில் இருந்த தமது எஸ்டேட்டிலிருந்து மத்தியான சாப்பாட்டிற்கு கோமகன் ராஸ்டோவ் திரும்பி வந்தார். அவர் மிகுந்த உற்சாகமாய் இருந்தார். எஸ்டேட்டை விலைக்கு வாங்குபவருடன் காரியங்கள் திருப்திகரமாய் நடந்து வந்தன. ஆகவே, மாஸ்கோவில் இருந்தோ, அல்லது கோமகளிடம் இருந்தோ, அவள் விலகி இருக்க வேண்டிய அவசியம் எதுவும் இல்லை. மரியா டிமிட்ரிவ்னா அவரைச் சந்தித்தபோது, நட்டாஷாவுக்கு உடம்பு முதல் நாள் அன்று மிகவும் அசௌக்கியமாய் விட்டது என்றும், டாக்டரை வரவழைத்துக் காட்டினாள் என்றும், இப்பொழுது கொஞ்சம் சௌக்கியமாய் இருப்பதாகவும் சொன்னாள். அன்று காலையில் நட்டாஷா அறையைவிட்டு வெளியே வரவில்லை. உலர்ந்து போன உதடுகளை இறுக மூடிக்கொண்டு, உலர்ந்து போன கண்களால் வெறிக்கப் பார்த்துக்கொண்டு, ஜன்னலில் அமர்ந்திருந்தாள். தெருவில் போய்க்கொண்டிருந்த மக்களை மனக் குழப்பத்தோடு பார்த்துக்கொண்டும், தனது அறைக்குள் நுழையும் யாரையும், வேகமாய் திரும்பிப் பார்த்துக்கொண்டும் இருந்தாள். அனடோலைப்பற்றி ஏதாவது செய்தி வரும் என்றும், அவர் நேரில் வரலாம் என்றும், அல்லது அவளுக்குக் கடிதம் அனுப்பலாம் என்றும், அவள் எதிர் பார்த்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது.

கோமகன் அவளைப் பார்க்க வந்தபோது, ஒரு ஆண் மகனின் காலடி ஓசை கேட்டு, ஆவலோடு அவள் திரும்பிப் பார்த்தாள்.

பின்னால் அவளுடைய முகம் கனிவற்ற, பகைமை கொண்ட தோற்றத்தோடு விளங்கியது. அவருக்கு வணக்கம் தெரிவிக்க அவள் எழுந்திருக்கக்கூட இல்லை.

'உன்னைப்பற்றி என்ன விஷயம், என் தேவதையே? உனக்கு உடம்புக்கு சௌக்கியமில்லையா?' என்று கோமகன் கேட்டார்.

ஒரு வினாடி மௌனத்திற்குப் பின்னால், நட்டாஷா பதில் அளித்தாள்: 'ஆம், அசௌக்கியம்'.

அவள் ஏன் அவ்வளவு தூரம் வெறுப்பாக இருக்கிறாள் என்றும், அவளுடைய நிச்சயதார்த்தக் காதலருக்கு ஏதாவது நேர்ந்துவிட்டதா என்றும், கோமகன் ஆவலோடு கேள்விகள் கேட்டார். அவற்றிற்கு அவள் பதில் அளித்தபோது, அம்மாதிரி எதுவும் ஏற்படவில்லை என்றும், அவர் கவலைப்பட வேண்டாம் என்றும் அவள் சொன்னாள். எதுவும் ஏற்படவில்லை என்ற நட்டாஷாவின் உறுதி மொழிகளை, மரியா டிமிட்ரிவ்னா உறுதி செய்தாள். உடம்புக்கு சௌக்கியம் இல்லை என்ற பாசாங்கைக் கொண்டும், தமது குமாரியின் மன வேதனையைக் கொண்டும், சோனியாவினுடையவும் மரியா டிமிட்ரிவ்னாவினுடையவும் குழப்பம் அடைந்த முகங்களைக்கொண்டும், தாம் ஊரில் இல்லாத சமயத்தில் ஏதோ தவறு நடந்திருக்கிறது என்பதைக் கோமகன் தெளிவாய் அறிந்து கொண்டார். ஆனால், தம்முடைய அன்பு மிகுந்த குமாரிக்கு ஏதாவது அகௌரவம் ஏற்பட்டிருக்கலாம் என்று நினைப்பதற்கு அவருக்குப் பயங்கரமாய் இருந்தது. அதோடு, தம்முடைய சொந்த மன அமைதியையும் அவர் பிரமாதமாய் மதித்தார். ஆகவே, அவர் மேற்கொண்டு கேள்வி கேட்க விரும்பவில்லை. பிரமாதமாக எதுவும் நடந்துவிடவில்லை என்று தமக்குத் தாமே உறுதி கூறிக்கொள்ள முயற்சித்தார். மீண்டும் கிராமத்திற்குத் திரும்புவதை அவளுடைய தேக அசௌக்கியம் தாமதப்படுத்துகிறது என்பது மட்டும் அவருக்கு அதிருப்தியைக் கொடுத்தது.

## 8

### 19

தமது மனைவி மாஸ்கோவிற்கு வந்த தினத்திலிருந்தே, அவளுக்குப் பக்கத்தில் தாம் இருக்கவேண்டாம் என்று கருதி, வேறு எங்காவது போக பீயர் விரும்பினார். ராஸ்டோவ்கள் மாஸ்கோவிற்கு வந்த பின்பு, நட்டாஷா அவர் உள்ளத்தில் ஏற்படுத்திய கிளர்ச்சியைப் பார்த்த பின்பு, தமது உத்தேசத்தை நிறைவேற்றி வைக்க அவர் துரிதம் கொண்டார்.

டீவர் என்ற இடத்திற்கு ஜோசப் அலெக்ஜீவிச்சினுடைய விதவையைப் பார்ப்பதற்காகச் சென்றார். தனது காலஞ்சென்ற கணவரின் தஸ்தாவேஜுகள் சிலவற்றைப் பீயரிடம் கொடுப்பதாக, அவள் வெகு காலமாகச் சொல்லிக்கொண்டிருந்தாள்.

அவர் அங்கிருந்த மாஸ்கோ திரும்பியதும், மரியா டிமிட்ரிவ்னாவிடமிருந்து அவருக்கு ஒரு கடிதம் வந்தது. ஆண்ட்ரூ பால்கோன்ஸ்கியைப் பற்றியும், அவருடைய நிச்சயதார்த்தக் காரியைப் பற்றியும், ஒரு மிகுந்த முக்கியமான விஷயத்தைப் பற்றி பேச வேண்டும் என்றும், அதற்காக உடனே அவர் தன்னை வந்து பார்க்க வேண்டும் என்றும் அவள் எழுதியிருந்தாள். நட்டாஷாவைப் பார்ப்பதை அவர் தவிர்த்துக்கொண்டு வந்தார். ஏனெனில், ஒரு நண்பரின் நிச்சயதார்த்தக் காரியிடம் ஒரு திருமணம் ஆனவர் எப்படி நடந்து கொள்ள வேண்டுமோ, அதை விட அதிகமான உணர்ச்சி அவளுக்காகத் தம்மிடம் ஏற்படுவதை அவர் உணர்ந்தார். என்றாலும் அவர்கள் அடிக்கடி சந்திக்கும்படி ஏதோ ஒரு விதி செய்து வந்தது.

'என்ன நடந்திருக்க முடியும்? என்னிடமிருந்து அவர்கள் என்ன எதிர்பார்க்க முடியும்?' என்று மரியா டிமிட்ரிவ்னாவின் வீட்டிற்குப் புறப்படுவதற்காக உடைகள் அணிந்துகொண்டிருக்கும் போது அவர் நினைத்தார். 'இளவரசர் ஆண்ட்ரூ மட்டும் சீக்கிரமாக வந்து அவளை திருமணம் செய்து கொண்டாரானால்!' என்று அவளுடைய வீட்டிற்குப் போகிற வழியில் அவர் நினைத்தார்.

டீவர்ஸ்கோய் சோலையில் அவர் போய்க்கொண்டிருந்தபோது - அவருக்குப் பழக்கமான ஒரு குரல் அவரைக் கூப்பிட்டது.

'பீயர், திரும்பி வந்து வெகு காலம் ஆகிவிட்டதா?' என்று ஒரு குரல் கேட்டது. பீயர் தலையை நிமிர்த்தினார். இரண்டு சாம்பல் வர்ண குதிரைகள் உறைபனியை வாரி இறைத்துக்கொண்டு, ஒரு பனி வண்டியை இழுத்துக்கொண்டு ஓடுவதைக் கவனித்தார். அந்த வண்டியில் அனடோலும், அவருடைய இணைபிரியாத தோழனான மக்காரினும் இருந்தார்கள். ராணுவத்தில் உயர் பதவியில் உள்ளவர்கள் அலங்காரமாய் அமர்ந்திருக்கிற முறையில் அனடோல் நிமிர்ந்து உட்கார்ந்திருந்தார். அவருடைய முகத்தின் அடிபாகத்தை அவருடைய கழுத்துப் பட்டி மறைத்திருந்தது. அவருடைய தலை லேசாகக் குனிந்திருந்தது. அவருடைய முகம் உயிர்த்துடிப்போடும் ரோஜா நிறத்திலும் இருந்தது. வெள்ளைத் தோகை கொண்ட அவருடைய தொப்பியைத் தலையில் ஒரு பக்கமாகச் சாய்த்து வைத்திருந்தார். அதனால் பொமேடு தடவிய அவருடைய சுருளை

முடி வெளியே தெரிந்தது. அந்த முடி மீது வெள்ளைப் பனிப் பொடியும் காணப்பட்டது.

'ஆம், உண்மையாக, அவர்தான் நிஜமான யோகி. அந்த வினாடியிலுள்ள இன்பத்தைத் தவிர, அதற்கு அதிகமாக அவர் எதையும் யோசிப்பதில்லை. எதுவும் அவருக்கு தொந்தரவு கொடுக்க முடியாது. ஆகவே, எப்பொழுதும் அவர் மகிழ்ச்சியோடும் திருப்தியாகவும் அமைதியாகவும் இருக்கிறார். அவர் மாதிரி இருப்பதற்கு நான் என்ன வேண்டுமானாலும் கொடுப்பேன்' என்று அவரைப் பார்த்து ஆசை கொண்டவரைப்போலப் பீயர் நினைத்தார்.

மரியா டிமிட்ரிவ்னாவின் வீட்டிலுள்ள முன் அறையில் அங்கிருந்த சேவகன் பீயரின் வெளிச்சட்டையைக் கழற்றினான். தன்னுடைய எஜமானி அவரை நேராக அவளுடைய படுக்கை அறைக்கு வரும்படி கூறினதாகச் சொன்னான்.

நடன அறையின் கதவை அவர் திறந்தபோது, ஒரு மெல்லிய, வெளிறிய பழிவாங்கும் தோற்றத்தோடு கூடிய முகத்தோடு நட்டாஷா ஜன்னலில் உட்கார்ந்து இருப்பதைப் பார்த்தார். அவள் திரும்பி அவரைப் பார்த்து முகத்தைச் சுளித்து, ஒரு கனிவற்ற பெருந்தன்மைத் தோற்றத்தோடு அந்த அறையை விட்டுப் போனாள்.

மரியா டிமிட்ரிவ்னாவினுடைய அறைக்குள் பீயர் போனதும், 'என்ன நடந்து விட்டது?' என்று கேட்டார்.

'எல்லாம் சிலாக்கியமாய்த்தான் இருக்கின்றன!' என்று மரியா டிமிட்ரிவ்னா பதில் சொன்னாள். 'ஐம்பத்தெட்டு வருஷங்களாக இந்த உலகத்தில் நான் வாழ்ந்து வருகிறேன். என்றாலும், இதைப்போல மானக்கேடான விஷயத்தை நான் இதற்கு முன்னால் அறிந்ததே இல்லை.'

தான் சொல்லுவதை வேறு யாரிடமும் சொல்லுவதில்லை என்ற வாக்குறுதியை வாங்கிக்கொண்டு, மரியா டிமிட்ரிவ்னா அவரிடம் விஷயங்களைச் சொன்னாள். அவையாவன: தனது பெற்றோர்களுக்குத் தெரியாமலேயே, இளவரசர் ஆண்ட்ரூவை நட்டாஷா மறுத்துவிட்டாள்; இதற்கு அனடோல் குராகின்தான் காரணம்; அவருடன் பழக்கம் ஏற்படும்படி பீயரின் மனைவி உதவி செய்தாள்; அவளுடைய தந்தை ஊரில் இல்லாத சமயத்தில் அனடோலுடன் ரகசியமாய் திருமணம் செய்து கொள்ளுவதற்காக, அனடோலோடு ஓடுவதற்கு நட்டாஷா முயற்சி செய்தாள்.

தமது தோள்களைப் பீயர் உயர்த்தி வாய் திறந்தபடியே அவரிடம் சொல்லுவதைக் கவனத்தோடு கேட்டார். அவரால் அவரது காதுகளை நம்ப முடியவில்லை. இளவரசர் ஆண்ட்ரூ தமது நிச்சயதார்த்தமான மனைவியை ஆழ்ந்து காதலித்தார். அந்த மனோகரமான நட்டாஷா ராஸ்டோவா, அந்த பால்கோன்ஸ்கியை, அந்த முட்டாள் அனடோலுக்காகக் கைவிடுவதென்றால், அந்த அனடோல் ஏற்கெனவே ரகசியமாக திருமணமாயிருந்தும், அவன் மீது அவள் காதல் கொண்டு அவனோடு ஓடி விடுவது என்றால், அப்பேர்ப்பட்ட விஷயத்தை பீயரால் யூகிக்கவோ அறியவோ முடியவில்லை.

நட்டாஷாவை சிறு குழந்தையிலிருந்தே அவர் அறிவார். அவளைப் பற்றி ஒரு மனோகரமான அபிப்பிராயத்தை அவர் கொண்டிருந்தார். அந்த அபிப்பிராயத்தோடு, அவளுடைய தற்கால இழிவான, அறிவற்ற, கொடுமையான நடத்தையை, அவரால் ஒப்பிட்டுப் பார்க்க முடியவில்லை. தமது மனைவியைப் பற்றி அவர் சிந்தித்துப் பார்த்தார். 'அவர்கள் எல்லாரும் ஒரே மாதிரியாய்த்தான் இருக்கிறார்கள்' என்று அவர் தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார். ஒரு கெட்ட பெண்ணோடு முடிச்சுப் போட்டுக் கொள்ளும் துர் அதிருஷ்டம், தமக்கு மட்டும் தனித்து ஏற்படவில்லை என்று அவர் நினைத்தார். என்றாலும் அவர் இளவரசர் ஆண்ட்ரூவுக்காக இரங்கியபோது, அவருக்குக் கண்ணீர் வந்து விட்டது. அவருக்கு ஏற்பட்ட அவமானத்திற்காக, அவர் அனுதாபம் கொண்டார். தமது நண்பர் மீது அவருக்கு அனுதாபம் அதிகம் ஆக ஆக, நடன அறையில் அம்மாதிரி கனிவற்ற பெருந்தன்மைத் தோற்றத்தோடு எழுந்துபோன நட்டாஷா மீது, இகழ்ச்சியும் அருவருப்பும் அதிகமாயின. நட்டாஷாவின் உள்ளம் அதைரியத்தாலும் அவமானத்தாலும் இகழ்ச்சியாலும் நிறைந்து நின்றது என்பதை அவர் அறியார். ஆகவே, அவள் முகத்தில் கடுமையும், அமைதியான பெருந்தன்மைத் தோற்றமும் காணப்பட்டது என்றால், அதற்கு அவள் பொறுப்பல்ல.

மரியா டிமிட்ரிவ்னா கேட்ட கேள்விக்குப் பதிலாக, 'எப்படி திருமணம் செய்ய முடியும்? அவர் திருமணம் செய்ய முடியாது-அவருக்கு திருமணம் ஆகிவிட்டது' என்று பீயர் பதில் சொன்னார்.

'ஒவ்வொரு மணியிலும் விஷயங்கள் மோசமாகிக் கொண்டு வருகின்றன' என்று மரியா டிமிட்ரிவ்னா கூச்சலிட்டாள். 'ஒரு அழகான வாலிபன்! எப்பேர்ப்பட்ட அயோக்கியன்! என்றாலும் அவள் அவனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள்-நேற்று முதல்

எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள். அவளுக்கு விஷயத்தைச் சொல்லி விட வேண்டும். அப்படியானால்தான் குறைந்தபட்சம் அவள் அவனை எதிர்பார்க்காமலாவது இருப்பாள்.'

அனடோலின் திருமணத்தைப்பற்றி பீயரிடமிருந்து விவரங்களைக் கேட்ட பின்பு, தன்னுடைய கோபத்தை அனடோல் மீது வசவுகளாக அவள் வெளியிட்டாள். அதன் பின்பு, பீயரை எதற்காகத் தான் வரவழைத்தாள் என்பதைச் சொன்னாள். பால்கோன்ஸ்கி எந்த வினாடியிலும் வரலாம் என்றும், அவரோ அல்லது கோமகனோ இந்த விஷயத்தை அறிந்தால், அனடோலை டுயல் சண்டைக்கு இழுப்பார்கள் என்று தான் பயப்படுவதாகவும் அவள் சொன்னாள். ஆகவே, அவருடைய மைத்துனரிடம் அவர் பேசி, மாஸ்கோவை விட்டு அவர் போகும்படி செய்ய வேண்டும் என்றும், தன்னுடைய கண் முன்பாக அவர் தென்படக்கூடாது என்றும் அவள் சொன்னாள். வயோதிகக் கோமகனுக்கும், நிக்கலஸுக்கும், இளவரசர் ஆண்ட்ரூவுக்கும் ஏற்படக்கூடிய அபாயத்தை இப்பொழுதுதான் பீயர் உணர்ந்தார். ஆகவே, அவள் விரும்புகிறபடி செய்வதாக வாக்குக் கொடுத்தார். தன்னுடைய விருப்பங்களைச் சுருக்கமாகவும் கச்சிதமாகவும் அவள் விளக்கிய பின்பு, அவரை வரவேற்பு அறையில் போய் இருக்கும்படிச் சொன்னாள்.

'ஜாக்கிரதை, கோமகனுக்கு எதுவுமே தெரியாது. உமக்கும் எதுவும் தெரியாததுபோல நடந்துகொள்ளும்' என்று சொன்னாள். 'இனி அவனை எதிர்ப்பார்ப்பதில் பிரயோஜனம் இல்லை என்று நான் அவளிடம் போய் சொல்லுகிறேன். உமக்கு ஆட்சேபணை இல்லையென்றால், டின்னர் சாப்பிட்டு விட்டே போகலாம்' என்று பீயரிடம் சொன்னாள்.

வயோதிகக் கோமகனைப் பீயர் சந்தித்தார். அவர் நிலைகுலைந்து படபடப்பாகக் காணப்பட்டார். அன்று காலையில் நட்டாஷா அவரிடம் தான் பால்கோன்ஸ்கியை மறுத்து விட்டதைக் கூறினாள்.

'துன்பங்கள், துன்பங்கள்; எனது அன்பானவரே' என்றுஅவர் பீயரைப் பார்த்துச் சொன்னார். 'அவர்களுடைய தாயார் இங்கே இல்லாததால், இந்த பெண்களால், எவ்வளவு துன்பங்கள் ஏற்படுகின்றன, தெரியுமா? நான் இங்கே வந்ததற்காக மிகவும் வருத்தப்படுகிறேன். நான் உம்மிடம் ஒளிவு மறைவு இல்லாமல் பேசுகிறேன். யாரிடமும் கலந்து கொள்ளாமல் அவள் தன்னுடைய நிச்சயதார்த்தத்தை முறித்து விட்டாள் என்பதை நீர் கேள்விப்பட்டீரா? இந்த நிச்சயதார்த்தம் எனக்குப் பிடித்தமானதாய்

இல்லை என்பது உண்மைதான். ஆனால் உண்மையில் அவர் ஒரு சிலாக்கியமான மனிதர். என்றாலும் அவருடைய தந்தை சம்மதிக்காத நிலையில், அவர்களால் மகிழ்ச்சியாக இருக்க முடியாது. நட்டாஷாவுக்கு வேறு மாப்பிள்ளை பார்ப்பதிலும் கஷ்டமில்லை. என்றாலும் வெகு காலமாக இந்த நிச்சயதார்த்த விஷயம் இருந்து கொண்டு இருக்கிறது. இச்சமயத்தில் தாயுடையவோ, தந்தையுடையவோ சம்மதமில்லாமல் இப்படியா நடப்பது? இப்பொழுது அவள் உடம்பு அசௌக்கியமாய் இருக்கிறாள். அது என்ன அசௌக்கியம் என்பது கடவுளுக்கே தெரியும். ரொம்பக் கடினமானது, கோமகனே. தாயார் இல்லாமல் இந்தப் பெண்களைச் சமாளிப்பது, ரொம்பக் கடினமானது...'

கோமகன் மிகவும் நிலைகுலைந்து போயிருக்கிறார் என்பதைப் பீயர் கண்டதும் பேசும் விஷயத்தை மாற்ற முயற்சித்தார். ஆனால் கோமகன் திரும்பவும் தமது கஷ்டங்களைப் பற்றியே பேசினார்.

இச்சமயம் பரபரப்பான முகத்தோடு அந்த அறைக்குள் சோனியா வந்தாள்.

'நட்டாஷா பூரணமாய் சௌக்கியமாய் இல்லை. தன்னுடைய அறையிலேயே இருக்கிறாள். உம்மைப் பார்க்க விரும்புகிறாள். மரியா டிமிட்ரிவ்னா அவளோடு தான் இருக்கிறாள். அவளும் உம்மை வரும்படி அழைக்கிறாள்.'

'ஆம், நீர் பால்கோன்ஸ்கிக்கு ஓர் பெரிய நண்பர். அவருக்கு உமது மூலம் அவள் ஒரு சேதியை அனுப்ப விரும்புவதாய் இருக்கலாம்' என்றார் கோமகன். 'ஓ, அன்பே! ஓ, அன்பே, இவையெல்லாம் எவ்வளவு மகிழ்ச்சியாய் இருக்கின்றன?'

தமது நெற்றியிலுள்ள சாம்பல் வர்ணத் தலை முடியைப் பற்றிக் கொண்டு, கோமகன் அந்த அறையை விட்டு வெளியே போனார்.

அனடோலுக்கு ஏற்கெனவே திருமணம் ஆகிவிட்டது என்று மரியா டிமிட்ரிவ்னா சொல்லியதை நட்டாஷா நம்பவில்லை. பீயரே வந்து அதை உறுதி செய்ய வேண்டும் என்று அவள் வற்புறுத்தினாள். தாழ்வாரத்தின் வழியாக நட்டாஷாவின் அறைக்கு பீயரை அழைத்துக் கொண்டு போனபோது, இவ்விஷயத்தை சோனியா சொன்னாள்.

வெளிறிய முகத்தோடும் கடுமையோடும் மரியா டிமிட்ரிவ்னாவின் பக்கத்தில் நட்டாஷா அமர்ந்திருந்தாள். அவளுடைய கண்கள் ஜுரம் கொண்டதைப் போல மின்னிக் கொண்டிருந்தன. அவை ஒரு கேள்விக் குறியோடு அவர் அந்த அறையில் நுழைந்ததும் நோக்கின. அவள் புன்முறுவல்

காட்டவுமில்லை, தலையை அசைக்கவுமில்லை. வெறித்த பார்வையோடு அவரை நோக்கிக் கொண்டிருந்தாள். அவளுடைய பார்வை ஒரே ஒரு விஷயத்தைத்தான் கேட்டது: அவர் ஒரு நண்பரா? அல்லது மற்றவர்களைப்போல, அனடோல் விஷயத்தில் அவரும் ஒரு எதிரிதானா? பீயரைப் பொறுத்த வரையில் அச்சமயத்தில் அவர் அங்கே இருப்பதாகவே அவளுடைய நினைப்பில் இல்லை.

'அவருக்கு எல்லா விஷயங்களும் தெரியும்' என்று பீயரைச் சுட்டிக் காட்டி நட்டாஷாவிடம் மரியா டிமிட்ரிவ்னா சொன்னாள். 'நான் உன்னிடம் உண்மையைச் சொன்னேனா, இல்லையா என்பதை அவரே சொல்லட்டும்.'

வேட்டையாடப்பட்ட, காயமடைந்த ஒரு மிருகம், தன்னை நெருங்கிக் கொண்டிருக்கும் நாய்களையும் வேட்டைக்காரர் களையும் எம்மாதிரி பார்க்குமோ, அதே மாதிரி பார்வையில், அங்கிருந்தவர்களை ஒருவர் மாற்றி ஒருவரை நட்டாஷா பார்த்தாள்.

'நட்டாலியா இலினிச்னா' என்று பீயர் ஆம்பித்தார். அவளுக்காக இரக்கம் கொண்டு, தாம் செய்யப்போகும் விஷயத்திற்காக கஷ்டம் கொண்டு தமது பார்வையைக் கீழ் நோக்கினார். 'அது உண்மையாய் இருந்தாலும் சரி, இல்லையானாலும், சரி, அவரால் உனக்கு எவ்வித மாறுதலும் ஏற்படப் போவதில்லை. ஏனென்றால்...'

'அப்படியானால், அவர் திருமணம் ஆனவர் என்று சொல்லுவது உண்மையல்ல!'

'ஆம், அது உண்மைதான்.'

'அவர் வெகுகாலமாக திருமணமாய் இருக்கிறாரா? நீர் சத்தியம் செய்ய முடியுமா?...' என்று அவள் கேட்டாள்.

பீயர் சத்தியம் செய்தார்.

'அவர் இன்னமும் இங்கேதான் இருக்கிறாரா?' என்று அவள் உடனே கேட்டாள்.

'ஆம், இப்பொழுது கூட நான் அவரைப் பார்த்தேன்.'

அவளால் பேச முடியவில்லை என்று தோன்றியது. தன்னைத் தனியாக விடும்படி, தனது கைகளால் சைகை காட்டினாள்.

# 8

## 20

டின்னருக்காக பீயர் அங்கே தங்க வில்லை. அந்த அறையை விட்டு வந்து, உடனே வெளியே போய் விட்டார். அனடோல் குராகினைக் கண்டுபிடிப் பதற்காக அந்த நகரத்தைச் சுற்றினார். அனடோலை நினைத்தவுடன் அவருடைய

ரத்தம், வேகமாக அவருடைய இருதயத்திற்குப் பாய்ந்து, அவர் மூச்சு விடுவதற்குக் கஷ்டப்பட்டார். ஐஸ்-ஹில்ஸ் என்ற இடத்திலோ, அல்லது ஜிப்ஸிகளின் விடுதிகளிலோ, அல்லது காமானேனா என்ற இடத்திலோ அனடோலைக் காணவில்லை. பின்னால் கிளப்பிற்குப் போனார். கிளப்பில் எல்லாம் வழக்கம் போல நடந்துகொண்டிருந்தன. டின்னருக்காக அங்கே கூடியிருந்த அங்கத்தினர்கள், கோஷ்டிகளாகப் பிரிந்து அமர்ந்து இருந்தார்கள். பீயரைக் கண்டதும், அவர்கள் வரவேற்று நகரத்துச் செய்திகளைப் பற்றிப் பேசலானார்கள். அங்கிருந்த சேவகன் பீயரை வணங்கினான். அவருடைய சுபாவங்களையும் அவருக்குப் பழக்கமானவர்களையும் அவன் அறிவான். ஆகவே சிறிய சாப்பாட்டு அறையில் அவருக்கு ஒரு இடம் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது என்றும், இளவரசர் மைக்கேல் ஜாக்காரிச் வாசிப்பு அறையில் இருக்கிறார் என்றும், பால் டிமாபிவிச் இன்னும் வரவில்லை என்றும் அவன் சொன்னான். கால நிலையைப் பற்றி அவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது பீயருக்குப் பழக்கமான ஒருவர் ஒரு கேள்வி கேட்டார். அதாவது, ராஸ்டோவாவைக் குராகின் சோரம் செய்து கொண்டு போனதைப் பற்றி அவர் கேள்விப்பட்டாரா என்றும், நகரமெல்லாம் அதே பேச்சாய் இருக்கிறது என்றும், அது உண்மைதானா என்றும் அவர் கேட்டார். பீயர் சிரித்தார். அது அசட்டுப் பேச்சு என்றும், ஏனெனில், ராஸ்டோவ்களின் வீட்டிலிருந்துதான் அவர் அங்கே வந்திருக்கிறார் என்றும் அவர் சொன்னார். அங்கிருந்த ஒவ்வொருவரையும் அனடோலைப் பற்றிக் கேட்டார். அவர் இன்னும் வரவில்லை என்று ஒருவர் சொன்னார். அவர் டின்னருக்கு வருவார் என்று மற்றொருவர் சொன்னார். தமது உள்ளத்தில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை அறியாத, இந்த அமைதியான, அலட்சியமான கூட்டத்தைப் பார்ப்பதற்கு, அவருக்கு விசித்திரமாய் இருந்தது. டின்னருக்கு எல்லாரும் வருகிறவரையில் காத்துக் கொண்டு இருப்பதற்காக நடன அறையில் அவர் உலாவிக் கொண்டிருந்தார். அனடோல் வரவில்லை என்பதை அறிந்ததும் டின்னருக்காக அவர் அங்கே தங்கவில்லை. நேராக வீட்டிற்குப் போனார்.

பீயர் தேடிக்கொண்டிருந்த அந்த அனடோல் அன்று டோலாகாவோடு டின்னர் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். இந்த துரதிருஷ்டமான சம்பவத்திற்கு எப்படி பரிகாரம் கண்டுபிடிப்பது என்று அவரோடு ஆலோசனை செய்து கொண்டிருந்தார். நட்டாஷாவைப் பார்க்க வேண்டியது மிகவும் அவசியம் என்று

அவருக்குத் தோன்றியது. ஆகவே, நட்டாஷாவை சந்திப்பதற்கு ஏற்பாடு செய்ய, தன்னுடைய சகோதரியோடு ஆலோசனை செய்வதற்காக, அவளுடைய வீட்டிற்கு மாலையில் போனார். மாஸ்கோ பூராவாக அனடோலைக் கண்டுபிடிக்கச்செய்த முயற்சிகள் வீணாகி, அச்சமயத்தில் பீயரும் தமது வீட்டிற்குத் திரும்பினார். அவருடைய வேலைக்காரன், இளவரசர் அனடோல் கோமகளோடு பேசிக்கொண்டிருப்பதாக அவருக்குச் சொன்னான். கோமகளுடைய வரவேற்பு அறையில் விருந்தாளிகள் நிறைந்திருந்தார்கள்.

தாம் திரும்பி வந்த பின்பு, பீயர் தமது மனைவியை இன்னும் சந்திக்கவில்லை. அச்சமயம் அவள் மீது எப்பொழுதும் இருந்ததை விட, அதிகமான வெறுப்பு அவருக்குத் தோன்றி இருந்தது. ஆகவே தமது மனைவியிடம் வந்தனம் எதுவும் சொல்லாமல், நேராக வரவேற்பு அறைக்குள் போனார். அங்கே அனடோலைக் கண்டு அவரிடம் சென்றார்.

'ஆ, பீயர்' என்று கோமகன் சொல்லி தனது கணவரிடம் நெருங்கினாள். 'நமது அனடோலுக்கு என்ன கதி நேர்ந்தது என்பது உமக்குத் தெரியாது...'

தனது கணவரின் முன்னால் நீட்டிய தலையையும், அவர் கண்களில் பிரகாசத்தையும் அவருடைய உறுதியான நடையையும் கண்ட அவள் அப்படியே நின்று விட்டாள். அவருடைய கோபத்திற்கும், பலத்திற்கும் அறிகுறிகளான அவைகளை அவள் ஏற்கெனவே அறிவாள். டோலாகாவோடு அவர் டூயல் சண்டை போட்ட பின்பு, அவைகளை அவள் அனுபவித்து இருக்கிறாள்.

'நீ எங்கே இருக்கிறாயோ, அங்கே தீய ஒழுக்கமும் தீங்குகளும் இருக்கும்' என்று தமது மனைவியைப் பார்த்து பீயர் சொன்னார். 'அனடோல், என்னுடன் வாரும். நான் உம்முடன் பேச வேண்டும்' என்று பிரஞ்சு மொழியில் கூறினார்.

அனடோல் தமது சகோதரியைத் திரும்பிப் பார்த்தார். பீயரின் பின்னால் போவதற்குத் தயாராகப் பணிவோடு எழுந்தார். அவர் கையைப் பற்றி பீயர் தம்மிடம் அவரை இழுத்து அந்த அறையைவிட்டு வெளியே கொண்டு போனார்.

'என்னுடைய வரவேற்பு அறையில் நீர் இம்மாதிரி நடந்தால்...' என்று ஹெலன் முணுமுணுத்தாள். ஆனால் பீயர் பதில் சொல்லாமல் அறையை விட்டு வெளியே போனார்.

அனடோல் தமது வழக்கமான, திருப்தியான நடையில் அவரைப் பின்பற்றினார். ஆனால் அவருக்குண்டான கவலையை அவர் முகம் வெளிப்படுத்தியது.

தமது படிப்பு அறைக்குள் போனதும், அவர் கதவைச் சாத்திவிட்டு, அனடோலைப் பார்க்காமலே அவரிடம் பேச ஆரம்பித்தார்.

'கோமகள் ராஸ்டோவாவை திருமணம் செய்து கொள்ளுவதாக நீர் வாக்குறுதி கொடுத்து, அவளை அழைத்துக்கொண்டு ஓடிப் போவதாய் இருந்தீர். அப்படித்தானே?'

'எனது அன்பரே' என்று பதில் அளித்தார் அனடோல். (அவர்களுடைய உரையாடல் பிரஞ்சு மொழியில் நடந்தது). 'அம்மாதிரி தொனியில் எனக்குப் போடும் கேள்விகளுக்குப் பதில் சொல்ல கட்டுப்பட்டிருப்பதாக நான் நினைக்கவில்லை.'

ஏற்கெனவே வெளிறிப்போய் இருந்த பீயரின் முகம் கோபத்தினால் சுளித்தது. அனடோலின் கழுத்துப் பட்டியை அவருடைய பெரிய கையினால் பற்றி, அப்பக்கமும் இப்பக்கமு மாக, அனடோலின் முகம் போதுமான அளவு பயங்கரத்தைக் காட்டுகிற வரையில் ஆட்டிக் கொண்டிருந்தார்.

'நான் உன்னிடம் பேச வேண்டும் என்று சொல்லுகிறேன்...' என்று பீயர் திரும்பவும் சொன்னார்.

'இப்பொழுது பாரும். இது அறிவற்ற செய்கை. என்ன?' என்று அனடோல் சொன்னார். அவருடைய கழுத்துப் பட்டியிலிருந்த பொத்தான், ஒரு துண்டுத் துணியைக் கிழித்துக் கொண்டு தொங்கிக்கொண்டிருந்தது. அதை அவர் கையினால் தடவிக் கொண்டிருந்தார்.

'நீர் ஒரு அயோக்கியன், ஒரு போக்கிரி. இதைக் கொண்டு உமது மண்டையைத் தகர்க்காமல் நான் ஏன் இருக்கிறேன் என்பது எனக்குத் தெரியவில்லை' என்று பீயர் தமது அபிப்பிராயத்தை அலங்காரம் இல்லாமல் சொன்னார். ஏனெனில் அவர் பிரஞ்சு மொழியில் பேசிக்கொண்டிருந்தார்.

மேஜையிலிருந்த ஒரு கனமான காகித-பளுவை பயமுறுத்தலோடு கையில் தூக்கினார். ஆனால் உடனே அதை அதனுடைய இடத்தில் திரும்பவும் வைத்துவிட்டார்.

'நீர் அவளை திருமணம் செய்து கொள்ளுவதாக வாக்குறுதி கொடுத்தீரா?'

'நான்... நான். நான் அதைப் பற்றி நினைக்கவில்லை. நான் ஒரு பொழுதும் வாக்குறுதி கொடுக்கவில்லை. ஏனெனில்...'

பீயர் அவரை இடைமறித்தார்.

'அவளுடைய கடிதங்கள் ஏதாவது உம்மிடம் இருக்கிறதா? ஏதாவது கடிதங்கள்?' என்று அவர் சொல்லி அனடோலிடம் நெருக்கினார்.

அனடோல் அவரை நோக்கி விட்டு, உடனே தமது கையை ஜேபிக்குள் நுழைத்து, ஒரு சிறு குறிப்புப் புத்தகத்தை வெளியே எடுத்தார்.

அனடோல் கொடுத்த கடிதத்தைப் பீயர் வாங்கிக் கொண்டார். தங்கள் இருவருக்கும் மத்தியில் நின்ற மேஜையை பீயர் நகர்த்திவிட்டு அந்த சோபாவில் தாமும் அமர்ந்தார்.

'நான் பலாத்காரமாய் எதுவும் செய்ய மாட்டேன். நீர் பயப்பட வேண்டாம்' என்று, அனடோல் பதறுவதைக் கண்டு, பீயர் கூறினார். 'முதலில் கடிதங்கள்' என்று ஒரு பாடத்தைத் தமக்குள்ளேயே ஒப்புவிப்பதுபோல அவர் கூறினார். 'இரண்டாவதாக' என்று சிறிது தயக்கத்திற்குப் பின்னால் அவர் தொடர்ந்து பேசி, மீண்டும் சோபாவிலிருந்து எழுந்து, அந்த அறையில் உலாவினார். 'நாளையன்று நீர் மாஸ்கோவை விட்டு வெளியேற வேண்டும்.'

'ஆனால், நான் எப்படிப் போக முடியும்?...'

'மூன்றாவதாக' என்று பீயர், அனடோல் அவரிடம் பேசியதைக் கவனிக்காமலே தொடர்ந்தார். 'உமக்கும் கோமகள் ராஸ்டோவாவுக்கும் நடந்த விஷயங்களைப் பற்றி எப்பொழுதும் ஒரு வார்த்தைகூட நீர் மூச்சு விடக்கூடாது. அம்மாதிரிச் செய்வதை என்னால் தடுக்க முடியாது என்பது எனக்குத் தெரியும். ஆனால் உம்மிடம் ஒரு துளியாவது மனச்சாட்சி என்பது இருந்தால்...' பீயர் அந்த அறையில் மௌனமாகவே உலாவிக் கொண்டிருந்தார்.

ஒரு மேஜையின் முன்பாக அமர்ந்திருந்த அனடோல் உதடுகளைக் கடித்துக் கொண்டும், முகத்தைச் சுளித்துக் கொண்டும் இருந்தார்.

''உம்முடைய இன்பத்தைத் தவிர, மற்றவர்களின் மகிழ்ச்சியும் அமைதியும் என்பது ஒன்று இருப்பதாக நீர் உணர வேண்டும். உம்மை நீர் குஷிப்படுத்திக் கொள்வதற்காக ஒருவருடைய வாழ்க்கை முழுவதையுமே நீர் பாழ்படுத்துகிறீர். என்னுடைய மனைவியைப் போன்ற பெண்களிடம் நீர் குஷியாய் இருந்து கொள்ளும். அப்படி நடந்து கொள்ளுவது உமது உரிமைகளுக்கு

உள்பட்டு நீர் நடந்து கொள்ளுவதாகவே இருக்கும். ஏனெனில் உமக்கு அவர்களிடம் என்ன வேண்டும் என்பதை அவர்கள் அறிவார்கள். அதைத்தவிர விபசாரத்தினால் ஏற்பட்ட அதே அனுபவத்தைக் கொண்டு உம்மிடம் அவர்கள் தகுந்தவாறு நடந்து கொள்ள முடியும். ஆனால் ஒரு கன்னியிடம் அவளை திருமணம் செய்து கொள்ளுவதாகக் கூறுவதும்... ஏமாற்றுவதும், அவளைத் தூக்கிப் போக முயற்சிப்பதும்... அம்மாதிரி செய்வது ஒரு குழந்தையையோ, அல்லது வயோதிகரையோ அடிப்பதைப் போன்ற அவ்வளவு அற்பத்தனமானது என்பதை உம்மால் அறிந்து கொள்ள முடியவில்லையா?...'

பீயர் சிறிது நிறுத்தி அனடோலைப் பார்த்தார். கோபத்தோடு அவரைப் பார்க்கவில்லை; கேள்விக் குறியோடு அவரைப் பார்த்தார். 'அதைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. என்ன?' என்றார் அனடோல். பீயர் கோபமாய் இல்லை என்பதை அறிந்ததும் அவருக்கு நம்பிக்கை வளர்ந்தது. 'அதைப் பற்றி எனக்குத் தெரியாது, தெரியவும் விரும்பவில்லை' என்று தமது கீழ் நாடி சிறிது படபடக்க பீயரைப் பார்க்காமலேயே பேசினார். ஆனால், 'அற்பத்தனமானது' என்பது போன்ற வார்த்தைகளை என் மீது நீர் உபயோகித்தீர். கௌரவமுள்ள மனிதன் என்ற முறையில், அம்மாதிரி வார்த்தைகளை உபயோகிக்கும்படி நான் விடமாட்டேன்.'

அனடோல் என்ன கேட்கிறார் என்பதை அறிய முடியாமல், ஆச்சரியத்தோடு பீயர் அவரை நோக்கினார்.

'இது அந்தரங்கமான உரையாடலாய் இருந்தபோதிலும், என்னால் அதை விட்டுவிட முடியாது.'

'உமக்குப் பரிகாரம் வேண்டுமென்று விரும்புகிறீரா?' என்று கேலியாகப் பீயர் கேட்டார்.

'குறைந்தபட்சம், உமது வார்த்தைகளை நீர் வாபஸ் வாங்கிக் கொள்ளலாம். என்ன? நீர் விரும்புகிறபடி நான் செய்ய வேண்டுமானால், என்ன?' அவற்றை நான் வாபஸ் பெற்றுக் கொள்ளுகிறேன்; அவற்றை நான் வாபஸ் பெற்றுக் கொள்ளுகிறேன். அதோடு என்னை மன்னிக்கும்படியும் உம்மைக் கேட்கிறேன்' என்று பீயர் சொல்லி, அவருடைய சட்டையில் தொங்கிக்கொண்டிந்த பொத்தானைத் தற்செயலாக நோக்கினார். 'உம்முடைய பிரயாணத்திற்காக உமக்கு ஏதாவது பணம் வேண்டி யிருந்தால்...'

அனடோல் புன்னகை காட்டினார். தம்முடைய மனைவியிடம் அவர் மிக நன்றாக அறிந்திருந்த அந்தப் புன்னகை, இழிவான,

பல்லைக் காட்டும் குணத்தைக் காட்டக்கூடிய அந்தப் புன்னகை, அவருக்கு அருவருப்பைக் கொடுத்தது.

‘ஓ, இழிவான, இருதயம் இல்லாத ஜாதி!’ என்று அவர் கூவிவிட்டு, அந்த அறையை விட்டுப் போனார்.

பீட்டர்ஸ்பர்க்கிற்கு மறு நாள் அனடோல் புறப்பட்டுப் போனார்.



மாஸ்கோவைவிட்டு குராகினை அப்புறப்படுத்திவிட வேண்டும் என்று மரியா டிமிட்ரிவ்னா விரும்பினாள். அவளுடைய ஆசையை நிறைவேற்றி வைத்தாகிவிட்டது என்பதைத் தெரிவிப்பதற்காக அவளுடைய வீட்டிற்கு பீயர் சவாரி போனார். அந்த வீடு முழுவதுமே ஒரே பீதியிலும் குழப்பத்திலும் இருந்தது. நட்டாஷா மிகுந்த அசௌக்கியமாய் இருந்தாள். அனடோலுக்கு திருமணம் ஆகிவிட்டது என்பதை அறிந்து கொண்டதும், திருட்டுத்தனமாய் பாஷாணத்தை வரவழைத்து, அன்றிரவே சாப்பிட்டுவிட்டாள். இதை மரியா டிமிட்ரிவ்னா அந்தரங்கமாய் பீயருக்குச் சொன்னாள். பாஷாணத்தில் கொஞ்சம் எடுத்து அவள் விழுங்கியதும் அவள் மிகவும் பயந்து போனபடியால் சோனியாவை எழுப்பி, தான் செய்த காரியத்தை அவளிடம் சொன்னாள். பாஷாணத்தை முறிப்பதற்கு வேண்டிய மாற்று மருந்துகளையெல்லாம் அவளுக்கு உடனே கொடுத்தபடியால், அபாய நிலைமையிலிருந்து அவள் இப்பொழுது நீங்கிவிட்டாள். என்றாலும், மிகவும் பலவீனமாய் இருந்தபடியால், கிராமத்திற்கு அவளைக் கொண்டு போவது முடியாத காரியமாய் இருந்தது. ஆகவே, அங்கே வரும்படி கோமகளுக்கு சொல்லி அனுப்பினார்கள். கவலை நிறைந்திருந்த கோமகனையும், கண்ணீர் நிறைந்த முகத்தையுடைய சோனியாவையும் பீயர் கண்டார். ஆனால், நட்டாஷாவை அவரால் பார்க்க முடியவில்லை.

அன்று அவர் கிளப்பில் டின்னர் சாப்பிட்டார். ராஸ்டோவாவைக் கடத்திக்கொண்டு போக செய்யப்பட்ட முயற்சியைப்பற்றி அங்கே எல்லா பக்கங்களிலும் அரட்டை அடித்துக்கொண்டிருந்தார்கள். இந்த வதந்திகளையெல்லாம் அவர் வன்மையாக மறுத்தார். தம்முடைய மைத்துனர் நட்டாஷாவை திருமணம் செய்யக் கேட்டதாகவும், அவள் மறுத்துவிட்டதாகவும் அவர் சொன்னார். இதைத் தவிர வேறு எதுவும் நடக்கவில்லை என்று அங்கிருந்தவர்

களுக்குப் புத்தி கூறினார். இந்த விஷயம் முழுவதையும் மறைத்து, நட்டாஷாவின் கீர்த்தியை மீண்டும் நிலைநாட்ட வேண்டியது தமது கடமை என்று பீயருக்குத் தோன்றியது.

இளவரசர் ஆண்ட்ரூவின் வருகையைப் பீதியோடு அவர் நோக்கிக்கொண்டிருந்தார். அவருடைய வருகையைப் பற்றிய தேதியை அறிந்து கொள்ளுவதற்காக, ஒவ்வொரு தினமும் வயோதிக இளவரசரிடம் அவர் போய் வந்து கொண்டிருந்தார்.

நகரத்திலுள்ள வதந்திகளை எல்லாம் குமாரி பௌரியன் மூலமாக வயோதிக இளவரசர் பால்கோன்ஸ்கி அறிந்து வந்தார். தனது நிச்சயதார்த்தத்தை முறித்து விட்டதாக இளவரசி மேரிக்கு நட்டாஷா எழுதிய கடிதத்தையும் அவர் வாசித்துத் தெரிந்து கொண்டார். இப்பொழுது அவர் வழக்கத்திற்கு அதிகமாக மிகுந்த தெம்போடு இருப்பதாகக் காணப்பட்டார். தமது குமாரரின் வருகையை மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்.

அனடோல் புறப்பட்டுப் போய் சில தினங்களுக்குப் பின்னால், இளவரசர் ஆண்ட்ரூவிடமிருந்து பீயருக்குக் கடிதம் வந்தது. தமது விஜயத்தைப்பற்றி அவர் எழுதிவிட்டு, தம்மைப் பார்க்க வரும்படி அவரைக் கேட்டிருந்தார்.

அவர் மாஸ்கோவிற்கு வந்து சேர்ந்ததும், இளவரசி மேரிக்கு, தனது நிச்சயதார்த்தத்தை ரத்து செய்து நட்டாஷா எழுதிய கடிதத்தை, அவருக்கு அவருடைய தந்தை கொடுத்தார். (இளவரசி மேரியிடமிருந்து அந்தக் கடிதத்தை குமாரி பௌரியன் திருடி அதை வயோதிக இளவரசருக்குக் கொடுத்திருந்தாள்.) தமது தந்தையிட மிருந்து, வீட்டைவிட்டு ஓடிப் போக, நட்டாஷா முயற்சித்த கதையையும், அதைப்பற்றிய அவருடைய சொந்த சரக்குகளையும் கேள்விப்பட்டார்.

மாலையில் இளவரசர் ஆண்ட்ரூ வந்து சேர்ந்தார். மறுநாள் காலையில் அவரைப் பார்ப்பதற்கு பீயர் போனார். நட்டாஷா மாதிரி, அதே நிலைமையில் இளவரசர் ஆண்ட்ரூ இருப்பார் என்று பீயர் எதிர்ப்பார்த்தார். ஆகவே, வரவேற்பு அறைக்கு அவர் போனதும், பலத்த உற்சாகமான சப்தத்தில் பீட்டர்ஸ்பர்க்கில் நடக்கும் ஒரு சதியாலோசனைபற்றி அவர் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டதும், பீயர் ஆச்சரியம் அடைந்தார். வயோதிக இளவரசரின் குரலும், மற்றொரு குரலும் அவரை இடையிடையே இடை மறித்துக் கொண்டிருந்தன. பீயரைச் சந்திப்பதற்காக இளவரசி மேரி வெளியே வந்தாள். இளவரசர் ஆண்ட்ரூ இருந்த அறையை அவள் நோக்கி பெருமூச்சு விட்டாள். அவருடைய துக்கத்திற்குத் தனது

அனுதாபத்தைக் காட்ட விரும்புவதைப் போல அது தோன்றியது. ஆனால், அவளுடைய முகத்திலிருந்து அவள் சந்தோஷமாய் இருப்பதாக பீயர் அறிந்து கொண்டார். அதாவது, நடந்த விஷயங்களைப்பற்றியும், நட்டாஷாவின் துரோகச் செய்கையைத் தனது சகோதரர் எடுத்துக்கொண்ட விதத்தைப்பற்றியும், அவள் சந்தோஷம் அடைந்திருப்பதாகத் தோன்றியது.

'அதை அவர் எதிர்பார்த்து இருந்ததாக அவர் கூறுகிறார். அவருடைய உணர்ச்சிகளை வெளியிடுவதற்கு அவருடைய பெருமை இடங்கொடாது என்பது எனக்குத் தெரியும். என்றாலும் நான் எதிர்ப்பார்த்ததைவிட சிறப்பாக, மிகுந்த சிறப்பாக அவர் அதை எடுத்துக்கொண்டார். ஆகவே, அப்படித்தான் இருக்க வேண்டும்போல இருக்கிறது...' என்று இளவரசி மேரி சொன்னாள்.

'ஆனால், எல்லாம் உண்மையில் முடிந்து விட்டது என்பது சாத்தியமா?' என்று பீயர் கேட்டார்.

ஆச்சரியத்தோடு இளவரசி மேரி அவரை நோக்கினாள். அம்மாதிரி ஒரு கேள்வியை அவர் எப்படிக் கேட்க முடியும் என்பதை அவளால் அறிந்து கொள்ள முடியவில்லை. படிக்கும் அறைக்குள் பீயர் போனார். இளவரசர் ஆண்ட்ரூ மிகுந்த மாறுதலோடு காணப்பட்டார். ஆனால், மிகுந்த ஆரோக்கியமாய் இருந்தார். அவருடைய இமைகளுக்கு மேலாக நெற்றியில் ஒரு சுருக்கம் விழுந்திருந்தது. சிவிலியன் ஆடையில் தமது தந்தையையும், இளவரசர் மெஷ்செர்ஸ்கியையும் நோக்கி நின்று கொண்டு, பலமாய் கையை ஆட்டி, வேகமாய்ப் பேசிக் கொண்டிருந்தார். ஸ்பெரான்ஸ்கியைப்பற்றியே அந்த உரையாடல் நடந்து கொண்டிருந்தது. நம்பிக்கைத் துரோகம் செய்ததாக அவர் மீது குற்றம் சாட்டி, அவரை நாடு கடத்திய செய்தி அப்பொழுதுதான் மாஸ்கோவிற்கு வந்து சேர்ந்தது.

'ஒரு மாதத்திற்கு முன்னால், அவர் மீது உற்சாகம் காட்டிய எல்லாரும், இன்று அவரைக் கண்டித்து குற்றஞ்சாட்டி வருகிறார்கள். அவருடைய நோக்கங்களைப் புரிந்து கொள்ள முடியாதவர்களும், அவர் மீது குற்றஞ் சாட்டுகிறார்கள். அபிமானத்தை இழந்து நிற்கும் சமயத்தில் ஒருவரின் குணதோஷங்களை மதிப்பிடுவதும், மற்றவர்கள் செய்த தவறுகளையெல்லாம் அவர் மீது சுமத்துவதும் ரொம்ப சுலபம். ஆனால், இந்த சக்கரவர்த்தியின் ஆட்சியில் ஏதாவது நன்மை விளைந்திருக்குமானால், அந்த நன்மையைச் செய்தவர் அவரே ஆவார். அவர் ஒருவரே ஆவார்' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொல்லிக் கொண்டிருந்தார்.

பீயரைப் பார்த்ததும் அவர் பேசுவதை நிறுத்தினார். அவருடைய முகம் துடித்தது. உடனே ஒரு பழிவாங்கும் தோற்றத்தோடு தமது பேச்சைத் தொடர்ந்தார்.

'வருங்கால சந்ததியார்கள் அவருக்கு நியாயம் வழங்குவார்கள்' என்று தமது பேச்சை முடித்துவிட்டு, உடனே பீயரை நோக்கினார்.

'நல்லது, நீர் எப்படி இருக்கிறீர்? இன்னமும் பருமனாய்க் கொண்டு போகிறீரா?' என்று உற்சாகத்தோடு கூறினார். அவருடைய நெற்றியிலுள்ள புதிய வரை அதிகமாய் ஆழ்ந்து காணப்பட்டது. 'ஆம், நான் சௌக்கியமாய் இருக்கிறேன்' என்று பீயர் கேட்ட கேள்விகளுக்குப் பதில் அளித்துப் புன்னகை காட்டினார். அந்தப் புன்னகையானது, 'நான் சௌக்கியமாய் இருக்கிறேன். ஆனால், என்னுடைய ஆரோக்கியத்தால் யாருக்கும் இப்பொழுது ஒரு உபயோகமும் இல்லை' என்று கூறுவதைப் போலப் பீயருக்குத் தோன்றியது.

போலந்து எல்லையிலிருந்து வருகிற ரஸ்தாக்களின், மகா மோசமான நிலைமையைப்பற்றியும், பீயருக்கு அறிமுகமானவர்களை ஸ்விட்சர்லாந்தில் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்ததைப் பற்றியும், தனது குமாரனுக்கு படிப்பு சொல்லிக் கொடுக்க வெளி நாட்டிலிருந்து தாம் அழைத்து வந்திருக்கும் திருவாளர் டெசாலெஸ் என்பவரைப்பற்றியும் பீயரிடம் சில வார்த்தைகள் பேசிக் கொண்டிருந்தார். அதன் பின்னால் மீண்டும் இரண்டு வயோதிகர்களும் ஸ்பெரான்ஸ்கியைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்த உரையாடலில் உணர்ச்சியோடு கலந்து கொண்டார்.

'ராஜாங்கத் துரோகம் செய்திருந்தால், அல்லது நெப்போலியனோடு அந்தரங்கமான தொடர்புகள் இருப்பதாக ஆதாரங்கள் இருந்தால், அவற்றை அவர்கள் பிரசுரித்திருப்பார்கள்' என்று உஷ்ணத்தோடும், அவசரத்தோடும் அவர் பேசினார். 'எனக்கு ஸ்பெரான்ஸ்கியை சொந்த முறையில் பிடிப்பதில்லை. முன்பும், எப்பொழுதும் பிடித்திருந்ததும் இல்லை. ஆனால், நான் நியாயத்தை விரும்புகிறேன்.'

பீயர் தமது நண்பரிடம் தாம் முன்பே அறிந்திருந்த ஒரு குணத்தை இப்பொழுது கண்டார். அதாவது, தமக்கு மிகவும் அன்னியோன்னியமான, தம்மை மிகவும் அழுத்தி வந்த நினைப்புகளை அமுக்குவதற்கான அவசியத்தை அவர் கண்டார். அப்படி அமுக்குவதற்காக வெளி விஷயங்களை எடுத்துக்கொண்டு, அவற்றை மிகவும் பரபரப்போடு விவாதித்து வந்தார்.

இளவரசர் மெஷ்செர்ஸ்கி அங்கிருந்து போன பின்பு, இளவரசர் ஆண்ட்ரூ, பீயரின் கையைப்பற்றி தமக்காக ஒதுக்கிவைக்கப் பட்டிருந்த அறைக்குப் போகலாம் என்று அழைத்தார். அந்த அறையில் ஒரு படுக்கை போடப்பட்டிருந்தது. சில பிரயாணப் பெட்டிகள் திறந்து 'கிடந்தன். அவற்றில் ஒன்றின் பக்கமாக அவர் போய், ஒரு சிறிய செப்புப் பெட்டியை எடுத்தார். அதிலிருந்து காகிதத்தால் சுற்றப்பட்டிருந்த ஒரு கட்டை எடுத்தார். இவற்றையெல்லாம் வெகு வேகமாகவும், அமைதியாகவும் செய்தார். அவர் நிமிர்ந்து நின்று இருமினார். அவருடைய முகம் இருண்டிருந்தது. அவருடைய உதடுகள் அழுத்தி மூடியிருந்தன.

'உமக்குத் தொந்தரவு கொடுப்பதற்காக என்னை மன்னிப் பீராக...'

நட்டாஷாவைப்பற்றி இளவரசர் ஆண்ட்ரூ பேசப் போகிறார் என்பதை பீயர் கண்டதும் அவருடைய அகன்ற முகம் இரக்கத்தையும், அனுதாபத்தையும் காட்டியது. இந்தத் தோற்றம் இளவரசர் ஆண்ட்ரூவுக்கு எரிச்சலைக் கொடுத்தது. அவர் ஒரு உறுதியான, கணீரென்ற, கனிவில்லாத குரலில் பேச ஆரம்பித்தார்.

'கோமகள் ராஸ்டோவாவிடமிருந்து ஒரு மறுப்புக் கடிதம் எனக்கு வந்திருக்கிறது. உமது மைத்துனர் அவளை திருமணம் செய்யக் கேட்டதாக, அல்லது அவ்வகையான ஏதோ ஒன்றைப்பற்றி நான் கேள்விப்படுகிறேன். அது உண்மைதானா?'

'அது உண்மை, பொய் இரண்டும் கலந்தது' என்று பீயர் ஆரம்பித்தார். ஆனால், இளவரசர் ஆண்ட்ரூ அவரை இடைமறித்தார்.

'அவளுடைய கடிதங்களும், படமும் இதோ இருக்கின்றன' என்று அவர் சொன்னார்.

அவர் அந்தக் கட்டை மேஜையிலிருந்து எடுத்து பீயரிடம் கொடுத்தார்.

'இதைக் கோமகளிடம் கொடுத்துவிடும்... நீர் அவளைப் பார்க்கும் போது.'

'அவள் மிகவும் அசௌக்கியமாய் இருக்கிறாள்' என்றார் பீயர்.

'அப்படியானால், அவள் இன்னமும் இங்கேதான் இருக்கிறாளா?' என்று இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார். 'ஆனால், அந்த இளவரசர் குராகின்?' என்று அவசரமாய்த் தொடர்ந்து கேட்டார்.

'அவர் இதைவிட்டு வெகு காலத்திற்கு முன்பே போய்விட்டார். அவள் மரணத்தின் வாயிலில் இருக்கிறாள்.'

‘அவளுடைய அசௌக்கியத்திற்காக, நான் மிகவும் வருந்துகிறேன்’ என்று இளவரசர் ஆண்ட்ரூ கூறினார். தமது தந்தையைப் போல, கனிவற்ற, துவேஷமான, இனிமையற்ற ஒரு புன்சிரிப்பைக் காட்டினார்.

‘அப்படியானால் திருவாளர் குராகின், கோமகள் ராஸ்டோவாவை திருமணம் செய்து கௌரவப்படுத்தவில்லையா?’ என்று இளவரசர் ஆண்ட்ரூ சொல்லி, பல தடவைகள் உறுமினார்.

‘அவர் திருமணம் செய்ய முடியாது. ஏனெனில், அவர் திருமணம் ஆனவர்’ என்று பீயர் சொன்னார்.

இளவரசர் ஆண்ட்ரூ பிரியமற்ற விதமாய் சிரித்தார். அந்தச் சிரிப்பு அவருடைய தந்தையை மீண்டும் ஞாபகமூட்டியது.

‘உம்முடைய மைத்துனர் இப்பொழுது எங்கே இருக்கிறார் என்று நான் கேட்கலாமா?’ என்று அவர் கேட்டார்.

‘அவர் பீட்டர்ஸ்... ஆனால், எனக்குத் தெரியாது’ என்று பீயர் சொன்னார்.

‘நல்லது, அதைப்பற்றிக் கவலையில்லை’ என்று இளவரசர் ஆண்ட்ரூ கூறினார். ‘அவள் முன்பும் சரி, இப்பொழுதும் சரி, பூரண சுதந்திரமுள்ளவள் என்றும், எல்லா நன்மைகளும் அவளுக்கு ஏற்பட வேண்டும் என்று நான் விரும்பினேன் என்றும், கோமகள் ராஸ்டோவாவிடம் நீர் சொல்லும்.’

பீயர் அந்தக் கட்டை எடுத்துக் கொண்டார். அவரை இளவரசர் ஆண்ட்ரூ நோக்கி, இன்னும் ஏதாவது அவரிடம் சொல்ல வேண்டுமா என்று சிந்திப்பவரைப் போலவும், அவர் ஏதாவது தம்மிடம் சொல்ல வேண்டியிருக்கிறதா என்பதை அறிந்து கொள்பவரைப் போலவும் அவரை உற்றுப் பார்த்தார்.

‘பீட்டர்ஸ்பர்க்கில் நாம் பேசிக்கொண்டிருந்தபோது, உமக்கு ஞாபகம் இருக்கிறதா, இதைப்பற்றி...’

‘ஆம்’ என்று இளவரசர் ஆண்ட்ரூ அவசரமாய் பதில் கூறினார். ‘ஒரு தவறிப்போன பெண்ணை மன்னிக்கவேண்டும் என்று நான் கூறினேன். ஆனால், நான் மன்னிப்பேன் என்று சொல்லவில்லை. என்னால் முடியாது.’

‘ஆனால், இதை ஒப்பிட முடியுமா?...’ என்றார் பீயர்.

இளவரசர் ஆண்ட்ரூ அவரை இடைமறித்துப் பலமாய் கூச்சலிட்டார்:

‘ஆம், அவளை மறுபடியும் திருமணம் செய்யவேண்டும் என்று கேட்கவேண்டும், பெருந்தன்மையாய் இருக்கவேண்டும்,

இப்படிப்பட்ட விஷயங்கள்தானே?... ஆம், அது மிகுந்த உதார குணமாய் இருக்கும். ஆனால், அம்மாதரி கனவான்களின் அடிச்சுவட்டில் என்னால் நடக்க முடியாது. நீர் என்னுடைய நண்பராய் இருக்க விரும்பினால், அதைப்பற்றி, அவை எல்லாவற்றையும்பற்றி என்னிடம் ஒருபொழுதும் பேச வேண்டாம். நல்லது, போய் வாரும். அப்படியானால், நீர் அந்தக் கட்டை அவளிடம் கொடுத்து விடுவீர் அல்லவா?'

பீயர் அந்த அறையைவிட்டு வெளியேறி வயோதிக இளவரசரிடமும், இளவரசி மேரியிடமும் சென்றார்.

அந்த வயோதிக மனிதர் வழக்கத்தைவிட அதிகமாக உற்சாகமாய் இருந்தார். இளவரசி மேரி எப்பொழுதும் போலவே இருந்தாள். தனது சகோதரரிடம் அவள் காட்டும் அனுதாபத்திற்கு அடியில், இந்த நிச்சயதார்த்தம் முறிந்து போனதைக் கண்டு, அவளுக்கு ஏற்பட்டுள்ள திருப்தியை பீயர் கவனித்தார். ராஸ்டோவ்கள் மீது அவர்களுக்குள்ள இகழ்ச்சியையும், விரோதத்தையும், அவர்களைப் பார்த்து பீயர் உணர்ந்து கொண்டார். ஆகவே, மற்றொருவருக்காக இளவரசர் ஆண்ட்ரூவைக் கைவிட்டவளைப் பற்றி, அவர்களுக்கு முன்பாக பிரஸ்தாபிப்பதுகூட அசாத்தியம் என்பதை அறிந்து கொண்டார்.

டின்னரின்போது யுத்தத்தைப்பற்றி பேச்சு திரும்பியது. அந்த யுத்தம் வரப்போகிறது என்பது வரவரத் தெளிவாகிக்கொண்டு வந்தது. இளவரசர் ஆண்ட்ரூ இயற்கைக்கு விரோதமான உற்சாகத்துடன், தமது தந்தையுடனும் அந்த சுவிஸ் வாத்தியார் டெசர்லெஸ்ஸுடனும் விடாமல் பேசிக் கொண்டிருந்தார். அதன் காரணத்தை பீயர் நன்கு அறிவார்.




தம்மிடம் ஒப்புவிக்கப்பட்ட வேலையை நிறைவேற்றுவதற்காக, அன்று மாலை ராஸ்டோவ்களின் வீட்டிற்கு பீயர் போனார். நட்டாஷா படுத்திருந்தாள். கோமகன் கிளப்பிற்குச் சென்றிருந்தார். நிச்சயார்த்த ரத்துச் செய்தியைப் பற்றி இளவரசர் ஆண்ட்ரூ எம்மாதிரி நினைக்கிறார் என்பதை அறிந்து கொள்ளுவதில் அவர் சிரத்தையாய் இருந்தார். பத்து நிமிஷங்களுக்குப் பின்னால், மரியா டிமிட்ரிவ்னாவிடம் சோனியா வந்தாள்.

'கோமகன் பீட்டர் கிரைலாவிச்சைப் பார்க்க வேண்டுமென்று நட்டாஷா வற்புறுத்துகிறாள்' என்று அவள் சொன்னாள். (கிரைலாவிச் என்பது மரியாதையாகச் சொல்லும் பெயர்.)

'ஆனால், எப்படி? அவரை அவளிடம் அழைத்துப் போவதா? அவளுடைய அறையை சுத்தம் செய்யவில்லையே.'

'இல்லை, அவள் ஆடைகள் அணிந்து கொண்டு, வரவேற்பு அறைக்குப் போய்விட்டாள்' என்றாள் சோனியா.

மரியா டிமிட்ரிவ்னா தனது தோள்களைக் குலுக்கினாள்.

'அவளுடைய தாயார் எப்பொழுது வரப்போகிறாள்? எனக்கு பிராணன் போகிற மாதிரி அவள் தொந்தரவு கொடுத்து விட்டாள். இப்பொழுது கவனியும். அவளிடம் எல்லாவற்றையும் சொல்ல வேண்டாம்' என்று பீயரைப் பார்த்துச் சொன்னாள். 'அவளைக் கடிந்து கொள்ளுவதற்கு ஒருவருக்கும் மனம் வருவதில்லை. அவ்வளவு தூரம் அவளுக்காக இரங்க வேண்டும், அவ்வளவு தூரம் அவளுக்காக இரங்க வேண்டும்.'

வரவேற்பு அறையின் மத்தியில் உடல் மெலிந்து, முகம் வெளிறி, ஆனால் பீயர் எதிர்பார்த்தபடி கொஞ்சங்கூட வெட்கத்தோற்றம் இல்லாமல் நட்டாஷா நின்று கொண்டிருந்தாள். வாசலில் அவரைக் கண்டதும், அவள் பதைபதைப்புற்றாள். அவரை வரவேற்பதற்கு அவரிடம் போவதா, அல்லது தன்னிடம் அவர் வருகிறவரையில் காத்திருப்பதா என்பதில் முடிவு செய்யாதவள்போலத் தோன்றினாள்.

அவளிடம் அவசரமாக பீயர் போனார். வழக்கம்போல அவள் தனது கையைத் தமக்கு நீட்டுவாளென்று அவர் நினைத்தார். ஆனால் அவள் அவரிடம் நெருங்கி வந்து நின்றாள். பலமாக மூச்சு வாங்கிக் கொண்டு இருந்தாள். நடன அறையின் மத்தியில் பாடுவதற்காக எம்மாதிரி அவள் நிற்பாளோ, அதே மாதிரி நின்று தனது கைகளை உயிரற்றவைபோலத் தொங்க விட்டுக்கொண்டிருந்தாள். ஆனால் முகத்தில் காணப்பட்ட தோற்றம் மட்டும் வேறு விதமாய் இருந்தது.

'பீட்டர் கிரைலாவிச்' என்று வேகமாக ஆரம்பித்தாள். 'இளவரசர் பால்கோன்ஸ்கி உமது நண்பராய் இருந்தார்.' தன்னைத் திருத்திக் கொண்டு, 'உமது நண்பராய் இருக்கிறார்' என்றாள். (ஒரு காலத்தில் இருந்த ஒவ்வொன்றும் இப்பொழுது வேறு விதமாய் இருக்க வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது.) 'ஒரு தடவை அவர் என்னிடம் பேசியபோது, உம்மிடம்...'

பீயர் அவளைப் பார்த்தபோது மூச்சு வாங்கினார். ஆனால் பேச வில்லை. அதுவரையில் அவர் அவளைத் தமது இருதயத்தில்

கண்டித்து வந்தார். அவளை இகழ்வதற்கு முயற்சி செய்தார். ஆனால், இப்பொழுது அவளுக்காக அவர் வருந்தினார். அவளைக் கண்டிப்பதற்கு அவருடைய உள்ளத்தில் இடமே இல்லை.

'அவர் இப்பொழுது இங்கே இருக்கிறார். என்னை... மன்... மன்னிக்கும்படி அவரிடம் நீர் சொல்ல வேண்டும்.'

அவள் நிறுத்தினாள். இன்னும் அதிகமாக மூச்சு விட ஆரம்பித்தாள். ஆனால் அவள் கண்ணீர் விடவில்லை.

'ஆம்... நான் அவரிடம் சொல்லுகிறேன். ஆனால்...' என்றார் பீயர்.

அவருக்கு என்ன சொல்லுவது என்பது தெரியவில்லை.

தான் சொல்லியதைப் பற்றி அவர் எம்மாதிரி அர்த்தம் செய்யக்கூடும் என்பதை நினைத்தபோது அவள் பீதியுற்றாள்.

'இல்லை, அதெல்லாம் முடிந்து விட்டது என்பதை நான் அறிவேன்' என்று அவள் அவசரமாய்ச் சொன்னாள். 'இல்லை, அது இனிமேல் இருக்க முடியாது. அவருக்கு நான் செய்த தீங்கினால் நான் வருந்திக் கொண்டிருக்கிறேன். அவருக்கு இதை மட்டும் சொல்லும். நான் செய்த ஒவ்வொன்றிற்கும் என்னை அவர் மன்னிக்கும்படி மன்னிக்கும்படி, மன்னிக்கும்படி நான் கெஞ்சுவதாக அவரிடம் சொல்லும்.'

அவள் உடம்பெல்லாம் நடுங்கி, ஒரு நாற்காலியில் அமர்ந்தாள்.

அதற்கு முன்னால் அவர் அறியாத விதத்தில், பீயரின் உள்ளத்தில் ஒரு இரக்கச் சிந்தனை பொங்கி வழிந்தது.

'நான் அவரிடம் சொல்லுகிறேன். நான் இன்னும் ஒரு தடவை அவரிடம் எல்லாவற்றையும் சொல்லுகிறேன். ஆனால்... நான் ஒரு விஷயத்தை அறிய விரும்புகிறேன்...'

'எதைப் பற்றித் தெரிய வேண்டும்?' என்று நட்டாஷாவின் கண்கள் கேட்டன.

'நான் ஒரு விஷயத்தையே அறிய விரும்புகிறேன். அதாவது, நீ அவரைக் காதலித்தது உண்டா?...' அனடோல் என்ற பெயரை எப்படிக் குறிப்பிடுவது என்பது பீயருக்குத் தெரியவில்லை. அந்தப் பெயரை நினைத்தவுடன், அவருடைய முகம் சிவந்தது - அந்தக் கெட்ட மனிதனை நீ காதலித்தது உண்டா?'

'அவரைக் கெட்டவர் என்று நீர் சொல்ல வேண்டாம். ஆனால், எனக்குத் தெரியாது; எனக்குத் தெரியவே தெரியாது...' என்றாள் நட்டாஷா.

அவள் அழ ஆரம்பித்தாள். பீயருக்கு இன்னும் அதிகமான இரக்கச் சிந்தனையும் கனிவும் அன்பும் அவர் உள்ளத்தில் பொங்க ஆரம்பித்தது. அவருடைய மூக்குக் கண்ணாடிக்குள் அவருடைய கண்ணீர் தேங்க ஆரம்பித்தது. அதை ஒருவரும் கவனிக்க மாட்டார்கள் என்று அவர் நம்பினார்.

'அதைப் பற்றி இனி எப்பொழுதுமே நாம் பேச வேண்டாம், எனது அன்பே' என்றார் பீயர். அவருடைய மிருதுவான, நட்பான தொனி, திடீரென்று வெகு விசித்திரமாக நட்டாஷாவுக்குத் தோன்றியது.

'அதைப் பற்றி நாம் பேச வேண்டாம், எனது அன்பே-நான் அவரிடம் எல்லாவற்றையும் சொல்லுகிறேன். ஆனால் ஒரு விஷயத்தில் நான் உன்னை கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன். அதாவது என்னை உனது நண்பராக நீ கருத வேண்டும். உனக்கு ஏதாவது உதவியோ, அல்லது புத்திமதியோ, அல்லது உன் நெஞ்சை யாரிடமாவது திறந்து காட்ட வேண்டும் என்கிற அவசியமோ வேண்டியிருந்தால்-இப்பொழுது அல்ல, உன் மனம் தெளிவான பின்பு-என்னைப் பற்றி நினைத்துக்கொள்.' அவர் அவளுடைய கையை எடுத்து முத்தமிட்டார். 'நான் சந்தோஷமாய் இருப்பேன், என்னுடைய சக்திக்கு உட்பட்டதாய் இருந்தால்...'

பீயர் குழப்பம் அடைந்தார்.

'என்னிடம் அம்மாதிரி பேச வேண்டாம். நான் அதற்குத் தகுதியுள்ளவள் அல்ல' என்று நட்டாஷா கூவிவிட்டு, அந்த அறையை விட்டுப் போவதற்காகத் திரும்பினாள். ஆனால் பீயர் அவளுடைய கையைப் பற்றினார்.

அவளிடம் இன்னும் அதிகமாக சொல்ல வேண்டும் என்பதை அவர் அறிவார். ஆனால் அதைச் சொல்லியதும் அவருடைய வார்த்தைகளைக் கண்டு அவரே வியப்பு கொண்டார்.

''நில், நில். உன்னுடைய முழு வாழ்க்கையும், உன் முன்னால் நிற்கிறது' என்ற அவர் அவளிடம் சொன்னார்.

'முன்னால் நிற்கிறதா? இல்லை, எனக்கு எல்லாம் முடிந்து விட்டது' என்று வெட்கத்தோடும் அவமானத்தோடும் கூறினாள்.

'எல்லாம் முடிந்து விட்டதா?' என்று அவர் திரும்பச் சொன்னார். 'நான் நானாய் இல்லாமல் ஒரு அழகான, புத்திசாலியான, உலகத்திலேயே சிறந்த மனிதனாக இருப்பேனானால், சுதந்திரமாகவும் இருப்பேனானால், இந்த வினாடியே நான் முழங்கால் படியிட்டு, உனது காதலையும் கையையும் கேட்பேன்.'

பல நாட்களுக்கு அப்புறம் முதன் முதலாக நட்டாஷா நன்றியும் கனிவும் கொண்ட கண்ணீரை விட்டு அழுதாள். பீயரை நோக்கி விட்டு அறையிலிருந்து வெளியே போனாள்.

அவள் போனதும் பீயரும் வெளி அறைக்கு ஓடினார். கனிவினாலும் மகிழ்ச்சியினாலும் கண்ணீர் தோன்றி அவர் தொண்டையை அடைக்க, அவற்றை அடக்குவதற்காக முயற்சி செய்தார். தமது ரோமத்தாலான மேல் சட்டையின் கையைக் கண்டு பிடிக்க முடியாமல், அதை அப்படியே போட்டுக் கொண்டு, தமது பனி வண்டியில் ஏறினார்.

‘இப்பொழுது எங்கே போக வேண்டும், மேன்மை தங்கியவரே?’ என்று சாரதி கேட்டான்.

‘எங்கே போக வேண்டும்?’ என்று பீயர் தம்மையே கேட்டுக் கொண்டார். ‘இப்பொழுது நான் எங்கே போகலாம்? நிச்சயமாக கிளப்பிற்கு அல்ல, அல்லது நண்பர்களைப் பார்ப்பதற்கும் அல்ல.’ தாம் அப்பொழுது அனுபவித்த காதலோடும் கனிவோடும் மற்ற மனிதர்களை அவர் ஒப்பிட்டுப் பார்த்தபோது, அவளுடைய கண்ணீருக்கிடையில் அவள் அவருக்குக் கொடுத்த, கடைசியான, அந்த மிருதுவான, நன்றியுள்ள பார்வையோடு ஒப்பிட்டுப் பார்த்தபோது அவர்கள் எல்லாரும் மிகுந்த பச்சாதாபப் படக்கூடியவர்களாகவும், மிகுந்த உபயோகமற்றவர்களாகவும் அவருக்குத் தோன்றினார்கள்.

‘வீட்டிற்குப் போ’ என்று பீயர் சொன்னார். சீதோஷ்ணம் அச்சமயம் பூஜ்யத்திற்கு மேல் பத்து டிக்ரிதான் இருந்தது. என்றாலும் தமது கரடித் தோல் வெளிச் சட்டையை, தமது அகன்ற மார்பிலிருந்து விலக்கி, மகிழ்ச்சியோடு காற்றை உள்ளே இழுத்தார்.

கால நிலை தெளிவாகவும், உறை பனி கொண்டதாவும் இருந்தது. மங்கலான வெளிச்சமுள்ள அந்த அசுத்தமான தெருக்களுக்கு மேலாக, அந்தக் கருப்புக் கூறைகளுக்கு மேலாக, நட்சத்திரம் நிரம்பிய வானமானது கருத்துப் படர்ந்திருந்தது. தம்முடைய ஆத்மா எவ்வளவு தூரம் உயர்ந்திருக்கிறது என்பதை நினைத்து ஒப்பிட்டுப் பார்த்து, இந்த பூலோக விஷயங்கள் எல்லாம், எவ்வளவு தாழ்ந்த இழிவான காரியங்கள் என்று அவர் சிந்தித்துக்கொண்டு வந்தார். இந்த சிந்தனையை மேலே உள்ள வானத்தைப் பார்த்ததும் அவர் நிறுத்தி விட்டார். ஆர்பட் சதுக்கத்தில் அவர் நுழைந்ததும், ஒரு பிரம்மாண்டமான, நட்சத்திரங்கள் நிறைந்த இருண்ட வானம் அவருடைய கண்களுக்குத் தோன்றியது. பிரேசைஸ்டெங்கா சாலைக்கு மேலாக, அந்த வானத்தின் மத்தியில், சுற்றிலும்

நட்சத்திரங்கள் ஜொலித்துக் கொண்டிருந்தன; ஆனால் அது மட்டும் பூமிக்கு சமீபமாக இருந்ததால் தனித்து விளங்கியது. தனது வெண்மையான ஒளியுடனும், நீளமான நிமிர்ந்த வாலுடனும், ஜெகஜ்ஜோதியாக, *1812*-ம் வருஷத்திய வால் நட்சத்திரம் துலங்கிக் கொண்டிருந்தது. எல்லா விதமான துன்பங்களும் ஏற்படும் என்றும், உலகத்திற்கு முடிவு காலம் வந்து விட்டது என்றும், அந்த வால் நட்சத்திரத்தைப் பற்றி சொல்லப்பட்டது. பிரகாசமான, நீளமான வாலைக் கொண்ட அந்த வால் நட்சத்திரத்தைக் கண்டு, பீயருக்கு என்னவோ, எவ்விதமான பயமும் ஏற்படவில்லை. அதற்கு மறுப்பாக அவர் அதை மகிழ்ச்சியோடு நோக்கினார். அவருடைய கண்களில் கண்ணீர் நிறைந்தது. அந்தப் பிரகாசமான வால் நட்சத்திரம், மனதில் நினைக்க முடியாத வேகத்தோடு, அளக்க முடியாத வெளியில் பிரயாணம் செய்து, திடீரென்று-பூமியை ஒரு அம்பு துளைக்கிற மாதிரி-ஒரு குறிப்பிட்ட இடத்தில் அப்படியே நின்று கொண்டிருந்தது. அதனுடைய வால் நிமிர்ந்து நன்றது. தன்னுடைய வெண்மையான ஒளி, எண்ணற்ற நட்சத்திரங்களுக்கு இடையில் பரவும்படி பிரகாசித்துக் கொண்டிருந்தது. தம்முடைய மிருதுத்துவம் அடைந்து மேலே உயர்ந்த ஆத்மாவில் என்ன நடந்து கொண்டிருக்கிறதோ, அதையே இந்த வால் நட்சத்திரம் பிரதிபலிக்கிறது என்றும், இப்பொழுது தமது ஆத்மா ஒரு புது வாழ்வுக்காக மலர்ந்து வருகிறது என்றும் பீயருக்குத் தோன்றியது.



# விளக்க உரைகள்



'பிரபலமான கோமகன் ராஸ்டாப்சைன்.' கோமகன் ராஸ்டாப் சைன் (1763-1828) என்பவர் சக்கரவர்த்தி பாலுக்கு மிகுந்த பிரியமுள்ளவராய் இருந்தார். 1812-ஆம் வருஷத்தில் அவர் மாஸ்கோவில் கவர்னர் ஜெனரலாகவும், சேனாதிபதியாகவும் இருந்தார். அவர் ஒரு பெரிய பிற்போக்காளர். பல புத்தகங்களை அவர் எழுதியிருக்கிறார். பெரிய கிறுக்குத்தன முள்ளவர் என்று சொல்லலாம். கொஞ்சம்கூட நம்பிக்கை கொள்ள முடியாத மனிதர்.

'கோமகன் ஓல்டன்பர்க்கின் பிரதேசங்களை நெப்போலியன் கைப்பற்றியது.' ஓல்டன்பர்க்கின் பிரதேசம், தம்முடைய வழியில் இடையூறாய் நிற்பதாக, நெப்போலியன் 1810-ஆம் வருஷத்தில் நினைத்தார். ஆகவே, முரட்டுத்தனமாக அதனிடம் நடந்து கொண்டார். ஓல்டன்பர்க் பிரதேசத்தை பிரான்ஸோடு சேர்த்துக் கொண்டதாக, அவர் முதலில் தூதர்களிடம் சொல்லியனுப்பினார். அதைக் கைப்பற்றி, அதன் நிதிகளையும் எடுத்துக்கொண்டார். முதலாவது அலெக்ஜாண்டரின் மாமாதான், அந்தக் கோமகன். அவர் எர்பெர்ட்டில் தங்குவதற்கு அனுமதி கொடுத்தார்.

இம்மாதிரி பறிமுதல் செய்ததை அலெக்ஜாண்டர் ஆட்சேபித்தார். எர்பெர்ட் காங்கிரஸில், அதற்கு முந்தைய வருஷத்தில் நெப்போலியன் அவருடைய சகோதரியான எலிஸபெத்தை திருமணம் செய்ய விரும்புவதாகச் சொல்லப் பட்டது. என்றாலும், அச்சமயத்தில் ஒன்றும் அதைப்பற்றி நிச்சயமாக முடிவு செய்யப்படவில்லை. சில காலம் சென்ற பின்பு, அந்த எலிஸபெத்தை ஓல்டன்பர்க் இளவரசர்களில் ஒருவருக்கு திருமணம் செய்து கொடுத்தார்கள். அடுத்த வருஷத்தில், அலெக்ஜாண்டரின் இளைய சகோதரியை நெப்போலியன் திருமணம் செய்ய வேண்டுமென்று ஒரு யோசனை கூறப்பட்டது. அவள் பெயர் அன்னி. அந்த யோசனைக்கு பீட்டர்ஸ்பர்க்கில் ஆதரவு இருந்தது. ஆனால், அலெக்ஜாண்டர் இதில் தாமதம் செய்து வந்தார். போலந்தைப்பற்றி நெப்போலியன் ஒப்புக்கொண்ட ஏற்பாடுகளில் கையெழுத்திடாமல் தாமதித்து வந்தபடியால், நெப்போலியன் போலந்தை சுதந்திர நாடாகவோ, அல்லது அதை வார்சா மாகாணமாகவோ ஆக்கிவிடக்கூடும் என்று அலெக்ஜாண்டர் நினைத்தார். அதனால் அவர் தாமதம் செய்து வந்தார். ஆனால்,

அலெக்ஜாண்டரின் தாமதத்தைக்கண்டு நெப்போலியன் எரிச்சல் கொண்டார். அவருடைய பெருமைக்குப் பங்கம் வந்ததாக அவர் நினைத்தார். இச்சமயத்தில் ஆஸ்திரிய சக்கரவர்த்தி நெப்போலியனோடு சம்பந்தம் வைத்துக்கொள்ள விரும்புவதாகக் காட்டினார். அவர் ஷார்ன்பிரென் என்ற இடத்தில் நடந்த சமாதானப் பேச்சில் கூட மரியாதையாக நடத்தப்படவில்லை. இப்போது அவர் தமது குமாரி மேரி லூயி என்பவளை திருமணம் செய்து கொடுக்க விருப்பமாய் இருப்பதாகத் தெரிவித்தார். நெப்போலியன் ஏகாதிபத்திய குடும்பங்களோடு தம்மையும் இணைத்துக்கொள்ள விரும்பி, இந்தச் சந்தர்ப்பத்தைக் கைப்பற்றி ருஷ்யாவுடன் உள்ள நட்பை முறித்துவிடத் தயாரானார். இந்தக் காரியங்கள்தான் ஓல்டன்பர்க் கோமகனை கொடுமையாக நடத்துவதற்குக் காரணமாய் இருந்தன. இதைத் தவிர, டில்சிட்டில் நடந்த ஒப்பந்தமும் தவிடுபொடியாகிக் கொண்டு வந்தது. நெப்போலியன் இங்கிலாந்தின் வர்த்தகத்திற்கு விரோதமாக ஏற்படுத்திய ஒப்பந்தமானது, ருஷ்யாவின் வர்த்தகத்திற்கு கெடுதலாய் இருந்தபடியால், நெப்போலியன் விரும்பியபடி அந்த ஒப்பந்தத்தை ருஷ்யா கைக்கொள்ளவில்லை. 1810-ஆம் வருஷத்திலிருந்து பிரான்ஸும், ருஷ்யாவும் உண்மையில் போருக்காகத் தயார் செய்துகொண்டிருந்தன. ஸ்பெயின் தேசத்தில் பிரஞ்சு ராணுவம் தோல்வியுற்று வந்ததாலும், ருஷ்ய ராணுவத் தயாரிப்புகள் பிற்போக்கானவையாக இருந்தபடியாலும், 1811-ஆம் வருஷத்தில் எதுவும் நடக்கவில்லை.

**8-5** 'பாவம் லிஜா'; காராம்ஜைன் என்பவர் எழுதிய பிரபலமான ஒரு கதை. சில வருஷங்களுக்கு முன்பாக அது பிரசுரிக்கப்பட்டது. ஒரு பிரபுவை ஒரு விவசாயப் பெண் காதலித்து, பின்னால் அவரால் கைவிடப்பட்டு, அவள் ஒரு குளத்தில் மூழ்கி மாண்டாள். அவளுடைய துன்பங்களை இந்தப் புத்தகம் வருணிக்கிறது.

**8-8** 'மரங்களின் படங்கள்': இந்த நாவலை டால்ஸ்டாய் எழுதிக் கொண்டிருந்தபோது, தமது மனைவிக்கு மாஸ்கோவில் அவர் போய்ப்பார்த்த ஒரு நாடகத்தைப் பற்றிப் பின்வருமாறு எழுதினார்: 'இரண்டாவது ஆட்டம் முடிகிற சமயத்தில், நான் அங்கே போய்ச் சேர்ந்தேன். கிராமாந்தரத்திலிருந்து அப்போதுதான்

வந்தபடியால், அவையெல்லாம் எனக்கு காட்டுமிராண்டித் தனமாகவும், இயற்கைக்கு விரோதமாகவும், பொய்யாகவும் தோன்றின. ஆனால், அவற்றில் ஒருவர் பழக்கமான பின்பு, அவையெல்லாம் அவருக்கு இனிமையாகவே தோன்றும்.'

8

21

'ஸ்பெரான்ஸ்கி: இவரைத் திடீரென்று ராஜாங்கத் துரோகத்திற்காக நாடு கடத்திய செய்தி, அப்போது தான் மாஸ்கோவுக்கு வந்து சேர்ந்தது.' ஸ்பெரான்ஸ்கியை ஆதிக்கத்திலிருந்து தள்ளி, நைஜ்னி-நோவ்காராட் என்ற இடத்திற்கு, 1812-ஆம் வருஷம் மார்ச் மாதம் 17-ந் தேதியன்று அனுப்பினார்கள். அலெக்ஜாண்டர் தமது வாலிபப் பருவத்தில் கைக்கொண்டிருந்த தாராள நோக்கத்திலிருந்து, பிற்போக்கான நோக்கத்திற்கு அவர் மாறியதுதான், இந்த சம்பவத்திற்குக் காரணம். வெளி நாட்டுக் கொள்கையில் தொடர்ச்சியாக, வர வர அதிகமான கஷ்டங்களும், ஆபத்துகளும் ஏற்பட்டு வந்தபடியால், அவற்றிற்கு ஸ்பெரான்ஸ்கியை பலிகொடுப்பது சௌகர்யமாய் இருந்தது. ஏனெனில், புதிய பிரான்ஸின் முன்னேற்றக் கொள்கைகளை, ருஷ்யாவிலுள்ள கன்சர்வேடிவ் கொள்கைக்காரர்கள் வேகமாய் எதிர்த்து வந்தார்கள். ஸ்பெரான்ஸ்கியின் விரோதிகளிடமிருந்தும், பிற்போக்காளர்களிட மிருந்தும், சக்கரவர்த்திக்குக் கெடுதலான வதந்திகள் வந்து கொண்டிருந்தன. அந்த பிற்போக்காளர்கள் அலெக்ஜாண்டருக்கும், அவருடைய முந்தைய விசுவாச ஆலோசகர்கள், ஊழியர்கள் ஆகியவர்களுக்கும் இடையே தோன்றி, இடையூறாய் இருப்பதாக ஸ்பெரான்ஸ்கியைக் கருதினார்கள். அலெக்ஜாண்டருக்கு தம்முடைய கட்சியை எடுத்துக் கூறி, ஸ்பெரான்ஸ்கி பல கடிதங்களை எழுதினார். ஆனால் 1816-ஆம் வருஷம் வரையில் ஒன்றும் நடைபெறவில்லை. அந்த வருஷத்தில் ஸ்பெரான்ஸ்கி மீதுள்ள குற்றச்சாட்டுகள் தவறானவை என்று மறைமுகமாக ஒப்புக்கொண்டு, ஒரு உத்தரவு பிரசுரமாயிற்று. அதன் பின்னால், அவரை பென்ஜா என்ற இடத்திற்கு கவர்னராக்கினார்கள். மூன்று வருஷங்களுக்குப் பின்னால், சைபீரியாவுக்கு கவர்னர்-ஜெனரலாக அவரை நியமித்தார்கள். 1821-ம் வருஷத்தில் அவர் பீட்டர்ஸ் பர்க்கிற்குத் திரும்பி, ராஜாங்க சபையில் ஒரு அங்கத்தினரானார். ஆனால், முன்னால் அவருக்கு சக்கரவர்த்தியிடமிருந்த செல்வாக்கு எதுவும் இப்போது இல்லை.

அடுத்தபடியாக, முதலாவது நிக்கலஸின் ஆட்சி காலம் ஏற்பட்டது. அவர் ஸ்பெரான்ஸ்கியின் விசுவாசத்தை சோதித்த பின்பு, 'டிசம்பர் சதி ஆலோசனை'க்காரர்களை விசாரிப்பதற்கு அவரை ஒரு நீதிபதியாக நியமித்தார். பின்னால், ருஷ்ய சட்டங்களைத் தொகுத்து வெளியிடும் வேலையில் அவரை நியமித்தார்கள். ருஷ்ய சட்டங்களைப் பூராவும் தொகுத்து, 42 பாகங்களாக அவர் வெளியிட்டார். அவற்றை ஆதாரமாகக் கொண்டுதான், 1832-ம் வருஷத்தில் ருஷ்ய சட்டங்கள் தொகுத்து அமைக்கப்பட்டன.





1811-ஆம் வருஷம் முடிந்ததிலிருந்து மேற்கு ஐரோப்பாவில் துருப்புகளைக் குவித்து வைப்பதும், துருப்புகளை அதிகரிப்பதுமான வேலைகள் அதிகமாயின. 1812-ஆம் வருஷத்தில் பல லட்சக்கணக்கான இந்தத் துருப்புகள்-போக்கு வரத்துகளையும், ராணுவத்தின் உணவுத் தேவைகளையும் கவனிக்கவேண்டிய பல லட்சக் கணக்கான பேர்கள் உட்பட-மேற்கிலிருந்து கிழக்கேயுள்ள ருஷ்ய எல்லையை நோக்கி நகர ஆரம்பித்தன. இதே மாதிரி 1811-ஆம் வருஷத்திலிருந்து ருஷ்யத் துருப்புகள் ருஷ்ய எல்லைகளுக்கு நகர்த்தப்பட்டன. 1812-ஆம் வருஷம் ஜூன் மாதம் 12-ந் தோதியன்று மேற்கு ஐரோப்பியத் துருப்புகள் ருஷ்ய எல்லையைக் கடந்தன. உடனே யுத்தம் ஆரம்பமாயிற்று. அதாவது, மனித சுபாவத்திற்கும், மனித தர்மத்திற்கும் விரோதமான ஒரு சம்பவம் நடைபெற்றது. பல லட்சக் கணக்கான மனிதர்கள் எண்ணற்ற பல குற்றங்களை ஒருவருக்கொருவர் செய்தார்கள். மோசடிகள், நம்பிக்கைத் துரோகங்கள், திருட்டுகள், பொய் தஸ்தாவேஜுகள், கள்ள நாணயங்கள், கன்னங்கள் வைத்தல், தீ வைத்தல், கொலைகள் ஆகியவைகளைச் செய்தார்கள். உலகத்தின் எல்லா கோர்ட்டுகளிலும், எல்லா நூற்றாண்டுகளிலும் நடைபெற்ற வழக்குகளுக்கு அதிகமாக இந்தக் குற்றங்கள் செய்யப்பட்டன. ஆனால், அந்த சமயத்தில் செய்யப்படுகிற இவையெல்லாம் குற்றங்களாகக் கருதப்படுவதில்லை.

இந்த அசாதாரணமான சம்பவம் எப்படி ஏற்பட்டது? இதற்குக் காரணங்கள் என்ன? சரித்திர ஆசிரியர்கள் அப்பாவித்தனமான உறுதியோடு நமக்குச் சில காரணங்களைச் சொல்லுகிறார்கள். அவை யாவன: ஓல்டன்பர்க் டியூக்கிற்கு செய்த தவறுகள், பிரிட்டனுடன் வியாபாரம் செய்யக்கூடாது என்ற நெப்போலியனின் உத்தரவை மீறி நடந்தது, நெப்போலியனின் பேராசைகள், ராஜதந்திரிகளின் தவறுகள், இத்தியாதி.

மெட்டர்னிச்சோ, ரும்யாண்ட்சேவ்வோ, அல்லது டாலேராண்டோ ஒரு மாலைக் கச்சேரிக்கும், ராஜ தரிசனத்திற்கும் இடையிலுள்ள நேரத்தில் சரியாக சிரத்தை எடுத்துக்கொண்டு, சாமர்த்தியமாக ஒரு யாதார்த்தைத் தயார் செய்திருக்கலாம்; அல்லது அலெக்ஜாண்டருக்கு நெப்போலியன் ஒரு கடிதம் எழுதி அதில், 'எனது மதிப்புக்குரிய சகோதரரே, ஓல்டன்பர்க் டியூக்கின்

பிரதேசங்களை அவருக்கு ஒப்புவித்துவிட நான் சம்மதிக்கிறேன்' என்று எழுதியிருக்கலாம். இம்மாதிரி செய்திருந்தால், யுத்தமே ஏற்பட்டிருக்காது என்று சொல்லலாம்.

அக்காலத்தில் வாழ்ந்தவர்களுக்கு அம்மாதிரி தோன்றுவதை நாம் புரிந்து கொள்ளலாம். இங்கிலாந்தின் சூழ்ச்சிகளினால்தான் யுத்தம் ஏற்பட்டது என்று இயற்கையாகவே நெப்போலியனுக்குத் தோன்றியது. (செயின்ட் ஹெலினா தீவில் அம்மாதிரிதான் அவர் சொன்னார்.) நெப்போலியனின் பேராசைதான் யுத்தத்திற்குக் காரணம் என்ற இங்கிலீஷ் பார்லிமெண்ட் அங்கத்தினர்களுக்கு இயற்கையாகத் தோன்றியது. தமக்கு செய்த அநீதிதான் யுத்தத்திற்குக் காரணம் என்று ஓல்டன்பர்க் டியூக்கிற்குத் தோன்றியது. பிரிட்டனை பகிஷ்கரிக்க வேண்டும் என்ற நெப்போலியனின் உத்தரவினால் ஐரோப்பா நாசமாகிக்கொண்டு வந்தது. அதுவே யுத்தத்திற்குக் காரணம் என்ற வர்த்தகர்களுக்குத் தோன்றியது. தங்களுக்கு வேலை கொடுக்கவேண்டும் என்பதுவே யுத்தத்திற்கு முக்கியமான காரணம் என்று ஜெனரல்களுக்கும், பழைய சிப்பாய்களுக்கும் தோன்றியது. சட்ட பூர்வமான கொள்கைகளை ஸ்தாபிப்பதற்காகவே யுத்தம் ஏற்பட்டதாக நியாயவாதிகளுக்குத் தோன்றியது. ருஷ்யாவிற்கும் ஆஸ்திரியா விற்கும் ஏற்பட்ட நேச உடன்படிக்கையை, நெப்போலியன் அறிந்து கொள்ளாதபடி மறைத்து வைக்காமல் போனதும், 178-ம் நெம்பர் யாதாஸ்தில் கண்ட வாசகம் மோசமாய் இருந்ததுமே, யுத்தத்திற்குக் காரணமென்று ராஜ தந்திரிகளுக்குத் தோன்றியது. அக்காலத்திய மனிதர்களுக்கு இம்மாதிரியான காரணங்களும், இன்னும் எண்ணிக்கையற்ற, எண்ண முடியாத வேறு பல காரணங்களும் (அந்தக் காரணங்களின் எண்ணிக்கை, முடிவற்ற வெவ்வேறு விதமான கருத்துக்களைப் பொறுத்து இருக்கிறது), தோன்றுவது இயற்கையே. ஆனால், இந்தக் காரியங்களின் பிரம்மாண்டமான தன்மையையும், அதனுடைய தெளிவான, பயங்கரமான அர்த்தத்தையும் பார்க்கும்போது, நமக்கு, பின் சந்ததியார்களுக்கு, இந்தக் காரணங்கள் எல்லாம் போதுமானவையாகத் தோன்றவில்லை. நெப்போலியன் பேராசை பிடித்தவராய் இருந்தார் என்பதற்காகவோ, அல்லது அலெக்ஸாண்டர் உறுதியாய் இருந்தார் என்பதற்காகவோ, அல்லது இங்கிலாந்து தந்திரமுள்ளதாய் இருந்தது என்பதற்காகவோ, அல்லது ஓல்டன்பர்க் டியூக்கிற்கு பாதகம் விளைவித்தார்கள் என்பதற்காகவோ, பல லட்சக் கணக்கான கிறிஸ்தவர்கள், ஒருவரை ஒருவர் கொன்றும் சித்திரவதை செய்தும் கொண்டார்கள் என்பது, நம்முடைய புத்தியினால் யூகிக்கக்

கூடியதாய் இல்லை. உண்மையில் படுகொலைகளும், பலாத்காரங்களும் நடந்திருப்பதற்கும், மேலே சொல்லப்பட்ட சந்தர்ப்பங்களுக்கும் எவ்விதமான தொடர்பு இருக்கிறது என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை. டியூக்கிற்கு பாதகம் ஏற்பட்டு விட்டது என்பதற்காக, ஐரோப்பாவின் மற்றொரு கோடியிலிருந்து ஆயிரக்கணக்கானவர்கள் வந்து, ஸ்மாலென்ஸ் கிலும், மாஸ்கோவிலும் உள்ள மக்களை ஏன் கொலை செய்வதும், நாசப்படுத்தியும், தாங்களும் அவர்களால் கொல்லப்பட்டும் போகவேண்டும்?

அவர்களுடைய பின் சந்ததியார்களான நாம் சரித்திர ஆசிரியர்கள் அல்ல. ஆகவே, பரிசோதனைத் திட்டங்களால் நாம் யோசனையை இழந்துவிடமாட்டோம். அந்த சம்பவத்தை நாம் குழப்பமில்லாத பகுத்தறிவோடு அதைக் கவனித்துப் பார்க்கும் போது, எண்ணற்ற காரணங்கள் வந்து நிற்கின்றன. இந்தக் காரணங்களை நாம் ஆழ்ந்து சோதிக்கும்போது, அவை இன்னும் அதிகமாகப் பெருகி நிற்பதை நாம் காண்கிறோம். ஒரு தனிக் காரணமோ, அல்லது ஒரு வரிசையான காரணங்களோ நமக்கு நியாயமாகத் தோன்றுகின்றன. ஆனால், சம்பவங்களின் பிரம்மாண்டமான தன்மையை நோக்கும்போது, அவை அவற்றின் அற்பமான தன்மையினால் பொய்யாகத் தோன்றுகின்றன. ஒரே காலத்தில் ஏற்பட்ட மற்ற காரணங்களின் ஒத்துழைப்பு இருந்தபோதிலும், அந்த சம்பவங்களை அவற்றால் செய்திருக்க முடியாது என்று நினைக்கும்போதும், அந்தக் காரணங்கள் பொய்யாகத் தோன்றுகின்றன. விஸ்டுலா நதிக்கு அப்புறமாக நெப்போலியன் தமது துருப்புகளை வாபஸ் வாங்க மறுத்ததும், ஒல்டன்பர்க் டியூக்கிற்கு அவருடைய பிரதேசங்களைத் திரும்பக் கொடுக்க மறுத்ததும், யுத்தத்திற்குப் போதுமான காரணம் என்று நமக்குத் தோன்றவில்லை. ஒரு பிரஞ்சு சிப்பாய், இரண்டாம் தடவையாக ராணுவ சேவை செய்ய விரும்பினாலோ, அல்லது மறுத்தாலோ, அதை ஒரு காரணம் என்று சொல்லுவதும், மேலே சொல்லும் காரணமும் ஒன்று போலவே இருக்கின்றன. ஏனெனில், அவன் மீண்டும் சேவை செய்ய மறுப்பானானால், இரண்டு, மூன்று, ஆயிரம் சிப்பாய்கள் அதே மாதிரி யுத்த சேவை செய்ய மறுப்பார்களானால், அத்தனை பேர்களும் நெப்போலியனின் ராணுவத்தில் உறைந்து போவார்களாகையால், யுத்தம் ஏற்பட்டிருக்க முடியாது என்று சொல்லலாம். விஸ்டுலா நதிக்கு அப்புறமாகப் படைகளை வாபஸ் வாங்கவேண்டும் என்று கேட்ட கோரிக்கையை, நெப்போலியன் குற்றமாக எடுத்துக்கொள்ளாமல்,

தமது துருப்புகளை முன்னேறும் படி உத்தரவு கொடுக்காமல் இருந்திருந்தால், அப்பொழுதும் யுத்தம் ஏற்பட்டிருக்க முடியாது. அவருடைய சார்ஜண்டுகள் எல்லாரும் இரண்டாம் தடவையாக யுத்த சேவை செய்ய முடியாதென்று ஆட்சேபணை செய்திருந்தாலும் அப்பொழுதும் யுத்தம் ஏற்பட்டிருக்க முடியாது. இங்கிலீஷ் சூழ்ச்சிகளோ, ஓல்டன்பர்க் டியூக்கோ இல்லாமல் இருந்தாலும் யுத்தம் ஏற்பட்டிருக்க முடியாது. தாம் அவமானப் படுத்தப்பட்டு விட்டதாக அலெக்ஸாண்டர் நினைக்காமல் இருந்தாலும், ஒரு எதேச்சாதிகார சர்க்கார் ருஷ்யாவில் இல்லாமல் இருந்தாலும் யுத்தம் ஏற்பட்டிருக்க முடியாது. அல்லது பிரான்ஸில் புரட்சி ஏற்படாமல் இருந்தாலும், அந்தப் புரட்சியின் பின்னால் ஒரு சர்வாதிகாரியும், ஏகாதிபத்தியமும் ஏற்படாமல் இருந்தாலும், அல்லது பிரஞ்சு புரட்சியை உண்டுபண்ணிய எல்லாக் காரணங்களும் இல்லாமல் இருந்தாலும் யுத்தம் ஏற்பட்டிருக்க முடியாது. இந்த ஒவ்வொரு காரணமும் இல்லாமல் இருந்தால், ஒன்றும் ஏற்பட்டிருக்க முடியாது. ஆகவே, இந்த எல்லாக் காரணங்களும்-பதினாயிரக்கணக்கான காரணங்களும் - ஒன்று சேர்ந்து யுத்தத்தைக் கொண்டு வந்து விட்டது. ஆகவே, அந்த சம்பவத்திற்கு ஒரே ஒரு காரணம்தான் உண்டு என்று சொல்லுவதற்கில்லை. அது ஏற்பட வேண்டி இருந்தது. அதனால் அது ஏற்பட்டது. பல நூற்றாண்டுகளுக்கு முன்பாக, கிழக்கிலிருந்து மேற்கே கூட்டம் கூட்டமாக மனிதர்கள் வந்து, தங்கள் இனத்தார் களைக் கொன்று குவித்த மாதிரி, பல லட்சக் கணக்கான மனிதர்கள் தங்களுடைய மனித உணர்ச்சிகளையும், நியாயங்களையும் விட்டு விட்டு, மேற்கிலிருந்து கிழக்கே சென்று, தங்கள் இனத்தார்களைக் கொன்று குவிக்க வேண்டியதாய் இருந்தது.

யுத்தம் என்ற அந்த சம்பவமானது நெப்போலியனுடையவும், அலெக்ஜாண்டரினுடையவும் வார்த்தைகளில் தொங்கி நிற்பதாகத் தோன்றியது. ஆனால், ராணுவத்தில் சீட்டு குலுக்கிப் போட்டோ, கட்டாயமாகவோ சேர்க்கப்பட்ட ஒரு சிப்பாயின் செய்கைகள், அந்த சம்பவத்திற்கு எவ்வளவு தூரம் தானாகச் செய்யக்கூடிய செய்கைகளாய் இருந்தனவோ, அவ்வளவுதான் நெப்போலிய னுடையவும் அலெக்ஸாண் டரினுடையவும் செய்கைகள் தாங்களாகச் செய்யக் கூடியவையாய் இருந்தன. இது வேறு விதமாய் இருக்க முடியாது. ஏனெனில், நெப்போலியனுடையவும், அலெக்ஸாண்டரினுடையவும் (அவர்கள் மீதுதான் அந்த சம்பவம் சார்ந்து நிற்பதாகத் தோன்றியது) விருப்பங்கள் நிறைவேற்றி வைக்கப்படவேண்டுமானால், எண்ணற்ற சந்தர்ப்பங்கள் ஒன்று

சேரவேண்டும். அவைகளில் ஒன்றே ஒன்று இல்லாமல் போனால் கூட அந்த சம்பவம் நடைபெற்றிருக்க முடியாது. துப்பாக்கி சுடுகிற சிப்பாய்கள், சிப்பாய்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள், பீரங்கிகள் ஆகியவைகளைக் கொண்டு போகிறவர்கள், இப்படியாக உண்மையான அதிகாரத்தைக் கொண்டுள்ள பல லட்சக் கணக்கான மனிதர்களின் சம்மதம், இந்த பலவீனமான இரண்டு ஆசாமிகளின் கோரிக்கைகளை நிறைவேற்றி வைக்க அவசியம் வேண்டும். அம்மாதிரி அவர்கள் சம்மதிக்கும்படிச் செய்வதற்கு, பற்பல விதமான, சிக்கலான, எண்ணற்ற காரணங்கள் ஏற்பட வேண்டும்.

புத்திக்குப் பொறுத்தமில்லாத சம்பவங்களுக்கு (அந்த சம்பவங்களின் நியாயங்களை நம்மால் அறிந்து கொள்ள முடியவில்லை) வியாக்யானங்கள் தேடுவதென்றால், விதியின் மீதுதான் நாம் பாரத்தைப் போட வேண்டியதாய் இருக்கிறது. சரித்திரத்தில் காணப்படும் இம்மாதிரி சம்பவங்களுக்கு நியாயமான வியாக்யானங்களை நாம் சொல்ல முயற்சிக்க முயற்சிக்க, அவைகள் நமக்கு மேலும் மேலும் நியாயமற்றவையாகவும், புத்திக்கு எட்டாதவையாகவும் தோன்றுகின்றன.

ஒவ்வொருவனும் தனக்காகவே வாழ்கிறான். அவன் தன்னுடைய சொந்த நோக்கங்களை அடைவதற்கு, தனது சுதந்திரத்தை உபயோகிக்கிறான். இந்தக் காரியத்தையோ, அந்தக் காரியத்தையோ செய்யலாமா, செய்யக்கூடாதா என்பதை, தன்னுடைய முழு உணர்ச்சியோடு தீர்மானம் செய்கிறான். அவன் அதைச் செய்து முடித்ததும், ஒரு குறிப்பிட்ட காலத்தில் அந்தச் செயல் பூர்த்தியானதும், காலக்கிரமத்தில் அது மாற்ற முடியாததாக ஏற்பட்டு, சரித்திரத்தில் சேர்ந்து விடுகின்றனது. அதன் பின்னால், அதற்கு அங்கே சுதந்திரம் இல்லை. முன்னாலேயே நிச்சயம் செய்யப்பட்ட ஒரு முக்கியத்துவத்தோடு அது அங்கே அமைந்து விடுகிறது.

ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையும் இரண்டு விதமானவை. ஒன்று, அவனுடைய சொந்த அனுபவம். அவனுடைய ஆசைகள் எவ்வளவு உயர்வாகவும், சிலாக்கிய மாகவும் இருக்கின்றனவோ, அவற்றிற்குத் தக்கபடி அவனுடைய சொந்த வாழ்க்கை சுதந்திரமாய் இருக்கும். மற்றொரு விதம், அவனுடைய சமுதாய வாழ்க்கை. மனித சமுதாயத்தில் ஒரு சிறு துளியான அவன் மனித சமுதாயத்தின் சட்டங்களாலும், சக்திகளாலும் கட்டப்பட்டிருக்கின்றான். அவற்றிற்கு அவன் கீழ்ப்படிந்தே ஆகவேண்டும்.

தன்னுடைய சொந்த வாழ்க்கையில் மனிதன் தனக்காக பிரக்ஞையோடு வாழ்கிறான். ஆனால், மனித சமுதாயத்தின் சரித்திர சம்பந்தமான சர்வ லோக நோக்கங்களை அடைவதில் அவன் ஒரு பிரக்ஞை இல்லாத ஆயுதமாய் தோன்றுகிறான். ஒரு காரியத்தை செய்து முடித்த பின்பு, அதை மாற்ற முடியாது. அந்தக் காரியத்தின் பலன், மற்ற பல லட்சக் கணக்கான மனிதர்களின் காரியங்களின் பலன்களோடு சேர்ந்து, காலக் கிரமத்தில் ஒரு சரித்திர முக்கியத்துவம் பெற்று விடுகிறது. சமுதாய ஏணியில் ஒருவன் எவ்வளவுக்கு எவ்வளவு உயரமாய் நிற்கிறானோ, அவ்வளவுக்கு அவ்வளவு அதிகமான மக்களுடன் அவன் தொடர்பு கொள்ளுகிறான். அவ்வளவுக்கு அவ்வளவு அதிகமான அதிகாரத்தை மற்றவர்கள் மீது அவன் பெறுகிறான். அவனுடைய ஒவ்வொரு செய்கையும் தடுக்க முடியாததும், முன்பே தீர்மானிக்கப்பட்டதுமாக; வரவர அதிகமாகத் தெளிவாகின்றன.

'மன்னரின் இருதயம், கடவுளின் கையில் இருக்கிறது.'

ஒரு மன்னர் என்பவர் சரித்திரத்தின் அடிமை.

பிரக்ஞை இல்லாத, பொதுவான கூட்டமான மனித சமூகத்தின் வாழ்க்கையே சரித்திரமாகும். அந்த சரித்திரம், மன்னர்களின் வாழ்க்கையிலுள்ள ஒவ்வொரு வினாடியையும் ஒரு ஆயுதமாகத் தன்னுடைய சொந்தக் காரியங்களுக்கு உபயோகித்துக் கொள்ளுகிறது.

தமது மக்களின் ரத்தத்தை சிந்துவதா, வேண்டாமா என்ற விஷயம் தம்மைப் பொறுத்தே இருக்கிறது என்பதில், முன்னைவிட அதிகமாக, 1812 ஆம் வருஷத்தில் நெப்போலியன் நம்பிக்கை கொண்டார். அலெக்ஜாண்டர் அவருக்கு எழுதிய கடைசிக் கடிதத்தில் இதைக் குறிப்பிட்டிந்தார். தடுக்க முடியாத சக்திகளின் பிடிப்பில், இதற்கு முன்னால் எப்பொழுதும் இல்லாததைவிட அதிகமாக நெப்போலியன் அகப்பட்டுக் கொண்டிருந்தார். அவை அவரை சரித்திரத்திற்காக என்ன செய்ய வேண்டுமோ, அதைச் செய்யும்படி கட்டாயப்படுத்தின. ஆனால், அவரோ தம்முடைய இஷ்டப்படியே செய்வதாக நினைத்துக் கொண்டிருந்தார்.

மேற்கிலுள்ள மக்கள், தங்களுடைய இனத்தாரைக் கொன்று குவிப்பதற்காக, கிழக்கு நோக்கி வந்தார்கள். ஒரே சமயத்தில் ஒன்று சேரும் விதிப்படி, ஆயிரக்கணக்கான சிறிய காரணங்கள் பொருந்தி அமைந்து, அந்தத் துருப்புகளின் கீழ்த் திசைப் பிரயாணத்தையும், யுத்தத்தையும் ஏற்படுத்தும்படி ஒத்துழைத்தன. பிரிட்டிஷ் பகிஷ்காரத்தை மீறியதற்காக ஏற்பட்ட கண்டனங்களும்,

ஓல்டன்பர்க் டியூக்கிற்கு செய்யப்பட்ட அநீதிகளும், பிரஷ்யாவிற்குள் துருப்புகள் நுழைந்ததும் ( நெப்போலியனின் கருத்துப்படி, அங்கே ஒரு சமாதானத்தை நிலைநாட்டுவதற்காக அவை அனுப்பப்பட்டன) தமது மக்களின் கருத்துக்கு இணங்கியதான பிரஞ்சு சக்கரவர்த்தியின் யுத்த சுபாவமும், யுத்தத்தின் மீது அவருக்குள்ள பிரியமும், யுத்தத்திற்கு வேண்டியவைகளைப் பிரம்மாண்டமாகத் தயாரிப்பதில் உள்ள கவர்ச்சியும், அதற்காக ஏற்படுகிற பணச் செலவும், அந்தப் பணச் செலவுக்குப் பிரதியாக தங்களுக்குச் சாதகமான சலுகைகளைப் பெறுவதும், டிரெஸ்டெனில் அவருக்குக் கிடைத்த மரியாதை களின் மயக்கமும், ராஜ தந்திர பேச்சு வார்த்தைகளும், சமாதானத்தை அடைய வேண்டுமென்ற உண்மையான நோக்கத்தோடு அவை நடந்த போதிலும், இரு தரப்புகளும் புண்படும்படி அவை நடந்து முடிந்ததும், இன்னும் பலப் பல லட்சக் கணக்கான இதர காரணங்களும், அந்த யுத்த சம்பவத்திற்குத் தக்கபடி தங்களை அமைத்துக்கொண்டு, அவற்றோடு ஒன்று சேர்ந்து யுத்தத்தைக் கொண்டு வந்து விட்டன.

ஒரு ஆப்பிள் பழுத்தவுடன் கீழே விழுகிறது. ஏன் அது கீழே விழுகிறது? பூமியின் மீது அதற்குள்ள கவர்ச்சியா? அதன் தண்டு வாடிப்போன காரணமா? சூரிய வெப்பத்தால் அது காய்ந்து போயிற்றா? அதன் பளு அதிகமாயிற்றா? காற்று அதை ஆட்டியதா? அல்லது அதன் கீழே நிற்கும் பையன் அதைத் தின்ன வேண்டுமென்று விரும்பியது காரணமா?

இவை ஒன்றும் காரணமல்ல. எல்லா முக்கியமான, ரசாயன, பஞ்ச பூத சம்பவங்கள் நேரிடுவதற்கெல்லாம், பல நிலைமைகள் ஏக காலத்தில் ஒன்று சேருவதே காரணமாகும். ஜீவ அணுத் தசைகள் கெட்டுப் போனதாலேயே, ஆப்பிள் கீழே விழுந்தது என்று தாவர சாஸ்திரி சொல்லுகிறார். அவர் சொல்லுவதும் சரிதான். ஆனால், அதே மாதிரி, தான் தின்பதற்காக அதை வேண்டுமென்று பிரார்த்தனை செய்ததனால்தான், அந்த ஆப்பிள் கீழே விழுந்தது என்று அந்தக் குழந்தை சொல்லுவதும் சரிதான். தாம் போக வேண்டுமென்று நெப்போலியன் விரும்பியதால், அவர் மாஸ்கோ போனார் என்றும், அவர் அழிந்து போக வேண்டுமென்று அலெக்ஜாண்டர் விரும்பியதால், அவர் அழிந்தார் என்றும், பல லட்சக் கணக்கான டன்கள் பாரமுள்ள, கீழே அறுபட்ட ஒரு குன்று, தொழிலாளி கடப்பாரையினால் இடித்தக் கடைசி இடிதான் அந்தக் குன்று கீழே விழுவதற்குக் காரணம் என்று சொல்லுவது சரியாகவும் இருக்கலாம். தப்பாகவும் இருக்கலாம். சரித்திர சம்பவங்களில்

பெரிய மனிதர்கள் என்று சொல்லப்படுகிறவர்கள், அந்த ச் சம்பவங்களுக்கு பெயர்கள் கொடுக்கும் வெறும் அடையாளச் சீட்டுகள். அடையாளச் சீட்டுகளைப்போலவே அந்தச் சம்பவத்திற்கும் அவர்களுக்கும் உள்ள தொடர்பு மிகுந்த அற்பமானதாகும்.

அவர்கள் செய்யும் ஒவ்வொரு செய்கையும் அவர்களுக்கு, தங்கள் இஷ்டப்படிச் செய்வதாகத் தோன்றும். ஆனால், சரித்திர முறைப் படிப் பார்த்தால், அவையெல்லாம் தாங்கள் அறியாமலேயே செய்யக் கூடியவைகளாகும். அவையெல்லாம் சரித்திரத்தின் முழுப் போக்கிற்கும் சம்பந்தமானவை. அவையெல்லாம் அனாதி காலத்திலிருந்தே, முன்பாவே தீர்மானிக்கப்பட்டவை.



டிரெஸ்டனை விட்டு மே 29-ந் தேதி யன்று நெப்போலியன் புறப்பட்டார். ஒரு சக்கரவர்த்தி, மன்னர்கள், டியூக்குகள், இளவரசர்கள், இன்னும் பலர் அடங்கிய ராஜ சபை சூழ மூன்று வாரங்கள் அங்கே அவர் தங்கி இருந்தார். புறப்படுவதற்கு முன்பாக அந்தச் சக்கரவர்த்திக்கும், மன்னர்களுக்கும், இளவரசர்களுக்கும், யார் யார் தகுதியுள்ளவர்களோ, அவர்களுக்கெல்லாம் தமது அருளைக் காட்டினார். தமக்கு அதிருப்தி ஏற்பட்ட மன்னர்களையும் இளவரசர்களையும் கண்டித்தார். மற்ற மன்னர்களிடமிருந்து பறித்த முத்துக்களையும், வைரங்களையும் ஆஸ்திரிய சக்கரவர்த்தினிக்குப் பரிசாக அளித்தார். சரித்திர ஆசிரியர்கள் நமக்குச் சொல்லுகிறபடி, அந்தச் சக்கரவர்த்தினி மேரி லூயிஸ் என்பவளைக் கனிவோடு தழுவிக் கொண்டார். அவருக்கு பாரிஸில் மற்றொரு மனைவி இருந்த போதிலும், இந்தச் சக்கரவர்த்தினி அவரைத் தனது கணவராகப் பாவித்தாள். அவருடைய பிரிவினால் அவள் வருந்தினாள். அதைச் சகிக்க முடியாதவள்போலத் தோன்றினாள். ராஜ தந்திரிகள் இன்னமும் சமாதானம் ஏற்படுவது சாத்தியம் என்பதில் உறுதியான நம்பிக்கை கொண்டிருந்தார்கள்; அதற்காகத் தீவிரமாக வேலை செய்து வந்தார்கள்; நெப்போலியன் சக்கரவர்த்தி அலெக்ஸாண்டருக்குத் தாமே ஒரு கடிதம் எழுதினார். அந்தக் கடிதத்தில், 'திருவாளரான எனது அன்பரே' என்று குறிப்பிட்டிருந் தார்; யுத்தத்தைத் தாம் விரும்பவில்லை என்று உண்மையோடு அவருக்கு உதவி கூறினார். எப்பொழுதுமே அவரை நேசிப்பதாகவும், மரியாதை செய்வதாகவும் கூறினார். என்றாலும்,

அவர் தமது ராணுவத்தோடு சேர்ந்து கொள்ளுவதற்காகப் புறப்பட்டுப் போனார். மேற்கிலுள்ள தமது துருப்புகள் வேகமாகக் கிழக்கு நோக்கி முன்னேறும்படி ஒவ்வொரு முகாமிலும் புதிதாக உத்தரவுகள் பிறப்பித்துக் கொண்டு போனார். ஆறு குதிரைகள் பூட்டிய ஒரு பிரயாண வண்டியில், கௌரவ வேலைக்காரர்களும், மெய்க்காப்பாளர்களும், சிப்பாய்களும் புடைசூழ, பாஸன், தார்ன், டான்ஜிக், கோனிக்ஸ்பெர்க் ஆகிய இடங்களுக்குப் போகிற ரஸ்தாவில் போய்க்கொண்டிருந்தார். இந்தப் பட்டணங்கள் ஒவ்வொன்றிலும் மிகுந்த உற்சாகத்தோடும், பரபரப்போடும் ஆயிரக்கணக்கான மக்கள் அவரைச் சந்தித்தார்கள்.

மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி ராணுவம் போய்க் கொண்டிருந்தது. கெடிகளில் ஆறு மாற்றுக் குதிரைகளைப் பூட்டிக்கொண்டு அவருடைய வண்டியும் அதே திசையை நோக்கிப் போய்க்கொண்டிருந்தது. ஜூன் 10-ந் தேதி யன்று தமது ராணுவத்தோடு வந்து சேர்ந்து கொண்டார். வில்காவிஸ்கி என்ற காட்டில் ஒரு போலிஷ் கோமகனுடைய எஸ்டேட்டில் அவருக்காகத் தயாரிக்கப்பட்டிருந்த விடுதிகளில் அன்றிரவு அவர் தங்கினார்.

மறுநாளன்று ராணுவத்தை முந்திக் கொண்டு ஒரு வண்டியில் நீமெனுக்குப் போய்ச் சேர்ந்தார். ஒரு போலிஷ் சீருடை அணிந்து கொண்டு, அந்த நதியைக் கடப்பதற்கு ஒரு இடத்தைத் தேர்ந்தெடுக்க நதிக் கரைக்கே போனார்.

எதிர் கரையில் சில கோசாக்குகளைப் பார்த்தார். எதிரே விரிந்த, பரந்த சம வெளியையும் பார்த்தார். அதன் மத்தியில்தான் அந்த பரிசுத்த நகரமான மாஸ்கோ இருக்கிறது. அதுதான் ஆட்சியின் தலைமை பீடம். சித்தியா ஏகாதிபத்தியத்திற்குள் மகா அலெக்ஸாண்டர் படையெடுத்துப் போனார். அதே மாதிரி, நெப்போலியனும் எதிர்பாராதா விதத்தில் ராஜதந்திர யுத்த கேந்திர காரணங்களுக்கு நேர் விரோதமாகத் தமது ராணுவத்தை முன்னேறும்படி உத்தரவிட்டார். மறுநாளன்று, அவருடைய ராணுவம் நீமென் நதியைக் கடக்க ஆரம்பித்தது.

ஜூன் மாதம் 12-ந் தேதி யன்று அவர் தமது கூடாரத்தை விட்டு வெளியே வந்தார். நீமென் நதியின் உயரமான இடது கரையின் மேலாக அவருடைய கூடாரம் அமைக்கப்பட்டிருந்தது. தமது தூரதிருஷ்டிக் கண்ணாடி வழியாக வில்காவிஸ்கி காட்டிலிருந்து சாரி சாரியாகத் தமது துருப்புகள் வெளியே வந்து, அந்த நதியின் மேலாகப் போடப்பட்டுள்ள மூன்று பாலங்களின் வழியாகப்

போய்க் கொண்டிருப்பதைப் பார்த்தார். சக்கரவர்த்தி அங்கே பிரசன்னமாய் இருப்தைத் துருப்புகள் அறிந்திருந்தபடியால், அவர் எங்கே இருக்கிறார் என்பதைக் கண்டு பிடிக்க முயற்சி செய்தார்கள். தமது பரிவாரங்களை விட்டு விலகி, அந்தக் குன்றின் மீதுள்ள கூடாரத்தின் முன்பாக, ஒரு உருவம் வெளிச் சட்டை அணிந்து, தொப்பியை சாய்த்து வைத்துக்கொண்டு நிற்பதைப் பார்த்தார்கள். அவர் சக்கரவர்த்திதான் என்பதை அறிந்ததும், தங்கள் தொப்பிகளை வீசி, 'சக்கரவர்த்தி நீடூழி வாழ்க!' என்று கூச்சலிட்டார்கள். ஒருவர் பின் ஒருவராக அவர்கள் மறைந்திருந்த காட்டிலிருந்து வெளியே வந்து பிரிந்து, மூன்று பாலங்களின் வழியாக அக்கரைக்குப் போய்க்கொண்டே இருந்தார்கள்.

'இப்பொழுது நாம் யுத்தம் ஆரம்பிக்கப் போகிறோம். ஓ, அவர் தமது கையில் விஷயங்களை எடுத்துக் கொண்டால், உடனே சூடு பிறந்து விடுகிறது... அட கடவுளே... அதோ அங்கே இருக்கிறார்... சக்கரவர்த்தி நீடூழி வாழ்க! அப்படியானால் இவைதான் ஆசியாவின் சம வெளிகளா? என்ன இருந்தாலும், இது ஒரு ஆபாசமான நாடு. போய் வருகிறேன், பாச்சே, மாஸ்கோவில் உமக்கு ஒரு உயர்ந்த அரண்மனையைத் தயாராய் வைத்திருப்பேன். போய் வருகிறேன். நல்அதிருஷ்டம் ஏற்படுவதாக... சக்கரவர்த்தியை நீ பார்த்தாயா? சக்கரவர்த்தி நீடூழி வாழ்க!... புர்-என்னை இந்தியாவின் கவர்னராக ஆக்கினால், ஏ கெரார்ட், உன்னை காஷ்மீரத்தின் மந்திரியாக நான் ஆக்கி விடுவேன். அது நிச்சயம். சக்கரவர்த்தி நீடூழி வாழ்க! ஜே... ஜே... ஜே... அந்த கோசாக்குகள்-அந்த அயோக்கியர்கள்-அவர்கள் எம்மாதிரி ஓடுகிறார்கள். பாருங்கள்! சக்கரவர்த்தி நீடூழி வாழ்க! அங்கே அவர் நிற்கிறார். நீ பார்த்தாயா? நான் இப்பொழுது உன்னைப் பார்க்கிற மாதிரி, அவரை இரு முறைகள் பார்த்தேன். அந்த குஞ்சு வீரர்... ஒரு வீரனுக்கு அவர் பதக்கம் அளித்ததை நான் பார்த்தேன். சக்கரவர்த்தி நீடூழி வாழ்க!' என்று பல குரல்கள் வயதானவர்களிடமிருந்தும், வாலிபர்களிடமிருந்தும், வெவ்வேறு குணாதிசயங்களையும், சமூகத்தின் வெவ்வேறு அந்தஸ்துகளையும் கொண்டவர்களிடமிருந்தும் கிளம்பின. ஆனால் அவர்கள் எல்லாருடைய முகங்களிலும் ஒரே விதமான மகிழ்ச்சித் தோற்றமே விளங்கியது. வெகு நாட்களாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த அந்தப் படையெடுப்பு ஆரம்பமானதினாலும் அந்தக் குன்றின் மீது சாம்பல் வர்ணக் கோட்டோடு நின்று கொண்டிருந்த அந்த மனிதர் மீது ஏற்பட்டிருந்த பரவசத்தாலும் பக்தியாலும் தோன்றியதே அந்த மகிழ்ச்சியாகும்.

ஒரு சிறிய, ஆனால் நல்ல ஜாதியான ஒரு அரபுக் குதிரையொன்று ஜூன் மாதம் 13-ந் தேதி யன்று நெப்போலியனுக்காக கொண்டு வரப்பட்டது. அவர் அதில் ஏறிக்கொண்டு நீமென் நதிக்கு மேலாக அமைக்கப்பட்ட பாலங்கள் ஒன்றின் வழியாக பாய்ச்சலில் சவாரி விட்டார். இடைவிடாத பரவசக் கூச்சல்கள் தொடர்ச்சியாகக் காதுகளைச் செவிடு படுத்தின. தம்மீதுவுள்ள அன்பைக் காட்டுவதற்காக, சிப்பாய்கள் அம்மாதிரி கூச்சலிடுவதைத் தடுக்க முடியாதபடியால், அவர் பொறுத்துக்கொண்டிருந்தார் என்று தோன்றியது. ஆனால், அவர் எங்கே சென்றாலும், அம்மாதிரிக் கோஷங்கள் கேட்டுக்கொண்டே இருந்தபடியால், அவர் தமது ராணுவ விஷயங்களைப் பற்றி, அவர் சிந்திக்க முடியாமல் அவை தொந்திரவு கொடுத்து வந்தன. ஆடிக்கொண்டிருக்கும் படகுப் பாலத்தின் வழியாக அக்கரைக்கு சவாரி போனார். உடனே இடது பக்கம் திரும்பி, கோவ்னா என்ற இடத்தை நோக்கிப் பாய்ச்சலில் போனார். காப்பாளர்களைச் சேர்ந்த குதிரை வீர்கள், பரவசத்தோடும் மகிழ்ச்சியோடும் அவருக்கு முன்னால் சவாரி செய்து, துருப்புகளின் இடையே அவருக்கு வழி செய்து வைத்தார்கள். வைலியா என்ற அகலமான நதியை அடைந்ததும், ஒரு போலிஷ் உலான் பட்டாளம் தங்கி நின்ற இடத்திற்குப் பக்கத்தில், அவர் குதிரையை நிறுத்தினார்.

‘சக்கரவர்த்தி நீடூழி வாழ்க’ என்று அந்தப் போலந்துக்காரர்கள் மகிழ்ச்சிப் பெருக்கோடு கூச்சலிட்டார்கள். அவரைப் பார்ப்பதற்காகத் தங்கள் வரிசை கலைந்து ஒருவரை ஒருவர் நெருக்கினார்கள்.

அந்த நதியை மேலும் கீழும் நெப்போலியன் பார்த்து விட்டு, குதிரையை விட்டு இறங்கினார். அந்த நதிக்கரையில் கிடந்த ஒரு கட்டை மீது அமர்ந்தார். அவர் ஒரு ஜாடை காட்டியவுடன், ஒரு தூர தரிசனக் குழாய் அவரிடம் கொண்டு வரப்பட்டது. ஒரு சந்தோஷமான, கௌரவ வேலைக்காரப் பையனின் தோள் மீது அதை வைத்து, அதன் வழியாக எதிர் கரையை நோக்கினார். பின்னார், அவருக்கு முன்பாகக் கட்டைகள் மீது விரிக்கப்பட்டிருந்த ஒரு படத்தைக் கவனத்தோடு பார்த்துக்கொண்டிருந்தார். தமது தலையை நிமிர்த்தாமலே அவர் ஏதோ சொன்னார். உடனே இரண்டு மெய்க்காப்பாளர்கள் அந்தப் போலிஷ் உலான்களிடம் பாய்ச்சலில் போனார்கள்.

‘என்ன? அவர் என்ன சொன்னார்?’ என்று குரல்கள் அந்தப் போலிஷ் உலான்களின் வரிசைகளிலிருந்து கேட்டன. மெய்க் காப்பாளர்களில் ஒருவர் அவர்களிடம் நெருங்கினார்.

அந்த நதியைக் கடப்பதற்கான துறையைக் கண்டு பிடிக்கும் படி உத்தரவாயிற்று. அந்தப் போலிஷ் உலான்களின் கர்னலான ஒரு அழகான வயோதிகர் முகம் சிவந்து, பரபரப்பினால் 'பேச முடியாமல், அந்த மெய்க்காப்பாளரிடம் ஒரு அனுமதி கேட்டார். அதாவது, கடக்கும் துறையைத் தேடிக்கொண்டிருப்பதை விட, தாமும் தமது உலான் வீரர்களும் நீச்சலில் ஆற்றைக் கடக்கும்படி அனுமதிக்கக் கோரினார். குதிரை மீது ஏற வேண்டுமென்று ஒரு சிறு பையன் அனுமதி கேட்பதைப்போல, தமக்கு எங்கே அனுமதி மறுத்து விடுவார்களோ என்ற பீதியோடு அவர் கேட்டார். சக்கரவர்த்தியின் கண்களுக்கு முன்பாக அந்த ஆற்றை நீந்திக் கடப்பதற்குத் தங்களை அனுமதிக்கும்படி அவர் கெஞ்சினார். இந்த மித மிஞ்சிய அக்கறையைக் கண்டு சக்கரவர்த்தி அதிருப்தி கொள்ள மாட்டார் என்று அந்த மெய்க்காப்பாளர் பதில் அளித்தார். இதைக் கேட்டதும், அந்த மீசை வைத்த வயோதிக அதிகாரி ஒரு சந்தோஷ முகத்தோடும் ஜொலிக்கும் கண்களோடும் தமது உடை வாளை உயர்த்தி, 'சக்கரவர்த்தி நீடூழி வாழ்க' என்று கோஷமிட்டார். உலான்களைத் தமது பின்னால் வரும்படி உத்தரவிட்டு விட்டு, தார்ச் சக்கரத்தால் தமது குதிரையைக் குத்தி, நதிக்குள் பாய்ச்சலில் இறங்கினார். அந்தக் குதிரை அமைதியற்று இருந்தபடியால், கோபமாக அதை ஒரு குத்து குத்தி விட்டு, தண்ணீரில் இறங்கி ஆழமான இடத்தை நோக்கிப் போனார். அங்கேதான் தண்ணீரின் ஓட்டம் மிகக் கடுமையாய் இருந்தது. நூற்றுக்கணக்கான உலான்கள் அவருக்குப் பின்னால் பாய்ச்சலில் போனார்கள். ஆற்றின் மத்தியில் உள்ள அந்த வேகமான ஓட்டத்தில் குளிர்ச்சியாகவும் பயங்கரமாகவும் இருந்தது. உலான்கள் தங்கள் குதிரைகளில் இருந்து கீழே விழுந்தபோது, ஒருவரை ஒருவர் பற்றிக் கொண்டார்கள். சில குதிரைகளும், சில மனிதர்களும் தண்ணீரில் மூழ்கிப் போனார்கள். மற்றவர்கள் நீந்திப் போக முயற்சித்தார்கள். சிலர் குதிரைகளின் சேணங்களில் இருந்தார்கள். சிலர் குதிரைகளின் பிடரி மயிரைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருந்தார்கள். எதிர்கரைக்குப் போக அவர்கள் முயற்சித்தார்கள். அரை வெர்ஸ்டுக்கு அப்புறம் ஆற்றைக் கடக்கும் துறை இருந்தபோதிலும், அந்தக் கட்டை மீது உட்கார்ந்திருந்த மனிதரின் கண்களுக்கு எதிராக அந்த ஆற்றில் நீந்தவும் மூழ்கவும் அவர்கள் பெருமை கொண்டிருந்தார்கள். ஆனால் அந்த மனிதரோ, இவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதைப் பார்க்கக்கூட இல்லை. சக்கரவர்த்தி மீது அந்தப் போலந்துக்காரர்களுக்கு எவ்வளவு பக்தி இருக்கிறது என்பதை, சமயம் பார்த்து அந்த மெய்க்காப்பாளர்

சக்கரவர்த்திக்குக் காட்டினார். சாம்பல் வர்ண வெளிச் சட்டை அணிந்திருந்த அந்த சிறிய மனிதர் எழுந்து, பெர்த்தியர் என்பவரை வரவழைத்து, அவரோடு அந்த நதிக் கரையில் மேலும் கீழும் உலாவிக் கொண்டிருந்தார். அவருக்குக் கொடுக்க வேண்டிய உத்தரவுகளைக் கொடுத்து விட்டு, இடையிடையே அவருடைய கவனத்தைக் குழப்பி வந்த, அந்த மூழ்கிக் கொண்டிருந்த உலான்களை அதிருப்தியோடு நோக்கிக் கொண்டிருந்தார்.

அவரைப் பொறுத்த வரையில் இந்த பக்தி என்பது புது விஷயம் அல்ல. உலகத்தின் எந்த பாகத்திற்கு அவர் போனாலும், ஆப்பிரிக்காவிலிருந்து மாஸ்கோவின் சமவெளி வரை எந்த பாகத்திற்கு அவர் போனாலும், அவருடைய பிரசன்னமானது மக்களை ஊமையாக்கி, தங்களைத் தாங்களே தியாகம் செய்து கொள்ளும்படித் தூண்டிவிடும் என்பது அவருடைய நம்பிக்கை. தமது குதிரையை வரவழைத்து தமது ஜாகைக்கு சவாரி போனார்.

உதவிக்காகப் படகுகளை அனுப்பியபோதிலும், நாற்பது உலான்கள் வரை ஆற்றில் மூழ்கி இறந்து போனார்கள். உலான்களில் பெரும்பான்மையோர் மிகுந்த கஷ்டப்பட்டு தாங்கள் புறப்பட்ட கரைக்கே மீண்டும் வந்து சேர்ந்தார்கள். கர்னலும், அவரைச் சேர்ந்த சிலரும் மிகுந்த கஷ்டப்பட்டு எதிர் கரையை அடைந்தார்கள். தங்களுடைய நனைந்த, தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்த உடைகளோடு அவர்கள் எதிர் கரையின் மீது ஏறியதும், 'சக்கரவர்த்தி நீடூழி வாழ்க' என்று கோஷமிட்டு, நெப்போலியன் நின்று கொண்டிருந்த இடத்தை மகிழ்ச்சிப் பெருக்கோடு நோக்கினார்கள். ஆனால் அங்கே அவர் இல்லை. என்றாலும், அந்த வினாடியில் தாங்கள் சந்தோஷமய் இருப்பதாக அவர்கள் கருதினார்கள்.

அன்று மாலையில் இரண்டு உத்தர்வுகளை நெப்போலியன் பிறப்பித்தார். ருஷ்யாவில் உபயோகிப்பதற்கென்று தயாரித்து வைத்திருந்த கள்ள நோட்டுகளை, உடனே கொண்டு வரவேண்டும் என்பது ஒரு உத்தரவு. பிரஞ்சு ராணுவத்திற்கு கொடுக்கப்பட்ட உத்தரவுகளைப் பற்றிய ஒரு கடிதம் ஒரு சாக்ஸனிடம் அகப்பட்டது. அதற்காக அவனைச் சுட்டுக் கொல்லும்படி அவர் உத்தரவிட்டது இரண்டாவது உத்தரவாகும். இதற்கிடையில் அனாவசியமாக அந்த ஆற்றில் இறங்கிய அந்தப் போலிஷ் கர்னலுக்கு லீஜியின் பதக்கத்தைக் கொடுக்கும்படி மூன்றாவது உத்தரவாகப் பிறப்பித்தார்.

கடவுள் யாரை நாசமாக்க விரும்புகிறாரோ, அவர்களை முதலில் பைத்தியம் கொள்ளும்படி செய்கிறார்.




இதற்கிடையில் ருஷ்ய சக்கரவர்த்தி விலீனாவில் ஒரு மாதத்திற்கு மேலாகத் தங்கியிருந்தார். துருப்புக்களைப் பார்வை யிடுவதும், ராணுவ ஒத்திகைகளை நடத்து வதுமாக இருந்தார். யுத்தத்திற்காக ஒவ்வொரு வரும் எதிர்பார்த்துக் கொண்டிருந்த போதிலும், அதற்கான தயாரிப்புகளைச் செய்வதற்கு பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து சக்கரவர்த்தி வந்திந்த போதிலும், எதுவும் தயாராகவில்லை. யுத்தம் நடத்தும் முறையைப் பற்றி எவ்விதமான திட்டமும் இல்லை. யுத்தத்திற்காகத் தயார் செய்யப்பட்ட பற்பல திட்டங்களுக்கிடையே ஊசலாடிக் கொண்டிருந்தார்கள். தலைமைக் காரியலாயத்திற்கு சக்கரவர்த்தி வந்து ஒரு மாதம் ஆகியும் கூட, அந்த ஊசலாடுவது இன்னமும் அதிகரித்தே வந்தது. மூன்று ராணுவத்திற்கும் தனித் தனியாக சேனாதிபதிகள் இந்தார்கள். ஆனால் எல்லாப் படைகளுக்கும் சேர்ந்து ஒரு உயர்தர சேனாதிபதி இன்னும் ஏற்படவில்லை. அந்தப் பொறுப்பை சக்கரவர்த்தி தாமே மேற்கொள்ளவும் இல்லை.

விலீனாவில் சக்கரவர்த்தி எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகத் தங்கினாரோ, அவ்வளவுக் கவ்வளவு குறைவாகவே யுத்தத்திற்கான தயாரிப்புகளை ஒவ்வொருவரும் செய்தார்கள். காத்திருந்துக் காத்திருந்து அவர்கள் களைத்துப் போனார்கள். சக்கரவர்த்தியைச் சுற்றிலும் இருந்தவர்கள், சக்கரவர்த்தி மகிழ்ச்சியாக இருப்பதற்கும் நெருங்கிக் கொண்டிருக்கும் யுத்தத்தை அவர் மறப்பதற்கும் வேண்டிய காரியங்களைச் செய்வதற்கே அவர்கள் முயற்சித்தார்கள் என்று தோன்றியது.

ஜூன் மாதத்தில் பல நடனக் கச்சேரிகளையும் விருந்துகளையும், போலிஷ் பிரபுக்களும், ராஜ சபைத் தூதர்களும், சக்கரவர்த்தியும் நடத்தினார்கள். அவற்றிற்குப் பின்னால் சக்கரவர்த்தியின் மெய்க்காப்பாளர்கள் ஒரு நடனத்தையும் விருந்தையும் ஏற்பாடு செய்யவேண்டும் என்று ஒரு போலிஷ் மெய்க்காப்பாளருக்குத் தோன்றியது. இந்தக் கருத்தை ஆவலோடு வரவேற்றார்கள். சக்கரவர்த்தியும் சம்மதித்தார். அதற்கு வேண்டிய பணத்தை மெய்க்காப்பாளர்கள் சந்தா மூலம் சேகரித்தார்கள். சக்கரவர்த்திக்கு மிகவும் பிரியமானவள் என்று கருதப்பட்ட ஒரு சீமாட்டியை வரவேற்புத் தலைவியாக நியமித்தார்கள். விலீனா மாகாணத்தில் ஒரு நிலச்சுவான்தாரரான கோமகன் பெனிக்ஸன் என்பவர், கிராமத்திலுள்ள தமது மாளிகையை அந்த விருந்துக்காக

வழங்கினார். ஜாக்ரெட் என்ற இடத்திலுள்ள கோமகன் பெனிக்ஸனுடைய மாளிகையில் ஜூன் மாதம் 13-ந் தேதி யன்று நடனத்தையும் விருந்தையும் படகுப் போட்டிகளையும், வாண வேடிக்கைகளையும் நடத்துவதென்று தீர்மானித்தார்கள்.

அதே தினத்தில்தான் நீமென் நதியைக் கடந்து, அங்கிருந்த கோசாக்குகளை விரட்டி ருஷ்ய எல்லையைக் கடக்கும்படி, நெப்போலியன் தமது துருப்புக்களுக்கு உத்தரவு போட்டார். அதே தினத்தில் மாலையில்தான், பெனிக்ஸனுடைய மாளிகையில் தமது மெய்க்காப்பாளர்களால் கொடுக்கப்பட்ட விருந்து வைபவங்களை அலெக்ஜாண்டர் அனுபவித்துக் கொண்டிருந்தார்.

அது ஒரு பிரம்மாண்டமான, மகிழ்ச்சியான விருந்தாய் இருந்தது. ஒரு இடத்தில் அத்தனை அதிகமான அழகிகள் கூடி இருப்பது அபூர்வம் என்று, அம்மாதிரி விருந்துகளில் அனுபவப்பட்ட நிபுணர்கள் கூறினார்கள். பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து விலீனாவுக்கு சக்கரவர்த்தி வந்தபோது, அவருடன் தொடர்ந்து வந்த ருஷ்ய சீமாட்டிகளோடு கோமகள் பெஜூகாவாவும் பிரசன்னமாய் இருந்தாள். அவள் தன்னுடைய பெரிய ருஷ்ய மோஸ்தர் அழகினால் நாசூக்கான போலிஷ் சீமாட்டிகளின் அழகைத் தோற்கடித்து விட்டாள். சக்கரவர்த்தி அவளைக் கவனித்து, அவளோடு ஒரு நடனமாடி கௌரவித்தார்.

போரிஸ் ட்ருபெட்ஸ்கோய் தமது மனைவியை மாஸ்கோவில் விட்டு விட்டு, தாம் ஒரு தற்காலிக பிரம்மச்சாரி என்று சொல்லிக் கொண்டிருந்தார். அவரும் அவ்விருந்தில் பிரசன்னமாயிருந்தார். அவர் ஒரு மெய்க்காப்பாளராக இல்லாவிட்டாலும், அந்த விருந்து செலவிற்காக ஒரு பெரிய தொகையை நன்கொடையாகக் கொடுத்தார். போரிஸ் இப்பொழுது ஒரு பணக்காரராய் விளங்கினார். மிகப் பெரிய கௌரவங்களையும் பதவிகளையும் அவர் பெற்றிருந்தார். மற்றவர்களின் தயவை அவர் இப்பொழுது எதிர்பார்ப்பது இல்லை. தம்முடைய வயதிற்கு ஒத்தவர்களான மிகப் பெரிய பதவியிலுள்ளவர்களோடு, சம அந்தஸ்தில் நடமாடிவந்தார். விலீனாவில் ஹெலனை அவர் சந்தித்தார். வெகு காலமாக அவளை அவர் பார்க்கவில்லை. கடந்த காலத்தைப் பற்றி அவளிடம் அவர் பிரஸ்தாபிக்கவும் இல்லை. மற்றொரு வெகு முக்கியமான கனவானின் ஆதரவை' ஹெலன் அப்பொழுது அனுபவித்து வந்தபடியாலும், சமீபத்தில் தான் போரிஸ் திருமணம் செய்துகொண்டிருந்தபடியாலும், அவர்கள் இருவரும் வெகு காலமாகப் பழகிய நல்ல நண்பர்கள் என்ற முறையிலேயே சந்தித்துக் கொண்டார்கள்.

நள்ளிரவிலும் நடனம் இன்னும் நடந்து கொண்டிருந்தது. ஹெலனுக்கு ஒரு தகுந்த ஜோடி அகப்படாதபடியால் போரிஸோடு மாஜுர்கா என்ற நடனத்தை ஆடலாமென்று அவள் சொன்னாள். அந்த நடனத்தில் அவர்கள் மூன்றாவது ஜோடி. கருப்பான, தங்க வேலைப்பாடுகள் உள்ள கண்ணாடி போன்ற மெல்லிய பட்டு கவுனுக்கு வெளியாகத் தெரிந்து கொண்டிருந்த, கண்ணைப் பறிக்கும் ஹெலனுடைய தோள்களை, அமைதியாக போரிஸ் நோக்கிக்கொண்டிருந்தார். தங்களுடைய பழைய அறிமுகமானவர் களைப் பற்றி அவர் அவளோடு பேசிக்கொண்டிருந்தார். அதே சமயத்தில், அவர் தம்மையும் அறியாமல், மற்றவர்களாலும் கவனிக்கப்படாமல், அதே அறையில் இருந்த சக்கரவர்த்தியை ஒரு வினாடிகூட விடாமல் கவனித்துக் கொண்டிருந்தார். சக்கரவர்த்தி நடனமாடவில்லை. வாசலுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டு, அதன் வழியாகப் போய்க்கொண்டிருந்த ஜோடிகளிடம், தமது கருணை வாய்ந்த வார்த்தைகளை மொழிந்து கொண்டிருந்தார். அச்சமயம் எப்படிப் பேச வேண்டும் என்பதை அவர் ஒருவரே அறிவார்.

மாஜுர்கா நடனம் ஆரம்பமானவுடன், காப்பாளர் ஜெனரலான பலாஷேவ் என்பவர்-சக்கரவர்த்தியிடம் நெருங்கியிருப்பவர்களில் அவர் ஒருவர்-சக்கரவர்த்தியிடம் போவதை போரிஸ் கவனித்தார். சக்கரவர்த்தி ஒரு போலிஷ் சீமாட்டியோடு பேசிக்கொண்டிருந்தார். அச்சமயம் சக்கரவர்த்தியின் சமீபத்தில் போய் நிற்பது ராஜ சபை மரியாதைகளுக்கு விரோதமானது என்றாலும், அந்த பலாஷேவ் சக்கரவர்த்தியின் பக்கத்தில் போய் நின்றார். அவளிடம் பேசியதை முடித்த பின்பு, ஒரு கேள்விக் குறியோடு பலாஷேவை சக்கரவர்த்தி நோக்கினார். ஏதோ ஒரு முக்கியமான காரணம் இருந்ததினால்தான் பலாஷேவ் அம்மாதிரி நடக்கிறார் என்பதை சக்கரவர்த்தி அறிந்து கொண்டார். உடனே அந்த சீமாட்டிக்கு லேசாகத் தலையை அசைத்து வழி அனுப்பி விட்டு, பலாஷேவிடம் திரும்பினார். பலாஷேவ் பேச ஆரம்பித்தவுடன், சக்கரவர்த்தியின் முகத்தில் ஒரு திகைப்பு காணப்பட்டது. அவர் பலாஷேவின் கையைப் பற்றி அந்த அறையைக் கடந்து போனார். அவர் வருவதைப் பார்த்ததும், அங்கிருந்த விருந்தாளிகள் சுமார் 7 கெஜ தூரம் விலகி நின்று, அவர் அவர் போவதற்கு வழிவிட்டார்கள். சக்கரவர்த்தி பலாஷேவோடு வெளியே போனபோது, அராக்சீவினுடைய பரபரப்பான முகத்தை போரிஸ் கவனித்தார். தமது சிவந்த நாசியால் மூச்சை உள்ளே இழுத்துக் கொண்டு, கீழ் நோக்காக சக்கரவர்த்தியை அராக்சீவ் பார்த்துக்கொண்டு, சக்கரவர்த்தி ஏதாவது தம்மிடம் சொல்லலாமென்று எதிர்பார்த்தவராக, இந்த கூட்டத்திலிருந்த

முன்னால் வந்தார். தமது மூலமாக அல்லாமல், சக்வர்த்திக்கு ஒரு முக்கியமான செய்தி கிடைத்ததற்காக பலாஷேவ் மீது அராக்சீவ் மன வருத்தம் அடைந்திருக்கிறார் என்பதை போரிஸ் அறிந்து கொண்டார்.

ஆனால், சக்கரவர்த்தியும் பலாஷேவும் பிரகாசமாய் வெளிச்சம் போடப்பட்ட தோட்டத்திற்குள் போனார்கள். அராக்சீவை அவர்கள் கவனிக்கவில்லை. அராக்சீவ் தனது உடைவாளின் மீது கையை வைத்துக் கொண்டு, கோபமாக சுற்றிலும் நோக்கிக் கொண்டு, சுமார் 20 அடிகளுக்குப் பின்னால் அவர்களைத் தொடர்ந்து போய்க் கொண்டிருந்தார்.

மாஜுர்கா நடனத்தை ஆடிக்கொண்டிருந்த போதெல்லாம் போரிஸின் மனம் வேதனைப் பட்டுக்கொண்டிருந்தது. எம்மாதிரி செய்தியை பலாஷேவ் கொண்டு வந்திருந்தார் என்பதைப் பற்றியும், மற்றவர்களுக்கு முன்பாக அதை எப்படி அறிந்து கொள்வது என்பதைப் பற்றியும் அவர் கவலை கொண்டிருந்தார்.

நடனமாடுவதற்கு மற்றொரு பெண்ணைத் தேர்ந்தெடுக்க வேண்டுமாகையால், கோமகள் பாட்டாகா என்பவளைத் தேர்ந்தெடுக்கப்போவதாக, ஹெலனிடம் போரிஸ் மெதுவாகச் சொன்னார். அந்த கோமகள் வெளியே தாழ்வாரத்திற்குப் போயிருப்பதாக அவர் நினைத்தார். ஆகவே அந்த மரத்தாலான தள வரிசை மீது அவர் வெளியே போனார். அங்கே தோட்டத்தில் பலாஷேவும் சக்கரவர்த்தியும் பேசிக்கொண்டிருந்து விட்டு, மீண்டும் தாழ்வாரத்திற்கு வந்துகொண்டிருப்பதைப் பார்த்தார். உடனே அசையாமல் நின்றார். அவர்கள் வாசலை நோக்கி வந்தார்கள். தாம் நின்ற இடத்திலிருந்து விலகிப் போக அவகாசம் இல்லாதபடியால், அந்த கதவுக் கம்பத்திலேயே மரியாதையோடு ஒண்டி நின்று, போரிஸ் தமது தலையைக் கீழே சாய்த்தார்.

சொந்த முறையில் அவமானப்படுத்தப்பட்டதுபோல, பரபரப்படைந்து சக்கரவர்த்தி பின்கண்ட வார்த்தைகளைப் பேசிக்கொண்டு வந்தார்: 'யுத்தப் பிரகடனம் செய்யாமல் ருஷ்யாவிற்குள் நுழைவதா எதிரியின் பட்டாளத்தைச் சேர்ந்த ஒருவன்கூட எனது நாட்டிற்குள் இருக்கிற வரையில், நான் சமாதானம் செய்துகொள்ள மாட்டேன்.'

இந்த வார்த்தைகளைப் பேசுவதற்கு சக்கரவர்த்தி மிகுந்த மகிழ்ச்சி கொண்டிருந்தார் என்று போரிஸுக்குத் தோன்றியது. சக்கரவர்த்தி சொல்லிய தோரணையில் சக்கரவர்த்தி திருப்தி அடைந்திருந்தார்.

ஆனால் போரிஸ் இதைக் கேட்டு விட்டாரே என்பதில் அதிருப்தி கொண்டார்.

'ஒருவருக்கும் இது தெரியக்கூடாது' என்று முகத்தைச் சுளித்து சக்கரவர்த்தி மேலும் பேசினார்.

இம்மாதிரி அவர் சொல்லியது தமக்காகத்தான் என்பதை போரிஸ் அறிந்து, கண்களை மூடிக்கொண்டு லேசாகத் தலை வணங்கினார். சக்கரவர்த்தி மீண்டும் நடன அறைக்குள் நுழைந்து, அங்கே சுமார் அரை மணி நேரம் தங்கினார்.

நீமென் நதியைப் பிரஞ்சுத் துருப்புக்கள் கடந்து விட்டன என்ற செய்தியை, போரிஸ் இந்த விதமாக முதன் முதலில் அறிந்து கொண்டார். இதை அவர் சில முக்கியமான பிரமுகர்களிடம் சொல்லி, மற்றவர்களுக்குத் தெரிய முடியாத விஷயங்கள் தமக்குப் பழக்கமாகத் தெரிந்துவிடும் என்று அவர் காட்டிக் கொண்டார். இதனால் அவர்களுடைய மதிப்பில் அவருடைய அந்தஸ்து உயர்ந்தது.

ஒரு மாதத்திற்கு மேலாக எதிர்பார்த்து ஏமாந்த பின்பு, பிரஞ்சுத் துருப்புக்கள் நீமென் நதியைக் கடந்து விட்டார்கள் என்ற எதிர்பாராத செய்தி, அதுவும் ஒரு நடனக் கச்சேரியில் வந்து சேர்ந்தது, முக்கியமாக திடுக்கிடக்கூடியதாய் இருந்தது. அந்தச் செய்தியைக் கேட்டவுடன், கோபத்தினாலும் வெறுப்பினாலும் ஒரு வாக்கியத்தை சக்கரவர்த்தி உபயோகித்தார். அது அவருக்கு இனிமையாகவும், அவருடைய முழு உணர்ச்சியையும் காட்டுவதாகவும் இருந்தது. அந்த வாக்கியம் பின்னால் பிரசித்தமடைந்தது. சக்கரவர்த்தி தமது அரண்மனைக்குக் காலையில் 2-மணிக்குத் திரும்பியதும், தமது காரியதரிசி ஷிஷ்கோவை அழைத்தார். துருப்புகளுக்கு ஒரு பிரகடனத்தைத் தயாரிக்கும் படியும், பீல்ட் மார்ஷல் இளவரசர் சால்ட் டிகோவுக்கு ஒரு பதில் தயாரிக்கும்படியும் உத்தரவிட்டார். ருஷ்ய நாட்டில் ஒரு பிரஞ்சு சிப்பாய் இருக்கிற வரையில், தாம் சமாதானம் செய்ய முடியாது என்பதை, அந்த பதிலில் சேர்க்கும்படி அவர் வற்புறுத்தினார்.

மறுநாள் அடியில் கண்ட கடிதத்தை நெப்போலியனுக்கு அனுப்பினார்கள்:

திருவாளரான எனது அன்பரே,

மாட்சிமை தங்கிய உம்மிடம் விசுவாசத்தோடு எனது வாக்குறுதிகளை நிறைவேற்றி வந்திருந்த போதிலும், உமது துருப்புகள் ருஷ்ய எல்லையைக் கடந்து விட்டதாக நேற்று நான் கேள்விப்பட்டேன். இளவரசர் குராகின் என்று தமது பிரயாணச்

சீட்டுகளைக் கேட்டாரோ, அன்றிலிருந்து நீர் என்னுடன் யுத்த நிலைமையில் இருப்பதாய் கருதுவதாகவும், அதுதான் உமது துருப்புகளின் ஆக்கிரமிப்புக்குக் காரணம் என்றும், கோமகன் லாவ்ரிஸ்டன் எனக்கு அனுப்பிய கடிதம், பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து இப்பொழுதுதான் கிடைத்தது. பாசானோ டியூக் அந்த பிரயாணச் சீட்டுகளைக் கொடுக்க முடியாது என்பதற்கு, காரணங்கள் காட்டியிருந்தார். அவற்றைப் பார்த்த பின்பு, அந்த சம்பவத்தை ஒரு காரணமாகக் கொண்டு, இந்த ஆக்கிரமிப்பு நடக்கும் என்பதை நான் நினைக்கவேயில்லை. அந்த ஸ்தானாதிபதியே, தாம் பிரயாணச் சீட்டுகளைக் கேட்பதற்கு தமக்கு யாரும் சொல்லவில்லை என்று கூறியிருக்கிறார். அந்த விஷயம் எனக்குத் தெரிந்தவுடன், அதை நான் ஒப்புக் கொள்ளவில்லை என்பதை அவர் தெரியும்படி செய்ததோடு, அந்த ஸ்தானாதிபதி தமது பதவியிலேயே தொடர்ந்து இருக்கும்படி நான் உத்தரவிட்டேன். அந்த தப்பபிப்பிராயத்திற்காக, நமது மக்களின் ரத்தத்தை சிந்த மாட்சிமை தங்கிய நீர் உத்தேசிக்கவில்லையானால், ருஷ்யப் பிரதேசத்திலிருந்து உமது துருப்புக்களை வாபஸ் வாங்க சம்மதிப்பீரானால், நடந்துபோன விஷயங்களை நடக்காதது போல நான் எடுத்துக் கொள்வேன். தவிர, நமக்குள் ஒரு ஒப்பந்தத்திற்கு வருவதும் சாத்தியமாயிருக்கும். அப்படி இல்லையென்றால், மாட்சிமை தங்கியவரே, அந்த படையெடுப்பை எதிர்த்தடிக்கும்படி நான் செய்ய வேண்டியதாயிருக்கும். அந்த படையெடுப்புக்கு நான் பொறுப்பல்ல. மற்றொரு யுத்தத்தினால் ஏற்படக்கூடிய பேராபத்துக்களிலிருந்து மனித சமூகத்தைக் காப்பாற்றுவது, இன்னமும் மாட்சிமை தாங்கி உம்மையே சார்ந்திருக்கிறது.

இப்படிக்கு,

அலெக்ஜாண்டர்.



ஜூன் 14-ந்தேதி யன்று காலை இரண்டு மணிக்கு பலாஷேவை சக்கரவர்த்தி வரவழைத்தார். நெப்போலியனுக்கு தாம் எழுதிய கடிதத்தை அவரிடம் வாசித்துக் காட்டி, அதை எடுத்துக் கொண்டு போய் பிரஞ்சு சக்கரவர்த்தியிடம் நேராகக் கொடுக்கும்படி உத்தரவிட்டார். ருஷ்ய பூமியில் எதிரியைச் சேர்ந்த ஒரு வீரர் இருக்கிற வரையில், தாம் சமாதானம் செய்து கொள்ள முடியாது

என்ற வார்த்தைகளைச் சக்கரவர்த்தி மீண்டும் பலாஷேவுக்கு எடுத்துக் கூறி, அந்த வார்த்தைகளை நெப்போலியனிடம் சொல்லும்படி உத்தரவிட்டு, அவரை அனுப்பினார். நெப்போலியனுக்கு தாம் எழுதிய கடிதத்தில் அலெக்ஜாண்டர் அதைச் சேர்க்கவில்லை. ஏனெனில், சமாதானத்திற்காக ஒரு கடைசி முயற்சி நடக்கும் போது, இச்சமயத்தில் அந்த வார்த்தைகளைக் கடிதத்தில் சேர்ப்பது விவேகமாய் இருக்காது என்று அவர் உணர்ந்தார். ஆனால், அந்த வார்த்தைகளை நெப்போலியனிடம் நேராகச் சொல்லும்படி பலாஷேவிடம் அவர் திட்டமாகக் கூறினார்.

14-ந்தேதி ய்ன்று இரவில், இரண்டு கோசாக்குகளும் ஒரு எக்காளக்காரனும் பின் தொடர, பலாஷேவ் ரைகோண்டி என்ற கிராமத்திலுள்ள பிரஞ்சு காவல் முகாமிற்கு அருணோதயத்தில் போய்ச் சேர்ந்ததார். நீமென் நதிக்கரையின் இப்பக்கத்தில், ருஷ்ய நாட்டில் அந்த கிராமம் இருந்தது. அங்கே காவல் குதிரை வீரர்கள் அவரை நிறுத்தினார்கள்.

குதிரைப் படையைச் சேர்ந்த ஒரு சிறிய அதிகாரி, சிவப்பு சீருடை அணிந்து, ரோம குல்லாய் தரித்து நின்றவன், வந்து கொண்டிருக்கும் பலாஷேவை நிற்கும்படி கூச்சலிட்டான். பலாஷேவ் உடனே அப்படிச் செய்யவில்லை. நடக்கும் வேகத்தில் அந்த ரஸ்தாவில் மேலும் போய்க்கொண்டிருந்தார்.

அந்த சிறிய அதிகாரி முகம் சுளித்து திட்டிக்கொண்டு தனது குதிரையின் மார்பை பலாஷேவ் மீது இடிக்கிற விதத்தில், முன்னேறினான். தன்னுடைய உடைவாளில் கை வைத்துக்கொண்டு, முரட்டுத்தனமாக அந்த ருஷ்ய ஜெனரலைப் பார்த்துக் கூச்சலிட்டு, தான் சொல்லுகிறபடி அவர் செய்யாமல் இருப்பதனால், அவர் என்ன செவிடரா என்று கேட்டான். தாம் யார் என்பதை பலாஷேவ் சொன்னார். அந்த ருஷ்ய ஜெனரலைத் திரும்பிப் பார்க்காமலேயே, அந்த சிறிய அதிகாரி தனது சகபாடிகளுடன் பட்டாளம் சம்பந்தமான பேச்சுகளைப் பேசிக்கொண்டிருந்தான்.

மிகவும் உயர்ந்த அதிகார பீடமாகிய தலைநகரில் வசித்த பின்பு, மூன்று மணி நேரங்களுக்கு முன்பாக சக்கரவர்த்தியிடம் உரையாடல் செய்த பின்பு, எப்பொழுதுமே ராணுவத்தில் தமக்குள்ள மரியாதைகளைப் பெற்றுப் பழக்கமாகியிருந்த அந்த பலாஷேவுக்கு, ருஷ்ய நாட்டிலேயே இந்த விரோதமான, மரியாதைக் குறைவான மிருக பலத்தைத் தமக்கு எதிராக உபயோகித்தது விசித்திரமாய் இருந்தது.

அப்பொழுதுதான் மேகங்களுக்குப் பின்னால் சூரியன் வெளிப்பட்டுக் கொண்டிருந்தான். காற்று பனி நிறைந்து பரிசுத்தமாயிருந்தது. ஒரு மந்தை கால்நடைகளைக் கிராமத்திலிருந்து அந்த ரஸ்தா வழியாக ஓட்டிக்கொண்டு போனார்கள். தண்ணீரில் கிளம்பும் கொப்புளங்களைப் போல, அந்த வயல்களிலிருந்து வானம்பாடிகள் ஒன்றன்பின் ஒன்றாகப் படபடத்துக் கொண்டு மேலே கிளம்பின.

கிராமத்திலிருந்து வரவேண்டிய ஒரு அதிகாரிக்காக, பலாஷேவ் காத்துக்கொண்டிருக்கும்போது சுற்றும் முற்றும் பார்த்தார். ருஷ்ய கோசாக்குகளும் எக்காளக்காரனும் பிரஞ்சு குதிரை வீரர்களும் அடிக்கடி ஒருவரை ஒருவர் மௌனமாய் பார்த்துக்கொண்டு நின்றார்கள்.

அப்பொழுதுதான் படுக்கையிலிருந்து எழுந்தவர் போல, ஒரு பிரஞ்சு குதிரைப்படை கர்னல் கிராமத்திலிருந்து ஒரு மழமழப்பான, அழகான, சாம்பல் வர்ண குதிரை மீது ஏறிக்கொண்டு, இரண்டு குதிரை வீரர்கள் பின்தொடர, வந்து சேர்ந்தார். அந்த அதிகாரியும், சிப்பாய்களும், அவர்களுடைய குதிரைகளும், எல்லாம் நேர்த்தியாக இருந்தன.

அந்த படையெடுப்பின் ஆரம்ப காலமாக அது இருந்தபடியால், அந்த துருப்புகளுள் எல்லாரும் சமாதான காலத்து ராணுவ ஒத்திகைகளில் இருப்பவர்களைப்போல பூர்ண ஒழுங்கோடு உடைகளிலும் மற்றவைகளிலும் இருந்தார்கள். ஆனால், ஒரு படையெடுப்பின் ஆரம்பத்தில் காணப்படுவதைப் போன்ற ராணுவ தோற்றங்களோடும், மகிழ்ச்சியோடும், துணிச்சலோடும் அவர்கள் காணப்பட்டார்கள்.

மிகுந்த கஷ்டத்தோடு தமக்கு வந்த கொட்டாவியை அந்த பிரஞ்சு கர்னல் அடக்கினார். ஆனால், மிகுந்த மரியாதையோடு இருந்தார். ஆகவே, பலாஷேவின் முக்கியத்துவத்தை அவர் அறிந்திருந்தார் என்று தோன்றியது. அவர் பலாஷேவை அழைத்துக் கொண்டு, தமது சிப்பாய்களைக் கடந்து, காவல் முகாமிற்குப் பின்னால் சென்றார். சக்கரவர்த்தியைச் சந்திக்க வேண்டுமென்ற அவருடைய விருப்பம், அநேகமாக உடனேயே நிறைவேறிவிடுமென்றும், ஏனெனில் சக்கரவர்த்தியின் முகாம் வெகு தூரத்தில் இல்லை என்றும் அவர் சொன்னார்.

ரைகோன்டி கிராமத்தின் வழியாக, அங்கே கட்டிப்போட்டிருந்த பிரஞ்சு குதிரைகளைக் கடந்து, கர்னலுக்கு சலாம் செய்து, ஒரு ருஷ்ய சீருடையைப் பார்த்து ஆச்சரியப்பட்டு வெறித்து நோக்கிய காவல்

வீரர்களைக் கடந்து, கிராமத்திற்கு வெளியே மற்றொரு கோடி வழியாகச் சவாரி போனார்கள். அந்த டிவிஷன் கமாண்டர் ஒன்றேகால் மைலுக்கு அப்பால் இருப்பதாகவும், அவர் பலாஷேவை வரவேற்று அவர் போக வேண்டிய இடத்திற்குக் கொண்டு சேர்ப்பார் என்றும் அந்த கர்னல் சொன்னார்.

சூரியன் இப்பொழுது மேலே எழுந்து, மகிழ்ச்சியோடு அந்த வயல்களின் மீது பிரகாசித்துக் கொண்டிருந்தான்.

ஒரு கள்ளுக்கடையை அவர்கள் கடந்து, ஒரு குன்றின் மீது ஏறிக்கொண்டிருக்கும்போது, குதிரை வீரர்களின் கூட்டம் ஒன்று அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்தது. அந்தக் கூட்டத்தின் முன்பாக, ஒரு கருப்புக் குதிரைமீது ஒரு உயரமான மனிதர் சவாரி வந்தார். அவருடைய ஆடைகளிலுள்ள அலங்காரங்கள் சூரிய வெளிச்சத்தில் மின்னிக் கொண்டிருந்தன. அவருடைய தொப்பியில் தோகைகள் வைக்கப்பட்டிருந்தன. அவருடைய சுருளையான கருப்புத் தலைமுடி தோள்களில் தொங்கிக்கொண்டிருந்தது. ஒரு சிவப்பு மேலங்கி அணிந்து, பிரஞ்சு மோஸ்தரில் தமது நீளமான கால்களை முன்னால் நீட்டிக்கொண்டிருந்தார். இந்த மனிதர் தமது தோகைகள் பறக்க, தம்முடைய முத்துக்களும் தங்க சரிகைகளும் பிரகாசமான ஜூன் மாதத்திற்கு சூரிய ஒளியில் மின்ன, பலாஷேவை நோக்கி வேகமாய் சவாரி வந்தார்.

அந்த மனிதர், காப்புகளுடனும், தோகைகளுடனும், கழுத்தாரங்களுடனும், தங்கப் பின்னல் வேலைகளுடனும், நாடக பணியில், பவித்திரமான தோற்றத்தோடு, பலாஷேவிற்கு இரண்டு குதிரை தூரத்தில் வந்து கொண்டிருந்தபோது, ஜூல்நர் என்ற அந்த பிரஞ்சு கர்னல் மரியாதையோடு, 'இவர்தான் நேப்பிள்ஸ் மன்னர்' என்று மெதுவாகக் கூறினார். முராட் என்பவர், இப்பொழுது 'நேப்பிள்ஸ் மன்னர்' என்று அழைக்கப்படுகிறார். அவர் எதற்காக நேப்பிள்ஸ் மன்னராக இருக்க வேண்டும் என்ற விஷயம், முற்றிலும் புத்திக்கு எட்டாததாக இருந்தாலும், அவர் அப்படித்தான் அழைக்கப்பட்டார். அவரும் அப்படியே இருப்பதாக நம்பிக்கை கொண்டிருந்தார். ஆகவே, முன் இருந்ததை விட, மிகுந்த பவித்திரமான, முக்கியமான முகபாவத்தை அவர் மேற்கொண்டார். தாம் உண்மையாகவே நேப்பிள்ஸின் மன்னர் என்பதில் அவர் அவ்வளவு நிச்சயமாக இருந்தார். அந்தப் பட்டணத்திலிருந்து அவர் புறப்படுவதற்கு முதல் நாளன்று தமது மனைவியோடு தெருக்களில் அவர் நடந்து போனபோது, சில இத்தாலியர்கள் அவரைப் பார்த்து, 'மன்னர் நீடூழி வாழ்க' என்று கோஷமிட்டார்கள். அச்சமயத்தில்

அவர் உடனே தமது மனைவியை ஒரு சோகமான புன்முறுவலோடு பார்த்துச் சொன்னார்: 'பாவம், அவர்களை நான் விட்டுவிட்டு, நாளை போகிறேன் என்பது அவர்களுக்குத் தெரியாது.'

தாம் நேப்பள்ஸின் மன்னர் என்பதை அவர் உறுதியாக நம்பியபோதிலும், தமது பிரஜைகளைவிட்டுப் போவதற்காக, அவர்கள் கொண்டுள்ள துக்கத்திற்கு இரங்கியபோதிலும், டான்ஜிக்கில் கடைசியாகத் தமது மைத்துனரான நெப்போலியனை பேட்டி கண்ட பின்பு, அவர் ஒரு விஷயத்தை அறிந்து கொண்டார். அதாவது, அவர் மீண்டும் ராணுவ சேவைக்குத் திரும்ப வேண்டுமென்று உத்தரவிடப்பட்ட பின்பு, நெப்போலியன் அவரைப் பார்த்து சொன்னார்: 'நான் உம்மை மன்னராக்கியது எதற்காக என்றால், என்னுடைய வழியில் நீர் ஆளவேண்டும் என்பதற்காகவே ஒழிய, உம்முடைய வழியில் ஆளவேண்டும் என்பதற்காக அல்ல. இதைக் கேட்ட பின்பு, அவர் மகிழ்ச்சியோடு, தமக்குப் பழக்கமான ராணுவ சேவையில் இறங்கினார். நன்றாகத் தீனி போடப்பட்ட, ஆனால், அதிகமான தீனி போடப்படாத, ஒரு குதிரைக்கு கடிவாளத்தைப் போட்டவுடன், எப்படி நோக்கால் களுக்கு இடையில் பிலுக்கிக் கொண்டிருக்குமோ அதே மாதிரி அதிக விலை மதிப்புள்ள, பல வர்ணங்கள் கொண்ட ஆடைகளை அவர் அணிந்து, திருப்தியோடு, மகிழ்ச்சியோடு தாம் எங்கே போகிறார், எதற்காகப் போகிறார் என்பதை அறியாமல், போலந்து ரஸ்தாக்களில் குதிரை மீது பாய்ச்சலில் சவாரி செய்துகொண்டிருந்தார்.

ருஷ்ய ஜெனரலைப் பார்த்ததும் தமது தலையைப் பின்னால் சாய்த்து, நீளமான சுருளைத் தலைமுடி தோள்களில் தொங்க, ராஜ முறையில் கம்பீரமான தோற்றத்தோடு, அந்த பிரஞ்சு பலாஷேவின் தூது விஷயத்தை மாட்சிமை தங்கியவருக்குத் தெரிவித்தார். பலாஷேவின் பெயரை அவரால் சரியாக உச்சரிக்க முடியவில்லை.

'டி பால்-மாச்சேவ்' என்று மன்னர் சொன்னார். (கர்னலுக்கு ஏற்பட்ட உச்சரிப்புக் கஷ்டத்தைத் தாம் சமாளித்து விட்டதாக நம்பினார்) 'ஜெனரலே, உம்முடன் அறிமுகமானதைப்பற்றி நான் மகிழ்ச்சியடைகிறேன்' என்று ஒரு ராஜ தயவோடு அவர் பேசி முடித்தார்.

அவர் சப்தமிட்டும் வேகமாகவும் பேச ஆரம்பித்தவுடன், அந்த ராஜ கம்பீரம் அவரைவிட்டு ஓடிவிட்டது. அதை அவர் கவனிக்காமல் தமது இயற்கையான குரலோடு அன்னியோன்னியமாக, நல்ல சுபாவத்தில் பேச ஆரம்பித்தார்.

பலாஷேவின் குதிரையின் சேணத்தின் மீது அவர் தமது கையை வைத்து, 'நல்லது, ஜெனரலே, இது யுத்தம் என்றுதான் தோன்றுகிறது' என்று சொன்னார். அதாவது, அப்பொழுது ஏற்பட்ட சந்தர்ப்பத்தை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை என்பதற்காக வருந்துவது போல, அவர் கூறியது இருந்தது.

'மாட்சிமை தங்கியவரே, சக்கரவர்த்தியான எனது எஜமான், யுத்தத்தை விரும்பவில்லை. மாட்சிமை தங்கிய நீரும்...' என்று பலாஷேவ் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், மாட்சிமை தங்கிய என்ற வார்த்தையை உபயோகித்து வந்தார். அந்தப் பட்டத்தைத் தரித்திருந்தவருக்கு அது ஒரு விசித்திரமாகக் காணப்பட்டதால், பலாஷேவ் கூறிய வார்த்தைகளிலும் செயற்கையே காணப்பட்டது.

அவர் திருவாளர் பலாஷேவின் பேச்சைக் கேட்கும்போது, முராட்டின் முகத்தில் ஒரு மூடத்தனமான மகிழ்ச்சியின் ஒளி வீசியது. ஆனால், மன்னர்கள் தங்களுடைய கடமைகளைச் செய்தாக வேண்டும். ஒரு மன்னர் என்ற முறையிலும், ஒரு தோழர் என்ற முறையிலும், ராஜாங்க விஷயத்தைப்பற்றி அலெக்ஜாண் டரின் தூதரோடு பேச வேண்டியது, தமது கடமை என்று அவர் உணர்ந்தார். உடனே குதிரையைவிட்டுக் கீழே இறங்கி, பலாஷேவின் கையைப் பற்றி, தமது பரிவாரங்களைவிட்டு சிறிது தூரம் தள்ளி அவரை அழைத்துச் சென்று, அவரோடு முக்கியத்துவமாய் பேச முயற்சித்து, மேலும் கீழும் உலாவினார். தமது துருப்புக்களை பிரஷ்யாவிலிருந்து வாபஸ் வாங்க வேண்டுமென்று கூறியபோது, நெப்போலியன் சக்கரவர்த்தி அதை மிகவும் வெறுத்தார் என்ற உண்மையை, அவர் சுட்டிக் காட்டினார். அம்மாதிரி கேட்டது வெளிப்படையாகத் தெரிந்து விட்டபடியால், அது பிரான்ஸின் கௌரவத்தைப் பாதித்துவிட்டது என்று சொன்னார்.

அந்த கோரிக்கையில் ஆட்சேபகரமானது எதுவும் இல்லையென்றும், ஏனென்றால்... என்ற பலாஷேவ் பதில் கூறுவதை முடிக்க விடாமல் முராட் இடைமறித்தார்.

'அப்படியானால், அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி ஆக்கிரமிப்புக்காரர் என்று நீர் நினைக்கவில்லையா?' என எதிர்பாராத விதமாக ஒரு அற்பமான, அறிவில்லாத புன்னகையோடு அவர் கேட்டார்.

யுத்தத்திற்குக் காரணம் நெப்போலியன்தான் என்று அவர் ஏன் நினைக்கிறார் என்பதை பலாஷேவ் சொன்னார்.

'ஓ, எனது அருமையான ஜெனரலே' என்று மீண்டும் முராட் இடைமறித்தார். 'சக்கரவர்த்திகள் தங்களுக்குள்ளாகவே இந்த விஷயத்தைப் பேசி முடித்துக்கொள்ள வேண்டுமென்றும், என்னுடைய விருப்பத்தினால் இந்த யுத்தம் ஆரம்பிக்கப் படவில்லை என்றும், வெகு சீக்கிரமாக இது முடிந்துவிட வேண்டுமென்றும், நான் மனப்பூர்வமாக விரும்புகிறேன்' என்று அவர் சொன்னார். அவர் சொல்லியது எஜமான்களுக்குள் சண்டை இருந்தாலும், அவர்களுடைய சேவகர்கள் ஒருவருக்கொருவர் சிநேகமாய் இருக்க விரும்புவதைப்போல இருந்தது.

கிராண்ட் டியூக்கினுடைய சௌக்கியத்தைப் பற்றி அவர் விசாரித்தார். நேப்பிள்ஸ் நகரத்தில் அவரோடு மகிழ்ச்சியுடனும், தமாஷாகவும் இருந்த நினைவுகளை எடுத்துச் சொன்னார். உடனே திடீரென்று தமது ராஜ அந்தஸ்தை நினைப்பவரைப்போல, பவித்திரமாக நிமிர்ந்து முடி சூட்டுவதற்குத் தாம் நிமிர்ந்து நின்ற முறையில் நின்று, தமது வலது கையை ஆட்டிச் சொன்னார்:

'ஜெனரலே, நான் உம்மைத் தாமதப்படுத்தி வைக்கமாட்டேன். உமது தூது வெற்றி பெறுமாக' என்று கூறிவிட்டு, தங்கப் பின்னல் வேலை செய்த அவருடைய சிவப்பு மேலங்கியும் ஆட, அவருடைய தோகைகளும் ஆட, அவருடைய ஆபரணங்கள் ஜொலிஜொலிக்க, மரியாதையோடு அவருக்காகக் காத்து நின்ற அவருடைய பரிவாரங்களோடு போய்ச் சேர்ந்துகொண்டார்.

முராட் பேசிய வார்த்தைகளிலிருந்து, வெகு சீக்கிரம் தம்மை நெப்போலியன் முன்பு கொண்டுபோய் விடுவார்கள் என்ற நம்பிக்கையோடு, பலாஷேவ் மேலும் சவாரி போனார். ஆனால், அதற்குப் பதிலாக, அடுத்த கிராமத்தில் டாவூட்டின் காலாட் படையைச் சேர்ந்த காவலாளிகள் அவரை நிறுத்தினார்கள். முதலில் காவல் முகாமில் அவரை நிறுத்தியது போல, இங்கேயும் நிறுத்தினார்கள். அந்த காலாட் படையின் கமாண்டருடைய உதவியாளர், அவரை மார்ஷல் டாவூட் தங்கியிருக்கும் கிராமத்திற்கு அழைத்துப் போனார்.

## 9

### 5

அலெக்ஜாண்டருக்கு அராக்சீவ் எப்படியோ, அதே மாதிரி நெப்போலியனுக்கு டாவூட் இருந்தார். அராக்சீவைப் போல, இவர் ஒரு கோழை அல்ல. தம்முடைய சக்கரவர்த்திக்கு தம்முடைய பக்தியைக் காட்டுவதற்கு, கொடுமையைத்

தவிர, வேறு வழி அவருக்குத் தெரியாது. ஆகவே, ரொம்ப கணக்காகவும், ரொம்ப கொடூரமாகவும், அராக்சீவைப் போலவே இருந்தார்.

இயற்கையின் அமைப்பிற்கு ஓநாய்கள் எவ்வளவு அவசியமோ அதே மாதிரி ராஜாங்கங்களின் அமைப்பிற்கு, இம்மாதிரி மனிதர்களும் அவசியம். ராஜாங்கத் தலைவர்களுக்குச் சமீபமாக அவர்கள் பிரசன்னமாய் இருப்பது பொருத்தம் இல்லாமல் இருந்தாலும், இவர்கள் எப்பொழுதும் உயிர் வாழ்ந்து வருகிறார்கள்; எப்பொழுதும் இவர்கள் தோன்றி, தங்கள் அதிகாரங்களை நிலைநாட்டிக் கொள்ளுகிறார்கள். இம்மாதிரி தவிர்க்க முடியாதவர்களாக அவர்கள் இருக்கிறார்கள். அதனால்தான், ஒரு கைக்குண்டு வீரனின் மீசையை, இந்த அராக்சீவ் தமது கையாலேயே பிய்த்து எறிந்தார். ஆபத்துக்கு எதிரே அவர் நிற்க மாட்டார். அவர் ஒரு படித்தவரும் அல்ல. ராஜசபைத் தூதுவரும் அல்ல. என்றாலும், மிகுந்த கண்ணியமும் மென்மையும் பராக்கிரமமும் கொண்ட அலெக்ஜாண்டரிடம், தமது சக்தி வாய்ந்த நிலைமையைக் காப்பாற்றிக் கொள்ள அவரால் முடிகிறது.

ஒரு குடியானவனின் குடிசையில் உள்ள ஒரு கொட்டகையில், ஒரு பீப்பாய் மீது அமர்ந்து டாலூட் எழுதிக்கொண்டு இருப்பதை பலாஷேவ் கண்டார். அவர் கணக்குகளைத் தணிக்கை செய்து கொண்டு இருந்தார். இதைவிட நல்ல விடுதிகளை அவருக்கு ஏற்பாடு செய்திருக்க முடியும். ஆனால், தங்கள் முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டிருப்பதற்கு ஒரு நியாயம் சொல்வதற்காக, இம்மாதிரியான சகிக்க முடியாத நிலைமைகளில் வசிக்க வேண்டும் என்று விரும்புகிறவர்களில் மார்ஷல் டாலூட்டும் ஒருவர். அதற்காகவே தான், அவர்கள் எப்பொழுதும் கடுமையாகவும் அவசரமாகவும் வேலை செய்து கொண்டே இருக்கிறார்கள். 'ஒரு ஆபாசமான கொட்டகையில், ஒரு பீப்பாய் மீது அமர்ந்து வேலை செய்துகொண்டிருக்கும் நான், வாழ்க்கையின் பிரகாசமான அம்சங்களை எம்மாதிரி நினைக்க முடியும்?' என்று அவருடைய முகத்தோற்றம் கூறுவது போல் இருந்தது. யாராவது உற்சாகம் உள்ளவர்களை அவர்கள் சந்தேகிக்க நேரிட்டால், தாங்கள் மிகுந்த கடுமையாக வேலை செய்வதாகக் காட்டிக்கொள்வதுதான், அவர்களுடைய முக்கியமான மகிழ்ச்சியாகவும் அவசியமாகவும் இருக்கின்றன. பலாஷேவை உள்ளே அழைத்து வந்தபோது, டாலூட் இதே மகிழ்ச்சியை அனுபவித்தார். ருஷ்ய ஜெனரல் உள்ளே நுழைந்தபோது, இன்னும் அதிகக் கடுமையாகத் தமது வேலையில் கவனம் செலுத்தினார். கண்ணாடிக்கு மேலாக பலாஷேவின்

முகத்தைப் பார்த்தார். முராட்டிடம் அவர் பேசியதாலும், காலை நேரத்தின் அழகினாலும், அவருடைய முகம் உற்சாகம் அடைந்து இருந்தது. இதை டாவூட் கண்டார். பலாஷேவைக் கண்டதும் அவர் எழுந்திருக்கவில்லை. அசையக்கூட இல்லை. ஆனால் துவேஷத்தோடு முகம் சுளித்து, இகழ்ச்சியோடு பார்த்தார்.

இம்மாதிரி தாம் நடந்துகொள்வதால், பலாஷேவின் முகத்தில் அதிருப்தித் தோற்றம் ஏற்படுவதைக் கண்டவுடன், டாவூட் தலை நிமிர்ந்து, அவருக்கு என்ன வேண்டுமென்று அலட்சியமாகக் கேட்டார். அலெக்ஜாண்டர் சக்கரவர்த்திக்குத் தாம் காப்பாளர்களின் ஜெனரல் என்பதையும், அவரிடமிருந்து நெப்போலியனுக்குத் தூதராக வந்திருக்கிறார் என்பதையும் அறியாமல்தான், டாவூட் இம்மாதிரி தம்மை நடத்துகிறார் என்று பலாஷேவ் நினைத்தார். உடனே தமது அந்தஸ்தையும், தாம் வந்த தூது வேலையையும் பற்றி அவருக்கு எடுத்துச் சொன்னார். இவற்றைக் கேட்ட பின்பும், எதிர்பார்த்ததற்கு விரோதமாக, டாவூட் இன்னும் அதிகமாக முரட்டுத்தனமாகவும், கோபமாகவும் தோன்றினார்.

'உமது கடிதத்தை, எங்கே? அதை, என்னிடம் கொடும். நான் சக்கரவர்த்திக்கு அனுப்புவேன்' என்று அவர் கூறினார்.

சக்கரவர்த்தியிடம் நேராக அந்தக் கடிதத்தைக் கொடுக்க வேண்டுமென்று, தாம் உத்தரவிடப்பட்டிருப்பதாக பலாஷேவ் சொன்னார்.

'உங்களுடைய ராணுவத்தில்தான் உம்முடைய சக்கரவர்த்தியின் உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிந்தாகவேண்டும். ஆனால், இங்கே உமக்கு என்ன சொல்லுகிறோமோ, அதன்படி நீர் செய்ய வேண்டும்' என்று டாவூட் சொன்னார்.

மிருக பலத்தைத் தாம் எவ்வளவு தூரம் நம்பியிருக்கிறார் என்பதை, அந்த ருஷ்ய ஜெனரல் அறிந்து கொள்வதற்காக, உடனே தமது உதவியாளரைக் கூப்பிட்டு, அங்கே அலுவலிலிருக்கும் அதிகாரியை அழைத்து வரும்படி உத்தரவிட்டார்.

பலாஷேவ் சக்கரவர்த்தியின் கடிதத்தை எடுத்து, அந்த மேஜைமீது வைத்தார். (இரண்டு பீப்பாய்களுக்கு மேலாக ஒரு கதவுப் பலகையை வைத்திருந்தார்கள். அதில் அதனுடைய கீல்கள் தொங்கிக்கொண்டிருந்தன. அதைத் தான் மேஜையாக உபயோகித்து வந்தார்.) டாவூட் அந்தக் கடிதத்தை எடுத்து, அதன் மேல் எழுதப்பட்டிருந்த விலாசத்தை வாசித்தார்.

'என்னை மரியாதையுடன் நடத்துவதற்கோ, நடத்தாததற்கோ, உமக்கு பூர்ண சுதந்திரம் உண்டு. ஆனால், மாட்சிமை தங்கிய

சக்கரவர்த்திக்கு நான்தான் உதவியாளர்-ஜெனரல்...' என்று பலாஷேவ் ஆட்சேபித்தார்.

பலாஷேவின் முகத்தை டாவூட் மௌனமாய்ப் பார்த்து, அதில் தோன்றிய பரபரப்பையும் குழப்பத்தையும் கண்டு மகிழ்ச்சி கொண்டார்.

'தகுதிக்குத் தக்கபடி நீர் நடத்தப்படுவீர்' என்று அவர் சொல்லிவிட்டு, அந்தக் கடிதத்தைத் தமது ஜேபியில் வைத்துக் கொண்டு, அந்தக் கொட்டகையை விட்டு வெளியே போனார்.

ஒரு நிமிஷத்திற்குப் பின்னால், அந்த மார்ஷலின் உதவியாளரான டி.காஸ்டிரெஸ் என்பவர் உள்ளே வந்து, பலாஷேவை அவருக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த விடுதிகளுக்கு அழைத்துச் சென்றார்.

அன்று அந்த மார்ஷலோடு அந்தப் பீப்பாய்களின் மீது வைக்கப்பட்டிருந்த பலகை முன்னால் அமர்ந்து, அவர் டின்னர் சாப்பிட்டார்.

மறுநாள் காலையில் பலாஷேவைத் தம்மிடம் வரும்படி அழைத்து, அங்கேயே அவர் தங்கியிருக்கும்படியும், சரக்கு வண்டிகள் அங்கிருந்து கிளம்புமானால், அதோடு அவர் போகும்படியும், திருவாளர் டி காஸ்டிரெஸைத் தவிர வேறு யாருடனும் அவர் பேசக்கூடாது என்றும் கண்டிப்பாகச் சொல்லிவிட்டு, டாவூட் வெளியே சவாரி போனார்.

நாலு நாட்களாகத் தனிமையான, வெறுப்படைந்த வாழ்க்கையில் அவர் இருந்து கொண்டிருந்தார். தம்மால் ஒன்றும் செய்ய முடியாததையும், தம்மை மிகவும் அற்பமாக மதிப்பதையும் அவர் உணர்ந்தார். சமீப காலத்தில் அவர் மிகுந்த அதிகாரத்தோடு இருந்துவந்தபடியால், இந்த உணர்ச்சிகள் அவரை அதிகமாக பாதித்தன. மார்ஷலின் சரக்கு வண்டிகளோடும், பிரஞ்சு ராணுவத்தோடும் பல பிரயாணங்களை அவர் செய்தார். அந்த ஜில்லா முழுவதையும் பிரஞ்சு ராணுவம் ஆக்கிரமித்துக்கொண்டது. கடைசியாக இப்பொழுது பிரஞ்சுக்காரர்களால் ஆக்கிரமிக்கப் பட்ட விலீனாவுக்கு அவர் கொண்டு வரப்பட்டார். அந்த நகரில் அதே வாசல் வழியாகத்தான், நாலு தினங்களுக்கு முன்னால் அவர் புறப்பட்டுப் போனார்.

சக்கரவர்த்தியின் ஏவல்-கனவானான கோமகன் டுரென் மறுநாள் பலாஷேவிடம் வந்து, அவருக்கு சக்கரவர்த்தி ஒரு பேட்டி கொடுத்து கௌரவிக்க விரும்புவதாகத் தெரிவித்தார்.

நாலு நாட்களுக்கு முன்பாக ப்ரோப்ராஜென்ஸ்க் பட்டாளத்தைச் சேர்ந்த வீரர்கள், அந்த வீட்டிற்கு முன்பாகக் காவல் இருந்து

வந்தார்கள். அதே வீட்டிற்கு பாலஷேவ் அழைத்துச் சொல்லப் பட்டார். இப்பொழுது அந்த வீட்டின் முன்பாக, இரண்டு பிரஞ்சு கைக்குண்டு வீரர்கள் நீல நிற சீருடை அணிந்து, முன் பக்கத்தில் பொத்தான்கள் போடாமல், ரோமத் தொப்பிகளைத் தலைகளில் அணிந்து நின்று கொண்டிருந்தார்கள். அவர்களோடு குதிரைப்படை வீரர்களும், உலான்களும், பிரமாதமாக ஆடைகள் அணிந்த மெய்க்காப்பாளர்களும், கௌரவ வேலைக்காரப் பையன்களும், ஜெனரல்களும், நெப்போலியன் வெளியே வருவதற்காக, மண்டப முற்றத்தில் நெப்போலியனுடைய சேணமிடப்பட்ட குதிரையையும், அவருடைய அடிமையான ரூஸ்டனையும் சுற்றி நின்றுகொண்டிருந்தார்கள். அலெக்ஜாண்டர் பலாஷேவை எந்த மாளிகையிலிருந்து தூது அனுப்பினாரோ, அதே மாளிகையில் இப்பொழுது நெப்போலியன் அமர்ந்து பலாஷேவிற்கு பேட்டி கொடுத்தார்.



**ச**க்கரவர்த்திகளின் ஆடம்பரங்களில் பலாஷேவ் பழகிப் போயிருந்தாலும் நெப்போலியன் ராஜசபையிலுள்ள சுகானு பவங்களையும், படாடோபங்களையும் கண்டு பலாஷேவ் மலைத்துப்போனார்.

கோமகன் டூரென் அவரை ஒரு பெரிய வரவேற்பு அறைக்கு அழைத்துச் சென்றார். அங்கே பல ஜெனரல்களும், ஏவல் - கனவான்களும், போலந்துப் பிரபுக்களும் காத்திருந்தார்கள். அந்த போலந்துப் பிரபுக்களில் பலரை, ருஷ்ய சக்கரவர்த்தியின் ராஜ சபையில் பலாஷேவ் பார்த்திருக்கிறார். நெப்போலியன் வெளியே சவாரி போவதற்கு முன்பாக, அந்த ருஷ்ய ஜெனரலுக்கு பேட்டி கொடுப்பாரென்று டியூராக் வந்து சொன்னார்.

சில நிமிஷங்களுக்குப் பின்னால், அங்கே அலுவலிலிருந்த ஏவல்கனவான் அந்த பெரிய வரவேற்பு அறைக்கு வந்து மரியாதையோடு தலை குனிந்து, தம்முடன் வரும்படி பலாஷேவை அழைத்தார்.

பலாஷேவ் ஒரு சிறிய வரவேற்பு அறைக்குள் போனார். அதிலிருந்து படிப்பு அறைக்கு ஒரு வழி போகிறது. அங்கிருந்து தான் ருஷ்ய சக்கரவர்த்தி அவரைத் தூது அனுப்பினார். ஒன்றிரண்டு நிமிஷங்கள் அங்கே காத்து நின்றார். அந்த கதவிற்குப் பின்னால் வேகமான காலடி ஓசைகள் கேட்டன. அந்த இரட்டைக் கதவுகள்

திடீரென்று திறக்கப்பட்டன. எல்லாம் அமைதியாய் இருந்தது. திடீரென்று அந்தப் படிப்பு அறையிலிருந்து உறுதியான காலடி ஓசைகள் கேட்டன. அவைதான் நெப்போலியனின் காலடி ஓசைகள். வெளியே சவாரி போவதற்கு அவர் அப்பொழுதுதான் ஆடைகள் அணிந்து முடித்திருந்தார். ஒரு நீல நிற சீருடை அணிந்திருந்தார். உள்ளே ஒரு வெள்ளை உள் சட்டை காணப்பட்டது. அவருடைய தொந்தியை மறைக்கக்கூடிய அளவில், முன்பக்கம் அவருடைய சீருடை திறந்திருக்கும். அவருடைய குட்டையான கால்களையும், தொடைகளையும் பிடித்து நின்றமாதிரி தோலினாலான கால் சட்டைகளை அணிந்திருந்தார். உயரமான பூட்ஸ்களைக் கால்களில் போட்டிருந்தார். அவருடைய குட்டையான தலைமுடியை வாரி விட்டிருந்தபோதிலும், அதில் ஒரு சுருளை அவருடைய அகன்ற நெற்றியின் மத்தியில் தொங்கிக் கொண்டிருந்தது. யூனிபாரத்திற்கு மேலாக அணிந்திருந்த கறுப்புக் கழுத்துப் பட்டைக்கு மேலாக, அவருடைய வெள்ளைக் கழுத்து எடுப்பாய் காணப்பட்டது. ஓடிகோலோன் வாசனையை அவர் பூசி இருந்தார். அவருடைய வாலிபத் தோற்றமுள்ள முகத்தில், அவருடைய நாடி பிரதானமாய் இருந்தது. அவருடைய முழு முகமும், ராஜாங்க வரவேற்பைக் காட்டக்கூடிய கருணையும், கம்பீரமுமான தோற்றத்தைக் கொண்டி நந்தது.

ஒவ்வொரு அடியையும் நிதானமாய் எடுத்து வைத்து, தலையைச் சிறிது பின்னால் சாய்த்து, உற்சாகமாய் அவர் உள்ளே வந்தார். அவருடைய குட்டையான உருவம், அகலமான தோள்களோடு மார்பும், வயிறும் தம்மை யறியாமல் முன்னால் நீண்டு நிற்பதாகக் காணப்பட்டது. அந்த உருவம் ஒரு சௌக்கியமான சூழ்நிலையில் வாழ்ந்து வரும் 40-வயதான மனிதர்களுக்கு ஏற்படக்கூடிய அந்த கம்பீரமான, எடுப்பான தோற்றங்களைக் கொடுத்து வந்தன.

பலாஷேவ் மிகவும் தாழ்ந்து மரியாதையோடு தலை வணங்கியதற்குப் பதிலாக அவர் தலையை ஆட்டினார். அவரிடம் நெருங்கி வந்து, தமது நேரத்தில் ஒவ்வொரு வினாடியும் முக்கியமானது என்று நினைக்கிறவரைப்போல, உடனே பேச ஆரம்பித்தார். தாம் என்ன பேசுவது என்பதை முன்னாலேயே தயார் செய்ய வேண்டும் என்று அவர் நினைப்பவராகத் தோன்றவில்லை. தாம் சொல்லுவதெல்லாம் சரியாகவே இருக்குமென்றும் அதைச் சரியாகவே அவர் பேசுவார் என்றும் நிச்சயம் கொண்டவரைப் போலப் பேச ஆரம்பித்தார்.

'வணக்கம், ஜெனரலே! சக்கரவர்த்தி அலெக்ஜாண்டரிடமிருந்து நீர் கொண்டு வந்திருந்த கடிதத்தை நான் பெற்றுக்கொண்டேன்.

ும்மைப் பார்ப்பதற்காக, நான் மிகுந்த மகிழ்ச்சி கொள்கிறேன்' என்று அவர் சொன்னார். தமது பெரிய கண்களால் பலாஷேவின் முகத்தை நோக்கிவிட்டு, பின்னால் அவருக்குப் பின்பாகத் தமது பார்வையைச் செலுத்தினார்.

பலாஷேவின் மூர்த்தி விலாசத்தில் அவருக்குக் கொஞ்சம்கூட சிரத்தை இல்லை என்பதை அது தெளிவாகக் காட்டியது. நம்முடைய மனதில் என்ன நடந்து கொண்டிருக்கிறதோ, அதில்தான் அவருக்கு சிரத்தை இருப்பதாகத் தோன்றியது. அவருக்குப் புறம்பாக நடக்கிற எதிலும் அவருக்கு முக்கியத்துவம் கிடையாது. ஏனெனில், இந்த உலகத்தில் உள்ள ஒவ்வொரு விஷயமும், அவருடைய அபிப்பிராயத்திலேயே பூரணமாகச் சார்ந்து நிற்கின்றன என்று அவருக்குத் தோன்றியது.

'யுத்தத்தை நான் விரும்பவில்லை. விரும்பியதும் இல்லை. ஆனால், என் மீது அது கட்டாயமாகத் திணிக்கப்பட்டது. இப்பொழுதும் கூட (இதை அவர் வற்புறுத்தினார்) நீர் எனக்கு சமாதானம் சொல்லக்கூடுமானால், அதைக் கேட்க நான் தயாராக இருக்கிறேன்' என்றார்.

ருஷ்ய சர்க்காருடன் அவருக்கு ஏற்பட்டுள்ள அதிருப்திக்கான காரணங்களைத் தெளிவாகவும் சுருக்கமாகவும் அவர் சொல்ல ஆரம்பித்தார். மிதமான, சௌஜன்யமான தொனியில் பிரஞ்சு சக்கரவர்த்தி பேசியதிலிருந்து, அவர் சமாதானத்தை விரும்புகிறார் என்றும், அதற்கான பேச்சு வார்த்தைகளில் இறங்க நினைக்கிறார் என்றும், பலாஷேவ் உறுதியாக நினைத்தார்.

நெப்போலியன் பேசி முடித்ததும், கேள்விக் குறியோடு ருஷ்யத் தூதரை நோக்கினார். வெகுநேரத்திற்கு முன்பாகவே தாம் தயார் செய்து வைத்திருந்த பேச்சை பலாஷேவ் ஆரம்பித்தார்: 'மாட்சிமை தங்கியவரே, எனது எஜமானரான சக்கரவர்த்தி...' என்று அவர் சொல்ல ஆரம்பித்ததும், எதிரே நிற்கும் சக்கரவர்த்தியின் பார்வை அவர் மீது இருப்பதைக்கண்டு குழம்பினார். 'நீர் படபடத்துப் போயிருக்கிறீர். கொஞ்சம் ஆசுவாசப் படுத்திக்கொள்ளும்' என்று சொல்லுவதைப்போல, வெளியே நன்றாகத் தெரியாத ஒரு புன்முறுவலோடு, பலாஷேவின் சீருடையையும் உடைவாளையும் நெப்போலியன் நோக்கினார்.

பலாஷேவ் தம்மை நிதானப்படுத்திக்கொண்டு பேச ஆரம்பித்தார். பிரயாணச் சீட்டுகள் வேண்டுமென்று குராகின் கேட்டது, யுத்தத்தை ஆரம்பிப்பதற்குப் போதுமான காரணம் ஆகாது என்று அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி நினைப்பதாக அவர்

சொன்னார். குராகின் என்பவர் தம்முடைய சொந்தப் போக்கிலேயே அம்மாதிரி நடந்துகொண்டதாகவும், அவருடைய சக்கரவர்த்தியின் சம்மதத்தை அவர் பெறவில்லையென்றும், அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி யுத்தத்தை விரும்பவில்லையென்றும், இங்கிலாந்துடன் எவ்விதமான உறவும் கிடையாது என்றும் அவர் சொன்னார்.

'இன்னும் ஏற்படவில்லை' என்று நெப்போலியன் இடை மறித்துச் சொன்னார். தம்முடைய உணர்ச்சிகளை எங்கே வெளியிட்டு விடுவாரோ என்று பயந்தவராக, அவர் முகம் சுளித்து தலையை ஆட்டி, பலாஷேவ் மேலே பேசலாமென்று சைகை காட்டினார்.

தாம் என்ன சொல்லவேண்டுமென்று கட்டளை யிடப்பட்டாரோ, அவற்றை எல்லாம் பலாஷேவ் சொல்லிவிட்டு, அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி சமாதானத்தை விரும்புவதாகவும், ஆனால் ஒரு விஷயத்தை ஒப்புக்கொண்டாலொழிய, அவர் சமாதானப் பேச்சுக்களில் இறங்க மாட்டார் என்றும்... இந்த இடத்தில் பலாஷேவ் தயங்கினார். இந்த வார்த்தைகளை அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி தமது கடிதத்தில் எழுதவில்லை என்பதை அவர் நினைவு கூர்ந்தார். சால்டிகோவுக்கு எழுதிய பதிலில் இதை முக்கியமாக குறிப்பிட்டிருக்கிறார். ஆனால், நெப்போலியனிடம் அவற்றைச் சொல்லும்படியே பலாஷேவுக்கு சக்கரவர்த்தி சொல்லியிருந்தார். 'ருஷ்ய நாட்டில் எதிரியின் ஒரு சிப்பாய் இருக்கிறவரையில்' என்று வார்த்தைகளைப் பலாஷேவ் நினைவு கூர்ந்தார். ஆனால் அவருக்கு ஏற்பட்ட உணர்ச்சி சிக்கல்கள் அவரைத் தடுத்து நிறுத்தின. அவைகளை அவர் சொல்ல விரும்பிய போதிலும் அவரால் சொல்ல முடியவில்லை. அவர் குழப்பமடைந்து பேசினார்; 'ஒரே ஒரு நிபந்தனை. அதாவது, பிரஞ்சு ராணுவம் நீமென் நதிக்கு அப்புறமாகப் போய்விடவேண்டும்.'

இந்தக் கடைசி வார்த்தைகளைப் பலாஷேவ் சொல்லியபோது, அவருக்கு ஏற்பட்ட தயக்கத்தை நெப்போலியன் கவனித்தார். நெப்போலியனின் முகம் சுளித்தது. அவருடைய இடது கெண்டைக் கால் துடிக்க ஆரம்பித்தது. அவர் எந்த இடத்தில் நின்றாரோ, அதைவிட்டு அசையாமல், பலமான தொனியில் முன்னைவிட வேகமாகப் பேச ஆரம்பித்தார். அவர் பேசிக்கொண்டிருந்தபோது, பலாஷேவ் பல தடவைகள் தமது கண்களைக் கவிழ்த்துக் கொண்டார். தம்மையறியாமலேயே, நெப்போலியனின் இடது கெண்டைக்கால் துடித்துடிக்கொண்டிருப்பதை அவர் கவனித்தார்.

நெப்போலியன் தமது குரலை உயர்த்த உயர்த்த, அந்தத் துடிப்பும் அதிகரித்து வந்தது.

'சக்கரவர்த்தி அலெக்ஜாண்டருக்குக் கொஞ்சம்கூட குறையாமல், நானும் சமாதானத்தையே விரும்புகிறேன். அதை அடைவதற்காக, சென்ற 18 மாதங்களாக ஒவ்வொன்றையும் நான் செய்து வர வில்லையா? விளக்கங்களை எதிர்பார்த்து 18 மாதங்கள் நான் காத்திருந்தேன். ஆனால், பேச்சு வார்த்தைகளை ஆரம்பிப்பதற்காக, என்னிடம் என்ன கோரப்படுகிறது?' என்று அவர் சொல்லி முகம் சுளித்து, தமது சிறிய, பருத்த வெள்ளைக் கையினால் கேள்வி கேட்பதைப் போல ஆட்டினார்.

'உமது ராணுவத்தை நீமென் நதிக்கு அப்புறமாக வாபஸ் பெறவேண்டும், மாட்சிமை தங்கியவரே' என்று பலாஷேவ் பதிலளித்தார்.

'நீமென் நதியா?' என்று நெப்போலியன் திரும்பிக் கேட்டார். 'ஆகவே இப்பொழுது நீமென் நதிக்கு அப்புறமாக நான் வாபஸ் ஆகவேண்டுமென்று நீர் கேட்கிறீர். நீமென் மட்டுந்தானா?' என்று நெப்போலியன் திருப்பிக் கேட்டு, பலாஷேவை நேராகப் பார்த்தார்.

பாலாஷேவ் மரியாதையோடு தலை குனிந்தார்.

நாலு மாதங்களுக்கு முன்னால், போமரோனியாவிலிருந்து பின்வாங்க வேண்டுமென்று கேட்கப்பட்டது. இப்பொழுது அதற்குப் பதிலாக, நீமெனுக்கு அப்புறம் பின்வாங்க வேண்டுமென்று கேட்கப் படுகிறது. நெப்போலியன் அவசரமாய்த் திரும்பி அந்த அறையில் உலாவ ஆரம்பித்தார்.

'நீமெனுக்கு அப்புறமாக நான் பின்வாங்க வேண்டுமென்றுதான் தற்போதைய கோரிக்கை என்று நீர் சொல்லுகிறீர். பேச்சு வார்த்தைகளை ஆரம்பிப்பதற்கு முன்பாக, இதைச்செய்ய வேண்டுமென்று கூறுகிறீர். ஆனால், இதே மாதிரி இரண்டு மாதங்களுக்கு முன்னால் விஸ்டுலாவிலிருந்தும், ஓடரிலிருந்தும் நான் வாபஸ் வாங்க வேண்டுமென்று கோரப்பட்டது. ஆனால், இன்னமும் நீர் பேச்சு வார்த்தைகளை நடத்துவதற்கு விரும்புகிறீர்.'

மௌனமாக அந்த அறையின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைவரை போய்விட்டு, திரும்பவும் பலாஷேவ் முன்னால் வந்து நின்றார். அவருடைய இடது கெண்டைக்கால், முன்னைவிட அதிக வேகமாக துடித்துக்கொண்டிருப்பதை பலாஷேவ் கவனித்தார். அவருடைய முகம், கடுமையான தோற்றத்தினால் கல்லாகிவிட்டது போலக் காணப்பட்டது. தமது இடது கெண்டைக்கால் துடித்துக்

கொண்டிருப்பது நெப்போலியனும் அறிந்த விஷயம். ஏனெனில், பின் ஒருகாலத்தில் அவர், 'இந்த இடது கெண்டைக்கால் துடிப்பது எனக்கு ஒரு பெரிய அடையாளமாகும்' என்று குறிப்பிட்டார்.

'விஸ்டுலாவிலிருந்து ஓடரிலிருந்தும் பின்வாங்க வேண்டுமென்ற கோரிக்கையை இளவரசர் பாடனிடம் நீங்கள் கேட்கலாம்; என்னிடமல்ல' நெப்போலியன் கிரீச்சுக் குரலில் கூச்சலிட்டார். அவருக்கே அது ஆச்சரியகரமாயிருந்தது. 'பீட்டர்ஸ்பர்க்கையும் மாஸ்கோவையும் நீங்கள் எனக்குக் கொடுத்தால்கூட, அந்த நிபந்தனைகளை நான் ஒப்புக்கொள்ள முடியாது. இந்த யுத்தத்தை நான் ஆரம்பித்ததாக நீர் சொல்லுகிறீர். ஆனால், முதலில் தமது ராணுவத்துடன் போய்ச் சேர்ந்துகொண்டது யார்? அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியே ஒழிய, நான் அல்ல. கோடிக் கணக்காக நான் செலவிட்ட பின்பு, இங்கிலாந்துடன் நீங்கள் கூட்டுறவு வைத்துக்கொண்ட பின்பு, உங்களுடைய நிலைமை மோசமான பின்பு, பேச்சு வார்த்தைகளை நடத்தலாம் என்று என்னிடம் நீங்கள் சொல்ல வருகிறீர்கள்! இங்கிலாந்துடன் நீங்கள் நேச உடன்படிக்கை செய்து கொண்டதின் நோக்கமென்ன? அது உங்களுக்கு என்ன கொடுத்து விட்டது?' என்று அவர் வேகமாய்ப் பேசினார். சமாதானத்தினால் ஏற்படக்கூடிய சாதனங்களைப் பற்றியும், அந்த சமாதானம் சாத்தியமா என்பதைப் பற்றியும், அவர் இனியும் பேச விரும்பவில்லை என்பது தெளிவாயிற்று. தம்முடைய சக்தியையும் நியாயத்தையும் காட்டி, அலெக்ஜாண்டரின் தவறுகளையும் நம்பிக்கைத் துரோகங்களையும் காட்ட முயற்சிப்பதாகவே தோன்றினார்.

அவருடைய பேச்சின் ஆரம்பத்தில், தம்முடைய நிலைமையிலுள்ள சாதகங்களை எடுத்துக் காட்டினார், என்றாலும் பேச்சு வார்த்தைகள் நடத்துவதற்கு விருப்பமுள்ளவர்போலக் காட்டிக் கொள்ள வேண்டுமென்ற மனோபாவத்திலேயே அவருடைய பேச்சு இருந்தது. ஆனால், அவர் பேச ஆரம்பித்த பின்பு, அவர் அதிகமாய்ப் பேசப் பேச, அவருடைய வார்த்தைகளை அவரால் அடக்கி ஆள முடியவில்லை.

இப்பொழுது அவருடைய பேச்சுக்களின் நோக்கம் முழுவதும், தம்மை உயர்த்தி, அலெக்ஜாண்டரை அவமானப்படுத்த வேண்டும் என்பதுபோலக் காணப்பட்டது. ஆனால், அந்த பேட்டியின் ஆரம்பத்தில், இதை அவர் கொஞ்சங்கூட விரும்பியதில்லை.

'நீங்கள் துருக்கியோடு சமாதானம் செய்துகொண்டதாகக் கேள்விப்படுகிறேன்?'

அதை உறுதி செய்பவர்போல பலாஷேவ் தமது தலையைத் தாழ்த்தினார்.

'சமாதான உடன்படிக்கை முடிந்துவிட்டது...' என்று அவர் ஆரம்பித்தார்.

ஆனால், நெப்போலியன் அவரைப் பேச விடவில்லை. பேச்சுக்கள் முழுவதையும் தாமே செய்யவேண்டுமென்று விரும்பியவர் போல அவர் தோன்றினார். வெற்றியினால் மதி கெட்டவர்களுக்கு வழக்கமாயிருந்த வரையறையில்லாத கோபத்தோடும், வாய்ச்சாலகத்தோடும் அவர் தொடர்ந்து பேசினார்.

ஆம், மால்டாவியா, வாலாச்சியா ஆகிய இரண்டையும் பெற்றுக் கொள்ளாமல், நீங்கள் துருக்கியருடன் சமாதானம் செய்து கொண்டீர்கள் என்பதை நான் அறிவேன். பின்லாந்தை நான் கொடுத்த மாதிரி, அந்த மாகாணங்களை உமது சக்கரவர்த்திக்கு நான் கொடுத்திருப்பேன். ஆம், நான் வாக்குறுதி கொடுத்தேன். அதன்படி, மால்டாவியாவையும் வாலாச்சியாவையும் அலெக்ஜாண்டர் சக்கரவர்த்திக்குக் கொடுத்திருப்பேன். ஆனால், இப்பொழுது அந்த சிறந்த மாகாணங்களை அவர் பெறப்போவதில்லை. என்றாலும், அவைகளை அவர் தமது ஏகாதிபத்தியத்தோடு சேர்த்து, ருஷ்யாவைப் பாத்தினியா வளைகுடாவிலிருந்து, டான்யூப் முகத்துவாரம் வரையில் விஸ்தரித்து, ஒரே குடையின் கீழ் கொண்டு வந்திருக்கலாம். மகா பெரிய காத்தரைன் கூட, இதைவிட அதிகமாகச் செய்திருக்க முடியாது' என்று நெப்போலியன் கூறினார். டில்சிட்டில் அலெக்ஜாண்டருக்குத் தாம் சொல்லிய வார்த்தைகளைப் பலாஷேவிற்குத் திரும்பச் சொல்லி, அந்த அறையில் மேலும் கீழும் நடக்க நடக்க, அவருக்கு படபடப்பு மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டு போயிற்று.

'இவற்றையெல்லாம் என்னுடைய நட்பின் மூலம் அவர் பெற்றிருக்கலாம். எப்பேர்ப்பட்ட சிலாக்கியமான ராஜாங்கமாக அது இருந்திருக்கும்' என்று பல தடவைகள் திரும்பத் திரும்பச் சொல்லிவிட்டு, சிறிது நிறுத்தினார். தமது ஜேபியிலிருந்து ஒரு தங்க மூக்குப் பொடி டப்பியை எடுத்து, அதைத் தமது நாசிக்கு உயர்த்தி, ஆவலோடு அதிலிருப்பதை உறிஞ்சினார்.

'எப்பேர்ப்பட்ட சிலாக்கியமான ராஜாங்கமாக, அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியின் ராஜாங்கம் இருந்திருக்க முடியும்.'

அவர் கருணையோடு பலாஷேவை நோக்கினார். பலாஷேவ் ஏதோ பதில் கூறுவதற்கு முயற்சித்தபோது, அவசரமாக அவரைத் தடுத்து நிறுத்தினார்.

'என்னுடைய நட்பின் மூலம் அவர் பெற முடியாத விஷயம் வேறு என்ன இருக்க முடியும்?' என்று, குழப்பத்தோடு தமது தோள்களைக் குலுக்கிக்கொண்டு, நெப்போலியன் கேட்டார். 'ஆனால், இல்லை. தம்மைச் சுற்றிலும் என்னுடைய எதிரிகளை வைத்துக் கொண்டிருக்கவே அவர் விரும்பினார். எப்பேர்ப் பட்டவர்கள்? ஸ்டைன், ஆர்ம்பெல்ட், பெனிக்ஸன், வின்ட்ஜன்கெரோட் ஆகியவர்கள்; ஸ்டைன் என்பவர், தமது சொந்த நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்ட ஒரு தேசத் துரோகி. ஆர்ம்பெல்ட் என்பவர், ஒரு சூழ்ச்சிக் காரர்; ஒழுக்கங்கெட்டவர். வின்ட்ஜின்கெரோட் என்பவர், தப்பி ஓடிய ஒரு பிரஞ்சுக்காரர். பெனிக்ஸன் என்பவர், மற்றவர்களைவிட ஒரு நல்ல சிப்பாய், என்றாலும் திறமையற்றவர். 1807-ஆம் வருஷத்தில், அவரால் எதுவும் செய்ய முடியவில்லை. அவர் செய்த காரியங்கள், அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியின் மனதில் பயங்கர சம்பவங்களாய்த் தோன்றிக் கொண்டிருக்கும். அவர்கள் திறமையுள்ளவர் களாய் இருந்தால், அவர்களை உபயோகித்துக் கொள்ளலாம்' என்று நெப்போலியன் தொடர்ந்து கூறினார். தாம் எவ்வளவு பலமாகவும், எவ்வளவு நியாயமாகவும் இருக்கிறார் என்பதை நிரூபிப்பதற்கு, அவருடைய மனதில் தோன்றிப் பொங்கிக்கொண்டிருந்த கருத்துக்களை, அவ்வளவு வேகத்தில் தமது வார்த்தைகளால் வெளிப்படுத்த முடியாமல் அவசரமாய் பேசினார். அவருடைய அபிப்பிராயத்தில், பலமும் நியாயமும் ஒன்றுதான் என்று தோன்றியது. 'ஆனால், அவர்கள் திறமையுள்ளவர்கள் அல்ல. அவர்கள் யுத்தத்திற்கோ அல்லது சமாதானத்திற்கோ பொருத்தமானவர்கள் அல்ல. பார்க்ளே என்பவர், அவர்கள் எல்லாரையும்விட மிகுந்த திறமைசாலி என்று சொல்லப்படுகிறது. ஆனால், யுத்த களத்தில் அவர் செய்த முதல் காரியங்களிலிருந்து, என்னால் அப்படி மதிக்க முடியவில்லை. இவர்கள் எல்லாம், இந்த ராஜசபை தூதர்கள் எல்லாம், என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? பூயல் என்பவர், ஒரு காரியத்தைப் பிரேரிக்கிறார். ஆர்ம்பெல்ட் என்பவர் ஆட்சேபிக்கிறார். பெனிக்ஸன் என்பவர் அதை ஆலோசிக்கிறார். ஆனால், எதைத் தீர்மானிப்பது என்பது அவருக்குத் தெரியாது. இதற்கிடையில் காலம் கழிந்து கொண்டு போகிறது. எந்த விதமான பலனும் ஏற்படுவதில்லை. பாக்ரேஷன் ஒருவர்தான், ஒரு ராணுவப் பேர்வழி. ஆனால், அவர் முட்டாள். அவருக்கு அனுபவமும், வேகமாய் கிரகிக்கும் சக்தியும் உறுதியும் உண்டு... உம்முடைய வாலிப சக்கரவர்த்தி, இந்த கிராதகக் கூட்டத்தில் எந்த விதமாக நடந்து கொண்டிருக்கிறார்? அவரை

ஒன்றும் செய்யவிடாமல் செய்து, நடப்பவைகளுக்கு எல்லாம் அவர்மீது பொறுப்பைப் போட்டுவிடுகிறார்கள். ஒரு ஜெனரலாய் இருந்தால் ஒழிய, ஒரு சக்கரவர்த்தி தமது ராணுவத்தோடு கலந்திருக்கக்கூடாது' என்றார் நெப்போலியன். அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியை நேருக்கு நேராக வாதுக்கு அழைக்கிற மாதிரி, இந்த வார்த்தைகள் இருந்தன. ஒரு ராணுவ கமாண்டராக இருக்க வேண்டுமென்று, அலெக்ஜாண்டர் எவ்வளவு விருப்பமுள்ளவராய் இருக்கிறார் என்பதை அவர் அறிவார்.

'இந்தப் படையெடுப்பு ஒரு வாரத்திற்கு முன்புதான் ஆரம்பமாயிற்று. வில்னாவைக் காப்பாற்றிக்கொள்ளக்கூட, உங்களால் முடியவில்லை. உங்கள் ராணுவம் இரண்டாய் துண்டிக்கப்பட்டு, போலந்து மாகாணங்களிலிருந்து 'விரட்டி அடிக்கப்பட்டது. உங்கள் ராணுவம் அதிருப்தி அடைந்திருக்கிறது.'

'அதற்கு மாறாக, மாட்சிமை தங்கியவரே' என்று பலாஷேவ் சொன்னார். அவரிடம் என்ன பேசினார் என்பதை அவர் ஞாபகப் படுத்திக்கொள்ள முடியாதவராயும், நெப்போலியனின் வார்த்தைகளாலான வாண வேடிக்கைகளைப் புரிந்துகொள்ள முடியாதவராயும் அவர் இருந்தார். 'ஆவலினால் துருப்புகள் எல்லாரும் கொதித்துக் கொண்டிருக்கிறார்கள்...'

'எனக்கு ஒவ்வொன்றும் தெரியும்' என்று நெப்போலியன் இடைமறித்தார். 'எனக்கு ஒவ்வொன்றும் தெரியும். என்னுடைய படைகளை நான் அறிந்திருப்பதுபோல, உங்களிடம் எத்தனை படைகள் இருக்கின்றன என்பதை நான் அறிவேன். உங்களிடம் இரண்டு லட்சம் பேர்கள் கூட இல்லை. அம்மாதிரி மூன்று மடங்கு அளவு என்னிடம் இருக்கிறது. நான் பிரமாணமாகச் சொல்லுகிறேன்' என்று நெப்போலியன் தமது பிரமாணத்திற்கு மதிப்பு கிடையாது என்பதை மறந்து பேசினார். 'விஸ்டூலா நதிக்கு இப்பக்கமாக, ஐந்து லட்சத்து முப்பதாயிரம் வீரர்களை நான் வைத்திருக்கிறேன் என்பதை உமக்குப் பிரமாணமாகச் சொல்லுகிறேன். துருக்கியர்களால் உங்களுக்கு ஒரு உபயோகமும் இல்லை. அவர்கள் உங்களிடம் சமாதானம் செய்து கொண்டதிலிருந்தே, அவர்கள் உபயோக மற்றவர்கள் என்பதைக் காட்டிக்கொண்டார்கள். ஸ்வீடிஷ்காரர்களைப் பொறுத்தவரையில், பைத்தியக்கார மன்னர்களால்தான் அவர்கள் ஆளப்பட வேண்டுமென்று அவர்களின் விதியாயிருக்கிறது. அவர்களுடைய மன்னர் ஒருவர் பைத்தியக்காரர் ஆனார். அவரை மாற்றி வேறு ஒருவரை வைத்தார்கள். பெர்னாடெட் என்ற அவரும் சீக்கிரமாகப்

பைத்தியமானார். ஏனெனில், பைத்தியம் பிடித்திருந்தால் ஒழிய, ருஷ்யாவுடன் யாரும் சேர மாட்டார்கள்.

நெப்போலியன் துவேஷத்தோடு பல்லை இளித்தார். மீண்டும் தமது பொடி டப்பியைத் தமது நாசிக்குக் கொண்டு போனார்.

நெப்போலியனின் பேச்சுக்கள் ஒவ்வொன்றிற்கும் எப்படி பதில் சொல்லுவது என்பது பலாஷேவிற்குத் தெரியும். அவர் அப்படி பதில் சொல்லியும் இருப்பார். அவர் எதையோ சொல்ல விரும்புவதைப்போல, தொடர்ச்சியாக சைகைகள் காட்டி வந்தபோதிலும், நெப்போலியன் எப்பொழுதும் அவரை இடைமறித்துக்கொண்டிருந்தார். ஸ்வீடிஷ்காரர்கள் பைத்தியம் பிடித்தவர்கள் என்று நெப்போலியன் கூறியதற்குப் பதிலாக, பலாஷேவ் பதில் சொல்ல விரும்பினார். ஸ்வீடன் கட்சியில் ருஷ்யா இருந்தபோது, ஸ்வீடன் அநேகமாக ஒரு தீவு மாதிரியே இருந்தது என்று சொல்ல விரும்பினார். ஆனால் நெப்போலியன் அவருடைய வார்த்தைகளை அமுக்குகிற மாதிரி, கோபமாகக் கூச்சலிட்டுக் கொண்டேயிருந்தார்கள். பேச்சு பேச்சு என்று பேசிக்கொண்டே இருந்து, தம்மிடம் நியாயம் இருப்பதாகத் தமக்கு நம்பிக்கை ஏற்படுகிற விதத்தில் பேசிக்கொண்டே இருக்கும் அத்தகைய எரிச்சலான நிலைமையில் நெப்போலியன் இருந்தார். பலாஷேவ் கஷ்டமாக உணர ஆரம்பித்தார். ஒரு தூதர் என்ற முறையில் தமது கௌரவம் கீழே போகிறதாக நினைத்து, பதில் சொல்லவேண்டிய அவசியத்தை உணர்ந்தார். ஆனால் ஒரு மனிதர் என்ற முறையில், அந்த நெப்போலியனின் ஆதாரமற்ற கோபத்திற்கு முன்பாக அவர் நடுங்கிக்கொண்டிருந்தார். நெப்போலியன் இப்பொழுது சொன்ன வார்த்தைகள் எதற்கும் முக்கியத்துவம் கிடையாது என்பதை அவர் அறிவார். நெப்போலியனே தமது கோபம் தணிந்த பின்பு, அந்த வார்த்தைகளுக்காக வெட்கப்படுவார் என்பதையும் அவர் அறிவார். கீழ் நோக்கிய கண்களுடன், நெப்போலியனின் பருத்த கால்களின் அசைவுகளைப் பார்த்துக் கொண்டு, நெப்போலியனின் கண்களைப் பார்க்காமல் தவிர்க்க முயற்சி செய்து பலாஷேவ் நின்றுகொண்டிருந்தார்.

'உங்களுடைய நேச நாடுகளைப்பற்றி எனக்கு என்ன கவலை? போலந்துக்காரர்கள் என்னுடன் நேசமாயிருக்கிறார்கள். அவர்களில் எண்பதாயிரம் பேர் என்னுடைய படையில் இருக்கிறார்கள். சிங்கங்களைப்போல அவர்கள் போரிடுவார்கள். சீக்கிரமாக அவர்களுடைய தொகை இரண்டு லட்சமாகிவிடும்' என்று நெப்போலியன் சொன்னார்.

இந்த வெளிப்படையான பொய்யைச் சொன்னதற்காக, நெப்போலியன் மிகுந்த பரபரப்பு அடைந்தவராக, பலாஷேவ் தம் எதிரில் இன்னமும் மௌனமாகவே விதியின் செயலுக்குக் கீழ்ப் படிந்து நிற்பதுபோலக் காணப்பட்டதையும் பார்த்து, நெப்போலியன் திடீரென்று திரும்பி பலாஷேவ் முகத்திற்கு பக்கம் நெருங்கி, வேகமாகத் தமது வெள்ளைக் கைகளை ஆட்டிக் கூச்சலிட்டார்:

'எனக்கு விரோதமாய் பிரஷ்யாவை நீங்கள் தூண்டிவிட்டால் ஐரோப்பாவின் தேசப் படத்திலிருந்தே அதை நான் அழித்துவிடுவேன்' என்று அவர் கூறினார். அவர் முகம் வெளிறி கோபத்தால் சுளித்திருந்தது. தம்முடைய ஒரு கை மீது இன்னொரு கையால் வேகமாய்க் குத்தினார். 'ஆம், நான் உங்களை வைனாவுக்கு அப்புறம் துரத்தி விடுவேன். நீப்பருக்கு அப்புறம்கூடத் துரத்தி விடுவேன். மீண்டும் அந்தப் பழைய தடை வேலியைத் திரும்ப ஸ்தாபிப்பேன். அந்த வேலியை அழித்தது ஐரோப்பாவின் குருட்டுத்தனமான குற்றமாகும். ஆம், உங்களுக்கு ஏற்படப்போவது அதுதான். என்னை விரோதித்துக்கொண்டதால், உங்களுக்குக் கிடைத்த பலன் அதுதான்' என்று சொல்லிவிட்டு, பல தடவைகள் அந்த அறையில் மேலும் கீழும் நடந்தார். அவருடைய பருத்த தோள்கள் சுளித்தன.

அவர் தமது பொடி டப்பியை உள் சட்டையின் ஜேபியில் போட்டுவிட்டு, மீண்டும் அதை எடுத்துப் பல தடவைகள் தமது நாசிக்கு உயர்த்தி, பலாஷேவ் முன்பாக நின்றார். அவர் சிறிது தயங்கி நின்று, கேலியோடு நேராகப் பலாஷேவின் கண்களைப் பார்த்து அமைதியான குரலில் சொன்னார்:

'என்றாலும், உமது எஜமானர் எப்பேர்ப்பட்ட சிலாக்கியமான ராஜாங்கத்தைப் பெற்றிருக்க முடியும்.'

அதற்குப் பதில் சொல்லவேண்டியது தமது கடமையென்று பலாஷேவ் நினைத்தார். ருஷ்யாவின் பார்வையில் நிலைமை அவ்வளவு மோசமாக இல்லை என்று சொன்னார். நெப்போலியன் மௌனமாக, இன்னமும் நையாண்டியாக அவரைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் சொல்லியதைக் கேட்டதாகத் தெரியவில்லை. இந்த யுத்தத்திலிருந்து மிகுந்த, சிறந்த பலன்கள் ஏற்படக்கூடுமென்று, ருஷ்யாவில் எதிர்பார்ப்பதாக பலாஷேவ் கூறினார். நெப்போலியன் தயவுகாட்டுவதுபோலத் தலையை அசைத்தார். 'நீர் அப்படிச் சொல்லவேண்டியது உமது கடமையென்று எனக்குத் தெரியும். ஆனால், நீரே அதை

நம்பவில்லை. நான் உமக்கு நிரூபித்து விட்டேன்' என்று கூறுவதுபோல, அவருடைய தலை அசைப்பு இருந்தது.

பலாஷேவ் பேசி முடித்ததும் நெப்போலியன் மீண்டும் தமது பொடி டப்பியை எடுத்து நாசியினால் அதை உறிஞ்சிவிட்டு, தாம் புறப்படத் தயாராக இருப்பதைக் காட்டுவதற்காகத் தமது பாதத்தால் இரு தடவைகள் பூமியை உதைத்தார். கதவு திறக்கப்பட்டது. ஒரு ஏவல்-கனவான் உள்ளே வந்து, மரியாதையோடு தலைவணங்கி, சக்கரவர்த்திற்கு அவருடைய தொப்பியையும் கையுறைகளையும் கொடுத்தார். அவர்களைத் திரும்பிப் பார்க்காமலேயே, பலாஷேவிடம் திரும்பி, அவர் சொன்னார்:

'நான் முன்பு எவ்வளவு தூரம் அவரிடம் பக்தி கொண்டிருந்தேனோ, அதே மாதிரி இப்பொழுதும் கொண்டிருப்பதாக அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியிடம் உறுதி கூறும். அவரை எனக்குப் பூரணமாகத் தெரியும். அவருடைய உயர்ந்த குணங்களுக்காக, அவரை மிக உயர்வான மதிப்பில் நான் வைத்திருக்கிறேன். ஜெனரலே, உம்மை இனியும் தாமதிக்க வைக்கமாட்டேன். சக்கரவர்த்திக்கு நான் கொடுக்கும் கடிதம், உமக்கு வந்து சேரும்' என்று அவர் சொல்லிவிட்டு, தமது தொப்பியைக் கையில் எடுத்துக்கொண்டார்.

நெப்போலியன் விரைவாக கையில் எடுத்துக்கொண்டார். அறையிலுள்ள ஒவ்வொருவரும் முன்னதாக ஓடி படிக்கட்டுகளில் இறங்கினார்கள்.




இவற்றையெல்லாம் நெப்போலியன் சொல்லிய பின்பு, அந்தக் கோபக் கூச்சல்களையும், கடைசியாகப் பேசிய வரண்ட வார்த்தைகளான 'ஜெனரலே, உம்மை நான் இனியும் தாமதிக்க வைக்க மாட்டேன். எனது கடிதம் உமக்கு வந்து சேரும்' என்பவைகளையும் கேட்ட பின்பு, நெப்போலியன் தம்மைப் பார்க்க விரும்ப மாட்டார் என்றும், மற்றொரு தடவை தம்மோடு பேசுவதை அவர் தவிர்ப்பார் என்றும், முக்கியமாக அவருடைய காரணமற்ற கோபத்தைக் கண்ட பின்பும், ஒரு அவமானப்படுத்தப்பட்ட தூதரை சந்திக்கமாட்டார் என்றும், பலாஷேவ் நினைத்தார். ஆனால், சக்கரவர்த்தியுடன் அன்று டின்னர் சாப்பிட வரும்படி, பலாஷேவ் ஆச்சரியப்படக்கூடிய விதத்தில் டியூராக் மூலம் அவருக்கு அழைப்பு கிடைத்தது.

பெஸியர்ஸ், காலெயின்கோர்ட், பெர்த்தியர் ஆகியவர்களும் டின்னரில் பிரசன்னமாயிருந்தார்கள்.

பலாஷேவை மகிழ்ச்சியோடும், சௌஜன்யத்தோடும், நெப்போலியன் வரவேற்றார். அன்று காலையில் அவர் காட்டிய கோபத்திற்காக, அடக்கத்தையோ சுய கண்டனத்தையோ அவர் காட்டிக் கொள்ளவில்லை. அதற்கு மாறாக, பலாஷேவ் சங்கோஜமில்லாமல் இருப்பதற்காக அவர் முயற்சித்தார். தாம் ஒரு தவறு செய்வது என்பது நடக்காத காரியம் என்பதை வெகு காலத்திற்கு முன்பே அவர் உறுதியாக நம்பியுள்ளார் என்பது தெளிவாய்த் தெரிந்தது. அவருடைய அபிப்பிராயத்தில், அவர் எது செய்தாலும் அது சரியாகத் தான் இருக்கவேண்டும் என்றே நம்பி வந்தார். அவர் செய்கிற காரியம் சரியான காரியங்களோடோ, அல்லது தவறான காரியங்களோடோ பொருந்தியிருக்கின்றன என்பதற்காக அவர் அப்படி நினைக்கவில்லை. தாம் செய்தார் என்றாலும், அது சரியாகத்தான் இருக்கவேண்டும் என்கிற ஒரே முடிவையே அவர் கொண்டிருந்தார்.

வில்னா தெருக்கள் வழியாகச் சக்கரவர்த்தி சவாரி வந்தபோது, மக்களின் கூட்டம் பரவசத்தோடு அவருக்கு வாழ்த்து கூறி, அவரைப் பின்தொடர்ந்தன. அந்த சவாரிக்குப் பின்னால், சக்கரவர்த்தி மிகுந்த நல்ல சுபாவத்தோடு இருந்தார். வில்னா தெருக்களில் அவர் சவாரி போன ரஸ்தாக்களில் உள்ள ஜன்னல்களையும், கொடிகளையும், அவருடைய எழுத்துச் சின்னங்களையும் அலங்காரமாய்த் தொங்கவிட்டிருந்தார்கள். போலிஷ் சீமாட்டிகள் அவரை வரவேற்று, தங்கள் கைக்குட்டைகளை அவருக்காக ஆட்டினார்கள்.

டின்னரில் பலாஷேவைத் தமது பக்கமாக நெப்போலியன் வைத்துக்கொண்டார். பலாஷேவை சௌஜன்யமாக நடத்தியதோடு, தமது ராஜசபைத் தூதர்களில் அவர் ஒருவர் என்பதைப் போலவும், தமது திட்டங்களில் நம்பிக்கை கொண்டவர்களில் அவர் ஒருவர் என்பதைப் போலவும், தமது வெற்றியில் மகிழ்ச்சி கொள்ளக்கூடியவர்களில் அவர் ஒருவர் என்பதைப் போலவும் அவரிடம் நடந்து கொண்டார். உரையாடலின்போது, மாஸ்கோவைப் பற்றி அவர் பிரஸ்தாபித்தார். ருஷ்யாவின் தலைநகரான மாஸ்கோவைப் பற்றி பலாஷேவிடம் கேட்டபோது, ஒரு பிரயாணி, தாம் விஜயம் செய்யப்போகும் ஒரு புதிய நகரத்தைப் பற்றி கேட்டுத் தெரிந்துகொள்வதுபோல மட்டும் அவர் கேட்கவில்லை; தாம் கேள்வி கேட்பதால், ஒரு ருஷ்யர் என்ற முறையில் பலாஷேவ் மிகுந்த பெருமை கொள்வார் என்று அவர் நம்பிக்கொண்டும் கேட்டார்.

'மாஸ்கோவில் எத்தனை பேர் வசிக்கிறார்கள்? எத்தனை வீடுகள் இருக்கின்றன? மாஸ்கோவைப் 'பரிசுத்த மாஸ்கோ' என்று அழைப்பது உண்மையா? மாஸ்கோவில் எத்தனை மாதா கோயில்கள் இருக்கின்றன?' என்று அவர் கேட்டார்.

அங்கே 200 மாதா கோயில்களுக்கு மேலாக இருக்கின்றன என்ற பதிலைக் கேட்டவுடன் அவர் சொன்னார்:

'எதற்காக அத்தனை மாதா கோயில்கள் வேண்டும்?'

'ருஷ்யர்கள் மிகுந்த பக்தியுள்ளவர்கள்' என்று பலாஷேவ் சொன்னார்.

'ஆனால், ஏராளமான சன்னியாசி மடங்களும் மாதா கோயில்களும் இருப்பது, எப்பொழுதுமே மக்களின் பிற்போக்கின் சின்னங்களாகவே விளங்கும்' என்று நெப்போலியன் சொல்லிவிட்டு, தாம் கூறிய இந்த அபிப்பிராயத்தை ஆதரிக்க விரும்புவதைப் போல காலெயின்கோர்ட்டைத் திரும்பிப் பார்த்தார்.

பிரஞ்சு சக்கரவர்த்தி சொல்லியதை, தாம் ஒப்புக்கொள்ள வில்லையென்று பலாஷேவ் மரியாதையோடு கூறினார். 'ஒவ்வொரு நாட்டிற்கும் அதனுடைய சொந்த குணம் உண்டு' என்று அவர் சொன்னார்.

'ஆனால், ஐரோப்பாவில் வேறு எங்கும் இம்மாதிரி இல்லை' என்று நெப்போலியன் சொன்னார்.

'மாட்சிமை தங்கியவர் மன்னிக்க வேண்டும். ருஷ்யாவைத் தவிர, ஸ்பெயின் நாடு இருக்கிறது. அங்கே கூட ஏராளமாக மாதா கோயில்களும், சன்னியாசி மடங்களும் இருக்கின்றன' என்று பலாஷேவ் கூறினார்.

ஸ்பெயின் தேசத்தில் சமீபத்தில் பிரஞ்சுக்காரர்கள் தோல்வி அடைந்தார்கள். ஆகவே, இம்மாதிரி பலாஷேவ் கொடுத்த பதிலை, பின்னால் அவர் அலெக்ஜாண்டரின் ராஜ சபையில் சொல்லிய போது, எல்லாரும் பாராட்டினார்கள். ஆனால் நெப்போலியனுடைய அந்த டின்னர் கூட்டத்தில் அதை ஒருவரும் பாராட்ட வில்லை. அதைக் கவனிக்காதது போலவே விட்டுவிட்டார்கள்.

அங்கிருந்த மார்ஷல்களின் சுவாரஸ்யமில்லாத குழப்பமான முகங்கள், பலாஷேவ் பேசிய குரலுக்கு அர்த்தமென்ன என்று ஆச்சரியப்படுவதுபோலத் தோன்றின. 'அவர் சொல்லுவதில் ஏதாவது ஒரு முக்கியமான விஷயம் இருந்தால், அது எங்களுக்குத் தெரிய வில்லை, அல்லது அந்தப் பேச்சு புத்திசாலித்தனமாகவும்

இல்லை' என்று அவர்களுடைய முகத்தோற்றங்கள் சொல்லுவது போல் இருந்தன. ஆகவே, அவருடைய பதிலை ஒருவரும் பாராட்டவில்லை. நெப்போலியன் அதைக் கவனிக்கவேயில்லை. மாஸ்கோவிற்குப் போகிற நேரான ரஸ்தா, எந்தப் பட்டணங்களின் வழியாகப் போகிறது என்று சாதாரணமாக பலாஷேவைக் கேட்டார். டின்னர் முழுவதிலும் மிகுந்த ஜாக்கிரதையோடு இருந்த பலாஷேவ், 'எல்லா ரஸ்தாக்களும் ரோமாபுரிக்கே போகின்றன' என்பதுபோல, எல்லா ரஸ்தாக்களும் மாஸ்கோவிற்கே போகின்றன என்று சொன்னார். பல ரஸ்தாக்கள் இருக்கின்றன என்றும், *பால்டாவா வழியாகப் போகிற ரஸ்தாவில்தான் 12-வது சார்லஸ் போனார் என்றும் அவர் கூறினார். (*100 வருஷங்களுக்கு முன்பாக, 1709-ம் வருஷத்தில் ஸ்வீடன் தேசத்து மன்னரான 12-வது சார்லஸ் ருஷ்யா மீது படையெடுத்தார். ருஷ்யாவின் சக்கரவர்த்தியான மகா பெரிய பீட்டர் என்பவர், பால்டாவா என்ற இடத்தில் பூரணமாக அவரைத் தோற்கடித்தார். மிகுந்த சிரமத்தோடு துருக்கிக்கு அவர் தப்பி ஓடினார்.) தமது பொருத்தமான பதிலைக் கண்டு, தம்மையறியாமலேயே மகிழ்ச்சியோடு பலாஷேவ் முகம் சிவந்தார். ஆனால், பால்டாவா என்ற வார்த்தையை அவர் சொல்லி முடிக்கும் முன்பாக, காலெயின்கோர்ட் பேச ஆரம்பித்தார். பீட்டர்ஸ் பர்க்கிலிருந்து மாஸ்கோவிற்குப் போகும் ரஸ்தா மிகவும் மோசமானது என்று கூறி, பீட்டர்ஸ்பர்க்கில் தமக்கு ஏற்பட்ட அனுபவங்களையும் கூறினார்.

டின்னருக்குப் பின்னால், நெப்போலியனுடைய படிக்கும் அறைக்கு காப்பி அருந்துவதற்காக எல்லாரும் சென்றார்கள். நாலு தினங்களுக்கு முன்பாக, அதுதான் அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியின் படிப்பு அறையாக இருந்தது. நெப்போலியன் அங்கே அமர்ந்து, தமது சேவர்ஸ் காப்பி கோப்பையைக் கையில் எடுத்துக் கொண்டிருந்தார். தமது பக்கத்தில் அமரும்படி பலாஷேவிற்குச் சொன்னார்.

சாப்பிட்ட பின்பு ஒருவனுக்கு திருப்தி ஏற்பட்டு, எவ்வித காரணமுமில்லாமல் ஒவ்வொருவரையும் தமது நண்பர் என்று பாவிக்கக்கூடிய சௌஜன்ய மனோபாவத்தில் இருப்பது, எல்லாரும் அறிந்த விஷயம். அதே மனோபாவத்தில் அப்பொழுது நெப்போலியன் இருந்தார். தம்மைப் பூஜிக்கிறவர்களே, தம்மைச் சுற்றி இருப்பதாக அவருக்குத் தோன்றியது. ஆகவே தமது டின்னருக்குப் பின்னால், பலாஷேவ்கூட தமது நண்பர் என்றும், தம்மைப்போற்றிப் பூஜிக்கிறவர் என்றும் அவர் நினைத்தார். ஒரு

மகிழ்ச்சியோடு, ஆனால் சிறிது கேலியான புன்னகையோடு, நெப்போலியன் அவர் பக்கம் திரும்பினார்.

'இதே அறையில்தான், அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி தங்கி இருந்ததாக எனக்குச் சொல்லுகிறார்கள். ஜெனரலே, இது விசித்திரமாக இல்லையா?' என்று அவர் கேட்டார். தாம் சொல்லுவது கேட்பவருக்குப் பிடித்தமானதாய் இருக்கும் என்பதில் சந்தேகம் கொள்ளவில்லை. ஏனெனில், அலெக்ஜாண்டரைவிட தாம் உயர்வானவர் என்பதை அவர் சொல்லுவது நிரூபிப்பதாக அவர் நினைத்தார். பலாஷேவால் ஒரு பதிலும் கூற முடியவில்லை. மௌனமாகத் தமது தலையைத் தாழ்த்தினார்.

'ஆம், நாலு நாட்களுக்கு முன்பாக இதே அறையில் வின்ட்ஜிவ் கெரோடும், ஸ்டைனும் ஆலோசனை நடத்திக்கொண்டிருந்தார்கள்' என்று நெப்போலியன் ஒரு இகழ்ச்சியான சுய நம்பிக்கை கொண்ட புன்முறுவலோடு தொடர்ந்து பேசினார். 'அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி என்னுடைய சொந்த விரோதிகளைத் தம்மைச் சுற்றிலும் வைத்துக்கொண்டிருப்பதைத்தான் என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அதை என்னால்... புரிந்துகொள்ள முடியவில்லை. அதே மாதிரி நானும் செய்ய முடியும் என்பதை அவர் நினைத்துப் பார்க்க வில்லையா?' என்று சொல்லி கேள்விக் குறியோடு பலாஷேவை நெப்போலியன் திரும்பிப் பார்த்தார். அன்று காலையில் அவர் பேசியது இன்னும் மறையாமல் அவருடைய உள்ளத்தில் இருந்தது. அந்தக் கோபமான பாதையிலேயே அவருடைய சிந்தனை மீண்டும் திரும்பியது போலக் காணப்பட்டது.

'நானும் அதைச் செய்யமுடியும் என்பதை அவர் அறிந்துகொள்ளட்டும்' என்று நெப்போலியன் சொல்லி தமது கையிலிருந்த கோப்பையைத் தள்ளி வைத்து எழுந்தார். 'அவருடைய உர்டெம் பெர்க், பாடென், வைமார் உறவினர்களை யெல்லாம் ஜெர்மனியை விட்டு நான் விரட்டிவிடுவேன்... ஆம். நான் அவர்களை விரட்டி விடுவேன். ருஷ்யாவில் அவர்கள் தங்குவதற்கு விடுதிகளை அவர் தயார் செய்யட்டும்.'

பலாஷேவ் தமது தலையைத் தாழ்த்தினார். தாம் தலை வணங்கி புறப்பட்டுப்போக விரும்புவதுபோலவும், இதுவரைத் தம்மிடம் சொல்லியவைகளை எல்லாம் வேறு வழியில் இல்லாமல் தாம் கேட்டு வந்தது போலவும் விளங்கினார். இந்த தோற்றத்தை நெப்போலியன் கவனிக்கவில்லை. தமது எதிரியிடமிருந்து வந்த ஒரு தூதர் என்ற முறையில் பாலஷேவை அவர் நடத்தவில்லை. தம்மீது அவர் பூரணமாக பக்தி கொண்டு இருப்பது போலவும்,

அவருடைய மாஜி எஜமானருக்கு அவமானங்களைக் கண்டு அவர் மகிழ்ச்சி அடைவார் என்பது போலவும் பலாஷேவை அவர் நடத்தினார்.

'அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி ராணுவங்களின் கமாண்டர் பதவியை எதற்காக மேற்கொண்டார்? அதனால் என்ன நன்மை ஏற்பட்டுவிடும்? எனக்கு யுத்தம் என்பது என்னுடைய தொழில். ஆனால் அவருக்கு ஆட்சி புரிவதுதான் அவர் தொழிலே ஒழிய ராணுவங்களை நடத்துவது அவர் தொழில் அல்ல. எதற்காக அவர் அந்த பொறுப்பை ஏற்றுக்கொண்டார்?' என்று நெப்போலியன் கேட்டார்.

மீண்டும் நெப்போலியன் தமது பொடி டப்பியை வெளியே எடுத்து அந்த அறையில் மௌனமாகப் பல தடவைகள் மேலும் கீழும் உலாவினார். பலாஷேவைப் பிரியப்படுத்தும்படி ஒரு முக்கியமான காரியத்தை செய்வதைப்போல ஒரு லேசான புன்னகை கொண்டு, நம்பிக்கையோடு வேகமாகத் தமது கையை அந்த 40-வயதான ருஷ்ய ஜெனரலின் முகத்திற்கு உயர்த்தி அவருடைய காதைப் பற்றி மெதுவாக இழுத்தார். அவருடைய உதடுகள் மட்டும் இளநகை காட்டின.

பிரஞ்சு ராஜ சபையில் ஒருவருடைய காதை சக்கரவர்த்தி பிடித்து இழுப்பது என்பது மிகப் பெரிய மரியாதையென்றும் சக்கரவர்த்தியின் அருளைக் காட்டுவதென்றும் கருதப்பட்டு வந்தது.

'நல்லது. அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியின் தூதரும் அவருடைய பூஜிக்கிறவருமான நீர் ஏன் ஒன்றும் சொல்லாமல் இருக்கிறீர்?' என்று அவர் கேட்டார். தம்முடைய பிரசன்னத்தில் தம்முடைய தூதுவராகவும் தம்மைப் பூஜிக்கிறவராகவும் இருப்பதைத் தவிர மற்றவர்களின் தூதராகவோ, மற்றவர்களைப் பூஜிக்கிறவர்களாகவோ இருப்பது கேலிக்கூத்தான விஷயம் என்று அவர் நினைப்பதுபோல அவர் பேசியது இருந்தது. ''ஜெனரலுக்கு குதிரைகள் தயாராக இருக்கின்றனவா?' என்று பலாஷேவ் தலை வணங்கியதற்கு பதில் கூறுகிறவரைப்போலத் தமது தலையை லேசாக அவர் பக்கம் சாய்த்து அவர் கேட்டார்: 'என்னுடைய குதிரைகளை அவருக்குக் கொடுங்கள். அவர் வெகு தூரம் போகவேண்டியிருக்கிறது' என்று முடித்தார்.

பலாஷேவ் எடுத்துக்கொண்டு போன கடிதம்தான் அலெக்ஸாண்டருக்கு நெப்போலியன் அனுப்பிய கடைசி கடிதம். பேட்டியைப் பற்றிய ஒவ்வொரு விஷயமும் அக்கடிதத்தில் குறிப்பிடப் பட்டிருந்தது. யுத்தம் ஆரம்பமாயிற்று...



மாஸ்கோவில் பீயருடன் பேசிய பின்பு, இளவரசர் பீட்டர்ஸ் பர்க்கிற்குப் போனார். சொந்த வேலையாகப் போவதாகத் தமது குடும்பத்தாரிடம் சொன்னார். ஆனால், உண்மையில் அனடோல் குராகினைச் சந்திப்பதற்காகவே அவர் போனார். அவரை எதிர்க்க வேண்டியது அவசியமென்றும் அவர் நினைத்தார். பீட்டர்ஸ்பர்க்கிற்குப் போய்ச் சேர்ந்ததும் குராகினைப் பற்றி விசாரித்தார். அவர் முன்பே நகரத்தை விட்டுப் போய்விட்டார். இளவரசர் ஆண்ட்ரூ அவரைத் தேடிக்கொண்டு வருகிறார் என்று, தமது மைத்துனருக்கு ஏற்கெனவே பீயர் எச்சரிக்கை செய்திருந்தார். யுத்த மந்திரியிடமிருந்து சீக்கிரமாகத் தமக்கு ஒரு உத்தியோகத்தை வாங்கிக் கொண்டு மால்டேவியா என்ற இடத்திலிருந்த ராணுவத்தில் போய்ச் சேருவதற்கு அனடோல் குராகின் புறப்பட்டுப் போனார். இளவரசர் ஆண்ட்ரூ பீட்டர்ஸ்பர்க்கிலிருந்தபோது, தமது முந்தைய கமாண்டரான குட்டுஜோவைச் சந்தித்தார். அவர் எப்போதுமே இவரிடம் நல்லெண்ணம் கொண்டவர். மால்டேவியா என்ற இடத்திலுள்ள ராணுவத்திற்குத் தாம் போவதாகவும், தம்மோடு அவரும் வரவேண்டுமென்றும் குட்டுஜோவ் கேட்டார். மால்டேவ்.யாவிலுள்ள ராணுவத்திற்கு குட்டுஜோவ் சேனாதிபதியாக நியமிக்கப்பட்டிருந்தார். ஆகவே, தலைமை ஸ்தானத்தில் உள்ள பரிவாரத்தில் ஒரு உத்தியோகம் பெற்றுக் கொண்டு துருக்கிக்கு இளவரசர் ஆண்ட்ரூ புறப்பட்டுப் போனார்.

கடிதம் மூலமாக எழுதி குராகினை சண்டைக்கு அழைப்பது சரியான காரியமல்ல என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். புதிதாகக் காரணம் எதுவும் இல்லாமல், அவரைச் சண்டைக்கு அழைத்தால் இளைய கோமகள் ராஸ்டோவாவின் பெயர் கெட்டு விடுமென்றும் அவர் நினைத்தார். ஆகவே, டூயல் சண்டைக்குப் புதிதாக ஒரு காரணத்தைக் கண்டு பிடிப்பதற்காகக் குராகினை நேரில் சந்திக்க விரும்பினார். ஆனால் துருக்கியிலும் கூட குராகினை அவர் கண்டு பிடிக்க முடியவில்லை. ஏனெனில், இளவரசர் ஆண்ட்ரூ அங்கே வந்ததும் துருக்கியை விட்டு குராகின் ருஷ்யா திரும்பி விட்டார். புதிய நாட்டில், புதிய நிலைமைகளில் வாழ்க்கை சுலபமாகவும், சகிக்கக் கூடியதாகவும் இருந்ததை இளவரசர் ஆண்ட்ரூ கண்டார். தமதுட நிச்சயதார்த்தப் பெண் நிச்சயதார்த்தத்தை முறித்த பின்பு-அதனுடைய பலன்களை மறைப்பதற்கு அவர் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக முயற்சி செய்தாரோ,

அவ்வளவுக் கவ்வளவு கூர்மையாக அவரை அவை உறுத்தின - அவர் சந்தோஷமாய் இருந்த சூழ்நிலைகள் எல்லாம், அவருக்கு கஷ்டமாய்த் தோன்றின; ஒரு காலத்தில் சுதந்திரத்திற்கும் விடுதலைக்கும் அவர் எவ்வளவு உயர்ந்த மதிப்பு கொடுத்திருந்தாரோ, அவையெல்லாம் அவருக்கு இப்பொழுது மிகுந்த கஷ்டமாய் இருந்தன. ஆஸ்டர்லிட்ஜ் யுத்த களத்தில் படுத்து வானத்தைப் பார்த்துக்கொண்டிருந்தபோது, அவருக்கு முதலில் தோன்றிய நினைப்புகள் பின்னால் பீயரிடம் சம்பாஷித்தபோது விரிவடைந்தன; அந்த நினைப்புகள் அவர் பாகுசாரவா என்ற இடத்தில் தனிமையாய் இருந்தபோதும், பின்னார் ஸ்விட்ஜர்லாந்திலும் ரோமாபுரியிலும் இருந்தபோதும் அவரை நிரப்பி வந்தன. அவற்றையெல்லாம் இப்பொழுது அவரால் நினைக்க முடிவதில்லை. அவை காட்டிய அந்தப் பிரகாசமான, எல்லையற்ற அடிவானங்களையும், அந்த நினைப்புகளையும், மீண்டும் நினைவு கூர்ந்து கொள்ளுவதற்குக் கூட அவர் பீதியடைந்தார். தம்முடைய பழங்கால காரியங்களுக்கு சம்பந்தமில்லாத, உடனே செய்ய வேண்டிய காரியங்களில் மட்டும் அவர் சிரத்தை கொண்டிருந்தார். அந்த பழங்கால காரியங்கள் அவரை நெருங்கி இருக்க இருக்க தற்கால காரியங்களில் அவர் மிகுந்த ஆவலோடு இறங்கினார். ஒரு காலத்தில் அவருக்கு மேலாக உயர்ந்து, எல்லையற்ற, கம்பீரமான தேவலோக படுதாவாக விளங்கியது, இப்பொழுது திடீரென்று ஒரு தாழ்ந்த கனமான நிலவறை போலத் தோன்றி அவரை அமுக்கியது. அதில் எல்லாம் தெளிவாய்த் தோன்றிய போதிலும், அதில் ரகசியமோ, நித்தியத்துவமோ காணப்படவில்லை.

அவருக்கு முன்னால் நின்ற வேலைகளில் ராணுவ சேவைதான் சுலபமானதாகவும், மிகுந்த பழக்கமுள்ளதாகவும் தோன்றியது. குட்டுஜோவின் பரிவாரங்களில் ஒரு ஜெனரலாக அவர் அலுவல் பார்த்தபோது, மிகுந்த ஊக்கத்துடனும், விடாப்பிடியுடனும் வேலை பார்த்தார். வேலையில் அவருக்குள்ள விருப்பத்தையும் சரியாக வேலை செய்யவேண்டுமென்ற நினைப்பையும் கண்ட குட்டுஜோவ் ஆச்சரியம் அடைந்தார். குராகினைத் துருக்கியில் காண முடியவில்லை யென்பதற்காக, மீண்டும் அவருக்குப் பின்னால் ருஷ்யாவுக்குப் போகவேண்டியது அவசியமென்று அவர் நினைக்கவில்லை. என்றாலும், எவ்வளவு காலம் கழிந்தாலும், அதற்குப் பின்னால் அவர் குராகினைச் சந்திக்கும்போது, அவர் மீது இளவரசருக்கு இழிவான அபிப்பிராயமிருந்தபோதிலும், குராகினுடன் டூயல் சண்டை போட இறங்குவது ஒரு தகுதியற்ற

காரியம் என்ற நம்பிக்கை இருந்தபோதிலும், அவர் குராகினைச் சந்திக்கும்போது தம்மைத் தடுக்க முடியாது என்பதையும், ஒரு கடும் பசியுள்ளவன் ஆகாரத்தை எப்படிப் பற்றுவானோ, அதே மாதிரிதான் குராகினோடு சண்டை போட நேரிடும் என்பதையும் அவர் அறிவார். தமக்கு ஏற்பட்ட அவமானத்திற்கு இன்னும் பழிவாங்கவில்லை யென்ற உணர்ச்சியும், மனக்கசப்பு தீரவில்லையென்ற உணர்ச்சியும் அவருடைய இருதயத்தை பலமாய் அழுத்தின. விடாத, ஓய்வில்லாத, ஆசை கொண்ட, தற்புகழ்ச்சிக்கான வேலைகளில் ஈடுபட்டு, துருக்கியில் அவர் பெற்றிருந்த செயற்கை அமைதியை அந்த உணர்ச்சிகள் கெடுத்து வந்தன.

*1812*-ஆம் வருஷத்தில் நெப்போலியனோடு யுத்தம் ஆரம்பமாய் விட்டது என்ற செய்தி புகாரஸ்டு நகருக்கு வந்து சேர்ந்தது. அந்த நகரில் கடந்த இரண்டு மாதங்களாக வாலாச்சியம் பெண்ணோடு, குட்டுஜோவ் இரவும் பகலுமாகக் காலத்தைக் கழித்து வந்தார். அந்தச் செய்தி கிடைத்தவுடன், தம்மை மேற்கு ராணுவத்திற்கு மாற்றிவிடும்படி, இளவரசர் ஆண்ட்ரூ குட்டுஜோவைக் கேட்டார். பால்கோன்ஸ்கியின் சுறுசுறுப்பான நடவடிக்கைகளைக் கண்டு, அவற்றினால் தம்முடைய சோம்பேறித்தனத்தைக் கண்டிப்பது போல இருக்கிறது என்று சடைவு கொண்ட குட்டுஜோவ், அவரை அங்கிருந்து அனுப்புவதற்கு மிகவும் தயாராய் இருந்தார். ஆகவே, பார்க்ளே டி டாலி என்பவரிடம் அவரை அனுப்பினார்.

மேற்கு ராணுவம் அந்த மே மாதத்தில் டிரிஸா என்ற இடத்தில் முகாம் போட்டிருந்தது. அதில் போய்ச் சேருவதற்கு முன்பாக, இளவரசர் ஆண்ட்ரூ பால்டு ஹில்ஸுக்குப் போனார். தாம் போகிற வழியிலேயே பால்டு ஹில்ஸ் இருந்தது. ஸ்மாலென்ஸ்க் ரஸ்தாவிலிருந்து இரண்டு மைல் தூரத்தில் அந்த இடம் இருந்தது. கடந்த மூன்று வருஷ காலங்களில் அவருடைய வாழ்க்கையில் எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன; எத்தனையோ விதமான எண்ணங்கள் அவருடைய மனதில் தோன்றியிருந்தன; எத்தனையோவிதமான உணர்ச்சிகள் அவருக்கு ஏற்பட்டிருந்தன. மேற்கிலும் கிழக்கிலும் அவர் பிரயாணம் செய்தபடியால், எவ்வளவோ காரியங்களை அவர் பார்த்தார். ஆகவே பால்டு ஹில்ஸுக்கு அவர் வந்து சேர்ந்ததும் அவர் எதிர்பார்த்த விதத்தில் அங்கே வாழ்க்கை ஒவ்வொரு விதத்திலும் பழையபடியே இருந்ததேயொழிய, கொஞ்சங்கூட மாறவில்லை யென்பதை அறிந்ததும் அவருக்கு விசித்திரமாய் இருந்தது. கல் தூண்களோடு அமையப் பெற்ற அந்த வெளிவாசல்கள் வழியாக அவர் நுழைந்து,

அங்கிருந்த சாலை வழியாக வீட்டிற்குப் போனார். ஒரு மயக்கமான தூங்கும் கோட்டைக்குள் போகிற மாதிரி, அவர் போனது இருந்தது. அதே மாதிரி பழைய கம்பீரமான தோற்றம், அதே மாதிரியான சுத்தம், அதே மாதிரியான அமைதி அங்கே நிலவி வந்தன. வீட்டினுள்ளே பழைய மேஜை-நாற்காலிகளும், பழைய சுவர்களும், பழைய சப்தங்களும், பழைய வாசனைகளும், பீதிகொண்ட அதே பழைய முகங்களும், ஆனால் முகங்கள் எல்லாம் கொஞ்சம் வயதாயும், காணப்பட்டன. இளவரசி மேரி முன் போலவே பீதி உள்ளவளாகவும், அழகு இல்லாத குமாரியாகவும், தனது வாழ்க்கையின் சிறந்த வருஷங்களை உபயோகமில்லாமலும், மகிழ்ச்சி இல்லாமலும் கழித்து, இடைவிடாத பயத்திலும், கஷ்டங்களிலும் உழன்று, வயதில் அதிகமாகிக்கொண்டு வந்தாள். குமாரி பௌரியன் பழைய மாதிரியே பிலுக்கோடு, சுயதிருப்தியடைந்த பெண்ணாக ஒவ்வொரு வினாடியையும் மிகுந்த மகிழ்ச்சியோடு அனுபவித்து, எதிர்காலத்தைப்பற்றி மகிழ்ச்சியான நம்பிக்கைகள் நிறைந்தவளாகக் காணப்பட்டாள். அவள் வரவர மிகுந்த சுய நம்பிக்கை கொண்டிருப்பதாக இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். ஸ்விட்ஜர்லாந்திலிருந்து தாம் அழைத்து வந்த வாத்தியாராகிய டெஸ்ஸலெஸ் என்பவர் ஒரு ருஷ்ய கோட்டை அணிந்துகொண்டு, அரைகுறை ருஷ்ய மொழியில் வேலைக்காரர்களிடம் பேசிக்கொண்டிருந்தார். ஆனால், அவர் முன்போலவே குறுகிய புத்திசாலித்தனத்துடனும், மனச்சாட்சி உள்ளவராகவும், ஆனால் டம்பமான வாத்தியராகவும் காணப்பட்டார். வயோதிக இளவரசர் பார்வையில் மாறியிருந்தார். இடது பக்கத்தில் ஏற்பட்டிருந்த ஒரு சந்து தெளிவாய்த் தெரிந்தது. குணத்தைப் பொறுத்த வரையில் அவர் பழையபடியே இருந்தார். ஆனால், கோபத்திலும் கேலியிலும் முன்னைவிட அதிகமாய் காணப்பட்டார். குஞ்சு நிக்கலஸ் மட்டும் தோற்றத்தில் மாறியிருந்தான். அவன் வளர்ந்திருந்தான்; ரோஜா நிறத்தில் காணப்பட்டான். சுருண்ட கருப்புத் தலை முடி அவனுக்கு இருந்தது. அவன் மகிழ்ச்சியாய் இருந்து சிரிக்கும்போது, தன்னையறியாமலேயே தனது அழகிய சிறிய மேல் உதட்டைத் தனது தாயார் செய்ததைப் போலவே, மேலே தூக்குவான். அவன் ஒருவன்தான் இந்த மயக்கமான தூங்கும் கோட்டையில் எல்லாம் மாறாமல் நிற்கும் சட்டத்திற்குக் கீழ்ப்படியாதவன். வெளிப் பார்வையில் எல்லாமே பழைய மாதிரியாகவே இருப்பதாகத் தோன்றினாலும், இந்த மக்களின் உள்ளுறவுகள் மட்டும், இளவரசர் ஆண்ட்ரூ கடைசியாகப் பார்த்ததற்குப் பின்னால், மாறிப்போய்

இருந்தன. அந்த வீட்டிலுள்ளவர்கள் இரண்டு கோஷ்டிகளாகப் பிரிந்து, ஒருவருக்கொருவர் விரோதமாக நடந்து கொண்டார்கள். அவர் அங்கே வந்திருப்பதால், அவருக்காகத் தங்கள் பழக்கங்களை மாற்றிக்கொண்டு அவர்கள் கூடினார்கள். இந்த இரண்டு கோஷ்டிகளில் ஒன்றில் வயோதிக இளவரசர், குமாரி பௌரியன், கட்டிடச் சிற்பி ஆகியோர் இருந்தார்கள். மற்றொரு கோஷ்டியில் இளவரசி மேரியும், டெஸ்ஸலெஸ்ஸூம், குஞ்சு நிக்கலஸூம், மற்றும் வயதான தாதிகளும், வேலைக்காரர்களும் இருந்தார்கள்.

பால்டு ஹில்ஸில் அவர் தங்கியிருந்த காலத்தில், குடும்பத்தார் எல்லோருமே ஒன்றாய் உட்கார்ந்து டின்னர் சாப்பிட்டார்கள். ஆனால் அவர்களுக்குள் சௌஜன்யம் இல்லை. தாம் விருந்தாளியாக வந்திருப்பதால், தமக்காகத் தனி விசேஷம் காட்டப்படுகிறது என்றும், அவர்கள் எல்லாரும் தமக்காகத் தர்ம சங்கடத்திற்குள்ளாகி இருக்கிறார்கள் என்றும் இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். தம்மையறியாமலேயே முதல் நாளன்று டின்னர் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது, இதை நினைத்து மௌனமாய் இருந்தார். இதைக் கவனித்த வயோதிக இளவரசரும் மிகுந்த சோகத்தோடு மௌனமானார். டின்னர் முடிந்ததும் நேராகத் தமது அறைக்குப்போய் விட்டார். மாலையில் இளவரசர் ஆண்ட்ரூ அவரைப்போய்ச் சந்தித்தார். அவரை உற்சாகப்படுத்துவதற்காகக் கோமகன் காமென்ஸ்கியின் படையெடுப்பைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். வயோதிக இளவரசர் எதிர்பாராதவிதமாக இளவரசி மேரியைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். அவளுடைய மூடத்தனமான மத நம்பிக்கைகளை அவர் குறை கூறினார். குமாரி பௌரியன் மீது அவளுக்குள்ள வெறுப்பைப் பற்றியும் அவர் குறை கூறினார். குமாரி பௌரியன் தான் தம்மிடம் உண்மையில் அன்பு கொண்டிருப்பதாக அவர் சொன்னார்.

தம் உடம்பு அசௌக்கியமாயிருந்தால், அதற்குக் காரணம் இளவரசி மேரிதான் என்று வயோதிக இளவரசர் சொன்னார். அவள் வேண்டுமென்றே தமக்குத் தொந்தரவு கொடுத்து எரிச்சல் கொடுத்து வருவதாகவும், அவள் அசட்டுத்தனமான பேச்சுகளைப் பேசி அந்தக் குஞ்சு இளவரசர் நிக்கலஸைக் கெடுத்து வருவதாகவும் சொன்னார். தமது குமாரியைத் தாம் துன்புறுத்தி அவளுடைய வாழ்க்கையை மிகவும் கஷ்டமானதாகச் செய்து வருவதை வயோதிக இளவரசர் அறிவார். ஆனால் அவளைத் துன்புறுத்தாமல் இருக்கத் தம்மால் முடியாதென்பதையும், அவளுக்கு அது வேண்டியதுதான் என்பதையும் அவர்அறிவார். ‘இதை அறிந்து கொண்டிருக்கிற இளவரசர் ஆண்ட்ரூ, தமது சகோதரியைப்பற்றி என்னிடம் ஏன்

ஒன்றும் சொல்வது இல்லை? நான் ஒரு அயோக்கியன் என்று அவர் நினைக்கிறாரா? அல்லது தமது குமாரியை ஒரு காரணமும் இல்லாமல் தூரத் தள்ளி வைத்திருக்கும் ஒரு வயோதிக முட்டாள் என்று அவர் நினைக்கிறாரா? அல்லது இந்தப் பிரஞ்சு பெண்ணைத் தம்மோடு சேர்த்து வைத்திருக்கிறார் என்று அவர் நினைக்கிறாரா? அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆகவே அவருக்கு நான் விளக்கிச் சொல்ல வேண்டும். நான் சொல்வதைக் கேட்டாக வேண்டும்' என்று வயோதிக இளவரசர் நினைத்தார். தமது குமாரியின் நியாயமற்ற போக்கை, தம்மால் ஏன் பொறுத்துக்கொண்டிருக்க முடியவில்லை என்பதை அவர் விளக்க ஆரம்பித்தார்.

'நீர் என்னைக் கேட்டால்' என்று இளவரசர் ஆண்ட்ரூ மேலே நிமிர்ந்து பார்க்காமலேயே பேசினார். தமது ஆயுளிலேயே முதல் தடவையாகத் தமது தந்தையை அவர் கண்டித்தார். 'அதைப் பற்றிப் பேசுவதற்கு நான் விரும்பவில்லை. ஆனால் நீர் என்னிடம் கேட்கிறபடியால், எனது ஒளிவு மறைவு இல்லாத அபிப்பிராயத்தைச் சொல்லுகிறேன். உமக்கும் மேரிக்கும் இடையில் ஏதாவது தப்பபிப்பிராயமோ மனஸ்தாபமோ இருந்தால், அதற்காக நான் அவளைக் குறைகூற மாட்டேன். ஏனெனில், அவள் எம்மை எவ்வளவு தூரம் நேசிக்கிறாள் என்பதையும், மரியாதை காட்டுகிறாள் என்பதையும் நான் அறிவேன். ஆனால் நீர் என்னைக் கேட்கிறபடியால்' என்று தொடர்ந்து, இளவரசர் மிகுந்த எரிச்சல் கொண்டு (அவர் சமீப காலத்தில் அம்மாதிரி எப்போதுமே எரிச்சல் கொள்கிறார்) 'ஏதாவது உங்களுக்குள் தப்பபிப்பிராயங்கள் ஏற்பட்டிருந்தால், அவையெல்லாம் அந்தக் கேடு கெட்ட பெண் இருக்கிறாளே அவளால்தான் ஏற்பட்டவை என்று நான் சொல்வேன். என்னுடைய சகோதரிக்குத் துணையாக இருக்க அவள் அருகதையற்றவள்.'

வயோதிக மனிதர் முதலில் தமது குமாரர் மீது வெறித்த கண்களோடு குத்திட்டுப் பார்த்தார். ஒரு இயற்கைக்கு விரோதமான புன்னகை அவர் பற்களின் நடுவே இருந்த இடைவெளி வழியாகத் தோன்றியது. இளவரசர் ஆண்ட்ரூவுக்கு இதில் இன்னும் பழக்கம் ஏற்படவில்லை.

'என்ன துணை, எனது அன்பான குமாரனே? என்ன? நீ அதற்குள் அதைப் பேச ஆரம்பித்துவிட்டாய். என்ன?'

'அப்பா, நான் எந்தவிதமான தீர்ப்புக் கூறவும் விரும்பவில்லை' என்று இளவரசர் ஆண்ட்ரூ, ஒரு கடினமான, மனக்கசப்பான

தொனியோடு பேசினார். 'ஆனால், நீர் என்னை வாதுக்கு அழைத்தீர். நான் ஏற்கெனவே சொல்லிவிட்டேன். இனியும் எப்போதும் சொல்வேன். மேரியைக் குறைகூற முடியாது. அந்த ஒருத்தியைத் தான், பிரஞ்சுப் பெண்ணைத்தான் குறைகூற வேண்டும்.'

'ஆ! அவர் தீர்ப்புக் கூறிவிட்டார்... தீர்ப்புக் கூறிவிட்டார்!' என்று அந்த வயோதிக மனிதர் மெதுவான குரலில் சொன்னார். அதைச் சிறிது மனக்குழப்பத்தோடு சொல்லியதாக இளவரசர் ஆண்ட்ரூவுக்குத் தோன்றியது. ஆனால் அவர் உடனே திடீரென்று குதித்தெழுந்து, 'வெளியே போ, வெளியே போ. உன் நிழல்கூட இங்கே இருக்கக்கூடாது...' என்று அவர் கூச்சலிட்டார்.

இளவரசர் ஆண்ட்ரூ உடனே அதை விட்டுப்போக விரும்பினார். ஆனால் இளவரசி மேரி மற்றொரு நாள் தங்கும்படி அவரைச் சம்மதிக்கச் செய்தாள். அன்று தமது தந்தையை அவர் பார்க்கவில்லை. தமது அறையை விட்டு அந்த வயோதிகர் வெளியே வரவும்இல்லை. அவருடைய அறைக்குள் குமாரி பௌரியனையும், டைக்கனையும் தவிர, வேறு ஒருவரையும் அவர் அனுமதிக்கவில்லை. ஆனால் தம்முடைய குமாரர் போய்விட்டாரா என்று பல தடவைகள் கேட்டுக்கொண்டிருந்தார். மறுநாள் அந்த இடத்தைவிட்டுப் போவதற்கு முன்பாக, தமது குமாரனின் அறைக்கு இளவரசர் ஆண்ட்ரூ போனார். தன்னுடைய தாயைப் போலவே சுருளைத் தலை முடியைக் கொண்ட அந்தப் பையன், ஆரோக்கியத்தினால் ஜொலி ஜொலிப்பு கொண்டிருந்த அவன், அவருடைய முழங்கால்களில் ஏறி உட்கார்ந்தான். இளவரசர் ஆண்ட்ரூ அவனுக்கு நீலப் பறவையின் கதையைச் சொல்ல ஆரம்பித்தார். உடனே அவர் மனோராஜ்யத்தில் இறங்கி, கதையை முடிக்காமல் விட்டுவிட்டார். இந்த அழகிய குழந்தையைப்பற்றி, அவருடைய முழங்கால்களில் உட்கார்ந்திருந்த அவருடைய குமாரனைப்பற்றி அவர் மனோராஜ்யத்தில் இறங்கவில்லை. ஆனால் தம்மைப் பற்றியே அவர் மனோராஜ்யம் செய்து கொண்டிருந்தார். தமது தந்தையை கோபம் வருகிற மாதிரி தாம் செய்துவிட்டதற்காக, தம்முடைய மனதில் பச்சாதாபம் இருக்கிறதா என்று தம்முள் தேடிப்பார்த்தார். அல்லது வாழ்க்கையிலேயே முதல் தடவையாகத் தமது தந்தையோடு சண்டை போட்டுக்கொண்டு வீட்டை விட்டுக் கிளம்பிப் போவதற்காக தம்முள் வருத்தம் இருக்கிறதா என்று தேடிப்பார்த்தார். இரண்டும் இல்லாததைக் கண்டு அவர் பயங்கரம் அடைந்தார். இதைவிட அதிகமாக அவருக்கு மற்றொரு விஷயம் இருந்தது. அதாவது, தம்முள் அவர் தேடிப் பார்த்தபோது தமது குமாரனிடம் அவருக்கு முன்னால் எவ்வளவு

பரிவு இருந்ததோ, அந்தப் பரிவை இப்போது அவர் காணமுடிய வில்லை. அதை மீண்டும் ஏற்படுத்தலாம் என்ற நம்பிக்கை கொண்டு, தமது குமாரனைத் தமது முழங்கால்களில் தூக்கிவைத்துத் தடவி விட்டுக்கொண்டிருந்தார்.

'நல்லது, மேலே சொல்லு' என்று அவருடைய குமாரன் சொன்னான்.

இளவரசர் ஆண்ட்ரூ பதில் சொல்லாமல், அவனை முழங்கால் களிலிருந்து கீழே இறக்கிவிட்டு, அந்த அறையைவிட்டு வெளியே போனார்.

தமது தினப்படி வேலைகளை இளவரசர் ஆண்ட்ரூ விட்ட பின்பு, முக்கியமாக அவர் மகிழ்ச்சியாய் இருந்த அந்தப் பழைய வாழ்க்கை முறைகளுக்குத் திரும்பிய பின்பு, வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள சடைவு பழைய வேகத்தோடு அவரைப் பற்றியது. இந்த நினைவுகளிலிருந்து விடுபட்டு, கூடிய சீக்கிரம் வேறு ஏதாவது ஒரு வேலையைக் கண்டுபிடிக்க அவர் அவசரப்பட்டார்.

'அப்படியானால், நீர் போவது என்று தீர்மானித்து விட்டீரா, ஆண்ட்ரூ?' என்று அவருடைய சகோதரி கேட்டாள்.

'கடவுளுக்கு நன்றி. ஆமாம், போகிறேன். உன்னால் அப்படிச் செய்ய முடியாததற்காக நான் வருந்துகிறேன்' என்ற இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார்.

'நீர் ஏன் அப்படிச் சொல்கிறீர்?' என்று இளவரசி மேரி கேட்டாள். 'இந்தப் பயங்கரமான யுத்தத்திற்கு நீர் போகும்போது, நமது தந்தை மிகவும் வயதானவராய் இருக்கும்போது, நீர் ஏன் அப்படி சொல்கிறீர்? உம்மைப்பற்றி அவர் கேட்டுக்கொண்டிருப்பதாக குமாரி பௌரியன் சொல்கிறாள்.'

அதைப்பற்றி அவள் பேச ஆரம்பித்ததும், அவளுடைய உதடுகள் துடித்தன. அவளுக்குக் கண்ணீர் விழ ஆரம்பித்தது. இளவரசர் ஆண்ட்ரூ முகத்தைத் திருப்பி, அந்த அறையில் உலாவ ஆரம்பித்தார்.

'ஆ, என் கடவுளே; ஆ, என் கடவுளே, யாரால், எதனால் - எப்பேர்ப்பட்ட குப்பை-மக்களுக்குத் துன்பங்களை உண்டுபண்ண முடியும் என்று ஒருவர் நினைத்துப் பார்க்கும்போது?' என்று அவர் ஒரு குரோதத்தோடு கேட்டார். இதைக் கேட்டு இளவரசி மேரி நடுங்கினாள்.

அவர் குப்பைகள் எனக் குறிப்பிட்டது, தன்னுடைய துன்பத்திற்குக் காரணமான குமாரி பௌரியனை மட்டுமல்ல; அவருடைய மகிழ்ச்சியை எவன் கெடுத்தானோ, அவனையும்

சேர்த்து அவர் குறிப்பிடுகிறார் என்பதை அவள் அறிந்து கொண்டாள்.

'ஆண்ட்ரூ! ஒரு விஷயமாக நான் உம்மைக் கெஞ்சுகிறேன். ஒரு விஷயத்தில் நான் உம்மை இரங்கிக் கேட்டுக்கொள்கிறேன்' என்று அவள் சொல்லி, அவருடைய முழங்கையைத் தொட்டு, தன்னுடைய கண்ணீருக்கிடையில் பிரகாசித்துக்கொண்டிருந்த தனது கண்களால் அவரை நோக்கினாள். 'நான் உம்மை புரிந்துகொள்கிறேன். (அவள் முகம் கவிழ்ந்தாள்) துக்கம் என்பது மனிதர்கள் வேலை என்று நீர் நினைக்க வேண்டாம். மனிதர்கள் எல்லோரும் ''அவர்'' உடைய ஆயுதங்கள்' என்று அவள் சொல்லி, இளவரசர் ஆண்ட்ரூவின் தலைக்கு மேலாகப் பார்த்தாள் தமக்குப் பழக்கமான ஒரு படம் தொங்கிக்கொண்டிருக்கும் இடத்தை ஒருவர் எப்படிப் பார்ப்பாரோ, அதே மாதிரி நம்பிக்கையும் பழக்கமும் கொண்ட பார்வையோடு அவள் பார்த்தாள். 'துக்கம் என்பது ''அவரால்'' அனுப்பப்படுவது; மனிதரால் அல்ல. மனிதர்கள் ''அவர்'' உடைய ஆயுதங்கள். ஆகவே மனிதரை நாம் குறை சொல்லக்கூடாது. யாராவது ஒருவர் உமக்குத் தீங்கு செய்துவிட்டதாக நீர் நினைத்தால், அதைஉடனே மறந்து, அவரை மன்னித்துவிடும். யாரையும் தண்டிப்பதற்கு நமக்கு உரிமை கிடையாது. அதன் பின்னால், நீர் மன்னிப்பதால் ஏற்படக்கூடிய மகிழ்ச்சியை நீர் அறிந்து கொள்ளுவீர்' என்று மேரி சொன்னாள்.

'நான் ஒரு பெண்ணாய் இருந்தால், அதே மாதிரி செய்வேன், மேரி. அது ஒரு பெண்ணுக்குரிய தர்மம். ஆனால், ஒரு ஆண் மறக்கவோ, மன்னிக்கவோ செய்யக்கூடாது; செய்யவும் முடியாது' என்று அவர் பதில் சொன்னார். அந்த வினாடி வரையில் குராகினைப்பற்றி அவர் நினைக்காமல் இருந்தபோதிலும், அந்தப் பேச்சு வந்ததும், திடீரென்று அவருடைய தணியாத கோபம், அவருடைய இருதயத்தில் நிறைந்து பொங்கியது.

'நான் மன்னித்துவிட வேண்டுமென்று என்னை மேரி கேட்பதென்றால், அவரை வெகு காலத்திற்கு முன்பே தண்டித்திருக்க வேண்டும் என்றுதான் அதற்கு அர்த்தம்' என்று அவர் நினைத்தார். அவளுக்கு அதற்கு மேலாகப் பதில் எதுவும் சொல்லாமல், அவர் குராகினைச் சந்தித்து தமது ஆத்திரத்தை தீர்த்துக்கொள்ளக் கூடிய மகிழ்ச்சியான நேரத்தைக் குறித்து சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தார். குராகின் இப்போது ராணுவத்தில் இருக்கிறார் என்பதை அவர் அறிவார்.

இன்னும் ஒரு நாள் அதிகமாகத் தங்கும்படி இளவரசி மேரி அவரைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள். தந்தையுடன் சமாதானம் செய்துகொள்ளாமல் ஆண்ட்ரூ புறப்பட்டுப் போவாரானால், அவளுடைய தந்தை எவ்வளவு தூரம் மன வருத்தப்படுவார் என்பதை அவள் அறிவாள் என்றும் சொன்னாள். ராணுவத்திலிருந்து ஒரு வேளை தாம் சீக்கிரமாகத் திரும்பி வரக்கூடுமென்றும், தமது தந்தைக்கு கண்டிப்பாகக் கடிதம் எழுதுவதாகவும் இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார். இச்சமயத்தில் அதிகமாக அங்கே தங்கியிருந்தால், அவர்களுடைய அபிப்பிராய பேதங்கள் இன்னும் அதிகமாக மனக் கசப்பைக் கொடுக்குமென்று அவர் சொன்னார்.

'போய் வாரும், ஆண்ட்ரூ. துன்பங்கள் எப்போதும் கடவுளிடமிருந்தே வருகின்றன என்பதை நீர் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும். மனிதர்களை எக்காலமும் அவற்றிற்காகக் குறைகூற முடியாது' என்று தமது சகோதரியின் அந்தக் கடைசி வார்த்தைகள், அவர் அவளிடம் விடை பெற்றுக்கொண்டு போகும்போது, அவருக்குக் கேட்டன.

'அப்படியானால், அது அப்படித்தான் இருக்கவேண்டும்.' என்று இளவரசர் ஆண்ட்ரூ, பால்டு ஹில்ஸ் மாளிகையிலிருந்து அந்த சாலைகள் வழியாக வெளியே வரும்போது, நினைத்தார். 'பாவம், அவள் ஒன்றும் அறியாத ஒரு ஜந்து. அந்தப் புத்தி கெட்டுப்போன வயதான மனிதரிடம், அவள் அகப்பட்டுக்கொண்டு கஷ்டப்படவேண்டியதாக இருக்கிறது. அந்த வயதான மனிதர் தாம் தவறு செய்ததாக உணருகிறார். ஆனால் அவர் தம்மை மாற்றிக்கொள்ள முடியவில்லை. என்னுடைய மகன் வளர்ந்து வாழ்க்கையில் மகிழ்ச்சி கொண்டிக்கிறான். மற்றவர்களைப்போல அவனும் வாழ்க்கையில் ஏமாற்றவோ, ஏமாற்றப்படவோ செய்ய நேரும். நான் ராணுவத்திற்கு போகிறேன். ஏன்? எனக்கே தெரியவில்லை. நான் வெறுக்கக்கூடிய அந்த மனிதனைச் சந்திக்க விரும்புகிறேன். என்னைக்கொன்று, என்னைப்பார்த்துச் சிரிக்கும்படி அவனுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்க விரும்புகிறேன்.'

வாழ்க்கையின் நிலைமைகள் எல்லாம் முன்போலவே இருந்தன. ஆனால், அப்போது அவையெல்லாம் ஒன்றையொன்று சேர்ந்து பிணைந்து இருந்தன. ஆனால், இப்போதோ அவையெல்லாம் துண்டு துண்டுகளாகப் போய்விட்டன. உபயோகமற்ற காரியங்கள், தொடர்ச்சியில்லாமல் ஒன்றன்பின் ஒன்றாக, இளவரசர் ஆண்ட்ரூவின் மனதில் வந்து தோன்றின.



**ரா**ணுவத்தின் தலைமைக்காரியாலயத்திற்கு ஜூன் மாதக் கடைசியில் இளவரசர் ஆண்ட்ரூ வந்து சேர்ந்தார். முதல் ராணுவத் தோடு சக்கரவர்த்தி இருந்தார். அரண்களால் பாதுகாக்கப்பட்ட டிரிஸா முகாமில் முதல் ராணுவம் இருந்தது. பாக்ரேஷனுடைய இரண்டாவது ராணுவம், முதல் ராணுவத்தோடு சேர்ந்துகொள்வதற்காகப் பின் வாங்கிக் கொண்டிருந்தது. இந்த இரண்டாவது ராணுவத்தைத் தான் ஏராளமான பிரஞ்சுத் துருப்புகள் துண்டித்துவிட்டன என்று சொல்லப்பட்டது. ருஷ்ய ராணுவத்திலிருந்த காரியங்களின் போக்கைப் பற்றி, பொதுவாக ஒவ்வொருவருக்கும் அதிருப்தி ஏற்பட்டிருந்தது. ஆனால், ஒருவராவது ருஷ்ய மாகாணங்களில், எதிரிகளின் படையெடுப்பு அபாயம் ஏற்படும் என்றோ, அல்லது போலிஷ் மேற்கு மாகாணங்களுக்கும் புறம்பாக யுத்தம் பரவும் என்றோ நினைக்கவில்லை.

பார்க்ளே டி டாலி என்பவருடன் சேவை செய்யும்படி இளவரசர் ஆண்ட்ரூ நியமிக்கப்பட்டிருந்தார். டிரிஸா நதிக்கரையில் இளவரசர் ஆண்ட்ரூ அவரைச் சந்தித்தார். சமீபத்தில் ஒரு பட்டணமோ, அல்லது ஒரு பெரிய கிராமமோ இல்லாதபடியால், அந்த ராணுவத்தைச் சேர்ந்த ஏராளமான ஜெனரல்களும், ராஜ சபைத்தூதர்களும், நதிக்கு இரு கரைகளிலும் உள்ள கிராமங்களில் அகப்படுகிற நல்ல வீடுகளில் சுமார் 6 மைல் தூரம் சுற்றளவு வரையில் தங்கியிருந்தார்கள். சக்கரவர்த்தி தங்கியிருக்கும் இடத்திலிருந்து சுமார் மூன்று மைல் தூரத்தில் பார்க்ளே டி டாலி முகாம் போட்டிருந்தார். பால்கோன்ஸ்கியை அவர் நிமிர்ந்த பார்வையுடனும் கனிவில்லாமலும் வரவேற்றார். தமது அந்நிய உச்சரிப்பில் அவரிடம் பேசினார். சக்கரவர்த்தியிடம் அவரைப் பற்றிப் குறிப்பிட்டு, அவருக்கு என்ன வேலை கொடுக்கலாம் என்று கேட்பதாகவும், அதுவரைத் தமது பரிவாரங்களோடு அவர் இருக்கலாம் என்றும் சொன்னார். அந்த ராணுவத்தில் அனடோல் குராகினைக் கண்டு பிடிக்கலாமென்று இளவரசர் ஆண்ட்ரூ நம்பியிருந்தார். ஆனால் அவர் அங்கே இல்லை. அவர் பீட்டர்ஸ்பர்க்கிற்குப் போய்விட்டார். இதைக்கேட்பதற்கு இளவரசர் ஆண்ட்ரூ சந்தோஷமடைந்தார். ஒரு பிரம்மாண்டமான யுத்தத்தை நடத்திவரும் அந்தத் தலைமைக் காரியாலயத்தின் வேலைகளிலேயே அவருடைய மனம் திரும்பியிருந்தது. ஆகவே, கொஞ்ச காலத்திற்காகவாவது, குராகினுடைய நினைப்பினால்

தம்முடைய மனம் வேறு வழியில் திரும்பமுடியாமல் இருக்குமென்பதை நினைத்து அவர் மகிழ்ச்சி அடைந்தார். முதல் நான்கு நாட்களில் அவருக்கு வேலை எதுவும் கொடுக்கப் படாதபடியால், அந்த பாதுகாக்கப்பட்ட முகாமைப் பார்ப்பதற்காக அதைச்சுற்றி சவாரி வந்தார். தம்முடைய சொந்த ஞானத்தைக் கொண்டும் நிபுணர்களிடம் பேசியதைக்கொண்டும், அந்த முகாமைப் பற்றி ஒரு முடிவான அபிப்பிராயத்திற்கு வர அவர் முயற்சித்தார். ஆனால், அந்த முகாமினால் அனுகூலமா, அல்லது பிரதிகூலமா என்ற விஷயத்தில், அவர் எவ்விதமான முடிவிற்கும் வரமுடியவில்லை. அவருடைய ராணுவ அனுபவத்திலிருந்தும் ஆஸ்திரியப் போர்களில் அவர் பார்த்தவைகளிலிருந்தும், அவர் ஒரு முடிவுக்கு வந்தார். அதாவது, ஆழ்ந்த கவனத்தோடு போடப்படுகிற திட்டங்களுக்கு, யுத்தங்களில் எவ்வித முக்கியத்துவமும் கிடையாதென்பது அவர் கருத்து. எதிரி என்ன செய்வான் என்பதை முன்கூட்டியே சொல்ல முடியாது. ஆகவே, எதிரியின் எதிர்பாராத நடவடிக்கைகளை நாம் எதிர்த்து, எம்மாதிரி யாரால் அதைச் சமாளிக்க முடியும் என்பதைப் பொறுத்துத்தான், எல்லாம் இருக்கிறது என அவர் நினைத்தார். இந்தக் கடைசி விஷயத்தில் தமக்குத் தெளிவு ஏற்படுத்திக் கொள்வதற்காக, தம்முடைய பதவியையும், தமக்குப் பழக்கமானவர்களையும் உபயோகித்து, அந்த ராணுவத்தை நடத்துகிறவர்களின் போக்கை ஆழ்ந்து அறிவதற்கு முயற்சி செய்தார். அந்த வேலையில் ஈடுபட்டுள்ள மனிதர்களையும் கோஷ்டிகளையும் அவர் தெரிந்துகொண்ட பின்பு, ராணுவத்தின் நிலைமை கீழ்க்கண்டவாறு இருப்பதாகத் தமக்குள் ஒரு முடிவுக்கு வந்தார்.

சக்கரவர்த்தி வில்னாவில் இருந்தபோது, படைகள் மூன்று ராணுவங்களாகப் பிரிக்கப்பட்டன. முதல் ராணுவம், பார்க்ளே டி டாலி என்பவரின் கீழ் இருந்தது. இரண்டாவது ராணுவம், பாக்ரேஷன் தலைமையிலும், மூன்றாவது ராணுவம் டார்மாசாவ் தலைமையிலும் இருந்தன. சக்கரவர்த்தி முதல் ராணுவத்தோடு இருந்தார். ஆனால், அவர் சேனாபதியாக இருக்கவில்லை. அச்சமயம் பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளில், முதல் ராணுவத்தோடு சக்கரவர்த்தி இருப்பார் என்று சொல்லப்பட்டனவே ஒழிய, சக்கரவர்த்தி தலைமை வகிப்பார் என்று சொல்லப்படவில்லை. தவிர, சக்கரவர்த்தி தம்முடன் ஏகாதிபத்திய தலைமை ஸ்தான பரிவாரங்களை வைத்திருந்தாரே ஒழிய, ஒரு சேனாதிபதிக்கு வேண்டிய பரிவாரங்களை வைத்திருக்கவில்லை. அவரைச் சுற்றிலும் ஏகாதிபத்திய தலைமை ஸ்தான பரிவாரங்களின்

தலைவரான குவார்ட்டர் மாஸ்டர்-ஜெனரல் இளவரசர் வால்கோன்ஸ்கியும், பல ஜெனரல்களும், சக்கரவர்த்தியின் மெய்காப்பாளர்களும், ராஜதந்திர சேவையைச் சேர்ந்த அதிகாரிகளும், ஏராளமான அந்நிய நாட்டினர்களும் இருந்தார்களே ஒழிய, ராணுவ அதிகாரிகள் யாரும் இல்லை. இவர்களைத் தவிர, குறிப்பிட்ட வேலைகள் எதுவும் கொடுக்கப்படாமல், அடியில் கண்டவர்களும் இருந்தார்கள். மாஜி யுத்த மந்திரியான அராக்சீவ், கோமகன் பெனிக்ஸன் (அவர்தான் பதவியில் மூத்தவர்), கிராண்ட் டியூக் ஜாரேவிச் கான்ஸ்டன்டைன் பாவ்லாவிச், கோமகன் ரும்யாண்ட்சேவ் (அவர்தான் முதல் மந்திரி) மாஜி பிரஷ்ய மந்திரியான ஸ்டைன், ஒரு ஸ்வீடிஷ் ஜெனரலான ஆர்ம்பெல்ட், இந்த யுத்தத்திற்குப் பிரதான திட்ட-கர்த்தாவான பூயல், பாலூசி (ஒரு உதவியாளர்-ஜெனரல், சார்டினியாவிலிருந்து வெளியேறியவர்), வால்ஜாகன், இன்னமும் பலர். ராணுவத்தில் இவர்களுக்கு எவ்விதமான உத்தியோகமும் இல்லாதபோதிலும், இவர்களுடைய ஸ்தானங்கள் இவர்களுக்கு செல்வாக்கைக் கொடுத்து வந்தன. பல தடவைகளில் ஒரு படைப்பிரிவின் கமாண்டரோ, அல்லது சேனாதிபதியோ, இந்த பெனிக்ஸனும், கிராண்ட் டியூக்கும், அராக்சீவும், இளவரசர் வால்கோன்ஸ்கியும், எந்த அந்தஸ்தில் தங்களைக் கேள்வி கேட்கிறார்கள் என்பதையும், எந்த அந்தஸ்தில் தங்களுக்குப் புத்திமதி கூறுகிறார்கள் என்பதையும் அறிய முடியாமல் திகைப்பார்கள். புத்திமதி என்ற முறையில் இவர்களில் யாராவது கொடுக்கும் உத்தரவை, அந்த உத்தரவு சக்கரவர்த்தியிடமிருந்து வந்ததா, அல்லது இவர்களே கொடுத்தார்களா என்பதை அறிய முடியாமலும், அவற்றை நிறைவேற்ற வேண்டுமா, வேண்டாமா என்பதைத் தீர்மானிக்க முடியாமாலும், அவர்கள் திகைப்பார்கள். ஆனால், இவை யெல்லாம் வெளிப்படையாகக் காணப்படும் நிலைமைகளாகும். சக்கரவர்த்திக்குப் பக்கத்திலிருப்பவர்கள் எல்லாருமே, ராஜ சபைத் தூதர்களாகி விடுவார்கள். சக்கரவர்த்தியின் பிரசன்னமும், மேலே குறிப்பிடப்பட்டவர்களின் பிரசன்னமும், எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பது ஒவ்வொருவருக்கும் தெளிவாகியிருந்தது. அது இதுதான்: சேனாதிபதி என்ற பட்டத்தை சக்கரவர்த்தி மேற்கொள்ளவில்லை. என்றாலும், எல்லா ராணுவங்களின் மேற்பார்வையும் சக்கரவர்த்தியிடம் இருந்தது. அவர்களைச் சுற்றிலும் இருப்பவர்கள் அவருக்கு உதவியாளர்களாக இருந்தார்கள். ஒழுங்கை நிலைநாட்டும் பொறுப்பை மேற்கொண்டுள்ள ஒரு விசுவாசமான அராக்சீவ், சக்கரவர்த்திக்கு

மெய்க்காப்பாளராக விளங்கினார். பெனிக்ஸன் என்பவர் வில்னா மாகாணத்தில் ஒரு நிலப் பிரபுவாக இருந்தவர். சக்கரவர்த்திக்கு மரியாதை செய்வதற்காக அங்கிருப்பவர்போல தோன்றினார். ஆனால், உண்மையில் அவர் ஒரு நல்ல ஜெனரல். ஆலோசனை கூறுவதற்கு உபயோக முள்ளவர். பார்க்ளேக்குப் பதிலாக வேலையில் போடப்படுவதற்கு கைவசம் தயாராக இருப்பவர். அங்கே தங்கியிருப்பது அவருக்குப் பிரியமாக இருக்கவே கிராண்ட் டியூக்கும் அங்கே இருந்தார். தமது ஆலோசனைகள் உபயோகமாக இருக்கிறபடியாலும், அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி சொந்த முறையில் அவரிடம் மிகுந்த மதிப்பு வைத்திருக்கிறபடியாலும், மாஜி மந்திரி ஸ்டைன் என்பவரும் அங்கே இருந்தார். ஆர்ம்பெல்ட் என்பவர் மிகக் கடுமையாக நெப்போலியனை வெறுப்பவர். பூர்ணமாக சுய நம்பிக்கைகொண்ட ஒரு ஜெனரல். அந்த குணம் அலெக்ஜாண்டரிடம் எப்பொழுதும் செல்வாக்கு பெற்றிருந்தது. மிகுந்த தைரியமாகவும், பேச்சில் கண்டிப்பாகவும் இருந்தபடியால், பாலூசி என்பவரும் அங்கே இருந்தார். சக்கரவர்த்தி போகும் இடங்களுக்கெல்லாம், அவருடனே போகவேண்டியவர்கள் ஆனபடியால், காப்பாளர்-ஜெனரல்களும் அங்கே இருந்தார்கள். கடைசியாகவும் முக்கியமாகவும் பூயலும் அங்கே இருந்தார். ஏனென்றால், நெப்போலியனுக்கு விரோதமாக யுத்தம் நடப்பதற்கான திட்டத்தை அவர்தான் தயாரித்தார். அந்த திட்டத்தின் சிலாக்கியத்தைப் பற்றி அலெக்ஜாண்டர் நம்பும்படி அவர் செய்திருந்தபடியால், அவர் யுத்த வேலைகள் முழுவதையும் அவரே நடத்திக்கொண்டு இருந்தார். பூயலுடன் வான்ஜாகன் என்பவரும் இருந்தார். பூயலின் கருத்துக்களை, பூயலைவிடத் தெளிவாகப் புரிந்துகொள்ளக்கூடிய விதத்தில் அவர் விளக்கி வந்தார். பூயல் என்பவர் ஒரு முரட்டுத்தனமான ஏட்டுச் சுரைக்காய் கோட்பாடுகளைக் கொண்டவர். அவர் மற்ற ஒவ்வொருவரையும் வெறுக்கக்கூடிய அளவில் சுயநம்பிக்கை கொண்டிருந்தார்.

புதிது புதிதான, எதிர்பார்க்க முடியாத கருத்துக்களை, இந்த ருஷ்யர்களும் வெளி நாட்டார்களும் ஒவ்வொரு தினமும் சொல்லிக் கொண்டிருந்தார்கள். தங்களுடைய நாட்டில் இல்லாமல் வேறு ஒரு நாட்டில் உத்தியோகம் செய்யக்கூடியவர்களுக்கு ஏற்படக்கூடிய தைரியத்தோடு, இந்த வெளிநாட்டார்கள் முக்கியமாக சொல்லிக் கொண்டிருந்தார்கள். இவர்களைத் தவிர, இரண்டாந்தர பேர்வழி[illegible] பலரும், அவர்களுடைய தலைவர்கள் அங்கே இருந்தபடியால், அவர்களும் ராணுவத்தோடு சேர்ந்து வந்துகொண்டிருந்தார்கள்.

அந்த ஏராளமான, அமைதியற்ற, பிரகாசமான, பெருமை கொண்ட சுற்றுணர்ச்சியில் தோன்றிய அபிப்பிராயங்களிலிருந்தும், பேச்சுக்களிலிருந்தும், இளவரசர் ஆண்ட்ரூ பின்கண்ட தெளிவான போக்குகளின் பிரிவுகளையும் கோஷ்டிகளையும் கவனித்தார்.

முதல் கோஷ்டியானது, பூயலையும் அவருடைய சீடர்களையும் கொண்டது. இந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள், ராணுவக் கோட்பாட்டுக்காரர்கள். மாற்ற முடியாத நியதிகளைக் கொண்ட ஒரு யுத்த தந்திரத்தில் நம்பிக்கை உள்ளவர்கள். அதாவது, மறைமுகமான யுத்தங்கள், பக்கவாட்டில் வளைத்துக் கொள்ளுதல் போன்ற யுத்த முறைகளாகும். இந்த மறைமுகமான யுத்த தந்திர நியதிகளின்படி நாட்டின் உள் பாகத்திற்குப் பின்வாங்கிவிட வேண்டும் என்பது பூயலுடையவும், அவர்களின் சீடர்களுடையவும் விருப்பமாகும். இந்தக் கொள்கையிலிருந்து புறம்பாகச் செய்கிற ஒவ்வொன்றிலும் மிருகத்தனங்களையும் அறியாமையையும் கெட்ட சிந்தனையையுமே அவர்கள் கண்டார்கள். இந்தக் கோஷ்டியில் வெளிநாட்டு பிரபுக்களான வால்ஜாகன், வின்ட்ஜின்கெரோட், இன்னும் பலர் முக்கியமாக ஜெர்மனியர்களே இருந்தார்கள்.

இரண்டாவது கோஷ்டியானது, முதல் கோஷ்டிக்கு நேர் விரோதமானது. ஒரு கோஷ்டிக்கு எதிராக மற்றொரு கோஷ்டி கிளம்பும் போது வழக்கமாக ஏற்படுவதுபோல மற்றொரு கோடியில் அது நின்றது. இந்த கோஷ்டியைச் சேர்ந்த அங்கத்தினர்கள், வில்னாவிலிருந்து போலந்துக்குள் பிரவேசிக்க வேண்டுமென்றும், முன்னதாகத் தீர்மானிக்கப்பட்ட எல்லாத் திட்டங்களிலிருந்தும் விடுதலை வேண்டும் என்றும் சொல்லி வந்தார்கள். இந்த கோஷ்டி தைரியமாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று சொல்லி வந்ததோடு, நாட்டிலுள்ள தேசீய கட்சியின் கருத்துக்களையும் பிரதிபலித்து வந்தார்கள். ஆகவே, இந்தத் தகராறில் அவர்கள் ஒருதலை பட்சமானவர்களாகத் தெளிவாய் காணப்பட்டார்கள். அந்தக் கோஷ்டியில் எல்லாரும் ருஷ்யர்கள். பாக்ரேஷனும், முன்னால் வந்துகொண்டிருந்த எர்மோலாவும், இன்னும் பலரும் இருந்தார்கள். அந்த சமயத்தில், எர்மோலாவைப்பற்றி ஒரு பிரசித்திபெற்ற தமாஷ் ஊரில் பரவி வந்தது. தம்மை ஒரு ஜெர்மனியராக ஆக்கிவிடுவதற்கு, மிகுந்த தயவு புரியவேண்டுமென்று சக்கரவர்த்திக்கு அவர் மனு கொடுத்ததாக ஒரு தமாஷ் கட்டிவிடப்பட்டது. அந்த கோஷ்டியைச் சேர்ந்தவர்கள், சுவோராவை ஞாபகத்தில் வைத்து, இப்போது என்ன செய்ய வேண்டுமென்று சொன்னார்கள். காரணங்கள் காட்டி பேசிக்கொண்டிருப்பதோ, யுத்தப் படங்களில் அடையாள

ஊசிகளைக் குத்திக் கொண்டிருப்பதோ அவசியமல்லவென்றும், ஆனால் யுத்தம் செய்ய வேண்டுமென்றும், எதிரியை முறியடிக்க வேண்டுமென்றும், ருஷ்யாவை விட்டு எதிரியை வெளியே விரட்ட வேண்டுமென்றும், நமது ராணுவம் அதைரியம் அடையும்படி விடக் கூடாதென்றும் அவர்கள் சொல்லி வந்தார்கள்.

மூன்றாவது கோஷ்டியிடம்தான் சக்கரவர்த்திக்கு அதிக நம்பிக்கை இருந்தது. அந்த கோஷ்டி ராஜ சபைத் தூதர்களால் அடங்கியது. முதல் இரண்டு கோஷ்டிகளுக்கும் இடையே சமரசம் செய்து வைக்க அந்த கோஷ்டி முயற்சித்தது. அந்த கோஷ்டியின் அங்கத்தினர்கள் முக்கியமாக சிவிலியன்களாய் இருந்தார்கள். அராக்சீவும் அதைச் சேர்ந்தவர்தான். தங்களுக்காக நம்பிக்கை எதுவும் இல்லாமல், ஆனால் நம்பிக்கை இருப்பது போல நினைப்பவர்கள் எம்மாதிரி பேசுவார்களோ, அதே மாதிரி அந்த கோஷ்டியார் நினைத்தும் பேசியும் வந்தார்கள். அவர்கள் நெப்போலியனை மீண்டும் போனபார்ட் என்று அழைக்க ஆரம்பித்திருந்தார்கள். பெரிய மேதையான அந்த போனபார்ட்டுக்கு எதிராக யுத்தம் நடத்துவதென்றால், ஆழ்ந்த சிந்தனையோடு தயாரிக்கப்பட்ட திட்டங்களும், ஆழ்ந்த விஞ்ஞான அறிவும் வேண்டுமென்று சொல்லி வந்தார்கள். இந்த விஷயங்களில் பூயலை ஒரு மேதை என்று அவர்கள் கருதினார்கள். ஆனால், கோட்பாடுகளைச் சொல்லுகிறவர்கள், எப்பொழுதுமே ஒருதலைச் சார்பாய்த்தான் இருப்பார்கள் என்றும், ஆகவே அவர்களைப் பூரணமாக ஒருவர் நம்பிவிட முடியாதென்றும் அவர்கள் சொன்னார்கள். ஆகவே, பூயலின் எதிர்க் காட்சியாளர்களும், யுத்த முறைகளில் பிரத்யட்ச அனுபவம் வாய்ந்தவர்களும் என்ன சொல்லுகிறார்கள் என்பதைக்கேட்டு, இரண்டு கோஷ்டிகளின் அபிப்பிராயங்களுக்கும் மத்தியில், ஒரு வழியைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று அவர்கள் சொன்னார்கள். பூயலின் திட்டப்படி டிரிஸாவில் ஏற்பட்டுள்ள அந்த முகாமை அப்படியே வைத்திருக்க வேண்டுமென்றும், ஆனால், மற்ற ராணுவங்களின் நடமாட்டங்களை மாற்றி அமைக்க வேண்டுமென்றும் அவர்கள் சொன்னார்கள். அவர்களுடைய இந்த யோசனைகள் எந்தக் கோஷ்யினுடைய நோக்கத்தையும் நிறைவேற்றுவதாய் இல்லை. என்றாலும், இந்த 3-வது கோஷ்டிக்கு அதுதான் சிறந்ததாகத் தோன்றியது.

நாலாவது கோஷ்டியின் கட்சியை மிகப் பிரசித்தமாக எடுத்துக் கூறுகிறவராக ஜாரேவிச் விளங்கினார். ஆஸ்டர்லிட்ஜில் அவருக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தை அவரால் மறக்க முடியவில்லை. காப்பாளர் துருப்புகளுக்குத் தலைமை தாங்கி குதிரைப்படை சீருடையையும்,

சிறந்த தொப்பியையும் அணிந்து, ஏதோ ஒரு அணி வகுப்பைப் பார்க்கப் போவதுபோலச் சென்று, பிரஞ்சு வீரத்தை நசுக்கிவிடலாம் என்று எதிர்பார்த்துக்கொண்டு போனார். ஆனால் எதிர்பாராத விதமாக யுத்த முனையின் முன்னணிக்கே அவர் வந்து சேர்ந்துவிட்டார். அங்கிருந்து மிகுந்த குழப்பத்துக்கிடையில் மிகுந்த கஷ்டத்தோடு தப்பிப் பிழைத்தார். இந்த கோஷ்டியின் வெளிப்படையான அபிப்பிராயங்களின் நன்மை, தீமை இரண்டு அடங்கியிருந்தன. அவர்கள் நெப்போலியனுக்குப் பயந்தார்கள். நெப்போலியனுடைய பலத்தை அவர்கள் ஒப்புக்கொண்டு, தங்களுடைய பலவீனத்தையும் ஒப்புக்கொண்டார்கள். இவற்றை பகிரங்கமாக அவர்கள் சொன்னார்கள். அவர்கள் சொல்லியதாவது; 'இதிலிருந்து துக்கம், அவமானம், சர்வநாசம் ஆகியவைகளைத் தவிர வேறு எதுவும் ஏற்படப்போவதில்லை. நாம் வில்னாவையும் வைடேப்ஸ்க்கையும் கைவிட்டு வந்தோம். டிரிஸாவையும் நாம் கைவிடுவோம். நம்மை பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து விரட்டுவதற்கு முன்பாக நாம் செய்யக்கூடிய தகுதியான காரியம் ஒன்றே ஒன்றுதான் உண்டு. அதாவது, வெகு சீக்கிரமாக சமரசம் செய்து கொள்ளுவதாகும்.'

ராணுவத்தின் உயர் வட்டாரங்களில் இந்தக் கருத்து பொதுவாக நிலவி வந்தது. பீட்டர்ஸ்பர்க்கிலும் இதற்கு ஆதரவு இருந்தது. வேறு பல ராஜாங்கக் காரணங்களுக்காகவும் முதல் மந்திரியான ரும்யாண்ட்சேவ் என்பவரும் சமரசத்தை ஆதரித்து வந்தார்.

பார்க்ளே டி டாலி என்பவரைப் பின்பற்றுகிறவர்கள், ஐந்தாவது கோஷ்டியாக அமைந்திருந்தார்கள். அவர் ஒரு மனிதர் என்ற முறையில் அவரை அவர்கள் ஆதரிக்கவில்லை. ஒரு யுத்த மந்திரி, சேனாதிபதி என்ற முறையில் அவரை அவர்கள் ஆதரித்தாக்ள். அவர்கள் எப்பொழுதும் இம்மாதிரி பேசுவது வழக்கம். அதாவது; 'அவர் எப்படி இருந்தாலும் சரி, அவர் ஒரு யோக்கியமானவர்; காயிரவாதி. அவரைவிடச் சிறந்த வேறு யாரும் நமக்கு இல்லை. அவருக்கு உண்மையான அதிகாரத்தைக் கொடுத்துப் பாருங்கள். ஏனெனில், தலைமை சேனாதிபத்தியத்தில் ஒற்றுமை இல்லாவிட்டால், வெற்றிகரமாக யுத்தத்தை நடத்த முடியாது. அவருக்கு அதிகாரத்தைக் கொடுத்துப் பாருங்கள். அவர் பின்லாந்தில் செய்த மாதிரி, அவரால் என்ன செய்யமுடியும் என்பதைக் காட்டுவார். நமது ராணுவம் சிறந்த அமைப்போடும் பலத்தோடும் விளங்கி, எவ்விதமான தோல்வியும் இல்லாமல் டிரிஸாவுக்குப் பின்வாங்கியது என்றால், அதற்கான முழு பொறுப்பும் பார்க்ளேயையே சேரவேண்டும். பார்க்ளேயைத்

தள்ளிவைத்து, பெனிக்ஸனை அவர் இடத்தில் போடுவது என்றால் எல்லாம் கெட்டுப்போகும். ஏனெனில், பெனிக்ஸன் அவருடைய திறமையின்மையை ஏற்கெனவே 1807-ஆம் வருஷத்தில் காட்டிவிட்டார்.'

பெனிக்ஸனைச் சேர்ந்தவர்கள் ஆறாவது கோஷ்டியாக அமைந்திருந்தார்கள். அவர்கள் பெனிக்ஸனைவிட அதிகமாக சுறுசுறுப்புற்றவரோ, அனுபவம் உள்ளவரோ வேறு ஒருவரும் கிடையாது என்று சொன்னார்கள். 'நீங்கள் எம்மாதிரி திரித்தாலும் சரி, கடைசியாக பெனிக்ஸனிடம் வந்துதான் ஆகவேண்டும். மற்றவர்கள் இப்பொழுது எவ்வளவு தவறுகள் வேண்டுமானாலும் செய்யட்டும்' என்று அவர்கள் கூறி, டிரிஸாவுக்கு நாம் பின்வாங்கியது மகா வெட்கக்கேடான தோல்வி என்றும், ஒன்றன்பின் ஒன்றாகச் செய்து வந்த பல குருட்டுத்தனமான தவறுகள் என்றும் அவர்கள் சொல்லி வந்தார்கள். 'அவர்கள் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமான தவறுகள் செய்கிறார்களோ, அவ்வளவுக்கு அவ்வளவு நல்லது. எப்படி இருந்தாலும், காரியங்கள் இம்மாதிரியாக போய்க் கொண்டிருக்க முடியாது என்பதை அவர்கள் சீக்கிரமாக உணருவார்களாக. இப்பொழுது வேண்டியது எல்லாம் ஒரு பார்க்ளேயோ, அல்லது வேறு ஒருவரோ அல்ல. பெனிக்ஸனைப் போன்ற ஒருவர்தான் தேவை. அவர் தமது சிறப்பை 1807-ஆம் வருஷத்திலேயே காட்டியிருக்கிறார். இதை நெப்போலியனே உணர்ந்து நியாயம் செய்திருக்கிறார். அவருடைய அதிகாரத்தை விருப்பத்தோடு எல்லாரும் ஒப்புக்கொள்ளுவார்கள். அப்பேர்ப்பட்ட மனிதர் பெனிக்ஸன் ஒருவர்தான்.'

வாலிப சக்கரவர்த்திகளைச் சுற்றி குறிப்பாகக் கூடியிருக்கும் மக்களைக் கொண்டது ஏழாவது கோஷ்டி. முக்கியமாக, அலெக்ஜாண்டரைச் சுற்றி அம்மாதிரி பலர் இருந்தார்கள் - சக்கரவர்த்தி மீது ஆர்வத்தோடு பக்தி கொண்டுள்ள அவர், சக்கரவர்த்தி என்பதற்காக மட்டும் அல்லாமல், ஒரு மனிதர் என்ற முறையில் அவர்மீது உண்மையான, எதையும் எதிர்பார்க்காத பக்தி கொண்டுள்ள, 1805-ம் வருஷத்தில் ராஸ்டோவ் செய்த மாதிரி பக்தி கொண்டுள்ள மெய்க்காப்பாளர்களும், ஜெனரல்களும் இருந்தார்கள். சக்கரவர்த்தியிடம் எல்லா நற்குணங்களையும் அவர்கள் கண்டதோடு, மனிதர்களுக்குரிய சாமர்த்தியங்கள் எல்லாம் அவரிடம் இருப்பதாகவும் கண்டார்கள். ராணுவத்தின் கமாண்டர் பதவியை சக்கரவர்த்தி ஒப்புக்கொள்ள முடியாது என்று மறுத்ததற்காக அவர்கள் இவரைப் போற்றிப் புகழ்ந்தார்கள். என்றாலும், அவ்வளவு அதிகமான அடக்கம் கூடாது என்றும்,

தங்களால் போற்றப்படும் சக்கரவர்த்தி அந்த அடக்கத்தைக் கைவிட்டு ராணுவத்தின் தலைவராக தாம் அமரப் போவதாக வெளிப்படையாகச் சொல்லவேண்டும் என்றும் அவர்கள் விரும்பி வற்புறுத்தினார்கள். சக்கரவர்த்தி தம்மிடம் ஒரு சேனாதிபதியின் பரிவாரங்களை வைத்துக்கொள்ள வேண்டும் என்றும், அனுபவம் மிகுந்த ராணுவ தந்திர கோட்பாட்டுக்காரர்களையும் காரியவாதி களையும் அவசியமானபோது கலந்து ஆலோசித்து துருப்புக்களைத் தாமே நடத்தவேண்டும் என்றும் அவர்கள் சொன்னார்கள். அப்படிச் செய்தால், துருப்புகளின் உற்சாகம் மிகமிக உயர்ந்த நிலைமைக்கு எட்டிவிடும் என்றும் அவர்கள் கூறினார்கள்.

எட்டாவது கோஷ்டிதான் மிகப் பெரிய கோஷ்டி. அவர்களுடைய எண்ணிக்கையைப் பார்த்தால் நூற்றுக்கு தொண்ணூற்று ஒன்பது பேர் அவர்களாகவே இருப்பார்கள். அவர்களுடைய யுத்தமோ சமாதானமோ, அல்லது துருப்புகள் படையெடுத்து முன்னேறுவதோ, டிரிஸா போன்ற முகாம்களில் தற்காப்புக்காகத் தங்கி இருப்பதோ, அல்லது பார்க்ளேயோ, சக்கரவர்த்தியோ, அல்லது பூயலோ பெனிக்ஸனோ இவை எதிலுமே சிரத்தை கிடையாது. ஒரே ஒரு விஷயம்தான் அவர்களுக்கு முக்கியமானது. அதாவது, தங்களைப் பொறுத்தவரையில் எவ்வளவு அதிகமான அனுகூலங்களையும் இன்பத்தையும் அடைய முடியுமோ, அவ்வளவு தூரம் அடையவேண்டும் என்பதுதான் அவர்களுடைய நோக்கம். சக்கரவர்த்தியின் தலைமைக் காரியாலயத்தைச் சுற்றிச் சுழன்று வரும் அபிப்பிராய பேதங்களிலிருந்தும், சூழ்ச்சி களிலிருந்தும், சாதாரண காலங்களில் நினைக்கமுடியாத பல அனுகூலங்களை பல வழிகளில் பெறமுடியும். தன்னுடைய லாபகரமான உத்தியோகத்தைக் காப்பாற்றிக்கொள்ள மட்டும் ஒருவன் விரும்புவானானால், அவன் இன்று பூயலின் கட்சியை ஆதரிப்பான்; நாளை பூயலுக்கு எதிரான கட்சியை ஆதரிப்பான்; அதற்கு அடுத்த நாள், தன்னுடைய பொறுப்பைத் தட்டிக் கழிக்கவோ, அல்லது சக்கரவர்த்தியை குஷிப்படுத்தவோ விரும்பி, இந்த விஷயங்களில் தனக்கு எவ்விதமான அபிப்பிராயமும் கிடையாது என்று சொல்லுவான். ஏதோ சில நன்மைகளைப் பெறுவதற்கு ஒருவன் விரும்புவானானால், அவன் சக்கரவர்த்தியின் கவனத்தை இழுப்பதற்கு முயற்சி செய்வான். அதாவது முதல் நாளன்று சக்கரவர்த்தி சொல்லிய ஏதாவது ஒரு விஷயத்தை நான் தீவிரமாக ஆதரிப்பதாக கவுன்சிலில் சொல்லுவான். அதை எதிர்ப்பவர்களிடம் பலமான கூச்சல் போட்டு, வாது செய்து தன் மார்பில் அடித்துக்கொண்டு, தன்னுடன் டுயல் சண்டைக்கு

வரும்படி அறை கூவி அழைப்பான். இதன் மூலம் பொது நன்மைக்காகத் தன்னுடைய உயிரைத் தியாகம் செய்யத் தயாராக இருப்பதுபோலக் காட்டிக்கொள்ளுவான். மூன்றாவதாக ஒருவன் உண்டு. கவுன்சில்களில் எதிர்ப்பவர்கள் ஒருவரும் இல்லை யென்றால், தன்னுடைய விசுவாசமுள்ள சேவைகளுக்காக, ஒரு விசேஷ நன்கொடை கொடுக்கவேண்டும் என்று கோருவான். ஏனெனில், மக்கள் மிகுந்த சுறுசுறுப்பாய் இருக்கிறபடியால், தனது கோரிக்கையை மறுக்கமாட்டார்கள் என்பது அவனுக்குத் தெரியும். நாலாவது ஆசாமி, தான் மிகுந்த வேலை செய்து வருவதாக சக்கரவர்த்திக்குக் காட்டிக்கொள்ளுவதற்கு, எப்படியோ அடிக்கடி சக்கரவர்த்தியின் கண்களுக்கு தென்பட்டுக் கொண்டே இருப்பான். ஐந்தாவது ஆசாமி, சக்கரவர்த்தியுடன் தான் விருந்துண்ணவேண்டும் என்ற தனது நெடுநாளைய நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக ஒரு வேலை செய்வான். அதாவது, புதிதாகத் தோன்றுகிற கருத்துக்களை சரி என்றோ, அல்லது தப்பு என்றோ பிடிவாதமாக எடுத்துச் சொல்லுவான். இதற்காக அநேகமாய் சரியான வேகத்தோடு கூடிய வாதங்களை எடுத்து வீசுவான்.

இந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் ரூபிள்கள், பட்டங்கள், உத்தியோக உயர்வுகள் ஆகியவைகளை வேட்டையாடுகிறவர்களே யாவார்கள். இந்த முயற்சியில் அவர்கள் சக்கரவர்த்தியின் விருப்பம் எப்பக்கம் திரும்பி இருக்கிறது என்பதையே கவனித்துக்கொண்டிருப்பார்கள். அந்த விருப்பத்தில் ஏதாவது திசை மாற்றம் ஏற்படுமானால், இந்த ராணுவக் கூட்டம் முழுவதுமே அப்பக்கமாகத் திரும்பி பலமாக ஒத்தூத ஆரம்பிப்பார்கள். இதனால் அதிலிருந்து வேறு திசையில் திரும்புவதற்கு சக்கரவர்த்திக்கு மிகுந்த கஷ்டமாய் இருக்கும். இந்த நிச்சயமற்ற நிலைமைகளுக்கு இடையில், ஒவ்வொன்றுக்கும் ஒரு பயங்கரமான தோற்றத்தைக் கொடுக்கக்கூடிய அபாயகரமான ஆபத்துக்கிடையில், தற்பெருமை, அபிப்பிராய பேதங்கள், உணர்ச்சிகள், பற்பல இனப் பிரிவுகள் ஆகியவையெல்லாம், இந்த மகா பெரிய எட்டாவது கோஷ்டியில் கலந்து அவர்களுடைய சுயநலங்கள் ஒன்று சேர்ந்து, மக்களின் பொது வேலைகளுக்கு பெரிய குழப்பத்தை உண்டுபண்ணிவிடுகின்றன. எந்தப் பிரச்னை கிளம்பிய போதிலும் சரி, இந்த சோம்பேறிக் கூட்டங்கள் ஒன்று சேர்ந்து, முந்தின பிரச்னைக்கு முடிவு காண்பதற்காக அவர்கள் போட்டுவந்த கூச்சலை முடிக்காமல், புதிய பிரச்னைக்கு அவர்கள் தாவி, நியாயமாக வாதம் செய்து கொண்டிருப்பவர்களின்

குரல்களை அமுக்கிப் பிரமாதமாகக் கூச்சல் போட ஆரம்பித்து விடுவார்கள்.

இளவரசர் ஆண்ட்ரூ ராணுவத்தைப் போய் அடைந்த சமயத்தில், இந்த எல்லாக் கட்சிகளிலும் இருந்து ஒரு ஒன்பதாவது கோஷ்டி தயாராகிக்கொண்டிருந்தது. தன்னுடைய அபிப்பிராயத்தைச் சொல்லுவதற்கு அப்பொழுதுதான் அது ஆரம்பித்துக் கொண்டிருந்தது. இந்தக் கட்சியில் வயதானவர்களும், ராஜாங்க விஷயத்தில் அனுபவமும் திறமையும் கொண்ட நியாயமானவர் களும் இருந்தார்கள். அவர்கள் இந்த அபிப்பிராய பேதங்களில் கலந்து கொள்ளுவதில்லை. தலைமைக் காரியாலயத்தில் உள்ள பரிவாரத்தினர்கள் செய்யும் விஷயங்களைப் பாரபட்சம் இல்லாமல், அவர்கள் கவனித்து, இந்த ஊழல், முடிவற்ற நிலைமை, சிக்கல்கள், பலவீனங்கள் ஆகியவற்றிலிருந்து தப்புவதற்கு வழி என்ன என்று யோசித்துக்கொண்டிருந்தார்கள்.

ராணுவம் இருக்கிற இடத்தில் சக்கரவர்த்தி தமது ராணுவச் சபையோடு பிரசன்னமாய் இருப்பதால்தான், இப்பொழுது ஏற்பட்டுள்ள தீமைகள் ஏற்பட்டிருப்பதாக, இந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் நினைத்தும் பேசியும் வந்தார்கள். ஒரு நிச்சயமற்ற தன்மையும் நிச்சயமற்ற உறவுகளும் அங்கே நிலவிவந்தன. அவை ராஜ சபைக்கு பொருத்தமானதாய் இருக்கலாம். ஆனால், ராணுவத் தலைமைக் காரியாலயத்தில் அம்மாதிரி இருப்பது ஆபத்தானது. ஒரு சக்கரவர்த்தி ஆளவேண்டுமே ஒழிய, ராணுவத்தின் கமாண்டராய் இருக்கக்கூடாது. இந்த நிலைமையில் இருந்து தப்புவதற்கான ஒரே வழி என்னவென்றால், சக்கரவர்த்தியும் அவருடைய ராஜ சபையும் ராணுவத்தைவிட்டு வந்துவிடவேண்டும். சக்கரவர்த்தி அங்கே பிரசன்னமாய் இருப்பதால், அவருடைய பாதுகாப்புக்காக வேலைகளைச் செய்ய முடியாது. சக்கரவர்த்தியின் பிரசன்னத்தால் மிகச் சிறந்த சேனாதிபதிகூட எதுவும் செய்ய முடிவதில்லை. அம்மாதிரி ஒன்றும் செய்ய முடியாத ஒரு சிறந்த சேனாதிபதி அங்கே செய்யக் கூடியதைவிட, சக்கரவர்த்தி பிரசன்னமாய் இல்லாத இடத்தில் சுதந்திரமாய் நடக்கக்கூடிய ஒரு மோசகமான சேனாதிபதியால் எவ்வளவோ அதிகமாகச் செய்ய முடியும்.

இளவரசர் ஆண்ட்ரூ டிரிஸாவில் போய்ச் சேர்ந்த சமயத்தில் இந்த கோஷ்டியின் பிரதான பிரதிநிதியான உள்நாட்டு மந்திரி ஷிஷ்கோவ் என்பவர் சக்கரவர்த்திக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில் அராக்சீவும் பலாஷேவும் கையெழுத்திட ஒப்புக்கொண்டார்கள். பொதுவான விஷயங்களைப் பற்றி தம்மிடம் விவாதிப்பதற்கு சக்கரவர்த்தி அவருக்கு அனுமதி கொடுத்திருந்தார். இதை மரியாதையோடு தமது

கடிதத்தில் சுட்டிக்காட்டி, தலைநகரில் உள்ள மக்களுக்கு யுத்த உணர்ச்சியைக் கிளப்பி விடுவதற்காக, சக்கரவர்த்தி ராணுவத்தை விட்டுப் போகவேண்டும் என்று அவர் கேட்டுக் கொண்டார்.

தங்களுடைய சக்கரவர்த்தியால் மக்களின் உணர்ச்சியைக் கிளப்பிவிட வேண்டும் என்றும், தங்களுடைய நாட்டைப் பாதுகாப்பதற்காக அவர்கள் முன்வரவேண்டும் என்று சக்கரவர்த்தி கேட்டுக் கொள்ள வேண்டும் என்றும் சக்கரவர்த்திக்குச் சொன்னார்கள். ராணுவத்தை விட்டு விலகிப் போவதற்கு இதை ஒரு காரணமாக வைத்துக்கொண்டு சக்கரவர்த்தி அதற்கு சம்மதித்தார். மாஸ்கோவில் சக்கரவர்த்தியின் பிரசன்னம் மக்களின் உணர்ச்சியைத் தூண்டியது. ருஷ்யாவின் வெற்றிக்கு இந்த தூண்டப்பட்ட உணர்ச்சியே முக்கியமான காரணமாய் இருந்தது.



இந்தக் கடிதத்தை இன்னும் சக்கரவர்த்திக்குக் கொடுக்க வில்லை. இச்சமயத்தில் ஒரு நாள் டின்னர் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது, சக்கரவர்த்தி அவரை நேராகப் பார்த்து துருக்கியைப்பற்றி விசாரிக்க வேண்டுமென்று விரும்புவதாக பால்கோன்ஸ்கியிடம் பார்க்ளே என்பவர் சொன்னார். இளவரசர் ஆண்ட்ரூ அன்று மாலை ஆறு மணிக்கு பெனிக்ஸனின் விடுதிகளுக்குப் போக வேண்டுமென்றும் அவர் கூறினார்.

அன்று நெப்போலியனுடைய துருப்புகளின் நடமாட்டத்தைப் பற்றி, புதிதாக ஒரு செய்தி சக்கரவர்த்தியின் தலைமைக் காரியாலயத்துக்கு வந்தது. நெப்போலியனின் அந்தப் புதிய நடவடிக்கையினால் ருஷ்ய ராணுவத்திற்கு ஆபத்து ஏற்பட்டிருப் பதாகச் சொல்லப்பட்டது. ஆனால், அந்தச் செய்தி பொய்யான செய்தி என்று பின்னால் தெரிய வந்தது. அன்று காலையில் சக்கரவர்த்தியோடு, கர்னல் மிச்சாட் என்பவர் அந்த டிரிஸா பாதுகாப்பு அரண்களைச் சுற்றிப் பார்க்கப் போனார். பூயல் நிர்மாணித்த அந்தப் பாதுகாப்பு முகாமை அது வரையில் ராணுவ தந்திர சாஸ்திரத்துக்கு ஒத்ததாக இருந்த ஒரு தலை சிறந்த அமைப்பு என்று கருதி வந்தார்கள். அந்த முகாம் நெப்போலியனுக்கு நிச்சயமாக அழிவைக்கொண்டு வந்து விடுமென்று சொல்லி வந்தார்கள். ஆனால், அது வெறும் அசட்டுத்தனமான பேச்சு என்றும், ருஷ்ய ராணுவத்தை அது அழித்துவிட முடியுமென்றும், கர்னல் மிச்சாட் சக்கரவர்த்திக்கு சுட்டிக் காட்டினார்.

இளவரசர் ஆண்ட்ரூ, பெனிக்ஸனின் விடுதிகளுக்கு வந்து சேர்ந்தார். அந்த விடுதி ஒரு கிராமாந்தர கனவானுடையது. ஆற்றின் கரையில் நடுத்தரமான அளவில் அமைக்கப்பட்ட ஒரு வீடு. பெனிக்ஸனோ, அல்லது சக்கரவர்த்தியோ அங்கு இல்லை. சக்கரவர்த்தியின் மெய்க்காப்பாளரான செர்னிஷேவ் என்பவர், பால்கோன்ஸ்கியை வரவேற்றார். ஜெனரல் பெனிக்ஸனும், கோமகன் பாலுரசியும், சக்கரவர்த்தியும் இரண்டாவது தடவையாக அந்தப் பாதுகாக்கப் பட்ட டிரிஸா முகாமைச் சுற்றிப் பார்க்கப் போயிருக்கிறார்களென்றும், முகாமைப் பற்றி உபயோகத்தைக் குறித்து பெரிய சந்தேகங்கள் ஏற்பட ஆரம்பித்திருக்கின்றன என்றும் அவர் சொன்னார்.

முதல் அறையின் ஒரு ஜன்னலில் ஒரு பிரஞ்சு நாவலோடு செர்னிஷேவ் அமர்ந்திருந்தார். இந்த அறை ஒருவேளை சங்கீத மண்டபமாக முன்னால் இருந்திருக்கலாம். இந்த அறையின் மத்தியில் இன்னமும் ஒரு வாத்தியப் பெட்டி இருந்தது. அதன்மீது சில கம்பளங்களைப் போட்டு வைத்திருந்தார்கள். அந்த அறையின் ஒரு மூலையில் பெனிக்ஸனுடைய உதவியாளரின் மடக்குக் கட்டில் காணப்பட்டது. அந்த உதவியாளரும் அங்கேதான் இருந்தார். அந்தக் கட்டிலைச் சுற்றி வைக்கப்பட்டிருந்த மெத்தை மீது அவர் சாய்ந்து தூங்கிக்கொண்டிருந்தார். ஒரு வேளை அதிக வேலையினாலோ, அல்லது விருந்து சாப்பாட்டினாலோ அவர் களைப்படைந்திருக்கலாம். அந்த அறையிலிருந்து ஒரு வழி, வரவேற்பு அறைக்குப் போயிற்று. அந்த முதல் வாசல் வழியாக ஜெர்மன் மொழியிலும், இடையிடையே பிரஞ்சு மொழியிலும் பேசிக்கொண்டிருந்த ஒலிகளும் வந்து கொண்டிருந்தன. அந்த வரவேற்பு அறையில் சக்கரவர்த்தியின் விருப்பப்படி சிலர் கூடி இருந்தார்கள். வரப்போகிற கஷ்டங்களைப்பற்றி அவர்களுடைய கருத்துக்களைக் கேட்டுத் தெரிந்துகொள்வதற்காக, சக்கரவர்த்தி அவர்களை அழைத்திருந்தார். அது ஒரு ராணுவ ஆலோசனைக் கூட்டம் அல்ல. அம்மாதிரி திட்டவட்டமாக எதையும் சொல்லாமல், பொதுப் படையாகச் சொல்வதையே சக்கரவர்த்தி எப்போதும் விரும்பினார். அது ஒரு யுத்தக் கவுன்ஸில் அல்ல. ஆனால், சக்கரவர்த்திக்கு சொந்தமாகச சில கேள்விகளுக்குப் பதில் அறிந்துகொள்வதற்காக அதைக் கூட்டியிருந்தனர். இந்தக் கவுன்ஸில் உத்தியோக பூர்வமாக கூட்டப்படாதபடியால், இதை பாதி-கவுன்ஸில் என்று கூறலாம். ஸ்வீடிஷ் ஜெனரல் ஆர்ம்பெல்ட், உதவியாளர்-ஜெனரல் வால்ஜாகன், வின்ட்ஜின்கெரோட் (இவரைத்தான் நாட்டைவிட்டு வெளியேறிய ஒரு பிரஞ்சு பிரஜை

என்று நெப்போலியன் சொன்னார்), மிச்சாட், டால், கொஞ்சம்கூட ராணுவக்காரராய் இல்லாத கோமகன் ஸ்டைன், பூயல் (அவர்தான் இந்த ராணுவ விஷயங்கள் பூராவிற்கும் மூலமான விசை என்று இளவரசர் ஆண்ட்ரூ பின்னால் கேள்விப்பட்டார்), இவர்கள் எல்லோரும் பாதி-கவுன்ஸிலுக்கு அழைக்கப்பட்டு வந்திருந் தார்கள். தமக்குப் பின்னால் பூயல் சீக்கிரமாக வந்துவிட்டபடியால், அவரை நன்றாகப் பார்க்கக்கூடிய ஒரு சந்தர்ப்பம் இளவரசர் ஆண்ட்ருவுக்குக் கிடைத்தது. அந்த வரவேற்பு அறை வழியாக அவர் போனபோது, செர்னிஷேவோடு பேசுவதற்காக ஒரு நிமிடம் அங்கே நின்றார்.

ஒரு ருஷ்ய ஜெனரலுக்குரிய, சரியாக செய்யப்படாத சீருடையை பூயல் அணிந்திருந்தார். அவருக்கு அது பொருத்தமாய் இல்லாமல், ஏதோ ஒரு தமாஷ் வேஷம் போட்டது போலத் தோன்றியது. அவரை இளவரசர் பார்த்ததும், அவர் இப்போதுதான் முதல் முதலாகப் பார்ப்பதாய் இருந்தபோதிலும், அவருடைய முகம் பழக்கமான முகம்போலத் தோன்றியது. அவரைப் பார்த்தவுடன், வேராதர் மாக், ஷிமிட் ஆகியவர்களிடமிருந்தும், 1805-ஆம் வருஷத்தில் இளவரசர் ஆண்ட்ரூ பார்த்த பல ஜெர்மன் ராணுவத் தத்துவ-ஜெனரல்கள் ஆகியவர்களிடமிருந்தும் ஏதோ கொஞ்சம் கொஞ்சம் பூயலிடம் காணப்படுவதாக அவர் நினைத்தார். ஆனால், இவர் அவர்கள் எல்லாரையும் விட அதிகமாய் அசலாய் காணப்பட்டார். அவர்கள் எல்லாருடைய குண விசேஷங்களையும் ஒன்று சேர்த்து, இவ்வளவு அதிகமாக ஒருவரிடம் காணப்படும் ஒரு ஜெர்மன் ராணுவ-தத்துவக்காரரை இளவரசர் ஆண்ட்ரூ இதுவரை பார்த்ததில்லை.

பூயல் குட்டையாய், ஒல்லியாய், ஆனால் நல்ல உறுதியான உடம்பைக் கொண்டவராய், விசாலமான பிட்டிகளோடு பிரதானமான தோள்களைக் கொண்டவராய் காணப்பட்டார். அவருடைய முகத்தில் அதிகமான சுருக்கங்கள் இருந்தன. அவருடைய கண்கள் ஆழமாய் பதிந்திருந்தன. அவருடைய தலை முடிகள் கன்னப் பொட்டுகளின் பக்கத்தில் வேகமாய் வாரி விடப்பட்டிருந்தன. தலைக்குப் பின்னால், அவை விசித்திரமான குடுமிகளைப் போல நீண்டிருந்தன. அந்த அறைக்குள் அவர் நுழைந்து, கோபமாகவும் அமைதியற்ற மனதோடும் சுற்றிலும் பார்த்தார். அந்தப் பெரிய அறையில் இருந்த ஒவ்வொன்றையும் கண்டு அவர் பயப்படுவது போலத் தோன்றினார். தம்முடைய உடைவாளை விகாரமாய் வைத்துக்கொண்டு, செர்னிஷேவைப் பார்த்து ஜெர்மன் மொழியில், சக்கரவர்த்தி எங்கே என்று கேட்டார்.

அந்த அறையில் தலை தாழ்த்துதல்களையும் வணக்கங்களையும் சீக்கிரமாக முடித்துவிட்டு, அங்கிருந்து வெளியேறி, யுத்தப் படத்தின் முன்பாக அமர்ந்து, நிம்மதியாக வேலை செய்ய வேண்டுமென்று 'விரும்பியவர் போல அவர் காணப்பட்டார். செர்னிஷேவுக்குப் பதிலாக வேகமாய் தலையை ஆட்டினார். டிரிஸா முகாமின் பாதுகாப்புகளை பரிசோதிப்பதற்காக சக்கரவர்த்தி போய் இருக்கிறார் என்பதைக் கேள்விப்பட்டதும், கேலியாகப் புன்முறுவல் காட்டினார். அந்தப் பாதுகாப்பு முகாம், பூயலினுடைய ராணுவ தத்துவத்தின்படி திட்டமிடப்பட்டு கட்டப்பட்டதாகும். திடீரென்று தாழ்ந்த குரலில், சுயநம்பிக்கை கொண்ட ஜெர்மனியர்கள் செய்வது போல, எதையோ முனங்கினார். அது ஒரு வேளை, 'முட்டாள் பயல்' என்பதாகவோ, அல்லது 'எல்லாமே நாசமாகிவிடும்' என்பதாகவோ, அல்லது 'ஏதோ அசட்டுத்தனமாக அதிலிருந்து ஏற்படலாம்' என்பதாகவோ இருக்கலாம். அவர் என்ன சொன்னார் என்பது இளவரசர் ஆண்ட்ரூவுக்கு கேட்கவில்லை. அவர் அதைக் கடந்து போயிருப்பார். ஆனால், செர்னிஷேவ் அவரை பூயலுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். துருக்கியிலிருந்து யுத்தம் அதிருஷ்ட வசமாய் முடிந்து போனவுடன், இப்போதுதான் இளவரசர் ஆண்ட்ரூ திரும்பி வந்திருக்கிறார் என்று கூறினார். சரியாகக் கூட இளவரசர் ஆண்ட்ரூவை அவர் கவனிக்காமல், அவருக்குப் பின்னால் பார்த்துக்கொண்டே, 'அந்த யுத்தம், சிறந்த ராணுவ தந்திர யுத்தமாகத்தான் இருந்திருக்கவேண்டும்' என்று சொல்லி, இகழ்ச்சியான சிரிப்போடு அங்கு பேச்சுக் குரல்கள் வந்துகொண்டிருந்த அறைக்குள்ளாகப் போனார்.

பூயல் எப்போதுமே, எரிச்சலை உண்டுபண்ணக்கூடிய, கேலி செய்யும் சுபாவம் உள்ளவர். அன்று குறிப்பாக அவருக்கு மன அமைதி கெட்டுப் போயிருந்தது. அவருடைய திட்டப்படி கட்டப்பட்ட அந்த முகாமை, குற்றம் குறை கூறுவதும், அதைப் போய் பார்வையிடுவதும் என்று ஏற்பட்டுவிட்டதே என நினைத்து அவருடைய மனம் குழப்பமடைந்தது. ஆஸ்டர்லிட்ஜில் ஏற்பட்ட அனுபவங்களைக்கொண்டு, இளவரசர் ஆண்ட்ரூவுக்கு, பூயலுடன் ஏற்பட்ட அந்த சுருக்கமான பேட்டியிலிருந்தே, அந்த மனிதரைப் பற்றி ஒரு தெளிவான அபிப்பிராயத்தை மனதில் உருவாக்க சாத்தியமாயிற்று. மிகுந்த மோசமான, அசைக்க முடியாத, சுய நம்பிக்கை கொண்ட மனிதர்களில் பூயர் ஒருவர். அந்த சுய நம்பிக்கை என்பதுதான் தன்னையே பலி கொடுக்கக்கூடிய அளவிற்கு போகக்கூடியது. ஜெர்மனியர்கள் மட்டுமே அப்படி இருக்கிறார்கள்.

ஏனெனில், அந்த ஜெர்மனியர்கள் மட்டும்தான் மானசீகமான தத்துவார்த்தக் கொள்கைகளில் சுய நம்பிக்கை கொள்ள முடியும். அதுதான் சாஸ்திரம். அதுதான் முழு உண்மையையும் அறியக்கூடிய ஞானம் என்று சொல்லப்படுகிறது. உள்ளத்திலும் உடம்பிலும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் தவிர்க்க முடியாத கவர்ச்சியோடு தான் சொந்த முறையில் இருப்பதாக ஒரு பிரஞ்சுக்காரன் கருதுவதால், அவன் சுயநம்பிக்கை கொண்டிருக்கிறான். உலகத்திலேயே மிகச் சிறந்ததாய் அமைக்கப்பட்ட ஒரு ராஜாங்கத்தில் தான் பிரஜையாக இருப்பதால், ஒரு இங்கிலீஷ்காரன் என்ற முறையில், தான் என்ன செய்யவேண்டும் என்பதை எப்பொழுதும் அறிந்திருப்பதால், ஒரு இங்கிலீஷ்காரன் என்ற முறையில், தான் செய்வதெல்லாம் சந்தேகம் இல்லாமல் சரியாய்த்தான் இருக்கவேண்டும் என்று அவன் அறிந்திருப்பதால், ஒரு இங்கிலீஷ்காரன் சுயநம்பிக்கை கொண்டிருக்கிறான். தான் பரபரப்படைந்து சுலபமாக தன்னையும் மற்றவர்களையும் மறந்துவிட முடியும் என்பதனால், ஒரு இத்தாலியன் சுய நம்பிக்கை கொண்டிருக்கிறான். தனக்கு எதுவும் தெரியாது என்றும், தனக்கு எதுவும் தெரியவேண்டியது இல்லை என்றும், தன்னால் எதையும் தெரிந்துகொள்ள முடியும் என்று நம்பாததாலும், ஒரு ருஷ்யன் சுயநம்பிக்கை கொண்டிருக்கிறான். ஒரு ஜெர்மனியனின் சுய நம்பிக்கைதான் மற்ற எல்லாவற்றையும் விட மோசமானதாகவும் பலமானதாகவும் அதிகமாய் வெறுக்கக் கூடியதாகவும் இருக்கிறது. ஏனென்றால், சாஸ்திரம் என்ற அந்த உண்மையை அவன் அறிந்திருப்பதாக அவன் மனோராஜ்யம் செய்கிறான். அதை அவன் தான் உற்பத்தி செய்தான். என்றாலும், அது அவனுக்கு முழு உண்மையாகத் தோன்றுகிறது.

பூயல் அம்மாதிரி வகையைச் சேர்ந்தவர். அவரிடம் ஒரு ராணுவ சாஸ்திரம் இருக்கிறது. மகாபெரிய பிரெடரிக் என்பவரின் யுத்த சரித்திரத்திலிருந்து, மறைமுகமாக யுத்தம் செய்வது என்ற தத்துவத்தை அவர் தொகுத்து வைத்திருந்தார். சமீப காலத்திய யுத்தங்கள் எல்லாம் அவருக்கு அசட்டுத்தனமாகவும் மிருகத்தனமாகவும் தோன்றின. இரண்டு கட்சிகளும் பிரம்மாண்டமாக ஒருவருக்கொருவர் மோதி, அவற்றில் பல ஊழல்களை இரண்டு கட்சிகளும் செய்வதை யுத்தம் என்று அழைக்க முடியாது என்பது அவர் கொள்கை. அவருடைய தத்துவ ரீதிக்கு அவை ஒத்ததாக இல்லாத படியால், அந்த சாஸ்திரத்திற்கு வேண்டிய ஆதாரங்களாகக் கொள்ள முடியாது என்பது அவருடைய கருத்து.

1806-ஆம் வருஷத்தில் ஜெனா என்ற இடத்திலும், ஆர்ஸ்டாட் என்ற இடத்திலும் நடந்து முடிந்த போராட்டங்களுக்கான திட்டங்களை வகுத்த பொறுப்பு பூயலுக்கும் உண்டு. அந்த யுத்தத்தினால் பெரும் நாசங்கள் ஏற்பட்டன. அப்படியிருந்தும் தமது ராணுவ தந்திரத் தத்துவத்தில் எவ்விதமான குறையும் இருப்பதாக பூயல் நினைத்ததில்லை. அதற்கு மாறாக, தமது தத்துவங்களிலிருந்து விலகியதால்தான் அந்த முழு நாசங்களும் ஏற்பட்டனவென்றும் அவர் சொல்லி வந்தார். தமக்கு விசேஷமாய் அமைந்துள்ள பரிகாசத்தோடு, 'இதோ பாருங்கள், அந்தக் காரியம் முழுவதும் நாசமாய்ப் போகும் என்று நான் முன்பே சொல்லி இருக்கிறேன்' என்று சொல்லுவார். தங்களுடைய தத்துவங்களை மிக அதிகமாக நேசிக்கிற தத்துவக்காரர்கள், அந்த தத்துவத்தின் நோக்கம் என்ன, அதாவது எக்காரியத்திற்காக அதை உபயோகிக்கவேண்டும் என்பதை மறந்து விடுவார்கள். அவர்களில் பூயலும் ஒருவர். தத்துவங்களில் அவருக்கு ஏற்பட்டுள்ள ஆசையானது காரிய சாத்தியமான எல்லா விஷயங்கள் மீதுமே அவர் வெறுப்பு கொள்ளும்படி செய்தது. தம்முடைய தத்துவங்களிலிருந்து விலகியதால் தோல்விகள் ஏற்படுமானால், அதற்காக அவர் மகிழ்ச்சி அடைவதுகூட உண்டு. ஏனெனில், தமது தத்துவத்தின் சரியான தன்மையை, அந்தத் தோல்விகள் நிரூபித்துவிட்டன என்பது அவர் கருத்து.

எல்லாம் தவறாகவே வந்து முடியும் என்பதை முன்னதாகவே அறிந்துகொண்ட ஒரு மனிதரைப் போலவும், அதற்காக வருத்தப் படாதவரைப் போலவும், தற்கால யுத்தத்தைப்பற்றி இளவரசர் ஆண்ட்ரூவுடனும் செர்னிஷேவுடனும் அவர் சில வார்த்தைகள் பேசினார். கன்னப் பொட்டுகளுக்கு மேலாக அவசரமாக வாரிவிடப் பட்ட அவருடைய தலை முடிகள், குடுமிகள் போன்று பின்னால் நீண்டு நின்று, அவருடைய இந்தக் கருத்துக்களை மிகத் தெளிவாகக் காட்டிக்கொண்டிருந்தன.

அவர் அடுத்த அறைக்குள் போனார். ஆழ்ந்த, எரிச்சலான தொனிகளைக் கொண்ட அவருடைய குரல்கள் உடனே அங்கிருந்து கேட்க ஆரம்பித்தன.

# 9

## 11

பூயல் அறையைவிட்டு வெளியே போனபோது, இளவரசர் ஆண்ட்ரூவின் கண்கள் அவரைத் தொடர்ந்து நோக்கின். அச்சமயத்தில் கோமகன் பெனிக்ஸன் வேகமாக உள்ளே வந்தார். பால்கோன்ஸ்கிக்கு அவர் தலையை ஆட்டினார். ஆனால் அங்கே நிற்கவில்லை. போகிற வழியில் தமது உதவியாளருக்குச் சில உத்தரவுகளைக் கொடுத்துவிட்டு, நேராக அந்தப் படிப்பு அறைக்குள் போனார். அவருக்குப் பின்னால், சக்கரவர்த்தி வந்தார். அவரை வரவேற்பதற்காக சில ஏற்பாடுகளை பெனிக்ஸன் செய்தார். செர்னிஷேவும் இளவரசர் ஆண்ட்ரூவும் வெளியே முற்ற மண்டபத்திற்குப் போனார்கள். அங்கே சக்கரவர்த்தி மிகவும் களைப்படைந்தவராக, குதிரை மீதிருந்து இறங்கிக்கொண்டிருந்தார். கோமகன் பாலூசி, சக்கரவர்த்தியுடன் மிகுந்த வேகமாகப் பேசிக்கொண்டிருந்தார். சக்கரவர்த்தி தமது தலையை இடது பக்கமாக சாய்த்துக்கொண்டு, அதிருப்தியான தோற்றத்தோடு, கேட்டுக் கொண்டிருந்தார். அந்தச் உரையாடலை முடிக்க விரும்புகிற வரைப்போலே சக்கரவர்த்தி முன்னால் நகர்ந்தார். ஆனால் அந்த இத்தாலியர் கொஞ்சம்கூட மரியாதை இல்லாமல், முகம் சிவந்து பரபரப்படைந்து, அவர் பின்னாலேயே தொடர்ந்து பேசிக்கொண்டு போனார்.

'இந்த முகாமை-டிரிஸா முகாமை அமைக்க வேண்டுமென்று ஆலோசனை கூறிய அந்த மனிதரைப் பொறுத்த வரையில்' என்று சக்கரவர்த்தி படிகளில் ஏறும்போது பாலூசி சொல்லிக்கொண்டு போனார். அச்சமயம் தமக்குப் பழக்கமில்லாத இளவரசர் ஆண்ட்ரூ அங்கே நிற்பதைப் பார்த்து, அவர் முகத்தைக் கவனித்தார். 'அந்த மனிதரைப் பொறுத்தவரையில், மாட்சிமை தங்கியவரே...' என்று துணிகரமாகத் தம்மைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியாமல், பாலூசி மேலும் தொடர்ந்தார். 'இந்த டிரிஸா முகாமை அமைக்க வேண்டுமென்று ஆலோசனை கூறிய அந்த மனிதரை-அவரை பைத்தியக்கார விடுதிக்கோ, அல்லது தூக்கிற்கோ அனுப்புவதைத் தவிர, வேறுவிதமான யோசனை எனக்குத் தெரியவில்லை' என்றார்.

அந்த இத்தாலியரின் அந்தக் கடைசி வார்த்தைகளை லட்சியம் செய்யாமல், அவற்றைக் காதில் கேட்காதது போல, சக்கரவர்த்தி, பால்கோன்ஸ்கியை அடையாளம் புரிந்து கொண்டதும், கருணையுடன் அவர் பேசினார்:

'உம்மைப் பார்ப்பதற்கு நான் மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன். அவர்கள் எல்லாரும் கூடியிருக்கும் அந்த இடத்திற்கு நீர் போம்; நான் அங்கே வருகிறேன்'

சக்கரவர்த்தி படிப்பு அறைக்குள் போனார். அவருக்குப் பின்னால், இளவரசர் பீட்டர் மிக்காய்லாவிச் வால்கோன்ஸ்கியும், பாரன்ஸ்டைனும் சென்றார்கள். அவர்கள் உள்ளே நுழைந்ததும் கதவு மூடப்பட்டது. சக்கரவர்த்தியின் அனுமதி கிடைத்ததும் பாலூசியோடு (அவரைத் துருக்கியிலேயே அறிவார்) இளவரசர் ஆண்ட்ரூ கவுன்ஸில் கூடியிருந்த அந்த வரவேற்பு அறைக்குப் போனார்.

சக்கரவர்த்தியினுடைய பரிவாரத்தின் தலைவராய் இருப்பது போன்ற அந்தஸ்தில், இளவரசர் பீட்டர் மிக்காய்லாவிச் வால்கோன்ஸ்கி இருந்தார். படிப்பு அறையிலிருந்து அவர் வெளிவந்து, சில தேசப் படங்களோடு வரவேற்பு அறைக்குள் போனார். அந்தப் படங்களை ஒரு மேஜைமீது அவர் பரப்பினார். அங்கு பிரசன்னமாய் இருந்த கனவான்களிடம், அவர்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி சில கேள்விகளைப் போட்டார். விஷயம் என்னவென்றால், டிரிஸா முகாமைப் பக்கவாட்டில் வளைத்துக் கொண்டு விடுவதற்கு, பிரஞ்சுத் துருப்புகள் முதல் நாள் ராத்திரியன்று அணிவகுத்துப் போனதாகச் செய்தி வந்தது. (அந்தச் செய்தி பொய் என்று பின்னால் நிரூபிக்கப்பட்டது.)

ஜெனரல் ஆர்ம்பெல்ட் முதலில் பேசினார். தற்போது ஏற்பட்டுள்ள கஷ்டங்களைச் சமாளிப்பதற்கு பீட்டர்ஸ்பர்க், மாஸ்கோ ரஸ்தாக்களைவிட்டு, தூரமாக ஒரு இடத்தில் முகாம்போட வேண்டுமென்று, எதிர்பாராத விதத்தில், முற்றிலும் புதிதாக, ஒரு யோசனையை அவர் சொன்னார். தமக்கும் ஒரு அபிப்பிராயம் உண்டு என்று காட்டுவதற்காக அவர் விரும்பினாலொழிய, இந்த யோசனைக்கான காரணம் யாருக்கும் புத்திக்கு எட்டாததாய் இருந்தது. ஒரு இடத்தில் இரண்டு ராணுவங்களும் ஒன்று சேர்ந்து, எதிரிக்காகக் காத்துக்கொண்டிருக்க வேண்டுமென்று அவர் கூறினார். இந்த திட்டத்தை வெகு காலத்திற்கு முன்பே, ஆர்ம்பெல்ட் சிந்தித்து தயார் செய்து வைத்திருந்தார் என்பது தெளிவாயத் தெரிந்தது. இப்போது அவரிடம் கேட்ட கேள்விகளுக்காக இந்ததிட்டத்தைச் சொன்னார் என்பதில்லை. ஏனெனில், அந்தக் கேள்விகளுக்கு வேண்டிய பதில் இந்த திட்டத்தில் இல்லை. தம்முடைய திட்டத்தைச் சொல்வதற்கு

ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததே என்று நினைத்து அவர் சொன்னார் என்று சொல்லலாம். எத்தனையோ கோடிக் கணக்கான திட்டங்களில் இதுவும் ஒன்று. ஒவ்வொன்றும் மற்றொன்றைப் போலவே நல்லதாகத்தான் இருந்தது. யுத்தம் எம்மாதிரி திரும்புமென்பது தெளிவாகிற வரையில் இவையெல்லாம் நல்லவையாகவே தோன்றும். அவருடைய வாதங்களைச் சிலர் எதிர்த்தார்கள்; சிலர் ஆதரித்தார்கள். வாலிபரான கோமகன் டால் என்பவர், இந்த ஸ்வீடிஷ் ஜெனரலின் கருத்துக்களை மிகுந்த உணர்ச்சியோடு, வேறு யாரையும்விட அதிகமாக ஆட்சேபித்தார். அந்தப் பேச்சுக்கிடையில், தமது ஜேபியிலிருந்து ஒரு நோட்டுப் புத்தகத்தை எடுத்து வாசிப்பதற்கு அனுமதி கோரினார். அந்த நோட்டுப் புத்தகத்தில் ஏராளமாக எழுதப்பட்டிருந்தது. டால் என்பவர் மற்றொரு திட்டத்தைப் பிரேரித்தார். பூயல் திட்டத்துக்கும் ஆர்ம்பெல்ட் திட்டத்துக்கும் இது முற்றிலும் மாறுபாடானது. டால் என்பவருக்குப் பதிலாக பாலூசி ஒரு யோசனை கூறினார். அதாவது, உடனே முன்னேறவேண்டும்; உடனே எதிர்த்து அடிக்கவேண்டும் என்று அவர் சொன்னார். அப்படிச்செய்வது ஒன்றுதான் இப்போதுள்ள நிச்சயமற்ற நிலைமையிலிருந்தும், இந்த பொறிக் கூண்டிலிருந்தும் (டிரிஸா முகாமை அவர் இம்மாதிரிதான்அழைத்துவந்தார்), நாம் தப்பித்து விடுவதற்கு ஒரே வழி என்று கூறினார். இந்த வாதங்களின்போது, பூயலும், அவருடைய பாஷ்யக்காரரான வால்ஜாகனும் மௌனமாய் இருந்தார்கள். பூயல் இகழ்ச்சியோடு உறுமிவிட்டு, மற்றொரு பக்கம் திரும்பிக்கொண்டார். இப்போது தாம் கேட்டுக்கொண்டிருக்கும் இந்த அறிவற்ற விஷயங்களுக்குப் பதில் சொல்லி, தம்மைத் தாழ்த்திக்கொள்ள விரும்பவில்லை என்பதைக் காட்டுவதைப்போல, அவர் செய்பவை இருந்தன. எனவே, அந்தக் கூட்டத்திற்குத் தலைமை வகித்த வால்கோன்ஸ்கி அவரை அழைத்து, அவரது கருத்தைச் சொல்லும் படி கேட்டபோது:

'என்னை எதற்காகக் கேட்கிறீர்கள்? ஜெனரல் ஆர்ம்பெல்ட் ஒரு சிலாக்கியமான திட்டத்தைப் பிரேரித்தார். அவருடைய திட்டத்தில் ராணுவத்தின் பிற்பகுதி பாதுகாக்கப்படாமல் திறந்து விடப்பட்டிருக்கிறது; அல்லது இந்த இத்தாலிய கனவானின் தாக்குதல் திட்டம்-ரொம்ப சிலாக்கியம். அல்லது ஒரு வாபஸ் வாங்கும் திட்டம். அதுவும் நல்லதுதான். என்னை ஏன் கேட்கிறீர்கள்? ஏன், எனக்குத் தெரிந்ததைவிட, உங்களுக்கே ஒவ்வொன்றைப் பற்றியும் அதிகமாய்த் தெரியுமே?' என்று பதில் சொன்னார்.

தாம் சக்கரவர்த்தியின் பெயரால் அவருடைய அபிப்பிராயத்தைக் கேட்பதாக வால்கோன்ஸ்கி சொல்லி முகத்தைச் சுழித்துக் கொண்டபோது, உடனே பூயல் எழுந்து திடீரென்று பரபரப்படைந்து பேச ஆரம்பித்தார்.

'ஒவ்வொன்றும் நாசமாக்கப்பட்டுவிட்டது. ஒவ்வொன்றும் குழப்பியடிக்கப் பட்டிருக்கிறது. ஒவ்வொருவரும் என்னைவிட அதிகமாகத் தெரிந்தவர்களாக நினைக்கிறார்கள். இப்போது நீர் என்னிடம் கேட்கிறீர். எப்படி இவற்றையெல்லாம் செப்பனிட முடியும்? செப்பனிடுவதற்கு அங்கே ஒன்றுமில்லை. நான் எந்தக் கொள்கைகளைச் சொல்கிறேனோ, அவைகளைக் கண்டிப்பாக பின் பற்றவேண்டும்' என்று அவர் சொல்லி, தமது பலமான விரல்களால் அந்த மேஜையைத் தட்டினார். 'நமக்கு இப்போதுள்ள கஷ்ட மென்ன? அசட்டுத்தனம், சிறு பிள்ளைத்தனம்?'

தேசப் படத்திற்குப் பக்கத்தில் அவர் போனார். டிரிஸா முகாமின் சிலாக்கியத்தை ஏதும் மாற்றிவிட முடியாது என்பதை நிரூபிப்பதற்காக, அவர் வேகமாகப் பேச ஆரம்பித்தார். ஒவ்வொன்றையும் எதிர்பார்த்து ஏற்பாடு செய்திருப்பதாகவும், எதிர் பக்கவாட்டில் உண்மையாகவே வளைப்பதாய் இருந்தால், எதிரி நிச்சயமாக நாசமாவான் என்றும் சொன்னார்.

பாலூசிக்கு ஜெர்மன் மொழி தெரியாது. அதனால் பிரஞ்சு மொழியில் கேள்வி கேட்க ஆரம்பித்தார். தமது தலைவருக்கு உதவி செய்வதற்காக, வால்ஜாகன் முன்வந்தார். அவர் பிரஞ்சு மொழியை மிக மோசமாகப் பேசக் கூடியவர். அவர் பாலூசிக்காக மொழி பெயர்க்க ஆரம்பித்தார். பூயலின் வேகத்தோடு, அவரால் சமாளிக்க முடியவில்லை. பூயல் இதுவரை ஏற்பட்டிருக்கிறவைகளைப்பற்றி மட்டும் பேசவில்லை; என்னென்ன ஏற்பட முடியுமென்பதைப் பற்றியும், தமது திட்டம் இவற்றையெல்லாம் எதிர்பார்த்து அமைக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பற்றியும், இப்போது ஏதாவது கஷ்டம் வருமானால், தமது திட்டத்தைப் பூரணமாக அவர்கள் நிறைவேற்றி வைக்காததே அதற்குக் காரணம் என்பதைப்பற்றியும் சொல்லிக்கொண்டிருந்தார். அவர் பேசும் போதே, கேலியாகச் சிரித்துக்கொண்டு விளக்கிக்கொண்டிருந்தார். கடைசியாக இகழ்ச்சியோடு தாம் பேசுவதையும் நிறுத்திவிட்டார். ஏற்கெனவே நிரூபிக்கப்பட்ட ஒரு பிரச்னையைப்பற்றி ஒரு கணக்கு நிபுணர், வேறு பல வழிகளில் அதை நிரூபிக்க விரும்பாமல், திடீரென்று எப்படித் தமது பேச்சை விடுவாரோ, அதே மாதிரி அவருடைய செய்கையும் இருந்தது. வால்ஜாகன் அவருக்குப் பதிலாக எழுந்து, இன்னமும் பிரஞ்சு மொழியில் விளக்கிக் கொண்டேயிருந்தார்.

அடிக்கடி பூயலைத் திரும்பிப் பார்த்து, 'அது அப்படித்தானே, மேன்மை தங்கியவரே?' என்று கேட்டுக்கொண்டிருந்தார். சண்டையில் மிகுந்த பரபரப்படைபவன், எப்படித் தன்னுடைய கட்சியைச்சேர்ந்தவர்களையே அடிப்பானோ, அதே மாதிரி பூயலும் தம்முடைய சீடரான வால்ஜாகனைப் பார்த்து கோபமாகக் கூச்சலிட்டார்:

'நல்லது, அப்படித்தான். அதை விளக்குவதற்கு இன்னும் என்ன இருக்கிறது?'

பாலூசியும் மிச்சாடும், ஏக காலத்தில் வால்ஜாகனை எதிர்த்து பிரஞ்சு மொழியில் பேச ஆரம்பித்தார்கள். பூயலைப் பார்த்து ஆர்ம்பெல்ட் ஜெர்மன் மொழியில் பேசினார். வால்கோன்ஸ்கிக்கு ருஷ்ய மொழியில் டால் என்பவர் விளக்கிக் கூறினார். இளவரசர் ஆண்ட்ரூ மௌனமாக இவற்றையெல்லாம் கேட்டுக் கவனித்துக் கொண்டிருந்தார்.

பூயல் கோபமாகவும் உறுதியுடனும் அசட்டுத்தனமான சுய நம்பிக்கையுடனும் இருந்தபோதிலும், அவர் மீது மற்றவர்களைவிட இளவரசர் ஆண்ட்ரூவே அதிகமாக அனுதாபம் கொண்டிருந்தார். அங்கிருந்தவர்களில் பூயல் ஒருவர்தான் தமக்காக எதுவும் வேண்டுமென்று விரும்பாதவர். அதோடு, யார் மீதும், எவ்வித துவேஷத்தையும் அவர் கொண்டிருக்கவில்லை. பல வருஷ உழைப்பினால் ஒரு ராணுவத் தத்துவத்தின் மீது அமைக்கப்பட்டிருக்கிற அந்த திட்டத்தை நிறைவேற்றி வைக்கவேண்டுமென்றே அவர் விரும்பினார். அவர் கேலி செய்து வந்தார்; மனக்கசப்பு அடையும்படி இகழ்ச்சி செய்தும் வந்தார்; என்றாலும், ஒரு கொள்கைக்காக அளவற்ற பக்தியைக் காட்டியபடியால், அவர் எல்லாரிடமும் மரியாதை பெற்றார். இதோடு பூயலைத் தவிர மற்றபடி பேசியவர்கள் எல்லாரும் ஒரு பொதுவான குணத்தைக் கொண்டிருந்தார்கள். 1805-ஆம் வருஷம் நடந்த யுத்தக் கவுன்ஸிலில் இந்த பொதுவான குணம் காணப்படவில்லை. அதாவது, நெப்போலியனுடைய மேதையைக் கண்டு இப்போது ஒரு பீதி ஏற்பட்டிருந்தது. இதை அவர்கள் மறைத்த போதிலும், ஒவ்வொருவருடைய பேச்சிலும் இது நன்றாகத் தெரிந்தது. ஒவ்வொரு விஷயமும் நெப்போலியனுக்குச் சாத்தியமென்றும், ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் நெப்போலியன் தாக்கக்கூடும் என்றும் அவர்கள் சொல்லி, ஒவ்வொருவருடைய திட்டத்தையும் தகர்ப்பதற்காக அவருடைய பயங்கரமான பெயரை உபயோகித்துக் கொண்டும் இருந்தார்கள். தம்முடைய திட்டத்தை

எதிர்க்கிற ஒவ்வொருவரையும் நெப்போலியனைப் போலவே, காட்டு மிராண்டிகள் என்று பூயல் மட்டும் நினைத்துவந்தார். ஆனால் இந்த மரியாதை உணர்ச்சியோடு இளவரசர் ஆண்ட்ரூவிடம் பூயல் ஒரு இரக்கத்தையும் தோற்றுவித்தார். ராஜ சபையைச் சேர்ந்தவர்கள் அவரிடம் பேசிய தொனியிலிருந்தும், சக்கரவர்த்தியிடம் பாலூசி பேசியதிலிருந்தும், பூயலின் பேச்சுக்களில் காணப்பட்ட ஒருவிதமான துணிவிலிருந்தும், ஒரு விஷயம் பூயல் உட்பட எல்லாருக்கும் தெரிந்திருந்தது. அதாவது, பூயலின் விழ்ச்சி வெகு சமீபத்தில் இருக்கிறது என்பதேயாகும். தம்முடைய சுய நம்பிக்கையோடு, ஒரு கரகரப்பான ஜெர்மன் கேலியோடு அவர் பேசி வந்தபோதிலும், அவருடைய கன்னப் பொட்டுக்கு மேலாக, பின்பக்கமாக சீவி விடப்பட்டிருந்த ரோமங்கள், குடுமிகள் போல நீண்டிருந்த அவரைப் பார்த்தால் பரிதாபமாய் இருந்தது. கோபத்தினாலும் இகழ்ச்சியினாலும் அவர் இந்த விஷயத்தை மறைத்து வைத்திருந்தபோதிலும், அவர் அதைரியத்தோடு இருப்பதாகவே காணப்பட்டார். அதாவது, தம்முடைய ராணுவ தத்துவம் சரியானதென்பதை, ஒரு பெரிய சோதனையின் மூலம் உலகத்திற்கெல்லாம் அதன் சிலாக்கியத்தை நிரூபிப்பதற்காக இருந்த அந்த ஒரே சந்தர்ப்பம் தமது கையைவிட்டு நழுவிப்போகிறதென்பதை அவர் உணர்ந்தார்.

வாதப் பிரதிவாதங்கள் நீண்ட நேரமாகத் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தன. நேரமாக ஆக அந்த வாதங்களும் அதிக உஷ்ணமானதாக வளர்ந்துகொண்டு போயின. கடைசியில், தனிப்பட்டவர்களைத் தாக்குவதும், கூச்சல் போடுவதும் தோன்றியபடியால் அங்கே சொல்லப்பட்டவைகளிலிருந்து ஒரு பொதுவான முடிவிற்கு வர சாத்தியமில்லாமல் இருந்தது. இந்த பல மொழிப் பேச்சுக்களையும் யூகங்களையும் மறுப்புகளையும் திட்டங்களையும் கூச்சல்களையும் கேட்ட இளவரசர் ஆண்ட்ரூ மலைத்துப் போனார். யுத்த சாஸ்திரம் என்பது ஒன்றும் இல்லை யென்றும், அது இருக்க முடியாதென்றும், ஆகவே, ஒரு ராணுவ மேதை என்பது ஒன்று இருக்க முடியாத விஷயம் என்றும், இளவரசர் ஆண்ட்ரூவுக்கு வெகுகாலமாக, முக்கியமாக அவர் யுத்த களங்களில் இருந்தபோது தோன்றியது. அந்த நினைப்பு இப்போது வெளிப்படையான உண்மை என்று அவருக்குத் தோன்றியது. 'நிலைமைகளும் சந்தர்ப்பங்களும் தெரியாமல் இருக்கும்போதும், அவைகளை வரையறுத்துக்கூற முடியாமல் இருக்கும் போதும், முக்கியமாக, போரிடும் துருப்புகளின் பலத்தை அறிய முடியாமல் இருக்கும் போதும், அந்த விஷயத்தைப்பற்றி தத்துவமோ

சாஸ்திரமோ என்ன இருக்கமுடியும்? நமது துருப்புகளோ, அல்லது சத்திரியின் துருப்புகளோ, இன்னும் ஒரு நாளில் என்ன நிலைமையில் இருக்க முடியும் என்பதை ஒருவரும் இதற்கு முன்னால் முன்னதாக அறிந்ததும் இல்லை; இனி அறியப்போவதும் இல்லை. இந்தப் படைப் பிரிவிலோ, அல்லது அந்தப் படைப்பிரிவிலோ, என்ன பலம் இருக்கிறது என்பதை ஒருவராலும் யூகிக்க முடியாது. சில வேளைகளில் யுத்த முனைகளில் 'நாம் துண்டிக்கப்பட்டு விட்டோம்' என்று கூச்சலிட்டு ஓட ஆரம்பிப்பதற்கு ஒரு கோழை இல்லாமல் இருந்தால், ஆனால் ஜே கோஷம் போடக்கூடிய ஒரு தைரியமான, உல்லாசமான வாலிபன் போர் முனையில் இருந்தால், ஐயாயிரம் துருப்புகள் கொண்ட ஒரு படைப் பிரிவு, முப்பதாயிரம் துருப்புகளுக்குள்ள பலத்தைப் பெறமுடியும். ஷார்ன்கிராபெர்ன் என்ற இடத்தில் அம்மாதிரி வீரச் செயல் நடந்தது. ஆனால், ஆஸ்டர்லிட்ஜ் என்ற இடத்திலோ, (முதலில் சொல்லியதைப் போல) எட்டாயிரம் பேருக்கு எதிராக ஐம்பதாயிரம் பேர் இருந்தும் அவர்கள் பயந்து ஓடினார்கள். காரிய சாத்தியமான எல்லாக் காரியங்களிலும் இருப்பதைப் போலவே, எதையும் வரையறுத்துக் கூறமுடியாத விஷயத்தில், ஒவ்வொன்றும் எண்ணற்ற நிலைமையைப் பொறுத்திருக்கிற காரியத்தில், அதனுடைய முக்கியத்துவம் ஒரு குறிப்பிட்ட நேரம் வருவதைப் பொறுத்திருக்கும் போது, அந்த நேரம் எப்பொழுது வரும் என்பதை ஒருவரும் அறியாமல் இருக்கும்போது, இவற்றிற்கெல்லாம் யுத்த சாஸ்திரம் என்பது எப்படி ஆக்க முடியும்? நமது ராணுவத்தை பாதி பாதியாகத் துண்டித்துவிட்டதாக ஆர்ம்பெல்ட் சொல்லுகிறார்; இரு நெருப்புகளுக்கு மத்தியில் பிரஞ்சு ராணுவத்தை நாம் வைத்துவிட்டதாக பாலூசி சொல்லுகிறார்; டிரிஸா முகாமுக்குப் பின்னால் நதி இருப்பதால், அது உபயோகமற்றதாகிவிட்டது என்று மிச்சாட் சொல்லுகிறார்; ஆனால், அதற்கு ஏற்பட்டுள்ள பலமெல்லாம் அதுதான் என்று பூயல் சொல்லுகிறார். டால் என்பவர் ஒரு திட்டத்தைப் பிரேரிக்கிறார். ஆர்ம்பெல்ட் என்பவர் மற்றொரு திட்டத்தை பிரேரிக்கிறார். அவையெல்லாம் நல்லவையாகவும் இருக்கின்றன; கெட்டவையாகவும் இருக்கின்றன. ஏனெனில், ஒரு யோசனையின் அனுகூலங்களை சோதனை நேரும்போதுதான் காணமுடியும். அவர்கள் எல்லாரும் ஒரு 'ராணுவ மேதை'யைப்பற்றி ஏன் பேசுகிறார்கள்? சரியான நேரத்தில் உணவைக் கொண்டுவரவேண்டும் என்று உத்தரவு கொடுப்பதனாலும், வலது பக்கம் யார் போகவேண்டும், இடது பக்கம் யார் போகவேண்டும் என்று சொல்லுவதானாலும்,

ஒருவனை மேதை என்று சொல்லமுடியுமா? ராணுவத் தலைவர்களிடம் படாடோபமும் அதிகாரமும் இருக்கிறபடியால், இச்சகம் பாடுகிற கூட்டம், அந்த அதிகார பீடத்தை முகஸ்துதி செய்து, அதனிடம் இல்லாத மேதைகளை இருப்பதாகச் சொல்லிக்கொண்டிருக்கும். இதற்குமாறாக, எனக்குத் தெரிந்த சிறந்த ஜெனரல்கள் எல்லாரும் ஒன்று முட்டாள்களாகவோ, அல்லது பராக்கு புத்தி உள்ளவர்களாகவோ இருக்கிறார்கள். பாக்ரேஷன் மிகச் சிறந்தவர் என்று நெப்போலியனே ஒப்புக்கொண்டிருக்கிறார். அப்புறம் அந்த போனபார்ட்டைப்பற்றி 'என்ன? அவருடைய குறுகிய சுய திருப்தியுள்ள முகத்தை, ஆஸ்டர்லிட்ஜ் யுத்த களத்தில் நான் பார்த்தது எனக்கு நினைவு இருக்கிறது. ஒரு சிறந்த ராணுவ கமாண்டருக்கு விசேஷ யோக்கியதைகள் எதுவும் அவசியமில்லை என்பது மட்டுமல்ல, அதற்கு மாறாக, அவரிடம் மனித குணங்களில் உயர்வானவை களாகவும் சிறந்தவைகளாகவுமான காதல், கவிகள், கனிவு, தத்துவ விசாரணை ஆகியவை இல்லாமலும் இருக்கவேண்டும். அவருடைய அறிவு சுருக்கமாய் இருக்கவேண்டும்; தாம் செய்வது மிகவும் முக்கியமானது என்று உறுதியாக நம்பிக்கை கொள்ள வேண்டும் (இல்லையென்றால், அவருக்குப் போதுமான பொறுமை இருக்காது). அப்பொழுதுதான் அவர் ஒரு வீரமுள்ள தலைவராக இருக்க முடியும். அவர் மனித குணம் படைத்தவராகவும், அன்புள்ளவராகவும் இரக்க முள்ளவராகவும், எது நியாயம், எது அநியாயம் என்பதைப்பற்றி சிந்திக்காதவராகவும் அவர் இருக்கவேண்டும். அவர்களிடம் அதிகாரம் இருந்தபடியால் வெகு காலத்திற்கு முன்பாகவே அவர்களுடைய 'மேதை' என்ற தத்துவத்தை அவர்களுக்காக உற்பத்தி செய்தார்கள் என்பதைப் புரிந்து கொள்ளலாம். ஆனால், ஒரு ராணுவ நடவடிக்கையில் வெற்றி என்பது அவர்களைப் பொறுத்து நிற்கவில்லை; சிப்பாய்களில் 'நாம் தோற்றுவிட்டோம்' என்றோ, 'ஜே ஜே' என்றோ கோஷம் இடுகிறார்களே, அவர்களைப் பொறுத்துத்தான் நிற்கிறது. சிப்பாய் பதவிகளில் இருப்பவர்கள் மட்டும்தான் தாங்கள் உபயோகமாய் இருக்கமுடியும் என்ற உறுதியோடு சேவை செய்ய முடியும்.'

பேச்சுக்களைக் கேட்டுக்கொண்டிருந்தபோது, இளவரசர் ஆண்ட்ரூ இந்தவிதமாக சிந்தித்துக்கொண்டிருந்தார். பாலூசி அவரை அழைத்தபோதுதான், அவர் தம் உணர்வு பெற்றார். அங்கிருந்த ஒவ்வொருவரும் புறப்பட்டுப் போய்க் கொண்டிருந்தார்கள்.

மறுநாள் நடந்த படை அணிவகுப்பின்போது, இளவரசர் ஆண்ட்ரூவை அவர் எங்கே சேவை செய்ய விரும்புகிறார் என்று சக்கரவர்த்தி கேட்டார். ராணுவத்தில் சேவை செய்யவேண்டும் என்று அவர் அனுமதி கோரினார். சக்கரவர்த்தியின் பரிவாரத்தில் சேவை செய்யவேண்டும் என்று அவர் கேட்காதபடியால், ராஜசபை வட்டாரத்தில் அவருக்கிருந்த செல்வாக்கை அவர் இனி எப்பொழுதும் இழந்துவிட்டார்.

## 9
### 12

படையெடுப்பு ஆரம்பமாவதற்கு முன்பாக ராஸ்டோவுக்கு அவர்களுடைய பெற்றோர்களிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் நட்டாஷாவின் அசௌக்கியத்தையும், இளவரசர் ஆண்ட்ரூவுடன் ஏற்பட்டிருந்த நிச்சயதார்த்தத்தை (நட்டாஷா அவரை மறுத்துவிட்டதாகக் காரணம் காட்டியிருந்தார்) அவள் முறித்து விட்டதையும் குறிப்பிட்டு இருந்தார்கள். அதோடு, ராணுவ சேவையிலிருந்து விலகி, வீடு திரும்பும்படி நிக்கலஸ் ராஸ்டோவைக் கேட்டிருந்தார்கள். இந்தக் கடிதம் கிடைத்ததும், ராணுவ சேவையிலிருந்து விலகவோ, அல்லது ரஜா எடுக்கவோ நிக்கலஸ் எவ்வித முயற்சியும் செய்யவில்லை. ஆனால், தமது பெற்றோர்களுக்குக் கடிதம் எழுதினார். அதில் நட்டாஷாவின் அசௌக்கியத்தைக் கண்டும், அவளுடைய நிச்சயதார்த்தம் முறிந்து போனதைக்கண்டும் வருத்தம் தெரிவித்து, தம்மால் முடிந்தவரையில் பெற்றோர்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்ய முயற்சிப்பதாக எழுதியிருந்தார். சோனியாவுக்குத் தனியாகக் கடிதம் எழுதினார்.

'என்னுடைய உள்ளத்தால் காதலிக்கப்பட்ட என் சிநேகிதியே, நான் வீடு திரும்புவதற்கு என்னுடைய கௌரவம் ஒன்றுதான் தடுத்து நிற்கிறது. இச்சமயத்தில், படையெடுப்பு ஆரம்பமாகப் போகும் சமயத்தில், நான் இதைவிட்டு வீடு திரும்பினால், என்னுடைய தோழர்களின் கண்களில் கௌரவம் அற்றவனாகக் கருதப்படுவேன். அதோடு, என்னுடைய உள்ளத்திலும், நான் என்னுடைய சொந்த மகிழ்ச்சிக்காக, என்னுடைய தாய் நாட்டின் மீது காட்ட வேண்டிய அன்பையும் கடமையையும் செய்யாமல் போனால், எனக்கு கௌரவக் குறைவாகவே தோன்றும். ஆனால், இதுதான் நமது கடைசிப் பிரிவாய் இருக்கும். யுத்தம் முடிந்தவுடனேயே, அப்பொழுது நான் உயிரோடு இருந்து,

உன்னால் இன்னமும் காதலிக்கப்படுவதாய் இருந்தால், மற்றவைகளையெல்லாம் நான் வீசி எறிந்துவிட்டு, என்னுடைய ஆர்வம் மிகுந்த மார்பில், இனி எப்பொழுதுமே உன்னை அணைத்து வைத்துக்கொள்ள உன்னிடம் பறந்து ஓடி வருவேன். இதை நம்பு' என்று சோனியாவுக்கு அவர் எழுதினார்.

அந்த படையெடுப்புக் காரணம் ஒன்றுதான் அவர் தமது வாக்குறுதிப்படி வீட்டிற்குத் திரும்பி வந்து, சோனியாவை திருமணம் செய்ய முடியுாமல் உண்மையில் தடுத்து நின்றது. ஆட்ராட்னோவில் வேட்டை ஆடிய மழை காலமும், கிறிஸ்துமஸ் ரஜா நாட்களும் சோனியாவின் காதலும் கொண்ட குயிர் காலமும், அவருடைய மனக்கண் முன்பாகத் தோன்றி நின்றன. அந்தக் காட்சிகள் அமைதியான கிராமாந்திர இன்பங்களையும் சாந்தியையும், அவர் இதற்கு முன்பாக அறிந்திராத விதத்தில் அனுபவித்ததைத் திறந்து காட்டின. அந்த எண்ணங்கள் அவரை இப்பொழுது மயக்கின. 'ஒரு சிலாக்கியமான மனைவி, குழந்தைகள், ஒரு நல்ல வேட்டை நாய்க்கூட்டம், வேகமாய் ஓடக்கூடிய ஒரு டஜன் பார்ஜாய் நாய்கள், விவசாயம், அக்கம் பக்கத்தார்கள், ஊராரால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு உத்தியோகம்...' என்று அவர் நினைத்தார். ஆனால், இப்பொழுது படையெடுப்பு ஆரம்பமாய்க் கொண்டு இருக்கிறது. அவர் தமது பட்டாளத்தோடு தங்கி இருந்தாகவேண்டும். அந்த விஷயம் அம்மாதிரி இருப்பதால், அவருக்குள்ள சுபாவப்படி அந்தப் பட்டாளத்தில் அவர் நடத்திவரும் வாழ்க்கையில் திருப்தி கொண்டு, அந்த வாழ்க்கையில் மகிழ்ச்சி பெறவும் நிக்கலஸ் ராஸ்டோவால் சாத்தியமாய் இருந்தது.

தமது ரஜாவிலிருந்து நிக்கலஸ் திரும்பியதும் தமது தோழர்களால் மகிழ்ச்சியோடு வரவேற்கப்பட்ட பின்பு, பட்டாளத்திற்கு வேண்டிய குதிரைகளை வாங்கிவரும் வேலையை அவருக்குக் கொடுத்தார்கள். உக்ரேன் பிரதேசத்திலிருந்து மிக சிலாக்கியமான குதிரைகளை அவர் வாங்கி வந்தார். அவர் வாங்கிய குதிரைகளைக் கண்டு அவருக்கே திருப்தி ஏற்பட்டதோடு, அவரை அவருடைய கமாண்டர்களும் பாராட்டினார்கள். அவர் அந்த வேலையாகச் சென்றிருந்தபோது, அவரை கேப்டன் பதவிக்கு உயர்த்தினார்கள். அந்தப் பட்டாளத்தை யுத்த முஸ்தீபு செய்தபோது, அதன் எண்ணிக்கையையும் உயர்த்தினார்கள். அவர் முன்னால் இருந்த படைப் பிரிவிலேயே இப்பொழுது அவர் சேர்க்கப்பட்டார்.

படையெடுப்பு ஆரம்பமாயிற்று, சம்பளம் இரட்டிப்பாக்கப் பட்டது. போலந்துக்குள் பட்டாளம் போயிற்று. புதிய அதிகாரிகளும் வீரர்களும் குதிரைகளும் வந்து சேர்ந்து

கொண்டார்கள். எல்லாவற்றிற்கும் மேலாக, ஒரு யுத்தம் ஆரம்பாகும்போது எப்படி இருக்குமோ, அதே மாதிரி ஒவ்வொருவரும் களிப்பும் பரபரப்பும் அடைந்திருந்தார்கள். பட்டாளத்தில் தமக்கு உண்டான சலுகையான அந்தஸ்தை ராஸ்டோவ் உணர்ந்து, ராணுவ சேவையின் சிரத்தைகளிலும் மகிழ்ச்சிகளிலும் தம்மைப் பூரணமாக ஈடு படுத்திக்கொண்டார். என்றாலும் அந்த சேவையை விட்டு சீக்கிரமாகவோ, கொஞ்சம் காலம் தள்ளியோ தாம் விலக வேண்டியிருக்கும் என்பதையும் அவர் அறிவார்.

பற்பல சிக்கலான ராஜாங்க, ராஜீய, யுத்த தந்திர காரணங்களுக்காக வில்னாவிலிருந்து படைகள் பின்வாங்க வேண்டியதாய் இருந்தது. பின்வாங்கும் ஒவ்வொரு அடியின்போதும், தலைமைக் காரியாலயத்தில் சிக்கலான பலவகை சிரத்தைகளும் வாதங்களும் கோபதாபங்களும் ஏற்பட்டுக்கொண்டு இருந்தன. பாவ்லாவ்கிராட் குதிரைப் படையைப் பொறுத்தவரையில், வசந்த காலத்திலுள்ள இந்த சிறந்த நாட்களில் போதுமான உணவுப் பொருள்களுடன் பின்வாங்குவது என்பது மிகுந்த எளிதான, மனதிற்குப் பிடித்தமான வேலையாய் இருந்தது.

தலைமைக் காரியாலயத்தில்தான் சோர்வும் அமைதிக் குறைவும் சூழ்ச்சிகளும் இருந்தன. ராணுவத்தைப்பொறுத்தவரையில், நாங்கள் எங்கே போகிறார்கள், ஏன் போகிறார்கள் என்பதைப் பற்றி கேட்டுக்கொள்ளுவதே இல்லை. பின்வாங்குவதற்காக அவர்கள் வருத்தப்படுகிறதாய் இருந்தால், அவையெல்லாம் சில காரணங்களுக்காகவே இருக்கும். அதாவது, தங்களுக்குப் பழகிப் போன வீடுகளிலிருந்து போகவேண்டி இருக்கிறதே என்றோ, அல்லது யாரோ அழகிய வாலிப போலந்து சீமாட்டியை விட்டுப் பிரிய வேண்டி இருக்கிறதே என்றோ வருத்தப்படுவதாய் இருக்கலாம். நிலைமை மோசமாய் இருக்கிறது என்ற எண்ணம் யாருடைய மண்டையிலாவது தோன்றினால், உடனே அவன் ஒரு நல்ல சிப்பாய்க்கு பொறுத்தமாய் இருக்கக்கூடிய விதமாக மகிழ்ச்சியோடு இருக்க முயற்சி செய்வான். பொதுவான ராணுவ விவகாரங்களைப் பற்றி சிந்தனை செய்யாமல், தனக்கு முன்னால் உடனே செய்ய வேண்டியதாய் இருக்கும் காரியத்தைப் பற்றி மட்டும் சிந்தனை செய்வான். முதலில் ஆனந்தமாக வில்னாவுக்கு முன்பாக முகாம் போட்டார்கள். போலந்து மிராசுதார்களுடன் நட்புரிமை கொள்ளுவது, அணி வருப்புகளுக்காகத் தயார் செய்வது, சக்கரவர்த்தியும் மற்றபடி உயர்தர கமாண்டர்களும் அணிவகுப்புகளைப் பார்வையிடுவது முதலியவைகளைச் செய்து

வந்தார்கள். அப்பொழுது அவர்கள் ஸ்வெண்ட்ஸியானிக்குப் பின்வாங்கவேண்டும் என்று உத்தரவு வந்தது. தங்களோடு எடுத்துக்கொண்டு போக முடியாத உணவு சாமான்களை நாசமாக்கிவிடும்படி அவர்களுக்கு உத்தரவிடப்பட்டது. ஸ்வெண்ட்ஸியானி என்ற இடம், குதிரைப் படை வீரர்களுக்கு 'குடிகார முகாம்' என்ற பெயரில் ஞாபகத்தில் இருந்தது. அந்த முழு ராணுவமுமே அந்தப் பெயரை சூட்டியிருந்தார்கள். உணவுப் பொருள்களை சேகரித்து வரும்படி கொடுக்கப்பட்ட உத்தரவை தங்களுக்கு சாதகமாக உபயோகப்படுத்திக் கொண்டு, போலந்துக்காரர்களிடம் இருந்த குதிரைகளையும் வண்டிகளையும் கம்பளங்களையும் சிப்பாய்கள் அபகரித்துக் கொண்டார்கள் என்று ஏராளமான புகார்கள் வந்தன. 'ஸ்வெண்ட்ஸியானியை ராஸ்டோவ் ஞாபகத்தில் வைத்திருந்தார். ஏனெனில், அவர்கள் அங்கு வந்து சேர்ந்த முதல் நாளன்று அவருடைய சார்ஜண்ட் மேஜரை மாற்றினார். தவிர, அவருடைய படைப்பிரிவைச் சேர்ந்த, அவருக்கு அறிமுகம் இல்லாத வீரர்கள் எல்லாரும் ஐந்து பீப்பாய்கள் நிறைய பழைய பீயர் பானத்தை அபகரித்து பெரிய குடிகாரர்களாய் விளங்கினார்கள்; அவர்களை அவரால் சமாளிக்க முடியவில்லை. ஸ்வெண்ட்ஸியானிலிருந்து அவர்கள் இன்னும் அதிகமாய் பின்வாங்கிப் பின்வாங்கி டிரிஸாவுக்கு வந்தார்கள். பின்னால், டிரிஸாவிலிருந்தும் பின்வாங்கி ருஷ்யாவின் எல்லையை நெருங்கினார்கள்.

ஜூலை மாதம் 13-ந் தேதியன்று எதிரியோடு நடந்த ஒரு கடுமையான யுத்தத்தில் பாவ்லாவ்கிராடுகள் முதல் தடவையாகக் கலந்து கொண்டார்கள்.

அந்தச் சண்டைக்கு முதல் நாளாகிய ஜூலை 12-ந் தேதியன்று பலமான புயலோடு மழையும் ஆலங்கட்டி மழையும் பெய்தன. பொதுவாக, 1812-ஆம் வருஷத்திய வசந்த காலம் அதன் புயல்களுக்குப் பிரசித்தி பெற்றதாய் இருந்தது.

ரை தானிய வயலில் இரண்டு பாவ்லாவ்கிராட் படைப் பிரிவுகள் தங்கியிருந்தன. அந்த ரை தானியக் கதிர்கள் விளைந்திருந்த போதிலும், அவையெல்லாம் மாடுகளாலும், குதிரைகளாலும் பூராவாக சமட்டி அடிக்கப்பட்டன. சோனாமாரியாக மழை பொழிந்து கொண்டிருந்தது. ராஸ்டோவும், அவருடைய அபிமான அதிகாரியான இலைனும், அவசரக் கோலத்தில் நிர்மாணிக்கப் பட்டிருந்த ஒரு குடிசையில் அமர்ந்திருந்தார்கள். அவர்களுடைய பட்டாளத்தைச் சேர்ந்த ஒரு அதிகாரி, தமது கன்னங்கள் வரை

மீசையை நீளமாக வளர்த்து விட்டுக் கொண்டிருந்தவர், கமாண்டரின் காரியாலயத்திற்குப் போய்விட்டுத் திரும்பி வரும்போது மழையில் அகப்பட்டுக் கொண்டபடியால், ராஸ்டோவின் குடிசைக்குள் நுழைத்தார்.

'நான் காரியாலயத்திலிருந்து வருகிறேன், கோமகனே. ராயேவ்ஸ்கியின் தீரத்தைப் பற்றி நீர் கேள்விப்பட்டீரா?'

அந்த அதிகாரி சால்டானாவ் என்ற இடத்தில் நடந்த சண்டையைப் பற்றிய விவரங்களை, காரியாலயத்தில் தாம் கேள்விப்பட்ட முறையில் எடுத்துச் சொன்னார்.

ராஸ்டோவ் தமது சுங்கானைப் பிடித்துக் கொண்டிருந்தார். அவருடைய முதுகில் தண்ணீர் சொட்டுச் சொட்டாக விழுந்துகொண்டிருந்தபடியால், தமது தலையைத் திருப்பி அவர் கூறுவதைக் கவனமில்லாமல் கேட்டுக்கொண்டிருந்தார். இலைன் அவரை நெருங்கி இருந்தபடியால், இடையிடையே அவரை நோக்கிக்கொண்டும் இருந்தார். இந்த அதிகாரி 16 வயதான ஒரு சிறுவர். சமீபத்தில் தான் பட்டாளத்தில் சேர்ந்தார். ஆகவே, ஏழு வருஷங்களுக்கு முன்னால் டெனைசாவுடன் எம்மாதிரி உறவில் நிக்கலஸ் இருந்தாரோ, அதே மாதிரி உறவில் அவர் இப்பொழுது நிக்கலஸுடன் இருக்கிறார். ஒவ்வொரு விஷயத்திலும் ராஸ்டோவ் மாதிரியே அவரும் செய்ய முயற்சித்தார். ஒரு பெண் எம்மாதிரி காதலிப்பாளோ, அதேமாதிரி ராஸ்டோவை அவர் பூஜித்து வந்தார்.

நீண்ட மீசையைக் கொண்ட அதிகாரியான அந்த ஜிடிரி ஜின்ஸ்கி என்பவர், சால்டானால் அணையை 'ருஷ்ய தெர்மாபைல்' என்று மிக ஆடம்பரமாகப் பேசினார். அந்த அணை மீது ஜெனரல் ராயேவ்ஸ்கி செய்த காரியங்கள் புராதன காலத்து செயல்களுக்கு ஒப்பானவை என்று கூறினார். அந்த ராயேவ்ஸ்கி கடுமையான குண்டு மழைக்கு அடியில் எப்படித் தமது இரு குமாரர்களையும் அழைத்துச் சென்று யுத்தம் செய்தார். என்பதை விவரித்துக் கூறினார். ராஸ்டோவ் அந்தக் கதையைக் கேட்டார். ஆனால், ஜிடிரி ஜின்ஸ்கியின் உற்சாகத்திற்கு அவர் ஆதரவு கொடுக்காதது மட்டுமல்ல, அதற்கு மாறாகத் தாம் கேட்டுக்கொண்டிருப்பவை களைக் கண்டு வெட்கம் அடைந்தவர் போலவும், அதை மறுத்துச் சொல்ல நோக்கமில்லாதவர் போலவும் அவர் காணப்பட்டார். ஆஸ்டர்லிட்ஜிலும், 1807-ஆம் வருஷத்தில் நடந்த யுத்தத்திலும் ராஸ்டோவுக்கு ஏற்பட்ட அனுபவங்களிலிரந்து, ராணுவச் செயல்களை வர்ணிக்கும் போது, மக்கள் எல்லாருமே பொய் சொல்லுகிறார்கள். என்பதை அவர் அறிந்திருந்தார். அவரே

அம்மாதிரி வர்ணிக்கும்போது பொய் சொல்லி இருக்கிறார். தவிரவும், நாம் மனோராஜ்யம் செய்கிற படியோ, அல்லது வர்ணிக்கிறபடியோ, யுத்தங்களில் அம்மாதிரி எதுவும் நடப்பதில்லை என்பதை அறிந்து கொள்ளுவதற்கு அவருக்குப் போதுமான அனுபவம் இருந்தது. ஜிடிரிஜின்ஸ்கியின் கதையையோ, அல்லது அவரையோ ராஸ்டோவ் விரும்பவில்லை. கன்னங்கள் வரையில் நீண்டிருந்த அவரது மீசைகளோடு அவரது வழக்கப்படி தாம் பேசுவதைக் கேட்பவரின் முகத்திற்குப் பக்கத்தில் குனிந்து அவர் பேசினார். அந்த நெருக்கமான குடிசையில் ராஸ்டோவ் இன்னும் அதிக நெருக்கமாய் இருப்பதாக உணர்ந்தார். ராஸ்டோவ் அவரை மௌனமாய்ப் பார்த்தார். 'முதலாவதாக, அந்த அணையைத் தாக்கிக்கொண்டிருந்தபடியால் அங்கே கூட்டமும் குழப்பமும் ஏராளமாய் இருந்திருக்க வேண்டும். அந்த இடத்திற்கு ராயேவ்ஸ்கி தமது குமாரர்களை அழைத்துச் சென்றிருந்தால், அவரைச் சுற்றியுள்ள சில டஜன் பேர்களைத் தவிர, மற்றவர்களிடம் எவ்விதமான உணர்ச்சியையும் அது ஏற்படுத்தி இருக்க முடியாது. எப்படி, யாருடன் அந்த அணைக்கு ராயேவ்ஸ்கி வந்தார் என்பதை மற்றவர்கள் பார்த்திருக்க முடியாது. அதைப் பார்த்தவர்களுக்கும் கூட அதனால் அதிகமான உணர்ச்சி ஏற்பட்டிருக்க முடியாது. ஏனெனில், தங்களுடைய உயிருக்கே ஆபத்தான நிலைமையில் அவர்கள் இருக்கையில், ராயேவ்ஸ்கிக்கு எவ்விதமான புத்திர உணர்ச்சிகள் இருக்கின்றன என்பதை அறிவதற்கு அவர்கள் ஏன் கவலைப்படப் போகிறார்கள்? மேலும், தெர்மாபைலுடன் ஒப்பிட்டு வரும் சால்டானால் அணையை, எதிரிகள் கைப்பற்றுவதோ, கைப்பற்றாமல் விடுவதோ என்பதைப் பொறுத்து, நமது தந்தை நாட்டின் விதி இணைக்கப்படவில்லை. அப்படியனால் அவர் ஏன் அம்மாதிரி தியாகம் செய்யவேண்டும்? யுத்த களத்தில் தமது சொந்தக் குழந்தைகளை எதற்காக ஆபத்திற்குள்ளாக்க வேண்டும்? என்னுடைய சகோதரன் பெட்டியாவையோ, அல்லது இந்த இலைனாவையோ நான் அம்மாதிரி அழைத்துச் செல்லமாட்டேன். இலைன் எனக்கு அந்நியராக இருந்த போதிலும், அவர் ஒரு இனிமையான வாலிபர். ஆகவே, எனது சகோதரனையோ, இலைனையோ ஆபத்தில்லாத ஒரு இடத்தில் வைக்கவே நான் முயற்சி செய்வேன்.' இம்மாதிரியாக ஜிடிரி ஜின்ஸ்கியின் பேச்சைக் கேட்டுக்கொண்டிருக்கும்போது, நிக்கலஸ் சிந்தித்துக் கொண்டிருந்தார். அவருடைய சிந்தனைகளை அவர் வெளியே சொல்லவில்லை. ஏனெனில், இம்மாதிரி விஷயங்களில்கூட அவர் அனுபவம் பெற்றிருந்தார். இந்தக் கதை

நமது ராணுவத்தின் பெருமையை அதிகரிக்கும் ஆகையால், அதைப்பற்றி சந்தேகப் படாமல் இருப்பதாக ஒருவர் நடிக்க வேண்டியதாய் இருக்கிறது. அவரும் அம்மாதிரியே செய்தார்.

'இதை என்னால் இனிமேல் பொறுக்க முடியாது' என்று, ஜிடிரிஜின்ஸ்கியின் உரையாடலை ராஸ்டோவ் ரசிக்கவில்லை என்பதை கவனித்த இலைன் கூறினார். 'என்னுடைய கால் மேஜோடுகளும் சட்டையும்... என்னுடைய ஆசனத்தின் கீழே தண்ணீர் ஓடிக் கொண்டிருக்கிறது. நான் போய் ஒதுங்குமிடம் இருக்கிறதா என்று பார்க்கிறேன். மழை குறைந்திருப்பதாகத் தோன்றுகிறது.'

இலைன் வெளியே போனார். ஜிடிரிஜின்ஸ்கியும் குதிரை மீது ஏறிப் போனார்.

ஐந்து நிமிஷங்களுக்குப் பின்னால் சகதியில் உழன்றுகொண்டு அந்த குடிசைக்கு இலைன் ஓடிவந்தார்.

'ஜே ஜே! ராஸ்டோவ், சீக்கிரம் வாரும், நான் கண்டு பிடித்து விட்டேன். சுமார் இருநூறு கெஜங்களுக்கு அப்பால் ஒரு சத்திரம் இருக்கிறது. அங்கே நம்மவர்கள் ஏற்கெனவே கூடியிருக்கிறார்கள். குறைந்தபட்சம் அங்கே நனையாமலாவது இருக்கலாம். மேரி ஹெண்ட்ரிகாவ்னாவும் அங்கே இருக்கிறாள்.'

அந்தப் பட்டாளத்தின் டாக்டருடைய மனைவிதான் மேரி ஹெண்ட்ரிகாவ்னா. ஒரு அழகான வாலிப ஜெர்மன் பெண். போலந்தில் அவளை திருமணம் செய்துகொண்டார். தமக்கு பண வசதி போதுமானபடி இல்லாததாலோ, அல்லது தங்களுடைய திருமணத்திற்குப் பின்னால் உள்ள ஆரம்ப காலத்தில் தம்முடைய வாலிப மனைவியை விட்டுப் பிரிய விருப்பம் இல்லாததாலோ, அவர் அவளை தம்முடன் அழைத்துச் சென்றார். அந்தக் குதிரைப் பட்டாளம் எங்கெல்லாம் போகிறதோ, அங்கெல்லாம் அவளை அழைத்துச் செல்லுவார். குதிரைப்படை அதிகாரிகளிடம் அவருடைய பொறாமை குணம் ஒரு நிரந்தரத் தமாஷாக நிலவி வந்தது.

தமது மேல் சட்டையை தோள்களில் போட்டுக்கொண்டு, மற்றச் சாமான்களை எடுத்துக்கொண்டு தங்களுக்குப் பின்னால் வரும்படி கூச்சலிட்டு லாவ்ருஷ்காவிடம் சொல்லிவிட்டு, ராஸ்டோவ் அந்தச் சகதியில் இறங்கி, உழன்றுகொண்டு முன்னால் போனார். தம்முடன் இலைனையும் அழைத்துச் சென்றார். மழை குறைந்திருந்தது. அங்கிருந்த இருட்டை தூரத்தில் தோன்றிய மின்னல்கள் கலைத்துக் கொண்டிருந்தன.

'ராஸ்டோவ், நீர் எங்கே இருக்கிறீர்?'

'இங்கே இருக்கிறேன். எப்பேர்ப்பட்ட மின்னல்கள்' என்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

## 9 13

இந்தச் சத்திரத்தில் ஏற்கெனவே ஐந்து அதிகாரிகள் இருந்தார்கள். டாக்டருடைய மூடு வண்டி சத்திரத்தின் முன்னால் நின்றுகொண்டிருந்தது. தங்க நிறத் தலை முடியைக்கொண்ட, புஷ்டியான அந்தச் சிறிய ஜெர்மன் பெண்ணாகிய மேரி ஹெண்ட்ரிகாவ்னா, ஒரு ஜாக்கட்டையும் இரவு-தொப்பியையும் அணிந்துகொண்டு, முன்னால் இருந்த மூலையில் ஒரு அகலமான பெஞ்சு மீது அமர்ந்திருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் அவளுடைய கணவரான டாக்டர் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தார். ராஸ்டோவும் இலைனும் அந்த அறைக்குள் நுழைந்ததும், மகிழ்ச்சிக் குரல்களாலும் சிரிப்புகளாலும் அவர்களை வரவேற்றார்கள்.

'என் அன்பே, நாம் இங்கே எவ்வளவு குஷியாய் இருக்கிறோம்' என்று ராஸ்டோவ் சிரித்துக்கொண்டே சொன்னார்.

'அங்கே ஏன் வாயைத் திறந்துகொண்டு நிற்கிறீர்கள்?'

'எவ்வளவு சிறப்பாக அவர்கள் இருக்கிறார்கள்! அவர்களிடமிருந்து தண்ணீர் ஊற்றெடுத்தல்லவா ஓடுகிறது. எங்கள் வரவேற்பு அறையை ரொம்பவும் ஈரமாக்கி விடாதீர்கள்.'

'மேரி ஹெண்ட்ரிகாவ்னாவின் உடைகளைப் பாழாக்கி விடாதீர்கள்' என்று பலர் கூச்சலிட்டார்கள்.

ராஸ்டோவும் இலைனும் உலர்ந்த உடைகளை அணிந்து கொள்ளுவதற்காக, அங்கிருந்த மேரி ஹெண்ட்ரிகாவ்னாவின் நாணத்திற்கு பங்கமில்லாமல் அதைச் செய்வதற்காக, ஒரு மூலையைத் தேடிக் கொண்டார்கள். அந்த அறையில் ஒரு தடுப்பிற்குப் பின்னால் இருந்த ஒரு சிறிய இடத்திற்கு உடுப்பை மாற்றச் சென்றார்கள். அங்கே ஏற்கெனவே மூன்று அதிகாரிகள் ஒரு காலிப் பெட்டியின் மீது உட்கார்ந்து, ஒரே ஒரு மெழுகு வத்தியின் வெளிச்சத்தில் சீட்டாடிக் கொண்டிருந்தார்கள். அந்த அதிகாரிகள், என்ன வந்தாலும் சரி, அந்த இடத்தை விட்டுக் கொடுப்பவர்களாக இல்லை. திரைமாதிரி ஒன்றை ஏற்படுத்திக் கொள்ளுவதற்காக, தனது பாவாடைகளில் ஒன்றை இரவல் கொடுப்பதாக மேரி

ஹெண்ட்ரிகாவ்னா தயவு புரிந்தாள். அதைத் திரை மாதிரி தொங்கவிட்டு, அந்தத் திரைக்கு அப்பால், லாவ்ருஷ்கா கொண்டுவந்திருந்த பெட்டியிலிருந்து உலர்ந்த ஆடைகளை எடுத்து அணிந்து கொண்டார்கள்.

இடிந்து கிடந்த ஒரு அடுப்பில் தீயை மூட்டினார்கள். இரண்டு சேணங்கள் மீது ஒரு பலகையைப் போட்டு, அதன் மீது ஒரு குதிரையின் சூல் துணியை விரித்தார்கள். ஒரு சிறிய சாமோவார் பாத்திரம் கொண்டுவரப்பட்டது. ஒரு பெட்டியைத் திறந்து, அதற்குள்ளிருந்த அரை புட்டி ரம் பானத்தை வெளியே எடுத்தார்கள். மேரி ஹெண்ட்ரிகாவ்னா இதற்குத் தலைமை வகிக்கவேண்டும் என்று சொல்லி, எல்லாரும் அவளைச் சுற்றி நின்றார்கள். அவளுடைய அழகிய கைகளைத் துடைத்துக் கொள்ளுவதற்காக ஒருவர் ஒரு சுத்தமான கைக்குட்டையைக் கொடுத்தார். அவளுடைய கால்கள் கீழே ஈரத்தில் படாமல் இருப்பதற்காக, ஒருவர் அவளுடைய கால்களுக்குக் கீழே ஒரு ஜாக்கட்டை விரித்தார். மற்றொருவர், வெளியிலிருந்து வருகிற குளிரைத் தடுப்பதற்காக, அங்கிருந்த ஜன்னலை தமது கோட்டினால் முடினார். மற்றொருவர், அவளுடைய கணவர் விழித்துவிடக் கூடாதே என்பதற்காக, அவருடைய முகத்தில் ஈக்களை இருக்கவிடாமல் ஓட்டிக்கொண்டிருந்தார்.

'அவரை சும்மா விட்டுவிடுங்கள்' என்று மேரி ஹெண்ட்ரிகாவ்னா சந்தோஷத்துடனும் சங்கோஜத்துடனும் புன்சிரிப்போடு கூறினாள். 'இரவு பூராவாகத் தூக்கமில்லாமல் இருந்ததால், இப்பொழுது நன்றாய் தூங்கிக்கொண்டிருக்கிறார்.'

'ஓ, இல்லை, மேரி ஹெண்ட்ரிகாவ்னா, டாக்டருடைய சௌக்கியத்தைக் கவனித்துக்கொள்ள வேண்டும். அப்படியானால்தான் என்றாவது ஒரு நாள் என்னுடைய காலையோ, கையையோ வெட்ட வேண்டியது ஏற்படும்போது என் மீது இரக்கம் காட்டுவார்' என்று அந்த அதிகாரி கூறினார்.

மூன்று கோப்பைகள்தான் அங்கே இருந்தன. தண்ணீர் குழம்பி நின்றபடியால், தேநீர் பலமானதாய் இருக்கிறதா, அல்லது லேசானதாய் இருக்கிறதா என்பது தெரியவில்லை. அந்த சாமோவார் ஆறு கோப்பை தண்ணீர்தான் கொள்ளும். ஆனால், அந்த மேரி ஹெண்ட்ரிகாவ்னாவின் குட்டையான, அதிக சுத்தமில்லாத நகங்களைக் கொண்ட அந்த புஷ்டியான சிறிய கைகளிலிருந்து, அந்த தேநீர் கோப்பைகளை உத்தியோக அந்தஸ்து பிரகாரம் அதிகாரிகள் பெற்றுக்கொள்ளுவது, அவர்களுக்கு மகிழ்ச்சியாய் இருந்தது. அந்த

அதிகாரிகள் எல்லாருமே அன்று மாலை அவளோடு உண்மையில் காதல் கொண்டிருப்பதாகவே தோன்றினார்கள். அந்தத் தடுப்பிற்குப் பின்னால் சீட்டு விளையாடிக்கொண்டிருந்தவர்கள் கூட, அங்கே மேரி ஹெண்ட்ரிகாவ்னாவிடம் சரசம் செய்யும் பொதுவான சூழ்நிலைக்கு இணங்கி, தங்கள் சீட்டு விளையாட்டை விட்டுவிட்டு அந்த சாமோவாருக்குப் பக்கத்தில் வந்தார்கள். அந்த புத்திசாலிகளான மரியாதையுள்ள வாலிபர்கள் தன்னைச் சூழ்ந்து நிற்பதைக் கண்டு அவளுடைய முகம் திருப்தியால் ஒளி வீசியது. அதை அவள் மறைக்க முயன்றும் முடியவில்லை. அவளுக்குப் பக்கத்தில் தூங்கிக்கொண்டிருந்த அவளுடைய கணவர் தூக்கத்தில் அசையும் போதெல்லாம், ஒவ்வொரு தடவையும் அவள் சிறிது பதறுவது போல் காணப்பட்டாள்.

ஒரே ஒரு கரண்டிதான் இருந்தது. மற்ற எல்லாவற்றையும்விட சர்க்கரை ஏராளமாய் இருந்தது. ஆனால் அது கரைவதற்கு நீண்ட நேரம் பிடித்தது. ஆகவே, ஒவ்வொருவருக்கும் மேரி ஹெண்ட்ரிகாவ்னாவின் சர்க்கரை கரையும்படி கலக்கிக் கொடுக்கவேண்டும் என்று தீர்மானம் ஆயிற்று. ராஸ்டோவ் தமது கோப்பையை வாங்கிய பின்பு அதில் சிறிது ரம் மதுவைக் கலந்து அதைக் கலக்கிக் கொடுக்கும்படி மேரி ஹெண்ட்ரிகாவ்னாவிடம் கேட்டார்.

'சர்க்கரை இல்லாமலா நீர் அருந்தப் போகிறீர்?' என்று புன்சிரிப்போடு அவள் கேட்டாள். அவள் சொல்லுகிற ஒவ்வொன்றும், மற்றவர்கள் சொல்லுகிற ஒவ்வொன்றும் வேடிக்கையாய் இருப்பது போலவும், அவற்றிற்கெல்லாம் இரட்டை அர்த்தம் இருப்பது போலவும் அவள் புன்சிரிப்பு காட்டியது.

'எனக்கு வேண்டியது சர்க்கரை அல்ல; உன்னுடைய சிறிய கையினால் என்னுடைய தேநீரைக் கலக்க வேண்டும் என்பது ஒன்று தான் எனக்குத் தேவை.'

மேரி ஹெண்ட்ரிவ்கானா அதற்கு சம்மதித்து கரண்டியைத் தேடினாள். யாரோ ஒருவர் அந்தக் கரண்டியைத் தூக்கிக் கொண்டார்.

'உனது விரலை உபயோகிக்கலாம், மேரி ஹெண்ட்ரிகாவ்னா. அது இன்னமும் இனிமையாய் இருக்கும்' என்று ராஸ்டோவ் சொன்னார்.

'ரொம்ப சூடாய் இருக்கிறதே' என்று மகிழ்ச்சியினால் நாணி முகம் சிவந்து அவள் பதிலளித்தாள்.

ஒரு வாளி நிறைய இருந்த தண்ணீரில் சில துளிகள் ரம் மதுவை விட்டு, அதை மேரி ஹெண்ட்ரிகாவ்னாவிடம் கொண்டு வந்து, அவளுடைய விரலால் அதைக் கலக்கும்படி இலைன் கேட்டார்.

'இது தான் என்னுடைய கோப்பை. உன்னுடைய விரலை அதில் முக்கினால் போதும். நான் எல்லாவற்றையும் குடித்து விடுவேன்' என்று அவர் சொன்னார்.

சாமோவார் தேநீர் பாத்திரத்தை அவர்கள் காலி செய்த பின்பு ராஸ்டோவ் சீட்டுக் கட்டை எடுத்துக்கொண்டு வந்தார். 'ராஜாக்கள்' என்ற சீட்டு விளையாட்டை, மேரி ஹெண்ட்ரிகாவ்னாவுடன் விளையாட வேண்டுமென்று அவர் சொன்னார். அவளுடன் யார் விளையாடுவது என்பதை சீட்டுப் போட்டுத் தீர்மானிக்க வேண்டும் என்றும் சொன்னார். இந்த விளையாட்டில் யார் வெற்றிபெற்று ராஜாவாகினாரோ, அவருக்கு மேரி ஹெண்ட்ரிகாவ்னாவின் கையை முத்தமிட உரிமையுண்டு என்றும், யார் தோற்கிறாரோ அவர் சாமோவார் பாத்திரத்தில் நிரப்பி, மறுபடியும் அதைச் சூடாக்கி டாக்டர் விழிக்கும் போது அவருக்காகத் தயாராய் வைத்திருக்கவேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

'நல்லது, ஒருவேளை மேரி ஹெண்ட்ரிகாவ்னாவே ராஜாவாக வந்துவிட்டால் என்ன செய்வது?' என்று இலைன் கேட்டார்.

'இப்பொழுதுள்ள நிலைமையில் அவள்தான் ராணி. அவளுடைய வார்த்தைதான் சட்டம்.'

அவர்கள் விளையாட ஆரம்பித்தார்களோ இல்லையோ, திடீரென்று டாக்டரின் முடி கலைந்த தலை, மேரி ஹெண்ட்ரிகாவ்னாவுக்குப் பின்னாலிருந்து தோன்றியது. அவர் சிறிது நேரமாகவே விழித்துக்கொண்டு அங்கு நடந்த பேச்சுக்களை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார் அவையெல்லாம் நேரப் போக்காகவோ, வேடிக்கையாகவோ அவருக்குத் தோன்றவில்லை என்று தெரிந்தது. அவருடைய முகம் சோகமாகவும் சோர்வாகவும் இருந்தது. அங்கிருந்த அதிகாரிகளுக்கு வணக்கம் தெரிவிக்காமல் தம்மைச் சொறிந்து கொண்டு, தாம் போகவிடாமல் வழி மறித்து இருக்கும் அவர்களை வழி விடும்படி கேட்டார். அவர் அந்த அறையை விட்டுப் போனதும் எல்லா அதிகாரிகளும் பலமாய் சிரித்தார்கள். தனது கண்களில் நீர் நிறைகிற வரையில் மேரி ஹெண்ட்ரிகாவ்னா நாணி முகம் சிவந்தபடியால், அவள் இன்னும் கவர்ச்சிகரமாய் இருப்பதாக அவர்களுக்குத் தோன்றியது. முற்றத்திலிருந்த டாக்டர் திரும்பி வந்தார். (முன் மாதிரி அவ்வளவு மகிழ்ச்சியோடு சிரிப்பதை அவள் நிறுத்திவிட்டாள். தனக்குக்

கொடுக்கப் போகிற தண்டனைக்காக பீதியோடு காத்துக் கொண்டிருப்பது போல அவள் அவரை நோக்கினாள்.) மழை நின்றுவிட்டதென்றும், அவர்களுடைய மூடு வண்டிக்குப் போய் அவர்கள் தூங்க வேண்டுமென்றும், இல்லையானால் அந்த வண்டியிலுள்ள ஒவ்வொன்றும் திருட்டுப் போய்விடுமென்றும் டாக்டர் சொன்னார்.

'நான் ஒரு சேவகனை அனுப்புகிறேன்... இரண்டு பேரை அனுப்புகிறேன். எப்பேர்ப்பட்ட சிறந்த யோசனை, டாக்டர்!' என்று ராஸ்டோவ் சொன்னார்.

'நானே அதற்கு பாரா கொடுத்துக்கொண்டிருக்கிறேன்' என்று இலைன் சொன்னார்.

'இல்லை, கனவான்களே, நீங்கள் ஒழுங்காகத் தூங்குகிறீர்கள். ஆனால், நான் இரண்டு இரவுகளாகத் தூங்கவில்லை' என்று டாக்டர் பதில் அளித்துவிட்டு, தமது மனைவியின் பக்கத்தில் முகத்தைத் தூக்கி உட்கார்ந்துகொண்டு, அந்த சீட்டாட்டம் முடிவதற்காகக் காத்திருந்தார்.

அவர் தமது மனைவியைப் பார்த்து முகம் சுளிக்கும்போது அவருடைய முகம் இருண்டு விளங்குவதைக் கண்ட அந்த அதிகாரிகள் இன்னும் அதிகமாக மகிழ்ச்சி கொண்டார்கள். அவர்களில் சிலரால் தங்கள் சிரிப்பை அடக்க முடியவில்லை. அதனால் தாங்கள் சிரிப்பதற்கு ஏதாவது காரணத்தைக் கண்டு பிடித்தார்கள். தமது மனைவியைத் தம்முடன் அழைத்துக்கொண்டு, அந்த மூடு வண்டிக்குப் போய் அவர்கள் படுத்துக் கொண்டார்கள். அதன் பின்னால், அந்த சத்திரத்தில் இருந்த அதிகாரிகள் நனைந்த மேல் சட்டைகளால் தங்களை டிக்கொண்டு கீழே படுத்தார்கள். ஆனால், அவர்கள் வெகு நேரம்வரை தூங்கவில்லை. டாக்டருடைய மனக் குழப்பத்தையும், அவருடைய மனைவியின் மகிழ்ச்சியும் பற்றி ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டார்கள். சிலர் முற்றத்திற்கு ஓடி அங்கிருந்து திரும்பி வந்து, அந்த மூடு வண்டிக்குள் என்ன நடக்கிறது என்பதை சொல்லிக்கொண்டிருந்தார்கள். தமது தலையை டிக்கொண்டு தூங்குவதற்காக பல தடவைகள் ராஸ்டோவ் முயற்சி செய்தார். ஆனால், அந்த பேச்சுக்களில் ஏதாவது ஒரு வார்த்தை திடீரென்று அவரைக் கிளப்பிவிடும். மீண்டும் உரையாடல்கள் காரணமில்லாத, மகிழ்ச்சியான, குழந்தைத் தனமான சிரிப்புகளோடு ஆரம்பமாய் விடும்.

# 9

## 14

இரவு சுமார் மூன்று மணியாகிவிட்டது. இன்னும் ஒருவரும் தூங்கவில்லை. அச்சமயம் படை வீட்டு அதிகாரி அங்கே வந்து ஆஸ்ட்ரோவ்னா என்ற சிறிய நகரத்திற்கு அவர்கள் கிளம்ப வேண்டும் என்ற உத்தரவைக் கொடுத்தார்.

இன்னும் சிரித்துக்கொண்டும், பேசிக் கொண்டும் அவசரமாய் புறப்படுவதற்காக அதிகாரிகள் தயார் செய்து கொண்டிருந்தார்கள். சாமோவாரில் கலங்கிய தண்ணீர் விட்டு கொதிக்கவைத்தார்கள். தேநீருக்காக எதிர்பார்த்திராமல் ராஸ்டோவ் தமது படைப்பிரிவுக்குப் போனார். விடிந்து கொண்டிருந்தது. மழை நின்றுவிட்டது. மேகங்கள் கலைந்து கொண்டிருந்தன. உடைகள் இன்னமும் ஈரமாய் இருந்தபடியால், குளிராகவும் ஓதமாகவும் இருந்தன. விடி நேரத்தில் உள்ள வெளிச்சத்தில் அந்த சத்திரத்தைவிட்டு அவர்கள் புறப்பட்டபோது, ராஸ்டோவும் இலைனும் அந்த டாக்டரின் வண்டி மீதுள்ள நனைந்து மின்னிக்கொண்டிருந்த, அந்தத் தோலினால் ஆகிய கூண்டிற்குக் கீழாக நோக்கினார்கள். போர்வைக்கு வெளியே டாக்டரின் கால்கள் நீண்டு கொண்டிருந்தன. வண்டியின் மத்தியில் அவருடைய மனைவியின் இரவு - தொப்பி தெரிந்து கொண்டிருந்தது. தூக்கத்தில் அவள் மூச்சு விட்டுக்கொண்டிருந்தது நன்றாய் கேட்டது.

'அவள் உண்மையிலேயே ஒரு அருமையான குஞ்சு' என்று ராஸ்டோவ் தம் பின்னால் வந்து கொண்டிருந்த இலைனிடம் கூறினார்.

'ஒரு கவர்ச்சிகரமான பெண்' என்று ஒரு 16 வயது பையனுக் குள்ள உறுதியோடு இலைன் பதில் சொன்னார்.

அரை மணிக்குப் பின்னால் ரஸ்தாவில் அந்தக் குதிரைப் படை வரிசையாக நின்றது. குதிரைகள் மீது ஏறும்படி உத்தரவு கொடுக்கப்பட்டது. சிப்பாய்கள் சிலுவைக் குறி காட்டிக்கொண்டு குதிரை மீது அமர்ந்தார்கள். அவர்களுக்கு முன்பாக ராஸ்டோவ் தமது குதிரை மீது வந்து நின்று, 'முன்னால் போங்கள்' என்று உத்தரவிட்டார். உடனே குதிரை வீரர்கள் தங்களுடைய உடை வாள்கள் ஒலிக்க, மெதுவான பேச்சுக் குரல்கள் கிளம்ப, தங்கள் குதிரைகளின் குளம்புகள் சகதிகளில் நடந்து செல்ல, வரிசைக்கு நாலுபேர் வீதம் அந்த அகலமான ரஸ்தாவின் முன்னேறினார்கள். அந்த ரஸ்தாவின் இரு பக்கங்களிலும் பூவரசு மரங்கள் நின்றன.

முன்னால் சென்ற காலாட்படைக்கும் பீரங்கிப் படைக்கும் பின்னால், இந்த குதிரைப் படை சென்று கொண்டிருந்தது.

சிதறி நின்ற நீல மேகங்கள் கிழக்கு திசையில் சிவப்பாய்த் தோன்றி, காற்றினால் விரட்டியடிக்கப்பட்டு ஓடிக்கொண்டிருந்தன. வரவர வெளிச்சம் அதிகமாகிக்கொண்டு வந்தது. கிராமாந்திரங்களில் ரஸ்தாக்களின் இருபுறமும் வளர்ந்து நிற்கும் அந்த சுருளையான புற்கள் இப்பொழுது தெளிவாய்த் தெரிந்தன. அவை இன்னமும் இரவில் பெய்த மழையினால் ஈரமாய் இருந்தன. அந்த வளைந்து நின்ற பூவரசு மரக் கிளைகளும் ஈரமாய் இருந்தன. அவை காற்றில் ஆடும்போது, பிரகாசமான தண்ணீர்த் துளிகளைக் கீழே சிதறி வந்தன. வரவர சிப்பாய்களின் முகங்களும் தெளிவாய்த் தெரிந்து கொண்டுவந்தன. எப்பொழுதும் தம் பின்னாலேயே வந்து கொண்டிருக்கும் இலைனோடு, ராஸ்டோவ், இருபுறங்களிலும் பூவரசு மரங்களைக்கொண்ட அந்த ரஸ்தாவில், ஒரு ஓரமாக சவாரி செய்து கொண்டிருந்தார். படையெடுப்பு காலங்களில், பட்டாளத்துக் குதிரை மீது ராஸ்டோவ் சவாரி செய்வதில்லை; ஒரு கோசாக் குதிரை மீதுதான் சவாரி செய்ய அவர் விருப்பம் கொள்ளுவார். குதிரைகளின் தரங்களை நன்றாய் அறிந்தவராகவும் வேட்டைக்காரராகவும் அவர் இருப்பதால், தமக்காக ஒருபெரிய குதிரையை சமீபத்தில் வாங்கினார். அது ஒரு சிறந்த தைரியமான டானெட் குதிரை. கருஞ்சிவப்பு நிறம் கொண்டது. பிடரியும் வாலும் வெள்ளையாய் இருக்கும். அவர் அதன் மீது சவாரி போகும்போது யாரும் அவருடைய சவாரி வேகத்தை மிஞ்சிவிட முடியாது. இந்த குதிரை மீது சவாரி செய்வது அவருக்கு ஒரு ஆனந்தம். அவர் அந்தக் குதிரையைப் பற்றியும், காலை நேரத்தைப் பற்றியும், டாக்டரின் மனைவியைப்பற்றியும் நினைத்துக்கொண்டு போனாரே, ஒழிய, வரப்போகும் ஆபத்தைப்பற்றி ஒரு தடவைகூட நினைக்க வில்லை.

முன்னால் எல்லாம் யுத்த களத்திற்குப் போகும்போது ராஸ்டோவ் பீதி கொள்ளுவது உண்டு. இப்பொழுது கொஞ்சம்கூட அவருக்கு பயமில்லை. துப்பாக்கி வெடிகளுக்கு அடியிலிருந்து அவர் பழகிப்போனதால், அவர் பயமற்றவராய் இருக்கிறார் என்று சொல்லவில்லை (அபாயங்களை ஒருவர் பழகிக்கொள்ள முடியாது); அபாயம் நேரும்போது தமது சிந்தனைகளை எவ்வாறு சமாளிக்க வேண்டும் என்பதை அவர் இப்பொழுது அறிந்து கொண்டிருக்கிற படியால், அவருக்கு பயம் தோன்றவில்லை. யுத்த களத்தில் நிற்கும் போது, தமக்கு எதிராக உள்ள அபாயத்தைத் தவிர, மற்ற விஷயங்களைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருப்பதற்கு அவர்

இப்பொழுது பழகிக்கொண்டுவிட்டார். ராணுவ சேவையின் ஆரம்பத்தில் அவர் எவ்வளவோ கடுமையாக முயற்சி செய்தும், தமது கோழைத் தனத்திற்காக எவ்வளவோ தம்மைக் கண்டித்துக் கொண்டிருந்தும் கூட, இந்த நிலைமையை அவரால் பெறமுடியவில்லை. காலக்கிரமத்தில் அது தானாகவே வந்து சேர்ந்தது. இப்பொழுது அந்த பூவரசு மரங்களுக்கு அடியில் இலைனோடு சவாரி செய்துகொண்டு போகும் போது, இடையிடையே அந்த மரக் கொம்புகளிலிருந்து தமது கைக்கு எட்டிய இலைகளைக் கிள்ளுவார். சில வேளைகளில் தமது காலால் தமது குதிரையின் பக்கவாட்டைத் தொடுவார். சில சமயங்களில் தமது சுங்கானைப் பிடித்து முடிந்த பின்பு, திரும்பிப் பாராமலே, தமக்குப் பின்னால் சவாரி வந்து கொண்டிருக்கும் ஒரு குதிரை வீரரிடம் அதைக் கொடுப்பார். இவற்றையெல்லாம் தாம் ஏதோ ஒரு தமாஷ் சவாரி செய்வதைப்போன்ற சாந்தமும் கவலையின்மையும் கொண்ட தோற்றங்களோடு செய்துவந்தார். இலைன் மிகுந்த பரபரப்புகொண்டு நிறையப் பேசிவந்தார். அவருடைய பரபரப்பான முகத்தை இரக்கத்தோடு ராஸ்டோவ் நோக்கினார். அந்த அதிகாரி பயங்கரத்தையும் மரணத்தையும் எதிர்பார்த்து துன்பப்பட்டுக்கொண்டிருப்பதை தமது அனுபவத்திலிருந்து அவர் அறிவார். காலம் ஒன்றுதான் அவருக்கு உதவி செய்ய முடியும் என்பதையும் அவர் அறிவார்.

மேகங்களின் இடை வழியாக சூரியன் தோன்ற ஆரம்பித்ததும், அந்த புயலுக்குப் பின்னால் ஏற்பட்டிருந்த வசந்தகால காலை நேர அழகைக் கெடுக்கத் துணியாததுபோல காற்று நின்றது. தண்ணீர்த் துளிகள் இன்னமும் விழுந்து கொண்டிருந்தன. ஆனால் நேராக விழுந்தன. எல்லாம் அசையாமல் அப்படியே நின்றன. அடிவானத்தில் தோன்றிய அந்த முழு சூரியனும் ஒரு நீளமான, ஒடுங்கிய மேகத்தில் மறைந்துவிட்டது. சில நிமிஷங்களுக்குப் பின்னால், முன்னைவிட அதிக பிரகாசத்தோடு, மேகங்களுக்குப் பின்னால் அது தோன்றி மேகங்களின் ஓரங்களைத் தகித்துக் கொண்டிருந்தது. ஒவ்வொன்றும் பிரகாசத்தோடும் ஜொலிப் போடும் காணப்பட்டது. அந்த வெளிச்சத்தோடு அதற்கு பதில் கூறுவதைப்போல, அவர்களுக்கு முன்னால் பீரங்கிக் குண்டுகளின் சப்தம் வர ஆரம்பித்தது.

அந்த பீரங்கி சுடுவது எவ்வளவு தூரத்தில் இருக்கும் என்பதை யோசித்து ராஸ்டோவ் முடிவு செய்வதற்கு முன்பாக, கோமகன் ஆஸ்டர்மேன்-டால்ஸ்டாயினுடைய உதவியாளர்-வைடெப்ஸ்க்

என்ற இடத்திலிருந்து வேகமாக சவாரி வந்தார். அந்த ரஸ்தாவில் பெரும் நடையில் முன்னேறும்படி அவர் உத்தரவு கொண்டு வந்து கொடுத்தார்.

அந்த குதிரைப் படை தங்களுக்கு முன்னால் சென்று கொண்டிருந்த காலாட் படையையும் பீரங்கிப் படையையும் (அவையும் இப்போது வேகமாகச் செல்ல ஆரம்பித்தன.) கடந்து, ஒரு குன்றின் கீழாக இறங்கி, அங்கிருந்த ஒரு காலியான கிராமத்தைக் கடந்து மீண்டும் மேலே ஏற ஆரம்பித்தது. குதிரைகள் நுரை கக்க ஆரம்பித்தன. வீரர்களின் முகங்கள் சிவப்பாயின.

'நில்லுங்கள், தர வரிசைப்படி ஒழுங்காய் நில்லுங்கள்' என்று அந்தப் பட்டாளத்தின் கமாண்டருடைய உத்தரவு முன்னால் வெகு தூரத்தில் கேட்டது. 'இடது புறமாக முன்னேறுங்கள். நடந்து போங்கள்' என்ற உத்தரவு முன்பாகக் கேட்டது.

குதிரை வீரர்கள், நமது அணிவகுப்பின் இடது பக்கவாட்டில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த துருப்புகளைக் கடந்து, முன் அணியில் நிற்கும் நமது உலான்களுக்குப் பின்பாக நின்றார்கள். வலது பக்கத்தில் நமது காலாட் படை அடர்ந்து நெருங்கி நின்றார்கள். அவர்கள்தான் ரிசர்வ் படைகள். குன்றின் மேலாக, அந்த அடிவானத்திற்குப் பக்கத்தில் நமது பீரங்கிகள் தெரிந்தன. அந்த ஆச்சரியமான, தெளிவான கால நிலை சூரியனின் காலைக் கதிர்களால் பிரகாசமாய் வெளிச்சமிடப்பட்டபடியால், பீரங்கிகள் தெளிவாய் தோன்றின. முன்னால் ஒரு பள்ளத்தாக்கிற்கு அப்பால் எதிரிகளின் துருப்புகளும் பீரங்கிகளும் காணப்பட்டன. நமது முன்னணி ஏற்கெனவே யுத்தத்தில் இறங்கி விட்டது. அந்தப் பள்ளத்தாக்கில் எதிரிகளும் நமது துருப்புகளும் வேகமாக சுட்டுக் கொண்டிருப்பதைக் கேட்க முடிந்தது.

வெகு காலமாகக் கேட்காத இந்த சப்தங்களை ராஸ்டோவ் கேட்டதும், ஒரு களிப்பான சங்கீத ராகத்தைக் கேட்பதுபோல, அவருடைய உற்சாகம் வளர ஆரம்பித்தது. 'ட்ராப்-டா-டா-டாப்' என்ற அந்த குண்டுகளின் சப்தங்கள் சேர்ந்தோ, அல்லது ஒன்றன் பின் ஒன்றாகவோ கேட்டு வந்தன. மீண்டும் எல்லாம் அமைதியாய் இருந்தது. மறுபடியும் யாரோ ஒருவர் குண்டுகள் மீது நடந்து வெடிக்கச் செய்வதைப்போல சப்தங்கள் கேட்டன.

சுமார் ஒரு மணி நேரமாக அதே இடத்தில் குதிரைப் படை இருந்தது. ஒரு பீரங்கிச் சண்டை ஆரம்பமாயிற்று. கோமகன் ஆஸ்டர்மேன் தமது பரிவாரத்தோடு சவாரி வந்து, அந்த குதிரைப் படைக்குப் 'பின்னால் நிறுத்தினார். அந்தப் பட்டாளத்தின்

கமாண்டரோடு பேசிவிட்டு, பீரங்கிகள் இருந்த அந்தக் குன்றுக்கு சவாரி போனார்.

ஆஸ்டர்மேன் போன பின்பு, உலான்களுக்கு ஒரு உத்தரவு ஒலித்தது.

'ஒடுங்கி நில்லுங்கள்; தாக்குவதற்குத் தயாராகுங்கள்.'

முன்னால் நின்ற காலாட் படை அணியணியாகப் பிரிந்து நின்று, குதிரை வீரர்கள் போவதற்கு வழி விட்டது. உலான்கள் புறப்பட்டார்கள். அவர்களுடைய ஈட்டிகள் மீது பறந்துகொண்டிருந்த ஜெண்டாக்கள் படபடத்து ஆடின. கீழே இடது பக்கமாகக் காணப்பட்ட பிரஞ்சு குதிரைப் படையை நோக்கி குன்றின் கீழாக பெரும் நடையில் சவாரி போனார்கள்.

அந்த உலான்கள் குன்றிலிருந்து கீழே இறங்க ஆரம்பித்ததும், குன்றின் உச்சியில் உள்ள பீரங்கிப் படைக்கு ஆதரவாய் நிற்பதற்காக, குதிரைப் படையை மேலே அனுப்பினார்கள். உலான்கள் காலி செய்து விட்டுப் போன இடத்தில் அவர்கள் போய் நின்றதும், முன்னாலிருந்து 'உஸ்' என்ற சப்தத்தோடு ஊதலிட்டுக்கொண்டு துப்பாக்கிக் குண்டுகள் விரைந்து வந்தன. ஆனால் அவையெல்லாம் ஒருவர் மீதும் பாயாமல் கீழே விழுந்தன.

இந்த சப்தங்களை வெகு காலமாக ராஸ்டோவ் கேட்கவில்லை. அதனால் அவையெல்லாம் முந்தைய குண்டு சப்தங்களை விட அதிக மகிழ்ச்சியையும் உற்சாகத்தையும் கொடுத்தன. அவர் நிமிர்ந்து உட்கார்ந்து, அந்தக் குன்றுக்கு முன்னால் தோன்றிய யுத்த களத்தைப் பார்வையிட்டார். அந்த உலான்களின் நடவடிக்கைகளை அவருடைய முழு மனமும் பின்பற்றிப் பார்த்துக் கொண்டிருந்தது. பிரஞ்சு குதிரை வீரர்கள் மீது அவர்கள் பாய்ந்தார்கள். அங்கே புகைகளின் நடுவே ஏதோ குழப்பமாய் இருந்தது. ஐந்து நிமிஷங்களுக்குப் பின்னால், அவர்கள் மீண்டும் பாய்ச்சலில் திரும்பிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் முன்னால் நின்ற இடத்திற்கு வரவில்லை. இடது பக்கமாக வந்தார்கள். பழுப்பு நிறக் குதிரைகள் மீது ஆரஞ்சு வர்ண உடைகளில் அந்த உலான்கள் காணப்பட்டார்கள். அவர்களுக்கு இடையிலும், அவர்களுக்குப் பின்பாகவும், ஏராளமான கூட்டத்தில் சாம்பல் வர்ண குதிரைகள் மீது, நீற நிற உடையணிந்த பிரஞ்சு குதிரை வீரர்கள் காணப்பட்டார்கள்.

# 9

## 15

வேட்டைக்காரருக்குள்ள, தமது கூர்மையான கண்களால் ராஸ்டோவ் முதலில் பார்த்தார். அங்கு உலான்களை நீலச்சட்டை யணிந்த பிரஞ்சு குதிரை வீரர்கள் விரட்டிக் கொண்டு வருவதை அவர் கண்டார். உலான்கள் வரவர அலங்கோல மாக ஓடி வந்தார்கள். பிரஞ்சு குதிரை வீரர்கள் அவர்களைத் துரத்திக் கொண்டு வந்தார்கள். அந்தக் குன்றின் அடியில் மிகச் சிறிதாகக் காணப்பட்ட இவர்கள், இப்போது ஒருவரை யொருவர் தள்ளி முந்திக்கொண்டு, தங்களுடைய கைகளையும் உடைவாள்களையும் ஆகாயத்தில் வீசிக்கொண்டு வருவதை அவர் தெளிவாகக் கண்டார்.

வேட்டைகளில் தமக்கு முன்னால் நடப்பதை அவர் எப்படிப் பார்த்தாரோ, அதே மாதிரி இப்போது தமக்கு முன்னால் நடப்பதை ராஸ்டோவ் பார்த்தார். இச்சமயம் அந்தப் பிரஞ்சு குதிரை வீரர்களை நமது குதிரைப் பட்டாளம் உடனே தாக்கினால், அந்த பிரஞ்சுக் காரர்கள் எதிரில் நிற்க முடியாது என்பதையும், அவர்களைத் தாக்கவேண்டுமானால், இதுதான் சமயம் என்பதையும், இல்லையென்றால், அது காலம் கடந்ததாக ஆகிவிடும் என்பதையும் அவர் உள்ளுணர்ச்சியால் உணர்ந்தார். அவர் திரும்பிப் பார்த்தார். அவருக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த ஒரு கேப்டன், அவரைப் போலவே, தமது கண்களால் கீழே காணப்படும் குதிரைப் படைகளைக் குத்திட்டுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

‘ஆண்ட்ரூ செவாஸ்டியானிச், நாம் அவர்களை நசுக்கி விட முடியும் என்பது உமக்குத் தெரியும்...’

‘ஆமாம், ரொம்ப சிறந்த விஷயமாக இருக்கும். உண்மையில்...’ என்று அந்த கேப்டன் பதிலளித்தார்.

அவர் என்ன சொல்கிறார் என்பதைக்கூட கேட்கக் காத்திராமல், ராஸ்டோவ் தமது குதிரையைத் தட்டினார். குதிரைப் படையின் முன்பாகப் பாய்ச்சலில் போனார். அவர் அந்தக் குதிரைப் படைக்கு உத்தரவு கொடுத்து முடிவதற்கு முன்பாக, அவருடைய உணர்ச்சியை அறிந்து, அந்த முழு குதிரைப் பட்டாளமும் அவரைப் பின்தொடர்ந்தது. ராஸ்டோவுக்குக் கூட, எப்படி, ஏன் அதைச் செய்தார் என்பது தெரியாது. வேட்டையாடியபோது அவர் எம்மாதிரி யோசனையோ சிந்தனையோ செய்யாமல் நடந்து கொண்டாரோ, அதே மாதிரி இப்போதும் செய்தார். பிரஞ்சு குதிரை வீரர்கள் நெருங்கி வந்து கொண்டிருப்பதையும், அவர்கள்

முறையில்லாமல் தாறுமாறாக ஓடி வருவதையும் அவர் கவனித்தார். இந்த நிலைமையில் அவர்கள் மீது பாய்ந்தால், அவர்களால் தாக்குப் பிடிக்க முடியாது என்பதையும் அவர் அறிவார். இம்மாதிரி சமயத்தில்தான் தாங்கள் அவர்களைத் தாக்க வேண்டுமென்று இந்த சந்தர்ப்பத்தைக் கைவிட்டால் அது மீண்டும் வரப்போவதில்லை என்றும் அவர் நினைத்தார். துப்பாக்கிக் குண்டுகள் ஊதலிட்டுக் கொண்டும் ஊளையிட்டுக் கொண்டும் அவரைச் சுற்றிப் பறந்து பரபரப்பைக் கொடுத்தன. அவருடைய குதிரை முன்னால் போவதற்கு ஆவலோடு துடித்துக் கொண்டிருந்ததை அவரால் நிறுத்திப் பிடிக்க முடியவில்லை. அவர் தமது குதிரையைத் தட்டினார். தமது துருப்புகளுக்கு உத்தரவிட்டார். தமக்குப் பின்னால் அணி வரிசை பிரிந்து ஒரு வரிசையில் புறப்பட்ட தம்முடைய பட்டாளத்துக் குதிரைகளின் குளம்போசை கேட்டுக்கொண்டிருக்க, அவர் பூரணமான பெரு நடையில் குன்றிற்குக் கீழே அந்தப் பிரஞ்சு குதிரை வீரர்களை நோக்கி சவாரி விட்டார். அவர்கள் அந்தக் குன்றிற்கு அடியில் போய்ச் சேருவதற்கு முன்பாகவே, அவருடைய சவாரியின் வேகம் பாய்ச்சலாக மாறியது. நமது உலான்களும், அவர்களுக்குப் பின்னால் பாய்ச்சலில் வந்து கொண்டிருக்கும் பிரஞ்சு குதிரை வீரர்களும் சமீபத்தில் நெருங்க நெருங்க, அந்தக் குதிரைப் பட்டாளத்தின் வேகம் அதிகரித்தது. இப்போது பிரஞ்சு குதிரை வீரர்கள் சமீபத்தில் வந்து விட்டார்கள். நம்முடைய குதிரைப் பட்டாளத்தை அவர்கள் பார்த்ததும், அவர்களில் முன்னால் வந்து கொண்டிருந்தவர்கள் திரும்பினார்கள். பின்னால் உள்ளவர்கள் குதிரைகளை நிறுத்தினார்கள். அந்த ஓநாய் வந்து கொண்டிருந்த பாதையின் குறுக்காக அவர் எம்மாதிரி உணர்ச்சியோடு பாய்ச்சலில் சவாரி விட்டாரோ, அதே மாதிரி ராஸ்டோவ் இப்போது முறையில்லாமல் ஓடி வந்துகொண்டிருந்த அந்த பிரஞ்சு குதிரை வீரர்களை வழி மறிக்கும் விதத்தில் அவர் பாய்ச்சலில் போனார். ஒரு உலான் நின்றான். இன்னொருவன், தன்னைக் கீழே தள்ளி விடக் கூடாதே என்பதற்காக, கீழே படுத்துக் கொண்டான். சவாரியில்லாத ஒரு குதிரை, குதிரைப் படைக்கு மத்தியில் விழுந்தது. இச்சமயம் எல்லாப் பிரஞ்சு குதிரை வீரர்களும் பின்னோக்கி பாய்ச்சலில் திரும்பினார்கள். ஆனால் ராஸ்டோவ் சாம்பல் வர்ண குதிரை மீதிருந்த ஒரு பிரஞ்சுக்காரனைக் குறிவைத்து, அவனுக்குப் பின்னால் வேகமாகச் சவாரி போனார். அப்படிப் போகும்பொழுது மத்தியில் ஒரு புதர் வந்தது. அவருடைய வீரமான குதிரை அந்தப் புதரைத் தாண்டியது. தாண்டிய வேகத்தை தமது சேணத்தில் சமாளிப்பதற்கு முன்பாக, தாம் குறிவைத்த எதிரிக்கு சமீபத்தில் வந்துவிட்டதை

உணர்ந்தார். அந்தப் பிரஞ்சுக்காரர் யூனிபாரத்தில் இருந்ததால், அவர் ஒரு அதிகாரி என்று தோன்றியது. தம்முடைய உடைவாளினால் குதிரையைத் தட்டித் தம்முடைய சாம்பல் வர்ண குதிரை மீது குனிந்து கொண்டு, அதை வேகமாகப் போகும்படி விரட்டினார். அடுத்த வினாடி ராஸ்டோவின் குதிரை அந்த பிரஞ்சு அதிகாரியினுடைய குதிரையின் பின் பக்கத்தைத் தனது மார்பால் தாக்கி, அதைக் கீழே விழ தட்டுவது போலத் தள்ளியது. அதே சமயத்தில் காரணமென்ன என்பதை அறியாமல், ராஸ்டோவ் தமது உடைவாளை உயர்த்தி, அந்த பிரஞ்சுக்காரன் மீது வெட்டினார்.

இதை அவர் செய்து முடித்ததும் ராஸ்டோவின் படபடப்பெல்லாம் மறைந்து போயிற்று. அந்த அதிகாரி கீழே விழுந்தார். அந்த வாள் வெட்டினால் அவர் விழவில்லை; அந்த வெட்டுதலால் முழங்கைக்கு மேலாக லேசாகக் கையில் காயம்பட்டிருந்தது. பயத்தினாலும், அவருடைய குதிரைக்கு ஏற்பட்ட அதிர்ச்சியினாலும், அவர் கீழே விழுந்தார். ராஸ்டோவ் தமது குதிரையின் கடிவாளத்தைப் பிடித்து இழுத்து நிறுத்தினார். தாம் முறியடித்த அந்த எதிரியின் கண்களைப் பார்க்க விரும்பினார். அந்தப் பிரஞ்சு குதிரைப்படை அதிகாரி, ஒரு கால் தரையிலும் மற்றொரு கால் சேணத்திலுமாக மாட்டிக்கொண்டு தத்திக்கொண்டிருந்தார். ஒவ்வொரு நிமிஷமும், மற்றொரு அடியை ராஸ்டோவிடமிருந்து எதிர்பார்ப்பதைப்போல, அவர் கண்களை இடுக்கிக்கொண்டு, பயத்தினால் உடல் குறுகி ராஸ்டோவைப் பார்த்தார். அவருடைய வெளிறிய, சேற்றினால் அடிபட்ட முகம், இளமையாகவும் அழகாகவும், நாடியில் ஒரு குழிவோடும், மெல்லிய நீல நிறக் கண்களோடும் தோன்றியது. அவருடைய முகத்தைப் பார்த்தால், யுத்த களத்திற்குக் கொஞ்சம்கூடப் பொருத்தமில்லாதவராகவும், ஒரு எதிரியின் முகம் என்று சொல்ல முடியாததாகவும் விளங்கியது. அவருடைய முகம் சாதாரணமாக சௌஜன்யமாகத் தோன்றியது. அவரை என்னசெய்வது என்று ராஸ்டோவ் தீர்மானிப்பதற்கு முன்பாக, அந்த அதிகாரி 'நான் சரண் அடைந்துவிட்டேன்' என்று கதறினார். அவர் அந்த அங்கபடியில் அகப்பட்ட தமது காலை வெளியே எடுப்பதற்காக வேகமாக வீணாக முயற்சி செய்தார். ராஸ்டோவின் முகத்தின் மீது பதித்திருந்த அவருடைய பீதியுற்ற நீல நிறக் கண்களை அவர் எடுக்கவில்லை. சில ருஷ்யக் குதிரை வீரர்கள் அங்கே பாய்ச்சலில் வந்து, அங்கபடியிலிருந்து அவருடைய காலை எடுத்து விட்டு, அவரை சேணத்தில் அமருவதற்கு உதவி செய்தார்கள். எல்லா பாகங்களிலும் ருஷ்ய குதிரை வீரர்கள் பிரஞ்சு குதிரை வீரர்களுடன் போரில்

மும்முரமாய் ஈடுபட்டிருந்தார்கள். ஒருவர் காயமடைந்து போனார். அவருடைய முகத்திலிருந்து ரத்தம் சொட்டிக்கொண்டிருந்த போதிலும், தமது குதிரையை விட்டுக் கொடுக்க விரும்பவில்லை. மற்றொருவர், ஒரு ருஷ்ய குதிரை வீரருக்குப் பின்னால் தொத்திக் கொண்டு, அவரைக் கட்டிக் கொண்டார். மூன்றாவது ஆசாமி, குதிரை மீது ஏறுவதற்கு ஒரு ருஷ்ய குதிரை வீரர் உதவி செய்துகொண்டிருந்தார். எதிரிலே பிரஞ்சுக் காலாட்படையினர் தாங்கள் ஓடும்போதே சுட்டுக்கொண்டிருந்தார்கள். ருஷ்ய குதிரைப் படைக்காரர்கள், கைதிகளைப் பிடித்துக்கொண்டு வேகமாகத் திரும்பி வந்த போதிலும், தமது மனதில் ஒரு இனிமையில்லாத சோர்வு இருப்பதை உணர்ந்தார். ஏதோ திட்டமாய்த் தெரியாத, குழப்பமான, இன்னதென்று சொல்ல முடியாத ஒரு உணர்ச்சி, அந்த அதிகாரியைப் பிடித்ததனாலும், அந்த அதிகாரியை அவர் வெட்டியதனாலும் அது ஏற்பட்டது.

கோமகன் ஆஸ்டர்மேன்-டால்ஸ்டாய் திரும்பி வருகிற குதிரை வீரர்களைச் சந்தித்து, ராஸ்டோவை வரவழைத்து அவருக்கு நன்றி தெரிவித்தார். அவருடைய வீரச் செய்கைக்காக அவரைப் பற்றி சக்கரவர்த்திக்கு யாதாஸ்து அனுப்பி, அவருக்கு செயின்ட் ஜார்ஜ் பதக்கத்தைக் கொடுப்பதற்குச் சிபாரிசு செய்யப்போவதாகச் சொன்னார். கோமகன் ஆஸ்டர்மேன் தம்மைக் கூப்பிட்டு அனுப்பியதும், வேறு ஒரு நினைப்பு அவருக்குத் தோன்றியது. அதாவது, உத்தரவு இல்லாமல் எதிரிகளைத் தாக்கும்படித் தாம் துருப்புகளை ஏவியதால், அம்மாதிரிக் கட்டுப்பாட்டை மீறி நடந்ததற்காக தம்மைத் தண்டிக்கக் கமாண்டர் கூப்பிட்டு அனுப்பியிருக்கலாம் என்று அவர் நினைத்தார். ஆகவே, ராஸ்டோவைப் புகழ்ச்சியாக ஆஸ்டர்மேன் பேசியதைக் கேட்டதும், அவருக்கு ஒரு பதக்கம் கொடுக்கப் போவதாகச் சொன்னதைக் கேட்டதும், அவருக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. இருந்தாலும், அந்த தார்மீகமான வெறுப்பினால் ஏற்பட்ட ஒரு மகிழ்ச்சிக் குறைவு அவருக்கு இருந்து கொண்டிருந்தது. 'என்னதான் என் மனதை வருத்திக்கொண்டிருக்கிறது?' என்று அவர் ஜெனரலிடமிருந்து திரும்பி வரும்போது தம்மையே கேட்டுக்கொண்டார். 'இலைன் விஷயமாக இருக்கலாமா?' இல்லை, அவர் பந்தோபஸ்தாய் இருக்கிறார். நான் எந்த விதத்திலாவது அகௌரவமாய் நடந்துகொண்டேனா? இல்லை, அப்படி ஒன்றும் நடக்கவில்லை' வேறு ஏதோ ஒன்று, பச்சாதாபப்படுவதைப்போல ஒன்று, அவருடைய மனதை வருத்திக்கொண்டு வந்தது. 'ஆமாம், ஓ ஆமாம், அந்த நாடிக்

குழிவைக் கொண்டிருந்த பிரஞ்சு அதிகாரி! நான் அவரை வெட்டுவதற்கு என் கையை உயர்த்தியபோது, என் கை தானாகக் கொஞ்சம் திகைத்து எப்படி நின்றது என்பது, இப்போது ஞாபகத்துக்கு வருகிறது.'

கைதிகளைக் கொண்டு போவதை ராஸ்டோவ் பார்த்தார். அவர்களுக்குப் பின்னால் பாய்ச்சலில் சென்று, நாடியில் குழிவுள்ள அந்த பிரஞ்சுக்காரரைப் பார்க்க விரும்பினார். அவர் தம்முடைய அயல் நாட்டு யூனிபாரத்தில் இருந்தார். அவர் ஒரு குதிரை மீது அமர்ந்து தம்மைச் சுற்றி ஆவலோடு பார்த்துக்கொண்டிருந்தார். அவருடைய கையில் ஏற்பட்ட அந்த உடைவாள் காயத்தை ஒரு காயம் என்று சொல்ல முடியாது. ஒரு பாசாங்குப் புன்னகையோடு ராஸ்டோவை அவர் நோக்கி, அவருக்கு வாழ்த்துக் கூறுவதுபோல கையை ஆட்டினார். ராஸ்டோவுக்கு, இன்னும் அதே மாதிரி இனம் தெரியாத உணர்ச்சி, தாம் அவமானம் அடைவதுபோலத் தோன்றியது.

அன்றைய தினம் பூராவும், மறு நாளும், ராஸ்டோவ் கோபமோ மந்தமோ இல்லாமல், மௌனமாகவும், சிந்தனையோடும் எதையோ யோசித்துக்கொண்டிருந்ததை அவருடைய நண்பர்களும் தோழர்களும் கவனித்தார்கள். அவர் மகிழ்ச்சியில்லாமல் மதுவைக் குடித்தார். அவர் தனியாய் இருக்க முயற்சி செய்தார். அவருடைய மனதில் எதையோ திரும்பத் திரும்ப் யோசனை செய்து கொண்டிருந்தார்.

தம்முடைய இந்த சிறந்த போர்முனை வெற்றியை எப்போதும் ராஸ்டோவ் நினைத்துக்கொண்டிருந்தார். அந்த வெற்றியினால் அவருக்கு செயின்ட் ஜார்ஜ் பதக்கம் கிடைத்ததைக் கண்டு அவர் மலைத்துப் போனார். அது மட்டுமல்ல, அவர் ஒரு பெரிய தீரர் என்ற புகழையும் தேடிக்கொடுத்தது. இதை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆகவே, என்னைவிட மற்றவர்கள் இன்னும் அதிகமாகப் பயப்படுகிறவர்களாய் இருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. ஆகவே வீரம் என்று அழைக்கப்படுவதெல்லாம் இதுதான் போலிருகிறது! நான் அந்தக் காரியத்தை என்னுடைய நாட்டிற்காக செய்தேனோ? அந்த நாடியில் குழிவையும் நீல நிறக் கண்களையும் உள்ள அந்த ஆசாமியை, எப்படி நான் குறைகூற முடியும்? பாவம், அவர் எவ்வளவு பயந்து போனார்! நான் அவரைக் கொன்று விடுவேன் என்று அவர் நினைத்தார். நான் எதற்காக அவரைக் கொல்ல வேண்டும்? என் கை நடுங்கியது. மேலும் ஒரு செயின்ட் ஜார்ஜ் பதக்கத்தை எனக்குக் கொடுத்திருக்கிறார்கள்!

இவையெல்லாம் என்னவென்பது எனக்குப் புரியவில்லை என்று அவர் நினைத்தார்.

இந்தப் பிரச்னைகளை நிக்கலஸ் இன்னமும் சிந்தித்துக் கொண்டிருந்தபோது, அவருக்கு ஏற்பட்டிருந்த புதிருக்கு ஒரு தெளிவான முடிவைக் காண முடியாமல் அவரிருந்தபோது, அந்த ராணுவ சேவையில் அடிக்கடி நடப்பதைப்போல, அந்த அதிர்ஷ்டச் சக்கரம் அவரைப் பார்த்துத் திரும்பியது. ஆஸ்ட்ரோவ்னா என்ற இடத்தில் நடந்த அந்தச் சம்பவம் அவருக்கு பிரசித்தியைக் கொடுத்தது. அதோடு ஒரு குதிரைப் பட்டாளத்திற்கே கமாண்டராக அவர் நியமிக்கப்பட்டார். அதைத் தவிர, வீரத்தனமான ஒரு காரியத்தைச் செய்வதற்கு ஒரு வீரமுள்ள அதிகாரி வேண்டு மென்றால், அந்த வேலைக்கு அவரையே தேர்ந்தெடுப்பார்கள்.



நட்டாஷாவின் அசௌக்கியத்தைக் கேள்விப்பட்டதும், தான் இன்னும் நன்றாய் சௌக்கியம் அடையாவிட்டாலும், இன்னும் பலவீனமாய் இருந்தாலும், கோமகள் ராஸ்டோவா பெட்டியாவுடனும் வீட்டிலுள்ள மற்றவர்களுடனும் மாஸ்கோவுக்குப் புறப்பட்டுப் போனாள். அந்தக் குடும்பம் பூராவாக மரியா டிமிட்ரிவ்னாவின் வீட்டிலிருந்து அந்தப் பட்டணத்திலுள்ள தங்கள் வீட்டிற்குப் போய் தங்கினார்கள்.

நட்டாஷாவின் அசௌக்கியம் மிகவும் அதிகமாயிருந்தது. ஆகவே, அந்த அசௌக்கியத்திற்கான காரணங்கள், அவளுடைய நடத்தை, நிச்சயதார்த்தத்தை அவள் முறித்தது, ஆகிய விஷயங்களைப் பற்றிய ஆலோசனைகள் எல்லாம், இந்த அசௌக்கியத்தின் முன்பாக பின்னால் மறைந்து விட்டன. இது அவளுக்கும், அவளுடைய பெற்றோருக்கும் நல்லதாய்ப் போயிற்று. நடந்த விஷயத்தைப் பற்றி அவளை எவ்வளவு தூரம் குறை கூறலாம் என்று ஆலோசனை செய்வது சாத்தியமில்லாதபடி, அவள் அவ்வளவு அசௌக்கியமாய் இருந்தாள். அவளால் உண்ணவும் முடியவில்லை, உறங்கவும் முடியவில்லை. வரவர மெலிந்துகொண்டு வந்தாள், இருமிக்கொண்டு இருந்தாள். அவள் அபாயகரமான நிலைமையில் இருப்பதாக டாக்டர்கள் அவர்களுக்குச் சொன்னார்கள். அவளுக்கு எப்படி உதவி செய்வது என்பதைத் தவிர, வேறு எதைப் பற்றியும் அவர்களால் நினைக்க முடியவில்லை. டாக்டர்கள் தனியாகவும், சேர்ந்தாற் போலும்

அவளைப் பார்க்க வந்தார்கள். பிரஞ்சு மொழியிலும், ஜெர்மன் மொழியிலும், லத்தீன் மொழியிலும் அவர்கள் நிறைய பேசிக்கொண்டு, தங்களுக்குத் தெரிந்த வியாதிகளுக்கு எல்லாம் கொடுக்கக்கூடிய மருந்துகளை ஏராளமாய்க் கொடுக்கும்படி ஆலோசனை சொன்னார்கள். நட்டாஷாவுக்கு என்ன வியாதி என்பது அவர்களுக்குத் தெரியவில்லை என்ற சிறிய விஷயம் அவர்களில் யாருக்கும் மனதில் தோன்றவில்லை. ஏனெனில், ஒருவனுக்கு என்ன வியாதி என்பதைக் கண்டுபிடிக்க முடியாது. உயிருள்ள ஒவ்வொரு மனிதருக்கும் தனிப்பட்ட குணச்சிறப்புகள் உண்'_ாகையால், அவர்கள் ஒவ்வொருவரும் தமக்குச் சொந்தமான, விசித்திரமான நூதனமான, சிக்கலான வியாதியை கொண்டிருப்பது உண்டு. அந்த வியாதி வைத்திய சாஸ்திரத்திற்குள் அடைபட்ட தல்ல. சுவாசப் பையைப் பற்றியோ, ஈரலைப் பற்றியோ, சருமத்தைப் பற்றியோ, இருதயத்தைப் பற்றியோ, நரம்புகளைப் பற்றியோ, வைத்திய புத்தகங்களில் குறிப்பிடப்பட்டிருக்கிற வேறு வகைகளைப் பற்றியோ உள்ள வியாதி அல்ல அது. அந்த உறுப்புகளின் வியாதிகள் எல்லாம், எண்ணிக்கையற்ற விதமாக ஒன்று சேர்ந்து ஏற்படக்கூடிய வியாதியேயாகும். இந்த சிறிய விஷயம் அந்த டாக்டர்களுக்குத் தோன்றுவதில்லை. ஒரு மந்திவாதிக்குத் தன்னுடைய மந்திரங்கள் பலிக்கவில்லை என்று விஷயம் எப்படி தோன்றாதோ, அதே மாதிரி டாக்டர்களின் நினைப்பு இருந்தது. ஏனென்றால், குணப்படுத்துவது என்பதுதான் அவர்களுடைய தொழிலாய் இருக்கிறபடியால், அதற்காக அவர்கள் பணம் பெற்றுக்கொள்ளுகிறபடியால், அந்த வேலையில் தங்கள் வாழ்க்கையின் சிறந்த பல வருஷங்களை அவர்கள் கழித்துவிட்டபடியால், அந்த நினைப்பு தோன்றுவதில்லை. தவிரவும், தாங்கள் உண்மையிலேயே உபயோகமாய் இருப்பதாகக் கண்டு வந்தபடியால், உண்மையிலேயே ராஸ்டோவ்களின் குடும்பத்திற்கு உபயோகமாய் இருந்து வந்தபடியால், இந்த நினைப்பு அவர்களுக்கு மனதிற்குள் நுழைய முடியாமலேயே இருந்தது. வியாதியஸ்தர்கள் மருந்தை விழுங்கும்படி செய்வது மட்டும் அவர்களால் ஏற்படக் கூடிய உதவி என்பதில்லை; ஏனெனில், அவர்கள் கொடுக்கும் மருந்துகள் எல்லாம் அநேகமாகக் கெடுதியானவையே ஆகும். (சிறிய அளவில் அவைகள் கொடுக்கப்படுகிறபடியால், அது வெளியே தெரிவதில்லை.) டாக்டர்களின் உதவி வேறு விஷயங்களுக்கு உபயோகமாகவும் அவசியமாகவும் தவிர்க்க முடியாதவைகளாகவும் இருக்கின்றன; ஏனெனில், நோயாளியின் மனத் தேவையையும், நோயாளி மீது

அன்பு கொண்டுள்ளவர்களின் மனத் தேவையையும் டாக்டர்கள் திருப்தி செய்கிறார்கள். அதனால்தான், நோய் தீர்க்கும் போலி டாக்டர்களும், மந்திரவாதிகளான பெண்களும், ஹோமியோபதி டாக்டர்களும், அலோபதி டாக்டர்களும் இருந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் இனியும் எப்பொழுதும் இருப்பார்கள். வியாதிகள் குணமாய் விடுமென்ற ஆதி அந்தமற்ற மனித நம்பிக்கைக்கும், அவர்களுக்கு வேண்டிய அனுதாபத்திற்கும், ஏதாவது செய்யவேண்டுமே என்ற வியாதியஸ்தர்களின் உணர்ச்சிக்கும் அவர்கள் உதவியாக இருக்கிறார்கள். எங்காவது உடம்பில் இடித்துவிட்டால், அதை தடவிக் கொடுக்க வேண்டுமென்று ஒரு சிறு குழந்தையிடமிருக்கும் சாதாரண விருப்பத்தைப் போன்ற விருப்பங்களை, அவர்கள் திருப்தி செய்கிறார்கள். ஒரு குழந்தை கீழே விழுகிறது. உடனே தன்னுடைய தாயிடமோ தாதியிடமோ ஓடி அடிபட்ட இடத்தை தடவி விடவோ, முத்தமிடவோ விரும்புகிறது. இதைச் செய்து விட்டவுடன், தனக்கு சௌக்கியமாய்விட்டதாக அது நினைக்கிறது. அந்த வலியைப் போக்குவதற்கு அந்த குழந்தையைச் சேர்ந்தவர்களில் மிகுந்த பலவான்களாலும் மிகுந்த புத்திசாலிகளாலும்கூட முடியாது என்பதை அந்தக் குழந்தை நம்ப முடியாது. வலிக்கு நிவாரணம் ஏற்பட்டுவிடும் என்ற நம்பிக்கையும், அதனுடைய தாயார் அதன் அடிபட்ட இடத்தைத் தடவி விடும்போது காட்டுகிற அனுதாபமும், அந்தக் குழந்தைக்கு இதம் செய்கின்றன. நட்டாஷாவுக்கு டாக்டர்கள் அவசியம் என்றால், அவளுடைய வலியைத் தடவிவிட்டு ஆறுதல் சொல்லுவதற்குத்தான் அவர்கள் உதவியாய் இருக்கிறார்கள். அந்த வண்டிக்காரன் அர்பார்ட் என்ற இடத்திலுள்ள மருந்துக் கடைக்குச் சென்று, ஒரு ரூபிளையும் எழுபது கோப்பேக்குகளையும் கொடுத்து, அந்த அழகான பெட்டியிலுள்ள மாத்திரைகளையும், கொஞ்சம் பவுடரையும் வாங்கி வந்து, அவற்றை இரண்டு மணிக்கு ஒரு தடவை வெந்நீரில் போட்டு சாப்பிட்டால், அவள் வியாதி எல்லாம் போய்விடுமென்று உறுதி கூறுகிறார்களே, அம்மாதிரி உறுதி கூறுவதற்குத்தான் அவர்கள் உபயோகமாய் இருக்கிறார்.

கெடிகாரத்தைப் பார்த்து மருந்து கொடுப்பதற்கு அந்த மாத்திரைகளும், சூடான பானங்களும், கோழிக் குஞ்சு கட்லெட்டுகளும் இன்னும் வாழ்க்கைக்கு வேண்டிய மற்ற விஷயங்களும் டாக்டர்களின் உத்தரவுப்படி கொடுக்கப்பட்டு வருகின்றன. அம்மாதிரி காரியங்களை கவனித்துக்கொள்ளுவதால் அந்தக் குடும்பத்தாருக்கு ஒரு வேலையும் ஒரு மன ஆறுதலும்

கிடைக்கின்றன. இவையெல்லாம் இல்லையென்றால், சோனியாவும் கோமகனும் கோமகளும் வேறு என்ன செய்ய முடியும்? அவர்களுடைய முகங்கள்தான் எப்படி இருக்கும்? தம்முடைய அருமையான, அன்பான குமாரியின் அசௌக்கியத்தை அந்தக் கோமகனால் எப்படித் தாங்கிக்கொள்ள முடியும்? அவளுடைய சிகிச்சைக்காக ஆயிரம் ரூபிள்கள் செலவாகின்றன என்று அவர் அறிந்து கொள்ளுவதால்தான் அதைத் தாங்க முடிகிறது. அவளுடைய நன்மைக்காக, இன்னும் ஆயிரங்கள் செலவிடவும் அவர் மனம் கோணமாட்டார். அவளுடைய வியாதி நீடிக்குமானால், இன்னும் சில ஆயிரங்கள் செலவிட்டு, அவளை வெளிநாடுகளுக்குக் கொண்டுபோய், வைத்தியர்களிடம் காட்ட வேண்டும் என்ற நினைப்பு அவருக்குத் தோன்றி இருக்கா விட்டால், அவரால் தாங்கிக் கொள்ள முடியாது. மெட்டிவியராலும் பெல்லராலும் வியாதியைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்றும், பிரிஸ்ஸாலும் முட்ராவாலும்தான் வியாதியைக் கண்டுபிடிக்க முடிந்ததென்றும் அவர் வியாக்யானம் செய்து கூறுவதற்கு முடிந்ததனால்தான், அவரால் தாங்கிக் கொள்ள முடிந்தது. டாக்டர்களின் உத்தரவுப்படி அவள் கண்டிப்பாகக் கீழ்படிந்து நடக்கவில்லை என்று சில சமயங்களில் நோயாளியைக் கண்டித்துக் கொண்டிருக்க முடிந்தபடியால்தான், கோமகளாலும் பொறுத்துக் கொள்ள முடிந்தது.

'நீ இம்மாதிரி நடந்தால், நீ டாக்டரின் உத்தரவுப்படி நடக்காவிட்டால், நேரா நேரத்தில் மருந்தை உண்ணாவிட்டால், நீ ஒருக்காலும் சுகம் அடையப் போவதில்லை' என்று எரிச்சலினால் தன்னுடைய மன வருத்தத்தை மறந்து கோமகள் சொல்லுவாள். 'நீ இம்மாதிரி அந்த வியாதியுடன் விஷமம் செய்யக்கூடாது. இல்லையானால் அது நிமோனியாவாக மாறிவிடும் என்பது உனக்குத் தெரியும்' என்று, அந்த அந்நிய நாட்டு வார்த்தையை உச்சரிப்பதால் மிகுந்த மகிழ்ச்சி கொண்டு, அவள் பேசிக்கொண்டிருப்பாள். அந்த வார்த்தையின் அர்த்தம் என்ன என்பது மற்றவர்களுக்கும் தெரியாது, அவளுக்கும் தெரியாது.

முதல் மூன்று இரவுகளிலும்தான்' படுக்கை உடையை அணியாமல் இருந்து, டாக்டர்களின் உத்தரவுகளை நிறைவேற்றி வைப்பதற்காகத் தயாராய் இருந்தாள் என்ற சந்தோஷமான உணர்ச்சி இருந்திருக்காவிட்டால், சோனியாவால்தான் எப்படித் தாங்கிக் கொண்டிருக்க முடியும்? அந்தச் சிறிய கில்ட் பெட்டியிலுள்ள அற்பமான, தீங்கிழைக்கக்கூடிய அந்த மாத்திரைகளைக் குறிப்பிட்ட நேரத்தில் கொடுப்பதற்காக, இரவுகளில் இன்னமும்

அவள் விழிந்திருக்கிறாள். இதனால்தான் அவளால் தாங்கிக்கொள்ள முடிகிறது. தனக்காக எத்தனையோ தியாகங்கள் செய்யப்படுவதைக் கண்டு நட்டாஷாவுக்கும் மகிழ்ச்சியாய் இருந்தது. எந்த மருந்தும் தன்னை குணமாக்க முடியாது என்றும், அவையெல்லாம் அசட்டுத் தனம் என்றும் அவள் சொல்லி வந்தபோதிலும், குறிப்பிட்ட நேரத்தில்தான் மருந்து உண்ண வேண்டும் என்று அவள் அறிந்தபோது, அவளுக்கு மகிழ்ச்சியாய் இருந்தது. டாக்டர்களின் உத்தரவுகளை மதிக்காமல், வைத்தியத்தில் தனக்கு நம்பிக்கை கிடையாது என்றும், தன்னுடைய உயிரை தான் மதிக்கவில்லை என்றும் காட்டிக்கொள்ளுவது அவளுக்கு இன்னும் அதிகமான மகிழ்ச்சியைக் கொடுத்தது.

ஒவ்வொரு நாளும் டாக்டர் வந்து நாடியைப் பிடித்துப் பார்த்து, அவளுடைய நாக்கைப் பரிசோதிப்பார். வருத்தம் தோய்ந்த விதமாய் அவளுடைய முகம் இருந்தபோதிலும், ஏதாவது தமாஷ் பேசிவிட்டுப் போவார். ஆனால், அவர் அடுத்த அறைக்குப் போனதும், கோமகள் வேகமாக அவரைப் பின்தொடருவாள். உடனே அந்த டாக்டர் முகத்தைச் சோகமாக வைத்துக்கொண்டு, சிந்தனையோடு தலையை ஆட்டிச் சொல்லுவார். அதாவது, இன்னும் அபாயம் இருந்தபோதிலும், அவர் கடைசியாகக் கொடுத்த மருந்தில் அவருக்கு நம்பிக்கை இருக்கிறதென்றும், பொறுத்துப் பார்க்க வேண்டுமென்றும், இந்த வியாதி முக்கியமாக மனோவியாதி என்றும் கூறுவார். உடனே கோமகள் தான் செய்வதைத் தன்னிடமிருந்தும் அவரிடமிருந்தும் மறைக்க முயற்சி செய்து, அவர் கையில் ஒரு தங்க நாணயத்தை வைப்பாள். அதன் பின்னால், மிகுந்த அமைதியுள்ள மனதோடு நோயாளியிடம் அவள் திரும்புவாள்.

நட்டாஷாவுக்கு ஏற்பட்டுள்ள நோயின் அறிகுறிகள் இவைதான்; அவள் சொற்பமாக உண்ணுகிறாள், தூங்குவதும் சொற்பமே, இருமிக்கொண்டிருக்கிறாள், எப்பொழுதும் சோர்வோடு காணப்படுகிறாள். மருந்து உண்ணாமல் அவள் இருக்க முடியாதென்று டாக்டர்கள் சொன்னார்கள். ஆகவே அந்தப் பட்டணத்தில் நெருக்கடியான சூழ்நிலையில் அவளை வைத்திருந்தார்கள். *1812*-ஆம் வருஷத்திய வசந்த காலத்தில் ராஸ்டோவ்கள் கிராமத்திற்குப் போக வில்லை.

ஏராளமான மாத்திரைகளை அவள் விழுங்கியபோதிலும், சிறிய புட்டிகளிலும் பெட்டிகளிலும் உள்ள பவுடர்களையும் சொட்டு மருந்துகளையும் அவள் சாப்பிட்டபோதிலும், கிராமாந்தர வாழ்க்கை அவளுக்கு வழக்கமாய் இருந்தும், இச்சமயம் அது

அவளுக்கு கிடைக்காமல் இருந்தபோதிலும் அவளுடைய வாலிபம் வெற்றி பெற்றது. குமாரி ஷாஸ் என்பவளுக்கு காலியான மருந்து புட்டிகளிலும் பெட்டிகளிலும் பிரியமுண்டாகையால், அவற்றை ஏராளமாக அவள் சேர்த்து வைத்தாள். தினப்படி வாழ்க்கையில் நடக்கும் சம்பவங்களால், நட்டாஷாவின் மன வருத்தம் கீழே போக ஆரம்பித்தது. ஆகவே, அவளுடைய இருதய வலி அவ்வளவு கடினமாக இல்லை. கொஞ்சம் கொஞ்சமாக அது மறைந்தது. கொஞ்சம் கொஞ்சமாக அவளுக்கு உடல் அபிவிருத்தியும் ஏற்பட ஆரம்பித்தது.



நட்டாஷா அமைதி கொண்டிருந்தாள். ஆனால், சந்தோஷமாய் இல்லை. கச்சேரிகள், நடனக் கச்சேரிகள், பாட்டுக் கச்சேரிகள், நாடகங்கள் ஆகிய வெளிப்படையான மகிழ்ச்சிகளை மட்டும் அவள் தவிர்த்தாள் என்பதில்லை; கண்ணீர் இல்லாமல் அவள் சிரிப்பதே இல்லை. அவளால் பாட முடியவில்லை. அவள் சிரிக்க ஆரம்பித்தாலும் சரி, அவள் பாட முயற்சித்தாலும் சரி, கண்ணீர் வந்து அவள் தொண்டையை அடைத்துக்கொள்ளும். வியாகூலத்தினாலும் இனிமேல் எப்பொழுதும் திரும்பி வராத அந்த பரிசுத்தமான காலங்களை நினைவுகூருவதனாலும், மிகவும் மகிழ்ச்சியாய் இருந்திருக்கக்கூடிய அவளுடைய வாலிப வாழ்க்கைய உபயோகம் இல்லாமல் கெடுத்துக்கொண்டாளே என்ற எரிச்சலினாலும், அவளுக்குக் கண்ணீர் பொங்குவதுண்டு. சிரிப்பதும், முக்கியமாக பாடுவதும், அவளுக்கு ஏற்பட்டிருந்த அந்த துக்கத்தில் செய்யக்கூடாத காரியங்களாக அவளுக்குத் தோன்றின. சல்லாபங்களைப் பற்றிய நினைப்பே அவளுடைய மண்டையில் நுழைந்ததில்லை. நுழைந்து விடுமோ என்று அவள் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டிய அவசியமுமில்லை. கோமாளியான நாஸ்டாசியா ஐவானாவ்னாவிடம் அவள் எவ்வளவு சிரத்தை கொண்டிருக்கிறாளோ, அதைவிட அதிகமாக வேறு எந்த மனிதர்மீதும் அவள் சிரத்தை கொள்ளவில்லை என்று உணர்ந்தாள். அம்மாதிரியே அவள் சொல்லவும் செய்தாள். ஏதோ ஒன்று அவளுக்குள்ளே காவலாக நின்று, எந்த மகிழ்ச்சியையும் அவள் பெறாமல் தடுத்து வந்தது. மிகுந்த நம்பிக்கையைக் கொடுத்து வந்த, அவளுடைய கவலையில்லாத கன்னிப் பெண்ணின் வாழ்க்கையில் இருந்த சிரத்தைகள் எல்லாம் அவளுக்குப் போய்விட்டன.

முந்தைய மழை காலம், வேட்டைகள், 'மாமா', ஆட்ராட்னோவில் நிக்கலஸுடன் கழிந்த அந்த கிறிஸ்துமஸ் ரஜா நாட்கள் ஆகியவைகளை அடிக்கடி மிகுந்த வேதனையுடன் அவள் நினைவுகூர்வாள். அந்த நாட்களில் ஒரு நாளையாவது மீண்டும் பெறுவதற்கு அவள் என்னதான் கொடுக்க மாட்டார்கள்? ஆனால், அவையெல்லாம் போயே போயின. வருங்காலத்தைப்பற்றி அச்சமயம் அவளுக்கு ஏற்பட்டிருந்த கெட்ட சகுன நினைப்புகள் உண்மையாயின-அந்த சுதந்திர கால நிலைமையும், எந்த மகிழ்ச்சியையும் அனுபவிக்கத் தயாராய் இருக்கும் நிலைமையும் இனி வரப் போவதில்லை. என்றாலும், உயிர் வாழ்ந்து இருக்க வேண்டியது அவசியமாய் இருந்தது. அவள் முன்பு நினைத்தபடி, மற்றவர்களை விட தான் சிலாக்கியமாய் இல்லை என்பதையும், உலகத்திலுள்ள வேறு யாரையும்விட மோசமாகவும், மிகவும் மோசமாகவும் இருப்பதையும் சிந்தனை செய்தபோது, அந்த நினைப்பு அவளுக்கு இதமாய் இருந்தது. ஆனால், இதுமட்டும் போதாது. அதை அவள் அறிவாள். ஆகவே, 'அடுத்தபடி என்ன?' என்று அவள் தன்னையே கேட்டுக்கொள்ளுவாள். ஆனால், வருவதற்கு அங்கே எதுவுமில்லை. வாழ்க்கையில் மகிழ்ச்சியே இல்லை. என்றாலும், வாழ்க்கை கடந்து கொண்டு போயிற்று. யாருக்கும் சுமையாகவும், இடையூறாகவும் தான் இல்லாமல் இருக்க நட்டாஷா முயற்சி செய்தாள் என்று தோன்றியது. அவள் தனக்காக எதையும் விரும்பவில்லை. அந்த வீட்டிலுள்ள ஒவ்வொருவரிடமிருந்தும் அவள் விலகியே இருந்தாள். தனது சகோதரன் பெட்டியாவிடம் மட்டும் சங்கோஜமில்லாமல் இருந்தாள். மற்றவர்களிடம் சேர்ந்திருப்பதைவிட, அவனுடன் இருப்பதையே அவள் விரும்பினாள். அவனுடன் தனிமையாய் இருக்கும்போது, சில சமயங்களில் அவள் சிரிப்பாள். அவள் வீட்டை விட்டு வெளியே போகவே இல்லை. அவர்களைப் பார்க்க வருகிறவர்களில் பீயர் ஒருவரைப் பார்ப்பதற்குத்தான் அவளுக்கு மகிழ்ச்சியாய் இருக்கும். கோமகன் பெஜுகாவ் அவளை மிகுந்த சிரத்தையுடனும், மிகுந்த கவலையுடனும், மிகுந்த மென்மையுடனும் நடத்தி வந்தார். அவரைவிட அதிகமாக அம்மாதிரி நடத்துவது அசாத்தியம். தன்னை அறியாமலேயே நட்டாஷா இந்த மென்மையை உணர்ந்தாள். ஆகவே, அவருடன் இருப்பதில் அவள் மிகுந்த மகிழ்ச்சி கொண்டாள். ஆனால், அதற்காக அவள் அவரிடம் நன்றி கொள்ளவில்லை. ஏனெனில், அவளிடம் அவர் நடந்துகொள்ளுகிற நல்ல விஷயங்களில் அவருக்குத் தனிப்பட்ட சிரத்தை எதுவும் இருப்பதாக அவளுக்குத்

தோன்றவில்லை. அவர் ஒவ்வொருவரிடமும் அன்போடு இருப்பதே அவருடைய இயற்கையான சுபாவம் என்று அவளுக்குத் தோன்றியது? ஆகவே, அவருடைய அன்புக்கு விசேஷமான மதிப்பு எதுவும் இல்லை என்றும் அவளுக்குத் தோன்றியது. அவளைக் குழிப்படுத்தும்படி எதாவதுசெய்ய அவர் விரும்பும்போதோ அல்லது அவர்கள் பேசுகிறவைகளில் எதாவது அவளுடைய பழைய நினைவுகளை நினைப்பூட்டி, அவளைத் துன்புறுத்துமோ என்று அவர் பயப்படும்போதோ, அவளுடைய பிரசன்னத்தில் அவருக்கு ஏற்படக்கூடிய மனக் குழப்பத்தையும், தர்மசங்கடத்தையும் நட்டாஷா சில சமயங்களில் கவனித்திருக்கிறாள். அவருக்குப் பொதுவாய் இருக்கக்கூடிய அன்பான குணமும் வெட்கமும் இதற்குக் காரணம் என்று அவள் நினைப்பதுண்டு. தன்னிடம் அவர் எப்படி இருக்கிறாரோ, அதே மாதிரிதான் மற்ற ஒவ்வொருவரிடமும் அவர் இருப்பார் என்று அவள் நினைத்தாள். அவர் மட்டும் சுதந்திரமாய் இருந்தால், முழங்கால் படியிட்டு அவளுடைய காதலையும் கையையும் கேட்பார் என்று அவர் தம்மை அறியாமலேயே ஒரு தடவை சொன்னார். அவள் மிகுந்த மனக் குழப்பத்தில் இருந்தபோது அந்த வார்த்தைகளைச் சொன்னார். அதற்குப் பின்னால், பீயர் தம்முடைய உணர்ச்சிகளைப் பற்றி நட்டாஷாவிடம் பேசியதே இல்லை. அந்த வார்த்தைகள் அச்சமயத்தில் தன்னை மிகவும் தேற்றியபோதிலும், ஒரு அழுகிற குழந்தையைத் தேற்றுவதற்காகப் பலவிதமான அர்த்தமற்ற வார்த்தைகளைச் சொல்லுவதைப்போலவே அவையும் இருப்பதாக அவளுக்குத் தெளிவாய்த் தோன்றியது. பீயர் ஒரு திருமணமானவர் என்பதால் அப்படித் தோன்றவில்லை; குராகினோடு அவள் இருந்த போது தார்மீகத் தடை எதுவும் இல்லாததுபோல அவள் உணர்ந்தாள்; ஆனால் பீயருடன் அவள் இருக்கும்போது, அந்த தார்மீகத்தடை இருப்பதாக நட்டாஷா பலமாய் உணர்ந்தாள்; அதனால் அவருக்கும் அவளுக்கும் உள்ள உறவுகள், அவளைப் பொறுத்தவரையில், காதலில் வந்து முடியலாம் என்ற நினைப்பு அவள் மண்டையில் எப்பொழுதும் நுழைந்ததில்லை; அல்லது ஒரு கனிவான, மனப்பூர்வமான, மனோகரமான நட்பு ஒன்று ஆணுக்கும் பெண்ணுக்கும் (அவளே அதைப் பல தடவைகளில் அறிந்திருக்கிறாள்) ஏற்படக் கூடும் என்ற நினைப்பும் அவள் மண்டையில் தோன்றவில்லை.

செயிண்ட் பீட்டர் விரத தினம் முடிவதற்கு முன்பாக, ஆக்ராபெனா ஐவானாவ்னா பெலோவா என்பவள் மாஸ்கோவில் உள்ள மகான்களின் கோயில்களுக்குச் சென்று தனது பக்தியைச்

செலுத்துவதற்காக மாஸ்கோவுக்கு வந்தாள். ராஸ்டோவ்களின் கிராமாந்திர வாசஸ்தலத்தில் அவள் பக்கத்து வீட்டுக்காரியாய் இருந்தாள். நட்டாஷா விரதம் இருந்து பரிசுத்த நற்கருணைக்காகத் தயாராக வேண்டும் என்று அவள் யோசனை சொன்னாள். நட்டாஷா மகிழ்ச்சியோடு அதை ஒப்புக்கொண்டாள். அதிகாலையில் அவள் வெளியே போகக் கூடாது என்று டாக்டர்கள் சொன்னார்கள். அதை மீறி விரதம் இருந்து நற்கருணைக்குத் தயாராக வேண்டும் என்று நட்டாஷா வற்புறுத்தினாள். தங்களுடைய சொந்த வீட்டிலேயே மூன்று நேரப் பிரார்த்தனைகளிலும் பிரசன்னமாய் இருந்து ராஸ்டோவ் குடும்பத்தார்கள் தயார் செய்வதைப் போலச் செய்ய அவள் விரும்பவில்லை. ஆக்ராபெனா ஐவானாவ்னா செய்வதைப்போல, தினமும் மாதா கோயிலுக்கு ஒரு வாரம் சென்று, காலை ஆராதனை, ரோம சபை ஆராதனை, மாலை ஆராதனை ஆகியவைகளை, ஒன்றைக்கூட விடாமல் செய்ய வேண்டும் என்று நட்டாஷா வற்புறுத்தினாள். நட்டாஷாவின் ஆர்வத்தைக் கண்டு கோமகள் மனம் கனிந்தாள். வைத்திய சிகிச்சையினால் போதுமான பலன் ஏற்படாததைக் கண்ட அவளுக்கு, மருந்துகளைவிட பிரார்த்தனைகள் தன்னுடைய குமாரிக்கு உதவி செய்யக்கூடும் என்று அவளுடைய உள்ளத்தின் ஆழத்தில் ஒரு நம்பிக்கை இருந்தது. இருந்தாலும் அவளுக்குக் கொஞ்சம் பீதியும் இருந்தது. டாக்டர்களுக்குத் தெரியாமல், நட்டாஷாவின் விருப்பத்திற்கு ஒப்புக் கொண்டு பெலோவாவிடம் அவளை ஒப்படைத்தாள். காலை மூன்று மணிக்கு நட்டாஷாவை எழுப்புவதற்காக ஆக்ராபெனா ஐவானாவ்னா வருவது வழக்கம். அச்சமயங்களில் பொதுவாக ஏற்கெனவே அவள் விழித்திருப்பதைக் காண்பாள். காலை ஆரர்தனைக்குப் பிந்திவிடக் கூடாது என்று அவள் பயப்படுவதுண்டு. அவசரமாக முகங் கழுவி மகா மோசமான ஆடைகளை நட்டாஷா பணிவோடு அணிந்து கொண்டு, ஒரு பழைய சல்லாவையும் அணிந்துகொண்டு, சுத்தமான காலைக் காற்றில் குளிரால் நடுங்கிக்கொண்டு, ஆள் நடமாட்டம் இல்லாத தெருக்களில் நடந்து போவாள். உதயத்தினால் ஏற்படும் தெளிவான வெளிச்சத்தால் அந்தத் தெருக்களில் வெளிச்சம் பரவி நிற்கும். ஆக்ராபெனா ஐவானாவ்னாவின் யோசனைப்படித் தங்களுடைய சொந்த மாதா கோயிலில் நற்கருணைக்காகத் தயார் செய்துகொள்ளாமல், மற்றொரு மாதா கோயிலில் போய் தயார் செய்து வந்தாள். அந்தக் கோயிலில் உள்ள குரு ஒரு கடுமையான கட்டுப்பாடும், உயர்ந்த வாழ்க்கையும் கொண்டவராகும். அந்த மாதா கோயிலில் எப்பொழுதுமே அதிகமாக ஆட்கள்

இருந்ததில்லை. நட்டாஷா எப்பொழுதும் பெலோவாவோடு வழக்கமான இடத்தில் நிற்பாள். அவர்களுக்கு எதிராக இடது பக்கத்தில், பாட்டுக் கோஷ்டிக்கு முன்பாக, பரிசுத்த கன்னி மாதாவின் உருவச்சிலை இருந்தது. ஒரு மகா பெரிய, மனதிற்கு எட்டாத ஒன்றிற்கு முன்பாக பணிவோடு அவள் நின்றுகொண்டிருந்த உணர்ச்சி அவளுக்குப் புதிய உணர்ச்சியாகும். அந்த உணர்ச்சி, வழக்கமில்லாத அந்தக் காலைநேரத்தில், மெழுகு வத்திகளாலும், ஜன்னல் வழியாக வந்த காலை வெளிச்சத்தாலும், மிகுந்த பிரகாசம் அடைந்திருந்த அந்த கன்னி மாதாவின் கருப்பு முகத்தை அவள் பார்த்தபோது, அவளைப் பற்றிக்கொண்டது. பிரார்த்தனை வார்த்தைகளைக் கவனித்துக் கேட்டு அதைப் புரிந்துகொள்ள முயற்சி செய்தாள். அவள் புரிந்துகொள்ளக்கூடிய வார்த்தைகளைக் கேட்டதும், அவளுடைய சொந்த உணர்ச்சி, அந்த பிரார்த்தனைகளின் அர்த்தங்களோடு கலந்து பின்னி நிற்கும். அவளுக்குப் புரியாத இடங்களில், ஒவ்வொன்றையும் அறிந்துகொள்ள விரும்புவது ஒரு பெருமை என்றும், எல்லாவற்றையும் அறிந்துகொள்ளுவது அசாத்தியம் என்றும், நம்பிக்கை கொண்டு கடவுளிடம் தன்னை சமர்ப்பிப்பதுதான் அவசியம் என்றும், அம்மாதிரி சமயங்களில் கடவுள்தான் அவளுடைய ஆத்மாவிற்கு வழி காட்டுகிறார் என்றும் அவள் நினைக்கும்போது அவளுக்கு இனிமையாய் இருக்கும். தனக்கு சிலுவைக்குறி காட்டி, தாழ்ந்து தலை வணங்கி, அவளுக்குப் புரியாத இடங்களில் தன்னுடைய இழிவான நிலைமையைக் கண்டு பீதிகொண்டு, ஒவ்வொன்றையும் தன்னை மன்னிக்க வேண்டும் என்றும், தன்மீது கருணை காட்ட வேண்டும் என்றும் அவள் கடவுளைக் கேட்பாள். அவள் தன்னை மறந்து நின்ற பிரார்த்தனைகள் எல்லாம் அநேகமாக பச்சாதாபப் பிரார்த்தனையாகவே இருந்தன. அவள் அதிகாலையில் தன்னுடைய வீடு திரும்பும்போது கட்டிட வேலைக்குப் போகிறவர்களையும், தெரு பெருக்குகிறவர்களையுமே கண்டாள். வீடுகளுக்குள் இருந்தவர்கள் எல்லாரும் இன்னமும் தூங்கிக்கொண்டே இருந்தார்கள். நட்டாஷாவுக்கு இந்த அனுபவம் புதிதாய் இருந்தது. அவளுடைய குற்றங்களைத் திருத்திக்கொள்ளுவது சாத்தியம் என்ற உணர்ச்சியும், ஒரு புதிய சுத்தமான வாழ்க்கையும் மகிழ்ச்சியும் சாத்தியம் என்ற உணர்ச்சியும் அவளுக்குத் தோன்றின.

இம்மாதிரியாக அவள் காலம் கழித்த அந்த வாரம் முழுவதிலும், இந்த உணர்ச்சி ஒவ்வொரு நாளும் அதிகரித்து வந்தது. ஆக்ராபெனா ஐவானாவ்னா சொல்லி வந்த அந்த நற்கருணை மகிழ்ச்சி

நட்டாஷாவுக்கு மிகப் பெரிதாகத் தோன்றியது. ஆகவே, அந்த பரிசுத்த ஞாயிற்றுக்கிழமை வரையில் தான் உயிரோடு இருக்க மாட்டாளோ என்றுகூட நினைத்தாள்.

ஆனால், அந்த மகிழ்ச்சியான தினம் வந்தது. அந்த மறக்க முடியாத ஞாயிற்றுக்கிழமையன்று வெள்ளை மஸ்லின் ஆடை தரித்த அவள் நற்கருணைக்குப் பின்னால் வீடு திரும்பினாள். பல மாதங்களுக்குப் பின்னால் முதல் தடவையாக அவள் அமைதியாய் இருப்பதாக உணர்ந்தாள். எதிர்கால வாழ்க்கையைப் பற்றிய நினைப்பு அவளுக்குப் பாரமாய்த் தோன்றவில்லை.

அன்று அவளைப் பார்க்க டாக்டர் வந்தார். இரண்டு வாரங்களுக்கு முன்பாக அவர் கொடுத்த பவுடர்களையே இன்னமும் தொடர்ந்து சாப்பிட வேண்டும் என்று அவர் சொன்னார்.

காலையிலும் மாலையிலும் அதை அவள் கண்டிப்பாகச் சாப்பிட்டுக்கொண்டே இருக்க வேண்டும். அவ்விஷயத்தில் தயவுசெய்து அக்கறையாய் இருங்கள் என்று, தமது வைத்தியத்தின் வெற்றியைப்பற்றி அவர் உண்மையிலேயே மகிழ்ச்சி அடைந்து கூறினார்.

தமது உள்ளங்கையில் வைத்த தங்க நாணயத்தைச் சாமர்த்தியமாக அவர் எடுத்துக்கொண்டு விளையாட்டாக, 'கவலைப்படாமல் இருங்கள்' என்று சொன்னார். 'அவள் சீக்கிரமாக ஆடவும் பாடவும் செய்வாள். கடைசியாக அவளுக்குக் கொடுத்த மருந்து மிகுந்த நன்மையைச் செய்திருக்கிறது. அவள் இப்பொழுது மிகவும் நன்றாய் இருக்கிறாள்.'

தனது முகத்தில் மகிழ்ச்சித் தோற்றத்தோடு, தனது கைகளில் உள்ள நகங்களை கோமகள் பார்த்துக்கொண்டு இருந்தாள். அதிருஷ்டத்திற்காகச் சிறிது துப்பிவிட்டு, வரவேற்பு அறைக்குள் போனாள். (திருஷ்டி பட்டுவிடக்கூடாது என்பதற்காக ருஷ்யாவில் மக்கள் துப்புவது உண்டு.)



ஜூலை மாத ஆரம்பத்தில் யுத்தத்தைப் பற்றிய மனக் கலக்கமான செய்திகள் மாஸ்கோவில் மென்மேலும் பரவ ஆரம்பித்தன. மக்களுக்குச் சக்கரவர்த்தி விடுக்கப் போகும் வேண்டுகோளைப் பற்றியும், ராணுவத்திலிருந்து அவரே நேராக மாஸ்கோவுக்கு வரப்போவதைப் பற்றியும் மக்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். ஜூலை

மாதம் 11-ந் தேதிவரையில், வேண்டுகோளோ, அறிக்கையோ வெளிவராதபடியால், அவற்றைப் பற்றிய செய்திகளும், ருஷ்யாவின் நிலைமையைப் பற்றிய செய்திகளும், மிகைப்படுத்தப் பட்டு பரவி வந்தன. ராணுவம் ஆபத்தில் இருப்பதால்தான், அதை விட்டு சக்கரவர்த்தி வருகிறார் என்றும், ஸ்மாலெனஸ்க் நகரம் சரணடைந்துவிட்டதென்றும், நெப்போலியனிடம் பத்து லட்சம் பேர்கள் கொண்ட ராணுவம் இருக்கிறது என்றும், ஒரு அற்புதம் ஏற்பட்டாலொழிய ருஷ்யாவைக் காப்பாற்ற முடியாது என்றும் சொல்லப்பட்டு வந்தது.

ஜூலை மாதம் 11-ந் தேதி சனிக்கிழமையன்று பிரகடனம் வந்தது. ஆனால், அது இன்னும் அச்சாகவில்லை. ராஸ்டோவ்களின் வீட்டில் இருந்த பீயர், மறுநாளாகிய ஞாயிறன்று தாம் டின்னர் சாப்பிட வருவதாகவும், அச்சமயம் அந்த பிரகடனத்தினுடையவும் வேண்டுகோளினுடையவும் பிரதி ஒன்றை கோமகள் ராஸ்டாப் சைனிடமிருந்து தாம் வாங்கிக்கொண்டு வருவதாகவும் சொன்னார்.

அந்த ஞாயிறன்று வழக்கம்போல ரஜூமோவ்ஸ்கிகளுடைய சொந்த கோயிலுக்குப் பிரார்த்தனைக்காக ராஸ்டோவ்கள் போனார்கள். ஜூலை மாதத்திய ஒரு உஷ்ணமான நாளாக அன்று இருந்தது. காலை 10 மணிக்குக் கோயிலின் முன்பாக ராஸ்டோவ்கள் தங்கள் வண்டியை விட்டு இறங்கினார்கள். புழுக்கமான காற்றும், மெல்லிய பகட்டான ஆடைகளை அணிந்த கூட்டமும், சாலைகளிலுள்ள மரங்களின் தூசி படர்ந்த கிளைகளும், அணிவகுப்பிற்காக வெள்ளை கால்சட்டைகள் அணிந்து பாண்டு வாத்தியத்தோடு சென்ற படை வீரர்களும், கற்கள் பரவிய தெருவில் வண்டிச் சக்கரங்கள் செய்த கலகலப்பு ஒலிகளும், பிரகாசமான, உஷ்ணமான சூரிய வெளிச்சமும், அந்த வசந்த கால சோர்வைப் பூரணமாகக் கொண்டதாய் இருந்தன. தற்கால நிலைமையைப் பற்றிய திருப்தியையோ அதிருப்தியையோ அந்தப் பிரகாசமான உஷ்ணமான தினத்தில், பட்டணத்தில் மிகவும் அதிகமாய் உணர்ந்தார்கள். மாஸ்கோவில் உள்ள பிரபலஸ்தர்கள் எல்லாரும், ராஸ்டோவ்களுக்கு அறிமுகமானவர்கள் எல்லாரும், அந்த ரஜூமோவ்ஸ்கியின் கோயிலில் கூடியிருந்தார்கள். ஏனெனில், ஏதோ நடக்கப் போவதாய் எதிர் பார்த்துக்கொண்டு பல பணக்காரக் குடும்பங்கள், வழக்கமாகத் தங்கள் கிராமாந்திர எஸ்டேட்டு களுக்குப் போகிறவர்கள், இந்த வெய்யில் காலத்தில் அம்மாதிரி போகாமல் இருந்தார்கள். முன்னால் ஒரு டவாலிச் சேவகன் கூட்டத்தை விலக்கிக்கொண்டு போக, பின்னால் தாயாரின் பக்கத்தில் நட்டாஷா சென்றுகொண்டிருந்தாள். அச்சமயம் ஒரு

வாலிபர் அவளைப்பற்றி பலமான முணுமுணுப்புத் தொனியில் பேசிக்கொண்டிருந்ததை அவள் கேட்டாள்.

'அவள்தான் ராஸ்டோவா. அவள்தான்...'

'அவள் மிகவும் மெலிந்து போனாள். என்றாலும், அவள் அழகாய் இருக்கிறாள்.'

குராகினுடையவும் பால்கோன்ஸ்கியினுடையவும் பெயர்களை அவள் கேட்டாள்; அல்லது கேட்டதாக நினைத்தாள். ஆனால், எப்பொழுதும் அதைப்பற்றியே அவள் மனோ ராஜ்யம் செய்துகொண்டிருந்தாள். அவளைப் பார்க்கிற ஒவ்வொருவரும் அவளுக்கு என்ன நேர்ந்ததோ, அதைப் பற்றியே நினைப்பதாக அவளுக்கு எப்பொழுதும் தோன்றியது. ஒரு கூட்டத்திற்கு மத்தியில், அவளுடைய இருதயம் சோர்ந்த பரிதாபமாக உணர்ச்சி கொள்ளுவது, அவளுக்கு இப்பொழுது வழக்கம். விளிம்பில் கருப்புப் பின்னல் துணியால் தைக்கப்பட்ட, பூப் போட்ட பட்டு உடையில் பெண்கள் நடப்பதைப்போல, அவள் நடந்து போனாள். எவ்வளவுக்கு எவ்வளவு கம்பீரமாகவும் அடக்கத்தோடும் அவள் நடக்கிறாளோ, அவ்வளவுக்கு அவ்வளவு அதிகமாக அவள் மனதில் துக்கமும் அவமானமும் ஏற்படும். அவள் அழகாய் இருக்கிறாள் என்பதை அவள் நிச்சயமாக அறிவாள். ஆனால் அந்த அழகு, முன்பு அவளுக்குக் கொடுத்துவந்த திருப்தியை இப்பொழுது கொடுக்க வில்லை. அதற்கு மாறாக வேறு எதையும்விட அவளை அது அதிகமாக வருத்தி வந்தது. அதுவும் முக்கியமாக, பட்டணத்தில் உள்ள இந்த பிரகாசமான, உஷ்ணமான வெய்யில் கால தினத்தில் அதிகமாக வருத்தியது. 'மீண்டும் ஞாயிற்றுக்கிழமையன்று அங்கு வந்திருந்ததை நினைவு கூர்ந்து, நினைத்துக்கொண்டாள். 'எப்பொழுதும் அதே பழைய வாழ்க்கைதான். ஆனால் அது வாழ்க்கையல்ல. நான் கெட்டவளாய் இருந்திருக்கிறேன். ஆனால், இப்பொழுது நான் நல்லவள் என்பது எனக்குத் தெரியும். ஆனால், என்னுடைய சிறந்த வருஷங்கள் ஒருவருக்கும் நன்மையாய் இல்லாமல் கழிந்துகொண்டு போகின்றன' அவளுடைய தாயாரின் பக்கத்தில் அவள் நின்றுகொண்டிருந்தாள். அவளுக்குப் பக்கத்திலுள்ள அறிமுகமானவர் களுடன் அவள் தலையை ஆட்டினாள். பழக்கத்தினால் ஏற்பட்ட சுபாவப்படி அங்கிருந்த சீமாட்டிகளின் ஆடைகளைப் பரிசீலனை செய்து கொண்டிருந்தாள். தனக்குப் பக்கத்தில் இருந்த ஒரு சீமாட்டி, சரியான முறையில் சிலுவைக் குறி காட்டாமல், அறைகுறையாகக் காட்டியதைக் கண்டித்தாள். தன்னை மற்றவர்கள் சீர்தூக்கிப் பார்க்கும் போது, தான்

மற்றவர்களைச் சீர்தூக்கிப் பார்த்துக்கொண்டிருப்பதாக அவளுக்கு நினைவு தோன்றியதும், அவள் எரிச்சல் கொண்டாள். பிரார்த்தனை சப்தம் கேட்டதும், தன்னுடைய இழிவான தன்மையைக் கண்டு பீதி கொண்டாள். அதோடு, தன்னுடைய ஆத்மாவின் முந்தைய பரிசுத்தம், தன்னை விட்டுப் போயே போயிற்று என்பதை நினைத்ததும் அவள் பீதி கொண்டாள். ஒரு அழகான உற்சாகத் தோற்றமுள்ள வயோதிகர் பிரார்த்தனையை நடத்திக்கொண்டிருந் தார். பிரார்த்தனை செய்கிறவர்களின் ஆத்மாக்களுக்கு இதம் தரக்கூடிய விதத்திலும், அவர் பிரார்த்தனையை நடத்தினார். படுதாவிற்குப் பின்னால் இருந்த புனிதமான கதவுகள் மூடப்பட்டன. மெதுவாக படுதா விலகிக்கொண்டு வந்தது. அதன் பின்னால், ஒரு மிருதுவான, ரகசியமான குரல் ஏதோ சில வார்த்தைகளைச் சொல்லியது. கண்ணீரினால் நட்டாஷாவின் மார்பு விம்மியது. அந்தக் கண்ணீருக்குக் காரணம் என்ன என்பது அவளுக்குத் தெரியாது. ஒரு மகிழ்ச்சியான, ஆனால் உள்ளத்தை அமுக்குகிற மாதிரியான உணர்ச்சி அவளை பரபரப்பு அடையும்படி செய்தது.

'நான் என்ன செய்ய வேண்டும், எப்படி வாழ வேண்டும், நான் எப்பொழுதுமே நல்லவளாக வளர்வதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதை எனக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும்' என்று அவள் பிரார்த்தித்தாள்.

உதவி குரு பலி பீட படுதாவுக்கு முன்னால் உள்ள உயரமான இடத்திற்கு வந்தார். தம்முடைய பெரு விரலை நீட்டி, தமது சட்டைக்கு உள்ளாகத் தொங்கிக் கொண்டிருந்த தமது நீண்ட தலை முடியை வெளியே இழுத்து, தமது மார்பில் சிலுவைக் குறி காட்டி, பலத்த பவித்திரமான குரலில் பிரார்த்தனையை ஆரம்பித்தார்...

'தேவனைப்பற்றி அமைதியோடு நாம் பிரார்த்தனை செய்வோமாக.'

'ஒரே சமூகமாக, வகுப்பு வித்தியாசம் எதுவும் இல்லாமல், துவேஷம் எதுவும் இல்லாமல், சகோதர அன்பால் கட்டுண்டு -நாம் பிரார்த்திப் போமாக' என்ற நட்டாஷா நினைத்தாள்.

'மேலேறு இருக்கும் சாந்திக்காகவும், தமது ஆத்மாவின் இரட்சிப்புக்காகவும்.'

'தேவதைகளின் உலகத்திற்காகவும், நமக்கு மேலே வசிக்கும் தேவதைகளுக்காகவும்' என்று நட்டாஷா பிரார்த்தித்தாள்.

அவர்கள் ராணுவத்தினருக்காகப் பிரார்த்தனை செய்தபோது, அவள் தன்னுடைய சகோதரரையும் டெனைசாவையும் பற்றி நினைத்தாள். நீரிலோ, நிலத்திலோ பிரயாணம் செய்கிறவர்களுக் காக அவர்கள் பிரார்த்தனை செய்தபோது, அவள் இளவரசர் ஆண்ட்ரூவை நினைத்து அவருக்காகப் பிரார்த்தனை செய்து, அவருக்குத் தான் இழைத்த எல்லா தவறுகளுக்கும் தன்னை மன்னிக்கும்படி கடவுளைக் கேட்டாள். தம்மை நேசிக்கிறவர்களுக் காக அவர்கள் பிரார்த்தனை செய்தபோது, அவள் தன்னுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்காகவும், தந்தைக்காகவும், தாயாருக்காகவும், சோனியாவுக்காகவும் பிரார்த்தனை செய்தாள். அச்சமயத்தான் முதல் தடவையாக அவர்களுக்கு எவ்வளவு தீங்கு செய்துவிட்டாள் என்பதை உணர்ந்தாள். அதை உணர்ந்ததும் அவர்கள் மீது அவளுக்குப் பூரணமான அன்பு ஏற்பட்டது. நம்மை வெறுக்கிறவர்களுக்காக அவர்கள் பிரார்த்தனை செய்தபோது, அவள் தன்னுடைய விரோதிகளுக்காகப் பிரார்த்தனை செய்வதற்காக, தன்னுடையவிரோதிகளும் தன்னை வெறுப்பவர் களும் யார் யார் என்பதை நினைவுகூர முயற்சித்தாள். அவளுடைய விரோதிகள் பட்டியலில், அவளுடைய தந்தைக்குக் கடன் கொடுத்தவர்களையும், கொடுக்கல்-வாங்கல் வைத்துக்கொண்டவர் களையும் அவள் சேர்த்துக் கொண்டாள். அவளுடைய விரோதி களையும், அவளை வெறுப்பவர்களையும் அவள் நினைக்கும் போதெல்லாம், அவளுக்கு இவ்வளவு தூரம் கெடுதல் செய்த அனடோலை அவள் நினைத்துக்கொள்ளுவாள்-அவர் அவளை வெறுக்கவில்லை என்றாலும், அவரை ஒரு எதிரியாகப் பாவித்து, அவருக்காக சந்தோஷமாகப் பிரார்த்தனை செய்வாள். பிரார்த்தனை சமயத்தில்தான் அவளால் இளவரசர் ஆண்ட்ரூவையும் அனடோலையும் பற்றித் தெளிவாகவும் அமைதியாகவும் உணர்ந்துகொள்ள முடிந்தது. ஆனால், கடவுளிடம் அவளுக்கு ஏற்பட்டிருந்த பயபக்தியோடும் ஆச்சரியத்தோடும் ஒப்பிடும் போது, மனிதர்கள் என்ற முறையில் அவர்கள் மீது அவளுக்கு ஏற்பட்டிருந்த உணர்ச்சிகள் வெகு அற்புதமாகத் தோன்றின. சக்கரவர்த்தியின் குடும்பத்தினருக்காகவும், குருக்கள் சங்கத்திற்காகவும் அவர்கள் பிரார்த்தனை நடத்தியபோது, அவள் தாழ்மையோடு தலை குனிந்து சிலுவைக் குறி செய்து, அவளுக்கு அது புரியாவிட்டாலும், அந்த குருக்கள் சங்கத்தை நேசிப்பதாகவும், அதைப் பற்றித் தனக்கு சந்தேகம் இல்லையென்றும், அதற்காகப் பிரார்த்தனை செய்வதாகவும், அவள் தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

சமுதாய விண்ணப்பத்தை உதவி குரு சொல்லி முடித்ததும், தமது வெளிச் சட்டையினால் தமது மார்பில் சிலுவைக் குறிகாட்டிச் சொன்னதாவது:

'நம்மையும் நம்முடைய முழு வாழ்க்கையையும் கிறிஸ்துவான அந்த ஆண்டவரிடம் ஒப்புவிப்போமாக.'

'கடவுளிடம் நம்மை ஒப்புவிப்போமாக' என்று நட்டாஷா தனக்குள்ளேயே திரும்பிச் சொன்னாள். 'கர்த்தரே, உம்முடைய சித்தத்திற்கு என்னை ஒப்புவிக்கிறேன்' என்று அவள் நினைத்தாள். 'எனக்கு எதுவும் தேவையில்லை. எதையும் நான் விரும்பவில்லை. நான் என்ன செய்ய வேண்டும், என்னுடைய சித்தத்தை எப்படி உபயோகிக்க வேண்டும் என்பதை எனக்கு நீர் சொல்லிக் கொடுப்பீராக' என்று நட்டாஷா, அமைதியற்ற உணர்ச்சிகள் அவள் உள்ளத்தில் பொங்க பிரார்த்தனை செய்தாள். அவள் தனக்கு சிலுவைக் குறி காட்டிக்கொள்ளவில்லை. தன்னுடைய மெல்லிய கரங்களைக் கீழே தொங்கவிட்டிருந்தாள். எந்த நிமிஷமும் கண்காணாத ஒரு சக்தி வந்து அவளை எடுத்துக்கொண்டு, அவளை அவளிடமிருந்தும், அவளுடைய வருத்தங்களிலிருந்தும், ஆசைகளிலிருந்தும், விசாரங்களிலிருந்தும், நம்பிக்கைகளி லிருந்தும், பாவங்களிலிருந்தும் விடுதலை செய்யும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பதைப்போலக் காணப்பட்டாள்.

தனது குமாரியின் தெளிந்த முகத்தையும், பிரகாசமான கண்களையும் பல தடவைகள் திரும்பிப் பார்த்த கோமகள், அவளுக்கு உதவி செய்யுமாறு கடவுளைப் பிரார்த்தித்தாள்.

அந்தப் பிரார்த்தனையின் மத்தியில் எதிர்பாராத விதத்தில் (வழக்கமாக அப்படி இல்லை என்பதை நட்டாஷா நன்றாய் அறிவாள்) அந்த உதவி குரு ஒரு சிறிய மணையை (திருமூர்த்தி ஞாயிறன்று எந்த மணையில் அவர் முழங்கால் படியிட்டுப் பிரார்த்தனை செய்தாரோ, அந்த மணையை) பரிசுத்தக் கதவுகளுக்கு முன்பாகக் கொண்டு வந்து வைத்தார். பிரதான குரு தலையில் சிவப்பு வெல்வெட் குல்லாயோடு வெளியே வந்தார். தமது தலை முடியைச் சரிசெய்துகொண்டு சிரமத்தோடு முழங்கால் படியிட்டார். ஒவ்வொருவரும் அவர் செய்ததைப்போல செய்தார்கள். ஒவ்வொருவரும் ஆச்சரியம் கொண்டு ஒருவரை ஒருவர் பார்த்தார்கள். அதன் பின்னால், குருக்கள் சங்கத்திலிருந்து அப்பொழுதுதான் வந்த பிரார்த்தனை ஆரம்பமாயிற்று. எதிரிகளின் படையெடுப்பிலிருந்து ருஷ்யாவைக் காப்பாற்ற வேண்டும் என்பதே அந்தப் பிரார்த்தனை.

'பலத்தின் கர்த்தாவே, எங்கள் ரட்சகக் கடவுளே' என்று அந்த பிரதான குரு தெளிவான, ஆனால் வாய்ச்சாலகம் இல்லாத, அமைதியான குரலில் ஆரம்பித்தார். இம்மாதிரி ஒரு ஸ்லாவ் குருக்கள்தான் வாசிக்க முடியும். அம்மாதிரி வாசிப்பது மிகுந்த வேகமாக ஒரு ருஷ்ய உள்ளத்தில் பதிய முடியும்.

'பலத்தின் கர்த்தாவே, எங்கள் ரட்சகக் கடவுளே' இந்த நாளை கருணையோடு பார்த்து, உம்முடைய தாழ்மையான மக்களை ஆசீர்வதித்து, தயாளம் கொண்டு நாங்கள் சொல்லுவதைக் கேட்டு, எங்களைக் காப்பாற்றி எங்கள் மீது கருணை கொள்வீராக. இந்த எதிரி உமது நாட்டைக் கலக்குகிறான்; உலகம் முழுவதையும் நாசமாக்க விரும்புகிறான்; எங்களுக்கு விரோதமாக அவன் கிளம்பியிருக்கிறான். உமது ராஜ்யத்தைக் கவிழ்ப்பதற்காகவும், உமது அருமையான ஜெருசலத்தையும், உமக்குப் பிரியமான ருஷ்யாவையும் நாசமாக்குவதற்காகவும், உமது கோயில்களைப் பாழாக்கி, உமது பலி பீடங்களைத் தகர்த்து எறிந்து, நமது பரிசுத்தக் கோயில்களை அசுத்தப்படுத்துவதற்காகவும், இந்த அநியாயமான மக்கள் எல்லாரும் ஒன்று கூடியிருக்கிறார்கள். எவ்வளவு காலம்தான், ஓ கடவுளே, எவ்வளவு காலம்தான், இந்த துஷ்டர்கள் வெற்றி பெற்றுக் கொண்டிருப்பது? எவ்வளவு காலம்தான், அவர்கள் அந்த அநியாயமான அதிகாரத்தை உபயோகித்துக் கொண்டிருப்பது?

'ஆண்டவனே, நாங்கள் உம்மிடம் செய்யும் பிரார்த்தனையைக் கேட்பீராக. எங்களுடைய மிகுந்த கருணைகொண்ட சக்கரவர்த்தியான அலெக்ஜாண்டர் பாவ்லாவிச்சுக்கு உம்முடைய பலத்தைக் கொடுத்து அவரைப் பலப்படுத்துவீராக. அவருடைய நேர்மையையும் பணிவையும் கவனிப்பீராக. அவருடைய நியாயத் தன்மைக்குத் தக்கபடி அவருக்குப் பரிசளிப்பீராக. உம்மால் தேர்ந்தெடுக்கப்பட்ட இஸ்ரேல்களாகிய எங்களை அது பாதுகாக்குமாக. அவருடைய மந்திரிகளையும், அவர் மேற்கொள்ளும் காரியங்களையும் ஆசீர்வதிப்பீராக. அவருடைய ராஜ்யத்தை உம்முடைய பராக்கிரமத்தால் பலப்படுத்துவீராக. நீர் அமாலெக் மீது மோசஸுக்குக் கொடுத்ததைப்போலவும், மிடியன் மீது கிடியனுக்குக் கொடுத்ததைப்போலவும், கோலியத் மீது டேவிட்டுக்குக் கொடுத்ததைப் போலவும், அவருடைய எதிரி மீது அவருக்கு வெற்றியைக் கொடுப்பீராக. அவருடைய ராணுவத்தைக் காப்பாற்றி, உமது பெயரால் ஆயுதம் தாங்கி நிற்பவர்களுக்குப் பித்தளையினாலான வில்களைக் கொடுத்து, சண்டை போடுவதற்கு

வேண்டிய தைரியத்தைக் கொடுப்பீராக. ஈட்டியையும் கேடயத்தையும் தாங்கி எங்களைக் காப்பாற்றப் புறப்படுவீராக. எங்களுக்கு விரோதமாகத் தீங்கு செய்கிறவர்களைக் கலக்கி அவமானப்படுத்துவீராக. காற்றுக்கு முன்பாகத் தூசி எப்படி இருக்குமோ அதே மாதிரி உம்முடைய விசுவாசமுள்ள வீரர்கள் முன்பாக அவர்கள் தோன்றும்படிச் செய்வீராக. உம்முடைய பராக்கிரம தேவதை அவர்களைக் குழப்பம் அடையச் செய்து, அவர்களை ஓடும்படிச் செய்யுமாக. அவர்களுக்குத் தெரியாதபடி, அவர்களை வலைகளுக்குள் அகப்படும்படிச் செய்து, அவர்கள் ரகசியமாகச் செய்த சூழ்ச்சிகள், அவர்களுக்கு விரோதமாகத் திரும்பும்படிச் செய்வீராக. உம்முடைய சேவகர்களின் காலடியில் அவர்கள் வந்து விழுந்து, அவர்களை நமது துருப்புகள் சமட்டும்படிச் செய்வீராக. ஆண்டவனே, உம்மில் சிறியவர் களையும் பெரியவர்களையும் காப்பாற்ற முடியும். நீர் கடவுள். உமக்கு எதிராக மனிதனால் எதுவும் செய்ய முடியாது.

'எங்கள் தந்தைகளின் கடவுளே, பழைய காலத்திலிருந்தே நீர் கருணையையும் அன்பையும் அருளி வந்திருக்கிறீர் என்பதை நினைவு கூர்வீராக. எங்களிடம் இருந்து உமது முகத்தைத் திருப்பிக்கொள்ள வேண்டாம். இந்த உபயோகமற்றவர்கள் மீது ' கருணை கொள்ளுவீராக. எங்களுடைய அநியாயங்களையும் பாபங்களையும் உம்முடைய மகா பெரிய நல்ல குணத்தினாலும் கருணையினாலும், பொருட்படுத்தாமல் இருப்பீராக. எங்களுடைய உள்ளத்தில் ஒரு இருதயத்தைத் தோற்றுவித்து, எங்களுக்குள் ஒரு நேர்மையான உணர்ச்சியை உண்டுபண்ணி, உம்மீது எங்களுக்குள்ள விசுவாசத்தைப் பலப்படுத்துவீராக. எங்களுடைய நம்பிக்கைக்கு அரண் செய்து, ஒருவர் மீது மற்றொருவருக்கு உண்மையான அன்பு ஏற்படும்படித் தூண்டுவீராக. பரம்பரையாக எங்களுக்கும் எங்கள் தந்தையருக்கும் நீர் கொடுத்ததைப் பாதுகாப்பதற்கு, ஒரு நேர்மையான ஒற்றுமை உணர்ச்சியைக் கொடுப்பீராக. உம்மால் புனிதப்படுத்தப் பட்டவர்களின் நன்மைக்கு விரோதமாக அந்தப் பொல்லாதவனின் செங்கோல் உயர விடாமல் செய்வீராக.

'நாங்கள் நம்பிக்கை கொண்டுள்ள, நாங்கள் உறுதிப்பாடு வைத்துள்ள எங்கள் கடவுளே, உமது கருணைக்காக நாங்கள் கொண்டுள்ள நம்பிக்கையில் எங்களிடம் குழப்பம் ஏற்படாதபடி செய்வீராக. உமது ஆசீர்வாதத்திற்கு ஒரு அடையாளத்தை எங்களுக்குக் கொடுத்து, எங்களையும் நமது புராதன மதத்தைச்

சேர்ந்தவர்களையும் வெறுக்கிறவர்கள் அதைப் பார்த்து, அவர்கள் அவமானம் அடைந்து நாசமாகும்படிச் செய்வீராக. அதன் மூலம் நீர்தான் கடவுள் என்பதையும், நாங்கள் உமது மக்கள் என்பதையும் எல்லா நாட்டவர்களும் தெரிந்துகொள்ளும்படி செய்வீராக. ஓ கடவுளே, இன்றே உமது கருணையை எங்களுக்குக் காட்டி உம்முடைய ரட்சையை எங்களுக்குக் கொடுப்பீராக. உமது கருணையினால் உமது சேவகர்களின் இருதயங்கள் மகிழ்ச்சியடையும்படிச் செய்வீராக. நமது எதிரிகளை அடித்து வீழ்ச்சி உமது சேவகர்களின் பாதங்களுக்கு அடியில் சீக்கிரமாக அவர்கள் நாசமடையும்படிச் செய்வீராக. ஏனெனில், நீர்தான் பாதுகாப்பு, நீர்தான் ஆதரவாளர்; உம்மீது நம்பகம் வைத்திருப்பவர்களுக்கு, நீர்தான் வெற்றி. உமக்கு-பிதா, மகன், பரிசுத்த ஆவி-இப்பொழுதும் எப்பொழுதும் முடிவில்லாத உலகத்தில் எல்லா மகிமையும் ஏற்படுவதாக. ஆமென்.'

நட்டாஷாவின் ஏங்கி நின்ற உள்ளத்தில் இந்த பிரார்த்தனை பலமாய்ப் பதிந்தது. அமாலெக் மீது மோசஸுக்கும், மிடியன் மீது கிடியனுக்கும், கோலியத் மீது டேவிட்டுக்கும் ஏற்பட்ட வெற்றிகளைப்பற்றி சொல்லிய ஒவ்வொரு வார்த்தையையும் 'உமது ஜெருசல'த்தை நாசமாக்குவதைப்பற்றி சொல்லியதையும் அவள் கவனமாய் கேட்டாள். அவள் உள்ளத்தில் பொங்கிக்கொண்டிருந்த கனிவோடும் உணர்ச்சியோடும் கடவுளைப் பிரார்த்தித்தாள். ஆனால், கடவுளை அந்தப் பிரார்த்தனையில் அவள் என்ன கேட்டுக்கொண்டாள் என்பதைப் பூரணமாய் அறியாமல் இருந்தாள். நேர்மையான உணர்ச்சிக்கும், நம்பிக்கையினாலும் பற்றுதலினாலும் உள்ளத்தை பலப்படுத்துவதற்கும், அன்பினால் அது உற்சாகம் அடையும்படிச் செய்வதற்கும் மனப்பூர்வமாக அந்தப் பிரார்த்தனையில் அவள் கலந்து கொண்டாள். ஆனால், அவளுடைய விரோதிகளைக் காலின் கீழ் போட்டு நசுக்க வேண்டும் என்று அவளால் பிரார்த்தனை செய்ய முடியவில்லை. ஏனெனில், சில நிமிஷங்களுக்கு முன்புதான் தன்னுடைய எதிரிகளுக்காக அவள் பிரார்த்தனை செய்தபோது, அப்படி பிரார்த்தனை செய்வதற்கு தனக்கு அதிகமான எதிரிகள் இல்லையே என்று அவள் நினைத்தாள். ஆனால், முழங்கால் படியிட்டு நடந்த பிரார்த்தனையின் புனிதத்தைப் பற்றி அவள் சந்தேகப்படவும் இல்லை. மனிதர்கள் தங்கள் பாவங்களுக்காக அடையும் தண்டனைகளைப் பற்றியும், முக்கியமாகத் தனது பாவங்களைப் பற்றியும் அவள் நினைத்தபோது, அவளுடைய உள்ளத்தில் பக்தியும் நடுக்கமும் கொண்ட பயபக்தி ஏற்பட்டது.

தன்னையும்கூடக் கடவுள் மன்னித்து, எல்லாருக்கும், தனக்கும்கூட சாந்தியையும் சந்தோஷத்தையும் கொடுக்கும்படி பிரார்த்தித்தாள். அவளுடைய பிரார்த்தனையைக் கடவுள் கேட்டதாக அவளுக்குத் தோன்றியது.




நட்டாஷாவின் நன்றியுள்ள பார்வை மனதில் இன்னமும் ஸ்பஷ்டமாயிருக்கும் போது, ராஸ்டோவ்களின் வீட்டைவிட்டுப் பீயர் வெளியே வந்தார். வானத்தில் நிலையாகப் பதிந்திருப்பதுபோல தோன்றிய அந்த வால் நட்சத்திரத்தையும் அவர் பார்த்தார். தம்முடைய வாழ்க்கையில் ஏதோ ஒன்று புதிதாகத் தோன்றுவதுபோல அவர் உணர்ந்தார். அன்று முதல் இகபோக காரியங்கள் எல்லாம் உபயோகமற்றவை என்றோ, வீண் பெருமை கொண்டதென்றோ, அவர் மனதில் தோன்றி, அவரை இடைவிடாமல் துன்புறுத்தி வந்த அந்தப் பிரச்னை, இப்பொழுது அவரிடம் தோன்றவில்லை. 'ஏன்? எதற்காக?' என்ற பயங்கரமான கேள்விகள், அவர் என்ன வேலை செய்துகொண்டிருந்தபோதிலும், அடிக்கடி அவரிடம் வந்து தோன்றுவதுண்டு. அந்தக் கேள்விக்குப் பதிலாக வேறொன்று அவர் மனதில் தோன்றியது. அந்தக் கேள்விக்குப் பதிலோ, அல்லது மற்றொரு கேள்வியோ, அவரிடம் வந்து தோன்றுவதில்லை. ஆனால், அவளுடைய உருவம் ஒன்றே அவருடைய மனதில் வந்து நின்றது. அவர் எதையாவது கவனித்துக்கொண்டிருக்கும்போதும், அல்லது எதிலாவது கலந்துகொண்டிருக்கும்போதும், அல்லது சாதாரண உரையாடல்களில் அவர் ஈடுபட்டிக்கும் போதும், மக்களின் அறியாமை அல்லது இழிவான செய்கைகளைப் பற்றி அவர் கேட்கும்போதும், அல்லது வாசிக்கும்போதும், முன்பு அவர் கொண்டதைப்போல பயங்கரம் கொள்வதில்லை. இவையெல்லாம் புத்திக்கு எட்டாதவைகளாகவும், தற்காலிக மாகவும் இருக்கும்போது, எதற்காக இம்மாதிரி விஷயங்களில் மக்கள் போராடிக்கொண்டிருக்கிறார்கள் என்று அவர் தம்மைக் கேட்டுக்கொள்வதுமில்லை. ஆனால், கடைசியாக அவளைப் பார்த்த அதே உருவத்தை அவர் நினைவில் கொண்டிருந்தார். அவருடைய சந்தேகங்கள் எல்லாம் மறைந்துவிட்டன. அவரைத் துன்புறுத்தி வந்த கேள்விகளுக்கு எல்லாம் அவள் பதில் கொடுத்து விட்டாள் என்பதல்ல; ஆனால், அவளைப் பற்றி அவர் உருவம் கொண்டிருந்த நினைப்பானது அவரை மற்றொரு உலகத்திற்கு

மாற்றியது. ஒரு பிரகாசமான, ஒருவரை சரியென்றோ தப்பென்றோ சொல்ல முடியாத, ஆத்மார்த்தீக செய்கைகள் நிறைந்த உலகத்திற்கு அவர் மாறிவிட்டார்; வாழக் கூடிய பெருமையுள்ள அழகும் காதலும் நிறைந்த ஒரு உலகத்திற்கு அவர் மாறிவிட்டார். எந்த விதமான, இகலோக, இழிவான விஷயங்கள் அவருக்குத் தோன்றியபோதிலும் அவர் பின்வருமாறு தமக்குள் சொல்லிக்கொள்வார்:

'என்.என். என்பவர் தமது நாட்டையோ, அல்லது ஜார்ஜ் சக்கரவர்த்தியையோ ஏமாற்றிப் பணத்தைச் சுருட்டிக்கொண்டார் என்று வைத்துக்கொள்ளுவோம். அந்த மனிதருக்கு நமது நாடும் சக்கரவர்த்தியும் பட்டங்கள் அளிக்கிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அதனால் என்ன வந்துவிட்டது? நேற்று என்னைப் பார்த்து அவள் புன்முறுவல் கொண்டாள். மீண்டும் வரவேண்டுமென்று அவள் என்னிடம் சொன்னாள். நான் அவளைக் காதலிக்கிறேன். வேறு யாருக்கும் அது எப்பொழுதும் தெரியப்போவதில்லை' அவருடைய ஆத்மா அமைதியும் சாந்தமும் அடைந்ததாக அவர் உணர்ந்தார்.

பீயர் இன்னமும் உயர் வட்டாரங்களில் கலந்து வந்தார். ஏராளமாய் குடித்தும், பழைய விதமான சோம்பேறித்தனமான, வியர்த்தமான வாழ்க்கையை நடத்தியும் வந்தார். ஏனெனில், ராஸ்டோவ்களின் வீட்டில் அவர் செலவிட்ட நேரம் போக, மீதி நேரத்தை அவர் எப்படியாவது செலவிட்டாக வேண்டும். மாஸ்கோவில் அவருக்கு ஏற்பட்ட பழக்கங்களும் ஒரு வேமாக உருவெடுத்து அவர் தடுக்க முடியாத விதத்தில் அவரைத் தள்ளிக்கொண்டு போயின. ஆனால், யுத்த முனையிலிருந்து மனதிற்குக் கஷ்டமான அறிக்கைகள் அதிகமாக வர ஆரம்பித்தன. நட்டாஷாவின் ஆரோக்கியமும் அபிவிருத்தி அடைய ஆரம்பித்தது. அதனால், அவளிடம் அவருக்கு முன்பு தோன்றி வந்த கவலையோடு கூடிய இரக்க உணர்ச்சி இப்பொழுது ஏற்படுவதில்லை. அந்த யுத்தச் செய்திகளினால், அவரால் காரணம் சொல்ல முடியாத ஒரு மனக்குழப்பம் அவரைப் பற்றிக் கொண்டது. இப்பொழுது இருக்கிற நிலைமை வெகு காலம் நீடிக்க முடியாது என்று அவர் உணர்ந்தார். ஒரு பெரிய பயங்கரமான விபத்து வரப்போவதாகவும், அது அவருடைய முழு வாழ்க்கையையும் மாற்றி விடுமென்றும் அவர் நினைத்தார். அந்த வரப்போகிற பேராபத்திற்கான அறிகுறிகளை அவர் ஆத்திரத்தோடு ஒவ்வொரு பக்கமும் தேடினார். அவருடைய சகோதர பிரீ மேசன்களில் ஒருவர், அவருக்கு

நெப்போலியனைப் பற்றிய ஒரு தீர்க்க தரிசனத்தை எடுத்துக் காட்டினார். அது செயின்ட் ஜானின் அறிவிப்பிலுள்ளது.

13-வது அத்தியாயத்தில், 18-வது சுலோகத்தில், அந்த அறிவிப்பு ஆகமத்தில் சொல்லப்பட்டிருப்பதாவது:

'இதோ இருக்கிறது மெய்ஞ்ஞானம். இதை அறியக்கூடிய ஆற்றல் உள்ளவர்கள், அந்த மிருகத்தின் எண்ணிக்கையைக் காட்டுவார்களாக. ஏனெனில், அந்த எண்ணிக்கை ஒரு மனிதனுடையதாகும். அந்த எண்ணிக்கை 666.'

அந்த அறிவிப்பு ஆகமத்தில், அதே அத்தியாயத்தில், 5-வது சுலோகத்தில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது:

'பெரிய விஷயங்களையும், தெய்வ நிந்தனையான விஷயங்களையும் பேசுவதற்கு, அவனுக்கு ஒரு வாய் உண்டு. 40-ம் இரண்டு மாதங்களும் வரையில் அவனுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.'

அந்த எண்ணிக்கையைக் கூட்டிப் பார்ப்பதற்கு, ஆங்கில எழுத்துக்களில் ஒவ்வொன்றிற்கும் ஒரு எண்ணிக்கை கொடுக்கப்பட்டிருந்தது. அது ஹிப்ரு மொழியில் உள்ளது. பின்கண்ட விதமாக அதன் எண்ணிக்கைகளைக் கூட்ட வேண்டும்:

| எ | பி | ஸி | டி | இ | எப் | ஜி | எச் | ஐ | கே | எல் | எம் | என் | ஓ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 20 | 30 | 40 | 50 |

| பி | க்யூ | ஆர் | எஸ் | டி | யூ | வி | டபிள்யூ | எக்ஸ் | ஒய் | இஸட் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 60 | 70 | 80 | 90 | 100 | 110 | 120 | 130 | 140 | 150 | 160 |

பிரஞ்சு பாஷையில் நெப்போலியன் சக்கரவர்த்தி என்று எழுதி அதற்குரிய எண்ணிக்கைகளைப் போட்டுக் கூட்டியனால் 666 வருகிறது. ஆகவே, அந்த அறிவிப்பு ஆகமத்தில் தீர்க்க தரிசனம் சொல்லியிருந்த அந்த மிருகம், நெப்போலியன்தான் என்று ஏற்படுகிறது. அதே முறையில் 42 என்ற வார்த்தைக்குரிய எண்ணிக்கைகளைக் கூட்டினாலும், அதே 666 தான் வருகிறது. 'பெரிய காரியங்களையும் தெய்வ நிந்தனைகளையும்' இதிலிருந்து, நெப்போலியனின் அதிகாரத்துக்குக் கடைசியாகக் குறிப்பிடப்பட்டிருந்த வருஷம் 1712 என்று ஏற்படுகிறது. அந்த வருஷத்தில்தான் பிரஞ்சு சக்கரவர்த்திக்கு 42 வயது ஆகிறது. இந்த தீர்க்க தரிசனம் பீயருக்கு மிகவும் பிடித்தமாய் இருந்தது. அவர் அந்த மிருகத்தின் அதிகாரத்தை அழிக்கக்கூடியது எது என்பதை, தமக்குத் தாமே அடிக்கடி கேட்டுக்கொண்டிருந்தார். இந்த எண்ணிக்கை முறையைக் கையாண்டு, பற்பல விதமான எழுத்துக்களைச் சேர்த்து,

அவற்றிற்குரிய எண்ணிக்கைகளைப் போட்டு, கூட்டிப் பார்த்து, இதற்கு விடையைக் கண்டுபிடிக்க முயற்சித்துக்கொண்டிருந்தார். அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி என்றும், பெயர்களை எழுதி, அவற்றிற்குரிய எண்ணிக்கைகளைப் போட்டுக் கூட்டிப் பார்த்தார். இந்தத் தொகைகள் எல்லாம் 666-க்கு மேலாகவோ, கீழாகவோ காணப்பட்டன. அம்மாதிரி அவர் கூட்டிக்கொண்டிருக்கும்போது, தமது பெயரையும் எழுதி கூட்டிப் பார்த்தார். அதுவும் சரியாக வரவில்லை. பின்னால், எழுத்துக்களில் சிலவற்றை மாற்றிப் பார்த்தார். அதிலும் விரும்பிய பலன் கிடைக்கவில்லை. அந்தக் கேள்விக்குப் பதில் தமது பெயரில் இருக்குமானால், தமது நாட்டின் பெயரையும் சேர்த்துக் கூட்டிப் பார்க்கவேண்டுமென்று அவருக்குத் தோன்றியது. அப்படிக் கூட்டிப் பார்த்தபோது 671 என்று விடை கிடைத்து. இப்பொழுது 5 அதிகமாய் இருக்கிறது. 'இ' என்ற எழுத்து 5 எண்ணிக்கை கொண்டது. அந்த 'இ' என்ற எழுத்தை எடுத்துவிட்டு பீயர் தமக்கு வேண்டிய பதிலைப் பெற்றார். அது தவறானது. என்றாலும், இந்த எண்ணிக்கை முடிவினால் அவர் உற்சாகம் கொண்டார். அந்த அறிவிப்பு ஆகமத்தில் தீர்க்க தரிசனம் சொல்லப்பட்டிருந்த அந்த பெரிய சம்பவத்தோடு இவர் எப்படி, எம்மாதிரியாக சம்பந்தப்பட்டவர் என்பது பீயருக்குத் தெரியாது. என்றாலும், அந்த சம்பந்தத்தை அவர் ஒரு வினாடிகூட சந்தேகிக்க வில்லை. நட்டாஷா மீது அவர் கொண்ட காதல், கிறிஸ்துவ துரோகி நெப்போலியன், படையெடுப்பு, வால் நாட்சத்திரம், 666, நெப்போலியன் சக்கரவர்த்தி, ருஷ்ய பெஜூகாவ், இவையெல்லாம் பக்குவம் அடைந்த அந்த சூனியத்தால் மூடப்பட்ட அற்பத்தனமான சூழ்நிலை கொண்ட மாஸ்கோ பழக்க வழக்கங்களில் இருந்து தம்மை விடுவித்து, ஒரு பெரிய வெற்றிக்கும், மகிழ்ச்சிக்கும் தம்மை நடத்திச் செல்வதற்காக, இவையெல்லாம் பக்குவம் அடைந்து முடிவு பெறவேண்டும்.

விசேஷப் பிரார்த்தனை நடந்த ஞாயிற்றுக்கிழமைக்கு முதல் நாளன்று, ராஸ்டோவ்களுக்கு ஒன்று கொண்டுவருவதாக பீயர் கூறியிருந்தார். கோமகன் ராஸ்டாப்சைனை அவருக்கு நன்றாகப் பழக்கமுண்டு. மக்களுக்கு விடுத்த பிரகடனத்தையும், ராணுவத்தைப் பற்றிய கடைசியாக வந்த செய்தியையும் கொண்டுவருவதாகச் சொல்லியிருந்தார். காலையில் ராஸ்டாப்சைனின் மாளிகைக்குப் போனார். ராணுவத்திலிருந்து அப்பொழுதுதான் வந்திருந்த ஒரு தூதரை அங்கே அவர் பார்த்தார். அவரை பீயருக்கு முன்பே பழக்கமுண்டு. மாஸ்கோ நடனக் கச்சேரிகளில் அந்த தூதர் அடிக்கடி நடனமாடுவதுண்டு.

'கடவுளுக்காக, தயவுசெய்து, இவற்றில் சிலவற்றை எடுத்துக் கொண்டு, என்னுடைய பொறுப்பைக் குறைப்பீராக. ஒரு சாக்கு நிறைய பெற்றோர்களுக்குக் கடிதங்களைக் கொண்டு வந்திருக்கிறேன்' என்று அந்த தூதர் சொன்னார்.

இந்தக் கடிதங்களில் நிக்கலஸ் ராஸ்டோவிடமிருந்து அவருடைய தந்தைக்கு வந்த கடிதமும் ஒன்று. அந்தக் கடிதத்தைப் பீயர் எடுத்துக்கொண்டார். அப்பொழுதுதான் அச்சாயிருந்த, மாஸ்கோவாசிகளுக்கு, சக்கரவர்த்தி விடுத்த வேண்டுகோளையும், கடைசியாக ராணுவத்தில் பிறப்பித்த உத்தரவுகளையும் பீயருக்கு ராஸ்டாப் சைன் கொடுத்தார். தாம் சமீபத்தில் வெளியிட்ட ஒரு அறிக்கையையும் அவர் கொடுத்தார். ராணுவ உத்தரவுகளை பீயர் பரிசீலனை செய்தார். காயமடைந்தவர்கள், கொல்லப்பட்டவர்கள், பரிசுகள் பெற்றவர்கள் ஆகியவர்களின் பெயர்கள் அவற்றில் காணப்பட்டன. ஆஸ்ட்ரோவ்னா சம்பவத்தில் வீரத்தைக் காட்டியதற்காக, நான்காம் வகுப்பு செயின்ட் ஜார்ஜ் பதக்கம் நிக்கலஸ் ராஸ்டோவுக்கு கொடுத்திருப்பதை அவர் பார்த்தார். குதிரைப் படை பட்டாளம் ஒன்றுக்கு இளவரசர் ஆண்ட்ரூ பால்கோன்ஸ்கி கமாண்டராக நியமிக்கப்பட்டிருப்பதையும் அந்த உத்தரவில் கண்டார். பால்கோன்ஸ்கியைப் பற்றி ராஸ்டோவ் களுக்கு நினைவூட்ட பீயருக்கு விருப்பமில்லை. என்றாலும், அவர்களுடைய குமாரர் ஒரு பதக்கம் பெற்றிருப்பதைக் கண்டு அவர்கள் சந்தோஷமடைவதைத் தடுப்பதற்குப் பீயரால் முடியவில்லை. ஆகவே, நிக்கலஸின் கடிதத்தையும், அந்த அச்சடித்த ராணுவ உத்தரவையும், ராஸ்டோவ்களின் வீட்டிற்கு அனுப்பினார். சக்கரவர்த்தி விடுத்த பிரகடனத்தையும், ராஸ்டாப்சைன் விடுத்த அறிக்கையையும், மற்ற உத்தரவுகளையும் தாம் அங்கே டின்னர் சாப்பிடப் போகும்பொழுது கொடுக்கலாம் என்று தம்முடன் வைத்துக்கொண்டார்.

கோமகன் ராஸ்டாப்சைனுடன் அவர் பேசிய உரையாடல், கோமகன் தொனியிலுள்ள கவலையுள்ள அவசரம் ராணுவத்தில் நிலைமை எவ்வளவு மோசமாக இருக்கிறது என்பதைப் பற்றி அந்த தூதர் தற்செயலாகச் சொல்லிய விஷயங்கள், மாஸ்கோவில் ஒற்றர்கள் அகப்பட்டார்கள் என்று வதந்திகள், இரண்டு ருஷ்யத் தலைநகர்களிலும் மழை காலத்தில் தாம் இருக்கப் போவதாக நெப்போலியன் சொல்லிய உறுதியைப் பற்றி அச்சமயம் பரவிக்கொண்டிருந்த ஒரு துண்டுப் பிரசுரம், மறுநாள் அங்கே சக்கரவர்த்தி விஜயம் செய்யப்போகிறார் என்ற பேச்சு, இவையெல்லாம் சேர்ந்து புதிய வேகத்தோடு, ஒரு பரபரப்பையும்

ஆவலையும் பீயரிடம் தோற்றுவித்தன. வால் நட்சத்திரம் தோன்றியதிலிருந்து, முக்கியமாக யுத்தம் ஆரம்பமானதிலிருந்து அத்தகைய உணர்ச்சிகள் பீயரிடம் இருந்து வருவதை அவர் அறிவார்.

ராணுவத்தில் சேரவேண்டுமென்று வெகு காலமாக அவர் யோசித்து வந்தார். அவர் அம்மாதிரி முன்பே செய்திருப்பார். அப்படிச் செய்யாமல் இரண்டு காரணங்கள் அவரைத் தடுத்து வந்தன. முதலாவதாக, அவர் பிரீமேசன் சங்கத்தில் ஒரு அங்கத்தினர். நிரந்தரமான சமாதானத்திற்கும், யுத்தத்தை ஒழிப்பதற்கும் பிரசாரம் செய்து வந்த அந்த சங்கத்தின் கோரிக்கைக்கு பிரமாணம் மூலம் அவர் கட்டுப்பட்டிருந்தார். இரண்டாவதாக, ஏராளமான மாஸ்கோ வாசிகள் யூனிபாரங்களை அணிந்துகொண்டு, தேச பக்தியைப் பற்றிப்பேசி வருவதைக் கண்ட பின்பு, அவர் ராணுவத்தில் சேருவதற்கு வெட்கமடைந்தார். ஆனால், ராணுவத்தில் சேரவேண்டுமென்ற அவருடைய தீர்மானத்தை நிறைவேற்றாத தற்கு முக்கியமான காரணம் மற்றொன்றில் இருந்தது. அதாவது, அந்த மிருகத்தின் இலக்கங்களான, '666' என்ற எண்ணிக்கை, தம்முடைய பெயராகிய லே ரூஸே பெசுஹாப் என்பதில் அடங்கியிருக்கிறது என்ற கருத்து அவர் உள்ளத்தில் இருந்து வந்தது. பிரமாதமாக தெய்வ நிந்தனையான விஷயங்களைப் பேசி வருகிற அந்த மிருகத்தின் பலத்தை முறிக்கவேண்டிய பொறுப்பு தம்மிடமே இருப்பதாக அவர் நினைத்தார். அந்த விஷயம் அனாதி காலத்திலிருந்தே முன்பாகவே தீர்மானிக்கப் பட்டிருப்பதாகவும் அவர் நினைத்தார். ஆகவே, அந்த சமயம் வருகிற வரையில் அவர் காத்திருக்க வேண்டுமென்றும், அதற்காக வேறு எதையும் செய்வதற்கு பொறுப்பை ஏற்றுக்கொள்ளக்கூடாதென்றும் அவர் நினைத்தார்.

## 9

### 20

ஞாயிற்றுக் கிழமைகளில் வழக்கமாக நடப்பதுபோல, அன்றும் சில அன்னியோன்னிய நண்பர்கள், ராஸ்டோவ்கள் வீட்டில் டின்னர் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

ராஸ்டோவ்களைத் தனியாக சந்திப்பதற்காக, பீயர் சீக்கிரமாக வந்துவிட்டார்.

இந்த வருஷம் அவர் அதிகமாகப் பருத்திருந்தார். அவர் மட்டும் அவ்வளவு உயரமாவும், கால் கைகள் அவ்வளவு பெரிதாகவும்

இல்லாமலிருந்தால், அவர் மிகவும் பிரம்மாண்டமாகக் காணப்பட்டிருப்பார். அவர் மிகவும் பலசாலியாக இருந்தபடியால், அவருடைய உடல் கனத்தை அனாயாசமாகக் கையாண்டு வந்தார்.

எதையோ முணுமுணுத்துக்கொண்டும், மூச்சு விட்டுக் கொண்டும், மெத்தைப் படிகளில் ஏறிப்போனார். அவருடைய வண்டிக்காரன், காத்திருக்க வேண்டுமா என்பதைக்கூட கேட்கவில்லை. ராஸ்டோவ்களின் வீட்டிற்குத் தன்னுடைய எஜமானர் வந்தால், நடு இரவு வரையில் அங்கே தங்குவார் என்பதை அவன் அறிவான். ராஸ்டோவ்களின் வேலைக்காரன் ஆவலோடு அவரிடம் வந்து, அவருடைய வெளிச் சட்டையையும் தொப்பியையும் கைத்தடியையும் வாங்கிக்கொண்டான். கிளப்பில் ஏற்பட்ட பழக்கத்தினால், தொப்பியையும் கைத்தடியையும் பீயர் எப்போதும் முன் அறையில் வைத்து விடுவது வழக்கம்.

அந்த வீட்டில் முதல் முதலாக அவர் நட்டாஷாவையே பார்த்தார். அவளைப் பார்ப்பதற்கு முன்பே, தமது வெளிச் சட்டையைக் கழற்றிக்கொண்டு இருக்கும்போது, அவள் குரலை அவர் கேட்டார். சங்கீத அறையில் அவள் சாதகம் செய்து கொண்டிருந்தாள். அவளுக்கு உடம்பு அசௌக்கியமானதிலிருந்து அவள் பாடவில்லை என்பதை அவர் அறிவார். ஆகவே, அவளுடைய குரல் அவருக்கு ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் கொடுத்தது. அவர் மெதுவாகக் கதவைத் திறந்து அவளைப் பார்த்தார். மாதா கோயிலில் அவள் தரித்திருந்த அதே பூப்போட்ட பட்டு உடையை அணிந்திருந்தாள். பாடிக்கொண்டே அந்த அறையில் அங்கும் இங்கும் போய்க்கொண்டிருந்தாள். அவர் கதவைத் திறந்தபோது, அவள் முதுகைக் காட்டி நின்றுகொண்டிருந்தாள். ஆனால், திடீரென்று அவள் திரும்பியபோது, அவருடைய ஆச்சரியமான, அகலமான முகத்தை அவள் கண்டதும், முகம் சிவந்து நாணி வேகமாக அவரிடம் வந்தாள்.

'நான் மீண்டும் பாடுவதற்கு முயற்சி செய்ய விரும்புகிறேன்' என்று அவள் சொல்லிவிட்டு, ஏதோ சமாதானம் கூறுபவளைப் போல, 'ஏதோ செய்வதற்கு அதாவது இருக்கிறது' என்று சொன்னாள்.

'அது ரொம்ப சிலாக்கியமானது.'

'நீர் வந்ததற்காக, நான் எவ்வளவு சந்தோஷமடைகிறேன்! நான் இன்று மிகுந்த மகிழ்ச்சியோடு இருக்கிறேன்' என்று சொன்னாள். அவள் பேசியது, பழைய உற்சாகத்தோடு இருந்தது. அந்த உற்சாகத்தை, இதற்கு முன் வெகு காலமாக அவளிடம் பீயர்

பார்த்ததில்லை. 'நிக்கலஸுக்கு செயின்ட் ஜார்ஜ் பதக்கம் கிடைத்திருக்கிறது என்பது உமக்குத் தெரியுமா? அவரைப் பற்றி நான் மிகவும் பெருமை அடைகிறேன்.'

'ஆமாம், நான்தான் அந்த அறிவிப்பை உனக்கு அனுப்பினேன். ஆனால், உன்னை இடைமறிக்க நான் விரும்பவில்லை' என்று அவர் சொல்லிவிட்டு, வரவேற்பு அறைக்குப் போவதற்காகப் புறப்பட்டார்.

நட்டாஷா அவரை நிறுத்தினாள்.

'கோமகனே, நான் பாடுவது குற்றமா?' என்று அவள் நாணி முகம் சிவந்து, தனது கண்களைக் கேள்விக் குறியோடு அவர் மீது பதித்துக் கேட்டாள்.

'இல்லை... அது ஏன் அப்படி இருக்கவேண்டும்? அதற்கு மாறாக... ஆனால், என்னை ஏன் நீ கேட்கிறாய்?'

'எனக்கே அது தெரியாது' என்று நட்டாஷா வேகமாய் பதில் சொன்னாள். 'ஆனால், உமக்கு பிரியமில்லாத எதையும் நான் செய்ய விரும்பமாட்டேன். நான் உம்மிடம் பூர்ண நம்பிக்கை கொண்டிருக்கிறேன். நீர் எனக்கு எவ்வளவு முக்கியமானவர் என்பதும், எனக்காக எவ்வளவு தூரம் செய்திருக்கிறீர் என்பதும், உமக்குத் தெரியாது...' பீயர் அவளுடைய வார்த்தைகளைக் கேட்டு எம்மாதிரி முகம் சிவந்தார் என்பதைக் கவனிக்காமலே, அவள் வேகமாப் பேசினாள். 'அதே ராணுவ உத்தரவில், அவர்; பால்கோன்ஸ்கி (அந்தப் பெயரை அவசரமாய் மெதுவாய் சொன்னாள்.) ருஷ்யாவில் இருப்பதாகவும், மீண்டும் ராணுவத்தில் இருப்பதாகவும் நான் பார்த்தேன். நீர் என்ன நினைக்கிறீர்?- தன்னுடைய தைரியம் எங்கே போய்விடுமோ என்று பயந்தவளாய், வேகமாய் பேசினாள்.- அவர் எப்பொழுதாவது என்னை மன்னிப்பாரா? என்னைப் பற்றி அவர் எப்பொழுதுமே ஒரு கசப்பான உணர்ச்சியைக் கொண்டிருக்க மாட்டாரா? நீர் என்ன நினைக்கிறீர்? நீர் என்ன நினைக்கிறீர்?'

'நான் நினைக்கிறேன்...' என்று பீயர் பதிலளித்தார். மன்னிப்பதற்கு அவருக்கு எதுவுமில்லை... நான் மட்டும் அவருடைய நிலைமையில் இருந்திருந்தால்...'

அவளைத் தேற்றுவதற்காக அவர் முயற்சித்த நாளன்று நடந்த விஷயங்கள், இந்த சிந்தனைத் தொடர்புகளினால் அவருடைய நினைவிற்கு வந்தன. அவர் அவராக இல்லாமல், உலகத்தில் அவர் சிறந்தவராக இருப்பாரானால், அவர் சுதந்திரமாக இருப்பாரானால்,

முழங்கால் படியிட்டு அவளை திருமணம் செய்ய அனுமதி கேட்பார் என்று அவர் அந்த தினத்தில் கூறினார். அதே மாதிரியான இரக்கமும் கனிவும் அன்பும் கொண்ட உணர்ச்சிகள் அவரைப் பற்றின. மீண்டும் அதே வார்த்தைகள் அவருடைய உதடுகளுக்கு வந்தன. ஆனால், அவர் அவற்றைச் சொல்லுவதற்கு, அவள் அவகாசம் கொடுக்கவில்லை.

'ஆம், நீர்... நீர்...' என்று அவள் சொன்னாள். 'நீர்' என்ற அந்த வார்த்தையைப் பரவசத்தோடு கூறினாள். - அது வேறு விஷயம். உம்மை விட அதிகமாக பிரியத்தோடும், தாராள மனப்பான்மையோடும் இருப்பவர் எவரையும் நான் அறியேன். ஒருவரும் இருக்க முடியாது. அச்சமயத்தில் நீர் அங்கே வராமல் இருந்திருந்தால், (இப்போதும்கூட) எனக்கு என்ன ஏற்பட்டிருக்கும் என்பது எனக்குத் தெரியாது. ஏனென்றால்...'

திடீரென்று அவளுடைய கண்களில் கண்ணீர் கிளம்பியது. அவள் திரும்பிக்கொண்டாள். தனது சங்கீத பாடத்தைக் கண்கள் முன்பாகப் பிடித்துக்கொண்டு, மீண்டும் பாட ஆரம்பித்தாள். அதன் பின்னால், மீண்டும் அந்த அறையில் மேலும் கீழும் நடக்க ஆரம்பித்தாள்.

அச்சமயத்தில் வரவேற்பு அறையிலிருந்து பெட்டியா ஓடி வந்தான்.

பெட்டியா இப்போது ஒரு அழகான ரோஜா வர்ணம் கொண்ட பதினைந்து வயது வாலிபனாக சிவந்த உதடுகளோடு விளங்கினான். நட்டாஷாவைப் போலவே அவனும் ஜாடையில் காணப்பட்டான். சர்வ கலாசாலையில் சேர்ந்து படிப்பதற்கு அவன் தயாராகிக் கொண்டிருந்தான். ஆனால், அவனும் அவனுடைய நண்பன் ஆபாலென்ஸ்கியும், சமீப காலத்தில் குதிரைப் படையில் சேர்ந்து கொள்ள வேண்டுமென்று ரகசியமாகத் தீர்மானித்திருந்தார்கள்.

தன்னுடைய பெயருடைய பீயரிடம் இந்த விஷயத்தைப் பற்றி பேசுவதற்காக ஓடிவந்தான். தன்னை குதிரைப்படையில் சேர்த்துக் கொள்வார்களா என்பதை அறிந்து சொல்லும்படி அவன் பீயரிடம் கேட்டுக்கொண்டான்.

அந்த வரவேற்பு அறையில், பெட்டியா சொல்லுவதைக் கவனித்துக் கேட்காமல், மேலும் கீழும் பீயர் நடந்துகொண்டிருந்தார்.

பெட்டியா அவருடைய கையைப் பிடித்து இழுத்து, அவர் கவனத்தைத் திருப்ப முயற்சித்தான்.

'நல்லது, எனது அன்பரே, நீர் அந்த பிரகடனத்தைக் கொண்டு வந்தீரா?' என்று வயோதிகக் கோமகன் கேட்டார். 'ரஜு

மோவ்ஸ்கிகளுடைய தேவாலயப் பிரார்த்தனைக்குக் கோமகள் போயிருந்தாள். புதிய பிரார்த்தனையை அவள் அங்கே கேட்டாள். அது மிகவும் நன்றாய் இருக்கிறதென்று அவள் சொல்லுகிறாள்.'

'ஆம், நான் அதைக் கொண்டு வந்திருக்கிறேன். நாளை சக்கரவர்த்தி இங்கே விஜயமாவதாய் இருக்கிறது... பிரபுக்களின் விசேஷமான கூட்டம் ஒன்று நடக்கும். ஆயிரம் பேருக்கு பத்துப் பேர் வீதம், ராணுவத்திற்கு ஆள் சேர்க்க வேண்டுமென்று, அவர்கள் பேசிக்கொண்டிருக்கிறார்கள். ஆமாம், நான் உம்மைப் பாராட்டுகிறேன்.'

'ஆம், ஆம். கடவுளுக்கு நன்றி. நல்லது, ராணுவத்திடமிருந்து ஏதாவது செய்தி உண்டா?'

'நாம் மீண்டும் பின்வாங்கிக்கொண்டிருக்கிறேன். நாம் ஏற்கெனவே ஸ்மாலென்ஸ்குக்குப் பக்கத்தில் வந்துவிட்டோம் என்று அவர்கள் சொல்லுகிறார்கள்' என்றார் பீயர்.

'ஓ, கடவுளே! 'ஓ, கடவுளே. அந்த பிரகடனம் எங்கே?' என்று கோமகன் கூவினார்.

'சக்கரவர்த்தியின் வேண்டுகோளா? ஆம்.'

அந்தக் காகிதங்களைத் தமது ஜேபிகளில் பீயர் தேடினார். ஆனால் அவற்றைக் காணவில்லை. இன்னும் தமது ஜேபிகளைத் தட்டிக்கொண்டிருந்தார். அச்சமயம் கோமகள் உள்ளே வந்தாள். அவளுடைய கையை முத்தம் இட்டுவிட்டு, பரபரப்போடு சுற்றிலும் நோக்கினார். நட்டாஷாவை எதிர்பார்த்தார். அவள் பாடுவதை நிறுத்தி விட்டாள். ஆனால், இன்னமும் வரவேற்பு அறைக்குள் அவள் வரவில்லை.

'உண்மையாகச் சொல்லுகிறேன். அவைகளை எங்கே தொலைத்தேன் என்பது எனக்குத் தெரியாது' என்றார் பீயர்.

'இவர் இப்படித்தான், எப்பொழுது ஒவ்வொன்றையும் தொலைத்துக்கொண்டே இருப்பார்' என்று கோமகள் சொன்னாள்.

ஒரு மிருதுவான, பரபரப்பான தோற்றம் கொண்ட முகத்தோடு உள்ளே வந்த நட்டாஷா, அங்கே அமர்ந்து, மௌனமாக பீயரைப் பார்த்துக்கொண்டிருந்தாள். சோர்வுடையதாய் இருந்த பீயரின் முகம், அவள் உள்ளே நுழைந்ததும் திடீரென்று பிரகாசம் அடைந்து, அவளைப் பல தடவைகள் நோக்கிக்கொண்டே, அந்தக் காகிதங்களை இன்னமும் தேடிக்கொண்டிருந்தார்.

'இல்லை, உண்மையாகவே! நான் வீட்டிற்குப் போகிறேன். அங்கே நான் வைத்திருப்பேன். நான் நிச்சயமாக...'

‘ஆனால், நீர் டின்னருக்கு வருவதற்கு நேரமாகிவிடும்.’

‘ஓ, எனது வண்டிக்காரன் போய்விட்டானே.’

வெளி அறையில் அந்தக் காகிதங்களைக் கண்டுபிடிப்பதற்காகச் சென்ற சோனியா, அவைகளைப் பீயர் தமது தொப்பிக்குள் வைத்திருப்பதைக் கண்டுபிடித்தாள். பீயர் வாசிப்பதற்குத் தயாரானார்.

‘இல்லை, டின்னருக்குப் பின்னால், என்று, அதை வாசிப்பதனால் மிகுந்த மகிழ்ச்சியை அனுபவிக்கலாம் என்று நினைத்து, வயோதிகக் கோமகன் சொன்னார்.

டின்னரின்போது செயின்ட் ஜார்ஜ் பதக்கம் பெற்ற புதிய வீரரின் ஆரோக்கியத்திற்காக ஷாம்பைன் பருகப்பட்டது. நகரத்தின் செய்திகளையும், ஜார்ஜ்ஜியன் வயோதிக இளவரசியின் அசௌக்கியத்தையும், மாஸ்கோவிலிருந்து மெட்டிவியர் மறைந்து போனதையும், யாரோ ஒரு ஜெர்மனியரை ராஸ்டாப்சைனிடம் அழைத்து வந்து, அவனை ஒரு பிரஞ்சு ஒற்றன் என்று சொல்லியதையும், (ஆகவே ராஸ்டாப்சைன்தான் இந்தக் கதையைச் சொன்னார்) ‘அவன் ஒரு கெட்டுப்போன, வயோதிக ஜெர்மனியனே ஒழிய, ஒரு ஒற்றன் அல்ல’ என்று மக்களுக்கு உறுதி கூறி, அந்த ஜெர்மனியனை எப்படி ராஸ்டாப்சைன் விட்டுவிட்டார் என்பதையும் ஷின்ஷைன் சொல்லிக்கொண்டிருந்தார்.

‘மக்கள் கைது செய்யப்படுகிறார்கள்... அவ்வளவு அதிகமாக பிரஞ்சு மொழி பேசக்கூடாது என்று நான் கோமகளுக்குச் சொல்லியிருக்கிறேன். அதற்கு இது சமயமல்ல’ என்றார் கோமகன்.

‘நீங்கள் கேட்டீர்களா? கோலைட்ஸின் இளவரசர், தமக்கு ருஷ்ய மொழியைக் கற்றுக்கொடுப்பதற்கு, ஒரு வாத்தியாரை ஏற்பாடு செய்திருக்கிறார். தெருக்களில் பிரஞ்சு மொழியைப் பேசுவது வரவர ஆபத்தானதாய் இருக்கிறது’ என்றார் ஷின்ஷைன்.

‘கோமகன் பீட்டர் கிரைவிச்சே, உம்மைப் பற்றி என்ன? படைகளுக்கு ஆள் சேர்ப்பது என்று வந்துவிட்டால், நீரும் ஒரு குதிரை மீது ஏறவேண்டியதுதானே?’ என்று பீயரைப் பார்த்து வயோதிகக் கோமகன் கேட்டார்.

டின்னர் முழுவதிலும் மௌனமாகவும், எதையோ யோசித்துக் கொண்டும், அங்கு பேசுவதைக் கவனிக்காமலும் பீயர் இருந்தார். அவர் கோமகனைப் பார்த்தார்.

‘ஆம், யுத்தம். இல்லை! நான் எப்பேர்ப்பட்ட வீரனாய் இருக்கப் போகிறேன்? ஒவ்வொன்றும் மிகுந்த விசித்திரமாகவே இருக்கிறது.

மிகுந்த விசித்திரம்! என்னால் அதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. எனக்குத் தெரியாது. ராணுவ நடவடிக்கைகளுக்கும் எனக்கும் வெகுதூரம். ஆனால், இந்தக் காலத்தில் ஒருவருக்கும் ஒன்றும் தெரியாது.'

டின்னருக்குப் பின்னால், ஒரு சாய்வு நாற்காலியில் கோமகன் சௌக்கியமாக அமர்ந்துகொண்டு, மிகுந்த சிரத்தை கொண்ட முகத்தோடு, அந்தப் பிரகடனத்தை வாசிக்கும்படி சோனியாவைக் கேட்டார். சோனியா மிக நன்றாக வாசிப்பவள் என்று பெயர் பெற்றிருந்தாள்.

'நமது புராதன தலைநகரமான மாஸ்கோவுக்கு,

ஏராளமான படைகளோடு ருஷ்யாவின் எல்லைகளுக்குள் எதிரி நுழைந்துவிட்டான். நமது அன்பான தேசத்தை அழிப்பதற்காக அவன் வருகிறான்' என்று மிகுந்த சிரமத்தோடு, தனது கீச்சுக் குரல் தொனியில் சோனியா வாசித்தாள். கண்களை மூடிக்கொண்டு கோமகன் கவனித்துக் கேட்டு வந்தார். சில வாக்கியங்களைக் கேட்டபோது, அவர் பெருமூச்சு விட்டார்.

*(1) அந்த நாட்களில் ருஷ்யாவிலுள்ள பிரபுக்கள் பிரஞ்சு மொழி பேசுவதுதான் வழக்கமாக இருந்தது. ஆகவே அவர்களில் பலருக்கு ருஷ்ய மொழியைச் சரியாக எழுதவோ, படிக்கவோ தெரியாது. ஆனால் பொது மக்கள் மட்டும் ருஷ்ய மொழியையே பேசி வந்தார்கள்.*

நட்டாஷா நிமிர்ந்து உட்கார்ந்து, கவனத்தோடு தனது தந்தையையும் பீயரையும் மாறிமாறிப் பார்த்து வந்தாள்.

அவளுடைய கண்கள் தம்மீது பதிந்து இருப்பதை உணர்ந்த பீயர், திரும்பிப் பார்க்காமல் இருக்க முயற்சித்தார். பிரகடனத்தில் காணப்பட்ட ஒவ்வொரு பவித்திரமான அபிப்பிராயத்தையும் கேட்டு, கோமகள் தனது தலையை அதிருப்தியோடும் கோபத்தோடும் ஆட்டி வந்தாள். தன்னுடைய குமாரனுக்கு உள்ள ஆபத்து சீக்கிரமாக முடிவடையாது என்பதையே, இந்த வார்த்தைகளில் அவள் கண்டாள். சோனியாவின் வாசிப்பிலோ, அல்லது கோமகனின் பேச்சுக்களிலோ, அல்லது பிரகடனத்திலோ, ஏதாவது தாம் தமாஷ் செய்வதற்கு விஷயம் அகப்படுமா என்ற நினைப்போடு, ஒரு கேலிப் புன்னகை அவர் உதடுகளில் தவழ ஷின்ஷைன் காத்துக் கொண்டிருந்தார்.

அந்தப் பிரகடனத்தில் ருஷ்யாவிற்கு ஏற்பட்டிருக்கிற ஆபத்துகளைப் பற்றியும், மாஸ்கோவிலும், முக்கியமாக அதனுடைய பிரசித்தி பெற்ற பிரபுக்கள் மீதும் சக்கரவர்த்தி

நம்பிக்கை வைத்திருப்பது பற்றியும் சோனியா வாசித்தாள். எல்லோரும் அவளையே கவனித்துக்கொண்டிருந்தபடியால், அவளுடைய குரலில் சிறிது நடுக்கம் காணப்பட்டது. கடைசியாக, பின்வரும் வார்த்தைகளை அவள் வாசித்தாள்: 'அந்தத் தலைநகரிலும், நமது ஆட்சியிலுள்ள மற்ற இடங்களிலும், நமது மக்களிடம் வந்து அவர்களிடம் கலந்து கொள்வதற்கு நாம் தாமதிக்க மாட்டோம். எதிரியின் வருகையைத் தடுத்து நிறுத்திக் கொண்டிருக்கும் நமது பழைய சிப்பாய்களையும், புதிதாய் ராணுவத்தில் சேர்ந்தவர்களையும் நடத்திச் சென்று எதிரி எங்கே தோன்றினாலும், அங்கே அவனைத் தோற்கடிப்பதற்கு நாம் வருவோம். நமக்கு எந்த நாசத்தை விளைவிக்கவேண்டுமென்று எதிரி விரும்புகின்றானோ, அதே நாசம் அவனுடைய தலையில் போய் வீழுமாக. அடிமைத் தளையிலிருந்து ஐரோப்பா விடுபட்டு, ருஷ்யாவின் பெயரைப் பெருமைப்படுத்துமாக.'

'ஆம், அதுதான்' என்று கோமகன் தன்னுடைய நீர் நிறைந்த கண்களைத் திறந்து கூச்சலிட்டார். ஒரு ஜலதோஷ மருந்து புட்டியை முகர்ந்து பார்ப்பதைப்போல, மீண்டும் மீண்டும் மூர்ச்சை இழுத்துக்கொண்டிருந்தார். அவர் சொன்னார்: சக்கரவர்த்தி ஒரு வார்த்தை சொல்லட்டும். நம்மிடம் உள்ள எல்லாவற்றையும் நாம் தியாகம் செய்துவிடுவோம். ஒன்றுக்கும் தயங்க மாட்டோம்.'

கோமகனின் தேச பக்தியைப்பற்றி ஒரு தமாஷ் பேச்சைத் தயார் செய்து, ஷின்ஷைன் சொல்லுவதற்கு முன்பாக, நட்டாஷா தன்னுடைய இடத்திலிருந்து குதித்தெழுந்து, தன்னுடைய தகப்பனாரிடம் ஓடினாள்.

'நம்முடைய அப்பா எப்பேர்ப்பட்ட கண்மணி' என்று அவள் கூச்சலிட்டு, அவரை முத்தமிட்டாள். மீண்டும் தன்னையறியாத ஒரு பிலுக்கோடு பீயரை நோக்கினாள். அவளுக்கு உற்சாகம் அதிகமானவுடன், அந்த பிலுக்கும் அவளிடம் திரும்பி வந்து சேர்ந்து விட்டது.

'இதோ! உங்களுக்கு இதோ ஒரு தேச பக்தர் இருக்கிறார்' என்று ஷின்ஷைன் கூறினார்.

'தேச பக்தர் என்பதெல்லாம் ஒன்றுமில்லை. சும்மா...' என்று நட்டாஷா ஒரு வருத்தமடைந்த குரலில் சொன்னாள். 'உமக்கு ஒவ்வொன்றும் தமாஷாகவே தோன்றுகிறது. ஆனால் இது தமாஷே அல்ல...'

'ஒரு தமாஷா!' என்று கோமகன் கேட்டார். அவர் மட்டும் ஒரு வார்த்தை சொல்லட்டும். நாம் எல்லாரும் போவோம்... நாங்கள் ஜெர்மனியர்கள் அல்ல.'

'ஆனால், 'கலந்துகொள்ளுவதற்காக' வரப்போவதாக, அந்தப் பிரகடனம் சொல்லுகிறது. அதை நீர் கவனித்தீரா?' என்று பீயர் கேட்டார்.

'அது எப்படியிருந்தாலும் சரி, அதைப்பற்றி கவலைப்பட வேண்டாம்...'

இச்சமயத்தில், தன்னை ஒருவரும் கவனிக்காமல் நின்றுகொண்டிருந்த பெட்டியா, தனது தந்தையிடம் வந்தான். அவன் முகம் சிவந்திருந்தது. ஆழ்ந்த, கிரீச்சுக் குரலில் விட்டுவிட்டு அவன் பேசினான்.

'நல்லது, அப்பா. நான் நிச்சயமாக சொல்லுகிறேன். அம்மாவுக்குங்கூட. உங்கள் இஷ்டம்போல; ஆனால், நான் ராணுவத்தில் சேரும்படி நீங்கள் என்னை அனுமதிக்கவேண்டு மென்று நான் நிச்சயமாக சொல்லுகிறேன். ஏனென்றால், என்னால் முடியாது... அவ்வளவு தான்...'

அச்சத்தோடு கோமகள் மேலே தேவலோகத்தைப் பார்த்தாள். தனது கைகளை ஒன்று சேர்த்து, பின்னால் கோபமாகத் தனது கணவரிடம் திரும்பினாள்.

'நீர் பேசுவதனால் ஏற்பட்ட பலன் இது' என்று அவள் சொன்னாள்.

தமது பரபரப்பிலிருந்து ஏற்கெனவே கோமகன் சமாளித்துக்கொண்டார்.

'இங்கே வா, இங்கே வா. இவர் ஒரு சிறந்த வீரர். இல்லை. அசட்டுத்தனம். நீ படிக்கத்தான் வேண்டும்' என்றார் அவர்.

'அது அசட்டுத்தனம் இல்லை, அப்பா. பெட்டியா ஆபாலென்ஸ்கி என்னைவிட வயதில் சிறியவன். அவனும் கூட யுத்தத்திற்குப் போகிறான். தவிர, எப்படியானாலும், நான் இப்போது கல்வி கற்க முடியாது. ஏனென்றால்...' பெட்டியா திடீரென்று பேசுவதை நிறுத்தி, வியர்த்து முகம் சிவந்தான். என்றாலும் அவன் சொல்ல விரும்பிய வார்த்தைகளை, கடைசியாகச் சொல்லி விட்டான். அதாவது, 'நம்முடைய தந்தை நாடு ஆபத்திலிருக்கும்போது, என்னால் படிக்க முடியாது.'

'அவ்வளவு போதும், அவ்வளவு போதும். அசட்டுத்தனம்...'

'நாம் எல்லாவற்றையும் தியாகம் செய்துவிடுவோம் என்று நீர் தானே சொன்னீர்.'

'பெட்டியா! அமைதியாய் இரு. நான் உனக்குச் சொல்லுகிறேன்' என்று, முகம் வெளிறி தனது குமாரனையே குத்திட்ட பார்வையோடு

வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த கோமகளை நோக்கிவிட்டு, கோமகன் கூச்சலிட்டார்.

'நான் சொல்லுகிறேன்-பீட்டர் கிரைலிச் இங்கே இருக்கிறாரே, அவர்கூட உமக்குச் சொல்லுவார்...'

'அசட்டுத்தனம், நான் உனக்குச் சொல்லுகிறேன். உன்னுடைய உதடுகளிலிருந்து, உன்னுடைய தாயாரின் பால் இன்னும் உலர வில்லை. நீ ராணுவத்தில் சேரவேண்டுமென்று சொல்லுகிறாய். இதோ, இதோ, நான் உனக்குச் சொல்லுகிறேன்' என்று சொல்லிவிட்டு கோமகன் அந்த அறையை விட்டு வெளியே போக எழுந்தார். தாம் தூங்குவதற்கு முன்பாக, தமது படிக்கும் அறையில் மீண்டும் ஒரு தடவை அந்தப் பிரகடனத்தைப் படிப்பதற்காக, அதையும் தமது கைகளில் எடுத்துக்கொண்டார்.

'நல்லது, பீட்டர் கிரைலிச், நாம் போய் கொஞ்சம் புகை குடிப்போம்' என்றார் அவர்.

பீயர் பரபரப்பு கொண்டிருந்தார். ஒரு முடிவுக்கும் வரவில்லை. நட்டாஷாவின் வழக்கத்திற்கு விரோதமான பிரகாசமான கண்கள், சாதாரண உறவுப் பார்வையைவிட அதிகமான உறவோடு, இடைவிடாமல் அவரை நோக்கிக்கொண்டிருந்தபடியால், அவர் இந்த நிலைமைக்கு வந்து சேர்ந்தார்.

'இல்லை, நான் வீட்டிற்குப் போகலாமென்று நினைக்கிறேன்.'

'வீட்டிற்கா? ஏன்? மாலைபூராவாக எங்களோடு இருப்பதாக நீர் சொல்லவில்லையா?... இப்பவெல்லாம் நீர் அடிக்கடி வருவதில்லை. இந்த என்னுடைய பெண் இருக்கிறாளே (என்று கோமகன் நல்ல குணத்தோடு நட்டாஷாவை சுட்டிக்காட்டினார்.) இவள் நீர் இங்கே வந்தால்தான் பிரகாசம் அடைகிறாள்.'

'ஆம், நான் மறந்துவிட்டேன்... நான் உண்மையிலேயே கட்டாயமாக வீட்டிற்குப் போகவேண்டும்... இல்லை, கொஞ்சம் வேலையிருக்கிறது...' என்று பீயர் வேகமாகக் கூறினார்.

'நல்லது, அப்படியானால் போய்வாரும்' என்று கோமகன் சொல்லிவிட்டு, அறையிலிருந்து வெளியே போனார்.

'நீர் ஏன் போகிறீர்? நீர் ஏன் குழப்பமடைகிறீர்?' என்று நட்டாஷா கேட்டு, அவரை வாதத்திற்கு இழுப்பதைப்போல அவருடைய கண்களைப் பார்த்தாள்.

'ஏனென்றால், நான் உன்னைக் காதலிக்கிறேன்' என்று அவர் சொல்ல விரும்பினார். ஆனால், அதை அவர் சொல்லவில்லை.

கண்ணீர் வருகிறவரையில், அவர் நாணி முகம் சிவந்தார். பின்னால், தமது கண்களைக் கவிழ்த்துக்கொண்டார்.

'ஏனென்றால், நான் இங்கே வருவதைக் குறைப்பேனானால், அது எனக்கு நன்மையாக இருக்கும்... ஏனென்றால்... இல்லை, எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது...'

'ஏன், இல்லை, எனக்குச் சொல்லும்' என்று நட்டாஷா உறுதியோடு ஆரம்பித்தாள். திடீரென்று நிறுத்திவிட்டாள்.

பீதியும் மனக் கலக்கமும் கொண்ட முகங்களோடு, அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்தார்கள். அவர் புன்முறுவல் காட்ட முயன்றார். ஆனால், முடியவில்லை. அவருடைய புன்முறுவல் அவருடைய துன்பங்களைக் காட்டின. மௌனமாக அவளது கையை முத்தமிட்டுவிட்டு, அவர் வெளியே போனார்.

ராஸ்டோவ்களின் வீட்டிற்கு இனி போவதில்லையென்று பீயர் தமது மனதில் முடிவு செய்தார்.

## 9

### 21

**க**ட்டாயம் போகக்கூடாதென்று சொல்லியதைக் கேட்ட பின்பு, பெட்டியா தனது அறைக்குப் போனான். அங்கே கதவைத் தாளிட்டுக்கொண்டு, மிகுந்த மனக்கசப்போடு அழுதான். அவன் தேநீர் பருக வந்தபோது மௌனமாகவும், முகத்தைத் தூக்கிக் கொண்டும், கண்ணீர் காய்ந்த முகத்தோடும் அங்கே வந்தான். அங்கிருந்த ஒருவொருவரும் ஒன்றையும் கவனிக்காததுபோலப் பாசாங்கு செய்தார்கள்.

மறுநாள் சக்கரவர்த்தி மாஸ்கோவிற்கு விஜயம் செய்தார். ராஸ்டோவ்களின் வீட்டு வேலைகள் செய்யும் அடிமைகளில் பலர், சக்கரவர்த்தியைப் போய்ப் பார்த்து வருவதற்கு அனுமதி கேட்டார்கள். தான் ஒரு வயது வந்த மனிதனைப்போலக் காணப்பட வேண்டுமென்பதற்காக, தன்னுடைய தலை முடியையும் கழுத்துப்பட்டியையும் சரி செய்து வெகுநேரமாக பெட்டியா ஆடை அலங்காரம் செய்துகொண்டிருந்தான். நிலைக் கண்ணாடியில் முன்பாக நின்றுகொண்டு கைகளை ஆட்டி, தோள்களைக் குலுக்கி, முகத்தைச் சுளித்து அழகு பார்த்துக்கொண்டிருந்தான். கடைசியாக, ஒருவரிடமும் ஒரு வார்த்தையும் சொல்லாமல், தனது தொப்பியை எடுத்துக் கொண்டு, ஒருவரும் கவனிக்காமல் இருப்பதற்காக, பின் வாசல் வழியாக வீட்டை விட்டுப்போனான். நேராக சக்கரவர்த்தி எங்கு இருக்கிறாரோ, அங்கு போவதென்று பெட்டியா முடிவு

செய்தான். சக்கரவர்த்தியைச் சுற்றி எப்பொழுதுமே ஏவல் - கனவான்கள் இருந்துகொண்டிருப்பார்கள் என்பது அவனுடைய கருத்து. அம்மாதிரி சக்கரவர்த்தியிடம் இருக்கிற ஒரு ஏவல்-கனவானிடம் சென்று, கோமகன் ராஸ்டோவாகிய தான், தனக்கு வயது அதிகமாய் இல்லாமலிருந்தாலும், தன்னுடைய நாட்டிற்காகச் சேவை செய்ய விரும்புவதாகவும், ராஜபக்தியைக் காட்டுவதற்கு இளமை என்பது ஒரு இடையூறாக இருக்கக்கூடாதென்றும், தான் தயாராக இருப்பதாகவும் சொல்ல விரும்பினான்... அந்த ஏவல்-கனவானிடம் சொல்லுவதற்காக, பெட்டிய ஆடைகள் அணிந்துகொண்டிருக்கும்போது, பல அருமையான விஷயங்களைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தான்.

தான் அவ்வளவு இளமையாக இருப்பதனால், சக்கரவர்த்தியைப் போய் பார்த்துவிட முடியும் என்று பெட்டியா நினைத்தான். அவனுடைய இளமையைப் பார்த்து, ஒவ்வொருவரும் ஆச்சரியப்படுவார்கள் என்றுகூட அவன் நினைத்தான். என்றாலும், ஒரு வளர்ந்த மனிதனைப்போல் காணப்பட வேண்டுமென்பதற்காக, தனது கழுத்துப்பட்டியையும் தலைமுடியையும் ஒழுங்குபடுத்தி, அமைதியாக, நிதானமாக நடந்துபோக வேண்டுமென்று அவன் நினைத்தான். ஆனால், அவன் மேலே போகப் போக, கிரெம்லினை நோக்கிப் போய்க்கொண்டிருந்த கூட்டம், வரவர அதிகரித்துக்கொண்டிருந்த படியால், அவனுடைய கவனம் வேறு வழியில் திரும்பியது. அமைதியாகவும் ஜாக்கிரதையாகவும், ஒரு வயது வந்த மனிதனைப் போல நடக்க வேண்டுமென்று அவன் நினைத்த நினைப்பு வரவரக் குறைந்து வந்தது. அவன் கிரெம்லினை நெருங்கியபொழுது தன்னை நசுக்கிவிடாதபடி காப்பாற்றிக்கொள்ள ஆரம்பித்தான். தன்னுடைய முழங் கைகளைப் பயமுறுத்தலோடு, உறுதியோடு வெளியே நீட்டிக்கொண்டிருந்தான். மும்மூர்த்தி வாசல் வளைவிற்குக் கீழாக அவன் வந்தபோது, அவனை அங்கிருந்த மக்கள் சுவரோடு நெருக்கித் தள்ளினார்கள். எந்த தேச பக்தி நோக்கங்களோடு அவன் வந்திருக்கிறான் என்பதை அவர்கள் ஒருவேளை அறியாமல் இருக்கலாம். ஆகவே, அவன் எவ்வளவு உறுதியோடு இருந்த போதிலும், அந்த இடத்தில் விட்டுக்கொடுக்க வேண்டியதாய்த் தானிருந்தது. எனவே, அந்த வளைவு வழிக்குக் கீழாக வண்டிகள் முழங்கிக் கொண்டு போகும்போது, அவன் ஒதுங்கி நிற்க வேண்டியதாயிருந்தது. பெட்டியாவிற்குப் பக்கத்தில், ஒரு விவசாய ஸ்திரீயும், ஒரு சேவகனும், இரண்டு வியாபாரிகளும், படையிலிருந்து விலகிய ஒரு சிப்பாயும் நின்று

கொண்டிருந்தார்கள். அந்த வளைவு வழிக்குக் கீழே சிறிது நேரம் நின்ற பின்பு, எல்லா வண்டிகளும் போவதற்காக இன்னமும் காத்து நிற்காமல், முன்னேறிப்போக பெட்டியா விரும்பினான். தனது முழங் கைகளால் வழி ஏற்படுத்திக்கொள்ள, உறுதியோடு வேலை செய்ய ஆரம்பித்தான். ஆனால், அவனுக்கு முன்னால் அந்த ஸ்திரீ நின்றுகொண்டிருந்தாள். அவளைத் தள்ளும் முயற்சியை அவன் ஆரம்பித்தபோது, அவள் கோபமாக அவனைப் பார்த்துக் கூச்சலிட்டாள்.

'நீ எதற்காக இம்மாதிரி தள்ளிக்கொண்டிருக்கிறாய், வாலிப பிரபுக் குஞ்சே? நாம் எல்லோரும் அசையாமல் நின்று கொண்டிருக்கிறோம் என்பதை நீ பார்க்கவில்லையா? அப்படியானால், ஏன் தள்ளுகிறாய்?'

'யார் வேண்டுமானாலும் தள்ளலாம்' என்று அந்த சேவகன் கூறி, தன்னுடைய முழங் கைகளால் வேகமாக வேலை செய்ய ஆரம்பித்தான். அவனுடைய பிரமாதமான வேலையினால், அந்த வளைவு வழியில் உள்ள ஒரு ஆபாசமான மூலைக்கு பெட்டியாவைத் தள்ளி விட்டான்.

வியர்த்துக்கொண்டிருந்த தனது முகத்தைத் தனது கைகளால் பெட்டியா துடைத்தான். ஒரு வயது வந்த மனிதனைப்போல காணப்பட வேண்டுமென்பதற்காக, அலங்காரமாய் அணிந்திருந்த அந்த கழுத்துப்பட்டி இப்போது நனைந்து உள்ளே போய்விட்டது. அதை மீண்டும் வெளியே எடுத்துவிட்டான்.

ஏவல் - கனவானிடம் தான் போவதற்கு, இப்போது தன்னுடைய அலங்காரங்கள் எல்லாம் அழிந்திருந்தபடியால், தான் தகுதியில்லாமல் இருப்பதாக அவன் உணர்ந்தான். இந்த அலங்கோலத்தில் ஏவல்-கனவான்களிடம் தான்போய் நின்றால், தன்னை சக்கரவர்த்தியிடம் அவர்கள் அனுமதிக்கமாட்டார்கள் என்று அவன் பயந்தான். ஆனால், தனது அலங்காரத்தைச் சிறப்பித்துக்கொள்ளவோ, அல்லது மற்றோர் இடத்திற்குப் போகவோ முடியாதபடி அந்தக் கூட்டம் இடையூறாய் நின்றது. ராஸ்டோவ்களுக்குத் தெரிந்த ஒரு ஜெனரல், அந்த வழியாக வண்டியில் போய்க்கொண்டிருந்தார். அவரிடம் உதவி கேட்கலாமா என்று பெட்டியா நினைத்தான். ஆனால், அம்மாதிரி கேட்பது ஆண்மையல்ல என்று அவன் முடிவுக்கு வந்தான். வண்டிகளெல்லாம் உள்ளே போன பின்பு, அந்தக் கூட்டம் பெட்டியாவையும் தள்ளிக்கொண்டு கிரெம்லின் சதுக்கத்திற்கு முன்னேறியது. அந்த சதுக்கம் ஏற்கெனவே நிரம்பியிருந்தது. அந்த

சதுக்கத்தில் மட்டுமல்ல, ஒவ்வொரு இடத்திலும், சரிவுகளிலும், கூரைகளிலும் மக்கள் நிரம்பியிருந்தார்கள். சதுக்கத்திற்கு பெட்டியா வந்து சேர்ந்ததை அறிந்ததும், மணிகளின் ஓசைகளையும், அந்த கிரெம்லின் பூராவாக நிரம்பியிருந்த மக்களின் மகிழ்ச்சிக் குரல்களையும் பெட்டியா தெளிவாகக் கேட்டான்.

சிறிது நேரம் அந்தக் கூட்டம் நெருக்கம் குறைந்து இருந்தது. திடீரென்று தங்கள் தலைகளில் உள்ள தொப்பிகளைக் கழற்றிவிட்டு, ஒவ்வொருவரும் ஒரு திசையை நோக்கி முன்னேற நெருக்கினார்கள். பெட்டியாவையும் நெருக்கியபடியால், அவனால் மூச்சுவிட முடியவில்லை. ஒவ்வொருவரும் ஜே ஜே என்று கோஷமிட்டார்கள். முன்னங்கால்களை ஊன்றி பெட்டியா மேலே நிமிர்ந்து நின்று, சுற்றிலும் உள்ளவர்களைத் தள்ளிக்கொண்டும், கிள்ளிக்கொண்டும் இருந்தான். ஆனால், தன்னைச் சுற்றி நின்றவர்களைத் தவிர, வேறு எதையும் அவனால் பார்க்க முடியவில்லை.

எல்லோர் முகங்களிலும் ஒரே மாதிரியான பரபரப்பும், உற்சாகமும் கொண்ட தோற்றமே காணப்பட்டது. பெட்டியா வுக்குப் பக்கத்தில் நின்ற ஒரு வியாபாரியின் மனைவி விம்மி விம்மி அழுதாள். அவளுடைய கன்னங்களில் கண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது.

'தந்தையே! தேவதையே! என் அருமையான கண்ணே!' என்று அவள் மீண்டும் மீண்டும் சொல்லி, தனது விரல்களால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டிருந்தாள்.

'ஜே ஜே' என்று குரல்கள் எல்லாப் பக்கங்களிலும் ஒலித்தன.

ஒரு வினாடி அந்தக் கூட்டம் அசையாமல் நின்றது. ஆனால், மறுபடியும் அது முன்நோக்கி நெருங்கியது.

பெட்டியா தனது பற்களைக் கடித்துக்கொண்டு, கோபமாகக் கண்களை உருட்டிக்கொண்டு, முன்னால் தள்ளி முழங்கைகளால் இடித்து, தன்னையோ, மற்றவர்களையோ அவன் கொல்லுவதற்குத் தயாராக இருப்பதுபோல, ஜே கோஷமிட்டுக்கொண்டு இருந்தான். ஆனால், அவனுக்கு இரு பக்கங்களிலும் உள்ள மற்ற மக்களும், அவனைப் போலவே கடுமையான முகங்களைக்கொண்டு முன்னால் முண்டித் தள்ளினார்கள். ஒவ்வொருவரும் ஜே கோஷமிட்டார்கள்.

'அப்படியானால், இதுதான் சக்கரவர்த்தியோ? இல்லை, நான் அவரிடம் மனுச்செய்துகொள்ள முடியாது. அது மிகுந்த துணிகரமானதாய் இருக்கும்' என்று பெட்டியா நினைத்தான்.

இப்படி அவன் நினைத்தாலும் அவன் முன்னேறுவதற்குத் துணிகரமாய்ப் போராடுவதைத் தொடர்ந்து செய்துவந்தான். தனக்கு முன்னால் உள்ளவர்களின் முதுகுகளுக்கு இடையேயுள்ள இடைவெளி வழியாக, தனக்கு முன்னால் உள்ள ஒரு வெட்டவெளியில் கண்ட காட்சிகளைச் சிறிது அவன் காண முடிந்தது. அந்த வெட்டவெளியில் சிவப்புத் துணி விரிக்கப்பட்டிருந்தது. அச்சமயத்தில் கூட்டம் பின்னால் சாய்ந்தது. முன்னால் இருந்த போலீஸ்காரர்கள், ஊர்வலத்திற்கு மிகச்சமீபமாக நின்றவர்களைப் பின்னால் தள்ளினார்கள். சக்கரவர்த்தி தமது அரண்மனையிலிருந்து மாதா கோவிலுக்குப் போய்க்கொண்டிருந்தார். எதிர்பாராத விதமாக, பெட்டியாவிற்கு விலா எலும்புகளில் ஒரு அடி விழுந்து, அதோடு மிகவும் பலமாகவும் அவன் நெருக்கப்பட்டபடியால், அவன் கண்கள் இருண்டன. அவனுக்கு பிரக்ஞை தவறியது. அவனுக்கு பிரக்ஞை வந்தபோது, பின் தலையில் சாம்பல் வர்ண முடியைக்கொண்ட, குமாஸ்தா தோற்றமுள்ள, ஒரு நீல நிறமான, கசங்கிய சட்டையை அணிந்துகொண்டிருந்த ஒருவன்-ஒருவேளை அவன் மாதா கோவிலில் குமாஸ்தாவாகவும் பூசாரியாகவும் இருக்கலாம்-அவனை கைக்குக் கீழாக ஒரு கையால் பற்றி, மற்றொரு கையால் அந்தக் கூட்டம் அமுக்கித் தள்ளுவதைத் தடுத்துக்கொண்டிருப்பதைப் பார்த்தான்.

'நீங்கள் இந்த வாலிப கனவானை நசுக்கிவிட்டீர்கள். நீங்கள் என்ன செய்ய நினைக்கிறீர்கள்? மெதுவாக... அவர்கள் அவனை நசுக்கிவிட்டார்கள், நசுக்கிவிட்டார்கள்' என்று அந்த குமாஸ்தா சொன்னான்.

சக்கரவர்த்தி மாதா கோவிலுக்குள் நுழைந்தார். கூட்டம் மீண்டும் நெருக்கம் குறைந்து பரவி நின்றது. அந்த குமாஸ்தா முகம் வெளிறி, மூச்சுவிட முடியாமல் அவஸ்தைப்பட்டுக்கொண்டிருந்த பெட்டியாவை, *ஜார்-பீரங்கி பக்கமாக அழைத்துச் சென்றான். (*ஜார்-பீரங்கி என்ற அந்த பிரம்மாண்டமான பீரங்கி 1488-ம் வருஷத்தில் செய்யப்பட்டது. அதை ஒரு காட்சிப் பொருளாக கிரெம்லினில் வைத்திருக்கிறார்கள்.) பெட்டியாவுக்காகப் பலர் வருந்தினார்கள். திடீரென்று ஒரு கூட்டம் அவன் பக்கம் திரும்பி, அவனைச் சுற்றி நெருங்கி நின்றது. அவனுக்குப் பக்கத்தில் நின்றவர்கள் அவனுக்கு உதவி செய்தார்கள். அவன் சட்டையிலுள்ள பொத்தான்களைக் கழற்றிவிட்டு, அந்த பீரங்கி வைக்கப்பட்டிருந்த மேடையில் அவனைத் தூக்கிவிட்டார்கள். அவனை நசுக்கிய

மற்றவர்களை (அவர்கள் யாராயிருந்தாலும் சரி) அவர்கள் கண்டித்தார்கள்.

'இம்மாதிரி செய்தால், ஒருவனை சுலபமாகக் கொன்று விடலாம். இம்மாதிரி செய்வதில், அவர்களின் நோக்கமென்ன? மக்களைக் கொல்லுவதா? பாவம், துணியைப்போல அவன் வெள்ளையாய்விட்டான்' என்று பல குரல்கள் சொல்லிக் கொண்டிருந்தன.

பெட்டியா சீக்கிரமாகத் தன் உணர்வு பெற்றுவிட்டான். அவனுடைய பழைய நிறம் முகத்திற்குத் திரும்பியது. வலி மறைந்தது. அந்த தற்காலிகமான, மனவருத்தமான காரியங் களினால், அந்த பீரங்கிக்குப் பக்கத்தில் அவனுக்கு ஒரு இடம் கிடைத்தது. சக்கரவர்த்தி அந்த வழியாகத் திரும்பி வரும்போது, அவரைப் பார்க்கலாமென்று அவன் நம்பினான். தன்னுடைய மனுவை சக்கரவர்த்தியிடம் சமர்ப்பிக்க வேண்டும் என்று இப்போது பெட்டியா நினைப்பதில்லை. சக்கரவர்த்தியை அவன் பார்த்துவிட்டால் போதும். அவன் சந்தோஷமாய் இருப்பான்.

மாதா கோயிலில் பிரார்த்தனை நடந்துகொண்டிருந்தது. சக்கரவர்த்தியின் விஜயத்திற்காகவும், துருக்கியர்களுடன் சமாதான உடன்படிக்கை ஏற்பட்டதற்காக நன்றி தெரிவிப்பதற்காகவும், ஒரு கூட்டுப் பிரார்த்தனையாக அது நடைபெற்றது. வெளியே நின்ற கூட்டம் பரவி நின்றது. இஞ்சி ரொட்டி, கசகசா, இனிப்புச் சாமான்கள் முதலியவைகளை விற்போர்கள் அங்கே தோன்றினார்கள். (அந்தக் கசகசா இனிப்புச் சாமான்களில் பெட்டியாவுக்கு மிகுந்த பிரியம் உண்டு.) சாதாரண உரையாடல்கள் மீண்டும் அங்கே ஆரம்பமாயின. தன்னுடைய சால்வை கிழிந்துபோனதைப்பற்றியும், அது எவ்வளவு விலையுயர்ந்தது என்பதைப் பற்றியும், ஒரு வியாபாரியின் மனைவி அங்கே சொல்லிக்கொண்டிருந்தாள். பட்டுத் துணிகள் எல்லாமே இப்பொழுது விலை உயர்ந்துவிட்டன என்று மற்றொருவர் சொன்னார். பெட்டியாவைக் காப்பாற்றிய அந்த குமாஸ்தா, அன்று பிஷப்போடு பிரார்த்தனை நடத்திவரும் குருமார்களைப்பற்றி, ஒரு அதிகாரியுடன் பேசிக்கொண்டிருந்தார். அந்த குமாஸ்தா பல தடவைகளில் 'சம்பூர்ணம்' என்ற வார்த்தையை உபயோகித்து வந்தார். அந்த வார்த்தையை பெட்டியாவால் புரிந்துகொள்ள முடியவில்லை. இரண்டு வாலிபப் பிரஜைகள், சில அடிமைப் பெண்களோடு தமாஷ் செய்து கொண்டிருந்தார்கள். இந்த உரையாடல்கள் எல்லாம், முக்கியமாகப் பெண்களோடு தமாஷ்

செய்வதெல்லாம், பெட்டியவின் வயதிற்கு ஒரு தனிப்பட்ட மகிழ்ச்சியைக் கொடுத்திருக்க வேண்டும். ஆனால், அவற்றில் எல்லாம் பெட்டியாவிற்கு இப்போது சிரத்தை இல்லை. அந்த பீரங்கி மேடையில் அவன் அமர்ந்திருந்தான். சக்கரவர்த்தியைப் பற்றியும், சக்கரவர்த்தி மீது அவனுக்குள்ள அன்பைப் பற்றியும், இன்னமும் பரபரப்போடு சிந்தித்துக்கொண்டிருந்தான். அவனை நசுக்கியபோது ஏற்பட்ட பயமும், அதனால் ஏற்பட்ட வலியும் அவனுக்கு ஏற்பட்ட பரவசமும் அந்த சந்தர்ப்பத்தின் முக்கியத்துவத்தை இன்னும் அதிகரித்தன.

திடீரென்று துறைமுக மேடையிலிருந்து பீரங்கி சுடுவது கேட்டது. துருக்கியரோடு சமாதான உடன்படிக்கை ஏற்பட்டதைக் கொண்டாடுவதற்காக பீரங்கிக் குண்டுகள் முழங்கின. அந்தக் கூட்டம் பீரங்கி மேடையை நோக்கி வேகமாய் முன்னேறியது. பெட்டியாவும் அங்கே ஓடியிருப்பான்... ஆனால், அவனைக் காப்பாற்றிய அந்த குமாஸ்தா, அவன் போகாதபடி தடுத்து நிறுத்தினார். பீரங்கி குண்டுகள் இன்னமும் முழங்கிக்கொண்டுதான் இருந்தன. அச்சமயத்தில் அதிகாரிகளும், ஜெனரல்களும், ஏவல்-கனவான்களும், மாதா கோயிலிலிருந்து வெளியே ஓடிவந்தார்கள். அவர்களுக்குப் பின்னால், மற்றவர்கள் சாவதானமாக வந்துகொண்டிருந்தார்கள். தொப்பிகள் மீண்டும் உயர்த்தப்பட்டன. பீரங்கி சுடுவதைப் பார்க்கப் போனவர்கள், மீண்டும் திரும்பி ஓடி வந்தார்கள். கடைசியாக, யூனிபாரங்களையும் பட்டிகளையும் அணிந்த நாலு பேர்கள், மாதா கோயிலிலிருந்து வெளியே வந்தார்கள். 'ஜே ஜே' என்று அந்தக் கூட்டம் மீண்டும் கோஷம் செய்தது.

'அவர்களில் அவர் யார்? அவர் எங்கே இருக்கிறார்?' என்று பெட்டியா கண்ணீர் தோய்ந்த குரலில், தன்னைச் சுற்றியிருந்தவர்களிடம் கேட்டான். ஒவ்வொருவரும் பரபரப்பு அடைந்திருந்தபடியால், அவனுக்கு ஒருவரும் பதில் சொல்லவில்லை. அந்த நால்வர்களில் ஒருவர் மீது தன்னுடைய பார்வையை பெட்டியா செலுத்தி, தன்னுடைய உற்சாகம் பூராவையும் அவர் மீது குவித்தான். கண்ணில் மகிழ்ச்சிக் கண்ணீர் நிரம்பியிருந்தபடியால், அவனால் தெளிவாகப் பார்க்க முடியவில்லை. அவன் தன்னுடைய பார்வை செலுத்திய அந்தப் பேர்வழி, சக்கரவர்த்தியும் அல்ல. என்றாலும், அவன் 'ஜே ஜே' என்று கோஷமிட்டான். என்ன வந்தாலும் சரி, மறு நாள் கட்டாயம் ராணுவத்தில் சேர்ந்துவிடுவதென்று அவன் தீர்மானித்தான்.

அந்தக் கூட்டம், சக்கரவர்த்திக்குப் பின்னால், அவருடைய அரண்மனை வரையில் தொடர்ந்து ஓடி, பின்னால் கலைய ஆரம்பித்தது. அப்பொழுது ஏற்கெனவே நேரமாகிவிட்டது. பெட்டியா எதுவும் சாப்பிடவில்லை. வியர்வையினால் அவன் உடலெல்லாம் நனைந்திருந்தது. என்றாலும், அவன் வீட்டுக்குப் போகவில்லை. அங்கே முன்னைவிட குறைந்திருந்தாலும், இன்னமும் ஏராளமாக இருக்கும் அந்தக் கூட்டம், அரண்மனைக்கு முன்னால் நின்றுகொண்டிருந்தது. அதோடு இவனும் கலந்து நின்றுகொண்டிருந்தான். சக்கரவர்த்தி டின்னர் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். தான் எதைத் தேடுகிறான் என்பதை அறியாமலேயே, அந்த அரண்மனை ஜன்னல்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். டின்னர் சாப்பிடுவதற்காக அங்கே வந்து இறங்கிக் கொண்டிருந்த பிரபலஸ்தர்களைப் பார்த்து வியப்பு கொண்டான். அந்த ஜன்னல்கள் வழியாக, அங்கே சாப்பிடுகிறவர்களுக்கு வேலைக்காரர்கள் பரிமாறிக்கொண்டிருந்ததை அவன் பார்த்துக் கொண்டிருந்தான்.

சக்கரவர்த்தி டின்னர் சாப்பிட்டுக்கொண்டிருந்தபோது, லாலுயேவ் என்பவர் ஜன்னல் வழியாக வெளியே பார்த்து, 'மக்கள் இன்னமும் மாட்சிமை தங்கிய உம்மைப் பார்க்கலாமென்று நம்பிக்கொண்டிருக் கிறார்கள்' என்று கூறினார்.

டின்னர் அநேகமாக முடிந்துவிட்டது. சக்கரவர்த்தி ஒரு பிஸ்கோத்தை சுவைத்துக்கொண்டே எழுந்து பால்கனிக்குப் போனார். பெட்டியாவோடு கலந்து நின்ற மக்கள் பால்கனியை நோக்கி நெருங்கினார்கள்.

'தேவதையே, கண்ணானவரே, தந்தையே. ஜே ஜே...' என்று, பெட்டியாவை உள்ளிட்ட அந்தக் கூட்டம் கோஷமிட்டது. பெண்களும், பலவீனமான ஆண்களும், பெட்டியாவும் சேர்ந்து மகிழ்ச்சியினால் அழுதார்கள்.

சக்கரவர்த்தி தமது கையில் வைத்துக்கொண்டிருந்த ஒரு பெரிய பிஸ்கோத் முறிந்து, பால்கனி சுவரில் விழுந்து அதன் பின்னால் தரையில் விழுந்தது. தோல் சட்டை அணிந்துகொண்டிருந்த ஒரு வண்டிக்காரன் அதன் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தான். அவன் முன்னால் பாய்ந்து அதைக் கையில் எடுத்தான். இதைப் பார்த்த சக்கரவர்த்தி, ஒரு தட்டு நிறைய பிஸ்கோத்துகளைக் கொண்டுவரச் சொல்லி, அவற்றை பால்கனியிலிருந்து கீழே வீச ஆரம்பித்தார். பெட்டியாவின் கண்கள் ரத்தம் மாதிரி சிவந்தன. இன்னமும் தன்னை நசுக்கி விடுவார்களோ என்று அதிக பரபரப்பு கொண்டு,

அந்த பிஸ்கோத்துகளைப் பார்த்து ஓடினான். ஜார் சக்கரவர்த்தியின் கையிலிருந்து விழுந்த அந்த பிஸ்கோத்துகளில் ஒன்றைப் பெற்றாக வேண்டும் என்று அவன் நினைத்தான். அதற்கு என்ன காரணம் என்பது அவனுக்குத் தெரியாது. ஆனால், இதில் பின்வாங்கக்கூடாது என்று அவன் உணர்ந்தான். அவன் முன்னால் பாய்ந்தபோது, கையில் ஒரு பிஸ்கோத்தை வைத்திருந்த ஒரு வயோதிக ஸ்திரீயைத் தள்ளி விட்டான். அந்த ஸ்திரீ தரையில் விழுந்தபோதிலும், அவள் தான் தோற்றுவிட்டதாக நினைக்கவில்லை. சில பிஸ்கோத்து களைக் கைப்பற்ற முயன்றாள். ஆனால், அவளுக்கு கை எட்டவில்லை. அவளுடைய கையைத் தனது முழங்காலால் பெட்டியா தள்ளிவிட்டு, ஒரு பிஸ்கோத்தைக் கைப்பற்றினான். மீண்டும் தனது கரகரப்பான குரலில், 'ஜே ஜே' என்று கோஷமிட்டான்.

சக்கரவர்த்தி உள்ளே போனார். அதன் பின்னால், அங்கிருந்த கூட்டத்தில் பெரும்பகுதியும் கலைய ஆரம்பித்தது.

'இதோ பாருங்கள், கொஞ்சம் காத்திருப்போம் என்று நான் சொன்னேன். இப்போது கண்டுகொண்டோம்' என்று பற்பல மக்களும் மகிழ்ச்சியோடு சொன்னார்கள்.

பெட்டியா மகிழ்ச்சியோடு இருந்தாலும், அன்றைய மகிழ்ச்சிகள் எல்லாம் முடிந்து, வீட்டிற்குப் போகவேண்டுமே என்பதில் அவன் துயரம் கொண்டான். கிரெம்லினிலிருந்து நேரே அவன் வீட்டிற்குப் போகவில்லை. ஆபலென்ஸ்கி என்ற தனது நண்பனைப் போய்ப் பார்த்தான். அவனுக்கு 15 வயதாகிறது. அவனும் ராணுவத்தில் சேரப் போகிறான். வீடு திரும்பியதும், தன்னை ராணுவத்தில் சேர அனுமதிக்காவிட்டால், தான் வீட்டைவிட்டு ஓடிப் போய் விடுவதாக உறுதியோடும், தீர்மானமாகவும் பெட்டியா சொன்னான். தாம் முழுவதும் இணங்காவிட்டாலும், அடுத்த நாளன்று கோமகன் இலியா ராஸ்டோவ், அபாயமில்லாத விதத்தில் பெட்டியாவை ராணுவத்தில் சேர்ப்பதற்காக விசாரித்து வருவதற்குப் போனார்.

## 9

## 22

இரண்டு தினங்களுக்குப் பின்னால், அதாவது ஜூலை 15-ஆம் தேதியன்று, ஏராளமான வண்டிகள் ஸ்லாபோடா அரண்மனைக்கு முன்னால் நின்று கொண்டிருந்தன.

அங்கேயிருந்த பெரிய மண்டபங்கள் எல்லாம் நிறைந்திருந்தன. முதல் ஹாலில், பிரபுக்களும், கனதனவான்களும் தங்களுடைய யூனிபாரங்களில் அமர்ந்திருந்தார்கள். இரண்டாவது ஹாலில், தாடி வளர்த்த வியாபாரிகள், நீளமான நீல நிறக் கோட்டுகளை அணிந்து, பதக்கங்களை மார்பில் மாட்டிக்கொண்டிருந்தார்கள். அந்த பிரபுக்களின் மண்டபத்தில் இடைவிடாத நடமாட்டங்களும், குரல்களும் இருந்துகொண்டிருந்தன. முக்கியமான கனவான்கள் உயரமான முதுகுகள் வைத்த நாற்காலிகளில் ஒரு பெரிய மேஜைக்கு முன்பாக அமர்ந்திருந்தார்கள். சுவரில், அவர்களுக்கு மேலாக, சக்கரவர்த்தியின் படம் தொங்கிக்கொண்டிருந்தது. கனதனவான்களில் அநேகர் அந்த மண்டபத்தில் அங்குமிங்கும் போய்க்கொண்டிருந்தார்கள்.

கிளப்பிலோ, அல்லது அவர்களது வீடுகளிலோ, இந்தப் பிரபுக்கள் எல்லாரையும் பீயர் அடிக்கடி சந்தித்து இருக்கிறார். அவர்கள் எல்லாரும் இப்போது யூனிபாரங்களில் காணப் பட்டார்கள். சிலர் காத்தரைன் காலத்து யூனிபாரத்திலும், சிலர் பால் சக்கரவர்த்தி காலத்து யூனிபாரத்திலும், மற்றும் சிலர் அலெக்ஜாண்டர் காலத்து யூனிபாரத்திலும், சிலர் பிரபுக்களின் யூனிபாரத்திலும், காணப்பட்டார்கள். அவர்கள் எல்லாருமே யூனிபாரத்திலிருந்த பொதுவான குண விசேஷமானது, அந்தப் பழக்கமான வாலிப, வயோதிகப் பிரமுகர்களை, ஒரு விசித்திரமான, விநோதமான காட்சியாய்க் காட்டியது. வயோதிகர்கள் கண்பார்வை மங்கி, பற்களை இழந்து, வழுக்கைத் தலையுடன், மஞ்சள் நிறத்துடன், உடல் பருத்து, அல்லது சிலருக்கு உடல் சுருங்கிக் காணப்பட்டது அந்தக் கூட்டத்தில் விசேஷமாய் தோன்றியது. அநேகமாய் அவர்கள் தங்களுடைய இடங்களில் அமர்ந்து மௌனமாய் இருந்தார்கள். அவர்களில் யாராவது அங்குமிங்கும் நடக்க விரும்பினால், அவர்கள் எப்போதுமே, தங்களைவிட வயதில் குறைந்தவர்களோடு சேர்ந்து கொள்வார்கள். அந்த சதுக்கத்தில் பெட்டியா பார்த்த கூட்டத்தின் முகங்களில் தோன்றியதைப் போலவே, இவர்களுடைய முகங்களிலும் எடுப்பான மாறுபாடுகள் காணப்பட்டன: அதாவது, ஒரு பவித்திரமான சம்பவத்தை எதிர்பார்த்து இருத்தல். அதே சமயத்தில், பாஸ்டன் சீட்டு விளையாட்டுகளில் உள்ள ஆசைகள், சமையல் காரன் பீட்டர், ஜினைடா டிமிட்ரிவ்னாவின் சௌக்கியம் இத்தியாதி விஷயங்கள்.

பீயரும் அங்கே இருந்தார். அன்று காலையிலிருந்து ஒரு பிரபுவுக்குரிய யூனிபாரத்தோடு காணப்பட்டார். அந்த சீருடை

அவருக்கு மிகவும் உடம்பைப் பற்றிக்கொண்டு இருந்தது. அவர் பரபரப்போடு தோன்றினார். பிரபுக்கள் மட்டுமல்ல, அவர்களோடு இந்த வர்த்தகக் கூட்டமும் சேர்ந்து, இந்த அசாதாரணமான மகா நாடு நடப்பதானது, அவருடைய உள்ளத்தில் வெகுகாலமாக ஒதுக்கிவைக்கப்பட்டிருந்த, ஆனால் அவருடைய ஆத்மாவில் ஆழமாய் எழுதப்பட்டிருந்த, அந்தப் பழைய கருத்துகள் வரிசையாகத் தோன்ற ஆரம்பித்தன. அதாவது, 'சமுதாய ஒப்பந்தம்' என்ற புத்தகத்தைப்பற்றிய கருத்துகளும், பிரஞ்சுப் புரட்சி பற்றிய கருத்துகளும், அவருடைய மனதில் தோன்றின. சக்கரவர்த்தியின் பிரகடனத்தில், தமது மக்களோடு கலந்து ஆலோசிப்பதற்காக தாம் தலை நகருக்கு வருகிறதாக எழுதப்பட்டிருந்த வார்த்தைகள், பீயரின் மனதில் நன்றாய்ப் பதிந்தன. அந்த வார்த்தைகள் அந்தப் பழைய கருத்துகளை இன்னும் பலப்படுத்தின. இந்த வழியில் ஏதோ ஒரு முக்கியமான விஷயம் அவர் வெகுகாலமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த விஷயம், சமீபத்தில் வந்துகெண்டிப்பதாக அவர் மனதில் மனோராஜ்யம் செய்துகொண்டு, அங்கே சுற்றிக் கொண்டிருந்தார். அங்கு நடக்கிற உரையாடல்களைக் கேட்டுக்கொண்டும், கவனித்துக்கொண்டும் அவர் இருந்தார். ஆனால், அவருடைய மனதில் எந்தக் கருத்துகள் தோன்றினவோ, அந்தக் கருத்துக்களை உறுதி செய்வதற்கு வேண்டிய ஆதாரத்தை, அவரால் எங்கும் பார்க்க முடியவில்லை.

சக்கரவர்த்தியின் பிரகடனத்தை வாசித்தார்கள். அது உற்சாகத்தைக் கொடுத்தது. உடனே எல்லாரும் அதைப்பற்றி விவாதிக்க ஆரம்பித்தார்கள். சாதாரண உரையாடல்களோடு சில கேள்விகள் கேட்கப்படுவதையும் பீயர் கேட்டார். அதாவது, சக்கரவர்த்தி உள்ளே நுழையும்போது, பிரபுக்கள் வம்சங்களைச் சேர்ந்த மார்ஷல்கள் எங்கே நிற்க வேண்டுமென்று ஒருவர் கேட்டார். சக்கரவர்த்தியை மரியாதை செய்வதற்காக, ஒரு நடனக் கச்சேரியை எப்போது கொடுக்க வேண்டுமென்று மற்றொருவர் கேட்டார். அவர்கள் எல்லாரும் ஜில்லா வாரியாக அந்தக் கூட்டத்தில் உட்காருவதா, அல்லது மாகாண வாரியாக உட்காருவதா என்று மற்றொருவர் கேட்டார். இப்படியாகப் பல கேள்விகள் அங்கே கிளம்பின. ஆனால், யுத்தத்தைப் பற்றி பேச்சு வந்தவுடனே, அல்லது அந்த பிரபுக்களின் கூட்டத்தை எதற்காகக் கூட்டியிருக்கிறார்கள் என்ற கேள்வி வந்த உடனேயே, அந்தப் பேச்சு எல்லாம் நிச்சயமில்லாமலும், முடிவு இல்லாமலும் போய்விட்டன. அப்போதெல்லாம் எல்லாரும் பிறர் சொல்வதைக் கேட்பதற்கு விரும்புவார்களேயொழிய, தாங்கள் பேச விரும்பமாட்டார்கள்.

ஒரு நடுத்தர வயதுள்ள, அழகான, ஊக்கமுள்ள மனிதர் ஒருவர், கடற்படையிலிருந்து விலகிய சீருடையை அணிந்து கொண்டு, அங்கிருந்த மண்டபங்கள் ஒன்றில் பேசிக்கொண்டிருந்தார். அவரைச் சுற்றி ஒரு சிறிய கூட்டம் கூடியிருந்தது. அந்தக் கூட்டத்திற்கு பீயர் போனார். அங்கே பேசுவதைக் கவனித்துக் கேட்டார். காத்தரைன் காலத்து ராணுவ சீருடையை அணிந்து கொண்டு, கோமகன் இலியா ராஸ்டோவ் அங்கே ஒரு மகிழ்ச்சியான புன்னகையோடு, சாவதானமாக அந்தக் கூட்டத்தினிடையே சுற்றிக்கொண்டிருந்தார். அவர்கள் எல்லாரும் அவருக்குப் பழக்கமானவர்கள். அவரும் மேலே சொல்லிய அந்தச் சிறிய கூட்டத்திற்கு வந்து சேர்ந்தார். அவ்ரும் ஒரு அன்பான புன்னகை காட்டி, அவர் எப்போதும் செய்வதைப் போலவே, அங்கீதரிப்பதாகத் தலையை ஆட்டி, அந்தப் பிரசங்கியின் பேச்சுகளைக் கேட்டுக்கொண்டிருந்தார். அந்த மாஜி கடற்படை அதிகாரி மிகுந்த தைரியமாகப் பேசினார். அந்தத் தைரியம், அதைக் கேட்டுக்கொண்டிருந்தவர்களின் முகத் தோற்றத்தில் தெளிவாய்த் தெரிந்தது. அதோடு, மிகுந்த பணிவாகப் போகக்கூடியவர்களும், அமைதியான சுபாவம் கொண்டவர்களும் அந்தப் பேச்சை ஒப்புக்கொள்ளாமல், அவரிடம் அபிப்பிராய பேதம் கொண்டு, அந்த இடத்தைவிட்டுப் போவதை பீயர் கவனித்தார். இந்தச் செய்கையும், பிரசங்கியின் தைரியமான பேச்சை உறுதிப் படுத்தியது. அந்தக் கூட்டத்தினருக்கு மத்தியில் பீயர் தள்ளிக்கொண்டு போனார். அங்கே நின்று அவர் கவனித்துக் கேட்டபோது, அந்தப் பிரசங்கி 'தாராளக் கட்சி'யைச் சேர்ந்தவர் என்பதில், அவருக்கு உறுதி ஏற்பட்டது. ஆனால், அவருடைய கருத்துக்கள் தம்முடைய கருத்துக்களுக்கு வித்தியாசமானவை என்பதையும் கண்டுகொண்டார். அந்தக் கடற்படை மாஜி அதிகாரி, எதிரொலிக்கும்படியான சங்கீத, பணக்காரக் குரலில் ரகரங்களை விழுங்கிக்கொண்டு, மெய்யெழுத்துக்களை மழுப்பிக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார். அவருடைய பேச்சு, வாழ்க்கையில் அமிதமாக அவர் நடந்து வந்ததையும், அதிகாரத்தை அவர் உபயோகித்துப் பழகியிருப்பதையும் காட்டின.

'ஸ்மாலென்ஸ்க் மக்கள் சக்கரவர்த்திக்காக ஒரு பாதுகாப்புப் படையை நிர்மாணிப்பதால் என்ன வந்துவிடும்? ஸ்மாலென்ஸ்க்கைப் பார்த்து நாம் காப்பியடிப்பதா? மாஸ்கோ மாகாணத்தின் செல்வச் சீமான்கள் எது சரியென்று நினைக்கிறார்களோ, அதை நம்முடைய சக்கரவர்த்திக்கு தங்களுடைய விசுவாசத்தை வேறு வழிகளில் அவர்கள்

காட்டிக்கொள்ள விசுவாசத்தை வேறு வழிகளில் அவர்கள் காட்டிக்கொள்ள முடியும். 1807-ஆம் வருஷத்தில் தற்காப்புப் படையை நாம் அமைத்ததை நாம் மறந்துவிட முடியுமா? அச்சமயத்தில் அம்மாதிரி செய்ததால், பாதிரிகளின் குமாரர்களும், திருடர்களும், கொள்ளைக்காரர்களுமே லாபம் அடையும்படியாக நேரிட்டது...'

கோமகன் இலியா ராஸ்டோவ் சௌஜன்யத்தோடு புன்னகை காட்டி, தமது அங்கீகாரத்தைக் காட்டுவதற்காகத் தலையை ஆட்டினார்.

'அப்போது தாம் சேர்த்த அந்தப் பாதுகாப்புப் படையினால், நமது ஏகாதிபத்தியத்திற்கு ஏதாவது பலன் ஏற்பட்டதா? ஒன்றுமே ஏற்படவில்லை. நம்முடைய விவசாயத்தைத்தான் அது பாழ்படுத்தியது. ராணுவத்திற்கு ஆட்களைச் சேர்ப்பதுதான் நல்லது. இல்லையென்றால், அவர்கள் சிப்பாய்களாகவோ, விவசாயிகளா கவோ இல்லாமல் கெட்டுப் போவார்கள். அவர்களுடைய ஒழுக்கக் குறைவு ஒன்றுதான் நமக்குக் கிடைக்கும். பிரபுக்கள், தங்களுடைய உயிர்களுக்குத் தயங்கமாட்டார்கள். நம்மில் ஒவ்வொருவரும் அதிகமான வீரர்களைப் படையில் சேர்க்க முன்வருவோம். நமது சக்கரவர்த்தி ஒரு வார்த்தை சொன்னால் போதும்; நாம் எல்லாரும் அவருக்காக உயிரைவிடத் தயாராய் இருக்கிறோம்' என்று அந்த வாய்ச் சாலகர் மிகுந்த உணர்ச்சியோடு பேசினார்.

மகிழ்ச்சியினால் கோமகன் ராஸ்டோவின் வாயில் நீர் ஊறியது. அவர் பீயரை முழங்கையால் இடித்தார். பீயருக்கு, தாமே பேச வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது. அவர் பரபரப்படைந்து, முன்னால் தள்ளிக்கொண்டு போனார். எதற்காக அவர் பரபரப்படைந்திருக்கிறார் என்பதைப்பற்றி அவருக்கு நிச்சயமாகத் தெரியவில்லை; அல்லது தாம் என்ன பேசப் போகிறார் என்பதைப் பற்றியும் அவருக்கு எதுவும் தெரியாது. அவர் வாயைத் திறந்ததும், அங்கிருந்த செனெட்டர் ஒருவர், பல் இல்லாதவர், ஒரு கோபமான, கூரிய புத்திசாலித்தனமான தோற்றத்தோடு, முதலாவது பேசியவருக்குப் பக்கத்தில் நின்ற அவர், இவரை இடைமறித்தார். அதாவது, விவாதங்களை நடத்திப் பழக்கமடைந்தவரைப் போலவும், ஒரு வாதத்தைத் தொடர்ச்சியாக நடத்திவைப்பவர் போலவும் காணப்பட்டார். அவர் மெதுவான, தெளிவான குரலில் பேச ஆரம்பித்தார்.

'எனக்குத் தோன்றுவது என்னவென்றால்' என்று, தணிந்த குரலில், பல் இல்லாத வாயினால், அவர் பேச ஆரம்பித்தார். 'நமது

ஏகாதிபத்தியத்திற்கு இந்தச் சமயத்தில் ராணுவத்திற்கு ஆள் சேர்ப்பது நல்லதா, அல்லது அங்கங்கே பாதுகாப்புப் படையை நியமிக்கச் செய்வது நல்லதா என்பதைப்பற்றி விவாதிப்பதற்காக, நாம் இங்கே அழைக்கப்படவில்லை; நமது சக்கரவர்த்தி ஒரு வேண்டுகோள் விடுத்து நம்மை கௌரவப்படுத்தியிருக்கிறார்; அந்த வேண்டுகோளுக்குப் பதில் கூறுவதற்காகவே நாம் அழைக்கப் பட்டிருக்கிறோம். ஆனால், படைக்கு ஆள் சேர்ப்பது நல்லதா, பாதுகாப்புப் படை ஏற்படுத்துவது நல்லதா என்பதைப் பற்றி தீர்மானம் செய்ய வேண்டிய விஷயங்களை நம்முடைய உயர்ந்த அதிகார பீடத்திற்கு நாம் விட்டுவிடுவோம்...'

பீயர் தமது பரபரப்பை வெளியே காட்டுவதற்கான ஒரு சந்தர்ப்பத்தைத் திடீரென்று கண்டார். பிரபுக்களின் அந்த ஆலோசனைகளில் அந்த செனெட்டர் இம்மாதிரியான ஒரு குறுகிய வாதப்போக்கை நுழைப்பதைக் கண்டு, அவருடைய இருதயம் வருத்தமடைந்தது. பீயர் முன்னால் சென்று, அவர் பேசுவதை இடைமறித்தார். தாம் என்ன பேசப்போகிறார் என்பதைத் தாமே அறியார். ஆனால், ஆவலோடு பேச ஆரம்பித்தார். இடையிடையே பிரஞ்சு மொழியிலும், புத்தகத்தில் படித்த ருஷ்ய மொழியிலும் பேச ஆரம்பித்தார்.

'மேன்மை தங்கியவரே, மன்னிக்க வேண்டும்' என்று அவர் ஆரம்பித்தார். (அந்த செனெட்டருடன் அவர் மிகுந்த பழக்கமானவராய் இருந்தபோதிலும், இந்தச் சமயத்தில் முறைப்படி அவரிடம் பேசவேண்டியது அவசியமென்று அவர் நினைத்தார்) அந்த கனவான் சொல்லுவதை நான் ஒப்புக்கொள்ள முடியாது... (அவர் தயங்கினார். கௌரவமுள்ள எனது எதிர்க் கட்சிக்காரர் என்று அவர் சொல்ல விரும்பினார்.) அந்த கனவானை எனக்குத் தெரியக்கூடிய பாக்கியம் கிடைக்கவில்லை. பிரபுக்களை இங்கே அழைத்துள்ள நோக்கம், அவர்கள் தங்கள் அனுதாபங்களையும் உற்சாகத்தையும் காட்டுவதற்கு மட்டுமல்ல; நம்முடைய தந்தை நாட்டிற்கு எவ்விதமாக உதவி செய்ய முடியும் என்பதை ஆலோசிப்பதற்காகவுமே இங்கு பிரபுக்கள் அழைக்கப் பட்டிருக்கிறார்கள் என்று நான் நினைக்கிறேன். நாம் சொந்தக்காரர்களாய் இருக்கும் நம்முடைய அடிமைகளை, சக்கரவர்த்தியின் சேவைக்காகத் தத்தம் செய்வதனால் மட்டும், சக்கரவர்த்தி திருப்தி அடைந்துவிடமாட்டார்; நாம் அவருக்கு எந்தவிதமான ஆலோசனையையும் கூறுவதற்குத் தயாராய் இல்லாமல் நம்மை வைத்துக்கொள்ளுவதைக் கண்டும் அவர் திருப்தி அடையமாட்டார்.'

அந்த செனெட்டரின் கேலியான புன்னகையையும், பீயரின் சுதந்திரமான பேச்சுக்களையும் கேட்டு, அந்தக் கூட்டத்தில் நின்ற பலர் அதை விட்டுப் புறப்பட்டுப் போனார்கள். கோமகன் ராஸ்டோவ் மட்டும் திருப்தி அடைந்தார். அவர் எப்படி கடற்படை அதிகாரியின் பேச்சைக் கேட்டு திருப்தி அடைந்தாரோ, எப்படி அந்த செனெட்டரின் பேச்சையும் மற்றபடி எல்லா பேச்சுக்களையும் கேட்டு அவர் திருப்தி அடைந்தாரோ, அதேமாதிரி பீயரின் பேச்சையும் கேட்டுத் திருப்தி அடைந்தார்.

'இந்த விஷயங்களை எல்லாம் நாம் விவாதிப்பதற்கு முன்பாக, மிகுந்த மரியாதையோடு மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியை நாம் ஒன்று கேட்கவேண்டும். அதாவது, நம்முடைய ராணுவத்தைத் தற்சமயம் எந்தெந்த இடத்தில் வைத்திருக்கிறார்கள் என்பதையும்...'

இந்த வார்த்தைகளைப் பீயர் கூறி முடிக்குமுன்பாக, மூன்று பக்கங்களிலிருந்தும் அவரை இடைமறித்தார்கள். அவருக்கு மிகுந்த பழக்கமான, அவரோடு பாஸ்டன் சீட்டு விளையாடி வந்த ஒரு நண்பர், அவரிடம் எப்போதுமே நல்லெண்ணத்துடனிருந்த நண்பர் ஸ்டீபான் ஸ்டீபானாவிச் அட்ராக்ஸின் என்பவர் மிகவும் கடுமையாகத் தாக்கிப் பேசினார். அட்ராக்ஸின் யூனிபாரத்தி லிருந்தார். அவர் சீருடை அணிந்துகொண்டிருந்ததால், அம்மாதிரி காணப்படுகிறாரா, அல்லது வேறு காரணமுண்டா என்று பீயருக்குத் தெரியவில்லை. ஏனெனில், அவர் இப்பொழுது பார்த்த அட்ராக்ஸின் வேறு வகையான மனிதராய் இருந்தார். முகத்தில் துவேஷம் கொண்டு, அந்த வயதான அட்ராக்ஸின் என்பவர் பீயரை நோக்கிக் கூச்சலிட்டார்.

'முதலாவதாக, அதைப்பற்றி சக்கரவர்த்தியைக் கேட்பதற்கு நமக்கு உரிமை கிடையாது என்பதை நான் உமக்குச் சொல்லுகிறேன். இரண்டாவதாக, ருஷ்யாவின் பிரபுக்கள் கூட்டம் அந்த உரிமையைப் பெற்றிருந்தாலும், சக்கரவர்த்தியால் அம்மாதிரி ஒரு கேள்விக்குப் பதில் சொல்ல முடியாது. துருப்புகளின் எண்ணிக்கை கூடுவதும் குறைவதும், எதிரிகள் செய்கைகளைப் பொறுத்ததாய் இருக்கும்.'

சுமார் 40 வயதுள்ள, நடுத்தர உயரமுள்ள, ஜிப்ஸிகளின் விடுதிகளில் முன்பெல்லாம் பார்த்துப் பழகியிருந்த, சீட்டு விளையாட்டில் ஒரு மோசமான பேர்வழி என்று அறிந்திருந்த பிரபுவின் குரல் இப்போது கேட்டது. அவரும், அவர் அணிந்திருந்த யூனிபாரத்தினால் மாறிப்போயிருந்தார். அவர் பீயரிடம் வந்து, அட்ராக்ஸின் பேசுவதை இடைமறித்தார்.

'ஆமாம், அதைப்பற்றி விவாதிப்பதற்கு இது சமயமல்ல. இப்போது நாம் செய்கையில் காட்ட வேண்டும். ருஷ்யாவில் யுத்தம் நடந்துகொண்டிருக்கிறது. ருஷ்யாவை அழிப்பதற்காகவும், நம்முடைய முன்னோர்களின் கல்லறைகளை அழித்து, நம் மனைவிமார்களையும் குழந்தைகளையும் தூக்கிப்போவதற்காகவும் எதிரி முன்னேறிக்கொண்டிருக்கிறான்' என்று அவர் கூறி, தமது நெஞ்சில் அடித்துக்கொண்டார். 'நாம் ஒவ்வொருவரும் கிளம்பி, நாம் ஒவ்வொருவரும் நம்முடைய தந்தையான ஜார் சக்கரவர்த்திக்காகப் போவோமாக' என்று அவர் கூச்சலிட்டு, தம்முடைய சிவந்த கண்களை உருட்டினார். இதை ஆதரிப்பதாக அந்தக் கூட்டத்தில் பல குரல்கள் கேட்டன. 'நாம் ருஷ்யர்கள். நம்முடைய மதத்தையும், நம்முடைய சிம்மாசனத்தையும், நம்முடைய தந்தை நாட்டையும் காப்பாற்றுவதற்காக, ரத்தம் சிந்த நாம் தயங்கமாட்டோம். நாம் நம்முடைய தந்தை நாட்டின் புத்திரர்களாய் இருந்தால், நாம் பேச்சுப் பேச்சென்று பேசுவதை உடனே விடுவோமாக. ருஷ்யாவின் பாதுகாப்புக்காக, ருஷ்யா எம்மாதிரி கிளம்பி எழுந்தது என்பதை ஐரோப்பாவுக்குக் காட்டுவோமாக.'

இதற்குப் பதில் சொல்ல பீயர் விரும்பினார். ஆனால், அவரால் ஒரு வார்த்தையும் சொல்ல முடியவில்லை. அவருடைய வார்த்தைகளுக்கு என்ன அர்த்தம் இருக்கிறதென்பது ஒரு பக்கமிருக்க, அவருடைய குரலானது அவருடைய எதிர்க் கட்சியாரின் குரலைவிட ரொம்பவும் தணிவாக இருந்தது.

கூட்டத்தின் பின்னால் நின்றுகொண்டிருந்த கோமகன் ராஸ்டோவ் தமது சம்மதத்தைத் தெரிவித்தார். அங்கு நின்ற பலர் வேகமாக அந்த வாய்ச்சாலகரிடம் திரும்பி, அவர் பேசி முடித்தவுடன் சொன்னார்கள்:

'அதுதான் சரி; ரொம்ப சரி; அப்படித்தான்.'

தம்முடைய பணத்தையும், அடிமைகளையும், தம்மையும் தியாகம் செய்யத் தயாராய் இருப்பதாகவும், இப்போதுள்ள நிலைமையைத் தெரிந்து அதைச் சீர்திருத்த வேண்டுமென்றும் பேசுவதற்கு பீயர் விரும்பினார். ஆனால், அவரால் பேச முடியவில்லை. பல குரல்கள் ஏக காலத்தில் பேசிக்கொண்டும், கூச்சலிட்டுக்கொண்டும் இருந்தன. ஆகவே, அவைகளை யெல்லாம் தாம் ஒப்புக்கொள்வதாக கோமகன் ராஸ்டோவ் சொல்லுவதற்கு அங்கு அவகாசம் இல்லை. அந்தக் கூட்டம் அதிகரித்தது. சிலர் கலைந்து போனார்கள். சிலர் புதிதாய் வந்து

சேர்ந்தார்கள். அங்கிருந்த அவர்கள் எல்லோரும் பேச்சுக் குரல்கள் ஒலிக்க பெரிய மண்டபத்திற்குள்ளிருந்த அந்தப் பெரிய மேஜையை நோக்கிப் போனார்கள். பேசுவதற்காக முயற்சி செய்த பீயரின் முயற்சி வெற்றி அடையாமல் போனதோடுகூட, அவர் முரட்டுத்தனமாக இடைமறிக்கப்பட்டு ஒரு பக்கமாக ஒதுக்கப்பட்டார். ஒரு பொதுவான விரோதியிடமிருந்து மக்கள் எப்படித் திரும்பிக்கொள்வார்களோ, அதே மாதிரி அவரிடமிருந்து பொது மக்கள் திரும்பிக்கொண்டார்கள். அவருடைய பேச்சிலுள்ள கருத்துகளுக்காக அவர்கள் அதிருப்தி கொண்டு, அம்மாதிரி நடந்தார்கள் என்பதில்லை; அவருக்குப் பின்னால், பல பேச்சுகளுக்குப் பின்பு, அவர் என்ன பேசினார் என்பதுகூட மக்களுக்கு மறந்து போயிற்று. ஆனால், மக்களுக்குத் தாங்கள் அன்பு கொள்ளுவதற்காக ஒரு உருவமும், தாங்கள் விரோதிப்பதற்காக ஒரு உருவமும் வேண்டி இருந்தது. தாங்கள் விரோதிப்பதற்காக ஒரு உருவம் வேண்டுமென்பதில் பீயரை அவர்கள் சேர்த்துக் கொண்டார்கள். அந்த பரபரப்படைந்த பிரபுக்களுக்கு முன்னால், வேறு பல வாய்ச்சாலங்களும் பேசினார்கள். அவர்கள் எல்லோரும் அதே தொனியிலேயே பேசினார்கள். பலர் ரொம்ப வாயச்சாலகமாகவும், புதிய விஷயங்களை எடுத்துச் சொல்லுவது போலவும் பேசினார்கள்.

'ருஷ்யன் மெஸஞ்சர்' என்ற பத்திரிகையின் ஆசிரியரான கிளைங்கா என்பவர் (அந்தக் கூட்டத்தில் நிற்பதைச் சிலர் கண்டு கொண்டதும், 'ஆசிரியர், ஆசிரியர்' என்ற கோஷம் கிளம்பியது.) நரகத்தைக்கொண்டே நரகத்தை எதிர்த்தடிக்க வேண்டும் என்று சொன்னார். மின்னல் வெளிச்சங்களையும், இடி முழக்கங்களையும் கண்டு ஒரு சிறு குழந்தை சிரித்துக்கொண்டிருந்ததைத் தாம் பார்த்திருப்பதாகவும், ஆனால், அம்மாதிரி அந்தக் குழந்தையைப் போல நாம் பார்த்துக்கொண்டிருக்க முடியாது என்றும் அவர் சொன்னார்.

'ஆமாம், ஆமாம், இடி முழக்கங்கள்' என்று அந்தக் கூட்டத்தின் பின்னாலிருந்தவர்கள் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

அந்தக் கூட்டம் அங்கிருந்த பெரிய மேஜையின் முன்பாக வந்தது. அந்த மேஜையின் முன்பாக, தலைமுடி சாம்பல் வர்ணமான அல்லது 70 வயதான பிரபுக்கள் யூனிபாரங்களணிந்து, பட்டிகளணிந்து அமர்ந்திருந்தார்கள். அவர்களில் அநேகமாய் எல்லாரையும் அவர்களுடைய வீடுகளில் அவர்களுடைய

கோமாளிகளுடனோ, அல்லது கிளப்புகளில் பாஸ்டன் சீட்டு விளையாட்டுகளிலோ பீயர் பார்த்திருக்கிறார். இடைவிடாத தொணதொணப்பு சப்தங்களுடன் அந்தக் கூட்டம் மேஜையை நோக்கி முன்னே நகர்ந்தது. அங்கிருந்த நாற்காலிகளின் உயரமான முதுகுப் பக்கத்தில் அந்தக் கூட்டத்தால் நெருக்கப்பட்ட வாய்ச்சாலகர்கள் ஒருவருக்குப் பின்னால் ஒருவரோ, அல்லது இருவர் சேர்ந்தோ பேசிக்கொண்டிருந்தார்கள். பின்னால் நின்றவர்கள், முன்னால் பேசியவர் எதை விட்டுவிட்டாரென்பதைக் கவனித்து, உடனே அதைத் தாங்கள் சொல்ல ஆரம்பித்தார்கள். அங்கிருந்த கூட்ட நெருக்கடியில் மற்றவர்கள் புதிதாக எதையாவது ஒன்றைத் தேடிச் சொல்லுவதற்காக தங்களுடைய மூளைகளில் தேடிப் பார்த்தார்கள். பீயருக்கு அறிமுகமான அந்தக் கிழட்டுப் பிரபுக்கள் அங்கே அமர்ந்து, முதலில் ஒருவரையும் பின்னால் மற்றொருவரையும் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அங்கே மிகவும் உஷ்ணமாய் இருந்தது என்ற உணர்ச்சி ஒன்றுதான், அவர்களுடைய முகங்களில் அநேகமாய் பிரதிபலித்துக்கொண்டிருந்தது. பீயருக்கும் மிகுந்த பரபரப்பு ஏற்பட்டிருந்தது. எல்லாரும் எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் தியாகம் செய்யத் தயார் (அவர்களுடைய அந்த அபிப்பிராயம் அவர்களுடைய குரல்களினாலும் பார்வையினாலும் வெளிப்பட்டன.) என்ற உணர்ச்சி பீயரையும் பற்றியது. அவர் தமது கருத்துக்களைத் துறந்துவிடவில்லை. சில வகைகளில் தம்மையே குற்றம் சொல்ல வேண்டுமென்று அவர் நினைத்து, தாம் சொல்லிய காரணங்களுக்கு நியாயம் சொல்ல விரும்பினார்.

'இப்போது என்ன தேவை என்பதை நாம் அறிந்து கொண்டோமானால், நாம் எதற்காகத் தியாகம் செய்ய வேண்டியிருக்கிறதோ, அதற்குமிகுந்த உபயோகமாய் இருக்கும் என்றுதான் நான் சொன்னேன்' என்று அவர் மற்றவர்களின் குரல்களுக்கு மேலாகக் குரலை உயர்த்திப் பேசினார்.

அவருக்குப் பக்கத்தில் நின்ற ஒரு வயோதிகர் திரும்பிப் பார்த்தார். ஆனால், மேஜைக்கு அந்தப் பக்கம் ஏற்பட்ட ஆச்சரியக் குரல்களினால் அவர் கவனம் திரும்பியது.

'ஆமாம், மாஸ்கோ சரணடைந்துவிடும். அதுதான் நமது பிராயச்சித்தம்' என்ற ஒருவர் கூச்சலிட்டார்.

'அவர்தான் மனித சமூகத்தின் விரோதி' என்று ஒருவர் கத்தினார்.

'என்னைப் பேச விடுங்கள்' என்று இன்னொருவர் சொன்னார். 'கனவான்களே, என்னை நீங்கள் நசுக்காதீர்கள்...' என்று மற்றொருவர் சொன்னார்.

# 9

## 23

அச்சமயத்தில், தம்முடைய முன் நீண்ட நாடியுடனும், கூர்மையான கண்களுடனும், ஒரு ஜெனரலின் சீருடையை அணிந்து, ராஸ்டாப்சைன் அந்த அறையில் நுழைந்து, அங்கிருந்த கனதனவான்கள் கூட்டத்திற்கு முன்பாக வேகமாய்ப் போனார்.

'நமது சக்கரவர்த்தி ஒரு வினாடியில் இங்கே வந்துவிடுவார். நான் நேராக அரண்மனையிலிருந்து வருகிறேன். நாம் இப்பொழுது இருக்கிற நிலைமையைப் பார்த்தால், விவாதிப்பதற்குக் கொஞ்சம்கூட அவசியம் இருப்பதாகத் தோன்றவில்லை. நம்மையும் வர்த்தகர்களையும் கூட்டி வைக்க வேண்டுமென்ற சக்கரவர்த்தி விரும்பினார். கோடிக்கணக்காக அங்கே இருந்து வந்து குவியும். (என்று அந்த வியாபாரிகளின் மண்டபத்தைச் சுட்டிக் காட்டினார்.) ஆனால், தேவையான மனிதர்களை சப்ளை செய்ய வேண்டியதே நமது வேலை. இதில் நாம் சளைக்கக்கூடாது... குறைந்தபட்சம் நாம் செய்யக்கூடியது அதுதான்' என்று ராஸ்டாப்சைன் சொன்னார்.

அந்த மேஜையைச் சுற்றியிருந்த பிரபுக்களுக்குள் ஆலோசனை ஆரம்பமாயிற்று. அந்த ஆலோசனை பூராவாக அமைதியோடு நடைபெற்றது. ஆரம்பத்தில் ஏற்பட்ட சப்தங்களுக்குப் பின்னால் அந்த வயோதிகர்கள் ஒருவருக்குப் பின் ஒருவராக 'நான் ஒப்புக்கொள்கிறேன்' என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். 'எனக்கும் அதே அபிப்பிராயம்தான்' என்று வேறு பலர் சொன்னார்கள். இம்மாதிரி ஒரே விதமாகச் சொல்லிய பதில்கள் ஒரு சோர்வான பலனை ஏற்படுத்தியது என்றுகூடச் சொல்லலாம்.

மாஸ்கோவின் பிரபுக்களும் கனதனவான்களும், தங்களிடமுள்ள ஆயிரம் அடிமைகளுக்குப் பத்து பேர் வீதம், அவர்களுக்கு வேண்டிய தளவாடங்களோடு, கொடுப்பதாக ஒரு தீர்மானத்தை எழுதும்படி சொன்னார்கள். ஸ்மாலென்ஸ்க்கில் இருந்த கனதனவான்களும் அதே மாதிரி செய்திருந்தார்கள். அந்த ஆலோசனை முடிந்து திருப்தியோடு அங்கிருந்த கனதனவான்கள் எழுந்திருக்கும்போது, நாற்காலிகளின் கிரீச் சப்தம் கேட்டது. அதை விட்டு எழுந்து அவர்கள் மேலும் கீழும் நடக்க ஆரம்பித்தார்கள். இரண்டு பேர்கள் வீதம் ஜோடி சேர்ந்து தனித் தனியாக நின்று பேசிக் கொண்டிருந்தார்கள்.

'சக்கரவர்த்தி! சக்கரவர்த்தி!' என்று ஒரு கூச்சல் அந்த மண்டபங்களில் நுழைந்து பிரதிபலிக்கும்படி திடீரென்று கேட்டது. அங்கிருந்தவர்கள் எல்லாரும் வாசல் பக்கம் வேகமாய் போனார்கள்.

மண்டத்திற்குள் சக்கரவர்த்தி ஒரு அகலமான பாதை வழியாக நுழைந்தார். பாதையின் இரு புறங்களிலும் பிரபுக்கள் நின்று கொண்டிருந்தார்கள். ஒவ்வொருவர் முகத்திலும் மரியாதையும், திகைப்பால் அடிபட்ட ஆச்சரியமும் தோன்றின. பீயர் வெகு தூரத்திற்கப்பால் நின்றுகொண்டிருந்தார். சக்கரவர்த்தி என்ன சொன்னார் என்பதைப் பூராவாக அவரால் கேட்க முடியவில்லை. அவரால் கேட்க முடிந்தவரையில், ஏகாதிபத்தியத்திற்கு ஆபத்து ஏற்பட்டிருக்கிறதென்றும், மாஸ்கோவின் பிரபுக்கள் மீது தாம் நம்பிக்கை வைத்திருக்கிறார் என்றும் சக்கரவர்த்தி சொன்னார் என்று அறிந்துகொண்டார். அங்கே நிறைவேற்றிய தீர்மானத்தை ஒருவர் சக்கரவர்த்திக்கு எடுத்துச் சொன்னார்.

'கனவான்களே' என்று சக்கரவர்த்தி ஒரு படபடத்த குரலில் பேசினார்.

கூட்டத்திற்குள் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. மீண்டும் அது அடங்கியது. அதனால், சக்கரவர்த்தி ஆவேசத்தோடு மகிழ்ச்சியான குரலில் பேசியதை, பீயர் தெளிவாகக் கேட்க முடிந்தது.

'ருஷ்ய பிரபுக்களின் பக்தியைக் குறித்து நான் எப்போதுமே சந்தேகப்பட்டதில்லை. ஆனால், நான் எதிர்ப்பார்த்ததற்கு மேலாக இன்று நடைபெற்றுவிட்டது. தந்தை நாட்டின் பெயரால் உங்களுக்கு வந்தனம் செலுத்துகிறேன். கனவான்களே, நாம் காரியத்தில் செய்து காட்டுவோம். நேரம் என்பது மிகுந்த விலை மதிக்க முடியாததாய் இருக்கிறது...'

சக்கரவர்த்தி பேசி முடித்தார். அவரைச் சுற்றிக் கூட்டம் நெருக்க ஆரம்பித்தது. பரவசமான கோஷங்கள் எல்லா பக்கங்களிலிருந்தும் கிளம்பின.

'ஆமாம், மிகவும் விலை மதிக்க முடியாதது... ஒரு சக்கரவர்த்தியின் வார்த்தை' என்று விம்மலோடு கோமகன் ராஸ்டோவ் கூறினார். அவர் கூட்டத்திற்குப் பின்னால் நின்றுகொண்டிருந்தார். எதையும் அவரால் கேட்டிருக்க முடியாது. ஆனால், தமது சொந்த வழியில் ஒவ்வொன்றையும் அவர் உணர்ந்திருந்தார்.

பிரபுக்களின் மண்டபத்திலிருந்து வர்த்தகர்களின் மண்டபத்திற்கு சக்கரவர்த்தி போனார். அங்கே சுமார் பத்து நிமிஷங்கள் தங்கியிருந்தார். அந்த வர்த்தகர்களின் மண்டபத்திலிருந்து, சக்கரவர்த்தி உணர்ச்சிப் பெருக்கினால் கண்களில் நீர் நிறைந்து, வெளியே வருகிறதைப் பார்த்தவர்களில் பீயரும் ஒருவர். அவர் வர்த்தகர்கள் முன்பாகப் பேச ஆரம்பிக்கும்போதே, அவருடைய கண்களிலிருந்து பொலபொலவென்று கண்ணீர் வடிய ஆரம்பித்தது.

ஆகவே, அவர் நடுங்கிய குரலோடு தமது பேச்சை முடித்தார் என்று பின்னால் தெரிய வந்தது. சக்கரவர்த்தி இரண்டு பேர்களோடு வெளியே வருதைப் பீயர் பார்த்தார். அவர்களில் ஒருவரை பீயருக்கு முன்பே தெரியும். அவர் ஒரு கொழுத்த கள்ளுக் கடைக்காரர். (ஒரு ஜில்லா பூராவுக்கும் குத்தகைதாரர்.) மற்றொருவர் மேயர். மெலிந்த மஞ்சளான முகத்தையும் ஒடுக்கமான தாடியையும் அவர் கொண்டிருந்தார். அவர்கள் இருவரும் அழுதுகொண்டிருந்தார்கள். அந்த ஒல்லியான மனிதரின் கண்களில் கண்ணீர் நிறைந்திருந்தது. அந்தக் கொழுத்த கள்ளுக் கடைக்காரர் ஒரு குழந்தைபோல விம்மி விம்மி அழுதுகொண்டு,

'எங்களுடைய உயிர்களையும் சொத்துக்களையும் எடுத்துக் கொள்ளுங்கள், மாட்சிமை தங்கியவரே!' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டே இருந்தார்.

தாம் எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் போகத் தயாராய் இருப்பதாகவும், தம்மிடம் உள்ள ஒவ்வொன்றையும் தியாகம் செய்யத் தயாராய் இருப்பதாகவும் அங்கே காட்டவேண்டும் என்ற ஆசையே பீயரின் ஒரே உணர்ச்சியாக இருந்தது. தாம் அரசியல் சட்ட நீதிப்படி முன்பு பேசியதற்கு இப்போது வெட்கமடைந்தார். அப்படிப் பேசியதை அழித்துவிடுவதற்கு ஒரு சந்தர்ப்பத்தை அவர் தேடிக் கொண்டிருந்தார். கோமகன் மாமோனாவ் என்பவர் ஒரு பட்டாளத்தைத் தயாரிப்பதாகக் கேள்விப்பட்டதும், ராஸ்டாப்சைனிடம் பெஜுகாவ் சென்று, தாம் ஆயிரம் மனிதர்களையும் அவர்களுக்காகும் செலவுக்கு வேண்டிய பணத்தையும் கொடுப்பதாக ஒப்புக்கொண்டார்.

என்ன நடந்தது என்பதைக் கண்ணீர் விடாமல் தமது மனைவியிடம் வயோதிகர் ராஸ்டோவினால் சொல்ல முடியவில்லை. அவர் ராணுவத்தில் தாமும் சேர்ந்துகொண்டதோடு, பெட்டியாவையும் சேர்ந்துகொள்ள உடனே அனுமதி கொடுத்தார்.

மறுநாள் மாஸ்கோவை விட்டு சக்கரவர்த்தி புறப்பட்டுப் போனார். அங்கு கூடியிருந்த பிரபுக்கள் எல்லோரும், தங்களுடைய சீருடையைக் கழற்றிவிட்டு, மீண்டும் தங்கள் வீடுகளிலும், கிளப்புகளிலும் அமர்ந்தார்கள். பட்டாளத்திற்கு ஆட்களைச் சேர்ப்பது சம்பந்தமாக முணுமுணுத்துக் கொண்டே தங்களுடைய மானேஜர்களுக்கு உத்தரவிட்டார்கள். தாங்கள் அந்தக் கூட்டத்தில் செய்வதாக ஒப்புக்கொண்டதைப்பற்றி அவர்களே இப்பொழுது மலைத்துப் போனார்கள்.

★

# விளக்க உரைகள்



1806-ம் வருஷத்தில் இங்கிலாந்துடன் ஒருவரும் வியாபாரம் செய்யக்கூடாது என்று நெப்போலியன் ஒரு உத்தரவு பிறப்பித்தார். ஐரோப்பிய துறைமுகங்களுக்குள் இங்கிலாந்தின் கப்பல்கள் வரக்கூடாது என்றும் அந்த உத்தரவில் சொன்னார். தம்முடைய நேச நாடுகளை இந்தக் கொள்கைகளுக்கு ஒப்புக்கொள்ளும்படி அவர் கட்டாயப்படுத்தினார். ஆனால், இந்தக் காரியம் அவைகளில் பல நாடுகளுக்கு பிரதிகூலமாய் இருந்தன. அந்த உத்தரவானது வர்த்தகத்திற்கு மிகுந்த பாதகம் விளைவித்ததோடு, திருட்டுத்தனமாக பொருள்களைக் கடத்துவதற்கும் இடம் கொடுத்தது. இந்த முறையை அடிக்கடி பல நாடுகள் மீறி நடந்தன. நெப்போலியனுக்குக்கூட இங்கிலீஷ் பொருள்கள் இல்லாமல் இருக்க முடியவில்லை. ஆகவே, சில சமயங்களில் பிரான்ஸுக்குள் அவற்றை அனுமதித்தார். ஆனால், ருஷ்யாவுக்கு இந்த உத்தரவு பெரிய வேதனையாக இருந்தது. ஆகவே, இதை அது ஒப்புக்கொள்ள வில்லை. அது ஒப்புக்கொள்ளாததினால்தான், நெப்போலியனால் அந்த ஒப்பந்தத்தை மீறி நடந்ததாக, ருஷ்யா குற்றம் சாட்டப்பட்டது. இதோடு மற்ற காரணங்களும் சேர்ந்து கொண்டதால்தான், 1812-ஆம் வருஷத்தில் ருஷ்யா மீது அவர் படையெடுத்தார். நெப்போலியனின் இந்த உத்தரவுக்குப் பதிலாக, இங்கிலீஷ் உத்தரவுகள் நடுநிலை நாடுகளுக்கு மிகுந்த அசௌகரியங்களைக் கொடுத்தன. அவற்றோடு நெப்போலியன் செய்த சூழ்ச்சிகளும் சேர்ந்துதான், 1812-14-ஆம் வருஷத்திய இங்கிலாந்து-அமெரிக்கா யுத்தத்திற்கு காரணங்களாய் அமைந்தன.

'விஸ்டுலாவுக்கு அப்புறமாக தமது துருப்புகளை வாபஸ் பெற நெப்போலியன் மறுப்பு.' அம்மாதிரி செய்ய வேண்டுமென்று அலெக்ஜாண்டர்-யுத்தத்தைத் தவிர்ப்பதற்காக-கடைசி முறையாகக் கையாண்டு பார்த்தார். நெப்போலியன் மறுத்துவிட்டபடியால், 1812-ஆம் வருஷத்திய போர் ஆரம்பமாயிற்று.

'டிரிஸ்டெனில் அவருக்கு கிடைத்த மரியாதைகள் அவருடைய தலையைக் கிரங்கும்படி செய்தன. 1812-ம் வருஷம் மே மாதத்தில் போர் ஆரம்பிப்பதற்கு முன்பாக, டிரிஸ்டேனில் தமது புதிய நேச நாட்டு மன்னர்களோடு ஒரு மாதம் தங்கினார். அவரோடு ஆஸ்திரிய

சக்கரவர்த்தியும், பிரஷ்ய மன்னரும், சாக்ஸனியின் மன்னரும் இருந்தார்கள். அவர்கள் வரிசை வரிசையாகக் கொடுத்த விருந்துகளையும், மற்ற வைபவங்களையும், புகழ்ச்சிகளையும், மரியாதைகளையும் பெற்று வந்தார்.

**9 2**

உலான்கள் ஆற்றில் நீந்திப் போகும் சம்பவத்தை வருணித்த போது, நெப்போலியன் போலந்து சீருடையை அணிந்து கொண்டார் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. போலந்துடன் அவருக்கு ஏற்பட்டுள்ள உறவை இது தெளிவாகக் காட்டுகிறது. அந்த யுத்தத்தின் மூலமாகத் தங்களுக்கு சுதந்திரம் கிடைக்குமென்று போலந்துக்காரர்கள் நம்பினார்கள். சின்ன விஷயங்களில் தமது தயவைக் காட்டி, அவர்களுடைய நம்பிக்கைக்கு நெப்போலியன் ஆதரவு காட்டி வந்தார். இந்த சீருடையைப் பற்றிய விவரம் டானைலெவ்ஸ்கி எழுதிய சரித்திரத்தில் காணப்படுகிறது. உலான்கள் ஆற்றைக் கடந்த சம்பவம் தீயர்ஸ் எழுதிய சரித்திரத்தில் காணப்படுகிறது.

**9 3**

மூன்று ராணுவங்களும் தங்களுடைய சொந்த சேனாதிபதிகளைக் கொண்டிருந்தன. மூன்று ராணுவங்களாவன: (1) பார்க்ளே-டி-டாலி என்பவரின் தலைமையில் மேற்கு ராணுவம்; (2) பாக்ரேஷன் தலைமையில் தெற்கு கோடியிலிருந்த ராணுவம்; (3) ஆஸ்திரியாவின் எல்லைக்குப் பக்கத்தில் டார்மாசாவ் என்பவர் அமைத்து வந்த ரிசர்வ் ராணுவம். ஒரு நாலாவது ராணுவம், சிச்சாகோவ் என்வரின் தலைமையில் இன்னமும் துருக்கி எல்லையில் இருந்து கொண்டிருந்தது. அங்கே யுத்தம் அப்பொழுதுதான் முடிந்தது. ஆனால், ருஷ்யாவிலிருந்து நெப்போலியன் பின்வாங்கிய பின்புதான், இந்த ராணுவம் உபயோகத்திற்கு கிடைக்கக்கூடியதாய் இருந்தது.

பார்க்ளே-டி-டாலி (1761-1818) லாட்வியா என்ற இடத்தில் பிறந்தவர். அவர் ஒரு ஸ்காட்லந்து குடும்பத்தின் வழித் தோன்றல். அந்தக் குடும்பம் 17-வது நூற்றாண்டில் ருஷ்யாவில் குடியேறியது. அவர் 1810-13-ல் யுத்த மந்திரியாக இருந்தார். ஆனால், 1812-ல் ராணுவத்தின் சேனாதிபத்தியத்தில் இருந்தார். ஸ்மாலென்ஸ்க் நகரைக் கைவிட்ட பின்பு, குட்டுஜோவை சேனாதிபதியாக நியமித்த பின்பு அதிலிருந்து விலகிக்கொண்டார். பாராடினோ போரில் அவர்

பிரசன்னமாய் இருந்தார். 1813-ல் அவர் மீண்டும் சேனாதிபதியாக வந்தார். 1814-ல் அவர் பீல்டு மார்ஷலாக நியமிக்கப்பட்டார்.

இளவரசர் பி.ஐ. பாக்ரேஜன் (1765-1812) என்பவர், வெற்றிகரமாக விளங்கிய ருஷ்ய ஜெனரல்களில் ஒருவர். ஆஸ்டர்லிட்ஜிலும் ஷார்ன் கிராபர்னிலும் அவர் மிகுந்த சிலாக்கியமாக நடந்து கொண்டார். இன்னும் பல போர்களிலும் அப்படியே நடந்து கொண்டார். பாராடினோவில் ஏற்பட்ட காயங்களினால் அவர் மாண்டார்.

'ஷிஷ்கோவ்'. அட்மிரல் ஏ.எஸ். ஷிஷ்கோவ் (1754-1841) என்பவர், உள்நாட்டு மந்திரியாக, ஸ்பெரான்ஸ்கியை வேலையிலிருந்து தள்ளிய பின்பு, நியமிக்கப்பட்டார்.

'பீல்டு மார்ஷல் இளவரசர் சால்டிகோவ்.' என்.ஐ. சால்டிகோவ் (1736-1816) என்பவர், அலெக்ஜாண்டரின் உபாத்தியாயராக இருந்தார். 1812-ஆம் வருஷத்தில் அவர் ஒரு பீல்டு மார்ஷலாகவும், மந்திரி சபையின் தலைவராகவும் இருந்து வந்தார்.

'கோமகன் லாவ்ரிஸ்டன்.' எ.ஜே.பி.லா (1768-1828) என்வர், லாரிஸ்டனைச் சேர்ந்த ஜான் லா என்பவரின் பேரன். ஜான் லா என்பவர் மிஸிஸிபி திட்டத்தினால் புகழ் பெற்றவர். லா என்பவர் நெப்போலியனுடைய பீரங்கிப் படை பள்ளியில் ஒரு மாணவராய் இருந்தார். 1809-ம் வருஷத்தில் வாக்ராம் என்ற இடத்தில் நடந்த போரில் அவர் பிரசித்தி பெற்றார். பீட்டர்ஸ்பர்க்கில் நெப்போலியனுடைய ஸ்தானாதிபதியாக (1811-1812) இருந்தார். ருஷ்ய படையெடுப்பில் வெகுதூரம் அவர் நெப்போலியனுடன் தொடர்ந்து வந்தார். ஆனால் 1815-ஆம் வருஷத்தில் எல்பா தீவிலிருந்து நெப்போலியன் திரும்பிய பின்பு, நெப்போலியனுடன் அவர் சேரவில்லை. அதன் பின்னால், 18-வது லூயி மன்னரால் அவர் பிரான்ஸின் மார்ஷலாகவும், ஒரு கோமகனாகவும் உயர்த்தப்பட்டார்.

'கோமகன் டி பாஸானா.' எச். பி மாரட் (1763-1839) என்பவர் நெப்போலியனுடைய வெளிநாட்டு மந்திரியாக 1811-12ல் இருந்தார்.

**9** **5**

'அவருடைய ருஸ்டன் மாமலுக்' மாமலுக்: துருக்கி-எகிப்திய குதிரைப் படையைச்சேர்ந்தவர்கள். அந்தப் படையை, 1798 ம் வருஷத்தில் நடந்த பைராமிட் போரில், நெப்போலியன் பூரணமாகத் தோற்கடித்தார். எகிப்திலிருந்து ஜார்ஜியன் இனத்தைச் சேர்ந்த

ருஸ்டனை தமது மெய்க்காப்பாளராக நெப்போலியன் அழைத்து வந்தார். அந்தக் காலத்திலிருந்து ருஸ்டன் தனது எஜமானரை விட்டுப் பிரியவில்லை. நெப்போலியன் மரணத்திற்குப் பின்னால், அவன் வெகுகாலம் ஜீவித்திருக்கவில்லை.



பலாஷேவிடம் நெப்போலியன் பேசிய பேச்சுக்கள், தீயர்ஸ், டானைலெவ்ஸ்கி ஆகியவர்கள் எழுதிய சரித்திரங்களிலிருந்து எடுக்கப்பட்டன.

பாரன் எச்.எப்.கே வான்ஸ்டைன் (1757-1831) என்பவர், ஒரு ஜெர்மன் ராஜதந்திரி. 1780-ம் வருஷத்தில் பிரஷ்ய சேவையில் அவர் சேர்ந்தார். 1807-ம் வருஷத்திய ஹார்டன் பர்க்கிற்குப் பின்னால், அவர் ஒரு மந்திரியாக நியமானம் பெற்றார். ஹார்டன்பர்க்குடன் நெப்போலியன் எவ்விதமான நடவடிக்கை களும் வைத்துக் கொள்ள முடியாதென்று மறுத்துவிட்டார். ஸ்டைனுக்கு ஏராளமாக அதிகாரங்களைக் கொடுத்திருந்தார்கள். அவர்தான் அடிமை முறையை ஒழிக்க வேண்டுமென்று சொன்னவர். அந்தக் காரியத்தைப் பின்னால் 1811-ல் ஹார்டன்பர்க் நிறைவேற்றி வைத்தார். ராணுவத்தை ஸ்டைன் சீர்திருத்தி அமைத்தார். நெப்போலியன் அவரை சேவையிலிருந்து விலக்கி ஜெர்மனியை விட்டு விரட்ட வேண்டுமென்று கேட்டார். உடனே பொஹிமியாவுக்கு அவர் ஓடினார். 1812-ம் வருஷம் மே மாதத்தில் பீட்டர்ஸ்பர்க்கிற்கு வரும்படி அலெக்ஜாண்டர் அவரை அழைத்தார். பின்னால், நெப்போலியனுக்கு விரோதமாக ஸ்டைன் பல கூட்டுறவுகளை ஏற்படுத்தினார். நெப்போலியனுடைய வீழ்ச்சிக்கு, ஸ்டைன் செய்த வேலைகள் முக்கியமான காரணங்களாகும்.

கோமகன் ஜி. எம். ஆர்ம்பெல்ட்டை (1757-1814) என்பவர், மிகுந்த திறமையானவர் என்று பெயர் பெற்றவர். ஸ்வீடன் தேசத்து மன்னரான 3-வது கஸ்டாவஸ்ஸிடம் விசுவாசம் உள்ளவர் அவருடைய குமாரரான 4-வது கஸ்டாவஸ்ஸிடமும் விசுவாசத்தோடு இருந்து வந்தார். அவர் தமது அதிகாரத்தை இழந்ததும், ஆர்ம்பெல்ட்டை ஸ்வீடனிலிருந்து வெளி யேற்றினார்கள். அவர் ருஷ்யாவில் வந்து தஞ்சம் அடைந்தார். அலெக்ஜாண்டரிடம் அவர் மிகுந்த செல்வாக்கு பெற்றார். பின்லாந்தில் ராஜீய விவகாரங்களை மேல்பார்க்கும் வேலையை அலெக்ஜாண்டர் அவரிடம் ஒப்புவித்தார். அச்சமயம்தான்,

பின்லாந்துக்காரர்களுக்கு அவர்களுடைய புராதனமான ராஜாங்க அமைப்பு சட்டம் நிலைத்திருக்கும்படி அவர் செய்தார்.

கோமகன் எல்.ஏ வான்பெனிக்சென் (1745-1826) என்பவர், 1773-ஆம் வருஷத்தில் ஹானோவெரின் சேவையிலிருந்து விலகி, ருஷ்ய சேவகத்துக்குப் போனார். சக்கரவர்த்தி பாலை படுகொலை செய்த சதியாலோசனையில் அவர் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். 1806-ஆம் வருஷத்தில் புல்டுஸ்க் என்ற இடத்தில் பிரஞ்சுக்காரரைத் தோற்கடித்து விட்டதாகச் சொல்லிக் கொண்டார். 'குருஷிஷ் - ஐலாவ்' என்ற போரில் யார் வெற்றி பெற்றார்கள் என்று சொல்வதற்கு இல்லாமல் இருந்தது. அச்சமயத்தில் அவர்தான் சேனாதிபதியாக இருந்தார். ஆனால் பிரீட் லாண்ட் என்ற இடத்தில் 1807-ஆம் வருஷத்தில் மிகுந்த சேதங்களோடு தோற்கடிக்கப்பட்டார். அந்தத் தோல்வியினால்தான் டில்சிட் என்ற இடத்தில் நேச உடன்படிச்சை எற்பட்டது. பாராடினோவில் அவர் போர் புரிந்தார். டாராவ்டினோ என்ற இடத்தில் முராட்டை தோற்கடித்தார். ஆனால், குட்டுஜோவிடம் சண்டை போட்டுக் கொண்டிருந்தபடியால், அவர் சேவையிலிருந்து விலக வேண்டியதாயிற்று. குட்டுஜோவின் மரணத்திற்குப் பின்னால், மீண்டும் அவர் சேனாதிபத்தியம் பெற்றார். அச்சமயம் அவர் ர்ராணுவத்தை நடத்திச் சென்று லீப்ஜிக் (1813) என்ற இடத்தில் வெற்றி பெற்றார். அந்த சேவைக்காக ஒரு கோமகனாக்கப்பட்டார்.

எப். டி. வின்ட்ஜிங்கெரோட் (1770-1818) என்பவர், ஒரு ஆஸ்திரியர். அவர் தமது உத்தியோக காலத்தில் பல தடவைகள் ஆஸ்திரிய சேவையில் இருந்து ருஷ்ய சேவைக்கு வருவதும், மீண்டும் போவதுமாக இருந்தார். 1812-ஆம் வருஷத்தில் எல்லைப்புறத்திலிருந்து பீட்டர்ஸ்பர்க்கிற்குப் போகும் ரஸ்தாவைக் காப்பாற்றும் வேலையை அலெக்ஜாண்டர் அவருக்குக் கொடுத்தார். பிரஞ்சுக்காரர்களால் அவர் பிடிக்கப்பட்டார். ஆனால், பின்னால் அவரை மீட்டுக்கொண்டு வந்தார்கள். 1813-ஆம் வருஷத்தில் லீப்ஜிக்கில் நேச நாட்டுக் குதிரைப் படைகளில் சேனாதிபதியாக அவர் இருந்தார். 1814-ஆம் வருஷத்தில் நெப்போலியனுக்கு விரோதமாக ஏற்பட்ட படையெடுப்பிலும் அவர் சேவை செய்தார்.

'பூயல்.' பாரன் கார்ல் லூட்விக் தகஸ்ட் பூயல் (1751-1826) என்பவர், ஒரு பிரஷ்ய ஜெனரல். 1806-ம் வருஷத்தில் ஜெனாவில் நடந்த போருக்குப் பின்னால், அவர் ருஷ்ய சேவையில் வந்து சேர்ந்தார். 1812-ம் வருஷத்தில் நடந்த படையெடுப்பில், அவர்தான் முதலாவது ருஷ்யப்போர் திட்டத்தை தயாரித்தார்.

ருஷ்யப் படைகள் தனித்தனியாகப் பிரிந்திருந்தன. பாக்ரேஷனின் ராணுவமும், பார்க்ளேயின் ராணுவமும் மிகுந்த கஷ்டங்களுக்குப் பின்னால், ஸ்மாலென்ஸ்க் நகருக்கு வந்த பின்புதான் ஒன்று சேர முடிந்தன.

'பெர்னாடாட்.' ஜே.பி.ஜே பெர்னாடாம் (1764-1844) என்பவர், பாவ் என்ற இடத்தில், ஒரு வக்கீலின் புத்திரராகப் பிறந்தார். பிரஞ்சு ராணுவ சேவையில் ஒரு சிப்பாயாக முதலில் சேர்ந்து, கடைசியாக ஒரு மார்ஷலாக உயர்த்தப்பட்டார். 1810-ஆம் வருஷத்தில் ஸ்வீடன் தேசத்து மன்னருக்குப் பட்டத்து இளவரசராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். ஸ்வீடன் தேசத்தை அவர்தான் வழிகாட்டி நடத்திச் சென்றார்.

ஸ்வீடிஷ் பாமேரேனியா என்ற இடத்தை நெப்போலியன் கைப்பற்றிய பின்பு, நெப்போலியனுக்கு விரோதமாக அவர் போர் புரிந்தார் 1818-ஆம் வருஷத்தில் ஸ்வீடன் தேசத்தின் மன்னராக வந்தார். 14-வது சார்லஸ் என்ற பெயரோடு ஒரு ராஜ பரம்பரையை அவர் ஸ்தாபித்தார்.




ஜே. பி. பெஸியர்ஸ் என்பவர் (1768-1813) பிரான்ஸில் ஒரு மார்ஷலாக இருந்தார். 1796-ஆம் வருஷத்தில் நெப்போலியன் இத்தாலி மீது படையெடுத்த காலத்திலிருந்து, நெப்போலியனிடம் அவர் சேவை செய்து வந்தார். 1799-ஆம் வருஷத்தில் இஸ்ட்ரியா கோமகனாக அவர் செய்யப்பட்டார். ஆஸ்டர்லிட்ஜில் ருஷ்ய பாதுகாப்பு குதிரைப் படையை முறியடித்தது இவர்தான். பெனின் ஸுலார் யுத்தத்திலும், அவர் முக்கியமான பங்கு கொண்டிருந்தார். பாராடினோவில் 1812-ஆம் வருஷத்தில் காப்பாளர் குதிரைப் படைக்கு கமாண்டராக இருந்தார். மாஸ்கோவிலிருந்து நெப்போலியன் படைகள் திரும்பியபோதும் அதில் அவர் இருந்தார். 1813-ம் வருஷத்தில் நெப்போலியனுடைய குதிரைப் படை முழுவதற்கும், அவர் கமாண்டராக நியமிக்கப்பட்டார். அவர் அந்தப் படையெடுப்பு ஆரம்பமான மூன்று தினங்களுக்கெல்லாம் கொல்லப்பட்டார்.

ஏ. பெர்த்தியர் (1753-1815) என்பவர், நாச்சாட்டல், வாக்ராம் என்ற இடங்களின் இளவரசர். அவர் பிரான்ஸ் தேசத்தில் மார்ஷலாக இருந்தார். நெப்போலியனுடைய ராணுவத் தலைமைப் பீடத்தில் பிரதான அதிகாரியாக பல வருஷங்கள் சேவை செய்து வந்தார். பிரஞ்சு எல்லை நோக்கி ஒரு ருஷ்யப் படை முன்னேறி வருவதைப்

பார்க்கச் சகிக்காமல், 1815-ம் வருஷத்தில், ஒரு கட்டிடத்திலுள்ள ஜன்னல் வழியாகக் கீழே குதித்து தற்கொலை செய்து கொண்டார்.

1811-ஆம் வருஷத்தில் பான்ஸ் டி ஆனாரா என்ற இடத்திலும், பெரஸ்போர்ட் என்ற இடத்திலும் வெல்லிங்டன் பல வெற்றிகளைப் பெற்றார். எக்சீமெனா என்ற இடத்தில் பிரஞ்சுக்காரர்களை ஸ்பானியர்கள் தோற்கடித்தார்கள். 1812-ஆம் வருஷத்தில் ஸியூடாட்ராட்ரிகோ என்ற இடமும், பாடாஜாஜ் என்ற இடமும், பிரஞ்சுக்காரர்களிடமிருந்து கைப்பற்றப்பட்டன.

1709-ஆம் வருஷத்தில், அதாவது நூறு வருஷங்களுக்கு முன்னால், ஸ்வீடன் தேசத்து மன்னரான 12-வது சார்லஸ் ருஷ்யா மீது படையெடுத்தார். பால்டாவா என்ற இடத்தில் மகா பெரிய பீட்டர் என்ற மன்னர், அவரைப் படுதோல்வி அடையும்படி செய்தார். சார்லஸூம் அவருடன் வந்த கோசாக் ஜெனரலான மாஜெப்பாவும் மிகுந்த சிரமத்தோடு உயிர் தப்பி துருக்கிக்கு ஓடினார்கள்.




ருஷ்யாவில் பட்டத்து இளவரசருக்கு ஜேஜாரேவிச் என்று தான் சொல்லப்படுவது வழக்கம். அதன் சுருக்கமான ஜாரேவிச் என்பது, சக்கரவர்த்தியின் மற்ற குமாரர்களுக்குச் சொல்லப்படும் பட்டமாகும். ஆனால், பட்டத்து இளவரசரை ஜாரேவிச் என்று சொல்வது மிகுந்த பழக்கமாய் விட்டது.

கோமகன் பாலூசி 1809-ஆம் வருஷத்தில் பிரஞ்சு சேவையி லிருந்து ருஷ்ய சேவையில் வந்து சேர்ந்தார். 1812-ம் வருஷத்தில், கொஞ்ச காலத்திற்கு முதலாவது ருஷ்ய ராணுவத்தின் தலைமைப் பீடத்தில் பிரதான அதிகாரியாக சேவை செய்து வந்தார். ஆனால், பார்க்ளே டி டாலி என்பவருடன் அவருக்கு அபிப்பிராய பேதம் ஏற்பட்டபடியால், அவர் லிவோனியா, கூர்லாண்ட் என்ற பிரதேசத்திற்கு கவர்னர்-ஜெனரலாக நியமிக்கப்பட்டு மாற்றப் பட்டார்.

பாரன் லூட்விக் ஜூலியஸ் வால்ஜாகன் (1774-1845) என்பவர், ஒரு பிரஷ்ய ஜெனரல், 1807-ஆம் வருஷத்திலிருந்து, 1815-ஆம் வருஷம் வரையில் ருஷ்ய ராணுவத் தலைமைப் பீடத்தில் அவர் சேவை பார்த்தார். 1812-ஆம் வருஷத்தில் பார்க்ளே டி டாலியுடனும், பின்னால் குட்டுஜோவுடனும் வேலை பார்த்தான். அவருடைய ஞாபகக் குறிப்புகள், 1851-ஆம் வருஷத்தில் பிரசுரிக்கப்பட்டன. 'போரும் அமைதியும்' என்ற டால்ஸ்டாய் எழுதிய இந்தப் புத்தகத்திற்கு வேண்டிய சரித்திர விஷயங்களுக்கு பல

புத்தகங்களோடு அந்தப் புத்தகமும் உதவியாய் இருந்தது. அவர் ராணுவக் கவுன்ஸிலில் பூயல் என்பவரின் கருத்துக்களை எடுத்துச் சொன்னார். பின்னால், அராக்சீவுக்கு பாக்ரேஷன் எழுதிய கடிதத்தில், அவரைப் பற்றி ‘துரோகி’ என்று குறிப்பிட்டிருக்கிறார்.

1809-ஆம் வருஷத்தில் பின்னிஷ் போரில் பார்க்ளே டி டாலி என்பவர், ராணுவத்திற்கு சேனாதிபதியாய் இருந்து வந்தார். பாத்னியா வளைகுடா வழியாக பனிக்கட்டியின் மீது துணிகரமாக இரண்டு நாட்கள் துருப்புகளை நடத்திச் சென்றார். உமியா என்ற இடத்தை அவர் பிடித்தது எல்லாருக்கும் ஆச்சரியமாய் இருந்தது. அதன் மூலம் ஸ்வீடன் தேசத்தோடு சமாதான உடன்படிக்கை ஏற்படும்படி அவர் செய்தார்.

**9 / 10**

**கே.** எப். டால் (1778-1842) என்வவர் ஒரு ருஷ்ய ஜெனரல். ஆனால், அவர் ஜெர்மனியர் பரம்பரையைச் சேர்ந்தவர். பின்னால் அவரை ஒரு கோமகனாக ஆக்கினார்கள். 1812-ஆம் வருஷத்துப் போரில் பிரதான ராணுவத்திற்கு அவர் சப்ளை-ஜெனரலாக நியமிக்கப் பட்டார். அந்தப் போரில், நெப்போலியன் மாஸ்கோவிலிருந்து வாபஸ் வாங்க ஆரம்பித்த பின்பு, அவர் பிரதான பங்கு கொண்டிருந்தார்.

**9 / 22**

‘**ச**முதாய ஒப்பந்தம்’ என்ற புத்தகத்தைப் பற்றி டால்ஸ்டாய் குறிப்பிடும்பொழுது, தாராளப் போக்குள்ள ருஷ்யர்களின் மனதில் பிரான்ஸுக்கு ஏற்பட்டிருந்த செல்வாக்கைக் காட்டுகிறார். 1825-ஆம் வருஷம் நடந்த ‘டிசம்பர் சதியாலோசனை’க்கு வழிவகுத்தது; அதற்குப் பின்னால் ஏற்பட்ட பல காரியங்களுக்கும் அது காரணமாய் இருந்தது.

எஸ். என். கிளைங்கா (1776-1864) என்வர் உணர்ச்சியும் தேசபக்தியும் கொண்ட ஒரு எழுத்தாளர். 1808-ம் வருஷத்தில் ‘ருஷ்யன் மெசஞ்சர்’ என்ற பத்திரிகையை அவர் ஆரம்பித்தார். அச்சமயம் ருஷ்யாவில் பரவியிருந்த பிரஞ்சு செல்வாக்கைக் குறைக்க வேண்டுமென்பதற்காக அந்தப் பத்திரிகையை அவர் நடத்தி வந்தார். 1812-ஆம் வருஷத்தில் மாஸ்கோவில் அவர் தங்கி, தீவிரமாக நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தார்.

★



ருஷ்யாவுடன் நெப்போலியன் ஏன் யுத்தத்தை ஆரம்பித்தார்? ஏனெனில், அவரால் டிரஸ்டென்னுக்குப் போகாமல் இருக்க முடியவில்லை; அவருக்குக் கிடைத்த மரியாதை உபசாரங்களைக் கண்டு அவருடைய தலை திரும்பாமல் இருக்க முடியவில்லை; ஜூன் மாதத்திய ஒரு காலை நேரத்தில் உற்சாகத்தில் ஈடுபட்டு, ஒரு போலந்து சீருடையை அவரால் அணியாமல் இருக்க முடியவில்லை; முதலில் குராகின் முன்பும், பின்னால் பலாஷேவ் முன்பும் பொங்கிவந்த கோபத்தை அவரால் அடக்க முடியவில்லை.

தம்மை சொந்தமாக அவமானப்படுத்திவிட்டதாக நினைத்த படியால், சமரசப் பேச்சுகளை அலெக்ஜாண்டர் மறுத்துவிட்டார். தமது கடமையை நிறைவேற்றவும், ஒரு பெரிய கமாண்டர் என்ற புகழை சம்பாதிக்கவும் விரும்பி, தம்மால் முடிந்தவரையில் சிறந்த வழியில் ராணுவத்தை நடத்த பார்க்ளே டி டாலி என்பவர் முயற்சி செய்தார். ஒரு சமதளமான வயலுக்குக் குறுக்கே பாய்ச்சலில் போக வேண்டும் என்ற ஆசையை அவரால் அடக்க முடியாததால் பிரஞ்சுக்காரர்களை ராஸ்டோவ் தாக்கினார். இதே மாதிரியாக யுத்தத்தில் கலந்து கொண்ட கணக்கற்ற நபர்கள் தங்களுடைய சொந்த குண விசேஷங்களுக்கும், பழக்க வழக்கங்களுக்கும், சந்தர்ப்பங் களுக்கும், நோக்கங்களுக்கும் ஒப்ப நடந்துகொண்டார்கள். அவர்கள் எல்லாரும் பயத்தினாலோ, அல்லது வீண் பெருமையினாலோ தூண்டப்பட்டார்கள். மகிழ்ச்சி கொண்டோ, அல்லது கோபம் கொண்டோ, தங்களுடைய சொந்த விருப்பப்படியே தாங்கள் நடந்துகொள்ளுவதாகவும், தாங்கள் என்ன செய்கிறோம் என்பதை அறிந்திருப்பதாகவும் மனோராஜ்யம் செய்து காரணம் காட்டினார்கள். ஆனால், அவர்கள் எல்லாரும் தங்களை அறியாமலேயே சரித்திரத்தின் ஆயுதங்களாய் விளங்கி ஒரு வேலையைச் செய்துவந்தார்கள். அந்த விஷயம் அவர்களுக்கு அப்பொழுது மூடுமந்திரமாய் இருந்தது. ஆனால், நமக்கு அது புரியக்கூடியதாய் இருக்கிறது. பிரதானமான மனிதர்களின் தடுக்க முடியாத விதியாக இது இருக்கிறது. சமூகத்தில் எவ்வளவுக்கு எவ்வளவு உயர்வான பதவியில் அவர்கள் இருக்கிறார்களோ, அவ்வளவுக்கு அவ்வளவு சுதந்திரம் குறைந்தவர்களாக அவர்கள் இருக்கிறார்கள்.

*1812*-ஆம் வருஷத்திய நடிகர்கள் வெகு காலத்திற்கு முன்பே மேடையைவிட்டுப் போய்விட்டார்கள். அவர்களுடைய சொந்த

ஆசைகள் எல்லாம் எவ்வித அடையாளமும் இல்லாமல் மறைந்து போயின. அக்காலத்திய விஷயம் எதுவும் இப்பொழுது இல்லை. ஆனால், அதனுடைய சரித்திர பலன்கள் மட்டும் நிலைத்திருக்கின்றன. அந்த மனிதர்களை எல்லாம் அந்த பரம்பொருள் கட்டாயப்படுத்தி தங்களுடைய சொந்த நோக்கங்களுக்காக முயற்சி செய்யும்படி செய்தது. அதன் மூலம் அவர்களில் ஒருவர்கூட எதிர்பார்த்திராத - நெப்போலியனும் அலெக்ஜாண்டரும்கூட எதிர்பார்த்திராத - யுத்தத்தில் கலந்து சண்டை போட்டவர்கள்கூட எதிர்பார்த்திராத, அந்த மகா பெரிய காரியத்தைச் சாதிப்பதற்காகத் தூண்டியது.

1812-ஆம் வருஷத்தில் பிரஞ்சு ராணுவம் நாசமாய்ப் போனதன் காரணம் இப்பொழுது நமக்குத் தெளிவாய்த் தெரிகிறது. ஒரு பக்கத்தில், குளிர்காலப் போராட்டத்திற்கு வேண்டிய தயாரிப்புகள் இல்லாமல் ருஷ்யாவின் இருதய பாகத்திற்கு அந்தத் துருப்புகள் முன்னேறியது; மற்றொரு பக்கத்தில், ருஷ்யப் பட்டாளங்கள் எரிந்ததனால் எதிரியின் மீதுள்ள துவேஷம் ருஷ்ய மக்களிடம் பொங்கியது. அந்த வேகம் யுத்தத்தின் யோக்கியதையை நிர்ணயித்தது. இவைதான் அந்த நாசத்திற்குக் காரணங்கள் என்பதை ஒருவரும் மறுக்க முடியாது. எண்ணூறு ஆயிரம் பேர் கொண்ட ஒரு ராணுவத்தை - உலகத்திலேயே சிறந்த ராணுவத்தை-சிறந்த ஜெனரலால் நடத்தப்பட்ட ராணுவத்தை-அதனுடைய எண்ணிக்கையில் பாதிகூட இல்லாத ஒரு பயிற்சியற்ற ராணுவத்தோடு, அனுபவம் இல்லாத கமாண்டர்களால் நடத்தப்பட்ட ருஷ்ய ராணுவத்தோடு சண்டை போடும்படி செய்வதன் மூலம்தான் அந்த பிரஞ்சு ராணுவத்தை அழிப்பதற்குண்டான ஒரே வழி என்பதை அச்சமயம் ஒருவரும் கண்டுகொள்ளவில்லை. ஆனால், இப்பொழுது அது தெளிவாய்த் தெரிகிறது. இதை ஒருவர் பார்ப்பது மட்டுமல்ல; ருஷ்யாவின் பக்கத்தில் ருஷ்யாவைக் காப்பாற்றக்கூடிய அந்த ஒரே வழிக்கு இடையூறு செய்வதற்காக ஒவ்வொரு முயற்சியும் செய்யப்பட்டது. ஆனால், பிரஞ்சு பக்கத்தில் நெப்போலியனின் அனுபவங்களும், அவருடைய ராணுவ மேதையும் இருந்தும்கூட வசந்த கால முடிவில் மாஸ்கோவிற்கு முன்னேறுவதற்காக ஒவ்வொரு முயற்சியும் செய்யப்பட்டது. அதாவது, நிச்சயமாய் நாசத்தைக் கொடுக்கக் கூடிய அந்தக் காரியம் செய்யப்பட்டது.

1812-ஆம் வருஷத்திய சரித்திர புத்தகங்களைப் பார்த்தால், பிரஞ்சு ஆசிரியர்கள் ஒரு விஷயத்தைச் சொல்லுவதற்கு மிகவும் பிரியம்

கொண்டிருந்தார்கள் என்பது தெரிகிறது. அதாவது, தம்முடைய படையெடுப்பின் நீளத்தை நீட்டிக்கொண்டு போவதில் அபாயம் இருக்கிறதென்று நெப்போலியன் உணர்ந்தார் என்றும், அவர் எதிரிகளோடு யுத்தம் செய்ய விரும்பினார் என்றும், ஸ்மாலென்ஸ்க் நகரோடு அவர்கள் நின்றுவிட வேண்டுமென்று அவருடைய மார்ஷல்கள் ஆலோசனைகள் கூறினார்கள் என்றும், இம்மாதிரி வேறு பல விஷயங்களையும் அந்த பிரஞ்சு ஆசிரியர்கள் கூறுகிறார்கள். ஆகவே, இதிலிருந்து அந்தப் படையெடுப்பில் உள்ள அபாயத்தை அப்பொழுதே அவர்கள் தெரிந்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. ருஷ்ய ஆசிரியர்கள் இதைவிட அதிகமான ஆசையோடு, நமக்கு ஒரு விஷயத்தைக் கூறுகிறார்கள். யுத்தம் ஆரம்பமானதில் இருந்தே சித்தியன் யுத்தத் திட்டமொன்றைக் கையாண்டு ருஷ்யாவின் உள்நாட்டிற்குள் நெப்போலியனை ஆசைகாட்டி இழுத்தார்கள் என்று சொல்லுகிறார்கள். இந்தத் திட்டத்திற்குப் பூயல் காரணமென்று சிலரும், ஒரு பிரஞ்சுக்காரர் காரணம் என்று வேறு சிலரும், டால் என்பவர் காரணம் என்று இன்னும் சிலரும், அலெக்ஜாண்டர்தான் காரணம் என்று மற்றும் சிலரும் சொல்கிறார்கள். இவற்றிற்கு ஆதாரமாகக் குறிப்புகளையும் திட்டங்களையும் கடிதங்களையும் அவர்கள் காட்டி, இந்த நடவடிக்கையைப்பற்றி அவற்றில் பிரஸ்தாபிக்கப்பட்டு இருப்பவைகளை அவர்கள் எடுத்துச் சொல்லுகிறார்கள். என்ன நடந்தது என்பதைப்பற்றிக் கூறும் இந்த பிரஸ்தாபங்கள் எல்லாம், அவை ருஷ்யரின் பக்கமாக இருந்தாலும் சரி, பிரஞ்சுக்காரரின் பக்கமாய் இருந்தாலும் சரி, அந்த சம்பவத்திற்குப் பொருத்தமானதாய் இருக்கிறபடியால்தான் அவைகளை எடுத்துக் கூறுகிறார்கள். அந்த சம்பவம் நடந்திராவிட்டால், இந்த பிரஸ்தாபங்கள் எல்லாம் மறந்துவிடப்பட்டிக்கும். அப்பொழுது இருந்த போக்கிற்கு விரோதமாகச் சொல்லப்பட்ட கோடிக் கணக்கான பிரஸ்தாபங்கள் பொய்த்துப் போனபடியால் நாம் எப்படி மறந்துவிட்டோமோ, அதேபோல அதுவும் மறக்கப்பட்டிருக்கும். எந்த சம்பவத்தைப் பற்றியும் எப்பொழுதுமே, பலவிதமான யூகங்கள் இருந்துகொண்டிருக்கும். ஆனால், அந்த சம்பவம் எந்த விதமாக முடிந்தாலும் மக்கள் மட்டும் எப்பொழுதுமே, ‘அப்படி நடக்கும் என்று நான் அப்பொழுதே சொன்னேனே’ என்று சொல்லிக்கொண்டிருப்பார்கள். அவர்களுடைய கணக்கற்ற யூகங்களில் எத்தனையோ, அவர்கள் யூகித்தபடி நடக்கவில்லை என்பதை அவர்கள் மறந்து விடுவார்கள்.

தமது படையெடுப்பை நீட்டிக்கொண்டு போவதால் அபாயம் ஏற்படும் என்பதை நெப்போலியன் அறிந்திருந்தார் என்று சொல்லுகிற யூகமும், ருஷ்யாவின் உள்நாட்டிற்கு எதிரியை மயக்கி அழைத்ததாக ருஷ்யர்கள் பக்கம் சொல்லுகிற யூகமும் அதே வகையைச் சேர்ந்தவைதான். அம்மாதிரி யூகங்களை நெப்போலியனுக்கோ, அவருடைய மார்ஷல்களுக்கோ, அல்லது ருஷ்ய கமாண்டர்களுக்கோ சரித்திரக்காரர்களால் சுலபமாய் பிணைத்துவிட முடியாது. அந்த யுத்த காலம் முழுவதிலும் ருஷ்யாவின் உள்நாட்டிற்குள் பிரஞ்சுக்காரர்களை இழுக்க வேண்டும் என்ற ஆசை ருஷ்யர்கள் பக்கம் இருந்ததே இல்லை. அதுமட்டுமல்ல, ருஷ்யவிற்குள் எதிரி முதலில் நுழைந்ததிலிருந்து அவனை நிறுத்துவதற்கு ஒவ்வொரு காரியமும் செய்யப்பட்டது. தம்முடைய படையெடுப்பை நீட்டிக் கொண்டு போவதற்கு நெப்போலியன் பயந்தார் என்பதும் இல்லை. முன்னால் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியையும் ஒரு வெற்றி என்று கண்டு அவர் வரவேற்றார். முந்தைய யுத்தங்களில் ஆவலோடு சண்டையை எதிர்நோக்கிக்கொண்டிருந்ததைப்போல, இச்சமயம் அவர் விரும்பவில்லை. அவர் சோம்பேறித்தனமாய் இருந்தார்.

யுத்த ஆரம்பத்தில் நமது ராணுவங்கள் பிரிந்திருந்தன. அவர்களை ஒன்றுசேர்க்க வேண்டும் என்பது ஒன்றுதான் நமது ஒரே நோக்கமாக இருந்து வந்தது. நாம் பின்வாங்க வேண்டும் என்பது நினைப்பாய் இருந்தால், எதிரியை மயக்கி உள்நாட்டிற்குள்ளே அழைக்க வேண்டும் என்பது நினைப்பாய் இருந்தால், ராணுவங்களை ஒன்றுசேர்ப்பதனால் எவ்வித பிரயோஜனமும் ஏற்படப் போவதில்லை. ராணுவத்திற்கு உற்சாகம் ஊட்டி, ருஷ்ய பூமியில் ஒவ்வொரு அங்குலத்தையும் பாதுகாக்க முயற்சிக்க வேண்டும் என்பதற்காகவே ராணுவத்தோடு சக்கரவர்த்தி இருந்து வந்தார்; பின் வாங்குவதற்காக அல்ல. பூயலின் திட்டப்படி, பிரம்மாண்டமான அளவில் டிரிஸா முகாம் அமைக்கப்பட்டது. அதிலிருந்து மேலும் பின்வாங்குவதற்கு அப்பொழுது நினைப்பே கிடையாது. சேனாதிபதிகள் ஒவ்வொரு தடவையும் பின்வாங்கும் போதெல்லாம் சக்கரவர்த்தி கண்டித்து வந்தார். ஸ்மாலென்ஸ்க் நகர் வரையில் எதிரியை விட்டுவிடுவது என்ற எண்ணத்தைக்கூட அவரால் தாங்க முடியவில்லை. ஆகவே, மாஸ்கோவை எரிப்பது என்ற எண்ணத்தையும் அவரால் தாங்க முடியவில்லை. நமது பிரிந்த ராணுவங்கள் ஒன்றுசேர்ந்த பின்பும், ஸ்மாலென்ஸ்க்கில் யுத்தம் செய்யாமல், அதைக் கைவிட்டுக் கொளுத்தியதைக் கண்டு அவர் மிகவும் அதிருப்தி அடைந்தார்.

இந்த விதமாக ருஷ்ய கமாண்டர்களும் சக்கரவர்த்தியும் நினைத்தார்கள். உள்நாட்டிற்குள் வெகு தூரத்திற்கு துருப்புகள் பின்வாங்கி வருவதைக் கண்டு மக்கள் அதைவிட அதிகமாகக் கோபம் கொண்டார்கள்.

நமது ராணுவத்தை இரண்டாகப் பிளந்துவிட்ட பின்பு, நெப்போலியன் உள்நாட்டில் வெகு தூரம் முன்னேறியும்கூட யுத்தம் செய்யக்கூடிய பல சந்தர்ப்பங்கள் கிடைத்தும் அவர் கைவிட்டுவிட்டார். ஆகஸ்டு மாதத்தில் ஸ்மாலென்ஸ்கில் அவர் இருந்தார். மேலும் எப்படி முன்னேறுவது என்பதைப் பற்றியே அவர் சிந்தித்தார். அம்மாதிரி முன்னேறுவது அவருக்கு எவ்வளவு நாசகரமானது என்பதை இப்பொழுது நாம் பார்க்க முடிகிறது.

மாஸ்கோவை நோக்கி முன்னேறுவதில் உள்ள ஆபத்தை நெப்போலியன் அறிந்திருக்கவில்லை என்பதைப் பல உண்மைகள் தெளிவாய்க் காட்டுகின்றன. அதேபோல நெப்போலியனை மயக்கி உள்ளே இழுக்க வேண்டும் என்ற நினைப்பில் அலெக்ஜாண்டரோ, அல்லது ருஷ்ய கமாண்டர்களோ, அப்பொழுது இருந்ததும் இல்லை. அதற்கு நேர் விரோதமாகவே அவர்கள் இருந்தார்கள். எந்தத் திட்டத்தின் விளைவாகவும் நெப்போலியனை உள்நாட்டிற்கு மயக்கி அழைத்தது என்பது ஏற்படவில்லை. ஏனெனில், அது சாத்தியமானது என்று ஒருவரும் நம்பவில்லை. யுத்தத்தில் கலந்துகொண்டவர்களின் சூழ்ச்சிகள், நோக்கங்கள், ஆசைகள் ஆகியவற்றின் பல சிக்கலான தொடர்புகளாலும், எது தவிர்க்க முடியாதது என்பதையோ, அல்லது ருஷ்யாவைக் காப்பாற்றக்கூடிய ஒரே வழி என்ன என்பதையோ அறிய முடியாததாலும் அந்த பலன் ஏற்பட்டது. ஒவ்வொன்றும் தற்செயலாக வந்து அமைந்தது. யுத்த காலத்தின் ஆரம்பத்தில் ராணுவங்கள் பிரிந்திருந்தன. எதிரி முன்னேறுவதைத் தடுக்கும் பொருட்டும், எதிரியுடன் போரிடுவதற்காகவும் அந்த ராணுவங்களை ஒன்றுசேர்க்க நாம் முயற்சித்தோம். அவற்றை ஒன்று சேர்க்கும் முயற்சியில் பலம் மிகுந்த எதிரியோடு சண்டை போடுவதைத் தவிர்ப்பதற்காக அவசியம் நெருக்கமான கோணத்தில் பின்வாங்க வேண்டியதாயிற்று. இதனால் ஸ்மாலென்ஸ்க் வரையில் பிரஞ்சுக்காரர்களை நாம் அழைத்து வந்துவிட்டோம். பிரஞ்சுக்காரர்கள் நம்முடைய இரண்டு ராணுவங்களின் இடையே முன்னேறுகிறார்கள் என்பதற்காக மட்டும் நாம் நெருக்கமான கோணத்தில் பின்வாங்கவில்லை; அந்தக் கோணம் இன்னும் அதிகமாய் ஒடுங்கியபடியால் நாம் மேலும் பின்வாங்க

வேண்டியதாயிற்று. பார்க்ளே டி டாலி என்பவர் கெட்ட பெயர் எடுத்த ஒரு வெளிநாட்டாராகவும், பாக்ரேஷனால் விரும்பப்படாதவராகவும் இருந்தபடியால் (பாக்ரேஷன்தான் இரண்டாவது ராணுவத்திற்கு சேனாதிபதியாய் இருந்தார்), இரண்டு ராணுவங்களும் ஒன்று சேருவதையும், பார்க்ளேவுக்குக் கீழே வேலை செய்ய வேண்டி இருப்பதையும் கூடியவரையில் தவிர்க்க பாக்ரேஷன் நினைத்தபடியால் நாம் பின்வாங்கிக் கொண்டிருந்தோம். அம்மாதிரி இரண்டு ராணுவங்களும் ஒன்று சேருவதை பாக்ரேஷன் தாமதப்படுத்தி வந்தார். (அம்மாதிரி ஒன்று சேரவேண்டும் என்பதுதான் தலைமைக் காரியாலயத்திலிருந்து எல்லாருடையவும் பிரதானமான அபிப்பிராயமாய் இருந்தது) ஏனென்றால், இம்மாதிரி பின்வாங்குவதால் தமது ராணுவத்திற்கு அபாயம் ஏற்படக்கூடும் என்றும், ஆகவே கூடியவரை இடது பக்கமாகவும் தெற்கு நோக்கியும் பின்வாங்குவதுதான் நன்மையாய் இருக்கும் என்றும், அதன் மூலம் எதிரியைப் பக்கவாட்டிலும் பின்பக்கத்திலும் தொந்தரவு கொடுக்கும்படி அது செய்யும் என்றும், உக்ரெயின் பிரதேசத்திலிருந்து தமது ராணுவத்திற்குப் புதிதாக ஆட்களைச் சேர்க்க முடியும் என்றும் அவர் நினைத்தார். பதவியில் அவருக்குக் கீழ்ப்பட்டுள்ள அந்த வெறுக்கப்பட்ட அந்நியரான பார்க்ளேயின் சேனாதிபத்தியத்திற்குக் கீழாகத் தாம் வரக்கூடாது என்ற நினைப்பிலேயே இம்மாதிரி அவர் திட்டமிட்டார் என்று தோன்றுகிறது.

ராணுவத்தை உற்சாகப்படுத்துவதற்காக சக்கரவர்த்தி அதோடு தங்கினார். ஆனால், ஏராளமான ஆலோசகர்களும் திட்டங்களும் இருந்தபடியாலும், சக்கரவர்த்தி அங்கே பிரசன்னமாய் இருந்ததாலும் என்ன நடவடிக்கை எடுப்பது என்பதை அறியாமல் இருந்த படியால் முதல் ராணுவத்தின் உற்சாகம் அழிந்து அது பின்வாங்க ஆரம்பித்தது.

டிரிஸா முகாமில் தங்கி நின்று யுத்தம்செய்ய வேண்டும் என்பதுதான் ஆரம்பத்தில் நோக்கமாய் இருந்தது. ஆனால், தாம் சேனாதிபதியாக வரவேண்டும் என்ற நோக்கத்தோடு, தமது முழு சக்தியையும் அலெக்ஜாண்டரிடம் பாலூசி உபயோகித்தபடியால், பூயலுடைய முழு திட்டமும் கைவிடப்பட்டது. சேனாதிபதியாக பார்க்ளே நியமிக்கப்பட்டார். ஆனால், பார்க்ளேயிடம் அதிக நம்பிக்கை இல்லாதபடியால் அவருடைய அதிகாரம் கட்டுப்படுத்தப்பட்டது. ராணுவங்கள் பிரிந்திருந்தன; சேனாதிபத்தியத்தில் ஒற்றுமை இல்லை; பார்க்ளே

செல்வாக்கில்லாமல் இருந்தார். இந்தக் குழப்பத்திலிருந்து, பிரிவிலிருந்து, அந்நிய நாட்டு சேனாதிபதியின் செல்வாக்குக் குறைவிலிருந்து இரண்டு விஷயங்கள் தோன்றின. ஒரு பக்கம், தீர்மானமான முடிவுக்கு வரமுடியாத சஞ்சலமும், நேராக யுத்தம் செய்வதைத் தவிர்க்கும் மனோபாவமும் தோன்றின. (நமது ராணுவங்கள் ஒன்று சேர்ந்து பார்க்ளேவுக்குப் பதிலாக வேறு யாராவது சேனாதிபதியாய் இருந்திருந்தால், அம்மாதிரி தவிர்த்திருக்கமாட்டோம்) மற்றொரு பக்கத்தில் வெளிநாட்டு சேனாதிபதிகள் மீது வளர்ந்துகொண்டு வந்த கோபமும் தேச பக்தி ஆவேசமும் தோன்றின.

கடைசியாக ராணுவத்தைவிட்டு சக்கரவர்த்தி விலகினார். தலை நகர்களில் உள்ள மக்களையும், பொதுவாக நாட்டு மக்களையும் தேசாபிமான யுத்தத்திற்குத் தூண்டிவிடுவதற்கு அவருடைய பிரசன்னம் அவசியம் என்று சொல்லப்பட்டது. ராணுவத்திலிருந்து விலகுவதற்கு இதுதான் மிகுந்த சௌகர்யமான ஒரே காரணமாய் இருந்தது. சக்கரவர்த்தி மாஸ்கோவிற்கு விஜயம் செய்ததன் பலனாக ருஷ்ய ராணுவம் மூன்று மடங்காக உயர்ந்தது.

சேனாதிபதி பூரணமாக ராணுவத்தின் மீது ஆதிக்கம் செலுத்துவதற்கு தாம் இடையூறாய் இருக்கக்கூடாது என்று கருதியே அவர் விலகினார். இன்னும் அதிகமான, உறுதியான நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்று அச்சமயம் அவர் நம்பினார். ஆனால், ராணுவங்களின் சேனாதிபத்தியம் இன்னும் அதிகமாகக் குழப்பமடைந்து பலவீனமாயிற்று. பெனிக்ஸன், ஜாரேவிச் இன்னும் ஏராளமான உதவியாளர் - ஜெனரல்கள் ஆகிய எல்லாரும் ராணுவத்தோடேயே தங்கினார்கள். சேனாதிபதியின் செய்கைகளைக் கவனிக்கவும், அவருக்கு உற்சாகம் ஊட்டவும் அவர்கள் தங்கினார்கள். ஆனால், 'சக்கரவர்த்தியின் கண்க'ளான இவர்களுடைய கண்காணிப்பில் தாம் முன்பு எப்பொழுதையும்விட சுதந்திரம் குறைந்து இருப்பதாக பார்க்ளே உணர்ந்தார். ஆகவே, ஒரு தீர்மான நடவடிக்கையை எடுப்பதற்கு அவர் இன்னும் அதிகமாக உஷாராய் இருந்தபடியால், எதிரியுடன் போரிடுவதைத் தவிர்த்து வந்தார்.

ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும் என்று பார்க்ளே சொன்னார். அது துரோகம் என்றும், உடனே போரிடவேண்டும் என்றும் ஜாரேவிச் சொன்னார். அவரைச் சேர்ந்த லூபாமைர்ஸ்கி, பிரானைட்ஸ்கி, விளாக்கி ஆகியவர்களும் மற்றவர்களும் மிகுந்த தொந்தரவைக் கிளப்பிவிட்டார்கள். இதனால், சக்கரவர்த்திக்கு

யாதாஸ்துகள் அனுப்பவேண்டும் என்ற பெயரில் அந்த போலிஷ் உதவியாளர் ஜெனரல்களை ஒவ்வொருவராக பீட்டர்ஸ்பர்க்கிற்கு அனுப்பிவிட்டார். அதன் பின்னால், பெனிக்ஸனுடனும் ஜாரேவிச்சுடனும் பகிரங்கமாகப் போராட்டத்தில் இறங்கினார்.

பாக்ரேஷன் விரும்பாமல் இருந்தபோதிலும், ஸ்மாலென்ஸ்கில் கடைசியாக இரண்டு ராணுவங்களும் ஒன்று சேர்ந்தன.

பார்க்ளே தங்கியிருந்த வீட்டிற்கு பாக்ரேஷன் ஒரு வண்டியில் போய் இறங்கினார். தம்மைவிடப் பதவியில் மூத்த அதிகாரியான பாக்ரேஷனை சந்தித்து தம்முடைய சேவையைத் தெரிவிப்பதற்காக பட்டி அணிந்து பார்க்ளே வெளியே வந்தார்.

பதவியில் மூத்தவராய் பாக்ரேஷன் இருந்தாலும், இந்தச் சமயத்தில் மிகுந்த பெருந்தன்மையுடன் பார்க்ளேயிடமிருந்து உத்தரவுகளைப் பெற்றார். அவருக்குக் கீழ் வேலை செய்வதாக ஒப்புக் கொண்டபோதிலும், கருத்து வேற்றுமை முன்னைவிட அதிகமாகவே இருந்தது. சக்கரவர்த்தியின் உத்தரவுப்படி பார்க்ளேயிடம் நேராக பாக்ரேஷன் சென்று ஆஜரானார். சக்கரவர்த்தியின் நம்பிக்கையைப் பெற்ற அராக்சீவிற்கு அவர் ஒரு கடிதம் எழுதினார்: 'சக்வரர்த்தியின் விருப்பப்படியே எதுவும் நடக்கவேண்டும். ஆனால், என்னால் அந்த மந்திரியோடு (பார்க்ளேயோடு) வேலை செய்ய முடியாது. கடவுளுக்காக என்னை வேறு எங்காவது அனுப்பிவிடுங்கள். ஒரு பட்டாளத்தின் கமாண்டராக இருந்தாலும்கூட போதும். இங்கே என்னால் தாங்க முடியவில்லை. தலைமைக் காரியாலயம் பூராவாக ஜெர்மனியர்களால் நிரம்பி இருக்கிறது. அங்கே ஒரு ருஷ்யர் வாழ முடியாது. இங்கே நடப்பது எதற்கும் அர்த்தமே கிடையாது. என்னுடைய சக்கரவர்த்திக்காகவும், என்னுடைய தந்தை நாட்டிற்காகவும் நான் உண்மையில் சேவை செய்வதாக நினைத்தேன். ஆனால், பார்க்ளேவுக்கு சேவை செய்வதில் அது வந்து முடிந்திருக்கிறது. அம்மாதிரி செய்வதற்கு எனக்கு விருப்பமில்லை.'

பிரானைட்ஸ்கிகள், வின்ட்ஜின்கெரோடுகள், அவர்களைப் போன்ற கூட்டங்கள் எல்லாருமாகச் சேர்ந்து இரண்டு சேனாதிபதிகளுக்கும் இடையிலுள்ள உறவுகளை அதிகமாக மனக்கசப்புள்ளதாக ஆக்கினார்கள். ஆகவே, ஒற்றுமைக் குறைவு அதிகமாயிற்று. ஸ்மாலென்ஸ்க் முன்பாகப் பிரஞ்சுக்காரரோடு போர் புரிய ஆயத்தங்கள் செய்யப்பட்டன. நிலைமையைப் பார்த்து அறிந்து வரும்படி ஒரு ஜெனரலை அனுப்பினார்கள். அந்த ஜெனரல்

பார்க்ளே மீது துவேஷம் கொண்டவர். அவர் ஒரு படைப் பிரிவு கமாண்டராகி அவருடைய நண்பரிடம் சவாரி போனார். நாள் பூராவாக அவரோடு இருந்துவிட்டு பின்னால் பார்க்ளேயிடம் திரும்பினார். அவர் பார்க்காத அந்த சுற்றுப்புறங்கள் எல்லாம், யுத்தத்திற்கு எவ்விதத்திலும் பொருத்தமானவை அல்ல என்று கூறினார்.

எதிர்கால போர்க்களத்தைப் பற்றிய வாதங்களும், சூழ்ச்சிகளும் ஒரு பக்கத்தில் நடந்து வந்தன. பிரஞ்சுக்காரர்களுடன் தொடர்பு அற்றுப்போனதால், அவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்று மற்றொரு பக்கத்தில் தேடிப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். இச்சமயத்தில் பிரஞ்சுக்காரர்கள் நெவெராவ்ஸ்கியினுடைய படைப் பிரிவின் பக்கத்தில் நெருங்கி, ஸ்மாலென்ஸ்கினுடைய வெளிப்புறச் சுவர்களை வந்த அடைந்தார்கள்.

நம்முடைய போக்குவரத்துப் பாதையை காப்பாற்றுவதற்காக எதிர்பாராத யுத்தத்தை ஸ்மாலென்ஸ்கில் நடத்த வேண்டியது அவசியமாயிற்று. போர் நடந்தது. இரு பக்கங்களிலும் ஆயிரக்கணக் கானவர்கள் மாண்டார்கள்.

எல்லா மக்களினுடையவும் சக்கரவர்த்தியினுடையவும் விருப்பங்களுக்கு விரோதமாக ஸ்மாலென்ஸ்க் நரகம் கைவிடப்பட்டது. ஆனால், ஸ்மாலென்ஸ்க் நகர கவர்னரால் தவறான வழி காட்டப்பட்டு அந்த நகரை அதில் வாழ்ந்து வந்த மக்களே தீ வைத்துக் கொளுத்தினார்கள். இதனால் கெட்டுப்போன பிரஜைகள் மற்ற ருஷ்யர்களுக்கு இதை எடுத்துக் காட்டுவதற்காக மாஸ்கோவிற்குப் போனார்கள். தங்களுடைய நஷ்டங்களைப்பற்றி மட்டும்தான் அவர்கள் நினைத்துக் கொண்டிருந்தார்கள். என்றாலும், எதிரி மீது துவேஷம் கொழுந்து விடும்படி அவர்கள் தூண்டினார்கள். நெப்போலியன் மேலும் முன்னேறினார். நாம் பின் வாங்கினோம். அதன் பலனாக அவருடைய நாசத்திற்கு எது காரணமாய் இருந்ததோ, அதற்கு அவர் வந்து சேர்ந்தார்.




தமது குமாரர் புறப்பட்டுப் போன தினத்திற்கு மறுநாள், இளவரசர் நிக்கலஸ் தம்முடைய படிப்பு அறைக்கு வரும்படி இளவரசி மேரிக்குச் சொல்லியனுப்பினார்.

'நல்லது, இப்போது உனக்குத் திருப்தி தானா?' என்று அவர் கேட்டார். 'என்னுடைய குமாரனிடம் சண்டை

போடும்படி நீ செய்து விட்டாய்! உனக்கு திருப்திதானா? உனக்கு வேண்டியதெல்லாம் அதுதான். திருப்திதானா?... அது என்னை வருத்துகிறது. என்னை வருத்துகிறது. நான் பலவீனமாயும் வயோதிகமாயும் இருக்கிறேன். ஆனால் உனக்கு வேண்டியது இதுதான். நல்லது, அதைப் பற்றிப் பெருமையடித்துக்கொள். அதைப் பற்றி பெருமையடித்துக் கொள்.'

அதற்குப் பின்னால், ஒருவாரம் முழுவதிலும், இளவரசி மேரி தனது தந்தையைப் பார்க்கவில்லை. அவர் உடம்பு அசௌக்கியமாய் இருந்தபடியால், தமது படிப்பு அறையை விட்டு வெளியே வரவில்லை.

இந்த அசௌக்கியமான காலத்தில், தம்முடைய அறைக்குத் தன்னை மட்டும் வரக்கூடாது என்று அவர் தடுக்கவில்லை; குமாரி பௌரியனையும் கூட வரக்கூடாது என்று தடுத்துவிட்டது, இளவரசி மேரிக்கு ஆச்சரியமாய் இருந்தது. டைக்கன் ஒருவன்தான் அவருக்கு வேண்டியவைகளைக் கவனித்து வந்தான்.

அந்த வாரக் கடைசியில், இளவரசர் மீண்டும் வெளியே வந்தார். தமது பழைய வாழ்க்கை முறையை மீண்டும் மேற்கொண்டார். முக்கியமாக, கட்டிடம் கட்டும் வேலைகளிலும், தோட்டங்கள் போடும் வேலைகளிலும், அவர் மிகுந்த சிரத்தைகள் காட்டி வந்தார். குமாரி பௌரியனுடன் தமது உறவுகளை அவர் பூரணமாக முறித்துக்கொண்டார். அவருடைய பார்வைகளும், அவருடைய குமாரியிடம் அவர் காட்டும் கனிவு இல்லாத தொனியும், 'நீ இப்போது பார்த்தாயா? நீ எனக்கு விரோதமாகச் சூழ்ச்சி செய்தாய். அந்தப் பிரஞ்சுப் பெண்ணுடன் எனக்குள்ள சம்பந்தத்தைப்பற்றி நீ இளவரசர் ஆண்ட்ரூவிடம் பொய் கூறினாய். அவருடன் நான் சண்டை போடும்படிச் செய்தாய். இப்போது பார்த்துக்கொள். இப்போது நீயோ, அவளோ எனக்கு வேண்டியதில்லை' என்று சொல்வது போலத் தோன்றியது.

இளவரசி மேரி ஒவ்வொரு நாளும் பாதி நேரத்தை, குஞ்சு நிக்கலஸின் படிப்புகளைக் கவனித்து, அவனுக்கு ருஷ்ய மொழியையும், சங்கீதத்தையும் தானே சொல்லிக் கொடுப்பதிலும், டெஸ்ஸலெஸுடன் சம்பாஷிப்பதிலும் செலவிட்டு வந்தாள். மீதமுள்ள பாதிதினத்தை அவள் புத்தகம் படிப்பதிலும், அவளுடைய வயோதிகத் தாதியுடனோ, அல்லது அவளுடைய பின் வாசல் வழியாக அவளைப் பார்க்கவரும் 'கடவுளின் மக்கள்' உடனோ பேசுவதிலும் செலவிட்டு வந்தாள்.

யுத்தங்களைப் பற்றிப் பெண்கள் என்ன நினைப்பார்களோ, அதே மாதிரி அப்பொழுது நடந்து வந்த யுத்தத்தைப்பற்றியும் இளவரசி மேரி நினைத்தாள். அந்த யுத்தத்தில் கலந்துகொண்டிருந்த தனது சகோதரருக்காக அவள் பயம் கொண்டாள். மனிதர்கள் ஒருவரை யொருவர் கொல்லும்படித் தூண்டிவிடும் அந்த விசித்திரமான குரூரத்தைக் கண்டு அவள் பீதியுற்று மலைப்பு கொண்டாள். ஆனால், இந்த யுத்தத்தின் முக்கியத்துவம் என்னவென்பதை அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை. இதற்கு முன்னால் நடந்த எல்லா யுத்தங்களையும் போலவே, இந்த யுத்தமும் அவளுக்குக் காணப்பட்டது. டெஸ்ஸலெஸுடன் அவள் அடிக்கடி பேசி வந்தபோதிலும், இந்த யுத்தத்தின் முக்கியத்துவத்தை அவள் உணரவில்லை. யுத்தத்தின் போக்கைப்பற்றி அறிந்துகொள்ளுவதில் டெஸ்ஸலெஸ் ஆர்வத்தோடு இருந்தார். யுத்தத்தைப்பற்றி தமக்குத் தோன்றுகிற வழியில் அவளுக்கு எடுத்துக்கூற முயற்சி செய்து வந்தார். அவளைப் பார்க்க வரும் அந்தக் 'கடவுளின் மக்கள்' தங்கள் வழியில் அந்த யுத்தத்தைப்பற்றி வியாக்யானம் செய்வார்கள். அதாவது, கிறிஸ்துவ விரோதி, ருஷ்யாவுக்குள் படையெடுத்து வருவதாக மக்களிடம் வதந்தியை அவர்கள் சொன்னார்கள். இப்போது இளவரசி ட்ரூபெட்ஸ்கயா என்ற பெயரோடு விளங்கும் ஜூலி என்பவள், மீண்டும் இளவரசி மேரியோடு கடிதப் போக்குவரத்தை ஆரம்பித்துவிட்டாள். அவள் மாஸ்கோவிலிருந்து தேச பக்தி நிறைந்த கடிதங்களை எழுதி வந்தாள்.

'எனது நல்ல சிநேகிதியே, நான் உனக்கு ருஷ்ய மொழியில் எழுதுகிறேன். (பிரஞ்சு கலந்த ருஷ்ய மொழியில் ஜூலி எழுதினாள்.) ஏனெனில், பிரஞ்சு சம்பந்தப்பட்ட ஒவ்வொன்றையும் நான் வெறுக்கிறேன். அதே மாதிரி, பிரஞ்சு மொழியையும் நான் வெறுக்கிறேன். அதைப் பேசுவதை என்னால் கேட்க முடியவில்லை... இங்கே, மாஸ்கோவிலுள்ள நாங்கள் நாம் பூஜித்து வருகிற சக்கரவர்த்திக்காகக் காட்டுகிற உற்சாகத்தினால் இறுமாப்பு அடைந்திருக்கிறோம்.

'யூதர்களின் விடுதியில், பாவம் எனது கணவர் பசியினாலும், வேதனைகளினாலும் கஷ்டமடைந்து கொண்டிருக்கிறார். ஆனால் எனக்குக் கிடைத்துள்ள செய்தி, எனக்கு மிகுந்த உற்சாகத்தைக் கொடுக்கிறது.

ராயேவ்ஸ்கி தம்முடைய இரண்டு பையன்களைத் தழுவிக் கொண்டு, ''நான் இவர்களோடு அழிந்து போவேன். நாங்கள் பின்வாங்க மாட்டோம்'' என்று சொல்லி அவர் செய்த வீரத்தனமான காரியங்களை நீ கேள்விப்பட்டிருக்கலாம். நம்மைவிட எதிரி

இருமடங்கு அதிக பலம் கொண்டவனாயிருந்தாலும், நம்மை அவனால் அசைக்க முடியாது. இங்கு நம்மால் முடிந்த அளவில் நாம் காலம் கழிக்கிறோம். ஆனால் யுத்த காலத்தில் யுத்த காலம் மாதிரியே நாம் காலம் கழிப்போம். இளவரசிகளான அலைனும், சோபியும் நாட்கள் பூராவாக என்னுடன் அமர்ந்திருப்பார்கள். நாங்கள் கணவர்களிருந்தும் விதவைகள் மாதிரி சந்தோஷமில்லாமல் இருந்தாலும், துணிகள் தயாரித்துக்கொண்டே அழகாகச் உரையாடல்களைச் செய்து கொண்டிருக்கிறோம். என்னுடைய சிநேகிதியான உன்னைத்தான் நாங்கள் மிகத் தேடுகிறோம்...' என்று எழுதியிருந்தாள்.

இந்த யுத்தத்தின் முழு முக்கியத்துவத்தையும் இளவரசி மேரி அறியாமல் இருந்ததற்கு முக்கிய காரணம் என்னவென்றால், வயோதிக இளவரசர் இதைப்பற்றி எப்போதும் பேசியதே இல்லை. இதை ஒரு பொருட்டாக அவர் மதித்ததும் இல்லை. யுத்தத்தைப்பற்றி டின்னர் சமயத்தில் டெஸ்ஸலெஸ் குறிப்பிடும்போது, சிரித்துக் கொண்டு வயோதிக இளவரசர் அவரைப் பார்ப்பதுண்டு. இளவரசரின் குரல் மிகுந்த அமைதியாகவும் தன்னம்பிக்கை கொண்டதாகவும் இருந்தபடியால், கொஞ்சம்கூட தயக்கமில்லாமல் அவரை இளவரசி மேரி நம்பினாள்.

அந்த ஜூலை மாதம் முழுவதும் வயோதிக இளவரசர் மிக அதிகமாக சுறுசுறுப்புடனும் உற்சாகமாகவும் காணப்பட்டார். மற்றொரு தோட்டம் அமைப்பதற்கு அவர் திட்டம் போட்டார். வீட்டு வேலை செய்யும் அடிமைகளுக்கு ஒரு புது கட்டிடம் கட்டுவதற்கு ஆரம்பித்தார். அவர் வெகு சொற்பமாகத் தூங்கியதாலும், வழக்கம்போலத் தமது படிப்பு அறையில் தூங்காமல், தாம் தூங்கும் இடத்தை ஒவ்வொரு நாளும் மாற்றிக்கொண்டு இருந்ததாலும், அது ஒன்றுதான் இளவரசி மேரிக்கு அவரைப்பற்றி மிகுந்த கவலையைக் கொடுத்து வந்தது. ஒரு நாள், கண்ணாடி அறையில் தம்முடைய மடக்குக் கட்டிலைப் போட வேண்டுமென்று அவர் உத்தரவிடுவார். மற்றொரு நாள், சோபாவிலேயே இருந்து விடுவார். இன்னொரு நாள், வரவேற்பு அறையிலுள்ள சோபாவிலேயே படுத்துக்கொள்வார். உடைகளைக் கழற்றாமல் கூட அவர் படுத்துத் தூங்குவதுண்டு. குமாரி பௌரியனுக்குப் பதிலாக ஒரு அடிமைப் பையன் அவருக்கு வாசித்துச் சொல்வதுண்டு. சில வேளைகளில் சாப்பாட்டு அறையிலேயே இரவு பூராவாக இருந்து விடுவார்.

ஆகஸ்டு மாதம் முதல் தேதியன்று இளவரசர் ஆண்ட்ரூவிடமிருந்து அவருக்கு இரண்டாவது கடிதம் வந்தது. அவர் வீட்டைவிட்டுப் புறப்பட்டுப் போனவுடனே, முதல் கடிதம் எழுதினார். அந்தக் கடிதத்தில், தாம் சொல்லியவைகளை மன்னித்து, தம் மீது மறுபடியும் கருணை காட்டவேண்டுமென்று மிகுந்த பவ்யமாக இளவரசர் ஆண்ட்ரூ எழுதியிருந்தார். இந்தக் கடிதத்திற்குப் பதிலாக, மிகுந்த அன்பு காட்டி, வயோதிக இளவரசர் பதில் எழுதினார். அந்த வினாடியிலிருந்து அந்தப் பிரஞ்சுப் பெண்ணை தூரத்தில் ஒதுக்கி வைத்துவிட்டார். வைட்டெப்ஸ்க் என்ற இடத்தை பிரஞ்சுக்காரர்கள் கைப்பற்றிய பின்பு, அந்த ஊருக்குப் பக்கத்தில் ஒரு இடத்திலிருந்து இளவரசர் ஆண்ட்ரூ இரண்டாவது கடிதத்தை எழுதினார். அந்த யுத்தத்தைப்பற்றிச் சுருக்கமாகக் கூறிவிட்டு, தாம் வரைந்த ஒரு யுத்தப் படத்தையும் தமது கடிதத்தோடு அனுப்பி யுத்தம் எம்மாதிரி எதிர்காலத்தில் நடக்கும் என்ற நமது அபிப்பிராயத்தையும் எழுதியிருந்தார். இந்தக் கடிதத்தில் தமதுட தந்தைக்கு, பால்டு ஹில்ஸில் தங்குவது ஆபத்தானது என்பதையும், ராணுவத்தின் நேரான ரஸ்தாவின் அது இருப்பதையும், யுத்த அரங்கத்திற்கு வெகு சமீபமாக இருப்பதையும் இளவரசர் ஆண்ட்ரூ சுட்டிக் காட்டி, மாஸ்கோவுக்குப் போகும்படி யோசனை கூறியிருந்தார். அன்று டின்னர் சமயத்தில், டெஸ்ஸலெஸ் என்பவர் வைட்டெப்ஸ்க் என்ற இடத்திற்குள் பிரஞ்சுக்காரர்கள் ஏற்கனவே நுழைந்து விட்டதாகச் சொன்னார். இதைக் கேட்டதும், தமது குமாரியின் கடிதத்தை வயோதிக இளவரசர் நினைவு கூர்ந்தார். அன்று இளவரசர் ஆண்ட்ரூவிடமிருந்து ஒரு கடிதம் வந்திருந்தது' என்று அவர் இளவரசி மேரியிடம் கூறினார். 'நீ அதை வாசிக்கவில்லையா?'

'இல்லை, அப்பா' என்று அவள் ஒரு பீதியுற்ற குரலில் பதில் அளித்தாள்.

அந்தக் கடிதம் வந்திருக்கிறது என்பதுகூட அவளுக்குத் தெரியாதபடியால், அவள் அந்தக் கடிதத்தை வாசித்திருக்க முடியாது.

'அவர் இந்த யுத்தத்தைப்பற்றி அதில் எழுதியிருக்கிறார்' என்று இளவரசர் ஒரு கேலிப் புன்னகையோடு சொன்னார். தற்கால யுத்தத்தைப்பற்றிப் பேசும்போதெல்லாம் அவர் அம்மாதிரி புன்னகை காட்டுவது பழக்கமாய்விட்டது.

'அது மிகுந்த ஸ்வாரஸ்யமாய் இருக்க வேண்டும். இளவரசர் ஆண்ட்ரூ விஷயங்களைத் தெரிந்து கொள்ளக்வடிய ஒரு நிலைமையில் இருக்கிறார்...' என்றார் டெஸ்ஸலெஸ்.

'ஓ, ரொம்ப... சுவாரஸ்யமாய் இருக்கும்' என்று குமாரி பௌரியன் சொன்னார்.

'நீ போய் அதை எடுத்து வா' என்று வயோதிக இளவரசர் குமாரி பௌரியனிடம் சொன்னார். 'உனக்குத் தெரியும்-அந்தக் காகிதப்-பழுவுக்குக் கீழாக அந்தச் சிறிய மேஜையின் மீது இருக்கிறது.'

குமாரி பௌரியன் ஆவலோடு குதித்தெழுந்தாள்.

'இல்லை, வேண்டாம்' என்று ஒரு முகச் சுழிப்போடு அவர் கூறினார். 'நீர் போம், மைக்கேல் ஐவானிச்.'

மைக்கேல் ஐவானிச் எழுந்து படிப்பு அறைக்குப் போனார். அவர் அறையை விட்டுப்போனதும், வயோதிக இளவரசர் மன அமைதியில்லாமல் சுற்றி நோக்கித் தமது சவுக்கத்தைக் கீழே எறிந்து விட்டுத் தாமே புறப்பட்டுப் போனார்.

'அவர்களால் ஒன்றும் செய்ய முடியாது... எப்போதுமே ஊழல்கள் செய்துகொண்டே இருப்பார்கள்' என்று அவர் முனங்கினார்.

அவர் வெளியே போன பின்பு, இளவரசி மேரியும் டெஸ்ஸலெஸும், குமாரி பௌரியனும், அந்தக் குஞ்சு நிக்கலஸும் மௌனமாக ஒருவருக்கொருவர் பார்வைகளைப் பறிமாறிக்கொண்டார்கள். வயோதிக இளவரசர் வேகமான நடையில் திரும்பினார். அவருடன் மைக்கேல் ஐவானிச் வந்தார். ஒரு கடிதத்தையும் ஒரு கட்டிடப் பிளான் படத்தையும் கொண்டு வந்தார். இவற்றை அவர் தமது பக்கத்தில் வைத்துக்கொண்டார். டின்னர் சமயத்தில் ஒருவரும் வாசிக்க வேண்டாமென்று அவர் நினைத்தார்.

வரவேற்பு அறைக்குப் போனவுடன், இளவரசி மேரியிடம் அவர் அந்தக் கடிதத்தைக் கொடுத்தார். தமக்கு முன்பாகப் புதிய கட்டிடத்தின் படத்தை விரித்து வைத்து, பார்வையை அதில் செலுத்தி, அந்தக் கடிதத்தை உரக்க வாசிக்கும்படி அவளக்குச் சொன்னார். அவள் அம்மாதிரி வாசித்த பின்பு, தனது தந்தையைக் கேள்விக் குறியோடு இளவரசி மேரி நோக்கினாள். அவர் அந்தக் கட்டிடப் படத்தைப் பரிசோதித்துக்கொண்டிருந்தபோது, சிந்தனையில் மூழ்கி இருந்ததாகத் தோன்றினார்.

'அதைப்பற்றி நீர் என்ன நினைக்கிறீர், இளவரசே?' என்று டெஸ்ஸலெஸ் கேள்வி கேட்கத் துணிந்தார்.

'நானா? நானா?...' என்று இளவரசர் சந்தோஷமில்லாமல் தூக்கத்திலிருந்து விழித்ததைப் போலக் கூறினார். கட்டிடப் படத்தை விட்டுத் தமது கண்களை அவர் எடுக்கவில்லை.

'ஒரு வேளை யுத்த அரங்கம் நமக்கு மிக நெருக்கமாக வந்து சேரலாம்...'

'ஹ; ஹ, ஹ; யுத்த அரங்கமா?' என்று இளவரசர் பேசினார். 'யுத்த அரங்கமென்பது போலந்து நாட்டில்தான் என்று நான் முன்பே சொல்லியிருக்கிறேன். இன்னமும் சொல்கிறேன். நீமன் நதிக்கு அப்புறமாக எதிரி ஒருக்காலம் கடந்து வர முடியாது.'

இளவரசரை மிகுந்த திகைப்போடு டெஸ்ஸலெஸ் நோக்கினார். ஏனெனில், எதிரி ஏற்கனவே நீப்பர் நதிக்குப் பக்கத்தில் வந்த பின்பு, இந்த இளவரசர் நீமன் நதியைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தது அவருக்குத் திகைப்பாய் இருந்தது. ஆனால், இளவரசி மேரி பூகோள ரீதியில் நீமன் நதி எங்கே இருக்கிறது என்பதை மறந்துவிட்டு, தனது தகப்பனார் சொல்வதுதான் சரியாய் இருக்கும் என்று நினைத்தாள்.

'பனி வருகிற காலத்தில் அவர்கள் எல்லோரும் போலந்தில் உள்ள சதுப்பு நிலங்களில் அமுங்கிப் போவார்கள். அதை அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை' என்று இளவரசர் பேசினார். 1807-ஆம் வருஷத்திய படையெடுப்பைப்பற்றி அவர் நினைத்துக் கொண்டு பேசியதாகத் தோன்றியது. அது வெகு சமீபத்தில் நடந்ததைப்போல அவருக்குத் தோன்றியது. 'சீக்கிரமாக பிரஷ்யாவுக்கு உள்ளே பெனிக்ஸன் படையெடுத்துச் செல்ல வேண்டும். அப்புறம் விஷயமெல்லாம் வேறு விதமாகத் திரும்ப ஆரம்பித்து விடும்...'

'ஆனால், இளவரசே, இந்தக் கடிதம் வைட்டெப்ஸ்க் என்ற இடத்தைக் குறிப்பிடுகிறது' என்று டெஸ்ஸலெஸ் பயத்தோடு ஆரம்பித்தார்.

'ஆ! அந்தக் கடிதமா? ஆமாம்...' என்று வெகு வெடுப்பாக இளவரசர் பதிலளித்தார். 'ஆமாம்...' அவருடைய முகம் ஒரு சோர்வான தோற்றத்தைக் காட்டியது. அவர் சிறிது தயங்கினார். 'ஆமாம், பிரஞ்சுக்காரர்களைத் தோற்கடித்து விட்டதாக அவர் எழுதுகிறார். அந்த நதியின் பெயர் என்ன? எந்த நதி?...'

டெஸ்ஸலெஸ் தமது கண்களைக் கவிழ்த்துக் கொண்டார்.

'அதைப்பற்றி இளவரசர் எதுவும் எழுதவில்லை' என்று அமைதியோடு அவர் குறிப்பிட்டார்.

'அவர் எழுதவில்லையா? ஆனால் நானாக அதை உற்பத்தி செய்யவில்லை'

வெகு நேரம் வரையில் ஒருவரும் பேசவில்லை.

'ஆமாம்... ஆமாம்... நல்லது, மைக்கேல் ஐவானிச்' என்று அவர் திடீரென்று சொல்லித் தலையை உயர்த்தி அந்தக் கட்டிடத்தின் படத்தைச் சுட்டிக்காட்டி இதை எப்படி மாற்றலாம் என்று எனக்கு நீர் சொல்லும்...' என்று கூறினார்.

அந்தப் படத்தின் பக்கத்தில் மைக்கேல் ஐவானிச் சென்றார். அவரிடம் புதுக் கட்டிடத்தைப்பற்றிப் பேசி பின்பு, இளவரசி மேரியையும் டெஸ்ஸலெஸையும் இளவரசர் கோபத்தோடு பார்த்து விட்டுத் தமது அறைக்குப் போனார்.

தயக்கமான, ஆச்சரியம் கொண்ட நோக்கோடு டெஸ்ஸலெஸ் தனது தந்தையைக் குத்திட்டுப் பார்ப்பதையும், மௌனமாய் இருப்பதையும் மேரி கவனித்தாள். தனது தந்தை தமது குமாரரின் கடிதத்தை வரவேற்பு அறை மேஜையில் வைத்துவிட்டு மறந்து போனதைக் கண்டு இளவரசி மேரி ஆச்சரியம் கொண்டாள். அதைப்பற்றிப் பேசுவதற்கும், அவருடைய குழப்பத்திற்கும், மௌனத்திற்கும் என்ன காரணம் என்று டெஸ்ஸலெஸைக் கேட்பதற்கு மட்டும் அவள் பயந்தாள் என்பதில்லை; அவற்றைப்பற்றி நினைப்பதற்குக்கூட அவள் பயந்தாள்.

மாலையில் இளவரசர் அனுப்பிய மைக்கேல் ஐவானிச் இளவரசி மேரியிடம் வந்து, வரவேற்பு அறையில் மறந்துபோய் விட்டு விட்டுப் போன இளவரசர் ஆண்ட்ரூவின் கடிதத்தைக் கேட்டார். அவள் அதை அவரிடம் கொடுத்தாள். கேட்பதற்கு அவளுக்கு மன அதிருப்தியாய் இருந்தபோதிலும், தனது தந்தை என்ன செய்து கொண்டிருக்கிறார் என்று கேட்டாள்.

'எப்போதும் அவர் சுறுசுறுப்பாக இருக்கிறார்' என்று மரியாதையான கேலிப்புன்னகையுடன் மைக்கேல் ஐவானிச் பதிலளித்தார். அந்தக் கேலிப் புன்னகை இளவரசி மேரியை முகம் வெளிறிப் போகும்படிச் செய்தது, 'அந்தப் புதுக் கட்டிடத்தைப்பற்றி அவர் மிக அதிகமாகக் கவலை கொண்டிருக்கிறார். அவர் படிப்பது வெகு சொற்பம். (தமது குரலைத் தணித்து) ஆனால், அவர் இப்போது தம்முடைய மேஜையின் முன்பாக அமர்ந்து, தமது உயிலை எழுதுவதில் மும்முரமாக இருப்பதாக நான் நினைக்கிறேன்' (தமது மரணத்திற்குப் பின்பு அவள் உயில் என்று சொல்லுகிற ஏதோ சில தஸ்தாவேஜுகளை எழுதி வைத்து விட்டுப் போக வேண்டும் என்பது, இளவரசரின் மனதுக்கு உகந்த வேலையாக சமீப காலமாக இருந்து வருகிறது.)

'அல்பாட்டிச்சை ஸ்மாலென்ஸ்க்கிற்கு அனுப்புகிறார்களா?' என்று இளவரசி மேரி கேட்டாள்.

'ஓ! ஆமாம், அவர் புறப்படுவதற்காகக் காத்துக்கொண்டிருக் கிறார்.'



அந்தக் கடிதத்தோடு மைக்கேல் ஐவானாவிச் அறைக்குத் திரும்பியபோது, மூக்குக் கண்ணாடியைக் கண்ணில் போட்ட வாறு வெளிச்சம் விழாதபடி கண் களுக்குமேல் ஒரு மறைப்பு போட்டுக் கொண்டு, வயோதிக இளவரசர் தமது திறந்த மேஜை முன்னால் அமர்ந்திருந்தார். மேஜை மீது இருந்த மெழுகு வத்திகளின் வெளிச்சம் மறைக்கப்பட்டிருந்தது. தமது நீட்டிய கையில் ஒரு காகிதத்தை வைத்துக் கொண்டு, தாம் எழுதியவற்றை நாடகப் பாணியில் வாசித்துக்கொண்டிருந்தார். அதைத் தாம் எழுதிய 'குறிப்புகள்' என்று அவர் சொல்லி வந்தார். அந்த யாதாஸ்தில், அவருடைய மரணத்திற்குப் பின்னால் அது சக்கரவர்த்திக்கு அனுப்பப்பட வேண்டுமென்று குறிப்பிட்டிருந்தார்.

மைக்கேல் ஐவானாவிச் உள்ளே போனபோது, இளவரசரின் கண்களில் நீர் நிறைந்திருந்தது. அவர் அப்போது வாசித்துக் கொண்டிருந்த அந்த யாதாஸ்து எழுதிய காலம் அவருக்கு நினைவுக்கு வரவே, அவருடைய கண்களில் நீர் நிறைய ஆரம்பித்தது. மைக்கேல் ஐவானாவிச்சிடமிருந்து கடிதத்தை அவர் வாங்கி நமது ஜேபியில் போட்டு விட்டு, தாம் கையில் வைத்திருந்த யாதாஸ்தை மடக்கி, அங்கே வெகு நேரம் காத்துக் கொண்டிருந்த அல்பாட்டிக் என்பவரை அழைத்தார். ஸ்மாலென்ஸ்கில் என்னென்ன சாமான்கள் வாங்க வேண்டுமென்பதற்காக, இளவரசர் ஒரு ஜாபிதா தயாரித்திருந்தார். அல்பாட்டிச்சைக் கடந்து, அந்த அறையில் மேலும் கீழுமாக நடந்துகொண்டே, அந்தக் கதவு ஓரமாக நின்ற அந்த அல்பாட்டிச்சுக்கு, என்னென்ன செய்ய வேண்டு மென்பதைப்பற்றி, உத்தரவுகள் கொடுத்துக்கொண்டிருந்தார்.

'முதலில் எழுதும் காகிதங்கள் -உனக்குக் கேட்கிறதா? அதில் எட்டு குயர்கள் வேண்டும். இந்த மாதிரி கில்ட் விளிம்புகள் கொண்டதாய் இருக்க வேண்டும்... நான் கொடுக்கும் மாதிரியைப் போலவே, அப்படியே இருக்க வேண்டும். வார்னிஷ், முத்திரை

தாருக்கு இவையெல்லாம், மைக்கேல் ஐவானாவிச்சின் ஜாபிதாவில் இருக்கிறபடி வாங்கவேண்டும்.'

அவர் மேலும் கீழும் நடந்து கொண்டு, தாம் எழுதிய குறிப்புகளைப் பார்வையிட்டார்.

'அதன் பின்னால் இந்த யாதாஸ்தைப் பற்றி ஒரு கடிதத்தை கவர்னரிடம் நேராகக் கொடுக்கவேண்டும்.

அடுத்தபடியாக அந்தப் புதுக் கட்டிடத்தின் கதவுகளுக்குப் புதிய பூட்டுகள் வாங்க வேண்டும். இளவரசரே படம் போட்டுக் கொடுத்த மோஸ்தர்படி விசேஷமாய் தயாரிக்கப்பட்டிருக்க வேண்டும். இந்த உயிலை வைப்பதற்கு ஒரு நல்ல பெட்டி ஒன்று வேண்டும்.'

இரண்டு மணி நேரங்களாக அல்பாட்டிச்சுக்கு அவர் உத்தரவுகள் கொடுத்தும்கூட இன்னும் அவரைப் போகவிடவில்லை. அவர் கீழே அமர்ந்து யோசனையில் ஆழ்ந்து கண்களை மூடிக்கொண்டிருந்தவர், அப்படியே தூங்கிவிட்டார். அல்பாட்டிச் மெதுவாக அசைய ஆரம்பித்தார்.

'நல்லது, நீர் போகலாம்; நீர் போகலாம். இன்னும் ஏதாவது வேண்டியிருந்தால், உமக்குப் பின்னால் சொல்லியனுப்புகிறேன்.'

அல்பாட்டிச் வெளியே போனார். இளவரசர் மீண்டும் தமது பீரோவின் பக்கமாகச் சென்று அதன் உள்ளே பார்த்தார். அங்கிருந்த காகிதங்களைத் தடவிப் பார்த்தார். பின்னால் பீரோவை மறுபடியும் மூடி அந்த மேஜையின் முன்னால் அமர்ந்து கவர்னருக்கு எழுத ஆரம்பித்தார்.

அந்தக் கவர்னர் கடிதத்தை எழுதி முடித்து அதற்கு முத்திரையிட்டு, அவர் எழுந்திருக்கும்போது ஏற்கனவே வெகு நேரமாய்விட்டது. அவர் தூங்கவேண்டுமென்று விரும்பினார். ஆனால் அப்படிச் செய்ய முடியாது என்பதை அவர் அறிவார். படுக்கையில் படுத்தால் மிகுந்த சோர்வான நினைப்புகள் தோன்றுமென்பதையும் அவர் அறிவார். ஆகவே அவர் டைக்கனை அழைத்து அன்று இரவு தமது படுக்கையை எங்கே போட வேண்டுமென்பதைக் காட்டுவதற்கு அந்த அறை வழியாகச் சென்றார்.

ஒவ்வொரு மூலையையும் அவர் நன்றாய்ச் சுற்றிப் பார்த்தார். ஒவ்வொரு இடமும் அவருக்குப் பிடித்தமில்லாமல் இருந்தது. படிக்கிற அறையிலுள்ள அவருக்குப் பழக்கமான அந்த சோபாதான் அவருக்கு ரொம்ப வெறுப்பாக இருந்தது. அது அவருக்குப் பயங்கரமாய்த் தோன்றியது. ஒரு வேளை அவர் படுத்திருந்த

காலத்தில் அவருக்கு நேர்ந்த மனத் துன்பமான சிந்தனைகள் அதற்குக் காரணமாக இருக்கலாம். ஒவ்வொரு பக்கமும் அவருக்கு மனதுக்குத் திருப்தியில்லை. ஆனால் அந்தப் பியானோவுக்குப் பின்னால் அந்த உட்காரும் அறையில் உள்ள மூலை மற்றவைகளை விட சிலாக்கியமானதாகத் தோன்றியது. அந்த இடத்தில் அதுவரை அவர் தூங்கியதில்லை.

ஒரு சேவகனின் உதவியோடு கட்டிலை டைக்கன் தூக்கிக் கொண்டு வந்து போட ஆரம்பித்தான்.

'அது சரியல்ல! அது சரியல்ல!' என்று இளவரசர் கூவினார். இரண்டு அங்குலங்கள் அந்த மூலையிலிருந்து கட்டிலைத் தள்ளிப் பின்னால் மீண்டும் சுவரை நோக்கித் தள்ளினார்.

'நல்லது, கடைசியாக நான் முடித்துவிட்டேன். இப்போது நான் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டும்' என்று நினைத்துத் தமது ஆடைகளைக் கழற்றும்படி டைக்கனிடம் சொன்னார்.

தமது கோட்டையும், கால் சட்டையையும் கழற்றுவதற்கு அவர் எடுத்துக்கொள்ள வேண்டிய முயற்சியைக் கண்டு எரிச்சல் கொண்டார். உடைகளைக் களைந்த பின்பு, படுக்கையில் அமர்ந்து, தம்முடைய உலர்ந்து போன மஞ்சள் கால்களை இகழ்ச்சியோடு பார்த்துக்கொண்டிருக்கும்போது, அவர் சிந்தனையில் ஆழ்ந்திருந்ததாகத் தோன்றினார். ஆனால், அவர் யோசித்துக் கொண்டிருக்கவில்லை; அந்தக் கால்களைக் கட்டில் மேலே தூக்கி வைக்கவேண்டிய சிரமத்திற்காக, அந்த வேலையை ஒத்தி வைத்துக்கொண்டிருந்தார். 'ஓ, எவ்வளவு கஷ்டமாய் இருக்கிறது. ஓ, இந்தத் தொல்லை முடிவடையவேண்டும். 'நீ' எனக்கு விடுதலை கொடுத்து விடு. என்று அவர் நினைத்தார். தமது உதடுகள் இரண்டையும் இறுக்கிக் கொண்டு, இருபதாயிரம் தடவைகள் முயற்சித்து, கடைசியாகக் கட்டிலில் படுத்தார். அவர் படுத்தவுடனேயே, அந்தப் படுக்கை முன்னும் பின்னும் ஆடுவது போலவும், பெருச்சு விடுவது போலவும் தோன்றியது. இம்மாதிரி ஒவ்வொரு இரவும் அவருக்கு ஏற்பட்டு வந்தது. தம்முடைய கண்களை மூடப்போகிற சமயத்தில் திடீரென்று மீண்டும் திறந்தார்.

'சாந்தமென்பதே இல்லை; நாசமாய்ப் போக' என்று அவர் கோபமாக முணுமுணுத்தார். யாரிடம் கோபப்படுகிறார் என்பது அவருக்குத் தெரியாது. 'ஆ, ஆமாம், இன்னொரு முக்கியமான காரியம் இருக்கிறது. வெகு முக்கியமான காரியம். நான் படுத்த பின்பு அதை யோசிக்கலாம் என்று இருந்தேன். தாள்கள் போடவேண்டிய விஷயமா? இல்லை, நான் அதைப்பற்றி

அவனிடம் சொல்லியிருக்கிறேன். இல்லை, அந்தக் காரியம், அந்தக் காரியம், வரவேற்பு அறையில் நடந்த விஷயம். இளவரசி மேரி அசட்டுத்தனமாக ஏதோ பேசினாள். அந்த முட்டாள், டெஸ்ஸலெஸ், ஏதோ சொன்னான். ஏதோ எனது ஜேபியில்-ஞாபகமில்லை.'

'டைக்கன், நாம் டின்னரின்போது அங்கே என்ன பேசிக் கொண்டிருந்தோம்?'

'இளவரசர் மைக்கேலைப் பற்றி...'

'அமைதியாய் இரு, அமைதியாய் இரு' என்று இளவரசர் சொல்லி, அந்த மேஜை மீது தமது கையை அறைந்தார். 'ஆமாம் எனக்குத் தெரியும். இளவரசர் ஆண்ட்ரூவை கடிதம்! இளவரசி மேரி அதை வாசித்தாள். வைட்டெப்ஸ்க் பற்றி டெஸ்ஸலெஸ் ஏதோ சொன்னான். இப்போது நான் அதை வாசிப்பேன்.'

தமது ஜேபியிலிருந்து அந்தக் கடிதத்தை எடுத்து, அந்த மேஜையைத் தமது படுக்கைக்கு அருகே இழுந்தார். அந்த மேஜை மீது ஒரு கோப்பை லெமனெடும், ஒரு மெழுகு வத்தியும் இருந்தது தமது கண்ணாடியைப் போட்டுக்கொண்டு அவர் வாசிக்க ஆரம்பித்தார். அந்த இரவின் அமைதியில் பச்சை மறைப்பு போட்ட அந்த மங்கலான ஒளியில் அவர் வாசித்தபோது தான், அந்தக் கடிதத்தின் அர்த்தத்தை ஒரு வினாடி உணர ஆரம்பித்தார்.

'வைட்டெப்ஸ்க்' என்ற இடத்தில் பிரஞ்சுக்காரர்கள் இருந்தால், ஸ்மாலென்ஸ்க் நகருக்கு நாலு நாட்களில் வந்துவிடலாம். ஏற்கனவே ஒரு வேளை அங்கு வந்திருந்தாலும் வந்திருக்கலாம்' என்று சொல்லி 'டைக்கன்' என்று அவர் அழைத்தார். டைக்கன் உடனே குதித்து எழுந்தான். 'இல்லை, இல்லை, எனக்கு ஒன்றும் தேவையில்லை' என்று அவர் கூச்சலிட்டார். அந்தக் கடிதத்தை அந்த மெழுகு வத்தி ஸ்டாண்டுக்கு அடியில் வைத்து விட்டு, தமது கண்களை மூடினார். பிரகாசமான நடுப் பகலில், அந்த டான்யூப் நதியின் காட்சி அவருக்கு முன்னால் கிளம்பின: நாணல்களும், ருஷ்ய முகாம்களும் தோன்றின. தம்முடைய ஆரோக்கியமான முகத்தில் ஒரு சுருக்கம்கூட இல்லாதபடி, தாம் ஒரு வாலிப ஜெனரலாய் சுறுசுறுப்போடும் உற்சாகத்தோடும் இருந்த காட்சி அவருக்குத் தோன்றியது. பாட்டம்கின்னுடைய பல வர்ண கூடாரத்திற்குள் நுழைந்ததும், அங்கே ஏற்பட்ட பொறாமையும், அவருக்கு அச்சமயத்தில் மனக்கண் முன் தோன்றி, அக்காலத்தில் அந்த உணர்ச்சிகள் எவ்வளவு பலமாய் இருந்தனவோ, அதே மாதிரி இப்போதும் பலமாய் தோன்றின. பாட்டம்கின்னை அவர் முதலில்

பார்த்தபோது பேசிய வார்த்தைகளை இப்போது நினைத்துப் பார்த்தார். தமக்கு முன்னால் ஒரு பருத்த, மஞ்சள் முகம் கொண்ட, குட்டையான தடித்த பெண்ணாகிய சக்கரவர்த்தினி - மாதாவும் அவளுடைய புன்முறுவலும், அவள் அவரை முதலில் அருள் கூர்ந்து வரவேற்றதும் தோன்றின. பின்னால் அவளுடைய சவப் பெட்டியில் அவளுடைய கையை முத்தமிடுவதற்காக ஜுபாவ் என்பவரோடு அவர் போட்ட சண்டையும் அவருக்கு முன்னால் வந்து தோன்றின.

'ஓ, சீக்கிரம், சீக்கிரம்; இப்போது உள்ளவைகளையெல்லாம் விட்டு விட்டு, அந்தக் காலத்திற்குப் போக முடியுமானால்! சீக்கிரம், சீக்கிரம்-என்னை அவர்கள் அமைதியாக இருக்க விடுவார்களாக.'




இளவரசர் நிக்கலஸ் பால்கோன்ஸ்கியின் எஸ்டேட்டான பால்டு ஹில்ஸ் என்பது ஸ்மாலென்ஸ்க் என்ற இடத்திலிருந்து கிழக்கே 40-மைல் தூரத்தில் இருக்கிறது. மாஸ்கோவுக்குப் போகிற பிரதான ரஸ்தாவிலிருந்து இரண்டு மைல் தூரத்தில் அது இருக்கிறது.

அல்பாட்டிச்சுக்கு உத்தரவுகள் கொடுத்தனுப்பிய அன்று மாலையில், இளவரசி மேரியை டெஸ்ஸலெஸ் பார்த்துப் பேசினார் இளவரசர் உடம்பு சௌக்கியமாய் இல்லை. அதோடு, அவருடைய பந்தோபஸ்துக்காக எவ்விதமான நடவடிக்கையும் அவர் எடுக்கவில்லை. இளவரசர் ஆண்ட்ரூவின் கடிதத்திலிருந்து, பால்டு ஹில்ஸ் எஸ்டேட்டில் இருப்பது மிகுந்த ஆபத்தானதாய் இருக்கும் என்று தெரிகிறது. ஆகவே, அல்பாட்டிச் மூலம், ஸ்மாலென்ஸ்க்கில் இருக்கும் இந்த மாகாண கவர்னருக்கு, ஒரு கடிதத்தை அனுப்பும்படி அவர் யோசனை கூறினார். அதாவது, அப்போதுள்ள நிலைமையைப் பற்றியும், பால்டு ஹில்ஸ் எஸ்டேட்டுக்கு நேரக்கூடிய ஆபத்தைப் பற்றியும் தனக்குத் தெரிவிக்க வேண்டுமென்று அந்தக் கடிதத்தில் கவர்னரை அவள் கேட்க வேண்டுமென்று கூறினார். இளவரசி மேரிக்காக இந்தக் கடிதத்தை டெஸ்ஸலெஸ் எழுதினார். அதில் அவள் கையெழுத்திட்டாள். அதை அல்பாட்டிச்சிடம் கொடுத்து, கவர்னரிடம் கொடுக்கும்படி, அங்கே ஏதாவது ஆபத்து இருந்தால் உடனே திரும்பி வந்து விடும்படியும் அவருக்குச் சொன்னார்கள்.

எல்லா உத்தரவுகளையும் பெற்றுக்கொண்ட பின்பு, ஒரு வெள்ளைத் தொப்பியை-இளவரசர் பரிசாகக் கொடுத்தது-அணிந்து கொண்டு இளவரசரைப் போல கையில் ஒரு பிரம்பைக் கைப்பற்றி தமது குடும்ப சிகிதமாக அல்பாட்டிச் வெளியே வந்தார். தோல் மூடி கொண்ட ஒரு வண்டி, செம்பழுப்பு நிறம் கொண்ட மூன்று குதிரைகள் பூட்டப்பட்டு தயாராய் நின்றது.

வண்டியிலிருந்த பெரிய மணி, சப்தம் கேட்காதபடி செய்யப் பட்டிருந்தது. கடிவாளங்களில் மாட்டப்பட்டிருந்த சிறிய மணிகள், காகிதங்கள் வைத்து சப்தம் கேட்காமல் செய்யப்பட்டிருந்தன. பால்டு ஹில்ஸ் எஸ்டேட்டில், மணியோசை கேட்கும்படி யாரும் சவாரி போகக்கூடாது என்று இளவரசர் சொல்லியிருந்தார். ஆனால், தாம் ஒரு தூரமான பிரயாணத்தில் போவதால், மணிகள் அவசியமென்று அல்பாட்டிச் நினைத்து, அவைகளைத் தம் வண்டியில் பூட்டியிருந்தார். அவருடைய கீழ் சேவகர்களான பிரதம குமாஸ்தா, ஒரு கணக்கு குமாஸ்தா, ஒரு வேலைக்காரி, ஒரு சமையல்காரி, இரண்டு வயதான ஸ்திரீகள், ஒரு சிறு வேலைக்காரப் பையன், வண்டிக்காரன், இன்னும் பல வீட்டு அடிமைகள் எல்லோரும் வந்து நின்று அவருக்கு வழியனுப்பினார்கள்.

அவருடைய குமாரி, அவர் உட்கார்ந்து கொள்வதற்கும், பின்னால் சாய்ந்துகொள்வதற்கும், சிறிய மெத்தைகளைக் கொண்டு வந்து போட்டாள். அவருடைய வயதான மைத்துனி, ஒரு சிறிய மூட்டையை உள்ளே கொண்டுவந்து வைத்தாள். ஒரு வண்டிக் காரன், அந்த வண்டிக்குள் அவர் ஏறுவதற்கு உதவி செய்தான்.

'இதோ பார், இதோ பார், இவைகள்தான் பெண்களின் வீண்அலட்டல்கள். பெண்கள், பெண்கள்' என்று அல்பாட்டிச் சொல்லி, இளவரசரைப்போல் வேகமாகப் பேசி, அந்த வண்டிக்குள் ஏறி உட்கார்ந்தார்.

என்ன வேலைகள் செய்யவேண்டுமென்பதைப் பற்றி குமாஸ்தாவிடம் உத்தரவுகள் கொடுத்த பின்பு, இச்சமயம் இளவரசரைப் போல நடிக்காமல், தமதுத் தொப்பியை வழுக்கைத் தலையிலிருந்து வெளியே எடுத்து, தமக்குத் தாமே மூன்று தடவைகள் சிலுவைக் குறி காட்டிக் கொண்டார்.

'அங்கே ஏதாவது இருக்குமானால்... உடனே திரும்பி விடும், யாக்காவ் அல்பாட்டிச், 'கிறிஸ்துவுக்காக எங்களை நினைத்துப் பாரும்' என்று அவருடைய மனைவி, அப்போது பரவி நின்ற யுத்தத்தைப் பற்றியும், எதிரியைப் பற்றியும் உண்டான வதந்திகளைக் குறிப்பிட்டுக் கதறினாள்.

'பெண்கள், பெண்கள்! பெண்களின் வீண் அலட்டல்கள்!' என்று அல்பாட்டிச் தமக்குத் தாமே முனங்கிக்கொண்டு பிரயாணத்தை ஆரம்பித்தார். மஞ்சள் நிறமான ரை தானிய வயல்களையும், இன்னமும் பச்சையாகத் தோன்றிக்கொண்டிருக்கும் அடர்த்தியாய் வளர்ந்திருந்த ஓட் தானிய வயல்களையும், பயிரிடுவதற்காக இரண்டாவது தடவையாக உழுதுகொண்டிருந்த கரும்பு வயல்களையும் பார்த்துக் கொண்டே போய்க்கொண்டிருந்தார்.

அவர் போய்க்கொண்டிருக்கும்போதே, அந்த வருஷத்தில் தானிய விளைச்சல் மிக சிலாக்கியமானதாக இருப்பதை மகிழ்ச்சியுடன் பார்த்தார்.

ரை தானிய வயல்களை அவர் பார்த்துக்கொண்டு போனபோது, இங்குமங்கும் சில வயல்களில் அறுவடையாய் இருப்பதைக் கண்டார். அதிலிருந்து, அவை பயிரிடப்படுகிற காலத்தையும், அறுவடையாகிற காலத்தையும் கணக்குப் போட்டுக் கொண்டிருந்தார். இளவரசர் சொல்லிய உத்தரவுகளில் தாம் ஏதாவது மறந்து விட்டாரா என்பதைப் பற்றியும் அவர் சிந்தித்துக் கொண்டிருந்தார்.

வருகிற வழியில் குதிரைகளுக்கு இரண்டு தடவைகள் தீனிபோட்ட பின்பு, ஆகஸ்டு நாலாம் தேதி யன்று மாலையில் அந்தப் பட்டணத்திற்கு வந்து சேர்ந்தார்.

வருகிற வழியில் துருப்புகளையும், சாமான் வண்டிகளையும் அவர் பார்த்தார். அவைகளைக் கடந்து அவர் ஸ்மாலென்ஸ்க் நகருக்குப் பக்கத்தில் வந்தபோது, தூரத்தில் சுடுகிற சப்தம் அவருக்குக் கேட்டது. ஆனால், இவையெல்லாம் அவர் மனதில் ஒன்றும் பதியவில்லை. அவர் மனதில் பதிந்தது என்னவென்றால், ஓட் தானிய வயலுக்கு மத்தியில் அந்தக் கதிர்களைக் குதிரைகளின் தீவனத்திற்காக அறுத்து விட்டு, அங்கே கூடாரம் அடித்திருந்ததேயாகும். இதுதான் அல்பாட்டிச் மனதில் ஆழமாய்ப் பதிந்தது. ஆனால், தமது சொந்தக் காரியங்களைப் பற்றி மீண்டும் அவர் யோசிக்க ஆரம்பித்தபோது, இதையும்கூட மறந்து விட்டார்.

அவருடைய வாழ்க்கையில் முப்பது வருஷங்களுக்கு மேலாக இளவரசரின் கருத்து எதுவோ, அதுவே அவருடைய சிரத்தைகளையெல்லாம் கட்டுப்படுத்தி வந்தது. இளவரசரின் உத்தரவு இல்லாத எந்தக் காரியத்திலும், அவருக்கு சிரத்தை கிடையாது. அம்மாதிரி காரியங்கள் இருப்பதாக அல்பாட்டிச் நினைப்பது இல்லை.

ஆகஸ்ட் 4-ந் தேதி மாலையில் ஸ்மாலென்ஸ்க் நகரத்துக்கு வந்து சேர்ந்ததும், அந்தப் பட்டணத்திற்கு சுற்றுப் புறத்தில் உள்ள டாச்சினாவ் என்ற பகுதியில் அவர் தங்கினார். நீப்பர் நதிக்கு அக்கரையில், பெராபோன்டாவ் என்பவரால் நடத்தப்பட்டு வந்த ஹோட்டலில் அவர் தங்கினார். சென்ற முப்பது வருஷங்களாக அவர் அங்கு வரும்போதெல்லாம், அந்த ஹோட்டலில் தங்குவது தான் வழக்கம். அந்த பெராபோன்டாவ் என்பவர், முப்பது வருஷங்களுக்கு முன்னால் அல்பாட்டிச்சுடைய யோசனைப்படி, இளவரசரிடமிருந்து ஒரு காட்டைவிலைக்கு வாங்கினார். அதிலுள்ள மரங்களை அவர் சில்லறையாக வியாபாரம் செய்ய ஆரம்பித்து, இப்போது அவருக்கு ஒரு வீடும், ஒரு ஹோட்டலும், ஒரு தானியக் கடையும் அந்த மாகாணத்தில் இருக்கின்றன. அவர் பருத்த, கருத்த, சிவப்பான முகத்தோடு, கனத்த உதடுகளும், அகலமான மூக்கும், கொப்பளங்கள் கொண்ட சுருக்கம் விழுந்த நெற்றியும் ஒரு பெரிய தொந்தியும் கொண்ட 40 வயதான ஒரு விவசாயி.

அவருடைய பருத்திச் சட்டைக்கு மேலாக ஒரு மார்புச் சட்டை அணிந்து, தெருவைப் பார்த்து இருந்த தமது ஹோட்டலின் வாசலில் நின்றுகொண்டிந்தார். அல்பாட்டிச்சைப் பார்த்ததும் அவரிடம் சென்றார்.

'யாக்காவ் அல்பாட்டிச், உமக்கு நல்வரவு. மக்கள் இந்தப் பட்டணத்தைவிட்டு வெளியே போய்க்கொண்டிருக்கிறார்கள்; ஆனால் நீர் பட்டணத்திற்குள் வருகிறீர்' என்றார்.

'அவர்கள் எதற்காகப் பட்டணத்தைவிட்டுப் போகிறார்கள்?' என்று அல்பாட்டிக் கேட்டார்.

'அதைத்தான் நானும் சொல்லுகிறேன்; மக்கள் முட்டாள்கள். எப்பொழுதுமே அந்தப் பிரஞ்சுக்காரரைப் பார்த்து பயந்து கொண்டிருக்கிறார்கள்.'

'பெண்களின் வீண் அலட்டல்கள், பெண்களின் வீண் அலட்டல்கள்' என்று அல்பாட்டிக் கூறினார்.

'நானும் அதைத்தான் நினைக்கிறேன், யாக்காவ் அல்பாட்டிச், நான் என்ன சொல்கிறேன் என்றால், அவர்களை உள்ளே விடக்கூடாது என்று உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே, அது சரியாய்த்தானிக்கும். ஒரு வண்டிக்கு மூன்று ரூபிள்கள் வாடகை வேண்டுமென்று விவசாயிகள் கேட்கிறார்கள்-அது கிறிஸ்தவ தர்மமல்ல.'

யாக்காவ் அல்பாட்டிச் அதைக் கவனிக்காமலேயே கேட்டு வந்தார். சாமோவார் என்ற தேநீர்ப் பாத்திரம் ஒன்று கொடுக்கும்படி அவர் கேட்டார். தமது குதிரைகளுக்கு வைக்கோல் வேண்டும் என்றும் அவர் சொன்னார். அவர் தேநீரைப் பருகி முடித்த பின்பு, படுப்பதற்குப் போய்விட்டார்.

இரவு பூராவாக அந்த ஹோட்டலைக் கடந்து துருப்புகள் போய்க்கொண்டே இருந்தன. பட்டணங்களில் எல்லாம் அவர் அணிந்து கொள்ளும் சட்டையை அடுத்த நாள் காலையில் அல்பாட்டிச் மேலே அணிந்துகொண்டு தமது வேலையாக வெளியே சென்றார். அன்று காலை சூரியன் பிரகாசமாய் இருந்தது. எட்டுமணிக்கெல்லாம் உஷ்ணமாய்த் தோன்றியது. அறுவடைக்குச் சரியான தினம் என்று அல்பாட்டிச் நினைத்தார்.

அன்று காலையிலிருந்து நகரத்திற்கு வெளியே சுட்டுக்கொண்டிருக்கிற சத்தம் கேட்டுக்கொண்டிருந்தது. துப்பாக்கி சுடுகிற சப்தத்தோடு, பீரங்கி சுடுகிற சப்தமும் எட்டு மணிக்குச் சேர்ந்து கொண்டது. தெருக்கள் வழியாக மக்கள் வேகமாகப் போய்க்கொண்டிருந்தார்கள். ஆனால், தெருக்களின் ஏராளமான சிப்பாய்களும் இருந்தார்கள். வண்டிகள் இன்னமும் ஓடிக்கொண்டிருந்தன. வியாபாரிகள் தங்கள் கடைகளில் நின்றுகொண்டிருந்தார்கள். மாதா கோயில்களில் வழக்கம்போல பிரார்த்தனைகளும் நடைபெற்றுக்கொண்டிருந்தன. கடைகளுக்கும் சர்க்கார் காரியாலயங்களுக்கும் தபால் ஆபீஸுக்கும் கவர்னரின் மாளிகைக்கும் அல்பாட்டிச் போனார். சர்க்கார் காரியாலயங்களிலும், கடைகளிலும், தபாலாபீஸ்களிலும் ஒவ்வொருவரும் ராணுவத்தைப் பற்றியும், நகரை ஏற்கெனவே தாக்க ஆரம்பித்துவிட்ட எதிரியைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தார்கள். என்ன செய்யவேண்டும் என்று ஒவ்வொருவரும் கேட்டுக்கொண்டிருந்தார்கள். எல்லோரும் ஒருவரை ஒருவர் சாந்தப்படுத்த முயற்சி செய்துகொண்டிருந்தார்கள்.

கவர்னரின் மாளிகைக்கு முன்பாக ஏராளமான பேர்கள், கோசாக்குகள், கவர்னருக்குச் சொந்தமான ஒரு பிரயாண வண்டி, இவ்வளவும் நிற்பதை அல்பாட்டிச் பார்த்தார். மண்டப முற்றத்தில் மிராசுதார்களான இரண்டு கனவான்களை அவர் சந்தித்தார். அவர்களில் ஒருவரை அவருக்கு முன்பே தெரியும். போலீஸ் படையில் மாஜி கேட்பனான அந்த மனிதர் கோபமாகச் சொல்லிக் கொண்டிருந்தார்:

'இது ஒன்றும் வேடிக்கையல்ல. உமக்கே தெரியும், தனிமையில் இருந்தால் அதெல்லாம் சரிதான். 'ஒருவன் வீழ்ந்தாலும் அவன் ஒருவன்தான்' என்று பழமொழி சொல்கிறது. ஆனால் குடும்பத்தில் பதிமூன்ன்று பேர்கள் இருக்கிறார்கள். இவர்களைத் தவிர, சொத்துக்கள் நிறைய இருக்கின்றன... அவர்கள் நாம் அடியோடு நாசமடைகிற மாதிரி செய்துவிட்டார்கள். அம்மாதிரி செய்வதற்கு அவர்கள் எப்போர்ப்பட்ட கவர்னர்கள்! அவர்களைத் தூக்கில் போடவேண்டும்; கொள்ளைக்காரர்கள்...'

'சரிதான், வாரும், அதுபோதும்' என்றார் மற்றவர்.

'நான் ஏன் கவலைப்படவேண்டும்? அவர் கேட்டுக் கொள்ளட்டும். நாம் நாய்கள் அல்ல.' என்று அந்தப் போலீஸ் மாஜி கேப்டன் சொல்லி சுற்றிப் பார்த்தபோது, அல்பாட்டிச்சைக் கவனித்தார்.

'ஓ! யாக்காவ் அல்பாட்டிச்! நீர் எதற்காக வந்திருக்கிறீர்?'

'மாட்சிமை தங்கியவரின் உத்தரவுப்படி, கவர்னரைப் பார்ப்பதற்காக வந்திருக்கிறேன்' என்று அல்பாட்டிச் சொல்லி, தமது தலையை நிமிர்த்தி தமது கோட்டிற்குள்ளாக மார்பிற்குக் கையை நுழைத்தார். இளவரசரைக் குறிப்பிடும் போதெல்லாம், அவர் அம்மாதிரி செய்து வழக்கம்... 'இங்குள்ள விஷயங்களைப்பற்றி விசாரித்து வருமாறு அவர் எனக்கு உத்திரவிட்டிக்கிறார்' என்று அவர் மேலும் சொன்னார்.

'ஆமாம், போம், நீர் கண்டுபிடியும்' என்று அந்தக் கோபமான கனவான் கூச்சலிட்டார். 'அவர்கள் இந்த நிலைமைக்கு விஷயங்களைக் கொண்டுவந்துவிட்டார்கள். இங்கே வண்டியோ, வேறென்றோ கிடையாது... மறுபடியும் அதே விஷயம்தான். உமக்குக் காது கேட்கிறதா?' என்று அவர் சொல்லி, சுடுகிற சப்தம் வருகிற திசையை நோக்கிச் சுட்டிக்காட்டினார்.

'நம் எல்லோருக்கும் அவர்கள் நாசத்தைக் கொண்டுவந்து விட்டார்கள். கொள்ளைக்காரர்கள்' என்று அவர் மீண்டும் சொல்லி மண்டப முற்றத்துப் படிகளில் இறங்கினார்.

அல்பாட்டிச் தமது தலையை இங்கும் அங்கும் ஆட்டிக் கொண்டே மெத்தைப்படிகளில் ஏறிப்போனார். காத்திருக்கும் அறையில், வியாபாரிகள், பெண்கள், அதிகாரிகள், எல்லோரும் ஒருவரை ஒருவர் மௌனமாய்ப் பார்த்துக்கொண்டு அமர்ந்திருந் தார்கள். கவர்னருடைய அறைக் கதவு திறக்கப்பட்டது. எல்லோரும் எழுந்து முன்னே நகர்ந்தார்கள். ஒரு அதிகாரி வெளியே ஓடி வந்து–

ஒரு வியாபாரியிடம் ஏதோ சில வார்த்தைகள் சொன்னார். ஒரு சிலுவையைக் கழுத்தில் தொங்கவிட்டுக் கொண்டிருந்த, ஒரு பருத்த அதிகாரியைத் தமக்குப் பின்னால் வருமாறு சொல்லிவிட்டு, மீண்டும் அவர் உள்ளே மறைந்தார். அங்கிருந்தவர்களின் கேள்விக் குறிகளையோ, அல்லது கேள்விகளையோ அவர் தவிர்க்க விரும்பியதாகத் தோன்றியது. அல்பாட்டிச் முன்னால் நகர்ந்தார். அந்த அதிகாரி அடுத்த தடவை அந்த அறைக்கு வந்தபோது, அவரைப் பார்த்துப் பேசினார். ஒரு கையைத் தமது கோட்டுக்குமேல் மார்பில் வைத்துக்கொண்டு அவரிடம் இரண்டு கடிதங்களைக் கொடுத்தார்.

'மேன்மை தங்கிய பாரன் ஆஷ் அவர்களுக்கு, பிரதான ஜெனரல் இளவரசர் பால்கோன்ஸ்கி அனுப்பிய கடிதம்' என்று அவர் மிகுந்த பவித்ரத்துடனும் முக்கியத்வத்தோடும் கூறியபடியால், அந்த அதிகாரி அவரைத் திரும்பிப் பார்த்து, அவரிடமிருந்த கடிதங்களை எடுத்துக்கொண்டார்.

சில நிமிஷங்களுக்குப் பிறகு, அல்பாட்டிச்சை அழைத்து கவர்னர் அவரிடம் அவசரமாகப் பேசினார்:

'எனக்கு எதுவும் தெரியாது என்று இளவரசருக்கும், இளவரசிக்கும் சொல்லும். மேலிடத்திலிருந்து வருகிற உத்தரவுகளின் படிதான் நான் இங்கே நடக்கிறேன்-இங்கே...' என்று சொல்லி, அல்பாட்டிச்சிடம் ஒரு காகிதத்தைக் கொடுத்தார். 'இருந்தாலும் இளவரசர் அசௌக்கியமாய் இருக்கிறபடியால், அவர்கள் மாஸ்கோவுக்குப் போக வேண்டுமென்பதுதான் எனது ஆலோசனை. நான் இப்போது புறப்பட்டுக்கொண்டிருக்கிறேன். இதை அவரிடம் தெரிவித்துவிடும்...'

ஆனால், கவர்னர் அதை முடிக்கவில்லை. தூசியும் வேர்வையும் நிறைந்த ஒரு அதிகாரி அந்த அறைக்கு ஓடி வந்து, எதையோ பிரஞ்சு மொழியில் பேச ஆரம்பித்தார். கவர்னரின் முகம் பயங்கரத்தைக் காட்டியது. 'போம்' என்று அவர் சொல்லி, அல்பாட்டிச்க்கு தமது தலையை ஆட்டிவிட்டு, மீண்டும் அந்த அதிகாரியைக் கேள்வி கேட்டார். ஆவலும் பீதியும் திக்கற்ற தன்மையும் நிறைந்த பார்வைகள் அல்பாட்டிச்சின் மீது, அவர் கவர்னர் அறையை விட்டு வெளியே வந்தபோது திரும்பின. தம்மை அறியாமலேயே அந்த வெடி சப்தத்தைக் கவனித்தார். அது சமீபத்தில் நெருங்கி விட்டது போலவும், பலத்தில் அதிகரித்தது போலவும் அவருக்குத் தோன்றியது. அல்பாட்டிச் தமது ஹோட்டலுக்கு வேகமாகப் போனார். அவரிடம் கவர்னர் கொடுத்த கடிதத்தில், பின் வருமாறு எழுதப்பட்டிருந்தது.

'ஸ்மாலென்ஸ்க் நகரத்திற்கு கொஞ்சம்கூட அபாயம் கிடையாது என்பதை நான் உமக்கு உறுதி கூறுகிறேன். அதற்கு யாராலாவது அபாயம் ஏற்படும் என்பதற்கும் வழி இல்லை. நான் ஒரு பக்கத்திலிருந்தும், இளவரசர் பாக்ரேஷன் மற்றொரு பக்கத்திலிருந்தும், நமது துருப்புகளை ஸ்மாலென்ஸ்க்குக்கு முன்னால் ஒன்று சேர்ப்பதற்காக வந்துகொண்டிருக்கிறோம். அம்மாதிரி ஒன்று சேருவது 22-ந் தேதி யன்று நடக்கலாம். நமது இரண்டு ராணுவங்களும் ஒன்றாகக் கூடி, உமது பொறுப்பில் விடப்பட்டிருக்கிற நமது மாகாணத்திலுள்ள மக்களைப் பாதுகாக்கும். நமது தந்தை நாட்டின் எதிரிகளை முறியடித்து விரட்டுகிற வரையில், அல்லது நமது வீரமுள்ள படைகளைச் சேர்ந்த கடைசி வீரன் இருக்கிற வரையில், நமது மாகாணத்தை நமது ராணுவம் காப்பாற்றி வரும், ஸ்மாலென்ஸ்க் நகரத்தின் மக்களை அம்மாதிரி இரண்டு தீரம் மிகுந்த ராணுவங்கள் பாதுகாத்து வருவதால், நமக்கு வெற்றி நிச்சயம் என்றும், அந்த மக்கள் தைரியமாய் இருக்க வேண்டும் என்றும் நீர் உறுதி கூற வேண்டும்' (பார்க்ளே டி டாலி என்ற சேனாதிபதி ஸ்மாலென்ஸ்க் கவர்னரான பாரன் ஆஷ் என்பவருக்கு 1812-ஆம் வருஷத்தில் பிறப்பித்த உத்தரவுகள்.)

மிகுந்த கவலை கொண்டு மக்கள் தெருக்களில் சுற்றிக் கொண்டிருந்தார்கள்.

வீட்டுப் பாத்திரங்களையும், நாற்காலிகளையும், பீரோக்களையும் வண்டிகளில் உயரமாக அடுக்கிக்கொண்டு, முற்றங்களிலிருந்து ஏராளமான வண்டிகள் வெளியே வந்து, தெருக்களில் போய்க் கொண்டிருந்தன. சாமான்கள் ஏற்றிய வண்டிகள் பெராபோன்டாவின் கட்டிடத்திற்கு அடுத்த வீட்டில் நின்றுகொண்டிருந்தன. பெண்கள் வழியனுப்பிக் கொள்ளும்போது, கதறிக் கொண்டும் அழுது கொண்டும் இருந்தார்கள். அந்தக் கடிவாளமிடப்பட்ட குதிரைகளுக்கு முன்பாக, ஒரு சிறிய காவல் நாய் சுற்றிச் சுற்றி வந்து குலைத்துக்கொண்டு இருந்தது.

அந்தச் சத்திரத்தின் முற்றத்திற்குள் சாதாரண நடையைவிட வேகமாக அல்பாட்டிச் நுழைந்து, தம்முடைய வண்டியும், குதிரையும் இருந்த கொட்டகைக்கு நேராகப் போனார். வண்டிக்காரன் தூங்கிக்கொண்டிருந்தான். அவர் அவனை எழுப்பி குதிரைகளுக்கு கடிவாளங்கள் போடும்படி சொல்லிவிட்டு, அந்த ஆளோடி வழியாகப் போனார். அந்த ஹோட்டலின் சொந்தக்காரர் அறையிலிருந்து ஒரு குழந்தை அழுகிற சப்தம் வெளியே கேட்டது.

ஒரு பெண்ணின் அதைரியமான விம்மல்களும் பெரா போன்டாவுடைய கோபமான, கரகரப்பான கூச்சல்களும் கேட்டுக்கொண்டிருந்தன. அந்த சமையல்காரி, ஆளோடியில் ஒரு பயந்துபோன பெட்டைக் கோழியைப் போல, இங்கும் அங்குமாய் ஓடிக்கொண்டிருந்தாள். அச்சமயம் அல்பாட்டிச் அங்கே நுழைந்தார். 'அவர் அவளைக் கொன்றுவிட்டார். எஜமானியைக் கொன்றுவிட்டார்...' அவளை அடித்தார்... அவளை அங்கும் மிங்கும் இழுத்தார்...'

'எதற்காக?' என்ற அல்பாட்டிச் கேட்டார்.

'அவள் இந்த ஊரை விட்டுப் போய்விட வேண்டுமென்று கெஞ்சிக்கொண்டே இருந்தாள். அவள் ஒரு பெண். 'என்னை எங்காவது அழைத்துப் போங்கள்' என்ற சொன்னாள். 'என்னுடைய சிறு குழந்தைகளுடன் இங்கே நான் மடிந்து போகும்படி விட்டுவிட வேண்டாம்' என்று சொன்னாள். 'எல்லோரும் போய்விட்ட பின்பு, நாம் மட்டும் ஏன் போகக்கூடாது?' என்று கேட்டாள். அவர் உடனே அவளை அடிக்கவும், அங்கும் மிங்கும் இழுக்கவும் ஆரம்பித்தார்.

தமது சம்மதத்தைக் காட்டுவதுபோல அல்பாட்டிச் தலையை ஆட்டினாலும், அதற்கு அதிகமாகக் கேட்க விரும்பாதவரைப்போல, அந்த ஹோட்டல் சொந்தக்காரரின் அறைக்கு எதிராய் இருந்த அறையின் வாசலுக்குப் போனார். அங்கேதான் அவர் தாம் வாங்கிய சாமான்களை வைத்திருந்தார்.

'ஏ மிருகமே, ஏ கொலைகாரா' என்று ஒரு மெல்லிய, வெளிறிய பெண்ணின் கிரீச் குரல் கேட்டது. அதே சமயத்தில், அவள் கைகளில் ஒரு குழந்தையுடனும், தலையில் கட்டப்பட்டிருந்த கைக்குட்டை கிழிந்தும் அறைக் கதவு வழியாக வெளியே ஓடிவந்து, படிகளில் இறங்கி முற்றத்திற்கு ஓடினாள்.

பெராபோன்டாவ் அவளுக்குப் பின்னால் வெளியே வந்தார். அல்பாட்டிச்சை அவர் பார்த்ததும் தமது மார்புச் சட்டையைச் சரிசெய்து கொண்டு, தமது தலை முடியைத் தடவி, ஒரு கொட்டாவி விட்டு, அல்பாட்டிச்சுடன் எதிரே இருந்த அறைக்குப் போனார்.

'அதற்குள்ளாகப் புறப்பட்டு விட்டீரா?' என்று அவர் கேட்டார்.

அவர் கேட்டதற்குப் பதில் சொல்லாமலும், அவரைப் பாக்காமலும் தமது சாமான்களை ஒழுங்குபடுத்தி வைத்துக் கொண்டு, தாம் எவ்வளவு பணம் கொடுக்க வேண்டுமென்று கேட்டார்.

'நாம் கணக்குப் போடுவோம். நல்லது, நீர் கவர்னரைப் பார்த்தீரா? என்ன தீர்மானம் செய்யப்பட்டது?' என்று பெராபோன்டாவ் கேட்டார்.

எதையும் நிச்சயமாக, கவர்னர் தம்மிடம் சொல்லவில்லை என்று அல்பாட்டிச் பதிலளித்தார்.

'நமக்குத் தொழில் 'இருக்கும்போது, நாம் எப்படிப் போய்விடமுடியும்?' என்று பெராபோன்டாவ் கேட்டார். 'டாராகாபுஜ் என்ற இடத்திற்குப் போவதற்கு ஒரு வண்டிக்கு ஏழு ரூபிள்கள் கொடுக்க வேண்டியதாய் இருக்கிறது. அம்மாதிரி கேட்பவர்கள் கிறிஸ்துவர்கள் அல்ல என்று நான் சொன்னேன். செலிவானாவ் சென்ற வியாழக்கிழமையன்று ஒரு நல்ல வியாபாரம் செய்தார். ஒரு மூட்டை 9 ரூபிள்கள் என்று ராணுவத்திற்கு மாவு விற்றார். நீர் கொஞ்சம் தேநீர் குடிக்கிறீரா?' என்று அவர் கேட்டார்.

குதிரைகளை வண்டியில் பூட்டிக் கொண்டிருக்கும்போது, அல்பாட்டிச்சும் பெராபோன்டாவும் தேநீர் சாப்பிட்டுக் கொண்டே, தானியங்களின் விலையைப் பற்றியும், பயிர்களைப் பற்றியும், அறுவடைக்குப் பொருத்தமான நல்ல கால நிலையைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

'இப்போது நிலைமை அமைதியாகிக் கொண்டிருக்கிற மாதிரித் தோன்றுகிறது' என்று பெராபோன்டாவ் சொல்லி, தமது மூன்றாவது கோப்பைத் தேநீரைப் பருகி விட்டு எழுந்தார். 'தம்முடைய துருப்புகள் மிகச் சிறந்த நிலைமையில் இருக்கிறார்கள். எதிரிகளை உள்ளே விடக்கூடாது என்பது நமது துருப்புகளுக்கு உத்தரவு. ஆகவே நாம் மிகுந்த பலத்தோடு இருக்கிறோம் என்று தோன்றுகிறது... அன்று ஒரு நாள் மாத்யூ ஐவானாவிச் பிளாட்டாவ் என்பவர் அவர்களை மாரீனா என்ற நதிக்குள் விரட்டி, சுமார் 18,000 பேர்களை ஒரே நாளில் மூழ்கிச் சாகும்படி செய்தார் என்று அவர்கள் சொல்லுகிறார்கள்.'

தமது சாமான்களை எடுத்து அங்கே வந்த வண்டிக்காரனிடம் கொடுத்து விட்டு, அந்த ஹோட்டல்காரரிடம் அல்பாட்டிச் கணக்குத் தீர்த்தார். சக்கரங்களுடையவும், குதிரைகளின் குளம்புகளுடையவும், மணிகளுடையவும் ஒலிகள், ஒரு சிறிய வண்டி வெளியே வரும்போது, வாசலில் கேட்டுக்கொண்டிருந்தன.

மாலையில் வெகு நேரமாயிற்று. தெருக்களில் பாதி, நிழல் நிறைந்திருந்தது; மற்றொரு பாதி, சூரிய வெளிச்சத்தால் பிரகாசமாய் இருந்தது. அல்பாட்டிச் ஜன்னல் வழியாக வெளியே பார்த்து, கதவின் பக்கம் சென்றார். திடீரென்று ஒரு விசித்திரமான சீட்டிச்

சப்தமும், தடார் என்ற சப்தமும் தூரத்தில் கேட்டன. அவற்றை யொட்டி, பீரங்கியின் முழக்கம் ஒரு தாழ்ந்த கர்ஜனையோடு கலந்து வந்தது. அந்த சப்தத்தினால் ஜன்னல்கள் எல்லாம்ஆடின.

அவர் தெருவுக்குப் போனார். அவரைக் கடந்து இரண்டு பேர்கள் பாலத்தை நோக்கி ஓடிக்கொண்டிருந்தார்கள் . வெவ்வேறு திசைகளிலிருந்தும் உஸ் என்ற சப்தமும், தடாரென்ற பீரங்கிக் குண்டு விழும் சப்தமும், நகரின் மீது விழுந்த குண்டுகள் வெடிக்கும் சப்தங்களும் கேட்டுக் கொண்டிருந்தன. நகருக்கு வெளிப்புறமாக பீரங்கி சுடும் சப்தத்தோடு இதை ஒப்பிட்டபோது, நகருக்குள்ளே கேட்கும்இந்தச் சப்தங்கள் அவ்வளவு அதிகமாகக் கேட்கவில்லை. நாலு மணிக்கு அப்புறம் 130 பீரங்கிகள் அந்த நகரைப் பார்த்துச் சுடவேண்டுமென்று நெப்போலியன் உத்தரவு கொடுத்திருந்தார். அதன்படி குண்டுகளைப் போட்டுக் கொண்டிருந்தார்கள். முதலில் இந்தப் பீரங்கித் தகர்ப்பைப் பற்றிய அர்த்தத்தை மக்கள் உணர்ந்து கொள்ளவில்லை.

முதலில் குண்டுகள் கீழே விழுவதும், பீரங்கிக் குண்டுகள் வெடிப்பதும், மக்களுக்கு ஒரு வேடிக்கையாய் இருந்தது. அதாவது, கொட்டகையிலிருந்து அழுவதை விடாமலிருந்த பெராபோன்டாவின் மனைவி இவற்றையெல்லாம் பார்த்ததும், திடீரென்று அமைதியானாள். தன்னுடைய குழந்தையைக் கையில் வைத்துக்கொண்டு, அந்த வாசலுக்குச் சென்று பீரங்கிச் சப்தங்களைக் கவனித்துக் கேட்டுக்கொண்டு, மௌனமாய் மக்களைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

சமையல்காரியும் கடையில் வேலை பார்ப்பவரும் வாசலுக்கு வந்தார்கள். தங்கள் தலைக்கு மேலாகப் பறந்து போகும் அந்தப் பீரங்கிக் குண்டுகளை எப்படியாவது பார்த்துவிட வேண்டுமென்று மிகுந்த உற்சாகத்தோடு முயற்சி செய்து கொண்டிருந்தார்கள். ஆவலோடு பேசிக்கொண்டு முக்கிலிருந்து பலர் வந்தார்கள்.

'எவ்வளவு வேகமாய்ப் போகிறது! ஒரு வீட்டின் முகட்டைத் தூள் தூளாக்கி விட்டது!' என்று ஒருவர் சொன்னார்.

'பன்றியைப் போலப் பறித்து மண்ணை மேலே வீசுகிறார்!' என்றார் மற்றவர்.

'அது ரொம்ப பிரமாதம்! ஒவ்வொருவருக்கும் உற்சாகத்தைக் கொடுக்கிறது. நல்ல வேளை, நீ மற்றொரு பக்கமாகக் குதித்தாய். இல்லாவிட்டால், நீ அழிந்து போய் இருப்பாய்' என்று, சிரித்துக் கொண்டு முதலாவது பேசியவர் சொன்னார். மற்றவர்கள் அவர்களோடு சேர்ந்து கொண்டு, அந்தப் பீரங்கிக் குண்டுகள் ஒரு

வீட்டின் மீது விழுந்ததைப் பற்றிய விவரங்களைக் கூறிக்கொண்டிருந்தார்கள். இதற்கிடையில், இன்னும் அதிகமான குண்டுகள், முன்னைவிட வேகமான கொடிய ஊதல் சப்தங்களோடு பீரங்கிக் குண்டுகளும், இடையிடையே ஊதல் சப்தங்களுடன் வெடி குண்டுகள் மக்களின் தலைகளுக்கு மேலாக விடாமல் ஒன்றன் பின் ஒன்றாகப் பறந்து கொண்டே இருந்தன. ஆனால், ஒன்றுகூட அவர்களுக்குப் பக்கத்தில் விழவில்லை; எல்லாம் அவர்களைக் கடந்து போய்க்கொண்டிருந்தன. அல்பாட்டிச் தம்முடைய வண்டிக்குள் ஏறினார். அந்த ஹோட்டல்காரன் வெளி வாசலில் நின்றுகொண்டிருந்தார்.

'நீ எதை வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்?' என்று சமையல்காரியைப் பார்த்துக் கேட்டார். அவள் ஒரு சிவப்பு பாவாடையை இடுப்பில் அணிந்து, சட்டையின் கையை மேலே மடக்கிவிட்டு முழங் கைகளை ஆட்டிக் கொண்டு, அங்கு பேசிக்கொண்டிருந்தவைகளைக் கேட்பதற்காக ஒரு மூலைக்குப் போனாள்.

'எப்பேர்ப்பட்ட அதிசயங்கள்!' என்று அவள் ஆச்சரியத்தோடு கூறினாள். ஆனால், தன்னுடைய எஜமானரின் குரலைக் கேட்டவுடன், தான் உயர்த்தி மடக்கிக் கட்டியிருந்த அந்தப் பாவாடையைக் கீழே இழுத்து விட்டாள்.

மீண்டும் ஏதோ ஊதிக்கொண்டு போயிற்று. ஆனால் இந்தத் தடவை வெகு சமீபமாக ஒரு பறவையைப் போல கீழ் நோக்கிப் பாய்ந்து வந்தது. அந்தத் தெருவின் மத்தியில் திடீரென்று ஒரு தீப் பிழம்பு மின்னியது. திடீரென்று ஏதோ வெடித்தது. அந்தத் தெருவைப் பூராவாகப் புகையால் மூடியது.

'அயோக்கியப் பெண், என்ன செய்து கொண்டு இருக்கிறாய்?' என்று அந்த ஹோட்டல்காரர் கூச்சலிட்டுவிட்டு, சமையல்காரியை நோக்கி ஓடினார்.

அதே சமயத்தில் பெண்களின் பரிதாபகரமான புலம்பல்கள் வெவ்வேறு திசைகளில் இருந்தும் கேட்க ஆரம்பித்தன. பயந்து போன அந்தக் குழந்தை கதற ஆரம்பித்தது. அந்தச் சமையல்காரியைச் சுற்றி வெளிறிய முகங்களோடு மக்கள் கூடினார்கள். அந்தக் கூட்டத்தில் கேட்ட சப்தங்களில், மிகப் பலமானதாய் இருந்தது அவளுடைய புலம்பலாகும்.

'ஊ... ஊ... ஊ... அன்பான மனிதர்களே, அன்பும் பிரியமும் உள்ள மனிதர்களே! என்னைச் சாகவிடாதீர்கள், என்னுடைய அன்பான மனிதர்களே...' ஐந்து நிமிஷங்களுக்குப் பின்னால், அந்தத்

தெருவில் ஒருவரையும் காணவில்லை. பீரங்கிக் குண்டின் ஒரு துண்டினால், அந்தச் சமையல்காரியின் துடை முறிந்து போயிற்று. அவளை சமையல் அறைக்குள் எடுத்துக் கொண்டு போனார்கள். பாதாள அறையில் அல்பாட்டிச், அவருடைய வண்டிக்காரன், பெராபோன்டாவின் மனைவி, அவளுடைய குழந்தைகள், அந்த ஹோட்டல் காவல்காரன், எல்லோரும் அமர்ந்து கேட்டுக்கொண்டிருந்தார்கள். பீரங்கிககிள் முழக்கம், குண்டுகள் பறந்து வரும்போது கேட்கும் ஊதல் சப்தங்கள், சமையல்காரியின் பரிதாபகரமான கதறல், இவையெல்லாம் ஒரு வினாடிகூட ஓயவில்லை. அந்தச் சமையல்காரியின் கதறல்தான் மற்ற சப்தங்களைவிட அதியமாய்க் கேட்டது. அந்த வீட்டு எஜமானி தன்னுடைய குழந்தையை ஆட்டிக்கொண்டு சப்தம் போடாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். அந்த நிலவறைக்குள் புதிதாய் யாராவது வந்தால், தன்னுடைய குழந்தையை ஆட்டிக்கொண்டு சப்தம் போடாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். அந்த நிலவறைக்குள் புதிதாய் யாராவது வந்தால், கீழே நிலவறைக்கு வந்த ஒரு கடைக்காரன், அவளுடைய கணவர் மற்றவர்களோடு சேர்ந்து மாதா கோயிலுக்குப் போய் இருப்பதாகவும், அங்கே இருந்து ஸ்மாலென்ஸ்க் நகரைச் சேர்ந்த அதிசயம் செய்யக் கூடிய அந்த உருவச்சிலையை எடுத்து வரப் போகிறார்கள் என்றும் சொன்னான்.

அந்தி மயங்கும் வேளையில் பீரங்கித் தகர்ப்புகளும் குறைய ஆரம்பித்தன. அல்பாட்டிச் அந்த நிலவறையின் வெளியே வந்து, வாசல் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தார். அன்று மாலை தெளிவாய் இருந்த வானம், இப்போது புகையால் மூடப்பட்டிருந்தது. அதன் வழியாக, உயரே மேலாக அர்த்த சந்திரன் விசித்திரமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. இப்போது அந்த பயங்கரமான பீரங்கிகளின் ஓசைகள் நின்று விட்டபடியால், அந்த நகரில் ஒரு அமைதி நிலவியிருந்தது. காலடி ஓசைகளும், கதறல்களும், தூரத்துச் கூச்சல்களும், நெருப்புப் பிடித்து வெடிப்பதால் ஏற்படும் சப்தங்களும் மட்டும்தான் அந்த அமைதியைக் கலைத்துக் கொண்டிருந்தன. சமையல்காரியின் முனங்கல்கள் இப்போது குறைந்து விட்டன. இரு பக்கங்களிலும் புகை மேகங்கள் சுருளை சுருளையாக நெருப்புகளிலிருந்து மேலே கிளம்பிப் பரவிக் கொண்டிருந்தன. தெருக்களில் பற்பல விதமான யூனிபாரங்களில் சிப்பாய்கள் நடந்துகொண்டும், அல்லது குழப்பமடைந்து வெவ்வேறு திசையை நோக்கி ஓடிக்கொண்டும் இருந்தார்கள். ஒரு கலைக்கப்பட்ட எறும்புக் கூட்டிலிருந்து எறும்புகள் எப்படி வெளியே ஓடுமோ, அம்மாதிரி அவர்கள் காணப்பட்டார்கள்.

அவர்களில் பலர் பெராபோன்டாவின் முற்றத்திற்கு ஓடி வந்தார்கள். அல்பாட்டிச் அவர்களைக் கவனித்தார். அல்பாட்டிச் வெளி வாசலுக்குப் போனார். பின் வாங்கிக்கொண்டுவரும் ஒரு பட்டாளம் வேகமாக நெருக்கமாக வந்து கொண்டிருந்தபடியால், அந்தத் தெரு அடைபட்டுப் போயிற்று.

அவரைப் பார்த்ததும் ஒரு அதிகாரி சொன்னார்: 'இந்தப் பட்டணத்தை கைவிட்டுவிட்டுப் போகிறார்கள். நீர் போம், ஓடிப் போம்' பின்னால், சிப்பாய்களைப் பார்த்துக் கூச்சலிட்டார். 'இந்தப் முற்றங்களுக்குள் ஓடுவதற்கு நான் உங்களுக்குப் பாடம் கற்பிக்கிறேன்.'

அல்பாட்டிச் மீண்டும் அந்த ஹோட்டலுக்குள் சென்று, தமது வண்டிக்காரனை அழைத்து, புறப்படத் தயாராகச் சொன்னார். பெராபோன்டாவின் குடும்பம் முழுவதும், வெளியே அல்பாட்டிச்சையும், வண்டிக்காரனையும் தொடர்ந்து வந்தது. அதுவரை மௌனமாய் இருந்த பெண்கள், திடீரென்று அந்த நெருப்புகளைப் பார்த்ததும் ஓலமிட ஆரம்பித்தார்கள்-அந்த புகையும், நெருப்பின் ஜுவாலைகளும் கூட அந்த அந்தி மயங்கும் வேளையில் நன்றாகத் தெரிந்து கொண்டிருந்தன-அந்த ஓலங்களுக்குப் பதில் சொல்லுவதைப்போல அந்தத் தெருவின் மற்ற பாகங்களிலிருந்தும் அதே மாதிரி ஓலங்கள் வந்து கொண்டிருந்தன. கொட்டகைக்குள் அல்பாட்டிச்சும், வண்டிக்காரனும் சிக்கலடைந்த கடிவாள வார்களையும், பட்டைகளையும், நடுங்குகிற கைகளோடு சரி செய்து கொண்டிருந்தார்கள்.

அல்பாட்டிச் வெளி வாசலைக் கடந்ததும், பெராபோன்டாவின் கடையில் பத்து சிப்பாய்களைப் பார்த்தார். அவர்கள் உரக்கப் பேசிக்கொண்டு, தங்களுடைய பைகளில் மாவையும் மற்ற உணவுப் பொருள்களையும் நிரப்பிக்கொண்டிருந்தார்கள். அந்தச் சயமத்தில் பேராபோன்டாவ் தமது கடைக்குள் நுழைந்தார். அந்த சிப்பாய்களைப் பார்த்ததும் கூச்சலிட அவர் எண்ணினார். ஆனால் திடீரென்று அதை நிறுத்திக்கொண்டு, தமது தலைமுடியைக் கையில் பற்றி விம்மி விம்மி அழவும் சிரிக்கவும் ஆரம்பித்தார்.

'எல்லாவற்றையும் கொள்ளையடியுங்கள், வாலிபர்களே! அந்தப் பிசாசுகள் வந்து எடுத்துக்கொண்டு போவதற்கு விட்டு விடாதீர்கள்' என்று அவர் கூச்சலிட்டு சில மாவு மூட்டைகளைத் தாமே எடுத்துத் தெருவில் வீசி எறிந்தார்.

சில சிப்பாய்கள் பீதியடைந்து ஓடினார்கள். மற்றவர்கள் தங்களுடைய பைகளை நிரப்பினார்கள். அல்பாட்டிச்சைப் பார்த்ததும், பெராபோன்டாவ் அவர் பக்கம் திரும்பினார்.

'ருஷ்யா இதோடு போயிற்று. அல்பாட்டிச், நானே இந்த இடத்திற்கு நெருப்பு வைத்துவிடுகிறேன். நாமெல்லாம் நாசமாய் விட்டோம்...' என்று சொல்லிவிட்டு பெராபோன்டாவ் முற்றத்திற்குள் ஓடினார்.

அந்தத் தெரு வழியாகச் சாரி சாரியாகத் தொடர்ந்து சிப்பாய்கள் போய்க்கொண்டே இருந்தார்கள். அதனால் அந்தத் தெரு அடைபட்டுப் போயிற்று. இந்தக் காரணத்தினால் அல்பாட்டிச்சால் வெளியே போக முடியவில்லை. அவர் காத்திருக்கவேண்டிய தாயிற்று. பெரானோட்டாவின் மனைவியும் குழந்தைகளும் கூட ஒரு வண்டியில் அமர்ந்து, வெளியே போவதற்குச் சாத்தியமாகிற வரையில் காத்திருந்தார்கள்.

இரவு வந்தது. வானத்தில் நட்சத்திரங்கள் தெரிந்தன. அர்த்த சந்திரனும் அந்தப் புகைக்கு மத்தியில் பிரகாசித்துக் கொண்டிருந்தது. நீப்பர் நதியை நோக்கியுள்ள சரிவில் அல்பாட்டிச்சின் வண்டியும், ஹோட்டல்காரனின் மனைவியின் வண்டியும், அந்த சிப்பாய் கூட்டங்களுக்கும் வண்டிகளுக்கும் இடையே போய்க்கொண்டிருந்தபோது, ஒரு இடத்தில் நிற்க வேண்டியதாய் இருந்தது. அந்த நாற்சந்தியில் இந்த வண்டிகள் நின்று கொண்டிருந்தபோது, பக்கத்தில் உள்ள சந்தில் ஒரு வீடும் சில கடைகளும் எரிந்து கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். அந்த நெருப்பு ஏற்கெனவே எரிந்து தணிந்துவிட்டது. இப்போது அந்த ஜ்வாலையும் தணிந்து, அந்தக் கருப்புப் புகையில் மறைந்திருந்தது. திடீரென்று மீண்டும் அது பிரகாசமாக எரிய ஆரம்பித்தபடியால், அந்த நாற்சந்தியில் கூடி நின்ற மக்களின் முகங்கள் நன்றாகத் தெரிந்தன. நெருப்புக்கு முன்பாகக் கருப்பு உருவங்கள் இங்கும் அங்கும் போய்க்கொண்டிருந்தன. ஜுவாலைகளின் இடைவிடாத வெடிப்பு சப்தங்களுக்கு மேலாக மக்கள் பேசுவதும் கூச்சலிடுவதும் கேட்டுக் கொண்டிருந்தன. தமது வண்டி இன்னும் கொஞ்சம் நேரத்திற்கு போகமுடியாது என்று அறிந்த அல்பாட்டிச் வண்டியில் இருந்து இறங்கி அந்த நெருப்பைப் பார்ப்பதற்காக பக்கத்துத் தெருவிற்குப் போனார். அதற்குப் பக்கத்தில் தொடர்ச்சியாக முன்னும் பின்னும் போய்க்கொண்டிருந்தார்கள். அவர்களில் இருவரும், ஒரு கம்பளிக் கோட்டு அணிந்த ஒருவரும், எரிந்துகொண்டிருந்த கட்டைகளை மற்றொரு முற்றத்திற்கு,

தெருவிற்குக் குறுக்காக இழுத்துக்கொண்டு போவதை அவர் பார்த்தார். மற்றவர்கள் வைக்கோல் கட்டுகளைத் தூக்கிக்கொண்டு போனார்கள்.

ஒரு உயர்ந்த தானியக் கிடங்கு வெகு வேகமாகப் பற்றி எரிந்து கொண்டிருந்தது. அதற்கு முன்பாக ஒரு பெரிய கூட்டம் கூடி நின்றது. அந்தக் கூட்டத்தின் பக்கத்தில் அல்பாட்டிச் போனார். சுவர்கள் எல்லாம் எரிந்து கொண்டிருந்தன. பின் பக்கத்துச் சுவர் கீழே விழுந்துவிட்டது. அந்த மரத்தாலான கூரை கீழே விழுந்து கொண்டிருந்தது. விட்டங்கள் எரிந்து கொண்டிருந்தன. அந்தக் கூரை பூராவாகக் கீழே விழுவதைப் பார்க்க அந்தக் கூட்டம் நோக்கிக் கொண்டிருந்தது. அல்பாட்டிச்சும் அதைப் பார்ப்பதற்காகவே' அங்கே நின்றார்.

'அல்பாட்டிச்' என்று அவருக்குப் பழக்கமான ஒரு குரல் திடீரென்று அந்த வயோதிகரைக் கூவி அழைத்தது.

'கடவுள் காப்பாற்றுவாராக, மேன்மை தங்கியவரே' என்று அல்பாட்டிச் தம்முடைய வாலிப இளவரசரின் குரலை அறிந்து கொண்டு கூறினார்.

சவாரி உடை அணிந்துகொண்டு, ஒரு கருப்புக் குதிரை மீது அமர்ந்து, அந்தக் கூட்டத்தின் பின்னாலிருந்து அல்பாட்டிச்சை இளவரசர் ஆண்ட்ரூ பார்த்துக் கொண்டிருந்தார்.

'நீர் ஏன் இங்கே இருக்கிறீர்?' என்று அவர் கேட்டார்.

'மேன்மை தங்கியவரே' என்று அல்பாட்டிச் திக்கித் திக்கிப் பேசி, விம்மி விம்மி அழ ஆரம்பித்தார்.. 'நாம் இனி மீள முடியாதா, எஜமானே?...'

'நீர் ஏன் இங்கே இருக்கிறீர்?' என்று இளவரசர் ஆண்ட்ரூ மீண்டும் கேட்டார்.

அந்த வினாடியல் அங்கு எரிந்து கொண்டிருந்த நெருப்பு திடீரென்று ஜுவாலை விட்டது. அதனால் வாலிப எஜமானரின் வெளிறிப்போன, களைப்படைந்த முகம் தெளிவாய்த் தெரிந்தது. தம்மை எதற்காக அனுப்பினார்கள் என்று அல்பாட்டிச் சொல்லி விட்டு, அங்கிருந்து வெளியே போவதற்கு முடியாமலிருக்கும் கஷ்டத்தையும் எடுத்துச் சொன்னார்.

'உண்மையிலேயே நாம் எல்லாவற்றையும் இழந்துவிட்டோமோ, மேன்மை தங்கியவரே?' என்று அவர் திரும்பவும் கேட்டார்.

இளவரசர் ஆண்ட்ரூ பதில் சொல்லாமல், ஒரு நோட்டுப் புத்தகத்தை எடுத்து, தமது முழங்காலை உயர்த்தி அதன்மேல் அதை வைத்து, அதிலிருந்து ஒரு பக்கத்தில் பென்ஸிலால் எழுதி, அந்தப் பக்கத்தைக் கிழித்தார். தம்முடைய சகோதரிக்கு அவர் எழுதியிருந்தார்.

'ஸ்மாலென்ஸ்க் நகரைக் கைவிட்டுவிடுகிறார்கள். பால்டு ஹில்ஸ் மாளிகையை ஒரு வாரத்திற்குள் எதிரிகள் கைப்பற்றிக் கொள்ளுவார்கள். உடனே மாஸ்கோவுக்குப் புறப்பட்டுப் போங்கள். நீங்கள் எப்போது புறப்பட்டுப் போகிறீர்கள் என்பதை எனக்கு உடனே தெரிவியுங்கள். உஸ்வியாஜ் என்ற ஊருக்கு தனி வேலைக்காரன் மூலம் எனக்குத் தகவல் அனுப்புங்கள்.'

இதை எழுதி முடித்துக் கொடுத்த பின்பு, பால்டு ஹில்ஸிலிருந்து வயோதிக இளவரசர், இளவரசி, தமது குமாரர், குமாரரின் வாத்தியார், இவர்கள் எல்லோரையும் அழைத்துப் போவதற்கு எப்படி ஏற்பாடு செய்யவேண்டும் என்பதைச் சொன்னார். எப்படி, எங்கே உடனே நமக்குத் தகவல் கொடுத்தனுப்புவது என்பதைப் பற்றியும் சொன்னார். இந்த விஷயத்தை அவர் சொல்லி முடித்துக் கொண்டிருக்கும்போது, பரிவாரத் தலைவர் ஒருவர் பரிவாரங்கள் பின்தொடர அவரிடம் சவாரியில் வந்து சேர்ந்தார்.

'நீர் ஒரு கர்னலா?' என்று அந்த பரிவாரத் தலைவர் ஜெர்மன் உச்சரிப்போடு இளவரசர் ஆண்ட்ரூவுக்குப் பழக்கமான குரலில் கூச்சலிட்டார். 'உமக்கு முன்பாகவே வீடுகளுக்கெல்லாம் தீவைத்து எரிப்பது நடந்து கொண்டிருக்கிறது; நீர் பார்த்துக் கொண்டிருக்கிறீர். இதற்கு நீர் பதில் சொல்லியாக வேண்டும்' என்று பெர்க் என்ற அந்தப் பரிவாரத் தலைவர் கூச்சலிட்டார். இப்போது அவர், முதலாவது ராணுவத்தின் இடது பக்கவாட்டின் காலாட்படையின் கமாண்டருடைய பிரதான பரிவார அதிகாரிக்கு உதவியாளராக இருந்தார். பெர்க் சொல்லியபடி அந்தப் பதவி மிகுந்த திருப்திகரமாகவும் சௌகரியமாகவும் அவருக்கு இருக்கிறது.

இளவரசர் ஆண்ட்ரூ அவரைப் பார்த்தார். ஆனால், அவருக்குப் பதில் எதுவும் சொல்லாமல், அல்பாட்டிச்சிடம் பேசிக்கொண்டே யிருந்தார்.

'10-ந் தேதி வரையில் அவர்களுடைய பதிலுக்காகக் காத்துக்கொண்டிருப்பேன் என்று அவர்களிடம் சொல்லும், 10-ந் தேதியன்று எனக்கு அவர்கள் அந்த இடத்தைவிட்டுப் போய்விட்டார்கள் என்ற தகவல் வரவில்லையென்றால், நான்

உடனே எல்லாவற்றையும் உதறிவிட்டு, நானே பால்டு ஹில்ஸ் மாளிகைக்கு வருவேன் என்று நீர் சொல்லும்.'

'இளவரசே' என்று அந்த பெர்க், இளவரசர் ஆண்ட்ரூவை அடையாளம் தெரிந்துகொண்டு பேசினார். 'நான் உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிய வேண்டியவனாய் இருக்கிறேன். ஏனெனில், நான் எப்போதுமே உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிகிறவன். ஏனெனில் நான் அப்படியே கீழ்ப்படிகிறவன்... நீர் தயவு செய்து என்னை மன்னிக்கவேண்டும்' என்று மன்னிப்பு கேட்கும் பாவனையில் பேசினார்.

அந்த நெருப்பு ஜ்வாலையில் ஏதோ ஒரு ஒ[illegible] அந்த நெருப்பு ஒரு வினாடி குறைந்திருந்தது. [illegible]று வெடித்தது. கருப்புப் புகைகள் அந்த வீட்டின் கூரை[illegible] சுருளை சுருளையாகக் கிளம்பின. மற்றொரு பயங்கரமான[illegible]க்கு அடியிலிருந்து மேலே பிரம்மாண்டமானது தகர்ந்து வி[illegible] வெடிப்பு கேட்டது. ஏதோ ஒரு 'ஊ... ரூ... ரூ...' [illegible]ழ விழுந்தது.

களஞ்சியத்தின் கூ[illegible] என்று 'அந்தக் கூட்டம் அந்த தானியக் கூச்சலிட்டது. [illegible]ரை கீழே இடிந்து விழுந்ததை யொட்டி கொண்டிருந்[illegible] அ[illegible]லிருந்து தானியங்கள் எல்லாம் எரிந்து சுற்றிலும் [illegible]தன[illegible]. தானியம் எரிந்ததால், கேக் போன்ற ஒரு வாசனை அங்கி[illegible] பர[illegible]ருந்[illegible]வியது. மறுபடியும் தீ ஜ்வாலை மேலே கிளம்பியது. வெடி[illegible]த, பரபரப்படைந்த, மகிழ்ச்சியடைந்த களைப்படைந்த செ[illegible]கைகை பார்க்கிறவர்களின் முகங்கள் எல்லாம், அந்த வெளிச்சத்தில் பிரகாசமாகத் தெரிந்தன.

ஒரு முரட்டுக்கம்பளிச்சட்டை அணிந்து கொண்டிருந்த மனிதன், தனது கைகளை உயர்த்திக் கூச்சலிட்டான்.

'அதுதான் ரொம்ப சிலாக்கியம், வாலிபர்களே. இப்போது அது கொழுந்துவிட்டு எரிகிறது. ரொம்ப நன்றாய் இருக்கிறது.'

'அவன்தான் சொந்தக்காரன்' என்ற பல குரல்கள் கேட்டன.

'நல்லது, அப்படியானால்' என்று இளவரசர் ஆண்ட்ரூ, அல்பாட்டிச்சிடம் மேலும் தொடர்ந்து பேசினார். 'நான் உம்மிடம் சொல்லியபடி, நீர் அவர்களிடம் சொல்லவேண்டும்' என்று சொன்னார். இப்போது பெர்க் அவர் பக்கத்தில் ரொம்ப பவ்யமாக நின்றுகொண்டிருந்தார். இளவரசர் ஆண்ட்ரூ அவரிடம் ஒருவார்த்தைகூட பதில் பேசாமலே, தமது குதிரையைத் தட்டிவிட்டு தெரு வழியாகச் சவாரி போனார்.



ஸ்மாலென்ஸ்க் நகரிலிருந்து துருப்புகள் தொடர்ச்சியாகப் பின்வாங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் பின்னால், எதிரியும் வந்து கொண்டிருந் தான். பால்டு ஹில்ஸ் மாளிகைக்குப் போகும் சாலை வந்து சந்திக்கும் பிரதான ரஸ்தா வழியாக, இளவரசர் ஆண்ட்ரு தள [illegible]தியாய் உள்ள பட்டாளம் ஆகஸ்டு 10-ந் தேதியன்று போய்க் [illegible] கொண்டிருந்தது. உஷ்ணமும், வெப்பமும் சென்ற மூன்று வாரங்களாகத் [illegible] தொடர்ச்சியாக இருந்து வந்தன. ஒவ்வொரு நாளும் மெல்லிய மேகங் [illegible]ள் ஆகாயத்தில் 'மிதந்து கொண்டிருந்தபடியால், சில சமயங்களில் அ[illegible]வ சூரியனை மூடிக் கொண்டுமிருந்தன. மாலை வேளைகளில் வான[illegible]ம் தெளிவாய்த் தெரியும். அச்சமயத்தில் செம்பழுப்புப் பனியிலே சூரி[illegible]யுன் அஸ்தமனமாகும். இரவில் விழும் பனியினால்தான், பூமியில் ெ[illegible]காஞ்சம் குளிர்ச்சி ஏற்பட்டது. விளையாத தானியங்கள் சூரிய வெ[illegible]ப்பத்தினால் காய்ந்து, செடிகளில் இருந்து கீழே உதிர்ந்தன. சதுப்[illegible] நிலங்கள் காய்ந்து போயின. ஆடுமாடுகள், சூரியனால் காய்ந்து [illegible] போன அந்த மைதானத்தில் தீனி எதுவும் இல்லாததால், கதறிக் கொ[illegible]ண்டிருந்தன. இரவு நேரங்களில், அதிலும் காடுகளில், அந்தப் பனி [illegible] விழுந்து கொண்டிருக்கிற வரையில்தான், உற்சாகமாய் இருந்தது. ஆ[illegible]னால் துருப்புகள் பிரயாணம் செய்து கொண்டிருந்த அந்த ரஸ்தாவில், அந்தக் குளிர்ச்சியை இரவில் கூடக் காணமுடியவில்லை. அவர்கள் காடுகளில் நடந்து போகும்போது கூட, எங்கேயும் காண முடியவில்லை. அந்தப் பனிகள் கீழே உள்ள மணல் தூசியில் தெரிவதில்லை. அந்த தூசி ஆறு அங்குல ஆழத்திற்கு மேலாக இருந்து வந்தது. பொழுது புலர்ந்ததும், துருப்புகள் பிரயாணம் ஆரம்பித்து விடுவார்கள். பீரங்கி வண்டிகளும், சாமான் வண்டிகளும், அந்த ஆழ்ந்த தூசி வழியாக, சப்தம் இன்றி போய்க்கொண்டிருந்தன. அந்த தூசி மட்டும் வண்டிகளின் அச்சு வரையில் உயர்ந்து பறந்து கொண்டிருக்கும். காலாட் படையினர் கணுக்கால் வரையில் தூசியில் அழுந்தி சென்று கொண்டிருந்தார்கள். அந்த மெதுவான தூசி தொண்டையை அடைத்தது. அந்த உஷ்ணமான தூசி, இரவு நேரங்களில் கூடக் குளிர்ச்சியடைவதில்லை. கால்களின் கீழும், சக்கரங்களின் கீழும் மிதிப்படுவதால், தூசிகளின் ஒரு பகுதி கீழே அமுங்கி விடுகிறது. மற்றவை மேலே கிளம்பி, துருப்புகளுக்கு மேலாக மேகத்தைப்

போல பறந்துத் தொங்கியும், துருப்புகளின் கண்களிலும், காதுகளிலும், தலை முடிகளிலும், எல்லாவற்றையும் விட மோசமாக மனிதர்களுடையவும், மிருகங்களுடையவும் சுவாசப் பைகளிலும் போய்த் தங்கிவிடுகின்றன. சூரியன் உதயமாகி மேலே போகப் போக, அந்தத் தூசிகளும் மேலே உயர உயரப் பறந்து கொண்டிருந்தன. அந்தத் தூசிகளின் வழியாகச் சூரியனைக் கூடத் திறந்த கண்களால் பார்க்க முடியும். அப்படிப் பார்க்கும்போது, அந்த சூரியன் மேகமில்லாத அந்த வானத்தில் ஒரு பிரம்மாண்டமான சிவந்த பந்தைப் போலத் தொங்கிக்கொண்டிருப்பதைக் காணலாம். அங்கு காற்றே இல்லை. அந்த அசைவு இல்லாத சூழ்நிலையில், மனிதர்கள் மூச்சுத் திணறினார்கள். கைக்குட்டைகளால் தங்கள் மூக்குகளையும், வாய்களையும் கட்டிக்கொண்டு, துருப்புகள் பிரயாணம் செய்தார்கள். ஒரு கிராமத்தின் வழியாக அவர்கள் கடக்க நேரிட்டால், உடனே அங்கே கிணறுகளின் பக்கம் ஓடி, தண்ணீருக்காகச் சண்டைபோட்டு, அந்தக் கிணற்றில் சக்தி தென்படுகிற வரையில் தண்ணீரை இறைத்துக் குடித்து விடுவார்கள்.

ஒரு பட்டாளத்திற்கு இளவரசர் ஆண்ட்ரூ கமாண்டராக இருந்தார். அந்தப் பட்டாளத்தை நிர்வாகம் செய்ய வேண்டியதும், அந்தப் பட்டாளத்தில் உள்ளவர்களுக்கு வேண்டிய சௌகரியங்களைக் கவனிக்கவேண்டியதும், அந்தப் பட்டாளம் சம்பந்தமாக உத்திரவுகளைக் கொடுப்பதும் வாங்குவதும் போன்ற வேலைகள் இளவரசர் ஆண்ட்ரூவின் கவனத்தைக் கவர்ந்து வந்தன. ஸ்மாலென்ஸ்க் நகர் எரிந்து போனதும், ஸ்மாலென்ஸ்க் நகரைக் காலி செய்துவிட்டு வந்ததும், அவருடைய வாழ்க்கையில் ஒரு முக்கியமான கட்டமாய் அமைந்தது. எதிரிக்கு விரோதமாக அவருக்கு ஏற்பட்ட ஒரு புது தினுசான கோபம், தம்முடைய சொந்த துக்கத்தைக்கூட மறக்க வைத்துவிட்டது. அவர் தம்முடைய பட்டாளத்தின் காரியங்களைக் கவனிப்பதற்கே தம்முடைய முழு கவனத்தையும் செலுத்தி வந்தார். தம்முடைய பட்டாளத்தில் 'உள்ள சிப்பாய்களிடமும் அதிகாரிகளிடமும் தயவுடனும் அன்புடனும் நடந்து வந்தார். அந்தப் பட்டாளத்தில் அவரை, நமது இளவரசர் என்றே அவர்கள் அழைத்து வந்தார்கள். அவரைப் பற்றி அவர்கள் பெருமை கொண்டார்கள். அவர் மீது மிகுந்த அன்பு வைத்திருந்தார்கள். தம்முடைய பட்டாளத்தைச் சேர்ந்தவர்களிடம் மட்டும்தான், டிமோக்கனைப் போன்றவர்களிடம்தான் அவர் அன்பாகவும் மென்மையாகவும் நடந்து கொண்டார். ஏனெனில், அவர்கள் அவருக்கு முற்றிலும் புதிதானவர்கள், வேறு உலகத்தைச் சேர்ந்தவர்கள். ஆகவே, அவருடைய கடந்த காலத்தைப் பற்றி

அவர்களால் அறிந்து கொள்ளவோ, புரிந்து கொள்ளவோ முடியாது. ஆனால், அவருக்குப் பழக்கமான யாரையாவது அவர் சந்திக்க நேரிட்டால் அல்லது சேனாதிபதியின் பரிவாரத்தில் உள்ள யாராவது ஒருவரை அவர் சந்திக்க நேரிட்டால், உடனே அவர் பொங்கி எழுந்து, வஞ்சமாகவும் கேலியாகவும், துச்சமாகவும் தோன்றுவார். கடந்த காலத்தைப் பற்றி அவருக்கு ஞாபகமூட்டுகிற எதுவும் வெறுப்பாகத் தோன்றியது. ஆகவே, கடந்த காலத்தைப் பற்றி நினைவு படுத்துகிறவர்கள் யாரிடமாவது வேலைகள் இருந்தால், தமது கடமையைச் செய்யவும், நியாயத் தவறாக நடக்காமல் இருக்கவும் முயற்சி செய்வதோடு, தாம் நின்று கொள்ளுவார்.

உண்மையில் ஒவ்வொன்றும் இருளாகவும், சோர்வாகவும் இளவரசருக்குத் தோன்றியது. முக்கியமாக, ஸ்மாலென்ஸ்க் நகரை ஆகஸ்டு 6-ந் தேதியன்று காலி செய்துவிட்டு வந்த பின்பும் (அந்த நகரைத் தடுக்க முடியுமென்றும் தடுக்க வேண்டுமென்றும் அவர் நினைத்திருந்தார்), அவருடைய அசௌக்கியமான தந்தை மாஸ்கோவுக்குப்போக வேண்டி இருந்ததற்குப் பின்பும், அவருடைய தந்தை கட்டுவித்த, அவருடைய அன்புக்குரிய பால்டு ஹில்ஸ் மாளிகையைக் கொள்ளையடிப்பதற்கு விட்டுவிட்டு பின்பும், அவருக்கு எல்லாமே இருளாகவே தோன்றின. ஆனால், இவையெல்லாம் இருந்த போதிலும் கூட, அந்தப் பொதுவான விஷயங்களைத் தவிர, தம்முடைய பட்டாளத்தைப் பற்றியும் அவர் சிந்திக்க வேண்டியதாய் இருந்தது. அவருடைய தந்தையும் குமாரரும், சகோதரியும் மாஸ்கோவுக்குப் புறப்பட்டுப்போய் விட்டார்கள் என்ற செய்தி, இரண்டு தினங்களுக்கு முன்புதான் அவருக்குக் கிடைத்தது. பால்டு ஹில்ஸ் மாளிகையில் அவருக்குச் செய்ய வேண்டியது எதுவும் இல்லையென்றாலும், தம்முடைய மனத் துயரத்தை இன்னும் அதிகரித்துக் கொள்ள வேண்டும் என்ற அவருக்குள்ள விசேஷ ஆசையினால் பால்டு ஹில்ஸ் மாளிகைக்குப் போக வேண்டுமென்று அவர் தீர்மானித்தார்.

தம்முடைய குதிரைக்குச் சேணமிடும்படி உத்தரவிட்டார். பிரயாணம் செய்துகொண்டிருந்த தம்முடைய பட்டாளத்தை விட்டு விலகி, அவர் தம்முடைய தந்தையின் 'எஸ்டேட்டுக்குச் சவாரி போனார். அந்த இடத்தில்தான் அவர் பிறந்து, தமது குழந்தைப் பருவத்தில் வசித்து வந்தார். அங்கிருந்த குளத்தில்தான், டஜன் கணக்கான பெண்கள் தங்கள் துணிகளை அலசிக்கொண்டும், மரச் சம்மட்டிகளால் அடித்துக்கொண்டும் பேசிக்கொண்டும் துணி துவைப்பது வழக்கம். அந்தக் குளத்தை இளவரசர் ஆண்ட்ரூ

வந்தபோது, அங்கே ஒரு பெண்ணைக்கூட இப்போது காணவில்லை. அங்கிருந்த மரப் படித்துறையும், பெயர்க்கப் பட்டிருந்தது. அந்தக் குளத்தின் மத்தியில் அது சாய்ந்து மிதந்து கொண்டிருந்தது. தோட்டக்காரன் விடுதிக்கு அவர் சவாரி போனார். கல் தூண் வாசலுக்கு அவர் போனதும், அங்கே ஒருவரையும் காணவில்லை. கதவு திறந்து கிடந்தது. தோட்டத்திலுள்ள பாதைகளில் எல்லாம் ஏற்கெனவே புல் முளைக்க ஆரம்பித்துவிட்டது. இங்கிலீஷ் தோட்டத்தில் குதிரைகளும், குதிரைக் குட்டிகளும் அங்கங்கே மேய்ந்து கொண்டிருந்தன. இளவரசர் ஆண்ட்ரூ செடிக் கூடத்திற்குப் போனார். அங்கே இருந்த சில ஜன்னல் கண்ணாடிகள் உடைந்துபோய் இருந்தன. அந்த கூடத்திற்குள் தொட்டிகளில் வைக்கப்பட்டிருந்த செடிகளைக் குப்புறக் கவிழ்த்துப்போட்டிருந்தார்கள். மற்றச் செடிகள் தண்ணீர் இல்லாமல் வாடிப் போயிருந்தன. தோட்டக்காரன் டாராஸ் என்பவனைக் கூப்பிட்டு அழைத்தார். ஆனால், ஒரு பதிலுமில்லை. அந்தச் செடிக்கூடத்தைச் சுற்றி அலங்காரத் தோட்டத்திற்குள் போனார். அந்த அலங்காரத் தோட்ட வேலிகள் முறிக்கப்பட்டு இருந்தன. ப்ளம் மரங்களின் கொப்புகளை, ப்ளம் பழங்களோடு முறித்துக் கீழே போட்டிருந்தார்கள். இளவரசர் ஆண்ட்ரூ குழந்தைப் பருவத்தில் வெளி வாசலில் அடிக்கடி பார்த்திருந்த ஒரு வயோதிக விவசாயி ஒரு பச்சைத் தோட்ட-ஆசனத்தில் அமர்ந்து மரப்பட்டையால் ஒரு செருப்பைத் தைத்துக் கொண்டிருந்தான்.

அவன் காது செவிடு. ஆகவே இளவரசர் ஆண்ட்ரூ அவனிடம் சவாரி வருவதை அவனால் கேட்க முடியவில்லை. வயோதிக இளவரசர் எந்த ஆசனத்தில் இருப்பதற்கு விரும்புவாரோ, அதே ஆசனத்தில் அவன் உட்கார்ந்திருந்தான். அவனுக்குப் பக்கத்தில், நீளம் நீளமாக மரப்பட்டைகள் ஒரு முறிந்த, உலர்ந்த, மங்கோலியா மரத்தின் கிளையில் தொங்கிக் கொண்டிருந்தன.

இளவரசர் ஆண்ட்ரூ வீட்டுக்குச் சவாரி போனார். பழைய தோட்டத்திலிருந்து பல எலுமிச்சை மரங்கள் வெட்டப் பட்டிருந்தன. ஒரு பெண் குதிரையும் அதன் குட்டியும் வீட்டிற்கு முன்பாக இருந்த ரோஜா புதர்களில் சுற்றிக்கொண்டிருந்தன. ஜன்னல் கதவுகள் எல்லாம், ஒன்றைத் தவிர, மூடப்பட்டிருந்தன. ஒரு கதவு திறந்திருந்தது. ஒரு சிறிய அடிமைப் பையன் இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்ததும் வீட்டிற்குள் ஓடினான். தமது குடும்பத்தை அனுப்பிவிட்ட பின்பு, பால்டு ஹில்ஸ் மாளிகையில் அல்பாட்டிச் ஒருவர் மட்டும் தனியாக இருந்துவந்தார். அவர்

வீட்டிற்குள் அமர்ந்து மகாத்மாக்களின் சரித்திரம் என்ற புத்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தார். இளவரசர் ஆண்ட்ரூ அங்கே வந்திருக்கிறார் என்பதைக் கேள்விப்பட்டதும், அவர் மூக்கில் அணிந்திருந்த மூக்குக் கண்ணாடிகளோடு, தமது கோட்டிலுள்ள பொத்தான்களை மாட்டிக் கொண்டு, அவசரமாக நடந்து வெளியே வந்தார். இளவரசர் ஆண்ட்ரூவிடம் நெருங்கி ஒரு வார்த்தைகூடப் பேசாமல், இளவரசரின் முழங்காலை முத்தமிட்டு அழ ஆரம்பித்தார்.

தம்முடைய சொந்த பலவீனத்தைக் கண்டு அவர் எரிச்சல் கொண்டு முகத்தைத் திருப்பி, அங்குள்ள நிலைமையைப் பற்றி அவருக்குக் கூற ஆரம்பித்தார். அம்மாளிகையிலிருந்து விலை உயர்ந்த, அபூர்வமானப் பொருள்களையெல்லாம் பாகுசாரவா விற்கு அனுப்பியாய்விட்டது. 70 குவார்ட்டர்கள் தானியத்தையும் வண்டியில் அனுப்பியாய் விட்டது. வைக்கோலும், வசந்தகால தானியமும் துருப்புகளால் தங்களுக்கு வேண்டுமென்று கைப்பற்றப்பட்டன. அவைகளைப் பச்சையாக இருக்கும்போதே அவர்கள் அறுத்துக்கொண்டார்கள். அந்த வசந்த காலத்தில் விளைச்சல் மிகுந்த சிலாக்கியமானதாய் இருந்தது என்று அவர் கூறினார். விவசாயிகள் எல்லாம் கெட்டுப் போனார்கள். அவர்களில் சிலர் கூட பாகுசாரவாவிற்குப் போய் இருக்கிறார்கள். வெகு சிலரே இங்கு தங்கி இருக்கிறார்கள்.

அதைப் பூராவாகக் கேட்பதற்கு முன்பாக, இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார்:

'என்னுடைய தந்தையும் சகோதரியும் எப்போது புறப்பட்டுப் போனார்கள்?' என்று, அவர்கள் மாஸ்கோவுக்கு எப்போது போனார்கள் என்பதை தெரிந்துக்கொள்ள வேண்டுமென்பது போலக் கேட்டார்.

அவர்கள் பாகுசாரவா என்ற இடத்திற்கு எப்போது போனார்கள் என்று கேட்பதாக அல்பாட்டிச் உணர்ந்து 7-ந் தேதியன்று அவர்கள் புறப்பட்டுப் போனார்கள் என்று சொல்லிவிட்டு, மீண்டும் எஸ்டேட்டின் நிர்வாகத்தைப் பற்றிய விவரங்களை விரிவாகச் சொல்ல ஆரம்பித்தார். மேற்கொண்டு என்ன செய்ய வேண்டுமென்பதைப் பற்றிய உத்தரவுகளையும் கேட்டார்.

'துருப்புகள் அங்கு ஓட்டு தானியங்களை எடுத்துக்கொள்ளும்படி நான் விட்டுவிடலாமா? அவர்களிடமிருந்து ஒரு ரசீது வாங்கிக்கொள்ளலாமா? இன்னும் நம்மிடம் 600 குவார்ட்டர்கள் தானியம் இருக்கிறது' என்று அவர் சொன்னார்.

தாம் அவருக்கு என்ன சொல்லுவது என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். அந்த வயோதிகரின் வழுக்கை மண்டை சூரிய ஒளியில் பிரகாசித்ததை அவர் கீழே நோக்கியபோது கண்டார். அந்த வயோதிகரின் முகத்தில் தோன்றிய தோற்றத்திலிருந்து அந்தக் கேள்விகள் எல்லாம் இச்சமயம் கேட்கப்படவேண்டிய கேள்விகள் அல்லவென்பதை அவர் உணர்ந்திருப்பது போலவும் தெரிந்து கொண்டார். ஆனால் அவருடைய துக்கத்தை மறைப்பதற்காகவே, இம்மாதிரி கேள்விகளை அவர் கேட்கிறார் என்பதையும் அறிந்து கொண்டார்.

'ஆம், அவற்றை அவர்களே எடுத்துக் கொள்ளட்டும்' என்று இளவரசர் ஆண்ட்ரூ பதிலளித்தார்.

'தோட்டத்தில் ஏதாவது தாறுமாறாக இருப்பதை நீர் கண்டால், அவற்றையெல்லாம் என்னால் தடுக்க முடியவில்லை என்றுதான் நான் சொல்ல முடியும். இந்த இடத்திற்கு மூன்று பட்டாளங்கள், அநேகமாகக் குதிரைப் பட்டாளங்கள் வந்து இரவு பூராவாக இருந்தன. அந்த கமாண்டிங் ஆபீஸருடைய பெயரையும், உத்தியோக வகுப்பையும் கேட்டுக் குறித்துக்கொண்டேன். அவரைப் பற்றி ஒரு பிராது கொடுக்கலாம் 'என்று நினைக்கிறேன்' என்ற அல்பாட்டிச் சொன்னார்.

'நல்லது, நீர் வேறு என்ன செய்யப் போகிறீர்? இந்த இடத்தை எதிரி ஆக்கிரமிக்கும்போது நீர் இங்கே இருக்கப்போகிறீரா?' என்று இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார்.

இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்து அல்பாட்டிச் தமது முகத்தைத் திருப்பினார். அவரை நோக்கிவிட்டு, திடீரென்று ஒரு பவித்திரமான ஜாடையோடு தமது கையை உயர்த்தினார்.

'அவர்தான் எனக்கு அடைக்கலம். அவருடைய எண்ணம் பூர்த்தியாகும்' என்று அவர் கூச்சலிட்டார்.

அந்தப் புல்வெளி வழியாகத் தலைகளில் தொப்பிகள் இல்லாமல் ஒரு கூட்டம் விவசாயிகள் இளவரசரை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள்.

'நல்லது, போய் வருகிறேன்' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொல்லி, அல்பாட்டிச்சிடம் குனிந்தார். 'நீரும் போய்விட வேண்டும். உம்மால் எதையெல்லாம் எடுத்துக்கொள்ள முடியுமோ, அதையெல்லாம் எடுத்துக்கொள்ளும். அந்த அடிமைகளிடம் ரயாஜான் எஸ்டேட்டுக்கோ, அல்லது மாஸ்கோவுக்குப் பக்கத்தில் இருக்கிற எஸ்டேட்டுக்கோ போகும்படி சொல்லும்.'

அல்பாட்டிச் இளவரசர் ஆண்ட்ரூவின் காலைப் பற்றிக்கொண்டு விம்மி விம்மி அழுதார். மெதுவாக அவருடைய பிடியிலிருந்து தமது காலை விடுவித்துக்கொண்டு, தமது குதிரையைத் தட்டிவிட்டார். அந்த எஸ்டேட்டுக்குள் இருந்த சாலை வழியாகக் குதிரை பாய்ச்சலில் கிளம்பியது. அந்த வயோதிகன் இன்னமும் சிங்காரத்தோட்டத்தில் உட்கார்ந்துகொண்டிருந்தான். ஒரு அன்பிற்குரியவர் இறந்து போன பின்பு, அவர் முகத்தில் ஒரு ஈ இருப்பதைப்போல, அந்த இடத்தில் அந்த வயோதிகன் இருப்பது தோன்றியது. மரப்படையால், தான் தைப்பதற்கு உபயோகித்து வந்த செருப்புக் கட்டையைத் தட்டிக்கொண்டிருந்தான். அந்த செடிக்கூடத்திலிருந்து இரண்டு சிறிய பெண்கள் அங்கே தாங்கள் பறித்து வந்த ப்ளம் பழங்களைத் தங்கள் பாவாடைகளில் சுருட்டிக்கொண்டு ஓடி வந்தபோது, இளவரசர் ஆண்ட்ரூவிடம் நெருங்கி விட்டார்கள். தங்களுடைய இளைய எஜமானரைப் பார்த்ததும், அந்தப் பெண்களில் மூத்தவள் பீதியுற்ற நோக்கோடு தனது சிறிய தோழியைக் கையில் பற்றிக்கொண்டு, ஒரு பூவரச மரத்திற்குப் பின்னால் போய் ஒளிந்தாள். அவர்கள் கீழே போட்டுவிட்ட சில பச்சை ப்ளம் பழங்களைக்கூட அவர்கள் எடுக்கவில்லை.

இளவரசர் ஆண்ட்ரூ தாம் கவனித்ததாக அந்தக் குழந்தைகளுக்குத் தெரிய வேண்டாம் என்ற நினைப்போடு, அப்பக்கமிருந்து முகத்தை வேறு பக்கமாகத் திருப்பி, அவசரமாகப் போய்க்கொண்டிருந்தார். அந்த சிறிய அழகிய குழந்தையின் முகம் பீதியுற்றதைக் கண்டு அவர் வருந்தினார். அவளைப் பார்ப்பதற்கு அவர் தயக்கம் கொண்டாரென்றாலும், அந்தக் குழந்தையைப் பார்க்க வேண்டுமென்ற ஒரு தடுக்க முடியாத ஆசை அவருக்குத் தோன்றியது. இந்தக் குழந்தைகளைப் பார்த்தபோது, அவருக்குத் இதத்தையும் நிவாரணத்தையும் கொடுக்கக்கூடிய ஒரு புதிய உணர்ச்சி ஏற்பட்டது. தம்முடைய சொந்த வாழ்க்கையைத் தவிர, வேறு மனித சிரத்தைகளும் இருக்கின்றன என்பதையும், தம்முடைய மனதில் நிறைந்திருக்கும் எண்ணங்களைப் போலவே அவையும் நியாயமானவை என்பதையும் அவர் அறிந்துகொண்டார். இந்தக் குழந்தைகள் மிகுந்த ஆவலோடு ஒரே ஒரு விஷயத்தை விரும்பின என்பது தெளிவானது. அதாவது, அந்த பச்சை ப்ளம் பழங்களைத் தாங்கள் அகப்பட்டுக்கொள்ளாமல் கொண்டுபோய் உண்ண வேண்டும் என்பதுதான் அவர்களுடைய ஆசை. ஆகவே, அவர்களுடைய ஆசை வெற்றி பெறுவதாகுக என்று இளவரசர் ஆண்ட்ரூ தமக்குள் நினைத்துக் கொண்டார். அவர்

மீண்டும் ஒரு தடவை அந்தக் குழந்தைகள் தங்களுக்கு வந்த ஆபத்து போய்விட்டது என்று நினைத்து, தாங்கள் ஒளிந்துகொண்டிருந்த மரத்திற்குப் பின்னாலிருந்து ஓடிவந்தார்கள். தங்களுடைய பாவாடைகளைத் தூக்கிப்பிடித்துக்கொண்டு, கிரீச்சுக் குரலில் கதையோ தங்களுடைய சிறிய குரல்களில் கத்திக்கொண்டு, தங்களுடைய சிறிய வெறும் கால்களால் வேகமாக அந்தப் புல்வெளி வழியாக மகிழ்ச்சியோடு ஓடினார்கள்.

துருப்புகள் பிரயாணம் செய்துகொண்டிருந்த பிரதான ரஸ்தா தூசி மயமாய் இருந்தது. அதை விட்டு, இந்த தனிப் பாதை வழியாக இளவரசர் ஆண்ட்ரூ சவாரி போனது, அவருக்கு சிறிது களைப்பு நீங்கி உற்சாகமாய் இருந்தது. ஆனால் பால்டு ஹில்ஸுக்கு சிறிது தூரம் வந்ததும், அவர் பிரதான ரஸ்தாவை அடைந்தார். ஒரு சிறிய குளத்துக்குப் பக்கத்திலிருந்து அணைக்கு அருகே, அவருடைய பட்டாளம் முகாம் போட்டிருந்தது. அதைக் கடந்து இளவரசர் சென்றார். அப்போது பகல் ஒரு மணி. அந்த தூசி வழியாக சூரியன் ஒரு சிவந்த பந்துபோலத் தோன்றி, அவருடைய முதுகை, பொறுக்கமுடியாத விதத்தில், உஷ்ணத்தால் அவருடைய கருப்பு கோட்டு வழியாகத் தகித்துக்கொண்டிருந்தது. அந்த இளைப்பாறிக்கொண்டிருந்த துருப்புகளிடம் இருந்து வந்த பேச்சு சப்தங்களுக்கு மேலாக, தூசியானது எப்பொழுதும் அசைவற்றுத் தொங்கிக்கொண்டிருந்தது. அங்கே காற்றே இல்லை. அந்த அணையை இளவரசர் ஆண்ட்ரூ கடந்தபோது, அந்தக் குளத்தின் இனிமையான வாசனையையும் களிமண் வாசனையையும் நுகர்ந்தார். அந்தத் தண்ணீர் எவ்வளவு அசுத்தமாய் இருந்தாலும், அதற்குள் இறங்க வேண்டும் என்று அவர் விரும்பினார். கூச்சல்களும், சிரிப்புகளும் வந்துகொண்டிருந்த அந்தத் திசையை நோக்கி அவர் அந்தக் குளத்தைப் பார்த்தார். அந்தச் சிறிய, சேறு நிறைந்த பச்சைக் குளமானது ஒரு அடி உயர்ந்து, அந்த அணைக்கு மேலாக தண்ணீர் போக ஆரம்பித்தது. ஏனெனில், அந்தக் குளம் நிறைய இப்போது வெள்ளை நிறம் கொண்ட சிப்பாய்கள் நிர்வாணமாய் சிவந்த கைகளோடும் கழுத்துகளோடும் முகங்களோடும் நின்று தண்ணீரை அடித்துக் கொண்டிருந்தார்கள். நிர்வாணமாய் சிரித்துக்கொண்டும் கூச்சலிட்டுக்கொண்டும், அந்த அழுக்கடைந்த குளத்தில் உழன்றுகொண்டும் இருந்த அந்த வெள்ளை மனித மாமிசங்கள், ஒரு தண்ணீர் பாத்திரத்தில் அடைபட்ட மீன்களைப் போலக் காணப்பட்டார்கள். இம்மாதிரி உழன்றுகொண்டிருப்பவர்கள் களிப்போடு இருக்கிறார்கள் என்பதை நினைத்தபோது, அது பரிதாபமாய் இருந்தது.

ஒரு அழகான தலை முடியுடைய வாலிப சிப்பாய் (மூன்றாவது கம்பெனியைச் சேர்ந்தவன். அவனை இளவரசர் ஆண்ட்ரூவுக்குத் தெரியும்), இடது கெண்டைக் காலில் ஒரு பட்டியைக் கட்டிக்கொண்டு, தனக்கு சிலுவைக் குறி காட்டி, பின்னால் நகர்ந்து, வேகமாக முன்னால் ஓடி தண்ணீரில் குதித்தான். மற்றொருவன், ஒரு அதிகாரி. அவன் எப்பொழுதுமே தலை முடி அதிகமாய் கொண்டிருப்பான். அவன் இடுப்பளவு தண்ணீரில் சந்தோஷமாய் நின்று, தன்னுடைய கட்டுமஸ்தான உடலை அங்குமிங்கும் நெளித்துக் கொண்டிருந்தான். அவன் தன் தலையில் முழங்கை வரை கருப்பாய் விட்ட தன்னுடைய கைகளினால் தண்ணீரை ஊற்றும்போது மிகுந்த சந்தோஷமாய் உறுமிக்கொண்டிருந்தான். அங்கிருந்த மக்கள் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டும், கூச்சலிட்டுக் கொப்பளித்துக் கொண்டுமிருந்த சப்தங்கள் கேட்டுக்கொண்டிருந்தன.

குளக் கரையிலும், அணைக்கரையிலும், குளத்திலும், எங்கு திரும்பினாலும், ஆரோக்கியமாகவும், வெண்மையாகவும், புஷ்டியானதாகவுமான மனித மாமிசங்களே தோன்றின. டிமோக்கின் தம்முடைய சிறிய சிவந்த நாசியோடு அந்த அணை மீது நின்று, ஒரு துண்டினால் தம்மீதுள்ள ஈரத்தை துடைத்துக்கொண்டிருந்தார். இளவரசரைப் பார்த்ததும், குழப்பம் அடைந்தவராகத் தோன்றினார். பின்னால், மனதைத் தைரியப் படுத்திக்கொண்டு அவரிடம் பேசினார்.

'ரொம்ப இனிமையாய் இருக்கிறது, மேன்மை தங்கியவரே. நீர் குளிக்கவில்லையா?' என்று அவர் கேட்டார்.

'அது ரொம்ப அழுக்குத் தண்ணீராய் இருக்கிறதே' என்று சொல்லி முகத்தைச்சுளித்தார்.

'நீர் குளிப்பதற்காக ஒரு நிமிஷத்தில் நாங்கள் அதை காலி செய்து விடுகிறோம்' என்று டிமோக்கின் சொன்னார். அவர் இன்னும் உடையணிந்து கொள்ளவில்லையென்றாலும், அந்த இளவரசருக் காக ஓடி குளத்துக்குள் இருந்த மக்களை வெளியே போகும்படி சொன்னார்.

'இளவரசர் குளிக்க விரும்புகிறார்.'

'எந்த இளவரசர்? நம்முடைய இளவரசரா?' என்று பல குரல்கள் கேட்டன. அவர்கள் இதைக் கேட்டதும், குளத்தை விட்டு வெளியேறுவதற்கு அவ்வளவு அவசரப்பட்டபடியால், இளவரசரால் அவர்களை நிறுத்த முடியவில்லை. இளவரசர்

ஆண்ட்ரூ, தானியக் களஞ்சியத்துக்குத் தண்ணீரைக் கொண்டு வரச்சொல்லி, ஸ்நானம் செய்வது என்று தீர்மானித்தார்.

'மாமிசங்கள், உடல்கள், பீரங்கிக்குத் தீனிகள்' என்று அவர் நினைத்தார். தம்முடைய ஆடையில்லாத உடம்பை அவர் பார்த்ததும், நடுக்கமடைந்தார். குளிரினால் அவர் நடுக்கமடையவில்லை; அருவருப்பினாலும், பயங்கரத்தினாலும் அவர் நடுக்கம் கொண்டார். அதன் அர்த்தத்தை அவர்புரிந்துகொள்ள முடியாவிட்டாலும், அந்த அழுக்கடைந்த குளத்தில், அத்தனை மக்கள் தண்ணீரில் உழன்றுகொண்டிருப்பதைப் பார்த்ததனாலேயே அவருக்கு அந்த உணர்ச்சிகள் தோன்றின.

ஆகஸ்டு 7-ந் தேதியன்று இளவரசர் பாக்ரேஷன் மிக்காய் லாவ்கா என்ற ஊரிலுள்ள தமது தலைமைக் காரியாலயத்திலிருந்து பின்வருமாறு எழுதினார். அந்த ஊர் ஸ்மாலென்ஸ்க் ரஸ்தாவில் இருக்கிறது.

'அருமையான கோமகன் அலெக்சிஸ் ஆண்ட்ரீவிச்,

(அவர் அராக்சீவ் என்பவருக்கு, எழுதினார். ஆனால் அவருடைய கடிதம் சக்கரவர்த்தியால் படிக்கப்படும் என்பதை அறிவார். ஆகவே, அவருடைய கடிதத்திலுள்ள ஒவ்வொரு வார்த்தையையும் தம்முடைய முழுத் திறமையையும் கொண்டு, நிதானித்துப் பார்த்து உபயோகித்தார்.)

'ஸ்மாலென்ஸ்க்கை எதிரியிடம் கைவிட்டு விட்டதை ஏற்கெனவே உங்களுக்கு மந்திரி (பார்க்ளே டி டாலியை மந்திரி என்றே இவர் அழைப்பார்) அறிவித்திருப்பார் என்று நான் எதிர்பார்க்கிறேன். அது மிகுந்த துக்கரமானது; மிகுந்த இரக்கப்படக்கூடியது. இந்த முக்கியமான இடத்தை மதிகெட்டு விட்டுவிட்டதைக் கண்டு ராணுவம் பூராவாக அதிருப்தியில் இருக்கிறது. என்னைப் பொறுத்தவரையில், நான் அவரை நேராக, மிகுந்த அவசரமாக, கடைசியாகக் கேட்டுக்கொண்டு எழுதினேன். ஆனால் எதுவும் அவரை சம்மதிக்கும்படிச் செய்ய முடியவில்லை. அந்த நெப்போலியன், அதற்கு முன்னால் எப்போதும் இருந்ததைவிட, அச்சமயம் ஒரு பெரிய சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டிருந்தார் என்பதை, நான் என் மீது பிரமாணமாக, உமக்குச் சொல்லுகிறேன். அந்த நெப்போலியன் பாதி ராணுவத்தை இழந்து இருக்க முடியுமே தவிர, அவரால் ஸ்மாலென்ஸ்க் நகரைக் கைப்பற்றி இருக்க முடியாது. நம்முடைய துருப்புகள் யுத்தம் செய்தார்கள்; இதற்குமுன் எப்போதும் இல்லாத முறையில், இன்னமும் யுத்தம் செய்து கொண்டிருக்கிறார்கள். 15,000 வீரர்களோடு

நான் அந்த எதிரிகளை 35 மணி நேரம் கிட்டே நெருங்கவிடாமல் செய்து விரட்டியடித்துக்கொண்டிருந்தேன். ஆனால் அவரோ 14 மணி நேரம்கூட எதிரியை எதிர்த்து நிற்க விரும்பவில்லை. அது ரொம்ப அவமானமானது; நமது ராணுவத்திற்கு இழுக்கானது. அவரைப் பொறுத்தவரையில், எனக்குத் தோன்றுவது என்னவென்றால், அவர் உயிரோடு வாழக்கூடாது. நமக்கு ஏற்பட்ட நஷ்டம் ஏராளம் என்று அவர் அறிக்கை அனுப்புவாரானால், அது உண்மையில்லை. நமக்கு ஏற்பட்ட நஷ்டமெல்லாம், ஒரு வேளை 4000 இருக்கும்; அதற்குமேல் இல்லை. அந்த 4000 கூட இருக்காது. அது 10,000 இருந்தால்கூட, இது ஒரு யுத்தம்! ஆனால், எதிரி ஏராளமான பேர்களை இழந்தான்...

இன்னும் இரண்டு நாட்கள் தாக்குப் பிடிக்க வேண்டுமானால் எதிரிகளுக்கு என்ன நஷ்டம் ஏற்பட்டிருக்கும்? அவர்கள் தாங்களாகவே விலகிப் பின்வாங்க வேண்டியதாய் இருக்கும். ஏனெனில், அவர்களிடம் அவர்களுக்கோ, அவர்களுடைய குதிரைகளுக்கோ தண்ணீர் இல்லை, நம்முடைய மந்திரி, தாம் பின் வாங்கப் போவதில்லை என்று என்னிடம் உறுதி கொடுத்தார். ஆனால், திடீரென்று அன்று இரவு பின்வாங்க வேண்டுமென்று உத்தரவு அனுப்பினார். இம்மாதிரியாக நாம் யுத்தம் செய்ய முடியாது. இம்மாதிரி செய்தால், எதிரியைச் சீக்கிரமாக நாம் மாஸ்கோவுக்குக் கொண்டு வந்து சேர்த்துவிடுவோம்...

நீர் சமாதானத்தைப்பற்றி நினைத்துக்கொண்டிருப்பதாக ஒரு வதந்தி பரவி இருக்கிறது. இம்மாதிரியான, இவ்வளவு தியாகங்களையும் நாம் செய்த பின்பு, இம்மாதிரி பைத்தியக்காரத்தனமான பின் வாங்குதல்களைச் செய்த பின்பு, நீர் சமாதான முயற்சியில் இறங்குவதானால், உம்மை கடவுள் அதைச் செய்ய முடியாதபடி தடுப்பாராக. நீர் அப்படிச் செய்வீரானால், ருஷ்யா முழுவதும் உமக்கு விரோதமாகக் கிளம்பும். எங்களில் ஒவ்வொருவரும், சீருடை அணிவதற்கு அவமானம் அடைவோம். அம்மாதிரி நிலைமை ஏற்படுமானால்-நாங்கள் ருஷ்யாவால் முடிகிற வரையிலும், மக்களால் பொறுத்துக்கொள்ள முடிகிறவரையிலும், நாம் சண்டை போட்டுத்தான் ஆகவேண்டும்...

சேனாதிபதி என்றால் ஒருவராய்த்தான் இருக்க வேண்டும்; இருவராய் இருக்கக் கூடாது. உம்முடைய மந்திரி, ஒருவேளை மந்திரியென்ற நிலைமையில், கெட்டிக்காரராய் இருக்கலாம். ஆனால், ஒரு ஜெனரல் என்ற முறையில், அவர் கெட்டவர் என்பது மட்டுமல்ல, வெறுக்கத்தக்கவராகவும் இருக்கிறார். என்றாலும் இந்த நாடு முழுவதினுடைய தலை விதியை அவரிடம்

ஒப்படைத்திருக்கிறார்கள்... நான் உண்மையிலேயே, எரிச்சலினால் வெகுண்டிருக்கிறேன். நான் இம்மாதிரி தைரியமாக எழுதுவதற்காக என்னை மன்னிப்பீராக. சமாதானம் வேண்டுமென்று யாரவாது சொல்லுவாரானால், அந்த மந்திரிதான் ராணுவத்தை நடத்த வேண்டுமென்று சொல்லுவாரானால், அவர் நமது சக்கரவர்த்தி மீது பிரியம் இல்லாதவர், நாம் எல்லோரும் நாசமாகிவிடவேண்டும் என்று நினைக்கிறவர் என்பது தெளிவான விஷயம். ஆகவே, வெளிப்படையாக நான் உமக்கு எழுதுகிறேன்; தற்காப்புப் படையை ஏற்படுத்துவீர்களாக. ஏனென்றால், இந்த மந்திரி நமது நாட்டுக்குள் நுழைந்தவர்களை மிகுந்த சாமர்த்தியமான வழியில் மாஸ்கோவுக்கு அழைத்துச் செல்லுகிறார். சக்கரவர்த்தியின் மெய்க்காப்பாளரான வால்ஜாகன் என்பவர் மீது ராணுவம் முழுவதுமே சந்தேகம் கொண்டிருக்கிறது. அவர் நெப்போலியனுடைய மனிதரேயொழிய, நம்முடையவர் அல்ல என்று சொல்லப்படுகிறது. அவர்தான் இப்போதும் நமது மந்திரிக்கு ஆலோசனை கூறுகிறவராய் இருக்கிறார். நான் அவரிடம் மரியாதையாய் இருப்பது மட்டுமல்ல; ஒரு சிப்பாயைப் போல, பதவியில் நான் அவருக்கு மூத்தவராய் இருந்தபோதிலும், நான் அவருடைய உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிகிறேன். அது மிகவும் கஷ்டமானது. என்னுடைய நன்மையாளரும் என்னுடைய சக்கரவர்த்தியுமாகிய வருக்காக நான் பணிந்து போகிறேன். நம்முடைய சிறந்த ராணுவத்தை, அம்மாதிரி ஒரு நபரிடம் சக்கரவர்த்தி ஒப்படைத்திருப்பதற்காகத்தான் நான் மிகவும் வருந்துகிறேன். நம்முடைய துருப்புகள் பின் வாங்கிக்கொண்டு போவதால், களைப்படைந்தவர்களும், ஆஸ்பத்திரியில் விடப்பட்டவர்களுமாக 15,000 பேருக்கு மேல் தங்கி நின்றுவிட்டார்கள். நாம் எதிரியைத் தாக்கியிருந்தால், இம்மாதிரி ஏற்பட்டிருக்காது. கடவுளுக்காக, நான் கேட்பதற்கு நீர் எனக்கு ' சொல்லும்? நம்முடைய இனிய, வீரமுள்ள தந்தை நாட்டை, இம்மாதிரி நீசர்களுக்கு எதற்காக விட்டு வரவேண்டும்? அப்படிச் செய்து, நம்முடைய பிரஜைகளிடம் வெறுப்பையும், அவமானத்தையும் ஏன் ஏற்படுத்தவேண்டும்? நாம் எதற்காக பீதிகொள்ளவேண்டும்? நாம் எதற்காகப் பயப்படவேண்டும்? அந்த மந்திரி இப்படியும் அப்படியும் ஊசலாடிக்கொண்டு இருப்பதற்கோ, அல்லது அவர் ஒரு கோழை, புத்தி இல்லாதவர், நேராகச் செய்ய முடியாதவர் என்பதற்கோ, அல்லது மற்ற எல்லா கெட்ட குணங்களையும் கொண்டிருக்கிறவர் என்பதற்கோ என்னைக் குறை கூற முடியாது. ஆகையால், நமது ராணுவம் பூராவும் கதறுகிறது; அவர் மீது தங்களுடைய சாபங்களைக் குவிக்கிறது.'




மனித வாழ்க்கையின் அற்புதத்தைக் காட்டக்கூடிய எண்ணற்ற பிரிவுகள் இருந்தாலும், அவைகளை எல்லாம் இரண்டு பிரிவுகளில் அடக்கிவிடலாம். அதாவது, யதார்த்தம் என்பது ஒரு பிரிவு; சம்பிரதாயம் என்பது மற்றொரு பிரிவு. இந்த சம்பிதாயம் என்ற பிரிவில் கிராம, தேச, மாகாண, இன்னும் மாஸ்கோ வாழ்க்கையிலிருந்தும் பிரித்துக் காட்டக்கூடிய பீட்டர்ஸ்பர்க்கின் வாழ்க்கையை சேர்க்கலாம். முக்கியமாக, அங்குள்ள வரவேற்பு மண்டபங்களைச் சேர்த்துக்கொள்ளலாம். அந்த வரவேற்பு மண்டபங்களின் வாழ்க்கை மாறாமல் இருக்கிறது. 1805-ஆம் வருஷத்திலிருந்து நாம் முதலில் சமாதானம் செய்து, பின்னால் மீண்டும் போனமார்ட்டுடன் சண்டை போட்டு அரசியல் சட்டங்களை மீண்டும் மீண்டும் ஆக்கியும் அழித்தும் வந்திருக் கிறோம். என்றாலும், அன்னா பாவ்லாவ்னாவினுடையவும் ஹெலனுடையவும் வரவேற்பு மண்டபங்கள் ஏழு வருஷங்களுக்கு முன்பாகவும், ஐந்து வருஷங்களுக்கு முன்பாகவும் எப்படி இருந்தனவோ, அப்படியேதான் இருக்கின்றன. அன்னா பாவ்லாவ்னாவினுடைய வரவேற்பு மண்டபத்தில், முன்போலவே போனபார்ட்டின் வெற்றிகளைப் பற்றி, குழப்பமுற்ற மனதோடு பேசிக்கொண்டிருந்தார்கள். அந்த வெற்றிகளிலும், ஐரோப்பிய மன்னர்கள் போனபார்ட்டிடம் அடிபணிந்திருப்பதிலும், ஒரு துவேஷமான சூழ்ச்சியை அவர்கள் கண்டார்கள். அதாவது, ருஷ்ய ராஜ வட்டாரத்துக்கு கவலையையும் மனக் கஷ்டத்தையும் கொடுக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடுதான், அந்த துவேஷமான சூழ்ச்சி நடப்பதாகக் கண்டார்கள். ருஷ்ய ராஜ வட்டாரத்துக்கு அன்னா பாவ்லாவ்னாதான் இந்த வரவேற்பு மண்டபத்திற்கு பிரதிநிதியாய் விளங்கினாள். ஹெலனுடைய வரவேற்பு மண்டபத்திற்கு ரும்பாண்ட்சேவ் அடிக்கடி விஜயம் செய்து கௌரவப்படுத்தி வந்தார். ஒரு பிரமாதமான, புத்திசாலியான பெண் என்று ஹெலனை அவர் கருதி வந்தார். அந்த வரவேற்பு மண்டபத்தில் 1808-வது வருஷத்தில் பிரஞ்சுக்காரர்களை ஒரு 'பெரிய சமுதாயம்' என்றும், நெப்போலியனை பெரிய மனிதர் என்றும் எப்படிப் பேசி வந்தார்களோ, அதே மாதிரி, அதே களிப்போடு இந்த 1812-ஆம் வருஷத்திலும் பேசி வந்தார்கள். பிரான்ஸுடன் நமக்கு ஏற்பட்ட மனஸ்தாபத்தைக் கண்டு அவர்கள் வருந்தினார்கள். அப்பொழுதே சமாதான உடன்படிக்கை செய்து, அந்த

மனஸ்தாபத்தைத் தீர்த்திருக்கவேண்டும் என்று அவர்கள் நினைத்தார்கள்.

சமீப காலமாக, ராணுவத்திலிருந்து சக்கரவர்த்தி திரும்பியதிலிருந்து, ஒன்றுக்கொன்று விரோதமான இந்த வரவேற்பு மண்டப வட்டாரங்களில் கொஞ்சம் பரபரப்பு ஏற்பட்டது. வெளிப்படையாக ஒரு வட்டாரத்திற்கும் மற்றொரு வட்டாரத்திற்கும் உள்ள துவேஷத்தையும் காட்டினார்கள். என்றாலும், இரண்டு வட்டாரங்களும் தங்களுடைய பழைய போக்கை கைவிடவில்லை. அன்னாபாவ்லாவ்னாவின் வட்டாரத்தில் நியாயவாதிகள் என்று வேரூன்றிய பிரஞ்சுக்காரர்களை மட்டுமே அனுமதித்தார்கள். பிரஞ்சு நாடகக் கொட்டகைகளுக்குப் போகக்கூடாது என்ற தேசாபிமானப் பேச்சுக்களும் அங்கே பேசப்பட்டன. பிரஞ்சு நாடகக் கொட்டகைகளுக்காக சர்க்கார் செலவிடும் பணமானது ஒரு முழு ராணுவத்திற்கு செலவாகும் பணத்தைப்போல இருக்கிறது என்று அந்த வட்டாரத்தில் சொல்லப்பட்டது. யுத்தத்தின் போக்கை அந்த வட்டாரத்தார் ஆவலோடு கவனித்து வந்தார்கள். நமது ராணுவத்திற்கு பெருமையைத் தரக்கூடிய விஷயங்களைப் பற்றி மட்டுமே அவர்கள் பேசிக்கொள்ளுவார்கள். ஹெலன், ரும்யாண்ட்சேவ் ஆகியவர்களுடைய பிரஞ்சு வட்டாரத்தில் எதிரிகள் கொடுமை செய்வதாகச் சொல்லப்பட்டதை மறுத்துக்கொண்டிருந்தார்கள். சமாதானத்திற்காக நெப்போலியன் செய்த முயற்சிகளையெல்லாம் பற்றி வாதித்துக் கொண்டிருந்தார்கள். ராஜ சபையையும், சக்கரவர்த்தியின் தாயாருடைய ஆதரவில் நடந்துவந்த பெண்களின் கல்வி ஸ்தாபனங்களையும், காஜான் என்ற இடத்திற்கு
...ாற்றிவிடவேண்டும் என்று அவசரமாகத் தயார் செய்கிறவர்களை
...ள் கேலி செய்துவந்தார்கள். ஹெலனுடைய வட்டாரத்தில்,
ம... ...ம் என்பது தொடர்ச்சியான ஆர்ப்பாட்டங்களைத் தவிர
அவர்... ...இல்லையென்றும், வெகு சீக்கிரமாக சமாதானம்
இந்த யுத்த... ...ன்றும் பேசிக்கொண்டிருந்தார்கள். பிலைபின்
வேறு எதுவும் ... ...பர்க்கில் இருக்கிறார். ஹெலனுடைய
ஏற்பட்டுவிடும் எ... ...சௌஜன்யத்தோடு இருக்கிறார்.
இப்பொழுது பீட்டர்... ...ம் அங்கு வரத் தவறுவதில்லை.
வீட்டில் அவர் மிகுந்த ... ...ப்பொழுது பரவி வருகிறது.
...புத்திசாலியான ஒவ்வொருவரு... ...ளைத் தீர்த்துக்கொள்ள
...அந்த பிலையின் சொல்லிய கருத்து இ... ...ருந்தைக் [illegible]
...அதாவது, வெடி மருந்தினால் காரியங்... [illegible]
...முடியாது என்றும், அந்த வெடி [illegible]
[illegible]

சொல்லிவந்தார். மாஸ்கோவில் சக்கரவர்த்தியினால் ஏற்பட்ட உற்சாகத்தைப் பற்றிய செய்திகள் பீட்டர்ஸ்பர்க்கிற்கு வந்து சேர்ந்தன. சக்கரவர்த்தியும் அப்பொழுதுதான் திரும்பினார். அந்த உற்சாகத்தைப்பற்றி அந்த வட்டாரத்தில் கேலியாகவும் தந்திரமாகவும் பேசிக்கொண்டார்கள். ஆனால், ஜாக்கிரதையோடு. பேசினார்கள்.

இதற்கு மாறாக, அன்னா பாவ்லாவ்னாவின் வட்டாரத்தில் மாஸ்கோவின் உற்சாகத்தைக் கண்டு மிகுந்த பரவசம் ஏற்பட்டது. முன்னோர்களின் வீரச் செய்கைகளைப்பற்றி ப்ளூடார்ச் என்பவர் எவ்வளவு உணர்ச்சியோடு பேசினாரோ, அதேமாதிரி மாஸ்கோவில் நடந்து இருக்கிறது என்று அவர்கள் பேசிக்கொண்டார்கள். இளவரசர் வாசைலி முன்பு வகித்துவந்த அதே முக்கியமான பதவிகளை இன்னமும் வகித்து வருகிறார். அவர்தான் இந்த இரண்டு வரவேற்பு மண்டபங்களுக்கும் ஒரு தொடர்புச் சங்கிலியைப்போல விளங்கிவந்தார். தம்முடைய 'சிறந்த நண்பரான அன்னா பாவ்லாவ்னா'வையும், தமது குமாரியின் 'ராஜ தந்திர வரவேற்பு மண்டப'த்தையும் அடிக்கடி சந்தித்து வந்தார். அவர் இந்த இரண்டு மண்டபங்களுக்கும் அடிக்கடி வந்து போய்க்கொண்டிருந்ததால் அவருக்கே குழப்பமாய் விட்டது. ஆகவே, அன்னாவின் மண்டபத்தில் சொல்ல வேண்டியதை ஹெலனுடைய மண்டபத்தில் சொல்லியும், அதே மாதிரி ஹெலனுடைய மண்டபத்தில் சொல்லவேண்டியதை அன்னாவின் மண்டபத்தில் சொல்லியும் வர ஆரம்பித்தார்.

சக்கரவர்த்தி திரும்பிய பின்பு, அன்னா பாவ்லாவ்னாவின் வரவேற்பு மண்பட்த்தில் யுத்தத்தைப்பற்றி பேசிக்கொண்டிருந்த போது பார்க்ளே டி டாலியை பலமாய் கண்டித்தார். ஆனால், சேனாதிபதியாக யாரை நியமிப்பது என்பதைப்பற்றி அவருக்குச் தெளிவான அபிப்பிராயம் எதுவும் இல்லை. 'பெரிய திறமைய' மனிதர்' என்ற சகஜமாக சொல்லப்பட்டு வந்த ஒரு வி' அன்று குட்டுஜோவைப் பார்த்ததுபற்றிப் பேசிக்கொ பீட்டர்ஸ்பர்க்கின் தற்காப்புப் படைக்குத் தலைவ' தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். பாதுகாப்ப' பொறுக்கப்பட்டவர்களின் கூட்ட' காரியாலயத்தில் நடந்தபோது. வகித்ததாகவும், அங்கே தான் அ' இதைக் கூறிய பின்பு மிகுந்ச

புள்ள
ருந்தாளி,
ண்டிருந்தார்.
ராக குட்டுஜோவ
ப படைக்கு புதிதாய
நிதி இலாகாவில
குட்டுஜோவ் தலைமை
வரைப் பார்த்ததாகவும் சொன்னா
ஜாக்கிரதையோடு அவர் குட்டுஜோனை

சேனாதிபதியாக நியமிக்கலாம் என்றும், எல்லா தகுதிகளும் அவரிடம் இருக்கின்றன என்றும் அவர் சொன்னார்.

ஒரு விசனமான புன்னகையோடு அன்னா பாவ்லாவ்னா பேசினாள். சக்கரவர்த்திக்கு இதுவரை தொல்லையைத் தவிர வேறு எதையும் குட்டுஜோவ் கொடுக்கவில்லை என்று அவள் கூறினாள்.

'இன்று பிரபுக்கள் சபையில் நான் மேலும் மேலும் பேசிக்கொண்டே இருந்தேன். ஆனால், நான் பேசுவதை அவர்கள் கவனிக்க வில்லை. தற்காப்புப் படைக்கு அவரைத் தலைவராகத் தேர்ந்தெடுப்பது சக்கரவர்த்திக்கு பிரியமாய் இருக்காது என்று நான் அவர்களிடம் சொன்னேன். ஆனால், என் பேச்சை அவர்கள் கவனிக்கவில்லை' என்று இளவரசர் வாசைலி இடை மறித்துச் சொன்னார்.

'இதெல்லாம் எதிர்க்க வேண்டும் 'என்ற வியாதியேதான்' என்று அவர் மேலும் சொன்னார். 'எதற்காக? அந்த மாஸ்கோ வாசிகளின் மூடத்தனமான உற்சாகத்தை நாமும் குரங்குபோலப் பின்பற்ற வேண்டும் என்ற ஒரே காரணம்தான்' என்று இளவரசர் வாசைலி பேசி முடித்தார். அந்த வினாடியில் அவர் ஹெலனுடைய மண்டபத்தில்தான் மாஸ்கோவின் உற்சாகத்தைக் கேலி செய்யவேண்டும் என்பதையும், அன்னாவின் மண்டபத்தில் அதை களிப்போடு பாராட்ட வேண்டும் என்பதையும் அவர் மறந்துவிட்டார். ஆனால், உடனே அதைப் புரிந்துகொண்டு பரிகாரம் செய்தார். 'இப்பொழுது ருஷ்யாவிலேயே மிகவும் வயதான ஜெனரலான கோமகன் குட்டுஜோவ் அந்த சபைக்குத் தலைமை வகிப்பது பொருத்தமாய் இருக்குமா? அவர் எடுத்துக்கொள்ளும் சிரமத்திற்காக அவருக்குக் கிடைக்கப் போவது எதுவுமே இல்லை. ஒரு குதிரை மீது ஏற முடியாத ஒருவரை, கௌன்சில் கூட்டங்களில் தூங்கி விழுகிற ஒருவரை, மிகவும் மோசமான ஒழுக்கங்களைக்கொண்ட ஒருவரை எப்படி அவர்களால் சேனாதிபதியாக நியமிக்க முடியும்? புக்காரஸ்ட் நகரில் அவர் மிகச் சிறந்த புகழைப் பெற்றுவிட்டார்! ஒரு ஜெனரல் என்கிற முறையில் அவருடைய தகுதியைப்பற்றி நான் பேசவில்லை. இப்பொழுதுள்ள நிலைமையைப் போன்ற ஒரு நிலைமையில் ஒரு சக்தியற்ற வயோதிகக் குருட்டு மனிதரை, அநேகமாய் குருடாய் விட்ட ஒரு மனிதரை, எப்படி அவர்கள் நியமிக்க முடியும்? ஒரு குருடரை ஜெனரலாக நாம் பெறுவது மிகச் சிறந்த விஷயம்தான்! அவரால் எதையும் பார்க்கமுடியாது. குருடனுடைய செய்கையைக்

காட்டுவதற்காகவா? அவரால் பார்க்கவே முடியாது.' இந்தப் பேச்சுக்கு யாரும் பதில் சொல்லவே இல்லை.

ஜுலை 14-ந் தேதியன்று இது முற்றிலும் சரி. ஆனால், ஜுலை 29-ந் தேதியன்று குட்டுஜோவுக்கு 'இளவரசர்' என்ற பட்டம் கிடைத்தது. அவரைத் தள்ளி விடுவதற்காக உள்ள விருப்பத்தை இது காட்டுவதாய் இருக்கலாம். ஆகவே, இளவரசர் வாசைலியின் அபிப்பிராயம் இன்னமும் சரியானதாய இருந்தபோதிலும் இப்பொழுது எல்லாம் அவர் அதைச் சொல்லுவதற்கு விரும்புவதில்லை. ஆனால், ஆகஸ்டு 8-ந் தேதியன்று பீல்டு மார்ஷல் சால்டிகோவ், அராக்சீவ், வியாஜ்மெட்டினாவ், லாப்பூகைன், காச்சுபே ஆகியவர்கள் அடங்கிய ஒரு கமிட்டி யுத்தத்தின் போக்கைப்பற்றி ஆலோசிப்பதற்காகக் கூடியது. சேனாதிபத்தியத்தில் ஒற்றுமை இல்லாத விஷயம்தான் நமது தோல்விகளுக்குக் காரணம் என்ற அந்த கமிட்டி முடிவுக்கு வந்தது. குட்டுஜோவிடம் சக்கரவர்த்திக்கு அதிருப்தி உண்டு என்பதை கமிட்டி அங்கத்தினர்கள் அறிவார்கள். என்றாலும், அந்த கமிட்டி ஆலோசனை செய்த பின்பு, குட்டு ஜோவையே சேனாதிபதியாக நியமிக்கவேண்டும் என்று சக்கரவர்த்திக்கு ஆலோசனை கூற கமிட்டி அங்கத்தினர்கள் தீர்மானித்தார்கள். அதே தினத்தில் எல்லா ராணுவங்களின் மீதும், அந்த ராணுவங்கள் பரவி நின்ற எல்லாப் பிரதேசங்களின் மீதும் பூரண அதிகாரங்களோடும் குட்டுஜோவ் சேனாதிபதியாக நியமிக்கப்பட்டார்.

ஆகஸ்டு 9-ந் தேதியன்று அன்னா பாவ்லாவ்னாவின் வீட்டில் அந்த 'பெரிய திறமையுள்ள மனித'ரை இளவரசர் வாசைலி சந்தித்தார். அந்த 'பெரிய திறமையுள்ள மனிதர்' அன்னா பாவ்லாவ்னா சொல்லுவதை மிகுந்த கவனத்தோடு கேட்டுவந்தார். ஏனென்றால், இளஞ் சீமாட்டிகளுக்காக ஏற்பட்டிருந்த கல்வி ஸ்தாபனங்களில் ஒன்றில் தாம் டைரக்டராக நியமிக்கப்பட வேண்டும் என்று அவர் விரும்பிக்கொண்டிருந்தார். தம்முடைய விருப்பங்களெல்லாம் நிறைவேறிய ஒரு மகிழ்ச்சியான, வெற்றி வீரரைப் போன்ற பாவனையோடு இளவரசர் வாசைலி அந்த அறைக்குள் நுழைந்தார்.

'நல்லது, இந்த மகத்தான செய்தியை நீங்கள் கேட்டீர்களா? இளவரசர் குட்டுஜோவ் 'பீல்டு மார்ஷல்' ஆக ஆகிவிட்டார். எல்லா அபிப்பிராய பேதங்களும் முடிந்து விட்டன. நான் மிக்க சந்தோஷமாய் இருக்கிறேன். மிகுந்த மகிழ்ச்சியோடு இருக்கிறேன். கடைசியாக நமக்கு ஒரு தக்க மனிதர் கிடைத்துவிட்டார்' என்று

சொல்லி அவர் கடுமையுடனும் முக்கியத்துவத்துடனும் அந்த வரவேற்பு அறையில் இருந்த ஒவ்வொருவரையும் சுற்றி நோக்கினார்.

தமக்கு டைரக்டர் பதவி வேண்டும் என்ற ஆசை இருந்த போதிலும் அந்த 'பெரிய திறமையுள்ள மனித'ரால் இளவரசர் வாசைலியின் முந்தைய அபிப்பிராயத்தை ஞாபகம் மூட்டாமல் இருக்க முடியவில்லை. அன்னா பாவ்லாவ்னாவின் வரவேற்பு அறையில் இம்மாதிரி செய்தது இளவரசர் வாசைலிக்கும் அன்னா பாவ்லாவ்னாவுக்கும் மாரியாதைக் குறைவாக இருந்தபோதிலும், அப்படிப் பேசும் ஆசையை அவரால் தவிர்க்க முடியவில்லை. ஆனால், அன்னா பாவ்லாவ்னா குட்டுஜோவ் சேனாதிபதியான செய்தியை மகிழ்ச்சியோடு வரவேற்றாள்.

'ஆனால், இளவரசே, அவர் குருடர் என்று சொல்லுகிறார்களே' என்று அந்த 'பெரிய திறமையுள்ள மனிதர்' இளவரசர் வாசைலியின் பேச்சுக்களை ஞாபக மூட்டினார்.

'ஏன்? அசட்டுத்தனம்! அவர் மிக நன்றாக பார்க்கிறார்' என்று இளவரசர் வாசைலி அவசரமாக ஆழ்ந்த தொனியில் லேசான இருமலோடு பேசினார். எல்லாவிதமான கஷ்டங்களையும் அந்த இருமலோடு கூடிய பேச்சினால்தான் சமாளிப்பதற்கு அவர் வழக்கமாக விரும்புவார்.

'அவர் நன்றாய்ப் பார்க்கிறார். எல்லா ராணுவங்கள் மீதும், அந்த ராணுவங்கள் தங்கியுள்ள பிரதேசங்கள் மீதும் பூரணமான அதிகாரங்களை சக்கரவர்த்தி அவருக்குக் கொடுத்திருக்கிறார். இதற்கு முன்னால் வேறு எந்த சேனாதிபதிக்கும் அம்மாதிரி அதிகாரங்களைக் கொடுத்ததில்லை. இதைக் கண்டுதான் நான் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். அவர்தான் இப்பொழுது ஒரு இரண்டாவது சர்வாதிகாரி' என்று ஒரு வெற்றிப் புன்னகையோடு இளவரசர் வாசைலி பேசி முடித்தார்.

'கடவுள் கருணை புரிவாராக! கடவுள் கருணை புரிவாராக!' என்று அன்னா பாவ்லாவ்னா கூறினாள்.

அந்த 'பெரிய திறமையுள்ள மனிதர்' ராஜ சபை வட்டாரப்பழக்க வழக்கங்களில் இன்னும் ஒரு கற்றுக் குட்டியாகவே இருந்து வந்தார். அன்னா பாவ்லாவ்னாவை புகழ்ச்சி செய்ய அவர் விரும்பி, அன்னா பாவ்லாவ்னாவின் பழைய கருத்துக்களை, இந்த விஷயத்தில், ஆதரித்துப் பேச விரும்பிக் கூறியதாவது:

'அந்த அதிகாரங்களை குட்டுஜோவிற்குக் கொடுத்தற்கு சக்கரவர்த்தி தயங்கினார் என்று சொல்லப்படுகிறது. குட்டுஜோவிடம் அவர், 'உம்முடைய சக்கரவர்த்தியும் உம்முடைய தந்தை நாடும் இந்த கௌரவத்தை உமக்கு அளிக்கிறது' என்று கூறினார். அப்படிச் சொல்லியபோது, பாகாண்டே என்ற கதையை ஒரு பெண்ணுக்குச் சொன்னால், அவள் எப்படி நாணி முகம் சிவப்பாளோ, அதே மாதிரி சக்கரவர்த்தியும் இருந்தார் என்று சொல்லப்படுகிறது.'

'ஒருவேளை அந்தப் பேச்சில் அவருடைய இருதயம் சம்பந்தப்படாமல் இருந்திருக்கலாம்' என்று அன்னா பாவ்லாவ்னா சொன்னாள்.

'ஓ, இல்லை, இல்லை! என்று உற்சாகத்தோடு குட்டுஜோவை யாருக்கும் விட்டுக்கொடுக்காதவரைப் போல உணர்ச்சியோடு இளவரசர் வாசைலி பதில் அளித்தார். அவருடைய அபிப்பிராயத்தில் குட்டுஜோவ் எல்லாராலும் பாராட்டப்படுகிறவர் என்பது மட்டுமல்ல, அவரை ஒவ்வொருவரும் போற்றியும் வருகிறார்கள் என்று தோன்றியது. 'இல்லை, அது அசாத்தியம். நமது சக்கரவர்த்தி அவரை மிகவும் உயர்வாக முன்னால் பேசியிருக்கிறார்.'

'இளவரசர் குட்டுஜோவ் உண்மையான அதிகாரத்தை மேற்கொள்ளும்படியும், அவருக்கு யாரும் இடையூறு செய்யாமல் இருக்கும்படியும் கடவுள் அருள் புரிவாராக' என்று அன்னா பாவ்லாவ்னா கூறினாள்.

யாரை அவள் குறிப்பிடுகிறாள் என்பதை உடனே அறிந்து கொண்டு, இளவரசர் வாசைலி மெதுவாக குரலில் பேசினார்:

'ஜாரேவிச் ராணுவத்தோடு இருக்கக்கூடாது என்ற நிபந்தனையைத் தெளிவாக குட்டுஜோவ் சொல்லிவிட்டார் என்பதை நான் அறிவேன். சக்கரவர்த்தியிடம் அவர் என்ன சொன்னார் என்பது உங்களுக்குத் தெரியுமா?'

சக்கரவர்த்தியிடம் குட்டுஜோவ் சொல்லியதாகக் கூறப்பட்ட வார்த்தைகளை இளவரசர் வாசைலி திரும்பிச் சொன்னார். அதாவது: 'அவர் ஏதாவது தவறு செய்தால் என்னால் தண்டிக்கவும் முடியாது. அவர் ஏதாவது நன்மை செய்தால் அவருக்கு பரிசளிக்கவும் முடியாது.'

'ஓ, அந்த இளவரசர் குட்டுஜோவ் ஒரு சிறந்த விவேகி! அவரை வெகு காலமாக நான் அறிவேன்.'

ராஜசபை தந்திரத்தை இன்னம் பெற்றிராத அந்த 'பெரிய திறமையுள்ள மனிதர்' பேசினார்: 'மேன்மை தங்கியவர், அந்த சக்கரவர்த்திகூட ராணுவத்தோடு இருக்கக்கூடாது என்ற நிபந்தனையைத் திட்டமாகச் சொன்னார் என்றுகூட சொல்லிக் கொள்ளுகிறார்கள்.'

இதைக் காதில் கேட்டதும், இளவரசர் வாசைலியும், அன்னா பாவ்லாவ்னாவும் அவரை விட்டு தங்கள் பார்வையைத் திருப்பிக் கொண்டார்கள். தாங்கள் ஒருவரை ஒருவர் துக்கத்தோடு நோக்கி, அந்த மனிதரின் அப்பாவித்தனத்தைக் கண்டு பெருச்சு விட்டார்கள்.



பீட்டர்ஸ்பர்க்கில் இம்மாதிரி நடந்து கொண்டு இருக்கும் பொழுது, பிரஞ்சுத் துருப்புகள் ஸ்மாலென்ஸ்கை கடந்து மாஸ்கோவிற்கு மேலும் மேலும் நெருங்கிக் கொண்டிருந்தார்கள். நெப்போலிய னுடைய சரித்திரக்காரரான தீயர்ஸ் என்வர், மற்ற அவருடைய சரித்திரக்காரர்களைப் போலவே, தம்முடைய வீரரின் செய்கையை நியாயமாக்குவதற்காக முயற்சி செய்தார். அதாவது, நெப்போலியன் தம்முடைய விருப்பத்திற்கு விரோதமாக மாஸ்கோவின் கோட்டைச் சுவர்களுக்கு இழுக்கப்பட்டால்ர் என்று எழுதியிருக்கிறார். மற்ற சரித்திரக்காரர்கள் சொல்லுவது எவ்வளவு தூரம் சரியோ, அவ்வளவு தூரம் அவர் சொல்லுவதும் சரி; ஏனெனில், தனியொரு மனிதனின் விருப்பப்படியே, சரித்திர சம்பவங்கள் நடக்கின்றன என்பதற்கான ஆதாரங்களை அவர்கள் தேடுகிறார்கள்; ருஷ்ய கமாண்டர்களின் சாமர்'தியத்தினாலேயே நெப்போலியனை மாஸ்கோவிற்கு இழுத்ததாக ருஷ்ய சரித்திர ஆசிரியர்கள் சொல்லுகிறார்கள். இங்கேயும் அவர்கள் சொல்லுவது எவ்வளவு தூரம் சரியோ, அவ்வளவு தூரம் தீயர்ஸ் சொல்லுவதும் சரிதான். பின்னால் நடக்கிற காரியங்களுக்கு, முன்னால் நடந்த காரியங்கள் ஒரு தயாரிப்பாகவே இருக்கும் என்ற பூர்வ கால சட்டம் இங்கே வருவதோடு, பரஸ்பர தர்மம் என்ற சட்டமும் உள்ளே நுழைந்து, பூரா விஷயங்களையும் குழப்பி விடுகின்றன. ஒரு நல்ல சதுரங்க விளையாட்டுக்காரன் தான் தோல்வி அடைந்தால், அதற்குக் காரணம், தான் செய்த ஒரு தவறே என்று உண்மையாக நினைக்கிறான். அந்தத் தவறைக் கண்டு பிடிப்பதற்காக, விளையாட்டு ஆரம்பத்தில் ஒவ்வொரு தடவையும் முயற்சி செய்கிறான். ஆனால், அதே மாதிரி தவறுகள், அந்த

விளையாட்டின் ஒவ்வொரு கட்டத்திலும் ஏற்படும் என்பதையும், தன்னுடைய காய்களை நகர்த்தி வைப்பது ஒவ்வொன்றும் பூரணமானது அல்ல என்பதையும் அவன் மறந்து விடுகிறான். அவன் கவனித்த தவறைப்பற்றி மட்டும் அவன் கவனம் செலுத்துகிறான். ஏனெனில், அவனுக்கு எதிராக விளையாடு கிறவன் அதைத் தனக்குச் சாதகமாக உபயோகித்துக் கொள்ளுகிறான். யுத்தம் என்பது சில குறிப்பிட்ட காலவரையறையில் நடப்பது. அங்கே உயிரற்ற காரியங்களை நடத்தி வைப்பது, ஒருவருடைய விருப்பத்தை மட்டும் சார்ந்திருக்கவில்லை; பல விருப்பங் களுக்குள் ஏற்படுகிற மோதல்களினாலேயே ஒவ்வொரு காரியமும் பிறக்கிறது. ஆகவே, யுத்தம் என்ற இந்த சதுரங்கம் எவ்வளவு சிக்கலானதாய் இருக்க வேண்டும்!

ஸ்மாலென்ஸ்கை கடந்த பின்பு, டாராகாபுஜ்ஜுக்கு அப்புறமாக உள்ள வியாஜ்மா என்ற இடத்திலும், அதன் பின்னால், ஜாரேவா-ஜாய்மிஷ் என்ற இடத்திலும் போர் தொடுக்க நெப்போலியன் விரும்பினார். ஆனால், எண்ணற்ற சந்தர்ப்பங்கள் ஒன்று கூடியதால், ருஷ்யர்கள் பாராடினோ என்ற இடத்திற்கு வந்து சேருகிறவரையில், அவர்களால் போர் செய்ய முடியவில்லை. அந்த இடம், மாஸ்கோவிலிருந்து 70 மைல் தூரத்திலிருக்கிறது. வியாஜ்மாவிலிருந்து மாஸ்கோவிற்கு நேராக முன்னேறும்படி நெப்போலியன் உத்தரவிட்டார்.

இந்த பெரிய ஏகாதிபத்தியத்தின் ஆசியத் தலைவநகரான மாஸ்கோ, அலெக்ஜாண்டரின் மக்களுடைய பரிசுத்தமான நகரமான மாஸ்கோ, சீனர்களின் கோயில்களைப் போலத் தோற்றமளிக்கும் கணக்கற்ற மாதா கோயில்களைக் கொண்ட மாஸ்கோ, நெப்போலியனுடைய மனோராஜய ஆசைக்கு ஓய்வையே கொடுக்கவில்லை. வியாஜ்மாவிலிருந்து ஜாரேவா - ஜாய்மிஷுக்கு அவர் தம்முடைய கருஞ்சிவப்பு வர்ணமுள்ள, வால் வெட்டிவிடப்பட்ட, மந்தகதி நடையில் போகும் குதிரை மீது, காப்பாளர்களும் மெய்க்காப்பாளர்களும், வேலைக்காரர்களும், பாதுகாப்புப் படையும் புடைசூழ, போய்க்கொண்டிருந்தார். அவருடைய ராணுவ பிரதான அதிகாரியான பெர்த்தியர் என்பவர், குதிரைப் படையால் கைதியாகப் பிடிக்கப்பட்ட ஒரு ருஷ்யரை, விசாரணை செய்வதற்காக பின்தங்கினார். மொழிபெயர்ப்பாளரான லேலார்ன் டி இடிவில்லே என்பவருடன் அவர் பாய்ச்சலில் சவாரி வந்து, நெப்போலியனுக்குப் பக்கத்தில் வந்ததும், தம்முடைய குதிரையின் கடிவாளத்தை இழுத்து நிறுத்தி, ஒரு மகிழ்ச்சியான தோற்றத்தோடு நெப்போலியனைப் பார்த்தார்.

'நல்லது' என்று நெப்போலியன் கேட்டார்.

'பிலாட்டாவினுடைய கோசாக்குகளில் ஒருவன், பிலாட்டாவினுடைய துருப்புகள் பிரதான ராணுவத்தோடு சேர்ந்து கொள்வதாகவும், சேனாதிபதியாகக் குட்டுஜோவ் நியமிக்கப் பட்டிருக்கிறார் என்றும் சொல்லுகிறான். அவன் புத்திசாலியாக, பெரிய பேச்சுக் காரனாகவும் இருக்கிறான்.'

அந்த கோசாக்கிற்கு ஒரு குதிரையைக் கொடுத்துத் தம்மிடம் அழைத்து வரும்படி நெப்போலியன் புன்சிரிப்போடு அவர்களிடம் சொன்னார். அந்த கோசாக்கிடம் தாமே பேச வேண்டுமென்று அவர் விரும்பினார். பல உதவியாளர்கள் குதிரைகள் மீது பாய்ச்சலில் போனார்கள். ஒரு மணி நேரத்திற்குப் பின்பு, அந்த லாவ்ருஷ்கா ஒரு சேவகனின் உடுப்போது நெப்போலியனுக்கு முன்னால் ஒரு பிரஞ்சு குதிரை மீது வந்து நின்றான். அவன்தான், முன்னால் டெனைசா விடம் அடிமையாயிருந்து, இப்பொழுது ராஸ்டோவிடம் வேலை பார்த்து வருகிறவன். அவனுடைய முகத்தில் குறும்பும், களிப்பும், குடி மயக்கமும் காணப்பட்டன. தமது பக்கத்திலேயே குதிரை மீது வரும்படி அவனக்கு நெப்போலியன் கூறிவிடிடு, அவனைக் கேள்வி கேட்க ஆரம்பித்தார்.

'நீ ஒரு கோசாக்கா?'

'ஆம், ஒரு கோசாக்குதான், மென்மை தங்கியவரே.'

'அந்த கோசாக், தான் யாருடன் இருக்கிறான் 'என்பதை உணர்ந்து கொள்ளவில்லை. ஏனெனில், நெப்போலியனுடைய ஆடைகளும், தோற்றமும் சாதாரணமாயிருந்தபடியால், ஒரு கீழ் நாட்டாருடைய மனதிற்கு அவர் ஒரு மன்னராகத் தோன்றுவதற்கு எந்த விதமான அடையாளமும் இல்லை. ஆகவே, மிகுந்த சௌஜன்னியத்தோடு யுத்த சம்பவங்களைப்பற்றி அவன் பேச ஆரம்பித்தான்' என்று, இந்த சம்பவத்தை வர்ணிக்கும்போது தீயர்ஸ் என்பவர் குறிப்பிடுகிறார். உண்மையில், முதல் நாளன்று லாவ்ருஷ்கா நிறையக் குடித்துவிட்டு, அவனுடைய எஜமானருக்கு டின்னர் தயார் செய்யாமல் இருந்து விட்டான். அவனை சவுக்கினால் அடித்து, பக்கத்திலுள்ள கிராமத்திலிருந்து கோழிக்குஞ்சுகளை வாங்கி வரும்படி அனுப்பினார்கள். அங்கே அவன் கொள்ளை அடித்துக் கொண்டிருந்தபோதுதான், பிரஞ்சுத் துருப்புகள் வந்து அவனைக் கைது செய்தார்கள். ஒரு வெட்கங்கெட்ட, முரட்டுத்தனமான அடிமைகளில் லாவ்ருஷ்காவும் ஒருவன். எல்லா விதமான அனுபவங்களும் அவனுக்கு உண்டு. ஒவ்வொரு காரியத்தையும் தந்திராகவும், அற்பத்தனமாகவும் செய்ய வேண்டியது அவசியம்

என்று நினைப்பவர்களில் அவன் ஒருவன். தன்னுடைய எஜமானருக்கு எந்த விதமான சேவையையும் செய்வதற்கு தயாராய் இருப்பவர்களில் அவன் ஒருவன். எஜமானர்களின் கீழ்த்தரமான உணர்ச்சிகளை, முக்கியமாகத் தற்பெருமை, சிறுமைத்தனம் ஆகியவைகளை யூகித்து அறிந்து கொள்ளுவதில் அவன் நல்ல சமர்த்தன.

தான் நெப்போலியனுடன் இருப்பதை அவன் அறிந்து கொண்டான். தனக்கு முன்னால் நிற்பவர் நெப்போலியன்தான் என்பதை சுலபமாக, நிச்சயமாக அவன் அறிந்து கொண்டான். கொஞ்சம் கூட லாவ்ருஷ்கா வெட்கமடையவில்லை. தன்னுடைய புது எஜமானரின் தயவைப் பெறுவதற்காக தன்னால் முடிந்த வரையில் முயற்சி செய்தான்.

இவர் நெப்போலியன்தான் என்பதை அவன் நன்றாய் அறிந்து கொண்டான். ராஸ்டோவ்வோ, அல்லது ஒரு சார்ஜன்ட்-மேஜரோ, கையில் கம்புகளை வைத்துக்கொண்டு எவ்வளவுதூரம் அவனைப் பயமுறுத்த முடியுமோ, அதைவிட அதிகமாக நெப்போலி யனுடைய பிரசன்னத்தால் செய்ய முடியாது என்பதை அவன் அறிவான். ஏனெனில், சார்ஜன்ட் - மேஜரோ, அல்லது நெப்போலியனோ, பறித்துக்கொள்வதற்கு அவனிடம் எதுவும் இல்லை.

ஆகவே, அவன் பேசிக்கொண்டே போனான். சேவகர்களிட மிருந்து அவன் கேள்விப்பட்ட வதந்திகளையெல்லாம் அச்சமயம் கூறினான். அவைகளில் அநேகம் உண்மையானவை, போனபார்ட்டைத் தோற்கடிக்க முடியும் என்று ருஷ்யர்கள் நினைக்கிறார்களா, அல்லது தோற்கடிக்க முடியாதென்று நினைக்கிறார்களா என்று நெப்போலியன் அவனிடம் கேட்டபொழுது, அவன் கண்களை இடுக்கிக்கொண்டு யோசித்துப் பார்த்தான்.

இந்த கேள்வியில் ஒரு ஆழ்ந்த தந்திரம் இருக்கிறது என்பதை அவன் கண்டான். அவன் மாதிரியுள்ள ஆட்கள் எல்லாருமே, ஒவ்வொன்றிலும் தந்திரமிருப்பதாகவே நினைப்பார்கள். ஆகவே, அவன் முகத்தைச் சுளித்தான். உடனே பதில் சொல்லவில்லை.

'அது இம்மாதிரி இருக்கிறது. சீக்கிரமாக ஒரு யுத்தம் ஏற்படுமானால், உங்கள் கட்சி ஜெயிக்கும்; அதுதான் சரி. ஆனால், மூன்று தினங்கள் கழிந்தால், அதற்குப் பின்னால் அந்த யுத்தம் சீக்கிரமாக முடிவடையாது' என்று அவன் சிந்தனையோடு பதில் கூறினான்.

இந்தப் பேச்சை நெப்போலியனுக்கு லேலார்ன் என்பவர் பின்வருமாறு புன்னகையோடு மொழிபெயர்த்துச் சொன்னார்: மூன்று நாட்களுக்கு உள்ளாக யுத்தம் நடக்குமானால், பிரஞ்சுக்காரர்கள் வெற்றி பெறுவார்கள். பின்னால் நடக்குமானால், என்ன நேரும் என்பதைக் கடவுளே அறிவார். நெப்போலியன் மிகுந்த நல்ல சுபாவத்திலிருந்தார் என்றாலும், இளநகை காட்டவில்லை. அந்த வார்த்தைகளை மீண்டும் சொல்லும்படி உத்தரவிட்டார்.

லாவ்ருஷ்கா இதைக் கவனித்தான். அவரை இன்னும் குஷிப்படுத்த நினைத்து, நெப்போலியன் யார் என்பதைத் தெரியாதவன் போல் பாசாங்கு செய்தான்.

'உங்களிடம் போனபார்ட் இருக்கிறார் என்பதை நாங்கள் அறிவோம். உலகத்தில் ஒவ்வொருவரையும் அவர் தோற்கடித்திருக்கிறார். ஆனால், எங்களைப் பொறுத்தவரையில் நாங்கள் வேறு விதம்...' என்று அவன் சொன்னான். இந்த தேசாபிமான ஜம்பம் கடைசியில் அவன் வாயிலிருந்து எப்படி வெளி வந்தது என்பதையோ, ஏன்வெளி வந்தது என்பதையோ அவன் அறியான்.

இந்த வார்த்தைகளை மொழிபெயர்ப்பாளர் மொழிபெயர்த்துச் சொன்னார். கடைசி வாக்கியத்தை மட்டும் அவர் விட்டுவிட்டார். போனபார்ட் புன்னகை கொண்டார். 'அந்த மகத்தான கேள்வி கேட்பவரை அந்த வாலிப கோசாப் புன்முறுவல் சொய்யும்படி செய்தான்' என்று சரித்திரக்காரரான தீயர்ஸ் சொல்லுகிறார். மௌனமாக சில அடிகள் சவாரி போனதும், நெப்போலியன் நமக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த பெர்த்தியர் என்பவரைப் பார்த்து, அந்த லாவ்ருஷ்கா சக்கரவர்த்தியுடன் பேசிக் கொண்டிருக்கிறான் என்பதை சொல்லும்படியும், அதனால் அவனக்கு ஏற்படுகிற உணர்ச்சிகளைக் கவனிக்க வேண்டுமென்றும் கூறினார். பைராமீட்டுகளில் தமது வெற்றிகரமான, அழியாத பெயரைப் பதித்தவரான அதே சக்கரவர்த்தியிடம், இந்த சமவெளியைச் சேர்ந்தவன் பேசிக்கொண்டிருக்கிறான் என்பதை அவன் அறிந்தால், அவனுடைய உணர்ச்சிகள் எம்மாதிரி இருக்கும் என்பதை அறிய தாம் விரும்புவதாக பெர்த்தியரிடம் நெப்போலியன் கூறினார்.

இந்த விஷயம் லாவ்ருஷ்காவுக்கு கூறப்பட்டது.

தன்னைக் குழப்பமடையச் செய்வதற்காகவே, இம்மாதிரி செய்கிறார்கள் என்பதையும், தான் பயந்துபோக வேண்டுமென்று நெப்போலியன் விரும்புகிறார் என்பதையும், லாவ்ருஷ்கா

அறிந்தும் கொண்டு, தனது புதிய எஜமானர்களைத் திருப்தி செய்வதற்காக, தான் ஆச்சரியமடைந்து, ஆச்சரியத்தால் அடிபட்டவன்போலப் பாசாங்கு செய்து கண்களை விரியத் திறந்தான். அவனை சவுக்கால் அடிக்கும்பொழுது அவன் முகத்தில் எம்மாதிரி தோற்றம் காணப்படுமோ, அதே தோற்றத்தை இப்பொழுதும் மேற்கொண்டான். 'நெப்போலியனின் மொழிபெயர்ப்பாளர் சொல்லி முடித்ததும், அந்த கோசாக் திகைப்பினால் பீடிக்கப்பட்டு ஒரு வார்த்தையைக் கூட அவன் பேசவில்லை. ஆனால், கிழக்கேயுள்ள அந்த சமவெளியைக் கடந்து புகழ் பரவிநின்ற அந்த வெற்றி வீரரைத் தமது கண்களால் குத்திட்டுப் பார்த்துக் கொண்டே சவாரி போனான். அவனுடைய வாய்ச்சாலகமெல்லாம் திடீரென்று நின்றது. அதற்குப் பதிலாக, வெகுளித்தனம் இல்லாத, அமைதியான பயபக்தியே அவனிடம் காணப்பட்டது. அந்த கோசாக்கிற்கு ஒரு வெகுமதி அளித்துவிட்டு, பறவைகளை அவைகளுடைய சொந்த வயல்களில் கொண்டு விடுவதைப் போல, அவனையும் விடுதலை செய்தார்' என்று தீயர்ஸ் சொல்லுகிறார்.

அவருடைய மனக்கண் முன்பு கவர்ச்சியாய் நின்ற அந்த மாஸ்கோவைப்பற்றி கனவு கண்டுகொண்டே, நெப்போலியன் மேலே சவாரி செய்தார். 'அதனுடைய சொந்த வயல்களில் கொண்டு விடப்பட்ட அந்தப் பறவை, நம்முடைய காவல் முகாமிற்கு பாய்ச்சலில் வந்தான். வருகிற வழியில் தன்னுடைய தோழர்களுக்குச் சொல்லுவதற்காக, நடக்காத விஷயங்களை யெல்லாம் மனதில் உற்பத்தி செய்து கொண்டு வந்தான். உண்மையில் நடந்த விஷயங்களை அவன் சொல்ல விரும்பவில்லை. ஏனெனில், அவையெல்லாம் சொல்லுவதற்கு தகுந்தவையல்ல என்று அவனுக்குத் தோன்றின. அவன் கோசாக்குகளைச் சந்தித்தான். பிலாட்டாவ் படைப் பிரிவோடு சேர்ந்து வேலை செய்யும் பட்டாளத்தைப்பற்றி விசாரித்தான். மாலையில் யாங்கோவா என்ற இடத்தில் முகாம்போட்டிருந்த தன்னுடைய எஜமானர் நிக்கலஸ் ராஸ்டோவைக் கண்டான். இலைனோடு பக்கத்து கிராமங்களைச் சுற்றிப் பார்த்து வருவதற்காக, ராஸ்டோவ் அப்பொழுதுதான் குதிரை மீது ஏறிக் கொண்டிருந்தார். அவனை மற்றொரு குதிரை மீது ஏறிக்கொள்ளும்படி சொல்லி, அவனையும் தம்முடனேயே அழைத்துச் சொன்றார்.



இளவரசி மேரி மாஸ்கோவில் இல்லை. ஆனால், இளவரசர் ஆண்ட்ரூ யூகித்தபடி, அபாய்மான இடத்திலிருந்து அவள் வெளியேறிவிட்டாள்.

ஸ்மாலென்ஸ்க் நகரிலிருந்து அல்பாட்டிச் திரும்பிய பின்பு, கனவிலிருந்து திடீரென்று விழித்தவரைப்போல வயோதிக இளவரசர் காணப்பட்டார். கிராமங்களிலிருந்து பாது காப்புக்காகப் படை திரட்டி, ஆயுத பாணிகளாக்க வேண்டுமென்று அவர் உத்தரவிட்டார். சேனாதிபதிக்கு ஒரு கடிதம் எழுதினார். தாம் பால்டு ஹில்ஸ் மாளிகையிலேயே கடைசி வரையில் இருந்து, அதைப் பாதுகாக்கத் தாம் தீர்மானித்திருப்பதாக அக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். பால்டு ஹில்ஸ் மாளிகையைப் பாதுகாப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுப்பதையோ, எடுக்காமல் இருப்பதையோ, சேனாதிபதியின் விருப்பத்திற்கு விட்டு விட்டதாக, அக்கடிதத்தில் மேலும் தெரிவித்தார். ருஷ்யாவின் பழைய ஜெனரல்களில் ஒருவர், கைதியாகவோ, கொல்லப்படவோ பால்டு ஹில்ஸில் ஏற்படலாமென்றும் அவர் கூறினார். தாம் கடைசி வரையில் பால்டு ஹில்ஸிலேயே இருக்கப் போவதாகத் தமது குடும்பத்தாரிடமும் அறிவித்தார்.

தாம் மட்டும் அங்கே இருந்துகொண்டு, இளவரசியையும் டெஸ்ஸலெஸையும் குஞ்சு இளவரசரையும் பாகுசாரவா என்ற இடத்திற்கு முதலில் போகும்படியும், அங்கிருந்து பின்னால் மாஸ்கோவிற்குப் போகும்படியும் அவர் உத்தரவு கொடுத்தார். ஒன்றும் செய்யாமல் சும்மா இருந்தவர் திடீரென்று தூக்கம் கூட இல்லாமல் தனது தந்தை கடுமையாக வேலை செய்வதைக் கண்டு, இளவரசி மேரி பீதி அடைந்தாள். அவரைத் தனியாக விட்டுப் போக அவளால் முடியவில்லை. ஆகவே, தனது வாழ்க்கையிலேயே முதல் தடவையாக அவருடைய உத்தரவை மீறி நடக்கத் துணிந்தாள். அவள் மட்டும் அதை விட்டுப்போக மறுத்தாள். அவளுடைய தந்தையின் கோபம், அவள் மீது ஒரு பயங்கரமான புயல் காற்றைப்போல வீசியது. அவளுக்கு அவர் செய்த அநியாயங்கள் ஒவ்வொன்றையும் மீண்டும் செய்ய ஆரம்பித்தார். தம்மை அவள்தான் உடல் மெலியும்படி செய்தாள் என்றும், தனது குமாரருடன் சண்டை போடும்படிச் செய்தாள் என்றும், தம்மீது ஆபாசமான சந்தேகங்கள் கொண்டிருந்தாள் என்றும், தம்முடைய வாழ்க்கையைக்கெடுப்பது ஒன்றையே அவளுடைய வாழ்க்கையின்

லட்சியமாகக் கொண்டிருக்கிறாள் என்றும் அவளைக் குற்றம்சாட்டி, தமது படிப்பு அறையிலிருந்து அவர் விரட்டினார். அப்படி விரட்டும்போது, அவள் அந்த ஊரை விட்டுப் போகாவிட்டால், அதைப்பற்றி அவருக்குக் கவலையில்லை என்றும் சொன்னார். அவள் உயிரோடு இருக்கிறாள் என்பதை நினைத்துப் பார்க்கக்கூட அவருக்கு விருப்பமில்லை என்றும், அவருடைய கண் முன்பாக அவள் இனி வரவேண்டாம் என்றும் அவர் எச்சரிக்கை செய்தார். பலவந்தமாக அவளை பால்டு ஹில்ஸிலிருந்து வெளியேற்றி விடுவார்களோ என்று அவள் பயந்தாள். அம்மாதிரி அவள் உத்தரவு எதுவும் கொடுக்காமல், தம்மைப் பார்க்க வேண்டாம் என்று மட்டும் சொல்லியதைக் கேட்டு இளவரசி மேரி மகிழ்ச்சி கொண்டாள். அவருடைய உள்ளத்தின் ஆழத்தில் அவள் அதை விட்டுப் போகாமல், அங்கேயே தங்கியிருக்கிறார் என்பதைக் கேட்டு, சந்தோஷம் அடைந்து கொண்டிருப்பதற்கு அது ஒரு ஆதாரம் என்பதை அவள் அறிவாள்.

குஞ்சு நிக்கலஸ் புறப்பட்டுப்போன மறுநாள் காலையில், வயோதிக இளவரசர் தமது சீருடையை அணிந்து, சேனாதிபதியைப் பார்த்து வருவதற்குத் தயாரானார். அவருடைய வண்டி ஏற்கெனவே வாசலில் நின்றுகொண்டிருந்தது. சீருடை அணிந்து வீட்டை விட்டு வெளியில் போவதை இளவரசி மேரி பார்த்தாள். தமது பதக்கங்களையெல்லாம் அணிந்து கொண்டு, தோட்டத்தில் ஆயுதபாணிகளாக அணிவகுத்து நிற்கும் விவசாயிகளையும், வீட்டு வேலைக்கார அடிமைகளையும் பார்வையிடுவதற்காக, தோட்டத்தின் வழியாக அவர் போனார். ஜன்னலில் அவள் உட்கார்ந்துகொண்டு தோட்டதிலிருந்து வந்துகொண்டிருக்கும் அவருடைய குரலைக் கேட்டுக்கொண்டிருந்தாள். திடீரென்று பீதியுற்ற முகங்களோடு பல மனிதர்கள் சாலை வழியாக ஓடிவந்தார்கள்.

முற்ற மண்டபத்திற்கு இளவரசி மேரிஓடி, அங்கிருந்த பூச்செடிகளின் பாதை வழியாகச் சாலைக்கு ஓடினாள். பாதுகாப்புப் படையைச் சேர்ந்தவர்களும், வீட்டு வேலைக்காரர்களும் கொண்ட ஒரு பெரிய கூட்டம், அவளை நோக்கி வந்துகொண்டிருந்தது, அவர்களுக்கு மத்தியில் கைத்தாங்கலாக யூனிபாரமம் பதக்கங்களும் அணிந்த ஒரு வயோதிகரை அவர்கள் தூக்கி வந்தார்கள். அவள் அவரிடம் ஓடினாள். சூரிய வெளிச்சம், சாலையிலுள்ள எலுமிச்சை மரங்களின் நிழலுக்கு ஊடே சிறு சிறு வட்டங்களாக விழுந்துகொண்டிருந்தது. இதனால் அவருடைய முகத்தில் என்ன

மாறுதல் ஏற்பட்டிருக்கிறது என்பதை அவளால் நிச்சயமாய் அறிந்துகொள்ள முடியவில்லை. அவள் பார்த்ததெல்லாம் கடுமையான, உறுதியான தோற்றம் கொண்டிருந்த அவர், இப்பொழுது பணிவும் பீதியும் கொண்ட தோற்றங்களோடு காணப்பட்டார் என்பதேயாகும். தமது குமாரியைப் பார்த்ததும், தமது உபயோகமில்லாத உதடுகளை அசைத்து, ஒரு கரகரப்பான சப்தத்தை உண்டு பண்ணினார். அவர் என்ன கேட்கிறார் என்பதை அதிலிருந்து அறிந்து கொள்வது அசாத்தியமாயிருந்தது. அவரைத் தூக்க அவருடைய படிப்பு அறைக்குக் கொண்டு போனார்கள். சமீப காலத்தில் அவர் எந்த சோபாவைக் கண்டு பயந்து கொண்டிருந்தாரோ அதில் அவரைக் கிடத்தினார்கள்.

அன்றிரவே டாக்டர் வரவழைக்கப்பட்டார். அவரிடமிருந்து சிறிது ரத்தத்தை அவர் வெளிப்படுத்தினார். வயோதிக இளவரசருக்கு வலது பக்கமாக் பக்கவாதம் பீடித்திருப்பதாக டாக்டர் சொன்னார்.

பால்டு ஹில்ஸில் தங்கியிருப்பது, வரவர அபாயகரமாயிருந்தது. ஆகவே, மறுநாள் அவர்கள் வயோதிக இளவரசரோடு, பாகுசாரவா எஸ்டேட்டிற்குப் போனார்கள். டாக்டரும் கூடவேபோனார்.

அவர்கள் பாகுசாரவா போய்ச் சேர்ந்தபொழுது, அதற்கு முன்பாகவே, டெஸ்ஸலெஸூம் குஞ்சு இளவரசரும், அதை விட்டு மாஸ்கோவிற்குப் புறப்பட்டுவிட்டார்கள். இளவரசர் ஆண்ட்ரூ புதிதாய் பாகுசாரவாவில் கட்டிய வீட்டில், மூன்று வாரங்களாக வயோதிக இளவரசர் பக்கவாதத்தினால் படுத்தப் படுக்கையாயிருந்தார். குணமாகவோ, அல்லது வியாதி அதிகமாகவோ இல்லாமல், ஒரே மாதிரியாக நிலைமை இருந்து வந்தது. அவருக்குப் பிரக்ஞை இல்லை. ஒரு கோணலான பிரேதத்தைப்போல அவர் படுத்திருந்தார். இடைவிடாமல் எதையோ முனங்கிக்கொண்டும், அவருடைய புருவங்களையும், உதடுகளையும் சுளித்துக்கொண்டும் இருந்தார். அவரைச் சுற்றி நடப்பவைகளை அவர் அறிந்து கொண்டிருக்கிறாரா, இல்லையா என்பதைச் சொல்ல முடியாது. ஒன்று மட்டும் நிச்சயம். அதாவது, அவர் எதையோ சொல்லுவதற்காகத் துடித்துக்கொண்டிருக்கிறார். ஆனால், அது என்னது என்பதை ஒருவராலும் சொல்ல முடியாது. வியாதி அடைந்த, கிறுக்குப் புத்தியுள்ள ஒருவர், சொல்ல விரும்பும் ஏதோ ஒரு விசித்திரமான விஷயமாக இருக்கலாம், அல்லது பொதுநன்மையைப் பொறுத்த விஷயமாக இருக்கலாம், அல்லது குடும்பத்தைப் பொறுத்த விஷயமாக இருக்கலாம்.

இந்த பரபரப்புக்கு அர்த்தம் எதுவும் கிடையாதென்றும், உடல் கோளாறுகளினால் ஏற்படுவதாய் இருக்கலாமென்றும் டாக்டர் சொன்னார். ஆனால், தன்னிடம் எதையோ அவர் சொல்ல விரும்புவதாக இளவரசி மேரி நினைத்தாள். ஏனெனில், அவருடைய பிரசன்னத்தில் இந்த பரபரப்பு அதிகரித்து வந்ததால், அவளுடைய அபிப்பிராயத்தை அது உறுதி செய்வதாய் இருந்தது.

அவருக்கு உள்ளத்திலும் உடலிலும் கஷ்டமிருக்கிறது என்பது தெளிவாய் தெரிந்தது. அவர்இனி சௌக்கியமடைவார் என்பதில் நம்பிக்கை இல்லை. அவர் பிரயாணம் செய்வதும், அசாத்தியமான காரியம். அவரை நடுத்தெருவில் சாகும்படி விட்டுவிடவும் முடியாது. அந்த முடிவு, அந்தக் கடைசி முடிவு வந்துவிட்டால் நல்லதல்லவா? என்று இளவரசி மேரி சில சமயங்களில் நினைத்தாள். தூக்கமே இல்லாமல் இரவும் பகலும் அவரைக் கவனித்து வந்தாள். அவரிடம் அபிவிருத்தி அடையாளங்கள் தோன்றுகின்றனவா என்பதற்காக அவள் கவனிக்கவில்லை. அவருடைய முடிவு நெருங்கிவருவதற்கான அடையாளங்களை கண்டுபிடிக்கவே அவள் விரும்பினாள். இது பயங்கரமானது.

இந்த உணர்ச்சி தன்னிடம் இருப்பதாக ஒப்புக்கொள்வதற்கு அவளுக்கு விசித்திரமாய் இருந்தது. என்றாலும், அந்த உணர்ச்சி அவளிடம் இருந்தது. அதைவிட பயங்கரமான விஷயம், அவளைப் பொறுத்தவரையில், அவளுக்குத் தோன்றியது. ஏதோ ஒன்று நடக்கப் போகிறது என்ற நினைப்பில் அவள் அவரோடு தங்கியிருந்த போதும், அதற்குப் பின்னால் அவளுடைய தந்தை அசௌக்கிய மானபோதும், அவளுக்கு இந்த உணர்ச்சி தோன்றியது. அதாவது, தனது சொந்த விருப்பங்களும் நம்பிக்கைகளும், அவளிடம் மறைந்தோ, தூங்கிக்கொண்டோ இருந்தவை, இப்பொழுது மீண்டும் விழித்துக்கொண்டன. பல வருஷங்களாக அவள் மனதில் நுழையாமல் இருந்த எண்ணங்கள் தனது தந்தையின் பயத்திலிருந்து விடுபட்ட சுதந்திர வாழ்க்கையைப் பற்றிய எண்ணங்களும், காதலும் குடும்ப மகிழ்ச்சியும் கொண்ட எண்ணங்களும் -இப்பொழுது அவளுடைய மனக்கண் முன்பாக, தொடர்ச்சியாக சாத்தான் சோதனைகளைப் போல மிதந்து கொண்டேயிருந்தது. அவைகளை அவள் ஒதுக்கித் தள்ளினாலும், அவருக்குப் பின்னால் அவளுடைய வாழ்க்கையை அவள் எப்படி அமைப்பாள் என்பதைப் பற்றிய கேள்விகள், அவளுக்குத் தொடர்ந்து தோன்றிக்கொண்டேயிருந்தன. இவையெல்லாம் சாத்தானின் சோதனைகள். இதை இளவரசி மேரியும் அறிவாள். அந்த

சாத்தானுக்கு எதிரான ஆயுதம் என்பது, பிரார்த்தனை ஒன்றுதான் என்பதையும்அவள் அறிவாள். அப்படியே அவள் பிரார்த்தனை செய்யவும் முயற்சித்தாள். பிரார்த்தனை செய்வதைப்போல ஒரு பாவனையை மேற்கொண்டு, அங்கிருந்த தெய்வச் சிலைகளை நோக்கினாள். பிரார்த்தனை வார்த்தைகளையும் சொன்னாள். ஆனால், அவளால் பிரார்த்தனை செய்ய முடியவில்லை. மற்றொரு உலகத்தின் வாழ்க்கை-கடுமையான, சுதந்திரமான நடவடிக்கையுள்ள உலகம் இதுவரை அவளுக்கு இதம் செய்து வந்ததும், அவள் பிரார்த்தனை செய்து வந்ததுமான அந்த ஆத்மீக உலகத்திலிருந்து - முற்றிலும் மாறான மற்றொரு உலகம், அவளைப் பீடித்திருப்பதாக அவள் உணர்ந்தாள். அவளால் பிரார்த்தனை செய்ய முடியவில்லை. அழவும் முடியவில்லை. இகலோகக் கவலைகள் அவளைப் பற்றிக்கொண்டன.

பாகுசாரவாவில் தங்கியிருப்பது வரவர அபாயகரமாயிருந்தது. பிரஞ்சுக்காரர்கள் நெருங்கி வருவதாக, நாலா பக்கங்களிலிருந்தும் செய்திகள் வந்துகொண்டிருந்தன. பாகுசாரவாவிலிருந்து பத்து மைல் தூரத்திலுள்ள ஒரு கிராமத்தில், பிரஞ்சுக் கொள்ளைக்காரர்களால் ஒரு வீடு கொள்ளையடிக்கப்பட்டது என்றும் ஒரு செய்தி வந்தது.

வயோதிக இளவரசரை அங்கிருந்து கொண்டுபோய் விட வேண்டுமென்று டாக்டர் வற்புறுத்தினார். அந்த மாகாணத்து மிராசுதார்களின் மார்ஷல், ஒரு அதிகாரியை இளவரசி மேரியிடம் அனுப்பி, சீக்கிரமாக அவள் அதைவிட்டுப் போய்விடவேண்டு மென்று சொல்லச் சொன்னார். கிராமாந்திர போலீஸ் தலைவரும் பாகுசாரவாவிற்கு வந்து அதையே வற்புறுத்தினார். 25-மைல்களுக்குள் பிரஞ்சுக்காரர்கள் வந்துவிட்டதாகவும், கிராமங்களில் பிரஞ்சு பிரகடனங்கள் விநியோகிக்கப்படுவதாகவும், 15-ந் தேதிக்குள் அவளுடை தந்தையை அழைத்துக்கொண்டு அதைவிட்டு அவள் போகாவிட்டால், அதனால் ஏற்படும் பலன்களுக்குத் தாம் பொறுப்பல்ல என்றும் அவர் தெரிவித்தார்.

அந்த இடத்தைவிட்டு 15-ந் தேதியன்று போவதென்று இளவரசி தீர்மானித்தாள். புறப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதிலும், அவளிடம் வந்த ஒவ்வொருவரும் உத்தரவுகள் கொடுப்பதிலுமேயே நாள் பூராவாகக் கழிந்தது. 14-ந் தேதியன்று இரவு படுக்கை உடையை அணிந்துகொள்ளாமலேயே, இளவரசர் படுத்திருந்த அறைக்குப் பக்கத்திலுள்ள அறையில் அவள் காலம் கழித்தாள். பல தடவைகள் அவள் விழித்தபோது, அவருடைய

முணுமுணுப்புகளையும், முனங்கல்களையும், அவருடைய படுக்கையின் கிரீச்சப்தத்தையும், டைக்கனின் காலடி ஓசைகளையும் அந்த டாக்டரும் டைக்கனும் அவரைத் திருப்பிப் போடும்போது ஏற்பட்ட சப்தங்களுயம் அவள் கேட்டாள். கதவுக்குப் பக்கத்தில் பல தடவைகள் அவள் நின்று கவனித்துக்கேட்டபோது, அவருடைய முணுமுணுப்புகள் வழக்கத்தைவிட அதிகமான சப்தத்தைக் கொண்டிருப்பதையும், அடிக்கடி அவரைத் திருப்பிப்போட்டுக் கொண்டிருப்பதையும் அவள் கேட்டாள். அவளால் தூங்க முடியவில்லை. பல தடவைகள் கதவுக்குப் பக்கத்தில் போய் நின்று கவனித்துக் கேட்டு, உள்ளே நுழைய விரும்பினாள். ஆனால், அப்படி அவள் செய்யவில்லை. வயோதிக இளவரசர் பேசாமல் இருந்தாலும் அவரைப்பற்றி மற்றவர்கள் கொள்ளும் ஒவ்வொரு கவலையைப்பற்றியும், அவருக்கு மனக்கஷ்டமாய் இருந்தது என்பதை அவள் கண்டாள். அவள் தன்னை அறியாமல் அவரை நோக்கியபோது, எவ்வளவு அதிருப்தியோடு அந்த பார்வையை அவர் தவிர்க்கிறார் என்பதை அவள் கவனித்தாள். அகால நேரத்தில்-இரவில், அவருடைய அறைக்குள் போவது, அவருக்கு எரிச்சலை உண்டுபண்ணும் என்பதை அவள் அறிவாள்.

ஆனால், இதற்கு முன்பாக அம்மாதிரி அவருக்காக அவள் வருந்தியதில்லை; அல்லது, அவரை இழந்து விடுவாள் என்ற பயத்தை, அவ்வளவு அதிகமாக இதற்கு முன்னால் அவள் உணர்ந்ததும் இல்லை. அவளுடைய வாழ்க்கை பூராவிலும், அவருடைய ஒவ்வொரு வார்த்தையிலும் ஒவ்வொரு செய்கையிலும், அவள் மீது அவருக்கு உண்டான அன்பு பிரதிபலிப்பதை அவள் கண்டாள். இம்மாதிரி நினைவுகளுக்கு இடையே, சில சமயங்களில் அவளுடைய மனோராஜ்யத்தில் சாத்தான் நுழைவதுண்டு. அதாவது, அவருடைய மரணத்திற்குப் பின்னால், காரியங்கள் எப்படியிருக்கும், அவளுடைய புதிய, விடுதலை பெற்ற வாழ்க்கை எப்படியிருக்கும் என்ற சிந்தனைகள், அவளுக்குத் தோன்றுவதுண்டு. மிகுந்த அருவருப்போடு அந்த சிந்தனைகளை அவள் விரட்டி அடிப்பாள். அதிகாலையில் அவர் அமைதி அடைந்தார். அவளும் தூங்க ஆரம்பித்தாள்.

வெகு நேரம் கழித்து அவள் விழித்தாள். விழிக்கும்போது அநேகமாய் ஏற்படக்கூடிய உண்மையான சிரத்தை, அவளுக்கு ஒரு விஷயத்தைத் தெளிவாய் காட்டியது. அதாவது, அவளுடைய முக்கியமான கவலையெல்லாம், அவளுடைய தந்தையின்

அசௌக்கியத்தைப் பற்றியது என்பதாகும். அவள் விழித்ததும், கதவுக்குப் பின்னால் என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதை கவனித்தபோது, அவருடைய புலம்பலைக் கேட்டாள். அதைக் கேட்டதும், விஷயங்கள் இன்னும் பழையபடியேதான் இருக்கின்றன என்று தனக்குள் சொல்லி, ஒரு பெருச்சு விட்டாள்.

'என்ன நடந்திருக்க முடியும்? எனக்கு என்ன வேண்டும்? அவர் மரணமாக வேண்டும் என்பதுதான் என்னுடைய விருப்பம்?' என்று அவள் தன்னையே வெறுத்துக்கொண்ட உணர்ச்சியோடு அழ ஆரம்பித்தாள்.

அவள் ஸ்நானம் செய்து உடை அணிந்து பிரார்த்தனைகளை முடித்துவிட்டு, முற்ற மண்டபத்திற்கு வெளியே போனாள். அங்கே குதிரைகள் இல்லாமல், வண்டிகள் நின்று கொண்டிருந்தன. அந்த வண்டிகளில் சாமான்களை ஏற்றிக் கொண்டிருந்தார்கள்.

வெதுவெதுப்பான, மந்தமான காலை நேரமாயிருந்தது. இளவரசி மேரி முற்ற மண்டபத்திலேயே நின்று, தன்னுடைய ஆத்மார்த்த வீழ்ச்சியைக் கண்டு பயம் கொண்டு, தன்னுடைய தந்தையிடம் போவதற்கு முன்பாக, தன் சிந்தனைகளை ஒழுங்குபடுத்த முயற்சித்துக் கொண்டிருந்தாள்.

டாக்டர் கீழே இறங்கி வந்து அவளிடம் சென்றார்.

'அவர் இன்று கொஞ்சம் சௌக்கியமாயிருக்கிறார். நான் உன்னைத்தான் தேடிக் கொண்டிருந்தேன். அவர் சொல்வதிலிருந்து, அவர் என்ன சொல்ல விரும்புகிறார் என்பதை, கொஞ்சமாவது ஒருவர் தெரிந்துகொள்ள முடியும். அவருடைய சிந்தனை தெளிவாய் இருக்கிறது. அவர் உன்னை அழைக்கிறபடியால், நீ உள்ளே வா...' என்று அவர் சொன்னார்.

இதைக்கேட்டதும், இளவரசி மேரியின் இருதயம் பலமாய் அடிக்க ஆரம்பித்து, அவள் முகமும் வெளிறியது. தான் கீழே விழுந்து விடாமல் இருப்பதற்காக, அவள் சுவரில் சாய்ந்து கொண்டாள். அவளுடைய இருதயம் அந்த பயங்கரமான, கெடுதலான மயக்கங்களினால் நிரம்பி வழிந்து கொண்டிருக்கும் போது, அவரோடு, பேசுவதோ, அவரைப் பார்ப்பதோ, அவருடைய கண்கள் அவளை நோக்குவதோ என்பதையெல்லாம் அவள் நினைத்தபோது, அவளை மகிழ்ச்சியும் பயங்கரமும் வாட்டின.

'உள்ளே வா' என்று டாக்டர் சொன்னார்.

தன்னுடைய தந்தையின் அறைக்குள் இளவரசி மேரி நுழைந்து, அவருடைய படுக்கைக்குப் பக்கத்தில் போனாள். அவர் மல்லாந்து

படுத்திருந்தார். தலையை உயர்த்தி வைத்திருந்தார்கள். அவருடைய சிறிய, மெலிந்த கைகள், நீல நரம்புகள் வெளியே புடைத்துக் கொண்டிருக்க, அந்த மெத்தையின் மீது விழுந்து கிடந்தன. அவருடைய இடது கண், அவளுக்கு நேராகப் பார்வையைச் செலுத்தியது. அவருடைய வலது கண், கோணலாகக் காணப்பட்டது. அவருடைய புருவங்களும், உதடுகளும் அசைவற்று இருந்தன. எல்லாவற்றையும் சேர்த்து அவரைப் பார்த்தபோது, அவர் மெலிந்தவராகவும், சிறியவராகவும், பரிதாபகரமானவராகவும் காணப்பட்டார். அவருடைய முகம் சுருங்கியோ, அல்லது கரைந்தோ போனதாகத் தோன்றியது. அவருடைய அங்க அடையாளங்கள் சிறியதாய் விட்டன. இளவரசி மேரி அவரிடம் சென்று அவர் கையை முத்தமிட்டாள். அவருடைய இடது கை, அவளுடைய கையை அழுத்தியது. ஆகவே, வெகு நேரமாக அவளுக்காக அவர் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார் என்பதை அவள் அறிந்து கொண்டாள். அவளுடைய கையை அவர் முறுக்கினார். அவருடைய புருவங்களும், உதடுகளும் கோபமாகப் படபடத்தன.

அவர் தன்னிடம் என்ன விரும்புகிறார் என்பதை அறிவதற்கு, அவள் பீதியோடு அவரை நோக்கினாள். தம்முடைய இடது கண்ணால் அவளுடைய முகத்தைப் பார்ப்பதற்காக, அவள் இடம் மாறி நின்றபோது, அவர் அமைதி அடைந்தான். சில வினாடிகள் அவருடைய முகத்திலிருந்து தமது கண்களை எடுக்கவில்லை. பின்னால், அவருடைய உதடுகளும், நாக்கும் அசைத்தன. சப்தங்கள் வெளி வந்தன. அவர் பேச ஆரம்பித்தார். பீதியோடும், இரக்கத்தோடும் அவளை நோக்கினார். அவளால் அறிந்து கொள்ள முடியாதோ என்று அவர் பயந்தது போலத் தோன்றியது.

தன்னுடைய பூரண சாமர்த்தியத்தையும் ஒன்றுகூட்டி, இளவரசி மேரி அவரை நோக்கினாள். அவருடைய நாக்கை அசைப்பதற்காக அவர் செய்த முயற்சிகள் கோமாளித்தனமாயிருந்தபடியால், அவள் தனது கண்களைக் கவிழ்த்துக்கொண்டாள். அவளுடைய தொண்டைக்கு வந்து கொண்டிருந்த விம்மல்களைக் கஷ்டத்தோடு அமுக்கினாள். அவர் ஏதோ சொன்னார். அதே வார்த்தைகளை பல தடவைகள் திரும்பத் திரும்பச் சொன்னார். அவளால் அவற்றைப் புரிந்துகொள்ள முடியவில்லை. அவர் சொல்லுவது எதுவாக இருக்கும் என்பதை, அவள் யூகிக்க முயற்சி செய்து, அவர் சொல்லிய வார்த்தைகளைக் கேள்விக் குறியோடு அவள் திரும்பச் சொன்னாள்.

'ம்ம்... அர்... ஏட்... ஏட்...' என்று பல தடவைகள் அவர் சொன்னார்.

இந்த சப்தங்களை அறிந்து கொள்வது முற்றிலும் அசாத்தியம். தாம் அறிந்து கொண்டதாக டாக்டர் நினைத்தார். கேள்விக் குறியோடு அவர், 'மேரி, நீ பயப்படுகிறாயா?' என்று திருப்பிச் சொன்னார். இளவரசர் தமது தலையைக் குலுக்கிவிட்டு, மீண்டும் அதே சப்தங்களை உச்சரித்தார்.

'எனது உள்ளம், எனது உள்ளம் வருத்துகிறது?' என்று இளவரசி மேரி கேட்டாள்.

அப்படித்தான் என்று சொல்லுவதைப்போல அவர் முனங்கினார். அவளுடைய கையை எடுத்து, அவருடைய மார்பில் பல இடங்களில் வைத்து அழுத்தி, அதை வைப்பதற்கு சரியான இடத்தைக் கண்டு பிடிப்பதுபோல, அவர் செய்து கொண்டிருந்தார்.

'எப்பொழுதும் நினைவுகள்... உன்னைப் பற்றித்தான்... நினைவுகள்...' என்று, முன்பு சொல்லியதைவிட அதிகமான தெளிவோடு, அவர் கூறினார். இப்பொழுது தாம் சொல்லுவதைப் புரிந்து கொள்ள முடியும் என்ற நிச்சயத்தில் அவர் இருந்தார்.

தனது விம்மல்களையும், கண்ணீரையும் மறைக்க முயற்சி செய்து, இளவரசி மேரி தனது தலையை அவர் கையில் அழுத்தினாள்.

அவளுடைய தலை முடியை அவர் தடவிக் கொடுத்தார்.

'இரவு பூராவாக உன்னை நான் கூப்பிட்டுக் கொண்டிருந்தேன்...' என்று அவர் சொன்னார்.

'எனக்கு மட்டும் தெரிந்திருந்தால்... நான் உள்ளே வர பயந்து கொண்டிருந்தேன்' என்று கண்ணீரோடு அவள் சொன்னாள்.

அவளுடைய கையை அவர் அழுத்தினார்.

'நீ தூங்கவில்லையா?'

'இல்லை, நான் தூங்கவில்லை' என்று இளவரசி மேரி சொல்லிவிட்டு, தனது தலையை ஆட்டினாள்.

தன்னை அறியாமலேயே தனது தந்தை செய்வதைப் போல செய்ய ஆரம்பித்து, தன்னுடைய எண்ணங்களைக் கூடியவரையில் சைகைகள் மூலமாகக் காட்ட ஆரம்பித்தாள். அவளுடைய நாக்கும் அசைவதற்குக் கஷ்டமாக இருப்பதுபோலத் தோன்றியது.

'அன்பிற்குரிய... அன்பான...' அவர் என்னசொல்லுகிறார் என்பதை இளவரசி மேரியால் இதிலிருந்து அறிந்து கொள்ள

முடியவில்லை. ஆனால், அவளிடம் இதற்கு முன்பு அவர் காட்டியிராத ஒரு கனிவையே, அந்த வார்த்தையால் காட்ட விரும்புகிறார் என்பது அவருடைய பார்வையிலிருந்து தெளிவாய்த் தோன்றியது. 'நீ ஏன் உள்ளே வரவில்லை?'

'நான், நான் அவர் மரணமடைய வேண்டுமென்று விரும்பிக் கொண்டிருந்தேன்' என்று இளவரசி மேரி நினைத்தாள்.

அவர் சிறிது நேரம் மௌனமாய் இருந்தார்.

'உனக்கு வந்தனம்... அன்பான... குமாரியே... எல்லாவற்றையும், எல்லாவற்றையும்... மன்னித்து விடு... உனக்கு வந்தனம்... மன்னித்துவிடு... உனக்கு வந்தனம்...' என்று அவர் சொன்னார். அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருக ஆரம்பித்தது. 'ஆண்ட்ரூவை கூப்பிடு' என்று அவர் திடீரென்று சொன்னார். ஒரு குழந்தைத்தனமான, பீதியுற்ற சந்தேகத் தோற்றம், அவர் பேசியபோது அவருடைய முகத்தில் காணப்பட்டது.

இம்மாதிரி கேட்பது அர்த்தமற்றது என்பதை, அவரே அறிந்திருப்பதுபோலத் தோன்றியது; அல்லது, இளவரசி மேரிக்கு அம்மாதிரி தோன்றியது.

'அவரிடமிருந்து ஒரு கடிதம் வந்திருக்கிறது' என்று அவள் பதிலளித்தாள்.

அவர் அவளைக் கோழைத்தனமான ஆச்சரியத்தோடு நோக்கினார்.

'அவர் எங்கே இருக்கிறார்?'

'அவர் ஸ்மாலென்ஸ்க் நகரில் ராணுவத்தோடு இருக்கிறார், அப்பா.'

அவர் தமது கண்களை டிக்கொண்டு , வெகு நேரம் மௌனமாயிருந்தார். தமது சந்தேகங்களுக்கு பதில் கூறுவதைப் போலவும், ஒவ்வொன்றையும் இப்பொழுது அவர் நினைவு கூர்ந்து அறிந்து கொண்டதைப்போலவும், தமது தலையை அவர் அசைத்து, மீண்டும் தமது கண்களைத் திறந்தார்.

'ஆம்' என்று அவர் மிருதுவாகவும், தெளிவாகவும் சொன்னார். 'ருஷ்யா நாசமாய் போயிற்று. அவர்கள் ருஷ்யாவை அழித்து விட்டார்கள்.'

அவர் விம்மி அழ ஆரம்பித்தார். மீண்டும் அவருடைய கண்களிலிருந்து நீர் பெருகியது. இளவரசி மேரியால், இனியும் தன்னை அடக்கிக் கொண்டிருக்க முடியவில்லை. அவருடைய முகத்தைப் பார்த்ததும் அவள் அழுதாள்.

மீண்டும் அவர் தமது கண்களை டிக் கொண்டார். அவருடைய விம்மல்கள் நின்றன. தமது கண்களை அவர் சுட்டிக் காட்டினார். அதை அறிந்து கொண் டைக்கன் அவரது கண்ணீரைத் துடைத்தான்.

மீண்டும் அவர் தமது கண்களைத் திறந்து எதையோ சொன்னார். வெகு நேரம் வரை ஒருவராலும் அதை அறிந்து கொள்ள முடியவில்லை. கடைசியில் அதை டைக்கன் அறிந்துகொண்டு, திருப்பிச் சொன்னான். அவர் என்ன மனோபாவத்தில் பேசிக்கொண்டிரந்தாரோ, அதே மனோபாவத்தில் அவருடைய வார்த்தைகளுக்கு அர்த்தம் கண்டு பிடிக்க இளவரசி மேரி முயற்சித்தாள். ருஷ்யாவைப்பற்றியோ, அல்லது இளவரசர் ஆண்ட்ரூவைப் பற்றியோ, அல்லது தன்னைப்பற்றியோ, அல்லது அவருடைய பேரனைப் பற்றியோ, அல்லது தம்முடைய மரணத்தைப் பற்றியோ, அவர் பேசியிருக்க வேண்டும் என்று அவள் நினைத்தாள். ஆகவே, அவருடைய வார்த்தைகளை அவளால் யூகிக்க முடியவில்லை.

'நீ உனது வெள்ளை ஆடையை அணிந்து கொள். எனக்கு அது பிரியமானது' என்பது தான் அவர் கூறியது.

இதை அறிந்து கொண்டதும், இன்னும் அதிகமாக இளவரசி மேரி விம்மி அழுதாள். அவளுடைய கையைப்பற்றி, அவளை வெளியே வராந்தாவிற்கு டாக்டர் அழைத்துச் சென்று, அவளுக்கு இதமான வார்த்தைகள் கூறி, பிரயாணத்திற்கான ஏற்பாடுகளுக்கு இணங்கும்படிச்செய்ய அவர் முயற்சித்துக் கொண்டிருந்தார். அவள் அறையை விட்டுப்போனதும், வயோதிக இளவரசர் மீண்டும் தமது குமாரரைப் பற்றியும், யுத்தத்தைப் பற்றியும், சக்கரவர்த்தியைப் பற்றியும் பேச ஆரம்பித்து, கோபமாகத் தமது புருவங்களை நெறித்து, தமது கரகரப்பான தொனியை உயர்த்தினார். அச்சமயத்தில் அவருடைய இரண்டாவதாகவும், கடைசியானதுமான நோய் தாக்குதல் ஏற்பட்டது.

இளவரசி மேரி தாழ்வாரத்தில் இருந்தாள். அன்றைய தினம் தெளிவாகவும், உஷ்ணமாகவும் இருந்தது. சூரியன் நன்றாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தான். அவளுக்கு ஒன்றும் புரியவில்லை; எதைப்பற்றியும் நினைக்க முடியவில்லை; எந்த உணர்ச்சியும் அவளுக்கு இல்லை. தனது தந்தை மீதுள்ள ஆர்வமுள்ள ஆசை ஒன்றுதான், அந்த வினாடி வரையில் அவள் உணர்ந்திராத அந்த ஆசை ஒன்றுதான், அவளுக்கு இருந்தது. விம்மி விம்மி அழுது கொண்டே தோட்டத்திற்குள் ஓடி, இருபுறங்களிலும் எலுமிச்சை

மரங்களைக் கொண்ட சாலை வழியாகக் குளம் வரையில் ஓடினாள். அந்த எலுமிச்சை மரங்களை இளவரசர் ஆண்ட்ரூ நட்டு வைத்தார்.

'ஆம்... நான்... நான்... நான்... அவர் இறக்க வேண்டுமென்று விரும்புகிறேன். ஆம், அது சீக்கிரமாக முடிய வேண்டுமென்று விரும்பினேன்... நான் அமைதியாக இருக்க விரும்பினேன்... என்னைப்பற்றி என்ன ஆவது? அவர் இல்லாதபோது, அந்த அமைதி தான் என்ன பலன் கொடுக்கப்போகிறது?' என்று, இளவரசி மேரி அந்தத் தோட்டத்தில் உலவிக்கொண்டே, தனது கைகள் விம்மி விம்மி அழுது கொண்டிருப்பதால் உயர்ந்து தணியும் தனது மார்பில் வைத்து அழுத்திக்கொண்டே, முணுமுணுத்தாள்.

அந்த தோட்டத்தைச் சுற்றி முடித்ததும், அந்தப் பாதை மீண்டும் அவளை வீடு கொண்டு வந்து சேர்த்தது. வீட்டிற்கு வந்ததும் குமாரி பௌரியனை அவள் பார்த்தாள். பாகுசாரவா என்ற இடத்திலேயே அவள் தங்கப் போகிறாள். அதை விட்டுப்போக அவள் விரும்பவில்லை. அச்சமயம் அவள் தன்னோடு ஒரு அந்நியரை அழைத்துக் கொண்டு இளவரசி மேரியிடம் வந்தாள். அவர்தான் அந்த ஜில்லாவின் மிராசுதார்களின் மார்ஷல். சீக்கிரமாக இளவரசி அதைவிட்டுப் புறப்பட வேண்டிய அவசியத்தை எடுத்துக் கூறுவதற்காக அவர் நேராக வந்தார். இளவரசி மேரி அவர் சொல்லுவதைக் கேட்டாள். ஆனால், அவர் என்ன சொல்லுகிறார் என்பதை அவளால் புரிந்து கொள்ள முடியுவில்லை. அவரை வீட்டிற்குள்ளே அழைத்துச் சென்று, அவருக்கு மத்தியான சாப்பாடு அளித்து, அவளும் அங்கே அமர்ந்தாள். பின்னால், அவரிடம் சொல்லிக்கொண்டு, வயோதிக இளவரசரின் அறை வாசலுக்குப் போனாள். ஒரு பரபரப்படைந்த முகத்தோடு வெளியே வந்த டாக்டர், அவளை உள்ளே போகக் கூடாது என்று சொன்னார்.

'போய்விடு, இளவரசியே! போய் விடு... போய்விடு!'

அவள் மீண்டும் தோட்டத்திற்குள் வந்து, அந்த குளத்திற்குப் பக்கத்திலுள்ள சரிவில், புல் தரையில் அமர்ந்தாள். அவள் அங்கிருப்பதை ஒருவராலும் பார்க்க முடியாது. அவள் எவ்வளவு நேரம் அங்கே இருந்தாள் என்பது அவளுக்குத் தெரியாது. அங்கிருந்த பாதை வழியாக ஒரு பெண் ஓடிவரும் காலடி ஓசையைக் கேட்டு, அவள் தன்னுணர்வு பெற்றாள். அவள் எழுந்தாள். அவளைப் பார்ப்பதற்காக அவளுடைய வேலைக்காரி துனியாஷா தேடிக் கொண்டிருப்பது போலத் தோன்றினாள். தன்னுடைய எஜமானியைப் பார்த்ததும், பீதியுற்றவள் போல அவள் திடீரென்று நின்றாள்.

'தயவுசெய்து வாருங்கள், இளவரசியே... இளவரசர்...' என்று துனியாஷா நிறுத்திநிறுத்திச் சொன்னாள்.

'இதோ, இப்பொழுதே, நான் வருகிறேன், நான் வருகிறேன்' என்று இளவரசி வேகமாகப் பதில் சொல்லிவிட்டு, துனியாஷா என்ன சொல்லிக் கொண்டிருந்தாளோ, அதை முடிப்பதற்கு விடாமல், அந்தப் பெண்ணைப் பார்க்காமல் தவிர்த்து வீட்டை நோக்கி ஓடினாள்.

'இளவரசியே, அது கடவுளின் விருப்பம். எதற்கும் நீங்கள் தயாராக இருக்க வேண்டும்' என்று, அவளை அந்த வீட்டு வாசலில் சந்தித்த மார்ஷல் சொன்னார்.

'என்னைத் தனியாக விடுங்கள், அது உண்மை அல்ல' என்று கோபமாக அவ்ரைப் பார்த்துக் கூச்சலிட்டாள்.

அவளை நிறுத்துவதற்கு டாக்டர் முயற்சித்தார். அவள் அவரை அப்புறமாகத் தள்ளிவிட்டு, அவளுடைய தந்தையின் அறையினுடைய வாசலுக்கு ஓடினாள். 'எதற்காக, பீதியுற்ற முகங்களோடு கூடிய இந்த மக்கள் என்னைத் தடுக்கிறார்கள்? அவர்கள் யாரும் எனக்கு வேண்டியதில்லை. அவர்கள் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்?' என்று அவள் நினைத்தாள். அவள் கதவைத் திறந்தாள். முன்னால் இருண்டிருந்த அந்த அறையில், இப்போது பிரகாசமான பகல் வெளிச்சம் பரவியிருந்தது. அவள் திடுக்கிட்டாள். அந்த அறையில் அவளுடைய தாதியும் மற்ற பெண்களும் இருந்தார்கள். அவர்கள் எல்லாரும் அவளுக்கு வழி விடுவதற்காக கட்டிலுக்குப் பக்கத்திலிருந்து விலகி நின்றார்கள். அவர் முன் போலவே படுக்கையில் படுத்திருந்தார். அவருடைய அமைதியான முகத்தில் காணப்பட்ட கடுமையான தோற்றம், இளவரசி மேரியை வாசற்படியிலேயே நிறுத்தியது.

'இல்லை, அவர் இறக்கவில்லை-அது முடியாத காரியம்' என்று அவள் தனக்குள்ளாக சொல்லிக்கொண்டு, அவரிடம் நெருங்கினாள். அவளைப்பற்றிய பயங்கரத்தை அவள் அடக்கிக்கொண்டு, அவருடைய கன்னத்தில் தன் உதடுகளை அழுத்தினாள். ஆனால், உடனே பின்வாங்கினாள். அவருக்காக அவளிடம் ஏற்பட்டிருந்த எல்லா கனிவுகளும் உடனே மறைந்தன. அதற்குப் பதிலாக், தனக்கு முன்பாக அங்கே படுத்துக் கிடப்பதைப் பார்த்து, அவளுக்கு ஒரு பயங்கர உணர்ச்சி ஏற்பட்டது. 'இல்லை, அவர் உயிரோடு இல்லை. அவர் இருந்த இடத்தில், இப்பொழுது அவளுக்குப் பழக்கமில்லாத, விரோதமான, பயங்கரமான, அருவருக்கத்தக்க எதோ ஒரு அதிசயம் இருக்கிறது.' அவள் தனது

முகத்தைத் தனது கைகளால் மறைத்துக்கொண்டு, அங்கிருந்த டாக்டர் மீது சாய்ந்தாள். அவர் பிடித்துக் கொண்டார்.

டைக்கனுக்கும், டாக்டருக்கும் முன்னிலையில், அங்கிருந்த பெண்கள் இளவரசரின் சடலத்தைக் குளிப்பாட்டினார்கள். வாய் திறந்திருக்கும்போதே விறைத்துவிடக்கூடாது என்பதற்காக நாடியையும், தலையையும் சேர்த்து ஒரு கைக்குட்டையால் கட்டினார்கள். கால்கள் விரிந்துவிடக்கூடாது என்று, ஏற்கெனவே விரிய ஆரம்பித்திருந்த கால்களை, மற்றொரு கைக்குட்டையால் ஒன்று சேர்த்துக் கட்டினார்கள். பின்னால், அவருடைய சீருடையை அவருக்கு அணிவித்து, பதக்கங்களை எல்லாம் மாட்டி, சுருங்கிப் போயிருந்த அந்த சிறிய சடலத்தை மேஜை மீது கிடத்தினார்கள். இவற்றையெல்லாம் யார் ஏற்பாடு செய்தார்கள், எப்பொழுது செய்தார்கள் என்பது கடவுளுக்கே தெரியும். என்றாலும், முறைப்படி ஒழுங்காகச் செய்யப்பட்டன. அவருடைய சவப்பெட்டியைச் சுற்றி இரவில் மெழுகு வத்திகள் எரிந்து கொண்டிருந்தன. அதன் மீது ஒரு சவப் போர்வை விரிக்கப்பட்டிருந்தது. ஜூனிப்பர் பச்சை இலைகள் தரை பூராவாகப் பரப்பப்பட்டிருந்தன. அவருடைய சுருங்கிய தலைக்குக் கீழாக, அச்சடித்த பட்டி ஒன்று வைக்கப்பட்டிருந்தது. அந்த அறையின் ஒரு மூலையில் சுவி சேஷங்களை ஒருவன் ஓதிக் கொண்டிருந்தான்.

ஒரு செத்த குதிரையைச் சுற்றி, மற்ற குதிரைகள் எப்படி தயக்கத்தோடும் பலமாய் மூச்சு விட்டுக்கொண்டும் கூடி 'நிற்குமோ, அதே மாதிரி, அந்த சவப் பெட்டியைச் சுற்றி வீட்டைச் சேர்ந்தவர்களும், வெளியார்களும், மார்ஷலும், கிராமத் தலைவரும், விவசாயப் பெண்களும் வந்த வரவேற்பு அறையில் நெருக்கமாகக் கூடி நின்று, பீதியடைந்த வெறித்த பார்வையோடு, தங்களுக்கு சிலுவைக் குறி காட்டி, தலை குனிந்து வயோதிக இளவரசரின் குளிர்ந்து விறைத்துப்போன கையை முத்தமிட்டார்கள்.




**பா**குசாரவா என்ற எஸ்டேட்டில், இளவரசர் ஆண்ட்ரூ வந்து தங்கியிருந்ததற்கு முன்பாக, அதன் சொந்தக்காரர்கள் எப்பொழுதுமே அங்கு வசித்ததில்லை. பால்டு ஹில்ஸ் எஸ்டேட்டைச் சேர்ந்த விவசாயிகளுக்கும், பாகுசாரவா விவசாயி களுக்கும் மிகுந்த வித்தியாசம் உண்டு. பேச்சிலும் உடையிலும் நடை முறையிலும்

பாகுசாரவா விவசாயிகள் வித்தியாசமாய் காணப்பட்டார்கள். சமவெளி விவசாயிகள் என்று அவர்கள் அழைக்கப்பட்டார்கள். பால்டு ஹில்ஸுக்கு அவர்கள் எப்பொழுதாவது கதிர் அறுக்கவோ, குளங்களை வெட்டவோ, வாய்க்கால்களைத் தோண்டவோ உதவி செய்ய வந்தால், அவர்களுடைய விடாத உழைப்பைக் கண்டு வயோதிக இளவரசர் பாராட்டுவதுண்டு. ஆனால், அவர்களுடைய காட்டுத்தனமான போக்கிக்காக அவர் அவர்களை விரும்புவதில்லை.

பாகுசாரவாவில் இளவரசர் ஆண்ட்ரூ கடைசியாகத் தங்கியிருந்தபோது, விவசாயிகளுக்காக ஆஸ்பத்திரிகளையும் பள்ளிக்கூடங்களையும் ஏற்படுத்தினார். நிலவரியைக்கூட குறைத்தார். இவையெல்லாம் அவர்களுடைய முரட்டுத்தனத்தைத் தணிக்கவில்லை. வயோதிக இளவரசர், அவர்களிடம் இருப்பதாகச் சொல்லிவந்த அந்த காட்டுத்தனத்தை, இவையெல்லாம் இன்னும் பலப்படுத்தின. அவர்களிடம் எப்பொழுதும் பற்பல விதமான தெளிவற்ற வதந்திகள் பரவிக்கொண்டே இருக்கும். அவர்களை கோசாக்குகளாகப் படைகளில் சேர்க்கப் போவதாக, ஒரு சமயம் ஒரு வதந்தி பரவியது. மற்றொரு சமயம், அவர்களை மற்றொரு மதத்திற்கு மாற்றப் போவதாக ஒரு வதந்தி பரவியது. ஜார் சக்கரவர்த்தி வெளியிட்ட பிரகடனங்கள், பால் சக்கரவர்த்திக்கு 1797-ம் வருஷத்தில் செய்து கொடுத்த பிரமாணம் என்பவை போன்ற வதந்திகள், ஒரு சமயத்தில் கிளம்பனி. (அவர்களுக்கு சுதந்திரம் கொடுத்து விட்டதாகவும், ஆனால் மிராசுதார்கள்தான் அதைத் தடுத்து நிறுத்திவிட்டதாகவும் அந்த வதந்தி இருந்தது.) பீட்டர் பியோடாராவிச் மீண்டும் சிம்மாசனத்திற்கு 7 வருஷங்களில் வந்து டவிடுவார் என்றும், அவர் வந்த பின்பு எல்லாம் விடுதலை அடைந்துவிடுமென்றும், அப்புறம் கட்டுப்பாடுகளே இருக்காதென்றும் ஒரு வதந்தி கிளம்பியது. போன பார்ட்டோடு நடக்கும் யுத்தத்தைப் பற்றியும், அவர் படையெடுத்து வருவதைப் பற்றியும், அவர்களுடைய மனதில் கிறிஸ்து துரோகி, உலக முடிவு, பூரண சுதந்திரம், ஆகிய எண்ணங்களோடு தெளிவற்ற விதமாக அவர்களுடைய மனோராஜ்யம் ஓடிக்கொண்டே இருக்கும்.

பாகுசாரவாவைச் சுற்றிப் பல பெரிய கிராமங்கள் இருந்தன. சர்க்காருக்கும் மிராசுதார்களுக்கும் சொந்தமாயிருந்த அந்த கிராமங்களைச் சேர்நத் அடிமைகள், நிலவரி கொடுத்து வந்தார்கள். ஆனால், அவர்களுக்கு எங்கு இஷ்டமோ அங்கு அவர்கள் வேலை செய்யலாம். சுற்றுப்புறங்களில், அங்கேயே வசித்த மிராசுதார்கள்

வெகு சொற்பம். அதைத் தவிர, வீட்டு வேலைக்கார அடிமைகளும், படித்த அடிமைகளும், வெகு சொற்பமாய் இருந்தார்கள். ருஷ்ய மக்களின் வாழ்க்கையில் ஓடிக்கொண்டிருக்கும் கண்காணாத உணர்ச்சிகள், அப்பாக்கங்களில் வசித்து வந்த விவசாயிகளின் வாழ்க்கையிலும் ஓடிக்கொண்டிருந்தன. அவற்றிற்கான காரணங்களும், அவற்றின் அர்த்தங்களும், ஒருவராலும் அறிய முடியாதபடி திகைப்பாயிருந்தன. என்றாலும், மற்ற இடங்களில் காணப்படுவதை விட, அவர்களிடம் அதிக தெளிவாகவும் பலமாகவும் காணப்பட்டன. 20 வருஷங்களுக்கு முன்பாக, அந்த விவசாயிகளிடம் ஒரு இயக்கம் தோன்றியது. அதாவது, வெந்நீர் நதிகள் உள்ள, இனம் தெரியாத பிரதேசத்திற்கு, அவர்கள் குடியேறவேண்டும் என்று ஒரு இயக்கம் தோன்றியது. பாகுசாரவா விவசாயிகள் உள்பட நூற்றுக்கணக்கான விவசாயிகள் திடீரென்று தங்கள் ஆடுமாடுகளை விற்றுவிட்டு தங்களுடைய குடும்பத்தார்களுடன் தென்கிழக்கு திசையை நோக்கிப் புறப்பட்டார்கள். கடலுக்கு அப்பால் ஏதோ ஒரு இடத்திற்குப் பறவைகள் குடி போவதைப் போல, இந்த மக்களும் தங்களுடைய மனைவிகளுடனும் குழந்தைகளுடனும் தென்கிழக்கை நோக்கிப் பிரயாணம் போனார்கள். அவர்களில் யாரும் அந்த இடங்களுக்கு எப்பொழுதும் போனதில்லை. தங்களுடைய சுதந்திரங்களை ஒருவர் பின் ஒருவராக நிலை கொடுத்து வாங்கிக்கொண்டும், அல்லது ஒருவரிடமும் சொல்லாமல் அதை விட்டு ஓடியும், வண்டிகளில் ஏறியும், நடந்தும், அந்த வெந்நீர் நதிகள் பிரதேசத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். அவர்களில் பலர் தண்டிக்கப் பட்டார்கள். சிலரை சைபீரியாவுக்கு அனுப்பினார்கள். பலர் குளிராலும் பசியாலும் தெருக்களிலேயே மாண்டார்கள். இன்னும் சிலர், தங்கள் சொந்த விருப்பப்படியே, திரும்பி வந்தார்கள். அந்த இயக்கம் எப்படி காரணமில்லாமல் தோன்றியதோ, அதே மாதிரி தானாகவே மடித்தது. ஆனால், அம்மாதிரி கண்காணாத உணர்ச்சிகள் அந்த மக்களிடம் இன்னமும் உயிரோடு இருக்கின்றன. ஆனால், ஆச்சரியமாகவும், எதிர்பாராமலும், இயற்கையாகவும், வேகமாகவும், எளிமையாகவும் அந்த உணர்ச்சிகளை வெளியே காட்டுவதற்குத் தயாராக அவை இருந்துகொண்டிருந்தன. இந்த 1812-ம் வருஷத்தில், அந்த மக்களுடன் தொடர்புகொண்ட யாரும், இந்த கண்காணாத உணர்ச்சி வேகங்கள் மிகுந்த பலமாக வளர்ந்து, வெடிக்கக்கூடிய நிலைமையில் இருப்பதைக் கண்டுகொள்ளலாம்.

வயோதிக இளவரசரின் மரணத்திற்கு சிறிது முன்பாக, பாகுசாரவாவிற்கு அல்பாட்டிச் வந்து சேர்ந்தார். அங்கிருந்த விவசாயிகளிடம், பால்டு ஹில்ஸ் மாவட்டத்தில் இருப்பதற்கு நேர் விரோதமாக, ஒரு கொதிப்பு தோன்றியிருப்பதை அவர் கவனித்தார். பால்டு ஹில்ஸ் மாவட்டத்தில், 60 வெர்ஸ்ட் சுற்றளவில் உள்ள விவசாயிகள் எல்லாரும், தங்களுடைய கிராமங்களை கோசாக்குகள் கொள்ளை அடிக்கும்படி விட்டுவிட்டு, கிராமங்களை விட்டே போய்விட்டார்கள். ஆனால்,இங்கே பாகுசாரவாவைச் சுற்றியுள்ள சமவெளி விவசாயிகள், பிரஞ்சுக்காரர்களோடு தொடர்பு வைத்துக் கொண்டிருப்பதாக, ஒரு வதந்தி இருந்து வந்தது. பிரஞ்சுக்காரர்களிடம் இருந்து துண்டுப் பிரசுரங்களைப் பெற்று, அவற்றை விநியோகித்துக் கொண்டிருந்தார்கள். அந்த இடங்களை விட்டுப் புறப்பட்டுப்போகும் உத்தேசம் அவர்களுக்கு இல்லை. தமக்கு விசுவாசமாயுள்ள வீட்டு வேலைக்கார அடிமை களிடமிருந்து, ஒரு விஷயத்தை அல்பாட்டிச் அறிந்துகொண்டார். கார்ப் என்ற விவசாயி, அந்த கிராம சமுதாயத்திடம் மிகுந்த செல்வாக்கு பெற்றிருந்தான். சமீபத்தில் சர்க்காரின் சரக்கு வண்டிகளை அவன் ஓட்டிப் போய் விட்டுவிட்டு வந்ததாகவும் சொல்லப்பட்டது. அவன் வரும் போது சில செய்திகளைக் கொண்டுவந்தான். மக்கள் காலி செய்து விட்டுப் போன, கிராமங்களை, கோசாக்குகள் கொள்ளை அடிப்பதாகவும், ஆனால் பிரஞ்சுக்காரர்கள் தீங்குகள் செய்வதில்லை என்றும் அவள் கேள்விப்பட்டதாகச் சொல்லி'கொண்டிருந்தார்கள். விஸ்லாவ்காவா என்ற கிராமத்தைப் பிரஞ்சக்காரர்கள் ஆக்ரமித்துக் கொண்ட பின்பு, அங்கிருந்து வந்த ஒரு விவசாயி முதல் நாளன்று ஒரு விஷயம் சொல்லியதை அல்பாட்டிச்சும் அறிவார். அதாவது ஒரு பிரஞ்சு ஜெனரல் விடுதல் பிரகடனத்தில் குடி மக்களுக்கு எவ்வித' கெடுதியும் செய்யப்படாதென்றும், அவர்கள் கிராமங்களிலேயே தங்கியிருந்தால், அவர்களிடமிருந்து ராணுவத்தார்கள் எடுத்துக்கொள்ளும் பொருள்களுக்கு பணம் கொடுத்து விடுவதாகவும் சொல்லியிருந்தார். அதற்கு ஆதாரமாக, விஸ்வாவ்காவா கிராமத்திலிருந்து 100 ரூபிள்கள் நோட்டுக்களை அவன் கொண்டு வந்தான். வைக்கோலுக்காக முன்பணமாக அது கொடுக்கப்பட்டதாம். (அந்த நோட்டுகள் கள்ள நோட்டுகள் என்பது அவனுக்குத் தெரியாது)

மற்றொரு முக்கியமான விஷயத்தையும் அல்பாட்டிச் கேள்விப் பட்டார். பாகுசாரவாவிலிருந்து இளவரசியின் பொருள்களை

அப்புறப் படுத்துவதற்காக வண்டிகளைச் சேகரிக்கும்படி கிராமத் தலைவனுக்கு உத்தரவு கொடுத்த அதே தினத்தில், ஒரு கிராமக் கூட்டம் நடந்ததாகவும், அந்தக் கூட்டத்தில், விவசாயிகள் அதை விட்டுப் போகாமல் தங்கியிருக்கவேண்டுமென்று தீர்மானிக்கப் பட்டதாகவும் அவள் கேள்விப்பட்டார். என்றாலும், அவருக்கு இனி அவகாசம் இல்லை. வயோதிக இளவரசர் இறந்த தினமாகிய 15-ந் தேதியன்று அந்த இடத்தைவிட்டு உடனே புறப்பட்டுவிட வேண்டுமென்றும், அந்த இடம் வரவர அபாயகரமாயிருக்கிற தென்றும், இளவரசி மேரியிடம் அந்த மார்ஷல் வற்புறுத்திச் சொன்னார். 16-ந் தேதிக்குப் பின்னால் நடக்கிற காரியங்களுக்கு, தாம் பொறுப்பல்ல என்பதையும் அவர் அவளிடம் சொன்னார். வயோதிக இளவரசர் இறந்த தினத்தின் மாலையில், அந்த மார்ஷல் தாம் மறுநாள் பிரேத அடக்கத்திற்கு வருவதாகச் சொல்லிவிட்டுப் போனார். ஆனால், அந்தப்படி செய்ய அவரால் முடியவில்லை. பிரஞ்சுக்காரர்கள் எதிர்பாராதவிதமாக முன்னேறி வருவதாக அவருக்குச் செய்தி கிடைத்தபடியால், தமது எஸ்டேட்டிலிருந்து தமது குடும்பத்தையும், விலையுயர்ந்த பொருள்களையும் எடுத்துக்கொண்டு உடனே அவர் புறப்பட்டுவிட்டார்.

சென்ற 30 வருஷங்களாக, அந்த பாகுசாரவாவின் கிராமத் தலைவனாக டிரால் என்பவன் வேலை பார்த்து வந்தான். அவனை வயோதிக இளவரசர் 'டிரோனுஷ்கா' என்று அழைத்து வந்தார்.

வயது வந்தவுடன் தாடி வளர்க்க ஆரம்பித்து, அவர்களுடைய 60-வது 70-வது வயது வரையில் ஒரு முடிகூட வெள்ளையாகாமல், ஒரு பல்கூட கீழே விழாமல், உடலிலும் உள்ளத்திலும் ஊக்கம் கொண்டுள்ள விவசாயிகளில் டிரான் என்பவனும் ஒருவன். அந்த விவசாயிகள் தங்களுடைய 60-வது வயதிலும்கூட, 30-வது வயதில் இருந்த மாதிரி, பலமாகவும் நிமிர்ந்த நடையுடையவர்களாகவும் இருப்பார்கள்.

'வெந்நீர் நதிகள்' பிரதேசத்திற்கு குடி போனவர்களில் மற்றவர்களைப் போல டிரானும் ஒருவன். குடி போனவர்கள் திரும்பி வந்த பின்பு, அந்தக் கிராமத்துத் தலைவனாகவும், பாகசாரவா கிராமத்தின் ஓவர்சியராகவும் டிரான் நியமிக்கப்பட்டான். சென்ற 23 வருஷங்களாக, எவ்விதமான குற்றத்திற்கும் இடம் கொடுக்காமல், அந்த பதவிகளை அவன் வகித்து வந்தான். தங்களுடைய எஜமானவர்களை விட, டிரானுக்கே விவசாயிகள் அதிகமாய் பயப்படுவார்கள். எஜமானர்களான வயோதிக இளவரசரும் வாலிப இளவரசரும் மேனேஜரும் அவனை மரியாதையுடன்

நடத்தினார்கள். வேடிக்கையாக, அவனை 'மந்திரி' என்று அழைப்பார்கள். அவனுடைய உத்தியோக காலம் பூராவிலும், டிரான் எப்பொழுதும் குடித்தது இல்லை, நோயாகப்படுத்ததும் இல்லை. கடுமையான வேலைகளைச் செய்த பின்பும்கூட, இரவு பூராவும் தூக்கம் இல்லாமல் இருந்த பின்பும்கூட, டிரானுக்குக் கொஞ்சம்கூடக் களைப்பு ஏற்படுவது இல்லை. அவனுக்கு வாசிக்க தெரியாவிட்டாலும், பண சம்பந்தமான கணக்குகளில் ஒன்றைக்கூட அவன் மறந்ததில்லை. நூற்றுக்கணக்கான வண்டிகளில் இளவரசருக்காக விற்பனையான மாவு மூட்டைகள் ஏற்றப்பட்டிருக்கும். அவைகளில் எந்த வண்டியில், எவ்வளவு மாவு ஏற்றப்பட்டிருக்கிறது என்பதை, டிரான் மறக்காமல் சொல்லுவான். பாகுசாரவா வயல்களில், எந்த வயலிலும் உள்ள தானியக் கதிர்களைப் பற்றி, ஞாபகமாக விவரம் கூறுவான்.

பாழடைந்து நிற்கும் பால்டு ஹில்ஸ் எஸ்டேட்டிலிருந்து அல்பாட்டிச் வந்ததும், டிரானை வரும்படி சொல்லி அனுப்பினார். அன்று தான், வயோதிக இளவரசரின் பிரேத அடக்கம் நடந்தது. இளவரசியின் பிரயாண வண்டிகளுக்கு வேண்டிய 12 குதிரைகளைத் தயார் செய்யும்படியும், பாகுசாரவாவிலிருந்து சாமான்களைக் கொண்டு போவதற்கு 18 வண்டிகளைத் தயார் செய்யும்படியும் அவனிடம் கூறினார். விவசாயிகள் நிலத் தீர்வையை செலுத்திவந்தபோதிலும், பாகுசாரவாவில் 230 வீடுகள் இருந்தபடியாலும், விவசாயிகள் எல்லாரும் நல்ல நிலைமையில் இருந்தபடியாலும், தம்முடைய இந்த வேண்டுகோளுக்கு எவ்விதமான கஷ்டமும் இருக்குமென்று அவர் நினைக்கவில்லை. ஆனால், அல்பாட்டிச்சின் உத்தரவைக் கேட்டதும் டிரான் தனது கண்களைக் கீழ் நோக்கி மௌனமாயிருந்தான். தமக்குத் தெரிந்த சில விவசாயிகளின் பெயர்களைக் கூறி, அவர்களிடமிருந்து வண்டிகளைக் கொண்டுவருமாறு அல்பாட்டிச் சொன்னார்.

அந்த விவசாயிகளின் குதிரைகள் எல்லாம், சரக்கு வண்டிகளை இழுத்துக்கொண்டு போயிருக்கின்றன என்று டிரான் பதில் சொன்னான். வேறு சில பெயர்களை அல்பாட்டிச் கூறினார். அவர்களிடமும் கூட குதிரைகள் இல்லை என்று டிரான் சொன்னான். சில குதிரைகள் சர்க்காருக்காக வண்டிகளில் பூட்டப்பட்டு போயிருக்கின்றன என்றும், மற்ற குதிரைகள் பலவீனமாய் இருக்கின்றன என்றும், தீனி இல்லாமல் பல குதிரைகள் இறந்துவிட்டன என்றும் அவன் சொன்னான். சாமான் வண்டிகளுக்குக் குதிரைகள் கிடைப்பது ஒரு பக்கமிருக்க, பிரயாண வண்டிகளுக்குக் கூட குதிரைகள் கிடைக்காதென்று தோன்றியது.

டிரானை கூர்மையாக அல்பாட்டிச் நோக்கி, முகத்தைச் சுளித்தார். டிரான் எப்படி ஒரு சிலாக்கியமான கிராமத் தலைவனாக இருந்தானோ, அதே மாதிரி அல்பாட்டிச்சும் இளவரசரின் எஸ்டேட்டுகளுடைய ஒரு சிலாக்கியமான மேனேஜராக இருந்தார். அவர் சென்ற 20 வருஷங்களாக மேனேஜராக இருந்து வந்தது வீணாய்ப் போகவில்லை. தாம் யாரிடம் பழகுகிறாரோ, அவர்களுடைய சுபாவங்களையும், தேவைகளையும் நன்றாய் அறிந்து கொள்ளக்கூடிய சக்தியை உயர்ந்த அளவில் பெற்று, ஒரு எடுத்துக்காட்டு மேனேஜராக அவர் இருந்து வந்தார். அவர் டிரானை நோக்கியதும், அவன் சொல்வதெல்லாம் அவனுடைய சொந்த அபிப்பிராயங்கள் அல்ல என்பதை அறிந்துகொண்டார். பாகுசாரவாவிலுள்ள மக்களின் பொதுவான போக்கு அதுதான் என்பதையும், அந்தப் போக்கில் அந்த கிராமத் தலைவனும் முன்பே அமிழ்ந்துவிட்டான் என்பதையும் அவர் அறிந்துகொண்டார். ஆனால், டிரான் என்பவன் சொத்துக்கள் சம்பாதித்திருந்தபடியால், அந்த மக்களால் வெறுக்கப்படுபவனாக இருந்தான் என்பதையும் அவர் அறிவார். ஆகவே, எஜமானவர்களுக்கும் அடிமைகளுக்கும் இடையில், அவன் தயங்கிக் கொண்டிருக்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. டிரானுடைய பார்வையில், இந்தத் தயக்கத்தை அவர் கண்டார். ஆகவே, முகத்தைச் சுளித்து அவனிடம் நெருங்கினார்.

‘இப்பொழுது நான் சொல்வதைக் கேள், டிரோனுஷ்கா இந்த அசட்டுப் பேச்சுக்களையெல்லாம் என்னிடம் பேசாதே. மேன்மை தங்கிய இளவரசர் ஆண்ட்ரூவே என்னிடம் உத்தரவிட்டார். எல்லா மக்களையும் இங்கிருந்து அப்புறப்படுத்திவிட வேண்டுமென்றும், எதிரியோடு அவர்களை விட்டுவிடக்கூடாதென்றும் அவர் உத்தரவிட்டார். ஜார் சக்கரவர்த்தியிடமிருந்து கூட அம்மாதிரி ஒரு உத்தரவு வந்திருக்கிறது. ஆகவே, யாராவது ஒருவன் இங்கே தங்கியிருந்தால், அவன் ஜார் சக்கரவர்த்திக்கு துரோகியாவான். நான் சொல்லுவது உனக்குக் கேட்கிறதா?’ என்று அவர் கூறினார்.

‘எனக்குக் கேட்கிறது.’ என்று டிரான், தன்னுடைய கண்களை உயர்த்தாமலேயே, பதில் அளித்தான்.

அந்தப் பதிலில் அல்பாட்டிச் திருப்தியடையவில்லை.

‘ஏ, டிரான், அது மிகவும் மோசமாக வந்து முடியும்’ என்று தமது தலையை ஆட்டிக்கொண்டு அவர் பதில் கூறினார்.

'அதிகாரம் உங்களிடமே இருக்கிறது' என்று துக்கத்தோடு டிரான் பதில் சொன்னான்.

'ஏ டிரான், அந்தப் பேச்சை விடு' என்று அல்பாட்டிச் சொல்லி விட்டு, தம்முடைய கையை மார்பிலிருந்து எடுத்து, டிரானுடைய கால்களுக்குக் கீழுள்ள பூமியைப் பவித்திரமாய்ச் சுட்டிக்காட்டிச் சொன்னார். உன்னுடைய உள்ளத்திலிருப்பதையும், உனக்குக் கீழே பூமிக்குள் மூன்று கெஜ தூரம் வரை உள்ளதையும், என்னால் பார்க்க முடியும்.' என்று அவர் சொல்லிவிட்டு, டிரானுக்கு முன்னாலுள்ள பூமியைப் பார்த்தார்.

டிரானின் அமைதி குலைந்தது. திருட்டுத்தனமாக அல்பாட்டிச்சை நோக்கிவிட்டு, மீண்டும் தனது பார்வையைக் கீழே கவிழ்த்துக் கொண்டான்.

'இந்த மதியீனத்தை விட்டுவிடு. தங்களுடைய வீடுகளை விட்டுவிட்டு, மாஸ்கோவிற்குப் போவதற்குத் தயாராகும்படி மக்களிடம் சொல்லு. நாளை காலையில் இளவரசியின் சாமான்களைக் கொண்டு போவதற்காக, வண்டிகளைத் தயாராக வைக்கும்படி சொல்லு. பொதுக்கூட்டங்கள் எதற்கும், நீ போகாதே. உனக்குக் கேட்கிறதா?'

திடீரென்று டிரான் முழங்கால் படியிட்டான்.

'யாக்காவ் அல்பார்ட்டிச், என்னை வேலையிலிருந்து தள்ளிவிடும். என்னிடமிருந்து சாவிகளைப் பெற்றுக்கொண்டு, கிறிஸ்துவுக்காக என்னை வேலையிலிருந்து தள்ளிவிடும்.'

'அந்தப் பேச்சை விடு' என்று அல்பாட்டிச் கடுமையாகக் கூறினார். 'உன் உள்ளத்தையும் உனக்குக் கீழே பூமியில் மூன்று கெஜங்கள் வரையிலும், என்னால் பார்க்க முடியும்' என்று அவர் மீண்டும் சொன்னார். தேனீக்கள் வளர்ப்பதில் அவருக்குள்ள சாமர்த்தியத்தினாலும், ஓட்டு தானியங்களை எந்த சமயத்தில் விதைப்பது என்று சொல்லக்கூடிய அவருக்குள்ள அறிவினாலும், 20 வருஷங்களாக வயோதிக இளவரசரின் அபிமானத்தைப் பெற்றிருந்த அவருடைய சாமர்த்தியத்தினாலும், அவர் ஒரு மந்திரவாதி என்று வெகு காலமாகப் பெயர் பெற்றிருந்தார். பூமிக்குள் கீழே மூன்று கெஜங்கள் பார்ப்பது என்றால், ஒரு மந்திரவாதியால்தான் அது சாத்தியம்.

டிரான் எழுந்து நின்று ஏதோ சொல்ல ஆரம்பித்தான். ஆனால், அல்பாட்டிச் அவனை இடைமறித்தார்.

'உங்கள் மண்டைக்குள் என்ன புகுந்துவிட்டது, ஏன்?... நீங்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள், ஏன்?'

'மக்களுடன் நான் என்ன செய்யமுடியும்? அவர்கள் தங்கள் நிலைமையில் இல்லை. அவர்களுக்கு நான் ஏற்கெனவே சொல்லிவிட்டேன்...' என்று டிரான் சொன்னான்.

'சொல்லிவிட்டானாம்! என்ன பேச்சு! அவர்கள் குடிக்கிறார்களா?' என்று திடீரென்று அல்பாட்டிச் கேட்டார்.

'அவர்கள் தங்கள் நிலைமையில் இல்லை, யாக்காவ் அல்பாட்டிச். அவர்கள் மற்றொரு பீப்பாயைக் கொண்டு வந்திருக்கிறார்கள்.'

'நல்லது, அப்படியானால் நான் சொல்வதைக் கேள். நான் போலீஸ் அதிகாரியிடம் போகிறேன். நீ அவர்களிடம் நான் போவதாகச் சொல்லி, இந்தக் காரியங்களை உடனே நிறுத்திவிட வேண்டுமென்றும், வண்டிகளைத் தயாராக வைத்திருக்க வேண்டுமென்றும் சொல்லு.'

'எனக்குப் புரிகிறது.'

அல்பாட்டிச் மேலும் வற்புறுத்தவில்லை. அவர் வெகு காலமாக மக்களை நிர்வாகம் செய்து சமாளித்திருக்கிறார். அவர்கள் கீழ்ப்படியும்படி செய்வதற்கான முக்கியமான வழியை அவர் அறிவார். அதாவது, அவர்கள் கீழ்ப்படியமாட்டார்கள் என்ற சந்தேகம் தமக்கு இருப்பதாக அவர்களிடம் காட்டக்கூடாது. 'எனக்குப் புரிகிறது' என்ற கீழ்ப்படிதலான வார்த்தைகளை டிரானிடமிருந்து பெற்ற பின்பு, தம்மைப் பொறுத்தவரையில், அல்பாட்டிச் அதோடு திருப்தி அடைந்தார். ஆனால், துருப்புகளின் உதவியில்லாமல் வண்டிகளைப் பெற முடியாது என்பதில் அவருக்குச் சந்தேகமில்லை. அதை நிச்சயமாக அவர் உணர்ந்தார்.

மாலை நேரம் வந்தும்கூட வண்டிகள் வரவில்லை. நிலைமை அப்படியிருந்தது. கள்ளுக் கடைக்கு வெளியே, கிராமத்தில் மற்றொரு பொதுக்கூட்டம் நடந்தது. குதிரைகளைக் காடுகளுக்குள் விரட்டி அடித்துவிட வேண்டுமென்றும், வண்டிகளை கொடுக்கக் கூடாதென்றும், அந்தக் கூட்டத்தில் தீர்மானித்தார்கள். இதைப் பற்றி இளவரசிக்கு அல்பாட்டிச் எதுவும் கூறவில்லை. பால்டு ஹில்ஸிலிருந்து தமது சாமான்களை ஏற்றி வந்த வண்டிகளில் உள்ள குதிரைகளை, இளவரசியின் பிரயாண வண்டிகளுக்காக அவர் தயார் செய்தார். இதற்கிடையில் போலீஸ் அதிகாரிகளை சந்திப்பதற்காக அவர் சென்றார்.



அவளுடைய தந்தையின் சவ அடக்கத்திற்குப் பின்பு, இளவரசி மேரி தனது அறையிலேயே அடைத்துக்கொண்டு இருந்தாள். வேறு யாரையும் அங்கே வர அனுமதிக்கவில்லை. அவர்கள் புறப் படுவதைப்பற்றி உத்தரவு கேட்பதற்காக, அல்பாட்டிச் வந்திருப்பதாக ஒரு வேலைக்காரி வாசல் கதவுக்குப் பக்கத்தில் வந்து நின்று சொன்னாள். (அவர் டிரானுடன் பேசுவதற்கு முன்பாக, இது நடந்தது) சோபாவில் இளவரசி மேரி படுத்திருந்தவள் எழுந்து உட்கார்ந்து, அந்த சாத்திய கதவுக்குப் பின்னாலிருந்து, தான் அதைவிட்டுப்போக விரும்பவில்லையென்றும், தன்னை அமைதியாக இருக்க விட்டுவிடும்படியும் கூறினாள்.

அவள் படுத்திருந்த அந்த அறையிலுள்ள ஜன்னல்கள், மேற்கு நோக்கியிருந்தன. சுவரைப் பார்த்து சோபாவில் படுத்துக் கொண்டு, தோல் மெத்தையிலுள்ள அந்த பொத்தான்களைத் தடவைக் கொண்டு, அந்த மெத்தையைத் தவிர வேறு எதையும் பார்க்காமல், ஒரே நினைப்பில் அவளுடைய குழப்பமடைந்த சிந்தனைகள் லயித்திருந்த-தவிர்க்க முடியாத சாவைப்பற்றியும், நான் சந்தேகிக்க முடியாமல் இருந்த, தன்னுடைய ஆத்மார்த்த இழிவு தன்னுடைய தந்தையின் அசௌக்கிய காலத்தில் மீண்டும் தலைதூக்கியதைப் பற்றியும் நினைத்துக் கொண்டிருந்தாள். அவள் பிரார்த்தனை செய்ய விரும்பினாள். ஆனால், அதற்குத் துணிவு கொள்ளவில்லை. தற்காலமுள்ள அவளுடைய மனநிலையில், கடவுளை நோக்கி அவள் பிரார்த்தனை செய்யத் துணிய முடியவில்லை. அதே நிலைமையில் வெகு நேரமாக அவள் படுத்திருந்தாள்.

வீட்டின் மறு பக்கத்திற்கு சூரியன் வந்தது. அதனுடைய சாய்வான கதிர்கள், திறந்த ஜன்னல்கள் வழியாக அறைக்குள் பிரகாசித்து, அந்த அறையையும், இளவரசி மேரி பார்த்துக் கொண்டிருந்த அந்த மொராக்கோ மெத்தையின் ஒரு பகுதியையும் பிரகாசமடையச் செய்தது. அவளுடைய சிந்தனைகளின் ஓட்டம் திடீரென்று நின்றது. தன்னியறியாமலேயே அவள் எழுந்து உட்கார்ந்தாள். தன்னடைய தலைமுடியைத் தடவி விட்டுக் கொண்டு, எழுந்து ஜன்னலுக்குப் பக்கத்தில் போனாள். தன்னையறியாமலேயே சுத்தமான மாலைக் காற்றை மூச்சு வாங்கினாள்.

'ஆம், இப்பொழுதுதான் இந்த மாலையை நீ நன்றாய் அனுபவிக்கலாம். அவர் போய்விட்டார். உன்னைத் தடுப்பவர் யாருமில்லை' என்று அவள் தனக்குத் தானே சொல்லிக்கொண்டு, அங்கிருந்த நாற்காலியில் அமர்ந்து, ஜன்னல் சட்டத்தில் தன் தலையை சாய்த்தாள்.

ஒரு மிருதுவான, கனிந்த குரலோடு, யாரோ அவள் பெயரைச் சொல்லி, அவளுடைய தலையை முத்தமிடவும் அவள் நிமிர்ந்து பார்த்தாள். அங்கே குமாரி பௌரியன் கருப்பு உடைகளுடன் நின்று கொண்டிருந்தாள். அவள் மெதுவாக இளவரசி மேரியிடம் வந்து, பெரு மூச்சுவிட்டு அவளை முத்தமிட்டு, திடீரென்று அழ ஆரம்பித்தாள். இளவரசி அவளை நிமிர்ந்து பார்த்தாள். தங்களுக்குள் முன்னாலிருந்த விரோதங்களும், அவளுடைய சொந்த பொறாமையும், அவளுடைய மனதில் தோன்றின. ஆனால், அதேசமயத்தில், அவளுடைய தந்தை கடைசி காலத்தில் குமாரி பௌரியனிடம் எப்படி மனம் மாறி இருந்தார் என்பதையும், அவளைப் பார்க்கக்கூட அவருக்குச் சகிக்கவில்லை என்பதையும், அவள் நினைவு கூர்ந்தாள். ஆகவே, இளவரசி மேரியின் உள்ளத்தில் அவளைப்பற்றித் தோன்றிய கண்டனங்கள் எவ்வளவு நியாயமற்றவை என்பதை அவை காட்டின. 'தவிர, அவருடைய மரணத்தை விரும்பிய நான், மற்றொருவரை எப்படிக் கண்டிப்பது?' என்று அவள் நினைத்தாள்.

குமாரி பௌரியனை சமீப காலமாக அவள் ஒதுக்கி வைத்திருந்ததைத் தெளிவாகத் தன்னுடைய மனக்கண் முன்பாக இளவரசி மேரி மனோராஜ்யம் செய்தாள். என்றாலும், இன்னமும் குமாரி பௌரியன், அவளுடைய உதவியை எதிர்பார்த்து, அவளுடைய வீட்டிலேயே வசித்து வந்தாள். அவளுக்காக மனம் வருந்தி, கேள்விக் குறியோடு அவளைப் பார்த்து, தனதுகையை அவளிடம் நீட்டினாள். குமாரி பௌரியன் திடீரென்று மீண்டும் அழ ஆரம்பித்து, அந்தக் கையை முத்தமிட்டு, இளவரசி மேரியின் துக்கத்தைப்பற்றிப் பேசி, அதில் தானும் பங்கு கொள்ளுவதாகக் கூறினாள். அவளுடைய ஒரே மனச்சாந்தியானது, தானும் இளவரசியின் துக்கத்தில் பங்கு கொள்ளுவது ஒன்றுதான் என்றும், இந்த மகா பெரிய துக்கத்திற்கு முன்னிலையில், பழைய அபிப்பிராய பேதங்களையெல்லாம் மூழ்கடித்துவிட வேண்டுமென்றும் அவள் சொன்னாள். யாரும் தன்னைக் குறை கூறும் விதத்தில் தான் நடக்க வில்லை என்றும், தன்னுடைய பிரியத்தையும், நன்றியையும் மேலே இருந்து அவர் பார்த்துக்

கொண்டிருக்கிறார் என்றும் அவள் சொன்னாள். இளவரசி மேரி கேட்டுக் கொண்டிருந்தாள். ஆனால், அவள் சொல்லும் வார்த்தை களைக் கவனித்துக் கேட்காமல், இடையிடையே அவளை நோக்கிவிட்டு, அவள் குரலிலுள்ள தொனியை மட்டும் கவனித்து வந்தாள்.

'உன்னுடைய நிலைமை இரண்டு மடங்கு பயங்கரமானது, எனது அருமை இளவரசியே' என்று குமாரி பௌரியன் சிறிது நேரத்திற்குப் பின்னால் சொன்னாள். 'நீ உன்னைப் பற்றி நினைக்கவும் முடியாது; நினைக்கவும் கூடாது என்பதை நான் அறிவேன். ஆனால், உன் மீதுள்ள பிரியத்தினால் நான் அதைச் செய்யவேண்டும்... அல்பாட்டிச் உன்னை வந்து பார்த்தாரா? இதைவிட்டுப் போவதைப் பற்றி அவர் உன்னிடம் பேசினாரா? என்று அவள் கேட்டாள்.

இளவரசி மேரி பதில் சொல்லவில்லை. யார் போகவேண்டும், எங்கே போகவேண்டும் என்பதை, அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை. 'எதைப்பற்றியாவது நினைக்கவோ, அல்லது திட்டம் போடவோ இப்போது சாத்தியமான காரியமா? எப்படியிருந்தாலும் ஒன்றுதானே?' என்று அவள் நினைத்தாள். ஆனால், பதில் சொல்லவில்லை.

'எனது அன்புள்ள மேரியே, நாம் இப்பொழுது அபாயத்திலிருக் கிறோம் - பிரஞ்சுக்காரர்களால் சுற்றிலும் வளைக்கப்பட்டிருக் கிறோம் என்பது உனக்குத் தெரியும். இப்பொழுது இதைவிட்டுப் போவது ஆபத்தானதாய் இருக்கும். இப்பொழுது நாம் போனால், நாம் கைதிகளாகப் பிடிக்கப்படுவோம் என்பது நிச்சயம். அப்புறம் கடவுளுக்கே தெரியம்...' என்று குமாரி பௌரியன் சொன்னாள்.

தன்னுடைய தோழி எதைப்பற்றிப் பேசுகிறாள் என்பதைப் புரிந்து கொள்ளாமலேயே இளவரசி மேரி அவளைப் பார்த்தாள்.

'இப்பொழுது எனக்கு எதைப்பற்றியும் கவலையில்லை என்பதை எல்லாரும் அறிந்து கொண்டால்! என்ன காரணத்திற் காகவும் இதைவிட்டு நான் போக விரும்பவில்லை என்பது நிச்சயம்... ஆனால், போவதைப்பற்றி அல்பாட்டிச் ஏதோ சொன்னார்... அவரிடம் நீ பேசு. என்னால் ஒன்றுமே, ஒன்றுமே செய்ய முடியாது. எதையும் செய்ய நான் விரும்பவில்லை...'

'நான் அவரிடம் பேசினேன். நாளை இங்கிருந்து நாம் புறப்பட்டால், எல்லாம் சரியாய் இருக்குமென்று அவர் நம்புகிறார். ஆனால், இப்போது இங்கு தங்குவதுதான் நல்லது என்று நான்

நினைக்கிறேன். ஏனென்றால், எனது அன்புள்ள மேரியே, சிப்பாய்களின் கைகளிலோ, கலகம் செய்யும் விவசாயிகளின் கைகளிலோ அகப்படுவது மிகுந்த பயங்கரமாய் இருக்கும் என்பதை நீ 'ஒப்புக் கொள்ளுவாய்? என்று குமாரி 'பௌரியன் கூறினாள்.

தன்னுடைய அழகுப் பையிலிருந்து ஜெனரல் ராமேவின் பிரகடனத்தை (அது சாதாரண ருஷ்ய காகிதத்தில் அச்சிடப் படவில்லை) எடுத்தாள். அதில், அந்த ஜெனரல், மக்கள் தங்கள் வீடுகளை விட்டுப் போக வேண்டாமென்றும், பிரஞ்சு அதிகாரிகள் அவர்களுக்குத் தகுந்த பாதுகாப்புகளை அளிப்பார்கள் என்றும் அவர் சொல்லி இருந்தார். அவள் அந்த பிரகடனத்தை இளவரசியிடம் கொடுத்தாள்.

'அந்த ஜெனரலிடம் விண்ணப்பித்துக் கொள்ளுவது, நன்மையாய் இருக்கும் என்று நான் நினைக்கிறேன். உனக்கு எல்லாவிதமான தகுந்த மரியாதைகளைக் காட்டுவார்கள் என்பதில் எனக்கு நிச்சயம் உண்டு' என்று அவள் சொன்னாள்.

இளவரசி மேரி அந்தக் காகிதத்தைப் படித்தாள். அவளுடைய முகம், அவள் அடக்க முடியாற்சித்த விம்மல்களினால் படபடத்தது.

'இதை யாரிடமிருந்து நீ வாங்கினாய்?' என்று அவள் கேட்டாள்.

'நான் ஒரு பிரஞ்சுக்காரி என்ற, என்னுடைய பெயரிலிருந்து அவர்கள் ஒரு வேளை கண்டு கொண்டிருக்கலாம்' என்று குமாரி பெயரியன் நாணி முகம் சிவந்து பதில் சொன்னாள்.

இளவரசி மேரி அந்தக் காகிதத்தைக் கையில் பற்றி ஜன்னல் பக்கத்திலிருந்து எழுந்தாள். வெளிறிய முகத்தோடு, அந்த அறையைவிட்டு இளவரசர் ஆண்ட்ரூவின் படிப்பு அறைக்குச் சென்றாள்.

'துனியாஷா, அல்பாட்டிச்சையோ, அல்லது டிரோனுஷ்கா வையோ, அல்லது வேறு யாரையோ என்னிடம் அனுப்பு' என்று கூறி இளவரசி மேரி பின்னால் குமாரி பௌரியனின் குரலைக் கேட்டதும் 'குமாரி பௌரியன் என்னிடம் வர வேண்டாமென்று அவளிடம் சொல்லு' என்று அவள் சொன்னாள். பிரஞ்சுக் காரர்களின் கைகளில் அகப்பட்டுவிடுவோமோ என்ற நினைப்பு, அவளுக்குப் பீதியைக் கொடுத்தபடியால், 'நாம் உடனே, உடனே புறப்பட்டுப் போகவேண்டும்' என்று அவள் சொன்னாள்.

'நான் பிரஞ்சுக்காரியிடம் அகப்பட்டுக் கொண்டேன் என்பதை இளவரசர் ஆண்ட்ரூ கேட்பாரானால்! நான், இளவரசர் நிக்கலஸ் பால்கோன்ஸ்கியின் குமாரியான நான், ஜெனரல் ராமேவிடம்

பாதுகாப்பு கேட்டு, அவருடைய தயவை ஒப்புக் கொள்வேனானால்!' இந்த எண்ணம் அவளுக்குப் பயங்கரமா யிருந்தது; அவள் உடலை நடுங்க வைத்தது. அவள் நாணி, முகம் சிவந்தாள். அதற்கு முன்னால் எப்பொழுதும் அவள் அனுபவித்திராத கோபமும் பெருமையும் கொண்ட ஒரு வேகமான உணர்ச்சியை அவள் உணர்ந்தாள். அவையெல்லாம் அவளுடைய நிலைமையில் மனக் கஷ்டமானவை என்றும், முக்கியமாக அவையெல்லாம் அவமானப்படுத்தக் கூடியவை என்றும், அவளுக்குத் தெளிவாக மனதில் தோன்றின. 'அவர்கள், அந்த பிரஞ்சுக்காரர்கள், இந்த வீட்டில் குடியேறலாம். திருவாளர் ஜெனரல் ராமேவ், இளவரசர் ஆண்ட்ரூவின் படிப்பு அறையில் தங்கலாம். அவருடைய கடிதங்களையும், தஸ்தாவேஜிகளையும் அவர் படித்துப் பார்த்து, சந்தோஷமடைந்து கொண்டிருக்கலாம். பாகு சாராவாவின் சார்பாக, மரியாதைகளையெல்லாம் குமாரி பௌரியன் அவருக்குச் செய்து கொண்டிருக்கலாம். ஏதோ ஒரு தயவுக்காக, ஒரு சிறிய அறையை எனக்கு அவர்கள் கொடுக்கலாம். என்னுடைய தந்தை அணிந்துள்ள நட்சத்திரப் பதக்கங்களையும், சிலுவைப் பதக்கங்களையும் திருடுவதற்காக, என்னுடைய தந்தையின் சமாதியை அவர்கள் தோண்டலாம். ருஷ்யர்கள் மீது அவர்கள் பெற்றுள்ள வெற்றிகளைப் பற்றி, என்னிடம் அவர்கள் சொல்லலாம். என்னுடைய துக்கத்திற்காக அனுதாபம் காட்டுவது போல, அவர்கள் பாசாங்கு செய்யலாம்...' என்று இளவரசி மேரி நினைத்தாள்; அவள் தான் சொந்தமாக நினைக்கவில்லை; தன்னுடைய தந்தையைப் போலவோ, சகோதரரைப் போலவோ நினைப்பதற்குக் கட்டுப்பட்டவளைப்போல அவள் உணர்ந்து நினைத்தாள். அவளைப் பொறுத்தவரையில், அவள் எங்கே இருந்தாலும், அவளுக்கு என்ன நேர்ந்தாலும், அதைப்பற்றி அவளுக்குக் கவலையில்லை. ஆனால், அவள்தான் தன்னுடைய இறந்து போன தந்தையினுடையவும், இளவரசர் ஆண்ட்ரூவினுடையவும் பிரதிநிதி என்று உணர்ந்தாள். தன்னையறியாமலேயே அவர்களுடைய சிந்தனைகளையும், உணர்ச்சிகளையும் அவள் நினைத்தாள். அவர்கள் என்ன சொல்லியிருப்பார்கள், அவர்கள் என்ன செய்திருப்பார்கள் என்பதை சொல்லுவதற்கும், செய்வதற்கும் அவள் கடமைப் பட்டிருப்பதாக உணர்ந்தாள். இளவரசர் ஆண்ட்ரூவின் கருத்துக்களைப் படிப்பு அறைக்கு அவள் சென்று, தன்னுடைய நிலைமையைப்பற்றி ஆலோசித்தாள்.

தன்னுடைய தந்தையின் மரணத்தால், அழிந்து போனதாக அவளுக்குத் தோன்றிவந்த வாழ்க்கையின் விருப்பங்கள், திடீரென்று ஒரு புதிய, இதற்கு முன்னால் அறியாத வேகத்தோடு தோன்றி அவளைப் பற்றிக் கொண்டன.

பரபரப்படைந்து, முகம் சிவந்து, அந்த அறையில் அவள் உலாவிக் கொண்டிருந்தாள். ஒரு சமயம் மைக்கேல் ஐவானிச்சை அழைப்பதும், மற்றொரு சமயம் டைக்கனையோ, டிரானையோ அழைப்பதுமாயிருந்தாள். துனியாஷாவோ, தாதியோ, அல்லது மற்ற வேலைக்காரிகளோ, குமாரி பௌரியன் சொல்லுவதில் எவ்வளவு தூரம் உண்மையிருக்கிறது என்பதை சொல்ல முடியவில்லை. அல்பாட்டிச் வீட்டிலில்லை. அவர் போலீசாரிடம் போயிருந்தார். மைக்கேல் ஐவானிச் என்ற கட்டிட சிற்பியை அழைத்ததும், அவர் தூக்கக் கண்களோடு இளவரசி மேரியிடம் வந்தார். அவராலும் எதையும் சொல்ல முடியவில்லை. 15 வருஷங்களாக வயோதிக இளவரசரிடம், அவர் சொல்லுவதற் கெல்லாம் ஆமாம் என்று சொல்லிப் புன்னகை காட்டிப் பழக்கப்பட்டு, தம்முடைய அபிப்பிராயத்தை வெளிப்படுத்தாமல் இருந்துவந்த அவர், இப்பொழுதும் அதே மாதிரி, தம்முடைய சம்மதப் புன்னகையைக் காட்டிக் கொண்டிருந்தார். ஆகவே, அவருடைய பதில்களிலிருந்து நிச்சயமாக எதையும் அறிந்து கொள்ள முடியவில்லை. வயோதிக சேவகனான டைக்கனின் முகம், வற்றி உலர்ந்து போயிருந்தது. தாங்க முடியாத துக்கத்தை அது கொண்டிருந்தது. அவன் இளவரசி மேரி கேட்ட கேள்விகளுக்க எல்லாம், ‘ஆம், இளவரசியே’ என்று பதில் சொல்லிக் கொண்டே வந்தான். அவளைப் பார்க்கும்போது, அவனுக்கு ஏற்படும் விம்மல்களை அவனால் அடக்க முடியவில்லை.

கடைசியாகக் கிராமத் தலைவனான டிரான் அறைக்குள் வந்தான். தாழ்ந்து குனிந்து, இளவரசி மேரிக்கு மரியாதை காட்டிவிட்டு, கதவுக் கம்பத்தின் பக்கத்தில் நின்று கொண்டான்.

இளவரசி மேரி, அந்த அறையில் உலாவிக் கொண்டிருந்தவள், அவன் முன்பு வந்ததும், நின்றாள்.

‘டிரோனுஷ்கா’ என்று அவள் அழைத்தாள். வியாஜ்மா என்ற சந்தைக்கு வருஷா வருஷம் அவன் போனபோதெல்லாம், ஒரு தினுசான இஞ்சி ரொட்டியை அவன் வாங்கி வந்து, புன்னகையோடு அவளுக்குக் கொடுப்பது வழக்கம். அப்பேர்ப்பட்ட அந்த டிரோனுஷ்கா ஒரு நம்பிக்கையான நண்பர் என்று அவள் நினைத்தாள். ‘டிரோனுஷ்கா நமது இந்தக் கஷ்ட காலத்தில்...’ என்று

அவள் ஆரம்பித்தாள். ஆனால், அவளால் மேலே பேச முடியவில்லை.

'நாம் எல்லோரும் கடவுளின் கைகளில் இருக்கிறோம்' என்று அவன் ஒரு பெரு மூச்சோடு சொன்னான்.

சிறிது நேரம் அவர்கள் மௌனமாயிருந்தார்கள்.

'டிரோனுஷ்கா, அல்பாட்டிச் எங்கேயோ போயிருக்கிறார். யோசனை கேட்பதற்கு எனக்கு வேறு யாரும் இல்லை. நான் இதை விட்டுப் போக முடியாதென்று அவர்கள் சொல்லுகிறார்களே, அது உண்மையா?'

'மேன்மை தங்கியவரே, நீங்கள் ஏன் போக முடியாது? நீங்கள் போகலாம்' என்று டிரான் சொன்னான்.

'நான் போவதும், எதிரிகளினால் அபாயகரமாய் இருக்கம் என்று எனக்குச் சொல்லுகிறார்கள். அருமை நண்பனே, என்னால் ஒன்றும் செய்ய முடியாது. எனக்கு ஒன்றும் புரியவில்லை. எனக்கு ஒருவரும் இல்லை. இன்று இரவோ, அல்லது நாளை காலையிலோ, நான் இதை விட்டுப் போக விரும்புகிறேன்.'

டிரான் தயங்கி நின்றான். கடைக்கண்ணால் இளவரசி மேரியைப் பார்த்துவிட்டு, அவன் கூறியதாவது:

'குதிரைகள் ஒன்றுமில்லை. யாக்காவ் அல்பாட்டிச்சிடம் அப்படியே நான் சொன்னேன்.'

'ஏன், அவைகள் இல்லை?' என்று இளவரசி கேட்டாள்.

'எல்லாம் கடவுளின் சாபம். நம்மிடம் இருந்த குதிரைகளை எல்லாம், ராணுவத்தார் எடுத்துக்கொண்டோ, மரணமடைந்தோ போயின. இது அப்பேர்ப்பட்ட வருஷம். குதிரைகளுக்குத் தீனி போடுவது என்பது முடியாத காரியம். நாமே பட்டினியினால் இறக்க நேரிடலாம். இப்பொழுது இருக்கிற நிலைமையில், சிலர் மூன்று நாட்கள் கூட சாப்பிடாமல் இருக்கிறார்கள். எங்களிடம் ஒன்றுமில்லை. நாங்கள் நாசமடைந்து போனோம்' என்று டிரான் சொன்னான்.

இளவரசி மேரி, அவன் சொல்லியதைக் கவனமாகக் கேட்டாள்.

'விவசாயிகள் நாசமடைந்து போனார்களா? அவர்களுக்கு உணவில்லையா?' என்று அவள் கேட்டாள்.

'உண்பதற்கு எதுவும் இல்லாமல், அவர்கள் செத்துக்கொண்டிருக் கிறார்கள். இந்த நிலைமையில், வண்டிகளுக்கு எங்கே போவது?' என்று டிரான் சொன்னான்.

‘டிரோனுஷ்கா, என்னிடம் ஏன் நீ சொல்லவில்லை? அவர்களுக்கு உதவி செய்வது சாத்தியமில்லையா? என்னால் முடிந்ததையெல்லாம் நான் செய்வேன்...’

அந்தத் துக்கம் அவளுடைய உள்ளத்தில் நிறைந்திருந்த போது, பணக்காரர் என்றும் ஏழைகள் என்றும் இருப்பதோ, ஏழைகளுக்குப் பணக்காரர்கள் உதவி செய்ய மறுப்பதோ, விசித்திரமாக இளவரசி மேரிக்குத் தோன்றியது. ‘சொந்தக்காரரின் தானியங்கள் என்று ஒன்று இருப்பதாக, அவள் அரைகுறையாகக் கேட்டிருந்தாள். அந்தத் தானியத்தை விவசாயிகளுக்குச் சில சமயங்களில் கொடுப்பதுண்டு. அவளுடைய தந்தையோ, அல்லது சகோதரரோ, விவசாயிகளுக்கு அவசியமானபோது, உதவி செய்யாமல் இருக்க மாட்டார்கள் என்பதை அவள் அறிவாள். ஆனால், அந்தத் தானியத்தை அவள் விரும்பிக் கொடுக்கும்போது, அதை வினியோகிப்பதைப் பற்றிப் பேசுவதில் ஏதாவது தவறு செய்து விடுவாளோ என்று பயந்தாள். தன்னுடைய சொந்த துக்கத்தை மறைப்பதற்கு, இம்மாதிரி கவலைகள் தோன்றியதைக் கண்டு அவள் சந்தோஷமடைந்தாள். விவசாயிகளின் தேவைகள் என்ன என்பதைப் பற்றியும், பாகுசாரவாவில் சொந்தக்காரர்களின் தானியம் எவ்வளவு இருக்கிறது என்பதைப் பற்றியும், அவள் டிரானிடம் கேட்டாள்.

‘என்னுடைய சகோதரருக்கு சொந்தமான தானியம் இருக்கிறதல்லவா?’ என்று அவள் கேட்டாள்.

‘சொந்தக்காரரின் தானியம் பந்தோபஸ்தாக இருக்கிறது’ என்று டிரான் பெருமையோடு பதிலளித்தான். ‘அதை விற்கும்படி, நமது இளவரசர் உத்தரவு கொடுக்கவில்லை.’

‘அந்த தானியத்தை விவசாயிகளுக்குக் கொடுத்துவிடு. அவர்களுக்கு அவசியமானதையெல்லாம் பெற்றுக் கொள்ளட்டும். என்னுடைய சகோதரரின் பேரால், நான் உனக்கு அனுமதி கொடுக்கிறேன்’ என்று அவள் சொன்னாள்.

டிரான் பதில் சொல்லவில்லை. ஆனால், ஆழ்ந்த பெருச்சு விட்டான்.

‘அவர்களுக்குப் போதுமானபடி இருந்தால், அந்தத் தானியத்தைக் கொடுத்து விடு; எல்லாவற்றையும் கொடுத்துவிடு. என்னுடைய சகோதரரின் பேரால், நான் இந்த உத்தரவைக் கொடுக்கிறேன். நம்முடையதெல்லாம், அவர்களுடையதுதான் என்று அவர்களுக்குச் சொல்லு. அவர்களுக்கு எதையும் கொடுப்பதற்கு, நாம் தயங்கமாட்டோம். அம்மாதிரியே அவர்களிடம் சொல்லுவாயாக.’

அவள் பேசிக்கொண்டிருந்தபோது, கவனமாக டிரான் அவளைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

'என்னை வேலையிலிருந்து, கடவுளுக்காக, நிறுத்தி விடுங்கள், எனது சிறிய தாயே! என்னிடமிருந்து சாவிகளை எடுத்துக் கொள்ளும்படி உத்தரவிடுகள். 23 வருஷங்கள் நான் ஊழியம் செய்திருக்கிறேன் ஒரு தவறும் செய்யவில்லை. கடவுளுக்காக, வேலையிலிருந்து என்னை நிறுத்திவிடுங்கள்' என்று அவன் சொன்னான்.

அவன் அவளிடம் என்ன கேட்கிறான் என்பதை, இளவரசி மேரியால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவனை வேலையை விட்டு நிறுத்திவிட வேண்டுமென்று எதற்காகக் கேட்கிறான் என்பதையும் அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவள் அவனுடைய பக்தி விசுவாசத்தைப் பற்றி எப்பொழுதும் சந்தேகித்ததில்லையென்றும், அவனுக்காகவும் விவசாயி களுக்காகவும் என்ன வேண்டுமோ, அவற்றைச் செய்வதற்கு அவள் தயாராக இருப்பதாகவும் சொன்னாள்.




ஒரு மணி நேரத்திற்குப் பின்பு, துனியாஷா இளவரசியிடம் வந்து, டிரான் வந்திருப்பதாகக் கூறினாள். விவசாயிகள் எல்லோரும் தானியக் களஞ்சியத்திற்குப் பக்கத்தில் இளவரசியின் உத்தரவுப்படி கூடியிருப்பதாகவும், தங்கள் எஜமானியிடம் பேச விரும்புவதாகவும் தெரிவித்தாள்.

'நான் அவர்களை வரும்படி, ஒருபோதும் சொல்லவில்லையே. அவர்களுக்கு வேண்டிய தானியங்களைக் கொடுக்கும்படித்தானே நான் டிரானிடம் சொன்னேன்' என்றாள் இளவரசி மேரி.

'கடவுளுக்காக, அன்பான இளவரசியே, அவர்களை அனுப்பிவிடு. அவர்களிடம் போக வேண்டாம். அதெல்லாம் ஒரு தந்திரம். யாக்காவ் அல்பாட்டிச் திரும்பிவந்த பின்பு, நாம் இதை விட்டுப் போய் விடுவோம்... தயவு செய்து போக வேண்டுடாம்...' என்று துனியாஷா சொன்னாள்.

'என்ன தந்திரம்?' என்று ஆச்சரியத்தோடு இளவரசி மேரி கேட்டாள்.

'அது தந்திரம் என்பது எனக்குத் தெரியும். கடவுளுக்காக, நான் சொல்லுவதைக் கவனமாய்க் கேள், கடவுளுக்காக, தாதியை

வேண்டுமானாலும் கேட்கலாம். அவர்கள் பாகுசாரவாவை விட்டு, நீர் உத்தரவு கொடுத்தபடி, போகமுடியாது என்று சொல்லுகிறார்கள்.'

'நீங்கள் ஏதோ ஒரு தவறு செய்வதாகத் தெரிகிறது. அவர்களைப் போகும்படி ஒருபொழுதும் நான் உத்தரவு கொடுக்கவில்லை. டிரோனுஷ்காவைக் கூப்பிடுங்கள்' என்று இளவரசி மேரி சொன்னாள்.

டிரான் அங்கே வந்து, துனியாஷா சொல்லியதை உறுதிப் படுத்தினான். இளவரசியின் உத்தரவுப்படியே, விவசாயிகள் வந்திருப்பதாகச் சொன்னான்.

'ஆனால், நான் அவர்களை எப்போதும் அழைக்கவில்லையே. நீ நான் சொல்லியதைத் தவறாக அவர்களிடம் சொல்லியிருக்க வேண்டும். அவர்களுக்கு வேண்டிய தானியங்களைக் கொடுக்க வேண்டுமென்று மட்டும்தான், உன்னிடம் நான் சொன்னேன்.'

டிரான், அதற்குப் பதிலாக, ஒரு பெருச்சு விட்டான்.

'நீர் அம்மாதிரி உத்தரவிட்டால், அவர்கள் போய்விடுவார்கள்' என்று அவன் சொன்னான்.

'இல்லை, இல்லை, நான் அவர்களிடம் போகிறேன்' என்று இளவரசி மேரி சொன்னாள். தாதிரியனுடையவும், துனியாஷாவி னுடையவும் ஆட்சேபணைகளை அவள் கவனிக்காமல், முற்ற மண்டபத்திற்கு வெளியே போனாள். டிரான், துனியாஷா, தாதி, மைக்கேல் ஐவானாவிச் ஆகியவர்களும், அவளுக்குப் பின்னால் போனார்கள்.

'அவர்கள் இங்கே தங்கியிருப்பதற்காக, நான் தானியங்களை லஞ்சமாகக் கொடுப்பதுபோல, அவர்கள் ஒருவேளை நினைத்துக் கொண்டிருக்கலாம். நானே போகும்போது, அவர்களை பிரஞ்சுக்காரர்களின் தயவில் விட்டு விடப்போவதாக, அவர்கள் நினைத்திருக்கலாம். அவர்கள் குடியிருக்க வசதியையும், சாப்பாட்டிற்கு வேண்டிய தானியங்களையும், மாஸ்கோ எஸ்டேட்டில் நான் கொடுப்பதாகச் சொல்லுகிறேன். என்னுடைய நிலைமையில் ஆண்ட்ரூ இருந்தால், இதை விட இன்னும் அதிகமாகவே கொடுத்திருப்பார்' என்று, அவள் வெளியே, அந்த அந்தி நேர வெளிச்சத்தில், தானியக் களஞ்சியத்துக்குப் பக்கத்தில் உள்ள புல்வெளியில் கூடியிருந்த கூட்டத்தை நோக்கிப் போகும்போது, நினைத்துக் கொண்டாள்.

அங்கிருந்த மக்கள் நெருங்கி நின்றார்கள். பரபரப்படைந்து வேகமாகத் தங்கள் தொப்பிகளை எடுத்தார்கள். இளவரசி மேரி

பார்வையைக் கவிழ்த்துக் கொண்டு, தன்னுடைய பாவாடை சிறிது தடுக்க, அவர்கள் பக்கத்தில் நெருங்கி வந்தாள். வாலிபர்களும் வயோதிகர்களுமாக அங்கு நின்று கொண்டிருந்தவர்களுடைய பல வகையான கண்களெல்லாம், அவள் மீது பதிந்தன. பலவிதமான முகங்கள் அங்கே காணப்பட்டன. அவர்களில் ஒருவரையும் அவளால் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. அவர்கள் எல்லோருக்குமாகச் சேர்த்து, உடனே பேச வேண்டுமென்று உணர்ந்தாள். ஆனால் எப்படிப் பேசுவது என்பது அவளுக்குத் தெரியவில்லை. அவள் அவளுடைய தந்தையுடையவும், சகோதரருடையவும் பிரதி நிதியாக அங்கே நிற்பதாக எண்ணியபோது, அவளுக்குப் பலம் ஏற்பட்டது. உடனே தைரியத்தோடு பேச்சை ஆரம்பித்தாள்.

'நீங்கள் இங்கே வந்ததைப் பற்றி, நான் மிகவும் சந்தோஷமடைகிறேன்.' என்று அவள், தன்னுடைய பார்வையை உயர்த்தாமலேயே பேசினாள். அவளுடைய இருதயம் பலமாகவும், வேகமாகவும் அடித்துக் கொண்டிருந்தது. டிரோனுஷ்கா இந்த யுத்தத்தினால் நீங்கள் எல்லோரும் கெட்டுப் போனீர்கள் என என்னிடம் சொன்னான். இது நம் எல்லோருக்கும் ஏற்பட்ட ஒரு பொதுவான துரதிருஷ்டம். உங்களுக்கு உதவி செய்வதற்கு, நான் எதுவும் கொடுக்கத் தயங்க மாட்டேன். இங்கே இருப்பது அபாயமாக இருப்பதால், நானே இதை விட்டுப் போகிறேன்... எதிரி நெருங்கி வந்து விட்டான். ஏனென்றால்... உங்களுக்கு ஒவ்வொன்றையும் நான் கொடுக்கத் தயாராய் இருக்கிறேன், எனது நண்பர்களே, நீங்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கொள்ளும்படி உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். ஏனெனில், நீங்கள் கஷ்டப்படக்கூடாது என்பது ஒன்றே, என்னுடைய விருப்பம். உங்களை நிறுத்தி வைப்பதற்காகத்தான், நான் தானியம் கொடுப்பதாக யாராவது சொன்னால், அது உண்மையல்ல. அதற்கு மாறாக, நீங்கள் உங்களுடைய உடைமைகளையெல்லாம் எடுத்துக் கொண்டு, மாஸ்கோவுக்குப் பக்கத்திலுள்ள நமது எஸ்டேட்டுக்கு வரவேண்டுமென்று, உங்களை நான் கேட்டுக் கொள்ளுகிறேன். அங்கே உங்களுக்கு ஒரு குறையும் இல்லாதபடி, நான் பார்த்துக் கொள்வேன். உங்களுக்கு வேண்டிய உணவும், குடியிருக்க வசதியும் அங்கே கொடுக்கப்படும்.'

இளவரசி நிறுத்தினாள். அந்தக் கூட்டத்திலிருந்து பெருச்சு விடும் சப்தம் ஒன்றுதான் கேட்டு'கொண்டிருந்தது.

'என்னுடைய சொந்தப் பொறுப்பில், நான் இதைச் செய்யவில்லை. என்னுடைய காலம் சென்ற தந்தையின்

பெயராலும் (அவர் உங்களுக்கு நல்ல எஜமானராய் இருந்தார்), என்னுடைய சகோதரரின் பெயராலும், அவருடைய குமாரரின் பெயராலும், நான் இதைச் செய்கிறேன்.'

மீண்டும் அவள் சிறிது நிறுத்தினாள். ஒருவரும் அமைதியைக் குலைக்கவில்லை.

'இது நம் எல்லோருக்கும் ஏற்பட்ட ஒரு பொதுவான துரதிருஷ்டம். இதை நாம் எல்லோரும் பங்கு கொள்வோம். என்னிடம் இருப்பவையெல்லாம் உங்களுடையவைகளே' என்று அவள் பேசி முடித்து, அவளுக்கு முன்பாக நின்றிருந்தவர்களின் முகங்களைக் கவனித்தாள்.

எல்லா கண்களும், ஒரே மாதிரியான தோற்றத்தோடு அவளை நோக்கின. அந்தத் தோற்றம் ஆச்சரியமா, அல்லது பக்தியா, அல்லது நன்றியா, அல்லது பயமா, அல்லது அவநம்பிக்கையா என்பதை, அவளால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால், எல்லோருடைய முகத்திலும் தென்பட்ட அந்தத் தோற்றம், ஒரே மாதிரியாக இருந்தது.

'உங்களுடைய கொடைக்காக, நாங்கள் நன்றியுள்ளவர்களாய் இருக்கிறோம். ஆனால், எஜமானரின் தானியங்களை நாங்கள் எடுத்துக் கொள்ளமாட்டோம்' என்று கூட்டத்திற்குப் பின்னாலிருந்து ஒரு ஒலி கிளம்பியது.

'ஏன் எடுத்துக் கொள்ளமாட்டீர்கள்?' என்று இளவரசி மேரி கேட்டாள்.

ஒருவரும் பதில் சொல்லவில்லை.

இளவரசி மேரி, அந்தக் கூட்டத்தைச் சுற்றிப் பார்வையைச் செலுத்தினாள். அவளைப் பார்த்துக் கொண்டிருந்த ஒவ்வொரு கண்ணும், அவளுடைய பார்வையைக் கண்டதும் கீழ்நோக்கிக் கொண்டது.

'ஆனால், நீங்கள் ஏன் அதை எடுத்துக்கொள்ள மாட்டோம் என்று சொல்கிறீர்கள்?' என்று அவள் மீண்டும் கேட்டாள்.

ஒருவரும் பதில் சொல்லவில்லை.

அந்த மௌனம் இளவரசியை அமுக்குவதாய் இருந்தது. அவள் யாராவது ஒருவருடைய பார்வையின் கவனத்தைப் பற்ற முயற்சித்தாள்.

'நீங்கள் ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்?' என்று அவள், அவளுக்கு முன்னால் ஒரு தடிக் கம்பு மீது சாய்ந்துகொண்டிருந்த அந்த வயதான மனிதரைக் கேட்டாள்.

'இன்னும் நீங்கள் ஏதாவது வேண்டுமென்று நினைப்பீர்களானால், அதை எனக்குச் சொல்லுங்கள். நான் எதை வேண்டுமானாலும் தருகிறேன்.' என்று அவள், அவனுடைய பார்வையைப் பற்றிச் சொன்னாள்.

இப்படிச் சொன்னது, அந்தக் கிழவனுக்கு கோபம் வந்தது போலத் தோன்றியது. அவன் தன்னுடைய தலையை மிகவும் தாழ்மையாகக் குனிந்து, வாயில் முணு முணுத்தான்:

'நாங்கள் எதற்காகச் சம்மதிக்க வேண்டும்? எங்களுக்கு அந்தத் தானியம் வேண்டியதில்லை.'

'நாங்கள் எதற்காக ஒவ்வொன்றையும் விட்டுவிட வேண்டும்? நாங்கள் சம்மதிக்கவில்லை, சம்மதிக்கவில்லை... உங்களுக்காக, நாங்கள் வருந்துகிறோம். ஆனால், எங்களுக்குச் சம்மதமில்லை. நீங்கள் மட்டும் தனியாகப் போகலாம்...' என்று, அந்தக் கூட்டத்தின் பல திசைகளிலிருந்தும் குரல்கள் ஒலித்தன.

மீண்டும் அந்தக் கூட்டத்திலிருந்து எல்லோருடைய முகங்களிலும், ஒரே மாதிரியான தோற்றம் காணப்பட்டது. இப்போது அந்தத் தோற்றம் ஆச்சரியமோ, நன்றியோ தெரிவிப்பதாக இல்லை. ஆனால், கோபம் கொண்ட ஒரு தீர்மானத்தைக் கொண்டதாக இருந்தது.

'ஆனால், நீங்கள் என்னைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை' என்று இளவரசி மேரி ஒரு சோகமான புன்னகையோடு கூறினாள். 'நீங்கள் ஏன் போக வேண்டாமென்று விரும்புகிறீர்கள்? உங்கள் எல்லோருக்கும் உண்ண உணவும், தங்க வீடும் கொடுப்பதாக நான் வாக்குறுதி கொடுக்கிறேன். இங்கே எதிரி வந்தால், உங்களை நாசமாக்கி விடுவான்...'

அவளுடைய பேச்சை, அந்தக் கூட்டத்தினுடைய கூச்சல்கள் அமுக்கிவிட்டன.

'எங்களுக்குப் போவதற்கு விருப்பமில்லை. எங்களை எதிரிகள் நாசமாக்கட்டும். நாங்கள் உங்களுடைய தானியத்தைப் பெற்றுக் கொள்ள மாட்டோம். நாங்கள் சம்மதிக்கவில்லை.'

மீண்டும் இளவரசி மேரி, யாராவது ஒருவருடைய கவனத்தை இழுக்க முயற்சித்தாள். ஆனால் அந்தக் கூட்டத்திலிருந்த ஒரு கண்கூட, அவளுடைய பக்கம் திரும்பவில்லை. அவளுடைய பார்வையிலிருந்து தவிர்த்துக் கொள்ளுவதற்காக, எல்லோரும் முயற்சி செய்ததாகத் தோன்றியது. அவள் விசித்திரமானதும் எக்கச்சக்கமானதுமான உணர்ச்சியைக் கொண்டாள்.

‘ஆமாம், ஒரு தந்திரமான கதை. அவளைப் பின்பற்றி அடிமைத் தனத்திற்குப் போகவேண்டும்! உங்கள் வீடுகளையெல்லாம் நாசமாக்கிவிட்டு, அடிமைத்தனத்துக்குப் போக வேண்டும்! நன்றாய் இருக்கிறது! ‘‘நான் உங்களுக்கு தானியத்தைத் தருகிறேன்’’ என்று சொல்லுகிறாள்’ என, அந்தக் கூட்டத்திலிருந்தவர்கள் பேசுவது கேட்டது.

தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு, இளவரசி மேரி கூட்டத்தை விட்டுப் புறப்பட்டு, வீட்டிற்குத் திரும்பினாள். மீண்டும் அவள் டிரானிடம் மறுநாள் காலையில், அவள் புறப்படுவதற்கு வேண்டிய குதிரைகளைக் கொண்டு வரும்படி உத்தரவிட்டு விட்டு, தன்னுடைய அறைக்குச் சென்று, தனியாக இருந்து சிந்திக்க ஆரம்பித்தாள்.



அன்று இரவு அவளுடைய அறையிலிருந்த திறந்த ஜன்னலுக்குப் பக்கத்தில், வெகு நேரமாக இளவரசி மேரி உட்கார்ந்து கிராமத்திலிருந்து ஒலித்துக் கொண்டிருந்த விவசாயிகளின் குரல்களைக் கேட்டுக் கொண்டிருந்தாள். ஆனால், அவர்களைப் பற்றி அவள் அப்போது நினைத்துக் கொண்டிருக்கவில்லை. அவர்களைப் பற்றி எவ்வளவுதான் சிந்தித்தாலும், அவர்களை அவளால் புரிந்து கொள்ள முடியவில்லையென்று அவள் உணர்ந்தாள். அவள் அப்போது ஒன்றே ஒன்றைப் பற்றித்தான் சிந்தித்துக் கொண்டிருந்தாள். அதாவது, அவளுடைய ‘ துக்கம், தற்காலக் கவலைகளினால் அந்த துக்கம், வெகு காலத்திற்கு முன்பாகக் கடந்து போன ஒரு விஷயமாக இப்போது அவளுக்குத் தோன்றியது. ஆனால், அவளால் இப்போது அதை நினைவு கூர்ந்து அழவோ, அல்லது பிரார்த்தனை செய்யவோ முடியும்.

சூரிய அஸ்தமனத்திற்குப் பின்பு, காற்று அடிப்பது குறைந்திருந்தது. இரவு, மகிழ்ச்சியாகவும் அமைதியாகவும் இருந்தது. நள்ளிரவில் குரல்கள் தணிந்துபோக ஆரம்பித்தன. ஒரு சேவல் கொக்கரித்தது. எலுமிச்சை மரங்களுக்குப் பின்னாலிருந்து, பூரண சந்திரன் ஒளி வீசிக் கொண்டிருந்தது. ஒரு சுத்தமான, வெள்ளையான மூடுபனி, மேலே கிளம்பிக்கொண்டிருந்தது. ஆடி அசையாத அமைதி அந்தக் கிராமத்தையும், அந்த வீட்டையும் ஆட்சி புரிந்து கொண்டிருந்தது.

அவளுடைய தந்தையின் அசௌக்கியமும், அவருடைய காலத்திய நிகழ்ச்சிகளும், அவளுக்கு ஒன்றன் பின் ஒன்றாக மனதில் தோன்றிக் கொண்டிருந்தன. அவள் துக்கம் கொண்ட மகிழ்ச்சியோடு அந்தக் காட்சிகளில் உழன்று கொண்டிருந்தாள். ஆனால், கடைசி காட்சியான அவருடைய மரணத்தின் காட்சியை மட்டும், அவள் பயங்கரத்தோடு உதறித் தள்ளிக் கொண்டிருந்தாள். அந்தக் காட்சியை மட்டும், இந்த அசைவு அற்ற, ஆச்சரியமான ராத்திரி நேரத்தில் கூட, அவளால் யோசித்துப் பார்ப்பது முடியாத காரியமாய் இருந்தது. அந்தக் காட்சிகள் எல்லாம், அவளுக்கு வெகு தெளிவாகவும் நுணுக்கமாகவும் தோன்றியபடியால், சில சமயம் அது தற்காலக் காட்சிகள் என்றும், சில சமயம் கடந்த காலக் காட்சிகள் என்றும் அவளுக்குத் தோன்றுவதுண்டு.

அவளுடைய தந்தைக்கு முதலில் ஏற்பட்ட அந்த நோய்த் தாக்குதலைப் பற்றி, அவள் தெளிவாக நினைவு கூர்ந்தாள். அவருடைய கையைப் பற்றி பால்டு ஹில்ஸ் தோட்டத்தின் வழியாக அவரைக்கொண்டு வந்ததையும், அச்சமயம் அவர் தம்முடைய பிரயோஜனமற்ற நாக்கினால் எதையோ முனங்கிக் கொண்டிருந்ததையும், அவருடைய சாம்பல் வர்ணப் புருவங்கள் நெறித்துக் கொண்டிருந்ததையும் அவர் மன அமைதியில்லாமல் சங்கோஜத்தோடு அவளைப் பார்த்ததையும் அவள் நினைவு கூர்ந்தாள்.

'அவர் இறந்த தினத்தில் என்னிடம் என்ன சொன்னாரோ, அதை அப்போதே சொல்ல விரும்பினார். என்னிடம் அப்போது என்ன சொன்னாரோ, அதையேதான் எப்போதும் நினைத்துக் கொண்டு இருந்திருக்கிறார்' என்று அவள் நினைத்தாள். கடைசியாக ஏற்பட்ட நோய்த் தாக்குதலுக்கு முன்பாக, ஒரு இரவில் பால்டு ஹில்ஸில் நடந்த ஒரு சம்பவத்தை நுணுக்கமாக மீண்டும் அவள் நினைவு கூர்ந்தாள். அன்று ஏதோ ஒரு விபத்து ஏற்படப்போகிறது என்ற உள்ளுணர்ச்சிகொண்டு, அவர் கூறியதற்கும் விரோதமாக, அவள் புறப்பட்டுப் போகாமல் வீட்டிலேயே தங்கினாள். அவள் அன்று இரவு தூங்கவில்லை. மெதுவாக முன்னம் பாதங்களில் ஊன்றி மெத்தைப் படிகளில் இறங்கி செடிக்கூடத்தின் கதவுப் பக்கம் போனாள். அங்கேதான் அன்று இரவு அவர் தூங்கினார். மிகுந்த கஷ்டம் கொண்ட, தளர்ச்சியுள்ள குரலில், அவர் எதையோ டைக்கனிடம் சொல்லிக்கொண்டிருந்தார். கிரிமியாவைப் பற்றியும், அந்தப் பிரதேசத்திலுள்ள உஷ்ணமான இரவுகளைப் பற்றியும் சக்கரவர்த்தினியைப் பற்றியும், அவர் பேசிக்கொண்டிருந்தார்.

ஆகவே பேசவேண்டுமென்று அவருக்கு விருப்பம் இருந்தது அழைக்கவில்லை? டைக்கனுக்குப் பதிலாக, என்னை ஏன்அவர் அங்கே கூப்பிடவில்லை?' என்று இளவரசி மேரி அப்போது நினைத்தாள். அதே மாதிரி, இப்போதும் நினைத்தாள். 'அவருடைய உள்ளத்தில் என்ன இருந்தது என்பதை அவர் ஒருவரிடமும் இப்போது சொல்ல முடியாது. அந்தச் சந்தர்ப்பம் அவருக்கு இனி வரப் போவதில்லை, அல்லது அவர் என்ன சொல்ல விரும்பினார் என்பதை தெரிந்துகொள்வதற்கும், எனக்குச் சந்தர்ப்பகம் வரப்போவதில்லை. அவர் என்ன சொல்ல விரும்பினாரோ, அதை, நானாக இருந்தால், கேட்டு அறிந்துகொண்டிருக்க முடியும்; டைக்கனால் முடியாது. நான் ஏன் அந்த அறைக்குள் அப்போது போகவில்லை?' என்று அவள் நினைத்தாள். 'ஒரு வேளை அவர் இறந்து போன தினத்தில் சொல்லிய விஷயங்களை, அப்போதே என்னிடம் சொல்லி இருப்பார். அவர் டைக்கனோடு பேசிக்கொண்டிருந்தபோது, இரு தடவை என்னைப் பற்றிக் கேட்டார். என்னைப் பார்க்க வேண்டுமென்று சொன்னார். நானும் வெளியே, கதவுக்குப் பக்கத்தில்தான் நின்றுகொண்டிருந்தேன். அவரைப் புரிந்துகொள்ள முடியாத டைக்கனிடம் பேசுவதற்கு, அவருக்குத் துக்கமாகவும் வருத்தமாகவும் இருந்தது. லிசாவைப் பற்றி அவர் அவளிடம் பேச ஆரம்பித்தது, எனக்கு நினைவில் இருக்கிறது. அவள் உயிரோடு இருப்பது போல நினைத்துப் பேசினார். அவள் இறந்து விட்டதை அவர் மறந்து விட்டார். அவள் இறந்து விட்டதாக டைக்கன் அவருக்கு ஞாபகட்டியபோது, அவர் 'முட்டாள்' என்று சொல்லிக் கூச்சலிட்டார். அவர் மிகவும் மனம் சோர்ந்து போனார். அந்தக் கதவுக்குப் பின்னால் இருந்து, அவர் தமது படுக்கையில் எப்படிப் புலம்பிக்கொண்டு, பலமான சப்தத்தில் 'எனது கடவுளே' என்று கூவிக்கொண்டு படுத்தார் என்பதை நான் கேட்டேன். அச்சமயத்தில் நான் ஏன் உள்ளே போகவில்லை? அவர் எனக்கு என்ன செய்திருப்பார்? எனக்கு என்ன நஷ்டம் ஏற்பட்டிருக்கும்? ஒரு வேளை அச்சமயத்தில் நான் போயிருந்தால், அவருக்கு இதமாய் இருந்திருக்கும். அந்த வார்த்தையை அவர் என்னிடம் சொல்லியிருப்பார்' என்று அவள் மேலும் நினைத்தாள். இளவரசி மேரி அச்சமயம், மிகவும் அருமையாக, அந்த இறந்துபோன தினத்தில், அவளுடைய தந்தை கூறி வார்த்தையைப் பலமாக உச்சரித்துச் சொன்னாள். 'எனது அன்பிலும் அன்பானவளே' என்ற வார்த்தையை அவள் மீண்டும் மீண்டும் சொல்லி, விம்மிக் கொண்டு கண்ணீர் வடித்தாள். அப்படிச் செய்தது, அவளுடைய உள்ளத்திற்கு திருப்தியாய் இருந்தது. இப்போது

அவருடைய முகத்தை அவளுடைய மனக்கண் முன்பாகக் கண்டாள். தூரத்திலிருந்தே எப்பொழுதும் அவரைத் தெரிந்துகொண்டிருந்த, வெகு காலமாக அவள் மனதில் பதிந்திருந்த அந்த முகம் அல்ல; கடைசி காலத்தில் தோன்றிய அந்த சங்கோஜமான, பலவீனமான முகமே அவளுக்குத் தோன்றியது. முதல் தடவையாக, அந்த முகத்தை அவள் வெகு சமீபத்திலிருந்து கவனித்தாள். அந்த முகமும், அந்த முகத்திலிருந்த சுருக்கங்களும், அவள் அவருடைய வாய்க்குப் பக்கத்தில் குனிந்து, அவர் என்ன சொல்கிறார் என்பதைக் கேட்க முயற்சித்தபோது அவளுக்குத் தோன்றிய அந்த முகமே இப்பொழுது தெளிவாகத் தோன்றியது.

'எனது அன்பிலும் அன்பானவளே' என்ற வார்த்தையை அவள் மீண்டும் சொன்னாள்.

'அந்த வார்த்தையை அவர் சொல்லியபோது, அவர் என்ன நினைத்துக்கொண்டிருந்தார்? அவர் இப்போது என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்?' இந்தக் கேள்வி அவளுக்குத் திடீரென்று தோன்றியது. இதற்குப் பதிலாக, அவள் முன்பு சவப் பெட்டியில் அவர் படுத்திருந்தபோது அவர் முகத்தில் தோன்றிய அதே தோற்றத்தோடு, அவருடைய நாடியையும் தலையையும் ஒரு வெள்ளை கைக்குட்டையால் கட்டியிருந்த அதே தோற்றத்தோடு காணப்பட்டது. அவள் அவரை அச்சமயம் தொட்டபோது அது அவர் அல்லவென்று அவள் மனதில் நிச்சயமாய்த் தோன்றி, அவருக்குப் பதிலாக ஏதோ ஒரு அதிசயமான, பயங்கரமான ஒன்று இருப்பதாக அவள் நினைத்தபோது அவளைப் பீதி பற்றிக்கொண்டது. அதே பீதி மீண்டும் அவளை இப்பொழுது பற்றியது. அவள் வேறு எதையாவது நினைக்கவும், அல்லது, பிரார்த்தனை செய்யவும் முயற்சித்தாள். ஆனால், இரண்டில் எதையும் அவளால் செய்ய முடியவில்லை. திறந்த கண்களோடு, அந்த சந்திர வெளிச்சத்தையும் நிழல்களையும் அவள் நோக்கி, அவருடைய இறந்துபோன முகத்தை ஒவ்வொரு வினாடியும், தான் பார்க்கப் போவதாக எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அந்த வீட்டை மூடியிருந்த அந்த மௌனம் தன்னை அதனுள்ளே பலமாகப் பிடித்துக்கொண்டிருப்பதாக அவள் நினைத்தாள்.

'துனியாஷா' என்று அவள் முனங்கினாள். 'துனியாஷா' என்று காட்டுத்தனமாக அவள் கூச்சலிட்டாள். அந்த அமைதியிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு, வேலைக்காரர்கள் இருக்கும் விடுதிகளைப் பார்த்து, அங்கிருந்த வேலைக்காரிகளையும், வயதான தாதிய்யையும் சந்திப்பதற்காக ஓடினாள். அவர்கள் இவளை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்தார்கள்.



ஆகஸ்டு மாதம் 17-ந் தேதியன்று ராஸ்டோவும் இலைனும், சமீபத்தில் கைதியாகி விடுதலை பெற்று அப்பொழுதுதான் அங்கு வந்து சேர்ந்த லாவ்ருஷ்கா பின் தொடர, வெளியே சவாரி போனார்கள். பாகுசாரவா என்ற இடத்திலிருந்து 10 மைல் தூரத்திலுள்ள, யாங்கோவா என்ற இடத்தில், அவர்கள் முகாம் போட்டிருந்தார்கள். இலைன் வாங்கி வந்த ஒரு புதிய குதிரையை சவாரி விட்டுப் பார்த்தற்காகவும், கிராமங்களில் வைக்கோல் கிடைக்கிறதா என்பதை அறிந்து கொள்வதற்காகவும், அவர்கள் வெளியே புறப்பட்டார்கள். அவர்களுடன் ஒரு குதிரைப்படை சேவகனும் வந்தான். சென்ற மூன்று தினங்களாக, ஒன்றுக்கொன்று விரோதமான இரண்டு ராணுவங்களுக்கும் இடையில், பாகுசாரவா இருந்து வந்தது. ஆகவே, ருஷ்ய ராணுவத்தின் கடைசிப் பகுதியும், பிரஞ்சு ராணுவத்தின் முன்னோட்டப் பகுதியும், அதற்கு வந்து போகும்படி இருந்தது. ராஸ்டோவ் ஒரு ஜாக்கிரதையான குதிரைப் படை கமாண்டராக இருந்துவந்தபடியால், பிரஞ்சுக்காரர்கள் பாகுசாரவாவிற்கு வந்து கைப்பற்றும் முன்பாக, அங்கே அகப்படுகிற உணவுப் பொருள்களைச் சேகரிப்பதற்கு விரும்பினார்.

ராஸ்டோவும் இலைனும் மிகுந்தட உற்சாகமான மனோபாவத்திலிருந்தார்கள். பாகுசாரவா எஸ்டேட் ஒரு ராஜ குடும்பத்தைச் சேர்ந்ததாகவும், ஒரு மாளிகையைக் கொண்டதாகவும், பண்ணைகளைக் கொண்டதாகவும் இருந்த படியால், அங்கே பல வீட்டு வேலைக்கார அடிமைகளையும், பல அழகிய பெண்களையும் சந்திக்கலாம் என்ற நம்பிக்கையோடு, அவர்கள் வந்துகொண்டிருந்தார்கள். வருகிற வழியில் நெப்போலியனைப்பற்றி லாவ்ருஷ்காவிடம் கேள்விகள் கேட்டு, அவன் சொல்லிய' கதைகளைக் கண்டு சிரித்துக் கொண்டும், இலைனுடைய குதிரையை சோதனை செய்தற்காக, ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டும் வந்தார்கள்.

தமது சகோதரிக்கு நிச்சயார்த்தமான அந்த பால்கோன்ஸ்கிக்கு சொந்தமான கிராமத்தில்தான், தாம் நுழைந்துகொண்டிருப்பதாக ராஸ்டோவுக்குத் தெரியாது.

ராஸ்டோவும் இலைனும் தங்களின் குதிரைகளின் லகான்களை இழுத்திழுத்து விட்டு, கடைசிப் போட்டிக்காக பாகுசாரவாவிற்கு

முன்னாலிருந்து சரியான பாதையில் வந்துகொண்டிருந்தார்கள். இலைனை ராஸ்டோவ் முந்திவிட்டார். அந்த கிராமத்துத் தெருவில் முதலில் ராஸ்டோவ்தான் பாய்ச்சலில் நுழைந்தான்.

'நீர் தான் முதலில் வந்தீர்' என்று முகம் சிவந்து இலைன் கூச்சலிட்டார்.

'ஆம், புல் தரையிலும் சரி, இங்கும் சரி, நான் தான் முதலாக வந்தேன்' என்று ராஸ்டோவ் பதில் கூறிவிட்டு, உஷ்ணமாயிருந்த அவருடைய டானெட்ஸ் குதிரையைத் தடவிக் கொண்டிருந்தார்.

'மேன்மை தங்கியவரே, என்னுடைய பிரஞ்சு குதிரையினால் உம்மை நான் வெற்றி பெற்றிருக்க முடியும். என்றாலும், உம்முடைய மனதை வருத்தடையச் செய்ய நான் விரும்பவில்லை' என்று பின்னால் வந்துகொண்டிருந்த லாவ்ருஷ்கா, தன்னுடைய மட்ட ரகமான வண்டிக் குதிரையைச் சுட்டிக் காட்டிச் சொன்னான்.

அவர்கள் கால்நடை வேகத்தில் தானியக் களஞ்சியத்திற்குப் போனார்கள். அங்கே விவசாயிகள் ஒரு பெரும் கூட்டமாக நின்று கொண்டிருந்தார்கள்.

சிலர் தங்கள் தொப்பிகளை எடுத்தார்கள். மற்றும் சிலர், தங்கள் தொப்பிகளை எடுக்காமலேயே, புதிதாய் வந்தவர்களை வெறித்துப் பார்த்தார்கள். சுருக்கங்கள் நிறைந்த முகங்களையும், சிறிய தாடிகளையும் கொண்ட இரண்டு உயரமான வயோதிக விவசாயிகள், கள்ளுக் கடையிலிருந்து வெளியே வந்தார்கள். அவர்கள் புன்சரிப்பு கொண்டு, கால்கள் தடுமாற, ஏதோ சில பாட்டுகளைப் பொருத்தமில்லாமல் பாடிக்கொண்டு, அந்த அதிகாரிகளிடம் நெருங்கினார்கள்.

'சிறந்த ஆசாமிகள்' என்று சிரித்துக்கொண்டே ராஸ்டோவ் கூறினார். 'இங்கே ஏதாவது வைக்கோல் கிடைக்குமா?'

'அவர்கள் எப்படி எல்லோரும் ஒரே மாதிரியாய் இருக்கிறார்கள்?' என்றார் இலைன்.

'ஒரு சி - ற - ந் - த - ம - கி - ழ் - ச் - சி -யா - ன - கூ - ட் - ட - ம்-...' என்று ஒரு விவசாயி ஆனந்த புன்சிரிப்போடு பாட்டுப் பாடினான்.

அந்தக் கூட்டத்திலிருந்த ஒருவன் முன்னால் வந்து, ராஸ்டோவிடம் சென்றான்.

'நீங்கள் யாரைச் சேர்ந்தவர்கள்?' என்று அவன் கேட்டான்.

'பிரஞ்சுக்காரர்கள்' என்று கேலியாக இலைன் பதில் சொன்னார். 'நெப்போலியன் இவரேதான்' என்று, லாவ்ருஷ்காவைச் சுட்டிக் காட்டினார்.

'அப்படியானால், நீங்கள் ருஷ்யர்களா?' என்று அந்த விவசாயி மீண்டும் கேட்டான்.

'உங்கள் படை இங்கே ஏராளமாக இருக்கிறதா?' என்று மற்றொரு குட்டையான மனிதன் அவர்களிடம் வந்து கேட்டான்.

'ரொம்ப ஏராளமாக இருக்கிறது. ஆனால், நீங்கள் ஏன் இங்கு கூடியிருக்கிறீர்கள்? இன்று விடுமுறை நாளா?' என்று ராஸ்டோவ் கேட்டார்.

'சமூக காரியங்களைப் பற்றிப் பேசுவதற்காக, வயதானவர்கள் இங்கே கூடி இருக்கிறார்கள்' என்று ஒரு விவசாயி பதில் சொல்லி விட்டு, அவர்களை விட்டுப் போனான்.

அதே வினாடியில், அந்தப் பெரிய வீட்டிலிருந்து வருகிறபாதையில், இரண்டு பெண்கள் வெள்ளைத் தொப்பி அணிந்த ஒரு ஆணும், அந்த அதிகாரிகளை நோக்கி வந்து கொண்டிருப்பது தெரிந்தது.

'அந்த ரோஜா வர்ணமுள்ள உடையில் வருகிறவள் என்னைச் சேர்ந்தவள். ஆகவே, நீங்கள் விலகி நில்லுங்கள்' என்று தம்மை நோக்கித் தைரியமாக ஓடி வந்துகொண்டிருந்த துனியாஷாவைப் பார்த்து இலைன் சொன்னார்.

'அவள் எங்களைச் சேர்ந்தவள்' என்று, லாவ்ருஷ்கா இலைனைப் பார்த்து கண் சிமிட்டிக் கொண்டு சொன்னான்.

'என் அழகே, உனக்கு என்ன வேண்டும்?' என்று ஒரு புன்னகையோடு இலைன் கேட்டார்.

'உங்களுடைய பட்டாளத்தின் பெயரையும் உமது பெயரையும் கேட்டு வரும்படி இளவரசி எனக்கு உத்தரவிட்டார்.'

'இவர்தான் கோமகன் ராஸ்டோவ்; குதிரைப்படைப் பிரிவின் கமாண்டர். நானோ உன்னுடைய பணிவுமிக்க சேவகன்.'

'க-ம்-பெ-னி-' என்று குடியால் தள்ளாடிக் கொண்டிருந்த ஒரு விவசாயி, இலைன் அந்தப் பெண்ணோடு பேசுவதைப் பார்த்து, இன்பமான புன்னகை காட்டி பலமாய்ச் சிரித்தான். துனியாஷாவுக்குப் பின்னால் வந்த அல்பாட்டிச் நேராக ராஸ்டோவிடம் போனார். கொஞ்சம் தூரத்தில் வரும்போதே, அவர் தமது தொப்பியைக் கழற்றிக் கொண்டார்.

'மேன்மை தங்கியவரே, நான் தொந்தரவு செய்வதற்குத் துணியலாமா?' என்று அவர் மரியாதையோடு, இந்த அதிகாரியின் இளமையைப் பார்த்து சிறிய இகழ்ச்சி கொண்டவராக, தமது

கையைச் சட்டைக்குள் மார்பில் வைத்துக்கொண்டு கேட்டார். 'பிரதம ஜெனரலான இளவரசர் நிக்கலஸ் பால்கோன்ஸ்கி, இம்மாதம் 15-ந் தேதியன்று காலமானார். அவருடைய குமாரரியான எனது எஜமானி, இந்த ஜனங்களின் காட்டுத்தனத்தால், கஷ்டங்களில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறாள். (அந்த விவசாயிகளை அவர் சுட்டிக் காட்டினார்) எனது எஜமானி, உம்மை வீட்டிற்கு வரும்படி அழைக்கிறாள்... தயவு செய்து இன்னும் கொஞ்சம் தூரம் நீர் வரமாட்டீரா?' என்று அல்பாட்டிச் ஒரு சோகமான புன்னகையோடு சொன்னார். 'ஏனென்றால், இவர்களுடைய முன்னிலையில் பேசுவது உசிதமாயிருக்காது.' அவர் அங்கே நின்றுகொண்டிருந்த இரண்டு விவசாயிகளைச் சுட்டிக் காட்டினார். ஒரு குதிரையை ஈக்கள் எப்படி நெருங்கியிருக்குமோ, அதே மாதிரி அந்த விவசாயிகள் அவரை நெருங்கியிருந்தார்கள்.

'ஆ!... அல்பாட்டிச்... ஆ, யாக்காவ் அல்பாட்டிச்... பலே பேஷ். கிறிஸ்துவுக்காக எங்களை மன்னித்துவிடும், ஏ! என்று, மகிழ்ச்சியோடு அவரைப் பார்த்து புன்னகைகொண்டு, அந்த விவசாயிகள் கூறினார்கள்.

அந்தக் குடிகார விவசாயிகளை ராஸ்டோவ் நோக்கி புன்னகை கொண்டார்.

'அவர்கள் செய்யும் தமாஷைப் பார்ப்பதற்கு மேன்மை தங்கியவருக்கு பிரியமாய் இருக்கிறதா?' என்று கூறி ஒரு சிந்தனை கொண்ட பார்வையோடு, தமது கையால் அந்த வயோதிகர்களைச் சுட்டிக் காட்டினார்.

'இல்லை, இங்கே தமாஷ் பார்ப்பதற்கு அதிகமாய் எதுவும் இல்லை' என்று ராஸ்டோவ் சொல்லிவிட்டு, சிறிது தூரம் குதிரையில் போனார். 'என்ன விசேஷம்?' என்று அவர் கேட்டார்.

'இங்கே இருக்கிற இந்த முரட்டு விவசாயிகள், இந்த எஸ்டேட்டை விட்டு எஜமானியைப் போகவிட மறுக்கிறார்கள். அவளுடைய வண்டிகளின் குதிரைகளை அவிழ்த்துவிடப் போவதாக பயமுறுத்துகிறார்கள். ஆகவே, காலையிலிருந்து சாமான்கள் எல்லாம் கட்டப்பட்டு தயாராக இருந்தபோதிலும், மேன்மை தங்கிய அவள் இதை விட்டுப் போக முடியவில்லை. இந்த விஷயத்தை மேன்மை தங்கிய உமக்கு நான் பணிவோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன்.'

'அசாத்தியமான காரியம்' என்று ராஸ்டோவ் கூறினார்.

'உண்மையான விஷயத்தையே நான் உமக்குச் சொல்லுகிறேன்' என்றார் அல்பாட்டிச்.

ராஸ்டோவ் குதிரையிலிருந்து இறங்கி, தமது சேவகனிடம் குதிரையை ஒப்புவித்து விட்டு, அல்பாட்டிச்சோடு வீட்டை நோக்கிப் போனார். அங்குள்ள நிலைமைகளைப் பற்றி அவரிடம் விசாரித்தார். விவசாயிகளுக்குத் தானியங்கள் கொடுப்பதாக முதல் நாளன்ற இளவரசி கூறியதும், டிரானுடன் அவள் பேசியதும், உண்மையில் விரோதமான பலன்களையே உண்டுபண்ணின, கடைசியாக சாவிகளை' டிரான் கொடுத்துவிட்டு, விவசாயிகளோடு சேர்ந்து கொண்டான். அவனை அல்பாட்டிச் அழைத்தபோது, அவன் வரவில்லை. இன்று காலையில், பியாணத்திற்காகக் குதிரைகளைக் கட்டுமபடி இளவரசி உத்தரவு கொடுத்தபோது, விவசாயிகள் பெரும் கூட்டமாக தானியக் களஞ்சியத்திற்கு வந்து, அவளை அந்த கிராமத்தைவிட்டு வெளியே போவதற்கு, தாங்கள் விடமாட்டோம் என்று சொல்லி அனுப்பினார்கள். அதை விட்டுப் போக கூடாதென்று ஒரு உத்தரவு இருப்பதாகவும், குதிரைகளை அவிழ்த்துவிடப் போவதாகவும் அவர்கள் சொன்னார்கள். அவர்களைக் கண்டிப்பதற்காக அல்பாட்டிச் அந்தக் கூட்டத்திடம் போனார். அங்கே, முக்கியமாக கார்ப் என்பவன்தான் பேசினான். டிரான் அந்தக் கூட்டத்தில் தலை காட்டவில்லை. இளவரசியைப் போகவிட முடியாதென்றும், போகவிடக் கூடாதென்றும் உத்தரவு இருப்பதாகவும், அவள் போகாமல் தங்கினால், முன்போலவே, அவளுக்கு தாங்கள் சேவை செய்வதாகவும், ஒவ்வொரு விஷயத்திலும் அவளுக்குக் கீழ்ப்படிவதாகவும், அல்பாட்டிச்சிடம் பதில் சொன்னார்கள்.

ராஸ்டோவும் இலைனும் ரஸ்தா வழியாகச் சவாரி வந்தபோது, அல்பாட்டிச்சும், இளவரசியின் தாதியும், வேலைக்காரிகளும் தடுத்த போதிலும், புறப்படுவதற்கு குதிரைகளைக் கட்டும்படி இளவரசி மேரி உத்தரவிட்டாள். இந்த குதிரைப்படை வீரர்களைப் பார்த்ததும், அவர்களைப் பிரஞ்சுக்காரர்கள் என்று நினைத்துக்கொண்டு, வண்டிக்காரன் ஓடிவிட்டான். அந்த வீட்டிலிருந்த பெண்கள் புலம்ப ஆரம்பித்தார்கள்.

'தந்தையே! தயாளரே, கடவுளே உம்மை அனுப்பியிருக்கிறார்' என்று, வெளி அறை வழியாக ராஸ்டோவ் வந்தபோது, பல குரல்கள் கூறின.

திக்கற்ற நிலைமையில், திகைப்புள்ள விதத்தில், அந்த பெரிய உட்காரும் அறையில் இளவரசி மேரி அமர்ந்திருந்தாள். அங்கே

ராஸ்டோவ் வந்தார். அவர் யார், எதற்காக வந்திருக்கிறார், அல்லது அவளுக்கு என்ன நேர்ந்துகொண்டிருக்கிறது என்பவைகளை, அவளால் கிரகித்துக்கொள்ள முடியவில்லை. அவருடைய ருஷ்ய முகத்தைப் பார்த்ததும், அவருடைய நடையைப் பார்த்ததும், அவர் முதல் முதலாகப் பேசிய வார்த்தைகளைக் கேட்டதும், அவர் தமது வகுப்பைச் சேர்ந்தவர்தான் என்பதைப் புரிந்துகொண்டாள். தனது ஒளி வீசும் பார்வையினால் அவரை நோக்கினாள். உணர்ச்சியினால் பதறிக் கொண்டும், தட்டுத் தடுமாறிக் கொண்டும் இருந்த குரலில் பேச ஆரம்பித்தாள். அந்த சந்திப்பு, ஒரு மனோகரமான வீரத்தனமான சம்பவம், என்று ராஸ்டோவின் மனதிற்கு உடனே தோன்றியது. 'ஒரு திக்கற்ற பெண், துக்கத்தால் அடிப்பட்ட பெண், கலகம் செய்யும் இந்த முரட்டு விவசாயிகளின் தயவில் விடப்பட்டிருக்கிறாள். என்னை இங்கே அனுப்பிய அந்த விதி, எவ்வளவு விசித்திரமானது. அவளுடைய முக' சாயல்களிலும், தோற்றங்களிலும், எவ்வளவு அமைதியும் கண்ணியமும் இருக்கின்றன' என்று, அவர் அவளைப் பார்த்து, அவள் சொல்லிய பீதியுற்ற கதையைக் கேட்ட போது நினைத்தார்.

தன்னுடைய தந்தையின் சவ அடக்கத்திற்கு மறுநாள்தான், இவையெல்லாம் ஏற்பட்டன என்பதை அவள் சொல்ல ஆரம்பித்த போது, அவள் குரல் நடுங்கியது. அவள் திரும்பிக் கொண்டாள். தனது வார்த்தைகளை அவருக்கு இரக்கம் உண்டாகும்படி உபயோகித்ததாக, அவர் எங்கு நினைத்துக் கொள்வாரோ என்று பயந்தவளாக, மீண்டும் திரும்பி, பீதியுற்ற கேள்விக் குறியோடு அவரைப் பார்த்தாள். ராஸ்டோவின் கண்களில் கண்ணீர் நிறைந்திருந்தது. இளவரசி மேரி இதைப் பார்த்தாள். உடனே அவளுடைய அழகற்ற தன்மையை மறக்கும்படி செய்யக்கூடிய, அவளுடைய அந்தப் பிரகாசமான பார்வையால், அவரை நன்றியோடு நோக்கினாள்.

'இளவரசியே, நான் இங்கே சவாரி வந்ததற்கும், உனக்கு சேவை செய்வதற்காக நான் தயாராக இருப்பதைக் காட்டுவதற்கும் எவ்வளவு சந்தோஷமடைகிறேன் என்பதை என்னால் சொல்ல முடியாது.' என்ற, எழுந்துகொண்டே ராஸ்டோவ் பேசினார். 'எனக்கு எப்போது இஷ்டமோ, அப்பொழுது நீ போகலாம். உன்னுடன் பாதுகாவலனாக நான் வருவதற்கு நீ அனுமதித்தால், உனக்கு யாரும் எந்தவிதமான தொந்தரவையும், கொடுக்க முடியாது என்பதை நான் உனக்கு உறுதி கூறுகிறேன்' என்று சொல்லிவிட்டு, ராஜ குடும்பத்தைச் சேர்ந்த ஒரு சீமாட்டிக்கு மரியாதை செய்வதைப்

போல, தாழ்ந்து மரியாதை செய்துவிட்டு, வாசலை நோக்கித் திரும்பினார்.

அவளுடன் பழக்கம் ஏற்படுவதற்கு, அவர் சந்தோஷமடைவதாகக் காணப்பட்ட போதிலும், அவளுடைய துர்திருஷ்டங்களை தமக்கு சாதகமாக்கிக்கொண்டு, அவள் விஷயங்களில் தலையிட விருப்பம் இல்லாதவர்போல, ராஸ்டோவின் மரியாதையான தொனி காட்டியது.

இளவரசி மேரி இதை அறிந்துகொண்டாள். அவருடைய நாசூக்கான தன்மையைப் பாராட்டினாள்.

'நான் உமக்கு மிக மிக நன்றியுள்ளவளாக இருக்கிறேன்' என்று அவள் பிரஞ்சுப் மொழியில் சொன்னாள். 'இவையெல்லாம் தவறான கருத்துக்களால் ஏற்பட்டவையென்றும், இவற்றிற்காக யாரையும் குறை கூற முடியாதென்றும், நான் நம்புகிறேன்.' அவள் திடீரென்று அழ ஆரம்பித்தாள்.

'என்னை மன்னிக்க வேண்டும்' ஏன்று அவள் சொன்னாள்.

ராஸ்டோவ் புருவங்களை நெறித்துக்கொண்டு, மீண்டும் தாழ்வாகத் தலை வணங்கிவிட்டு, அந்த அறையை விட்டு வெளியே போனார்.




'நல்லது அவள் அழகாய் இருக்கிறாளா? ஆ, எனது நண்பரே, அந்த ரோஜா வர்ணமுள்ள என்னுடைய நபர் திவ்யமாய் இருக்கிறாள். அவள் பெயர் துனியாஷா.'

ராஸ்டோவின் முகத்தை நோக்கியதும், இலைன் பேசுவதை நிறுத்திக் கொண்டார். தம்முடைய வீரரும் கமாண்டருமான அவருடைய மனதில் வேறு விதமான சிந்தனை ஓடிக் கொண்டிருப்பதை அவர் அறிந்து கொண்டார்.

ராஸ்டோவ் அவரைக் கோபத்தோடு பார்த்து, பதில் எதுவும் சொல்லாமல் வேகமாகக் கிராமத்திற்குப் போனார்.

'நான் அவர்களுக்குக் காட்டுகிறேன். நான் அவர்களுக்குக் கொடுக்கிறேன். அந்தக் கொள்ளைக்காரர்கள்...' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார்.

ராஸ்டோவுடைய வேகமான நடையோடு தொடர்ந்து சொல்லுவதற்கு மிகுந்த கஷ்டப்பட்டு, வழுக்கி ஓடுகிற மாதிரி நடையில் அல்பாட்டிச் நடந்து சென்றார். ஆனால் ஓடவில்லை.

'எந்த விதமான முடிவுக்கு வர தாங்கள் கிருபை செய்தீர்கள்?' என்று அவர் கேட்டார்.

ராஸ்டோவ் நின்றார். தமது முஷ்டியைக் காட்டி, திடீரென்று கடுமையான முகத்தோடு, அல்பாட்டிச்சை நோக்கினார்.

'முடிவா? என்ன முடிவு கிழட்டுமுடமே...' என்று அவர் கத்தினார். 'நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? ஏ! விவசாயிகள் கலகம் செய்கிறார்கள். உன்னால் அதைச் சமாளிக்க முடியவில்லை? நீ ஒரு தேசத்துரோகி. உன்னை எனக்குத் தெரியும். உன்னை உயிரோடு தோலை உரித்து விடுவேன்...' தம்முடைய கோபம் எங்கு வீணாய்ப் போய்விடுமோ என்று பயந்து, அல்பாட்டிச்சை விட்டு நீங்கி, வேகமாக முன்னேறினார். தமக்கு ஏற்பட்ட அவமானத்தை சமாளித்துக்கொண்டு, வழுக்கிப் போகிற நடையில் ராஸ்டோவோடு போய்க்கொண்டே, தம்முடைய கருத்துகளைத் தொடர்ந்து சொல்லிக்கொண்டிருந்தார். விவசாயிகள் பிடிவாதமாக இருப்பதாகவும், அவர்களைத் தற்சமயம் அளவு கடந்து எதிர்ப்பது யோசனையற்ற காரியமாய் இருக்குமென்றும், ஒரு ஆயுதம் தாங்கிய படையில்லாமல் அவர்களை எதிர்க்க முடியாதென்றும் அவர் சொல்லிவிட்டு, அதற்காக ராணுவத்தை வரவழைப்பது நல்லதல்லவா என்று கேட்டார்.

'அவர்களுக்கு ஆயுதம் தாங்கிய வீரர்களை நான் அனுப்புகிறேன்... அவர்களை நான் அளவு கடந்து எதிர்க்கப் போகிறேன்' என்று அர்த்தமில்லாமல், மூச்சு விடாமல், காரணம் இல்லாத கோபத்தோடு, அதை வெளிப்படுத்த வேண்டிய அவசியத்திற்காகக் கூறினார்.

அடுத்தபடியாக தாம் என்ன செய்யப் போகிறார் என்பதை ஆலோசிக்காமலேயே, தம்மை யறியாமலேயே வேகமான, உறுதியான நடையில் கூட்டத்தைப் பார்த்துப் போனார். அவர் கூட்டத்தை நெருங்க நெருங்க, அவருடைய இந்த அர்த்தமற்ற செய்கை நல்ல பலன்களைக் கொடுக்குமென்று அல்பாட்டிச் உணர்ந்தார்.

ஆர் பி மணி ஆக 23

ராஸ்டோவின் வேகமான, உறுதியான நடையையும், அவருடைய உறுதி கொண்ட கோபமான முகத்தையும் பார்த்ததும், அந்தக் கூட்டத்திலிருந்த விவசாயிகளுக்கும் அம்மாதிரியே மனதில் பதிந்தது.

அந்தக் குதிரை வீரர்கள் கிராமத்திற்கு வந்த பின்பு, இளவரசியைப் பார்ப்பதற்காக ராஸ்டோவ் சென்ற பின்பு, அந்தக் கூட்டத்தில் ஒருவிதமான குழப்பமும் அபிப்பிராய பேதமும் ஏற்பட்டன. புதிதாய் வந்தவர்கள் ருஷ்யர்கள் என்று சில விவசாயிகள் சொன்னார்கள். எஜமானியைத் தாங்கள் தடுத்து நிறுத்தி வைத்திருப்பதாக, அவர்கள் தவறாக நினைத்துக்கொள்ளக் கூடும் என்று சொன்னார்கள். டிரானுக்கும் இதே அபிப்பிராயம்தான் இருந்தது. ஆனால் அதை அவன் சொல்லியதும், கார்ப்பும் மற்றவர்களும் தங்களுடைய மாஜி கிராமத் தலைவனான டிரானைத் தாக்கிப் பேச ஆரம்பித்தார்கள்.

'எத்தனை வருஷமாக இந்த சமூகத்தைக் கொள்ளையடித்து நீ கொழுத்துப் போயிருக்கிறாய்?' என்று கார்ப் அவனைப் பார்த்துச் கூச்சலிட்டான். 'உனக்கு எல்லாம் ஒன்றுதான்; நீ புதைத்து வைத்திருக்கிற நாணய பாத்திரத்தை எடுத்துக்கொண்டு ஓடி விடுவாய்... எங்களுடைய வீடு நாசமாய்ப் போனால் என்ன, போகாவிட்டால் என்ன, அதைப் பற்றி உனக்கு கவலை என்ன... ?'

'சமாதானத்தை நிலைநிறுத்த வேண்டுமென எங்களுக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது. அதோடு, வீடுகளைவிட்டு ஒருவரும் போகக் கூடாது என்றும், ஒரு தானியத்தைக்கூட' எடுத்துக்கொண்டு போகக்கூடாது என்றும் உத்தரவிடப்பட்டிருக்கிறது. அந்த விஷயம் அவ்வளவுதான்' என்று மற்றவன் கூவினான்.

'உன்னுடைய மகனை ராணுவத்தில் சேர்க்க வந்தார்கள். அதில் சந்தேகமில்லை. ஆனால், அந்தப் பிண்டமாகிய உன் மகனை, ராணுவத்தில் சேர்ப்பதற்கு உனக்கு இஷ்டமில்லாமல் முனங்கினாய். அதனால் என்னுடைய மகன் வாங்காவை ராணுவத்திற்கு அழைத்துக் கொண்டு போய், தலையை மொட்டையடித்து விட்டார்கள்' என்று ஒரு சிறிய கிழவன் திடீரென்று டிரானைத் தாக்கிப் பேச ஆரம்பித்தான். 'ஆனால், நாம் எல்லோரும் சாகவேண்டியதான்.'

'நாம் எல்லோரும் சாகவேண்டியதுதான் என்பது நிச்சயம். சமூகத்திற்கு விரோதமாக நான் இருக்க மாட்டேன் என்று டிரான் சொன்னான்.

'அதுதான் - அதற்கு விரோதமாய் இருக்க மாட்டாய்! நீ உன்னுடைய வயிற்றை நிரப்பிக்கொண்டாய்...'

அந்த உயரமான இரண்டு விவசாயிகளும் அவர்கள் சொல்ல வேண்டியவைகளைச் சொல்லிவிட்டார்கள். ராஸ்டோவும்,

இலைனும், லாவ்ருஷ்காவும், அல்பாட்டிச்சும் அந்தக் கூட்டத்திற்கு வந்தார்கள். கார்ப் என்பவன் தன்னுடைய விரல்களைப் பெல்ட்டில் சொருகி சிறிது புன்னகை காட்டி முன்னால் நடந்து வந்து நன்றான். அதற்கு நேர்மாறாக, டிரான் என்பவள் கூட்டத்தின் பின்னால் போனான். அந்தக் கூட்டம் நெருங்கி ஒன்று சேர்ந்தது.

'உங்களுடைய கிராமத் தலைவன் யார்? ஏ?' என்று ராஸ்டோவ், அந்தக் கூட்டத்திற்கு முன்பு வேகமான நடையில் வந்து நின்று, கேட்டார்.

'கிராமத் தலைவனா? அவனிடம் உமக்குச் செய்ய வேண்டியது என்ன...' என்று கார்ப் கேட்டான்.

அவனுடைய வார்த்தைகள் அவனுடைய வாயிலிருந்து வெளியே வந்து முடியுமுன்பே, அவனுடைய தொப்பி பறந்தது. அவனுக்குக் கிடைந்த பலமான அடியினால், அவனுடைய தலை ஒரு பக்கமாகச் சாய்ந்தது.

'தொப்பிகளை எல்லோரும் எடுங்கள், துரோகிகளே' என்று கோபமான குரலில் ராஸ்டோவ் கத்தினார். 'கிராமத் தலைவன் எங்கே?' என்று மீண்டும் வெகுண்டு கேட்டார்.

'கிராமத் தலைவன்... அவருக்கு கிராமத் தலைவன் வேண்டுமாம்!... டிரான் ஜாக்காரிச், உம்மைத்தானே!' என்று பணிவோடு பல 'குரல்கள் இங்குமங்கும் கேட்டன. கழற்றி விட்டார்கள்.

நாங்கள் கலகம் செய்யவில்லை. நாங்கள் உத்தரவுகளைப் பின்பற்றுகிறோம்' என்று கார்ப் சொன்னான். அதே சமயத்தில், பல குரல்கள் ஒன்று சேர்ந்து பேச ஆரம்பித்தன.

'பெரிய மனிதர்கள் தீர்மானித்தபடி நாங்கள் செய்கிறோம் - ஆனால் நீங்கள் பல பேர்கள் உத்தரவுகள் கொடுத்துக் கொண்டு இருக்கிறீர்கள்.'

'இன்னும் விவாதம் செய்து கொண்டா இருக்கிறாய்? கலகக்காரர்கள்... கொள்ளைக்காரர்கள்... துரோகிகள்' என்று ராஸ்டோவ், அர்த்தமில்லாமல் கார்ப்பின் கழுத்துப் பட்டியைப் பிடித்துக் கொண்டு கத்தினார். 'இவனைக் கட்டுங்கள், இவனைக் கட்டுங்கள்' என்று அவர் கூச்சலிட்டார். என்றாலும், அச்சமயம் அங்கே, லாவ்ருஷ்காவையும் அல்பாட்டிச்சையும் தவிர, வேறு ஒருவருமில்லை.

லாவ்ருஷ்கா கார்ப்பிடம் ஓடி, அவன் ரங்களைப் பின்னாலிருந்து பற்றினான்.

'அந்தக் குன்றுக்குப் பின்னாலுள்ள நமது வீரர்களை வரவழைக்கட்டுமா?' என்று அவன் கூச்சலிட்டுக் கத்தினான்.

அல்பாட்டிச் அந்த விவசாயிகளைப் பார்த்து, பேர் சொல்லி இரண்டு பேர்களை அழைத்து, கார்ப்பைக் கட்டும்படி உத்தரவிட்டார். அவர் அழைத்தவர்கள் பணிவோடு கூட்டத்தை விட்டு வெளியே வந்து, தங்களுடைய பெல்ட்டுகளைக் கழற்றினார்கள். 'கிராமத் தலைவன் எங்கே?' என்று பலத்த குரலில் ராஸ்டோவ் கேட்டார்.

முகம் சுளித்து, வெளிறிய தோற்றத்தோடு, அந்தக் கூட்டத்தை விட்டு டிரான் வெளியே வந்தான்.

'நீதான் கிராமத் தலைவனா? லாவ்ருஷ்கா, இவனைக் கட்டு' என்று ராஸ்டோவ் கூச்சலிட்டு, அந்த உத்தரவை யாரும் எதிர்க்க மாட்டார்கள் என்று நினைப்பதுபோலப் பேசினார்.

உண்மையில் மேலும் இரண்டு விவசாயிகள் முன் வந்து டிரானைக் கட்டுவதற்கு ஆரம்பித்தார்கள். டிரான் தனது பெல்ட்டையே கழற்றி அவர்களிடம் கொடுத்தான்.

'நீங்கள் எல்லோரும் நான் சொல்வதைக் கேளுங்கள். உங்கள் வீடுகளுக்கு உடனே திரும்பிப் போங்கள். உங்களில் - ஒருவருடைய சப்தமும் இங்கே இனிமேல் கேட்கக்கூடாது' என்று ராஸ்டோவ் விவசாயிகளைப் பார்த்து சொன்னார்.

'ஏன், நாங்கள் ஒரு குற்றமும் செய்யவில்லை. முட்டாள் தனத்தாலும் அசட்டுத் தனத்தாலும் செய்து விட்டோம். எல்லாம் வெறும் அசட்டுத்தனம்... நான் அப்போதே அப்படிச் செய்வது சரியல்ல என்று சொன்னேன்' என்று, ஒருவர் மீது ஒருவர் குறை கூறுகிற மாதிரி, பல குரல்கள் கேட்டன.

'அதோ பார், நான் என்ன சொன்னேன்? அதெல்லாம் தவறு, வாலிபர்களே' என்று, தம்மைச் சுதாரித்துக் கொண்டு, அல்பாட்டிச் கூறினார்.

'எல்லாம் எங்களுடைய மடத்தனங்கள், யாக்காவ் அல்பாட்டிச்' என்ற பதில்கள் கேட்டன. அந்தக் கூட்டம் உடனே கலைந்து கிராமத்திற்குள் போயிற்று.

கட்டப்பட்ட அந்த இருவரும் எஜமானர் வீட்டிற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அந்த இரண்டு குடிகார விவசாயிகளும் அவர்களைப் பின் தொடர்ந்தனர்.

'ஏ, நான் உன்னை கொஞ்சம் பார்த்துக்கொள்ளுகிறேன்' என்று அவர்களில் ஒருவன் கார்ப்பைப் பார்த்து சென்னான்.

'எஜமானர்களிடம் அம்மாதிரி ஒருவன் எப்படிப் பேச முடியும்? நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்?' என்று மற்றவன் சொன்னான். இன்னொருவன், 'ஒரு அசல் முட்டாள்' என்று கூறினான்.

பாகுசாரவா வீட்டின் முன்பாக, இரண்டு மணி நேரத்திற்குப் பின்பு, வண்டிகள் நின்று கொண்டிருந்தன. எஜமானரின் சாமான்களை அந்த விவசாயிகள் சுறுசுறுப்பாக எடுத்துக்கொண்டு வந்து வண்டிகளில் ஏற்றிக்கொண்டிருந்தார்கள். டிரான் என்பவனை பீரோவுக்குள் அடைத்துப் போட்டிருந்தார்கள். இளவரசி மேரியின் கோரிக்கையின் பேரில் அவன் விடுதலையானான். அவன் விடுதலையானவுடன், சாமான்கள் எடுத்து வைப்பதை மேற்பார்த்துக் கொண்டிருந்தான்.

'அம்மாதிரி அஜாக்கிரதையாகப் போடாதீர்கள்' என்று ஒரு விவசாயி, வட்டமான, புன்சிரிப்பான முகத்தோடு இருந்தவன், வேலைக்காரியிடமிருந்து பெட்டியை வாங்கிக் கொண்டு கூறினான். 'அது விலை உயர்ந்தது என்பது உனக்குத் தெரியும். அதை அந்த மாதிரி நீ எப்படி வீசிப் போடலாம்? அந்தக் கயிற்றின் கீழே போட்டால், அதில் கீரல்கள் ஏற்படும். அம்மாதிரி வேலைகளைச் செய்வது எனக்குப் பிடிக்காது. எல்லாவற்றையும் விதிப்படி ஒழுங்காகச் செய்ய வேண்டும். இங்கே பார், அந்த பாய்க்குக் கீழே அதை வைத்து, வைக்கோல் போட்டு மூடு. அதுதான் வழி.

'ஏ, புஸ்தகங்கள், புஸ்தகங்கள்' என்று, இளவரசர் ஆண்ட்ரூவின் வாசகசாலை பீரோக்களை வெளியே எடுத்துக்கொண்டு வந்தபோது, ஒரு விவசாயி சொன்னான். அதை அம்மாதிரி நெருக்காதே; அது கனமானது, வாலிபர்களே - கனமான புஸ்தகங்கள்.'

'ஆமாம், அவர்கள் நாள் பூராவாக வேலை செய்தார்கள். விளையாடப் போகவில்லை' என்று உயரமான, உருண்டை வடிவமான முகம் உள்ள அந்த விவசாயி, ஆழ்ந்த சிந்தனையோடு, அந்த சாமான்களின் மேலாக இருந்த அகராதிகளைச் சுட்டிக் காட்டிக் கூறினான்.

இளவரசியிடம் மீண்டும் வந்து தொந்தரவு கொடுக்க வேண்டாம் என்று விரும்பியதால், ராஸ்டோவ் மீண்டும் அந்த விட்டிற்குப் போகவில்லை. ஆனால், அவளுடைய பிரயாணத்திற்காகக் காத்துக்கொண்டு, அந்தக் கிராமத்தில் தங்கியிருந்தார். வீட்டிலிருந்து அவருடைய வண்டி வெளியே வந்ததும், அவர் தமது குதிரை மீது ஏறி அவளோடு பாகுசாரவாவிலிருந்து எட்டு மைல் தூரம் பிரயாணம் போனார். அந்த இடத்தில்தான் நமது துருப்புகள் முகாம்

போட்டு இருந்தன. யாங்கோவா என்ற இடத்திலிருந்த ஹோட்டலுக்குப் போனதும், அவர் மரியாதையோடு அவளிடம் விடைபெற்றுக்கொண்டார். முதல் தடவையாக அவளது கையை அவர் முத்தமிட்டார்.

'அம்மாதிரி நீ எப்படிப் பேச முடியும்?' என்று அவர் நாணி முகம் சிவந்து, இளவரசி மேரி நன்றி கூறியதற்குப் பதிலாகச் சொன்னார். அவள் தன்னை விடுவித்ததற்காக (நடந்துபோன சம்பவத்தைப் பற்றி அவள் அம்மாதிரிதான் சொல்லி வந்தாள்.) நன்றி கூறினாள். 'அதே மாதிரி, எந்த போலீஸ் அதிகாரியும் செய்திருக்க முடியும். இந்த விவசாயிகள் மட்டும் நமக்காக சண்டை போடுவார்களானால், நமது எதிரி இவ்வளவு தூரம் வந்திருக்க மாட்டான்' என்று அவமானத்தோடும் விஷயத்தை மாற்றிப் பேச விரும்பியது போலவும் பேசினார். 'உன்னுடைய பரிச்சயம் கிடைத்தற்காக, நான் சந்தோஷம் அடைகிறேன். போய் வா, இளவரசியே. உனக்கு மகிழ்ச்சியும் மன ஆறுதலும் கிடைக்குமாறு நான் விரும்புகிறேன். இன்னும் மகிழ்ச்சியான சூழ்நிலையில் உன்னைச் சந்திக்கலாம் என்று நம்புகிறேன். நான் வெட்கமடையாமல் இருக்க வேண்டுமென்று நீ விரும்புவாயானால், எனக்குத் தயவு செய்து வந்தனம் கூறவேண்டாம்.'

ஆனால் இளவரசி வார்த்தைகளின் மூலம் அவருக்கு வந்தனம் சொல்லாவிட்டாலும், நன்றியும் கனிவும் கலந்த அவளுடைய பிரகாசமான முகத்தினால் அவருக்கு வந்தனம் தெரிவித்தாள். அவருக்கு நன்றி தெரிவிப்பதற்கு எதுவுமில்லையென்பதை அவளால் நம்ப முடியவில்லை. அதற்கு மாறாக, அவர் அங்கே வந்திருக்காவிட்டால், அந்த புரட்சிக்காரர்களிடமும், பிரஞ்சுக்காரர்களிடமும் அவள் நாசமாய்ப் போயிருப்பாள் என்று அவளுக்குத் தோன்றியது. அதைத் தவிர, அவளைக் காப்பாற்றுவதற்காக, அவர் தாமே பயங்கரமான, வெளிப்படையான ஆபத்துக்களில் அகப்படும்படி, செய்து கொண்டாரென்றும் அவள் நினைத்தாள். அதையும் தவிர, அவர் ஒரு உயர்ந்த, கண்ணியமான மனிதர் என்றும், தன்னுடைய சந்தோஷத்தையும் நிலைமையையும் அறிந்துகொள்ளக் கூடியவர் என்றும் அவள் நினைத்தாள். அவள் அழ ஆரம்பித்தபோது, தன்னுடைய நஷ்டத்தை அவள் குறிப்பிட்டுக் கதறியபோது, அவள் கண்ட அவருடைய அன்பான, நேர்மையான கண்களும், அவற்றில் கண்ணீர் பொங்கி நின்றதும், அவளுடைய ஞாபகத்திலிருந்து போகவில்லை.

அவள் அவரிடம் விடைபெற்ற பின்பு, தனியாக அவள் நின்ற போது, அவளுடைய கண்கள் நீர் நிறைந்திருந்ததை அவள் திடீரென்று உணர்ந்தாள். அவளிடம் ஒரு விசித்திரமான கேள்வி (முதல் தடவையாக அல்ல), மீண்டும் தோன்றியது. அதாவது, அவள் அவரைக் காதலிக்கிறாளா என்பதாகும்.

மாஸ்கோவுக்குப் போகிற அந்தப் பிரயாணத்திலுள்ள மீதமுள்ள காலம், இளவரசி மேரிக்கு ஒரு மகிழ்ச்சியானதாக இல்லை. இருந்தபோதிலும், அவளுடன் வண்டியிலேயே வந்து கொண்டிருந்த துனியாஷா, பல தடவை தனது எஜமானியைக் கவனித்துப் பார்த்தபொழுது ஒரு விஷயத்தைக் கண்டாள். அதாவது, இளவரசி மேரி ஜன்னலுக்கு வெளியே அடிக்கடி தலையை நீட்டி, எதையோ பார்த்து, மகிழ்ச்சியும் சோகம் கலந்த தோற்றத்தோடு புன்முறுவல் காட்டி வந்தாள்.

'நல்லது, ஒரு வேளை நான் அவரைக் காதலிப்பதாய் இருந்தால்?' என்று இளவரசி மேரி நினைத்தாள்.

தன்னை ஒருவேளை காதலிக்காமலே இருந்து விடக்கூடிய ஒரு மனிதர் மீது, தான் காதல் கொண்டு விட்டதாக ஏற்படுமானால், அது அவமானமாய் இருக்காதா என்று அவள் நினைத்தாள். ஆனால், இதை வேறு எவரும் எப்பொழுதும் அறிய முடியாது என்ற நினைப்பினால், அவள் திருப்தி கொண்டாள். யாரிடமும் அதைப் பற்றிப் பேசாமல், அவளுடைய வாழ்க்கை முழுவதிலும், முதல் தடவையாகவும் கடைசி தடவையாகவும், அவள் காதல் கொண்ட அந்த நபரைக் காதலித்துக்கொண்டே இருந்தால், அதற்காக அவளைக் குற்றம் சொல்ல முடியாதென்றும் நினைத்தாள்.

சில சமயங்களில் அவருடைய பார்வைகளையும், அவருடைய அனுதாபங்களையும், அவருடைய வார்த்தைகளயும் அவள் நினைவு கூர்ந்தபொழுது, இம்மாதிரி அவளுக்கு அசாத்தியமாகத் தோன்றவில்லை. இம்மாதிரி சந்தர்ப்பங்களில்தான், அவள் ஜன்னலுக்கு வெளியாக புன்சிரிப்புகொண்டு தலையை நீட்டி வந்ததை துனியாஷா கவனித்தாள்:

'அந்த வினாடிகளில், அவரைப் பாகுசாரவாவிற்கு அழைத்து வந்ததது, விதிதானே?' என்று இளவரசி மேரி நினைத்தாள். 'அதே விதிதானே, அவருடைய சகோதரி என்னுடைய சகோதரரை திருமணம் செய்ய மாட்டேன் என்று மறுக்கும்படியும் செய்தது?'* இவையெல்லாவற்றிலும் பரம்பொருளின் கைவேலை இருப்பதை இளவரசி மேரி கண்டாள். (*ஒரு பெண் தன்னுடைய சகோதரருடைய அல்லது சகோதரியினுடைய மைத்துனரை

திருமணம் செய்யக்கூடாது. ஆகவே, நட்டாஷா இளவரசர் ஆண்ட்ரூவை திருமணம் செய்திருந்தால் இப்போது நிக்கலஸை மேரி திருமணம் செய்வதற்கு அது இடையூறாய் இருந்திருக்கும்.)

இளவரசி மேரியைப் பற்றிய அபிப்பிராயம் ராஸ்டோவின் மனதில் மனோகரமாய்ப் பதிந்தது. அவளை நினைக்கும் போதெல்லாம் அவருக்கு மகிழ்ச்சி தோன்றியது. பாகுசாரவாவிற்கு அவர் போனதை அவருடைய தோழர்கள் கேள்விப்பட்டதும், அவரைச் சுற்றிக் கூடிக்கொண்டு பேசினார்கள். வைக்கோல் தேடப்போனவர், ருஷ்யாவிலேயே ஒரு பெரிய பணக்காரப் பெண்ணைப் பிடித்துக்கொண்டார் என்று, அவர்கள் சொன்னார்கள். அதைக் கேட்டதும் அவர் கோபமடைந்தார். இளவரசி அவருக்குக் கவர்ச்சிகரமாய் இருந்தாலும், ஏராளமாக, சொத்துக்களை உடையவளாய் இருந்தாலும், அவர் அவளைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்ற எண்ணம், அவருடைய விருப்பத்திற்கு விரோதமானது என்ற நினைப்பு பல தடவைகள் அவர் மனதில் தோன்றியபடியால், அவர் கோபம் அடைந்தார். அவரைப் பொறுத்தவரையில், இளவரசி மேரியை விட வேறு சிலாக்கியமான மனைவியை அவர் விரும்பியிருக்க முடியாது. ஏனெனில், அவளை திருமணம் செய்வதால், அவருடைய தாயான கோமகளை சந்தோஷமாக்க முடியும்; அவருடைய தந்தையின் கடன் விவகாரங்களை ஒழுங்குபடுத்திவிட முடியும், அதோடு கூட, இளவரசி மேரிக்கும் சந்தோஷத்தைக் கொடுக்க முடியும்.

ஆனால், சோனியா? அவளுக்கு அவர் கொடுத்த பிரமாணம் என்ன ஆவது? அதனால்தான், இளவரசி பால்கோன்ஸ்கயாவையும் அவரையும் சேர்த்துப் பேசும்போது, ராஸ்டோவ் கோபம் கொண்டார்.




குட்டுஜோவ் ராணுவங்களின் சேனாதிபதியாக நியமிக்கப் பட்டதும், இளவரசர் ஆண்ட்ரூவின் ஞாபகம் அவருக்கு ஏற்பட்டது. உடனே தலைமைக் காரியாலயத்திற்கு, தம்மிடம் வரும்படி அவர் உத்தரவு அனுப்பினார்.

ஜாரேவா - ஜாய்மிஷ் என்ற இடத்திற்கு, இளவரசர் ஆண்ட்ரூ வந்து சேர்ந்தார். முதல் தடவையாக, துருப்புகளின் அணிவகுப்பை குட்டுஜோவ் பார்வையிடும் அதே தினத்தில், அதே மணியில், இளவரசர் ஆண்ட்ரூ வந்து சேர்ந்தார்.

அந்த கிராமத்து மத் குருவின் வீட்டு முன்பாக, சேனாதிபதியின் வண்டி நின்றுகொண்டிருந்தது. அங்கே இளவரசர் ஆண்ட்ரூ வந்து சேர்ந்து, வாசல் பக்கத்தில் போடப்பட்டிருந்த பெஞ்சில் அமர்ந்தார். குட்டுஜோவை ஒவ்வொருவரும் 'கலங்காத மேன்மை தங்கியவர்' என்று அழைத்து வந்தார்கள். அவருடைய வருகைக்காக, இளவரசர் ஆண்ட்ரூ காத்திருந்தார். அந்தக் கிராமத்திற்கு அப்பாலுள்ள வயலிலிருந்து, பட்டாளத்தாரனின் சங்கீதமும், புதிய சேனாதிபதிக்கு போடும் 'ஜே ஜே' கோஷங்களும் கேட்டு வந்தன. இரண்டு சேவகர்கள், ஒரு தூதர், ஒரு பிரதான காரியஸ்தர் ஆகியவர்கள், இளவரசர் ஆண்ட்ரூ இருக்குமிடத்திலிருந்த பத்தடி தூரத்தில் நின்றுகொண்டிருந்தார்கள். அச்சமயம் குட்டுஜோவ் அங்கே இல்லாதபடியால், அந்தச் சிறந்த கால நிலையை அனுபவிக்க அவர்கள் வெளியே வந்து நின்றார்கள். ஒரு குள்ளமான, அழுத்தமான வர்ணம் கொண்ட, குதிரைப் படையின் லெட்டினென்ட் கர்னலான ஒருவர், அடர்ந்த மீசைகளுடனும் கிருதாக்களுடனும் அந்த வாசலுக்கு குதிரை மீது வந்தார். இளவரசர் ஆண்ட்ரூவை அவர் பார்த்து, 'கலங்காத மேன்மை தங்கியவர்' அங்கேதான் தங்கி இருக்கிறாரா என்றும், சீக்கிரம் வந்து விடுவாரா என்றும் கேட்டார்.

தாம் அந்த 'கலங்காத மேன்மை தங்கியவரின் பரிவாரத்தைச் சேர்ந்தவர் அல்லவென்றும், அப்பொழுதுதான் புதிதாய் வந்தவர் என்றும், இளவரசர் ஆண்ட்ரூ பதில் அளித்தார். ஒரு சுறு சுறுப்பான சேவகனைப் பார்த்து, அந்த உதவி கர்னல் திரும்பினார். சேனாதிபதியின் சேவகர்கள் எப்படி ஒரு இகழ்ச்சியோடு பேசுவார்களோ, அதே மாதிரி தொனியில் அவன் பதில் அளித்தான்.

'என்ன? கலங்காத மேன்மை தங்கியவரா?' அவர் சீக்கிரமாக இங்கே வருவார் என்று எதிர்பார்க்கிறேன். உமக்கு என்ன வேண்டும்?'

அந்த சேவகனின் தொனியைக் கண்டு, தமது மீசைகளுக்கு கீழாக அந்த உதவி கர்னல் புன்னகை காட்டி, குதிரையை விட்டுக் கீழே இறங்கி, அந்தக் குதிரையை தபால் சேவகனிடம் ஒப்புவித்தார். பால்கோன்ஸ்கியிடம் நெருங்கி இலேசாகத் தலை வணங்கினார். அந்த பெஞ்சில் அவரும் அமரும்படி பால்கோன்ஸ்கி இடம் கொடுத்தார். அவருக்குப் பக்கத்தில் அந்த உதவி கர்னலும் அமர்ந்தார்.

'நீரும் சேனாதிபதிக்காகத்தான் காத்திருக்கிறீரா? அவர் எல்லாரையும் பார்ப்பார் என்று சொல்லுகிறார்கள். கடவுளுக்கு

நன்றி... அந்த கோளா தின்பவர்களின் காரியங்கள் ரொம்ப மோசமாய் இருக்கின்றன. தம்மை ஒரு ஜெர்மனியராக ஆக்கும்படி, எர்மலோவ் கேட்டதில் அர்த்தம் இருக்கிறது. இப்பொழுது ருஷ்யர்களுக்கும் இடம் கிடைத்திருக்கிறது என்று தோன்றுகிறது. முன்பெல்லாம் என்ன நடந்துகொண்டிருந்தன என்பதை, அந்த சாத்தான் ஒருவன்தான் அறிய முடியும். இந்தப் போரில் நீர் கலந்து கொண்டிருக்கிறீரா?' என்று அவர் கேட்டார்.

'நான் கலந்துகொள்ளுவது மட்டுமல்ல, இந்த பின்வாங்கு தலினால், நான் மிகவும் அருமையாகப் போற்றி வந்த எனது தந்தை மன வருத்தத்தினால் இறக்கும்படி நேரிட்டது. என்னுடைய எஸ்டேட்டுக்களைப் பற்றியோ, நான் பிறந்த வீட்டைப் பற்றியோ சொல்ல வேண்டியதே இல்லை. நான் ஸ்மாலென்ஸ்க் மாகாணத்தைச் சேர்ந்தவன்' என்று இளவரசர் ஆண்ட்ரூ பதில் அளித்தார்.

'ஆ? நீர்தான் இளவரசர் பால்கோன்ஸ்கியா? உம்முடன் அறிமுகம் பெற்றது பற்றி மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். நான்தான் லெட்டினென்ட் கர்னல் டெனைசாவ். வாஸ்கா என்ற பெயரால்தான், நான் அழைக்கப்படுகிறேன்' என்று டெனைசாவ் சொல்லி, இளவரசர் ஆண்ட்ரூவின் கைகளை அழுத்தி, ஒரு விசேஷமான, அன்பான தோற்றத்தோடு, அவருடைய முகத்தைப் பார்த்தார்.

'ஆம், நான் கேள்விப்பட்டிருக்கிறேன்' என்று சிறிது நேரத்திற்குப் பின்பு அனுதாபத்தோடு சொன்னார். 'ஆம், இது சித்தியன் யுத்த முறை. பிடரியில் அடி பெறுகிறவர்களைத் தவிர - மற்றவர்களுக்கு எல்லாம் ரொம்ப சரி. ஆகவே, நீர்தான் இளவரசர் ஆண்ட்ரூ பால்கோன்ஸ்கியா?' என்று சொல்லி, அவர் தலையை இப்படியும் அப்படியும் ஆட்டினார். 'மிகுந்த மகிழ்ச்சி, இளவரசே! உம்முடைய அறிமுகத்தைப் பெற்றதற்காக, மிகுந்த மகிழ்ச்சி?' என்று அவர் மீண்டும் கூறி, சோகத்தோடு புன்முறுவல் காட்டி, இளவரசர் ஆண்ட்ரூவின் கையை மீண்டும் அழுத்தினார்.

தன்னை முதலில் திருமணம் செய்ய வேண்டுமென்று டெனைசாவ் கேட்டதாக நட்டாஷா அவரிடம் முன்பே சொல்லியிருந்ததால், இளவரசர் ஆண்ட்ரூவுக்கு டெனைசாவைப் பற்றித் தெரியும். இந்த பழைய மனத் துன்பமான உணர்ச்சிகளுக்குக் கொண்டுபோயிற்று. அவைகளைப் பற்றி சமீப காலமாக அவர் நினைத்ததில்லை. ஆனால், அவருடைய உள்ளத்தில் அது இன்னமும் இருந்துகொண்டு இருந்தது. சமீப காலமாகப் பல புதிய,

மிகவும் முக்கியமான உள்ளப்பதிவுகள் அவருக்கு ஏற்பட்டுக் கொண்டு வந்தன. அதாவது, ஸ்மாலென்ஸ்கிலிருந்து பின்வாங்கியது, பால்டு ஹில்ஸுக்கு அவர் விஜயம் செய்தது, அவருடைய தந்தையின் மரணத்தைப் பற்றி சமீபத்தில் கிடைத்த செய்திகள் ஆகியவைகளாகும். அவர் ஏராளமான உணர்ச்சிகளை அனுபவித்து வந்தபடியால், அந்த பழைய நினைப்புகள் எல்லாம் வெகு காலமாக அவருடைய உள்ளத்தில் நுழையவில்லை; இப்பொழுது அவை நுழைந்தன. ஆனால், முன்புள்ள அதே வேகத்தில், அவரிடம் அவை வேலை செய்யவில்லை. டெனைசாவிற்குக் கூட பால்கோன்ஸ்கியின் பெயரைக் கேட்டதும், பழைய காலத்து மனோகரமான நினைப்புகள் தோன்றின. இராச் சாப்பாட்டிற்குப் பின்பு நட்டாஷா பாடியதற்குப் பின்பு, தாம் என்ன செய்கிறோம் என்பதை உணராமல், 15 வயதான அந்த சிறிய பெண்ணை, தம்மை திருமணம் செய்யும்படி அவர் கேட்டுக்கொண்டது நினைவிற்கு வந்தது. அந்தக் காலத்தையும், நட்டாஷாவிடம் அவருக்கு ஏற்பட்டிருந்த காதலையும் அவர் நினைத்துப் பார்த்ததும், புன்முறுவல் கொண்டார். உடனே தமது நினைப்பை, தற்காலம் அவரை முழுவதும் ஆர்வத்தோடு பீடிக்கப்பட்டிருந்த காரியங்களுக்குத் திரும்பினார். துருப்புகள் பின்வாங்குகிற காலத்தில், காவல் முகாம்களில் அவர் சேவை செய்துவந்தபோது, இந்த போர் திட்டத்தை அவர் வகுத்தார். பார்க்ளே டி டாலி என்பவரிடம் அந்தத் திட்டத்தை முன்னால் அவர் சொன்னார். இப்பொழுது, குட்ஜோவிடம் அதைக் கொடுப்பதற்காக விரும்பினார். அவருடைய திட்டம் இதுதான்: பிரஞ்சுப் படையெடுப்பு முனை வெகுதூரம் நீண்டு விட்டதால், முன்னால் நின்று பிரஞ்சுக்காரர்களை முன்னேறும்படி விடாமல் தடுப்பதோடு அல்லது தடுக்காமல் விட்டுவிட்டு, பின்னாலுள்ள அவர்களுடைய போக்குவரத்துத் தொடர்பைத் தாக்க வேண்டும். இதை இளவரசர் ஆண்ட்ரூவிடம் அவர் விவரித்துச் சொல்ல ஆரம்பித்தார்.

'அந்த போக்குவரத்துப் பாதை எல்லாவற்றையும், அவர்களால் காப்பாற்ற முடியாது. அது அசாத்தியமான காரியம். அந்தப் பாதையை துண்டித்துவிட, நான் பொறுப்பேற்றுக் கொள்ளுகிறேன். 500 வீரர்களை எனக்குக் கொடுங்கள். அந்தப் பாதையை நான் துண்டித்துவிடுவேன். அது நிச்சயம். அதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. அதுதான், கொரில்லா யுத்த முறை.'

டெனைசாவ் எழுந்து, பால்கோன்ஸ்கியிடம் தமது திட்டத்தை வியாக்கியானம் செய்துகொண்டிருக்கும்பொழுது, தமது கைகளை ஆட்டிப் பேசினார். அவருடைய விளக்கத்திற்கு இடையிலே,

ராணுவத்திலிருந்து கோஷங்கள் கேட்டன. அந்தக் கோஷங்கள் தொடர்ச்சியாக இல்லாமல் அதிகமான சப்தத்தில் சங்கீதத்துடனும் பாட்டுகளுடனும் கலந்து, படை அணிவகுப்பு நடந்த வயலிலிருந்து வந்துகொண்டிருந்தன. குளம்படி ஓசைகளும் கோஷங்களும் கிராமத்தை நெருங்கிக் கொண்டிருந்தன.

வாசலுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த கோசாக், 'அவர் வந்துகொண்டிருக்கிறார்! அவர் வந்துகொண்டிருக்கிறார்!' என்று கூச்சலிட்டான்.

பால்கோன்ஸ்கியும் டெனைசாவும் வாசலுக்குப் போனார்கள். அங்கே அணிவகுப்பு மரியாதை செய்வதற்காக, சிப்பாய்கள் நின்றுகொண்டிருந்தார்கள். ஒரு சிறிய செம்பழுப்பு நிறக் குதிரை மீது தெரு வழியாக குட்டுஜோவ் வந்துகொண்டிருப்பதை அவர்கள் பார்த்தார்கள். ஜெனரல்கள் அடங்கிய ஒரு பிரம்மாண்டமான பரிவாரம், அவர் பின்னால் சவாரி வந்துகொண்டிருந்தார்கள். அநேகமாய், அவருக்குப் பக்கத்தில் பார்க்ளே சவாரி வந்தார். அதிகாரிகள் அடங்கிய ஒரு கூட்டம், அவர்களுக்குப் பின்னாலும், அவர்களைச் சுற்றிலும் ஓடி வந்து 'ஜே' கோஷமிட்டுக் கொண்டிருந்தார்கள்.

அவருடைய உதவியாளர்கள், அவருக்கு முன்பாகவே முற்றத்தில் வந்து சேர்ந்தார்கள். குட்டுஜோவ் பொறுமையில்லாமல் தமது குதிரையை அவசரப்படுத்திக்கொண்டு இருந்தார். அவருடைய குதிரை, அவருடைய பாரத்தைத் தாங்கிக்கொண்டு, மெதுவாக நடந்து வந்தது. அவர் வெள்ளை குதிரைப்படைத் தொப்பியை அணிந்திருந்தார். அது பட்டையைக் கொண்டு மத்தியில் உயரம் இல்லாமல் இருந்தது. அந்தத் தொப்பிக்கு தமது கையை உயர்த்தி தலையை விடாமல் ஆட்டிக்கொண்ட வந்தார். அணிவகுப்பு மரியாதை செய்வதற்காக நின்றுகொண்டிருந்த சிப்பாய்கள், கைக்குண்டு படையைச் சேர்ந்தவர்கள்; சிறந்த வீரர்கள். அவர்களில் அநேகர், பதக்கங்களை அணிந்துகொண்டிருந்தார்கள். அவர் சமீபத்தில் வந்ததும், அவருக்கு மரியாதை செலுத்தினார்கள். அவர்களை அவர் மௌனமாகவும் கவனமாகவும் ஒரு கமாண்டரின் பார்வையைப் போல, ஒரு நிமிஷ நேரம் நேராக நோக்கி விட்டு, பின்னால் தம்மைச் சூழ்ந்திருந்த ஜெனரல்களும் அதிகாரிகளும் கொண்ட கூட்டத்தைப் பார்த்துத் திரும்பினார். திடீரென்று அவருடைய முகம், ஒரு கூர்மையான தோற்றத்தை மேற்கொண்டது. ஒரு குழப்பமான பார்வையோடு, அவர் தமது தோள்களைக் குலுக்கினார்.

'இம்மாதிரி சிறந்த வீரர்களை வைத்துக்கொண்டு, பின்வாங்கி, பின்வாங்கிப் போய்க்கொண்டிருக்கிறோம்; நல்லது, போய்வாருங்கள், ஜெனரலே' என்று அவர் சொல்லிவிட்டு, இளவரசர் ஆண்ட்ரூவையும் டெனைசாவையும் கடந்து முற்றத்திற்குப் போனார்.

'ஜே! ஜே! ஜே' என்று அவருக்குப் பின்னாலிருந்தவர்கள் கோஷமிட்டார்கள். கடைசி தடவையாக இளவரசர் ஆண்ட்ரூ அவரைப் பார்த்ததற்குப் பின்பு, இன்னும் அதிகமாக பருத்தும் கொழுத்தும் தளர்ச்சியும் கொண்டவராய் குட்டுஜோவ் காணப்பட்டார். ஆனால், அவருடைய செயற்கைக் கண்ணும், தழும்பும், எல்லாரும் அறிந்த அவருடைய களைப்பான தோற்றமும், அப்படியே இருந்தன. குதிரைப் படையின் வெள்ளைத் தொப்பியை அவர் அணிந்து, ஒரு ராணுவ மேற்சட்டையைத் தரித்து, ஒரு மெல்லிய வாரினால் அவருடைய தோளில் மீது ஒரு சவுக்கைத் தொங்கவிட்டுக் கொண்டிருந்தார். தளர்ச்சியோடு இங்குமங்கும் ஆடிக்கொண்டு, அவருடைய சுறுசுறுப்பான அந்த சிறிய குதிரையின் மீது கனமாக அவர் அமர்ந்திருந்தார்.

'வ்யூ-வ்யூ-வ்யூ-' என்ற லேசாகக் கேட்கும்படி முற்றத்திற்குள் அவர் சவாரி போகும்போது, சீட்டி அடித்தார். ஒரு சடங்கிற்குப் பின்பு, கஷ்டங்களெல்லாம் தீர்ந்து விட்டன என்ற நிம்மதியோடு ஒருவன் எப்படி இருப்பானோ, அதே மாதிரி தோற்றம் அவர் முகத்தில் காணப்பட்டது. தமது முழு உடம்பையும் ஒரு பக்கமாக சாய்த்துப் பின்னால் தமது முழங்காலை ஊன்றி எழுந்து, முணக்கத்தோடு அவருக்கு உதவி செய்யக் காத்து நின்ற கோசாக்குகள், உதவியாளர்களின் கைகளில் நழுவி விழுந்தார்.

தம்மைச் சுதாரித்துக்கொண்டு, கண்களை இடுக்கிச் சுற்றிலும் பார்த்தார். இளவரசர் ஆண்ட்ரூவை அவர் நோக்கினார். ஆனால், அவரை அடையாளம் கண்டுகொள்ளாமல், முற்றத்திற்குத் தம்முடைய தள்ளாடும் நடையில் போனார். 'வ்யூ-வ்யூ-வ்யூ' என்று சீட்டி அடித்து விட்டு, மீண்டும் இளவரசர் ஆண்ட்ரூவை நோக்கினார். வயோதிகர்களுக்கு அடிக்கடி ஏற்படுவதைப் போல, அவருக்கும், இளவரசர் ஆண்ட்ரூவின் முகத்தைப் பார்த்த சில வினாடிகளுக்குப் பின்புதான், அவர் யார் என்பதை குட்டுஜோவின் ஞாபகத்தோடு இணைக்க முடிந்தது.

'ஆ, நீர் எப்படி இருக்கிறீர், எனது அன்புள்ள இளவரசே? நீர் எப்படி இருக்கிறீர், எனது அன்புள்ள சிறுவரே? என்னுடன்

வாரும்...' என்று அவர் சொல்லி, சோர்வோடு சுற்றிலும் பார்த்து, அந்த முற்றத்துப் படிகளில் ஏறினார். அவருடைய பாரத்தினால் அந்தப் படிகள் கிரீச்சிட்டன.

அவர் தமது கோட்டிலுள்ள பொத்தான்களைக் கழற்றிவிட்டு, முற்ற மண்டபத்தில் கிடந்த ஒரு பெஞ்சின் மீது அமர்ந்தார்.

'உமது தந்தை எப்படி இருக்கிறார்?'

'அவர் இறந்து போனதாக, நேற்றுதான் எனக்கு செய்தி கிடைத்தது' என்று இளவரசர் ஆண்ட்ரூ திடீரென்று கூறினார்.

தமது கண்களைப் பயத்தினால் விரியத் திறந்து, அவரை குட்டுஜோவ் பார்த்தார். பின்னால், தமது தொப்பியைக் கழற்றி, தமக்குச் சிலுவைக் குறி காட்டிக்கொண்டார்.

'பரலோகத்தில் ராஜ்யம் அவருடையதாக இருப்பதாக! கடவுளின் விருப்பப்படியே நமக்கெல்லாம் நடக்கும்' என்று சொல்லிவிட்டு, ஒரு ஆழ்ந்த பெருச்சு விட்டு, அவருடைய மார்பு முழுவதும் விம்ம, அவர் சிறிது நேரம் மௌனமாயிருந்தார். 'அவரை நான் நேசித்து மரியாதை செய்தேன். நான் மனப்பூர்வமாக உமக்கு அனுதாபம் கூறுகிறேன்.'

அவர், இளவரசர் ஆண்ட்ரூவைத் தமது கொழுத்த மார்பில் அழுத்தி அணைத்து, சிறிது நேரம் வரையில் அவரை விடாமல் பற்றியிருந்தார். அவரை விட்ட பின்பு, குட்டுஜோவின் தடித்த உதடுகள் நடுங்குவதையும், அவருடைய கண்களில் நீர் நிறைந்திருப்பதையும், இளவரசர் ஆண்ட்ரூ பார்த்தார். அவர் பெருமூச்சு விட்டு, எழுந்திருப்பதற்காகத் தமது கைகள் இரண்டையும் பெஞ்சின் மீது அழுத்தினார்.

வாரும், என்னோடு வாரும், நாம் பேசுவோம்' என்ற அவர் சொன்னார்.

அந்த வினாடியே, டெனைசாவ் தார்ச் சக்கரங்கள் ஜிலுஜிலுக்க, முற்ற மண்டபத்தின், படிகளில் ஏறி வந்தார். எதிரியால் எப்படி பயமுறுத்த முடியாதோ, அதே மாதிரி அவருடைய மேல் அதிகாரிகளாலும் அவரைப் பயமுறுத்த முடியாது. அவரை நிறுத்துவதற்காக, உதவியாளர்கள் முயற்சி செய்து கோபமாய் முணுமுணுத்ததையும் மீறி, அவர் அங்கே வந்தார். குட்டுஜோவ், தமது கைகளை இன்னமும் அந்த பெஞ்சின் மீது அழுத்திக்கொண்டே, அவரை வெடுவெடுப்பான பார்வையோடு பார்த்தார். டெனைசாவ் தமது பெயரை சொல்லிய பின்பு, அறிவித்திருந்த தாம் அங்கே நாட்டின் நன்மைக்கு அவசியமான, ஒரு பெரிய முக்கியமான காரியத்தை, கலங்காத மேன்மை

தங்கியவருக்கு அறிவிப்பதற்காக வந்திருப்பதாகச் சொன்னார். களைப்போடு குட்டுஜோவ் அவரைப் பார்த்து, தமது கைகளை எரிச்சலோடு எடுத்து, தமது வயிற்றின் மீது மடக்கி வைத்துக்கொண்டு, டெனைசாவ் சொல்லிய வார்த்தைகளைத் திருப்பிச் சொன்னார்: 'நமது நாட்டின் நன்மைக்காகவா? நல்லது, என்ன விஷயம்? பேசும்.' டெனைசாவ் ஒரு பெண்ணைப்போல நாணி முகம் சிவந்தார். (அந்த ரோமம் நிறைந்த, காலத்தால் அடிப்பட்ட, கடற்காளான் போன்ற அவருடைய முகத்தில், நிறம் மாறியது பார்ப்பதற்கு விசித்திரமாய் இருந்தது!) எதிரியின் போக்குவரத்து பாதைகளை ஸ்மாலென்ஸ்கிற்கும் வியாஜ்மாவிற்கும் மத்தியில் துண்டிப்பதற்காக, தம்முடைய திட்டத்தைப் பற்றி விளக்க தைரியமாக ஆரம்பித்தார். அந்தப் பகுதிதான், டெனைசாவின் பிறப்பிடம். ஆகவே, அப்பகுதிகளை அவர் நன்றாய் அறிவார். முக்கியமாக, அவ்வளவு பலமான நம்பிக்கையோடு அவர் பேசியபடியால், அவருடைய திட்டம் நிச்சயமாக, ஒரு சிலாக்கியமானதாயிருந்தது. குட்டுஜோவ் தமது கால்களைப் பார்த்தார். ஏதோ மனதிற்குப் பிடித்தமில்லாத ஒன்று, பக்கத்திலுள்ள குடிசையிலிருந்து வெளிவரப் போவதை எதிர்பார்ப்பதைப் போல, அந்த குடிசையை இடையிடையே பார்த்துக்கொண்டிருந்தார். டெனைசாவ் பேசிக்கொண்டிருந்தபோது, அந்த குடிசையிலிருந்து ஒரு ஜெனரல் ஒரு சிறிய கைப்பெட்டியை கையில் எடுத்துக்கொண்டு வந்து தோன்றினார்.

'என்ன?' என்று, டெனைசாவ் பேசிக்கொண்டிருந்தபோது, குட்டுஜோவ் கேட்டார். 'அவ்வளவு சீக்கிரமாக நீர் தயாராய் விட்டீரா?'

'கலங்காத மேன்மை தங்கியவரே, தயாராய் இருக்கிறேன்' என்று அந்த ஜெனரல் பதிலளித்தார்.

தமது தலையை குட்டுஜோவ் இங்குமங்கும் ஆட்டினார். 'இவையெல்லாவற்றையும் ஒருவர் எப்படி பார்க்க முடியும்?' என்று சொல்லுவதைப்போல, அவருடைய தலை ஆட்டுதல் இருந்தது. மீண்டும் டெனைசாவ் சொல்வதைக் கவனித்துக் கேட்டார்.

'ஒரு ருஷ்ய அதிகாரி என்ற முறையில், நான் பிரமாணமாகச் சொல்லுகிறேன். நெப்போலியனுடைய போக்குவரத்துப் பாதையை நான் துண்டிக்க முடியும்' என்று டெனைசாவ் சொன்னார்.

'சப்ளை ஜெனரல் கிரைல் ஆண்ட்ரிவிச் டெனைசாவுக்கு நீர் எம்மாதிரி உறவு?' என்று அவரை இடைமறித்து குட்டுஜோவ் கேட்டார்.

'அவர் என்னுடைய சிறிய தந்தை, கலங்காத மேன்மை தங்கியவரே'

'ஆ, நாங்கள் நண்பர்கள்' என்று மகிழ்ச்சியோடு குட்டுஜோவ் சொன்னார். 'ரொம்ப சரி, ரொம்ப சரி, நண்பரே. இங்கே நமது பரிவாரங்களோடு நீர் தங்கி இரும். நாளை நாம் பேசுவோம்'

டெனைசாவிற்கு தலையை ஆட்டிவிட்டு, அவர் திரும்பி கானாவ்னைட்சின் அவரிடம் கொண்டு வந்திருக்கும் தஸ்தாவேஜுகளுக்காகத் தமது கையை நீட்டினார்.

'கலங்காத மேன்மை தங்கியவரே, உள்ளே வர விரும்ப வில்லையா?' என்று அலுவலிலிருந்த அந்த ஜெனரல், ஒரு அதிருப்தியான குரலில் கேட்டார். 'யுத்தத் திட்டங்களையெல்லாம் பரிசீலனை செய்யவேண்டும். கையெழுத்துப் போடுவதற்காக, பல காகிதங்கள் இருக்கின்றன.'

ஒரு உதவியாளர் வெளியே வந்து, உள்ளே எல்லாம் தயாராய் இருப்பதாகக் கூறினார். ஆனால், அவர் தமது வேலை முடிகிற வரையில் உள்ளே நுழைவதற்கு விருப்பமில்லாதவர்போல காணப்பட்டார். அவர் தமது முகத்தைச் சுளித்தார்...

'இல்லை, இங்கே ஒரு சிறிய மேஜையைக் கொண்டுவரும்படி சொல்லும், எனது அன்பான சிறுவரே; அவற்றையெல்லாம் நான் இங்கேயே பார்க்கிறேன்' என்று அவர் சொன்னார். இளவரசர் ஆண்ட்ரூவின் பக்கம் திரும்பினார். அவர் அங்கே மண்டப முற்றத்தில் நின்று, ஜெனரலின் பேச்சுக்களைக் கவனித்துக் கொண்டிருந்தார். அவரைப் பார்த்து, 'நீர் போய்விட வேண்டாம்' என்று சொன்னார்.

இம்மாதிரி பேசிக்கொண்டிருக்கும்போது, கதவிற்குப் பின்னால், ஒரு பெண்ணின் தணிந்த குரலையும், பட்டாடையின் சலசலப்பையும் இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார். பல தடவைகள் அப்பக்கமாக அவர் நோக்கினார். கதவிற்குப் பின்னால் ஒரு புஷ்டியான ரோஜா நிறமுள்ள, அழகான பெண், ரோஜா வர்ண ஆடை அணிந்து, பூப்போட்ட பட்டுக் கைக்குட்டையைத் தலையில்கட்டி, கையில் ஒரு தட்டோடு நின்றுகொண்டிருந்தாள். சேனாதிபதி உள்ளே வருவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தவளைப் போல காணப்பட்டாள். அந்த வீடு மத குருவின் வீடு என்றும், அவள் மத குருவின் மனைவியென்றும், கலங்காத மேன்மை

தங்கியவருக்கு ரொட்டியும் உப்பும்* சமர்ப்பிப்தற்காக அவள் விரும்புகிறாள் என்றும், குட்டுஜோவின் உதவியாளர் இளவரசர் ஆண்ட்ரூவிடம் மெதுவான குரலில் சொன்னார். (*புதிதாக ஒருவர் குடி வரும்போது அவருக்கு ரொட்டியும் உப்பும் கொடுப்பது ருஷ்யாவில் வழக்கம். ஆனால், நடைமுறையில், ரொட்டிக்கும் உப்புக்கும் பதிலாக, அனேகமாக, ஒரு வெள்ளித் தட்டில் கேக்கையும் சர்க்கரைத் தூளையும் வைத்துக் கொடுப்பது வழக்கமாய் வந்துவிட்டது.) 'அவளுடைய கணவர் ''கலங்காத மேன்மை தங்கியவரை'' மாதா கோவிலில் சிலுவை கொண்டு வரவேற்றார். இப்பொழுது அவள் அவரை வீட்டில் வரவேற்க விரும்புகிறாள்... அவள் மிகவும் அழகாய் இருக்கிறாள்'-என்று அந்த உதவியாளர் புன்னகையோடு மேலும் சொன்னார். இந்த வார்த்தைகளைக் கேட்டதும், குட்டுஜோவ் சுற்றிப் பார்த்தார். ஜெனரலின் அறிக்கையை அவர் கேட்டுக்கொண்டு இருந்தார். ஜாரேவா - ஜாய்மிஷ் என்ற இடத்திலுள்ள அணி அமைப்பைப் பற்றி முக்கியமாகக் குறை கூறுவதாக அந்த ஜெனரலின் அறிக்கை இருந்தது. டெனைசாவ் பேசியதை அவர் கேட்டதைப் போலவே, ஏழு வருஷங்களுக்கு முன்னால் ஆஸ்டர்லிட்ஜில் நடந்த யுத்தக் கவுன்சிலில் நடந்த விவாதங்களை அவர் கேட்டதைப் போலவே, இப்பொழுதும் அந்த ஜெனரலின் அறிக்கையையும் அவர் கேட்டுக்கொண்டிருந்தார். ஒரு காதில் கொஞ்சம் சணலை வைத்து அடைத்திருந்த போதிலும் (ருஷ்யாவில் பல் வலிக்காக, காதில் சிறிது சணலை வைத்து அடைப்பது, ஒரு வைத்தியாமாயிருந்தது.), அவருக்கு காதுகள் இருந்தபடியால் அவர் கேட்காமல் இருக்க முடியாது என்பதற்காக, அவர்கேட்டுக் கொண்டிருந்ததாகத் தோன்றியது.

ஆனால், அந்த ஜெனரல் சொல்லுவது எதுவும் அவரை ஆச்சரியப்படுத்தவோ, அல்லது அவரை சிரத்தை கொள்ளும்படி செய்யவோ முடியாதென்றும் தெளிவாய்த் தெரிந்தது. ஏனெனில், சொல்லப் போவதையெல்லாம் முன் கூட்டியே அவர் அறிந்திருந்தார் என்று தோன்றியது. மாதா கோயிலில் ஆராதனையின்போது பாடப்படும் பாட்டுகளை எப்படி ஒருவர் கேட்டுக்கொண்டு இருந்தாக வேண்டும் என்று இருப்பதைப்போல, அவரும் கேட்டாக வேண்டும் என்பதற்காகக் கேட்டுக் கொண்டிருந்தார். டெனைசாவ் சொல்லியவையெல்லாம், புத்திசாலித்தனமாகவும் விஷயத்தைக் குறிப்பிட்டுக் காட்டுவதாகவும் இருந்தன. ஜெனரல் சொல்லிக்கொண்டு இருந்தவை, அதைவிட அதிக புத்திசாலித்தனமாகவும்,

விஷயத்திற்குப் பொருத்தமானதாகவும் இந்தன. ஆனால், குட்டுஜோவ், அறிவையோ புத்திசாலித்தனத்தையோ வெறுக்கிறவர் என்பதும் தெளிவாய்த் தெரிந்தது. எனினும், புத்திசாலித் தனத்திற்கும் புறம்பான மற்றொன்றை அவர் அறிந்திருந்ததாகவும், அது தான் அந்த விஷயத்தில் முடிவாய்த் தீர்மானிக்கக் கூடியதாயிருக்குமென்றும் தோன்றியது. சேனாதிபதியின் முகத்தைக் கவனத்தோடு இளவரசர் ஆண்ட்ரூ நோக்கி வந்தார். அவருடைய முகத்தில் அவர் காணக்கூடியவையெல்லாம், கேட்டுக்கொண்டே இருப்பதில் ஏற்பட்டுள்ள சடைவும் கதவுக்குப் பின்னால் ஒரு பெண் குரல் மெதுவாக ஒலித்துக்கொண்டே இருந்ததன் பொருள் என்ன என்பதை அறிவதிலுள்ள சிரத்தையும், ஒழுங்கு ரீதியை அனுசரிக்க வேண்டுமென்ற ஆசையுமேயாகும். குட்டுஜோவ், புத்திசாலித்தனத்தையும் கல்வி அறிவையும் வெறுக்கிறவர் என்பது தெளிவாய்த் தோன்றியது. டெனைசாவ் காட்டிய தேசாபிமான உணர்ச்சியைக்கூட, அவர் வெறுப்பதாகத் தோன்றியது. தம்முடைய புத்திலிசாலித்தனத்தினாலோ, உணர்ச்சிகளினாலோ, அல்லது அறிவினாலோ-இவற்றில் எதையும் காட்டுவதற்கு அவர் முயற்சி செய்யவில்லை. - அவற்றை வெறுத்தார் என்பதில்லை; மற்றொரு காரணத்தினால் அவர் வெறுத்தார். அன்று அவரிடம் சொல்லியவைகளில், அவராக உத்தரவு பிறப்பித்தது ஒரே ஒரு விஷயத்தில் தான். அதாவது, ருஷ்ய துருப்புகள், போகிற வழியில் கொள்ளையடித்த விஷயமாகும். அம்மாதிரி சிப்பாய்கள் ஓட்டு தானியக் கதிர்களைச் சேதப்படுத்தியதற்கு நஷ்டஈடு கொடுக்க வேண்டுமென்றும் அந்த நஷ்டஈட்டை ராணுவ கமாண்டரிடமிருந்து வசூலிக்க வேண்டுமென்றும் ஒரு உத்தரவை எழுதி, அவருடைய கையெழுத்திற்காகக் கடைசியில் அவர் முன்பாக அந்த ஜெனரல் வைத்தார்.

இந்த விஷயத்தைக் கேட்ட பின்பு, தமது உதடுகளைக் கூட்டி சப்தமிட்டு, தமது தலையை ஆட்டினார்.

‘அடுப்பில் போடுங்கள்... அதை நெருப்பில் போடுங்கள், எனது அன்பான பேர்வழியே! நான் முடிவாக ஒன்று சொல்லுகிறேன், கேளும். அம்மாதிரி விஷயங்களையெல்லாம் நெருப்பில் போடுங்கள். அவர்கள் தங்கள் மனதிற்கு திருப்தி ஆகிற வரையில், கதிர்களை வெட்டட்டும், மரங்களை எரிக்கட்டும், கட்டைகளை எரிக்கட்டும். அவற்றிற்கெல்லாம் நான் உத்தரவு கொடுக்கவில்லை; அல்லது நான் அனுமதிக்கவும் இல்லை. ஆனால் அவற்றிற்கு நான் நஷ்ட ஈடு வசூலிக்கவும் மாட்டேன். அம்மாதிரி செய்யாமல்

ஒருவரால் நடந்து கொள்ள முடியாது. கட்டையை வெட்டும்போது, சிராய்கள் சிதறத்தான் செய்யும்' என்று அவர் சொல்லி விட்டு, அந்த காகிதத்தை மீண்டும் பார்த்தார். 'ஓ, எல்லாம் இந்த ஜெர்மன் துல்லியம்!' என்று அவர் முனங்கிக்கொண்டே, தமது தலையை ஆட்டினார்.



'நல்லது, அவ்வளவுதான்' என்று குட்டுஜோவ், கடைசியாக யாதாஸ்தில் கையெழுத்துப் போட்டபோது சொன்னார். அவர் கஷ்டத்தோடு எழுந்து, தமது வெள்ளைக் கழுத்திலிருந்த மடிப்பைத் தடவி விட்டுக்கொண்டு, மிகுந்த மகிழ்ச்சி யுள்ள தோற்றத்தோடு வாசலை நோக்கிப் போனார்.

அந்த மத குருவின்' மனைவி, ரோஜாப் பூ நிறத்தில் சிவந்து, வெகு நேரமாய் தயாராய் இருந்தபோதிலும் அவரிடம் சரியான நேரத்தில் கொடுக்க முடியாமலிருந்த தட்டை எடுத்து, ஒரு தாழ்ந்த, தலைகுனிந்த மரியாதையோடு குட்டுஜோவிடம் நீட்டினாள்.

அவர் தமது கண்களை இடுக்கிக்கொண்டு புன்முறுவல் காட்டி, தமது கையால் அவளுடைய நாடியை உயர்த்திச் சொன்னார்:

'ஆ, எப்போர்ப்பட்ட அழகு! உனக்கு வந்தனம், என் கண்ணே.'

அவர் தம்முடைய கால் சட்டை ஜேபியிலிருந்து சில தங்க நாணயங்களை எடுத்து, அவளுக்காக அந்தத் தட்டில் வைத்தார். 'நல்லது, எனது அன்பே, எல்லாம் சௌக்கியம் தானே?' என்று சொல்லிவிட்டு தமக்காக ஒதுக்கப்பட்டிருந்த அறையில் வாசலை நோக்கிப் போனார். அந்த மத குருவின் மனைவி புன்முறுவல் காட்டினார். அவளுடைய அறைக்கு அவள் பின்பற்றிப் போனாள். உதவியாளர் முற்ற மண்டபத்திற்கு வந்து, தம்முடன் சாப்பிட வரும்படி இளவரசர் ஆண்ட்ரூவைக் கேட்டார். அரை மணி நேரத்திற்குப் பின்னால், மீண்டும் குட்டுஜோவை இளவரசர் ஆண்ட்ரூ பார்த்தார். அவர் ஒரு நாற்காலியில் சாய்ந்துகொண்டு, இன்னமும் தம்முடைய வெளிக்கோட்டிலுள்ள பொத்தான்களைக் கழற்றாமல் அப்படியே இருந்தார். அவருடைய கையில் வைத்திருந்த பிரஞ்சு புத்தகத்தை, இளவரசர் ஆண்ட்ரூ உள்ளே நுழைந்ததும் மூடி வைத்து, அதற்கு அடையாளமாக ஒரு கத்தியை அதில் வைத்தார். இளவரசர் ஆண்ட்ரூ அந்தப் புத்தகத்தின் மேலே அட்டையில் எழுதியிருந்த வாசகத்தைப் பார்த்து, அது திருமதி டி

ஜென்லிஸ் என்பவளால் எழுதப்பட்ட 'அன்னப் பக்ஷியோடு குதிரை வீரர்கள்' என்ற புத்தகம் என்று அறிந்து கொண்டார்.

'நல்லது, உட்காரும், இங்கே உட்காரும். நாம் கொஞ்சம் பேசுவோம்' என்று குட்டுஜோவ் சொன்னார். 'துக்ககரமானது, ரொம்பவும் துக்ககரமானது. ஆனால், எனது அன்பான பேர்வழியே, ஞாபகம் வைத்துக்கொள்ளும், நான் உமக்கு ஒரு தந்தை; ஒரு இரண்டாவது தந்தை...'

இளவரசர் ஆண்ட்ரூ, தம்முடைய தந்தையின் மரணத்தைப் பற்றி நமக்குத் தெரிந்தவைகளையெல்லாம் குட்டுஜோவிடம் சொன்னார். பால்டு ஹில்ஸ் வழியாக அவர் போனபோது, அங்கே அவர் கண்டவைகளையும் சொன்னார்.

'என்ன... என்ன நிலைமைக்கு நம்மை எல்லாம் கொண்டு வந்து விட்டார்கள்' என்று குட்டுஜோவ் ஒரு பரபரப்பான குரலில் திடீரென்று கூச்சலிட்டார். இளவரசர் ஆண்ட்ரூ சொல்லிய விவரங்களிலிருந்து, ருஷ்யாவில் தற்கால நிலைமையை அவர் தமது மனக்கண் முன்பாக தெளிவாகப் பார்த்தார் என்று தோன்றியது. 'ஆனால், எனக்குக் கொஞ்சம் அவகாசம் கொடும், கொஞ்சம் அவகாசம் கொடும்' என்று அவர் ஒரு கடுமையான பார்வையோடு சொன்னார். இந்த பரபரப்பான உரையாடலை மேலும் நீடிப்பதற்கு அவர் விரும்பவில்லை என்று தோன்றியது. 'நான் உம்மை என்னுடன் வைத்துக்கொள்வதற்காகத்தான் அழைத்தேன்' என்றார்.

'கலங்காத மேன்மை தங்கியவரே, நான் அதற்காக உமக்கு நன்றி செலுத்துகிறேன். ஆனால், பரிவார வேலைகளுக்கு நான் அடியோடு தகுதியற்றவன் என்று நினைக்கிறேன்' என இளவரசர் ஆண்ட்ரூ ஒரு புன்னகையோடு பதில் சொன்னார். அதை குட்டுஜோவ் கவனித்தார்.

குட்டுஜோவ் அவரைக் கேள்விக் குறியோடு நோக்கினார்.

'எல்லாவற்றிற்கும் மேலாக, நான் எனது பட்டாளத்தோடு பழகி விட்டேன். அந்தப் பட்டாளத்திலுள்ள அதிகாரிகள் மீது மிகுந்த அன்பு கொண்டிருக்கிறேன். அந்த மனிதர்களும் என்னை விரும்புகிறார்கள் என்று நான் நினைக்கிறேன். ஆகவே, அந்தப் பட்டாளத்தை விட்டு வருவதற்கு எனக்கு மன வருத்தமாய் இருக்கும். உம்முடன் இருக்கக்கூடிய பெருமையை நான் மறுக்கிறேன் என்றால், நான் சொல்வதை நம்பவேண்டும்...'

ஒரு கூர்மையான, அன்பான, என்றாலும், தந்திரமான, கேலியான உணர்ச்சி, குட்டுஜோவின் பருத்த முகத்தில் பிரகாசமிட்டது. பால்கோன்ஸ்கி சொல்வதை அவர் நிறுத்தினார்.

‘நான் மிகவும் வருத்தப்படுகிறேன். ஏனெனில், நீர் எனக்கு வேண்டும். ஆனால், நீர் சொல்வதும் சரிதான், நீர் சொல்வதும் சரிதான், இந்த இடத்தில் மனிதர்கள் தேவையில்லை. இங்கே ஆலோசகர்கள் எப்போதுமே ஏராளமாக இருக்கிறார்கள். ஆனால், நமக்கு வேண்டிய மனிதர்கள் இல்லை. இந்த ஆலோசகர்கள் எல்லோரும், நீர் செய்வதைப் போல, ராணுவத்தில் போய் சேவை செய்தால், பட்டாளங்கள் இப்போது இருக்கிறமாதிரி இருக்கா. ஆஸ்டர்லிட்ஜில் நான் உம்மைப் பார்த்ததை ஞாபகத்தில் வைத்திருக்கிறேன்... நான் ஞாபகத்தில் வைத்திருக்கிறேன். ஆமாம், அந்தக் கொடியோடு நீர் நின்றதை, நான் இன்னமும் ஞாபகத்தில் வைத்திருக்கிறேன்’ என்று குட்டுஜோவ் சொன்னார். இளவரசர் ஆண்ட்ரூவின் முகத்தில், அதை நினைவுபடுத்தியதும், மகிழ்ச்சி பரவியது.

அவருடைய கையைப்பற்றி, தம்மிடம் இழுத்துக்கொண்டு முத்தமிடுவதற்காக, தமது கன்னத்தை குட்டுஜோவ் காட்டினார். மீண்டும் அந்த வயோதிகரின் கண்களில் நீர் நிறைந்து இருப்பதை இளவரசர் ஆண்ட்ரூ கவனித்தார். குட்டுஜோவின் கண்ணீர் வெகு சீக்கிரமாக, சுலபமாக வருமென்று இளவரசர் ஆண்ட்ரூ அறிந்திருந்தாலும், தமக்கு ஏற்பட்ட நஷ்டத்திற்காக அனுதாபம் காட்டுவதற்கு, அவர் குறிப்பாகக் கனிவோடும், சிரத்தையோடு மிருப்பதாக அவருக்குத் தோன்றியது. அது தவிர, ஆஸ்டர்லிட்ஜைப் பற்றி அவர் ஞாபகப்படுத்தியது இனிமையாகவும் பெருமை யாகவும் அவருக்குத் தோன்றின.

‘நீர் உமது வழியே போம். கடவுள் உம்முடன் இருப்பார். உமது வழிதான், கௌரவத்திற்கான வழியென்பது எனக்குத் தெரியும்’. அவர் சிறிது நிறுத்தினார். ‘புகாரெஸ்டில் நீர் இல்லாமல் நான் கஷ்டப்பட்டேன். ஆனால், யாராவது ஒருவரை அச்சமயம் அனுப்ப வேண்டி இருந்தபடியால், உம்மை அனுப்பினேன்.’ அந்த பேச்சை அதோடு மாற்றி, குட்டுஜோவ் துருக்கி யுத்தத்தைப் பற்றியும், பின்னால் நடந்த சமாதான உடன்படிக்கையைப் பற்றியும் பேச ஆரம்பித்தார். ‘ஆமாம், என்னை வெகுவாகக் குற்றம் சாட்டுகிறார்கள். யுத்தத்தை நடத்தியதற்கும் குற்றம் சாட்டுகிறார்கள். சமாதான உடன்படிக்கையை செய்ததற்கும் குற்றம் சாட்டுகிறார்கள்... ஆனால், ஒவ்வொன்றும் சரியான நேரத்தில் வந்து சேர்ந்தது. ‘எப்படி காத்திருக்க வேண்டுமென்று தெரிந்தவனுக்கு, ஒவ்வொன்றும் சமயத்தில் வந்து சேரும்.’ இங்கே எத்தனை ஆலோசகர்கள் இருக்கிறார்களோ, அதே மாதிரி அங்கேயும்

இருந்தார்கள்...' என்று அவர் சொல்லி விட்டு, ஆலேசகர்கள் என்ற விஷயத்திற்கு மீண்டும் திரும்பினார். 'ஆ, அந்த ஆலோசகர்கள்! அவர்கள் சொல்வதை மட்டும் நாம் கேட்டிருந்தால், துருக்கியில் சமாதான உடன்படிக்கை ஏற்பட்டிருக்காது; அந்தத் துருக்கி யுத்தத்தைக் கூட, நாம் சரியாய் நடத்தியிருக்க முடியாது. ஒவ்வொன்றையும் அவசரத்தில் செய்தார்கள். அவசரம் அதிகம்: ஆனால், வேகம் குறைவு. காமென்ஸ்கி இறந்து போகாமல் இருந்தால், தோற்றுப்போய் இருப்பார். அவர் 30,000 வீரர்களோடு கோட்டைகளைத் தாக்கினார். ஒரு கோட்டையைப் பிடிப்பது என்பது கஷ்டமான வேலையல்ல. ஆனால், ஒரு யுத்தத்தை ஜெயிப்பதுதான் கஷ்டமான வேலை. அம்மாதிரி ஜெயிப்பதற்கு, கோட்டையைத் திடீரென்று போய் நெருக்குவதோ, அல்லது தாக்குவதோ செய்வதால் முடியாது. ''பொறுமையும் காலமும்'' தான், அவற்றைச் செய்யக்கூடியவைகள். ரஸ்ட்சுக் என்ற இடத்திற்கு காமென்ஸ்கி சிப்பாய்களை அனுப்பினார். ஆனால், நானோ மேலே சொல்லிய ''பொறுமையும் காலமும்'' என்று இரண்டு விஷயங்களைத் தான் உபயோகித்தேன். அதன் மூலம் காமென்ஸ்கி கைப்பற்றிய கோட்டைகளைவிட, அதிகமான கோட்டைகளை நான் கைப்பற்றினேன்; அந்தத் துருக்கியர்களைக் குதிரை மாமிசம் தின்னும்படி நான் செய்தேன்' என்று சொல்லிவிட்டு தலையை இங்குமங்கும் ஆட்டினார். 'என்னை நீர் நம்பும், அந்த பிரஞ்சுக்காரர்களைக்கூட' என்று அவர் சொல்லிவிட்டு, மிகுந்த பரபரப்படைந்து, தமது மார்பில் அடித்துக்கொண்டு பேசினார். 'அந்த பிரஞ்சுக்காரர்களைக்கூட குதிரை மாமிசம் தின்னும்படி நான் கட்டாயமாகச் செய்வேன்' என்று கூறி முடித்தார். மீண்டும் அவர் கண்களில் நீர் நிறைந்து மறைத்தது?

'ஆனால், நாம் பிரஞ்சுக்காரர்களுடன் எதிர்த்து நின்று யுத்தம் செய்வதில்லையா?' என்று இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார்.

'ஒவ்வொருவரும் வேண்டுமென்று விரும்பினார், அம்மாதிரியே செய்வோம். அதைத் தவிர்க்க முடியாது... எனது அன்புள்ள சிறுவரே, நான் சொல்வதை நம்பும். நான் மேலே சொல்லிய ''பொறுமையும் காலமும்'' என்பவைகளைவிட பலமானது, வேறு எதுவும் கிடையாது. அந்த இரண்டும் எல்லாக் காரியங்களையும் செய்து முடித்துவிடும். ஆனால், அந்த ஆலோசகர்கள் இருக்கிறார்களே, அவர்களை மட்டும் அந்தக் காதினால் நீர் கேட்டுவிடக் கூடாது. அது தான் கஷ்டம். சிலர் ஒரு விஷயத்தைவேண்டுமென்று சொல்வார்கள்; மற்றவர்கள்

வேண்டாமென்பார்கள். இம்மாதிரி சந்தர்ப்பத்தில் ஒருவர் என்ன செய்ய முடியும்?' என்று அவர் பதிலை எதிர்பார்ப்பவரைப் போலக் கேட்டார். 'நல்லது, நீர் இந்த நிலைமையில் எங்களை என்ன செய்யச் சொல்லுகிறீர்?' என்று அவர் மீண்டும் திருப்பிச் சொன்னார். அவருடைய கண்ணில் ஒரு கூர்ந்த பார்வை ஆழ்ந்து பிகாசித்துக்கொண்டிருந்தது. 'என்ன செய்ய வேண்டுமென்பதை நான் உமக்குச் சொல்லுகிறேன்' என்று, இன்னமும் இளவரசர் ஆண்ட்ரூ பதில் சொல்லாமல் இருந்ததால், மேலே கூறினார். 'என்ன செய்ய வேண்டுமென்பதை நான் சொல்லுகிறேன். நான் என்ன செய்வேன் என்பதையும் சொல்லுகிறேன். ''சந்தேகம் ஏற்படும் போது, எனது அருமையான பேர் வழியே, எதையுமே நீர் செய்யக்கூடாது'' என்ற பிரஞ்சுப் பழமொழியை எடுத்துச் சொல்லி, அவர் பேச்சை முடித்தார்.

'நல்லது, போய் வாரும், எனது அருமையான பேர்வழியே. உமது துக்கத்தில் பூரணமாக, என் இருதய பூர்வமாகப் பங்கு கொள்கிறேன் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும். உம்மைப் பொறுத்த வரையில், நான் கலங்காத மேன்மை தங்கியவரும் அல்ல, இளவரசரும்அல்ல, சேனாதிபதியுமல்ல. ஆனால், ஒரு தந்தை. உமக்கு ஏதாவது வேண்டியிருந்தால் நீர் நேராக என்னிடம் வாரும். போய் வாரும், எனது அருமையான சிறுவரே.'

மீண்டும் அவர் இளவரசர் ஆண்ட்ரூவைத் தழுவி முத்தம் இட்டார். அவர் அந்த அறையை விட்டுப் போவதற்கு முன்பாக, குட்டுஜோவ் ஒரு பாரம் நீங்கியதைப்போல நீண்ட பெருமூச்சு விட்டார். மீண்டும், தாம் படித்து முடிக்காமல் இருந்த நாவலான திருமதி டி ஜென்லிஸ் எழுதிய 'அன்னப் பஷியோடு குதிரை வீரர்கள்' என்ற புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்தார்.

இளவரசர் ஆண்ட்ரூ, குட்டுஜோவுடன் பேட்டி முடிந்த பின்பு, தமது பட்டாளத்திற்குத் திரும்பினார். யுத்தத்தை நடத்தும் பொதுவான முறையிலும் இப்போது வந்திருக்கும் சேனாதிபதியிடமும் நம்பிக்கை வைக்கலாம் என்று அவர் தமது பட்டாளத்தாருக்கு உறுதி கூறினார். அவர் ஏன் அம்மாதிரி சொன்னார், எதற்காகச் சொன்னார் என்பதை, இளவரசர் ஆண்ட்ரூவினால் விளக்கிச் சொல்லியிருக்க முடியாது. அந்த வயோதிகரிடமுள்ள அவருடைய சொந்த விருப்புகள் எல்லாம் மறைந்துவிட்டன என்பதை அவர் அறிந்தார். அவரிடம் உணர்ச்சிகளின் பழகிப்போன வழக்கம் மட்டும்தான் இருக்கிறது என்பதையும், புத்திசாலித்தனத்திற்குப் பதிலாக (சம்பவங்களைத்

தொகுத்து, அவற்றிலிருந்து முடிவுகாணும் புத்திசாலித்தனத்திற்குப் பதிலாக) சம்பவங்களின் போக்குகளைப் பற்றி நிதானமாக ஆலோசிக்கும் தகுதியும் இருக்கிறது என்பதையும் அவர் கண்டார். ஆகவே, ஒவ்வொரு காரியமும் எப்படி இருக்கவேண்டுமோ அப்படியே இருக்கும் என்ற நம்பிக்கை இளவரசர் ஆண்ட்ரூவுக்கு ஏற்பட்டது.

'அவர் தமது சொந்தமாக எந்தவிதமான திட்டத்தையும் கொண்டுவரப் போவதில்லை. அவர் எந்தத் திட்டத்தையும் உற்பத்தி செய்யவோ, அல்லது எதையும் நிறைவேற்றுவதற்கு பொறுப்பு ஏற்றுக்கொள்ளவோ போவதில்லை. ஆனால் அவர் ஒவ்வொன்றையும் கேட்டுக்கொண்டே இருப்பார்; ஒவ்வொன்றை யும் கவனத்தில் வைத்திருப்பார்; ஒவ்வொன்றையும் அதனதன் இடத்தில் போட்டு வைப்பார். உபயோகமுள்ள எதற்கும் அவர் இடையூறு செய்யமாட்டார்; தீங்கானவை எதையும் அனுமதிக்கவும் மாட்டார். தம்முடைய சொந்த விருப்பத்திற்கு மேலாக, வேறு ஏதோ ஒன்று, மிகுந்த பலமான ஒன்று, மிகுந்த முக்கியமான ஒன்று இருக்கிறது என்பதை அவர் அறிந்திருக்கிறார். அதாவது, 'தவிர்க்க முடியாத சம்பவங்களின் போக்கு' என்பதாகும். அவைகளைப் பார்க்கவும், அவற்றின் முக்கியத்துவத்தை அறியவும் அவரால் முடியும். அந்த முக்கியத்துவத்தை அவர் அறிந்து கொண்டிருக் கிறபடியால், அதில் போய் குழப்பாமல் இருக்கவும், மற்றொன்றை நோக்கிச் செல்லும் தமது சொந்த விருப்பத்தைத் துரத்தி அடிக்கவும் அவரால் முடியும். இவை எல்லாவற்றிற்கும் மேலாக, ஒவ்வொருவரும் அவரிடம் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். ஏனெனில், அவர் ஒரு ருஷ்யர். ஜென்லிஸ் என்ற பிரஞ்சுக்காரியின் நாவலைப் படித்துக் கொண்டும், பிரஞ்சுப் பழமொழிகளை அவர் உபயோகப்படுத்திக் கொண்டிருந்தும் கூட, அவர் ஒரு ருஷ்யர்; அதோடு, நம்மை என்ன நிலைமைக்கு அவர்கள் கொண்டு வந்துவிட்டார்கள் என்று அவர் சொல்லியபோது, அவருடைய குரல் நடுங்கியது. அவர் 'பிரஞ்சுக்காரர்களைக் குதிரைமாமிசம் தின்னும்படி வைப்பேன்' என்று சொல்லியபோது, அவருடைய குரலில் ஒரு விம்மல் இருந்தது' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார்.

அதே மாதிரி உணர்ச்சிகளில் எல்லாரும் ஒருமுகமான அபிப்பிராயம் கொண்டிருந்தார்கள். பொதுவான அங்கீகாரமும் இருந்தது. இவற்றினால் தான், ராஜ சபையின் செல்வாக்கு விரோதமாய் இருந்தாலும், குட்டுஜோவ் சேனாதிபதியாக

வரவேண்டுமென்று பொது மக்கள் விரும்பினார்கள். அவர் சேனாதிபதியாக நியமிக்கப் பட்டதும் மக்கள் எல்லாரும் வரவேற்றார்கள்.




மாஸ்கோவை விட்டு சக்கரவர்த்தி புறப்பட்டுப் போன பின்பு, மாஸ்கோவின் வாழ்க்கை பழைய வழக்கமான முறையிலேயே நடந்து கொண்டிருந்தது. அது அவ்வளவு பழக்கமான முறையில் நடந்துகொண்டு இருந்தபடியால், சமீபத்தில் நடந்த தேசாபிமான ஆவேசத்தையும் உற்சாகத்தையும் காட்டிய தினங்களை நினைவு கூர்வதே கஷ்டமாய் இருந்தது. ருஷ்யா உண்மையில் ஆபத்தில் இருக்கிறது என்பதையோ, தந்தை நாட்டைச் சேர்ந்தவர்களான அந்த இங்கிலீஷ் கிளப்பின் அங்கத்தினர்கள் ருஷ்யாவிற்காக ஒவ்வொன்றையும் தியாகம் செய்வதற்கு தயாராக இருக்கிறார்கள் என்பதையோ நம்புவது கடினமாய் இருந்தது. சக்கரவர்த்தி அங்கே தங்கி இருந்த காலத்தில் ஒவ்வொருவரும் காட்டிய தேசாபிமான ஆர்வத்தை ஒரு விஷயம் மட்டும் நினைவு கூர்வதாய் இருந்தது. அதாவது, மனிதர்களும் பணமும் தேவை என்று சக்கரவர்த்தி சொன்னார். அவற்றிற்கான வாக்குறுதிகள் சக்கரவர்த்தியின் முன்னிலையில் கிடைத்த பின்பு, அவை சட்ட பூர்வமான உத்தியோக முறையில், தவிர்க்க முடியாத விதத்தில் உருவெடுத்து விட்டன.

மாஸ்கோவை எதிரி நெருங்கிக் கொண்டிருந்தான். அந்த நிலைமையைப்பற்றி மாஸ்கோ வாசிகளின் அபிப்பிராயம் அதிக சிரத்தை கொள்ளும்படி வளரவில்லை. அதற்குப் பதிலாக, விளையாட்டுத்தனமாக மாறியது. ஒரு பெரிய ஆபத்து நெருங்கிக் கொண்டிருப்பதைப் பார்க்கிற மக்கள், அம்மாதிரிதான் நடப்பார்கள். ஒரு ஆபத்து நெருங்கி வரும்போது மனிதர் உள்ளத்தில் இரண்டு வகையான குரல்கள், ஒவ்வொன்றும் சமவேகத்துடன், பேச ஆரம்பிக்கும். வந்து கொண்டிருக்கும் ஆபத்தின் தன்மையை சிந்தித்து அதிலிருந்து தப்புவதற்கான வழிகளைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று ரொம்பவும் நியாயமாக ஒரு குரல் பேசும். மற்றொரு குரல், அதைவிட அதிக நியாயத்தோடு பேசும். அதாவது, ஒவ்வொன்றையும் முன்னதாக அறிந்து, சம்பவங்களின் பொதுவான போக்கைத் தவிர்ப்பது மனிதனின் சக்தியில் இல்லை என்றும்,

ஆகவே ஆபத்தைப் பற்றி நினைப்பது மிகுந்த மனக் கஷ்டமாகவும் துன்பமாகவும் இருக்கின்றன என்றும், அந்த இரண்டாவது குரல் பேசும், ஆகவே, மனக் கஷ்டமான அந்த ஆபத்து நம்மிடம் வந்து சேருகிற வரையில் அதைப்பற்றிக் கவலைப்படாமல், மனதிற்கு சந்தோஷமான விஷயத்தையே நினைத்துக்கொண்டிருக்க வேண்டும் என்று அந்த இரண்டாவது குரல் சொல்லும். தனிமையில் மனிதன் இருக்கும்போது, அந்த முதலாவது குரலுக்கு செவி சாய்ப்பான். ஆனால், கூட்டத்தில் இருக்கும்போது, இரண்டாவது குரலுக்கே செவி சாய்ப்பான். இதே மாதிரிதான் மாஸ்கோவின் வாசிகள் இருந்து வந்தார்கள். அந்த வருஷத்தில் மாஸ்கோவில் மக்கள் மகிழ்ச்சியாய் இருந்ததைப் போல சமீப காலத்தில் இருந்ததில்லை.

ராஸ்டாப்சைனின் பிரகடனங்கள் வெளியிடப்பட்டு வந்தன. ஒரு பிரகடனத்தின் தலைப்பில், ஒரு மதுக் கடை, ஒரு பானைக் காரன், மாஸ்கோ வாசியான கார்புஷ்கா சிக்கைரின் ஆகியவர்களின் படங்கள் போடப்பட்டிருந்தன. சிக்கைரின் என்பவன் தற்காப்புப் படையைச் சேர்ந்தவன் என்றும், கள்ளுக் கடையில் நெப்போலியனைப் பற்றிப் பேசப்படுவதை அவன் கேட்டதாகவும், மாஸ்கோவுக்கு நெப்போலியன் வர விரும்புவதாக அவன் கேள்விப்பட்டதும் கோபங்கொண்டு பிரஞ்சுக்காரர்களை கெட்ட மொழியில் திட்டி அந்த மதுக் கடையை விட்டு வெளியே வந்து கழுகுக் கொடிக்குக் கீழாக நின்று அங்கிருந்த மக்களைப் பார்த்து பிரசங்கம் செய்ய ஆரம்பித்ததாகவும் சொல்லப்பட்டிருந்தது. இவற்றை மக்கள் வாசித்து விவாதித்துக் கொண்டிருந்தார்கள். இவற்றோடு வாசைலி லோவிச் புஷ்கினுடைய கவிதைகளையும் படித்துக்கொண்டிருந்தார்கள்.

கிளப்பில் மூலையில் இருந்த அறையில் இந்த பிரகடனங்களை வாசிப்பதற்காக அங்கத்தினர்கள் கூடினார்கள். கார்புஷ்கா என்பவன் பிரஞ்சுக்காரர்களைப் பார்த்து கேலி செய்து, 'ருஷ்ய முட்டை கோஸ்கள், பிரஞ்சுக்காரர்களை ஊத வைக்கும் என்றும், நம்முடைய கோதுமைக் கஞ்சி, அவர்களை வெடிக்க வைக்கும் என்றும், முட்டைகோஸ் சூப், அவர்களுடைய மூச்சைப் பிடித்துவிடும் என்றும், அவர்கள் எல்லாரும் குள்ளர்கள் என்றும், ஒரு விவசாயப் பெண் தனது வைக்கோல் கவர் கம்பினால் மூன்று பிரஞ்சுக்காரர்களை ஆகாயத்தில் வீசி அடிக்க முடியும் என்றும், அவன் பேசிய விஷயம் பிரகடனத்தில் காணப்பட்டது. இதை சிலர் பாராட்டினார்கள். மற்றவர்கள், அம்மாதிரி பேசிய தோரணையை விரும்பவில்லை. அது மடத் தனமாகவும் கீழ்த் தரமானதாகவும்

இருப்பதாகச் சொன்னார்கள். எல்லா பிரஞ்சுக்காரர்களையும், எல்லா வெளி நாட்டாரையும் கூட, மாஸ்கோவை விட்டு ராஸ்டாப்சைன் வெளியேற்றி விட்டதாகவும், அவர்களில் சில ஒற்றர்களும் நெப்போலியனின் ஏஜண்டுகளும் இருந்ததாகவும் சொல்லப்பட்டது. ஆனால், அவர்களை வெளியேற்றிய சமயத்தில், ராஸ்டாப்சைன் கூறிய தமாஷான விஷயத்தை எடுத்துச் சொல்லுவதற்காகவே, இந்த வெளியேற்ற விஷயத்தை முக்கியமாய் சொல்லி வந்தார்கள். அந்த வெளி நாட்டார்களை நைஜ்னி என்ற இடத்திற்கு கப்பல் மூலம் நாடு கடத்தினார்கள். அச்சமயம் ராஸ்டாப்சைன் அவர்களைப் பார்த்து பிரஞ்சு மொழியில் சொன்னார்: 'உங்கள் நடவடிக்கைகளை உங்களுக்குள்ளேயே வைத்துக் கொள்ளுங்கள். கப்பலில் ஏறிக் கொள்ளுங்கள். ஆனால், மரணக் கப்பலாக அதைச் செய்து விடாதீர்கள்.' மாஸ்கோவிலிருந்து சர்க்காரைச் சேர்ந்த எல்லா காரியாலயங்களையும் ஏற்கனவே அப்புறப்படுத்தி விட்டதாக ஒரு பேச்சு இருந்து வந்தது. அதோடு ஷின்ஷைனின் தமாஷையும் அந்தப் பேச்சில் சேர்த்துக் கொண்டார்கள். அதாவது, 'அது ஒன்றிற்காகவாவது மாஸ்கோ நெப்போலியனிடம் நன்றியுள்ளதாய் இருக்க வேண்டும். மாமோனாவின் பட்டாளத்திற்காக எண்ணூறு ஆயிரம் ரூபிள்கள் அவருக்கு செலவாகின்றனவென்றும், பெஜுகாவ் அதைவிட அதிகமாகத் தமது பட்டாளத்திற்காக செலவு செய்தார் என்றும், பெஜுகாவின் செய்கையில் ஒரு நல்ல விஷயம் என்னவென்றால், அவரே சீருடையை அணிந்து கொண்டு தமது சொந்தப் பட்டாளத்தை நடத்திச் செல்வார் என்றும், அந்த தமாஷாவிற்காக அவர் எதுவும் பணம் கேட்கப் போவது இல்லை என்றும் பேசிக்கொண்டார்கள்.

'நீர் ஒருவரையும் விட்டு வைப்பதில்லை' என்று ஜூலி ட்ரூபெட்ஸ்கயா, தன்னுடைய மோதிரம் அணிந்த விரல்களால் நூல்சிலும்பலைக் கூட்டி எடுத்து கையில் வைத்து அழுத்திக்கொண்டு சொன்னாள்.

மாஸ்கோவை விட்டு மறுநாள் புறப்படுவதற்கு ஜூலி தயாராகிக்கொண்டிருந்தாள். அதனால் ஒரு வழியனுப்பு விருந்தை அவள் கொடுத்தாள்.

'பெஜுகாவ் ஒரு அசடர் என்றாலும், மிகவும் அன்பானவர்; நல்ல சுபாவம் உள்ளவர். அவரைப் பற்றி இவ்வளவு கடுமையாகக் கூறுவதற்கு அதில் உமக்கு என்ன மகிழ்ச்சி இருக்கிறது?'

(பல பிரஞ்சு வார்த்தைகளைக் கலந்து இந்த வாக்கியத்தை ஜூலி பேசினாள்.)

'அபராதம்' என்று பாதுகாப்புப் படை யூனிபாரத்தில் இருந்த ஒரு வாலிபர் கூச்சலிட்டார். அந்த வாலிபரை 'எனது வீரர்' என்று அவள் அழைத்து வந்தாள். அவரும் அவளோடு நைஜ்னிக்குப் போவதாய் இருக்கிறார்.

மாஸ்கோவில் பல வட்டாரங்களில் இருப்பதைப் போலவே, ஜூலியின் வட்டாரத்திலும் ருஷ்ய மொழியைத் தவிர, வேறு எதையும் பேசக்கூடாது என்று ஒப்பந்தம் ஏற்பட்டிருந்தது. இதிலிருந்து வழுவி யாரவாது பிரஞ்சு மொழியைப் பேசினால், நன்கொடைக் கமிட்டிக்கு அபராதம் செலுத்தவேண்டும் என்றும் முடிவு செய்து கொண்டார்கள்.

'கலீஷியத்திற்காக மற்றொரு அபராதம்' என்று அங்கு பிரசன்னமாய் இருந்த ஒரு ருஷ்ய எழுத்தாளர் கூறினார். 'அதில் என்ன மகிழ்ச்சி இருக்கிறது' என்று கூறுவது கலீஷியத் தோரணை; அது ருஷ்யத் தோரணை அல்ல.'

'நீர் ஒருவரையும் விட்டு வைப்பதில்லை' என்று அந்த எழுத்தாளரின் பேச்சைக் கவனிக்காமல், அந்த வாலிபரைப் பார்த்து ஜூலி கூறினாள். 'கடுமையான' என்ற பிரஞ்சு வார்த்தையை நான் உபயோகப்படுத்தியது குற்றம்தான். அதற்காக அபராதம் கொடுத்து விடுகிறேன். உண்மையை உம்மிடம் சொல்லும் மகிழ்ச்சிக்காக நான் மீண்டும் அபராதம் கொடுக்கத் தயாராய் இருக்கிறேன். கலீஷியத்தோணைக்கு நான் பொறுப்பல்ல' என்று அவள் சொல்லிவிட்டு, அந்த எழுத்தாளரைப் பார்த்து சொன்னாள்: 'இளவரசர் காலிட்சினைப் போல ருஷ்ய மொழி கற்றுக் கொள்ளுவதற்கு ஒரு வாத்தியாரை நியமிப்பதற்காக என்னிடம் பணமோ, அல்லது நேரமோ இல்லை.'

'ஆ, இதோ வந்து விட்டார்!' என்று அவள் பேசினாள். 'எங்கே... இல்லை, இல்லை எங்கே' என்று பிரஞ்சு மொழியில் பேச ஆரம்பித்தவள், உடனே அதை நிறுத்திக்கொண்டு, பாதுகாப்புப் படை அதிகாரியைப் பார்த்து, 'உம்மால் என்னைப் பிடிக்க முடியாது. சூரியனைப் பற்றி நீர் பேசினால், அதன் கிரணங்கள் உமக்குத் தெரியும்' என்று சொல்லிவிட்டு பீயரைப் பார்த்து சௌஜன்யமாக புன்னகை காட்டினாள். 'உம்மைப் பற்றித்தான் இப்பொழுது பேசிக்கொண்டிருந்தோம்' என்று, உயர் வட்டாரப் பெண்களுக்கு இயற்கையாய் உள்ள, பொய் பேசும் சாமர்த்தியத்தோடு, கூறினாள். 'உம்முடைய பட்டாளம்

மாமோனாவின் பட்டாளத்தை விட நிச்சயமாகச் சிறந்ததாய் இருக்கும் என்று நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம்.'

'ஓ, என்னுடைய பட்டாளத்தைப் பற்றி என்னிடம் பேசவேண்டாம்' என்று பீயர் சொல்லி, அவள் கையை முத்தமிட்டு அவளுக்குப் பக்கத்தில் அமர்ந்தாள். 'எனக்கு அதைப் பற்றி மிகுந்த எரிச்சலாய் இருக்கிறது.'

'அந்தப் பட்டாளத்தை நீர்தானே நடத்திச் செல்லுவீர்?' என்று ஜூலி சொல்லிவிட்டு, அந்த பாதுகாப்புப் படை அதிகாரியை நோக்கி ஒரு தந்திரமான, கேலியான பார்வையைச் செலுத்தினாள்.

அந்த அதிகாரி பீயரின் பிரசன்னத்தில் கண்டனம் செய்வதை விட்டுவிட்டார். ஜூலியின் புன்னகைக்கு என்ன அர்த்தம் என்பதை அறிய முடியாமல் அவர் முகத்தில் ஒரு குழப்பமான தோற்றம் காணப்பட்டது. பராக்கு புத்தியுடனும் நல்ல சுபாவத்துடனும் பீயர் இருந்த போதிலும், அவருடைய பிரசன்னம், அவர் முகத்திற்கு நேராக யாரும் கேலி செய்ய முயற்சி செய்ய முடியாத படி தடுத்துவிட்டது.

'இல்லை' என்று தமது பெரிய, கனத்த உருவத்தை ஒரு சிரிப்பான பார்வையோடு நோக்கிக் கொண்டே கூறினார். 'என்னைச் சுடுவதற்கு பிரஞ்சுக்காரர்களுக்கு ஒரு நல்ல இலக்காக நான் விளங்குவேன். அதுவும் தவிர, ஒரு குதிரை மீது ஏறி அமர்வதற்கு எனக்குமிகுந்த கஷ்டமாய் இருக்கும்.'

ஜூலியின் விருந்தாளிகள் தாங்கள் பேசிவந்த வதந்திப் பேச்சுக்களில் ராஸ்டோவ்களையும் சேர்த்துக் கொண்டார்கள்.

'அவர்களுடைய விவகாரங்கள் மிக்க மோசமான நிலைமையில் இருப்பதாக நான் கேள்விப்படுகிறேன். அவர் மிகவும் நியாயத்திற்கு கட்டுப்படாதவராக இருக்கிறார். அந்தக் கோமகனைப் பற்றியே நான் சொல்லுகிறேன். மாஸ்கோவிற்குப் பக்கத்திலுள்ள அவருடைய வீட்டையும் எஸ்டேட்டையும் ரஜூமோவ்ஸ்கிகள் விலை'க்கு வாங்க விரும்புகிறார்கள். ஆனால், அவர் மிகவும் அதிகமாக விலை கேட்கிறார்' என்று ஜூலி சொன்னாள்.

'இல்லை, இன்னும் சில தினங்களில் அந்த விற்பனை முடிந்துவிடும் என்று நான் நினைக்கிறேன்' என்று அங்கிருந்தவர்களில் யாரோ ஒருவர் சொன்னார். 'இருந்தாலும், மாஸ்கோவில் இப்பொழுது எதையாவது விலைக்கு வாங்குவது பைத்தியக்காரத்தனம்.

'ஏன்? மாஸ்கோ அபாயத்தில் இருப்பதாக நீர் கருதவில்லை என்று நினைக்கிறேன்' என்றாள் ஜூலி.

'அப்படியானால், நீ ஏன் இதை விட்டுப் போகிறாய்?'

'நானா? என்ன கேள்வி! நான் போகிறேன், ஏனென்றால்... நல்லது ஏனென்றால், ஒவ்வொருவரும் போகிறார்கள். தவிர - நான் ஜோன் ஆப் ஆர்க்கும் அல்ல, அமேஜானும் அல்ல.'

'நல்லது, அப்படித்தான், அப்படித்தான். எனக்கு இன்னும் சில லினன் துணிகளைக் கொடுங்கள்.'

'அவர் தமது விவகாரத்தை சரியாக நிர்வாகம் செய்வதாய் இருந்தால், அவருடைய கடன்களையெல்லாம் அடைத்து விடலாம்' என்று ராஸ்டோவைப் பற்றி அந்த பாதுகாப்புப் படை அதிகாரி கூறினார்.

'அவர் ஒரு அன்பான வயோதிகர். ஆனால், திறமை இல்லாதவர். மேலும், அவர்கள் ஏன் நீண்ட காலமாக மாஸ்கோவில் தங்கி இருக்கிறார்கள்? வெகு காலத்திற்கு முன்பே கிராமாந்திரத்திற்குப் போக வேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள். நட்டாலி இப்பொழுது மீண்டும் சௌக்கியமாய் விட்டாள். அல்லவா?' என்று ஜூலி ஒரு பரிச்சயமான புன்னகை காட்டி பீயரைக் கேட்டாள்.

'அவர்களுடைய கடைசி மகனுக்காக எதிர்பார்த்துக் கொண்டிருக் கிறார்கள்' என்று பீயர் பதிலளித்தார். 'ஆபாலென்ஸ்கியின் கோசாக்குகளோடு அவன் சேர்ந்து பெலாயா செர்காவ் என்ற இடத்திற்குப் போய் இருக்கிறான். அங்கேதான் பட்டாளத்தை அமைக்கிறார்கள். இப்பொழுது அவனை என்னுடைய பட்டாளத்திற்கு மாற்றி விட்டார்கள். ஒவ்வொரு நாளும் அவனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். முன்பே போக வேண்டும் என்று கோமகன் விரும்பினார். ஆனால் தன்னுடைய மகன் திரும்பி வருகிற வரையில் எந்தக் காரணத்தை முன்னிட்டும் மாஸ்கோவை 'விட்டுப் போக கோமகன் விரும்பவில்லை' என்று பீயர் சொன்னார்.

'நான் அவர்களை நேற்று முன் தினம் ஆர்க்காராவ்களுடைய வீட்டில் சந்தித்தேன். நட்டாலி மீண்டும் தன் நிலைமையை அடைந்து விட்டாள். முன்னைவிடப் பிரகாசமாய் இருக்கிறாள். அவள் ஒரு பாட்டுப் பாடினாள். மக்கள் தான் எவ்வளவு சுலபமாக சமாளித்துக் கொள்ளுகிறார்கள்!'

'எதை சமாளித்துக் கொள்ளுகிறார்கள்?' என்று பீயர் அதிருப்தி கொண்டவராகக் கேட்டார்.

ஜுலி புன்முறுவல் காட்டினாள்.

'உமக்குத் தெரியும், கோமகனே. உம்மைப் போன்ற வீரர்களை திருமதி டி சூஜாவின் நாவல்களிலேயே காண முடியும்.'

'என்ன வீரர்கள்? நீ என்ன சொல்லுகிறாய்?' என்று நாணி முகம் சிவந்து பீயர் கேட்டார்.

'ஓ, எனது அன்பான கோமகனே, வாரும் சொல்லுகிறேன். மாஸ்கோ பூராவும் அந்தப் பேச்சு அடிபடுகிறது. உம்மைப் பார்த்து நான் ஆச்சரியப்படுகிறேன். உண்மையாகச் சொல்லுகிறேன்' என்று பிரஞ்சு மொழியில் ஜுலி சொன்னாள்.

'அபராதம், அபராதம்' என்று பாதுகாப்புப் படை அதிகாரி கூறினார்.

'ரொம்ப சரி, பேசவே முடியவில்லை- எவ்வளவு எரிச்சலாய் இருக்கிறது.'

'மாஸ்கோ பூராவும் அந்தப் பேச்சு அடிபடுகிறது என்று சொன்னாயே, அது என்ன?' என்று பீயர் கோபமாய் கேட்டு எழுந்து நின்றார்.

'இப்படி, வாரும், கோமகனே, உமக்கே தெரியும்.'

'அதைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது' என்று பீயர் சொன்னார்.

'நீர் நட்டாலியுடன் அன்னியோன்னியமாய் இருக்கிறீர் என்பதை நான் அறிவேன். ஆகவே... ஆனால், வெராவுடன் -அந்த அருமையான வெராவுடன், நான் எப்பொழுதும் மிகுந்த நட்போடு இருக்கிறேன்' என்றாள் ஜுலி.

'இல்லை, திருமதியே!' என்று ஒரு அதிருப்தியான குரலில் பீயர் தொடர்ந்து பேசினார். 'நட்டாலி ராஸ்டோவாவின் வீரனாக நடிக்கும் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்ளவே இல்லை. கிட்டத்தட்ட ஒரு மாதமாக நான் அவர்கள் வீட்டிற்குப் போகவில்லை. ஆனால், இந்தக் கொடுமையை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை...'

'யார் தம்மை மன்னித்துக் கொள்ளுகிறாரோ, அவரே தம்மை குற்றம் சாட்டிக் கொள்ளுகிறார்' என்று ஜுலி புன்முறுவலுடன் தன் கையிலிருந்த நூல் சிலும்பை வெற்றியோடு ஆட்டிக்கொண்டு கூறினாள். அந்த விஷயத்தில் தான் பேசியதே கடைசி வார்த்தையாக இருக்க வேண்டும் என்ற நினைப்போடு, வேறு விஷயத்திற்கு உரையாடலைத் திரும்பினாள். 'இன்று நான் என்ன

கேள்விப்பட்டேன் என்பது உமக்குத் தெரியுமா? பாவம், மேரி பால்கோன்ஸ்கயா நேற்று மாஸ்கோவிற்கு வந்து சேர்ந்தாள். அவள் தன்னுடைய தந்தையை இழந்து விட்டாள் என்பது உமக்குத் தெரியுமா?'

'உண்மையாகவா? அவள் எங்கே இருக்கிறாள்? அவளைப் பார்ப்பதற்குநான் மிகவும் விரும்புகிறேன்' என்றார் பீயர்.

'நேற்று மாலை நான் அவளோடுதான் இருந்தேன். மாஸ்கோவிற்குப் பக்கத்திலுள்ள அவர்களுடைய எஸ்டேட்டிற்கு இன்றோ, நாளை காலையிலோ, அவர்களுடைய மருமகனுடன் போவாள்.'

'நல்லது, அவள் எப்படி இருக்கிறாள்?' என்று பீயர் கேட்டார்.

'அவள் நன்றாய் இருக்கிறாள். ஆனால் துக்கமாய் இருக்கிறாள். அவளை யார் காப்பாற்றியது என்பது உமக்குத் தெரியுமா? அது ஒரு முற்றிலும் மனோகரமான விஷயம். நிக்கலஸ் ராஸ்டோவ். அவளை சூழ்ந்து கொண்டார்கள். அவளைக் கொல்ல விரும்பினார்கள். அவளுடைய ஆட்களில் சிலரைக் காயப்படுத்தினார்கள். அச்சமயம் அவர் அங்கே போய் அவளைக் காப்பாற்றினார்.'

'மற்றொரு காதல் மனோகரம்' என்று பாதுகாப்புப் படை அதிகாரி கூறினார். 'உண்மையிலேயே இம்மாதிரி ஊரை விட்டு ஓடுவது, பழைய கன்னிகைகளுக்கெல்லாம் மணம் முடித்து வைப்பதற்காக ஏற்பாடு செய்யப்பட்டது போலத் தோன்றுகிறது. கட்டிஷே அவர்களில் ஒருவள். இளவரசிபால்கோன்ஸ்கயா மற்றொருவளாய் விளங்குகிறாள்.'

'உமக்குத் தெரியுமா? உண்மையிலேயே அவள் அந்த வாலிபருடன் கொஞ்சம் காதல் கொண்டிருக்கிறாள் என்று நான் நம்புகிறேன்' என்ற பிரஞ்சு மொழியில் ஜூலி சொன்னாள்.

'அபராதம், அபராதம், அபராதம்.'

'ஆனால், ருஷ்ய மொழியில் இதை ஒருவர் எப்படி சொல்ல முடியும்?' என்று ஜூலி கேட்டாள்.

# 10

## 18

பீயர் வீடு திரும்பியபோது, ராஸ்டாப்சைன் அன்று வெளியிட்ட இரண்டு பிரகடனங்களை அவர் பார்த்தார்.

முதல் பிரகடனம், மஸ்கோவை விட்டு மக்கள் போவதை கோமகன் ராஸ்டாப்சைன் தடுத்துவிட்டார் என்ற செய்தி பொய்யானது

என்று கூறியது. அதற்கு மாறாக, சீமாட்டிகளும் வர்த்தகர்களின் மனைவிகளும், நகரத்தை விட்டு வெளியே போவதைக் கண்டு, அவர் சந்தோஷமடைவதாக அதில் சொல்லப்பட்டிருந்தது. ‘அதனால் வதந்திகளும் வீண் பீதிகளும் குறையும்படி நேரலாம். ஆனால், அந்த அயோக்கியன் மாஸ்கோவிற்குள் நுழையமாட்டான் என்பதற்கு, என் உயிரை பந்தயம் வைக்கத் தயார்’ என்று அந்த அறிக்கையில் ராஸ்டாப்சைன் சொல்லியிருந்தார். இந்த வார்த்தைகள், பிரஞ்சுக்காரர்கள் மாஸ்கோவிற்குள் நுழைவார்கள் என்பதை, பீயருக்கு முதல் தடவையாக தெளிவாய் காட்டின. இரண்டாவது பிரகடனம், வியாஜ்மா என்ற இடத்தில் நமது தலைமைக் காரியாலயம் இருப்பதாகவும், கோமகன் விட்ஜென்ஸ்டைன் என்பவர் பிரஞ்சுக்காரர்களைத் தோற்கடித்து விட்டதாகவும், மாஸ்கோவில் பலர் ஆயுதபாணிகளாக இருக்க விரும்புவதால், அவர்களுக்கு வேண்டிய உடைவாள்கள், கைத் துப்பாக்கிகள், துப்பாக்கிகள் ஆகியவை, குறைந்த விலையில் ஆயுத சாலையில் தயாராக இருப்பதாகவும் கூறியது. இந்த பிரகடனத்தின் தொனி, முன்னால் சிக்கைரின் பேச்சுக்கள் போல, கோமாளித்தனமாக இல்லை. இந்த பிரகடனங்களை பீயர் படித்து, ஆழ்ந்து சிந்தனை செய்தார். தம்முடைய, மனப்பூர்வமாகத் தாம் விரும்பிய அந்த பயங்கரமான புயல்-அவரை அறியாமலேயே, அது அவர் உள்ளத்தில் ஒரு பயங்கரத்தைக் கிளப்பிவிட்டது - நெருங்பி வந்துகொண்டிருப்பதாக அவர் உணர்ந்தார்.

‘நான் ராணுவத்தில் சேர்ந்து சேவையில் இறங்கலாமா, அல்லது காத்திருக்க வேண்டுமா?’ என்று அவர், தம்மையே 100-வது தடவையாகக் கேட்டுக்கொண்டார். மேஜை மீது கிடந்த ஒரு சீட்டுக் கட்டை எடுத்து, ‘‘பேஷன்ஸ்’’ என்ற விளையாட்டிற்காக சீட்டுக்களைத் தமது முன்பு பரப்பினார்.

‘இந்த விளையாட்டு சரியாய் வந்து வந்து விட்டால்’ என்று சீட்டுகளை அவர் கலைத்துக் கையில் வைத்துக்கொண்டு, தலையை நிமிர்த்தி சொன்னார். ‘இந்த விளையாட்டு சரியாய் வந்துவிட்டால், அதன் அர்த்தம்... அதற்கு என்ன அர்‘த்தம்?’

அதற்கு என்ன அர்த்தம் என்பதைப் பற்றி அவர் தீர்மானிக்கும் முன்பாகவே, மூத்த இளவரசியின் குரல், வாசலுக்குப் பக்கத்தில் கேட்டது. தான் உள்ளே வரலாமா என்று அவள் கேட்டாள்.

‘அப்படியானால், நான் ராணுவத்திற்குப் போக வேண்டும் என்பதுதான் அதன் அர்த்தம்’ என்று பீயர் தமக்குத் தாமே சொல்லிக்

கொண்டார். 'உள்ளே வா, உள்ளே வா' என்று அவர் இளவரசியிடம் சொன்னார்.

கல்லைப் போன்ற முகமும், நீண்ட இடுப்பும் கொண்ட அந்த இளவரசி மட்டும்தான், பீயரின் வீட்டில் இன்னமும் தங்கி வருகிறாள். அவளுக்கு இளையவர்களான இரு பெண்களுக்கும் திருமணம் ஆகிவிட்டது.

'நான் உம்மிடம் வருவதற்காக மன்னிக்க வேண்டும், மைத்துனரே' என்று ஒரு கண்டிபப்பான, பதட்டமான குரலில் பேசினாள். 'சீக்கிரமாக ஒரு தீர்மானத்திற்கு வர வேண்டுமென்று உமக்குத் தெரியும். என்ன நடக்கப் போகிறது? ஒவ்வொருவரும் மாஸ்கோவை விட்டுப் போய் விட்டார்கள். மக்கள் கலகம் செய்கிறார்கள். நாம் மட்டும் எப்படி இங்கே இருந்துகொண்டு இருக்கிறோம்.'

'அதற்கு மாறாக, விஷயங்கள் எல்லாம் திருப்திகரமாக இருக்கின்றன, என் மைத்துனியே' என்று, அவளிடம் அவர் எப்போதும் வழக்கமாகப் பேசும் கேலிக் குரலில் சொன்னார். அவளுக்கு பாதுகாப்பாளராக தாம் இருப்பதைப் பற்றி, அவர் எப்பொழுதும் சங்கோஜப்பட்டுக் கொண்டிருந்தார்.

'திருப்திகரமாகவா இருக்கிறது, நிச்சயமாகவாது? மிகுந்த திருப்திகரம்தான்! நமது துருப்புகள் எம்மாதிரி சிலாக்கியமாக நடந்து கொள்ளுகின்றன என்பதைப்பற்றி, பார்பாரா ஐவானாவ்னா இன்று என்னிடம் சொன்னாள். நிச்சயமாக, அவையெல்லாம் துருப்புகளுக்குக் கியாதியைக் கொடுக்கக்கூடியவைதான்! மக்கள் கூட, மிகவும் முற்றிலும் கலகக்காரர்களாய் விட்டார்கள். அவர்கள் இப்போதெல்லாம் கீழ்ப்படிவதில்லை. எனது வேலைக்காரி கூட, என்னிடம் முரட்டுத்தனமாக நடந்துகொள்ளுகிறாள். இந்த ரீதியில் போனால், அவர்கள் சீக்கிரம் நம்மை அடிக்க ஆரம்பித்தார்கள். தெருக்களில் ஒருவர் நடக்க முடியாது. இவற்றிற்கெல்லாம் மேலாக, பிரஞ்சுக்காரர்கள் எந்த நேரத்திலும் இங்கே வந்து விடுவார்கள். அப்படியானால், நாம் எதற்காகக் காத்துக் கொண்டிருக்க வேண்டும்? மைத்துனரே, நான் ஒரே ஒரு விஷயத்தைத்தான் உம்மிடம் கேட்கிறேன். பீட்டர்ஸ்பர்க்கிற்கு என்னைக் கொண்டுபோய் விடும்படி ஏற்பாடு செய்யும். எப்படி இருந்தாலும், போனபார்ட்டின் ஆட்சியில் நான் வாழமுடியாது' என்று அந்த இளவரசி சொன்னாள்.

'ஓ, இப்படி வா, என் மைத்துனியே. இந்த விவரங்களை யெல்லாம் நீ யாரிடமிருந்து பெற்றாய்? அதற்கு மாறாக...'

'உம்முடைய நெப்போலியனுக்கு நான் கீழ்ப்படிய முடியாது. மற்றவர்களுக்கு பிரியமிருந்தால், அவர்கள் அப்படி செய்து கொள்ளட்டும்... இதைச் செய்வதற்கு உமக்கு பிரியமில்லையென்றால்.'

'நான் அப்படியே செய்வேன். அதற்கு வேண்டிய உத்தரவை, உடனே நான் கொடுக்கிறேன்.'

கோபம் கொள்ளுவதற்கு யாரும் இல்லாததனால், எரிச்சல் கொண்டிருந்ததாக இளவரசி தோன்றினாள். தனக்குள்ளாகவே முனங்கிக் கொண்டு, ஒரு நாற்காலியில் அமர்ந்தாள்.

'ஆனால், உனக்கு தவறாக சொல்லியிருக்கிறார்கள். நகரத்தில் எல்லாம் அமைதியாக இருக்கிறது. கொஞ்சம் கூட அபாயமில்லை. இதோ பார், இப்பொழுதான், நான் வாசித்துக் கொண்டிருந்தேன்...' என்று அவர் சொல்லி, அந்த பிரகடனத்தைக் காட்டினார். 'மாஸ்கோவிற்குள் எதிரி நுழைய மாட்டான் என்பதற்கு, தம் உயிரைப் பந்தயம் வைப்பதாக, கோமகன் ராஸ்டாப்சைன் இதில் எழுதுகிறார்!'

'ஓ, உம்முடைய அந்த கோமகனா?' என்று இளவரசி துவேஷத்தோடு கூறினாள். அவன் ஒரு ஏமாற்றுக்காரன்; ஒரு அயோக்கியன், கலகம் செய்யும்படி மக்களை அவனே கிளப்பி விட்டான்' இந்த மடத்தனமான பிரகடனங்களில் அவனே, ''யாராய் இருந்தாலும் சரி, அவனுடைய தலை மயிரைப் பற்றி ஜெயிலுக்கு இழுத்து வர வேண்டும்'' என்று எழுதவில்லையா? எவ்வளவு முட்டாள்தனமானது? அவனை யார் பிடித்தாலும், அவனுக்குத்தான் கௌரவமும் புகழும் ஏற்படுமென்று அவன் சொல்லவில்லையா? அவனுடைய இந்த ஏமாற்று வித்தைகள்தான், நம்மை இந்த நிலைமைக்குக் கொண்டுவந்து விட்டிருக்கின்றன. பார்பாரா ஐவானாவ்னா எதையோ பிரஞ்சு மொழியில் பேசியதற்காக, அவளை மக்கள் சூழ்ந்துகொண்டு கொல்லப் போனார்கள் என்று என்னிடம் சொன்னாள்.'

'ஓ, ஆனால் அது அப்படித்தான்... நீ ஒவ்வொன்றையும் மிகப் பிரமாதமாக எடுத்துக் கொள்ளுகிறாய்' என்று பீயர் சொல்லி விட்டு, ''பேஷன்ஸ்'' விளையாட்டிற்காக சீட்டுக்களைப் பரப்பினார்.

அந்த 'பேஷன்ஸ்' விளையாட்டு, அவர் நினைத்தபடியே முடிந்தது. என்றாலும், ராணுவத்தில் பீயர் சேரவில்லை. மக்கள் வெளியேறிவிட்ட அந்த மாஸ்கோவிலேயே, அதே விதமான, பரபரப்பான, முடிவுக்கு வராத, பீதிகொண்ட நிலைமையில், அவர்

இருந்து வந்தார். என்றாலும், ஏதோ ஒரு பயங்கரத்தை மகிழ்ச்சியோடு அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

மறுநாள் மாலையில் இளவரசி அதை விட்டுப் புறப்பட்டாள். பீயரின் தலைமைக் காரியஸ்தர் பீயரிடம் வந்து, அவருடைய பட்டாளத்திற்கு வேண்டிய உபகரணங்களுக்கான பணத்திற்கு ஏற்பாடு செய்ய முடியவில்லையென்றும், அவருடைய எஸ்டேட்டுகளில் ஒன்றை விற்றால்தான் முடியுமென்றும் சொன்னார். ஒரு பட்டாளத்தைத் திரட்டி, அதற்கு வேண்டிய உபகரணங்களைக் கொடுப்பது என்றால், அதனால் பீயருக்கு மிகுந்த நஷ்டம் ஏற்படுமென்று அந்த தலைமைக் காரியஸ்தர் சொன்னார். தமக்கு வந்த புன்சிரிப்பை அடக்குவதற்குக் கஷ்டப்பட்டு, அவர் சொல்லுவதை பீயர் கேட்டுக் கொண்டிருந்தார்.

'நல்லது, அப்படியானால் விற்றுவிடும். வேறு என்ன செய்ய முடியும்? இப்பொழுது நான் பின்வாங்க முடியாது' என்று அவர் சொன்னார்.

ஒவ்வொன்றும், முக்கியமாக அவருடைய சொந்த விவகாரங்கள், மோசமாக ஆக ஆக, பீயர், அதனால் அதிகமாய் மகிழ்ச்சி கொண்டார். ஏனெனில், அவர் எதிர்பார்த்த அந்த மகா பெரிய விபத்து, நெருங்கிக் கொண்டிருக்கிறது. என்பதையே, அவருக்கு அவை காட்டின. அவருக்கு அறிமுகமான ஒருவன் கூட, அந்த நகரத்தில் இல்லை. ஜூலி போய் விட்டாள். இளவரசி மேரியும் அதே மாதிரி போய்விட்டாள். அவருடைய அன்னியோன்னிய மான நண்பர்களில், ராஸ்டோவ்கள் மட்டுந்தான் அங்கே தங்கியிருந்தார்கள். ஆனால் அவர்களைப் பார்க்க அவர் போகவில்லை.

தமது சிந்தனைகளை மாற்றுவதற்காக, வாரான்ட்சோவா என்ற கிராமத்தில் ஏற்பாடு செய்துகொண்டிருந்த பெரிய பலூனைப் பார்ப்பதற்காக, அன்று அவர் புறப்பட்டுப் போனார். எதிரிகளை நாசமாக்குவதற்காக, லெப்பிச் என்பவர் ஒரு பெரிய பலூனைத் தயார் செய்து கொண்டிருந்தார். மறுநாள் அதைப் பறக்க விடுவதற்கு ஏற்பாடு செய்துகொண்டிருந்தார்கள். ஆனால், இன்னமும் அது தயாராகவில்லை. சக்கரவர்த்தியின் விருப்பப்படி அது தயாராவதாக பீயர் அறிந்தார். கோமகன் ராஸ்டாப்சைனுக்கு கீழ்க்கண்டபடி சக்கரவர்த்தி எழுதியிருந்தார்.

'லெப்பிச் தயாரானதும், அவருடைய வாகனத்திற்காக நம்பிக்கையான, புத்திசாலிகளான மனிதர்களை ஏற்பாடு செய்து கொடுக்க வேண்டும். ஜெனரல் குட்டுஜோவுக்கு இதை

அறிக்கும்படி ஒரு தூதரை அனுப்ப வேண்டும். இதைப் பற்றி முன்பே அவருக்கு நான் சொல்லியிருக்கிறேன்.

'ஜாக்கிரதையாக இருக்கும்படி லெப்பிச்சுக்கு நீர் சொல்லுவீராக. முதல் தடவையாக அவர் கீழே இறங்கும்போது, தவறிப் போய் எதிரிகளிடம் அவர் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது. அவருடைய நடவடிக்கைகளை சேனாதிபதியின் நடவடிக்கைகளோடு, கலந்து செய்ய வேண்டியது முக்கியமான விஷயமாகும்.'

வாரான்ட்சோவாவிலிருந்து வீட்டிற்குத் திரும்பும் வழியில், பாலோட்னோ சதுக்கத்தை பீயர் தாண்டி வந்தபோது, லோப்னோ சதுக்கத்திற்கு முன்பாக, ஒரு பெரிய கூட்டம் கூடி நிற்பதைக் கண்டார். தமது வண்டியை நிறுத்தி அங்கே இறங்கினார். ஒரு பிரஞ்சு சமையல்காரனை ஒற்றன் என்று குற்றம் சாட்டி, கசையடி தண்டனை கொடுத்தார்கள். அந்த தண்டனை அப்பொழுதுதான் முடிந்தது. பெஞ்சின் மீது கட்டப்பட்டிருந்த அடிபட்டவனை, அடித்தவன் அவிழ்த்துவிட்டுக் கொண்டிருந்தான். நீல நிற காலுறையும், பச்சைச் சட்டையும், சிகப்பு கிருதாவும் கொண்ட அந்த தடித்த அடிபட்ட மனிதன், பரிதாபகரமாக முனங்கிக் கொண்டிருந்தான். மற்றொரு குற்றவாளி, ஒல்லியானவன்; முகம் வெளிறி பக்கத்தில் நின்று கொண்டிருந்தான். அவர்களுடைய முகங்களிலிருந்து, அவர்கள் பிரஞ்சுக்காரர்கள் என்பது தெரிந்தது. அந்த ஒல்லிய பிரஞ்சுக்காரனின் முகத்தில் தோன்றியபோல, பீதியும் கஷ்டமும் கொண்ட தோற்றங்களோடு பீயர் அந்த கூட்டத்திற்குள் நுழைந்து தள்ளிக்கொண்டு போனார்.

'அது என்ன? அவன் யார்? எதற்காக இந்த தண்டனை?' என்று அவர் கேட்டுக் கொண்டிருந்தார்.

அங்கு கூடி நின்ற அதிகாரிகளும், பிரஜைகளும், கடைக்காரர்களும், விவசாயிகளும், மேல் சட்டைகளையும் சல்லாடைகளும் அணிந்த பெண்களும், தங்களுக்கு முன்னால் லோப்னோ சதுக்கத்தில் நடந்து கொண்டிருந்ததில் ஆவலோடு கவனத்தை செலுத்தியிருந்தபடியால், பீயருக்கு ஒருவரும் பதில் சொல்லவில்லை. அந்த தடித்த மனிதன் எழுந்து, முகம் சுளித்து, தோள்களைக் குலுக்கிக்கொண்டு, உறுதியாக இருப்பது போன்ற தோற்றத்தைக் காட்ட முயற்சித்து, சுற்றி நின்றவர்களைக் கவனிக்காமல், தனது சட்டையை இழுத்து விட ஆரம்பித்தான். திடீரென்று அவனுடைய உதடுகள் நடுங்கின. நல்ல ஆரோக்கியமுள்ள, வயது வந்த மனிதர்கள் கதறுவதைப் போல, அவன் கதற ஆரம்பித்தான். ஆனால், அப்படிச் செய்வதற்காக, தன்

மீது அவன் கோபம் கொண்டிப்பது போலவும் தோன்றியது. கூட்டத்தில் நின்ற மக்கள் பலத்த சப்தத்தில் பேச ஆரம்பித்தார்கள். தங்களுடைய இரக்க உணர்ச்சகிளை அமுக்குவதற்காகவே, அம்மாதிரி அவர்கள் பேசியதாக பீயருக்குத் தோன்றியது.

'யாரோ ஒரு இளவரசருக்கு அவன் சமையல்காரன்'

'ஏ, திருவாளரே, ஒரு பிரஞ்சுக்காரனுக்கு ருஷ்ய பச்சடி, புளிப்பாய் இருப்பதுபோலத் தோன்றுகிறது. அவனுடைய பற்களை இறுக்கி மூடிக் கொண்டான்' என்று, முகத்தில் சுருக்கம் விழுந்த ஒரு குமாஸ்தா, பீயருக்குப் பின்னால் நின்றவன், அந்த பிரஞ்சுக்காரன் கதற ஆரம்பித்தவுடன் கூறினான்.

தன்னுடைய தமாஷை அங்கிருந்தவர்கள் ஆமோதிப்பார்கள் என்ற நம்பிக்கையோடு, அந்த குமாஸ்தா தன்னைச் சுற்றி நோக்கினான். சிலர் சிரிக்க ஆரம்பித்தார்கள். மற்றவர்கள், அந்த அடிக்கிறவன் மற்றொருவனுடைய உடைகளைக் கழற்றிக் கொண்டிருப்பதை, பீதியோடு நோக்கிக் கொண்டிருந்தார்கள்.

பீயரின் தொண்டை அடைத்தது. அவருடைய முகம் சுளித்தது. வேகமாக அவர் திரும்பி, தமக்குள் எதையோ சொல்லிக்கொண்டு, தமது வண்டிக்கு சென்று அமர்ந்தார். அவர்கள் வண்டியில் போய்க்கொண்டிருந்தபோது, அவர் உடல் பதறியது. வாய்விட்டு பல தடவைகள் எதையோ சொல்லிக்கொண்டிருந்தார். அதனால் அவருடைய வண்டிக்காரன் அவரைப் பார்த்து, 'என்ன செய்யவேண்டும்' என்று கேட்டான்.

'நீ எங்கே போகிறாய்?' என்று அவனைப் பார்த்து பீயர் கூச்சலிட்டார். அவன் லுபியாங்கா தெருவுக்கு ஓட்டிக் கொண்டிருந்தான்.

'நீங்கள் உத்தரவிட்டபடி, கவர்னல் மாளிகைக்குப் போகிறேன்' என்று வண்டிக்காரன் பதில் அளித்தான்.

'முட்டாள்! மடையன்,' என்று பீயர் கூச்சலிட்டு, தமது வண்டிக்காரனைத் திட்டினார். அம்மாதிரி அவர் செய்வது ஒரு அபூர்வமான விஷயம். 'வீட்டிற்குப் போ என்ற நான் உன்னிடம் சொன்னேனே! மடையனே, வேகமாய் ஓட்டு' என்று சொல்லிவிட்டு 'இதை விட்டு, இன்றே நான் போக வேண்டும்' என்று தமக்குள் முனங்கினார்.

சித்திரவதை செய்யப்பட்ட அந்த பிரஞ்சுக்காரனையும், லோப்னோ சதுக்கத்தில் கூடி நின்ற அந்த கூட்டத்தையும் பீயர் பார்த்த பின்பு, மாஸ்கோவில் இனி தங்கக்கூடாது என்று நிச்சயமாக

முடிவு செய்தார். அன்றே, ராணுவத்திற்கு போகவேண்டுமென்று நிச்சயம் செய்தார். இந்த விஷயத்தை வண்டிக்காரனிடம் தாம் சொல்லிவிட்டதாகவோ, அல்லது வண்டிக்காரன் இவற்றைத் தானாக அறிந்திருக்க வேண்டுமென்றோ அவருக்குத் தோன்றியது.

வீட்டிற்குப் போனதும், அவருடைய தலைமை வண்டிக்காரனான எப்ஸ்டாபி என்பவனை அழைத்தார். அவனுக்கு எல்லா விஷயங்களும் தெரியும். எது வேண்டுமானாலும் செய்வான். மாஸ்கோ பூராவாக அவனைத் தெரியும். மஜாய்ஸ்க் என்ற இடத்திலுள்ள ராணுவத்திற்கு, அன்றிரவே அவர் புறப்படவேண்டுமென்றும், அவருடைய சேணம் அணிந்த குதிரைகளை அங்கே அனுப்பவேண்டுமென்றும், அவர் அவனிடம் உத்தரவிட்டார். இவற்றையெல்லாம் அன்றைய தினமே ஏற்பாடு செய்ய முடியாது. இதை எப்ஸ்டாபி அவருக்கு எடுத்துக் காட்டினான். அதன் மீது தமது பிரயாணத்தை மறு நாள் வரை ஒத்திவைக்கும்படி பீயருக்கு ஏற்பட்டது. மாற்றுக் குதிரைகளை முன்னதாக அனுப்பி வைப்பதற்கு, இந்த அவகாசம் வேண்டியிருந்தது.

மழை பெய்த பின்பு, 24-ந் தேதியன்று கால நிலைமை தெளிவாயிருந்தது. டின்னருக்குப் பின்னால், மாஸ்கோவை விட்டு பீயர் புறப்பட்டார். பெர்குஷ்காவா என்ற இடத்தில், அன்றிரவு குதிரைகளை மாற்றிக் கொண்டிருந்தபோது, அன்று மாலை ஒரு பெரிய போர் நடந்ததாகக் கேள்விப்பட்டார். (இது தான் ஷெவார்டினா போர் ஆகும்) பீரங்கி சுட்டதினால், பெர்குஷ்காவாவில் பூமி அதிர்ந்ததென்றும் அவருக்குச் சொன்னார்கள். அந்தப் போரில் யார் வெற்றி பெற்றார்கள் என்ற அவருடைய கேள்விகளுக்கு, ஒருவராலும் பதில் சொல்ல முடியவில்லை. அடுத்த நாள் உதய காலத்தில், மஜாய்ஸ்க் என்ற இடத்தை பீயர் நெருங்கிக் கொண்டிருந்தார்.

மஜாய்ஸ்க்கில் ஒவ்வொரு வீட்டிலும் சிப்பாய்கள் குடியிருந்தார்கள். அவருடைய வண்டிக்காரனையும் குதிரைக் காரனையும் ஓட்டலில் சந்தித்தார். அந்த ஓட்டலில் அவர் தங்குவதற்கு ஒரு அறைகூடக் கிடைக்கவில்லை. அது நிறைய அதிகாரிகள் இருந்தார்கள்.

மஜாய்ஸ்கிலும், அதற்கு அப்புறமும், துருப்புகள் தங்கியோ, அல்லது பிரயாணம் செய்துகொண்டோ இருந்தார்கள். கோசாக்குகள், கால் நடை சிப்பாய்கள், குதிரை சிப்பாய்கள், வண்டிகள், வெடிமருந்து வண்டிகள், பீரங்கிகள் ஆகியவை எங்கும்

காணப்பட்டன. அவ்ரால் முடிந்த வரையில் பீயர் வேகமாக முன்னால் போனார். மாஸ்கோவை விட்டு அதிகமாய் வரவர, அவர் துருப்புகளின் கூட்டத்தில் அதிகமாய் நுழைந்து போக வேண்டியதாயிருந்தது. அமைதியற்ற பரபரப்பு அவரை ஆட்கொண்டது. இதற்கு முன்னால் அவர் அனுபவித்திராக, ஒரு புதிய, மகிழ்ச்சியான உணர்ச்சியும் அவரை ஆட்கொண்டது. சக்கரவர்த்தியின் விஜயத்தின்போது, ஸ்லாபோடா அரண்மனையில் அவருக்கு எம்மாதிரி உணர்ச்சி ஏற்பட்டதோ, அதே மாதிரி உணர்ச்சி இப்பொழுது தோன்றியது. அதாவது, எதையாவது பொறுப்பேற்கவேண்டிய அவசியத்தையும், எதையாவது தியாகம் செய்ய வேண்டிய அவசியத்தையும் அவர் உணர்ந்தார். இப்பொழுது ஒரு சந்தோஷமான உள்ளுணர்ச்சியை அவர் அனுபவித்தார். அதாவது, மக்களின் மகிழ்ச்சிக்கு ஆதாரமான வாழ்க்கையில் வேண்டிய சுகங்கள், செல்வங்கள், ஆகியவை எல்லாம் மற்றொரு விஷயத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, வெறும் குப்பைகள் என்றும், அவற்றை வீசி எறிவது ஒரு மகிழ்ச்சியென்றும் அவர் நினைத்தார்... எதோடு ஒப்பிடுவது? பீயரால் அதைச் சொல்ல முடியவில்லை. யாருக்காக அம்மாதிரி ஒவ்வொன்றையும் தியாகம் செய்வது அவ்வளவு மகிழ்ச்சியாயிருக்கிறது என்பதை, அவரால் நிச்சயம் செய்ய முடியவில்லை. எதைத் தியாகம் செய்ய வேண்டும் என்ற பிரச்னையைப் பற்றி அவர் அச்சமயம் நினைக்கவில்லை. தியாகம் செய்யவேண்டும் என்ற செய்கையே, அவருக்கு ஒரு புதிய, மகிழ்ச்சியான உணர்ச்சியைக் கொடுத்தது.




ஆகஸ்டு 24-ந் தேதி, ஷெவார்டினா அரண்களில் போர் நடந்தது. 25-ந் தேதி அன்று இரு பக்கங்களிலிருந்தும் ஒரு குண்டு கூட சுடப்படவில்லை. 26-ந் தேதி பாராடினோ யுத்தம் நடைபெற்றது.

ஏன், எதற்காக ஷெவார்டினாவிலும் பாராடினோவிலும் போர் தொடுக்கப்பட்டு, அதை ஒப்புக் கொண்டார்கள்? பாராடினோவில் எதற்காக போர் செய்தார்கள்? அப்படிச் செய்ததில் பிரஞ்சுக்காரர்களுக்கோ, ருஷ்யர்களுக்கோ, கொஞ்சம் கூட அர்த்தமே இல்லை. அதனால் உடனே ஏற்பட்ட பலன் என்னவென்றால், அம்மாதிரி ஏற்பட்டு தான் ஆகவேண்டும்; ருஷ்யர்களைப் பொறுத்த வரையில் மாஸ்கோவின் நாசத்திற்கு சமீபமாக நாம் கொண்டு வரப்பட்டோம்;

இந்த உலகத்தில் எதையும்விட அதிகமாக நாம் பயப்பட்டது அது ஒன்று தான். பிரஞ்சுக்காரர்களைப் பொறுத்த வரையில், உடனே ஏற்பட்ட பலன் என்னவென்றால், அவர்களுடைய முழு ராணுவத்தையும் அழிப்பதற்கு, அவர்கள் இன்னமும் சமீபமாகக் கொண்டு வரப்பட்டார்கள்; இந்த உலகத்தில் வேறு எதையும் விட அதையே அவர்கள் அதிகமாய் பயந்து கொண்டிருந்தார்கள். சண்டையில் முடிவு எப்படியிருக்கும் என்பது, தெளிவாய்த் தோன்றிய விஷயம். என்றாலும், நெப்போலியன் அந்தப் போரைத் தொடுத்தார். குட்டுஜோவ் அதை ஒப்புக்கொண்டார்.

காரணங்களை அறிந்து கமாண்டர்கள் நடப்பவர்களாயிருந்தால், 1300 மைல்கள் முன்னேறி ஒரு சண்டையைத் தொடுத்து, அதன் மூலம் தனது ராணுவத்தில் கால் பங்கு பேரை இழக்கக் கூடிய சந்தர்ப்பமிருந்தால், அது நிச்சயமாக நாசத்திலேயே கொண்டுவிடும் என்பதை, நெப்போலியன் தெளிவாய் அறிந்திருக்க வேண்டும். அதேமாதிரி, சண்டையை ஒப்புக்கொண்டு, தமது ராணுவத்தில் கால் பகுதி பேரை இழப்பதற்கு சந்தர்ப்பம் இருந்தால், நிச்சயமாக மாஸ்கோவை இழந்துவிடவேண்டும் என்பதும் குட்டுஜோவுக்குத் தெரிந்திருக்க வேண்டும். குட்டுஜோவைப் பொறுத்த வரையில், இது வெகு தெளிவான கணக்கு. சதுரங்கம் விளையாடும்பொழுது, எனக்கு ஒரு ஆள் குறைவாயிருக்கிறது. நான் பரிவர்த்தனை செய்துகொண்டே போனால், நிச்சயமாகத் தோற்றுப்போவேன். ஆகவே, பரிவர்த்தனை செய்யக்கூடாது. எனக்கு எதிராக விளையாடுபவனிடம் 16 மனிதர்கள் இருந்து, என்னிடம் 14 மனிதர்கள் இருந்தால், நான் அவனை விட எட்டில் ஒரு பங்கு தான், பலம் குறைந்தவனாய் இருப்பேன். ஆனால், 13 பேரை நான் பரிவர்த்தனை செய்தால், அவன் என்னை விட மூன்று மடங்கு அதிக பலமுள்ளவனாக இருப்பான்.

பாராடினோ போருக்கு முன்பாக, பிரஞ்சுக்காரரின் பலத்தோடு நமது பலத்தை ஒப்பிட்டால், உத்தேசமாக அவர்களிடம் 6 பங்கும், நம்மிடம் 5 பங்கும் இருந்தன. ஆனால், அந்தப் போருக்குப் பின்பு, நம்மிடம் ஒரு பங்கும், அவர்களிடம் இரண்டு பங்கும் இந்தன. அதாவது, போருக்கு முன்பாக, நம்மிடம் 100 ஆயிரம் துருப்புகளும், எதிரிகளிடம் 120 ஆயிரம் துருப்புகளும் இருந்தன. போருக்குப் பின்னால், நம்மிடம் 50 ஆயிரமும், அவர்களிடம் 100 ஆயிரமும் இருந்தன. இருந்தாலும், அனுபவமும் புத்தி நுட்பமுமுள்ள குட்டு ஜோவ், அந்தப் போரை ஒப்புக் கொண்டார். ஒரு மேதையான கமாண்டர் என்று சொல்லப்பட்ட நெப்போலியன், தமது படையில்

கால் பகுதி பேரை இழப்பதற்கும், தமது போக்கு வரத்துப் பாதையை இன்னமும் அதிகமாக நீடிப்பதற்கும் காரணமாக யுத்தத்தைத் தொடுத்தார். வீயன்னாவை ஆக்கிரமித்ததோடு, ஒரு படையெடுப்பை நெப்போலியன் முன்னால் முடித்துக்கொண்டார். அதே மாதிரி, மாஸ்கோவை ஆக்கிரமிப்பதோடு, அவருடைய படையெடுப்பை முடிப்பதாக இருந்தார் என்று சொல்லப் படலாம். ஆனால், சாட்சியங்கள் அதற்கு நேர் விரோதமாக இருக்கின்றன. நெப்போலியனுடைய சரித்திர ஆசிரியர்களே, ஸ்மாலென்ஸ்கிற்கு அப்புறம் முன்னேறிப் போவதை நிறுத்த அவர் விரும்பினார் என்று சொல்லுகிறார்கள். போக்கு வரத்துப் பாதையை நீடிப்பதனால் உண்டான அபாயத்தை அவர் அறிந்திருந்தார் என்றும், அவருடைய படையெடுப்பு மாஸ்கோவை ஆக்கிரமிப்பதோடு நின்று விடாதென்பதை அறிந்திருந்தார் என்றும் சொல்லுகிறார்கள். ஏனெனில், பட்டணங்களை எந்த நிலைமையில் ருஷ்யர்கள் அவருக்கு விட்டு விட்டுப் போகிறார்கள் என்பதை, நெப்போலியன் ஸ்மாலென்ஸ்கில் பார்த்தாராம். ஆனால், சாமாதானத்திற்காக பேச்சு வார்த்தை நடத்துவதற்கு, அவர் திரும்பத் திரும்ப அறிக்கைகள் வெளியிட்ட போதிலும், அவருக்கு ஒரு பதில் கூட வரவில்லையாம்.

பாராடினோவில் போர் தொடுத்ததையும், அதை ஒப்புகொண்டதையும் பொறுத்த வரையில், குட்டுஜோவ் தம்மையறியாமலேயே, பகுத்தறிவுக்கு விரோதமாகவே நடந்து கொண்டார். நடந்துபோன விஷயங்களை வைத்துக் கொண்டு, ஜெனரல்களின் மேதையையும் தூரதிருஷ்டியையும் காட்டுவதற்காக, தந்திரமாக ஆதாரங்களை சரித்திர ஆசிரியர்கள் பின்னால் தயாரித்துக்கொண்டார்கள். ஆனால், அந்த ஜெனரல்களோ சரித்திரத்தின் கண் இல்லாத ஆயுதங்கள். ஆகவே அவர்கள் சரித்திரத்தின் அடிமைகளாகப்பட்டு தங்களை அறியாமலேயே நடந்து கொண்டார்கள்.

நமது முன்னோர்கள் வீர காவியங்களை நமக்கு விட்டு வைத்திருக்கிறார்கள். அந்தக் கவிதைகளில் வீரர்களாய் வரகிறவர்கள் தான், அந்த கதைகளுக்கு முழு வேகத்தையும் கொடுக்கிறார்கள். அம்மாதிரியான நம்முடைய பிரபலமான சரித்திரங்கள் அர்த்தமற்றவை என்பதை நாம் அறிந்துகொள்ள, இன்னமும் நம்மைப் பழக்கிக்கொள்ள முடியவில்லை.

பாராடினோ போரும், அதற்கு முன்னால் நடந்த ஷெவார்டினா போரும், எப்படி நடந்தன என்ற கேள்வியைப் பற்றியும், ஒரு

நிச்சயமான, எல்லாரும் அறிந்த, ஆனால் முற்றிலும் பொய்யான அபிப்பிராயம் இருந்து வருகிறது. அந்த விஷயத்தைப் பற்றி எல்லா சரித்திர ஆசிரியர்களும், பின்வருமாறு வருணிக்கிறார்கள்:

'ஸ்மாலென்ஸ்கிலிருந்து ருஷ்ய துருப்புகள் பின்வாங்கி வரும் போது, ஒரு பெரிய போர் தொடுப்பதற்காக ஒரு நல்ல இடத்தைத் தேடி வந்தார்கள் என்றும், பாராடினோ அம்மாதிரி ஒரு நல்ல இடமாக இருந்ததைக் கண்டார்கள் என்றும், அவர்கள் சொல்லுகிறார்கள்.

'மாஸ்கோவிலிருந்து ஸ்மாலென்ஸ்கிற்குப் போகிற பிரதான ரஸ்தாவில், இடது பக்கமாக, அநேகமாக பாராடினோவிலிருந்து உட்டைட்ஸிற்கு, அநேகமாக நேர் செங்கோணத்தில், முன்னதாகவே அரண்கள் வெட்டி, ருஷ்யர்கள் பாதுகாப்பு செய்திருந்தார்கள் என்றும்,' அந்த இடத்திலேயே போர் நடந்தது என்றும் அவர்கள் சொல்லுகிறார்கள்.

'இந்த வியூகத்திற்கு முன்னால், ஷெவார்டினா குன்றுக்கு மேலே, ஒரு பாதுகாக்கப்பட்ட காவல் முகாமும் அமைத்திருந்தார்கள் என்றும், அதிலிருந்து எதிரிகளின் நடமாட்டத்தைக் கவனித்து வந்தார்கள் என்றும் அவர்கள் சொல்லுகிறார்கள். 24-ந் தேதியன்று, இந்த காவல் முகாமை நெப்போலியன் தாக்கிக் கைப்பற்றியதாகவும், 26-ந் தேதியன்று பாராடினோவில் வியூகமாய் அமைந்திருந்த முழு ருஷ்ய ராணுவத்தையும் அவர் தாக்கியதாகவும் நமக்குச் சொல்லுகிறார்கள்.'

இம்மாதிரி, சரித்திரங்கள் சொல்லுகின்றன. ஆனால், அது முற்றிலும் தவறு. இந்த விஷயத்தை அறிந்து கொள்ள யாராவது முயற்சி செய்தால், சுலபமாக அவர்கள் உண்மையை அறிந்து கொள்ளலாம்.

ருஷ்யர்கள் ஒரு நல்ல இடத்தைத் தேடிக் கண்டு பிடிக்கவில்லை. அதற்கு மாறாக, பாராடினோவை விட சிலாக்கியமான இடங்களை எல்லாம் அவர்கள் கடந்து, பின்வாங்கிக்கொண்டிருந்தார்கள். அந்த இடங்களில் ஒன்றில்கூட தங்குவதற்காக அவர்கள் நிற்கவில்லை. ஏனென்றால், தாம் தேர்ந்தெடுக்காத ஒரு போர்க்களத்தில், ருஷ்யர்கள் தங்கியிருப்பதை குட்டுஜோவ் விரும்பவில்லை. தவிரவும், ஒரு யுத்தம் செய்யவேண்டும் என்ற மக்களின் கோரிக்கை இன்னமும் பலமாக வெளியாகவில்லை. மேலும், மிலாராடாவிச் இன்னமும் தமது பாதுகாப்புப் படையோடு வந்து சேரவில்லை. இம்மாதிரி இன்னும் பல காரணங்கள் இருந்தன. பாராடினோவைவிட, அவர்கள் கடந்து சென்ற பல இடங்கள்

இன்னமும் பலமானவைகளாய் இருந்தன. போர் நடந்த பாராடினோவின் அமைப்பு. அவ்வளவு பலமாய் இல்லை. ருஷ்ய ஏகாதிபத்தியத்தில் உள்ள பல 'இடங்களைப் போலவே, பாராடினோவும் ஒன்றாகும்.

பாராடினோவில் இடது பக்கத்தை ருஷ்யர்கள் பாதுகாப்பு அரண் செய்யவில்லை. செங்கோணத்திலும் பிரதான ரஸ்தாவிற்கு இடது பக்கத்திலும் இருந்த இடத்தை, அவர்கள் அரண்களால் பாதுகாக்கவில்லை. (அதாவது, அந்த யுத்தம் நடந்த இடத்தில், 1812-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 25-ந் தேதி வரையில், அந்த இடத்தில் ஒரு போரை நடத்தவேண்டி இருக்குமென்று அவர்கள் நினைக்கவில்லை. 25-ந் தேதி வரையில், அரண்கள் எதுவும் அங்கே வெட்டப்படவில்லை என்பதே, இதைக் காட்ட போதுமானது. 25-ந் தேதியன்றும், 26-ந் தேதியன்றும் அவர்கள் ஆரம்பித்த அரண் வேலைகள் முடியவில்லை என்பதிலிருந்தும், ஷெவார்டினா அரண்களின் நிலைமையிலிருந்தும் இதைக் கண்டு கொள்ளலாம். போரை ஒப்புக்கொண்ட இடத்திற்கு முன்பாக, அந்த அரண்கள் அமைந்திருந்ததும், முற்றிலும் புத்தியற்ற வேலையாகும். மற்ற முகாம்களைவிட, அவற்றை மட்டும் எதற்காக பலமாய்' அரண்களால் அமைக்க வேண்டும்? அதைப் பாதுகாப்பதற்காக 24-ந் தேதி இரவில், வெகு நேரம் வரையில் எதற்காக எல்லா பலத்தையும் வீணாக்கி, 6000 பேர்களையும் தியாகம் செய்யவேண்டும்? எதிரியின் நடமாட்டங்களை அறிவதற்கு, ஒரு கோசாக் காவல் படை போதுமானது. போர் எங்கே நடந்ததோ, அந்த இடத்தில் போர் நடக்கும் என்பதை முன்னதாக அறிந்திருக்கவில்லை என்பதைக் காட்டுவதற்கும், ஷெவார்டினா அரண்கள் அந்த இடத்திற்கு ஒரு காவல் முகாமாய் இல்லை என்பதைக் காட்டுவதற்கும் ஆதாரங்கள் இருக்கின்றன. அவையாவன: 25-ந் தேதி வரையில் பார்க்ளே டி. டாலியும், பாக்ரேஷனும், ஷெவார்டினா அரண்கள் தான் வியூகத்தின் இடது பக்கவாட்டாக இருக்குமென்று நினைத்திருந்தார்கள். போருக்குப் பின்பு, அவசரமாக எழுதிய தமது அறிக்கையிலும், ஷெவார்டினா அரண்களை வியூகத்தின் இடது பக்கவாட்டாக, குட்டுஜோவ் குறிப்பிட்டிருக்கிறார். வெகு காலத்திற்குப் பின்னால், பாராடினோ போரை பற்றி சாவகாசமாக எழுதியபோதுதான், அந்தத் தவறான, அசாதாரணமான விஷயம் உற்பத்தி செய்யப்பட்டது. (ஒரு சேனாதிபதியின் தவறுகளை சரியானவை என்று காட்டுவதற்காகவும் அவர் தவறே செய்யாதவர் என்று காட்டுவதற்காகவும் அது உற்பத்தி செய்யப்பட்டிருக்கலாம்) அதாவது, ஷெவார்டினா அரண்கள், ஒரு காவல் முகாமாய்

இருந்ததென்றும் - உண்மையில் இடது பக்கவாட்டில் அது ஒரு பாதுகாக்கப்பட்ட இடமாயிருந்தது. - அந்த பாராடினோ போரானது, முன்பாகவே தேர்ந்தெடுக்கப்பட்ட, பாதுகாக்கப்பட்ட ஒரு இடத்தில் தான் நடந்தது என்றும் சொல்லப்பட்டது. உண்மையில் அந்த இடம் முற்றிலும் எதிர்பாராத இடம். அங்கே அரண்கள் பாதுகாப்பே கிடையாது.

விஷயம் இதுதான். காலாச்சா என்ற நதியை அடுத்தாற்போல ஒரு இடம் தேர்ந்தெடுக்கப்பட்டது - அந்த நதி, பிரதான ரஸ்தாவை செங்கோணத்தில் கடக்கவில்லை; ஒரு நெருங்கிய கோணத்தில் அது கடக்கிறது - ஆகவே, இடது பக்கவாட்டு ஷெவார்டினோவில் அமைந்தது; நோவோ என்ற கிராமத்திற்கு பக்கத்தில் வலது பக்கவாட்டு அமைந்தது; மத்திய இடமான பாராடினோ என்ற இடம், காலாச்சா நதியும் ஓய்னா என்ற நதியும் சங்கமமாகிற இடத்தில் இருந்தது.

யுத்தம் எப்படி நடந்தது என்பதைப் பற்றி நினைக்காமல், பாராடினோ யுத்தம் களத்தை ஒருவர் பார்வையிட்டால், இந்த யுத்தகளம் காலாச்சா நதியினால் பாதுகாக்கப்பட்டு இருப்பதைக் காணலாம். ஸ்மாலென்ஸ்க் ரஸ்தா வழியாக மாஸ்கோவிற்கு முன்னேறி வரும் எதிரியைத் தடுக்கும் நோக்கத்தோடு இருக்கும் நமது துருப்புகளுக்கு, இந்த பாதுகாப்பான இடம் தெளிவாய்த் தோன்றியது.

நெப்போலியன் 24-ந் தேதியன்று வாலாவாவிற்கு சவாரி போன போது, (அவர் செய்ததாக சரித்திர புஸ்தகங்கள் சொல்லுகிறபடி) உட்டைட்சாவிலிருந்து பாராடினோ வரை, ருஷ்ய அணிவகுப்பு இருந்ததை அவர் பார்க்கவில்லை. (அம்மாதிரி அச்சமயம் இல்லாதபடியால் தான், அவரால் பார்க்க முடியவில்லை) அல்லது ருஷ்ய ராணுவத்தின் காவல் முகாமையும் அவர் பார்க்கவில்லை. ருஷ்ய ராணுவத்தின் பின் பகுதியைத் தொடர்ந்து அவர் வந்த போது, ருஷ்ய ராணுவத்தின் இடது பக்கவாட்டில்-ஷெவார்டினா அரண்களில் - அவர் வந்து சேர்ந்தார். ருஷ்யர்கள் எதிர்பாராத விதமாக, அவர் தமது ராணுவத்தை காலாச்சா நதியைக் கடந்து போகும்படி செய்தார். ஒரு பொதுவான போராட்டத்தை ஆரம்பிப்பதற்கு, ருஷ்யர்களுக்கு அவகாசம் இல்லாதபடியால், தங்களுடைய அணிவகுப்பின் இடது சாரியைப் பின்வாங்கினார்கள். அந்த இடத்தில் அவர்கள் தங்கியிருக்க வேண்டுமென்று விரும்பினார்கள். ஆனால், இப்பொழுது ஒரு புதிய இடத்திற்குப் போக வேண்டியதாய் இருக்கிறது. இதை

அவர்கள் எதிர்பார்க்கவில்லை. ஆகவே, அந்த புதிய இடத்தை அரண்களால் பாதுகாப்புகள் செய்வதற்கும் அவகாசம் இல்லை, பிரதான ரஸ்தாவின் இடது பக்கமான காலாச்சார நதியைக் கடந்து, தமது துருப்புகளை மாற்றியதனால் வரப்போகும் போரை வலது பக்கத்திலிருந்து இடது பக்கத்திற்கு நெப்போலியன் மாற்றிவிட்டார். உட்டைட்சா, செமியோனாவ்ஸ்க், பாராடினோ ஆகிய இடங்களுக்கு மத்தியிலுள்ள மைதானத்தில், போர்க்களம் அமையும்படி' அவர் செய்தார். ருஷ்யாவிலுள்ள வேறு எந்த மைதானத்தையும் விட, இந்த மைதானம் எந்த விதத்திலும் சாதகமானதல்ல - அந்த இடத்தில் தான், ஆகஸ்டு 26-ந் தேதியன்று அந்த முழு யுத்தமும் நடைபெற்றது.

24 -ந் தேதியன்று மாலை, காலாச்சா நதிக்கு நெப்போலியன் சவாரி போய் இருக்கா விட்டால், அந்த அரண்கள் மீது உடனே தாக்குதல்களை ஆரம்பிக்க வேண்டுமென்று அவர் உத்தரவு கொடுத்து இருக்காவிட்டால், மறு நாள் காலையில் அந்த தாக்குதல்களை ஆரம்பித்திருந்தால், ஷெவார்டினா அரண்கள் தான் நமது வியூகத்திற்கு இடது பக்கவாட்டாக அமைந்திருக்கும் என்பதில், ஒருவருக்கும் சந்தேகம் ஏற்பட்டிருக்காது. அந்த யுத்தமும், நாம் எங்கு எதிர்பார்த்தோமோ, அங்கு தான் நடைபெற்றிருக்கும். அப்படியானால், நமது இடது பக்கவாட்டான ஷெவார்டினா அரண்களை, இன்னும் பிடிவாதமாக நாம் பாதுகாத்திருக்க முடியும். நெப்போலியனை நாம் மத்தியிலோ, வலது பாகத்திலோ தாக்கியிருப்போம். அந்த பெரிய போர், நாம் எதிர்பார்த்த பாதுகாப்புகள் அமைந்திருந்த இடத்திலேயே 25-ந் தேதியன்று நடந்திருக்கும். ஆனால், அந்த நமது இடது பக்கவாட்டை, மாலையிலேயே நமது பின் பகுதி துருப்புகள் பின்வாங்கி பின்பு தாக்க ஆரம்பித்து விட்டார்கள். (அதாவது, கிரிட்னியோவா போருக்குப் பின்னால் உடனேயே ஆரம்பித்தபடியால்) ருஷ்ய கமாண்டர்கள் ஒரு பெரிய யுத்தத்தை 24-ந் தேதியன்று மாலையில் ஆரம்பிக்க விரும்பாமல் இருந்தபடியால், அல்லது அவர்களுக்கு அவகாசம் இல்லாதபடியால், பாராடினோ போரின் முதலாவதான, முக்கியமானதான நடவடிக்கை, 24-ந் தேதியன்றே தோற்றுப் போயிற்று. ஆகவே, அந்தத் தோல்வி, 26-ந் தேதியன்று நடந்த போரிலும், தோல்வியைக் கொண்டு வந்து கொடுத்தது.

ஷெவார்டினா அரண்களில் நமக்கு தோல்வி ஏற்பட்ட பின்பு, 25-ந் தேதியன்று காலையில், நமது இடது பக்கவாட்டிற்கு ஒரு சரியான பாதுகாப்பு இடம் இல்லாமல் இருப்பதை நாம் கண்டோம். ஆகவே,

அந்த இடத்தில் அந்த இடது பக்கவாட்டை வளைத்து வின் வாங்கும்படி நேரிட்டது. எந்த இடத்தில் பின்வாங்கி வந்து நின்றோமோ, அதை அவசரமாக அரண்களால் பாதுகாக்க முயற்சித்தோம்.

26-ந் தேதியன்று ருஷ்ய ராணுவத்தை பலவீனமான, முற்றுப் பெறாத அரண்களைக் கொண்டு பாதுகாக்க வேண்டியதாயிருந்தது. அந்த நிலையிலுள்ள அசௌகரியம், ருஷ்யட கமாண்டர்களால் இன்னும் அதிகரிக்கப்பட்டது. இடது பக்கவாட்டில் நமது அணிவகுப்புக்கு ஏற்பட்டுள்ள நஷ்டத்தையும், அந்த வரப்போகும் போர் முழுவதும் வலது பக்கத்திலிருந்து இடது பக்கத்திற்கு மாறியதையும், அவர்கள் பூரணமாக உணர்ந்து கொள்ளவில்லை. அதனால், நோவோவிலிருந்து உட்டைட்சா வரையில் நீண்டிருந்த தமது அணிவகுப்பை, அவர்கள் அப்படியே வைத்திருந்தார்கள். போர் நடக்கும் சமயத்தில்தான், துருப்புகளை வலது பக்கத்திலிருந்து இடது பக்கத்திற்கு அவர்கள் மாற்றும்படி நேரிட்டது. ஆகவே, அந்த போர் முழுவதையும், நமது இடது பக்கவாட்டின் மீது பிரஞ்சு ராணுவம் பூராவாக ஆரம்பித்த தாக்குதலை, அவர்களுடைய எண்ணிக்கையில் பாதி அளவேயுள்ள ருஷ்யர்களால் சமாளிக்க வேண்டியதாய் நேரிட்டது. (உட்டைட்சாவில் பானியாட்டாவ்ஸ்கி நடத்திய போரும், வலது பக்கவாட்டில் உவராவ் நடத்திய போரும் பிரதான போருக்குப் புறம்பான செய்கைகளாகும்.) ஆகவே, பாராடினோ யுத்தம், அது நடந்ததாக வருணிக்கப்பட்டிருக்கிறபடி நடக்கவேயில்லை. (நம்முடைய கமாண்டர்களின் தவறுகளை மறைப்பதற்காக, அதனால் நம்முடைய ருஷ்ய ராணுவத்திற்கும் மக்களுக்கும் பெருமை குலையும் என்பதை கொஞ்சம்கூடக் கவனிக்காமல் செய்யப் பட்ட செய்கையாகும்.) ஒரு குறிப்பிட்ட பாதுகாக்கப்பட்ட இடத்தில், பாராடினோ போர் நடக்கவில்ல; எதிரியை விட சிறிது தான் பலம் குறைந்த நமது துருப்புகள், அந்தப் போரை நடத்தினார்கள் என்பதுமில்லை; ஷெவார்டினா அரண்களை இழந்துவிட்டதன் பலனாக. பாராடினோ யுத்தத்தைப் பாதுகாக்கப்படாத ஒரு திறந்த வெளியில் ருஷ்யர்கள் நடத்த வேண்டியதாயிருந்தது. அதுவும் பிரஞ்சுக்காரர்களின் பலத்தில் பாதியளவு பலத்தோடுதான் செய்யவேண்டியிருந்தது. அதாவது, மூன்று மணி நேரம்கூட, படுதோல்வியும் புறங்காட்டி ஓடுவதும் இல்லாமல், யுத்தம் செய்ய முடியுமென்று நினைக்க முடியாத இடத்தில், பத்து மணி நேரம் யுத்தம் செய்து, வெற்றி தோல்வி இல்லாத ஒரு பலனை அடையலாமென்று நினைப்பது அசாத்தியமானது.



25-ந் தேதியன்று காலையில், மஜாய்ஸ்க்கை விட்டு பீயர் புறப்பட்டார். அந்த செங்குத்தான குன்றிலிருந்து இறங்கும் பாதையில், ஒரு ரஸ்தா வளைந்து வளைந்து, அந்த நகரத்திற்கு வெளியே வலது பக்கம் இருந்த மாதா கோயிலைக் கடந்து போவது காணப்பட்டது. அந்த மாதா கோயிலில் ஆராதனை நடந்து கொண்டிருந்தது. கோயில் மணிகள் அடித்துக் கொண்டிருந்தன. பீயர் தமது வண்டியை விட்டு இறங்கி, கால் நடையாகப் போனார். அவருக்குப் பின்னால், ஒரு குதிரைப் பட்டாளம் அதன் பாடகர்களோடு, குன்றிலிருந்து இறங்கி வந்துகொண்டிருந்து. அவருக்கு எதிராக, அவரை நோக்கி ' ஒரு வரிசை வண்டிகள் வந்துகொண்டிருந்தன. முதல் நாளன்று நடந்த போரில், காயமடைந்தவர்களை அந்த வண்டிகளில் கொண்டு வந்தார்கள். விவசாயிகளான வண்டியோட்டிகள், கூச்சலிட்டுக்கொண்டும், தங்கள் குதிரைகளை அடித்துக்கொண்டும், வண்டிகளை இப்பக்கமும் அப்பக்கமுமாக ஓட்டிக் கொண்டும் இருந்தார்கள். ஒவ்வொரு வண்டியிலும், மூன்று அல்லது நான்கு காயம்பட்ட சிப்பாய்கள் படுத்துக்கொண்டோ, உட்கார்ந்து கொண்டோ இருந்தார்கள். அந்தப் பாதையிலுள்ள பள்ளங்களை நிரப்பிய கற்கள் மீது வண்டிகள் வந்தபோது, தூக்கிப் போட்டுக் கொண்டிருந்தன. காயமடைந்தவர்கள், துணிகளால் கட்டுகள் போட்டுக்கொண்டு, வெளிறிய கன்னங்களுடனும், இறுக்கி மூடிய உதடுகளுடனும், புருவங்களை நெறித்துக்கொண்டும், வண்டிகள் தூக்கிப் போடும்போது, வண்டிகளின் பக்கங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். அநேகமாக, அவர்கள் எல்லோரும் சூது இல்லாத குழந்தைத்தனமான ஆச்சரியத்தோடு, பீயரின் வெள்ளைத் தொப்பியையும், பச்சைக் கோட்டையும் பார்த்தார்கள்.

காயமடைந்தவர்களை ஏற்றி வந்த அந்த வண்டிகளைப் பார்த்து, அவைகளை ரஸ்தாவின் ஒரு பக்கமாக ஓட்டி வரும்படி, பீயரின் வண்டிக்காரன் கோபமாய் கூச்சலிட்டான். அந்த குதிரைப் படை, அதனுடைய பாடகர்களோடு குன்றிலிருந்து இறங்கி வரும்போது, பீயரின் வண்டியை சூழ்ந்து தெருவை அடைத்துக்கொண்டு போனார்கள். நெருக்கமாயிருந்தபடியால், பீயர் ஒதுங்கி நின்றார். அந்த இடத்தில் குன்று மேலே நீண்டிருந்தபடியால், சூரிய வெளிச்சம் நுழையவில்லை. அங்கே குளிராகவும் ஈரமாகவும் இருந்தன. ஆனால், பீயரின் தலைக்கு மேலாக, அந்த ஆகஸ்ட்டின் சூரிய ஒளி பிரகாசமாய் தோன்றிக் கொண்டும், மாதா கோயிலின்

மணிகள் மகிழ்ச்சிகரமாய் ஒலித்துக்கொண்டும் இருந்தன. காயமடைந்தவர்களை ஏற்றி வந்த வண்டிகளில் ஒன்று, அந்த ரஸ்தாவில் பீயருக்குப் பக்கமாக வந்து நின்றது. மரப்பட்டை செருப்புகள் அணிந்திருந்த வண்டியோட்டி, டயர் இல்லாத பின் சக்கரத்திற்குக் கீழே ஒரு கல்லை வைத்து, அங்கிருந்த பள்ளத்தைக் கடப்பதற்காக ஏற்பாடு செய்தான்.

கையில் கட்டுப் போட்டிருந்த ஒரு வயதான சிப்பாய், கால் நடையில் அந்த வண்டிக்குப் பின்னால் வந்து கொண்டிருந்தான். பீயரைப் பார்ப்பதற்காக அவன் திரும்பினான்.

'எனது நாட்டு சகோதரரே, நம்மை அவர்கள் இங்கே தான் விட்டுவிடுவார்களா? அல்லது, மாஸ்கோவிற்குக் கொண்டு போவார்களா?' என்று அவன் கேட்டான்.

ஆழ்ந்த யோசனையில் பீயர் இருந்தபடியால், அவனுடைய கேள்வியை அவர் கிரகிக்கவில்லை. அவர் இப்பொழுது, அந்த காயம் பட்ட சிப்பாய்களின் வண்டிகளைச் சந்திக்க குதிரைப் பட்டாளத்தையும், தமது பக்கத்தில் நிற்கின்ற வண்டியையும் பார்த்துக் கொண்டிருந்தார். அந்த வண்டியில் காயமடைந்த இருவர் உட்கார்ந்து கொண்டும், ஒருவர் படுத்துக்கொண்டும் இருந்தார்கள். அந்த உட்கார்ந்திருந்தவர்களில் ஒருவனுக்கு, கன்னத்தில் காய மேற்பட்டிருந்தது. அவனுடைய தலை முழுவதிலும் கட்டுப் போட்டிருந்தார்கள். அவனுடைய ஒரு கன்னம், ஒரு குழந்தையின் தலை அளவு வீங்கியிருந்தது. அவனுடைய மூக்கும் வாயும், ஒரு பக்கமாக சுளித்திருந்தன. அந்த சிப்பாய், மாதா கோயிலைப் பார்த்து, தனக்கு சிலுவைக் குறி காட்டிக் கொண்டான். அழகிய தலைமுடியுள்ள மற்றொரு வாலிபன், அவனுடைய மெலிந்த முகத்தில் ரத்தமே இல்லாததுபோல, வெள்ளையாய்க் காணப்பட்டான். அவன் பீயரை அன்போடு நோக்கி புன்னகை பூத்தான். மூன்றாவது ஆசாமி, குப்புறப் படுத்திருந்தான். அதனால் அவனடைய முகம் தெரியவில்லை. பக்கத்தில் சென்று கொண்டிருந்த குதிரைப்படைக்காரர்கள், பாட்டு பாடிக்கொண்டு போனார்கள். 'ஆ, இழந்தோம், முற்றிலும் இழந்தோம்... எனது மூளை கூர்மையாய்த் தான் இருக்கிறது, வெளி நாட்டில் வசிக்கிறோம்...' என்று அவர்கள் நடனப் பாட்டைப் பாடிக்கொண்டு போனார்கள்.

அவர்கள் சொல்லுவதைக் கேட்டு பதில் கூறுவதைப் போல, ஆனால், மற்றொரு விதமான மகிழ்ச்சியோடு, அந்த மணிகளின் சப்தங்கள் மேலே ஒலித்துக் கொண்டிருந்தன. எதிரே இருந்த

மற்றொரு சரிவின் உச்சியில், மற்றொரு விதமான மகிழ்ச்சியோடு, சூரிய ஒளி வீசிக்கொண்டிருந்தது. ஆனால், அந்த சரிவுக்குக் கீழாக, காயமடைந்த சிப்பாய்களின் வண்டிகளுக்குப் பக்கத்தில், அந்த சிறிய குதிரை பெருச்சு விட்டுக்கொண்டிருந்த இடத்திற்குப் பக்கத்தில் ஈரமாகவும் சோகமாகவும் இருளாகவும் காணப்பட்டன.

வீங்கிய கன்னத்தோடு இருந்த அந்த சிப்பாய், கோபமாகக் குதிரைப்படைப் பாடகர்களைப் பார்த்தான்.

'ஓ டம்பாச்சாரிகளே' என்று அவன் கோபத்துடன் கூறினான். பார்த்தேன்... விவசாயிகள் - அவர்களும் கூட போகவேண்டியதா யிருக்கிறது' என்று வண்டிக்குப் பின்னால் 'நின்ற சிப்பாய், ஒரு சோகமான புன்னகையோடு, பீயரைப் பார்த்து சொன்னான் 'இக்காலத்தில் வித்தியாசங்கள் எதுவுமில்லை... நமது சமுதாயப் முழுவதுமே, எதிரிகளின் மீது விழுந்து தாக்க வேண்டுமென்று அவர்கள் விரும்புகிறார்கள் - ஒரு வார்த்தையில் சொல்லுவதா யிருந்தால், அதுதான் மாஸ்கோ! அதற்கு ஒரு முடிவு காண அவர்கள் விரும்புகிறார்கள்.'

சிப்பாயின் வார்த்தைகள் புரியாமல் இருந்த போதிலும், அவன் என்ன சொல்ல விரும்புகிறான் என்பதை அறிவதற்காக, இரு பக்கங்களிலும் பார்த்துக் கொண்டே போனார். ஆனால், ஒவ்வொரு பக்கமும் ராணுவத்தைச் சேர்ந்த, வெவ்வேறு வகுப்பிலுள்ள தமக்குப் பழக்கமில்லாத முகங்களையே அவர் கண்டார். அவர்கள் எல்லாரும், அவருடைய வெள்ளைத் தொப்பியையும் பச்சைச் சட்டையையும் ஆச்சரியத்தோடு பார்த்தார்கள்.

சுமார் மூன்று மைல் தூரம் போன பின்பு, ஒரு அறிமுகமானவரை அவர் சந்தித்தார். ஆவலோடு அவரிடம் பேசினார். ராணுவத்தைச் சேர்ந்த தலைமை டாக்டர்களில், அவர் ஒருவர். மேலே, மூடிபோட்ட ஒரு ஒற்றைக் குதிரை வண்டியில், பீயரை நோக்கி அவர் வந்து கொண்டிருந்தார். அவருக்குப் பக்கத்தில், ஒரு வாலிப டாக்டர் அமர்ந்திருந்தார். பீயரை அறிந்து கொண்டதும், தமது வண்டியை ஓட்டி வந்த கோசாக்கிடம், வண்டியை நிறுத்தச் சொன்னார்.

'கோமகனே! மேன்மை தங்கியவரே, நீர் எப்படி இங்கே வர நேரிட்டது?' ' என்று அந்த டாக்டர் கேட்டார்.

'நல்லது, உமக்குத் தெரியுமே, நான் பார்க்க விரும்பினேன்...'

'ஆம், ஆம் பார்ப்பதற்கு இங்கே ஏதாவது இருக்கும்...'

பியர் வண்டியை விட்டிறங்கி, டாக்டரிடம் பேசினார். இந்த யுத்தத்தில் தாம் கலந்து கொள்ளும் உத்தேசத்தைப் பற்றி அவரிடம் சொன்னார்.

குட்டுஜோவை நேராகப் பார்க்கும்படி, டாக்டர் ஆலோசனை கூறினார்.

'ஏதாவது ஒரு கண் காணாத இடத்தில், இந்த யுத்தத்தில் நீர் ஏன் இருக்கவேண்டும்?' என்று அவர் சொல்லி, தமது வாலிபத் தோழரோடு கண்களால் பேசிக்கொண்டார். 'எப்படியானாலும், அந்த 'கலங்காத மேன்மை தங்கியவர்' உம்மை அறிவார். அவர் உம்மைக் கண்ணியமாக வரவேற்பார். நீர் அப்படித் தான் செய்ய வேண்டும்.'

டாக்டர்களைப்படைந்தவராகவும், அவசரத்திலிருப்பவராகவும் தோன்றினார்.

'நீர் அப்படி நினைக்கிறீரா?... ஆ– நமது ராணுவ நிலைமையில் எப்படியிருக்கிறது என்பதையும், உம்மிடம் கேட்க நான் விரும்புகிறேன்' என்றார் பீயர்.

'நிலைமையா?' என்று டாக்டர் திருப்பிச் சொன்னார். 'நல்லது, அது என் தொழிலைச் சேர்ந்ததல்ல... டாட்டாரிநாவாவைக் கடந்து நீர் போம். அங்கே ஏராளமாகக் குழிகளை வெட்டிக் கொண்டிருக்கிறார்கள். அங்கிருக்கும் மேட்டின் மேலே ஏறினார், நீர் பார்க்கலாம்.

'அங்கிருந்து ஒருவர் பார்க்க முடியுமா?... நீர் மட்டும்...'

ஆனால், டாக்டர் அவரை இடைமறித்து, தமது ஒற்றைக் குதிரை வண்டியை நோக்கித் திரும்பினார்.

'நான் உம்முடன் வந்திருப்பேன். ஆனால், எனக்கு வேலை இதுவரை இருக்கிறது' என்று அவர் சொல்லி, தமது தொண்டையை சுட்டிக்காட்டினார். 'நான் இப்பொழுது கமாண்டரிடம் ஓடிக்கொண்டிருக்கிறேன். விஷயங்கள் எப்படி இருக்கின்றன... கோமகனே நாளை ஒரு யுத்தம் நடக்கப்போகிறது. 100 ஆயிரம் பேருள்ள நமது ராணுவத்தில், குறைந்தது 20 ஆயிரம் பேர்களாவது காயமடைந்து போவார்கள் என்று நாம் எதிர்பார்க்க வேண்டும். ஆனால், நம்மிடம் 6000 பேர்களுக்குக்கூட' வேண்டிய டோலிகளோ, அறைகளோ, காயங்களுக்கு கட்டுப் போடுகிறவர்களோ, டாக்டர்களோ இல்லை. நம்மிடம் 10,000 வண்டிகள் இருக்கின்றன. ஆனால், மற்ற உதவிகளும் நமக்குத் தேவையாயிருக்கின்றன. - நம்மால் எவ்வளவு சிலாக்கியமாகச் செய்ய முடியுமோ, அம்மாதிரி நாம் செய்யவேண்டும்.'

வாலிபர்களும் வயோதிகர்களுமான ஆயிரக்கணக்கான பேர்கள், தம்முடைய தொப்பியை மகிழ்ச்சியான ஆச்சரியத்தோடு வெறித்துப் பார்த்த அவர்களில் (ஒருவேளை நாம் கவனித்த அவர்களாக இருக்கலாம்.), 20,000 பேர்கள் வரை காயமடைந்தோ, மரணமடைந்தோ போக நேரிடும் என்ற விசித்திரமான சிந்தனை, பீயரை மலைக்கவைத்தது.

'நாளை அவர்கள் மாண்டு போகலாம். மரணத்தைத் தவிர, மற்றவைகளைப் பற்றி அவர்கள் ஏன் நினைக்கிறார்கள்?' அந்த மஜாய்ஸ்க்குன்றின் சரிவும், காயமடைந்தவர்களோடு வந்த வண்டிகளும், ஒலித்துக்கொண்டிருந்த மணிகளும், சூரியனுடைய சாய்வான கிரணங்களும், குதிரைப்படைக்காரர்களின் பாட்டுகளும், அந்த கண்காணாத சூட்சும சிந்தனைகளின் விளைவுகளினால் அவருடைய மனதில் தெளிவாய் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றின.

'அந்த குதிரைப் பட்டாளம் போருக்குப் போகிற வழியில், காயம் பட்டவர்களை சந்திக்கிறது; என்றாலும், தங்களுக்கு என்ன காத்துக் கொண்டிருக்கிறது என்பதைப் பற்றி, ஒரு வினாடி கூட சிந்திப்பதில்லை. அந்த காயமடைந்தவர்களைப் பார்த்து, கண் சிமிட்டிக்கொண்டே அவர்கள் போகிறார்கள்; என்றாலும், இந்த மனிதர்களில் 20,000 பேர் நாளை மாண்டு போகப்போகிறார்கள். அவர்கள் என்னுடைய தொப்பியைப் பார்த்து ஆச்சரியப்படு கிறார்கள்! விசித்திரமானது! என்று டாட்டாரிநாவாவிற்குப் போகிற வழியில் பீயர் நினைத்தார்.

ரஸ்தாவிற்கு இடது பக்கமாக, ஒரு மிராசுதாரின் வீட்டுக்கு முன்பாக, வண்டிகளும், சவாரி வண்டிகளும், ஏராளமான வில்லைச் சேவகர்களும், காவல் வீரர்களும் நின்று கொண்டிருந்தார்கள். அங்கே தான் சேனாதிபதி தங்கியிருந்தார். ஆனால், அங்கே பீயர் வந்தபொழுது, சேனாதிபதி அச்சமயம் வீட்டிற்குள் இல்லை. பரிவாரத்தைச் சேர்ந்தவர்களும் ஒருவருமில்லை. அவர்கள் மாதா கோயிலுக்கு பிரார்த்தனைக்குப் போனார்கள். கோர்க்கியை நோக்கி பீயர் பிரயாணம் போனார்.

அந்தக் குன்றிலிருந்து அவர் இறங்கிய போது, ஒரு சிறிய கிராமத்தின் தெருவுக்கு வந்து சேர்ந்தார். அங்கே பாதுகாப்புப் படையைச் சேர்ந்தவர்களை முதல் தடவையாகப் பார்த்தார். அவர்கள் வெள்ளை ஷர்ட்டுகள் அணிந்து, சிலுவைக் குறியுள்ள தொப்பிகள் அணிந்து, பேசிக்கொண்டும், உரக்கச் சிரித்துக் கொண்டும், உற்சாகத்தோடும், வியர்வை சொட்டிக்கொண்டும், ரஸ்தாவின் வலது பக்கத்திலிருந்து அடர்த்தியாக புல் வளர்ந்திருந்த ஒரு பெரிய மேட்டில் வேலை செய்து கொண்டிருந்தார்கள்.

அவர்களில் சிலர், பூமியைத் தோண்டிக் கொண்டிருந்தார்கள். இன்னும் சிலர், கை வண்டிகளில் வெட்டிய மண்ணை எடுத்துப் போட்டு, அங்கு போட்டிருந்த பலகைகள் வழியாகத் தள்ளிக் கொண்டு போனார்கள். மற்றவர்கள், ஒன்றும் செய்யாமல் சும்மா நின்றார்கள்.

அந்த மேட்டில் நின்று கொண்டிருந்த இரண்டு அதிகாரிகள், அவர்களிடம் வேலை வாங்கிக் கொண்டிருந்தார்கள். தாங்கள் சிப்பாய்கள் என்ற நிலைமையில் இருக்கிற அதிசயத்தைப் பார்த்து, அந்த விவசாயிகள் ஆச்சரியம் கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்ததும் மஜாய்ஸ்க்கில் அவர் பார்த்த, காயமடைந்த மனிதர்களைப் பற்றிய நினைப்பு, மீண்டும் அவருக்குத் தோன்றியது. அந்த கூட்டத்திலிருந்த ஒரு சிப்பாய், அந்தச்சமயத்தில் சொல்லிய, ‘நமது சமுதாயம் முழுவதும், அவர்கள் மீது விழ வேண்டுமென்று அவர்கள் விரும்புகிறார்கள்’ என்ற வார்த்தைகளுக்கு அர்த்தம் என்ன என்பதை, அவர் புரிந்து கொண்டார். தாடி வளர்த்திருந்த இந்த விவசாயிகள், தங்களுடைய விசித்திரமான ஜோடுகளை அணிந்து கொண்டு, கழுத்துகளில் வியர்க்க, அவர்களுடைய ஷர்ட்டுகள் இடது புறத்திலிருந்து மத்திய பாகம் வரையில் திறந்துவிடப்பட்டு இருக்க, தோள் பட்டைகள் மூடப்படாமல் நிற்க, அந்த யுத்த களத்தில் அவர்கள் வேலை செய்து கொண்டிருந்தது, பீயரின் உள்ளத்தில் ஆழமாய்ப் பதிந்தது; அச்சமயத்திலுள்ள முக்கியத்துவத்தோடும் பவித்திரத்தோடும் அது பதிந்தது; அது வரை அவர் பார்க்காத விதத்திலும், கேட்காத விதத்திலும் அது பதிந்தது.



பீயர் தமது வண்டியை விட்டு கீழே இறங்கினார். அங்கு வேலை செய்து கொண்டிருந்தவர்களைக் கடந்து, அந்த மேட்டின் மீது ஏறினார். அந்த இடத்திலிருந்து யுத்த களத்தை நன்றாகப் பார்க்க முடியும் என்று டாக்டர் சொல்லியிருந்தார்.

அப்பொழுது 11 மணி இருக்கலாம். அவருக்கு இடது பக்கமாகவும், பின் பக்கமாகவும் சூரியன் பிரகாசித்துக் கொண்டிருந்தான். அந்த பிரகாசத்தினால் ஒளிர் விட்டுக் கொண்டிருந்த, அந்த பிரம்மாண்டமான, பரந்த காட்சியானது, ஒரு பெரிய '''பேரரங்கம் போல அவருக்கு முன்பாகத் தெளிவாக, சுத்தமான சுற்றுணர்ச்சியில் தோன்றியது.

இடது பக்கத்தில், மேலேயிருந்து அந்தப் பேரரங்கத்தைத் துண்டாக்குவதைப்போல, ஸ்மாலென்ஸ்க் ரஸ்தா போய்க்கொண்டிருந்தது. அந்த ரஸ்தா, ஒரு கிராமத்தின் வழியாக, அந்த மேட்டிலிருந்து 500 அடிகள் தூரத்திலுள்ள ஒரு வெள்ளை மாதா கோயில் வழியாக, அந்த மேட்டிற்குக் கீழாகப் போய்க்கொண்டிருந்தது. இந்த கிராமம்தான் பாராடினோ. இந்த கிராமத்திற்கு அப்பால், அந்த ரஸ்தா ஒரு ஆற்றின் மேலுள்ள பாலம் வழியாகச் சென்றது. அந்த ரஸ்தா மென்மேலும் உயர்ந்து, நாலு மைல்களுக்கு அப்பாலுள்ள வாலாவா என்ற கிராமத்தை நோக்கிப் போயிற்று. அந்த கிராமத்தில்தான் நெப்போலியன் தங்கியிருந்தார். வாலாவாவிற்கு பின்னால், அந்த ரஸ்தா அடிவானத்தில் தெரிந்த ஒரு அடர்த்தியான காட்டிற்குள்ளாகச் சென்று மறைந்தது. ரஸ்தாவிற்கு வலது பக்கத்தில், தூரத்தில், அந்த பூவரசு மரங்களையும், தேவதாரு மரங்களையும் கொண்ட காட்டில், காலாச்சா சந்நியாசி மடத்தின் சிலுவையும் மணிக்கூண்டும் சூரிய ஒளியில் பிரகாசித்துக் கொண்டிருந்தன. அந்த அகன்ற நீல நிறமான பரப்பில், அந்த காட்டிற்கு வலது பக்கத்திலும், இடது பக்கத்திலும், சிப்பாய்களின் கணப்பு மூட்டங்களும், இவ்வளவு என்று நிச்சயமாகச் சொல்ல முடியாத, நம்முடையவும் எதிரிகளினுடையவும் துருப்புகளின் கூட்டங்கள் இங்குமங்கும் காணப்பட்டன. வலது பக்கத்திலிருந்த பூமி - காலாச்சா, மாஸ்கோ என்ற நதிகளை ஒட்டி - மேடு பள்ளங்கள் உள்ளதாகவும், குன்றுகள் உள்ளதாகவும் தோன்றியது. பெஜூபாவா என்ற கிராமமும், ஜாக்காரினா என்ற கிராமமும், மத்தியிலுள்ள பள்ளத்தாக்கில் தொலைவில் தெரிந்தன. அந்த பூமியின் இடது பக்கம் சம்மாய்த் தோன்றியது. அங்கே தானிய வயல்களும், செமியோனாவ்ஸ்க் என்ற கிராமத்தில் அந்த கிராமம் எரிக்கப்பட்டதனால் ஏற்பட்ட புகைகளும் காணப்பட்டன.

பீயர் பார்த்தவையெல்லாம் நிச்சயமற்றவையாய் இருந்தன. அந்த நிலத்தின் வலது பக்கமோ, அல்லது இடது பக்கமோ, அவர் எதிர்பார்த்தவைகளை பூரணமாய் திருப்தி செய்வதாய் இல்லை. காணமுடியும் என்று அவர் எதிர்பார்த்த யுத்த களத்தை, அவரால் எங்கும் பார்க்க முடியவில்லை. ஆனால், வயல்களையும், புல் வெளிகளையும், துருப்புகளையும், காடுகளையும், கணப்பு மூட்டங்களிலிருந்து கிளம்புகிற புகைகளையும், கிராமங்களையும், மேடுகளையும், வாய்க்கால்களையுமே அவர் பார்த்தார். தூரத்திலுள்ளவைகளைப் பார்க்க அவர் எவ்வளவு முயற்சி செய்தும், உயிர் துடிப்போடு இருந்து கொண்டிருக்கும் ராணுவ அணிவகுப்பு எதையும் அவரால் பார்க்க முடியவில்லை; அல்லது,

நமது துருப்புகள் எவை, எதிரி துருப்புகள் எவை என்ற வித்தியாசத்தையும் கூட, அவரால் கண்டு கொள்ள முடியவில்லை.

'இதை அறிந்தவர் யாராவது ஒருவரிடம் நான் கேட்க வேண்டும்' என்று அவர் நினைத்தார். ராணுவத்தைச் சேராத அவருடைய பிரம்மாண்டமான உருவத்தை, அதிசயத்தோடு பார்த்துக் கொண்டிருந்த ஒரு அதிகாரியை நோக்கி அவர் கேட்டார்:

'நமக்கு எதிராக இருக்கும் அந்த கிராமத்தின் பெயர் என்ன என்பதை, நான்உம்மிடம் கேட்கலாமா?' என்று பீயர் கேட்டார்.

'பர்டினா, அப்படித்தானே?' என்று அந்த அதிகாரி சொல்லி, பக்கத்திலிருந்த தோழரிடம் திரும்பினார்.

'பாராடினோ' என்று அவர் திருத்திச் சொன்னார்.

பேசுவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததைக் கண்டு, மகிழ்ச்சியுள்ள அந்த அதிகாரி பீயரிடம் நெருங்கினார்.

'அவர்கள் எல்லாம் நமது ஆட்களா?' என்று பீயர் கேட்டார்.

'ஆம், அதற்கு அப்புறம் உள்ளவர்கள் பிரஞ்சுக்காரர்கள். அவர்கள் அங்கேதான், அங்கே, இருக்கிறார்கள். நீர் பார்க்கலாம்' என்று அந்த அதிகாரி சொன்னார்.

'எங்கே? எங்கே?' என்று பீயர் கேட்டார்.

'வெறும் கண்களாலேயே அவர்களைப் பார்க்கலாமே... இதோ, அங்கே!'

அந்த அதிகாரி, அந்த ஆற்றிற்கு அப்புறமாக இடது பக்கத்தில் தோன்றிக் கொண்டிருந்த புகையைச் சுட்டிக் காட்டினார். கண்டிப்பான, மிகுந்த சிரத்தையுள்ள தோற்றத்தோடு, அவர் காணப்பட்டார். பீயர் சந்தித்தவர்களின் முகங்களில் காணப்பட்ட அதே தோற்றங்கள், அந்த அதிகாரியின் முகத்திலும் காணப்பட்டன.

'ஆ, அப்படியானால், அவர்கள்தான் பிரஞ்சுக்காரர்களா? இதோ அங்கே இருக்கிறவர்கள்தானே?...' என்று இடது பக்கத்திலிருந்த மேட்டைச் சுட்டிக் காட்டி பீயர் கேட்டார். அந்த மேட்டிற்குப் பக்கத்தில் சில துருப்புகளும் காணப்பட்டார்கள்.

'அவர்கள் எல்லாரும் நமது துருப்புகள்.'

ஆ, நம்முடைய துருப்புகளா? அப்படியானால், அங்கே இருக்கிறவர்கள்?...' என்று பீயர், ஒரு பெரிய மரத்தோடு தோன்றிய மற்றொரு மேட்டைச் சுட்டிக்காட்டிக் கேட்டார். அந்த மேடு ஒரு கிராமத்தின் பக்கத்தில் இருந்தது. அந்த கிராமம் ஒரு பள்ளத்தாக்கில் இருந்தது. அங்கே கணப்பு மூட்டங்களும், புகைகளும் தோன்றின. எதோ கருப்பாகவும் காணப்பட்டது.

'அதுவும் எதிரியினுடையதுதான்' என்று அந்த அதிகாரி சொன்னார். (அதன் பெயர் ஷெவார்டினா அரண்கள்). 'அது நேற்று நம்முடையதாய் இருந்தது. ஆனால், இன்று எதிரியினுடையதாய் மாறிவிட்டது.

'அப்படியானால், நமது வியூகத்தைப் பற்றி என்ன?'

'நமது வியூகமா? என்று அந்த அதிகாரி, திருப்தியான புன்னகையோடு கேட்டார். 'நான் உமக்கு முற்றிலும் தெளிவாகச் சொல்லுகிறேன். ஏனென்றால், நமது அரண்களையெல்லாம், அநேகமாய் நானே அமைத்தேன். அங்கே, உமக்குத் தெரிகிறதா? அதுதான் நம்முடைய வியூக்கத்தின் மத்திய பாகம். பாராடினோவில் அது இருக்கிறது' என்று அவர், தங்களுக்கு எதிராய் காணப்பட்ட ஒரு வெள்ளை மாதா கோயிலுள்ள கிராமத்தைச் சுட்டிக் காட்டினார். 'அங்கேதான் காலாச்சா நதியைக் கடக்கவேண்டும். அந்தப் பள்ளத்தாக்கில் வைக்கோல் கட்டுகள் வரிசையாகக் கிடக்கின்றனவே, அவற்றிற்குப் பக்கத்திலுள்ள அதுதான் ஆற்றின் பாலம். அந்த இடந்தான், நமது போர் முனையின் மத்திய பாகம். நமது வலது பக்கவாட்டு, அதோ அந்தப் பக்கத்திலிருக்கிறது- அவர் வலது பக்கத்தில், அந்த கரடுமுரடான, தூரத்திலிருந்த அந்த பூமியைச் சுட்டிக் காட்டினார். - அங்கேதான் மாஸ்க்வா என்ற நதி இருக்கிறது. அங்கே மூன்று அரண் பாதுகாப்புகளை வெகு பலமானவைகளாக நாம் அமைத்திருக்கிறோம். நமது இடது பக்கவாட்டு...' இங்கே அந்த அதிகாரி சிறிது நிறுத்தினார். 'நல்லது, இதோ பாரும், அதை விளக்குவதற்கு கஷ்டமாயிருக்கிறது... நம்முடைய இடது பக்கவாட்டு நேற்றைய தினத்தில் ஷெவார்டினாவில் இருந்தது. அதோ பாரும், ஒரு ஓக் மரம் இருக்கிறதே, அதுதான். ஆனால், இப்பொழுது நமது இடது பக்கவாட்டை நாம் பின்வாங்கிக் கொண்டோம். இப்பொழுது, அது அந்த இடத்திலிருக்கிறது. புகை வந்துகொண்டிருக்கிற அந்த கிராமத்தை, உம்மால் பார்க்க முடிகிறதா? அதோ, அதுதான் செமியோனாவ்ஸ்க், ஆம், அதுதான்' என்று அவர் கூறி ராயேவ்ஸ்கி மேட்டைச் சுட்டிக் காட்டினார். 'ஆனால், அந்த இடத்தில், அநேகமாய் போர் நடக்காது. அந்த இடத்திற்கு தனது துருப்புகளை எதிரி கொண்டு போயிருப்பது, ஒரு ஏமாற்று தந்திரமாகும். ஒருவேளை, மாஸ்கோவிற்கு வலது பக்கமாக அவன் போகலாம். ஆனால், அது எப்படியிருந்தாலும், நாளைய தினத்தில் பலர் காணாமல் போய் விடுவார்கள்' என்று அவர் கூறி முடித்தார்.

இந்த விளக்கங்களை அந்த அதிகாரி சொல்லிக் கொண்டிருந்த போது, அவரிடம் வந்த ஒரு வயோதிக சார்ஜென்ட், அவர் பேசி முடிப்பதற்காகக் காத்துக்கொண்டிருந்தார். ஆனால், அந்த அதிகாரி கடைசியாகப் பேசியதைக் கேட்டதும், அதை விரும்பாதவராக இடைமறித்துப் பேசினார்.

'இரும்பு வலைகள் நமக்கு வரவேண்டும்' என்று அவர் கண்டிப்பாகக் கூறினார்.

அந்த அதிகாரி வெட்கமடைந்தவர்போலக் காணப்பட்டார். நாளைய தினத்தில் எத்தனை பேர்கள் மறைந்து போவார்கள் என்பதைப் பற்றி நினைத்துக் கொள்ளலாமே ஒழிய அதைப்பற்றிப் பேசக்கூடாது என்பதை அவர் அறிந்துகொண்டார்.

'நல்லது, மீண்டும் மூன்றாவது கம்பெனியை அதற்காக நீர் அனுப்பலாம்' என்று அந்த அதிகாரி அவசரமாகப் பதில் அளித்தார்.

'நீர், டாக்டர்களில் ஒருவரா?'

'இல்லை, நானாகத்தான் வந்திருக்கிறேன்' என்று பீயர் சொல்லி விட்டு, மேட்டிலிருந்து கீழே இறங்கி, அங்கே வேலை செய்து கொண்டிருந்த அந்தப் பாதுகாப்புப் படையினரை மீண்டும் கடந்து சென்றார்.

'ஓ, இந்த நாசமாய்ப் போகிற பயல்கள் என்று, அவருக்குப் பின்னால் வந்த அந்த அதிகாரி, மூக்கைப் பிடித்துக் கொண்டு அந்த மனிதர்களைக் கடந்து ஓடினார்.

'அங்கே அவர்கள்... அவளைக் கொண்டு வருகிறார்கள்... அதோ கொண்டு வருகிறார்கள்... ஒரு நிமிஷத்தில் இங்கே வந்து விடுவார்கள்...' என்று பல குரல்கள் திடீரென்று சொல்லுவது கேட்டன. அதிகாரிகளும், சிப்பாய்களும், பாதுகாப்புப் படையினரும், அந்த ரஸ்தா வழியாக முன்னோக்கி ஓட ஆரம்பித்தார்கள்.

பாராடினோவிலிருந்து அந்த மேட்டிற்கு மேலாக, ஒரு மாதா கோயிலின் ஊர்வலம் வந்து கொண்டிருந்தது. அந்த தூசி நிறைந்த ரஸ்தா வழியாக, கால்நடை படைகளைச் சேர்ந்த வீரர்கள் தலையில் தொப்பிகள் இல்லாமல், துப்பாக்கிகளைக் கீழ்நோக்கிப் பிடித்துக் கொண்டு, முதலில் வந்து கொண்டிந்தார்கள். அவர்களுக்குப் பின்னால், தேவாலய பாடகர்கள் பாடும் சப்தம் கேட்டுக் கொண்டிருந்தது.

சிப்பாய்களும், பாதுகாப்புப் படையினரும், தலையில் தொப்பியில்லாமல் அந்த ஊர்வலத்தை நோக்கி பீயரைக் கடந்து ஓடினார்கள்.

'அவளை, நமது பாதுகாப்பு தெய்வத்தை, அவர்கள் கொண்டு வருகிறார்கள்... இபரியன் தேவமாதா' என்று ஒருவன் கூச்சலிட்டான்.

'அல்ல, ஸமாலென்ஸ்க் தேவமாதா' என்று, மற்றொருவன் திருத்திக் கூறினான்.

அந்தக் கிராமத்தில் இருந்தவர்களும், அங்கே பீரங்கிப் படைக்காக வேலை செய்து கொண்டிருந்தவர்களுமான பாதுகாப்புப் படையினர், தங்களுடைய மண் வெட்டிகளை வீசி விட்டு, அந்த மாதா கோயிலின் ஊர்வலத்தை நோக்கி ஓடினார்கள். அந்த தூசி நிறைந்த ரஸ்தாவில், முதலில் வந்து கொண்டிருந்த பட்டாளத்திற்குப் பின்னால், குருமார்கள் தங்களுடைய தேவாலய ஆடைகளை அணிந்து வந்து கொண்டிருந்தார்கள். ஒரு வயதான சிறிய மனிதர், தலையில் தொப்பி அணிந்து, பக்கத்தில் உதவியாளர்களுடனும் பாடகர்களுடனும் வந்து கொண்டிருந்தார். அவர்களுக்குப் பின்னால், சிப்பாய்களும், அதிகாரிகளும், ஒரு பெரிய உலோகத்தாலான சப்பரத்தில், கருப்பு முகத்தைக் கொண்ட ஒரு தெய்வச் சிலையை வைத்து, தூக்கி வந்து கொண்டிந்தார்கள். ஸ்மாலென்ஸ்க் நகரத்தில் இருந்து, அந்த தெய்வச் சிலை கொண்டு வரப்பட்டது. அது முதல், ராணுவத்துடனேயே அந்தச் சிலையும் வந்து கொண்டிருந்தது. முன்னாலும் பின்னாலும், இரண்டு பக்கங்களிலும், பாதுகாப்புப் படையைச் சேர்ந்தவர்கள் வெறும் தலைகளுடன் நடந்து கொண்டும், ஓடிக் கொண்டும், தரையை நோக்கி பணிந்து கொண்டும் வந்து கொண்டிருந்தார்கள்.

அந்த மேட்டின் உச்சிக்கு வந்ததும், அந்த சப்பரம் நின்றது. அந்த சப்பரத்தைத் தூக்கி வருவதற்கு, துணிகளினால் அடியில் கட்டப் பட்டிருந்தது. அது வரை தூக்கி வந்தவர்கள் அங்கே விலகிக் கொண்டு, வேறு பலர் வந்து அந்த சப்பரத்தைத் தூக்கினார்கள். பாடுகிறவர்கள் வாசனைப் புகைகளை மீண்டும் கொளுத்தி, பிரார்த்தனையை ஆரம்பித்தார்கள். சூரியனின் சூடான கிரணங்கள் நேராக அடித்துக் கொண்டிருந்தன. ஒரு புதிய, மெதுவான காற்று, வெறும் தலையோடு நின்றவர்களின் தலை முடிகளையும், அந்த சப்பரத்தில் அலங்காரம் செய்யப்பட்டிருந்த ரிப்பன்களையும் ஆட்டிக் கொண்டிருந்தது. வெட்ட வெளியில் பாடியபடியால், சப்தம் பலமானதாய் இல்லை. வெறும் தலையோடு கூடிய அதிகாரிகளும், சிப்பாய்களும், பாதுகாப்புப் படையினரும், அந்த தெய்வச் சிலையைச் சுற்றி ஏராளமாய் கூடியிருந்தார்கள். குருவிற்கும் பாடுகிறவனுக்கும் பின்னால் பிரபலஸ்தர்கள்

அவர்களுக்காக ஒதுக்கப்பட்ட இடத்தில் நின்று கொண்டிருந்தார்கள். செயின்ட் ஜார்ஜ் பதக்கத்தை, தமது கழுத்தில் அணிந்து கொண்டிருந்த ஒரு வழுக்கைத் தலை ஜெனரால், குருவின் முதுகிற்குப் பின்னால் நின்றுகொண்டிருந்தார். அவர் தமது சிலுவைக் குறி காட்டிக் கொள்ளவில்லை. (அவர் ஜெர்மனியர் என்று தோன்றியது); அந்தப் பிரார்த்தனை முடிவதற்காக, பொறுமையோடு காத்துக் கொண்டிருந்தார். அந்தப் பிரார்த்தனையின் முடிவைக் கேட்கவேண்டியது அவசியமென்று அவர் நினைத்தார். ஏனெனில், ருஷ்ய மக்களின் தேச பக்தியை அது கிளப்பி விடுமென்று அவர் எண்ணினார். மற்றொரு ஜெனரல், ராணுவ மோஸ்தரில் நின்று கொண்டு, தமது மார்புக்கு நேராகத் தமது கையை ஆட்டி சிலுவைக்குறி காட்டி, தம்மைச் சுற்றி நோக்கிக் கொண்டிருந்தார். அந்த விவசாயிகளின் கூட்டத்தோடு கலந்து நின்ற பீயர், அங்கிருந்த பிரபலஸ்தர்கள் பலர், தமக்கு அறிமுகமானவர்கள் என்பதைக் கண்டார். ஆனால், அவர்களை அவர் பார்க்கவில்லை. அங்கு நின்ற சிப்பாய்களினுடையவும், பாதுகாப்பு படையினருடையவும் முகங்களில், அவர்கள் ஆவலோடு அந்த தெய்வச்சிலையை நோக்கும்போது, எம்மாதிரியான, பவித்திரமான தோற்றங்கள் ஏற்படுகின்றன என்பதைக் கவனிப்பதிலேயே, அவருடைய முழு கவனமும் சென்றிருந்தது. களைத்துப் போன பாடகர்கள் அன்றைய தினம், 20-வது தடவையாக தேவாராதனை செய்து முடித்த பின்பு சோர்வுடனும் உணர்ச்சியில்லாமலும் பாட ஆரம்பித்தார்கள். 'இந்தப் பேராபத்திலிருந்து, உமது ஊழியர்களாகிய எங்களைக் காப்பாற்றுவீராக, ஓ,தேவ மாதாவே. இச்சமயத்தில், அந்த குருவும், 'யாரும் தவிர்க்க முடியாத கோட்டையாகிய உமது பாதுகாப்பிற்கு, நாங்கள் சரணடைகிறோம், ஓ, தேவ மாதாவே' என்று கூறினார்கள். மஜாய்ஸ்க் குன்றின் கீழே பார்த்த முகங்களிலும், அன்று காலையில் அவர் சந்தித்த பலருடைய முகங்களிலும் காணப்பட்ட, வரப்போகிற ஆபத்தைப் பற்றிய பிரக்ஞையான தோற்றங்கள், அங்கிரந்தவர்களின் முகங்களில் மீண்டும் காணப்பட்டன. தலை முடியைப் பின்னால் தள்ளிக்கொண்டு, அடிக்கடி தலைகளைக் குனிந்து வணங்கும் போதும், அந்த மனிதர்கள் தங்களுக்குத் தாங்களே சிலுவைக் குறிகள் காட்டிய பொழுதும் சப்தங்களும் பெரு மூச்சுகளும் கேட்டன.

அந்த தெய்வச் சிலைக்கு முன்பாக நின்ற கூட்டம், திடீரென்று விலகி பீயரை நெருக்கியது. அங்கு வழி செய்யப்பட்ட வேகத்தைப் பார்த்தால், ஒரு பெரிய முக்கிஸ்தர் அந்த தெய்வச் சிலையிடம் வரப் போகிறார் என்பதைக் காட்டியது.

அவர்தான் குட்டுஜோவ். ராணுவத் தளங்களை சுற்றிப் பார்த்து விட்டு, டாட்டாரிநாவா என்ற இடத்திற்கு அவர் திரும்பியபொழுது வழியில் ஆராதனை நடந்து கொண்டிருந்த இடத்தில் தமது குதிரையை நிறுத்தினார். அவருடைய விசித்திரமான உருவத்தைப் பார்த்ததும், அங்கிருந்த ஒவ்வொருவரை விடவும், தனிச் சிறப்போடும் காணப்பட்ட அந்த உருவத்தைப் பார்த்ததும், அவர் யார் என்பதை பீயர் அறிந்து கொண்டார்.

மிகப் பிரம்மாண்டமான அவருடைய தடித்த உருவத்திற்கு மேலாகவும், உருண்ட தோள்களுக்கு மேலாகவும், ஒரு நீளமான வெளிச் சட்டையை அவர் அணிந்திருந்தார். அவருடைய வெள்ளைத் தலையில், ஒன்றையும் அணியவில்லை. அவருடைய உருண்ட முகம், அவர் இழந்துபோன ஒரு கண்ணிலுள்ள வெள்ளைமணியைக் காட்டிக் கொண்டிருந்தது. முன் பணிந்து அசைந்தாடும் நடையோடு, அந்தக் கூட்டத்திற்கு குட்டுஜோவ் நடந்து சென்று, குருவிற்குப் பின்னால் நின்று கொண்டார். ஒரு பழக்கமான வழியில் தமக்கு சிலுவைக் குறி காட்டி, அவருடைய கை பூமியில் படுகிறவரையில் அவர் குனிந்தார். அவருடைய வெள்ளைத் தலையை ஒரு ஆழ்ந்த பெரு மூச்சோடு தாழ்த்தினார். குட்டுஜோவிற்குப் பின்னால், பெனிக்ஸனும் பரிவாரங்களும் இருந்தார்கள். அங்கு வந்த சேனாதிபதி அங்கிருந்த உயர்ந்த அதிகாரிகளின் கவனங்களையெல்லாம் இழுத்த போதிலும், அந்த பாதுகாப்புப் படையினரும் சிப்பாய்களும், அவரைப் பார்க்காமலேயே தங்கள் பிரார்த்தனைகளைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்தார்கள்.

ஆராதனை முடிந்ததும், அந்த தெய்வச் சிலைக்கு முன்பாக குட்டு ஜோவ் போய், முழங்கால் படியிட்டு தரையைப் பார்த்து குனிந்து மரியாதைச் செய்தார். அதை விட்டு எழுந்திருக்க அவர் பல தடவைகள் முயற்சி செய்தும், அவருடைய புளுவும் பலவீனமும் அப்படிச் செய்யவிடாமல் தடுத்தன. அவருடைய வெள்ளைத் தலை அந்த முயற்சியில் சுளித்தது. கடைசியாக அவர் எழுந்தார். ஒரு குழந்தை செய்வதைப் போல உதடுகளைக் கூட்டி, அப்பாவித்தனமாக அந்த தெய்வச் சிலையை முத்தமிட்டு, மீண்டும் தமது கைகள் பூமியில் படுகிற வரையில் குனிந்து வணங்கினார். உடனே மற்ற ஜெனரல்கள், அவர் செய்ததைப் போல செய்தார்கள். அதன் பின்னால், அதிகாரிகள் செய்தார்கள். அதன் பின்னால், அங்கிருந்த சிப்பாய்களும், பாதுகாப்புப் படையினரும், பரபரப்பு அடைந்த முகங்களோடு, வேகமாய் மூச்சு விட்டுக்கொண்டு, ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டு, அதே மாதிரி பிரார்த்தனை செய்தார்கள்.



அந்தக் கூட்டத்தில் அகப்பட்டு, நெருக்கப்பட்டு, தள்ளாடிய பீயர், தம்மைச் சுற்றிலும் பார்த்தார்.

'கோமகன் பீட்டர் கிரைலாவிச், நீர் எப்படி இங்கே வந்தீர்?' என்று ஒரு குரல் கேட்டது.

பீயர் திரும்பிப் பார்த்தார். அங்கே தமது முழங்கால்களைத் தட்டிக் கொண்டு (ஒரு வேளை அந்த தெய்வச் சிலை முன்பாக அவர் முழங்கால் படியிட்டு வணங்கியபொழுது, அவருடைய கால் சட்டைகள் அழுக்கடைந்திருக்கலாம்), போரிஸ் ட்ரூபெட்ஸ்கோய் புன்னகை கொண்டு அவரைப் பார்த்து வந்து கொண்டிருந்தார். கவர்ச்சிகரமாக அவர் உடைகள் அணிந்திருந்தார். போர்க்களத்திற்குப் பொருத்தமான ஒரு ராணுவத் தோற்றம் அவரிடம் காணப்பட்டது. ஒரு நீண்ட கோட்டை அவர் அணிந்திருந்தார். குட்டுஜோவைப் போலவே, தமது தோளில் ஒரு சிறிய சவுக்கையும் தொங்க விட்டிருந்தார்.

இதற்கிடையில் குட்டுஜோவ் கிராமத்திற்கு வந்து சேர்ந்து, சமீபத்தில் இருந்த ஒரு வீட்டின் நிழலில் ஒரு பெஞ்சு மீது அமர்ந்தார். அந்த பெஞ்சை ஒரு கோசாக் அவசரமாகத் தூக்கிக் கொண்டு வந்து போட்டான். அந்த பெஞ்சின் மீது ஒரு கம்பளத்தை மற்றொரு கோசாக் விரித்தான். ஒரு பிரம்மாண்டமான, திவ்யமான பரிவாரங்கள் அவரைச் சூழ்ந்து நின்றன.

அந்த தெய்வச் சிலை, அந்தக் கூட்டம் பின் தொடர, மேலும் ஊர்வலமாகக் கொண்டு போகப்பட்டது. குட்டுஜோவிற்கு 30 அடிகளுக்கு அப்பால், போரிஸோடு பேசிக்கொண்டு பீயர் நின்றார்.

யுத்தம் நடக்கும்பொழுது தாம் அங்கிருக்க விரும்புவதாகவும், ராணுவ வியூகங்களைப் பார்க்க விரும்புவதாகவும் அவர் சொன்னார்.

'நீர் செய்ய வேண்டியது, இதுதான். எங்களுடைய முகாமின் சார்பாக, உமக்கு வேண்டிய மரியாதைகளை நான் செய்வேன். கோமகன் பெனிக்ஸன் எங்கே இருப்பாரோ, அங்கிருந்து நீர் ஒவ்வொன்றையும் பார்க்கலாம். நான் அவரிடம் அலுவலில் இருக்கிறேன் என்பது உமக்குத் தெரியும். உம்மைப் பற்றி அவரிடம் நான் பேசுகிறேன். வியூகங்களைச் சுற்றிப் பார்க்க நீர் விரும்புவீரானால், எங்களுடன் நீர் வரலாம். நாங்கள் இப்பொழுது இடது பக்கவாட்டிற்கு போகப் போகிறோம். அப்புறம் பின்னால் திரும்பி வந்த பின்பு, இரவில் நீர் என்னுடன் தங்க வேண்டும். சீட்டு விளையாடுவதற்கு நான் ஏற்பாடு செய்கிறேன். டிமிட்ரி சேர்கீவிச்

என்பவரை உமக்குத் தெரியும். அவையெல்லாம் அவருடைய விடுதிகள்தான்' என்று அவர் சொல்லி, கோர்க்கி கிராமத்தில் உள்ள மூன்றாவது வீட்டைச் சுட்டிக் காட்டினார்.

'ஆனால், நான் வலது பக்கவாட்டைப் பார்க்க விரும்புகிறேன். அது ரொம்ப பலமானது என்று அவர்கள் சொல்லுகிறார்கள். மாஸ்க்வா நதியிலிருந்து ஆரம்பித்து, வியூகங்கள் பூராவையும் சுற்றிப் பார்க்க நான் விரும்புகிறேன்' என்று பீயர் சொன்னார்.

'நல்லது, அதை நீர் பின்னால் செய்து கொள்ளலாம். ஆனால். முக்கியமான விஷயம், இடது பக்கவாட்டுதான்'

'ஆம், ஆம், இளவரசர் பால்கோன்ஸ்கியின் பட்டாளம் எங்கே இருக்கிறது? அதை நீர் எனக்குச் சுட்டிக்காட்ட முடியுமா?'

'இளவரசர் ஆண்ட்ரூவுடைய பட்டாளமா? நாம் அதைக் கடந்து போவோம். அவரிடம் உம்மை அழைத்துப் போகிறேன்'

'இடது பக்கவாட்டைப் பற்றி என்ன சொல்லுகிறீர்?' என்று பீயர் கேட்டார்.

'நமக்குள்ளாகப் பேசிக் கொள்ளுவோமானால், உமக்கு உண்மையை சொல்லுவதாய் இருந்தால், நமது இடது பக்கவாட்டு எந்த நிலைமையில் இருக்கிறது என்பதைக் கடவுளே அறிவார்' என்று, அந்தரங்கமாய்த் தமது குரலைத் தாழ்த்தி, போரிஸ் கூறினார். 'கோமகன் பெனிக்ஸன் விரும்பியபடி அது இல்லவேயில்லை. அந்த மேட்டை வேறு விதமாகப் பாதுகாப்பு செய்ய அவர் விரும்பினார். ஆனால்...' என்று போரிஸ் சொல்லி, தமது தோள்களைக் குலுக்கினார். 'அந்த கலங்காத மேன்மை தங்கியவர்' அப்படிச் செய்வதற்கு விரும்பவில்லை. அல்லது, யாராவது அவரிடம் அம்மாதிரி சொல்லி, அவர் சம்மதிக்கும்படி செய்திருக்க வேண்டும். நீர் பாரும்...' என்று சொல்லிய போரிஸ், அதை முடிக்கும் முன்பாக, குட்டுஜோவின் உதவியாளரான காய்சாராவ் என்பவர் பீயரிடம் வந்தார். 'ஆ, காய்சாராவ் என்று தயக்கமில்லாத புன்னகையோடு, போரிஸ் அவரைப் பார்த்துப் பேசினார். 'நம்முடைய வியூகங்களைப்பற்றி கோமகனிடம் விளக்கிக் கூற முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். அந்த பிரஞ்சுக்காரர்களின் எண்ணங்களை, எம்மாதிரியாக நமது ''கலங்காத மேன்மை தங்கியவர்'' முன்னதாக அறிந்து கொண்டார் என்பது ஒரே மலைப்பாய் இருக்கிறது' என்று போரிஸ் சொன்னார்.

'இடது பக்கவாட்டைப் பற்றி நீர்பேசுகிறீரா?' என்று காய்சாராவ் கேட்டார்.

'ஆம், அதுவேதான். இடது பக்கவாட்டு இப்பொழுது மிகுந்த பலமானதாய் இருக்கிறது.'

'குட்டுஜோவ் தமது பரிவாரத்திலிருந்து அவசியம் இல்லாதவர்களையெல்லாம் விலக்கி விட்டபோதிலும், எப்படியோ தலைமைக் காரியாலயத்திலேயே தாம் தங்கியிருக்கும்படி போரிஸ் செய்து கொண்டார். கோமகன் பெனிக்ஸனோடு அவர் ஒட்டிக் கொண்டார். யாரிடமெல்லாம் போரிஸ் சேவை செய்தாரோ, அவர்களைப் போலவே கோமகன் பெனிக்ஸனும், அந்த வாலிப இளவரசர் ட்ரூபெட்ஸ்கோய் ஒரு அத்தியாவசியமான மனிதர் என்று நினைத்தார்.

ராணுவத்தில் மேலிடத்தில் இரண்டு தெளிவாய் பிரிந்த கட்சிகள் இருந்தன. ஒன்று, குட்டுஜோவின் கட்சி. மற்றொன்று, ராணுவக் காரியாலயத்தின் தலைவரான பெனிக்ஸனின் கட்சி. இந்த பெனிக்ஸனின் கட்சியைத்தான் போரிஸ் சேர்ந்தவர். குட்டுஜோவிடம் மிகுந்த பணிவான மரியாதையையும் காட்டிக்கொண்டு, அதே சமயத்தில் அந்த வயதானவரால் நன்மை எதுவும் செய்ய முடியாதென்றும், பெனிக்ஸன்தான் எல்லாவற்றையும் கவனித்து வருகிறார் என்றும், ஒரு அபிப்பிராயத்தை போரிஸைப் போல வேறு யாராலும் உண்டு பண்ண முடியாது. இப்பொழுது யுத்தத்தின் முடிவான கட்டம் வந்து விட்டது. இதிலே குட்டுஜோவ் அழிந்து போவார் என்றும், பெனிக்ஸனிடம் அதிகாரம் வந்து விடுமென்றும் அவர்கள் நினைத்தார்கள். ஒருவேளை இந்த யுத்தத்தில் குட்டுஜோவ் வெற்றி பெற்ற போதிலும், எல்லாவற்றையும் பெனிக்ஸனே செய்தார் என்ற அபிப்பிராயத்தை உண்டுபண்ணும்படி செய்யப் பட்டு வந்தது. எப்படியிலிருந்தாலும், நாளைய போருக்காக பல பெரிய பரிசுகள் கொடுக்க வேண்டியிருக்கும். புதிதான மனிதர்கள் மேல் பதவிகளுக்கும் வருவார்கள். ஆகவே, அன்று பூராவாக உற்சாகமான பரபரப்போடு போரிஸ் காணப்பட்டார்.

காய்சாராவுக்குப் பின்னால், பீயரை அறிந்து மற்றவர்கள் அவரிடம் வந்தார்கள். மாஸ்கோவைப் பற்றி அவர் மீது பொழியப்பட்ட எல்லா கேள்விகளுக்கும் பதில் சொல்லுவதற்கு அவருக்கு அவகாசமில்லை. அல்லது, அவரிடம் சொல்லியவை களை எல்லாம் கேட்பதற்கும் அவருக்கு அவகாசமில்லை. அந்த முகங்களிலெல்லாம் பரபரப்பும் பீதியும் காணப்பட்டன. சிலருடைய முகங்களில் காணப்பட்ட அந்தப் பரபரப்புகளுக்கு எல்லாம் முக்கியமான காரணம், சொந்த வெற்றிகளைப்

பொறுத்ததாகவே இருக்கும் என்று அவருக்குத் தோன்றியது. வேறு சிலருடைய முகங்களில் காணப்பட்ட வேறு வகையான தோற்றங்களைப் பற்றியே பீயர் நினைத்துக்கொண்டிருந்தார். அந்தத் தோற்றங்கள் அவர்களுடைய சொந்த காரியங்களைக் காட்டுவதாய் இல்லை. அவை, பொதுவான பிரச்னைகளான வாழ்வதா, சாவதா என்பவைகளையே காட்டிக்கொண்டிருந்தன. பீயரின் உருவத்தையும், அவரைச் சுற்றிக் கூடியிருந்த கூட்டத்தையும், குட்டுஜோவ் கவனித்தார்.

'அவரை என்னிடம் அழைத்து வாருங்கள்' என்றார் குட்டுஜோவ்.

'கலங்காத மேன்மை தங்கியவரின் விருப்பதை, ஒரு உதவியாளர் பீயரிடம் வந்து கூறினார். குட்டுஜோவ் அமர்ந்திருந்த பெஞ்சை நோக்கிப் பீயர் போனார். ஆனால், அவர் போவதற்கு முன்பாக, பாதுகாப்புப் படையைச் சேர்ந்த ஒருவர், அவருக்கு முன்னால் போய்ச் சேர்ந்தார். அவர் தான் டோலாகாவ்.

'அந்தப் பேர்வழி இங்கே எப்படி வந்து சேர்ந்தார்?' என்று பீயர் கேட்டார்.

'அது எந்த இடத்திலும் நெளிந்த நுழையக் கூடிய ஒரு ஜந்து' என்று ஒருவர் பதில் கூறினார்.

'அவரைப் பதவியிலிருந்து கீழே இறக்கிவிட்டார்கள் என்பது உமக்குத் தெரியுமே. மீண்டும் அவர் மேலே வர விரும்புகிறார். ஏதாவது ஒரு புதிய திட்டத்தைப் பற்றியும் அவர் பேசிக் கொண்டிருப்பார். எதிரியின் காவல் அணிக்குள்ளாக இரவு நேரத்தில் ஊர்ந்து சென்றார்... அவர் ஒரு தைரியமான பேர்வழி.'

தமது தொப்பியை எடுத்து விட்டு, மரியாதையோடு குட்டு ஜோவுக்கு பீயர் தலை வணங்கினார்.

'நான் ''கலங்காத மேன்மை தங்கிய''வரிடம் வந்து அறிக்கையிட்டால், நீர் என்னை எங்காவது அனுப்பி விடலாம். அல்லது, நான் சொல்லப் போவது, உமக்கு முன்பே தெரியுமென்று சொல்லலாம் என்று நான் நினைத்தேன். ஆனால், எனக்கு எதையும் இழக்க விருப்பமில்லை...' என்று டோலாகாவ் சொல்லிக் கொண்டிருந்தார்.

'ஆம், ஆம்.'

'ஆனால், நான் சொல்லுவது சரியாய் இருந்தால், என்னுடைய தந்தை நாட்டிற்கு நான் ஒரு சேவை செய்வதாய் இருக்கிறது. அதற்காக நான் சாவதற்கு தயாராய் இருக்கிறேன்.'

'ஆம், ஆம்.'

'தன்னுடைய உயிரைக் கவனிக்காத ஒரு மனிதன் வேண்டுமென்று, ''கலங்காத மேன்மை தங்கியவர்'' எப்பொழுதாவது விரும்பினால், தயவுசெய்து என்னை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்... ''கலங்காத மேன்மை தங்கியவருக்கு நான் மிகுந்த உபயோகமுள்ளவன் என்பதைக் காட்ட முடியும்.''

'ஆம்... ஆம்...' என்று குட்டுஜோவ் திருப்பிச் சொன்னார்.

அவருடைய சிரித்துக் கொண்டிருக்கும் கண்ணை வரவர இடிக்கி பீயரைப் பார்த்தார்.

ஒரு தூதருக்குள்ள சமத்காரத்தோடு பீயருக்குப் பக்கத்தில் குட்டுஜோவுக்கு சமீபமாக, ஒரு இயற்கையான முறையில் வந்து நிற்பதைப் போல, போரிஸ் வந்து சேர்ந்தார். ஏதோ விட்டுப் போன பேச்சைத் தொடர்ந்து பேசுவதைப் போல, தமது குரலை உயர்த்தாமல் பீயரிடம் சொன்னார்:

'சாவதற்குத் தயாராக பாதுகாப்புப் படையினர்கள் வெண்மையான ஷர்ட்டுகளை அணிந்து கொண்டிருக்கிறார்கள். எப்பேர்ப்பட்ட வீரத்தனம், கோமகனே!'

'கலங்காத மேன்மை தங்கியவர்' இதைக் கேட்க வேண்டும் என்ற எண்ணத்துடனேயே, இதைப் பற்றி பீயரிடம் போரிஸ் கூறினார் என்பது தெளிவாய் இருந்தது.

'பாதுகாப்புப் படையினரைப் பற்றி நீர் என்ன சொல்லுகிறீர்?' என்று குட்டுஜோவ் கேட்டார்.

'நாளைய தினம் சாவதற்குத் தயாராக, அவர்கள் சுத்தமான ஷர்ட்டுகளை அணிந்திருக்கிறார்கள், கலங்காத மேன்மை தங்கியவரே.'

'ஆ... ஒரு ஆச்சரியமான, ஈடு இணையற்ற மக்கள்' என்று குட்டுஜோவ் சொன்னார். தமது கண்களை டிக்கொண்டு, தலையை இப்படியும் அப்படியும் ஆட்டினார். 'ஈடு இணையற்ற மக்கள்' என்று ஒரு பெருச்சோசு திருப்பிச் சொன்னார்.

'அப்படியானால், வெடிமருந்து வாசனையை நீர் முகர்ந்து பார்க்க விரும்புகிறீரா?' என்று பீயரை நோக்கிச் சொன்னார். 'ஆம், அது ஒரு மகிழ்ச்சியான வாசனை. உமது மனைவியைப் போற்றுகிறவர்களில் நான் ஒருவனாய் இருக்கும் பெருமையைப் பெற்றிருந்தேன். அவள் சௌக்கியமாய் இருக்கிறாளா? எனது ஜாகையை உம்முடையவதாக நீர் உபயோகித்துக் கொள்ளலாம்.'

தாம் சொல்ல விரும்பியதையோ, செய்ய விரும்பியதையோ மறந்துவிட்டதைப் போல, பராக்குப் புத்தியோடு வயோதிகர்கள்

சுற்றிலும் பார்த்துக்கொண்டிருப்பது, அடிக்கடி நேரிடலாம். அதே மாதிரி குட்டுஜோவும் செய்தார்.

அப்புறம் தாம் விரும்பியதை நினைவு கூர்ந்தவரைப் போல, தமது உதவியாளரின் சகோதரரான ஆண்ட்ரூ காய்சாராவ் என்பரை அழைத்தார்.

'அந்த கவிதைகள்... மாரினுடைய அந்த கவிதைகள்... அவையெல்லாம் எப்படியிருக்கின்றன? ஜெராக்காவைப் பற்றி அவர் எழுதியவை, 'துருப்புகளுக்குச் சொல்லிக்கொடுக்கும் பிரசங்கங்கள்'... அந்தக் கவிதைகளைச் சொல்லும், அவைகளைச் சொல்லும்' என்று அவர் சிரிப்பதற்குத் தயாராக இருப்பதைப்போலக் கூறினார்.

காய்சாராவ் அந்தக் கவிதையைப் பாடினார்... அந்தக் கவிதையின் தாளத்திற்குத் தகுந்தபடி, புன்முறுவலோடு குட்டுஜோவ் தமது தலையை ஆட்டிக்கொண்டிருந்தார்.

குட்டுஜோவை விட்டு பீயர் புறப்பட்டுப்போனதும், அவருக்குப் பின்னால் டே'லாகாவ் வந்து அவருடைய கையைப் பற்றினார்.

'உம்மை நான் இங்கே சந்திப்பதற்கு மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன், கோமகனே' என்று அவர் பலமாய் சொன்னார். அங்கு நின்ற அந்நியர்களைக் கொஞ்சமும் அவர் கவனிக்காமல், ஒரு குறிப்பிட்ட, உறுதியான, பவித்திரமான குரலில் கூறினார். 'நாளை யார் உயிருடன் இருப்பார்கள் என்பதைக் கடவுளே அறிவார். அப்பேர்ப்பட்ட தினத்தின் முதல் நாளாகிய இன்று, எனக்கு உம்மிடம் பேசுவதற்கான இந்த சந்தர்ப்பம் கிடைத்ததைப் பற்றி நான் மகிழ்ச்சியடைகிறேன். அதாவது, நமக்குள் ஏற்பட்ட மனஸ்தாபங்களைப் பற்றி நான் மிகவும் வருந்துகிறேன். நீர் என் மீது எவ்வித்மான மனக்கசப்பும் கொள்ளக்கூடாது என்று நான் விரும்புகிறேன். என்னை மன்னிக்கும்படி உம்மை நாம் கெஞ்சுகிறேன்.'

டேலாகாவை ஒரு புன்னகையோடு பீயர் நோக்கினார். அவரிடம் என்ன பேசுவது என்பது அவருக்குத் தெரியவில்லை. கண்களில் நீர் நிறைந்து நிற்க, டோலாகாவ் பீயரைத் தழுவி முத்தமிட்டார்.

தமது ஜெனரலிடம் போரிஸ் ஏதோ சில வார்த்தைகள் பேசினார். கோமகன் பெனிக்ஸன் பீயரை நோக்கி, அவர் தம்முடன் அணி வரிசைக்கு வரலாமென்று கூறினார்.

'அது உமக்கு சுவாரஸ்யமாய் இருக்கும்' என்றார்.

'ஆம், ரொம்ப, ரொம்ப' என்று பீயர் பதில் அளித்தார்.

அரை மணி நேரம் கழித்து, டாட்டாரினாவிற்கு குட்டுஜோவ் புறப்பட்டுப் போனார். தமது பரிவாரங்களுடனும், பீயருடனும், பெனிக்ஸன் அணி வரிசைகளைச் சுற்றிப் பார்ப்பதற்காகப் புறப்பட்டுப் போனார்.



கோர்க்கியிலிருந்து பிரதான ரஸ்தா வழியாக பெனிக்ஸன் கீழே இறங்கி, குன்றின் மேலிருந்து அவர்கள் பார்த்து பாலத்தை நோக்கிப் போனார். அந்த இடத்தைத்தான், நமது வியூகத்தின் பத்திய பாகம் என்று அந்த அதிகாரி சுட்டிக் காட்டினார். பாலத்திற்குப் பக்கத்தில், ஆற்றோரமான புதிதாய் அறுத்த கதிர் கட்டுகள், மணம் வீசிக்கொண்டு வரிசை வரிசையாகக் கிடந்தன. பாராடினோ என்ற கிராமத்திற்கு, அந்தப் பாலத்தைக் கடந்து அவர்கள் போனார்கள். பின்னால், இடது பக்கம் திரும்பினார்கள். ஏராளமான துருப்புகளையும் பீரங்கிகளையும் கடந்து சென்றார்கள். அப்புறம், ஒரு உயரமான குன்றுகள் அவர்கள் வந்து சேர்ந்தார்கள். அங்கே பாதுகாப்புப் படையினர் அரண்களை வெட்டிக் கொண்டிருந்தார்கள். இந்த அரண்களுக்கு அப்பொழுது பெயர் ஒன்றும் கொடுக்கப் படவில்லை. பின்னால், இந்த அரண்களை ராயேவ்ஸ்க் அரண்கள் என்றோ, அல்லது குன்று பீரங்கிப் படையென்றோ அழைக்கப்பட்டன. இவைகளைப் பற்றி பீயர் விசேஷ கவனம் செலுத்தவில்லை. இந்த அரண்கள், அந்த பாராடினோவிலுள்ள சமவெளியில் வேறு எந்த இடத்தையும் விட, மிகவும் முக்கியமான, ஞாபகத்தில் வைத்துக்கொள்ளக்கூடிய இடமாக அமையும் என்பது,அவருக்கு அப்பொழுது தெரியாது.

அவர்கள் பின்னால், செமியோனாவ்ஸ்க் என்ற இடத்திற்குப் போகிற பள்ளத் தாக்கைக் கடந்தார்கள். அங்கே சிப்பாய்கள் குடிசைகளிலிருந்தும், தானியக் களஞ்சியங்களிலிருந்தும், மரக் கட்டைகளை இழுத்து வந்து கொண்டிருந்தார்கள். பின்னால், அவர்கள் குன்றிலே மேலும் கீழும் இறங்கி ஏறினார்கள். ஒரு இடத்தில் புயல் அடித்த மாதிரி, ரை தானிய வயல்கள் மிதித்து சமட்டப் பட்டிருந்தன. உழும் போட்டிருந்த ஒரு இடத்தசூல், பீரங்கி வண்டிகள் சென்ற பாதைகள் தோன்றின. அதையும் கடந்து அவர்கள் சென்று, புதிதாக அரண்கள் வெட்டிக் கொண்டிருந்த ஒரு இடத்திற்கு போய்ச் சேர்ந்தார்கள்.

அந்த அரண்களின் பக்கத்தில் பெனிக்ஸன் நின்றார். தமக்கு எதிரே இருந்த ஷெவார்டினா அரண்களைப் பார்க்க ஆரம்பித்தார். ஒரு தினத்திற்கு முன்னால், அந்த அரண்கள் நம்முடையவைகளாக இருந்தன. அங்கே பல குதிரை வீரர்களை, அவர்கள் தூரத்தில் பார்க்க முடிந்தது. அந்த இடத்தில் நெப்போலியனோ, அல்லது முராட்டோ தங்கியிருப்பதாக, அதிகாரிகள் சொன்னார்கள். அவர்கள் எல்லோரும், குதிரை வீரர்களான அந்தச் சிறிய கூட்டத்தை ஆவலோடு நோக்கினார்கள். அந்தக் கூட்டத்தில், நன்றாகத் தெரியாமல் நின்று கொண்டிருந்த அந்த உருவங்களில், நெப்போலியன் யாராய் இருக்கக்கூடும் என்பதை, யூகித்து அறிவதற்கு முயற்சி செய்ய, பீயரும் அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். கடைசியாக, அந்தக் குன்றிலிருந்த குதிரை வீரர்கள், அங்கிருந்து புறப்பட்டு போய் மறைந்து போனார்கள்.

தம்மை நெருங்கி வந்த ஒரு ஜெனரலிடம் பெனிக்ஸன் பேசினார். அந்த ஜெனரல் நமது துருப்புகளின் பூரா அணிவகுப்புகளைப் பற்றியும் விளக்க ஆரம்பித்தார். தம்முடைய சாமர்த்தியம் பூராவையும் ஒன்று திரட்டி, வரப்போகும் போரைப் பற்றிய முக்கியமான விஷயங்களை அறிந்து கொள்ளுவதற்காக, அவர் பேசியவைகளை பீயர் கவனித்துக் கேட்டார். ஆனால், அதை கிரகித்துக் கொள்ள நமக்குச் சக்தி இல்லை என்பதை அவர் நினைத்தபொழுது, அவருக்கு அவமானமாய் இருந்தது. அந்தப் பேச்சிலிருந்து அவரால் ஒன்றும் புரிந்து கொள்ள முடியவில்லை. பீயர் கவனித்துக் கேட்கிறார் என்பதை பெனிக்ஸன் அறிந்தவுடன், பேசுவதை நிறுத்தி திடீரென்று அவரைப் பார்த்துக் கூறினார்.

'இது உமக்கு சுவாரஸ்யமாய் இருக்குமென்று நான் நினைக்க வில்லை.'

'அதற்கு மாறாக, அது மிகவும் சுவாரஸ்யமாய் இருக்கிறது' என்று பீயர் சொன்னார். அவர் சொல்லியது முற்றிலும் உண்மையான தல்ல.

அந்த அரண்களிலிருந்து இடது பக்கமாக மேலும் போனார்கள். அடர்த்தியான பூவரசு மரங்கள் கொண்ட ஒரு காடு வழியாக, அந்த ரஸ்தா போய்க்கொண்டிருந்தது. அந்தக் காட்டின் மத்தியில் வந்ததும், குதிரைகளின் குளம்படி ஓசைகளைக் கேட்டு, பீதியுற்ற ஒரு பழுப்பு நிறமும் வெள்ளைக் கால்களும் கொண்ட முயல், திடீரென்று துள்ளிப் பாய்ந்தது. அது மிகவும் குழப்பம் அடைந்திருந்தபடியால், அந்த ரஸ்தாவிலேயே, அவர்களுக்கு முன்பாக கொஞ்சம் தூரம் ஓடிக்கொண்டேயிருந்தது. அதைப் பார்த்து அவர்கள் சிரித்தார்கள்.

பல குரல்கள் அதைப் பார்த்து கூச்சலிட்ட படியால், ஒரு பக்கமாக அது பாய்ந்து அந்தப் புதரில் மறைந்து விட்டது. அந்தக் காடு வழியாக ஒன்றரை மைல் தூரம் அவர்கள் போன பின்பு, ஒரு வெட்ட வெளிக்கு வந்து சேர்ந்தார்கள். டுச்காவின் பிரிவைச் சேர்ந்த படைகள், இடது பக்கவாட்டைப் பாதுகாப்பதற்காக, அங்கே நிறுத்தி வைக்கப்பட்டிருந்தார்கள்.

அந்த இடது பக்கவாட்டில் கடைசி முனையில் நின்று, மிகுந்த உஷ்ணத்தோடு வெகு நேரம் பெனிக்ஸன் பேசினார். அவர் பேசியதைக் கவனித்த பீயர், பிரமாதான, முக்கியத்துவம் வாய்ந்த உத்திரவுகளை, அவர் கொடுத்துக் கொண்டிக்கிறார் என்று நினைத்தார். டுச்காவில் துருப்புகளுக்கு எதிராக, ஒரு உயரமான இடம், இன்னும் துருப்புகளால் ஆக்கிரமிக்கப் படாமல் இருந்தது. இந்தத் தவறைப் பார்த்து பெனிக்ஸன் பலத்த குரலில் குறை கூறினார். சுற்றுப்புறங்களை நன்றாகப் பார்க்கக்கூடிய, அந்த உயரமான இடத்திற்குக் கீழாக, துருப்புகள் இருக்கும்போது, அந்த உயரமான இடத்தில் மட்டும் துருப்புகளை வைக்காமல் விட்டு வைத்திருப்பது பைத்தியக்காரத்தனம் என்று அவர் கூறினார். அங்கிருந்த ஜெனரல்கள் வேறு சிலரும் அதே அபிப்பிராயத்தையே வெளியிட்டார்கள். குறிப்பாக ஒருவர், மிகுந்த ராணுவ ஜபர்தஸ்தோடு அம்மாதிரி விட்டு வைத்திருப்பது துருப்புகளைப் பலியிடுவதைப் போலாகும் என்று சொன்னார். அந்த உயரமான இடத்தை துருப்புகள் ஆக்கிரமிக்கும்படி, தமது சொந்த அதிகாரத்தில் பெனிக்ஸன் உத்தரவிட்டார்.

இடது பக்கவாட்டிலுள்ள இந்த வியூக அமைப்பானது, ராணுவ விவரங்களை அறிந்து கொள்ளுவதற்கு, தமது சக்தி இல்லை என்ற சந்தேகத்தை பீயருக்கு இன்னும் அதிகமாக்கியது. குன்றிற்குப் பின்னால் வைக்கப்பட்டிருந்த நமது துருப்புகளின் நிலைமையைப் பற்றி, பெனிக்ஸனும் மற்ற ஜெனரல்களும் குற்றம் கூறியதை, பீயர் அறிந்துகொண்டார். அவர்களுடைய அபிப்பிராயத்தை தாமும் ஆதரித்தார். ஆனால், அந்தக் குன்றிற்குப் பின்னால் துருப்புகளை வைக்கும்படி உத்தரவு கொடுத்த அதிகாரி, இவ்வளவு பெரிய பாதகமான ஊழலை எப்படி செய்ய முடியும் என்பதை அறிய முடியவில்லை.

பெனிக்ஸன் நினைத்தபடி, அந்தத் துருப்புகளை அங்கே பாதுகாப்பதற்காக வைக்கவில்லை என்பது பீயருக்குத் தெரியாது. அவர்கள் அங்கே மறைவான இடத்தில் வெளியே தெரியாமல் இருந்து, நெருங்கி வரும் எதிரியை திடீரென்று தாக்குவதற்காகவே

வைக்கப்பட்டிருந்தார்கள். பெனிக்ஸனுக்கு இது தெரியாது. சேனாதிபதியைக் கலந்து கொள்ளாமல், தமது விருப்பப்படி அந்தத் துருப்புகளை மேலே நகரும்படி உத்தரவிட்டார்.




ஆகஸ்டு 25-ந் தேதியன்று ஒரு பிரகாசமான மாலையில், கினியாஜ்கோவா என்ற கிராமத்திலுள்ள ஒரு கொட்டகையில், இளவரசர் ஆண்ட்ரூ தமது முழங்கை மீது சாய்ந்து கொண்டு படுத்திருந்தார். அவருடைய பட்டாளத்தின் முகாம்களில் ஒரு கோடி அந்த கிராமத்தில் இருந்தது. இடிந்து போன அந்த சுவரில் காணப்பட்ட ஒரு ஓட்டை வழியாக, அதைச் சுற்றியிருந்த மரக்கட்டை வேலிக்கு அப்பால், 30 வருஷங்களான பூவரசு மரங்களின் வரிசையை அவர் பார்த்துக் கொண்டிருந்தார். அந்த மரங்களிலுள்ள தாழ்ந்து அவருக்குத் தோன்றிய ஒரு வயலில், ஓட்ஸ் தானிய கதிர்கள் கூர்கூராக நின்ற கொண்டிருந்தன. அங்கிருந்த சில புதர்களுக்குப் பக்கத்தில், கணப்பு மூட்டங்களிலிருந்தும், சிப்பாய்களின் சமையல் அறைகளிலிருந்தும், புகைகள் கிளம்பிக் கொண்டிருப்பது அவருக்குத் தோன்றின.

7 வருஷங்களுக்கு முன்னால், ஆஸ்டர்லிட்ஜ் போர்க்களத்தில், அவருக்கு எம்மாதிரி பரபரப்பும் எரிச்சலும் தோன்றினவோ, அதே மாதிரி யுத்தத்திற்கு முதல் நாளாகிய அன்றும் தோன்றின. அவருடைய வாழ்க்கை குறுகியதாகவும், சுமையானதாகவும் யாருக்கும் பிரயோஜனமற்றதாகவும், அவருக்குத் தோன்றியது.

மறுநாள் நடக்கப் போகும் போரைப் பற்றிய உத்தரவுகளை அவர் பெற்றார். அதே மாதிரி, அந்தப் போருக்கு வேண்டிய உத்தரவுகளையும் அவரும் பிறப்பித்து விட்டார். இப்பொழுது வேறு செய்வதற்கு வேலை எதுவும் இல்லை. எளிதான, தெளிவான, அவற்றால் மிகுந்த பயங்கரமான அவருடைய சிந்தனைகள், அவருக்கு அமைதியைக் கொடுக்கவில்லை. அவர் இதுவரை கலந்து கொண்ட போர்களி'லி எல்லாம், நாளைக்கு நடக்கப் போகும் போரே, மிகுந்த பயங்கரமாய் இருக்குமென்பதை அவர் அறிவார். அவருடைய வாழ்க்கையில் மரணம் நேரலாம் என்ற பிரச்னை முதல் தடவையாக அவருக்குத் தோன்றியது. மரணத்தினால் ஏற்படக்கூடிய உலக விவகாரங்களைப் பற்றியோ, அல்லது அதனால் மற்றவர்களுக்கு ஏற்படும் பலன்களைப்

பற்றியோ, அவர் நினைத்துக் கொண்டிருக்கவில்லை. அந்த மரணத்தினால் ஏற்படும் தம்மைப்பற்றிய, தம்முடைய ஆத்மாவைப் பற்றிய பலன்களைப் பற்றியே, அவர் நினைத்துக் கொண்டிருந்தார். அந்த மரணம் என்பது, மிகுந்த தெளிவாகவும், வெளிப்படையாகவும், பயங்கரமாகவும், அநேகமாய் நிச்சயமாய் நடக்கக்கூடும் என்பதைப் போலவும் அவருக்குத் தோன்றியது. முன்னால் அவரை வருத்தி வந்த, அவருடைய சிந்தனையைக் கவர்ந்து வந்தவைகள் எல்லாம், அவருடைய இந்த மனக் காட்சியின் உச்சியிலிருந்து பார்க்கப்பட்ட போது, இப்பொழுது நிழல்கள் இல்லாத, கனிவற்ற வெள்ளை வெளிச்சத்தால் பிரகாசமடைந்து காணப்படுவது போலவும், உருவகக் காட்சி அதற்கு எதுவும் இல்லாதது போலவும் தோன்றின. சினிமா படங்களைப் போல, அவருடைய வாழ்க்கை அவருக்குக் காணப்பட்டது. அந்தப் படங்களை, செயற்கை வெளிச்சத்தில் ஒரு கண்ணாடி மூலம், வெகு காலமாக அவர் பார்த்து வந்து கொண்டிருக்கிறார். அந்தப் படங்கள் எல்லாம், இப்பொழுது அவருக்கு மோசமாக வரைந்த படங்களைப் போல, பகல் வெளிச்சத்தில் கண்ணாடியில்லாமல் தோன்றின. 'ஆம், ஆம்! அந்த போலி உருவங்கள், அதோ, அங்கே இருக்கின்றன. அவைதான் எனக்கு பரபரப்பையும், பரவசத்தையும், மன வேதனையையும் கொடுத்தன' என்று அவர் தமது வாழ்க்கையிலுள்ள முக்கியமான காட்சிகளின் படங்களைப் பற்றி ஆலோசனை செய்தபோதும், அவருடைய மரணத்தின் மனக்காட்சியான அந்த கனிவற்ற வெள்ளைப் பகல் வெளிச்சத்தில் அவர் பார்த்த போதும், தமக்குள்ளாகவே சொல்லிக் கொண்டார். 'அதோ, அவை அங்கே இருக்கின்றன. அந்த மோசமாக வரையப்பட்ட படங்கள் அங்கே இருக்கின்றன. அவைதான், ஒரு காலத்தில் சிலாக்கியமாகவும், ரகசியங்களாகவும் தோன்றின. கீர்த்தி, உயர் வட்டாரத்தின் நன்மை, ஒரு பெண்ணின் காதல், தந்தை நாடு, இவையெல்லாம் எவ்வளவு முக்கியமானவைகளாகவும், மிக உயர்ந்த அர்த்தம் கொண்டவைகளாகவும் எனக்குத் தோன்றி வந்தன. இவையெல்லாம் இந்த காலை நேரத்தின் அந்த கனிவற்ற வெள்ளை வெளிச்சத்தில், மிகவும் அற்பமாகவும், வெளிறிப் போயும், அழகில்லாதவையாயும் தோன்றுகின்றன. அந்த வெள்ளை வெளிச்சம் எனக்காகவே உதயமாவதாகத் தோன்றுகிறது. அவருடைய வாழ்க்கையில் ஏற்பட்ட மூன்று பெரிய துக்கங்கள், அவருடைய கவனத்தை முக்கியமாக இப்பொழுது கவர்ந்து நின்றன: ஒரு பெண்ணின் மீது அவர் கொண்ட காதல், அவருடைய தந்தையின் மரணம், பாதிக்கு மேல் ருஷ்யாவை பிரெஞ்சுப்

படையெடுப்பு ஆக்கிரமித்துக் கொண்டது. 'காதல்!... அந்த சிறிய பெண் அவளிடம் மாய சக்திகள் நிறைந்து வழிந்ததாக எனக்குத் தோன்றியது. ஆம், நான் நிச்சயமாக அவளைக் காதலித்தேன். அவளுடன் காதலோடும், மகிழ்ச்சியோடும் இருப்பதற்கான, மனோகரமான திட்டங்களை வகுத்தேன். ஓ, நான் எப்பேர்ப்பட்ட பையன்' என்று அவர் மனக் கசப்போடு, பலமாய் வாய் விட்டு கூறினார். 'ஆ, நான்! ஒரு லட்சியக் காதலில் நம்பிக்கை கொண்டிருந்தேன், ஒரு வருஷம் நான் இங்கே இல்லாதபோது, அவள் என்னிடம் விசுவாசத்தோடு இருக்கும்படி, அந்தக் காதல் செய்யுமென்று நான் நம்பினேன்! கதைகளில் சொல்லப்பட்ட அந்த அமைதியான புறாவைப் போல, என்னை விட்டுப் பிரிந்திருப்பதால் வாடிக் கொண்டிருப்பாள்... அதெல்லாம் உண்மையாகவே ரொம்ப சுலபமானது. அவையெல்லாம் ரொம்ப சுலபம், ரொம்ப பயங்கரம்.

பால்டு ஹில்ஸ் மாளிகையை எனது தந்தை கட்டியபொழுது, அந்த மாளிகையும், அந்த நிலமும், அந்தக் காற்றும், அவருடைய விவசாயிகளும், அவரைச் சேர்ந்தவை என்று நினைத்தார். ஆனால், நெப்போலியன் வந்து அவரை ஒதுக்கித் தள்ளிவிட்டார். அவர் ஒருவர் இருந்தார் என்பதே அவருக்குத் தெரியாது. பாதையில் கிடக்கிற சுள்ளியை எப்படி ஒதுக்கித் தள்ளுவோமா, அதேமாதிரி அவர் தள்ளினார். எனது தந்தையின் பால்டு ஹில்ஸ் மாளிகையில் அவருடைய முழு வாழ்க்கையும் உடைந்து சிதறிப் போயின. இது கடவுளிடமிருந்து வரும் ஒரு சோதனை என்று இளவரசி மேரி சொல்லுகிறாள். ஆனால், அவர் இங்கே இல்லாதபோது, இனி திரும்பி வரவே முடியாதபோது, எதற்காக இந்த சோதனை? அவர் இங்கே இல்லை! அப்படியானால், இந்த சோதனை யாருக்காக உத்தேசிக்கப்பட்டது. என்னுடைய தந்தை நாடு, மாஸ்கோவின் அழிவு! நாளை நான் கொல்லப்படலாம். பிரஞ்சுக்காரனால் கூட இல்லாமல் எனது நாட்டைச் சேர்ந்த ஒருவனாலேயே கொல்லப்படலாம். நேற்று நடந்த மாதிரி, எனது காதுக்குப் பக்கத்தில் ஒருவன் சுடலாம். அந்த பிரஞ்சுக்காரர்கள் வந்து, என்னுடைய தலையையும், கால்களையும் பற்றி, ஒரு பள்ளத்தில் தூக்கிப் போடலாம். அவர்களுடைய மூக்குகளுக்குக் கெட்ட வாசனை ஏற்படக் கூடாது என்பதற்காக அவர்கள் அப்படிச் செய்யலாம். வாழ்க்கையில் புது நிலைமைகள் கிளம்பலாம். அவையெல்லாம் வெகு சாதாரணமானவை என்று மற்றவர்களுக்குத் தோன்றலாம். ஆனால், அவற்றைப் பற்றி எதையும் நான் அறிந்து கொள்ள முடியாது. ஏனெனில், அப்பொழுது நான் உயிரோடு இருக்கப் போவதில்லை.

பூவரசு மரங்களின் அந்த வரிசை சூரிய வெளிச்சத்தினால் பிரகாசமாடைந்து இருந்தது. பச்சை, மஞ்சள் இலைகளோடும், வெள்ளை மரப் பட்டையோடும், அவை ஆடாமல் அசையாமல் இருந்தன. 'சாவதற்கு... நாளை கொல்லப்படுவதற்கு... நாளை நான் உயிரோடு இருக்க மாட்டேன்... ஆனால், இவையெல்லாம் இன்னமும் இருக்கும்; நான் இருக்க மாட்டேன்...'

அந்த பூவரசு மரங்களும், சுருள் சுருளான மேகங்களும், கணப்பு மூட்டங்களிலிருந்து மேலே கிளம்பிக் கொண்டிருந்த புகைகளும், அவரைச் சுற்றியிருந்த மற்றவைகளும் மாறிப் போய், பயங்கரமாகவும், பயமுறுத்துபவைகளாகவும் அவருக்குத் தோன்றின. அவருடைய முதுகெலும்பு வழியாக ஒரு குளிர்ந்த நடுக்கம் கீழே இறங்கியது. அவர் வேகமாய் எழுந்தார். அந்த கொட்டகையை விட்டு வெளியேறி, அங்கே நடக்க ஆரம்பித்தார்.

அவர் திரும்பிய பின்பு, கொட்டகைக்கு வெளியே குரல்கள் கேட்டன. 'யாரது?' என்று அவர் கூவினார்.

முன்னாள் டோலாகாவின் படைப் பிரிவைச் சேர்ந்த கமாண்டரான, சிகப்பு மூக்கையுடைய காப்டன் டிமோகின், தற்சமயம் அதிகாரிகளின் பற்றாக்குறையால், ஒரு படைக் கமாண்டராக நியமிக்கப்பட்டிருக்கிறார். அவர் நாணத்தோடு அந்த கொட்டகைக்குள் நுழைந்தார். அவருக்குப் பின்னால், ஒரு உதவியாளரும் பட்டாளத்தின் சம்பள அதிகாரியும் வந்தார்கள்.

இளவரசர் ஆண்ட்ரூ அவசரமாய் எழுந்து, அவர்கள் வந்த காரியங்களைப்பற்றி கவனித்துக் கேட்டு, அவர்களுக்கு மேலும் உத்தரவுகளைக் கொடுத்தார். அவர்களைப் போகச் சொல்லுவதற்கு அவர் இருந்தபோது, அவருக்கு அறிமுகமான ஒரு மழலைக் குரல், கொட்டகைக்குப் பின்னாலிருந்து கேட்டது.

'பிசாசு பிடிக்க' என்று அந்த மனிதர், எதிலேயோ தடுமாறியவர் சொன்னார்.

அந்த கொட்டகைக்கு வெளியே இளவரசர் ஆண்ட்ரூ பார்த்தபோது, அவர் பீயரைக் கண்டார். வழியில் கிடந்த ஒரு கட்டையின் மீது அவர் தடுக்கி விழ இருந்தார். அங்கிருந்து அவர் வந்து கொண்டிருந்தார். தம்முடைய இனத்தைச் சேர்ந்தவர்களைப் பொதுவாக சந்திப்பது, இளவரசர் ஆண்ட்ரூவுக்கு அதிருப்தியாக இருந்தது. முக்கியமாக பீயரை அவர் சந்திக்க விரும்பவில்லை. ஏனெனில், கடைசியாக அவர் மாஸ்கோவிற்குப் போய் இருந்தபோது, நடந்த மன வேதனையான காரியங்கள் எல்லாம், பீயரைப் பார்க்கும் போது அவருடைய மனதில் மீண்டும் தோன்றலாம்.

'நீரா? என்ன ஆச்சரியம்! நீர் ஏன் இங்கே வந்தீர்? இது எதிர்பாராத விஷயம்' என்று அவர் சொன்னார்.

இம்மாதிரி அவர் பேசியபோது, அவருடைய கண்களும் முகமும் கனிவுத் தோற்றங்களைக் காட்டவில்லை. விரோதத்தையே அவை காட்டின. அதை உடனே பீயர் கவனித்தார். மிகுந்த உற்சாகத்தோடு, அவர் அந்த கொட்டகைக்கு வந்தார். ஆனால், இளவரசர் ஆண்ட்ரூவின் முகத்தைப் பார்த்ததும், அவருடைய மனத் தயக்கம் கொண்டு அமைதியற்றுப் போயிற்று.

'நான் வந்திருப்பது... சும்மா... உமக்குத் தெரியும். வந்திருக்கிறேன்... அது எனக்கு சுவாரஸ்யமாக இருக்கிறது' என்று பீயர் சொன்னார். அன்றைய தினம் பல தடவைகளில் சுவாரஸ்யம் என்ற வார்த்தையை, அர்த்தமில்லாமல் அவர் உபயோகித்தார். 'எனக்கு போரைப் பார்க்க வேண்டும் ஏன்ற விருப்பம் இருக்கிறது'

'ஓ, ஆம், போரைப் பற்றி பிரீ மேஸன் சங்க சகோதரர்கள் என்ன சொல்லுகிறார்கள்? அவர்கள் அதை எப்படி நிறுத்தப் போகிறார்கள்?' என்று இளவரசர் ஆண்ட்ரூ கேலியாகப் பேசினார். 'நல்லது, மாஸ்கோ எப்படியிருக்கிறது? எனது வீட்டுக்காரர்கள் எப்படி இருக்கிறார்கள்? அவர்கள் கடைசியாக, மாஸ்கோ வந்து சேர்ந்து விட்டார்களா?' என்று அவர் மிகுந்த சிரத்தையோடு கேட்டார்.

ஆம், அவர்கள் வந்துவிட்டார்கள். ஜூலி ட்ரூபெட்ஸ்கயா என்னிடம் அப்படிச் சொன்னாள். அவர்களை நான் பார்க்கப் போனேன். ஆனால், பார்க்க முடியவில்லை. மாஸ்கோவிற்குப் பக்கத்திலுள்ள உமது எஸ்டேட்டிற்கு அவர்கள் போய்விட்டார்கள்'




அந்த அதிகாரிகள் அவரிடம் விடைபெற்றுக்கொள்ள தயாரானார்கள். ஆனால் தமது நண்பருடன் தனியாக இருக்க இளவரசர் ஆண்ட்ரூ தயங்கினார். அதனால், தேநீர் அருந்திப் போகும்படி, அவர்களைக் கேட்டுக் கொண்டார். நாற்காலிகள் கொண்டு வந்து போடப்பட்டு, தேநீர் பரிமாறப்பட்டது. பீயரின் பருத்த உருவத்தை அந்த அதிகாரிகள் ஆச்சரியத்தோடு நோக்கிக் கொண்டிருந்தார்கள். அவர் சொல்லிய மாஸ்கோ விஷயங்களைப் பற்றியும், அவர் அன்று காலை சுற்றிப் பார்த்து விட்டு வந்த நமது ராணுவ நிலைமையைப் பற்றி சொல்லுவதையும், அவர்கள்

கேட்டுக் கொண்டிருந்தார்கள். இளவரசர் ஆண்ட்ரூ மௌனமாய் இருந்தார். அவருடைய தோற்றம் விருப்பமற்றதாய் இருந்த படியால், பீயர் தாம் கூறியவைகளை, நல்ல சுபாவம் கொண்ட படைப்பிரிவு கமாண்டரான டிமோகினிடம் சொல்லி வந்தார்.

'ஆகவே, நமது துருப்புகளின் அணி வரிசைகளைப் பற்றி நீர் அறிந்து கொண்டீர் அல்லவா?' என்று இளவரசர் ஆண்ட்ரூ இடைமறித்துக் கேட்டார்.

'ஆம் - அதுதான், நீர் என்ன நினைக்கிறீர்? நான் ஒரு ராணுவக்காரனாக இல்லாதபடியால், அதைப் பூராவாகப் புரிந்து கொண்டதாகச் சொல்ல முடியாது. ஆனால், பொதுவான நிலைமையை, நான் அறிந்து கொண்டிருக்கிறேன்' என்று பீயர் கூறினார்.

'நல்லது, அப்படியானால், யாராய் இருந்தாலும் சரி, வேறு யாரையும் விட நீர் அதிகமாய் அறிந்திருக்கிறீர்?' என்று இளவரசர் ஆண்ட்ரூ கூறினார்.

'ஓ!' என்று பீயர், குழப்பத்தோடு தமது மூக்குக் கண்ணாடிகளுக்கு மேலாக, இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்துக் கூறினார்.

'நல்லது, குட்டுஜோவின் நியமனத்தைப் பற்றி நீர் என்ன நினைக்கிறீர்?'

'அவருடைய நியமனத்தைப் பற்றி மிக்க மகிழ்ச்சி கொள்ளுகிறேன். அவ்வளவு தான் எனக்குத் தெரியும்' என்று இளவரசர் ஆண்ட்ரூ பதில் அளித்தார்.

'பார்க்ளே டி டாலியைப் பற்றிய உமது அபிப்பிராயத்தை எனக்குச் சொல்லும். மாஸ்கோவில், அவரைப் பற்றி பேசுகிறவைகளை கடவுளே அறிவார்... நீர் அவரைப் பற்றி என்ன நினைக்கிறீர்?'

'அவர்களைக் கேளும்' என்று அந்த அதிகாரிகளைச் சுட்டிக்காட்டி, இளவரசர் ஆண்ட்ரூ பதில் சொன்னார்.

தயவு காட்டும் கேள்விப் புன்னகையோடு, டிமோகினை பீயர் நோக்கினார். அந்த அதிகாரியிடம் பேசும் ஒவ்வொருவரும், தங்களை அறியாமலேயே அம்மாதிரி தான் பேசுவார்கள்.

'கலங்காத மேன்மை தங்கியவர் நியமனமான பின்பு, நமக்கு வெளிச்சம் மீண்டும் தோன்றுகிறது, மேன்மை தங்கியவரே' என்று டிமோகின் சங்கோஜத்தோடு கூறி, தமது கர்னலைப் பார்ப்பதற்காகத் திரும்பினார்.

'ஏன் அப்படி?' என்று பீயர் கேட்டார்.

'நல்ல, விறகுகளையும் குதிரைத் தீனியையும் பொறுத்த வரையில், நான் உமக்குச் சொல்லுகிறேன். ஸ்வெஸ்ட்ஸியானியில் இருந்து நாங்கள் பின்வாங்கி வந்தபோது, ஒரு குச்சியைக் கூட தொடுவதற்கோ, அல்லது ஒரு கட்டு வைக்கோலையோ, வேறு எதையோ தொடுவதற்கோ, நாங்கள் துணிவுகொள்ளவில்லை. நீரே பாரும். நாங்களோ போய்க்கொண்டிருக்கிறோம். அந்த எதிரி அவையெல்லாவற்றையும் அபகரித்துக் கொள்ளுவான். அப்படி அல்லவா, மேன்மை தங்கியவரே?' என்று டிமோகின் சொல்லிவிட்டு, இளவரசரைத் திரும்பிப் பார்த்தார். 'ஆனால் நாங்கள் துணியவில்லை. எங்களுடைய பட்டாளத்தைச் சேர்ந்த இரண்டு அதிகாரிகள் அம்மாதிரி செய்ததற்காக, ராணுவக் கோர்ட்டில் விசாரிக்கப்பட்டு தண்டனை அடைந்தார்கள். ஆனால், 'கலங்காத மேன்மை தங்கியவர்' சேனாதிபதியாக வந்ததும், எல்லா விஷயங்களும் நேர்மையாய் விட்டன. இப்பொழுது நாங்கள் வெளிச்சத்தைப் பார்க்கிறோம்...'

'அப்பொழுது அது எதற்காகத் தடுக்கப்பட்டது?'

டிமோகின் அந்தக் கேள்விக்கு எப்படி, என்ன பதில் சொல்லுவது என்பதையறியாமல், குழப்பத்தோடு சுற்றிலும் பார்த்தார். அதே கேள்வியை இளவரசர் ஆண்ட்ரூவுக்கு பீயர் போட்டார்.

'ஏன், நமது எதிரிக்கு விட்டுக் கொடுக்கும் நமது நாட்டை வீணாக்கி விடக்கூடாது என்பதற்காக, அப்படி செய்தார்கள்' என்று விஷம் கலந்த கேலியோடு, இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார். 'அது ரொம்ப நியாயமான காரணம். நாட்டைக் கொள்ளையடித்து, அம்மாதிரி கொள்ளையடிப்பதற்கு துருப்புகள் பழகிப் போகும்படி விட்டுவிடக்கூடாது. ஸ்மாலென்ஸ்கில் கூட, பிரஞ்சுக்காரர்கள் பக்கவாட்டில் நம்மை வளைத்துக் கொள்ளுவார்கள் என்று அவர் (பார்க்ளே டி டாலி) முடிவு செய்ததும் சரியானது தான். ஏனெனில், எதிரிகளிடம் நம்மை விட அதிகமாகத் துருப்புகள் இருந்தன. ஆனால், ஒரு விஷயத்தை அவரால் அறிந்து கொள்ள முடியவில்லை.' என்று இளவரசர் ஆண்ட்ரூ ஒரு கிரீச்சுக் குரலில் கத்தினார். தம்மையறியாமலேயே அந்த கிரீச்சுக் குரலில் அவரிடமிருந்து வெளிப்பட்டது. 'முதல் தடவையாக, ருஷ்ய பூமிக்காக நாம் போர் செய்து கொண்டிருக்கிறோம் என்பதையும், நான் இதற்கு முன்பு எப்பொழுதும் பார்த்திராத ஒரு வீர உணர்ச்சி நமது மனிதர்களிடம் இருக்கிறதென்பதையும், அவரால் அறிந்துகொள்ள முடியவில்லை. பிரஞ்சுக்காரர்களை இரண்டு

நாட்கள் நாம் தடுத்து நிறுத்தி வைத்திருந்தோம். அந்த வெற்றியானது, நமது பலத்தை பத்து மடங்கு அதிகமாக்கியது. நம்முடைய முயற்சிகளும், நமக்கேற்பட்ட நஷ்டங்களும் வீணாகப் போகும்படி, நாம் பின்வாங்க வேண்டுமென்று அவர் (பார்க்ளே) உத்தரவிட்டார். நமக்கு துரோகம் செய்ய வேண்டுமென்று அவர் நினைக்கவில்லை. அவர் ஒவ்வொன்றையும் சிந்தித்துப் பார்த்து அவரால் எவ்வளவு சிலாக்கியமாகச் செய்ய முடியுமோ, அவ்வளவு தூரம் செய்வதற்கு முயற்சி செய்தார். அதனால்தான், அவர் அந்த பதவிக்குப் பொருத்தமில்லாதவராய் இருக்கிறார். ஒவ்வொரு விஷயத்தையும் நன்றாக அலசிப் பார்த்து, வெகு துல்லியமாக ஒவ்வொரு ஜெர்மன்காரரும் செய்வதைப் போல, திட்டங்கள் போட்டு அவர் செய்வதனால்தான், அவர் அந்த பதவிக்கு இப்பொழுது தகுதியற்றவர். இதை எப்படி நான் விளக்க முடியும்... நல்லது, உமது தந்தை ஒரு ஜெர்மன் வேலைக்காரனை அமர்த்தியிருந்தார் என்று வைத்துக் கொள்ளுவோம். அவன் உமது தந்தைக்கு வேண்டிய அவசியங்களை, உம்மைவிட சிலாக்கியமாகச் செய்யக்கூடியவன் என்றும், அதனால் அவன் ஒரு சிலாக்கியமான வேலைக்காரன் என்றும் வைத்துக்கொள்ளுவோம். நல்லது, அப்படியே அவன் வேலை செய்து கொண்டிருக்கட்டும். ஆனால், உமது தந்தை மரணப் படுக்கையில் இருக்கும்போது, நீர் அந்த வேலைக்காரனை வெளியே அனுப்பிவிடுகிறீர்; அனுப்பி விட்டு, உமக்கு அனுபவம் இல்லாமல் இருந்தாலும், அவருக்கு வேண்டிய சிசுருஷைகளை நீரே கவனித்துச் செய்கிறீர்; அப்படிச் செய்யும்போது, அந்த திறமையுள்ள வேலைக்காரனால், ஒரு அந்நியனால் செய்யக்கூடியதை விட அதிகமாக, அவருக்கு நீர் இதத்தைக் கொடுக்க முடியும். பார்க்ளேயைப் பொறுத்த வரையில், இதே விஷயந்தான். ருஷ்யா நல்ல நிலைமையில் இருந்தபோது, ஒரு அயல் நாட்டு வாசி அதற்கு சேவை செய்யலாம். அவர் ஒரு சிறந்த மந்திரியாகவும் விளங்கலாம். ஆனால், ருஷ்யாவிற்கு ஆபத்து ஏற்படும் பொழுது, அதன் மக்களின் ஒருவரையே அது விரும்பும். உம்முடைய கிளப்பில் அவரை ஒரு துரோகி என்று எல்லாரும் சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள். அவரை ஒரு துரோகி என்று பழிச் சொல் கூறுவதனால் ஏற்படும் பலன் ஒன்று தான். அதாவது பின்னால், அவர்களுடைய பொய் பிரசாரத்திற்காக அவர்கள் வெட்கமடைந்து, அவரைத் துரோகிக்குப் பதிலாக ஒரு பெரிய வீரராகவோ, ஒரு மேதையாகவோ செய்வதற்கு அவர்கள் முயற்சிப்பார்கள். அது, முன்பு செய்ததை விட இன்னும் அதிக அநியாயமாக இருக்கும். அவர் ஒரு யோக்கியமான, மிகுந்த

கண்டிப்பான ஜெர்மனியர்' என்று இளவரசர் ஆண்ட்ரூ கூறி முடித்தார்.

'அவர் ஒரு சாமர்த்தியமான கமாண்டர் என்று சொல்லு கிறார்களே' என்று பீயர் கேட்டார்.

'ஒரு சாமர்த்தியமான கமாண்டர் என்றால் என்ன என்பதை, என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை' என்று இளவரசர் ஆண்ட்ரூ கேலியோடு பதில் சொன்னார்.

'ஒரு சாமார்த்தியமான கமாண்டர் என்றால் என்ன? நடக்கப் போகிறவைகளையெல்லாம் முன்னதாக அறியக்கூடியவர்... எதிரியின் நோக்கங்களை முன்னதாக அறியக்கூடியவர்' என்று பீயர் பதில் அளித்தார்.

'ஆனால், அது அசாத்தியம்' என்று, அந்த கேள்வி வெகு காலத்திற்கு முன்பாகவே தீர்மானம் செய்து விடப்பட்டதைப் போல, இளவரசர் ஆண்ட்ரூ பதில் அளித்தார்.

வியப்போடு பீயர் அவரை நோக்கினார்.

'என்றாலும், போர் என்பது ஒரு சதுரங்க விளையாட்டைப் போன்றது என்று அவர்கள் கூறுகிறார்களோ?' என்ற அவர் குறிப்பிட்டார்.

'ஆம், ஒரு சிறிய வித்தியாசம் உண்டு. சதுரங்க விளையாட்டில், உமது காய்களை ஒவ்வொரு தடவையும் நகர்த்தும் போது, நீர் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் சிந்திக்கலாம். அங்கே காலவரையறை கிடையாது. மற்றொரு வித்தியாசம் ஒரு காயை விட ஒரு வீரன் எப்பொழுதுமே அதிக பலமானவன். ஆனால், ஒரு காயை விட இரண்டு காய்கள் எப்பொழுதுமே பலமானவை. யுத்தத்தில் ஒரு படைப் பிரிவு, சில சமயங்களில் ஒரு டிவிஷனை விட பலமானதாய் இருக்கும்; சில சமயங்களில், ஒரு கம்பெனியை விட பலவீனமாகவும் ஆகிவிடக் கூடும். துருப்புகளின் பலாபலம் எவ்வளவு என்பதை, ஒருவராலும் எப்பொழுதும் அறிய முடியாது. கமாண்டர்களால் செய்யும் ஏற்பாடுகளைப் பொறுத்துத்தான், அல்லது பரிவாரங்கள் செய்யும் ஏற்பாடுகளைப் பொறுத்துத் தான். காரியங்கள் இருக்கின்றன என்பது உண்டானால், நான் இங்கே, இந்த கனவான்களுடன் சேவை செய்வதற்குப் பதிலாக, பரிவாரத்திலேயே தங்கி ஏற்பாடுகள் செய்து கொண்டிருப்பேன். ஆனால், நாளை நடக்கப் போகும் யுத்தம், இங்கேயுள்ள நம்மைப் பொறுத்திருக்கிறதே தவிர, மேலிடத்திலுள்ள சேனாதிபதியின் பரிவாரத்திடம் இல்லை... ராணுவ அமைப்பைப் பொறுத்தோ,

தளவாடங்களைப் பொறுத்தோ, அவர்களுடைய எண்ணிக்கையைப் பொறுத்தோ, அல்லது அணிவகுப்புகளைப் பொறுத்தோ வெற்றி என்பது எப்பொழுதும் சார்ந்திருக்கப் போவதும் இல்லை' என்று இளவரசர் ஆண்ட்ரூ கூறினார்.

'அப்படியானால், எதைச் சார்ந்திருக்கிறது?'

'என்னிடமும், அவரிடமும் (டிமோகினை சுட்டிக் காட்டினார்) ஒவ்வொரு சிப்பாயிடமுள்ள உணர்ச்சியில் அது சார்த்திருக்கிறது.'

இளவரசர் ஆண்ட்ரூ டிமோகினை நோக்கினார். அவர் தமது கமாண்டரைப் பீதியோடும், குழப்பத்தோடும் பார்த்துக் கொண்டிருந்தார். இளவரசர் ஆண்ட்ரூ, எப்பொழுதுமே அதிகமாகப் பேசாது மௌனமாய் இருக்கக்கூடியவர். இப்பொழுது மிகுந்த பரபரப்பாகக் காணப்பட்டார். அவருக்கு திடீரென்று தோன்றிய நினைப்புகளை, அவரால் வெளியிடாமல் இருக்க முடியவில்லை என்று தோன்றியது.

'வெற்றி பெறவேண்டும் என்று உறுதியோடு தீர்மானிப்பவர்களால் தான், ஒரு போர் வெற்றி அடைகிறது. ஆஸ்டர்லிட்ஜ் போரில் நாம் ஏன் தோல்வி அடைந்தோம்? பிரஞ்சுக்காரர்களுக்கும் நமக்கும் சமமாக நஷ்டங்கள் ஏற்பட்டன. ஆனால், ஆரம்பத்திலேயே, அந்த போரில் நாம் தோல்வி அடையப் போகிறோம் என்று, நமக்கு நாமே சொல்லிக்கொண்டிருந்தோம். அதனால், அறதப் போரில் நாம் தோல்வி அடைந்தோம். அம்மாதிரி நாம் ஏன் சொன்னோம்? ஏனென்றால், அங்கே நாம் போரிடுவதற்குக் காரணம் எதுவுமில்லை. அந்தப் போர்க்களத்திலிருந்து எவ்வளவு சீக்கிரமாக நாம் வெளியே வர முடியுமோ, அவ்வளவு சீக்கரம் வர வேண்டுமென்று நாம் விரும்பினோம். ''நாம் தோற்றுவிட்டோம், ஆகையால், நாம் ஓடுவோம்'' என்று சொன்னோம். நாம் ஓடினோம். அம்மாதிரி மாலை வரையில் நாம் சொல்லாமல் இருந்திருந்தால், என்ன நடந்திருக்கும் என்பதை கடவுளே அறிவார். ஆனால், நாளையதினம் அம்மாதிரி நாம் சொல்ல மாட்டோம். நமது ராணுவ அமைப்புகளைப் பற்றி நீர் பேசுகிறீர். நமது இடது பக்கவாட்டு பலவீனமாய் இருக்கிறது, வலது பக்கவாட்டு நீண்டு போய்விட்டது என்று நீர் சொல்லுகிறீர். அவையெல்லாம் வெறும் அசட்டுப் பேச்சுகள். ஏனெனில் அம்மாதிரியான காரியம் எதுவுமே கிடையாது. ஆனால், நாளை நமக்கு நேரப்போவது என்ன? கோடிக்கணக்கான, பற்பல விதமான சந்தர்ப்பங்கள் ஏற்படலாம். ஒருவினாடியில் அவற்றில் ஏதாவது ஒன்றின் லமாகத் தீர்மானிக்கப்படும். அதாவது, நமது வீரர்களோ, அல்லது

அவர்களுடைய வீரர்களோ, ஓடுகிறார்களா, ஓடாமல் இருக்கிறார்களா என்பதைப் பொறுத்தும், இந்த மனிதனோ, அந்த மனிதனோ கொல்லப்பட்டானா என்பதைப் பொறுத்தும், அந்த வினாடியில் அந்த முடிவு இருக்கும். ஆனால், இப்பொழுது செய்யப்படும் இவையெல்லாம், ஒரு விளையாட்டு தான். நமது அணிவகுப்புபகளை யாருடன் நீர் சுற்றிப் பார்த்து வந்தீரோ, அவர்கள் இதில் உதவி செய்வதில்லை. ஆனால், இடையூறு செய்கிறார்கள். தங்களுடைய சிறிய சுய நன்மைகளைப் பற்றியே அவர்கள் நிச்சயமாக நினைவு கொண்டிருக்கிறார்கள்' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார்.

'இப்பேர்ப்பட்ட சமயத்திலா?' என்று பியர் கண்டிப்பது போல கேட்டார்.

'ஆம், அப்பேர்ப்பட்ட சமயத்தில் தான். அவர்களைப் பொறுத்த வரையில், இம்மாதிரி சமயத்தில் தான், பதவியில் போட்டியாக இருக்கும் ஒருவரைக் கீழே தள்ளுவதற்கும், பதக்கங்களைப் பெறுவதற்கும் சந்தர்ப்பங்கள் கிடைக்கும். என்னைப் பொறுத்த வரையில், நாளைய தினம் என்பதைப் பற்றி எனக்குத் தோன்றுவது இது தான்: 100 ஆயிரம் பேருள்ள ருஷ்ய ராணுவமும் 120 ஆயிரம் பேருள்ள பிரஞ்சு ராணுவமும் போரிடுவதற்காகக் கூடி நிற்கின்றன. இந்த 200 ஆயிரம் வீரர்களும், நாளை போர் செய்வார்கள். ஆனால், எந்தக் கட்சி அதிக மூர்க்கமாகப் போர் செய்கிறதோ, அந்தக் கட்சியே வெற்றி பெறும், நாளை என்ன நடந்தாலும் சரி, நான் ஒன்று சொல்லுகிறேன். மேலிடத்திலுள்ளவர்கள் எவ்வளவு தூரம் குழப்பினாலும் சரி, நாளையே போரில் நாம் வெற்றி பெறப்போகிறோம். நாளையன்று என்ன நேரிட்டாலும் சரி, நாம் வெற்றி பெறுவோம்' என்று இளவரசர் ஆண்ட்ரூ கூறினார்.

'அது தான், மேன்மை தங்கியவரே: அதுதான் உண்மை அசல் உண்மை' என்று டிமோகின் சொன்னார். 'நாளை யார்தான் தங்கள் சிரமத்தைப் பார்க்கப் போகிறார்கள்? என்னுடைய படைப் பிரிவைச் சேர்ந்த சிப்பாய்கள், வாட்கா மதுவைக் குடிக்கப் போவதில்லை என்றும், அதைக் குடிப்பதற்கு இது நாள் அல்ல என்றும் சொல்லுகிறார்கள்.'

எல்லோரும் பேசாமல் இருந்தார்கள். அதிகாரிகள் எழுந்தார்கள். இளவரசர் ஆண்ட்ரூ அவர்களோடு கொட்டகையை விட்டு வெளியே போய், தமது உதவியாளருக்குக் கொடுக்க வேண்டிய கடைசி உத்தரவுகளைக் கொடுத்தார். அவர்கள் போன பின்பு, இளவரசர் ஆண்ட்ரூவுடன் பியர் வந்து பேச ஆரம்பித்தபோது,

மூன்று குதிரைகளின் குளம்படி ஓசைகளை அவர்கள் கேட்டார்கள். கொட்டகைக்குப் பக்கத்திலிருந்த ரஸ்தாவிலிருந்து அவை வந்து கொண்டிருந்தன. அப்பக்கமாக திரும்பிப் பார்த்தபோது, வால் ஜாகன், கிளாஸ்விட்ஜ் ஆகியவர்கள், ஒரு கோசாக்கோடு போய்க்கொண்டிருந்ததை இளவரசர் ஆண்ட்ரூ கவனித்தார். அவர்கள் பேசிக்கொண்டே சமீபத்தில் சவாரி போய்க்கொண்டிருந்தபடியால், அவர்கள் பேசிய வார்த்தைகள் இளவரசர் ஆண்ட்ரூவுக்குக் கேட்டன.

'போர் முனையை வெகு பரவலாகச் செய்யவேண்டும். அது தான் ரொம்ப சிலாக்கியமானது' என்று அவர்களில் ஒருவர் சொன்னார்.

'ஓ, ஆம், எதிரியை பலவீனப் படுத்தவேண்டும் என்பது தான், நம்முடைய ஒரே நோக்கம். ஆகவே, சிப்பாய்களுக்கு ஏற்படும் நஷ்டத்தைப் பற்றி நாம் கவனிக்கக்கூடாது' என்ற மற்றொருவர் சொன்னார்.

'போர் முனையை விஸ்தரிக்க வேண்டுமாம்' என்று இளவரசர் ஆண்ட்ரூ, கோபமாக மூச்சு விட்டுக்கொண்டு, அவர்கள் போன பின்பு கூறினார். 'அந்த விஸ்தரிப்பில் தான், பால்டு ஹில்ஸில் என்னுடைய தந்தையும் குமாரனும், சகோதரியும் இருந்தார்கள். இவையெல்லாம் அவருக்கு ஒன்றுதான். இதைத் தான் நான் உம்மிடம் சொல்லிக்கொண்டிருந்தேன் - அந்த ஜெர்மன் கனவான்களால் நாளைய போரில் வெற்றி பெறும்படிச் செய்ய முடியாது. ஆனால், அவர்களால் முடிந்த வரையில் குழப்பிக் கொண்டிருப்பார்கள். ஏனெனில், அந்த ஜெர்மனியர்களின் மண்டைகளில் தத்துவங்களைத் தவிர வேறு எதுவும் இல்லை. அந்த தத்துவங்கள் காலியான முட்டை ஓடுகளைப் போல பிரயோஜன மற்றவை. நாளைய போருக்கு அவசியமான எந்த ஒரு விஷயம் வேண்டுமோ, அது அவர்களுடைய உள்ளங்களில் இல்லை. - அது டிமோகினிடம் இருக்கிறது. ஐரோப்பா முழுவதையும் எதிரிக்கு அவர்கள் விட்டுவிட்டார்கள். இப்பொழுது இங்கே நமக்கு உபதேசம் செய்வதற்காக வந்திருக்கிறார்கள். சிறந்த வாத்தியார்கள்:' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொல்லிய போது, அவருடைய குரல் மீண்டும் கிரீச்சுக் குரலாக மாறியது.

'ஆகவே, நாளைய போரில் நாம் வெற்றி பெறுவோம் என்று நீர் நினைக்கிறீர்?' என்று பீயர் கேட்டார்.

'ஆம், ஆம்' என்று பராக்குப் புத்தியோடு, இளவரசர் ஆண்ட்ரூ பதில் சொன்னார். என்னிடம் மட்டும் அதிகாரம் இருந்தால், நான் ஒரு விஷயத்தைச் செய்வேன். அதாவது, கைதிகளைப் பிடிக்க

மாட்டேன். எதற்காகக் கைதிகளைப் பிடிக்கவேண்டும்? அது ஒரு கருணை கலந்த வீரமாய் இருக்கலாம்; அந்தப் பிரஞ்சுக்காரர்கள் என்னுடைய வீட்டை நாசமாக்கிவிட்டு, மாஸ்கோவை நாசமாக்குவதற்காகப் போய்க்கொண்டிருக்கிறார்கள். என்னை, ஒவ்வொரு வினாடியும் அவர்கள் அவமானப் படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் என்னுடைய விரோதிகள். என்னுடைய கருத்தில், அவர்கள் எல்லோருமே குற்றவாளிகள். அம்மாதிரியே டிமோகினும், ராணுவம் பூராவும் நினைக்கிறார்கள். அவர்களைத் தூக்கில் போடவேண்டும். அவர்கள் என்னுடைய விரோதிகளாக இருக்கிறபடியால், டில்சிட்டில் என்ன தான் சொல்லியிருந்தபோதிலும், அவர்கள் என்னுடைய நண்பர்களாக இருக்க முடியாது.'

'ஆம், ஆம்' என்று பீயர் முனங்கிக்கொண்டு, தமது பிரகாசமான கண்களால் இளவரசர் ஆண்ட்ரூவை நோக்கினார். 'நீர் சொல்லுவதை நான் பூரணமாக ஒப்புக்கொள்ளுகிறேன்.'

மஜாய்ஸ்க் குன்றில் அன்று பூராவாக பீயரைக் குழப்பி வந்த அந்தப் பிரச்னை, இப்பொழுது அவருக்கு தெளிவாய்த் தோன்றி, பூராவாகத் தீர்ந்து விட்டதாகக் காணப்பட்டது.

வரப்போகும் போரைப் பற்றியும், அந்தப் போரின் முழு அர்த்தத்தையும், முக்கியத்துவத்தையும் பற்றியும், அவர் இப்பொழுது அறிந்து கொண்டார். அவர் அன்று பார்த்தவையெல்லாம், அவர் போய்க்கொண்டிருந்தபோது கண்ட முகங்களில் தோன்றிய முக்கியவத்துவமும் கடுமையானவுமான தோற்றங்கள் எல்லாம், இப்பொழுது அவருக்கு ஒரு புதிய முறையில் பிரகாசித்தன. அந்த தேசாபிமானத்தின் கண்காணாத வேகமானது, அவர் பார்த்த எல்லாரிடமும் தோன்றியதை அவர் அறிந்து கொண்டார். ஆகவே, அவர்கள் எல்லாம் மரணத்திற்கு தயாராகிக் கொண்டும், மரணத்தை ஒரு அற்ப விஷயமாகக் கருதிக்கொண்டும் ஏன் இருந்தார்கள் என்பது, இப்பொளுழுது அவருக்குப் புரிந்தது.

'கைதிகளைப் பிடிக்கக் கூடாது. அந்த ஒரு விஷயத்தினால், யுத்தம் முழுவதும் முற்றிலும் மாறி, அதன் கொடுமையை குறைவானதாகச் செய்ய முடியும். இதுவரை எது மிகுந்த கெட்ட காரியமாக இருக்கிறதோ, அதை நாம் போரில் விளையாடி வந்திருக்கிறோம். கண்ணியமென்றும், பரந்த நோக்கமென்றும், இம்மாதிரியெல்லாம் நாம் விளையாடி வந்திருக்கிறோம். அந்த கண்ணியமும், அந்த மிருதுவான உணர்ச்சியும் எப்படி இருக்கின்றன? ஒரு கன்றுக் குட்டியைக் கொல்லுவதைப்

பார்க்கும்போது, ஒரு சீமாட்டி மூர்ச்சையடைந்து போவதைப் போன்ற கண்ணியமும், மிருதுவான தன்மையுமாய் இருக்கின்றன. அவள் மிகுந்த அன்புள்ளம் படைத்தவளானபடியால், அவளால் இரத்தத்தைக் காண சகிக்க முடியாதாம். ஆனால், அவளே அந்த கன்றுக் குட்டி மாமிசத்தைத் தயார் செய்து பச்சடியோடு வைக்கும்போது அதை மகிழ்ச்சியோடு உண்பாள். யுத்த தர்மங்களைப் பற்றியும், கருணை பொருந்திய வீரத்தைப் பற்றியும், யுத்த நிறுத்த உடன்படிக்கைகளைப் பற்றியும் துரதிருஷ்டம் பிடித்தவர்களுக்குக் கருணை காட்டுவதுபற்றியும் அவர்கள் பேசுகிறார்கள். அவையெல்லாம் குப்பை. 1805-ஆம் வருஷத்தில், கருணை பொருந்திய வீரத்தையும், யுத்த நிறுத்த உடன்படிக்கையையும் நான் பார்த்தேன். அவர்கள் நம்மை ஏமாற்றினார்கள்; நாம் அவர்களை ஏமாற்றினோம். மற்றவர்களின் வீடுகளை அவர்கள் கொள்ளையடித்தார்கள். கள்ள நோட்டுகளை வெளியிட்டார்கள். எல்லாவற்றையும் விட மோசமாக, எனது குழந்தைகளையும், எனது தந்தையையும் கொன்றார்கள். அதன் பின்பும், அவர்கள் யுத்த தர்மங்களைப் பற்றியும், எதிரிகளிடம் காட்டும் கண்ணியத்தைப் பற்றியும் பேசுகிறார்கள். ஒருவரையும் யுத்தக் கைதிகளாக பிடிக்கக் கூடாது; ஆனால், கொல்லவேண்டும். நாமும் கொல்லப்பட வேண்டும். நான் அனுபவித்த மாதிரி, துன்பங்களை அனுபவித்த ஒவ்வொருவரும்...'

மாஸ்கோவை, அவர்கள் ஸ்மாலென்ஸ்கைப் பிடித்த மாதிரி பிடித்தாலும் சரி, பிடிக்காவிட்டாலும் சரி, அவரைப் பொறுத்தவரையில் ஒன்றுதான் என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். அவர் பேசிக்கொண்டிருந்த போது திடீரென்று அவர் தொண்டையில் ஏதோ ஒன்று அடைத்தபடியால், அவர் பேச்சை நிறுத்தினார். மௌனமாக மேலும் கீழும் சில தடவைகள் அவர் நடந்தார். ஆனால், அவருடைய கண்கள் ஜுரத்தில் ' அடிபட்ட மாதிரி, மின்னிக் கொண்டும், அவருடைய உதடுகள் பதறிக் கொண்டும் இருந்தபோது, அவர் மீண்டும் பேச ஆரம்பித்தார்.

'இம்மாதிரியான ''கண்ணியங்கள்'' எதுவும் யுத்தங்களில் இல்லாவிட்டால், யுத்தத்திற்குப் போவதால், உயிர் போனாலும் பரவாயில்லை என்ற தைரியம் வந்தபோதுதான், நாம் யுத்தத்திற்குப் போவோம். அதாவது, இப்பொழுதுள்ள மாதிரி, பால் ஐவானிச் என்பவர், மைகேல் ஐவானிச் என்பவரை அவமானப் படுத்தி விட்டார் என்பதற்காக, யுத்தம் என்பது அப்பொழுது ஒன்றும் இருக்காது. இப்பொழுதுள்ளதைப்போல ஒரு யுத்தம்

ஏற்படுமானால், அது உண்மையிலேயே யுத்தமாயிருக்கும். அச்சமயம் துருப்புகளின் உறுதியும் வேறுவிதமாக இருக்கும். இப்பொழுது நெப்போலியன் நடத்தி வருகிற துருப்புகளிலுள்ள, ஜெர்மனியைச் சேர்ந்த மேற்கு பாலியன்களும், ஹெசியன்களும், அப்பொழுது ருஷ்யாவுக்குள் நுழைவதற்காக, நெப்போலியனுடன் வரமாட்டார்கள். நாமும் எதற்காக என்ற காரணம் தெரியாமல் ஆஸ்திரியாவிலோ, பிரஷ்யாவிலோ போர் செய்வதற்காகப் போக மாட்டோம். போர் என்பது, ஒரு மரியாதையான காரியமல்ல. வாழ்க்கையிலேயே மிகுந்த பயங்கரமான காரியம். நாம் அதை அறிந்து கொள்ளவேண்டும்...போருடன் நாம் விளையாடக் கூடாது. இந்த பயங்கரமான அவசியத்தை, நாம் கண்டிப்போடும் சிரத்தையோடும் ஒப்புக்கொள்ள வேண்டும். யுத்தம் என்பது சோம்பேறிகளுக்கும் அற்பர்களுக்கும், ஒரு பிரியமான பொழுது போக்காக இப்பொழுது இருந்து வருகிறது. ராணுவ சேவை என்றால், மிகவும் சிலாக்கியமாக மரியாதை காட்ட வேண்டியதொன்றாகும்.

'ஆனால், யுத்தம் என்பது என்ன? ஒரு யுத்தத்தில்'வெற்றி பெறுவதற்கு அவசியமானது என்ன? ராணுவத்தின் பழக்க வழக்கங்கள் என்ன? போரின் நோக்கம் கொலை செய்வதாகும்; போரின் முறைகள் வேவு பார்ப்பதற்கும், நம்பிக்கை துரோகம் செய்வதற்கும், ஒரு நாட்டின் குடிகளைப் பாழ்படுத்தி, ராணுவத்திற்கு வேண்டிய உணவுப் பொருள்களைத் திருடு வதற்கும், பித்தலாட்டம் செய்வது பொய் பேசுவதற்கும், அவர்களுக்கு ஆதரவு கொடுப்பதாகும். அவற்றை ராணுவ தந்திரங்கள் என்று சொல்லுகிறார்கள். ராணுவ வகுப்பினரின் பழக்க வழக்கங்கள் என்னவென்றால், சுதந்திரத்தைப் பறிகொடுப்பதாகும். அதாவது, ஒழுங்கு, சோம்பேறித்தனம், அறியாமை, கொடுமை, விபசாரம், மது குடித்தல், இவையெல்லாம் தான், ஒரு ராணுவத்தின் பழக்க வழக்கங்கள். இவையெல்லாம் இருந்தும்கூட ராணுவ சேவையில் இருப்பவர்கள் தான் உயர்ந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்று கருதப்பட்டு, ஒவ்வொருவராலும் மரியாதை காட்டப்படு கிறார்கள். சீனர்களைத் தவிர, மற்ற எல்லா மன்னர்களும், ராணுவ யூனிபாரங்களை அணிகிறார்கள். மக்களை யார் அதிகமாகக் கொல்லுகிறார்களோ, அவர்களுக்கு மிக உயர்ந்ததான பரிசுகள் கிடைக்கின்றன.

'நாளையன்று நாம் சந்திக்கப் போவதைப் போல, அந்த இருபக்கத்து துருப்புகளும் சந்தித்து ஒருவரையொருவர் கொலை

செய்கிறார்கள்; அவர்கள் பத்தாயிரக்கணக்கானவர்களைக் கொன்றோ, அங்கயீனம் செய்தோ, போரை நடத்துகிறார்கள். பின்னால், அத்தனை பேர்களைக் கொன்றதற்காக, கடவுளுக்கு வாழ்த்து கூறும் பிரார்த்தனையை நடத்துகிறார்கள். (கொன்றவர் களின் எண்ணிக்கையைக் கூட அவர்கள் அதிகரித்துச் சொல்லுகிறார்கள்.) அதன் பின்னால், அவர்கள் வெற்றி முழக்கம் செய்கிறார்கள். அதாவது, எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக மக்கள் அவர்கள் சொல்லுகிறார்களோ, அவ்வளவுக்கவ்வளவு அதிகமாக, அவர்கள் காரியங்களைச் சாதித்து விட்டதாகக் கூறுகிறார்கள். மேலே இருக்கும் கடவுள், கேட்டும் வருகிறார்?' என்று இளவரசர் ஆண்ட்ரூ, ஒரு காதைத் துளைக்கும் கிரீச்சுக் குரலில் கூவினார். 'ஆ, எனது நண்பரே, எனக்கு வாழ்வதற்கே கொஞ்சகாலமாக மிகவும் கஷ்டமாயிருக்கிறது. விஷயங்களை மிகவும் அதிகமாக நான் அறிந்து கொள்ள ஆரம்பிக்கிறேன் என்று எனக்குத் தோன்றுகிறது. நன்மையையும் தீமையையும் அறியக்கூடிய அந்த புத்திசாலித்தனத்தை ஒருவன் தெரிந்து கொள்ளுவது நல்லதல்ல... ஆ, நல்லது– இவையெல்லாம் வெகு காலம் நீடிக்கப் போவதில்லை' என்று அவர் கூறி முடித்தார்.

'என்றாலும், நீர் தூக்கக் கலக்கமாயிருக்கிறீர். எனக்கும் தூங்கப் போகவேண்டிய நேரம் வந்துவிட்டது. நீர் மீண்டும் கோர்க்கிக்குத் திரும்பிப் போம்' என்று இளவரசர் ஆண்ட்ரூ திடீரென்று கூறினார்.

'ஓ, இல்லை' என்று பீயர் பதிலளித்து, இளவரசர் ஆண்ட்ரூவைப் பீதியுற்ற, இரக்கமுள்ள கண்களோடு நோக்கினார்.

'போம், போம், ஒரு போருக்கு முன்பாக, ஒருவர் நன்றாகத் தூங்கவேண்டும்' என்று இளவரசர் ஆண்ட்ரூ மீண்டும் சொன்னார்.

அவர் வேகமாகப் பீயரிடம் வந்து, அவரைத் தழுவி முத்தமிட்டார்.

'போய் வாரும், வணக்கம். நாம் மீண்டும் சந்திப்போமோ, மட்டோமோ...' என்று கூறித் திரும்பி, வேகமாக அந்த கொட்டகைக்குள் நுழைந்தார்.

அப்பொழுது இருட்டிவிட்டபடியால், இளவரசர் ஆண்ட்ரூவின் முகத்தில் தோன்றிய தோற்றம் கோபமா, அல்லது கனிவா என்பதை, அவரால் அறிந்து கொள்ள முடியவில்லை.

அவரைப் பின்பற்றி உள்ளே போவதா, அல்லது திரும்பிப் போவதா என்பதை, சிறிது நேரம் அவர் மௌனமாக நின்று சிந்தனை செய்தார். 'இல்லை, அவர் விரும்பவில்லை. இது தான் நம்முடைய

கடைசி சந்திப்பு என்பதை நான் அறிவேன்' என்று பீயர் சொன்னார். ஆழ்ந்த பெருமூச்சுவிட்டு, மீண்டும் அவர் கோர்க்கிக்கு சவாரி போனார்.

இளவரசர் ஆண்ட்ரூ மீண்டும் கொட்டகைக்குள் திரும்பியதும், ஒரு கம்பளத்தின் மீது படுத்தார். ஆனால், அவரால் தூங்க முடியவில்லை.

அவர் தமது கண்களை மூடினார். ஒன்றன் பின் ஒன்றாக, அவருடைய மனோராஜ்யத்தில் சித்திரங்கள் தோன்றின. அந்த காட்சிகளில் ஒன்றை, அவர் மகிழ்ச்சியோடு நீண்ட நேரம் அனுபவித்துக்கொண்டிருந்தார். பீட்டர்ஸ்பர்க்கில் ஒரு நாள் மாலை நடந்த சம்பவத்தை, அவர் தெளிவாக நினைவு கூர்ந்தார். நட்டாஷா உற்சாகமும் பரபரப்பும் கொண்ட முகத்தோடு, அவரிடம் காளான்கள் பொறுக்குவதற்காக, சென்ற வசந்த காலத்தில் அவள் போனதைப் பற்றி சொல்லிக் கொண்டிருந்தாள். அவள் நுழைந்த அந்த பெரிய காட்டில், அவளுக்கு வழி தவறி விட்டது. தொடர்ச்சியில்லாமல், அந்த பெரிய காட்டைப் பற்றியும், அவளுடைய உணர்ச்சிகளைப் பற்றியும் வருணித்துக் கொண்டிருந்தாள். அங்கே தேன் கூடு வைத்திருப்பவர் ஒருவரை அவள் சந்தித்தாள். அவருடன் அவள் பேசியதைப் பற்றியும் சொல்லிக் கொண்டிருந்தாள். ஆனால், அடிக்கடி தனது கதையை நிறுத்தி, 'இல்லை, என்னால் சொல்ல முடியவில்லை, நான் சரியாக உமக்கு சொல்லவில்லை; இல்லை, உமக்கு அது புரியாது' என்று சொல்லிக்கொண்டிருந்தாள்.

தமக்கு அவள் என்ன சொல்ல விரும்புகிறாள் என்பதை உண்மையிலேயே அவர் அறிந்துகொண்டு, அவள் சொல்லி வருவதை நாம் அறிந்து கொள்ளுவதாக சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால், தன்னுடைய பேச்சைப் பற்றி நட்டாஷாவுக்கு திருப்தியில்லை. அந்த ஆர்வமுள்ள கவித்துவ உணர்ச்சியை, அன்றைய தினம் அவள் அனுபவித்த அந்த உணர்ச்சியை, தன்னால் சரியாக சொல்ல முடியவில்லை என்றும், சரியாக சொல்ல விரும்புவதாகவும் அவள் உணர்ந்தாள். 'அவர் அவ்வளவு மகிழ்ச்சிகரமான வயதான, மனிதர். அந்தக் காட்டில் அவ்வளவு இருட்டாக இருந்தது. அவர் அவ்வளவு அன்பாய்... இல்லை, என்னால் அவை வருணிக்க முடியாது.' என்று அவள் சொல்லிவிட்டு, முகம் சிவந்து பரபரப்படைந்தாள். அச்சமயம் அவளுடைய கண்களைப் பார்த்து, அவர் எம்மாதிரி புன்சிரிப்பு கொண்டாரோ, அதே புன்சிரிப்பை இளவரசர் ஆண்ட்ரூ

இப்பொழுது கொண்டார். 'நான் அவள் சொல்லுவதை அறிந்து கொண்டேன். அவளை அறிந்து கொண்டது மட்டுமல்ல; அவளுடைய உள் உணர்ச்சி, ஆத்மீக வேகம், அந்த உண்மையான சிரத்தை, அந்த ஆத்மாவின் கபடமற்ற போக்கு - அவளுடைய அந்த ஆத்மா, அவளுடைய உடலினால் பந்தப்படுத்தி வைக்கப் பட்டிருப்பது போலத் தோன்றியது - அவளிடம் உள்ள அந்த ஆத்மா, அந்த ஆத்மா மீதுதான் நான் காதல் கொண்டேன்... மிகுந்த பலமாக நான் காதல் கொண்டு மகிழ்ச்சியாக இருந்தேன்...' திடீரென்று, அவருடைய காதல் எம்மாதிரி முடிந்தது என்பதை, அவர் நினைவு, கூர்ந்தார். 'அவனுக்கு (அனடோலுக்கு) அம்மாதிரியான காரியம் எதுவும் தேவையில்லை. அம்மாதிரியான காரியம் எதையும், அவன் பார்க்கவோ, அல்லது அறியவோ இல்லை. அவனிடம் உள்ள ஒரு அழகிய, புத்தம் புதிய வாலிப பருவப் பெண் உருவத்தையே அவன் கண்டான். அவளுடன் கூட அவனுடைய விதியை இணைத்துவைக்க அவன் விரும்பவில்லை. ஆனால், நான்?... அவன் இன்னமும் உயிரோடும் மகிழ்ச்சியோடும் இருக்கிறேன்.'

யாரோ ஒருவர் அவரைக் கொளுத்தி விட்டதைப் போல, திடீரென்று துள்ளி எழுந்து மீண்டும் அந்த கொட்டகையின் முன்பு மேலும் கீழுமாக இளவரசர் ஆண்ட்ரூ உலாவ ஆரம்பித்தார்.




ஆகஸ்டு மாதம் 25-ந் தேதியன்று, பாராடினோ போருக்கு முதல் நாளன்று, வாலாவா என்ற இடத்தில், நெப்போலியனுடைய தலைமைக் காரியலாயத்திற்கு இரண்டு பேர்கள் வந்தார்கள். ஒருவர்–சக்கரவர்த்தியின் அரண்மனை இலாகா தலைவர். அவர் பெயர், டி பாசெட். மற்றொருவர், கர்னல் பேபியர். முன்னவர் பாரிஸிலிருந்தும், பின்னவர் மாட்ரிட்டிலிருந்தும் வந்தார்கள்.

தமது அரசசபை சீருடையை அணிந்து கொண்டிருந்த திருவாளர் டி பாசெட், சக்கரவர்த்திக்காகத் தாம் கொண்டு வந்திருந்த பெட்டியை, அங்கே கொண்டு வரும்படி உத்தரவிட்டார். நெப்போலியனுடைய கூடாரத்தின் முதல் கட்டிற்கு அவர் போய், அவரைச் சூழ்ந்து நின்ற நெப்போலியனுடைய மெய்க்காப்பாளர்களுடன் பேசிக்கொண்டே, அந்தப் பெட்டியைத் திறக்க ஆரம்பித்தார்.

கூடாரத்திற்கு பேபியர் நுழையாமல், தமக்கு பழக்கமான சில ஜெனரல்களுடன், கூடார வாசலில் நின்று கொண்டிருந்தார்.

சக்கரவர்த்தி நெப்போலியன், இன்னமும் தமது படுக்கை அறையை விட்டு வெளியே வரவில்லை. தமது அலங்காரங்களை முடித்துக் கொண்டிருந்தார். லேசாக மூச்சு விட்டுக் கொண்டும், முனங்கிக் கொண்டும், ஒரு சமயம் தமது முதுகைக் காட்டியும், மறு சமயம் தமது கொழுத்த, ரோமம் நிறைந்த மார்பைக் காட்டியும், அவருடைய சேவகனிடம் பிரஷ்ஷினால் தேய்ந்து விடும்படி செய்துகொண்டிருந்தார். மற்றொரு சேவகன், ஒரு புட்டியின் வாயைத் தன் விரலால் டிக்கொண்டு, சக்கரவர்த்தியின் உடம்பில் ஓ-டி-கோலோனைத் தெளித்துக்கொர்ண்டிருந்தான். எந்த இடத்தில், எவ்வளவு ஓ-டி-கோலோனைத் தெளிக்க வேண்டுமென்பது, தனக்கு மட்டுமே தெரிந்திருப்பது போன்ற தோற்றத்துடன், அவன் செய்து கொண்டிருந்தான். நெப்போலியனுடைய குறுகிய தலைமுடி ஈரமாகவும், முன்னால் அடர்த்தியாகத் தொங்கிகொண்டும் இருந்தது. அவருடைய முகம் பருத்தும் மஞ்சளாகவும் காணப்பட்ட போதிலும், திருப்தியற்ற தோற்றத்தோடு விளங்கியது. தம்மைத் தேய்த்து விட்டுக் கொண்டிருந்த வேலைக்காரனிடம், லேசாக உடலை வளைத்துக்கொண்டும், முனங்கிக் கொண்டும், 'தேய், பலமாகத் தேய், இன்னும் தேய்' என்று சொல்லிக் கொண்டிருந்தார். நேற்றைய போரில் எத்தனை பேர்களைக் கைதிகளாகப் பிடித்திருக்கிறோம் என்பதை அறிவிப்பதற்காக, ஒரு மெய்க்காப்பாளர் சக்கரவர்த்தியின் படுக்கை அறைக்குள் வந்தார். அவர் சொல்லிய பின்பு, தம்மை வெளியே போவதற்கு அனுமதிக்காக வாசலின் பக்கத்தில் காத்து நின்றார். முகத்தைச் சுளித்து, தமது புருவங்களின் கீழாக நெப்போலியன் அவரைப் பார்த்தார்.

'கைதிகளே கூடாது' என்று அவர், அந்த மெய்க்காப்பாளரைப் பார்த்து அவர் சொல்லிய வார்த்தைகளை, திரும்பச் சொன்னார்.

'அவர்களை நிர்மூலமாக்கும்படி நம்மை அவர்கள் கட்டாயப் படுத்துகிறார்கள். ருஷ்ய ராணுவத்திற்கு, அதனால் இன்னமும் கெடுதல்தான்... நன்றாய்த் தேய்... அழுத்தித் தேய்' என்று அவர் முனங்கிக்கொண்டு, தமது முதுகை வளைத்து, தம்முடைய கொழுத்த தோள்களைக் காட்டினார்.

'ரொம்ப சரி, திருவாளர் டி பாசெட்டும், பேபியரும் இங்கே வரட்டும்' என்று அவர் சொல்லி விட்டு, அந்த மெய்க் காப்பாளருக்கு தலையை ஆட்டினார்.

'நல்லது, மாட்சிமை தங்கியரே' என்று அந்த மெய்க்காப்பாளர் சொல்லிவிட்டு, அந்தக் கூடாரத்தின் வாசல் வழியாக மறைந்தார்.

இரண்டு சேவகர்கள் அவசரமாக மாட்சிமை தங்கியவருக்கு ஆடைகள் அணிந்தார்கள். காப்பாளர் படையின் நீல நிற சீருடையை அவர் அணிந்து, உறுதியான, வேகமான நடையோடு வரவேற்பு அறைக்குப் போனார்.

சக்கரவர்த்தினியிடமிருந்து அவர் கொண்டு வந்திருந்த பரிசுகளை, இரண்டு நாற்காலிகள் மீது, அந்த வாசலுக்குப் பக்கத்தில் பரப்பி வைப்பதில், டி பாசெட் மும்முரமாயிருந்தார். நெப்போலியன் எதிர்பாராத விதமாக வேகமாய் உடையணிந்து அங்கே வந்து விட்டபடியால், அவருக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கக் கூடிய விதத்தில், அந்தப் பரிசுகளைப் பரப்பி வைப்பதற்கு அவருக்கு அவகாசம் இல்லை.

அவர்கள் என்ன செய் கொண்டிருக்கிறார்கள் என்பதையும், அவர்கள் இன்னும் தயாராகவில்லை என்பதையும் நெப்போலியன் கவனித்தார். அவருக்கு ஒரு ஆச்சரியத்தைக் கொடுக்க வேண்டும் என்ற அவர்களுடைய மகிழ்ச்சியைக் கெடுப்பதற்கு அவர் விரும்பவில்லை. ஆகவே, பாசெட்டைப் பார்க்காதவர் போல நடித்து, பேபியரை அழைத்தார். பேபியர் சொல்லுகிறவைகளை யெல்லாம், ஒரு கண்டிப்பான முகச்சுளிப்போடு மௌனமாக, கவனமாய்க் கேட்டு வந்தார். ஐரோப்பாவின் மற்றொரு கோடியிலுள்ள அவருடைய துருப்புகள், சாலமங்கா என்ற இடத்தில் காட்டிய வீரத்தையும், பக்தியையும் அவர் எடுத்துக் கூறினார். தங்களுடைய சக்கரவர்த்திக்கு, தாங்கள் தகுதியான வர்களாக இருக்கவேண்டுமென்ற ஒரே எண்ணத்துடன்தான், அவர்கள் போர் செய்தார்களாம். தங்களுடைய சக்கரவர்த்தியை மகிழ்ச்சி செய்ய முடியாமல், தாங்கள் இருந்துவிடக் கூடாதே என்ற ஒரேபயம்தான் அவர்களுக்கு இருந்ததாம். ஆனால், அந்த யுத்தத்தின் முடிவு, மிகவும் பரிதாபகரமாயிருந்தது. பிரசன்னமாயில்லாத இடத்தில், வேறுவிதமாக நடந்திருக்க முடியாது என்பதை அவர் அறிந்திருந்தது போல அவருடைய கேள்விகள் தோன்றின.

'மாஸ்கோவில் அதற்காக நான் பரிகாரம் தேட வேண்டும். நான் உம்மைப் பின்னால் பார்க்கிறேன்' என்று அவரிடம் சொல்லிவிட்டு, டி பாசெட்டை அவர் அழைத்தார். அதற்குள்ளாக டி பாசெட் தம்து வேலைகளை முடித்து, அந்த நாற்காலிகளின் மீது ஒரு துணியால் மூடியிருந்தார்.

டி பாசெட் தணிவாகத் தலை குனிந்து வணங்கினார். பூர்பான் காலத்துப் பேர்வழிகளால் மட்டுமே செய்யக்கூடிய, அந்த பிரெஞ்சு ராஜாங்கத் தலை வணக்கத்தை, எப்படி செய்ய வேண்டும் என்பதை அவர் அறிவார். அம்மாதிரி வணக்கம் செய்துவிட்டு, அவரிடம் நெருங்கி ஒரு கடிதத்தைக் கொடுத்தார்.

நெப்போலியன் மகிழ்ச்சியோடு அவரிடம் திரும்பி, அவர் காதைப் பிடித்து இழுத்தார்.

'நீர் இங்கே வேகமாய் வந்திருக்கிறீர். நான் மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன். நல்லது, பாரிஸ் என்ன சொல்லுகிறது? என்று சொல்லிவிட்டு, தமது முந்தைய, கடினமான தோற்றத்தை ஒரு கனிவு கொண்ட குரலை மாற்றினார்.

'மாட்சிமை தங்கியவரே, நீர் அங்கே இல்லாதபடியால், பாரிஸ் முழுவதுமே வருந்துகிறது.' என்று பொருத்தமாக டி பாசெட் பதில் அளித்தார்.

இம்மாதிரி எதாவது விஷயத்தைத்தான், டி பாசெட் சொல்ல வேண்டுமென்பதை நெப்போலியன் அறிவார். அவருடைய தெளிவான நேரங்களில், இவையெல்லாம் உண்மையல்ல என்பதையும் அவர் அறிவார். என்றாலும், அவற்றை அவரிடமிருந்து கேட்பதற்கு அவர் மகிழ்ச்சி கொண்டார். மீண்டும் அவருடைய காதைத் தொட்டு, அவரைக் கௌரவப்படுத்தினார்.

'உம்மை அவ்வளவு தூரம் பிரயாணம் செய்யும்படி வைத்ததற்காக, நான் மிகவும் வருந்துகிறேன்' என்று அவர் சொன்னார்.

'மாட்சிமை தங்கியவரே, மாஸ்கோவின் கோட்டை வாசல்களில் நான் உம்மைப் பார்ப்பதைத் தவிர, வேறு எதையும் எதிர் பார்க்கவில்லை' என்று டி பாசெட் பதில் அளித்தார்.

நெப்போலியன் புன்னகை காட்டினார். பராக்கு புத்தியோடு தமது தலையை நிமிர்த்தி, வலது பக்கம் நோக்கினார். ஒரு மெய்க்காப்பாளர் மிதந்து வரும் நடையோடு அவரை அணுகி அவரிடம் அவருடைய தங்கப் பொடி டப்பியை நீட்டினார். அதை அவர் பெற்றுக் கொண்டார்.

'ஆம், உமக்கு நல்ல வேளையாக அம்மாதிரி நடந்து விட்டது' என்று அவர் சொல்லி, அந்தப் பொடி டப்பியைத் திறந்து, தமது மூக்கிற்குக் கொண்டு போனார். 'பிராயாணம் செய்வதில் உமக்கு மிகுந்த பிரியம் உண்டு. இன்னும் மூன்று நாட்களில் மாஸ்கோவை நீர் பார்க்கலாம். அந்த ஆசியாவின் தலைநகரை நீர் பார்ப்பீரென்று,

நிச்சயமாக எதிர்பார்த்திருக்கமாட்டீர். உமது பிரயாணமும் மகிழ்ச்சியானதாக இருக்கும்.'

பிரயாணத்தில் தமக்கு பிரியமிருப்பதாக நெப்போலியன் கூறியதைக் கேட்டு, மரியாதையோடு தலை வணங்கினார். (அம்மாதிரி ஒரு ஆசை அவருக்கு உண்டு என்பதை, அது வரை அவர் அறியார்)

'ஆ, இது என்ன இது?' என்று, அங்கிருந்த தூதர்கள் எல்லாரும், ஒரு துணியினால் மறைக்கப்பட்டிருந்த ஏதோ ஒன்றை ஆவலோடு பார்த்ததைக் கண்டு, நெப்போலியன் கேட்டார்.

ராஜ சபைக்குரிய ஒரு சமத்காரத்தோடு, டி பாசெட் பாதி திரும்பி, தமது முதுகை சக்கரவர்த்திக்குக் காட்டாமல், இரண்டு அடிகள் பின்னால் போனார். அதே சமயத்தில், மூடப்பட்டிருந்த துணியை எடுத்துவிட்டு அவர் சொன்னார்:

'மாட்சிமை தங்கிய சக்கரவர்த்திக்கு, ஒரு பரிசாக சக்கரவர்த்தினி அனுப்பி இருக்கிறாள்.'

கெரார்ட் என்பவர் பிரகாசமான வர்ணங்களினால் அந்த படத்தை எழுதியிருந்தார். அது, ஆஸ்திரிய சக்கரவர்த்தியின் குமாரியான நெப்போலியனின் மனைவிக்குப் பிறந்த புத்திரனின் படம். என்ன காரணத்தினாலோ, அந்தப் பையனை 'ரோமாபுரி மன்னன்' என்று அழைத்து வந்தார்கள். அவன் சுருளை முடிதலையைக் கொண்ட ஒரு அழகான பையன். சிஸ்டைன் என்பவர் எழுதிய தேவமாதாவின் படத்திலுள்ள கிறிஸ்துவின் முகத் தோற்றத்தைப் போல, அவன் முகம் காணப்பட்டது. அந்தச் சிறுவனின் கையில் ஒரு கம்பையும் பந்தையும் வைத்து விளையாடிக் கொண்டிருப்பதாக வரையப்பட்டிருந்தது. அந்தப் பந்து பூலோகத்தைக் குறிப்பிடுவதாகவும், அவன் கையிலிருந்த கம்பு செங்கோலைக் குறிப்பிடுவதாகவும் இருந்தன.

'ரோமாபுரி மன்னன்' என்று அழைக்கப்பட்டு வந்த அந்தப் பையன், அந்த பூமியை எதற்காக அந்தக் குச்சியால் துளைக்கிறான் என்பதைப் பற்றி, அதை எழுதிய சித்திரக்காரர் என்ன நினைத்தார் என்பது தெளிவாய்த் தெரியவில்லை. அந்தச் சித்திரத்தில் கண்ட உபமானம் பாரிஸில் உள்ளவர்களுக்கெல்லாம், எப்படி தெளிவாகவும் இனிமையாகவும் இருந்ததோ, அதே மாதிரி நெப்போலியனுக்கும் இருந்ததாகத் தோன்றியது.

'ரோமாபுரி மன்னன்' என்று நெப்போலியன், ஒரு அழகான சமிக்ஞையால் அந்தப் படத்தைச் சுட்டிக் காட்டிச் சொன்னார். 'பிரமாதம்'

நினைத்தபோது தனது முகத்திலுள்ள தோற்றத்தை மாற்றக் கூடிய இயற்கையான சுபாவம், இத்தாலியனுக்கு உண்டு. அந்த சுபாதவத்தைக் கொண்ட நெப்போலியன், அந்தப் படத்தின் பக்கத்தில் நெருங்கி, சிந்தனையோடு கூடிய கனிவுள்ள தோற்றத்தை மேற்கொண்டு அதைப் பார்த்தார். அச்சமயம் அவர் என்ன சொல்லுகிறாரோ, அல்லது செய்கிறாரோ, அது சரித்திரத்தில் இடம் பெறுமென்பதை அவர் உணர்ந்தார். ஆகவே (அவருடைய பகத்துவத்தினால்தான் அந்தச் சிறுவன் கையில் கம்பையும், பூலோக உருண்டையான பந்தையும் வைத்துக்கொண்டு விளையாட முடிந்தது), அந்த மகத்துவத்திற்கு நேர் மாறான, ஒரு எளிமையான, தந்தைக்குரிய கனிவைக் காட்டுவது, அச்சமயம் மிகுந்த சிலாக்கியமாய் இருக்குமென்று அவர் நினைத்தார். அவ்வருடைய கண்கள் மங்கின. அவர் முன்னால் போனார். ஒரு நாற்காலியை நோக்கினார். (அந்த நாற்காலி தானாக அவரிடம் வந்து சேர்ந்ததைப் போல, அதை உடனே அவரிடம் அங்கே நகர்த்தினார்கள்.) படத்திற்கு முன்பாக அதில் அமர்ந்தார். அவர் காட்டிய ஒரு சமிக்கையைப் பார்த்து, அங்கிருந்தவர் எல்லாரும் முன் பாதங்களைப் பதித்து மெதுவாக வெளியேறினார்கள். அந்த பெரிய மனிதரும், அவருடைய உணர்ச்சிகளும் மட்டுமே அங்கே தங்கியிருந்தன.

சிறிது நேரம் அசையாமல் இருந்த பின்பு, அந்தப் படத்தை அவர் தொட்டார். தாம் ஏன் அப்படி செய்தார் என்பது அவருக்குத் தெரியாது. அந்தப் படத்திலுள்ள கனமான வர்ணமுள்ள ஒரு இடத்தை அவர் தொட்டார். அந்த இடந்தான், அந்தப் படத்திலேயே பிரகாசமான ஒளியைக் கொடுத்துக் கொண்டு இருந்தது. பின்னால் டி பாசெட்டையும், அங்கே அலுவலிலிருந்த அதிகாரியையும் அவர் அழைத்தார். அந்தப் படத்தை தமது கூடாரத்திற்கு வெளியே கொண்டு போகும்படி அவர் உத்தரவிட்டார். அந்த கூடாரத்தைச் சுற்றியிருந்த பழைய காப்பாளர் படையைச் சேர்ந்தவர்களுக்கு, அந்த 'ரோமாபுரி மன்ன'னும், தங்களால் போற்றப்படும் சக்கரவர்த்தியின் பட்டத்திற்குரிய மகனுமானவரின் படத்தைப் பார்க்கும் மகிழ்ச்சியைக் கொடுக்க வேண்டுமென்று அவர் விரும்பினார்.

'டி பாசெட் தம்முடனேயே காலை உணவு அருந்தும்படி அவர் சொன்னார். அவர்கள் காலையுணவு அருந்திக் கொண்டிருக்கும் போது, நெப்போலியன் எதிர்பார்த்தபடியே கோஷங்களைக் கேட்டார்கள். பழைய காப்பாளரின் படையைச் சேர்ந்த

அதிகாரிகளும், வீரர்களும், அந்தப் படத்தைப் பார்ப்பதற்காக ஓடியபோது பரவசக் கூச்சல்கள் போட்டார்கள்.

'சக்கரவர்த்தி நீடுழி வாழ்க! ரோமாபுரி மன்னன் நீடுழி வாழ்க! சக்கரவர்த்தி நீடுழி வாழ்க' என்று அந்த மட்டற்ற மகிழ்ச்சி கொண்ட கூச்சல்கள் கேட்டன.

காலை ஆகாரத்திற்கு பின்பு, டி பாசெட்டின் முன்னிலையில் ராணுவத்திற்கு அன்று பிறப்பிக்கப்பட வேண்டிய உத்தரவை, நெப்போலியன் தமது எழுத்தாளரிடம் ஒரு திருத்தம்கூட இல்லாமல் சொல்லிக்கொண்டிருந்தார். அதை முடித்த பின்பு, அதை வாங்கி அவர் வாசித்து, 'சுருக்கமாகவும் உணர்ச்சியுள்ளதாகவும் இருக்கிறது' என்று சொன்னார். அந்த உத்தரவில் கண்டிருந்த விஷயமாவது:

'வீரர்களே, நீங்கள் வெகு காலமாக எதிர்பார்த்திருந்த யுத்தம் இதுவே தான். ஆகவே, வெற்றி என்பது உங்களைச் சார்ந்திருக்கிறது. அது நமக்கு மிகவும் அவசியமானது. நம்முடைய தேவைகளை எல்லாம், அது நமக்குக் கொடுக்கும். அதாவது, சௌரியமான விடுதிகளையும், சீக்கிரமாக நமது நாட்டிற்குத் திரும்புவதையும் அது நமக்குக் கொடுக்கும். ஆஸ்டர்லிட்ஜ், ப்ரீட்லாண்டு, வைட்டெப்ஸ்க், ஸமாலென்ஸ்க், ஆகிய இடங்களில், நீங்கள் எம்மாதிரி நடந்தீர்களோ, அதே மாதிரி இப்பொழுதும் நடப்பீர்களாக. நமக்குப் பின்னால், வெகு காலத்திற்கு அப்புறம் வரக்கூடிய சந்ததிகள் கூட, இன்றைய தினம் நீங்கள் அடைந்த வெற்றிகளைப் பற்றி மிகுந்த பெருமையோடு பேசிக்கொள்ளும்படி இருக்கவேண்டும். உங்கள் ஒவ்வொருவரைப் பற்றியும், 'அவர் மாஸ்கோவுக்கு முன்னால் நடந்த பெரிய போரில் கலந்து கொண்டவர்' என்று மற்றவர்கள் சொல்லும்படி நடந்துகொள்வீர்களாக.

'மாஸ்கோவிற்கு முன்னால்' என்று நெப்போலியன் திருப்பிச் சொன்னார். திருவாளர் டி பாசெட்டை அழைத்து (அவர் பிரயாணத்தில் மிகுந்த பிரியமுள்ளவர் என்று சொல்லப்பட்டது), தமது பக்கத்தில் பிரயாணத்தில் வரும்படி சொன்னார். அதன் பின்னால், சேணமிடப்பட்டு தயாராகக் குதிரைகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த கூடாரத்திற்கு நெப்போலியன் சென்றார்.

'மாட்சிமை தங்கியரே, நீர் மிக மிக அன்போடு இருக்கிறீர்' என்று சக்கரவர்த்தி அழைத்தபோது, அந்த பாசெட் கூறினார். உண்மையில் அவர் தூங்க விரும்பினார். அவருக்குக் குதிரை சவாரி செய்யவும் தெரியாது. சவாரி செய்வதற்கும் அவர் பயந்து கொண்டிருந்தார்.

நெப்போலியன் அவரிடம் தலையை ஆட்டினார்.. ஆகவே, குதிரை மீது ஏறியாக வேண்டிய கட்டாயம், டி பாசெட்டிற்கு ஏற்பட்டது. அந்த கூடாரத்திலிருந்து நெப்போலியன் வெளியே வந்தபோது, தமது குமாரரின் படத்தின் முன்பாக, காப்பாளர் படையைச் சேர்ந்தவர்கள் கோஷம் செய்து கொண்டிருந்தது இன்னும் பலமாயிற்று. நெப்போலியன் முகம் சுளித்தார்.

'அவனை எடுத்துக்கொண்டு போங்கள்' என்று அவர் சொல்லி, ஒரு கம்பீரமான சமிக்கையோடு, அந்தப் படத்தைச் சுட்டிக் காட்டினார். 'யுத்த களத்தைப் பார்ப்பதற்கு இன்னும் அவனுக்கு வயதாகவில்லை.'

டி பாசெட் தமது கண்களை மூடி, தலையைக் குனிந்து, ஆழ்ந்த பெருச்சு விட்டார். சக்கரவர்த்தியின் வார்த்தைகளை எவ்வளவு பிரமாதமாக மதிக்கிறார்க. மதித்து, அறிந்து கொண்டார் என்பதைக் காட்டுவதைப் போல, அவருடைய செய்கைகள் இருந்தன.




ஆகஸ்டு மாதம் 25-ந் தேதியன்று, அன்று பூராவுமே குதிரைமீது அமர்ந்து நெப்போலியன் சுற்றிப் பார்த்ததாக, அவருடைய சரித்திர ஆசிரியர்கள் கூறுகிறார்கள். போர்க்களத்தையும், அவரிடம் அவருடைய மார்ஷல்கள் சமர்ப்பித்த திட்டங்களையும், அவர் பார்த்து யோசனை செய்து, தம்முடைய ஜெனரல்களுக்கு உத்தரவு கொடுத்ததாகவும் அவர்கள் சொல்லுகிறார்கள்.

24-ந் தேதியன்று ஷெவார்டினா அரண்களைக் கைப்பற்றியதால், காலாச்சா நதியையொட்டி, ருஷ்ய துருப்புகள் ஆரம்பத்தில் அமைத்திருந்த அணி வரிசைகளை மாற்ற வேண்டியதாயிற்று. அந்த வரிசைகளை அவர்கள் பின்னால் இழுத்துக்கொண்டார்கள். அந்த வரிசை இப்பொழுது அரண்கள் இல்லாததாக இருந்தது. அதற்கு எதிராக உள்ள பூமி, வேறு எந்த இடத்தையும் விட திறந்ததாகவும், சமமானதாகவும் காணப்பட்டது. ராணுவத்தைச் சேர்ந்தவர்களாய் இருந்தாலும் இல்லாவிட்டாலும், ஒவ்வொருவருக்கும் அந்த இடத்தில்தான் பிரஞ்சுக்காரர்கள் தாக்குதலைச் செய்வார்கள் என்பது தெளிவாயிருந்தது. இந்த முடிவுக்கு வருவதற்கு மிகுந்த ஆலோசனைகள் அவசியமில்லை என்று தோன்றலாம். அல்லது, சக்கரவர்த்தியோ, அவருடைய மார்ஷல்களோ, இதற்காக எவ்விதமான கவலையோ, சிரத்தையோ எடுத்துக்கொள்ள

வேண்டியதில்லை என்றும் தோன்றியது. இதற்காக ஒரு மேதையென்று சொல்லப்படும் உயர்தரமான, அதாவது நெப்போலியனுக்கு இருப்பதாக மக்களால் சொல்லப்படும் அந்த மேதையான புத்தி, அவசியமில்லை என்பதும் தோன்றியது. என்றாலும், இந்த சம்பவத்தைப் பற்றி பின்னால் வருணித்த சரித்திரக்காரர்களும், அன்று நெப்போலியனை சூழ்ந்து இருந்தவர்களும், நெப்போலியனும், வேறு விதிமாக நினைத்தார்கள்.

அந்த சமமான பூமியின் நெப்போலியன் குதிரை மீது சவாரி செய்து, ஆழ்ந்த சிந்தனை கொண்ட தோற்றத்தோடு, மௌனமாக சுற்றிப் பார்த்துக்கொண்டிருந்தார். ஆதரிப்பது போலவும், ஆதரிக்காதது போலவும், தமது தலையை அங்கங்கே ஆட்டிக் கொண்டிருந்தார். அவரைச் சுற்றி நின்ற ஜெனரல்களிடம், அவருடைய மனதில் ஓடிக்கொண்டிருந்த சிந்தனை மிகுந்த கருத்துக்களைச் சொல்லவில்லை. அந்தக் கருத்துக்களினால் ஏற்பட்ட முடிவான தீர்மானங்களை மட்டும், உத்தரவுகள் மூலமாக அவர் வெளியிட்டார். டாவூட் என்பவர் சொல்லிய ஒரு யோசனையைக் கவனித்துக் கேட்டார். அவர் இப்பொழுது 'டி ஏக்மூல் இளவரசர்' என்று அழைக்கப் படுகிறார். ருஷ்ய இடது பக்கவாட்டைத் திருப்பி விடவேண்டுமென்று அவர் யோசனை' சொன்னார். அம்மாதிரி செய்யக் கூடாதுதென்று நெப்போலியன் சொன்னார். ஆனால், அதற்கான காரணத்தை அவர் சொல்லவில்லை. ஜெனரல் காம்பான் (அவர் தான் அரண்களைத் தாக்க வேண்டியவர்) என்பவர், தமது படைப் பிரிவைக் காடுகளின் வழியாக நடத்திச் செல்லவேண்டும் என்று, ஒரு யோசனை கூறினார். அதை நெப்போலியன் ஒப்புக் கொண்டார். கோமகன் எல்சிங்கென் (நே) என்பவர், காடுகள் வழியாகத் துருப்புகளை அழைத்துச் செல்வது அபாயகரமானது என்றும், துருப்புகள் நிலை குலைந்து விடுவார்கள் என்றும் சொன்னார். 'என்றாலும் அதை நெப்போலியன் கவனிக்கவில்லை.

ஷெவார்டினா அரண்களுக்கு எதிரான இருந்த பூமியைப் பரிசீலனை செய்த பின்பு, அமைதியாக சிறிது நேரம் நெப்போலியன் யோசனை செய்தார். அதன் பின்னால், இரண்டு இடங்களைச் சுட்டிக் காட்டி, அந்த இடங்களில் நாளைய தினம் பீரங்கிப் படைகளை வைக்க வேண்டுமென்று சொன்னார். ருஷ்ய அரண்களைத் தகர்ப்பதற்காக, அவை வேண்டுமென்று கூறினார். அவற்றோடு பொருத்தமாக இருக்கும்படி, பெரிய பீரங்கிகளை

எந்தெந்த இடங்களில் வைக்க வேண்டும் என்பதையும் அவர் சுட்டிக் காட்டினார்.

இந்த உத்தரவுகளையும், மற்ற உத்தரவுகளையும் அவர் கொடுத்த பின்பு, தமது கூடாரத்திற்குத் திரும்பினார். வியூகத்தைப் பற்றி அவர் சொல்லிய உத்தரவுகளை எழுதிக்கொண்டார்கள்.

இந்த வியூகங்களைப் பற்றி பிரஞ்சு சரித்திர ஆசிரியர்கள் மிகுந்த உற்சாகத்தோடு எழுதுகிறார்கள். மற்ற சரித்திர ஆசிரியர்களும், மிகுந்த மரியாதையோடு எழுதுகிறார்கள். அவர்கள் குறிப்பிடும், அந்த நெப்போலியனின் உத்தரவுப்படி ஏற்படும் அந்த வியூகம் பின்வருமாறு:

'சூரிய உதயத்தில் இரண்டு பீரங்கிப் படைகள், எதிரிலுள்ள எதிரியின் இரண்டு பீரங்கிப் படைகளை நோக்கிச் சுட ஆரம்பிக்க வேண்டும். அந்த பீரங்கிப் படைகளை, இளவரசர் டி ஏக்மூல் ஆக்கிரமித்திருக்கும் பூமியில், இரவிலேயே ஸ்தாபித்து விட வேண்டும்.

'பீரங்கிப் படையின் முதல் பிரிவின் கமாண்டரான ஜெனரல் பெர்நெட்டி என்பவர், அதே சமயத்தில், காம்பானின் படைப்பிரிவைச் சேர்ந்த 30 பீரங்கிகளோடு, டேசாயின் படைப்பிரிவைச் சேர்ந்த எல்லா பெரிய பீரங்கிகளையும், பிரியன்ட்டின் படைப் பிரிவுகளையும் சேர்ந்த எல்லா பீரங்கிகளும், முன்னால் நகர்த்தி சுட ஆரம்பிக்கவேண்டும். அவையெல்லாம் எதிரியின் பீரங்கிப் படைகளைக் குண்டுகள் பொழிந்து அமுக்க வேண்டும். அந்த வேலையைச் செய்வதற்கான பீரங்கிகள், பின்வருமாறுஇருக்க வேண்டும்:

24 பீரங்கிகள் - காப்பாளர் படையைச் சேர்ந்தவை.

30 பீரங்கிகள் - காம்பான் படைப் பிரிவைச் சேர்ந்தவை.

8 பீரங்கிகள் - பிரியானிட், டேசாய் படைப் பிரிவுகளைச் சேர்ந்தவை.

---

62 மொத்த பீரங்கிகள்.

---

'மூன்றாவது படைப் பிரிவின் பீரங்கிகளின் கமாண்டரான ஜெனரல் பவுச் என்பவர், மூன்றாவதும் எட்டாவதுமான பிரிவுகளைச் சேர்ந்த மொத்தம் 18 ஹவிட்சர் பீரங்கிகளை, அந்த பீரங்கிப் படைகளின் பக்கவாட்டுகளில் அமைக்கவேண்டும்.

அவை இடது பக்கத்திலுள்ள அரண்களைத் தாக்கவேண்டும். மொத்தம் அவர்களிடம் 40 பீரங்கிகள் இருக்கும்.

'உத்தரவு கிடைத்ததும், காப்பாளர் பீரங்கிப் படையைச் சேர்ந்த எல்லா ஹவிட்சர் பீரங்கிகளும், எதிரிகளின் அரண்களுக்கு எதிராக முன்னேறுவதற்கு, ஜெனரல் சார்பியர் தயாராக இருக்கவேண்டும்.

'பீரங்கித் தகர்ப்புகள் நடந்துகொண்டு இருக்கும்போது, இளவரசர் பானியாடௌஸ்கி என்பவர், அந்த கிராமத்திலுள்ள காடு வழியாக முன்னேறி, எதிரியின் அணி வரிசையைத் திருப்ப வேண்டும்.

'காடு வழியாக ஜெனரல் காம்பான் முன்னேறி, முதலாவது பாதுகாப்புகளைக் கைப்பற்றவேண்டும்.

'இந்த விதமாக முன்னேற்றம் ஆரம்பித்த பின்பு, எதிரியின் நடமாட்டங்களைப் பொறுத்து, உத்தரவுகள் பிறப்பிக்கப்படும்.

'வலது பக்கவாட்டின் மீது பீரங்கி தகர்ப்புகள் ஆரம்பித்ததைக் கேட்டவுடன், இடது பக்கவாட்டின் மீது பீரங்கி தகர்ப்புகளை ஆரம்பிக்கவேண்டும். மாரான்டினுடைய படைப் பிரிவும், உதவி-மன்னரின் படைப் பிரிவும் (முராட்டை உதவி-மன்னர் என்று அழைக்கிறார்கள்.) வலது பக்கத்தில் பீரங்கி தகர்ப்பு ஆரம்பித்தவுடன், இவர்களும் சுடுவதற்கு ஆரம்பிக்கவேண்டும்.

மூன்று பாலங்கள் வழியாகக் கடந்து, அந்த கிராமத்தை (பாராடினோ) உதவி -மன்னர் கைப்பற்றுவார். மாரான்டினுடையவும் கொரார்டினுடையவும் படைப் பிரிவுகள் இருக்கிற உயரத்திற்கு உதவி-மன்னர் முன்னேற வேண்டும். அங்கே அவருடைய தலைமையில், அந்தத் துருப்புகளோடு அந்த அரண்களை, மற்ற துருப்புகள் செய்யும் போருக்கு ஒத்ததாக, அவர் தகர்க்க வேண்டும்.

'இவற்றையெல்லாம் ஒழுங்கான முறையில் செய்யவேண்டும். கூடியவரையில் துருப்புகளை ரிசர்வில் வைத்துக்கொண்டு நடத்த வேண்டும்.

சக்கரவர்த்தி முகாம்,

மஜாய்ஸ்க் அருகில்

6-ந் தேதி செப்டம்பர்

மாதம், 1812.'

நெப்போலியனுடைய மேதையைப் பற்றி மலைப்பான தோற்றம் கொள்ளாமல், இந்த அமைப்புகளைப் பற்றி ஒருவர்

யோசித்துப் பார்ப்பாரானால், அவருக்கு இவையெல்லாம் தெளிவற்றவையாகவும், குழப்பமானவையாகவும் தோன்றும், இந்த உத்தரவுகள் நாலு விஷயங்களைக் குறிப்பிடுகின்றன. - நாலு வெவ்வேறு விதமான உத்தரவுகள்; இதில் ஒன்றைக் கூட நிறைவேற்றவில்லை. நிறைவேற்றவும்முடியாது.

இந்த வியூகத்தைப்பற்றி, முதலில் சொல்லப்பட்டிருப்பதாவது: நெப்போலியனால் தேர்ந்தெடுக்கப்பட்ட இடத்தில், பீரங்கிப் படைகளை வைக்கவேண்டும். பெர்நெட்டியும் பவுச்சும் தங்கள் பீரங்கிகளை இவற்றோடு சேர்த்து வைக்க வேண்டும். மொத்தம் 102 பீரங்கிகள். இவையெல்லம் ருஷ்ய அரண்கள் மீது குண்டுகளைப் பொழியவேண்டும். இம்மாதிரி செய்ய முடியாது. ஏனெனில், நெப்போலியன் தேர்ந்தெடுத்த இடத்திலிருந்து சுடப்படுகிற குண்டுகள், ருஷ்யர்களிடம் போய்ச் சேரமுடியாது. யாராவது ஒரு கமாண்டர் நெப்போலியனுடைய உத்தரவுக்கு விரோதமாக அந்த பீரங்கிகளை முன்னால் நகர்ந்து போகும்படி உத்தரவிட்டால் ஒழிய, அந்த 102 பீரங்கிகள் எல்லாம் ஆகாயத்தை நோக்கித்தான் சுட்டுக் கொண்டிருக்க வேண்டும்.

காடு வழியாக பானியாடௌஸ்கி என்பவர் கிராமத்திற்குப் போய், ருஷ்யர்களின் இடது பக்கவாட்டைத் திருப்ப வேண்டும் என்று, இரண்டாவது உத்தரவு சொல்லுகிறது. இம்மாதிரியும், செய்ய முடியாது. இம்மாதிரி செய்யப்படவும் இல்லை. ஏனென்றால், பானியாடௌஸ்கி அந்தக் காட்டு வழியாகக் கிராமத்திற்கு முன்னேறிக் கொண்டிருந்த போது, துச்கோவ் என்பவரை எதிர்க்க நேரிட்டது. அவர் அவரை முன்னேற விடாமல் தடுத்து நின்றார். ஆகவே, இவர் 'முன்னேற முடியவில்லை. அதனால், ருஷ்யாரின் அணி வரிசையைத் திருப்பவும் முடியவில்லை.

3-வது உத்தரவாவது: காடு வழியாக ஜெனரல் காம்பான் முன்னேறி, முதலாவது பாதுகாப்பு இடத்தைக் கைப்பற்றவேண்டும் என்பது தான், அந்த உத்தரவு. ஜெனரல் காம்பானின் படைப் பிரிவு, அந்த முதலாவது பாதுகாபபு இடத்தைக் கைப்பற்றவில்லை. ஏனென்றால், அந்த படைப் பிரிவு திருப்பி அடிக்கப்பட்டது. ஏனெனில், காட்டிலிருந்து துருப்புகள் வெளிப்பட்டதும், மீண்டும் அணிவகுக்க வேண்டியிருந்தது. அம்மாதிரி செய்யும்போது ருஷ்யர்கள் அவர்கள் மீது ரவை குண்டுகளைப் பொழிந்தார்கள். இதை நெப்போலியன் அறியவில்லை.

4-வது உத்தரவாவது: மூன்று பாலங்கள் வழியாக நதியைக் கடந்து, பாராடினோ கிராமத்தை உதவி-மன்னர் கைப்பற்றி, மாரான்டினுடையவும், கெரார்டினுடையவும் துருப்புகள் எவ்வளவு உயரத்தில் 'இருக்கின்றனவோ, அவ்வளவு உயரத்திற்கு முன்னேற வேண்டுமென்று, அந்த உத்தரவு சொல்லியது. அரண்களுக்கு விரோதமாக, மற்ற துருப்புகளையும் அனுசரித்து, அவருடைய தலைமையில் நடக்கவேண்டுமென்று அந்த உத்தரவு கூறியது. ஆனால் மாரான்ட், கெரார்ட் படைப் பிரிவுகள், எம்மாதிரி நடக்கவேண்டும் என்பதைப் பற்றி, உத்தரவுகள் எதுவும் அவைகளுக்குக் கொடுக்கப்படவில்லை.

இந்த புரியாத வாக்கியத்திலிருந்து அதிகமாக எதையும் ஒருவரால் புரிந்துகொள்ள முடியாது. அந்த உதவி-மன்னர்கள் இந்த உத்தரவுகளை நிறைவேற்றச் ' செய்த முயற்சிகளிலிருந்தும், ஒன்றையும் புரிந்துகொள்ள முடியாது. இடது பக்கத்திலிருந்து பாராடினோ வழியாக அரண்களுக்கு அவர் முன்னேற வேண்டுமென்பது உத்தரவு. ஆனால், மாரான்ட், கெரார்ட் ஆகியவர்களின் படைப் பிரிவுகள், முன்னாலிருந்து ஏக காலத்தில் முன்னேறவேண்டும் என்பதும் சொல்லப்பட்டிருந்தது.

மற்ற ஏற்பாடுகளைப் போலவே, இந்த ஏற்பாடுகள் நிறைவேற்றப் படவில்லை; நிறைவேற்றப்படவும் முடியாது. பாராடினோ கிராமத்தைக் கடந்து உதவி - மன்னர் போன பின்பு, அவரை காலாச்சாரவிற்கு விரட்டி அடித்து விட்டார்கள். அவரால் மேலே போக முடியவில்லை. மாரான்ட், கெரார்ட் ஆகியவர்களின் படைப் பிரிவினர்களும், அந்த அரண்களைக் கைப்பற்ற முடியவில்லை. அவர்களையும் திருப்பி அடித்து விட்டார்கள். அந்த அரண்கள் அந்தப் போரின் முடிவான கட்டத்தில், குதிரைப் படையால் கைப்பற்றப்பட்டன. (அதை ஒருவரும் எதிர்பார்க்கவில்லை. நெப்போலியன் கூட அதைக் கேள்விப்பட்டிருக்க மாட்டார்) ஆகவே, வியூகத்தைப் பற்றிய உத்தரவுகளில் ஒன்றைக் கூட நிறைவேற்றவில்லை, நிறைவேற்றவும் முடியாது. ஆனால், வியூகத்தைப் பற்றிய உத்தரவுகளில், 'இம்மாதிரியாக யுத்தம் ஆரம்பித்த பின்பு, எதிரியின் நடமாட்டங்களைப் பொறுத்து உத்தரவுகள் கொடுக்கப்படும்' என்று சொல்லப்படுகிறது. ஆகவே, யுத்தம் நடந்து கொண்டிருந்தபோது, அவசியமான ஏற்பாடுகளையெல்லாம் நெப்போலியன் செய்திருந்தார் என்று ஒருவர் யூகிக்கக் கூடும். ஆனால், அம்மாதிரி நடக்கவில்லை; நடக்கவும் முடியாது. ஏனெனில், அந்த யுத்தம்

நடந்து கொண்டிருந்தபோது, நெப்போலியன் வெகு தூரத்திலிருந்தார். அந்த யுத்தத்தின் போக்கு எம்மாதிரி இருந்தது என்பதையும், அந்த யுத்தத்தில் அவருடைய உத்தரவுகள் ஒன்றுகூட நிறைவேற்றப்படவில்லை என்பதையும், அவர் அறிந்திருக்க முடியாது.



நெப்போலியனுக்கு ஜலதோஷம் இருந்தபடியால், பாராடினோ போரில் பிரஞ்சுக்காரர்கள் வெற்றி பெறவில்லை என்று பல சரித்திர ஆசிரியர்கள் சொல்லு கிறார்கள். அவருக்கு ஜலதோஷம் இல்லாமல் இருந்திருந்தால், போருக்கு முன்பும், போர் நடந்துகொண்டிருந்த போதும், அவர் பிறப்பித்த உத்தரவுகள் மேதை நிறைந்து இருக்கும் என்றும், ருஷ்யா தோற்று இருக்கும் என்றும் நாடுகளின் அமைப்பே மாறிப்போய் இருக்கும் என்றும் அவர்கள் சொல்லுகிறார்கள். தனியொரு மனிதரினால்-மகா பெரிய பீட்டரினால்-ருஷ்யா ஒன்று திரட்டி அமைக்கப்பட்டது என்றும், பிரான்ஸ் தேசம் தனியோரு மனிதரினால் - நெப்போலியனால் - குடியரசிலிருந்து ஏகாதிபத்தியமாக மாற்றப்பட்டது என்றும், பிரஞ்சுத்துருப்புகள் ருஷ்யாவுக்குள் போயின என்றும் நம்பும் சரித்திர ஆசிரியர்களுக்கு, ஆகஸ்டு 24-ந் தேதியன்று நெப்போலி யனுக்கு பலமான ஜலதோஷம் பிடித்திருந்ததனால்தான், ருஷ்யா ஒரு வல்லரசாக நிலைத்து இருந்தது என்ற பேச்சு, தர்க்கத்திற்குப் பொருத்த மானதாகவும் நம்பிக்கைக்கு இடமளிப்பதாகவும் தோன்றலாம்.

பாராடினோ 'போரில் யுத்தம் செய்வதா, வேண்டாமா என்ற தீர்மானம் நெப்போலியனுடைய கருத்தைப் பொறுத்து இருந்திருக்குமானால், அப்பொழுது அவருடைய கருத்தைப் பாதிக்கக் கூடிய விதத்தில் அவருக்கு ஏற்பட்ட ஜலதோஷம் ருஷ்யாவைக் காப்பாற்றி இருக்கலாம். அதே மாதிரி நெப்போலியன் வெளியே புறப்பட்டபோது, 24-ந் தேதியன்று அவ்ருக்குத் தண்ணீரில் நனையாத 'வாட்டர் ப்ரூப்' ஜோடுகளை எடுத்துக்கொடுக்காமல் தவறிவிட்ட அவருடைய சேவகன்தான், ருஷ்யாவைக் காப்பாற்றிய ரட்சகன் என்று சொல்லவேண்டும். அதே மாதிரியான நினைவுத் தொடரில் அம்மாதிரியான ஒரு முடிவுக்கு வருவது, ஆட்சேபணை இல்லாத விஷயமாகும். அம்மாதிரியான ஒரு ஆட்சேபணை இல்லாத, அம்மாதிரியான ஒரு முடிவுக்கு ஒரு

சமயம் தமாஷாகப் பேசிக்கொண்டிருந்தபோது வால்டேரும் சொன்னார். எதைப் பற்றி தாம் கேலியாகப் பேசிக்கொண்டிருக்கிறார் என்பதை அறியாமலேயே அவர் சொன்னார். அதாவது, செயின்ட் பார்த்த லோமியூ கொலை செய்யப்பட்டதற்கு, 9-வது சார்லஸ் மன்னனின் வயிற்றுக் கோளாறே காரணம் என்று சொன்னார். ஆனால், முதலாவது பீட்டரால்தான், தனியொரு மனிதராகிய அவரால்தான், ருஷ்யா அமைக்கப்பட்டது என்பதையும், ருஷ்யாவுடன் போர் தொடுக்கப்பட்டது என்பதையும் ஒப்புக்கொள்ளாதவர்கள் அந்த வாதத்தைப் பகுத்தறிவுக்கு விரோதமானது என்றும், உண்மையற்றது என்றும் சொல்லுவார்கள். அதுவும் தவிர, மனித தர்மத்தின் உண்மைக்கு முற்றிலும் மாறானது என்றும் அவர்கள் சொல்லுவார்கள். சரித்திரப் பிரசித்தி பெற்ற சம்பவங்கள் நடைபெறுவதற்கு காரணங்கள் என்ன என்ற கேள்வியைக் கேட்போமானால், மற்றொரு பதில் நமது முன்னால் வந்து நிற்கிறது. அதாவது, மனித சமூகத்தின் போக்கில் உள்ள சம்பவங்கள், மேலே இருந்து முன்னதாகவே தீர்மானிக்கப்பட்ட விஷயங்களாகும். அவையெல்லாம், அந்த சம்பவங்களில் கலந்துகொள்ளுகிறவர்களின் கருத்துக்களெல்லாம் ஒன்று சேருவதைப் பொறுத்து நிற்கின்றன. ஆகவே, இந்த சம்பவங்களின் போக்கை, ஒரு நெப்போலியனுடைய செல்வாக்கு பாதிக்க முடியும் என்று சொல்லுவது வெறும் அர்த்தமற்றதும் கட்டுக் கதையுமாகும்.

செயின்ட் பாத்தாலோமியூவின் படுகொலைக்கு, 9-வது சார்லஸின் விருப்பம் காரணமல்ல என்று சொல்லுவோமானால், முதலில் பார்க்கிறவர்களுக்கு அது விசித்திரமாய் இருக்கும். ஏனென்றால், அதற்கு உத்தரவு கொடுத்தவர் அவர்தான். அந்த உத்தரவின் படியே காரியம் செய்யப்பட்டது என்று நினைக்கலாம்; அதே மாதிரி பாராடினோவில் 80 ஆயிரம் வீரர்களைப் படுகொலை செய்ததற்கு நெப்போலியனின் விருப்பம் காரணமல்ல என்று சொன்னாலும் அதிசயமாய்த் தோன்றலாம். ஏனெனில், அந்த யுத்தத்தை ஆரம்பித்து நடத்துவதற்கு அவர்தான் உத்தரவு கொடுத்தார். அவர் உத்தரவு கொடுத்தபடியால் தான், அம்மாதிரி நடந்தது என்று நினைக்கலாம்; இந்த யூகங்கள் எல்லாம் விசித்திரமாய் காணப்படலாம். என்றாலும், மனித கண்ணியமானது-நாம் ஒவ்வொருவரும், மகா பெரிய நெப்போலியனைவிட, மனிதன் என்ற முறையில் குறைந்தவர்கள் அல்ல-அந்தக் கேள்விக்கு அந்த பதிலை ஒப்புக்கொள்ளும்படி செய்கிறது. சரித்திர ஆராய்ச்சிகளும் அதையே அபரிமிதமாக ஊர்ஜிதம் செய்கின்றன.

பாராடினோவில் நடந்த போரில் நெப்போலியன் தாமாக ஒருவரைச் சுடவோ, அல்லது கொல்லவோ இல்லை. அவையெல்லாம் சிப்பாய்களால் செய்யப்பட்டு வந்தன. ஆகவே, மக்களைக் கொன்றது அவரல்ல.

பாராடினோ யுத்த களத்தில் பிரஞ்சு சிப்பாய்கள் கொல்லுவதற்காவும கொல்லப்படுவதற்காகவும் நெப்போலியனுடைய உத்தரவுகளுக்காகப் போகவில்லை; தாங்கள் சுயேச்சையோகவே போனார்கள். பிரஞ்சுக்காரர்களும், இத்தாலியர்களும், ஜெர்மனியர்களும், போலந்தியர்களும், டச்சுக்காரர்களும் அடங்கிய அந்த முழு ராணுவமும் பசியோடும், கந்தல்களைக் கட்டிக்கொண்டும், படையெடுப்பினால் களைத்துப்போயும் வந்தபோது மாஸ்கோவிற்குப் போகிற ரஸ்தாவை அடைத்துக்கொண்டு ஒரு ராணுவம் நிற்பதைப் பார்த்தார்கள். உடனே அவர்கள் 'மதுவை ஊற்றிவிட்டோம், இனி குடிக்க வேண்டியதுதான்' என்று நினைத்தார்கள். அச்சமயத்தில் ருஷ்யரோடு யுத்தம் செய்ய வேண்டாம் என்று நெப்போலியன் தடுத்திருப்பாரானால், அவர்கள் அவரைக் கொன்றுவிட்டு ருஷ்யருடன் யுத்தம் செய்ய புறப்பட்டிருப்பார்கள். ஏனெனில், அது தவிர்க்க முடியாத காரியமாக அமைந்துவிட்டது.

அங்கவீனம் ஆவதற்கும் மரணத்திற்கும் நஷ்ட ஈடாக, பின் சந்ததியார்கள் தங்களை மாஸ்கோ முன்பு நடந்த போரில் கலந்து கொண்டவர்கள் என்று நினைப்பார்கள் என்று நெப்போலியனின் பிரகடனத்தில் சொல்லப்பட்டிருந்தது. அந்தப் பிரகடனத்தை வாசித்துக் கேட்டவுடன் அவர்கள் 'சக்கவரர்த்தி நீடூழி வாழ்க!' என்று கோஷித்தார்கள். பூமியை' ஒரு குச்சியால் துளைப்பது போன்ற அந்த சிறுவனின் படத்தைப் பார்த்தைப் பார்த்தவுடன், அவர்கள் எப்படி 'சக்வரர்த்தி நீடூழி வாழ்க!' என்று கோஷித்தார்களோ, அதே மாதிரி இப்பொழுதும் கோஷமிட்டார்கள். வேறு எந்த அசட்டுத் தனமான காரியத்தை அவர்களிடம் சொன்னாலும், அப்பொழுதும் இம்மாதிரியே 'சக்கரவர்த்தி நீடூழி வாழ்க' என்று அவர்கள் கோஷிப்பார்கள். ஏனெனில், 'சக்கரவர்த்தி நீடூழி வாழ்க' என்று கோஷித்து மாஸ்கோவை வெற்றி கொண்டவர்கள் என்ற முறையில் உணவையும் ஓய்வையும் பெறுவதற்காக, அவர்கள் போர் செய்யப் போவதைத் தவிர, அவர்களுக்கு வேறு ஒரு வழியும் இப்பொழுது இல்லை. ஆகவே, நெப்போலியனுடைய உத்தரவுகளுக்காக அவர்கள் தங்களுடைய சகோதர மனிதர்களைக் கொல்லவில்லை.

போரின் நடைமுறையை நெப்போலியன் நடத்திவரவில்லை. ஏனெனில், அவருடைய உத்தரவுகள் எதுவும் நிறைவேற்றப்

படவில்லை. தவிர, தமக்கு எதிரில் போர் முனையில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதும் அவருக்குத் தெரியாது. ஆகவே, எந்த முறையில் இந்த மக்கள் ஒருவரை ஒருவர் கொன்று கொண்டிருந்தார்களோ, அந்த விஷயம் நெப்போலியனுடைய விருப்பத்தினால் நிச்சயம் செய்யப்பட்டதல்ல; அவருக்குப் புறம்பாக சுயேச்சையாக நடைபெற்று வந்தது. அந்த யுத்தத்தில் கலந்துகொண்ட கோடிக் கணக்கான வீரர்களின் விருப்பத்தை அனுசரித்தே அது நடை பெற்று வந்தது. தம்முடைய விருப்பத்தின்படியே அவையெல்லாம் நடைபெற்றதாக நெப்போலியனுக்கு சும்மா தோன்றியது. ஆகவே, அவருக்கு ஜலதோஷம் இருந்ததா, இல்லையா என்ற விஷயம் எந்த விதமான சரித்திர முக்கியத்துவமும் கொண்டதல்ல. அதாவது, சரக்கு வண்டிகளை ஓட்டிச் செல்லும் சிப்பாய்களுக்கு நேரிடும் ஜலதோஷத்தைவிட, இது அதிக முக்கியத்துவம் பெற்றதல்ல.

அவருக்கு ஜலதோலும் ஏற்பட்டிருந்ததால்தான் முந்தைய சந்தர்ப்பங்களில் அவர் வியூகங்களை அமைப்பதற்கு நன்றாகத் திட்டமிட்டதைப் போல, இப்பொழுது திட்டமிடவில்லை என்று சொல்லுகிறார்கள். முந்தைய சந்தர்ப்பங்களில் அவர் பிறப்பித்த உத்தரவுகள் சிலாக்கியமாய் இருந்ததைப் போல இப்பொழுது அவர் பிறப்பித்த உத்தரவுகள் சிலாக்கியமாய் இல்லை என்றும் சொல்லுகிறார்கள். இம்மாதிரியாக பற்பல சரித்திர ஆசிரியர்கள் சொல்லும் இந்த வாதங்கள் கொஞ்சமும் ஆதாரமற்றவை. இவையெல்லாம் ஆகஸ்டு 26-ந் தேதியன்று நெப்போலியனுக்கு ஏற்பட்ட ஜலதோஷம் ஒரு முக்கியமான விஷயமல்ல என்பதையே மீண்டும் காட்டுகின்றன.

மேலே சொல்லப்பட்ட வியூக அமைப்புகள் எல்லாம் மோசமானவைகள் அல்ல; முந்தியவைகளைவிட சிலாக்கிய மானவையாகவே இருக்கின்றன; முந்தைய வெற்றிகளில் அவர் செய்த வியூகங்களைவிட சிலாக்கியமானவைகளாகவே இருக்கின் றன. போர் நடந்து கொண்டிருந்தபோது அவர் பிறப்பித்ததாகச் சொல்லப்படும் பொய்யான உத்தரவுகள்கூட, முந்தைய உத்தரவுகளைவிட எவ்விதத்திலும் மோசமானவை அல்ல. அவைகளைப் போலவே இவையும் இருந்தன. இந்த வியூகங்களும் உத்தரவுகளும் முந்தியவைகளைவிட மோசமானவைகளாகக் காணப்படுவதற்குக் காரணம் ஒன்றுதான். அதாவது, பாராடினோ போர் ஒன்றுதான் நெப்போலியன் இதுவரை வெற்றி பெறாத முதலாவது போராகும். அதனால், ஆழ்ந்த சிந்தனையோடு செய்யப்பட்ட சிலாக்கியமான வியூகங்களும் உத்தரவுகளும்

மோசமானவையாகக் காணப்படுகின்றன. கற்றறிந்த ராணுவ நிபுணர் ஒவ்வொருவரும், முக்கியத்துவத்தோடு அவற்றைக் குறை கூறுகிறார்கள். ஏனென்றால், ஒரு தோற்றுப்போன யுத்தத்தைப்பற்றி அவர்கள் பேச வேண்டியதாய் இருக்கிறது. ஆனால், ஒரு வெற்றி பெற்ற யுத்தத்தைப் பற்றி அவர்கள் வருணிப்பதாய் இருந்தால், மிக மோசமான வியூகங்களும் உத்தரவுகளும்கூட, அவர்களுக்கு மிக சிலாக்கியமானவையாகத் தோன்றும். அவைகளின் விசேஷ குணங்களைப்பற்றி புத்தகம் புத்தகமாக எழுதுவார்கள்.

ஆஸ்டர்லிட்ஜ் போருக்காக வேராதர் வகுத்த வியூகங்கள் பூரணத்துவம் பெற்ற லட்சிய வியூகங்கள் என்று சொல்லப்படவேண்டும். என்றாலும், அவர்களைக் குறை கூறினார்கள்-அந்த வியூகங்களின் பூரண தன்மைக்காகவும், வெகு துல்லியமாகக் கணக்குப் போட்டதற்காகவும் குறை கூறினார்கள்.

பாராடினோ யுத்தத்தில் அதிகார பீடத்தின் பிரதிநிதியாக நெப்போலியன் தமது வேலையை நன்றாகவே செய்தார். மற்ற போர்களில் செய்ததைவிட சிறந்த விதமாகச் செய்தார் என்றும் சொல்லலாம். யுத்தத்தின் போக்கிற்கு இடையூறு அவர் எதையும் செய்யவில்லை; மிகுந்த நியாயமான கருத்துக்களுக்கு அவர் இணங்கினார். எவ்விதமான குழப்பத்தையும் அவர் உண்டுபண்ணவில்லை, முன்னுக்குப் பின் முரணாக அவர் நடந்துகொள்ளவில்லை; போர்க் களத்திலிந்து பீதிகொண்டு அவர் ஓடிப்போகவில்லை; தம்முடைய உயர்ந்த, சிறந்த சாமர்த்தியத்தையும் ராணுவ அனுபவத்தையும் கொண்டு தாம் சேனாதிபத்தியம் செய்வதாகக் காட்டக்கூடிய நடிப்பை, அமைதியாகவும் கண்ணியமாகவும் நிறைவேற்றினார்.




இரண்டாவது தடவையாக நெப்போலியன் சென்று, மிகுந்த கவனமாக யுத்த அரங்கங்களைப் பார்வையிட்டு வந்தார். அவர் சொன்னார்:

'சதுரங்கக் காய்களையெல்லாம் வைத்தாய் விட்டன. நாளைய தினம் விளையாட்டு ஆரம்பமாகும்!'

தமக்கு ஒரு மதுக் கலவையைக் கொண்டுவரும்படி உத்தரவிட்டு விட்டு, டி பாசெட்டை அழைத்தார். பாரிஸைப் பற்றியும், சக்கரவர்த்தினியின் மாளிகையில் செய்யப்படவேண்டிய சில மாறுதல்களைப் பற்றியும், அவரிடம் நெப்போலியன் பேசினார்.

மாளிகையைப் பற்றிய ரொம்ப சிறிய காரியங்களில்கூட, அவருடைய ஞாபகம் எவ்வளவு அபாரமாக இருக்கிறது என்பதைப் பார்த்து, அரண்மனை இலாகா தலைவரான டி பாசெட் ஆச்சரியப்பட்டார்.

சிறிய காரியங்களில் சிரத்தையுள்ளது போல அவர் காட்டினார். பிரயாணத்தில் டி பாசெட்டுக்கு உள்ள ஆவலைக் குறித்து அவர் தமாஷ் செய்தார். கவலையில்லாமல் அவர் பேசிக்கொண்டிருந்தார். சத்திர சிகிச்சை செய்வதற்காக, ஒரு நோயாளியை மேஜை மீது கிடத்திக்கொண்டிருப்பார்கள்; ஆனால் ஒரு சுய நம்பிக்கையுள்ள பிரபலமான சர்ஜன், தமது வேலையை நன்றாய் அறிந்த சர்ஜன், கொஞ்சம்கூட கவலையில்லாமல் தமது சட்டையின் கைகளை மடக்கி விட்டுக்கொண்டு, ஆபரேஷனுக்கு வேண்டிய உடையை அணிந்து கொண்டிருப்பார். அதைப் போல அவர் பேசியது இருந்தது?

‘விஷயம் என்னுடைய கைகளில் இருக்கிறது. அதைப் பற்றிய தெளிவானதும், முடிவானதுமான சிந்தனைகள், என் மண்டையில் இருக்கின்றன. வேலை செய்வதற்கான நேரம் வந்தபோது, வேறு ஒருவராலும் செய்ய முடியாததை நான் செய்வேன். ஆனால் இப்பொழுது நான் தமாஷ் பேசுவேன். எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக நான் தமாஷ் பேசிக்கொண்டு அமைதியாக இருக்க முடியுமோ, அவ்வளவுக்கவ்வளவு அதிகமாக நீர் அமைதியையும் நம்பிக்கையையும் பெற்று, என்னுடைய மேதையைக் கண்டு மலைத்துப் போவீர்.’

மதுக் கலவையின் இரண்டாவது கோப்பையைக் குடித்து முடித்த பின்பு, நெப்போலியன் ஓய்வு கொள்ளுவதற்காகப் போனார். மறுநாள் காலையில், பெரிய விஷயங்கள் தமக்காகக் காத்திருப்பதாகவும், அதற்கு முன்பாக ஓய்வுகொள்ள வேண்டுமென்றும் அவர் போனார். அவர் மறுநாளைய விஷயத்தில் மிகுந்த சிரத்தை கொண்டிருந்த ஜலதோஷம், முதல் நாள் மாலையில் இருந்த குளிர்ச்சியான காலநிலையினால், இன்னும் அதிகமாயிற்று. அப்படியிருந்தும், காலையில் மூன்று மணிக்கு அந்தக் கூடாரத்திலுள்ள பெரிய பகுதிக்கு, க்கை பலமாய் சிந்திக்கொண்டே வந்தார். ‘ருஷ்யர்கள் பின்வாங்கி விட்டார்களா?’ என்று அவர் கேட்டார். எதிரிகளின் கணப்பு ட்டங்கள் இன்னமும் பழைய இடங்களிலேயே இருக்கின்றன என்று பதில் சொல்லப்பட்டது. அவர் அதை ஒப்புக்கொள்ளுவதைப் போலத் தலையை ஆட்டினார்.

அங்கே அலுவலிலிருந்த உதவியாளர், அந்தக் கூடாரத்திற்குள் வந்தார்.

'நல்லது, ராப், இன்று நாம் சிலாக்கியமாகச் செய்ய முடியுமென்று நீர் நினைக்கிறீரா?' என்று நெப்போலியன் கேட்டார்.

'சந்தேகமில்லாமல், மாட்சிமை தங்கியவரே' என்று ராப் பதில் சொன்னார்.

நெப்போலியன் அவரைப் பார்த்தார்.

'மாட்சிமை தங்கியவரே, ஸ்மாலென்ஸ்க் நகரில் என்னிடம் சொல்லி என்னைக் கௌரவித்த விஷயத்தை நினைவில் வைத்திருக்கிறீரா?' என்று ராப் கேட்டார். 'மதுவை ஊற்றி விட்டோம்; இனி அதைக் குடிக்கவேண்டியது தான்.'

நெப்போலியன் முகம் சுளித்து, தமது தலையைக் கை மீது சாய்த்து வைத்துக்கொண்டு வெகு நேரம் மௌனமாக அமர்ந்திருந்தார்.

'பாவம் இந்த ராணுவம்!' என்று திடீரென்று அவர் சொன்னார். 'ஸ்மாலென்ஸ்கிலிருந்து அது வெகுவாகக் குறைந்து விட்டது. அதிருஷ்டம் என்பது, என்ன என்பதை வெளிப்படையாகச் சொல்லப் போனால், அது ஒரு வேசியாகும், ராப். நான் எப்பொழுதுமே அம்மாதிரி சொல்லி வந்திருக்கிறேன். இப்பொழுது அதை அனுபவிக்க ஆரம்பித்திருக்கிறேன். அந்தக் காப்பளார்கள் முறுக்காய் இருக்கிறார்களா, ராப்?' என்று அவர் கேட்டார்.

'ஆமாம், மாட்சிமை தங்கியவரே' என்று ராப் பதில் அளித்தார்.

நெப்போலியன் ஒரு வில்லையை எடுத்து தமது வாயில் போட்டுக்கொண்டு, கெடிகாரத்தைப் பார்த்தார். அவர் தூக்கக் கலக்கமாய் இருக்கவில்லை; என்றாலும், இன்னும் விடியவில்லை. நேரத்தைக் கொல்லுவதற்காக, அவர் இனியும் உத்தரவுகள் கொடுப்பது அசாத்தியம். ஏனெனில், எல்லா உத்தரவுகளையும் அவர் கொடுத்து விட்டார். அவைகளை நிறைவேற்றிக்கொண்டு இருக்கிறார்கள்.

'காப்பாளர் படையைச் சேர்ந்த பட்டாளங்களுக்கு பிஸ்கோத்தும், சாதமும் கொடுத்தார்களா?'

'ஆம், மாட்சிமை தங்கியவரே.'

'சாதம் கொடுத்தார்களா?'

சாதம் சம்பந்தமாக சக்கரவர்த்தியின் உத்தரவைத் தாம் அறிவித்து விட்டதாக ராப் பதில் சொன்னார். ஆனால், அந்த உத்தரவு

நிறைவேற்றப்பட்டதாகத் தாம் நம்பவில்லை என்பது போல, அதிருப்தி கொண்டு, நெப்போலியன் தமது தலையை ஆட்டினார். ஒரு வேலைக்காரன் மதுக் கலவையோடு உள்ளே வந்தான். ராப்புக்காக மற்றொரு கோப்பை கொண்டுவரும்படி நெப்போலியன் உத்தரவிட்டு, தம்முடைய மதுக் கலவையை மௌனமாக உறிஞ்சிக் கொண்டிருந்தார்.

'எனக்கு ருசியோ, அல்லது வாசனையோ இல்லை' என்று, தமது கோப்பையை முகர்ந்து மூச்சை இழுத்துக்கொண்டு அவர் சொன்னார். 'இந்த ஜலதோஷம் தொல்லை கொடுப்பதாய் இருக்கிறது. மருந்துகளைப் பற்றி அவர்கள் பேசுகிறார்கள்-ஆனால், ஜலதோஷத்தைக் குணப்படுத்த முடியாத மருந்தினால், என்ன பிரயோஜனம்! சார்விசார்ட் (ஒரு பிரபலமான பிரஞ்சு வைத்தியர். நெப்போலியனுக்கும் அவர்தான் வைத்தியர்) இந்த வில்லைகளை எனக்குக் கொடுத்தார். இவற்றினால் எனக்கு ஒருவித நன்மையுமில்லை... டாக்டர்கள் எதைக் குணப்படுத்த முடியும்? எதையும் ஒருவரால் குணப்படுத்திவிட முடியாது. உயிர் வாழ்வதற்காக ஏற்பட்ட ஒரு இயந்திரமே நமது உடம்பாகும். அதற்காகத்தான் அது அமைக்கப்பட்டிருக்கிறது. அதுதான் அதனுடைய இயற்கை. ஆகவே, அதைக்கட்டுப்படுத்தமால் அதன் இயற்கைப்படி போகும்படி விட்டு விட வேண்டும். அதுவே தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும்படி விட்டுவிட்டால், இந்த மருந்துகளினால் அதற்கு இடையூறு செய்யாமல் இருந்தால், அது இன்னும் அதிகமாகத் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியும். நமது உடம்பு, ஒரு நல்ல கெடிகாரம் மாதிரி. அந்த கெடிகாரம், ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு நன்றாக வேலை செய்ய முடியும். அந்த கெடிகாரத்தைப் பழுது பார்க்கிறவரால், கண்ணை மூடிக்கொண்டு எதையோ, இப்படியும் அப்படியும் குழப்பிக்கொண்டிருக்கத்தான் முடியும். அவரால் திறந்து பார்க்க முடியாது... ஆம், நமது உடம்பு வாழ்வதற்காக அமைக்கப்பட்ட ஒரு இயந்திரமேயாகும். அவ்வளவுதான்.'

இம்மாதிரி வியாக்கியானங்கள் செய்வதில் நெப்போலியனுக்கு மிகுந்த பிரியம் உண்டு. அந்த வியாக்கியானப் பாதையில் அவர் இறங்கியவுடன், திடீரென்று எதிர்பாராதவிதமாக ஒரு புதிய வியாக்கியானத்தைச் செய்தார்.

'உமக்குத் தெரியுமா, ராப்? ராணுவ வித்தையென்பது என்ன என்பது உமக்குத் தெரியுமா? ஒரு குறிப்பிட்ட நேரத்தில், எதிரியைவிட அதிகமாகப் பலமுள்ளதாய் இருப்பதே, அந்த வித்தையாகும். அவ்வளவுதான்' என்று அவர் சொன்னார்.

ராப் பதில் எதுவும் சொல்லவில்லை.

‘நாளை நாம் குட்டுஜோவோடு காரியம் செய்தாகவேண்டும். நாம் பார்க்கலாம்! பிராவ்னா என்ற இடத்தில், அவர் ஒரு ராணுவத்தை சேனாதிபத்தியம் செய்துவந்தார். அச்சமயம் தமது பாதுகாப்பு அரண்களைச் சுற்றிப் பார்ப்பதற்காக, ஒரு தடவைகூட குதிரை மீது அவர் ஏறியது கிடையாது என்பது உமக்கு ஞாபகம் இருக்கிறதா?... நாம் பார்க்கலாம்’ என்று நெப்போலியன் கூறினார்.

அவர் கெடிகாரத்தைப் பார்த்தார். இப்பொழுதும் நாலு மணிதான் ஆயிற்று. அவர் தூக்கக் கலக்கமாயில்லை. மதுக்கலவையைக் குடித்து முடித்துவிட்டார். இன்னமும் செய்வதற்கு வேறு எதுவுமில்லை. அவர் எழுந்து, முன்னும் பின்னும் நடந்தார். ஒரு வெதுவெதுப்பான மேல் கோட்டையும் தொப்பியையும் அணிந்துகொண்டு, கூடாரத்தை விட்டு வெளியே போனார். இரவு இருட்டாகவும் ஓதமாகவும் காணப்பட்டது. தெரிந்தும் தெடரியாமலுமாயிருக்கும் ஈரமானது, மேலேயிருந்து இறங்கிக் கொண்டிருந்தது. பக்கத்தில் பிரஞ்சுக் காப்பாளர்கள் கொளுத்திக் கொண்டிருந்த கணப்பு மூட்டங்கள், மங்கலாய் எரிந்து கொண்டிருந்தன. தூரத்தில் ருஷ்யரின் முகாம்கள், புகைகளின் வழியாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தன. பிரஞ்சுப் படைகள் யுத்த களத்தில் தங்களுக்குள்ள இடங்களில் போய் நிற்பதற்காக, ஏற்கெனவே புறப்பட்டு விட்டனர். அவர்களுடைய காலடி ஓசைகளும், சலசலப்பு ஓசைகளும் தெளிவாய்க் கேட்டன. கால நிலை அமைதியாய் இருந்தது.

தமது கூடாரத்திற்கு முன்பாக நெப்போலியன் நடந்து கொண்டு, அந்தக் கணப்பு மூட்ட நெருப்புகளைப் பார்த்துக்கொண்டும், அந்த சப்தங்களைக் கேட்டுக்கொண்டும் போனபோது, ஒரு உயரமான காப்பாளர் படையைச் சேர்ந்த வீரன், ரோமத் தொப்பியைத் தரித்து நின்று கொண்டிருந்தான். அவருடைய கூடாரத்திற்கு முன்பு அவன் காவல் காத்துக் கொண்டிருந்தான். சக்கரவர்த்தியைப் பார்த்ததும், ஒரு கருப்புத் தூணைப் போல அவன் நிமிர்ந்து நின்றான். அவனுக்கு எதிராக நெப்போலியன் நின்றான்.

‘எந்த வருஷத்தில் ராணுவ சேவையில் நீ சேர்ந்தாய்?’ என்று அவர் கேட்டார். சிப்பாய்களிடம் அவர் பேசும்போதெல்லாம் நாசூக்கற்ற ஒரு ராணுவத் தோற்றத்துடனும் மன மகிழ்ச்சியுடனும் பேசுவது வழக்கம். அதே மாதிரி இப்பொழுதும் பேசினார்.

அந்த வீரன் அவருடைய கேள்விக்குப் பதில் அறித்தான்.

'ஆ! பழைய வீரர்களில் நீயும் ஒருவன்! உன்னுடைய பட்டாளத்துக்கு சாதம் கொடுத்தார்களா?'

'ஆம், மாட்சிமை தங்கியவரே'

நெப்போலியன் தலையை ஆட்டிவிட்டு, மேலே நடந்து சென்றார்.

ஐந்தரை மணிக்கு, நெப்போலியன் குதிரை மீது ஏறி, ஷெவார்டினா கிராமத்திற்குப் போனார்.

வெளிச்சம் வளர ஆரம்பித்தது. வானம் தெளிவடைய ஆரம்பித்தது. ஒரே ஒரு மேகம் மட்டும் கிழக்கே காணப்பட்டது. கணப்பு ட்டங்கள், அந்த காலை வெளிச்சத்தில் எரிந்து தணிந்து கொண்டிருந்தன.

வலது பக்கத்தில் ஒரு பீரங்கி குண்டின் சப்தம் முழங்கி, அந்த அமைதியில் மறைந்து கொண்டிருந்தது. சில நிமிஷங்கள் கழிந்தன. இரண்டாவது சப்தமும், மூன்றாவது சப்தமும் ஆகாயத்தைக் குலுக்க ஆரம்பித்தன. பின்னால், நாலாவது சப்தமும், ஐந்தாவது சப்தமும், வலது பக்கமாக சமீபத்தில் கம்பீரமாய் ஒலித்தன.

முதலில் போட்ட குண்டுகளின் எதிரொலிகள் முடிவடைவதற்கு முன்பாகவே, மற்ற குண்டுகள் முழங்க ஆரம்பித்தன. இன்னும் மேலும் அதிகமான ஒலிகள் கிளம்பி, ஒன்றையொன்றைக் கலந்து கொண்டும் முந்திக்கொண்டும் இருந்தன.

தமது பரிவாரங்களோடு ஷெவார்டினா அரண்களுக்கு நெப்போலியன் சென்று, அங்கே குதிரையிலிருந்து இறங்கினார். விளையாட்டு ஆரம்பமாய் விட்டது.




இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்து விட்டு கோர்க்கிக்கு பீயர் திரும்பினார். திரும்பியதும் தமது குதிரைக்காரரை அழைத்து குதிரைகளைத் தயாராய் வைத்திருக்கும்படியும், அதிகாலையில் தம்மை எழுப்பும்படியும் உத்தரவிட்டார். உடனே போரில் தமக்குக் கொடுத்திருந்த பகுதியில் படுத்துத் தூங்கிவிட்டார்.

அவர் மறுநாள் காலையில் நன்றாய் விழிப்பதற்கு முன்னதாகவே அங்கிருந்த ஒவ்வொருவரும் அந்தக் குடிசையை விட்டுப் போய் விட்டார்கள். அங்கிருந்த சிறிய ஜன்னல்களில் உள்ள சட்டங்கள்

எல்லாம் படபடவென்று ஆடிக்கொண்டிருந்தன. அவருடைய குதிரைக்காரன் அவரை எழுப்பிக்கொண்டிருந்தான்.

'மேன்மை தங்கியவரே!... மேன்மை தங்கியவரே!... மேன்மை தங்கியவரே!' என்று அவன் விடாப்பிடியாக எழுப்பிக்கொண்டிருந் தான்; அவரைப் பார்க்காமலேயே அவருடைய தோள்களை உலுக்கிக் கொண்டிருந்தான். அவர் எழுந்திருப்பார் என்ற நம்பிக்கையையே அவன் இழந்துவிட்டதாகத் தோன்றியது.

'என்ன? அது ஆரம்பித்து விட்டதா? நேரமாகிவிட்டதா?' என்று விழித்து எழுந்தபோது பீயர் கேட்டார்.

'பீரங்கி சுடும் சப்தம் கேட்கிறது' என்று பட்டாளத்தில் இருந்து விலகிய அந்தக் குதிரைக்காரன் சொன்னான். 'கனவான்கள் எல்லோரும் வெளியே போய்விட்டார்கள். 'கலங்காத மேன்மை தங்கியவர்'கூட, வெகு நேரத்திற்கு முன்பே குதிரை மீது போய்விட்டார்.'

அவசரமாக பீயர் உடை அணிந்துகொண்டு மண்டப முற்றத்திற்கு ஓடினார். வெளியே எல்லாம் பிரகாசமாகவும், புதுமையாகவும், பனி நிறைந்ததாகவும், மகிழ்ச்சிகரமாகவும் தோன்றின. சூரியன் அப்பொழுதுதான் அதை மறைத்துக்கொண்டிருந்த மேகத்தில் இருந்து வெளியே வந்து பிரகாசித்துக் கொண்டிருந்தான். எதிரேயுள்ள தெருவில் இருந்த கூரைகளுக்கு மேலாகவும், பனித்துளி தெளிக்கப்பட்டிருந்த ரஸ்தாவின் தூசிகளின் மீதும், வீடுகளின் சுவர்களின் மீதும், ஜன்னல்களின் மீதும், குடிசைகளுக்கு முன்னால் நின்றுகொண்டிருந்த பீயரின் குதிரைகள் மீதும் சூரியனின் கிரணங்கள் பாதி மேகங்களால் மறைக்கப்பட்டு விழுந்து கொண்டிருந்தன. பீரங்கிகளின் முழக்கங்கள் அதிகத் தெளிவோடு வெளியில் கேட்டுக்கொண்டிருந்தன. ஒரு உதவியாளர், ஒரு கோசாக்கோடு வேகமான பெரு நடையில் சவாரி போய்க்கொண்டிருந்தார்.

'இதுதான் சமயம், கோமகனே, இதுதான் சமயம்' என்று அந்த உதவியாளர் கூவினார்.

குதிரைகளை இழுத்துக்கொண்டு வரும்படி குதிரைக்காரனிடம் சொல்லிவிட்டு, அந்தக் குன்றை நோக்கி தெரு வழியாக பீயர் புறப்பட்டார். அந்தக் குன்றிலிருந்துதான் முதல் நாளன்று அந்தப் போர்க்களத்தைப் பீயர் பார்த்தார். ராணுவக்காரர்கள் அடங்கிய ஒரு கூட்டம் அங்கே காணப்பட்டது. பரிவாரங்களைச் சேர்ந்தவர்கள் பிரஞ்சு மொழியில் பேசிக்கொண்டிருந்தது அங்கே கேட்டது. சிவப்பு பட்டியுள்ள ஒரு வெள்ளைக் குல்லாவை, தமது நரைத்த

தலை மீது வைத்துக்கொண்டு குட்டுஜோவ் நின்றது தெரிந்தது. அவருடைய சாம்பல் வர்ண கழுத்து, தோள்களில் அமுங்கி இருந்தது. தமக்கு முன்னால் காணப்பட்ட பிரதான ரஸ்தாவை ஒரு தூர திருஷ்டிக் கண்ணாடி மூலம் அவர் பார்த்துக்கொண்டிருந்தார்.

குன்றிலுள்ள படிகளில் ஏறியபோது, தமக்கு முன்னால் காணப்பட்ட காட்சிகளின் அழகைக் கண்டு பீயர் திகைத்துப் போனார். முதல் நாளன்று அவர் பார்த்து மகிழ்ச்சி அடைந்த அதே பரந்த காட்சியைத்தான் இப்பொழுதும் பார்த்தார். ஆனால், இப்பொழுது அந்த முழு இடமும் துருப்புகளால் நிறைந்திருந்தது; பீரங்கிகளிலிருந்து கிளம்பிய புகை மேகங்கள் அந்த இடம் பூராவிலும் பரவி நின்றன. பீயருக்குப் பின்னால், இடது பக்கமாக சிறிது உயர்ந்திருந்த பிரகாசமான சூரியன், தன் கதிர்களை சாய்வாக வீசிக்கொண்டிருந்தான். சிவந்த நிறமும், தங்க முலாமும் கொண்ட அந்தக் கதிர்களும், நீளமான இருண்ட நிழல்களும், அந்த பரந்த காட்சியின் மீது விழுந்து கொண்டிருந்தன. அந்த பரந்த காட்சியின் தூரத்துக் கோடியில் அந்தக் காடு காணப்பட்டது. விலை உயர்ந்த மஞ்சள் - பச்சை ரத்தினத்தில் செதுக்கியது போல, அந்தக் காடு காணப்பட்டது. அதன் ஆடி அசையும் உருவம் அடி வானத்திற்கு எதிராக நிழல் படம் போலத் தோன்றியது. அந்தக் காட்டின் வழியாக ஸ்மாலென்ஸ்க் பிரதான ரஸ்தா வாலாவாவிற்கு அப்புறம் போய்க்கொண்டு இருந்தது. அங்கெல்லாம் துருப்புகள் நிறைந்திருந்தனர். சமீபத்தில் இடையிடையே புதர்களோடு தங்கமயமான தானிய வயல்கள் மின்னிக் கொண்டிருந்தன. எங்கு பார்த்தாலும் எதிரிலும், வலப் பக்கமும் இடப் பக்கமும் துருப்புகள் காணப்பட்டார்கள். இவையெல்லாம் தெளிவாகவும், கம்பீரமாகவும், எதிர்பார்க்கப்படாததாகவும் இருந்தன. இவைகள் எல்லாவற்றிலும் பீயருக்கு அதிகமாக மனதைக் கவர்ந்தது, அந்த யுத்த களத்தின் காட்சியேயாகும். அதாவது, பாராடினோவும் காலாச்சாரவு'கு இரு புறங்களிலும் உள்ள பள்ளத்தாக்கு களுமேயாகும்.

காலாச்சாவுக்கு மேலே பாராடினோவிலும், அதன் இரு புறங்களிலும், முக்கியமாக சதுப்பு நிலக் கரைகளுக்கு இடையே ஓடி காலாச்சாவோடு கலக்கிற ஓய்னா நதி இடது பக்கத்திலும், ஒரு மூடு பனி பரவி நின்றது. அந்த மூடுபனி மெதுவாகக் கரைந்து மறைவதாகத் தோன்றியது. அது ஊடுருவித் தெரியக்கூடிய நிலைமைக்கு வந்ததும், அதன் வழியாகப் பிரகாசமான சூரியன் தோன்றி, மந்திர வித்தையைப் போல, ஒவ்வொன்றுக்கும்

மரணத்தையும் சுற்றுக் கோட்டையும் கொடுக்க ஆரம்பித்தது. பீரங்கிகளின் புகையானது இந்த மூடுபனியோடு கலந்தது. அந்த முழு விரிந்த பரப்பின் மீதும், அந்த மூடுபனியின் வழியாகவும், சூரியனின் கதிர்கள் விழுந்து பிரதிபலித்தன. அந்தத் தண்ணீரிலிருந்தும், அந்தப் பனியிலிருந்தும் அந்த ஆற்றின் கரைகளிலும், பாராடினோவிலும் கூடி நிற்கும் துருப்புகளின் துப்பாக்கி சனியன்களிலிருந்தும் அந்தக் கதிர்கள் மின்னலைப் போல பிரதிபலித்தன. அந்த மூடுபனியின் லமாக ஒரு வெள்ளையான மாதா கோயில் தோன்றியது; இங்கேயும் அங்கேயும் பாராடினோவில் வீட்டுக் கூரைகள் தோன்றின; அடர்ந்து நின்ற சிப்பாய்கள் தோன்றினார்கள்; பச்சை வர்ணமுள்ள வெடி மருந்து பெட்டிகளும் தோன்றின. அந்த பரந்த வெளியில் புகையும் மூடுபனியும் அசையும்போது இவையெல்லாம் நகர்வது போலக் காணப்பட்டன. பாராடினோவுக்குப் பக்கத்திலுள்ள, மூடு பனியால் மூடப்பட்ட பள்ளத்தாக்கு காணப்பட்டதைப் போலவே, மற்ற இடங்களிலும் காணப்பட்டன. அதாவது, அதற்கு வெளியிலும், அதற்கு மேலும், முக்கியமான இடது பக்கத்திலுள்ள காடுகளிலும், வயல்களிலும், பள்ளத்தாக்குகளிலும், மேடுகளின் உச்சிகளிலும், எங்கிருந்தோ தொடர்ச்சியாகக் கிளம்புவதைப் போல, வெடி மருந்து புகைக் கூட்டங்கள் கிளம்பிக் கொண்டிருந்தன. தனியாகவும், பல கூட்டங்களாகவும், ஊடுருவிப் பார்க்கக் கூடியதாகவும், அடர்த்தியானதாகவும் காணப்பட்டன. அவை வரவரப் பெருத்து, வளர்ந்து, சுருண்டு, கலந்து, அந்த விரிந்த பரப்பு முழுவதிலும் பரந்து நின்றன.

இந்தப் புகைச் சுருளைகளும் (ஆச்சரியப்படும் விதத்தில்), சுடுகிற சப்தங்களும் ஒன்று சேர்ந்து, அந்தக் காட்சியின் பிரதான அழகை சிருஷ்டித்தன.

'பவ்ப்' - திடீரென்று ஒரு உருண்ட, நெருங்கிய புகை மேகம் ஊதா நிறத்திலிருந்து சாம்பல் வர்ணமாகவும், பால் வெள்ளையாகவும் மாறுவதுபோலத் தோன்றியபோது, ஒரு வினாடிக்குப் பின்னால், 'பூம்' என்ற சப்தம் கேட்டது.

'பவ்ப், பவ்ப்' - இரண்டு மேகங்கள் ஒன்றையொன்று தள்ளிக் கொண்டு கிளம்பி, பின்னால் ஒன்று சேர்ந்தன; 'பூம், பூம்' என்ற சப்தங்கள், கண்ணால் கண்டவைகளை உறுதி செய்கிறவைகளைப் போல ஒலித்தன.

முதலாவது மேகத்தை பீயர் நோக்கினார். அது அவருக்கு உருண்ட, நெருங்கிய பந்து போலக் காணப்பட்டது. அதனுடைய

இடத்தில் புகை பலூன்கள் கிளம்பி ஒரு பக்கமாக மிதந்து போயின. 'பவ்ப்' என்றும், சிறிது நேரம் கழித்து 'பவ்ப் பவ்ப்' என்றும் மேகங்கள் தோன்றின. பின்னால், ஒவ்வொரு பக்கத்தில் இருந்தும் நான்கு தடவைகள் புகை மேகங்கள் தோன்றின. ஒவ்வொன்றிற்கும் ஒரே அளவு இடை நேரம்விட்டு, 'பூம்-பூம், பூம்' என்ற உறுதியான, சுத்தமான, துல்லியான சப்தங்கள் ஒலித்தன. இந்த புகை மேகங்கள் சில சமயங்களில் ஓடுவது போலவும், சில சமயங்களில் அவை அப்படியே நின்று, அந்தக் காடுகளும், வயல்களும், துப்பாக்கி சனியன்களும் அவைகளைக் கடந்து ஓடுவதைப் போலவும் தோன்றின. இடது பக்கத்தில், அந்த வயல்களுக்கும், புதர்களுக்கும் மேலாக, அந்த பெரிய புகைப் பந்துகள் தொடர்ச்சியாகத் தோன்றிக்கொண்டும், அவற்றிற்குப் பின்னால் அந்த பயங்கரமான சப்தங்கள் கேட்டுக்கொண்டும் இருந்தன. சமீபத்தில் அந்த பள்ளத்தாக்குகளிலும், காடுகளிலும் சிறிய புகைகள் துப்பாக்கிகளிலிருந்து படர்ந்து கொண்டிருந்தன. பந்துகளாகத் திரளுவதற்கு அவற்றிற்கு அவகாசம் இல்லை. ஆனால், அவற்றின் சப்தங்கள் முன்னால் சொல்லியதைப் போலவே கேட்டுக்கொண்டிருந்தன. 'டிராக்-டா-டா-டாக்' என்ற சப்தங்கள் அடிக்கடி துப்பாக்கிகளிலிருந்து கேட்டுக் கொண்டிருந்தன. ஆனால், பீரங்கிகளின் சப்தங்களோடு இவற்றை ஒப்பிடும்போது, இவை சிறியவையாகக் காணப்பட்டன. அந்த சப்தங்கள் ஒழுங்காகவும் வரவில்லை.

அந்த மினுமினுக்கும் துப்பாக்கி ஈட்டிகளும், அந்த நடமாட்டங்களும், அந்த சப்தங்களும், அந்த புகைகளும் இருக்கிற இடத்தில் தாமும் இருக்கவேண்டும் என்று பீயர் விரும்பினார். மற்றவர்களோடு தமது அபிப்பிராயங்களை ஒப்பிட்டுப் பார்ப்பதற்காக, குட்டுஜோவையும், அவருடைய பரிவாரத்தையும் காணுவதற்காக அவர் திரும்பினார். அவர்களும் அவரைப் போலவே அந்த யுத்தகளத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவருடையதைப் போலவே அவர்களும் அதே உணர்ச்சியில் இருப்பதாக அவருக்குத் தோன்றியது. கண்காணாத அந்த உணர்ச்சியின் உஷ்ணத்தினால், இப்பொழுது அவர்களின் முகங்கள் பிரகாசித்துக்கொண்டிருந்தன. அந்த உணர்ச்சியை முதல் நாளன்று பீயர் கவனித்தார். இளவரசர் ஆண்ட்ரூவுடன் அவர் பேசிய பின்பு, அந்த உணர்ச்சியைப் பூராவாகப் புரிந்து கொண்டார்.

'போம், எனது அன்பான பேர்வழியே, போம்... உம்முடன் கிறிஸ்து இருப்பாராக' என்று தமக்குப் பக்கத்தில் நின்ற ஒரு

ஜெனரலைப் பார்த்து, யுத்த களத்தைவிட்டு தமது பார்வையை எடுக்காமலேயே குட்டுஜோவ் சொன்னார்.

இந்த உத்தரவைப் பெற்ற பின்பு, பீயரைக் கடந்து அந்த ஜெனரல் குன்றின் கீழாகப் போனார்.

'அந்த சந்திப்புக்குப் போகிறேன்' என்று, அவர் எங்கே போகிறார் என கேள்வி கேட்ட பரிவாரத்தைச் சேர்ந்த ஒருவருக்கு, அந்த ஜெனரல் கனிவில்லாமல், கண்டிப்போடு கூறினார்.

'நானும்கூட அங்கே போவேன், நானும் கூடப் போவேன்' என்று பீயர் நினைத்து, அந்த ஜெனரலுக்குப் பின்னால் போனார்.

ஒரு கோசாக் அவருக்காகக் கொண்டுவந்த குதிரை மீது அவர் ஏறினார். தமது குதிரைகளை' பிடித்துக்கொண்டிருந்த குதிரைக்காரனிடம் பீயர் சென்று, அந்தக் குதிரைகளில் அமைதியானது எது என்று கேட்டார். பின்னால், அதன் மீது கஷ்டப்பட்டு ஏறிக்கொண்டு, அதன் பிடரியைப் பற்றினார். தமது இரு கால்களையும் அதன் பக்கங்களில் முன் பாதங்களை நீட்டி, குதிங்கால்களால் அமுக்கினார். தமது மூக்குக்கண்ணாடி நழுவி விழுவதுபோல அவருக்குத் தோன்றியது. ஆனால், பிடரிவையும் கடிவாளத்தையும் விட்டுவிட முடியவில்லை. அந்த ஜெனரலுக்குப் பின்னால் பாய்ச்சலில் போனார். அந்தக் குன்றின் மீது நின்று பார்த்துக்கொண்டிருந்த பரிவார அதிகாரிகள் புன்முறுவர் காட்டினார்கள்.



அந்த ஜெனரல் குன்றிலிருந்து இறங்கி பின்பு, திடீரென்று இடது பக்கம் திரும்பினார். அவருக்குப் பின்னால் பாய்ச்சலில் வந்த பீயர், அவரைப் பார்வையிலிருந்து தவறவிட்டு விட்டார். ஆகவே, அவர் காலாட்படைகளுக்கு ஊடே நேராக சவாரி போனார். அவர்களைவிட்டு விலகி முன்பாகவோ, இடது பக்கமோ, அல்லது வலது பக்கமோ போவதற்கு அவர் முயற்சி செய்தார். ஆனால், எங்கு பார்த்தாலும் சிப்பாய்களே காணப்பட்டார்கள். எல்லாருடைய முகங்களிலும் ஒரே மாதிரியான சிந்தனையுள்ள தோற்றத்தோடு, ஏதோ ஒரு கண்காணாத முக்கியமான வேலையில் சுறுசுறுப்பாய் இருப்பதாகக் காணப்பட்டார்கள்.

'எதற்காகப் பட்டாளத்தில் மத்தியில் சவாரி வருகிறீர்?' என்று அவர்களில் ஒருவர் அவரைப் பார்த்துக் கூச்சலிட்டார்.

மற்றொருவர் தமது துப்பாக்கியின் பின் பக்கத்துக் கட்டையால் அவருடைய குதிரையை இடித்தார். தமது சேணத்தின் மீது குனிந்துகொண்டு, தமது மிரண்ட குதிரையைச் சமாளிக்க முடியாமல், அந்த சிப்பாய் கூட்டத்திற்கு அப்புறமாகவுள்ள வெட்டவெளிக்கு பீயர் பாய்ச்சலில் போனார்.

அவருக்கு முன்பாக ஒரு பாலம் இருந்தது. அங்கே சிப்பாய்கள் நின்றுகொண்டு சுட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களிடம் பீயர் போனார். தம்மை அறியாமலேயே கோர்க்கிக்கும் பாராடினோவுக்கும் மத்தியிலுள்ள காலாச்சா நதி மீது அமைக்கப்பட்டிருந்த பாலத்திற்கு அவர் வந்து சேர்ந்தார். பாராடினோவை பிரஞ்சுக்காரர்கள் கைப்பற்றிய பின்பு, அந்தப்போரின் முதல் கட்டமாக அந்த பாலத்தைத் தாக்கிக் கொண்டிருந்தார்கள். தமக்கு எதிரே ஒரு பாலம் இருப்பதை பீயர் கண்டார். அதன் இரு புறங்களிலும் சிப்பாய்கள் எதோ செய்து கொண்டிருப்பதையும் கண்டார். அங்கிருந்த புல் வெளியில் வரிசை வரிசையாகக் காணப்பட்ட கதிர்க் கட்டுகளுக்குப் பக்கத்தில் சிப்பாய்கள் ஏதோ செய்து கொண்டிருந்தார்கள். அந்தக் கதிர்க் கட்டுகள், முதல் நாளன்று கணப்பு மூட்டங்களிலிருந்து கிளம்பிய புகைகளால் மறைக்கப்பட்டிருந்தபடியால், அவைகளை முதல் நாளன்று அவர் கவனிக்கவில்லை. இடைவிடாமல் அங்கே சுட்டுக்கொண்டிருந்த போதிலும், அது ஒரு யுத்த களம் என்ற நினைப்பே பீயருக்கு ஏற்படவில்லை. ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் துப்பாக்கி 'குண்டுகள் ஊதலிட்டு சப்தங்கள் செய்து கொண்டிருந்த போதிலும் அவர் அதைக் கவனிக்கவில்லை. அவருக்கு மேலாகப் பீரங்கிக் குண்டுகள் பறந்து போய்க் கொண்டிருந்த போதிலும், ஆற்றுக்கு அக்கரையிலுள்ள எதிரியை அவரால் பார்க்க முடியவில்லை. அவருக்குப் பக்கத்தில் கொல்லப்பட்டும், காயமடைந்தும் பலர் கீழே விழுந்த போதிலும், வெகு நேரம் வரையில் அவர் கவனிக்கவில்லை.

'போர் முனைக்கு முன்னால் இந்தப் பேர்வழி ஏன் வந்திருக்கிறார்?' என்று ஒருவன் அவரைப் பாத்துக் கூச்சலிட்டான்.

'இடது பக்கம்... வலது பக்கமாக போய்க் கொண்டிரும்' என்று அந்த மனிதர்கள் கூச்சலிட்டார்கள்.

வலது பக்கம் பியர் போனார். அங்கே அவருக்குப் பழக்கமான ராயேவ்ஸ்கியின் உதவியாளர் ஒருவரை எதிர்பாராத விதமாக சந்தித்தார். அந்த உதவியாளர் கோபமாக அவரைப் பார்த்தார். அவரைப் பார்த்துக் கூச்சலிட விரும்பியவரைப்போல அவர் காணப்

பட்டார். ஆனால், அவரை அடையாளம் தெரிந்து கொண்டதும் தமது தலையை ஆட்டினார்.

'நீர் எப்படி இங்கே வந்தீர்?' என்று அவர் சொல்லிவிட்டு பாய்ச்சலில் போனார்.

அங்கே செய்வதற்கு எதுவும் இல்லாதபடியாலும்,யாருடைய வேலைக்காவது தாம் இடையூறாக இருப்போமோ என்ற எண்ணத்தினாலும், அங்கு தாம் இருப்பது பொருத்தம் அல்ல என்ற உணர்ந்தாலும், அந்த உதவியாளருக்குப் பின்னால் பீயரும் சவாரி போனார்.

'அங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறது? நான் உம்முடன் வரலாமா?' என்று அவர் கேட்டார்.

'ஒரு வினாடி, ஒரு வினாடி' என்று அந்த உதவியாளர் சொல்லி விட்டு, அந்தப் புல் வெளியில் நின்ற ஒரு பருத்த கர்னலிடம் போனார். அவர் சில உத்தரவுகளைக் கொடுத்துவிட்டு, பின்னால் பீயரைப் பார்த்துப் பேசினார்.

'நீர் ஏன் இங்கே வந்தீர், கோமகனே?' என்று புன்னகையோடு அவர் கேட்டார். 'இன்னமும் ஆவலோடு தான் இருக்கிறீரா?'

'ஆம், ஆம்' என்றார் பீயர்.

ஆனால், அந்த உதவியாளர் தமது குதிரையைத் திருப்பி மேலே சவாரி போனார்.

'இங்கே சகித்துக் கொள்ளக் கூடியதாய் இருக்கிறது. ஆனால், பாக்ரேஷனைச் சேர்ந்த இடது பக்கவாட்டில் அவர்கள் பயங்கரமாக, சுடச்சுட பெற்றுக் கொண்டிருக்கிறார்கள்' என்று அவர் சொன்னார்.

'உண்மையாகவா? அது எங்கே இருக்கிறது?' என்று பீயர் கேட்டார்.

'நம்முடைய 'குன்றுக்கு என்னுடன் வாரும். அங்கிருந்து நாம் அவற்றைப் பார்க்கலாம். நமது பீரங்கிப்படை வரிசையில் இன்னமும் சகிக்கக் கூடியதாய்தான் இருக்கிறது. நீர் வருகிறீரா?' என்று அந்த உதவியாளர் கேட்டார்.

'ஆம், நான் உம்முடன் வருகிறேன்' என்று பீயர் சொல்லிவிட்டு, தமது குதிரைக்காரனுக்காக சுற்றிலும் பார்த்தார்.

இப்பொழுதுதான் காயம்பட்டவர்கள் தள்ளாடிக் கொண்டு நடப்பதையும், அல்லது டோலிகளில் தூக்கிச் செல்லப் படுவதையும் அவர் கவனித்தார். நேற்று சவாரி வந்த அதே புல் வெளியில் ஒரு சிப்பாய், அந்த மணமுள்ள கதிர்க் கட்டு

வரிசைகளுக்கிடையே படுத்துக் கிடப்பதைக் கண்டார். அவனுடைய தலை மோசமாகத் திரும்பி இருந்தது. அவனுடைய ரோமத் தொப்பி கழன்று கிடந்தது.

'அந்த சிப்பாயை ஏன் அவர்கள் எடுத்துக்கொண்டு போகவில்லை?' என்று பீயர் கேட்பதற்கு இருந்தார். ஆனால், அதே பக்கத்தைப் பார்த்துக் கொண்டிருந்த அந்த உதவியாளரின் கண்டிப்பான தோற்றத்தைக் கண்டதும், அவர் கேட்காமல் நிறுத்திக் கொண்டார்.

தமது குதிரைக்காரனை பீயரால் கண்டு பிடிக்க முடியவில்லை. அந்த பள்ளத்தாக்கு வழியாக அந்த உதவியாளரோடு ராயேவ்ஸ்கியின் அரண்களுக்குப் போனார். அவருடைய குதிரை, உதவியாளரின் குதிரைக்கு வெகு தூரம் பிந்திப் போய்க்கொண்டிருந்தது. ஒவ்வொரு அடியை அது 'எடுத்து வைக்கும்போதும் குலுக்கிக் கொண்டிருந்தது.

'நீர் குதிரை சவாரியில் பழக்கமுள்ளவர் மாதிரி தோன்றவில்லையே, கோமகனே?' என்று உதவியாளர் கேட்டார்.

'இல்லை, அது விஷயமல்ல. ஆனால், அது நடக்கும்போதே குலுக்கிக் கொண்டிருந்தது' என்று பீயர் ஒரு குழப்பமான தொனியில் பேசினார்.

'ஏன்... அது காயமடைந்திருக்கிறது? முன்னங்காலில் மொட்டிற்கு மேலாகக் காயமடைந்திருக்கிறது. ஒரு தோட்டா காயம், சந்தேகமில்லை. நீர் நெருப்பினால் ஞானஸ்நானம் பெற்றதற்காக உம்மைப் பாராட்டுகிறேன், கோமகனே' என்று அந்த உதவியாளர் சொன்னார்.

புகைகளுக்கு இடையே ஆறாவது படைப் பிரிவை அவர்கள் கடந்தார்கள். பீரங்கிப் படைக்குப் பின்பாகப் போனார்கள். அந்த பீரங்கிப் படை இப்பொழுது முன்னேறி இருந்தது. அங்கே உள்ளவர்கள் பீரங்கிகளை சுட்டுக் கொண்டிருந்தார்கள். அதனால், ஏற்பட்ட சப்தம் காதுகளை செவிடாக்கிக் கொண்டிருந்தது. பின்னால் அவர்கள் ஒரு சிறிய காட்டிற்கு வந்தார்கள். அங்கே குளிர்ச்சியாகவும், அமைதியாகவும், மழை காலத்தின் மணம் கமழ்ந்தும் இருந்தது. பீயரும் அந்த உதவியாளரும் குதிரைகளிலிருந்து இறங்கி கால்நடையாகக் குன்றின் மீது ஏறினார்கள்.

'ஜெனரல் இங்கே இருக்கிறாரா?' என்று அந்தக் குன்றுக்கு வந்ததும் அந்த உதவியாளர் கேட்டார்.

'ஒரு நிமிஷத்திற்கு முன்பாக இங்கே இருந்தார். இப்பொழுது தான் அந்த வழியாகப் போனார்' என்று அங்கிருந்த ஒருவர் சொல்லி, வலது பக்கத்தைச் சுட்டிக் காட்டினார்.

பீயரை இப்பொழுது என்ன செய்வது என்ற திகைப்புடன் அந்த உதவியாளர் பீயரை நோக்கினார்.

'என்னைப்பற்றி நீர் கவலைப்பட வேண்டாம். நான் போக முடியுமானால், இந்தக் குன்றின் மேலே இன்னமும் போகிறேன்' என்று பீயர் சொன்னார்.

'ஆம், அப்படியே செய்யும். அங்கிருந்து நீர் ஒவ்வொன்றையும் பார்க்கலாம். அந்த இடம் அபாயத்திலும் குறைந்தது. நான் உம்மிடம் மீண்டும் வருகிறேன்.'

பீயர் அந்த பீரங்கிப் படையிடம் போனார். அந்த உதவியாளர் மேலே சவாரி போனார். அவர்கள் மீண்டும் சந்திக்கவில்லை. வெகு காலத்திற்குப் பின்னால் அவரைப்பற்றி பீயர் கேள்விப்பட்டபோது அந்த நாளில் அவர் தமது ஒரு கையை இழந்தார் என்று அறிந்தார்.

பீயர் அன்று ஏறிய குன்றுதான் பிரசித்தமான குன்று. அந்தக் குன்றைப்பற்றி பின்னால் ருஷ்யர்கள், 'பீரங்கிப் படைக் குன்று' என்றோ, அல்லது 'ராயேவ்ஸ்கியினுடைய அரண்கள்' என்றோ அழைத்து வந்தார்கள். அந்தக் குன்றை பிரஞ்சுக்காரர்கள் பின்னால் மகா பெரிய அரண்கள் என்றோ, தலைவிதி அரண்கள் என்றோ, வியூகத்தின் மத்திய பாகம் என்றோ அழைத்து வந்தார்கள். அதைச் சுற்றிலும் பத்தாயிரக் கணக்கான பேர்கள் கீழே சாய்ந்தார்கள். முழு அணி வரிசை அமைப்புக்கும் அது ஒரு சாவியைப் போன்றது என்று பிரஞ்சுக்காரர்கள் கருதினார்கள்.

அந்த அரண்கள் ஒரு குன்றைக் கொண்டது. அதன் மூன்று பக்கங்களிலும் குழிகள் தோண்டி இருந்தார்கள். அந்த குழிகளுக்குள்ளாக பத்து பிரங்கிகள் இருந்தன. அந்த குழிகளுக்குள்ளே அமைக்கப்பட்ட துவாரங்களின் வழியாக அந்த பீரங்கிகள் சுட்டுக் கொண்டிருந்தன.

அந்த குன்றுக்குப் பொருத்தமாக இரண்டு பக்கங்களிலும் மற்ற பீரங்கிகள் அமைக்கப்பட்டிருந்தன. இந்த பீரங்கிகளுக்கு சிறிது பின்பாகக் காலாட் படைகள் இருந்தன. அந்தக் குன்றின் மீது பீயர் ஏறியபோது, அங்கே குழிகள் தோண்டப்பட்டு, அந்தக் குழிகளுக்குள்ளிலிருந்து பீரங்கிகள் சுட்டுக் கொண்டிருந்தன என்பது பீயருக்குத் தெரியாது. அந்த இடம் அந்தப் போரில் முக்கியமான இடம் என்பதும் அவருக்குத் தெரியாது.

அதற்கு மாறாக, தாம் அங்கே இருக்க நேரிட்டபடியால், அந்த போர்க் களத்தில் அது முக்கியமற்ற ஒரு இடம் என்று அவர் நினைத்தார்.

குன்றை அடைந்ததும் பீரங்கிப் படையைச் சுற்றி வெட்டப் பட்டிருந்த ஒரு குழியின் ஓரத்தில் அவர் அமர்ந்தார். தம்மைச் சுற்றிலும் என்ன நடந்துகொண்டிருக்கின்றன என்பதைத் தமக்கு பிரக்ஞை இல்லாத ஒரு மகிழ்ச்சியான புன்னகையோடு நோக்கிக்கொண்டிருந்தார். இடையிடையே அவர் அதே புன்னகையோடு எழுந்து அந்த பீரங்கிப் படையைச் சுற்றி வருவார். அங்கே இருந்த சிப்பாய்கள் பீரங்கிகளில் மருந்தைக் கெட்டிக்கவும், பீரங்கிகளை முன்னால் இழுத்து நிறுத்தவும், தொடர்ச்சியாக அவரைக் கடந்து சென்று வெடி மருந்துகளைக் கொண்டுவரவுமாய் இருந்தார்கள். அவர்களுக்கு இடையூறாய் இல்லாத விதத்தில் அவர் நடந்து கொண்டார்.

அந்தப் படையிலிருந்த பீரங்கிகள், தொடர்ச்சியாக ஒன்றன் பின் ஒன்றாக, காது செவிடுபடும்படியாக முழங்கி, குண்டுகளைப் பொழிந்துகொண்டும், சுற்றிலும் உள்ள இடங்களை வெடி மருந்துப் புகையால் மூடிக்கொண்டும் இருந்தன.

அந்த பீரங்கிப் படைக்கு ஆதரவாக நிறுத்தப்பட்டிருந்த காலாட்படை வீரர்கள் பயின்று கொண்டிருந்தார்கள். அதற்கு மாறாக, பீரங்கிப் படையில் வேலை செய்துகொண்டிருந்த அந்த சிறிய கூட்டம் (அவர்களுக்கும் காலாட்படைக்கும் மத்தியில் ஒரு அரண் வெட்டப்பட்டிருந்தது), தங்கள் வேலையில் சுறுசுறுப்பாய் இருந்தது. ஒவ்வொருவரும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களைப் போன்ற பரபரப்பான உணர்ச்சியோடு இருந்தார்கள்.

ராணுவத்தைச் சேராத பீயரின் தோற்றம், ஒரு வெள்ளைத் தொப்பியோடு அங்கே காணப்பட்டது, முதலில் அதிருப்திகரமான அபிப்பிராயத்தையே உண்டு பண்ணியது. அந்த சிப்பாய்கள் அவரைக் கடந்து போகும்போது ஆச்சரியத்தோடும் பீதியோடும் கடைக்கண்ணால் பார்த்துக்கொண்டே போனார்கள். ஒரு உயரமான நீண்ட கால்களைக் கொண்ட, முகத்தில் தழும்புகள் கொண்ட பிரதான பீரங்கிப் படை அதிகாரி தூரத்திலிருந்த பீரங்கியின் வேலையைப் பார்க்க வருகிறவரைப் போல பீயரிடம் நெருங்கி அவரை ஆச்சரியத்தோடு பார்த்தார்.

இன்னமும் ஒரு சிறுவனைப்போலக் காட்சியளித்த, அப்பொழுதுதான் ராணுவ காலேஜிலிருந்து வெளிவந்த வரைப்போலத் தோன்றிய, உருண்டை முகம் கொண்ட ஒரு வாலிப

அதிகாரி அங்கே காணப்பட்டார். தம்மிடம் ஒப்புவிக்கப்பட்ட இரண்டு பீரங்கிகளை ஆர்வத்தோடு வேலைவாங்கி வந்தார். அவர் பீயரைப் பார்த்து கண்டிப்போடு பேசினார்.

'ஐயா, நீர் கொஞ்சம் விலகி நிற்க வேண்டும். நீர் இங்கே இருக்கக்கூடாது' என்று அவர் சென்னார்.

தாங்கள் அதிருப்தி அடைந்திருப்பதைப் போல பீயரைப் பார்த்தபோது சிப்பாய்கள் தங்கள் தலைகளை ஆட்டினார்கள். வெள்ளைத் தொப்பி அணிந்திருந்த இந்த மனிதர், தங்களுக்கு எந்த விதமான கெடுதலும் செய்யவில்லை என்பதை அவர்கள் கண்டு நம்பிக்கை அடைந்த பின்பு, அவர் மீது அவர்களுக்கு அன்பும், கேலியும் கொண்ட அனுதாபம் தோன்றியது. அங்கே பீயர் குழிகளின் சரிவில் ஒரு நாணமான புன்னகையோடு அமைதியான அமர்ந்திருப்பார்; அந்த சிப்பாய்களுக்கு மரியாதையோடு இடம் விட்டு விலகி நிற்பார். அல்லது, ஒரு சாலையில் நடப்பதைப் போல குண்டுகள் வந்து விழுந்து கொண்டிருந்த அந்த பீரங்கிப் படையைச் சுற்றி மேலும் கீழும் நடந்து கொண்டிருப்பார். இவற்றைப் பார்த்த பின்பு, அந்த சிப்பாய்களுக்கு அவர் மீதுள்ள விரோதமான அவநம்பிக்கை மாறியது; அன்பும் கேலியும் கொண்ட தங்கள் அனுதாபத்தை தங்களுடைய நாய்களுக்கோ, சேவல்களுக்கோ, கோழிகளுக்கோ, அல்லது அந்தப் பட்டாளத்தோடு சேர்ந்து வசிக்கும் மற்ற மிருகங்களுக்கோ காட்டுவதைப்போல அவரிடமும் காட்டினார்கள். அவரைத் தங்களோடு அவர்கள் சேர்த்துக்கொண்டு, 'நமது கனவான' சூ என்ற கேலிப் பெயரையும் அவர்கள் அவருக்குச் சூட்டினார்கள். அவரைப் பற்றி தங்களுக்குள் அன்பான முறையில் தமாஷ் செய்து கொண்டிருந்தார்கள்.

பீயருக்கு இரண்டு அடிகளுக்கு முன்பாக ஒரு பீரங்கி வெடி குண்டு வந்து விழுந்து, பூமியைத் தோண்டி எறிந்தது. தமது ஆடைகளின் மீது வந்து விழுந்த மண்ணை அவர் துடைத்துத் தள்ளியபோது, ஒரு புன்னகையோடு சுற்றிலும் பார்த்தார்.

'நீர் எப்படி இப்பொழுது உண்மையில் பயப்படாமல் இருக்கிறீர், ஐயா?' என்று அகன்ற தோள்களையுடைய, ஒரு சிவந்த முகத்தைக்கொண்ட சிப்பாய் பீயரைக் கேட்டார். பல்லை இளித்துக்கொண்டு அவர் கேட்டபடியால், அவருடைய பலமான வெள்ளைப் பற்கள் வெளியே தெரிந்தன.

'அப்படியனால் நீங்கள் பயப்படுகிறீர்களா?' என்று பீயர் கேட்டார்.

'வேறு எதை நீர் எதிர்பார்க்கிறீர்? அந்த குண்டுக்கு கருணையே கிடையாது என்பது உமக்குத் தெரியும். அது தள்ளி முழக்கிக்கொண்டு கீழே வரும்போது, நமது வயிற்றுக்குள் இருப்பதெல்லாம் வெளியே வந்து விடுகின்றன. பயப்படாமல் ஒருவரால் இருக்க முடியாது' என்று ஒரு சிப்பாய் சிரித்துக்கொண்டே சொன்னான்.

பிரகாசமான, அன்பான முகங்களோடு, பீயருக்குப் பக்கத்தில் பலர் நின்றார்கள். தங்களைப்போலவே அவரும் பேசுவார் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை எனத் தோன்றியது. அவர் தங்களைப்போலவே பேசியதைக் கண்டதும் அது அவர்களை மகிழ்ச்சி அடையும்படி செய்தது.

'அது சிப்பாய்களாகிய எங்களுக்குரிய தொழில். ஆனால் ஒரு கனவானிடம் அது காணப்படுவது ஒரு அதிசயமான விஷயம். உங்களுக்காக இதோ ஒரு கனவான் இருக்கிறார்.'

'உங்களுடைய இடங்களுக்குப் போங்கள்' என்று பீயரைச் சுற்றி நின்றவர்களைப் பார்த்து, அந்த வாலிப அதிகாரி கூச்சலிட்டார்.

அந்த வாலிப அதிகாரி தமது கடமைகளை முதல் தடவையாகவோ, அல்லது இரண்டாவது தடவையாகவோ தாம் செய்து வருகிறார் என்று தோன்றியது. ஆகவே, அந்த சிப்பாய்களையும், தமக்கு மேற்பட்ட அதிகாரிகள்ளையும், வெகு நுணுக்கமாகவும் முறைப்படியும் நடத்தினார்.

முழக்கம் செய்துகொண்டிருந்த அந்த பீரங்கித் தகர்ப்பும், துப்பாக்கி குண்டுகள் பொழிதலும் வரவர அதிகக் கடுமையாக, அந்தக் களம் முழுவதிலும் வளர்ந்து கொண்டிருந்தன. இடது பக்கத்தில், பாக்ரேஷனின் அரண்கள் இருந்த இடத்தில், இவை முக்கியமாக அதிகமாயின. ஆனால், பீயர் இருந்த இடத்தில் குண்டுகள் சுடுவதினால் ஏற்பட்ட புகை அதிகமாய் இருந்தபடியால் எதையும் புரிந்து கொள்ளுவது அசாத்தியமாய் இருந்தது. தவிரவும், அந்த பீரங்கிப் படையைச் சேர்ந்தவர்களால் அமைக்கப்பட்ட குடும்பம் மற்றவர்களைவிட்டுப் பிரிந்து நின்றது. அந்தக் குடும்பத்தின் செய்கைகளைக் கவனிப்பதிலேயே, அவருடைய பூரா கவனமும் ஈடுபட்டிருந்தது. யுத்த களத்தில் கண்ட காட்சிகளினாலும், கேட்ட சப்தங்களினாலும் அவரை அறியாமலேயே அவருக்கு முதலாவதாக ஏற்பட்ட மகிழ்ச்சியான பரபரப்பு மாறியது. அந்த இடத்தில் வேறொன்று வந்து சேர்ந்தது. அந்தக் கதிர்க் கட்டுக்களுக்கிடையே ஒரு சிப்பாய் கீழே கிடந்ததை அவர் பார்த்ததில் இருந்து இந்த மாறுதல் உணர்ச்சி அவருக்கு

ஏற்பட்டது. அந்தக் குழியின் சரிவில் இப்பொழுது அவர் அமர்ந்து தங்களைச் சுற்றி இருந்தவர்களின் முகங்களைக் கவனித்துப் பார்த்தார்.

பத்து மணிக்குள்ளாக அந்த பீரங்கிப் படையிலிருந்து சுமார் இருபது பேர்களை அப்புறப்படுத்தினார்கள். இரண்டு பீரங்கிகள் தகர்ந்து போயின. மேலும் மேலும் அடிக்கடி பீரங்கிக் குண்டுகள் அந்த பீரங்கிப் படையின் மீது வந்து விழுந்து கொண்டிருந்தன. துப்பாக்கிக் குண்டுகள் ஊதலிட்டுக் கொண்டும், இரைந்து கொண்டும் சுற்றிலும் பறந்து கொண்டிருந்தன. ஆனால், அந்த பீரங்கிப் படையைச் சேர்ந்தவர்கள் இவற்றையெல்லாம் கவனித்ததாகத் தெரியவில்லை. மகிழ்ச்சியான குரல்களும் வேடிக்கைப் பேச்சுகளும் எல்லா இடங்களிலும் கேட்டுக் கொண்டிருந்தன.

'ஒரு உயிருள்ள குண்டு' என்று ஒரு பீரங்கிக் குண்டின் ஊதல் சப்தம் நெருங்கியபோது ஒருவன் கூச்சலிட்டான்.

'இந்த வழியாக அது வரவில்லை, காலாட் படைக்கு அது போகிறது' என்று, அந்த குண்டு அவர்களைக் கடந்து அந்த காலாட்படையின் மத்தியில் போய் விழுந்ததைப் பார்த்து, மற்றொருவன் கூறி பலமாய் சிரித்தான்.

'ஒரு நண்பனுக்காகத் தலை வணங்குகிறாயா, ஏ' என்று இன்னொருவன் கூறினான். அந்த பீரங்கிக் குண்டு பறந்து போனபோது, ஒரு விவசாயி ரொம்பத் தணிவாகத் தலை குனிந்ததைப் பார்த்து, அம்மாதிரி சொன்னான்.

அந்தக் குழியின் சுவர் 'ஓரமாக பல சிப்பாய்கள் கூடி நின்று தங்களுக்கு எதிரே என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதைப் பார்த்தார்கள்.

'அவர்கள் முன்னணியில் இருந்து பின்வாங்கிவிட்டார்கள். அவர்கள் போய்விட்டார்கள்' என்று அங்கே பார்த்துக் கொண்டிருந்தவர்கள் கூறினார்கள்.

'உங்கள் வேலையை நீங்கள் பாருங்கள்' என்று ஒரு வயதான சார்ஜெண்ட் அவர்களைப் பார்த்துக் கூச்சலிட்டார். 'அவர்கள் போய்விட்டார்கள் என்றால், இன்னும் கொஞ்சம் தூரத்தில் அவர்களுக்கு வேலை இருக்கிறது என்பதுதான் காரணம்.'

அந்த சார்ஜெண்ட் ஒரு சிப்பாயின் தோள்களைப் பற்றி, தமது முழங்காலால் அவனை இடித்துத் தள்ளினார். இதைக்கண்ட மற்றவர்கள் சிரித்து முழங்கினார்கள்.

'ஐந்தாவது பீரங்கிக்குப் போ. அதை முன்னாலே நகர்த்து' என்ற குரல்கள் ஒரு பக்கத்திலிருந்து ஒலித்தன.

'இப்பொழுது எல்லாரும் ஒன்று கூடுங்கள். படகு ஓட்டுகிறவர்களைப்போல ஒன்றுகூடித் தள்ளுங்கள்' என்று அந்த பீரங்கியைத் தள்ளிக்கொண்டிருந்தவர்கள் மகிழ்ச்சியோடு கூவினார்கள்.

'ஓ, நமது கனவானின் தொப்பியை அது தள்ளிவிட்டது' என்று, அந்த சிவந்த முகத்தையுடைய தமாஷ்காரன், தனது பற்களைக் காட்டிக்கொண்டு, பீயரைப் பார்த்து கோபமாய்க் கூறினான். பீரங்கி வண்டியின் ஒரு சக்கரத்தையும், ஒரு மனிதனுடைய காலையும், ஒரு குண்டு வந்து விழுந்து தகர்த்தபோது, 'அது ஒரு ஆபாசமான மூட்டை' என்று அவன் எரிச்சலோடு கூறினான்.

'இப்பொழுது உங்கள் வேலையைப் பாருங்கள், நரிகளே' என்று மற்றொருவன் அங்கு வந்த பாதுகாப்புப் படையைச் சேர்ந்தவர்கள் தணிவாகத் தலை குனிவதைக் கண்டு சிரித்துக்கொண்டே சொன்னான். காயமடைந்தவனைத் தூக்கிக்கொண்டுப் போவதற்காக அவர்கள் வந்தார்கள்.

'அப்படியானால், இந்தக் கஞ்சி உங்களுக்குப் பிடிக்கவில்லையா? ஓ, காக்காய்களே! நீங்கள் பீதியடைந்து விட்டீர்கள்' அவர்கள் அந்த பாதுகாப்புப் படையினரைப் பார்த்துச் கூச்சலிட்டார்கள். கால் போனவனைத் தூக்குவதற்கு முன்பாக அவன் முன்பு அந்த வீரர்கள் தயங்கிக்கொண்டு நின்றார்கள்.

'அந்த வாலிபர்கள்... ஓ, ஓ!' என்று அந்த விவசாயிகளை அவர்கள் கேலி செய்தார்கள். 'அது அவர்களுக்குப் பிடிக்கவேயில்லை'

அந்த அரண்களின் ஒவ்வொரு பீரங்கிக் குண்டு விழுந்த பின்பும், ஒவ்வொரு வீரன் விழுந்த பின்பும், அங்கே உற்சாகம் வர வர அதிகரித்துக் கொண்டு போவதைப் பீயர் கவனித்தார்.

நெருங்கி வந்து கொண்டிருக்கும் ஒரு இடி மேகத்திலிருந்து, அதற்குள் மறைந்திருக்கும் நெருப்பு ஜ்வாலை, வர வரத் தெளிவாகவும் வேகமாகவும் தோன்றிக் கொண்டிருக்கும். அதே மாதிரி அவர்களுக்கு முன்பாக நடந்து கொண்டிருப்பதை அவர்கள் எதிர்ப்பதைப் போல, மறைந்திருந்த அந்த நெருப்பின் ஜ்வாலை, வர வர அதிகமாகவும் கடுமையகாவும் வளர்ந்து, அவர்களின் முகங்களில் ஜொலித்துக் கொண்டிருந்தன.

பீயர் அந்த யுத்த களத்தைப் பார்க்கவில்லை. அங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை அறிவதிலும் அவருக்கு சிரத்தை

இல்லை. இங்கே வர வரப் பிரகாசமாக எரிந்து கொண்டிருக்கும் இந்த நெருப்பைக் கவனிப்பதிலேயே, அவருடைய முழு கவனமும் ஈடுபட்டிருந்தது. அதே மாதிரி வழியில், தமது உள்ளத்திலும் அந்த நெருப்பு ஜுவாலைவிட்டு எரிவதாக அவர் உணர்ந்தார்.

அந்த பீரங்கிப் படைக்கு முன்பாகவும், காமெங்கா என்ற ஓடைக்குப் பக்கத்திலுமாக இருந்த காலாட்படை, பத்து மணிக்கெல்லாம் பின்வாங்கியது. அவர்கள் துப்பாக்கிகள் மீது, காயம் பட்டவர்களை வைத்துக்கொண்டு பின்னால் ஓடிக் கொண்டிருப்பதை அந்த பீரங்கிப் படை இருந்த இடத்திலிருந்து பார்க்க முடிந்தது. ஒரு ஜெனரல் தமது பரிவாரங்களோடு அந்த பீரங்கிப் படைக்கு வந்தார். அங்கிருந்த கர்னலிடம் பேசிய பின்பு, கோபமாகப் பீயரைப் பார்த்தார். அந்த பீரங்கிப் படைக்குப் பின்னால் இருந்த, ஆதரவாய் நின்ற காலாட் படையைத் தரையில் படுக்கும்படி உத்தரவிட்டார். அதனால், குண்டுகளினால் ஏற்படும் சேதம் குறையலாம். அதன் பின்பு, அந்த ஜெனரல் அங்கிருந்து போனார். இதற்குப் பின்னால், அந்த பீரங்கிப் படைக்கு வலது பக்கத்தில் இருந்த காலாட்படையில் இருந்து சப்தங்கள் கேட்டன. கொட்டு அடிக்கும் சப்தமும், உத்தரவுகள் போடும் சப்தங்களுமே அந்த சப்தங்களாகும். அந்த காலாட்படை எப்படி முன்னேறப் போகிறது என்பதை, அந்த பீரங்கிப் படை இருந்த இடத்திலிருந்து ஒருவர் பார்க்க முடியும்.

அந்த அரணின் சுவருக்கு மேலாக பீயர் பார்த்தார். முகம் வெளிறிய ஒரு வாலிப அதிகாரி உடைவாளைத் தொங்க விட்டுக் கொண்டு, சுற்றிலும் பீதியோடு நோக்கிக்கொண்டு, பின் நோக்கிப் போய்க் கொண்டிருந்தார். அது பீயரின் மனதில் பலமாய்ப் பதிந்தது.

காலாட் படையின் வரிசைகள் புகையில் மறைந்தன. ஆனால், அவர்களுடைய நீளமான கூச்சல்களும் விரைவாகத் துப்பாக்கியால் சுடும் சப்தங்களும் இன்னும் கேட்டுக் கொண்டிருந்தன. சில நிமிஷங்களுக்குப் பின்னால், அந்தத் திசையிலிருந்து காயம்பட்டவர்களும் டோலி தூக்குகிறவர்களும் கூட்டம் கூட்டமாக வந்துகொண்டிருந்தார்கள். அந்த பீரங்கிப் படையின் மீது மிகுந்த அதிகமாக பீரங்கிக் குண்டுகள் விழ ஆரம்பித்தன. பல மனிதர்கள் கீழே சாய்ந்து கிடந்தார்கள். அவர்களை இன்னும் அப்புறப்படுத்தவில்லை. பீரங்கியைச் சுற்றி நின்ற மனிதர்கள், இன்னும் அதிகமான வேகத்தோடும் சுறு சுறுப்போடும் நடமாடி வந்தார்கள். பீயரை ஒருவரும் இப்பொழுது கவனிப்பதில்லை. தங்களுடைய வழியில் நின்றதற்காக ஒன்றிரண்டு தடவைகளில்

அவரைப் பார்த்துக் கூச்சலிட்டார்கள். அங்கிருந்த பிரதான அதிகாரி அவசரமான, அகன்ற காலடிகளால் நடந்து ஒரு பீரங்கியிலிருந்து மற்றொரு பீரங்கிக்கு முகத்தைச் சுளித்து நடமாடிக் கொண்டிருந்தார். அந்த வாலிப அதிகாரியின் முகம் இன்னும் அதிகமாக சிவந்தது. அவர் இன்னும் அதிகமாகக் கண்டிப்போடு அந்த வீரர்களை நடத்தி வந்தார். அந்த வீரர்கள் குண்டுகளைக் கொண்டு கொடுத்து விட்டு, திரும்பி அவைகளைக் கெட்டித்து, தங்களுடைய வேலைகளைத் தீவிரமான ஆர்வத்தோடு செய்து வந்தார்கள். வில்கள் மீது நடப்பதைப்போல, அவர்கள் நடக்கும்போது குதித்துக் குதித்து நடந்தார்கள்.

புயல் வேகம் அவர்களுக்கு மேலே வந்து விட்டது. ஒவ்வொருவர் முகத்திலும் பீயர் கவனித்து வந்த அந்த நெருப்பு பிரகாசமாய் எரிய ஆரம்பித்தது. கமாண்டிங் அதிகாரிக்குப் பக்கத்தில் பீயர் நின்று கொண்டிருந்தார். தம்முடைய மேல் அதிகாரியிடம் தம்முடைய ரோமத் தொப்பியில் கையை வைத்து மரியாதை செய்து கொண்ட அந்த வாலிப அதிகாரி வந்தார்.

'எட்டு குண்டுகள்தான் மீதம் இருக்கின்றன என்பதை நான் மரியாதையோடு சமர்ப்பித்துக் கொள்ளுகிறேன், ஐயா. நாம் தொடர்ந்து சுட்டுக்கொண்டே இருக்க வேண்டுமா?' என்று அவர் கேட்டார்.

'ரவை - குண்டு' என்று அந்த மேல் அதிகாரி, அவருடைய கேள்விக்குப் பதில் சொல்லாமல், அந்த அரணின் சுவருக்கு மேலாகப் பார்த்துக் கொண்டு கூச்சலிட்டார்.

திடீரென்று ஏதோ நடந்தது. அந்த வாலிப அதிகாரி வாயைப் பிளந்து மூச்சு விட்டுக்கொண்டு கீழே குனிந்து தரையில் அமர்ந்தார். இறக்கையில் சுடப்பட்ட பறவையைப் போல அவர் உட்கார்ந்தார். பீயரின் கண்களில் ஒவ்வொன்றும் விசித்திரமாகவும் குழப்பமாகவும் மூடு பனி போலவும் தோன்றின.

ஒன்றுக்குப் பின் ஒன்றாக பீரங்கிக் குண்டுகள் ஊதலிட்டுக் கொண்டு வந்து, அந்த அரண்களிலுள்ள சிப்பாய் மீதோ, அல்லது பீரங்கி மீதோ விழுந்து கொண்டிருந்தன. இந்த சப்தங்களை இதற்கு முன்பு கவனிக்காமல் இருந்த பீயருக்கு, இப்பொழுது இவற்றைத் தவிர வேறு எதுவும் கேட்கவில்லை. பீரங்கிப் படைக்கு வலது பக்கத்தில் சிப்பாய்கள் ஜே கோஷமிட்டுக் கொண்டு, முன்னால் ஓடாமல் பின்னால் ஓடுவதைப் போல பீயருக்குத் தோன்றியது.

எங்கே பீயர் நின்று கொண்டிருந்தாரோ, அந்த அரணின் ஓரத்தில், ஒரு பீரங்கிக் குண்டு வந்து விழுந்து பூமியைத் தகர்த்தது. ஒரு கருப்புப் பந்து ஒன்று, அவருடைய கண்களின் முன்பாக மின்னி, அதே சமயத்தில் ஏதோ ஒன்றின் மீது தாக்கியது. பாதுகாப்புப் படையைச் சேர்ந்த சிலர் அந்த பீரங்கிப் படை இருக்கும் இடத்தில் நுழைந்து, திடீரென்று அவர்கள் திரும்பி ஓடினார்கள்.

அந்த அதிகாரியிடம் சார்ஜெண்ட் ஓடி வந்து பீதியுற்ற மெதுவான குரலில் பேசினார். (டின்னர் நடந்து கொண்டிருக்கும்போது, அவர்கள் விரும்பிக் கேட்ட ஒரு குறிப்பிட்ட மது, இனிமேல் இல்லை என்பதை ஒரு பட்லர் தனது எஜமானனிடம் சொல்லுவது மாதிரி இருந்தது.) இனிமேல் குண்டுகள் இல்லை என்று அவர் தெரிவித்தார்.

'அயோக்கியர்கள்! அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்?' என்று அந்த அதிகாரி கூச்சலிட்டு, பீயரைப் பார்த்துத் திரும்பினார்.

அந்த அதிகாரியின் முகம் சிவந்து வியர்த்து இருந்தது. அவருடைய கண்கள், அவருடைய சுருங்கிய நெற்றியின் கீழே ஜொலித்துக் கொண்டிருந்தன.

'ரிசர்வ் இடத்திற்குப் போய் வெடி மருந்துப் பெட்டிகளைக் கொண்டு வாருங்கள்' என்று அவர் கூக்குரலிட்டார். பீயரை அவர் பார்க்காமல் தமது மனிதர்களைப் பார்த்துப் பேசினார்.

'நான் போகிறேன்' என்றார் பீயர்.

அவருக்குப் பதில் சொல்லாமல் அந்த அதிகாரி எதிர் பக்கமாக நடந்து போனார்.

'சுட வேண்டாம்... பொறுத்திருங்கள்' என்று அவர் கூச்சலிட்டார்.

வெடி மருந்தை எடுத்து வருவதற்காக உத்தரவிடப்பட்ட மனிதன் பீயர் மீது மோதினான்.

'ஏ, ஐயா, இந்த இடம் உமக்குப் பொருத்தமானதல்ல' என்று அவன் சொல்லிவிட்டு, அந்தச் சரிவில் இறங்கி ஓடினான்.

உட்கார்ந்து கொண்டிருந்த அந்த வாலிப அதிகாரியைத் தவிர்த்து பீயர் அவன் பின்னால் ஓடினார்.

ஒரு பீரங்கிக் குண்டும், மற்றொரு குண்டும், வேறொரு குண்டுமாக அவருக்கு மேலே பறந்து, அவருக்கு முன்பாகவும் பின்பாகவும் பக்கத்திலும் விழுந்தன. அந்தச் சரிவில் பீயர் ஓடினார். 'நான் எங்கே போய்க்கொண்டிருக்கிறேன்' என்று அவர் தம்மையே

கேட்டுக்கொண்டார். அதற்குள்ளாக வெடி மருந்துகள் வைக்கப்பட்டிருந்த பச்சை நிற வண்டிகளுக்குப் பக்கத்தில் வந்துவிட்டார். மேலும் போவதா, அல்லது பின்னால் திரும்புவதா என்பதை அறியாமல், ஒரு முடிவுக்கு வராமல் அவர் நின்றார். திடீரென்று ஒரு பயங்கரமான அதிர்ச்சி அவரை பூமியில் தள்ளியது. அதை சமயத்தில் ஒரு பிரம்மாண்டமான தீ ஜுவாலையின் மின்னல் அவருடைய கண்களைப் பறித்தது. உடனே காது செவிடுபடும் படியான முழக்கமும், வெடித்தலும், ஊதல் சப்தங்களும் கேட்டன.

தம்மை சுதாரித்துக்கொண்டு அவர் பார்த்தபோது, தம்முடைய கைகளை ஊன்றிக்கொண்டு பூமி மீது உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அவர் நெருங்கி வந்துகொண்டிருந்த அந்த வெடி மருந்து வண்டிகளை அங்கே காணவில்லை. அதற்குப் பதிலாக, எரிந்து கருகிய பலகைகளும், கந்தல்களும், அந்த கருகிய புல் தரையில் சிதறிக் கிடந்தன. ஒரு குதிரை, தன் பின்னால் தொங்கிக் கொண்டிருந்த உடைந்த வண்டி நோக்காலோடு, பாய்ச்சலில் ஓடிக்கொண்டிருந்தது. மற்றொரு குதிரை, பீயரைப் போலவே பூமியில் விழுந்து கிரீச்சுக் குரலில் நீளமாகக் கதறிக்கொண்டிருந்தது.



பீயர் பீதியுற்று துள்ளியெழுந்து, பீரங்கிப் படை இருந்த இடத்திற்குத் திரும்பவும் ஓடினார். அவரைச் சுற்றியிருந்த அந்த பயங்கரங்களிலிருந்து தப்புவதற்கு, அது ஒன்று தான் புகலிடம் என்பது போல அவர் ஓடினார்.

அந்த அரண் பள்ளங்களுக்கு அவர் போனதும், அங்கிருந்த மனிதர்கள் என்னவோ செய்து கொண்டிருந்தார்கள். ஆனால், அந்த பீரங்கிப் படையிலிருந்து ஒரு குண்டு கூட அப்பொழுது சுடப்படவில்லை. அங்கிருந்த மனிதர்கள் யார் என்பதை உணர்ந்து கொள்ளுவதற்கு அவருக்கு அவகாசம் இல்லை. அந்த பிரதான அதிகாரி அந்த அரணிலுள்ள ஒரு சுவர் மீது குப்புறப் படுத்துக்கொண்டு, கீழேயுள்ள எதையோ சோதிப்பதுபோலக் காணப்பட்டார். முன்னால் அவர் பார்த்த சிப்பாய்களில் ஒருவர், கஷ்டப்பட்டு முன்னேறிக்கொண்டு, 'சகோதரர்களே' என்று கூச்சலிட்டார். அவருடைய கையைப் பற்றிப் பிடித்திருந்த சிலரிடமிருந்து, அவர் தப்பித்துக் கொள்ள முயற்சி செய்வதுபோலத் தோன்றியது. அவருக்கு விசித்திரமான மற்றொன்றையும் அவர் பார்த்தார்.

ஆனால், அந்த கர்னல் இறந்து போய்விட்டார் என்பதையும், 'சகோதரர்களே' என்று கூச்சலிட்டு அந்த சிப்பாய் ஒரு கைதியாக்கப்பட்டான் என்பதையும், அவர் அறிந்துகொள்ள அவகாசம் இல்லை. அவருடைய கண்களின் முன்பாகவே, மற்றொருவன் துப்பாக்கி சனியனால் குத்தப்பட்டதையும், அவர் புரிந்துகொள்ள அவகாசமில்லை. ஏனென்றால், அவர் அந்த அரணுக்குள் போவதற்குள்ளாகவே, ஒரு நீல நிற சீருடை அணிந்த, ஒரு ஒல்லியான, மஞ்சள் முகத்தையுடைய, வியர்த்துக் கொண்டிருந்த ஒருவன், கையில் உடைவாளுடன் ஏதோ கத்திக் கொண்டிருப்பதை அவர் கண்டார். தம்மை அறியாமலேயே அந்த அதிர்ச்சியிலிருந்து தப்பித்துக்கொள்ளுவதற்கு, பீயர் தமது கைகளை நீட்டி, அந்த மனிதனைப் (ஒரு பிரஞ்சு அதிகாரியை) பிடித்தார். அங்கிருந்தவர்கள் ஒரே கூட்டமாக முழு வேகத்தோடு ஒருவரையொருவர் பார்ப்பதற்கு முன்பாகவே ஓடிக் கொண்டிருந்தார்கள். அந்த அதிகாரியை தோள்களைப் பற்றி ஒரு கையினால் பீயர் பிடித்து, மற்றொரு கையினால் அவருடைய தொண்டையைப் பிடித்தார். அந்த அதிகாரி தமது உடைவாளைக் கீழே போட்டுவிட்டு, அவருடைய கழுத்துப் பட்டையைப் பற்றினார்.

சில வினாடிகள் அவர்கள், தங்களுக்கு அறிமுகமில்லாத முகங்களை, ஒருவருக்கொருவர், பீதியுற்ற கண்களோடு நோக்கினார்கள். இருவருமே தாங்கள் என்ன செய்தோம், இனி என்ன செய்யப் போகிறோம் என்பதை அறியாமல், குழம்பிக் கொண்டிருந்தார்கள். 'நான் கைதியாகப் பிடிபட்டேனா, அல்லது அவரைக் கைதியாகப் பிடித்திருக்கிறேனா?' என்று ஒவ்வொருவரும் சொல்லிக் கொண்டிருந்தார்கள். தாம் கைதியாகப் பிடிபட்டிருப் பதாக, அந்தப் பிரஞ்சு அதிகாரி கொஞ்சம் அதிகமாக நினைத்திருப்பதைப்போல தோன்றியது. ஏனெனில், பீயரின் பலம் மிகுந்த கையானது, தம்மை அறியாமலேயே ஏற்பட்ட பயத்தால் தூண்டப்பட்டு, அவருடைய தொண்டையை வர வர இறுக்கமாக அழுத்தி வந்தது. அந்த பிரஞ்சுக்காரர் எதையோ சொல்ல ஆரம்பித்தார். அச்சமயத்தில் அவர்களுடைய தலைக்கு மேலாக, ஒரு பயங்கரமான ஊதல் சத்தத்தோடு, ஒரு பீரங்கிக் குண்டு தணிவாகப் பறந்து வந்தது. அந்த குண்டினால், அந்த பிரஞ்சு அதிகாரியின் தலை, சிதற அடிக்கப்பட்டதுபோலப் பீயருக்குத் தோன்றியது; ஏனெனில், அந்த அதிகாரி அவ்வளவு வேகமாகத் திடீரென்று கீழே குனிந்தார்.

பீயரும் தமது தலையைக் குனிந்து, தமது கைகளைக் கீழே தொங்கவிட்டார். யார், யாரைக் கைதியாகப் பிடித்திருக்கிறார்கள் என்பதை விஷயத்தைப் பற்றி, அந்த பிரஞ்சுக்காரர் மேற்கொண்டு சிந்தனை செய்யாமல், பீரங்கிப் படையைப் பார்த்து திரும்பி ஓடினார். அந்த மேட்டிலிருந்து பீயரும் கீழ் நோக்கி ஓடினார். தாம் ஓடியபோது இறந்தவர்களும், காயம்பட்டவர்களும், தமது கால்களுக்குத் தட்டுப்பட்டதுபோல அவருக்குத் தோன்றியது. அந்தக் குன்றின் அடிவாரத்திற்கு அவர் வந்துசேரும் முன்பாக, ஒரு அடர்த்தியான கூட்டமாக வந்து கொண்டிருந்த ருஷ்ய சிப்பாய்களைச் சந்தித்தார். அவர்கள் தட்டுத் தடுமாறிக் கொண்டும், கூச்சலிட்டுக் கொண்டும், மகிழ்ச்சியோடும், காட்டுத்தனமாகவும், அந்த பீரங்கிப் படையை நோக்கி ஓடினார்கள். (இந்த தாக்குதலைத் தான், எர்மோலாவ், தாம் நடத்தியது என்று சொன்னார். தம்முடைய தீரத்தினாலும், அதிருஷ்டத்தினாலுமே, அம்மாதிரி ஒரு காரியம் செய்ய முடிந்தது என்று அவர் சொன்னார். செயின்ட் ஜார்ஜ் பதக்கங்களைத் தமது ஜேபியிலிருந்து எடுத்து, அந்த பீரங்கிப் படை இருந்த இடத்தில் வீசி, யார் முதலாவதாகப் போகிறார்களோ, அவர்கள் அவற்றை எடுத்துக் கொள்ளலாம் என்று அவர் சொன்னார். அந்த மாதிரி நடத்திய தாக்குதலே அதுவாகும்.)

அந்த பீரங்கித் தளத்தைக் கைப்பற்றியிருந்த பிரஞ்சுக்காரர்கள் ஓட்டமெடுத்தார்கள். நமது துருப்புகள் ஜே கோஷமிட்டுக் கொண்டு, அந்த பீரங்கித் தளத்திற்கு முன்னால் வெகு தூரம் வரையில் விரட்டிக் கொண்டு போனார்கள். அதனால் அவர்களைத் திரும்ப அழைப்பது கஷ்டமாயிருந்தது.

பீரங்கித் தளத்திலிருந்து கைதிகளைக் கீழே கொண்டு வந்தார்கள். அவர்களில் காயம் அடைந்த ஒரு பிரஞ்சு ஜெனராலும் இருந்தார். அவரை அங்கிருந்த அதிகாரிகள் சூழ்ந்து கொண்டார்கள். பீயருக்குத் தெரிந்தவர்களும், தெரியாதவர்களுமான காயமடைந்த ருஷ்ய, பிரஞ்சுக் கூட்டங்கள், துன்பங்களினால் முகம் சுளித்து, நடந்து கொண்டும், தவழ்ந்து கொண்டும், டோலிகளில் தூக்கப்பட்டும், அந்த பீரங்கித் தளத்திலிருந்து போய்க்கொண்டிருந்தார்கள். பீயர் மீண்டும் அந்தக் குன்றின் மேல் ஏறி ஒரு மணி நேரம் இருந்தார். அவரைத் தங்களுடைய குடும்பத்தில் ஒருவராகச் சேர்த்துக் கொண்டே அந்த பழைய பீரங்கித் தள குடும்பவத்தில், இப்பொழுது ஒருவரைக் கூட காணவில்லை. அங்கே இறந்து கிடந்தவர்களில், அவருக்கு அறிமுகமானவர்களும், ஆகாதவர்களும் இருந்தார்கள். அந்த வாலிப அதிகாரி, இன்னமும் அந்த இரத்த வெள்ளத்தில்,

அரணின் சுவருக்கு ஓரமாக உட்கார்ந்து குனிந்துகொண்டிருந்தார். அந்த சிவப்பு முகத்தையுடைய மனிதன், இன்னமும் சுளித்துக் கொண்டுதான் கிடந்தான். அவனை அவர்கள் அப்புறப்படுத்த வில்லை.

பியர் மீண்டும் அந்தக் குன்றின் கீழாக இறங்கி ஓடினார்.

'இப்பொழுது அவர்கள் நிறுத்தி விடுவார்கள். அவர்கள் என்ன செய்தார்கள் என்பதைக் கண்டு பீதி கொள்வார்கள்' என்று அவர் நினைத்தார். அந்த யுத்த களத்திலிருந்து போய்க் கொண்டிருந்த டோலிக்காரர்களின் கூட்டத்தை நோக்கி எவ்வித நோக்கமும் இல்லாமல் அவர் போனார்.

அந்த புகைத் திரைக்குப் பின்னால், சூரியன் இன்னமும் நேர் மேலாகவே காணப்பட்டான். எதிரிலும், முக்கியமாக செமியோனாவ்ஸ்க் சமீபமாக இடது பக்கத்திலும், எதோ ஒன்று புகையினால் மூடியிருப்பதாகத் தோன்றியது. துப்பாக்கி களுடையவும், பீரங்கியகளுடையவும் முழக்கங்கள், இன்னும் குறையவில்லை. தன்னுடைய முழு பலத்தோடு அபாயத்திலுள்ள ஒரு மனிதன் எப்படி கூச்சலிடுவானோ, அதே மாதிரி அந்த சப்தங்கள், முன்னைவிட இன்னமும் அதிகமாகவே கேட்டு வந்தன.



பாராடினோ போரின் முக்கியமான நடவடிக்கை, பாராடினோ அரண்களுக்கும் பாக்ரேஷனின் அரண்களுக்கும் இடையிலுள்ள 7000 அடி நீளமுள்ள இடத்தில்தான் நடைபெற்றது. அந்த இடத்திற்கு அப்புறமாக ஒரு பக்கத்தில் நடுப்பகலில், உவராவினுடைய குதிரைப் பட்டாளம் ஒரு சிறு போர் செய்தது. மற்றொரு பக்கத்தில் உட்டைட்சாவுக்கு அப்புறமாக, பானியாடௌஸ்கிக்கும் துச்கோவுக்கும் ஒரு மோதம் ஏற்பட்டது. இவை இரண்டும் தனித்தனியான காரியங்கள். மத்திய போர்க் களத்தில் நடைபெற்றவைகளோடு இவற்றை ஒப்பிட்டால், இவை மிகவும் சிறிய காரியங்களாகும். பாராடினோவுக்கும் அரண்களுக்கும் மத்தியிலுள்ள, அந்த காட்டுக்குப் பக்கத்தில் உள்ள இடத்தில்தான், அன்றைய தினம் முக்கியமான போர் நடைபெற்றது. அந்த இடம், இரண்டு பக்கங்களிலிருந்தும் பார்க்கக் கூடிய ஒரு திறந்த வெளியாகும். அந்த இடத்தில்தான், ரொம்ப சுலபமான முறையில், முரட்டுத்தனமாக போர் செய்தார்கள்.

இரண்டு பக்கங்களிலிருந்தும் நூற்றுக்கணக்கான பீரங்கிகள், தகர்ப்பு வேலையை ஆரம்பித்ததோடு, போரும் ஆரம்பமாயிற்று.

அதன் பின்னால், அந்த முழு யுத்த களமும் புகையினால் மூடப்பட்ட பின்பு, காம்பானுடையவும் டேசாயினுடையவும் இரண்டு படைப் பிரிவுகள், பிரஞ்சுக்காரர்களின் வலது பக்கத்திலிருந்து முன்னேறின. முராட்டின் துருப்புகள் இடது பக்கத்திலிருந்து முன்னேறின.

அரண்களிலிருந்து சுமார் ஒரு வெர்ஸ்ட் தூரத்தில், ஷெவா ர்டினா அரண்களில் நெப்போலியன் நின்று கொண்டிருந்தார். அங்கிருந்த சுமார் இரண்டு வெர்ஸ்ட்கள் தூரத்தில் பாராடினோ இருந்தது. ஆகவே, அந்த இடத்தில் என்ன நடக்கிறது என்பதை நெப்போலியனால் பார்க்க முடியாது. முக்கியமாக, அந்த புகையானது மூடு பனியோடு கலந்து, அந்த முழு இடத்தையும் மறைத்துக் கொண்டிருந்தது. டேசாயின் சிப்பாய்கள் அரண்களுக்கு எதிராக முன்னேறிக் கொண்டிருந்தார்கள். அவர்களை அந்தப் பள்ளத்தாக்கிற்குப் போகிறவரையில்தான் காணமுடிந்தது. அந்த பள்ளத்தாக்கு அவர்களுக்கு அந்த அரண்களுக்கும் மத்தியிலிருந்தது. அந்தப் பள்ளத்தாக்கில் அவர்கள் இறங்கியதும், அரண்களிலிருந்து கிளம்பிய பீரங்கி, துப்பாக்கிப் புகைகள் அடர்த்தியாக வளர்ந்து அந்த பிரதேசத்தை மூடிவிட்டன. அந்த புகைகளுக்கு இடையே கருப்பாக ஏதோ ஒன்றை இடையிடையே பார்க்க முடிந்தது. ஒரு வேளை அவர்கள் சிப்பாய்களாக இருக்கலாம். சில சமயங்களில் துப்பாக்கி சனியன்கள் மின்னுவதும் காணப்பட்டன. ஆனால் அவர்கள் போய்க் கொண்டிருக்கிறார்களா, அல்லது நின்றுகொண்டிருக் கிறார்களா என்பதையோ அவர்கள் பிரஞ்சுக்காரர்களா, அல்லது ருஷ்யர்களா என்பதையோ, அந்த ஷெவார்டினா ‘அரண்களிலிருந்து கண்டுகொள்ள முடியவில்லை.

சூரியன் பிரகாசமாய் காணப்பட்டான். அதனுடைய சாய்வான கதிர்கள் நெப்போலியன் முகத்தில் விழுந்தன. அவர் தமது கையால் கண்களுக்கு மேலாக வெளிச்சத்தை மறைத்து, அந்த அரண்களை நோக்கினார். அவைகளுக்கு முன்பாக புகை பரவி நின்றது. சில சமயங்களில் அந்த புகை அசைவது போலும், சில சமயங்களில் அந்தத் துருப்புகள் அசைவது போலும் தோன்றியது. சில வேளைகளியல் அந்த குண்டு சுடும் சப்தங்களுக்கு இடையில், கூச்சல்களும் கேட்டன. ஆனால், அங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை சொல்லுவது அசாத்தியமாயிருந்தது.

அந்தக் குன்றின் மீது நெப்போலியன் நின்றுகொண்டு, ஒரு தூரதிருஷ்டிக் கண்ணாடியால் பார்த்தார். அந்தக் கண்ணாடியின் சிறிய வட்டத்திற்குள் புகையையும் மனிதரையும் கண்டார். சில வேளைகளில் தமது சொந்த வீரர்களையும், சில வேளைகளில் ருஷ்ய வீரர்களையும் கண்டார். ஆனால், கண்ணாடியை எடுத்துவிட்டு, வெறும் கண்ணால் பார்த்தபோது, எந்த இடத்தை அவர் அந்த கண்ணாடியின் மூலமாகப் பார்த்தார் என்பதைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

அந்தக் குன்றிலிருந்து அவர் கீழே இறங்கி, அதன் முன்பாக மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தார்.

இடையிடையே அவர் நின்று, சுடுகிற சப்தங்களைக் கவனித்துக் கேட்டு, அந்த யுத்த களத்தைக் கூர்மையாக நோக்குவார்.

ஆனால், அந்த இடத்தில் என்ன நடக்கிறது என்பதை, அவர் இப்பொழுது கீழே நின்று பார்க்கிற இடத்திலிருந்து கண்டு பிடிப்பது அசாத்தியமாயிருந்தது. அல்லது, அந்த குன்றுக்கு மேலாக, தற்சமயம் நின்றுகொண்டிருந்த அவருடைய ஜெனரல்களாலும் கூட, அதைக் கண்டு பிடிப்பது அசாத்தியமாயிருந்தது. அந்த அரண்களிலிருந்து கூட, அதைக் கண்டு பிடிப்பது அசாத்தியமாயிருந்தது. அந்த அரண்களில் ஒரு சமயம் ருஷ்யர்களும், ஒரு சமயம் பிரஞ்சுக்காரர்களும் மாறி மாறியிருப்பதும், அல்லது மரணமடைந்தோ, காயம்பட்டோ, உயிருடனோ, பீதியுற்றோ, அல்லது பைத்தியம் கொண்டோ, சேர்ந்து இருந்தும் வந்தார்கள். அந்த அரண்களில் இருப்பவர்களுக்குக் கூட அங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை அறிந்து கொள்ளுவதும் அசாத்தியமாய் இருந்தது. பல மணி நேரங்கள் விடாத பீரங்கி, துப்பாக்கி குண்டுகள் பொழிந்ததற்குப் பின்னாலும், இப்பொழுது ருஷ்யர்கள் மட்டும் ஒரு சமயத்தில் காணப்படுவார்கள்; பின்னால் பிரஞ்சுக்காரர்கள் மட்டும் காணப்படுவார்கள்; பின்னால் காலாட்படையும், மற்றொரு சமயம் குதிரைப் படையும் காணப்படுவார்கள். அவர்கள் தோன்றிக் கொண்டும், சுட்டுக் கொண்டும், கீழே விழுந்து கொண்டும், ஒருவரையொருவர் என்ன செய்வது என்று தெரியாமல் மோதிக்கொண்டும், கூச்சலிட்டுக் கொண்டும், திரும்பி ஓடிக் கொண்டும் இருந்தார்கள்.

அவர் அனுப்பிய உதவியாளர்களும், அவருடைய மார்ஷல்களிடமிருந்து சேவகர்களும், யுத்தத்தின் போக்கைப்பற்றி நெப்போலியனுக்கு அறிவிப்பதற்காக, குதிரைகள் மீது வந்து

கொண்டே இருந்தார்கள். ஆனால், இந்த அறிக்கைகள் எல்லாம் பொய்யானவை. ஏனெனில், கடுமையான போர் நடந்து கொண்டிருக்கும்போது, ஒரு குறிப்பிட்ட நேரத்தில் என்ன நடந்தது என்பதை சொல்லுவது அசாத்தியம். தவிர, போர் நடந்து கொண்டிருந்த அந்த இடத்திற்கு, அவருடைய உதவியாளர்களில் பலர் போனதே கிடையாது. மற்றவர்க ளிடமிருந்து அவர்கள் கேள்விப் பட்டவைகளையே, நெப்போலியனிடம் அறிக்கையிட்டு வந்தார்கள். நெப்போலியனிடம் வந்து சேர வேண்டிய இரண்டு வெர்ஸ்ட்டுகள் தூரத்தை அவர்கள் கடந்து முடியும் முன்பாகவே, போர்க்களத்திலுள்ள நிலைமை மாறிவிடலாம். அதனால், அவர்கள் கொண்டு வந்த செய்திகள் பொய்யாகி விடலாம். பாராடினோ கைப்பற்றப்பட்டது என்றும், காலாச்சா நதியின் மீதுள்ள பாலம் பிரஞ்சுக்காரர்கள் கையிலிருக்கிறது என்றும், முராட்டிடமிருந்து ஒரு உதவியாளர் செய்தி கொண்டு வருகிறார். துருப்புகள் அந்த பாலத்தைக் கடக்கலாமா என்று நெப்போலியனிடம் அவர் கேட்கிறார். நெப்போலியன், அந்தத் துருப்புகள் பாலத்தைக் கடந்து அக்கரை சென்று, அணி வரிசை அமைத்து, காத்திருக்க வேண்டுமென்று உத்தரவு கொடுக்கிறார். ஆனால் அந்த உத்தரவு கொடுப்பதற்கு முன்பாகவே - அந்த உதவியாளர் பாராடினோவை விட்டுப் புறப்பட்டவுடனேயே - அந்த பாலம் மீண்டும் ருஷ்யர்களால் கைப்பற்றப்பட்டு, கொளுத்தப்பட்டு 'விட்டது. அந்த சண்டையில்தான் அந்தப் போரின் ஆரம்பத்தில் பீயரும் அங்கே இருந்தார்.

அரண்களிலிருந்து ஒரு முகம் வெளிறிய, பீதியுற்ற தோற்றத்தோடு ஒரு உதவியாளர் சவாரி வந்து, தங்களுடைய தாக்குதல் எதிர்த்து அடிக்கப்பட்டது என்று நெப்போலியனிடம் அறிக்கையிடுகிறார். காம்பான் காயமடைந்ததாகவும், டாவூட் கொல்லப்பட்டடதாகவும் அவர் அறிக்கையிடுகிறார். ஆனால், பிரஞ்சுக்காரர்கள் திருப்பி அடிக்கப்பட்டார்கள் என்று அந்த உதவியாளருக்கு எப்பொழுது சொன்னார்களோ, அதே சமயத்தில், அந்த அரண்களை பிரஞ்சுக்காரர்கள் உண்மையில் மீண்டும் கைப்பற்றிக் கொண்டார்கள். டாவூட்டும் உயிரோடு இருந்தார். அற்பமான காயங்களே அவருக்கு ஏற்பட்டன. இம்மாதிரியான, நம்பகமில்லாத அறிக்கைகளின் மீது ஆதாரம் கொண்டுதான், நெப்போலியன் தமது உத்தரவுகளைப் பிறப்பிக்கிறார். அந்த உத்தரவுகள் அவை பிறக்கும் முன்பாகவே நிறைவேறி, விடுகின்றன; அல்லது அவற்றை செய்ய முடியாமல் இருப்பதால், நிறைவேற்ற முடியாமல் இருக்கின்றன.

யுத்த களத்திற்கு சமீபமாக, மார்ஷல்களும் ஜெனரல்களும் இருந்தாலும், அசல் யுத்தத்தில் நெப்போலியனைப் போலவே அவர்களும் கலந்து கொள்ளுவதில்லை. சில சமயங்களில்தான், துப்பாக்கிக் குண்டுகள் வந்துவிழும் எல்லை வரையில், அவர்கள் போய்ப்பார்ப்பார்கள். நெப்போலியனைக் கேட்காமலேயே, அங்குள்ள நிலைமையைப் பார்த்த பின்பு, எங்கே, எந்த பக்கமாகச் சுடவேண்டும், எங்கே காலாட்படை ஓடவேண்டும் என்றும் அவர்கள் உத்தரவு பிறப்பிப்பார்கள். எங்கே குதிரைப் படை போக வேண்டும், எங்கே காலாட்படை ஓடவேண்டும் என்றும் அவர்கள் உத்தரவு பிறப்பிப்பார்கள். ஆனால், நெப்போலியனுடைய உத்தரவைப் போலவே, அவர்களுடைய உத்தரவுகளும் நிறைவேற்றப்படுவது அபூர்வம். சில சமயங்களில், அறை குறையாக நிறைவேற்றப்படலாம். அநேகமாக அவர்களுடைய உத்தரவுகளுக்கு விரோதமாகக் காரியங்கள் நடந்து விடும். முன்னேறும்படி உத்தரவிடப்பட்ட சிப்பாய்கள், அவர்கள்' முன்னேறும்பொழுது, ரவை குண்டுகள் அவர்கள் மீது பொழியப்படும்போது, பின்னால் திரும்பி ஓடுவார்கள். இருந்த இடத்திலேயே இருக்கும்படி, சிப்பாய்களுக்கு உத்தரவு கொடுக்கப்படும். ஆனால் எதிர்பாராத விதமாக, திடீரென்று ருஷ்யர்கள் அவர்கள் முன்பு வந்துவிட்டால், சில சமயங்களில் பின்னாலேயோ, சில சமயங்களில் முன்னாலேயோ, அவர்கள் ஓட வேண்டியதாய் நேரிடலாம். அதே மாதிரி ஓடிக்கொண்டிருக்கிற ருஷ்யர்களை, குதிரைப் படை, உத்தரவுகள் இல்லாமலேயே, துரத்திக்கொண்டு போக நேரிடலாம். இம்மாதிரியாக, இரண்டு குதிரைப் பட்டாளங்கள் செமியோனாவ்ஸ்க் பள்ளத்தாக்கு வழியாகப் பாய்ச்சலில் போய்க் கொண்டிருந்தன. அவர்கள் அந்த சமசரிவின் உச்சிக்குப் போனதும், உடனே திரும்பி, முழு வேகத்தோடு பின்னால் ஓடினார்கள். காலாட் படையும் அம்மாதிரியே முன்னேறி, சில சமயங்களில் அவர்களுக்கு உத்தரவிடப்படாத இடங்களை நோக்கி ஓட நேரிடலாம். எப்பொழுது, எங்கே பீரங்கிகளை அனுப்ப வேண்டும், எப்பொழுது சுடுவதற்காக காலாட்படையை அனுப்ப வேண்டும், எப்பொழுது ருஷ்ய காலாட்படையை சமட்டுவதற்காக, குதிரை வீரர்களை ஏவ வேண்டும் என்று உத்தரவுகள் கொடுக்கப்படலாம். அம்மாதிரி உத்தரவுகள் எல்லாம், அந்தந்த படைப் பிரிவுகளுக்குப் பக்கத்திலுள்ள அதிகாரிகளால் கொடுக்கப்படுகின்றன. அப்படி கொடுக்கும்போது, அவர்கள் நே, டாவூட், அல்லது முராட் ஆகியவர்களில் எவரையும் கலந்து கொள்ளாமலேயே

செய்கிறார்கள். நெப்போலியனைக் கலந்து கொள்ளுவது என்ற பேச்சுக்கே இடமில்லை. தங்களுக்குக் கிடைத்த உத்தரவுகளை நிறைவேற்றவில்லையே என்பதனால் ஏற்படக்கூடிய கஷ்டங்களைக் கண்டோ, அல்லது தங்களுடைய சொந்த விருப்பப் படி காரியங்களை செய்வதற்கோ அவர்கள் பயப்படுவதில்லை. ஏனென்றால், மனிதனுக்கு எது அருமையிலும் அருமையாக இருக்கிறதோ, அது அந்த போர்க்களத்தில் ஆபத்தில் நிற்கிறது. அதாவது தன்னுடைய சொந்த உயிர், சில சமயங்களில், பின்னால் ஓடிப் போவதினால் பந்தோபஸ்தாய் இருக்க நேரிடலாம். ஆகவே, அந்தப் போர்க் களத்தில் நெருக்கடியான நிலைமை இருக்கும் போது, அந்தந்த வினாடியில் அவர்களுக்குத் தோன்றுகிறபடி நடந்து கொள்ளுகிறார்கள். உண்மையில் முன்னால் போவது, பின்னால் போவது என்ற இந்த நடவடிக்கைகள் எல்லாம், துருப்புகளின் நிலைமையை அபிவிருத்தி அடையும்படியோ, அல்லது மாறும்படியோ செய்வதில்லை. அவர்கள் வேகமாகப் பாய்ச்சலில் சென்று, ஒருவர் மீது ஒருவர் பாய்வதினால், பிரமாத தீங்குகள் எதுவும் ஏற்படுவதில்லை. ஆனால், அந்த யுத்த களத்தில் உழன்று கொண்டிருக்கிற இந்த மனிதர்களுக்கு, பறந்து வரும் பீரங்கிக் குண்டுகளோ, அல்லது துப்பாக்கி குண்டுகளோதான், அங்கவீனத்தையும் மரணத்தையும் கொடுக்கின்றன. பீரங்கிக் குண்டுகளும் துப்பாக்கி குண்டுகளும் பறந்து கொண்டிருக்கும் அந்த இடத்தை விட்டு அவர்கள் போன பின்பு, அவர்களை மீண்டும் அணிவரிசையாக அவர்களுடைய மேல் அதிகாரிகள் அமைக்கிறார்கள். அந்த மேல் அதிகாரிகள், யுத்த களத்திற்குப் பின்பாகவே இருப்பார்கள். அம்மாதிரி அணி வரிசை அமைத்து கட்டுபாட்டிற்குக் கொண்டு வந்து பின்பு, அந்த கட்டுப்பாட்டின் வேகத்தினால், அவர்களை மீண்டும் குண்டுகள் பொழிந்து கொண்டிருக்கும் யுத்த களத்திற்கு அனுப்புகிறார்கள். அங்கே மரண பயத்தின் வேகத்தினால் அவர்கள் அந்த கட்டுப்பாட்டை இழந்து, அவர்களுக்கு மனதில் தோன்றிய படி மீண்டும் ஓடிகிறார்கள்.

## 10

## 34

நெப்போலியனுடைய ஜெனரல்களான டாவூட் நே, முராட் ஆகியவர்கள் யுத்த களத்தில் 'நெருப்பு மழைக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தார்கள். சில சமயங்களில், அந்த நெருப்பு மழையில் அவர்கள் பிரவேசிக்கவும் நேரிட்டது.

அவர்கள் ஒழுங்கான முறையிலுள்ள ஏராளமான துருப்புகளை, 'திரும்பத் திரும்ப அந்த நெருப்பு மழையில் நுழையச் செய்தார்கள். ஆனால், அவர்களுடைய முந்தைய போர்களில் நேரிட்டதற்கு நேர் விரோதமாக, இந்த பெருங்கூட்டமான, ஒழுங்கான துருப்புகள், வரிசை குலைந்து, பீதியுற்று பின்வாங்கிக் கொண்டிருந்தார்கள். ஆனால் எதிரிகள் ஓடுவதாக அவர்கள் கேள்விப்படுவதில்லை. பின்வாங்கிய வரிசை கலைந்த துருப்புகளை, மீண்டும் அணிவரிசை அமைத்து அவர்களுடைய ஜெனரல்கள் தயார் செய்தார்கள். ஆனால், அவர்களுடைய எண்ணிக்கை தொடர்ச்சியாகக் குறைந்து கொண்டே வந்தது. தமக்கு உதவியாக மேலும் படைகள் வேண்டுமென்று நடுப்பகலில் நெப்போலியனுக்கு முராட் தம்முடைய உதவியாளரை அனுப்பினார்.

குன்றின் அடிவாரத்தில் மதுக் கலவையை உறிஞ்சிக்கொண்டு, நெப்போலியன் அமர்ந்து இருந்தார். மற்றொரு டிவிஷன் படையை மாட்சிமை தங்கியவர் கொடுப்பாரானால், அந்த ருஷ்யர்களைப் படு தோல்வி அடையும்படி செய்து விடலாம் என்ற நம்பிக்கையோடு, அந்த உதவியாளர் பாய்ச்சலில் வந்தார்.

'உதவிப் படைகளா?' என்று நெப்போலியன், அந்த உதவியாளரைப் பார்த்து, கடுமையான ஆச்சரியம் கொண்ட தொனியில் கேட்டார். அந்த உதவியாளர் ஒரு வாலிபர். முராட்டைப் போல, நீளமான சுருண்ட தலைமுடி கொண்டவர். நெப்போலியன் கேட்ட கேள்வி, அவருக்கே அந்த வார்த்தைகள் புரியவில்லை என்பது போல இருந்தது.

'உதவிப் படைகளா? நமது ராணுவத்தில் பாதிப் பேர்கள் அங்கே இருக்கிறார்கள். ஒரு பலவீனமான, அரண்கள் அமைக்கப்படாத ருஷ்யர்களின் வியூகத்தின் ஒரு பாகத்தைத் தாக்குவதற்கு, இன்னும் எதற்காக உதவிப் படைகள் கேட்கிறார்கள்?' என்று நெப்போலியன் நமக்குத் தாமே நினைத்துக்கொண்டார்.

'நேப்பிள்ஸ் மன்னரிடம் நீர் போய் சொல்லும். இன்னும் நடுப்பகல் ஆகவில்லை. என்னுடைய சதுரங்கப் பலகையை இன்னும் 'என்னால் தெளிவாய்ப் பார்க்க முடியவில்லை. போம்...' என்று அவர் சொன்னார்.

நீளமான தலைமுடியைக் கொண்ட அந்த அழகான வாலிப உதவியாளர், ஆழ்ந்த பெருச்சு விட்டு, தம்முடைய தொப்பியிலிருந்து தம்முடைய கையை எடுக்காமலேயே, எந்த இடத்தில் மக்கள் படுகொலை செய்யப் படுகிறார்களோ, அந்த இடத்திற்கு திரும்பிப் போனார்.

காலெயின்கோர்ட் என்பவரையும், பெர்த்தியர் என்பவரையும் அவர் அழைத்திருந்தபடியால், அங்கிருந்து எழுந்து, போர் சம்பந்தமற்ற விஷயங்களைப்பற்றிப் பேச ஆரம்பித்தார்.

அந்த உரையாடலில் நெப்போலியனுக்கு சுவாரஸ்யம் ஏற்பட ஆரம்பித்தது. அந்த சமயத்தில், அந்தக் குன்றை நோக்கி ஒரு ஜெனரல் தமது பரிவாரத்தோடு, வியர்த்துக்கொண்டிருந்த ஒரு குதிரை மீது வந்து கொண்டிருந்தார். பெர்த்தியரின் கண்கள், அவரைப் பார்ப்பதற்காகத் திரும்பின. அவர்தான் பெல்லியார்ட். அவர் குதிரையிலிருந்து இறங்கி, வேகமான நடையில் சக்கரவர்த்தியிடம் சென்றார். உதவித் துருப்புகளை அனுப்ப வேண்டிய அவசியத்தைப் பற்றி தைரியமாக பலத்த குரலில் அவர் பேச ஆரம்பித்தார். மற்றொரு டிவிஷன் துருப்புகளை சக்கரவர்த்தி கொடுப்பாரானால், ருஷ்யர்கள் தொலைந்து போவார்கள் என்பதை, அவர் பிரமாணமாகச் சொன்னார். (எல்லா விதமான படைகளையும் கொண்ட ராணுவத்தின் ஒரு பகுதிக்கு டிவிஷன் என்று பெயர்.)

நெப்போலியன் தமது தோள்களைக் குலுக்கினார். பதில் எதுவும் சொல்லாமல், மேலும் கீழும் நடந்துகொண்டே இருந்தார். தம்மைச் சுற்றியிருந்த பரிவாரத்திலுள்ள ஜெனரல்களைப் பார்த்து, ஆவலோடும், பலத்த குரலிலும் பெல்லியார்ட் பேச ஆரம்பித்தார்.

'நீர் ரொம்ப நெருப்புப் பொறியாக இருக்கிறீரே, பெல்லியார்ட்!' என்று, அவர் உலாவிக்கொண்டே அந்த ஜெனரலிடம் வந்த போது, நெப்போலியன் கூறினார். 'போர்க் களத்தின் வேகம் அதிகமாயிருக்கும்போது, ஒரு தவறு செய்வது சுலபம். நீர் போய் மீண்டும் பார்த்துவிட்டு, திரும்பவும் என்னிடம் வாரும்.'

பெல்லியார்ட் அங்கே பார்வையிலிருந்து மறைவதற்குள்ளாக அந்தப் போர்க் களத்தின் மற்றொரு பக்கத்திலிருந்து, ஒரு தூதர் பாய்ச்சலில் வந்து சேர்ந்தார்.

'சரி, அப்புறம் உனக்கு என்ன வேண்டும்?' என்று, தொடர்ச்சியாகத் தொந்தரவு செய்யப்பட்ட ஒரு மனிதருக்கு ஏற்படக்கூடிய எரிச்சலோடு, நெப்போலியன் கேட்டார்.

'மாட்சிமை தங்கியவரே, இளவரசர்...' என்று அந்த உதவியாளர் ஆரம்பித்தார்.

'உதவிப் படை வேண்டுமென்று கேட்கிறாராக்கும்?' என்று நெப்போலியன் கோபமான பார்வையோடு கேட்டார்.

அந்த உதவியாளர் அதை உறுதி செய்பவரைப் போல, தமது தலையைத் தாழ்த்தினார். மேலும் அவர் பேச ஆரம்பித்தார். ஆனால்,

அவரிடமிருந்து சக்கரவர்த்தி திரும்பி இரண்டு அடிகள் எடுத்து வைத்ததும், அவர் நின்று மீண்டும் திரும்பி வந்தார். பின்னால் 'பெர்த்தியரை அழைத்தார்.

'நாம் உதவிப் படைகள் கொடுக்க வேண்டும்' என்று நெப்போலியன் சொல்லி, தமது கைகளை சிறிது விரித்தார்.

'அங்கே யாரை அனுப்பலாமென்று நீர் நினைக்கிறீர்?' என்று பெர்த்தியரை அவர் கேட்டார். (பெர்த்தியரைப் பற்றி அவர் பின்னால் பேசும்போது, 'அந்த வார்த்தை நான் ஒரு கழுகாகும்படி செய்தேன்' என்று நெப்போலியன் சொல்லுவதுண்டு.

'கிளாப்பாரேட் டிவிஷனை அனுப்பலாம், மாட்சிமை தங்கியவரே' என்று பெர்த்தியர் பதில் கூறினார். அந்த ராணுவத்திலுள்ள எல்லா டிவிஷன்களையும், பட்டாளங்களையும், படைப் பிரிவுகளையும் தள பாடமாக அவர் அறிவார்.

நெப்போலியன் அதற்கு சம்மதிப்பது போலத் தலையை ஆட்டினார்.

ஒரு உதவியாளர் கிளாப்பாரேட் டிவிஷனுக்கு பாய்ச்சலில் சென்றார். சில நிமிஷங்களுக்கு எல்லாம், அந்த குன்றுக்குப் பின்னால் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த வாலிப காப்பாளர் படை, முன்னால் நகர ஆரம்பித்தது. அத்திசையை நெப்போலியன் மௌனமாக நோக்கினார்.

'இல்லை' என்று அவர் திடீரென்று பெர்த்தியரிடம் கூறினார். கிளாப்பாரெட் படைகளை நான் அனுப்ப முடியாது. பிரியன்ட் டிவிஷனை அனுப்பும்.

கிளாப்பாரேட் டிவிஷனுக்குப் பதிலாக, பிரியன்ட் டிவிஷனை அனுப்புவதினால், எவ்வித அனுகூலமும் கிடையாது. கிளாப்பாரேட் டிவிஷனை நிறுத்தி, பிரியன்ட் டிவிஷனை அனுப்பும்படி செய்வதினால், வீண் தாமதேமே ஏற்படும் என்றாலும், அவருடைய உத்தரவுப்படி செய்தார்கள். நெப்போலியன் தமது ராணுவத்தைப் பொறுத்த வரை, அதற்கு ஒரு வைத்தியரைப் போல நடந்து கொள்ளுவதின்மூலம், அதற்கு இடையூறே செய்கிறார் என்பதைக் கவனிக்கவில்லை. அம்மாதிரி வைத்தியர் செய்யும் காரியங்களை அவர் நன்றாகக் கண்டிருக்கிறார்.

பிரியன்ட் டிவிஷன் மற்றப் படைகளைப் போலவே, அந்தப் போர்க் களத்திலிருந்த புகையில் மறைந்தது. எல்லா திசைகளிலிருந்தும், எல்லாரும் ஒன்றுகூடிப் பேசி வைத்திருந்ததைப் போல, உதவியாளர்கள் தொடர்ச்சியாகப்

பாய்ச்சலில் வந்து, எல்லாரும் ஒரே விஷயத்தையே கேட்டுக் கொண்டிருந்தார்கள். எல்லாரும் உதவிப் படை வேண்டுமென்று கேட்டார்கள். ருஷ்யர்கள் தங்களுடைய வியூகத்தையே பலமாய் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும், இன்னமும் நரகத்தைப் போல நெருப்பு மழை பொழிந்து கொண்டிருக்கிறார்கள் என்றும், அந்த மழையில் பிரஞ்சு துருப்புகள் கரைந்து போகின்றன என்றும், அவர்கள் ஒரே மாதிரியாக அறிக்கை செய்தார்கள்.

நெப்போலியன் ஒரு ஆசனத்தில் அமர்ந்து, சிந்தனையில் மூழ்கினார்.

திருவாளர் டி பாசெட், பிரயாணத்தில் மிகுந்த பிரியம் கொண்ட அந்த திருவாளர், அன்று காலையிலிருந்து எதுவும் சாப்பிட வில்லை. அவர் சக்கரவர்த்தியிடம் நெருங்கி, மரியாதையோடு மாட்சிமை தங்கியவர் உணவருந்தலாமா என்று கேட்டார்.

'ஒரு வெற்றிக்காக மாட்சிமை தங்கியவருக்கு வாழ்த்து கூறலாமென்று நான் நினைக்கிறேன்' என்று அவர் சொன்னார்.

இல்லை என்பது போல, நெப்போலியன் மௌனமாகத் தமது தலையைக் குலுக்கினார். அப்படி தலையைக் குலுக்கியது வெற்றியைப் பற்றியதுதானே ஒழிய, உணவைப் பற்றியது அல்ல என்று திருவாளர் டி பாசெட் நினைத்துக் கொண்டார். ஆகவே, மரியாதையோடு, தமாஷாக, உணவு கிடைக்கும்போது அதை வேண்டுமென்று மறுப்பதற்குக் காரணமில்லையே என்று கேட்டார்.

'நீர் போய்விடும்...' என்று நெப்போலியன் திடீரென்று கடுகடுப்பாகக் கூச்சலிட்டு, மற்றொரு பக்கமாகத் திரும்பிக் கொண்டார். வருத்தமும், பச்சாத்தாபமும், மகிழ்ச்சியும் கொண்ட ஒரு இன்பமான புன்னகை, திருவாளர் டி பாசெட்டின் முகத்தில் தோன்றியது. அங்கிருந்து அவர் வழுக்கிய நடையில், மற்ற ஜெனரல்களிடம் போய்ச் சேர்ந்தார்.

எப்பொழுதும் வெற்றியே பெற்று வந்த ஒரு சூதாட்டக்காரன், பணத்தைக் கண்டபடி வாரி இறைத்தாலும், முடிவில் வெற்றியே பெற்று வந்த ஒரு சூதாட்டக்காரன், திடீரென்று தன்னுடைய விளையாட்டைப் பற்றி நினைத்தபோது, அவன் எவ்வளவுதான் சிந்தித்தாலும், அவனுக்கு நஷ்டமே ஏற்படும் என்பதை உணரும்போது, மனதில் ஒரு பெரிய பளு தோன்றுகிறது. அதே மாதிரியான உணர்ச்சியை நெப்போலியன் அனுபவித்தார்.

அவருடைய துருப்புகள் பழைய துருப்புகளே. அவருடைய ஜெனரல்களும் அப்படியே. அவர் செய்த ஆயத்தங்களோ,

முன்னால் செய்ததைப் போலவே இருந்தன. வியூக அமைப்புகளும், முன்போலவே இருந்தன. துருப்புகளுக்கு அவர்கொடுத்து வரும் பிரகடனங்களும், சுருக்கமாகவும் வேகமாகவும் முன் போலவே இருந்தன. தம்மைப் பொறுத்தவரையிலும், தாமும் அதே பழைய ஆசாமி தான். அவர் முன்பு இருந்ததை விட, இப்பொழுது அதிக அனுபவமும் சாமர்த்தியமும் பெற்றிருக்கிறார். எதிரிகளைப் பொறுத்தவரையில், ஆஸ்டர்லிட்ஜிலும் பிரீட்லாண்டிலும் எம்மாதிரி துருப்புகள் இருந்தார்களோ அதேமாதிரிதான் இப்பொழுதும் இருக்கிறார்கள். இருந்தாலும், மிகுந்த பயங்கரமாய்த் தாக்கக்கூடிய தமது பலமானது, இப்பொழுது ஒன்றும் செய்ய முடியாத நிலைமையில் வந்து சேர்ந்து விட்டது.

பழைய யுத்த முறைகள் எல்லாம் வெற்றிகளையே கொண்டுவந்தன. அவையாவன: ஒரே ஒரு இடத்தில் பீரங்கிப் படைகளைக் குவித்து வைப்பது; ரிசர்வ் துருப்புகளைக்கொண்டு எதிரியின் அணிவகுப்பைத் தாக்குவது; உறுதியான வீரர்களைக் கொண்ட குதிரைப் படையினால் எதிரிகளைத் தாக்குவது. இந்த முறைகளையெல்லாம் இந்தப் போரில் ஏற்கெனவே கையாண்டாய்விட்டது. எனினும், இன்னமும் வெற்றியைக் காணவில்லை. அது மட்டுமல்ல, எல்லா முனைகளிலிருந்தும் ஜெனரல்கள் கொல்லப்பட்டார்கள் என்றும், காயமடைந்தார்கள் என்றும், உதவிப் படைகள் அவசியம் என்றும், ருஷ்யர்களைப் பின்னால் விரட்டியடிக்க முடியவில்லையென்றும், தமது துருப்புகள் சீர்குலைந்து போகிறார்கள் என்றுமே, செய்திகள் வந்து கொண்டிருந்தன.

முன்பெல்லாம் அவர் இரண்டு மூன்று உத்தரவுகளையும், சில வாக்கியங்களையும் சொல்லிய பின்பு, அவருடைய வேலை முடிந்து விடும். பின்னால், யுத்தச் சின்னங்களைக் கைப்பற்றியதாகவும், கூட்டம் கூட்டமாகக் கைதிகளைப் பிடித்திருப்பதாகவும், கட்டுக் கட்டாக எதிரிகளின் கொடிகளையும், பீரங்கிகளையும், தளவாடங்களையும், கைப்பற்றியதாகவும், மார்ஷல்களும், உதவியாளர்களும் சந்தோஷமான முகங்களோடு அவரிடம் அறிவித்து அவரைப் பாராட்டுவதற்காகப் பாய்ச்சலில் வருவார்கள்; சரக்கு வண்டிகளைக் கைப்பற்றுவதற்காக தமது குதிரைப் படைக்கு அனுபதி கொடுக்க வேண்டுமென்று முராட் வந்து கேட்பார். அம்மாதிரிதான் லோடி, மாரங்கா, ஆர்க்காலா, ஜெனா, ஆஸ்டர்லிட்ஜ், வாக்ராம் ஆகிய இடங்களில் நடந்தன.

ஆனால் இப்பொழுது தமது துருப்புகளுக்கு ஏதோ விசித்திரமானது நேர்ந்து கொண்டிருக்கிறது.

அரண்களைக்கெடுத்து விட்டதாக செய்திகள் வந்தாலும், இவையெல்லாம் முன் மாதிரியல்ல. முன்னால் நடந்த போர்களில் நடந்த மாதிரியல்ல என்பதை நெப்போலியன் கண்டார். போர் வித்தையில் மிகுந்த அனுபவமுள்ள தம்மைச் சுற்றி நின்றவர்களும், தம்மைப் போலவே உணர்வதாக அவர் கண்டார். அவர்களுடைய முகங்கள் எல்லாம் சோர்வுற்று இருந்தன. ஒருவரின் பார்வையை மற்றொருவர் தவிர்த்தார். ஆனால், என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதன் அர்த்தத்தை டி பாசெட் ஒருவர்தான், அறிந்து கொள்ள முடியாமல் இருந்தார்.

நெப்போலியன் தமக்குள்ள நீண்ட யுத்த அனுபவத்தைக் கொண்டு, இதன் அர்த்தத்தை நன்றாய்ப் புரிந்து கொண்டார். அதாவது, தாக்குதலை ஆரம்பித்த கட்சி எட்டு மணி நேரம் போர் செய்வதென்றால்,எல்லா முயற்சிகளையும் செய்த பின்பும், போர் நடந்து கொண்டிருக்கிறதென்றால், அதன் அர்த்தம் என்ன என்பதை நெப்போலியன் நன்றாய் அறிவார். அந்தப் போர், ஒரு தோல்வி அடைந்த போர் என்பதை அவர் அறிவார். இரு பக்கமும் சமமாக இருந்து, ஒரு பலவீனமான முனையில் யுத்தம் தொங்கிக் கொண்டிருக்கிறபடியால், திடீரென்று ஏற்படும் ஒருசிறு சம்பவம், தம்மையும் தம்முடைய ராணுவத்தையும் அழித்து விடக்கூடும் என்பதை அவர் அறிவார்.

இந்த விசித்திரமான ருஷ்ய படையெடுப்பைப் பற்றி பூராவாக அவருடைய மனதில் சிந்தனை செய்தார். இந்தப் போர்களில் ஒன்றில் கூட அவர் வெற்றி பெறவில்லை. ஒரு கொடியைக் கூட, ஒரு பீரங்கியைக் கூட, ஒரு படைப் பிரிவைக் கூட, சென்ற இரண்டு மாதங்களாகக் கைப்பற்ற முடியவில்லை. தம்மை சூழ்ந்து நின்றவர்களின் முகங்களை அவர் பார்த்தபோது, அவர்கள் மறைத்து வைத்துக் கொண்டிருந்த சோர்வு அவருக்குப் புலப்பட்டது. அப்படியிருந்தும், இன்னமும் ருஷ்யர்கள் தங்கள் இடத்தை விட்டுக்கொடுக்கவில்லை என்பதை அவர் விடாமல் கேட்டுக்கொண்டே வந்தபடியால், திடீரென்று ஒரு கெட்ட சொப்பனத்தைப் போன்ற, ஒரு பயங்கரமான உணர்ச்சி, அவரைப் பற்றிக் கொண்டது. தம்மை அழிக்கக்கூடிய துரதிருஷ்டான சம்பவங்கள் எல்லாம், அவருடைய மனதில் தோன்றின. தம்முடைய வியூகத்தின் இடது பக்கத்தை ருஷ்யர்கள் தாக்கி, மத்திய பாகத்தில் அவர்கள் நுழைந்து, தம்மையும் ஒரு பீரங்கிக் குண்டால்

கொன்றுவிடக் கூடும் என்று நினைத்தார். இவையெல்லாம் சாத்தியமானவைகளே. முந்தைய போர்களில் எல்லாம், வெற்றியின் பின்னால் ஏற்படக் கூடிய சந்தர்ப்பங்களைப் பற்றியே அவர் சிந்தித்து வந்தார். இப்பொழுது தோல்விக்குப் பின்னால் நேரிடக்கூடிய கணக்கற்ற சந்தர்ப்பங்கள் அவருக்குத் தோன்றின. அவையெல்லாம் நடக்குமென்று அவர் எதிர்பார்த்தார். அது ஒரு சொப்பனத்தைப் போல இருந்தது. அதாவது, ஒரு குண்டன் ஒருவன் தன்னைத் தாக்க வருவதுபோலவும் தான் அந்த குண்டனை பலமான அடி கொடுத்து ஒழித்துவிட முடியுமென்று தன் கையை உயர்த்த நினைக்கும் சமயத்தில், அவனுடைய கை உணர்விழந்து துணியைப் போலத் தொங்க ஆரம்பிக்கிறது. உடனே தன்னைத் தாக்குவதற்கு வருகிறவன், தன்னுடைய அசக்தியான நிலைமையில், தன்னைக் கொன்று விடுவானோ என்ற பீதி தோன்றுகிறது. அம்மாதிரியான கனவை நெப்போலியன் கண்டு வந்தார்.

பிரஞ்சு துருப்புகளின் இடது பக்கவாட்டை ருஷ்யர்கள் தாக்குகிறார்கள் என்று செய்தி வந்தவுடன், இம்மாதிரியான பீதி நெப்போலியனுக்குத் தோன்றியது. அந்தக் குன்றின் கீழே ஒரு ஆசனத்தில் அவர் அமர்ந்து, தமது முழங்கைகளை முழங்கால்களில் வைத்து, தமது தலையைத் தொங்கவிட்டு மௌனமாக இருந்தார். அச்சமயம் பெர்த்தியர் அவரிடம் நெருங்கினார். போர் நிலைமையை அறிவதற்காக, போர் முனையை சுற்றிப் பார்த்துவிட்டு வரலாமென்று அவர் கூறினார்.

'என்ன? நீர் என்ன சொல்லுகிறீர்? ஆம், என்னுடைய குதிரையைக் கொண்டுவரும்படி சொல்லும்' என்று நெப்போலியன் கூறினார். அவர் குறிரை மீது ஏறி செமியோனாவ்ஸ்கை நோக்கிப் போனார்.

அந்த வெட்ட வெளி பூராவாக மருந்துப் புகை சூழ்ந்து இருந்தது. அதன் வழியாக நெப்போலியன் சவாரி போனார். போகிற வழியில் குதிரைகளும், மனிதர்களும், இரத்த வெள்ளத்தில் தனியாகவோ, குவியலாகவோ, கிடப்பதைக் கண்டார். இம்மாதிரியான ஒரு சிறிய இடத்தில், இவ்வளவு அதிகமான பேர்கள் படுகொலை செய்யப்பட்ட இம்மாதிரியான பயங்கரங்களை, நெப்போலியனோ, அல்லது அவருடைய ஜெனரல்களில் எவருமோ, அதற்கு முன்பாக ஒருபொழுதும் பார்த்ததில்லை. பீரங்கிகளின் முழக்கங்கள் பத்து மணி நேரமாக ஓயாமல் முழங்கிக் கொண்டிருக்கின்றன. அந்த சப்தம் காதுகளுக்கு சலிப்பாய் இருந்தது. அந்தக் காட்சிக்கு அந்த சப்தங்கள் ஒரு விசித்திரமான

முக்கியத்துவத்தைக் கொடுத்தன. ஆடாமல் அசையாமல் ஒரு சம்பவத்தை சித்தரித்துக் காட்டும் ஒரு காட்சிக்கு, சங்கீதம் எம்மாதிரி முக்கியத்துவம் கொடுக்குமோ, அதே மாதிரி அந்த பீரங்கிகளின் முழக்கமும் இருந்தது. செமியோனாவ்ஸ்கில் உள்ள உயரமான இடத்திற்கு நெப்போலியன் போனார். அங்கே அவர் புகைக்கு இடையே, தமக்குப் பழக்கமில்லாத, ஒரு வர்ணத்தில் யூனிபாரங்கள் அணிந்த வீரர்களின் அணி வரிசைகளை அவர் கண்டார். அவர்கள்தான் ருஷ்யர்கள்.

செமியோனாவ்ஸ்க் கிராமத்திற்கும், அங்கிருந்த குன்றுக்கும் பின்னால், ருஷ்ய வீரர்கள் நெருங்கி நின்று கொண்டிருந்தார்கள். அவர்களுடைய பீரங்கிகள் அந்த வரிசை பூராவாக நின்று, இடை விடாமல் முழங்கிக் கொண்டிருந்தன. அவற்றிலிருந்து புகை மேகங்கள் கிளம்பிக் கொண்டிருந்தன. அது ஒரு யுத்தமாகக் காணப்படவில்லை. படுகொலைக் களமாகவே காணப்பட்டது. ருஷ்யர்களுக்கோ, அல்லது பிரஞ்சுக்காரர்களுக்கோ, அந்தப் படுகொலைகளினால் எவ்வித நன்மையும் ஏற்படுமென்று தோன்றவில்லை. நெப்போலியன் தமது குதிரையை நிறுத்தி, மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்தார். அவர் தம் உணர்வு பெறும்படி பெர்த்தியர் தூண்டினார். தமக்கு முன்பாகவும், தம்மைச் சுற்றியும் தாம் உத்தரவு கொடுத்து நடப்பதாகவும் தம்மைப் பொறுத்துத்தான் அவை இருக்கின்றன என்றும் சொல்லப்படும் அந்த சம்பவங்களை, அவரால் நிறுத்த முடியவில்லை. இந்தப் போரில் இன்னமும் வெற்றி கிடைக்காதபடியால், இந்தப் படுகொலைகள் அவசியமில்லாதவைகளாகவும், பயங்கரமானவை யாகவும், அவருக்கு முதல் தடவையாகத் தோன்ற ஆரம்பித்தன.

ஒரு ஜெனரல் நெப்போலியனிடம் வந்தார். பழைய காப்பாளர், படையை, யுத்த முனைக்கு அனுப்பலாமென்று யோசனை கூறினார். நெப்போலியனுக்குப் பக்கத்தில் நின்று பெர்த்தியரும் நேயும் ஒருவரையொருவர் பார்த்து, அந்த ஜெனரலின் புத்தியற்ற யோசனையைக் கண்டு, இகழ்ச்சியோடு இளநகை காட்டினார்கள்.

நெப்போலியன் தமது தலையைத் தாழ்த்தி, வெகு நேரம் வரையில் மௌனமாக இருந்தார்.

'பிரான்ஸிலிருந்து 800 லீக்குகள் (ஒரு லீக்கு என்பது இரண்டரை மைல்) தூரத்தில் இருந்துகொண்டு, என்னுடைய பாதுகாப்பாளர் படைகளை நான் நாசமாக்கும்படி விட முடியாது' என்று அவர் சொல்லிவிட்டு, தமது குதிரையைத் திருப்பி ஷெவார்டினாவுக்கு திரும்பிப் போனார்.



கம்பளம் விரிக்கப்பட்டிருந்த பெஞ்சு மீது அன்று காலை பீயர் பார்த்த மாதிரியே, குட்டுஜோவ் அமர்ந்திருந்தார். அவருடைய நரைத்த தலை தொங்கிக் கொண்டிருந்தது. அவருடைய கனத்த உடம்பு தளர்ந்து இருந்தது. எந்த விதமான உத்தரவுகளையும் அவர் கொடுக்கவில்லை. ஆனால் மற்றவர்கள் அவரிடம் சொல்லிய யோசனைகளில் சிலவற்றை ஆதரித்தும், சிலவற்றை நிராகரித்தும் வந்தார்.

'ஆம், ஆம், அப்படியே செய்யுங்கள்' என்று பற்பல யோசனைகளுக்கு அவர் பதிலளித்தார். 'ஆம், ஆம், அன்புள்ள சிறுவரே, நீர்போம். அங்கே போய் அதைப் பாரும்' என்று தம்மை சூழ்ந்திருந்தவர்களில் ஒருவரைப் பார்த்து அவர் சொல்லுவார்; அல்லது 'இல்லை, வேண்டாம், நாம் பொறுத்து இருப்பது நல்லது' என்று சொல்லுவார். தம்மிடம் வந்து சொல்லும் அறிக்கைகளை அவர் கவனமாய் கேட்பார். தம்முடைய அபிப்பிராயம் வேண்டும் என்று கேட்கும் தமது கீழ் அதிகாரிகளுக்கு அம்மாதிரியே வழி காட்டி வந்தார். ஆனால், அறிக்கைகளை அவர் கவனித்துக் கேட்கும்போது, அவரிடம் சொல்லப்படும் வார்த்தைகளுக்கு முக்கியத்துவம் இல்லாததுபோல காணப்படுவார். வேறு ஏதோ ஒன்றில்தான் முக்கியத்துவம் இருப்பது போல-முகத்தில் காணப்படும் தோற்றம், பேச்சில் காணப்படும் தொனி ஆகியவற்றில்-அவர் காணப்படுவார். நூறாயிரக்கணக்கானவர்கள் மரணத்தோடு போராடிக் கொண்டிருக்கும்போது, அவர்களுக்கு ஒரு மனிதன் வழி காட்டுவது அசாத்தியம் என்பதை, அவருடைய நீண்ட கால ராணுவ அனுபவத்திலிருந்து அவர் அறிந்திருந்தார்; அவருடைய வயதினால் ஏற்பட்ட ஞானத்திலிருந்து அதைப் புரிந்து கொண்டிருந்தார். ஒரு யுத்தத்தின் முடிவு எப்படி இருக்கும் என்பது, சேனாதிபதியின் உத்தரவுகளைப் பொறுத்தோ, பீரங்கிகளின் எண்ணிக்கையைப் பொறுத்தோ, அல்லது எத்தனை பேர்கள் படுகொலை செய்யப்பட்டார்கள் என்பதைப் பொறுத்தோ இல்லை என்பது அவருக்குத் தெரியும். ஆனால், கண்ணால் காண முடியாத சக்தியான ராணுவத்தின் உள்ளக் கிடக்கை என்பதைப் பொறுத்துத்தான் அது இருக்கிறது. ஆகவே, அந்த சக்தியைக் கவனித்து தம்மால் முடிந்தவரையில் அதற்கு வழி காட்டி வந்தார்.

ஒருமனப்பட்டு அமைதியான கவனத்தோடு அவர் இருந்து வருகிறார் என்பதை குட்டுஜோவின் பொதுவான தோற்றம் காட்டியது. அவருடைய முகத்தில் களைப்புற்ற தோற்றம் காணப்பட்டது. வயதான, தளர்ந்து போன தமது உடம்பினால் ஏற்படக்கூடிய சோர்வை சமாளிப்பது கஷ்டமாக இருப்பதுபோல அவருடைய முகத்தோற்றம் காட்டியது.

பிரஞ்சுக்காரர்கள் பிடித்த அரண்களை மீண்டும் கைப்பற்றிக் கொண்டதாக பதினோரு மணிக்கு அவருக்கு செய்தி வந்தது. இளவரசர் பாக்ரேஷன் காயம் பட்டதாகவும் அவருக்கு செய்தி வந்தது. குட்டுஜோவ் முனங்கிக் கொண்டு, தலையை இப்படியும் அப்படியும் ஆட்டினார்.

'இளவரசர் பீட்டர் ஐவானாவிச் (பாக்ரேஷன்) இடம் சென்று அதைப் பற்றி சரியாக விசாரித்து வாரும்' என்று தமது உதவியாளர்களில் ஒருவரைப் பார்த்துக் கூறினார். தமக்குப் பின்னால் நின்றுகொண்டிருந்த கோமகன் உர்ட்டெம்பர்க்கைப் பார்த்து, அப்புறம் அவர் திரும்பினார்.

'முதலாவது ராணுவத்தின் சேனாதிபத்தியத்தை மேன்மை தங்கிய நீர் தயவு செய்து ஏற்றுக்கொள்ளுவீரா?'

அங்கிருந்து கோமகன் புறப்பட்டுப் போன பின்பு-அவர் இன்னமும் செமியோனாவ்ஸ்கை அடைவதற்கு முன்பாக-அவருடைய உதவியாளர் அவரிடமிருந்து திரும்பி வந்து அதிகத் துருப்புகள் வேண்டுமென்று கோமகன் கேட்பதாகக் குட்டுஜோவிடம் கூறினார்.

குட்டுஜோவ் முகம் சுளித்தார். டாக்டுராவ் என்பவர் முதலாவது ராணுவத்தின் சேனாதிபத்தியத்தை ஏற்றுக் கொள்ளும்படி உத்தரவு அனுப்பினார். அம்மாதிரி ஒரு முக்கியமான சந்தர்ப்பத்தில் அவரைத் தம்மிடமிருந்து இழக்க முடியாது என்றும், உடனே தம்மிடம் திரும்பி வரவேண்டும் என்றும், கோமகனுக்கு ஒரு வேண்டுகோள் அனுப்பினார். முராட்டைக் கைதியாகப் பிடித்து விட்டதாக அவருக்கு ஒரு செய்தி வந்தது. உடனே அங்கிருந்த பரிவார அதிகாரிகள் அவரைப் பாராட்டினார்கள். குட்டுஜோவ் புன்னகை காட்டினார்.

'கொஞ்சம் பொறுங்கள், கனவான்களே, போரில் நாம் வெற்றி பெற்று விட்டோம். ஆகவே, முராட்டை நாம் கைப்பற்றியதில் அசாதாரணமானது எதுவுமில்லை. என்றாலும், நாம் மகிழ்ச்சியைக் கொண்டாடுவதற்கு முன்பாக, கொஞ்சம் பொறுத்திருப்பது நல்லது' என்று அவர் சொன்னார்.

ஆனால் அந்தச் செய்தியை ராணுவத்திற்குத் தெரிவிப்பதற்காக ஒரு உதவியாளரை அவர் அனுப்பி வைத்தார்.

இடது பக்கவாட்டிலிருந்து ஷெர்பினின் என்பவர் பாய்ச்சலில் வந்து சேர்ந்தார். அரண்களையும், செமியோனாவ்ஸ்க் கிராமத்தை பிரஞ்சுக்காரர்கள் கைப்பற்றிக் கொண்டதாக அவர் கூறினார். அதைக் கேட்டதும், யுத்த களத்தின் சப்தங்களிலிருந்தும், ஷெர்பினினுடைய பார்வைகளிலிருந்தும், நிலைமை மோசமாய் இருக்கிறது என்பதை குட்டுஜோவ் யூகித்துக் கொண்டார். உடனே தமது கால்களை நீட்டுவதற்காக எழுந்திருப்பவரைப் போல எழுந்து, ஷெர்பினினுடைய கரத்தைப் பற்றி, ஒரு பக்கமாக அவரை அழைத்துக் கொண்டு போனார்.

'நீர் போம், எனது அன்பான பேர்வழியே' என்று அவா எர்மோலாவைப் பார்த்துச் சொன்னார். 'அங்கே போய் ஏதாவது செய்ய முடியுமா என்பதைப் பாரும்.'

ருஷ்ய வியூகத்தின் மத்திய பாகத்திற்கு சமீபமாக கோர்க்கி என்ற ஊரில் குட்டுஜோவ் இருந்தார். நமது இடது பக்கவாட்டின் மீது நெப்போலியன் நடத்திய பல தாக்குதல்கள் திருப்பி அடிக்கப்பட்டன. மத்திய பாகத்தில் பாராடினோவைக் கடந்து பிரஞ்சுக் காரர்கள் இன்னும் வரவில்லை. அவர்களுடைய இடது பக்கவாட்டில் உவராவின் குதிரைப்படை பிரஞ்சுக்காரர்களை விரட்டி அடித்தது.

மூன்று மணிக்கெல்லாம் பிரஞ்சுக்காரர்களின் தாக்குதல்கள் நின்றுவிட்டன. யுத்த களத்திலிருந்து திரும்பி வந்தவர்களின் முகங்களிலும், தம்மைச் சுற்றி நின்றவர்களின் முகங்களிலும், ஒரு கடுமையான பரபரப்பு காணப்பட்டதை குட்டுஜோவ் கவனித்தார். அன்றைய தினத்தில் ஏற்பட்ட வெற்றியைக் கண்டு அவர் திருப்தி அடைந்தார். அந்த வெற்றி, அவர் எதிர்பார்த்ததற்கு மேலான வெற்றியாகும். ஆனால், அந்த வயோதிகரின் உடல் நலமானது குறைந்து வந்தது. பல தடவைகளில், அவருடைய தலை கீழே விழுவதைப்போலத் தணிவாகத் தொங்கியது. பல தடவைகளில், தூக்கம் வந்து அவரைப் பற்றியது. அவருக்கு டின்னர் கொண்டு வந்தார்கள்.

உதவியாளர் - ஜெனரல் வால்ஜாகன்-அவர்தான் இளவரசர் ஆண்ட்ரூவைக் கடந்து சென்றபோது, மிகவும் பரவலாக யுத்தத்தை நடத்த வேண்டும் என்று சொன்னவர் - டின்னர் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் குட்டுஜோவிடம் வந்தார். பாக்ரேஷனுக்கு அவரைப் பிடிக்காது. இடது பக்கவாட்டில் யுத்த நிலைமை எப்படி

இருக்கிறது என்பதை அறிவிப்பதற்காக, பார்க்ளே டி டாலி என்பவரிடமிருந்து அவர் வந்தார். காயம் அடைந்தவர்கள் ஏராளமாகத் திரும்பி ஓடுவதையும், ராணுவத்தின் பின் பகுதி நிலைகுலைந்திருப்பதையும் கண்டு, மற்ற சந்தர்ப்பங்களையும் சீர்தூக்கிப் பார்த்து, அந்தப் போரில் நாம் தோற்றுவிட்டோம் என்ற முடிவுக்கு அந்த மதி நுட்பமான பார்க்ளே டி டாலி வந்தார். அந்தச் செய்தியை குட்டுஜோவிடம் அறிவிப்பதற்காக தமது அபிமான அதிகாரியை அனுப்பி வைத்தார்.

அச்சமயம் மிகுந்த கஷ்டத்தோடு ஒரு துண்டு வறுத்த கோழிக்குஞ்சு இறைச்சியை குட்டுஜோவ் சவைத்துக் கொண்டிருந்தார். நெரித்த இமைகளுக்குள் பிரகாசமாக ஒளிர் விட்டுக்கொண்டிருந்த தமது கண்களால் வால்ஜாகனை நோக்கினார்.

உதாசீனத்தோடு தமது கால்களை நிமிர்த்திக்கொண்டு வால்ஜாகன் குட்டுஜோவை நெருங்கினார். அவருடைய உதடுகளில் பாதி இகழ்ச்சிப் புன்னகை தவழ்ந்து கொண்டிருந்தது. அவருடைய கை, அவருடைய தொப்பியைத் தொடக்கூட இல்லை.

இந்த கலங்காத மேன்மை தங்கியவரிடம் அவர் உதாசீனத்தோற்றத்தோடு நடந்து கொண்டார். தாம் ஒரு உயர்தரமான பயிற்சி பெற்ற ராணுவ தந்திரி என்றும், இந்த வயதான, உபயோகமற்றவரை ஒரு தெய்வமாகக் கொண்டாடும்படி ருஷ்யர்களுக்கு விட்டுவிட்டார் என்றும் அவர் காட்ட விரும்புவதைப் போல அவருடைய உதாசீனம் இருந்தது. என்றாலும், யாரிடம் தாம் பேசுகிறார் என்பதை அவர் அறிந்திருந்ததாகவும், அது இருந்தது. அவருடைய கோஷ்டியைச் சேர்ந்த ஜெர்மனியர்கள் எல்லாரும், குட்டுஜோவை ஒரு வயோதிகக் கனவான் என்றே அழைத்து வந்தார்கள். குட்டுஜோவைப் பார்த்ததும், 'இந்த வயோதிக கனவான் மிகுந்த சௌக்கியமாக இருந்து கொண்டிருக்கிறார்' என்று வால்ஜாகன் நினைத்தார். குட்டுஜோவுக்கு முன்னால் இருந்த உணவுத் தட்டுகளை கடுமையாகப் பார்த்துக்கொண்டே அந்த வயோதிகக் கனவானிடம் அறிக்கையிட ஆரம்பித்தார். இடது பக்கவாட்டில் தாம் பார்த்து அறிந்து கொண்டவைகளை பார்க்ளேயின் உத்தரவுப்படி வந்து சொல்லுவதாகக் கூறினார்.

'நம்முடைய வியூகத்தின் முக்கியமான முனைகள் எல்லாம் எதிரிகளின் கைகளில் அகப்பட்டு விட்டன. நம்மிடம் போதுமான துருப்புகள் இல்லாதபடியால், அவர்களைக் கிளப்ப

முடியவில்லை. நமது மனிதர்கள் ஓடிப் போகிறார்கள். அவர்களை நிறுத்துவது அசாத்தியமாய் இருக்கிறது' என்று அவர் அறிக்கை யிட்டார்.

குட்டுஜோவ் தாம் சவைப்பதை நிறுத்தி, ஒரு ஆச்சரியமான குத்திட்ட பார்வையால் வார்ஜாகனை நோக்கினார். தம்மிடம் அவர் சொல்லுவதை அறிந்துகொள்ள முடியவில்லை என்பது போல அவருடைய பார்வை இருந்தது. அந்த 'வயோதிகக் கனவா'னின் பரபரப்பைக் கண்டதும், ஒரு புன்னகையோடு வால்ஜாகன் பேசினார்.

'நான் பார்த்ததைக் 'கலங்காத மேன்மை தங்கியவ'ரிடம் சொல்லாமல் மறைத்து வைப்பது சரியானது என்று நான் நினைக்கவில்லை. துருப்புகள் முழுவதும் நிலைகுலைந்து இருக்கிறார்கள்...'

'நீர் பார்த்தீரா? நீர் பார்த்தீரா...' என்று குட்டுஜோவ் முகம் சுளித்துக் கூச்சலிட்டார். பின்னால் வேகமாய் எழுந்து வால்ஜாகனிடம் போனார்.

'எவ்வளவு... உமக்கு எவ்வளவு துணிகரம்...' என்று அவர் கூச்சலிட்டு, தொண்டை கட்டி, தமது நடுங்கிய கரங்களை ஒரு பயமுறுத்தலோடு ஆட்டினார்: 'அதை என்னிடம் சொல்லுவதற்கு உமக்கு எவ்வளவு துணிச்சல்? அதைப் பற்றி உமக்கு ஒன்றுமே தெரியாது. இந்தத் தகவல் சரியானதல்ல என்பதை நீர் போய் ஜெனரல் பார்க்ளேயிடம் சொல்லும். யுத்தத்தின் உண்மையான போக்கு எப்படி இருக்கிறது என்பது, அவரை விட சேனாதிபதியான எனக்கு நன்றாகத் தெரியும் என்பதையும் அவரிடம் போய் சொல்லும்.'

வால்ஜாகன் அதற்கு பதில் சொல்ல ஆரம்பித்தார். ஆனால், குட்டுஜோவ் அவரை இடைமறித்தார்.

'இடது பக்கத்தில் எதிரியை விரட்டியடித்துவிட்டோம். வலது பக்கவாட்டில் எதிரியைத் தோற்கடித்துவிட்டோமா? நீர் தவறாகப் பார்த்திருப்பீரானால், ஐயா, உமக்குத் தெரியாததை நீர் சொல்லிக்கொண்டிருக்க வேண்டாம். ஜெனரல் பார்க்ளேயிடம் திரும்பிப்போம். எதிரியை நாளை தாக்க வேண்டும் என்று உறுதியாக நான் உத்தேசித்து இருக்கிறேன் என்பதை அவரிடம் தெரிவிப்பீராக' என்று குட்டுஜோவ் அவரிடம் கடுமையாகக் கூறினார்.

எல்லாம் மௌனமாய் இருந்தது. அந்த வயோதிக ஜெனரல் பலமாக மூச்சு விடுவது ஒன்றுதான் அங்கே கேட்டு வந்தது.

'எதிரிகளை ஒவ்வொரு இடத்திலும் நாம் விரட்டியடித்து விட்டோம் அதற்காகக் கடவுளுக்கும்,நமது வீரமிக்க ராணுவத்திற்கும் நான் நன்றி தெரிவிக்கிறேன். எதிரி தோற்கடிக்கப்பட்டு விட்டான். நாளைய தினம் ருஷ்யாவின் புண்ணிய பூமியிலிருந்து அவனை வெளியே விரட்டியடிப்போம்' என்று குட்டுஜோவ் சொல்லி, தமக்கு சிலுவைக் குறி காட்டினார். அவர் திடீரென்று விம்மி அழ ஆரம்பித்தார். அவருடைய கண்கள் கண்ணீரால் நிறைந்திருந்தன.

வால்ஜாகன் தமது தோள்களைக் குலுக்கிக்கொண்டு, உதடுகளை வளைத்துக்கொண்டு, மௌனமாய் ஒரு பக்கமாக நகர்ந்தார். அந்த 'வயோதிகக் கனவா'னின் அகம்பாவம் கொண்ட அறியாமையைக் கண்டு திகைத்தவர் போலக் காணப்பட்டார்.

'ஆ, இதோ அவர் வந்து விட்டார், இவர்தான் என்னுடைய வீரன்' என்று ஒரு பருமனான, அழகான, கருப்பு முடி கொண்ட ஜெனரலைப் பார்த்து குட்டுஜோவ் கூறினார். அவர் அப்பொழுது தான் குன்றிலிருந்து இறங்கி வந்தார்.

அவர்தான் ராயேவ்ஸ்கி. பாராடினோ யுத்த களத்தில் முக்கியமான பகுதியில் அன்று பூராவாக அவர் இருந்தார்.

நமது துருப்புகள் தங்களுடைய இடங்களில் பலமாக ஊன்றி நிற்பதாகவும், வலுத் தாக்குதலுக்கு பிரஞ்சுக்காரர்கள் இப்பொழுது துணியவில்லை என்றும் ராயேவ்ஸ்கி அறிக்கையிட்டார்.

அவர் சொல்லுவதைக்கேட்ட பின்பு, அவரிடம் பிரஞ்சு மொழியில் குட்டுஜோவ் பேசினார்:

'அப்படியானால், வேறு சிலர் நினைப்பதைப் போல நாம் பின்வாங்க வேண்டும் என்று நீர் நினைக்கவில்லை அல்லவா?'

'அதற்கு மாறாக, இம்மாதிரிப் போர்களில் யார் விடாப்பிடியாக நிற்கிறார்களோ, அவர்கள்தான் வெற்றி பெறுவார்கள். என்னுடைய அபிப்பிராயத்தில்...' என்று ராயேவ்ஸ்கி கூறினார்.

'காய்சாராவ்' என்று குட்டுஜோவ் தம்முடைய உதவியாளரை அழைத்தார். 'நாளைய தினம் ராணுவத்திற்கு பிறப்பிக்கப்பட வேண்டிய பிரகடனத்தை கீழே உட்கார்ந்து எழுதும்' என்று சொல்லி விட்டு, அங்கிருந்த மற்றொருவரைப் பார்த்து, 'நீர் யுத்த அரங்கங்களுக்குச் சென்று நாளைய தினம் நாம் தாக்கப் போகிறோம் என்பதை அறிவித்து விட்டு வாரும்' என்று கூறினார்.

ராயேவ்ஸ்கியிடம் பேசிக்கொண்டிருந்தபோதே, மறுநாளைய பிரகடனத்தை எழுதிக்கொள்ளுவதற்காக குட்டுஜோவ்

சொல்லிக்கொண்டிருந்தார். அச்சமயத்தில் பார்க்ளேயிடமிருந்து வால்ஜாகன் மீண்டும் திரும்பி வந்தார். சேனாதிபதி கொடுத்த உத்தரவை எழுத்து மூலம் வேண்டும் என்று ஜெனரல் பார்க்ளே டி டாலி விரும்புவதாக அவர் கூறினார்.

வால்ஜாகனைப் பார்க்காமலேயே அந்த உத்தரவை எழுதும்படி குட்டுஜோவ் சொல்லிக் கொண்டிருந்தார். ஒரு வேளை அந்த பழைய சேனாதிபதி, தமது சொந்தப் பொறுப்பைத் தவிர்த்துக்கொள்ளுவதற்காக, எழுத்து மூலம் உத்தரவு வேண்டும் என்று விரும்பி இருக்கலாம்.

'ராணுவத்தின் உள்ளக் கிடக்கை' என்ற அந்த விசித்திரமான, குறிப்பிட்டுச் சொல்லி முடியாத பந்தமானது, அந்த ராணுவம் முழுவதிலும் ஒரே மாதிரியான மனப் போக்கை, நிலை பெறும்படி செய்து வந்தது. அந்த உள்ளக் கிடக்கைதான் ராணுவத்தின் பிரதான நாடியாகும். அந்த வேகமானது குட்டுஜோவின் வார்த்தைகளையும், மறுநாளைய யுத்தத்தைப் பற்றிய அவருடைய உத்தரவையும், உடனேயே அந்த ராணுவத்தின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலை வரை தெரியும்படி செய்தது.

அந்தச் செய்திகள் மறு கோடிக்குப் போய் சேர்ந்தபோது, அவருடைய வார்த்தைகளும் உத்தரவும் எவ்வளவோ மாறிப்போய் இருந்தன. வாய் மூலமான அந்த செய்திகள் பரவியபோது, முடிவில் குட்டுஜோவின் வார்த்தைகளுக்குக் கொஞ்சம்கூடப் பொருத்தமில்லாமல் மாறிப் போய் இருந்தன. ஆனால், அந்த வார்த்தைகளின் கருத்து எல்லா இடங்களுக்கும் பரவியது. ஏனெனில், அவர் சொல்லிய வார்த்தைகள் தந்திரமாய் கணக்கிட்டுச் சொல்லியவை அல்ல. சேனாதிபதியின் உள்ளத்திலும் ஒவ்வொரு ருஷ்யரின் உள்ளத்திலும் எந்த உணர்ச்சி பதிந்து கிடந்ததோ, அந்த உணர்ச்சியையே அவை பிரதிபலிப்பதாய் இருந்தன.

மறுநாள் எதிரியைத் தாக்கப் போகிறார்கள் என்பதை அறிந்ததும், அவர்கள் எதை நம்பவேண்டும் என்று விரும்பினார்களோ, அதற்கு சேனாதிபதியிடமிருந்து உறுதி கிடைத்ததும், களைப்புற்று சந்தேகப்பட்டுக் கொண்டிருந்த வீரர்கள் எல்லாம், மனதில் இதம் பெற்று உணர்ச்சி கொண்டார்கள்.



ரிசர்வ் படைகளில் ஒன்றாக இளவரசர் ஆண்ட்ரூவின் பட்டாளம் இருந்து வந்தது. செமியோனாவ்ஸ்க்கிற்குப் பின்னால், பலமான பீரங்கிக் குண்டு மழைக்குக் கீழே அந்தப் பட்டாளம் ஒரு மணிக்கு மேலாகவும் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. இரண்டு மணிக்குள்ளாக அந்தப் பட்டாளத்தில் சுமார் 200 பேர் வரை இறந்து போனார்கள். செமியோனாவ்ஸ்க்கிற்கும், குன்று பீரங்கிப் படைக்கும் மத்தியிலுள்ள இடை வெளியில், அந்தப் பட்டாளத்தை ஓட்ஸ் தானிய வயல்களின் வழியாக முன்னேறச் செய்தார். அந்தக் குன்று பீரங்கிப் படையின் பக்கத்தில்தான், அன்றைய தினம் ஆயிரக் கணக்கான பேர்கள் மாண்டார்கள். அந்த இடத்தின் மீதுதான், நூற்றுக்கணக்கான பீரங்கிகள், ஒருமுகமாக ஒரு மணிக்கும் இரண்டு மணிக்கும் இடையில், குண்டுகளைப் பொழிந்து வந்தன.

அது இருந்த இடத்திலிருந்து நகராமலும், ஒரு குண்டைக் கூட பிரயோகிக்காமலும், அந்த இடத்தில் அந்தப் பட்டாளம், அதனுடைய வீரர்களில் மீண்டும் மூன்றில் ஒரு பங்கு மனிதர்களை இழந்தது. முன் பக்கத்திலிருந்தும், முக்கியமாக வலது பக்கத்திலிருந்தும், அந்த புகைத் திரைக்குப் பின்னால், பீரங்கிகள் முழங்கிக்கொண்டிருந்தன. எதிரிலுள்ள வெட்ட வெளி பூராவாக புகை மூடியிருந்தது. அந்தப் புகை மண்டலங்களுக்குப் பின்னாலிருந்து மெதுவாக ஊதலிடும் பீரங்கி வெடி குண்டுகளும், வேகமாக சீற்றமிடும் பீரங்கிக் குண்டுகளும், இடைவிடாமல் பறந்து கொண்டிருந்தன. சில சமயங்களில், அவர்களுக்கு ஓய்வு கொடுக்க விரும்புவதைப் போல, சுமார் கால் மணி நேரத்திற்கு பீரங்கிக் குண்டுகளும், பீரங்கி வெடி குண்டுகளும், அவர்களுடைய தலைகளுக்கு மேலாகப் பறந்து போய்க்கொண்டிருக்கும். சில சமயங்களில், ஒரு வினாடியில் அந்தப் பட்டாளத்தின் மீது குண்டுகள் விழுந்து, பலரைக் கொன்றுவிடும். கொல்லப்பட்டவர் களையும் காயமடைந்தவர்களையும், அப்புறப்படுத்திக் கொண்டிருந்தார்கள்.

ஒவ்வொரு குண்டும் வந்து விழும்போது, இன்னமும் உயிரோடு இருப்பவர்களின் உயிர்களைக் காப்பாற்றுவது, சாத்தியக் குறைவாகக் காணப்பட்டது. அந்தப் பட்டாளம் 300 அடிகள் இடைவெளி விட்டு அணி அணியாக நின்றது. ஒவ்வொருவரும் ஒரே நோக்கத்தோடு நின்றார்கள் என்பதில் சந்தேகமில்லை.

எல்லாரும் ஒரே மாதிரியாக வாய் பேசாமல் வெடுவெடுப்பாக இருந்தார்கள். அந்த அணிவரிசைகளில், பேச்சு என்பதைக் கேட்பதே அபூர்வம். குண்டுகள் வந்துவிழும்போதும், டோலிகள் என்ற கூச்சலைக் கேட்கும்போதும், பேச்சுகள் முற்றிலும் நின்று விட்டன. அதிகாரிகளின் உத்தரவுப்படி, அநேகமாக அவர்கள் தரை மீது அமர்ந்தே இருந்தார்கள். ஒருவர் தன்னுடைய ரோமத் தொப்பியை எடுத்து, அதன் உள்ளே இருந்த துணியைத் தளர்த்துவதும் இறுக்குவதுமாய் இருந்தான். இன்னொருவன், தன் கைகளில் களிமண்ணை எடுத்து, துப்பாக்கி சனியனுக்கு மெருகு கொடுத்தான். மற்றொருவன், தன்னுடைய பெல்ட்டை சரி செய்து கொண்டிருந்தான். வேறொருவன், தன்னுடைய கால் பட்டிகளைக் கழற்றி, மீண்டும் கட்டி, பூட்ஸ்களை அணிந்து கொண்டிருந்தான். சிலர், அந்த உழுத பூமியில் கிடந்த புல் பூண்டுகளால் சிறிய விளையாட்டு வீடுகளைக் கட்டிக் கொண்டிருந்தார்கள் எல்லாரும் இம்மாதிரியான வேலைகளில் பூராவாக ஈடுபட்டிந்தார்கள். மனிதர்கள் கொல்லப்படும்போதோ வரிசை வரிசையாக அவர்களைக் கடந்து டோலிகள் செல்லும் போதோ, அல்லது சில துருப்புகள் பின்வாங்கும்போதோ, அல்லது ஏராளமாக எதிரிகள் புகைகளுக்கு இடையே தோன்றும் போதோ அந்த விஷயங்களைப் பற்றி அவர்கள் கொஞ்சமும் கவனம் எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால், நமது பீரங்கிப் படையோ, அல்லது குதிரைப் படையோ, அல்லது காலாட் படையோ முன்னேறுவதாகக் காணப்படும்போது, எல்லா திசைகளிலிருந்தும் அதை ஆதரிக்கும் தொனிகள் கேட்டுக்கொண்டிருக்கும். அந்த யுத்தத்திற்கு சம்பந்தமில்லத காரியங்கள் நடக்கும்போது, அவர்களுடைய பரபரப்பான கவனங்கள், அதிகமாக அவற்றில் ஈடுபட ஆரம்பிக்கும். தார்மீகமாக களைப்படைந்துபோன இந்த வீரர்களின் மனமானது, சாதாரண தினப்படி நடக்கக்கூடிய காரியங்களினால் கொஞ்சம் சந்தோஷமடைவதுபோலத் தோன்றியது. அந்தப் பட்டாளத்தின் முன்பாக ஒரு பீரங்கிப் படை போய்க்கொண்டிருந்தது. வெடி மருந்து வண்டியை இழுத்துக்கொண்டு போன ஒரு குதிரை, தன்னுடைய தோல் வாரில் காலை மாட்டிக் கொண்டது. 'ஏய், அதோ குதிரையைப் பார்... அதன் காலை எடுத்து விடு. அது விழுந்து விடும்... ஆ, அவர்கள் அதை கவனிக்கவில்லை என்று தோன்றுகிறது' என்று ஒரே மாதிரியான கூச்சல்கள், அந்தப் பட்டாளத்தைச் சேர்ந்த பல பிரிவுகளிலிருந்தும் வந்து கொண்டிருந்தன. மற்றொரு சமயம், அங்கு வந்த ஒரு சிறிய பழுப்பு நிற நாயின் மீது அவர்களின் கவனம் திரும்பியது. அது எங்கே எப்படி

வந்தது என்பதை கடவுளே அறிவார். ஏதோ பராமுகமாக தன் வாலை நிமிர்த்திக்கொண்டு, அந்த அணி வரிசைகளின் முன்பாக ஓடிக்கொண்டிருந்தது. திடீரென்று அதன் பக்கத்தில் ஒரு வெடி குண்டு விழவும், அது ஊளையிட்டுக் கொண்டு, தன் வாலை கால்களுக்கு இடையில் நுழைத்துக் கொண்டு, மற்றொரு பக்கமாகத் தாவியது. கூச்சல்களும், சிரிப்பு சப்தங்களும், அந்தப் பட்டாளம் முழுவதிலிருந்தும் கேட்டன. அம்மாதிரியான வேடிக்கைகள் ஒரு வினாடிதான் நீடித்திருக்க முடியும். எட்டு மணி நேரமாக அந்த வீரர்கள் ஒன்றும் செய்யாமல், உணவுமில்லாமல் சாவைப் பற்றி தொடர்ச்சியாகப் பயந்துகொண்டே இருந்த அவர்களுடைய வெளிறிய, சோகமுற்ற முகங்கள், இன்னும் அதிகமாக வெளிறவும் சோகமுறவுமாக இருந்துகொண்டிருந்தார்கள்.

இளவரசர் ஆண்ட்ரூ, அந்தப் பட்டாளத்திலிருந்த ஒவ்வொருவரையும் போல முகம் வெளிறி சோகமுற்று, அங்கிருந்த வயல்களில் ஒரு வரப்பிலிருந்து மற்றொரு வரப்பிற்கு முன்னும் பின்னும் நடந்துகொண்டிருந்தார். அந்த இடம், ஓட்ஸ் தானிய வயலுக்குப் பக்கத்தில், புல் வெளியின் ஓரத்தில் இருந்தது. தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு, கைகளைப் பின்னால் வைத்துக்கொண்டு அவர் நடந்து கொண்டிருந்தார். அவர் உத்தரவு இடுவதற்கோ, அல்லது செய்வதற்கோ அப்பொழுது எதுவுமில்லை. ஒவ்வொரு காரியமும் அதன் போக்குப்படி நடந்து கொண்டிருந்தது. கொல்லப்பட்டவர்களை முன் அணியிலிருந்து இழுத்துப் போட்டார்கள். காயம் பட்டவர்களைத் தூக்கிக்கொண்டு போனார்கள். அணிவரிசைகள் நெருங்கியிருந்தன. யாராவது சிப்பாய்கள் பின் பக்கமாகப் போனால், அவர்கள் உடனே வேகமாகத் திரும்பி விடுவார்கள். அந்த வீரர்களின் தைரியத்தைத் தூண்டிவிடவும், அவர்களுக்கு உதாரணம் காட்டவும் செய்ய வேண்டியது, தம்முடைய கடமையென்று இளவரசர் ஆண்ட்ரூ முதலில் நினைத்தார். ஆகவே, அணி வரிசைகளுக்கு இடையே அவர் நடந்து சென்றார். ஆனால், அப்படிச் செய்ய வேண்டியது அவசியமில்லை என்பதையும், அவர்களுக்கு சொல்லிக்கொடுக்க வேண்டியது எதுவுமில்லை என்பதையும், அவர் சீக்கிரமாக அறிந்து கொண்டார். அவருடைய ஆத்மாவின் சக்தியெல்லாம், அங்கிருந்த ஒவ்வொரு சிப்பாயினுடையதைப் போல, தம்மை அறியாமலேயே அப்பொழுதுள்ள நிலைமையின் பயங்கரத்தை சிந்தித்துப்பார்க்க மறுத்தன. அவர் அந்த புல் வெளியில் நடந்தார். தம்முடைய பாதங்களை அந்த புல்லின் மேலாக லேசாக இழுத்து, சலசலப்பு செய்தார். தம்முடைய பூட்ஸ்களின் மீதிருந்த தூசியைக் கவனித்தார்.

அந்த புல் வெட்டியவர்களின் பாத அடையாளங்களுக்கு ஒப்பாக, தானும் அகலமாய் கால் வைத்து நடக்க முயற்சித்தார். பின்னால், தமது அடிகளை எண்ண ஆரம்பித்தார். ஒரு மைல் நடப்பதற்கு, ஒரு வரப்பிலிருந்து மற்றொரு வரப்பிற்கு எத்தனை தடவைகள் நடக்க வேண்டியிருக்கும் என்பதை கணக்குப் போட்டார். அங்கே வளர்ந்து நின்ற புஷ்பங்களைப் பறித்து, உள்ளங்கைகளில் வைத்து, கசக்கி முகர்ந்து பார்த்தார். அது ஒரு வேகமான வாசனையாய் இருந்தது. முந்தைய தினத்தின் நினைப்புகள் எதுவும் இப்பொழுது காணப்படவில்லை. அவர் எதைப் பற்றியும் நினைத்துக் கொண்டிருக்கவில்லை. இடைவிடாமல் கேட்டுக்கொண்டிருந்த அந்த சப்தங்களை, சலிப்படைந்துபோன தமது காதுகளால் கேட்டு கவனித்து வந்தார். பறந்து போகிற அந்த பீரங்கிக் குண்டுகளுடைய ஊதல்களின் வித்தியாசத்தைக் கவனித்துக் கேட்டார். முதல் பட்டாளத்தைச் சேர்ந்த, தமக்குப் பழக்கமானவர்களின் முகங்கள், சோர்வடைந்து காணப்படுவதைக் கவனித்தார். 'இதோ வருகிறது... இது நம்மை நோக்கி மீண்டும் வருகிறது' என்று அவர் நினைத்து, அந்த புகை மண்டலத்தில் மறைந்து வந்து கொண்டிருந்த ஊதல் சப்தத்தைக் கவனித்துக் கேட்டார். 'இதோ ஒன்று இதோ மற்றொன்று! மீண்டும் வந்து விட்டது! அது தாக்கிவிட்டது...' அவர் அங்கே நின்று அந்த அணி வரிசைகளைச் சுற்றிலும் பார்த்தார். 'இல்லை, அது மேலே பறந்து போய்விட்டது. ஆனால், இந்த ஒரு குண்டு இப்பொழுது தாக்கி விட்டது' என்று அவர் சொல்லி, மீண்டும் அந்த வயலின் வரப்பிற்கு 16 அடிகளில் போய் விட நடக்க ஆரம்பித்தார். ஒரு சீற்றல் சப்தமும், தடாரென்ற சப்தமும் கேட்டன. அவரிடமிருந்து ஐந்து அடி தூரத்தில், ஒரு பீரங்கிக் குண்டு விழுந்து, சுற்றிலும் மண்ணை வாரி இறைத்து மறைந்து போயிற்று. ஒரு அதிர்ச்சி அவருடைய முதுகெலும்பு வழியாகக் கீழே இறங்கியது. மீண்டும் அவர் அந்த அணி வரிசைகளைப் பார்த்தார். ஒருவேளை அந்த குண்டினால் பலர் காயமடைந்திருக்கலாம். இரண்டாவது படைப் பிரிவிற்குப் பக்கத்தில் ஏராளமாக வீரர்கள் கூடினார்கள்.

'உதவியாளரே, அவர்கள் அங்கே கூடி நிற்க வேண்டாமென்று உத்தரவிடுவீராக' என்று அவர் கூறினார்.

அவர் உத்தரவிட்டபடி அந்த உதவியாளர் செய்து விட்டு, இளவரசர் ஆண்ட்ரூவிடம் நெருங்கினார். மற்றொரு பக்கத்திலிருந்து ஒரு சிறு படையின் கமாண்டர் அங்கே சவாரி வந்தார்.

‘அதோ பாருங்கள்’ என்று ஒரு பீதியுற்ற குரலில், ஒரு சிப்பாய் கத்தினான். உடனே, வேகமாய் பறந்து வரும் ஒரு பறவை, திடீரென்று பூமியில் இறங்குவதைப்போல, இளவரசர் ஆண்ட்ரூவுக்கு இரண்டடி தூரத்தில், அந்த சிறிய படைக் கமாண்டரின் குதிரைக்குப் பக்கத்தில், ஒரு வெடிகுண்டு சப்தம் அதிகமாயில்லாமல் வந்து விழுந்தது. அந்த குதிரை, தனது பயத்தைக் காட்டுவது சரியா, தப்பா என்பதை யோசிக்காமல் கனைத்துக்கொண்டு, அந்த மேஜரை குலுக்கித் தள்ளி, மற்றொரு பக்கமாகப் பாய்ச்சலில் ஓடியது. அந்தக் குதிரையின் பீதி, அங்கிருந்த வீரர்களையும் பற்றிக்கொண்டது.

‘எல்லாரும் கீழே படுங்கள்’ என்று அந்த உதவியாளர் கூச்சலிட்டு, தாமும் கீழே படுத்தார்.

இளவரசர் ஆண்ட்ரூ தயங்கினார். புகையைக் கக்கிக்கொண்டு ஒரு பம்பரத்தைப்போல தமக்கும், கீழே படுத்திருக்கும் தமது உதவியாளருக்கும் மத்தியில் அந்த வெடிகுண்டு சுழன்று கொண்டிருந்தது. அந்த உதவியாளர் அங்கிருந்த வயலுக்கும் புல்வெளிக்கும் மத்தியிலுள்ள ஒரு மரத்தின் பக்கத்தில் படுத்திருந்தார்.

‘ஒருவேளை இதுதான் மரணமாயிருக்குமோ’ என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். முற்றிலும் புதிய ஆசை கொண்ட பார்வையோடு, அங்கிருந்த புல்லையும், மரத்தையும், அங்கு சுழன்று கொண்டிருந்த கருப்பு குண்டிலிருந்து கிளம்பிய புகைக் கூட்டத்தையும் அவர் நோக்கினார். என்னால் முடியாது. நான் சாக விரும்பவில்லை. நான் வாழ விரும்புகிறேன். இந்த வாழ்க்கையையும், இந்த புல்லையும், இந்த மண்ணையும், இந்த காற்றையும் நான் விரும்புகிறேன்... இம்மாதிரியாக அவர் நினைத்துக்கொண்டிருந்தார். அதே சமயம், மற்றவர்கள் தம்மை நோக்கிக் கொண்டிருப்பதை அவர் நினைவு கூர்ந்தார்.

‘அது வெட்கக் கேடானது, ஐயா. என்ன...’ என்று அவர் தமது உதவியாளரிடம் கூறினார்.

அவர், தாம் பேசியே முடிக்கவில்லை. அதே வினாடியில், ஒரு வெடி சப்தம் கேட்டது. ஒரு ஜன்னலின் சட்டம் முறிந்ததைப் போல சிராய்கள் ஊதலிட்டுக் கொண்டு பறந்தன. வெடி மருந்தின் வாசனையானது, மூச்சு முட்டுவதாய்.இருந்தது. இளவரசர் ஆண்ட்ரூ மற்றொரு பக்கமாகத் திரும்பினார். அவர் தமது கையை உயர்த்தி குப்புற விழுந்தார். பல அதிகாரிகள் அவரிடம் ஓடினார்கள்.

அவருடைய அடி வயிற்றில் வலது பக்கத்திலிருந்து இரத்தம் கொட்டி, அந்த புல்லையெல்லாம் நனைத்துக்கொண்டிருந்தது.

பாதுகாப்புப் படையினர், டோலிகளோடு அங்கே வந்து, அதிகாரிகளுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தார்கள். இளவரசர் ஆண்ட்ரூ குப்புறப்படுத்து, தமது முகத்தை அந்தப் புல்லில் சாய்த்து, பலமாகவும் சப்தமிட்டும் மூச்சு விட்டுக்கொண்டிருந்தார்.

'எதற்காக நீங்கள் காத்துக் கொண்டிருக்கிறீர்கள்? எல்லாரும் வாருங்கள்'

அந்த விவசாயிகள் அவரிடம் சென்று, அவருடைய தோள்களையும் கால்களையும் பற்றி தூக்கினார்கள். அவர் பரிதாபகரமாக முனகி, அங்கிருந்தவர்களைப் பார்த்தார். அந்த விவசாயிகள் மீண்டும் அவரைக் கீழே கிடத்தினார்கள்.

'அவரைப் பிடியுங்கள். மேலே தூக்குங்கள் எல்லாம் ஒன்றுதான்' என்று யாரோ ஒருவர் கூச்சலிட்டார்.

மீண்டும் அவரை, தோள்களைப்பற்றி தூக்கி, ஒரு டோலியில் படுக்க வைத்தார்கள்.

'ஆ, கடவுளே, எனது கடவுளே, இது என்ன? வயிற்றிலாகாயம்? அப்படியானால், மரணம் என்பது தானே அதன் அர்த்தம்? எனது கடவுளே' என்று அந்த அதிகாரிகள் பலர் பேசுவது கேட்டது.

'என்னுடைய காதுக்கு ஒரு மயிரிழை விட்டுத்தான் அது பறந்தது' என்று அந்த உதவியாளர் சொன்னார்.

அந்த விவசாயிகள் அந்த டோலியைத் தங்களுடைய தோள்களில் நன்றாக வைத்துக்கொண்டு, அவர்கள் நடந்து நடந்து பழக்கமான பாதை வழியாகக் காயம் கட்டும் இடத்திற்கு வேகமாகப் போனார்கள்.

'ஒழுங்காக நடந்து போங்கள். ஆ... இந்த விவசாயிகள்' என்று ஒரு அதிகாரி, அந்த விவசாயிகளின் தோள்களைப் பற்றி கூறினார். அவர்கள் கால்களை ஒழுங்காக வைத்து நடக்காமலும், குலுக்கிப் போட்டுக்கொண்டும் அந்த டோலியைத் தூக்கிக்கொண்டு போனதால், அவர் அம்மாதிரி சொன்னார்.

'ஒழுங்காய் நடந்துபோ, பீயோடர்... நான் சொல்லுகிறேன், பீயோடர்' என்று, முன்னால் போய்க்கொண்டிருந்த ஒரு விவசாயி கூறினான்.

'இப்பொழுது இது தான் சரி' என்று, பின்னால் வந்து கொண்டிருந்தவன் அவர்களுடைய நடையில் ஒழுங்கு ஏற்பட்டவுடன், மகிழ்ச்சியோடு கூறினார்.

'மேன்மை தங்கியரே, இளவரசே' என்று டிமோகின், நடுநடுங்கிய குரலில் அங்கு ஓடிவந்து, அந்த டோலியைப் பார்த்ததும் சொன்னார்.

இளவரசர் ஆண்ட்ரூ தமது கண்களைத் திறந்து, தம்மிடம் பேசியவரைப் பார்த்தார். அந்த டோலியில் அவருடைய தலை ஆழமாய் சாய்ந்திருந்தது. அவருடைய கண் இமைகள் மீண்டும் மூடிக்கொண்டன.

அந்த பாதுகாப்புப் படையினர் இளவரசர் ஆண்ட்ரூவைக் காட்டுக்குப் பக்கத்திலுள்ள ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனார்கள். அங்கேதான் வண்டிகள் நின்று கொண்டிருந்தன. அந்த பூவரசு மரக்காட்டின் ஓரத்தில், மூன்று கூடாரங்களில் ஆஸ்பத்திரி அமைக்கப்பட்டிருந்தது. அந்த காட்டுக்குள் வண்டிகளும் குதிரைகளும் நின்றுகொண்டிருந்தன. குதிரைகள் ஓட்ஸ் தானியங்களைத் தொட்டிகளிலிருந்து தின்று கொண்டிருந்தன. கீழே விழும் தானியங்களைக் குருவிகள் வந்து பொறுக்கிக் கொண்டிருந்தன. இரத்த வாசனையை அறிந்ததும், சில பறவைகள் அந்த பூவரசு மரங்களில் கத்திக்கொண்டு பறந்து கொண்டிருந்தன. அந்த கூடாரங்களைச் சுற்றி சுமார் ஐந்து ஏக்கர் நிலத்தில், இரத்தக் கறை கொண்ட மனிதர்கள் வெவ்வேறு விதமான உடைகளில் நின்றுகொண்டும், உட்கார்ந்து கொண்டும், படுத்துக்கொண்டும் இருந்தார்கள். அந்த காயமடைந்த சிப்பாய்களின் கூட்டத்தைச் சுற்றி, டோலி தூக்கி சிப்பாய்கள் ஏராளமாக, பீதியுற்ற, கவலை கொண்ட முகங்களோடு நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களை அந்த இடத்தை விட்டு விரட்டுவதற்கு, ஒழுங்கை நிலைநிறுத்தும் அதிகாரிகள் முயன்றும் முடியவில்லை. அதிகாரிகளின் உத்தரவுகளை அலட்சியம் செய்து, அங்கிருந்த டோலிகளின் மீது சாய்ந்து கொண்டும், கூர்மையாகக் கவனித்துக்கொண்டும் அவர்களுக்கு எதிராக என்ன நடந்து கொண்டிருக்கிறது என்ற கஷ்டமான விஷயத்தைப் புரிந்து கொள்ள முயற்சி செய்வதைப்போல, சிப்பாய்கள் நின்று கொண்டிருந்தார்கள். அந்த கூடாரங்களிலிருந்து ஒரு சமயம் கோபமான குரல்களும், மற்றொரு சமயம் முனங்கல்களும் கேட்டுக்கொண்டிருந்தன. சில வேளைகளில், காயத்தைக் கட்டுகிறவர்கள், தண்ணீர் கொண்டுவருவதற்காகவோ, அல்லது யாரை உள்ளே கொண்டு வரவேண்டும் என்று குறிப்பிடுவதற்காகவோ வெளியே வருவார்கள். காயமடைந்தவர்கள், தங்களுடைய முறையை எதிர்பார்த்து, கூடாரங்களுக்கு வெளியே முனங்கிக்கொண்டும்,

பெரு மூச்சு விட்டுக்கொண்டும், அழுது கொண்டும், கூச்சலிட்டுக்கொண்டும், திட்டிக்கொண்டும், அல்லது வாட்கா மது வேண்டுமென்று கேட்டுக்கொண்டும் இருந்தார்கள். சிலர், ஜன்னியினால் பீடிக்கப்பட்டிருந்தார்கள். இளவரசர் ஆண்ட்ரூவைத் தூக்கி வந்த டோலிக்காரர்கள், அங்கு கட்டப்படாமலிருந்து காயம்பட்டவர்களைத் தாண்டி, அவர் ஒரு பட்டாளத்தின் கமாண்டரானபடியால், ஒரு கூடாரத்தின் வாசலுக்குப் போய் உத்தரவுக்காகக் காத்துக்கொண்டு நின்றார்கள். இளவரசர் ஆண்ட்ரூ தமது கண்களைத் திறந்தார். ஆனால், வெகு நேரம் வரையில் தம்மைச் சுற்றி என்ன நடக்கிறது என்பதை அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை. அந்த புல்வெளியையும், அந்த மரத்தையும், அந்த வயலையும், சுழன்றுகொண்டிருந்த அந்தக் கருப்பு குண்டையும், அவருடைய வாழ்க்கையிலுள்ள ஆசையானது, அவருக்கு வேகமாய்த் தோன்றியதையும் அவர் நினைவு கூர்ந்தார். அவர் இருந்த இடத்திலிருந்து இரண்டடி தூரத்திற்கு அப்புறம், ஒரு மரத்தின் கிளையில் சாய்ந்துகொண்டு ஒருவர் பலமாய் பேசிக்கொண்டிருந்த படியால், எல்லாருடைய கவனத்தையும் அவர் இழுத்தார். அவர் உயரமாகவும், அழகாகவும், கருப்புத் தலைமுடியைக் கொண்டவராகவும், தலையில் கட்டுப் போட்டுக் கொண்டும் காணப்பட்டார். துப்பாக்கிக் குண்டுகளால், அவருடைய தலையிலும் காலிலும் காயங்கள் ஏற்பட்டன. அவர் பேசுவதை ஆவலோடு கேட்பதற்காக, அவரைச் சுற்றி ஒரு கூட்டம் - காயமடைந்த சிப்பாய்களும், டோலி தூக்குகிறவர்களும்-கூடி நின்றார்கள்.

'அவனை நாம் அங்கிருந்து உதைத்து விரட்டினோம். ஆகவே, அவன் ஒவ்வொன்றையும் விட்டு விட்டான். நாம் அந்த ராஜாவையே பிடித்து விட்டோம்' என்று அவர் கூச்சலிட்டு, ஜுரத்தினால் ஜொலித்துக் கொண்டிருந்த தமது கண்களால், சுற்றி நின்றவர்களைப் பார்த்தார். 'அச்சமயத்தில் மட்டும் நமக்கு ரிசர்வ் படைகள் வந்திருக்குமானால், எதிரிகள் ஒருவரும் அங்கே மீதமாய் இருக்கமாட்டார்கள். நான் உங்களுக்கு நிச்சயமாய் சொல்லுகிறேன்...'

அந்த பேச்சாளரின் பக்கத்தில் நின்ற எல்லாரையும் போலவே, இளவரசர் ஆண்ட்ரூவும், தமது பிரகாசமான கண்களால் அவரைப் பார்த்தார். அச்சமயம் அவருக்கு இதமாய் இருப்பது போலத் தோன்றியது. 'ஆனால், இப்பொழுது எல்லாம் ஒன்றுதானே? அங்கு என்ன இருக்கப் போகிறது? இங்கே என்ன இருந்துகொண்டு

இருந்தது? என்னுடைய உயிரை விடுவதற்காக, நான் ஏன் இவ்வளவு தயக்கம் கொள்ள வேண்டும்? என்னால் இதற்கு முன்னால் புரிந்து கொள்ள முடியாததும், இப்பொழுதும் புரிந்துகொள்ள முடியாததுமான ஏதோ ஒன்று இந்த வாழ்க்கையில் இருக்கிறது...' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார்.



இரத்தக் கறை படிந்த முன்னாடையோடு ஒரு டாக்டர் கூடாரத்தைவிட்டு வெளியே வந்தார். அவருடைய பெரு விரலுக்கும் சிறு விரலுக்கும் மத்தியில் ஒரு சுருட்டைப் பற்றியிருந்தார். அவருடைய கைகள் இரத்தக் கறை படிந்திருந்ததால், அந்த சுருட்டில் கறை ஏற்படாமல் இருப்பதற்காக, அம்மாதிரி பிடித்திருந்தார். அவர் தலையை நிமிர்த்தி, அங்கிருந்த காயமடைந்தவர்களுக்கு மேலாக, தம்மைச் சுற்றி பார்வையிட்டார். கொஞ்சம் ஓய்வு வேண்டும் என்று நினைத்தவரைப் போல, அவர் காணப்பட்டார். தமது தலையை வலது பக்கத்திலிருந்து இடது பக்கமாகத் திருப்பி, சிறிது நேரம் பெரு மூச்சு விட்டு கீழே நோக்கினார்.

'ரொம்ப சரி, உடனே ஆரம்பித்து விடலாம்' என்று அவரிடம் இளவரசர் ஆண்ட்ரூவைக் காட்டிய, காயம் கட்டுகிறவரிடம் அவர் கூறினார். கூடாரத்திற்குள் அவரைத் தூக்கி வரும்படி அவர்களுக்குச் சொன்னார்.

அங்கே காத்துக்கொண்டிருந்த காயம்பட்டவர்கள் முணுமுணுத்தார்கள்.

'மறு உலகத்தில் கூட, பிரபுக்களுக்குத்தான் வசதிகள் கிடைக்குமென்று தோன்றுகிறது' என்று ஒருவர் கூறினார்.

இளவரசர் ஆண்ட்ரூ உள்ளே கொண்டு வரப்பட்டு, ஒரு மேஜை மீது கிடத்தப்பட்டார். அப்பொழுது தான் அவருக்காக அந்த மேஜையை சுத்தம் செய்து கழுவினார்கள். அந்த கூடாரத்தில் என்ன இருக்கின்றனவென்பதை இளவரசர் ஆண்ட்ரூவினால் தெளிவாய்ப் புரிந்துகொள்ள முடியவில்லை. எல்லாப் பக்கங்களிலிருந்தும் கேட்டு வந்த பரிதாபகரமான முனங்கல்களும், தம்முடைய தொடையிலும், வயிற்றிலும், இடுப்பிலும் காணப்பட்ட சகிக்க முடியாத வலியும், அவருடைய கவனத்தை இழுத்தன. தம்மைச் சுற்றி அவர் கண்டவை எல்லாம், ஒரு பொதுவான அபிப்பிராயத்தில்

கலந்தது. அதாவது, இரத்தம் கொட்டிக்கொண்டிருந்த நிர்வாணமான மனித உடம்புகள், அந்த தணிவான கூடாரத்தில் பூராவாக நிரம்பியிருந்தன; அந்தக் காட்சியானது, ஆகஸ்டு மாதத்தில் ஒரு உஷ்ணமான தினத்தில் ஸ்மாலென்ஸ்க் ரஸ்தாவிற்குப் பக்கத்திலிருந்த அந்த அழுக்கடைந்த குளத்தில் அம்மாதிரியான உடம்புகள் நிரம்பி இருந்ததற்கு ஒப்பாய் இருந்தது. ஆம், அதே மாமிசம்தான். அதே பீரங்கிப் பலிகள்தான். அந்தக் காட்சி, அவருக்கு முன்னால் செய்யும் எச்சரிக்கையைப்போல, முன்பே பீதியைக் கொடுத்தது.

அந்த கூடாரத்தில் சத்திர சிகிச்சை செய்வதற்காக மூன்று மேஜைகள் இருந்தன. இரண்டு மேஜைகளில் யாரோ படுத்திருந்தார்கள். காலியாயிருந்த மூன்றாவது மேஜை மீது இளவரசர் ஆண்ட்ரூவைக் கிடத்தினார்கள். தனிமையாக சிறிது நேரம் அவர் விடப்பட்டிருந்த போது, தம்மை அறியாமலேயே மற்ற இரண்டு மேஜைகளிலும் நடந்து வருவதை அவர் கவனித்தார். பக்கத்தில் இருந்த மேஜையில் ஒரு டார்டார் உட்கார்ந்து இருந்தான். அவன் தமது பக்கத்தில் கழற்றி வைத்திருந்த சீருடையைப் பார்த்தால், அவன் ஒரு கோசாக்கு என்று தோன்றியது. நாலு சிப்பாய்கள் அவனைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். ஒரு கண்ணாடி அணிந்த டாக்டர், அவனுடைய தசை மிகுந்த, பழுப்பான முதுகில் கத்தியால் எதையோ வெட்டிக்கொண்டிருந்தார்.

'ஊ, ஊ, ஊ,' என்று அந்த டார்டார் முனங்கினான். திடீரென்று தன்னுடைய சப்பை மூக்குள்ள, கன்னத்து எலும்பு உயரமாயிருந்த முகத்தைத் தூக்கினான். தன்னுடைய வெள்ளைப் பற்களை மூடிக்கொண்டு, தன்னுடைய உடம்பை நெளித்து வளைத்து, ஒரு நீளமான காது செவிடுபடும்படியான குரலில் ஊளையிட்டான். மற்றொரு மேஜையைச் சுற்றி பலர் கூடி நின்றார்கள். ஒரு உயரமான, நன்றாய் உண்டு வளர்ந்த ஒருவன், தனது தலையைப் பின்னால் தொங்க விட்டுக்கொண்டு, மல்லாந்து படுத்திருந்தான். காயம் கட்டுகிறவர்கள் பலர் அவனுடைய நெஞ்சை அழுத்தி, அவன் எழுந்துவிடாமல் பிடித்துக்கொண்டிருந்தார்கள். அவனுடைய சுருண்ட முடியும், அதன் நிறமும், அவனுடைய தலையின் அமைப்பும், இளவரசர் ஆண்ட்ரூவுக்குப் பழக்கமானதுபோலத் தோன்றியது. அவனுடைய ஒரு பெரிய, பருத்த வெள்ளைக் கால், வேகமாக, எப்பொழுதும் ஜுரத்தில் ஏற்படும் நடுக்கம்போல, துடித்துக்கொண்டே இருந்தது. அந்த ஆசாமி விம்மி விம்மி அழுதுகொண்டு இருந்தான். அங்கே இரண்டு டாக்டர்கள்

இருந்தார்கள். ஒருவர், முகம் வெளிறி நடுங்கிக்கொண்டிருந்தார். அவர்கள் மௌனமாக அந்த மனிதனின் ஒரு காயம் பட்ட காலை என்னவோ செய்துகொண்டிருந்தார்கள். டார்டாரிடம் வேலை முடிந்ததும், அந்த டார்டாரை ஒரு வெளிச் சட்டையால் மூடினார்கள். டார்டாருக்கு சத்திர சிகிச்சை செய்துகொண்டிருந்த அந்தக் கண்ணாடி அணிந்த டாக்டர், தமது கைகளைத் துடைத்துக்கொண்டு, இளவரசர் ஆண்ட்ரூவிடம் வந்தார்.

அவர் இளவரசர் ஆண்ட்ரூவை நோக்கி, பார்த்து விட்டு, திடீரென்று வேறு பக்கம் திரும்பிக்கொண்டார்.

'அவருடைய ஆடைகளைக் களையுங்கள். எதற்காக நீங்கள் காத்துக் கொண்டிருக்கிறீர்கள்?' என்று அங்கு நின்ற கட்டுக் கட்டுகிறவர்களைப் பார்த்து கோபமாகக் கூச்சலிட்டார்.

குழந்தைப் பருவத்தில் உண்டான பழங்கால நினைவுகள், இளவரசர் ஆண்ட்ரூவின் மனதில் தோன்றின. அச்சமயம் தனது கைச் சட்டையை உயர்த்தி மடித்துக்கொண்டு, இளவரசர் ஆண்ட்ரூவின் ஆடைகளிலிருந்த பொத்தான்களைக் கழற்றி, உடைகளை அந்த கட்டுக் கட்டுபவன் களைய ஆரம்பித்தான். அந்த டாக்டர் குனிந்து காயத்தைப் பார்த்து, அதை விரலால் அமுக்கி ஒரு ஆழ்ந்த பெருமூச்சு விட்டார். அவர் யாரோ ஒருவருக்கு ஒரு சைகை காட்டினார். இளவரசர் ஆண்ட்ரூவுக்கு அடிவயிற்றில் தோன்றிய கடுமையான வலியினால் அவர் நினைவு இழந்தார். அவருக்கு மீண்டும் நினைவு வந்தபோது, தம்முடைய தொடையில் சிதறிப்போயிருந்த எலும்புகளை வெளியே எடுத்து விட்டதைக் கண்டார். காயமடைந்து இருந்த தசைகளை வெட்டி எடுத்து, காயத்திற்கு கட்டுப்போட்டிருந்தார்கள். அவருடைய முகத்தில் தண்ணீரைத் தெளித்தார்கள். இளவரசர் ஆண்ட்ரூ தமது கண்களைத் திறந்ததும், அந்த டாக்டர் குனிந்து மௌனமாக அவருடைய உதடுகளை முத்தமிட்டுவிட்டு, அங்கிருந்து வேகமாய்ப் போனார்.

அதுவரையில் துன்பங்களை அனுபவித்துக்கொண்டிருந்த இளவரசர் ஆண்ட்ரூ இப்பொழுது இதற்கு முன் வெகு காலமாக அனுபவித்திராத ஒரு பேரானந்தத்தை அனுபவித்துக் கொண்டிருந்தார். அவருடைய வாழ்க்கையில் ஏற்பட்ட சிறந்த மகிழ்ச்சியான சம்பவங்கள் எல்லாம்-முக்கியமாக, குழந்தைப் பருவத்தில் ஏற்பட்ட சம்பவங்கள் எல்லாம் அவருடைய நினைவிற்கு வந்தன. குழந்தைப் பருவத்தில் அவருடைய உடைகளைக் களைந்து, அவளுடைய தாதி அவரைப் படுக்கையில் படுக்கவைத்து, அவரிடம் குனிந்து அவரைத் தூங்க வைப்பதற்காகப்

பாடிய பாட்டுக்கள் எல்லாம் அவர் நினைவிற்கு வந்தன. அச்சமயம் அவர் தமது தலையைத் தலையணைக்குள் அழுத்திப் படுத்திருந்ததும், அவருடைய நினைவிற்கு வந்தது. இப்பொழுது அவற்றை நினைத்தபோது, அவருக்கு மகிழ்ச்சியாக இருந்தது. அவையெல்லாம் கடந்த கால சம்வங்களாக மட்டும் அவருடைய நினைவிற்குத் தோன்றவில்லை; தற்கால சம்பவங்களாகவும் தோன்றின.

யாருடைய தலையின் அமைப்பு தமக்குப் பழக்கமானது என்று இளவரசர் ஆண்ட்ரூவுக்குத் தோன்றியதோ, அந்த மனிதரிடம் டாக்டர்கள் வெகு சுறுசுறுப்பாக இருந்தார்கள். அவரை டாக்டர்கள் தூக்கி, அவர் அமைதியாக இருப்பதற்கு முயற்சி செய்தார்கள்.

'என்னிடம் அதைக் காட்டுங்கள்... ஓ, ஊ... ஓ! ஓ, ஊ' என்று வலியினால் ஏற்பட்ட, பீதியுற்ற முனக்கங்கள் இடையிடையே விம்மல்களோடு கேட்டு வந்தன.

இந்த முனங்கல்களைக் கேட்டதும், தாமும் அழவேண்டுமென்று இளவரசர் ஆண்ட்ரூவுக்குத் தோன்றியது. தாம் புகழ் எதுவுமில்லாமல் மரணமாவதற்கோ, அல்லது வாழ்க்கையை விட்டுப் பிரிந்து போவதற்காக வருத்தப்பட்டோ, அல்லது அவருக்கு நினைவு கூர்ந்த பழைய குழந்தை கால சம்பவங்கள் எல்லாம் இனி மேல் திரும்ப வரப்போவதில்லை என்பதற்கோ, அல்லது தாமும் மற்றவர்களும் துன்பப்பட்டுக் கொண்டிருக் கிறார்கள் என்பதற்கோ, அல்லது தமக்குப் பக்கத்திலிருந்த மனிதர் பரிதாபமாக முனங்கிக் கொண்டிருக்கிறாரே, அதற்காகவோ, இவற்றில் எதற்காக என்பது தெரியவில்லை; ஆனால், ஒரு குழந்தையைப்போல அன்பாக, மகிழ்ச்சியாக கண்ணீர் விட்டு அழுவதைப்போன்ற ஒரு உணர்ச்சி அவருக்குத் தோன்றியது.

வெட்டப்பட்ட காலை, அந்த மனிதனிடம் காட்டினார்கள். அந்தக் காலில் இரத்தக் கறைகளோடு அதில் மாட்டப்பட்டிருந்த ஜோடும் இருந்தது.

'ஓ! ஓ, ஊ!' என்று ஒரு பெண்ணைப் போல அவன் விம்மி விம்மி அழுதான்.

அவனுடைய முகத்தை இளவரசர் ஆண்ட்ரூ பார்க்கக்கூடாது என்பதற்காக, அங்கே நின்றுகொண்டிருந்த டாக்டர், அதன் பின்னால் அங்கிருந்த போய்விட்டார்.

அந்த பரிதாபகரமான, விம்மி விம்மி அழுதுகொண்டிருந்த, பலமற்ற மனிதனின் காலை வெட்டிவிட்டார்கள். அவன்தான்

அனடோல் குராகின் என்பதை இளவரசர் ஆண்ட்ரூ அடையாளம் கண்டு கொண்டார். அவனைச் சுற்றி நின்ற மனிதர்கள், தங்கள் கைகளால் தாங்கிக்கொண்டு, ஒரு கோப்பையில் அவனுக்கு தண்ணீர் கொடுத்தார்கள். ஆனால், அவனுடைய வீங்கிப்போன, உதறல் எடுத்த உதடுகளால், அந்த கோப்பையின் ஓரத்தைப் பற்ற முடியவில்லை. மிகுந்த வேதனையோடு அனடோல் விம்மி விம்மி அழுது கொண்டிருந்தான். 'ஆம், அவனேதான்; ஆம், அந்த மனிதன், என்னுடன் நெருக்கமாக, துக்ககரமாக சம்பந்தப்பட்டவன்' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். ஆனால், தமக்கு முன்னால் நடந்தவைகளின் அர்த்தத்தை, இன்னும் தெளிவாக அவர் உணர்ந்து கொள்ளவில்லை. 'என்னுடைய குழந்தைப் பருவத்தோடும், என்னுடைய வாழ்க்கையோடும், அந்த மனிதனுக்கு என்ன சம்பந்தம்?' என்று அவர் தம்மையே கேட்டார். அவருக்கு விடை கிடைக்கவில்லை. திடீரென்று அந்த புனிதமான, அன்பான குழந்தைப் பருவத்திலிருந்து ஒரு ஞாபகம் அவருக்குத் தோன்றியது. 1810 -ம் வருஷத்தில் ஒரு நடனக் கச்சேரியில் முதல் தடவையாக நட்டாஷாவை அவர் பார்த்ததை நினைவு கூர்ந்தார். அச்சமயம் காணப்பட்ட அவளுடைய மெல்லிய கைகளும், கழுத்தும், பரவசத்தை எதிர்நோக்கி நின்ற ஒரு பீதியுற்ற, மகிழ்ச்சியான முகமும், அவருக்குத் தோன்றின. அவளிடம் இதற்கு முன்னால் இருந்ததை விட, பலமான, தெளிவான காதலும், கனிவும் அவருடைய உள்ளத்தில் தோன்றின. தம்மை, தனது வீங்கிய கண்களிலிருந்து கண்ணீர் பெருக நோக்கிக்கொண்டிருக்கும் அந்த மனிதனோடு தமக்குள்ள தொடர்பை இப்பொழுது அவர்நினைவு கூர்ந்தார். ஒவ்வொன்றும் அவருக்கு நினைவுக்கு வந்தது. அந்த மனிதன் மீது அனுதாபமும், அன்பும், இளவரசர் ஆண்ட்ரூவின் மகிழ்ச்சியான உள்ளத்திலிருந்து பொங்கி வழிந்தன.

இதற்கு மேல் இளவரசர் ஆண்ட்ரூவால் தாங்கிக் கொண்டிருக்க முடியவில்லை. தமக்காகவும், தம்முன் இருக்கும் சகபாடிகளுக் காகவும், தம்முடையவும் அவர்களுடையவும் குற்றங்களுக்காவும், அன்பும் கனிவும் கலந்த கண்ணீரோடு அவர் அழுதார்.

'தம்மை விரும்புகிறவர்களையும், தம்மை வெறுக்கிறவர் களையும், நமது விரோதிகளையும், நமது சகோதரர்களையும் அன்பு கொண்டு, அவர்களிடம் இரக்கம் காட்ட வேண்டும்; ஆம், இந்த உலகத்தில் கடவுள் நமக்கு உபதேசித்த அந்த அன்பை, எனக்கு இளவரசி மேரி சொல்லிக் கொடுத்திருந்தும், நான் புரிந்துகொள்ள முடியாத அந்த அன்பை, அவர்களிடம் காட்ட வேண்டும்.

அவற்றை நான் முன்பாகவே அறிந்துகொள்ள முடியவில்லை. அதனால் தான், இந்த உயிரை விடுவது எனக்கு வருத்தமாயிருக்கிறது. நான் உயிரோடுஇருப்பேனாகில், அது ஒன்று தான் எனக்கு வேண்டும். ஆனால், இப்பொழுதோ, காலம் கடந்து விட்டது. எனக்கு அது தெரியும்.'



மாண்டவர்களும் காயப்பட்டவர்களும் நிறைந்து கிடந்த அந்த பயங்கரமான யுத்தகளக் காட்சி; தமது தலையில் பாரம்; தமக்கு நேரில் பழக்கமான சுமார் இருபது ஜெனரல்கள் கொல்லப் பட்டோ, காயம்பட்டோ போன விஷயம்; ஒரு காலத்தில் மிகுந்த வலிமையாய் இருந்த தம்முடைய பலம், இப்பொழுது ஒன்றும் செய்ய முடியாமல் போய்விட்ட பிரக்ஞை; இவையெல்லாம் சேர்ந்து ஒரு எதிர்பாராத உணர்ச்சியை நெப்போலியனிடம் தோற்றுவித்தன. கொல்லப்பட்டவர்களையும் காயம்பட்டவர்களையும் நேரில் தமது கண்ணால் பார்த்து, தம்முடைய மனதின் பலத்தைச் சோதித்துப் பார்க்க நெப்போலியன் வழக்கமாய் விரும்புவது உண்டு. இன்றைய தினம் அந்த யுத்தகளத்தின் பயங்கரமான தோற்றம், அவருடைய நெஞ்சழுத்தத்தை தோற்கடித்து விட்டது. இந்த நெஞ்சழுத்தம்தான் தம்முடைய சிறப்புக்கும், தம்முடைய பெருமைக்கும் காரணமானது என்று அவர் நினைத்து வந்தார். அவர் அந்த யுத்த களத்திலிருந்து வேகமாகத் திரும்பி ஷெவார்டினா குன்றுக்கு வந்தார். அங்கே ஒரு ஆசனத்தில் அமர்ந்தார். அவருடைய மஞ்சள் முகம் பெருத்து பாரமாய்த் தோன்றியது. அவருடைய கண்கள் மங்கின. அவருடைய நாசி சிவந்தது. அவருடைய குரல் கரகரத்தது. கீழ் நோக்கிய கண்களுடன் தம்மை, அறியாமலேயே, குண்டுகளின் சப்தத்தைக் கவனித்துக் கேட்டுக்கொண்டிருந்தார். துன்பமான அதைரியத்துடன் இந்தக் காரியத்தின் முடிவை எதிர் நோக்கிக் கொண்டிருந்தார். இந்தக் காரியத்தில் தாம் கலந்து கொண்டிருப்பதாக அவர் நினைத்து வந்தார். ஆனால், இப்பொழுது அதை அவரால் நிறுத்த முடியவில்லை. வெகு காலமாக செயற்கையான பிரம்மையைக் கொண்ட வாழ்க்கையை அவர் வாழ்ந்திருந்தார். அதை மீறி ஒரு வினாடி அவருக்கு மனித உணர்ச்சி ஏற்பட்டது. அச்சமயத்தில் யுத்த களத்தில் அவர் கண்ட துன்பத்தையும் மரணத்தையும்

உணர்ச்சியோடு நினைத்துப் பார்த்தார். அவருடைய தலையிலும் மார்பிலும் தோன்றிய அந்த பாரமான உணர்ச்சி, ஒருவேளை தமக்கு துன்பத்தையும் மரணத்தையும் கொண்டு வந்துவிடுமோ என்று அவர் மனதில் தோன்றியது. அந்த வினாடியில் அவர் மாஸ்கோவையோ, வெற்றியையோ, அல்லது புகழையோ விரும்பவில்லை. அதிகமான புகழ் அவருக்கு என்ன அவசியம்? அவர் ஒரே ஒரு விஷயத்தைத்தான் விரும்பினார். அதாவது, ஓய்வு, மனஅமைதி, சுதந்திரம். அவர் செமியோனாவ்ஸ்க் குன்றின் மீது இருந்தபோது, பீரங்கிப் படை கமாண்டர் அவரிடம் வந்து, இன்னும் அதிகமான பீரங்கிகளை அங்கே கொண்டு வரவேண்டும் என்று யோசனை கூறினார். கினியாஜ்கோவா என்ற இடத்திற்கு முன்பாகக் கூடியிருந்த ருஷ்யத் துருப்புகள் மீது குண்டுகள் போடுவதை இன்னும் பலப்படுத்த வேண்டும் என்று அவர் கூறினார். நெப்போலியன் அதற்கு சம்மதித்தார். பின்னால், அந்த பீரங்கிப் படைகளால் ஏற்பட்ட பலன்களைத் தம்மிடம் வந்து தெரிவிக்க வேண்டும் என்று அவர் உத்தரவிட்டார்.

இப்பொழுது அதைப்பற்றி தெரிவிப்பதற்காக ஒரு உதவியாளர் அங்கே வந்தார். இருநூறு பீரங்கிகளிலிருந்து ஒருமுகமாக அந்த ருஷ்யர்கள் மீது குண்டுகள் விழுந்து கொண்டிருந்த போதிலும், அவர்கள் இன்னமும் தங்கள் இடத்தில் பலமாய் ஊன்றிக் கொண்டிருக்கிறார்கள் என்று அவர் கூறினார்.

'நமது குண்டுகள் எதிரிகளை வரிசை வரிசையாக அழித்து வந்தாலும், அவர்கள் இன்னமும் தங்கள் இடங்களில் ஊன்றி நிற்கிறார்கள்' என்று அந்த உதவியாளர் சொன்னார்.

'அவர்களுக்கு இன்னும் அதிகம் வேண்டும் போல் இருக்கிறது...' என்று நெப்போலியன் ஒரு கரகரத்த குரலில் சொன்னார்.

'என்ன, மாட்சிமை தங்கியவரே?' என்று, அவர் கூறியதை நன்றாய் கேட்காத அந்த உதவியாளர் வினவினார்.

'அவர்களுக்கு இன்னும் அதிகம் வேண்டும்போல் இருக்கிறது. அப்படியே கொடுங்கள்' என்று முகம் சுளித்து நெப்போலியன் முனங்கினார்.

தாம் விரும்பாத அந்த உத்தரவைக் கொடுப்பதற்கு முன்பாகவே, அவருக்கு விருப்பமில்லாத அந்த விஷயம் ஏற்கெனவே நடந்து விட்டது. அவருக்கு விருப்பமில்லாத விஷயமாய் இருந்தாலும், அதற்கு ஏன் உத்தரவு கொடுத்தார் என்றால், தம்மிடமிருந்து

அம்மாதிரி உத்தரவை அவர்கள் எதிர்பார்த்தார்கள் என்று அவர் நினைத்தார். மீண்டும் அவர் அந்த மனோராஜ்ய பெருமையைக் காட்டும் செயற்கையான லோகத்தில் சஞ்சரிக்க ஆரம்பித்தார். தன்னுடைய நன்மைக்காகவே தான் செய்ததைப்போல சக்கரத்தை குதிரை மேலும் மேலும் மிதித்துக் கொண்டே இருக்கும். (செக்கு மாடுகள் சுற்றிச் சுற்றி வருவதைப்போல) அதே மாதிரி நெப்போலியன் நினைத்துக்கொண்டிருந்தார். ஆகவே, அவர் செய்தாக வேண்டும் என்று விதி முன்பாகவே தீர்மானித்தபடி, அந்த விதிக்குப் பணிந்து, கொடுமையான, துக்கமான, மனக்குழப்பமான, மனிதத் தன்மையற்ற காரியங்களை அவர் நிறைவேற்றி வந்தார்.

அன்று நடந்த காரியங்களுக்கு, அதில் கலந்து கொண்ட மற்ற எல்லாரையும் விட, நெப்போலியன் மீதே அதிகமான பொறுப்பு ஏற்படும். அன்று தான், அந்த நேரத்தில் தான் அந்த மனிதனுடைய மனமும் மனச்சாட்சியும் இருண்டது என்பதில்லை. அவருடைய ஆயுள் முடிகிற வரையில், ஒரு நல்ல காரியத்தையோ, அதையோ, அல்லது உண்மையையோ அவர் அறிந்து கொண்டதில்லை. நன்மைக்கும் உண்மைக்கும் நேர் விரோதமான காரியங்களை அவர் செய்தபோது, அவற்றின் முக்கியத்வத்தையோ, அல்லது மனிதத் தன்மைக்கு நேர் விரோதமாக அவை இருப்பதையோ, அவரால் அறிந்து கொள்ள முடிந்ததில்லை. தம்முடைய காரியங்களுக்கு தாம் பொறுப்பல்ல என்று அவரால் சொல்ல முடியாது. அந்தக் காரியங்களை உலகத்தில் பாதிப் பேர் புகழ்ந்தார்கள். ஆகவே, உண்மையையும், நல்லகாரியங்களையும், எல்லா மனிதத் தன்மைகளையும் அவர் புறக்கணிக்க வேண்டியதாய் ஏற்பட்டது.

யுத்த களத்தில் கொல்லப்பட்டும் காயம் அடைந்தும் போன மனிதர்கள் சிதறிக் கிடந்த போது, அங்கே போய் அவர் பார்த்தார். தம்முடைய விருப்பத்தினால்தான் இவையெல்லாம் நடந்தன என்று அவர் நினைத்தார். அச்சமயம் ஒவ்வொரு பிரஞ்சுக் காரனுக்கும் பதிலாக எத்தனை ருஷ்யர்கள் கீழே விழுந்திருந்தார்கள் என்று மனக்கணக்கு போட்டார். தம்மையே தாம் ஏமாற்றிக் கொண்டு, ஒவ்வொரு பிரஞ்சுக்காரனுக்கும் பதிலாக ஐந்து ருஷ்யர்கள் வீழ்ந்திருப்பதாக கணக்குப் போட்டு மகிழ்ந்து கொண்டார். இந்த காரியத்தை அன்று மட்டும்தான் அவர் செய்தார் என்பதில்லை; அவர் பாரிஸுக்கு எழுதிய கடிதத்தில், யுத்தகளம் மிகுந்த சிலாக்கியமாய் இருந்தது என்றும், ஐம்பதினாயிரம் பிரேதங்கள் சிதறிக் கிடந்தன என்றும் எழுதினார் என்பதும் இல்லை; அன்று மட்டும்தான் அவர் அம்மாதிரி எழுதினார்

என்பதும்இல்லை; செயின்ட் ஹெலினா என்ற தீவில் அவர் அமைதியான, தனிமையான சூழ்நிலையில் இருந்தபோது, தாம் செய்த பெரிய காரியங்களைப் பற்றி எழுதப் போவதாக சொல்லியபோதும் கூட, அவர் அம்மாதிரியே எழுதினார்.

அதாவது:-

'தற்காலத்தில் ருஷ்ய யுத்தமானது, மக்களுக்கு மிகவும் பிடித்தமான யுத்தமாக இருந்திருக்க வேண்டும். நல்ல எண்ணத்தோடு, நல்ல காரியங்களுக்காக, எல்லாருடைய அமைதிக்காகவும் பாதுகாப்புக்காகவும் செய்யப்பட்ட யுத்தமாகும். அது முற்றிலும் சமாதானத்தையும் நிதானத்தையும் கொண்டிருந்தது.

'நிச்சயமற்ற தன்மைக்கு முடிவு கட்டி, பாதுகாப்புக்கான வேலையை ஆரம்பிக்கும் ஒரு பெரிய கொள்கைக்காக, அந்த யுத்தம் நடந்தது. எல்லாருக்கும் நன்மையையும் செழிப்பையும் கொடுக்கக் கூடிய ஒரு புதிய தோற்றமும் புதிய வேலைகளும் தோன்றின. ஐரோப்பாவின் கட்டுக்கோப்புக்கு ஏற்கெனவே அஸ்திவாரம் போடப்பட்டாய் விட்டது. அதை ஒழுங்காய் அமைக்க வேண்டியது ஒன்றுதான் பாக்கி இருந்தது.

'இந்த முக்கியமான விஷயங்களில் திருப்தி ஏற்பட்டு, எல்லா இடங்களிலும் அமைதி ஏற்பட்டு விட்டால், நான் கூட என்னுடைய காங்கிரஸையும், என்னுடைய பரிசுத்த ஒப்பந்தங்களையும் ஏற்படுத்தி இருப்பேன். இந்தக் கருத்துக்கள் என்னிடமிருந்து திருடப் பட்டவை. பெரிய சக்கரவர்த்திகள் மீண்டும் கூடி, ஒரே குடும்பம் மாதிரி எங்களுடைய நன்மைகளைப் பற்றி நாங்கள் விவாதித்திருப்போம். எங்களுடைய செய்கைகளைப் பற்றி மக்களுக்கு, ஒரு குமாஸ்தா தன்னுடைய எஜமானனிடம் கூறுவதைப்போல, எடுத்துச் சொல்லுவோம்.

'இம்மாதிரியாக ஐரோப்பா முழுவதுமே சீக்கிரமாக உண்மையில் ஒரே சமுதாயத்தைக் கொண்டதாய் ஏற்படும். எந்த இடத்திற்கு யார் பிரயாணம் போனாலும், இன்னமும் தங்களுடைய பொதுவான தந்தை நாட்டிலேயே தாங்கள் இருப்பதை அவர்கள் காண்பார்கள். கப்பல்கள் போகக்கூடிய எல்லா நதிகளிலும் கப்பல்களை ஓட்டுவதற்கு எல்லாருக்கும் உரிமை வேண்டும் என்று நான் கேட்டிருப்பேன். சமுத்திரங்கள் எல்லாருக்கும் பொதுவாய் இருக்க வேண்டும் என்று நான் கேட்டிருப்பேன். நிரந்தரமாக இருக்கும் பெரிய ராணுவங்களைக் குறைத்து, சக்கரவர்த்திகளுக்குக் காப்பாளர்களாக வேண்டியவர்களை மட்டும் வைத்துக் கொள்ளும்படி நான் செய்திருப்பேன்.

'நான் பிரான்ஸிற்குத் திரும்புவேன். அந்த மகா பெரிய பலமான, பிரமாதமான, அமைதியான, மகிமை பெற்ற தந்தை நாட்டிற்குத் திரும்புவேன். அதன் எல்லைகள் மாற்ற முடியாதவைகள் என்று பிரகடனப்படுத்துவேன். எதிர்கால யுத்தங்கள் எல்லாம் தற்காப்பு யுத்தங்களாகவே இருக்கும். ஆக்கிரமிப்புகளெல்லாம் தேசீயத்திற்கு விரோதமானவை என்று அறிவிக்கப்படும். எனது குமாரனை இந்த ஏகாதிபத்தியத்தில் சேர்த்து வைப்பேன். என்னுடைய எதேச்சதிகாரம் அத்துடன் முடிந்து போகும். அவனுடைய சட்டபூர்வமான ஆட்சி அப்பொழுது ஆரம்பமாகும்.

'உலகத்தின் தலைநகராக பாரிஸ் விளங்கும். பிரஞ்சு சமுதாயம் மற்ற சமுதாயங்களால் பெருமைப்படக்கூடிய விதமாய் காணப்படும்.

'எனக்குள்ள ஓய்வு காலத்தையும் என்னுடைய வயோதிக பருவத்தையும், சக்கரவர்த்தினியோடு சேர்ந்து சாவகாசமாக சுற்றுப் பிரயாணம் செய்வதில் கழிப்பேன். அச்சமயம் என்னுடைய குமாரன் ராஜாங்கத்தை ஆளுவதில் பயிற்சி பெற்றுக் கொண்டிருப்பான். ஒரு உண்மையான கிராமாந்திர சதிபதிகளைப்போல ஏகாதிபத்தியத்தின் ஒவ்வொரு மூலை முடுக்கிற்கும் நாங்கள் போவோம். எங்களுக்கு வேண்டிய குதிரைகளை நாங்கள் வைத்திருப்போம். அங்கங்கே மக்கள் கூறும் குறைகளைக் கவனித்து, அவற்றிற்கு பரிகாரம் தேடுவோம். எல்லா பக்கங்களிலும் ஒவ்வொரு இடத்திலும் மக்களுக்கு வேண்டிய பொதுவான கட்டிங்களையும் நன்மைகளையும் செய்வோம்.'

மக்களைக் கொல்லுவதற்கு ஒரு கொலைகாரனைப் போல, துக்ககரமான செய்கையை செய்வதற்காக, நெப்போலியனை பரம்பொருள் ஏற்கெனவே தீர்மானித்திருந்தது. ஆனால், அந்த நெப்போலியன் தம்முடைய செய்கைகளுக்கு முக்கியமான நோக்கம் மக்களின் நன்மைதான் என்று சொல்லுகிறார்; அவர் கோடிக்கணக்கான மக்களின் விதிகளை ஆளுவதாகவும், தம்முடைய அதிகாரத்தினால் மக்களுக்கு நன்மைகளை செய்ய முடியும் என்றும் கூறுகிறார்.

'விஸ்டுலா நதியைக் கடந்த நான்கு லட்சம் பேர்களில் பாதிப் பேர் பின் வருமாறு' என்று ருஷ்ய யுத்தத்தைப் பற்றி நெப்போலியன் எழுதியபோது ஒரு இடத்தில் கூறுகிறார். 'அவர்களில் பாதிப்பேர் ஆஸ்திரியர்கள், பிரஷ்யர்கள், சாக்ஸன்கள், போலந்துக்காரர்கள், பவேரியன்கள், உர்ட்டெம்பெர்க்கர்கள், மெர்க்லென்பெர்க்கர்கள், ஸ்பானியர்கள், இத்தாலியர்கள், நியாபாலிடன்கள்,

ஆகியவர்களாகும். ஏகாதிபத்திய ராணுவத்தில் மூன்றில் ஒரு பங்குக்காரர்கள் பின் வருமாறு: டச்சுக்காரர்கள், பெல்ஜியர்கள், ரைன் நதிக் கரைக்காரர்கள், பீட்மாண்ட்காரர்கள், ஸ்விஸ்காரர்கள், ஜினிவாகாரர்கள், டஸ்கன்கள், ரோமன்கள், 32-வது ராணுவ டிவிஷனைச் சேர்ந்த ஊர்வாசிகளான ஹாம்பர்க்-பிரெமென் பிரதேச வாசிகள் ஆகியவர்களாகும். அந்த ராணுவத்தில் 140 ஆயிரம் பேர்களுக்குத் தான் பிரஞ்சு மொழி பேசத் தெரியும். ருஷ்ய படையெடுப்பினால் பிரான்ஸுக்கு ஏற்பட்ட நஷ்டம் 50 ஆயிரம் மனிதர்களுக்கும் குறைவாகத்தான் இருக்கும். ஆனால், ருஷ்ய ராணுவத்தில், அது வில்னாவிலிருந்து மாஸ்கோவிற்கு பின் வாங்கிப் போனபோது ஏற்பட்ட போர்களினால், பிரஞ்சு ராணுவத்திற்கு ஏற்பட்ட நஷ்டம் மாதிரி, நான்கு மடங்கு நஷ்டம் ஏற்பட்டது. மாஸ்கோவைக் கொளுத்தியதினால் குளிரைத் தாங்குவதற்கு விறகுகள் கிடைக்காமல் நூறாயிரம் ருஷ்யர்கள் மாண்டார்கள். கடைசியாக மாஸ்கோவிலிருந்து ஆடருக்கு ருஷ்ய ராணுவம் பின்வாங்கியபோதும் குளிரினால் நஷ்டமடைந்தது. ஆகவே, வில்னாவுக்கு அது வரும்போது 50 ஆயிரம் இருந்தது. காலீஷுக்கு அது வரும்போது 18 ஆயிரத்துக்கும் குறைவாய் இருந்தது.'

ருஷ்யாவுடன் ஏற்பட்ட யுத்தம் தம்முடைய விருப்பத்தினால் தான் நடந்தது என்று அவர் மனோராஜ்யம் செய்கிறார். அந்த யுத்தத்தினால் ஏற்பட்ட பயங்கரங்கள் அவருடைய உள்ளத்தைத் தாக்கவில்லை என்று அவர் மனோராஜ்யம் செய்கிறார். நடந்த விஷயங்களுக்கு எல்லாம்தாமே முழு பொறுப்பையும் தைரியமாக ஏற்றுக்கொள்ளுகிறார். அவருடைய இருளடைந்த மனம், ஒரு விஷயத்தில் நம்பிக்கை கொண்டு சமாதானம் அடைந்து கொள்ளுகிறது. அதாவது, லட்சக்கணக்கான, பிரஞ்சுப் படையைச் சேர்ந்தவர்கள், அந்த யுத்த களத்தில் மாண்டுபோனாலும்கூட, ஹெஸ்ஸியன்களையும் பவேரியன்களையும் விட, பிரஞ்சுக்காரர்கள் சொற்பமாகவே மாண்டார்கள் என்பதுதான் அந்த சமாதானமாகும்.

# 10

## 39

பல லட்சக்கணக்கான வீரர்கள், வெவ்வேறு விதமான யூனிபாரங்களோடு, பற்பல விதமான நிலைகளில் யுத்தகளங் களிலும் புல்வெளிகளிலும், படுகொலை செய்யப்பட்டுக் கிடந்தார்கள். அந்தப் புல்வெளிகள் டாவிடாவ் குடும்பத்திற்கும்,

ராஜாங்கத்தைச் சேர்ந்த அடிமைகளுக்கும் சொந்தமானவை. நூற்றுக்கணக்கான வருஷங்களாக பாராடினோ, கோர்க்கி, ஷெவார்டினா, செமியோனாவ்ஸ்க், ஆகிய கிராமங்களைச் சேர்ந்த விவசாயிகள், அந்த வயல்களில் தானியங்களை விதைத்து அறுவடை செய்தும், அந்தப் புல் வெளிகளில் தங்கள் மந்தைகளை மேய்த்தும் வந்தார்கள். காயம் கட்டும் இடங்களில் உள்ள புல்லும் மண்ணும், சுமார் மூன்று ஏக்கர் சுற்றளவு வரையில் ரத்தத்தால் நனைந்து நின்றன. ராணுவத்தின் பற்பல பிரிவைச் சேர்ந்த வீரர்கள் கூட்டம் கூட்டமாகக் காயமடைந்தோ, காயம் அடையாமலோ மீண்டும் மஜாய்ஸ்க்கும் வாலாவுக்கும் வந்து சேர்ந்தார்கள். பசியினாலும் களைப்பினாலும் சோர்ந்திருந்த பலர் அதிகாரிகளால் போர் முனைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். வேறு பலர் தாங்கள் நின்ற இடத்திலேயே நிலைத்து நின்று தொடர்ந்து சுட்டுக்கொண்டிருந்தார்கள்.

அந்த முழு யுத்த களமும் காலையில் சூரிய ஒளியில் துப்பாக்கி சனியன்களின் மின்னுதல்களாலும், புகையால் ஆகிய மேகங்களாலும் மனோகரமான அழகோடு காணப்பட்டது. ஆனால், இப்பொழுது அங்கே ஓதத்தின் மூடுபனி பரவி, வெடி மருந்துப் புகையினாலும், ரத்தத்தினாலும் ஏற்பட்ட ஒரு விசித்திரமான நெடி வீசிக்கொண்டிருந்தது. மேகங்கள் வந்து சேர்ந்து, காயம்பட்டவர்கள் மீதும், பயந்தவர்கள் மீதும், களைத்துப் போனவர்கள் மீதும், தயங்கிக் கொண்டிருந்தவர்கள் மீதும் மழைத்துளிகள் விழ ஆரம்பித்தன. 'போதும், மக்களே! போதும்! நிறுத்துங்கள்... நீங்களே நினைத்துப் பாருங்கள்! நீங்கள் என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்பது போல, அந்த மழைத் துளிகள் விழுந்தன.

இரு கட்சிகளிலும் உள்ளவர்கள் ஒரே மாதிரியாகவே உணவும் ஓய்வும் இல்லாமல் களைத்துப் போய் இருந்தார்கள்; ஒருவரை ஒருவர் படுகொலை செய்வதை இன்னமும் தொடர்ந்து செய்ய வேண்டுமா என்பதைப் பற்றி, இரு கட்சிகளைச் சேர்ந்தவர்களும் சந்தேகப்பட ஆரம்பிப்பதைப்போலக் காணப்பட்டார்கள்; எல்லாருடைய முகங்களிலும் தயக்கம் காணப்பட்டது; எல்லாருடைய உள்ளங்களிலும் இந்தக் கேள்வி தோன்றியது: 'எதற்காக, யாருக்காக, நான் கொல்ல வேண்டும், அல்லது கொல்லப்படவேண்டும்?... நீ போய், உனக்கு யாரை வேண்டுமோ கொல்லு. ஆனால், அம்மாதிரி இனி நான் செய்ய விரும்பவில்லை.' மாலைக்குள்ளாக இந்த நினைப்பு ஒவ்வொருவர் உள்ளத்திலும்

பழுத்துவிட்டது. எந்த வினாடியிலும் தாங்கள் செய்து கொண்டிருக்கும் காரியங்களினால் அவர்களை பீதி பற்றிக்கொள்ளலாம்; உடனே அவர்கள் எல்லாவற்றையும் வீசி ஏறிந்துவிட்டு, எங்காவது ஓடிப் போக நேரிடலாம்.

அன்றைய போர் முடியும் கட்டத்தில், வீரர்கள் எல்லாருக்கும் தாங்கள் செய்து கொண்டிருந்த காரியங்களைப் பற்றி எல்லா விதமான பீதிகளையும் உணர்ந்தார்கள்; அவற்றை விட்டு விட்டுப் போக அவர்கள் சந்தோஷமாய் இருந்திருப்பார்கள்; ஆனால், அறிவுக்கு எட்டாத ஒரு ரகசியமான சக்தி அவர்களை இன்னமும் ஆண்டு வந்தது; அவர்கள் இன்னமும் வெடி மருந்துகளைக் கொண்டு வந்தும், பீரங்கிகளில் அவைகளைப் போட்டுக் கெட்டித்தும், குறிபார்த்துக்கொண்டும், கடைசியில் தீ வைத்துக் கொளுத்திக்கொண்டும் இருந்தார்கள்; பீரங்கிப் படையைச் சேர்ந்தவர்களில் மூன்றில் ஒருவர்தான் உயிரோடு இருந்தபோதிலும், களைப்பினால் தட்டுத் தடுமாறிக்கொண்டு மூச்சு வாங்கிக்கொண்டு இருந்த போதிலும், வியர்த்துக்கொண்டும் உடம்பெல்லாம் ரத்தத்தினாலும் வெடி மருந்தினாலும் கறை பட்டுக்கொண்டும் இருந்தபோதிலும், அவர்கள் அந்தக் காரியங்களைத் தொடர்ந்து செய்து வந்தார்கள். பீரங்கி குண்டுகள் முன்போலவே வேகமாவும் கொடூரமாகவும் இரண்டு பக்கங்களிலிருந்தும் பறந்து வந்து மனித உடம்புகளை நசுக்கிக்கொண்டிருந்தன. அந்த பயங்கரமான வேலை, தனிப்பட்ட ஒருவனின் விருப்பத்தினால் நடைபெற வில்லை. ஆனால், மனிதர்களையும் உலகங்களையும் ஆண்டுவரும் அந்த பரம்பொருளின் விருப்பப்படியே நடந்து வந்தது.

ருஷ்யர்களின் ராணுவத்தின் நிலை குலைந்த பின் பகுதியை ஒருவர் பார்ப்பாரானால், இம்மாதிரி அவர் சொல்லலாம். அதாவது, பிரஞ்சுக்காரர்கள் இன்னும் ஒரு சிறிய முயற்சி செய்திருந்தால் அந்த ராணுவம் அழிந்துபோய் இருக்கும் என்று சொல்லலாம். பிரஞ்சு ராணுவத்தின் பின் பகுதியை ஒருவர் பார்ப்பாரானால், அவரும் இம்மாதிரி சொல்லலாம். அதாவது, ருஷ்யர்கள் இன்னும் ஒரு லேசான முயற்சியை செய்திருப்பார்களானால் பிரஞ்சு ராணுவத்தை அழித்திருக்கலாம் என்று சொல்லலாம். ஆனால், பிரஞ்சுக்காரர் களோ, அல்லது ருஷ்யர்களோ அம்மாதிரி முயற்சி எதுவும் செய்யவில்லை. ஆகவே, அன்றைய போரின் ஜுவாலையானது குறைந்துகொண்டே வந்து மறைந்தது.

ருஷ்யர்கள் அம்மாதிரி முயற்சியை செய்யவில்லை; ஏனென்றால் அவர்கள் பிரஞ்சுக்காரர்களை வலுவில் தாக்கவில்லை.

போரின் ஆரம்பத்தில் மாஸ்கோவிற்குப் போகவிடாமல் வழி மறித்து நின்றார்கள். போரின் முடிவிலும் அதே மாதிரியே, போரின் ஆரம்பத்தில் செய்தபடியே செய்து வந்தார்கள். பிரஞ்சுக்காரர்களை அவர்களுடைய முகாம்களிலிருந்து விரட்டியடிக்கவேண்டும் என்பது ருஷ்யர்களின் நோக்கமாக இருந்தாலும்கூட அவர்களால் அந்தக் கடைசி முயற்சியை செய்திருக்க முடியாது. ஏனென்றால், ருஷ்ய துருப்புகள் எல்லாம் அடிபட்டுப் போயின. ருஷ்ய ராணுவத்தின் ஒரு பகுதிகூட அந்தப் போரில் நஷ்டம் அடையாமல் தப்பவில்லை. அவர்கள் இன்னமும் தங்கள் நிலைமையில் ஊன்றி நின்றாலும், அந்த ராணுவத்தில் பாதிப்பேரை அவர்கள் இழந்து விட்டார்கள்.

சென்ற பதினைந்து வருஷங்களாக தாங்கள் பெற்று வந்த வெற்றிகள் பிரஞ்சுக்காரர்களின் நினைவில் இருந்து வந்தன. நெப்போலியனை யாரும் அசைக்க முடியாது என்ற உறுதியும் அவர்களுக்கு இருந்து வந்தது. யுத்த களத்தில் ஒரு பகுதியைப் பிடித்து விட்டோம் என்ற உணர்வும் அவர்களுக்கு இருந்தது. அந்தப் போரில் கால் பங்கு பேர்களையே அவர்கள் இழந்தார்கள் என்பதும் அவர்களுக்குத் தெரியும். 25 ஆயிரம் வீரர்களைக்கொண்ட காப்பாளர் படை இன்னமும் சேதப்படாமல் இருக்கிறது என்பதையும் அவர்கள் அறிவார்கள். ஆகவே, அந்தக் கடைசி முயற்சியை அவர்கள் சுலபமாய் செய்திருக்கலாம். ருஷ்ய ராணுவத்தை அதனுடைய அரண்களில் இருந்து விரட்டி அடிக்கவே பிரஞ்சுக்காரர்கள் வலுவில் தாக்கியபடியால், அவர்களே அந்தக் கடைசி முயற்சியை செய்திருக்கவேண்டும். ஏனெனில், மாஸ்கோவிற்குப் போகிற ரஸ்தாவை ருஷ்யர்கள் அடைத்து நிற்கிற வரையில், பிரஞ்சுக்காரர்களுடைய நோக்கம் நிறைவேற முடியாது. அவர்களுடைய எல்லா முயற்சிகளும், நஷ்டங்களும் வீணாய் போகும். ஆனால், அந்தப் பிரஞ்சுக்காரர்கள் அந்த கடைசி முயற்சியைச் செய்யவில்லை. நெப்போலியன் தம்முடைய பாதுகாப்பாளர் படையை உபயோகித்திருந்தால், அந்தப் போரில் வெற்றி கிடைத்திருக்கும் என்று சில சரித்திர ஆசிரியர்கள் சொல்லுகிறார்கள். நெப்போலியன் தமது காப்பாளர் படையை உபயோகித்திருந்தால் என்ன நடந்திருக்கும் என்று பேசுவது, இலையுதிர்காலம் துளிர்விடும் காலமாக மாறிவிட்டால் என்ன நடக்கலாம் என்று பேசுவதைப் போலவே இருக்கின்றது. அம்மாதிரி நேரிட முடியாது. நெப்போலியன் தமது காப்பாளர் படையைக் கொடுக்கவில்லை என்றால், அவருக்குக் கொடுக்க விருப்பம் இல்லை என்பதல்ல; அம்மாதிரி செய்ய முடியாது என்பதே

அதற்குக் காரணம். பிரஞ்சுத் துருப்புகளின் வேகம் குறைந்துவிட்டபடியால், அச்சமயத்தில் காப்பளர் படையையும் கொடுத்துவிட முடியாது என்பதை, பிரஞ்சு ராணுவத்தைச் சேர்ந்த எல்லா ஜெனரல்களும், அதிகாரிகளும் சிப்பாய்களும் அறிவார்கள்.

தம்முடைய பராக்கிரமமான பலம் முறிந்துவிட்டது என்ற பயங்கரமான சொப்பனத்தை நெப்போலியன் மட்டும் அனுபவித்துக் கொண்டிருக்கவில்லை; அவருடைய ராணுவத்தைச் சேர்ந்த எல்லா ஜெனரல்களும், சிப்பாய்களும் அனுபவித்து வந்தார்கள்; இந்த யுத்தத்தில் கலந்து கொண்டவர்களும், கலந்து கொள்ளாதவர்களும் அனுபவித்து வந்தார்கள்; இந்தப் போரில் செய்யப்பட்ட முயற்சிகளில் பத்தில் ஒரு பங்கு செய்தபோதே, முன்பெல்லாம் எதிரிகள் ஓடிக்கொண்டிருந்தார்கள். அம்மாதிரியான அனுபவங்களையெல்லாம் முந்தைப் போர்களில் பார்த்தவர்கள், இப்பொழுது எதிரி முன்பு ஒரு பயங்கரமான சொப்பன உணர்ச்சியை அனுபவித்தார்கள். அந்த எதிரி போரின் ஆரம்பத்தில் எம்மாதிரி பயமுறுத்திக்கொண்டு ஊன்றி நின்றானோ, அதேமாதிரி போரின் கடைசியிலும், தனது ஆட்களில் பாதிப்பேரை இழந்திருந்தும், அசையாமல் நிற்கின்றன. வலுத் தாக்குதல் செய்த பிரஞ்சு ராணுவத்தின் தார்மீக பலம் மறைந்து போய்விட்டது. பாராடினோவில் ஒரு தார்மீக வெற்றியை ருஷ்யர்கள் அடைந்தார்கள். யுத்த களத்தில் அகப்படுகிற, கம்புகளில் எதையோ கட்டி, கொடிகள் என்று அழைக்கப்படுபவைகளைக் காட்டி, அதுதான் வெற்றி என்று சொல்லும் வெற்றி அல்ல, இது. எதிரிகள் நின்ற இடத்தில் தாங்கள் இப்பொழுது நிற்கிறோம் என்று சொல்லும் வெற்றியும் அல்ல. ஆனால், ஒரு தார்மீக வெற்றி; தார்மீக உயர்வில் எதிரியைவிட ருஷ்யர்கள் உயர்ந்தவர்கள் என்று எதிரிகளே ஒப்புக்கொள்ளும்படி செய்த ஒரு தார்மீக வெற்றி; எதிரிகள் தங்களுடைய கையால் ஆகாத்தனத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்த ஒரு தார்மீக வெற்றி; இந்த வெற்றியை பாராடினோவில் ருஷ்யர்கள் அடைந்தார்கள். ஒரு கோபம் அடைந்த மிருகத்தைப்போல முன்னேறி வந்த பிரஞ்சுக்காரர்கள் மரண காயமடைந்தார்கள். அவர்கள் இப்பொழுது தாங்கள் அழிந்துகொண்டிருப்பதாக உணர்ந்தார்கள். என்றாலும், அவர்களால் இப்பொழுது நிற்க முடியாது. அதேமாதிரி பாதிப்படைகள் நாசமான போதிலும், ருஷ்யர்களும் தாங்கள் எதிர்த்து நிற்பதை விட்டுவிட முடியாது. ஆரம்பித்த வேகத்தில் வந்துகொண்டிருந்த பிரஞ்சு ராணுவம், இன்னமும் மாஸ்கோவைப் போய் அடைவதற்கான வேகத்தோடு இருந்தது. ஆனால், அங்கே

ருஷ்யர்கள் இனி எவ்வித முயற்சியும் செய்யாமலேயே அந்த ராணுவம் அழிய வேண்டியதுதான். பாராடினோவில் அது பெற்ற மரண காயத்திலிருந்து ரத்தம் கொட்டி அழிய வேண்டியதுதான். பாராடினோ போரினால் ஏற்பட்ட நேரடியான பலன்தான், நெப்போலியன் புத்தியில்லாமல் மாஸ்கோவைவிட்டு பழைய ஸ்மாலென்ஸ்க் ரஸ்தா வழியாகப் பின் வாங்கிப் போனதாகும். அந்த ரஸ்தா வழியாகப் போனதால், பிரஞ்சு ராணுவத்தில் ஐந்து லட்சம் பேர்கள் நாசமானார்கள்; நெப்போலியனுடைய பிரான்ஸும் தலை கவிழ்ந்தது. அந்த பிரான்ஸ் மீது முதல் தடவையாக, பிரான்ஸைவிட பலமான உறுதி கொண்ட எதிரியின் பல வரிசை காட்டப்பட்டது, பாராடினோவில் தான் நடந்தது.



# விளக்க உரைகள்



ஜூலி எழுதிய கடிதத்தில் பிரஞ்சு நாகரிகத்தை மேற்கொண்ட ருஷ்ய கனதனவான்கள் கூட்டங்களில் காணப்பட்ட போலி தேசாபிமானத்தை டால்ஸ்டாய் குறிப்பிடுகிறார். அவர்களால் அச்சமயத்தில் பிரஞ்சு மொழியைக்கூடத் தவிர்க்க முடியவில்லை.



பெராபோன்டாவ் என்பவரின் ஹோட்டல் பிரயாணிகளுக்காக ஏற்பட்டது.

பிளாட்டாவ் என்பவர் கோசாக் ராணுவத்தின் மார்ஷல். *1812*-ஆம் வருஷத்துப் போரில் மிகுந்த பிரபலமாக விளங்கிய ருஷ்ய வீரர்களில் ஒருவர். ஒரு சமயத்தில் நெப்போலியனை அவர் அநேகமாகக் கைதியாக்கக்கூடிய நிலைமையில் இருந்தார்.



கோமகன் ரூம்யாண்ட் சேவ் என்பவர், *1807*-ஆம் வருஷத்தில் அயல்நாட்டு மந்திரியாகவும், *1809*-ஆம் வருஷத்திலிருந்து பிரதம மந்திரியாகவும் வந்தார். மாஸ்கோவிலுள்ள ரூம்யாண்ட்சேவ் பொருட்காட்சி சாலை' என்ற பிரசித்தி பெற்ற பொருட்காட்சி சாலையானது, அவரால் நாட்டிற்குப் பரிசளிக்கப்பட்டதாகும்.



அடிமைகளை எல்லாம் விடுதலை செய்யப் போவதாக நெப்போலியன் பிரகடனம் விடுத்தால், ருஷ்ய விவசாயிகளிடம் அது மிகுந்த பரபரப்பைக் கொடுக்கும் என்றும், நெப்போலியனுடைய படையெடுப்பினால் ஏற்படக்கூடிய அபாயங்களில் இது ஒன்றாய் இருக்கும் என்றும் நினைத்தார்கள்.

இரண்டாவது அலெக்ஜாண்டர் அடிமைகளுக்கு விடுதலை கொடுப்பதற்கு முன்பாக, விவசாயிகள் நிலத்தையும் தங்கள்

விடுதலையையும் பெறுவதற்காகப் புரட்சி செய்யக்கூடும் என்று டால்ஸ்டாய் நினைத்தார். அந்த அபாயம் 1861-ஆம் வருஷத்தில் பிறப்பித்த விடுதலை உத்தரவினால் தடுக்கப்பட்டது என்றாலும், டால்ஸ்டாய் பின்னால் எழுதிய எழுத்துக்களிலிருந்து, ருஷ்ய சமுதாய அமைப்பின் அஸ்திவாரம் பலமற்றதாய் இன்னமும் இருக்கிறது என்பதை உணர்ந்து இருந்ததாகத் தோன்றுகிறது. 1917-ம் வருஷத்தில் நடந்த புரட்சியை அவர் முன்னதாகவே கண்டார். இதை 1886-ஆம் வருஷத்தில் அவர் எழுதி வைத்த 'நாம் என்ன செய்ய வேண்டும்?' என்ற புத்தகத்தில் தெளிவாகச் சுட்டிக் காட்டியிருக்கிறார்.

**10** | 15

**ஸ்**மாலென்ஸ்க் நகரை ருஷ்ய ராணுவம் கைவிட்ட பின்பு, தொடர்ந்து பின்னாலேயே போய்க் கொண்டிருந்தது. ஆகஸ்டு 17-ந் தேதியன்று வியாஜ்மா என்ற இடத்தைத் தாண்டி, காட்ஸ்கிற்குப் பக்கத்திலுள்ள ஜாரேவா-ஜாய்மிஷ் என்ற கிராமத்தில் தங்கியது. அங்கு தங்கி போர் தொடுக்க வேண்டும் என்று நினைத்தார்கள். இந்த இடத்தில் சேனாதிபதியாக நியமிக்கப்பட்ட குட்டுஜோவ் ராணுவத்தை வந்தடைந்தார். ஆகஸ்டு 11-ந் தேதியன்று பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து புறப்பட்டு, காட்ஸ்க் என்ற இடத்திற்கு 17-ந் தேதி வந்து சேர்ந்தார்.

டி டாவிடாவ் என்பவர், கொரில்லா போர் முறையை ஆரம்பிக்க வேண்டுமென்றும், நெப்போலியனுடைய சப்ளை பாதையைத் துண்டிக்க வேண்டுமென்றும் முதல் முதலாக யோசனை கூறினார். 130 கோசாக்குகளுடனும், குதிரை வீரர்களுடனும், அந்த வேலையைச் செய்து பார்க்கும்படி குட்டுஜோவ் சம்மதித்தார். ஆனால், பாராடினோ போர் அச்சமயம் நெருங்கிக் கொண்டிருந்தது. ஆகவே, அந்தப் போருக்குப் பின்னால் தான் டாவிடாவினால் தம்முடைய வேலைகளை ஆரம்பிக்க முடிந்தது.

**10** | 17

**வி.** எல். புஷ்கின் (1779-1830) என்பவர், பெரிய கவிஞரான ஏ. எஸ். புஷ்கின் என்பவருடைய மாமா. அவர் முக்கியமில்லாத பல கவிதைகளை எழுதியவர்.



கோமகன் எல்.பி. விட்ஜென்ஸ்டைன் என்பவர், ருஷ்ய ராணுவத்தில் ஒரு ஜெனரல். பின்னால் குட்டுஜோவின் பதவிக்கு வந்து, லுட்ஜன் என்ற இடத்தில் ருஷ்ய படைகளுக்குக் கமாண்டராக இருந்தார். கோமகன் விட்ஜென்ஸ்டைன் தலைமையில் ஒரு தனி படையானது, பீட்டர்ஸ்பர்க்கிற்கு போகும் ரஸ்தாவைக் காவல் புரிந்து வந்தது. 1812-ஆம் வருஷம் ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் அவர் சில போர்களில் வெற்றி பெற்றார். அச்சமயம் ருஷ்யா சோர்வாய் இருந்தபடியால், அந்த வெற்றிகள் ருஷ்யாவுக்கு மிகுந்த உற்சாகத்தைக்கொடுத்தன.

சில பிரச்னைகளில் முடிவு செய்வதற்காக, டால்ஸ்டாய் கூட சீட்டு ஆட்டத்தில் 'பேஷன்ஸ்' என்ற விளையாட்டை ஆடிப் பார்ப்பதுண்டு. ஆனால், இந்த அத்தியாயத்தில் பீயரின் சீட்டுகளைப் போல, அந்த சீட்டாட்டத்தின் முடிவு தமது விருப்பத்திற்கு விரோதமாய் இருந்தால் அதை டால்ஸ்டாய் ஒப்புக்கொள்வது இல்லை.

யாஸ்நயா பாலியானா என்ற இடத்தில், 1906-ஆம் வருஷத்தில் டால்ஸ்டாய் தங்கியிருந்தார். அச்சமயத்தில் அவருடன் இருந்த அவருடைய குமாரியான மேரி, அவள் இறந்து போவதற்கு முன்பாக, ஒரு விஷயத்தை அவரிடம் சொன்னாள். ஒரு கட்டுரையை எழுதுவதற்கு ஆரம்பித்த பின்பு, அதை முடிப்பதனால் உலகத்திற்கு நன்மை ஏற்படுமா என்பதை முடிவு செய்வதற்கு, ஒரு பேஷன்ஸ் விளையாட்டை டால்ஸ்டாய் போட்டுப் பார்த்தாராம். அந்த விளையாட்டில், முடிக்க வேண்டாம் என்றே பதில் வந்ததாம். ஆனால், அவர் உடனே எழுந்து, 'எப்படி இருந்தாலும் சரி, நான் அதை எழுதத்தான் போகிறேன்' என்று சொன்னாராம்.

லெப்பிச் என்பவர் ஒரு பெரிய பலூனைச் செய்ததாக இந்த அத்தியாயத்தில் வருகிறது. யுத்தத்தில் விமானப் படையை ஏற்படுத்த வேண்டுமென்ற முயற்சியில், இந்த வேலை செய்யப்பட்டது. ஆனால், அது வெற்றிகரமாக இல்லை. லெப்பிச் ஒரு ஜெர்மானியர். அவர்தான் இந்த யோசனையைச் சொல்லியவர். அவருடைய பலூன் நவம்பர் மாதம் வரையில், அதாவது, பிரஞ்சு ராணுவம் கஷ்டத்தோடு ருஷ்யாவிலிருந்து தப்பி ஓடுகிறவரையில் கூட, அது தயாராகவில்லை. அதற்குப் பின்னாலும் கூட, அந்தப் பலூனிலிருந்து காஸ் வெளியே போவதை நிறுத்த முடியாததினால், அது மேலே பறக்க முடியாமல் போயிற்று.

**10**
**19**

பாராடினோவைப் பற்றி டால்ஸ்டாய் எழுதுவதற்கு முன்பாக, அந்தப் பிரதேசத்தில் 1867-ஆம் வருஷம் வசந்த காலத்தில் அவர் இரண்டு நாட்கள் தங்கி அங்குள்ள இடங்களைப் பரிசோதித்தார். ருஷ்ய, பிரஞ்சு தேசப் படங்களையும், பிளான்களையும் சரித்திர ஆதாரங்களையும், தம்முடைய சொந்த ராணுவ அனுபவத்தையும், ராடாஜைட்ஸ்கி என்பவரின் ஞாபகக் குறிப்புகளையும் கொண்டு, அதைத் தயாரித்தார். போருக்குக் கொஞ்ச காலத்திற்கு முன்பு, ஒரு உயரமான பூமியில் நின்றுகொண்டு, ராடாஜைட்ஸ்கி அங்கிருந்த பலவீனமான இடங்களைக் கண்டறிந்தார். பீயரைப் போலவே அவரும் அந்தப் போர் நடக்கும்போது அங்கே இருந்தார். நெப்போலியனுடைய காலத்திற்கும், டால்ஸ்டாயின் ராணுவசேவைக்கும் மத்தியில் நாற்பது வருஷங்கள் கழிந்து போயின என்றாலும், துப்பாக்கிகளிலோ, ருஷ்ய ராணுவத்திலுள்ள பீரங்கிகளிலோ, அல்லது பொதுவாகப் போர் முறைகளிலோ, எவ்விதமான மாற்றங்களும் ஏற்பட்டிருக்கவில்லை.

**10**
**22**

எஸ்.என். மாரின் என்பவர் முதலாவது அலெக்ஜாண்டர் சக்கரவர்த்திக்கு மெய்க்காப்பாளராக இருந்தார். விகடங்களிலும், வேடிக்கைக் கவிதை களிலும் அவர் பெயர் போனவர். வி.ஜி. கெராகாவ் என்பவர் ராணுவத்தில் ஒரு கேப்டனாய் இருந்தார். அவர் ராணுவப் பள்ளிக் கூடத்தில் ஒரு வாத்தியாராக அமர்ந்து, பல தேசபக்தி கொண்ட புத்தகங்களை எழுதியிருக்கிறார். ஆனால், அவை யெல்லாம் ரொம்ப சாதாரணமானவை. அவரை எல்லாரும் கேலி செய்வது வழக்கம். அவரைக் கேலி செய்து மாரின் ஒரு கவிதை புனைந்திருந்தார்.

**10**
**25**

கார்ல் வான் கிளாஸ்விட்ஜ் (1780-1831) என்பவர், ஒரு பிரஷ்ய ஜெனரல். யுத்த சரித்திரத்தைப் பற்றியும், கொள்கைகளைப் பற்றியும் எழுதக்கூடிய ஒரு பிரபலமான எழுத்தாளர். 1812-ஆம் வருஷத்தில் மற்ற பிரஷ்ய அதிகாரிகளைப் போல அவரும் ருஷ்ய ராணுவ சேவையில் வந்து சேர்ந்தார். அச்சமயத்தில் பிரஷ்யா நெப்போலியனுடன் நேச

நாடாக இருந்தது. முதலில் அவர் பூயலுக்கு உதவியாளராக சேவை பார்த்து வந்தார். 'வாம் கிரீக்' (யுத்தம்) என்ற புத்தகத்தை அவர் எழுதினார். யுத்தத்தின் தத்துவங்களை அதில் விளக்கியிருக்கிறார். ராணுவ சரித்திரத்தைப் பற்றி அவர் எழுதிய புத்தகத்தில், 1812-ஆம் வருஷத்திய போரைப் பற்றியும், நெப்போலியனுடைய மற்ற போர்களைப் பற்றியும் எழுதி இருக்கிறார்.

1812-ஆம் வருஷத்தில் நடந்த போரைப் பற்றி, டால்ஸ்டாய் இந்த நாவலை எழுதும்போது என்ன அபிப்பிராயம் கொண்டிருந்தாரோ, அதே மாதிரியான அபிப்பிராயத்தை இளரவசர் ஆண்ட்ரூ இந்த அத்தியாயத்தில் வெளியிட்டிருக்கிறார். சில இடங்களில் டால்ஸ்டாயின் யுத்தத்தைப் பற்றிய எதிர்காலக் கொள்கையைக் கூட அவர் சொல்லுகிறார். அதாவது, யுத்தமென்பது மனித சமூகத்துக்கு, முற்றிலும் கேடானது என்பதாகும். 'போரும் அமைதியும்' என்ற புத்தகத்தை டால்ஸ்டாய் எழுதியபோது, அந்த அபிப்பிராயம் அவ்வளவு பலமாக அவர் உள்ளத்தில் பதிந்திருக்கவில்லை. அந்த அபிப்பிராயம் பிற்காலத்தில்தான் அவருக்கு ஆழமாய்ப் பதிந்தது. வரப்போகிற புயலைக் காட்டக்கூடிய மின்னல்கள் மாதிரி, அவருடைய பிற்கால அபிப்பிராயங்களைக் காட்டக்கூடிய மின்னல்களைப் போன்ற சில வாக்கியங்கள் இங்கே அமைந்திருக்கின்றன. அவர் 1853-ஆம் வருஷத்தில் எழுதிய 'படையெடுப்பு' என்ற கதையில், காக்கேஷியன் வழியாகத் துருப்புகள் மார்ச் செய்து போனபோது கண்ட அழகான காட்சிகளைப் பற்றி பின்வருமாறு எழுதினார்:

'அந்தக் கணக்கற்ற நட்சத்திரங்கள் நிறைந்த வானத்தின் அடியில் உள்ள இந்த அழகான உலகத்தில், எல்லா மனிதர்களுக்கும், இடம் இல்லாமலா போயிற்று? இந்த மனங் கவரும் இயற்கையின் மத்தியில் துவேஷமும், பழிவாங்கும் நோக்கமும், தமது சகோதரர்களைப் படுகொலை செய்யும் நோக்கமும், மனிதர்கள் உள்ளத்தில் இருக்கத்தான் முடியுமா? மக்களின் மனதிலுள்ள அன்பற்ற நினைப்புகள் எல்லாம், இந்த இயற்கையின் அழகான, நன்மையான தோற்றத்தினால் மறைந்து போய்விடும் என்றுதான் ஒருவர் நினைக்க முடியும்.' மற்றொரு புத்தகத்தின் முடிவிலும், இதே கருத்தை அவர் வெளியிட்டிருக்கிறார். டால்ஸ்டாய் நன்றாகச் சிந்தித்து முடிவுக்கு வருவதற்கு முன்பாக, அவருடைய நினைப்புகள் எந்த வழியில் சென்றுகொண்டிருந்தன என்பதை இவை காட்டுகின்றன. இவை தான் அவருடைய உள்ளத்தில்

விதைகளாகப் பதிந்து, பல வருஷங்களுக்குப் பின்னால் பெரிய மரங்களாக வளர்ந்து, சுற்றிலும் உள்ளவைகளுக்கு நிழல் கொடுக்க ஆரம்பித்தன.

**10**

**26**

'**சா**லமங்கா... அந்தப் போரின் முடிவு பரிதாபகரமாயிருந்தது.' 1812-ஆம் வருஷம் ஜூலை மாதம் 12-ந் தேதி சாலமங்காவில் நடந்த போரில் வெல்லிங்டன் வெற்றி பெற்றார். ஸ்பெயின் தேசத்தில், அந்நாட்டு மக்களை அடிமையாக வைப்பதற்கு நெப்போலியன் செய்த முயற்சிகளுக்கு, மக்களின் இடைவிடாத பலமான எதிர்ப்பு இருந்தது. பெனின்ஸுலார் போரில் அவருடைய பலமெல்லாம் கரைந்து போயின. ருஷ்யாவை அடக்குவதற்கு அவர் செய்த முயற்சியில் ஏற்பட்ட தோல்விக்கு, இந்த பெனின்ஸுலார் யுத்தத்தினால் ஏற்பட்ட நஷ்டங்களே முக்கியமான காரணம்.

'சக்கரவர்த்தினியிடமிருந்து மாட்சிமை தங்கிய உமக்கு ஒரு பரிசு.' இந்த இடத்தில் வருகிற நெப்போலியனைப் பற்றியும், அவருடைய குமாரருடைய சித்திரத்தைப் பற்றியும் உள்ள காட்சிக்கு வேண்டிய தகவல்களை, டி பாசெட் தாம் எழுதிய 'ஞாபகக் குறிப்புகள்' என்ற புத்தகத்தில் கூறுகிறார். டால்ஸ்டாய் இந்த விவரங்களைத் தமது கலை நோக்கங்களுக்காக மட்டுமே உபயோகிக்க விரும்பியபடியால், அந்த ஞாபகக் குறிப்பில் காணப்பட்டுள்ள சோகத் தொனிகளையெல்லாம் மாற்றி விட்டார். உதாரணமாக, நெப்போலியனைப் பார்த்து பாசெட் பேசியபோது, அவரை மாஸ்கோவில் சந்திப்பதற்குத் தாம் எதிர்பார்த்திருந்ததாகக் கூறினார். நெப்போலியன் புன்சிரிப்போடு அதற்கு பதில் சொல்லும்போது, 'நீர் மாஸ்கோவைப் பார்ப்பீர்' என்று கூறுகிறார். உடனே பராக்கு புத்தியில் வலது பக்கம் திரும்பிப் பார்க்கிறார். வழக்கமாக அப்பார்வையின் அர்த்தத்தைப் புரிந்துகொண்ட அவருடைய மெய்க்காப்பாளர், அவரிடம் பொடி டப்பியைக் கொண்டு வந்து கொடுக்கிறார். கோபமாயிருக்கும்போதும், ஏதாவது இடையூறுகள் ஏற்படும்போதும், நெப்போலியன் பொடி போடுவதை வழக்கமாகக் கொண்டிருப்பதாக, டால்ஸ்டாயின் நாவலில் காணப்படுகிறது. பலாஷேவுடன் அவர் பேசியபோது, அவருடைய மனப்போக்கு அடிக்கடி மாறும் போது, இந்தப் பொடி போடும் வழக்கத்தைக் காணலாம். இங்கே எடுத்துக் கொண்ட விஷயத்தில் புகழ்ச்சியான வார்த்தைகளைக் கேட்டவுடன், அவர்

புன்சிரிப்போடு பதில் அளித்துக் கொண்டு வருகிறார். ஆனால், மாஸ்கோ என்ற வார்த்தையைக் கேட்டதும், அவர் பொடி டப்பிக்காகத் திரும்பிப் பார்ப்பதானது, அவருடைய மனக் குழப்பத்தைக் காட்டுகிறது. தமது நாட்டிலிருந்து ருஷ்யாவுக்குள் வெகு எளிதாக வெகு தூரம் முன்னேறியதால், அவருக்கு ஏற்பட்டுள்ள மனக்குழப்பத்தை அது காட்டுகிறது. ஸ்மாலென்ஸ்க் நகரில் கைதியாகப் பிடிக்கப்பட்ட ஜெனரல் டுச்கோவுடன் அவர் சமீபத்தில் நடத்திய உரையாடல்களும், இச்சமயத்தில் சமாதானத்திற்காக அவர் செய்த பிரேரணைகளும், பாராடினோவுக்கு முன்பாக இந்த விசித்திரமான யுத்தத்தின் போக்கைப் பற்றி அவர் மிகுந்த கவலை கொண்டிருந்ததைக் காட்டுகின்றன. இந்த யுத்தத்தில் தாம் எஜமானராக இருப்பதாக அவர் உணரவில்லை. அதற்குப் பதிலாக, அவர் மீது சுமத்தப்படும் நிபந்தனைகள், அவர் நிறைவேற்றவேண்டியவராயிருக்கிறார் என்று உணர்ந்தார்.

**10 / 34**

'லோடி, மாரங்கா, ஆர்க்கோலா, ஜெனா, ஆஸ்டர்லிட்ஜ், வாக்ராம்'. நெப்போலியனுக்குப் பிரமாதமான வெற்றி கிடைத்த இடங்களில் இவை சில. லோடியும் மாரங்காவும் வடக்கு இத்தாலியில் இருக்கின்றன. 1800-ஆம் வருஷத்தில் அங்கே ஆஸ்திரியர்களை நெப்போலியன் தோற்கடித்தார். வெரானா என்ற இடத்திற்குப் பக்கத்தில் ஆர்க்கோலா என்ற கிராமம் இருக்கிறது. 1796-ல் தம்முடைய ராணுவத்தை விட பலமடங்கு அதிகமான ஆஸ்திரிய ராணுவத்தை அந்த இடத்தில் நெப்போலியன் தோற்கடித்தார். ஜெனா என்ற இடத்தில் 1806-ஆம் வருஷத்தில் பிரஷ்யர்களும் சாக்ஸன்களும் படுதோல்வி அடையும்படி நெப்போலியன் செய்தார். வாக்ராம் என்ற கிராமம், வியன்னாவுக்குப் பக்கத்தில் இருக்கிறது. 1809-ஆம் வருஷத்தில் அந்த இடத்தில் ஆஸ்திரியர்கள் மீது ஒரு முடிவான வெற்றியை நெப்போலியன் பெற்றார். ஆஸ்திரிய யுத்தம் அதோடு முடிவடைந்தது.

**10 / 35**

'உர்ட்டெம்பர்க் கோமகன்', கோமகன் அலெக்ஜாண்டர் பிரடெரிக் என்பவர், உர்ட்டெம்பர்க் கோமகன் ஆவார். (1771-1833) மரியா பெடாராவ்னா என்ற சக்கரவர்த்தினியின் சகோதரர். அவள் சக்கரவர்த்தி பால் என்பவருடைய சக்கரவர்த்தினி

யாகும். 1800-ஆம் வருஷத்தில் ருஷ்ய சேவையில் கோமகன் சேர்ந்தார்.

'முராட் கைதியாகப் பிடிக்கப்பட்டார் என்ற செய்தி'. இந்த செய்தி கடைசியாக பொய்யானது என்று வெளியாயிற்று. ஜெனரல் பானாம் என்பவரைத்தான் கைதியாகப் பிடித்தார்கள். ஒரு ருஷ்ய கைக்குண்டு வீரர், துப்பாக்கி ஈட்டியைத் தமது நெஞ்சிற்கு நேராகக் கொண்டு வருவதைப் பார்த்தவுடன், அவர் 'நான்தான் மன்னர்' என்று கூச்சலிட்டார். ஆகவே, அவரை உயிரோடு குட்டுஜோவிடம் அழைத்துச் சென்றார்கள். முராட் கைது செய்யப் பட்டதாக ஏற்பட்ட பொய் வதந்தியை, துருப்புகளின் அணிகள் வழியாகக் குதிரை மீது சவாரி செய்துகொண்டு ஒரு மேஜர் தெளிவற்ற விதமாக சொல்லிக் கொண்டு போனார்.




'32-வது ராணுவ டிவிஷன்' அந்த டிவிஷன் மார்ஷல் டாவூட்டின் டிவிஷனாகும். அதிலுள்ளவர் களை, முக்கியமாக வராம்பெர்க் - பிரம்மென் பகுதியிலிருந்து ராணுவத்தில் சேர்த்தார்கள்.

